# இப்புத்தகத்தில் அடங்கியவை.



பக்கம்.


| | | |
|---|---|---|
| | முகவுரை ... ... ... ... | v-vi |
| | உரிமையுரை ... ... ... | vii-viii |
| க. | திருத்துருத்திக் கச்சிவிநாயகர்பதிகம்... ... | க |
| உ. | திருத்துருத்திச் சுப்பிரமணியஸ்வாமிபதிகம் ... | ங |
| ங. | திருவிடைமருதூர் மருதவாணர்தோத்திரப்பதிகம்... | சு |
| ச. | திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் ... ... ... | எ |
| ரு. | திருவானைக்கா அகிலாண்டநாயகிபிள்ளைத்தமிழ் ... | ஙங |
| சு. | உறையூர் ஸ்ரீகாந்திமதியம்மைபிள்ளைத்தமிழ் ... | சுரு |
| எ. | திருக்குடந்தை ஸ்ரீமங்களாம்பிகைபிள்ளைத்தமிழ் ... | கூங |
| அ. | திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ் ... ... ... | ககசு |
| கூ. | திருவிடைக்கழி முருகர்பிள்ளைத்தமிழ் ... | கசரு |
| க0. | ஸ்ரீசேக்கிழார் பிள்ளைத்தமிழ் ... ... | கசுகூ |
| கக. | திருவாவடுதுறை ஸ்ரீஅம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ் ... ... ... | ககூரு |
| கஉ. | வாட்போக்கிக்கலம்பகம் ... ... | உகஉ |
| கங. | திருவாவடுதுறையாதீனத்துக் குருபரம்பரையகவல்.. | உசஎ |
| கச. | திருவாவடுதுறை ஸ்ரீஅம்பலவாணதேசிகர்கலம்பகம். | உசகூ |
| கரு. | சீகாழிக்கோவை ... ... ... | உஎக |
| கசு. | திருவிடைமருதூர்உலா ... ... | ஙருரு |
| கஎ. | திருத்தில்லையமகவந்தாதி ... ... | ஙகூஎ |
| கஅ. | திருச்சிராமலையமகவந்தாதி ... ... | சகங |
| ககூ. | துறைசையமகவந்தாதி ... ... | சஉஎ |
| உ0. | திருப்பைஞ்ஞீலித்திரிபந்தாதி ... ... | சஙகூ |
| உக. | திருக்குடந்தைத்திரிபந்தாதி ... ... | சருக |
| உஉ. | திருவிடைமருதூர்த்திரிபந்தாதி ... ... | சசுரு |
| உங. | பாலைவனப்பதிற்றுப்பத்தந்தாதி ... ... | சஎஎ |
| உச. | திருவூறைப்பதிற்றுப்பத்தந்தாதி ... ... | சஅகூ |
| உரு. | திருப்பழைசைப்பதிற்றுப்பத்தந்தாதி ... | ரு0உ |

பக்கம்.

உசு. பூவாளூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி ... ... ருகரு
உஎ. மதுரைத் திருஞானசம்பந்தசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி ... ... ... ருகசு
உஅ. மதுரைத்திருஞானசம்பந்தசுவாமிகள்ஆனந்தக்களிப்பு ருஙக
உகூ. திருக்கற்குடிமாமலைமாலை ... ... ருஙகூ
ஙo. கலைசைச்சிதம்பரேசுவரர்மாலை ... ... ருருங
ஙக. திருவானைக்கா அகிலாண்டநாயகிமாலை ... ருசுஎ
ஙஉ. திருவாவடுதுறை ஸ்ரீசுப்பிரமணியர்தேசிகர்மாலை ... ருஅக
ஙங. தருமபுரம் ஸ்ரீசச்சிதானந்ததேசிகர்மாலை ... ருகூரு
ஙச. திருவாவடுதுறை ஸ்ரீசுப்பிரமணியதேசிகர்நெஞ்சுவிடுதூது ... ... ... ... சுoஎ
ஙரு. ஷை சுப்பிரமணியதேசிகர்மீதுள்ள தனிப்பாடல்கள், சுஉசு
ஙசு. பட்டீச்சரப்புராணம் ... ... ... சுஉஎ
ஙஎ. திருவரன்குளப்புராணம் ... ... சுஙங
ஙஅ. திருப்பனந்தாள் ஸ்ரீகுமரகுருபரஸ்வாமிகள்சரித்திரம் சுஙகூ
ஙகூ. திருவாவடுதுறை ஸ்ரீசிவஞானயோகிகள்சரித்திரம் ... சுஎகூ
சo. திருமயிலைச் சித்திரச்சத்திரப்புகழ்ச்சிமாலை ... எoரு
சக. ஷை மாலையைச்சார்ந்த தனிவிருத்தங்கள் ... எகஅ
சஉ. வியாசைக்கோவை ... ... ... எசரு
சங. குளத்தூர்க்கோவை ... ... .. அoங
சச. புதுவை வித்துவான் சவராயலுநாயகர்மாலை ... அசுரு
சரு. சிறப்புப்பாயிரங்கள் ... ... ... அசுகூ
சசு. பொன்னூசல் முதலியன ... ... அகூங
சஎ. செய்யுண் முதற்குறிப்பகராதி ... ... கூoக
சஅ. பிழையுந் திருத்தமும் ... ... ... கூசுo

# முகவுரை



"கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் - மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு."

கவிஞர்பெருமானாக விளங்கிய திருவாவடுதுறையாதீனத்து மஹாவித்துவான் திரிசிரபுரம் - ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றிய தமிழ்நூல்களுட் பிரபந்தங்கள பல. அவற்றுட் சில கும்பகோணம் காலேஜில் தமிழ்ப்பண்டிதராக இருந்த ஸ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்கள் முதலியவர்களால் முன்பு அச்சிற் பதிப்பிக்கப்பெற்று வழங்கிவந்தன. ஆயினும் அவை கிடைப்பது அருமையாக இருந்தமையின், அவையும் மற்றப் பிரபந்தங்களும் அவற்றைப்போலவே சொல்லினிமை பொருளினிமைகளிற் சிறப்புற்று விளங்குவனவும் பிள்ளையவர்களால் இயற்றப் பெற்றனவுமாகிய சிறப்புப்பாயிரங்களும் ஒருங்கே சேர்த்து 1910-ஆம் வருஷத்தில் முதன்முறையாகப் பதிப்பிக்கப்பெற்றன. முற்பதிப்பில் அபூர்த்தியாக இருந்த பழைசைப்பதிற்றுப்பத்தந்தாதி பட்டீச்சரம் ஸ்ரீ ஆறுமுகம்பிள்ளையவர்களால் சில வருடங்களுக்குமுன் முற்றுங்கிடைத்தமையின் இப்போது அது பூர்த்தியாகப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

பிள்ளையவர்கள் பாடி அரங்கேற்றிய வேறு சிலபூர்த்தியான பிரபந்தங்களையும் அபூர்த்தியானசிலவற்றையும் இயன்றமட்டில்பல இடங்களில் தேடிப்பார்த்தும் அவைகள் கிடைக்கவில்லை. இவர்கள் இயற்றிய திருவாவடுதுறைச் சிலேடைவெண்பாவின் விநாயகர் காப்புச் செய்யுளின் பாதிமட்டும் என் ஞாபகத்தில் உள்ளது. அது வருமாறு:

"சீர்வெண்பா மாலைத் திருவா வடுதுறையார்க்
கூர்வெண்பா மாலை யுரைப்பவே."

இதிலடங்கிய பிரபந்தங்களுள் முன்னமே அச்சிடப்பெற்றவை இன்னவை என்பது அவ்வவற்றின் பின்னேயுள்ள சிறப்புப்பாயிரங்கள் முதலியவற்றால் விளங்கும்.

சீகாழிக்கோவையும், வியாசைக்கோவையும் திருவூறைப்பதிற்றுப்பத்தந்தாதியும், பொன்னூசல முதலியனவும் இப்பதிப்பிற் சேர்க்கப்பட்டுள்ளன.

இதிலுள்ள நூல்கள் இயன்றவரை பிரபந்தவரிசை முதலியவற்றைத்தழுவித் தொகுக்கப்பட்டுள்ளன.

பிள்ளையவர்கள் ஒவ்வொரு காலத்திற் சமயோசிதமாகப்பாடிய தனிச் செய்யுட்கள் பலவுண்டு. அவற்றை இவர்கள் சரித்திரம் எழுதும்போது சந்தர்ப்பத்தைப் புலப்படுத்தி வெளியிடக் கருதியிருத்தலால் அவை இங்கே சேர்க்கப்படவில்லை.

இவர்களுடைய அருமை பெருமைகளை நன்குஅறிந்தவர்களும் இவர்களுடைய நூல்களைப் படித்தவர்களும் இக்காலத்திற் பலர் இருத்தலால் இவர்களுடைய குணவிசேடங்களும், இப்பிரபந்தங்களின் சிறப்புக்களும் இங்கே எழுதப்பெற்றில.

இப்பிரபந்தங்களுக்கு எழுதிவரும் குறிப்புரை பூர்த்தியாகாமையால் இதனுடன் இப்போது சேர்க்கவில்லை. பின்பு தனியே வெளியிடப்படும்.

பழைய தமிழ்நூல்களை வெளியிடும் விஷயத்தில் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர்களும் அருங்கலை விநோதர்களுமான ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்கத்தம்பிரானவர்களும் அவர்கள் பிற்றோன்றலாகிய ஸ்ரீலஸ்ரீ சாமிநாத தம்பிரானவர்களும் பேரன்புடன் செய்துவரும் ஆதரவையும், உடனிருந்து ஒப்பு நோக்குபவர்கள் முதலியோர் விஷயத்தில் எனக்குச் சிறிதும் பொருட்கவலை யுண்டாகாதபடி பலவருஷங்களாக ஆதரித்துவரும், ஸ்ரீ ஸேது ஸம்ஸ்தானாதிபதிகளும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தலைவர்களும் சென்னைச் சட்டநிரூபண சபையங்கத்தினர்களுமான கௌரவம்பொருந்திய மஹாராஜராஜஸ்ரீ B. ராஜராஜேசுவர ஸேதுபதிமஹாராஜா அவர்களுடைய தமிழ்ப்பாஷாபிமானத்தையும் தமிழ்மக்களுக்கு இப்போதும் மிக்கநன்றியறிவுடன் தெரிவிக்கிறேன்.

கட்டளைக்கலித்துறை.

"பெற்றாரு ணின்னைப்பெற் றார்போற்பெற் றார்களும் பேண்பிறப்பை
யுற்றாரு ணின்றனைப் போலவுற் றார்களு முன்னருளை
கற்றா ரணியு ளெனைப்போற்பெற் றார்களு நாடுறினு
மற்றார்முற் றோர்தரு மீனாட்சி சுந்தர மாமணியே."

(ஸ்ரீ தியாகராச செட்டியாரவர்கள் வாக்கு.)

சென்னை, 21—6—26.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

உ

சிவமயம்.

# உ ரி மை ய ரை



[நேரிசையாசிரியப்பா.]

பூமலி துணர்ச்சினைக் காமலி கூலப்
பொன்னிமா நதிபாய் சென்னிநாட் டிடைவளம்
நிறையூ ராய வுறையூர்க் குணபாற்
கருமுதிர்ந் தயர்வுறு மொருமக ளனூரறத்
௫ தாயான செல்வர் தங்குமாத் தலமாய்த்
துரிசிரா திலங்குந் திரிசிரா மலையில்
உதித்தொளி மிகுத்தே கதித்துறு மணியும்
மலர்தொறு நறவுகொள் வண்டின மேய்ப்பப்
பலரிடைக் கல்வி பயின்றோங் கண்ணலும்
௧௦ யாவரு மென்று மேவரும் புலமை
வாய்ந்துநூல் பலமிக வாய்ந்துகிள ரேந்தலும்
சுவைசெறி பனுவல்க ளவைபல வியப்ப
எளிதிற் பாடிய வளிகிளர் குரிசிலும்
புவித்தலம் வியப்பச் சிவத்தல புராணம்
௧௫ பலசெய் தோங்குசீர் படைத்தசீ ரியனும்
நலமா ணாக்கர் பலபேர்ப் புரந்தே
அன்னர் குழாத்திடை நன்னர் மேவி
நூல்பல பயிற்றிச் சால்புறு பெரியனும்
அருத்திகூ ரெனையரு கிருத்திநூல் பலசொற்
௨௦ றல்ல லகற்றிய நல்லிசைப் புலவனும்
நன்றிபா ராட்டுநர் நடுநா யகமும்
நிலமலை நிறைகோன் மலர்நிக ராய
மாட்சிசால் புகழ்மீ னாட்சிசுந் தரப்பே
ருடையனுங் குவளைத் தொடையனுஞ் சுவைசெறி
௨௫ இதிவுள நூலெலா மியம்புமா கவிஞனும்
தூயவன் றனைத்தன தவைக்களத் தலைவனுச்

செய்தவ னெவனோ கைதவ மிலாது
சொன்மழை சொரியுமச் சுகுணமா மலைபாற்
பொன்மழை பொழிந்தருள் பூத்தவ னெவனோ
௧௦ செய்யுண்மற் றிவன்போற் செய்குநர் யாரிவன்
செய்யுள்போ லினித்தில தெரியின்மற் றவையென்
றுணருமா றெவர்க்கு முரைத்தவ னெவனோ
பன்மா ணவர்கட் கின்மா ணணியூ
ணுடுக்கையா திகளளித் துறுதரந் தெரிந்தே
௧௫ யிலக்கியம் பலவு மிலக்கண மைந்து
ஞான நூல்களு நவின்றவ னெவனோ
வடமொழி தென்மொழி வாய்ந்தபன் னூல்கள்
கற்றவர் சிரகர கம்பிதஞ் செயவாங்
குற்றநுண் பொருளெடுத் துரைத்தவ னெவனோ
௨௦ ஆதுலர்க் கெய்ப்பில்வைப் பாயவ னெவனோ
என்னுள மகலா திருப்பவ னெவனோ
எண்ணிய தளித்திடு புண்ணிய னெவனோ
திரிகூ டப்பெயர்ச் சிலம்பயற் றோன்றித்
துறைசையம் பதிசெய் நிறைதவப் பயனுச்
௨௫ செப்புற மெய்ப்புகழ்ச் சுப்பிர மணிய
தேசிகப் பெயர்கொடு திகழ்ந்தவ னெவனோ
அன்பருக் குலவா வின்பரு ணிமித்தந்
தீபகம் போன்றவ னெவனோ வவன்றன்
ஞாபகச் சின்னமா நன்கிதை
௩௦ அன்புட னுரிமை யாக்குவ னினிதே.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# *திருத்துருத்திக்

# கச்சிவிநாயகர்பதிகம்.



1. மாமேவு பவளா சலக்குவட் டுதயமெழு மழவிளங் கதிர்கோர்த்து
மணிமௌலி பொலியவவ் வரைமுடியி னிருபாலு மணிகொழித் திழியரு
பாமேவு கருஞ்சிமி திரைப்பக் கபோலம் பகுத்துவிடு தானமொழுகப் [வியிற்
பனிமதிப் பிறையொன் றடுத்தமர்ந் தாலெனப் பகரொரு மருப்பிலங்கத்
தேமேவு மலரிறைத் தடியர்சய சயவென்று திசைதொறு முழக்கெடுப்பச்
செறுவலிக் கருமுடி கத்திவர்ந் தியாங்கண்மகிழ் தேக்கவந் தருள்புரிகு
காமேவு தண்ணளி யமைந்தடையு நர்ப்பாது காத்தறம் வளர்த்திடுதலாற் [வாய்
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௧)

2. குலவுதவ முனிவரர்க ளமருந் தவச்சாலை குவலயம் படிதராமே
கூறுமச் சாலையுட் சைவா கமத்திட்டு கோசங்கள் சிதைதராமே
நிலவுதழல் படுகுண்டம் வேதிமே கலையொடு நிதம்புதி தியற்றுறுமே
நித்தியமு ஞயகரு மம்பலவு மத்தவர் நிகழ்த்தலிற் குறைவராமே
புலவுகம ழங்குசம் பாசநமை யேவியது போதுமென் றுவகைமலியப்
பொங்குஞ் சினத்தலவு கருமுடி கத்துப் பொருக்கென விவர்ந்துபலவுங்
கலவுபல வண்டத் துலாவருந் திறலுடைக் கருணையா மதியவலமோ
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௨)

3. ஏதியென வெவ்வமா விருப்பன வவற்று லிறுத்தல்செய் யாதவரமு-மிமையவ ருடம்புமுத லெத்துணை யுடம்பவை யிரிந்திடற் காயவரமு, நீதிதரு மட்டாங்க பஞ்சாங்க முதலிய நிகழ்த்துவந் தனைவிலக்கு - நிகழுமற் றுள்ளவு நினைந்துமிச் சிரவுருவ நிலவமற் றொன்றமைந்து, சோதிதரு கோடொன்று கொண்டுகய முகன்வலி தொலைத்துவிற லூர்தியாக்கிச் - சோர்விலவ னமரர் பாற் பெற்றவையு மேற்றருள் சுரந்துபல் லுயிர்செய்வினையைக், காதிகல மேயுதவு நினதுபெரு மாண்பெவர் கருத்தமைத் தோதவல்லார் - கற்பத் தலத் தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௩)

4. ஏற்றமிகு மொருமுனிவ னேம்பழக் குழிகாப்ப ணிரியாத கிரியைஞான-மென்னுமிரு சத்திக ளொடுந்தோன்றி யம்முனியொ டேற்றமர் புரிந்துபல

* இது, சோழநாட்டிற் காவிரிநதியின்தென்பாலுள்ள திருப்பதிகளுள் ஒன்று ; குற்றாலமென இக்காலத்துவழங்கும்.

ருஞ், சாற்றவொளிர் புரவுமணி கைக்கொண்ட மாற்றலன் றன்வலி யடங்காப் பெருந் - தானைவலி யொடுகவர்ந் தம்மணியுங் வாங்கியத் தாபதற் கினிதளிக் கத், தேர்றமத ஞல்வர லுணர்ந்தனைய தவனுஞ் சிறந்தமார் பிற்றரித்துச்- சிந்தா மணிக்குஞ்ச ரப்பிரா னென்றேத்தல் செய்யவவன் வினையனைத்துங், காற்றவெழு மருள்பொழிக் தினிதமரு மாடலைக் கண்டுவிண் டிடவல்லரார் - கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௪)

5. தெள்ளமுத மயமாக வுமையம்மை நல்கிய திருந்துமோ தகஙஞ்சமாய்த்
தீயகொடு நஞ்சமய மாகவொரு பேதைதரு செழுநாவ லங்கனிகடா
மெள்ளலரு மமுதமாய்த் தான்புரித றவறு தியற்றிடக் கண்டோமினு
மியலுத்த மாங்கம்வே றுகவும் பார்க்கவு மிருசெவிக ளாற்கேட்கவு
முள்ளபொரு ளிதுவென்று வாய்பேச வும்பிற வுஞற்றவு மியங்கல்செயவு
முண்மையிற் கண்டுளோ மென்னிலெவர் நின்னுட லுட்கொண் டளக்க
கள்ளமகன் மாதவர்க் கானந்த மாய்ப்பரவு கற்பனை கடந்தவாழ்வே [வல்லார்
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௫)

6. எந்தவா னவரருள் பெறக்கருதி னுலுமுனை யேத்திவழி படுவரெழுவா
யேத்திவழி படல்செயா ரென்னினவ ரெண்ணிய திழந்துமிடை யூறுறு
மூந்தவார் வம்பெருகு மாறுநி னடிப்பூசை முற்றாய் புரிந்துபோற்றின் [வரான்
மூன்னிய வினைத்துமுற் றுதவல வேயிந்த முறைமைநா னுணர்தலாலே
பந்தமா மலகன்ம மாயையொரு மூன்றையும் பாற்றிநின் னறிவுதொழிலாம்
பாதநிழல் புக்கின்ப முறுமாறு நின்னையே பற்றித் துதித்தல்செய்வேன்
கந்தமா மலரிடுந ரெய்ப்பில்வைப் பேபுகழ்நர் களைகணே யமலவாழ்வே
கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௬)

7. மருவுபல புவனத்து மெந்தவா னவர்வடிவு மண்சிலை வடுத்தாரமொண்- மாசைக ளிவற்றுளொன் றுற்செய்து வயிறளவின் மருவாம லங்குமென்னின், வெருவுமிக வாய்ந்தந்த வடிவருச் சனைசெயார் விடுவரவ் வாறுதேர்தல் - வேண் டாது பேருதரம் வாய்ந்தநின் றிருவுருவ மேதகப் பூசைபுரித, லொருவுதல்செ யாதவர்கள் யாவரே யெனினுமவ ரும்பர்மக வான்மலரின்மே - லொருவன்முத லோர்களினு மதிகரென் றருமறை யுரைத்தல்சில ரெண்ணுமையென், கருவு தவிர் மாதவர் கசிந்தேத் தெடுக்கவொளிர் கருணையா னந்தவாழ்வே - கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௭)

8. பொங்குங் கருங்கடல் பரந்ததென் னென்றுபல புவனமுமொ ரையமெய்தப் - புக்ககட னின்றுமலை யின்றெழுந் தங்கெதனுப் பொருதொழில் வலாரியெண்ணித், தங்குந் திறற்கொடிய சதகோடி யொன்லைத் தடற்றுநின் றுருவல்செய்யச் - சகமுழுவ துமபுதை படச்சிறை விரிக்குமொரு தறுகட் கலாபமயின்மே, லெங்குங் கதிர்க்குமொரு பவளாச லம்பொர விவர்ந்துபல படையொடுமெதி-ரேற்றமாற் றலனுக வப்பா ரிடைக்கவிழ வெழுகாக மோடு கழுகும், கங்கும் புகழ்ந்தடை விறற்படைகை தொட்டநின் காமர்விறல் யாவர் புகழ்வார்-கற்பத் தலத்தினும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே.

9. துதிக்கையோ டிருசெவியி னின்றமொரு மூவரைத் தோற்றினு யண் டமனுவாத் தோற்றிட வுயர்ந்தாயொர் சனகனிடு முணவெலாந் துய்த்து மிகு பசிதெரித்து, மதிக்கைகொ டவன்பணிய முப்பொருளி னுண்மையை வகுத்தவற் குரைகவின்றாய் - வையமுதல் யாவுமோ ரறுகளவு போதாத வண் ணந்தெரித்தல்செய்தாய், விதிக்கைபுரி வானுங்க ராதபுரு சுண்டிமுதன் மே லோர்கள் பலரிறைஞ்ச - விழுமியமா னந்தமய மேயாய் விளங்கினாய் வெய்யே னின் னுண்மைதேர்ந்து, கதிக்கையுறு மாறும்ப ரருள்புரிவ தென்றுகலே காணு வதீதமுதலே - கற்பத் தலத்திநும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௯)

10. மலையுமொரு பொருளன் றெனக்கறிக் குந்திறல் வயங்குநின் னூர்திவாழ்க
மலர்பொருவு கைத்தலப் பாசாங்கு சப்படை வயங்கியெந் நாளும்வாழ்க
நிலையுருவு ஞானமுங் கிரியையு மெனக்கலை நிரம்பின ரெடுத்துரைக்கு
நேயமிகு சித்திபுத் திகளனுஞ் சத்திக ணிரம்புசீ ரோங்கிவாழ்க
வலைகட லுடுத்தபுவி முழுதுநின தருளடைந் தாதரம் பெருகிவாழ்க
வற்புதம் விராவுநின் னணியல்பூ ணுகிய வருந்தவத் தெவையும்வாழ்க
கலைவழி நினைப்பரவு செங்குந்தர் மரபுங் கதித்துநீ டூழிவாழ்க
கற்பத் தலத்திநும் விருத்தித் துருத்தியமர் கச்சிக் களிற்றுமுகனே. (௧௦)

திருத்துருத்திக் கச்சிவிநாயகர்பதிகம் முற்றிற்று.

---

௳

திருச்சிற்றம்பலம்.

# திருத்துருத்திச்
# சுப்பிரமணியஸ்வாமிபதிகம்.



11. பூமேவு சமயங்க ளோரா றினுக்கும் புலங்கொளுங் காட்சிநல்கப்
பொலிந்தன வெனச்சொலுந் திருமுக மொராறும் பொலன்செய்மணி மு
பாமேவு செங்கதி ரிராறுங்க ராமெனப் பகர்மணிக் குழையிராறும்[டியொராறும்
பன்னிரு தடம்புயப் பெருவரையி னருவியிற் பசுநற வொழுக்குதொடையு
மாமேவு கானவர் குலக்கோதை யொடுமேலை வானவர் குலக்கோதையும்
வளரொளிய வடிவேலு மார்பினூ லும்பொலிய மயில்வா கனத்துவருவா
தேமேவு சோலைபுடை சூழுந் துருத்தித் திருத்தளியி லமரண்ணலே [ய்
சீறுவெம் பகையோயு மாறுவஞ் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௧)

12. நீடுமக மேருவைத் திசைவரை யொடுங்கொண்டு நிலவுபந் தாடல்செயவு-
நேமிமால் வரையையொரு கைக்கடக மாக்கொண்டு நிகாமற் றென்றுயவு,
மோடுகதி ரைச்சிறு மதாணியென மார்பிடை யுறப்புனைய வுஞ்சலதிக - ளோ
ரேழு மொருவிரற் கொடுதெறித் திலையென வொழிக்கவுந் திசையெட்டினுங்,

கூடுகளி நெட்டுங் துதிக்கைகண் முடிந்தொருகை கொண்டிழுத் திடவும்வல்ல-குலவீர வாகுவைத் தம்பியென மகிழுநின் கொற்றமெவர் முற்ற வுணர்வார், சேடு மலி காவிரித் தென்பாற் றுருத்தித் திருத்தளியு ளமரண்ணலே - சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௨)

13. பொருவரிய மாதவத் தொருநார தப்பெயர்ப் புங்கமுனி புரிமகத்துப்
போந்துபல வண்டமு மிடித்துத் தகர்த்துநுண் புழுதிசெய் துலாவுகின்ற
வெருவரிய செறிமயிர்த் திருகுகோட் டுத்தகரின் விறல்கண்டு நடுநடுங்கி
மேலைவா னவரடைந் தோலமென வருகுபொ ாலி வீரவா குவைநோக்கியப்
பருவமிகு தகரினைப் பற்றிவரு கென்னப் பணிப்பவவ னுதவவேறிப்
பாரிடம் போதாமை தெரிதரச் செண்டாடு பண்பெவ ரெடுத்துமொழிவார்
திருவமிகு கல்விச்சிறப்புயர் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௩)

14. வெள்ளியங் கயிலையின் முதற்சிகரி வாய்தலின் விநோதப் பொருட்ட மருநாள்-வித்தகற் சேவைசெய் தஞ்சலி செயாதேகும் விதியினறி யாமை யுள் ளத், துள்ளியவ னைப்பற்றி வாவென வுரைக்கவாங் கொருகுறண்மு னுய்ப்ப நோக்கி - யொழியா வகந்தையுளை யெத்தொழில் வலாயென வுஞற்றுதலில் வல்லேனென, வெள்ளியொ ரிருக்குரை யெனக்குடிலை முன்சொல வியம்பியத னுட்பொருளெவ - னியம்புதி யெனத்தெரி தராமையாற் சென்னியிலிரங்கப் புடைத்தடைத்தாய், தெள்ளியரு மென்னுணர்வர் நின்புகழ் துருத்தித் திருத் தளியு ளமரண்ணலே - சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௪)

15. பெருகுகொடு வஞ்சகவில் குருகுவரை நிலைதபப் பெருவான் கரக்குமாறு-பேரம ருஞற்றுமள வில்லா விறற்சூர் பிணவரை யுயர்ந்துதோன்றக், கருகு நிறம் வாய்ந்துகரை கொன்றிரங் கும்பெருங் கடன்முழுதும் வற்ற வனையார் - காயத்து நின்றும்வெளி வந்தநெய்த் தோரெனுங் கடற்றிரை யெறிந்துபெருக, முருகுமலி மாலைப் புயத்தனையர் குடிகொண்ட முதுநகர மதுபாழ்பட - முன் னித் துதிக்கும்வா னவர்குடிகொ ணகர்களி முகந்துமேன் மேற்றழைதரத், திருகுதவி ரயிலெறுடுநின் விறலென் றுருத்தித் திருத்தளியு ளமரண்ணலே - சீறு வெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (௫)

16. பொருந்திய தமிழ்க்கெல்லை யாகும்வட வேங்கடப் பூதரமு மாதரவி னுற்-போதமூன் றும்போது மூன்றுதவு வெற்பும் பொலிந்துயர் பரங்குன்றமு, மருந்திய நறும்பழ முதிர்க்கும் பொழிற்கிரியு மவிர்சந்த னுசலமுமெல் - லலர் பொருஞ் செங்கையிற் றண்டுகொடு மழவடி வமைந்தருள் கொழிக்கும் வரையு, மருந்தியவு ளார்மாந்தல் போற்பிரா ணொருமொழி வயப்பொருண் மனங்கொள்ளுவான் -(வாய்மலர்க் தருளியமர் மால்வரையு மற்றுநீ மருவுமருள் யாவருணர்வார், திருந்திய வளம்பல விராவுந் துருத்தித் திருத்தளியு ளமரண் ணலே-சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே.()

17. களிமருவு வேட்டுவர் குலக்கொடி படர்ந்துமகிழ் கலவத் தழைந்ததருவே
கற்பகப் பொழிலாடு தெய்வதப் பிடியைக் கலந்துவிளை யாடுகளிறே
யளிமருவு மாதவ ருளக்கமல மலர்காப்ப ணரும் ஆறுதேனே
யாயிரங் கதிரொருங் குதயமெழ லெனவடி யடைந்தவர்க் காங்காட்சியே
வளிமருவு புடவியி னயர்ந்தோறு னுங்கருணை மழைபொழி செழுங்கொண்டலே
வந்தித் துளாரையெவ் வாமவரு மெஞ்ஞான்றும் வந்திக்க வைக்குநிதியே
தெளிமருவு நின்னடிக் கன்பரு டுருத்தித் திருத்தளியு ளமரண்ணலே
சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. ()

18 மூவர்முத லாயபர சிவன்மேனி யிற்பாதி முனிவரிய தாக்கவர்ந்து-மூத
ண்ட புவனப் பரப்பிற் சராசர முகிழ்த்திடக் கருணைசெய்தும், யாவரெது கரு
திறு ரதையப் படிக்கவர்த மிதயத் தமர்ந்தளித்து - மிச்சைஞா னங்கிரியை
பரையாதி யைவர்முத லெண்ணில்சத் திகளாகியும், பூவர்முத லோர்தொழி
லனைத்தும்மாரு தன்றெழிற் பொலிவெனச் செய்துமின்றும் - புகலளவில்
சத்தியுள துனதுகைச் சத்தியே புகன்றள விடப்படுவதோ, தேவர்பல முனி
வர்க டுதிக்குந் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே - சீறுவெம் பகையோவு
மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (அ)

19. அத்தரொரு மொழியுண்மை யிற்றெனத் தெளியுமா றருளுநின் குரவு
புகழ்கோ - வழகிய குறக்கோதை பாற்பொருளி னியல்பறிய வாற்றியநி
னுடல்புகழ்கோ, முத்தர்கரு தச்சூ ரெறிந்தமரர் சிறைமீட்ட முனிவினின்
வாகைபுகழ்கோ - மூகையென வையறி வோங்குகா வலர்கலக முழுதறுத்
தருளல்புகழ்கோ, பத்தர்பல ரெண்ணிய படிக்கவர் முனஞ்சென்று பரிவினீ
யருளல்புகழ்கோ - பயனுறு காயினேன் யாதினை யறிந்தொரு பயன்படப்
புகழவல்லேன், சித்தர்பல முனிவர்க டுதிக்குந் துருத்தித் திருத்தளியு ளம
ரண்ணலே - சீறுவெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியா
ளனே. (கூ)

20. ஓங்குநின் பான்மருவு சத்திமா ரிருவரு மூவந்துபொழி கருணைவாழ்க-
வுயர்தம்பி மார்வீர வாகுமுத லாயநூற லொன்பதின்மர் வாகைவாழ்க, வாங்கு
கடல் வைப்புமறை யச்சிறை விரிக்குநின் மாமயிற் றேகைவாழ்க - வருமி
றுதி காளுருத் திரனிலும் பொலிநின்கை வடிவொளொண் சத்திவாழ்க, வீங்
குபுக ழனமநிற் புகழ்ந்துபா டும்புலவர் வெற்றியின் விளங்கிவாழ்க - விருப்
பொடு நினைப்போற்று செங்குந்தர் தம்மரபு மேன்மேலு மோங்கிவாழ்க, தேங்
குபல் வளம்பொலி விருத்தித் துருத்தித் திருத்தளியு ளமரண்ணலே - சீறு
வெம் பகையோவு மாறுவன் பொடுகூவு சேவலங் கொடியாளனே. (கo)

திருத்துருத்திச் சுப்பிரமணியஸ்வாமிபதிகம் முற்றிற்று.

---

# திருவிடைமருதூர்
# மருதவாணர் தோத்திரப்பதிகம்.

21. திருவார் நினது திருநீறே தீர்க்கு மார்க்கு முடற்பிணியுங்
கருவார் பிறந்தை யடற்பிணியு மெனல்கண் டடைந்தேன் கருதுருவோ
டருவார் கருணைப் பெருங்கடலே யடியார்க் கெய்ப்பில் வைப்பேயென்
மருவார் மலர்சா ரிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (க)

22. ஏழைத் திருமா லயனுதி யிமையோர் பலரு மிறவாது
பாழைக் கருதா லாலநுகர் பரமா பரம கருணையனே
யூழைப் புறங்காண் வலியர்நினை யுணருந் திறலி னுரன்றே
வாழைப் படப்பை யிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (உ)

23. ஊன மடாக்குந் திறந்தொழும்பி னொருப்பட் டார்பாற் சிறிதுமிலாய்
நான மளக்கும் பெருநலமா முலையோர் பாக நயந்தவனே
யேன மளக்குந் திறமரிதா யிசைப்பார்க் கெளிதாந் திருவடியாய்
வான மளக்கு மிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (ஙு)

24. நீறு புனைவே னைந்தெழுத்து நெஞ்சங் கணிப்பே னின்னுமம்
பேறு பிறிதில் லெனப்புகல்வேன் பிணிக்காட் பட்டு வருந்துவனோ
சீறு பகைவர் புரம்வேவச் சிரித்தாய் தரித்தாய் சூலமழு
மாறு வளமி லிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (ச)

25. கூற்றஞ் சிதைய விறைநீண்ட கோக னகத்தா னாயமர
ரேற்றஞ் சிதைய வெழுந்துவிடத் தேற்றஞ் சிதைய வெடுத்தயின்றாய்
தோற்றஞ் சிதையப் பல்லுயிருந் தொழுது போற்றித் துதிக்குமுயர்
மாற்றஞ் சிதையா விடைமருத வாண வடியேற் கிரங்காயே. (ரு)

26. ஆயா நினையே சரணடைந்தார்க் கன்றி யவ்வா றடையார்க்கு
மேயா தோநின் னருள்பெருவா னிழிந்த காார்க்கும் பொழிதருமே
தாயா யளிசெய் தலைவாமுத் தலைவேல் பரித்தா யெஞ்ஞான்று
மாயா வளங்கூ ரிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (சு)

27. உணங்கன் மீனுக் குயிருதவி யுயர்நின் னுலகம் புகப்புரிந்தாய்
சுணங்க னரியா தியர்க்கரிய தாமுத் தியிற்சார் தரல்குறித்தா
யணங்கல் லவர்க்கு முதல்கருதா வண்ணு வமுதே யருட்கடலே
வணங்கல் புரிவே னிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (எ)

28. அந்தோ நினக்கு வரகுணனி லன்பு புரிவா ரொருவரிலர்
முந்தோ தனையற் கருள்வதலான் முயலும் பிறருக் கருளாயோ
நந்தோ வருநீ ரெறும்பனையு நண்ணு நறுவா சனைப்பொதியில்
வந்தோ வரிய விடைமருத வாண வடியேற் கிரங்காயே. (அ)

29. அண்டர் பரவு நிராமயனீ யதனுற் றாணி யெனுநாமங்
கொண்ட துலக்குந் தருமெனவுட் குறித்தே நின்னைச் சரணடைந்தேன்
றொண்டர் துயரஞ் சகியாத தூயா நேயா தாயானுய்
வண்டர் மலர்க்கா விடைமருத வாண வடியேற் கிரங்காயே. (கூ)

30. ஆழி புடைசூ ழுலகினினை யன்றித் தெய்வம் பிறிதுளதோ
பாழி யமைநின் னருட்குகலாப் படரு முளதோ பனிவரைவாய்
வீழி புரையும் பெருநலமா முலையாண் மேய விடப்பாகா
வாழி வளஞ்சா லிடைமருத வாண வடியேற் கிரங்காயே. (கo)

திருவிடைமருதூர் மருதவாணர் தோத்திரப்பதிகம் முற்றிற்று.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பெருமணநல்லூர்த்
# திருவெண்ணீற்றுமை
# பிள்ளைத்தமிழ்

## வழித்துணைவிநாயகர்வணக்கம்.

31. **பொ**ன்பூத்த முக்குணப் புத்தேளிர் முதலெனப் புவியகத் தெவரு முணரப் - பொலிவொரு பிறைக்கோடு மாநண்மேனி யும்பொழி கபோலக் கடாமுநாளுங், கொன்பூத்த வெண்மையுஞ் செம்மையுங் கருமையுங் கொப்புளிக் கக்கருணையே - கொழித்தமர் வழித்துணைக் குஞ்சரத் தஞ்சரண கோகநக மாகநகவே, மென்பூத்த கொன்றைச் சடைப்பரன் வலத்துவிழி வெள்ளென விடத்துமருவும் - விழிகா ரெனச்செய்ய வாயிலெழு குறுமூரல் வெண்ணிலவு தவழுந்தொறுந், தென்பூத்த வழிமுழுகி மேற்படும் பொழியுந் திறங்கருதி மூக்கணியெனத் - திகழ்முத்த மேவவமர் *மணவைவெண் ணீற்றுமை செழுந்தமிழ்க் கவிதழையுமே. (௧)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்வணக்கம்.

32. பாழிமிகு வைதிகஞ் சைவந் தழைப்பப் பசித்தழுத பவவரேற்றைப் - பரவுபர ஞானவின் பாலருச் செய்யவாய்ப் பரசமய கோளரியையவண், காழிவரு மொருமுத் தமிழ்க்கடாம் பொழிமழ களிற்றைவே தக்கொழுந்தைக் - கவுணியக் கன்றைநற் கற்புநிறை பொற்புமலி காதலி யொடுந்துதிப்பா, மாழியிறை வற்கு வெவ் விடமுதவு தன்பிழை யகற்றியுய் வான்குறித்தாங் - களவில்வெண் பணிலமுந் தாளமும் பவளமு மம்பொன்னு மணியுநாளும், வாழிநெடு வெண்டிரைக் கையேந்தி வந்துதூய் வழிபட விளங்குதெய்வ - மணவைவெண் ணீற்றுமை யணங்குக் கிணங்குதமிழ் மாலையுயர் பாலையுறவே. (௨)

# ௧.—காப்புப்பருவம்.

## திருமால்.

33. **மா**மேவு பல்லுயிரும் வாழவணை தற்குரிமை மந்தா கினிக்கில்லெனம் - மார்பினுக் கேயுள்ள தென்றுகுறி யிட்டதென மறைகூறு குறிகடந்தோன், பூமேவு மார்பினெண் முலைக்குறி யமைத்துமகிழ் புண்ணியக் கொம்பை யெவரும் - போற்றுமண வைத்திருவெண் ணீற்றுமை யெனப்பொலி வொல

* மணவை - திருப்பெருமணநல்லூர்.

ங்கொடியை யினிதுகாக்க, காமேவு பேருலகி லாருயிர்ப் பயிரெலாங் கலிவெப் பொழிந்துதழைவான் - கடையரிய தடையிடையி லடைவரிய, பெரியதண் கருணைமழை பொழியநாளுங், தேமேவு பங்கயச் செல்வியக லொண்கட் செழும் பரவை யுட்படிந்து - திதலைகொண் டெழுமனையள் கொங்கைப் பொருப்பிற் செறிந்துவளர் பச்சைமாலே. (க)

## சிவலோகத்தியாகர்.

34. தேமலிக டுக்கைநதி யாரறகு கொக்கிறகு சீரரவு பூமத்த மாமுடிச் சாத் தினர் - தேடுமிரு வர்க்கரிய ராகியுமு ரைக்கரிய சீர்கொண்முத னூல்பற்றி யாய்பொதுக் கூத்தினர் - தீர்வரிய மத்தவினி தாவருளெ னப்பல்பல தேவர் பின்வி டார்செப்பு நீடுகிச் சோத்தினர் - தேரருகி ருத்தமக லாதுதரி சித்து வகை சேருமா வோடுற்று வாழ்புலிப் போத்தினர், காமலிபு கழ்ச்சியைய வாவியடி யர்க்குறுதி நாடியவர் பாலுற்ற தீமையைப் பாற்றுவர் - நாளெனதெ னப்புகலு மூனமத றுத்துயரு ஞானநெறி யோர்பெற்ற பேறெனக் கேற்று வர் - நாமரன டிக்கடிமை யோமெனநி னைப்பவரை நாகவிமை யோருட்ப ராவிடத் தூற்றுவர் - நாடுதிரி யக்கரரு ளாளர்மண வைக்கிறைவர் நாதர்சிவ லோகத்தி யாகரைப் போற்றுவ, மாமலிக துப்பிஞெளி மேயதர ளப்பிறை விண் வாழுமுகின் மேலுற்ற வோர்பிறைக் கேய்ப்புற - வாளவிரு முத்தவட ஞானநிறை வுற்றமுலை மாறில்புக ழேயொத்து மீதுறப் போர்த்தெழ - மாம திய கத்திலெழு சீதநில வொத்துமுக வாய்முதிர்வி லாசத்து வாளின்மெய்ப் பாற்பொலி - வாரிசம லர்ச்சரண நூபுரமொ லித்தெழநன் மாதவர்முன் மே வொப்பி லாவருட் பார்ப்பனி, காமலிபொ ருப்பின்மக ளாயவனை முப்புவன காரணிக லாசத்தி பூரணக் கார்க்குயில் - காதலகல் பித்தர்குண மேததுசெய் பத்தர்பிழை காமருள மேவக்கொ ளாநலச் சூற்பிடி - காவிமல ரொத்தவிழி யோவியநி கர்த்தமயில் காணுலகெ லாமொத்த வாவுமெய்க் கீர்த்தியள் - காசில் கலை முற்றுமுணர் வோருமுண்ம திப்பரிய காரிகைவி பூதிக்கல் யாணியைக் காக்கவே. (உ)

## பொய்யாதவிநாயகர்.

35. கலர்மல வாய்ப்படு பேயருட் சேற்றுமோ
கமகல வேட்டமர் தூயர்மெய்ப் பாற்பொலி
யுலர்தலி ஞர்ப்பெரி யாருளக் காட்டிடை
யுலவுபொய் யாக்களி யானையைப் போற்றுது
மலரமர் சீர்த்திரு மாதர்கட் கார்க்குயி
லடியரை யேற்றிடு பேரளிப் பேட்டனை
மலர்மலி நீர்த்தடம் வாரியொப் பாப்பொலி
மணவைவெ ணீற்றுமை யாடனைக் காக்கவே. (௩)

## சுப்பிரமணியக்கடவுள்.

36. உணர்பெரும்புவன வுயிரெனுங்குகையு ளுறைதருங்குகனை வெள்ளி வெற்பாத்தனு - ளுண்ரநன்குமொழி யுணர்விறந்தபொரு ளுதவிநின்றவருள் வள்ளலைக்கூர்த்துதி, புணரலங்கலயில் வலனயந்துபகை பொருதுவென்ற

விறன் மெய்யனைப்பூக்கமழ் - புனமடைந்திளைய குறமடந்தைமுலை புணரு வந்தமயி லையனைப்போற்றுது, மிணர்படுங்கனக தருவெழுந்தமல ரிலகுகோம் பரென வள்ளிலைச்சூற்படை - யிறைவனெஞ்சிலினி தமர்பசுங்கிளியை யெ ழில்கனிந்தமட வெள்ளனப்பேட்டினை, வணர்கருங்குழலை மலைமருந்தையருள் வடிவையம்பிகையை விள்ளிசைப்பாட்டளி - மருவுபைம்பொழிலின் முகிலு றங்குவள மணவையெங்களுமை யையையைக்காக்கவே. (ச)

நான்முகன். வேறு.

37. வலமலியு மந்திரஞ் சந்திர முதற்பல வயப்படைக் குப்படையெனும்- வாக்காபு தங்கொண்டு தான்கொண்ட வைதிகன் மாண்பினுக் கேற்பனாளு, நலமலியும் வெண்மணி வடங்கையிற் றாங்கவெண் ணகையனைய வுருவமேனி- நாயகி மணந்துவெள் ளோதிம நடாத்துமொரு நான்முகக் கடவுள்காக்க, வுலம லியு மெண்டோட் பிரானைப் புணர்ந்துசே யொன்றீன்ற மோகினியெனு - மொ ருமுர்து மற்றவன் றிருமடைப் பள்ளியக மோவா தறப்புரிந்து, குலமலியு மனையறா யகனைநீங் காதுமகிழ் கூர்ந்தமர்ந் துலகம்வாழக் - கொழிக்குமரு ளம் மையைச் செம்மைநல் லூர்க்குடிகொள் கோமளக்கிளிமொழியையே. (ரு)

இந்திரன்.

38. முன்னுசுப் பிரமணிய ஞெமென்று நன்றுமறை முக்கா லுரைக்கமேவு- முருகனரு மருகனுவர் பருகுபுமெய் கருகுபுகழ் முகில்புரையு மேனியண்ணன், மின்னுதன் பின்னெனப் பெற்றுவசற் றூதகவுள் வெள்ளவெள் ளானையூர்ந்து - விண்ணளு மாயிரங் கண்ணளு மேனியுடை வேந்தன் பரிந்துகாக்க, பன்னுதிரு வுதரம் வருந்துதலிலாதண்ட பகிரண்ட முற்றுமீன்ற-பளகறு தனைப்போல மேனை யுந் தனையீன்று பாய்புகழ் படைக்கும்வண்ண, மன்னுமருள் புரிபசுங் கொம்பை வம் பைப்பொரு மதர்த்தமுலை தாங்கியேங்கி - வாங்கிமெலி தருநுண் மருங் குலை நெருங்குவள மணவைவெண் ணீற்றுமையையே. (சு)

திருமகள். வேறு

39. பிறந்த மனையில் வாழ்க்கையிலர் பேதை மாத ரென்னுமொழி
பிழையே யாக மணிவண்ணப் பெருமான் றனைத்தான் பிறந்தவள
முறந்த மனைவா யரய்ப்பாடி யுறிப்பால் களவிற் கவர்சிறுமை
யொழியத் தாபித் தருவாழ்க்கை யுற்று மகிழ்மா மகட்பணிவா
மறந்த வாத மழுப்படைக்கை வள்ளற் பெரியோன் றலைமதிதான்
மாறுக் கலக்க முறமுனியு மலர்த்தா ளெனினு மறத்தொழிலிற்
சிறந்த சிறியேங் கண்டமதிதான் றீராத் தெளிவு பெறவுவக்குந்
திறத்தி னமைக்குந் திருநல்லூர்ச் செல்வக் கொடியைக் காக்கவென்றே.

நாமகள்.

40. தன்னு யகன்றன் மேனிநிறந் தனையொப் பாய நிறமலர்மேற்
றங்கல் போற்றன் மேனிநிறந் தனையொப் பாய நிறமலரு
மன்னு நிறைவெள் ளறிவுடையேம் வாக்குங் குடிகொண் டமர்கருணை
வண்மைப் பனுவ லாட்டியிரு மலர்த்தா டலையால் வணங்குவா

மூன்று நின்ற கங்கைமக ளொடுங்கி யடங்கி யேமாற
 வும்பர் பெருமான் றிருமேனி யொருபால் கவர்ந்து மமையாமே
மூன்று வனையன் றிருவுள்ள முழுதுங் கவர்ந்துள் ளிறுமாக்கு
 முத்த மூரற் றிருமணவை முதல்வி தன்னைக் காக்கவென்றே. (அ)

## துர்க்கை.

41. மலையா நிற்கும் வெள்விடையும் வான மறைக்குஞ் சிறைப்புள்ளு
 மதவெண் பகடுங் கரும்பகடு மானு மீனு மற்றுளவு
மூலையா வெனக்கு மெதிரோவென் றுரைக்கும் விறலோ ராண்சிங்க
 முகைக்குந் திறலோர் பெண்சிங்க முள்ளக் குகையு ளுறத்துதிப்பா
மலையார் செறுவிற் கோட்டெருமை யங்கட் கரும்பு கறித்தருந்த
 வதன்வா யிருபால் வழிதீஞ்சா றவாவி யுண்ணும் பலவண்டர்
விலையா வல்குல் விற்குமினார் மினிர்வாயூற லுணும்விடரை
 விழையு மணவைத் திருநல்லூர் வெண்ணீற் றுமையைக் காக்கவென்றே. ()

## சத்தமாதர்.

42. பறையோ திமமு மறையுமிமிற் பாழி யேறும் பிணுகமும்போர்
 பயிலு மயிலு மயிலும்வலி படுபுள் ளரசுந் திகிரியுமொய்
யுறைசீ யமும்வன் கலப்பையும்வெள் ளொருகை யுரையும் வச்சிரமு
 முழலும் பேயுஞ் சூலமுக்தம் மூர்த்தி படைசெய் யெழுமாத
ரிறையோ னுள்ளத் தழகொழுக வெழுதி நோக்கு மோவியத்தை
 யெண்ணில் புவன மொருங்கீன்று மிளமை வளமைப் பசுங்கிளியை
மறையோ லிடும்பொற் றிருவடியென் மனத்தும் பதிக்கு மனத்தைநகு
 மணநல் லூரின் வெண்ணீற்று மயிலைப் பரிந்து காக்கவே. (௧0)

## முப்பத்துமுக்கோடிதேவர்.

43. சீதரன்மலர்த்தவி சிருக்கையனிவர்க்கரிய வொப்பற்றமெய்ச்சோதி பாதியுருவிற்பொலி - தேவியையுருக்கிளர் முருக்கித ழிதழ்க்கிளியை யெப்பற்று மற்றருண் மேவியவருக்குறு, காதரமறுத்தவர் பவக்கடல்சுவற்றிமகி ழப்பெற் றிமிக்காளை மூவிருமுகத்தொரு - காளையைமதக்கவு ளுடைக்கயமுகத்தமர ளைப்பெற்றருற்றுயை மேதகுகுணத்தியை, யோதரதரச்செழு வடத்தொ டொளிர்முத்தவட முற்றுச்சி றப்பேறு ஞானவமுதக்கட - லூறுகல சத்துணை முலைத்துடியிடைக்கொடியை யற்புக்கி னிப்பாளையாரருளொருத்தியை, யா தரமிகப்பெரு மணத்துமெமனத்துமமர் முத்திக்குவித்தாய தாளுடையசத்தி யை - யாதவருருத்திரர் மருத்துவர்வசுக்களொனு முப்பத்துமுக்கோடி தேவர் கள் புரக்கவே. (௧௧)

௧.—காப்புப்பருவம் முற்றிற்று.

---

# உ.—செங்கீரைப் பருவம்.



44. நீர்பூத்த முப்பத் திரண்டறமு மோம்புபெரு நிறைவின்மே னுக்கிம லரா - நீதிகீழ் நோக்கியே மலர்தலென் றியாவரு நிகழ்த்துநின் னிருகைமலரு, மேர்பூத்த புலியிற் பதித்தொரு முழந்தா ளிருத்தியோர் முழந்தாளெடுத் - திரவிமண் டலமென்ன விருகுதம் பைக்குழைக ளொங்கும்வில் வீசியாடத், தார் பூத்த முச்சியிற் கட்டிவிடு நித்திலத் தண்மணிச் சுட்டியுநலர்-தழையுநுத லிற் பொலிவெண் ணீறுமொண் டிலதமுந் தளவனைய குறுமூரலுஞ்,சீர்பூத்த வெண் ணிலவு வீசியா டக்கவுரி செங்கீரை யாடியருளே - திருப்பெரு மணத்தம ரருட் பெரு மணச்செல்வி செங்கீரை யாடியருளே. (க)

45. பேசுபுகழ் சால்பெரும் புவனத்தி லாண்மகப் பெறல்சிறப்பென்றுமற் றைப் - பெண்மகப் பெறலத் துணைச்சிறப் பன்றுதுயர் பெற்றதொப் பாகு மென்று, மாசுபடு துன்பமே பெண்ணுருவ மாயெந்த வைப்பினும் வருவ தென்று - மதிக்கின்றொரு மகவுமக வாவென்று மிங்ஙனம் வகுத்துரைப் பார்க ளோடு, கூசுத லிலாதக மலர்ந்தாண் மகப்பெறுதி குறைவுதப வென்றுசிமுற் - கூறுநரு முள்ளநாண் கொள்ளவெள் ளப்படாக் குவடுவா னணவவோங்கும், தேசுமலி பனிமலைக் கொருபுதல்வி யாயவுமை செங்கீரை யாடியருளே - திருப் பெரு மணத்தம ரருட்பெரு மணச்செல்வி செங்கீரை யாடியருளே. (உ)

46. தையலர மாதர்முதல் யாருமோ கித்துத் தழீஇக்கொளாத் தடைகருதி யோ - தாமே விரைந்தின்னு மோகினியை முன்போற் றழீஇக்கொளல் விலக் கெண்ணியோ, வையமிசை யவரிடைத் தாம்கொண்ட வார்வத்தை மன்னுயிர்க் கறிவிக்கவோ - வயங்கருவ மெற்றிவ ரியங்குருவ மற்றெனு மறைப்பொருளை வெளிசெய்யவோ, வுய்யநெறி தருசைவ சித்தாந்த மோதுமுடி பொன்றியொன் றுமையிற்றென் - றுணர்த்தவோ வுணர்வரிய வுணர்வுருவ மாகியெம் முணர் வொழித் துணருமொருவர், செய்யதிரு மேனியொரு பாதியமர் பைங்கிள்ளை செங்கீரை யாடியருளே-திருப்பெரு மணத்தம ரருட்பெரு மணச்செல்வி செங் கீரை யாடியருளே. (ங)

47. நிறைசுகுண மருவுநம் மிருகண்மல ரிலமென்று நினையாம லொன்றழி
நிலவுநங் கையமரு மலரென்று நினையாம னிதமுநிக ழொன்றழிக்கு [க்கு
மறைபுகலு நங்காமர் மெய்யிலொன் றிரவுபகன் மாறுத வெப்புறத்து [னுங்
மற்றென்று மாற்றவ ளொடுங்கூடி மற்றதை வயக்குமிவை யன்றியின்
குறைவரிய வுவளகத் தும்புகூஉ நாணநாங் கொளவிரண்டுங் குடிகொளும்[யுஞ்
குலவிவற் றின்றிறமை யென்னையறி வாமென்று குன்றுமா திருகதிரை
சிறைசெய்த தெனவிறை முகக்கண் புதைத்தபெண் செங்கீரை யாடியருளே
திருப்பெரு மணத்தம ரருட்பெரு மணச்செல்வி செங்கீரையாடியருளே.

48. பொருந்துபசி யால்விழி யிரண்டும் பிசைந்தழு புலிக்குருளை யொன்று வப்பப் - பொங்குபா லாழியை யழைத்துக் கொடுத்தசிவ புண்ணியன் புகழ்

சமழ்ப்ப, மருந்துநல் விருந்திஃ தருந்துக பொருந்தவென மறையுணர வரிய பெரிய - மாதேவன் வின்மணிக் குழைதழை செவிக்கண் மறைத்தமிழ் நிறைத் தூட்டுமா, குருந்துமழ களிறெளி விளக்கெனச் சண்பையிற் குலவுபர சமயசிங் கக் - குருவையு ஞவப்பமெய்ஞ் ஞானவின் பான்முன் கொடுத்தபைங் கோல மயிலே, திருந்துநல லருந்தவ ருளம்புகு விளக்கமே செங்கீரை யாடியருளே - திருப்பெரு மணத்தம ரருட்பெரு மணச்செல்வி செங்கீரை யாடியருளே. (ரு)

வேறு.

49. சூழியமுஞ்சிறு சுட்டியும் விட்டொளிர் சோதிவிரிந்தாடச்
சூடுதிச்செவி நீடுங்குழையுந் தோடு மசைந்தாட
வீழியவாவுசெவ் வாயினெழுங்குறு வெண்ணகை நிலவாட
வெள்ளியபிறைநுத லென்பது மெய்யென வெண்ணீற் றொளியாட
வாழியவாழிய வென்றுமுனின்று வழுத்தும் பேரடியார்
மாறுவன்பெனும் வாரிகுடைந்து மகிழ்ந்தவர் சன்மமெனு
மாழியவாழி சுவற்றுமடப்பிடி யாடுக செங்கீரை
யல்லூர்பொழிலமை நல்லூரெழிலுமை யாடுக செங்கீரை. (சு)

50. நிறைதருமம்பல வுறைதருகரமலர் நிகழ்சிறு வண்டாட
நிலவெழுதிருமுக மதிவாயூற னிரம்புஞ் சுதையாடப்
பொறைதரு கருணையின் முழுகியகயல்கள் பொலிந்து புரண்டாடப்
புவனம்பலவு மடங்கியவுதரம் பொற்பு மலிந்தாடக்
கறைதருகண்டர் கருப்புவின்மாரர் காய்ந்த துளத்தோர்ந்து
கரைதருநும்வலி காண்குவலின்னே காண்கென வறைவதுபோ
லறைதருசென்னி யசைந்தாடத்தனி யாடுக செங்கீரை
யல்லூர்பொழிலமை நல்லூரெழிலுமை யாடுக செங்கீரை. (எ)

51. விண்ணலைபிறையு நிறையுந்துறையும் மேவிய சடையாட
மிளிர்பொன்னுடைய னேத்துந்திருவரை வெம்புலி யுடையாடக்
கண்ணலைநீரொடு நெக்குருகன்பர்கள் கைகள் குவித்தாடக்
காமருகொன்றை யொடுந்தலைமாலை கலந்து புயத்தாடப்
பண்ணலையாம லெழுப்பிசைவல்லவர் பாடிசை யூடாடப்
பதினுலகு மசைந்தாடக்கழல் பற்று சிலம்பாட
வண்ணலைமன்றிடை யாட்டுஞ்சூட்டன மாடுக செங்கீரை
யல்லூர்பொழிலமை நல்லூரெழிலுமை யாடுக செங்கீரை. (அ)

வேறு.

52. இகழ்தலிறவமுயல் பவர்வினைநினைமுனி கந்தேநின்றுர்யா
மினையமுனடிமைய மருள்கெனவிமையவ ரென்பாரன்பாரா
யகழ்மலமெனவனு தினமுறையிடவடி யன்பானன்றேயா
யருண்மழையிடையொழி வதுதவிர்வகைபொழி யஞ்சேருங்காரே
புகழ்மிகுகவுணிய மதலைமுனமுகைத விர்த்தார்வங்கூர்சீர்
புனைதாரினைதரு மமுதுதவியமுலை நங்காய்செங்கேழே

திகழ்பவர்திருவுரு வொருபயலமர்மயில் செங்கோசெங்கீரை
திருவளர்மணவையின் மருவளர்குழலுமை செங்கோசெங்கீரை. (கூ)

வேறு.

53. வேலைமருட்டிய வாள்விழியற்புத நங்காய்சந்தாதி
மேருவளைத்தவர் மார்புதுளைத்தத னம்பூசுந்தாயே
யாலையினித்தெழு தேனையகற்றுசொல் கொண்டாய்வண்டாயும்
பான்மைமலர்க்குழ லாய்மலைபெற்றம ருந்தேசெந்தேனார்
சோலைநலக்கிளி யேயமுதொத்தக ரும்பேசெம்பாகே
சூழ்பவர்க்கிக லாயவொழித்தவர் தம்பாலொன்றீவாய்
சேலையெடுத்தகை வேளைநிறுத்தின ள் செங்கோசெங்கீரை
சீர்மணவைப்பதி வாழுமடப்பிடி செங்கோசெங்கீரை. (௧௦)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

## ங—தாலப்பருவம்.

54. வாங்குங் கொடிநுண் ணுசுப்பொசிய வார்க்கும் குமவன் முலைசுமந்த
மடவ நடைமங் கையர்நறிய மாலைக் குழல்கட் டவிழ்க்கவது
தாங்கும் விரைமென் றுகள்வீழ்ந்து தவழ்ந்தம் மடவார் முலைகழித்த
சாந்தும் புழுகுங் குங்குமமுந் தனவா தழுந்து சேறுகித்
தேங்குந் திருவீ தியிற்படிந்து செறியு மீரம் புலர்த்தலினத்
தெரிவை மாரு மைந்தர்களுஞ் சிந்தைக் கசிறுசி யறுத்தியங்க
வோங்குந் திருவத் தமிழ்மணவை யுறைவாய் தாலோ தாலேலோ
யுலக முவக்குந் திருவெண்ணீற் றுமையே தாலோ தாலேலோ. (க)

55. வண்கா லென்ன வாயென்ன வாய்க்கா லெனக்கால் வாயெனப்பேர்
மருவி மாறு வனங்கொணமை மான நல்லூர் பெருமணம்வா
னெண்கா நல்லூர்ப் பெருமணமே ரேப்பெ ருமண நல்லூரென்
றிலகு பெயர்பூண் டுறுவனமேய்ந் தென்றும் விளங்கு மிந்நகரைத்
தண்கா லறிஞர் பலர்குழுமித் தவாது சூழ்ந்து மருவுதலாற்
றுவா நாமு மெஞ்ஞான்றுந் தவாது சூழ்த தகுதியென
வொண்கால் பலசூழ் சிவலோகத் துறைவாய் தாலோ தாலேலோ
வுலக முவக்குந் திருவெண்ணீற் றுமையே தாலோ தாலேலோ. (உ)

56. காரார் கலிநீர் முகந்தெழுந்த கமஞ்சூற் கொண்டல் கருக்கலங்கக்
கலைவான் மதியத் துடல்போழக் கற்பத் தருவின் கழுத்தொடிய
நீரார் தடத்துத் தகட்டகட்டு நெடிய வாளை மேற்பாய
நிகழ்கார் மேதி படிந்துழக்கி நெல்லின் கற்றைக் கதிர்மேய்ந்து
சீரார் நறுந்தா மரைகுதட்டிச் செங்கட் கரும்பு கறித்தருந்தித்
தேமா நிழலிற் பேருணவு செறித்துண் டிடலே பொருளெனக்கொ

ளோரார் போலத் துயின்மணவை யுறைவாய் தாலோ தாலேலோ
வுலக முவக்குந் திருவெண்ணீற் றுமையே தாலோ தாலேலோ. (ங.)

57. நிலவு தலைமகன் இனிதுயிர்த்த நிலமா கியநற் றுய்மகிழ
நிரம்பு பயமூட் டுவளர்த்து நிகழ்கா ராய செவிலித்தாய்
குலவு பசிதீர் தரவுணவு கொள்ளுங் கலத்தி னுவர்விரவுங்
கொள்கை தீதென் றதுகடிவான் குறித்த பொழில்கள் பலவுநிறை
பலவு மினிய தேமாவும் படர்நெட் டிலைய கதலிகளும்
பண்பி னுயிர்த்த கனிச்சாறு பாய்ச்சி நிற்ற லாற்றிசைபோ
யுலவு புகழ்சால் வளமணவை யுறைவாய் தாலோ தாலேலோ
வுலக முவக்குந் திருவெண்ணீற் றுமையே தாலோ தாலேலோ. (ச)

58. கத்துந் தரங்கக் கடலெழுந்து கழியின் வழிவந் திழிவிலழல்
காலு மொளியுங் கருகவொளி காட்டுந் துகிரும் வளையீன்ற
முத்தும் பரப்ப வதற்கெதிரே முகில்வந் துறங்கு முயர்பொழில்கண்
முனிவின் றேற்றுக் கனிவினொடு முகந்து பரிவர்த் தனைசெயல்போற்
கொத்து மலியும் பைங்கமுகின் குலைச்செம் பழமும் வெண்முகையுங்
கொட்டி நிற்ப வதுகண்டு குளிர்வா னுதி யெவ்வுலகு
மொத்து நவிலும் புகழ்மணவை யுறைவாய் தாலோ தாலேலோ
வுலக முவக்குந் திருவெண்ணீற் றுமையே தாலோ தாலேலோ. (ரு)

வே று.

59. கருணைததும்பி வழிந்துபரந்த சடைக்கட் செந்தேனே
கடையேன்மூல மலத்தைவிளர்க்கக் காணுங் குழலமுதே
மருமலிபைந்துள வத்தொடைமாமுகில் வந்தபின் வந்தமினே
மாறுவன்ப ருளத்துமுளைத்து வளர்ந்தெழு பைங்கொடியே
பொருவருபைங்கிளி தங்கியசெங்கைப் பொற்புயி ரோவியமே
புயறவழ்சிமயத் திமயப்பிடியே பொலிமலர் மாளிகைவாழ்
தருணமடந்தையர் தாழுங்குயிலே தாலோ தாலேலோ
தண்ணியமணவைப் புண்ணியமயிலே தாலோ தாலேலோ. (சு)

60. உழைதருகையுடை யெந்தைபிரானுக் குடனெழி யர்தமரா
வோங்குசிருட்டிமு னைாந்தொழி லு மொருங்கு முடித்திடுவாய்
குழைதருசிந்தையி னெக்குருகிக்கசி கொண்டுகை கூப்பிடுவார்
குவிதலிலாத வுளக்கோயிற்கிடு கோலம் பொலிசுடரே
மழைதருமுகிலும் விளர்ப்பவிருண்ட மலர்க்குழ லோதிமமே
மாறுவினையேங் குடிமுழுதாண்டற வாழ்வித் திடுமமுதே
தழைதருமறையெனு மாவிற்குயிலே தாலோ தாலேலோ
தண்ணியமணவைப் புண்ணியமயிலே தாலோ தாலேலோ. (எ)

வே று.

61. உணர்பவருட்பொலி மழகதிரொத்தொளிர் தாயே நாயேனு
முழலுமெனக்குக லருள்பொழியுத்தம மாதே போதேவாழ்

புணர்முலையற்புத மகளிர்பழிச்சிடு தாளாய் வேளாயே
புவனமுழுதமைத்தையு முதரமடக்கிய மாதா வேதாவே
பிணர்மலரிற்குதி கொளுநறவொத்தமெய் வாழ்வே தாழ்வேக
வெனவயன்முதற்பல வமரரிரக்குமு னீவாய் பூவாயோர்
வணர்கொண் முகிற்குழல் வதிபிறைமெய்க்கவு மாரீ தாலேலோ
மணவைநகர்த்தலை மருவுமகத்துவ மானே தாலேலோ. (அ)

வேறு.

62. வந்திப் பவர்பெரு வாழ்வேதாழ்வே யாழ்வேனும்
வஞ்சக் கொடுவினை நாயேனுய்யா தேயாயா
முத்தித் திருவருள் சாராவோரா வேராரா
மொய்ம்புற் றிடவருண் மானேதேனே கோனேயா
நந்திப் பொலிமலை மாதேசூதே யோதேர்சா
னன்றற் புதமுலை யாளேவாளே நீளேவே
சிந்தித் திடுவிழி யோராய்தாலோ தாலேலோ
திண்பொற் புரிசைநல் லூராய் தாலோ தாலேலோ. (கூ)

வேறு.

63. கரியகணயவை யேவாய் தாலோ தாலேலோ
கருதுநர்பாலொளி யாவாய் தாலோ தாலேலோ
வரியபெமானிட மோவாய் தாலோ தாலேலோ
வருள்வரமேபொழி நாவாய் தாலோ தாலேலோ
வுரியரலாருயிர் காவாய் தாலோ தாலேலோ
வொளிர்முலையாமத மாவாய் தாலோ தாலேலோ
பிரியமுறுருள மேவாய் தாலோ தாலேலோ
பெருமணமேவிய பாவாய் தாலோ தாலேலோ. (க0)

ங.—தாலப்பருவம் முற்றிற்று.

# ச.—சப்பாணிப்பருவம்.

64. பார்வளர் மதிக்குழ வெனக்கமு மலத்துறப் பவித்தென் பவந்துடைத்த
பரசமய சிங்கமென் றுரைசெயும் பாலருப் பவளவா யார்மணத்துக்
கார்வளரொ ராணவமு மிருவினையு மும்மலக்கட்டுமுட லாதிநான்குங்
கருதுசாக் கிரமாதி யைந்துமங் திரமாதி கரையாறு நீந்தியெழுமா
ருர்வமுற மூழ்கிப் புறத்தடையுமாசென வகத்தடையு மாசுமண்ணி
யான்றபஞ் சாக்கரப் புனலகன் கரைமேவு மாருயிர்க் கருள்சுரந்து
சார்வரிய வெண்ணீறு நல்குந் திருக்கைகொடு சப்பாணி கொட்டியருளே
தருமணத்தவழவமை பெருமணங் கமழுமுமை சப்பாணிகொட்டியருளே

65. வேயெனப் பொலிபசுந் தோளுடைய மலர்மாதர் மென்கையங் காந்த
டாங்கு மிளிர்கமல மலர்பகலு மிரவுமெழு மிருசுடர் விராவுற விழுங்குமரவ,

மாயெனப் பொலிகருணை யம்மான் றிருக்கையொ டளாவுங் கெளிற்றுமூல - மன்புபுரி வழியடியர் பவவாரி முழுமையு மலைத்துச் சுவற்றுவடவை, சேயெ னப் பொலிவரைக் கிழவன்விழி வளருந் திருந்தலர் படுத்தவமளி - தெய்வவற மூப்பத் திரண்டையும் வளர்க்குநற் செம்மையான் மிக்கசெவிலித், தாயெனப் பொலிநின்கை மலர்முகிழ்த் தம்மையொரு சப்பாணி கொட்டியருளே - தரு மணந் தவழவமை பெருமணங் கமழுமுமை சப்பாணி கொட்டியருளே. (௨)

66. குழைதரச் சுவைமதுப் பொழிதண்டு வாங்கிக் குலாவுஞ் சுருப்புநாணுங்- கூட்டியதின் மலரொன்று நாட்டிவலி காட்டியெதிர் கொற்றவேள் பொற்ற காமர், விழைதரப் பொலிபுருவ முற்றுமழல் பற்றுமொரு வெவ்விழிக் குணவு செய்த - மெய்யர்சிவ லோகத் தியாகர்பனி மால்வரை விருப்புறு மணப்பந் தரி, னிழைதரத் தக்கவிடை யொசிபவன முலைசுமந் திணர்மலர்க் கொம்பி னிற்கு - மேந்தெழினி னருகுற்று மறைமுழங் கப்பல வியங்கலிப் பப்பல்புவ னந், தழைதரப் பற்றுகைத் தாமரை முகிழ்த்தம்மை சப்பாணி கொட்டி யருளே - தருமணந் தவழவமை பெருமணங் கமழுமுமை சப்பாணி கொட்டி யருளே. (௩)

67. செய்யகம லம்பொருவு மென்பது திறம்பச் செயற்கைச் சிவப்பெழுந்து - செறிதரக் கன்றுமென் றெண்ணுது பதிமுனுஞ் சேர்ந்தறி தராதவிவைகள், வையமிசை யிவர்முனஞ் சேர்வதோ வென்றுள மதித்திடா தண்டமண்ட - மாண்டபகி ரண்டமுற் றீன்றளிக் குங்கருணை வாஞ்சைநற் றுயாதலான், மையவிரு மெங்கள்கண் மலரோடு வதனமு மலருமா றுளமிரங்கி - வளமொ ழிப் டைங்கிள்ளை தாங்கியத னிறகுதை வந்துநந் துவகையுறுநின், றையலமர் கைம்மலர் முகிழ்த்தம்மை யம்மையொரு சப்பாணி கொட்டியருளே - தரு மணந் தவழவமை பெருமணங் கமழுமுமை சப்பாணி கொட்டியருளே. (௪)

68. உரவுமறை பாடுசிவ லோகத் தியாகரென் றுரைசெய்நின் கொழுநர்மகிழ- வுள்ளங் கசிந்துநெக் குருகியுரு கிக்குழைந் தோங்குதுதி பலபாடுவோங், கரவு தவிர் மூத்தநின் மகற்கினிய மோதகங் கைதொடப் பலபடைப்போங் - கரு திள மகற்குநறு மான்மதஞ் சாந்தங் கருப்பூர மப்பிவிடுவோம், பரவுமங் தாகி னி நினக்கடிமை செய்யுமொரு பாவையென் றேனாட்டுவோம் - பரிந்துனைத் துதிபுரிதல் சொல்லவேண் டுங்கொலெம் பாலருள் சுரந்துமிக்கா, தரவுபெரு க்கர முகிழ்த்தம்மை யம்மையொரு சப்பாணி கொட்டியருளே - தருமணந் தவழவமை பெருமணங் கமழுமுமை சப்பாணி கொட்டியருளே. (௫)

வே று.

69. வேட்டுப் புயறவழ் சிமயத் திமய விலங்க லிடைத்தோன்றி
விண்ணவர் மண்ணவ ரெண்ணுமொர் வெள்ளி விலங்க லிடைத்தனியே
பாட்டுப் பிரமர முரலுங் கொன்றைப் பைந்தார் வேய்ந்துலவும்
பண்பார் பிரணவ குஞ்சர மேவிப் பாரொடு விண்வெருவு
மோட்டுத் திறல்கொ டுலாவிரு கோட்டொரு மூரிச் சினவேழ [வெண்
முனைமுதன் மாய்த்தொரு வரைபோற் சாய்தர முனிவிற் பொருமொரு

கோட்டுக் களிறு பயந்த மடப்பிடி கொட்டுக சப்பாணி
குணவைப் பெனவமை மணவைப் பதியுமை கொட்டுக சப்பாணி. (சு)

70. தமரத் திரைபடு தொடுகட லுலகிற் றண்ணிய பிரமபுரந்
தழைதரு வேணு புரப்பெயர் பூணத் தாவில் வரங்கொண்டே
யமரர்க் கதிபதி முதலியர் திருவனை யார்புக ழொடுகூட்டுண்
டண்ட மடங்க நடாவு கொடுங்கோ லாளியு மவனிளைய
பமரத் தொடைநெடு முடிவலி யினரும் பன்னமர் தருமிடையும்
படையும் முடையும் படிதடி கடிவடி பயிலயில் வலனேந்து
குமரக் கடவுளை யீன்ற கருங்குயில் கொட்டுக சப்பாணி
குணவைப் பெனவமை மணவைப் பதியுமை கொட்டுக சப்பாணி. (எ)

71. பிறைமதி நிறைபுன லுறைதரு சடிலப் பெருமா னொருமான்வாய்ப்
பெருகொலி யொருசெவி யருகுற நிறுவு பிரானொரு பாலமர்வாய்
கறைதப மறைமுடி போதுமொர் கிள்ளை கலந்தமர் கைக்கிளியே
கடையேன் குடிமுழு தாண்டு விரும்பிக் காக்கும் பைங்கொடியே
மறைமுழு வதுமே கலைசெய் தரையணி மாதே மாதரசே
மலையி லுதித்த மருந்தே வெள்ளிய வாணகை யோதிமமே
குறையற வடியவர் பார்பொலி சுடரே கொட்டுக சப்பாணி
குணவைப் பெனவமை மணவைப் பதியுமை கொட்டுக சப்பாணி. (அ

வேறு.

72. சிறுமதி நதிபொதி மிடைசடை யுடைய ரிடத்தும டப்பாவாய்
செறிதவர் மனவிருண் முழுதற வவணொளிர் பத்மப தத்தோயே
மறுவறு கதிரொடு மதியுற வுறுமிரு ளொத்தகு முற்கோதாய்
மறுகுறு சிறுகிடை யொசிதர வளரிள முத்தமு லைத்தாயே
கறுவொடு மெழுகொடு விடமமிர் துறவிடு கட்கடை நற்றோகாய் [யே
கதிர்விழி யெனவொரு தமியனுள் ளொளிமுழு கத்தயை வைப்போ
குறுமுனி தொழுதெழு பனிமலை வருமயில் கொட்டுக சப்பாணி
குளிர்மலி பொழிலெழின் மணவையி லமர்குயில் கொட்டுக சப்பாணி.(

வேறு.

73. படவர வச்சுமை முழுது முணப்பசி யுற்றவ னத்தாரர்
பூதும மலர்த்தலை யமர்மறை வித்தக ரட்டதி சைப்பாலர்
கடவுளர் மற்றையர் முனிவரர் பத்திசெ யப்படு மெய்த்தேவே
கமலம லர்த்தலை மகளிர்மு தற்பல ரற்புறு கற்போயே
மடமை யறுத்தென திதயம லர்க்கணி ருக்கும னப்பேடே
மதியமு டித்தவர் நிதிய மெனத்தமு ளத்துற வைப்போயே
குடவளை மொய்த்தசெய் மணவை மடப்பிடி கொட்டுக சப்பாணி
குலவிம யத்தனி வரைவரு முத்தமி கொட்டுக சப்பாணி. (கo)

௪.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# ௫.—முத்தப்பருவம்.



74. கொழுதும் வரிவண் டுழுதழக்கிக் கொழுந்தே னிரம்ப வாய்மடுத்துக்
குமட்டிக் கலித்தாங் கெதிரெடுக்குங் குளிர்மென் மலர்ப்பூங் குழற்
றொழுது மழுதும் புகழ்பாடித் துதித்து முருகி யுருகிநிகழ் [கொம்பே
தொண்ட ருளக்கோ யிலுக்கமைந்த தூண்டா விளக்கே சுயஞ்சோதி
யெழுது முயிரோ வியக்கொழுந்தே யெழுதா வுருவத் திளங்கொடியே
யெழுபேருலகு நினைந்துதொழு தெழுகோ மளமே யிலவாதி
முழுதுமிணையி னின்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி முத்தந் தருக முத்தமே. (க)

75. நனியா தரஞ்செய் துள்ளுருகி நைந்து குழைந்து நாத்தழும்ப
நாளும் வழுத்தும் பேரடியார் நலஞ்சா லுள்ளத் தூற்றரும்பி
யினியா நிற்குஞ் சுவையமிழ்தே யேழைத் தொழும்பு பூண்டொழுகு
மெங்கள் குடிக்கு மொருமுதலே யெல்லா வுயிரு மினிதீன்று
கனியா நின்ற பேரருளிற் கசிந்து நோக்கி மகிழ்விக்குங்
கரும்பே புவிமு ளூற்றுங் கடந்த முதலி லாமுதல்வன்
முனியா தவாவுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி முத்தந் தருக முத்தமே. (உ)

76. விளக்கு மரவிச் செங்கரும்பு விரும்பு சுரும்பு நாண்பூட்டி
விரைக்கோ றொடுத்த வேளுடலம் விழித்தீக் குணவாக் கியதுமறந்
திளைக்குங் கொடிநுண் மருங்குல்கவன் றேங்க வீங்கு மிளமுலையு
மிளகு பசிய வேய்த்தோளு மெழில்கொப் புளிக்குந் திருமுகமுந்
திளைக்குங் காதல் கொடுநோக்குஞ் செய்ய சடைவெண் பிறைமுடித்த
தேவ தேவன் முககமலஞ் செவ்வே மலர வெண்ணிலவு
முளைக்கும் பவளச் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி முத்தந் தருக முத்தமே. (ங)

77. நத்தங் கமழுங் குழற்கோதை நல்லா ரறுவர் திருமுலைப்பா
னன்கு தெவிட்ட வுண்டுபசு நறும்புற் புனற்றொட் டிலினமர்போ
தத்தங் கமழும் படியெடுத்தாங் கணைத்து மார்பி லுச்சிமோந்
தார்வம் பெருக நோக்குதொறு மருளாற் பெரிய யோகியர்தஞ்
சித்தங் கமழுங் கிண்கிணிப்பொற் சிலம்பு புலம்பு சேயிதழ்த்தாட்
டெய்வச் சைவச் சிறுகுழவி திருவா யாறு முவந்தளிக்கு
முத்தங் கமழு நின்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முதுசீர் மணவைப் பெருமாட்டி முத்தந் தருக முத்தமே. (ச)

78. இழியும் புவனச் சிறுவாழ்வு மமரர் புவனப் பெருவாழ்வு
மம்ம நாளு மருவருக்கு மார்வம் பூண்ட மலபாகர்

விழியு மனமுங் குளிர்தூங்க விதிகா ணரிய திருவுருவ
மேலி யாவி முதன்மூன்றும் விருப்பின் வாங்கி யெவ்வினையு
மொழியும் படிசெய் நோக்காதி யொன்றப் புரிந்து சிவானந்த
மூறிப் பெருகித் ததும்பியெழ வொன்று மொழிவா ருளங்குளிர
மொழியும்பவளச் செங்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முதுசீர்மணவைப் பெருமாட்டி முத்தந்தருக முத்தமே. (ரு)

வேறு.

79. மதிமுத்தம் வீரன்வயி ரக்கழற் காறேய்க்க மண்ணிடைத் தேய்ந்த துயர்வேயி - வருமுத்த மதிலெழுந் தழலால் வெதுப்புண்டு மாழைகரு கியது செஞ்சொற், பொதிமுத்தம் வன்பகடு காலுழக் கப்பிளவு பூண்டதா லிப்பி வளைமீன் - பொலிமுத்தம் வெய்யபுல வொழியாது நாறுமொண் பூவையர் களத்துமேவுந், துதிமுத்த மவர்மகிழ்நர் கைபட் டதுக்குண்டு தோன்றுது மறையுமிக்குச் - சுடர்முத்த மாலையி னெரிந்ததிவை வேண்டேந் தொடுத்தபற் பலவுயிர்க்கும், பதிமுத்த மேற்றுமகிழ் நிதிமுத்த மன்னசெம் பவளமுத் தந்தருகவே - பல்லூர் விரும்புமெயி னல்லூரரும்புமயில் பவளமுத்தந் தருகவே. (சு)

80. அடரிருட் பொலிவழிய வாயிரங் கதிர்விரித் தாதித்த னுதயமெழுமோ - ரருவரைச் சிந்தூர வருவியிற் பன்னூறு மாழ்ந்தொளி பரப்பு மணியுஞ், சுடர்விரித் தெழுவசிச் சுதரிசன முந்தனித் தொல்வளையு மேந்து மொருவன் - றுழாய்ப்படலை மறுமார்பி னுக்கழகு செயும்விலைத்தொகையிலா வரியமணியு, மிடர்கெடத் தருவரொடு சதகோடி கொண்டுபொரு மேந்தலூர் மணியுமற்று - மியம்புமைந் தலைநாக மணியும்யாம் வேண்டல மெமக்கம்மை செந்துகிரெனப், படர்சடை தரித்தபொல் லாமணி யவாவுநின் பவளமுத் தந்தருகவே - பல்லூர் விரும்புமெயி னல்லூ ரரும்புமயில் பவளமுத் தந் தருகவே. (எ)

81. காவுதீர் பேரருள் விழிக்குடையு மீனுங் கலந்துபர ஞானமூறும் - கதிர்முலைக்குடையுங் களிற்றிகன் மருப்புங் களத்தினுக் குடையும் வளையும், விரவுபா கெனுமொழிக் குடையுங் கரும்புமெழின் மேயதோட் குடையும் வேயு - மிளிர்கவா னுக்குடையும் வாழையு முகத்திற்கு மேன்மேலு முடையு மதியும், புரவுசால் கைக்குடையு நளினமுநறுங்குழற் பொலிவினுக் குடையு முகிலும் - பொற்புறத் தருமுத்தம் வேண்டலங் கண்டம் பொலிந்தொளிர நீலம்வைத்த, பரவுமா ணிக்கமொரு பால்வைத்த மரகதம் பவளமுத் தந்தருகவே - பல்லூர்விரும்புமெயி னல்லூரரும்புமயில் பவளமுத்தந் தருகவே. (அ)

வேறு.

82. மறையின் முடியு மெனது ளகமு மனமு ளுருக நித்தமு
மதுர மொழியி னினிய துதிசெய் மறுவி லடியர் சித்தமு
மறையு மழிவில் கருணை பெருகி யலைய தெறியு மக்கமு
மளவில் பிறவி யுததி சுவற வலர்செய் சரண பத்மமு
நிறையு மழகு பொழியு முகமு மபய வரத வத்தமு
நிகரில் பிறவு மிலக வமரு நிலவு மமல வுத்தமி

கறையில் சிமய விமய முதவு புதல்வி தருக முத்தமே
கரையில் வளமை யளவு மணவை முதல்வி தருக முத்தமே. (௯)

வேறு.

83. வஞ்ச மருவு நெஞ்ச மருவ வஞ்சி விலகு சத்தியே
வம்பு தழுவு மென்பு லுரையு நம்பி யருள்செய் பித்தியே
கஞ்ச மருவு மஞ்சன் விறன்மு குந்தன் வெளிய வத்தியூர்
கந்த மலர வங்க வணிபு யன்பன் முறைது தித்தநீ
தஞ்ச மெனவு வந்த னையர்மு னின்ற வொளிரொ ருத்தியே
சங்கு குழையர் திங்கண் முடியர் பங்கி னமர்தி றத்தியே
யஞ்ச முலவு நன்செய் மணவை யம்மை தருக முத்தமே
யன்பர் மனமு வந்த வருள ணங்கு தருக முத்தமே. (௧௦)

௫.—முத்தப்பருவம் முற்றிற்று.

## ௬.—வாரானைப் பருவம்.



84. விற்கொண்ட வாணுதற் பட்டமுஞ் சுட்டியும் விளங்கொளி துளு ம்புசூட்டும் - விரைநறுங் குழலிற் கவிழ்த்திடு தகட்டணி விராயசெம் மணியினொ ளியுஞ், சொற்கொண்ட வள்ளைச் செவிக்கணமர் தோடுமிரு தோள்வருடி யாடு நீடு - சோதிக் குதம்பையு மிளஞாயி றுதயஞ் சுரப்பமார் பந்துவயிரக், கற் கொண்ட பணியுமுத் தாரமும் வெண்ணிலாக் கற்றைகால் சந்த்ரோதயங் - காட்டவிரு கைவளை கலிப்பச் சிலம்புகள் கலின்கலி னெனப்புலம்ப, வெற் கொண்ட தளிரடி பெயர்த்துமண வைப்பதி யெழிற்பரா பரைவருகவே - யேகர்சிவ லோகத்தி யாகரொரு பாகத் திருக்குமுமை யாள் வருகவே. (௧)

85. ஆறாறு தத்துவமும் வேதாந்த முங்கடந் தவிர்வனவிண் முழுதுமாளி
யாதிப்பல் வானவரு மாதரிப் பனவுந்தி யன்னமின் னமுமுணர்தரா
நாறுறு தங்குமுடி யொண்மதிப் பிறையஞ்சகுவன ளங்கமொழிமெய்ஞ்
ஞானயோ கியருளங் குடிகொள்வன நைந்துருகி நாத்தழும் பத்துதிப்
கூறுறு காலுழக் காமல ரிடுந்தொறுங் கொண்டவப் பனவென்றுபல்[பார்
கூர்த்தமதி யாளர்புகழ்மெல்லடி பெயர்த்தழகு குலவவிரு பத்தாறினோ
டேறுறு புண்ணியமு மணவுமண வைப்பதி யெழிற்பரா பரைவருகவே
யேகர்சிவ லோகத் தியாகரொரு பாகத் திருக்குமுமை யாள்வருகவே.()

86. திங்களரவங்கண்மலிகொன்றைமலர் துன்றுசடைதேடிமுன் கண்டறிதராச்
செஞ்சூட்டு வெள்ளோதி மந்தொடர வாயிரந் தெய்வத்திறத்துநிகழ்வே
தங்கள்பெரு கோலமிட் டுத்தொடர நதியசெந் தாமரை யுயிர்த்தமாதுத்
தாதுசெறி வெண்சத தளக்கமல மாளிகைத் தலையமரு மாதுமிகுபோ

கங்கண்மலி வாலகத் தயிராணி யும்பல கருங்குழ லரம்பைமாருங் [தீர்க்
கைகுவித் துத்தொடர மெய்ஞ்ஞான யோகரிரு கண்களுந் தொடரவிடர்
தெங்கண்மன முந்தொடர மெல்லடி பெயர்த்தினி தெழிற்பரா பரைவருகவே
யேகர்சிவ லோகத் தியாகரொரு பாகத்திருக்குழுமையாள்வருகவே.()

87. பன்மலர் முகந்திரு கரங்கொண்டு தூய்நெடும் பனிவிசும் பமருமடவார்
பணிதோறு மவர்குழ லளாயதர ளப்பிறை பதிந்திடத் தோன்றுசுவடுங்
கன்மலர்மனத்தைவண் கருணைபுரியாய்கொலென் காதற்கிதழகுகொலெனுக்
கற்பனைகடந்தவர் தொழுந்தோறுமவர்முடிக் கட்பிறையையெற்றலாலே
முன்மலர் தருஞ்சுவடு மேல்கீ ழுறப்பெற்று மோகநீத் தவருளத்தான்
மூடிடப் பட்டுமய லாழ்ந்தா ருளம்பதிய முழுதுமச் சுற்றுவிலகு
மென்மலரு நின்மல ரடித்துணை பெயர்த்துநட லெழிற்பராபரை வருகவே
யேகர்சிவலோகத்தியாகரொருபாகத் திருக்குழுமையாள் வருகவே.(ச)

88. ஆலக் கருங்களத் திறைவருட னீங்கா தமர்ந்துபரை யாதியிச்சை
யறிவுதொழி லாகியுயிரைம்பாச மற்றுய்ய வைந்தொழி னடாத்துமயிலே
சாலக் கருங்கொண்ட லோமரக தங்கொலோ தக்கவிந் திரநீலமோ [கார்
தழைதரும் பூவையோ வெனுமேனி வாய்ந்தமாதவனுடைத் தங்கையே
நீலக் கருங்கட் டிருக்கோதை மர்தொடு நிலாவுகலை மாதுநாளு
நிகழத் துதிக்கும் பெருஞ்செல்வி யேகல்வி நேயமிக் கார்வாழ்க்கையே
யேலக் கருங்குழற் செய்யவாய் வெண்ணகை யெழிற்பரா பரைவருகவே
யேகர்சிவ லோகத் தியாகரொரு பாகத்திருக்குழுமையாள்வருகவே.()

வேறு.

89. மின்னிப் பொலியுங் கருங்கொண்மூ விளர்க்குங் குழலார் மைந்தரொடும்
விளையாட் டயர விநோதமைத்த வியன்மா ளிகைமேற் செய்குன்றிற்
றுன்னிப் பொலியும் படிபதித்த தொகுசெம் பதும ராகமணிச்
சுடர்மீ தெழுந்து வானளவுந் தோன்ற நிற்ற றமிழ்வேதம்
பன்னிப் பொலியுஞ் சம்பந்தர் பரவு மணத்தி லெம்பெருமான்
படர்பே ரொளியாய் நின்றதிறம் பாரா ரறியத் தெரிவிக்க
மன்னிப் பொலியும் வளநல்லூர் வாழ்வே வருக வருகவே
மாறுக் கருணை சூற்கொண்ட மயிலே வருக வருகவே. (சு)

90. மௌன மோங்குஞ் சிவயோக முத்த ருள்ள மும்மிழாத
மும்மைத் தமிழ்தேர் விரகர்மண முடித்துப் பெறுபேற் றின்புகழ்போற்
கான மோங்கு மறைமுழங்கக் கங்கு லழிந்து கழிந்தோடக்
கதிர்வெண் மதியோ டொளிப்பக் கமல முகைகண் முறுக்குடையத்
தான மோங்குங் கூகைதுயர்ச் சலதி மூழ்கக் கொடியுவப்பத்
தண்டா துதய மெழுங்கதிரோன் றடந்தேர்ச் செலவு தனைத்தடுத்து
வான மோங்கு மதினல்லூர் வாழ்வே வருக வருகவே
மாறுக் கருணை சூற்கொண்ட மயிலே வருக வருகவே. (எ)

91. சந்து தவழு முலையாருந் தாமந் தவழும் புயத்தாருந்
தவாது தழுவு மாளிகையுந் தனிமே னிலையு மாடரங்கு
மிந்து தவழுஞ் செய்குன்று மெழில்கொப் புளிக்கு மரமியமு
மின்பங் குடிகொள் வேதிகையு மிடங்கொண் மணிமுன் றிலுமறுகு
நந்து தவழுந் தடம்படிந்து நறும்பூஞ் சோலை யகத்துறங்கி
நகுபே ரந்தி மாலையிற்பன் னலஞ்சால் பொதிய வரையுதித்த
வந்து தவழுந் திருநல்லூர் வாழ்வே வருக வருகவே
மாறாக் கருணை சூற்கொண்ட மயிலே வருக வருகவே. (அ)

92. மூரி யெருமைச் சரும்போத்து மோட்டுப் பியலி னுகங்கிடத்தி
முடங்கூர் நாஞ்சி லேர்க்காலம் மூரியா றுகத்தி னடுப்பொருத்தி
வேரி கடைவாய் வழியிழிய விரும்பு முழவ ரெறுழிடக்கை
மேழி தழுவ யற்றொருகை வெய்ய விருப்பு முட்கோல்கொண்
டாரி தழியா ரடியும்வெளி யாமே யெனமண் பிளவுபட
வாங்காங் குரப்பி யுழுமோதை யம்ம பரத்த லாற்பகல்வாய்
வாரி யடங்கும் வளநல்லூர் வாழ்வே வருக வருகவே
மாறாக் கருணை சூற்கொண்ட மயிலே வருக வருகவே. (கூ)

93. பணியே விரும்பு துணி பினர்தம் பற்றே வருக முற்றுணர்ந்த
பரம யோக ருடன்பிரியாப் பரையே வருக வவர்புனைய
மணியே வருக வவரினிய வமுதே வருக வவர்திருப்பே
ரருளே வருக வவருளங்கொ ளனமே வருக வவர்முடிக்குங்
கணியே வருக மெய்ஞ்ஞானக் கனியே வருக வானந்தக்
கடலே வருக வெங்களிரு கண்ணே வருக கண்ணினுள்வாய்
மணியே வருக திருநல்லூர் வாழ்வே வருக வருகவே
மாறாக் கருணை சூர்கொண்ட மயிலே வருக வருகவே. (௧௦)

சு.—வாரானைப்பருவம் முற்றிற்று.

## எ.—அம்புலிப்பருவம்.

94. திகழ்தரு கடுக்கைமலர் சூடுசிவ லோகத்தியாகர்த முடிக்கலத்துட்சிறந்தவொன் றுயனையர் கண்ணுளொன் றுயனையர் திருமேனி யெட்டுளொன்றாய்ப், புகழ்தரு வலத்தவ ரியக்குமறை வாம்புரவி பூண்டதேர்க் காலுளொன்றாய் - பொலிவதன் றியுமனையர் புண்ணியப் பொடியெனப் பொங்குகதிரெங்குமுமிழ்வா, யிகழ்தரு பவந்தவிர்த் தருளனை யரைப்பல விடத்தினும் போற்றல்செய்வா - யித்தகுசிறப்புணர்ந் துன்னொடுகலந்தாட லெண்ணினு ளெங்கள்வினை முற், றகழ்தரு திருப்பெரு மணத்தமரருட் பரையொ டம்புலீ யாடவாவே-யலகில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீ யாடவாவே.

95. எண்ணுமதி யோர்மதிக் கடவுளென நுவலுதற் கேற்பவொண் கலையாளனு-மிரியாத தண்மையா ளனுமாயி ருயின்னு மிருளிலொளி யோனுமாருய், நண்ணுமொரு பாகந்தனொரு புடைகொளினு மொருபுடையி லுனில விளக்காகுவாய் - நாயனூர் திருமுடிக் கங்கையிற் சங்கையற நாடோறு மூழ்கி யெழுவாய், மண்ணுலகி லளவில்லைபங் கூழ்தழையுமாறருள் வழங்குவா யுனது செய்கை - மதித்துநன் றென்றுட வாவென் றழைத்தனள் வழைத்தடஞ் சோலை முகின்மே, லண்ணுவளா மேவுந் திருப்பெரு மணத்துமையொ டம்புலீ யாடவாவே-யலகில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீ யாடவாவே.

96. சுரும்புசெறி கழுநீர் மலர்த்துவாய் நறவமிது தொகுகமல மலர்குவிப்பாய்-சுகமிகமணந்தவர்க்கின்பமாவாய் துன்பமாவாய் தணந்த வர்க்குப்,பெரும்புவிவிரும்பநிறை வாயது வெறுப்பநோய் பெற்றூர் மெய்போன்று குறைவாய் - பேராழி மிகமுழங் கத்தோன்று வாயஃது பேசா தடங்க மறைவா, யிரும்புவன மேத்துமடு நிலையொடொரு தன்மையே யெஞ்ஞான்று மெய்தி நிலவு - மெங்கள்கரு ணம்பிகைநி னியன்முழுது மெய்த்துமுள் ளெய்யாரின்வருகவென்று, லரும்புநல மார்பெரு மணத்தம ரருட் பரையொ டம்புலீ யாட வாவே-யலகில் புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (௩)

97. சங்கநக வூரும்வெண் டிரையெரி தடங்கட றவாதே யெழுந்து பொங்கத்-தனைகலைகண் முழுமையு நிரம்பிமுழுமதியெனத் தழைதர வெழுந்தபோது, பொங்கனக மாருநந் திருமுக மெனக்கருணை பூத்திளி தெழுந்த தென்றும் - பொலியுருப் பாதியா யெழுபோது திருநுதற் பொலிவுற் றெழுந்த தென்று, மங்கனக வுருவின்றி மறைதரும் போதும மருங்குலே யொத்த தென்று-மகிழுமா தேவியிவள் வாவெனக்கூவினீ வாரா திருப்பதழகோ, வங்கனக மணிமாளிகைப்பெரு மணத்துமையோ டம்புலீ யாடவாவே - யலகில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (௪)

98. பேராழி சூழ்திருக் காழியிற் பாலுண்ட பிள்ளையார் திருமணத்துப்
பெருநவந் தடையுமா தவரொடுங் கூடிப் பிறங்கவர் தாயல்லையன்
றேராழி யேற்புரவி வையத் திவர்ந்திரு ளொருங்கற முருக்கு மொருவ
னுன்னையொத் தவனொருகளங்கமு மிலானஃ துணர்ந்திலான் போற்றிரி
பாராழி வட்டம்வி னுவப்பவின்றேனும்பரிந்திங்கு வந்தாயெனிற் [தலென்
பாடுசா னின்பெருமை பாடவெளி தாகுங்கொல் பாசாங் குசத்தினொடு
மாராழி சங்கங்கொள் கைப்பெரு மணத்துமையொ டம்புலீ யாடவாவே
யலகில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீயாட வாவே.

99. உலகுபுகழ் பஞ்சாக்கரப்பெருந் தீர்த்தமென் றொன்றுண்டு மூழ்கி னோருக்
கொழியாத பிணிமுழு தொழிப்பதுதன் மான்மியமுரைக்கரிது முகமன
விலகுமிஃதன்றியுங் கூபவடி வாய்க்கங்கை யென்பதொன் றுண்டதன்சி[ன்று
றெம்மனோர் பேசுதற் கரியதரியதுபெரிய தித்தலப் பெருமை கண்டாய்

விலகுகொடு வஞ்சமுடை நெஞ்சரல் லாரென்று மேவரிய வித்தலத்து
விளையாடல் கருதிவா வென்றிறைவி யேயுனை விளிக்கநீ செய்ததவமெ
னலகுதவிர் பெருவளம் பொலிபெருமணைத்துமையொடம்புலீயாடவாவே
யலகில்புவனங்கண்முற் றீன்றதாய்காணிவளொ டம்புலீயாடவாவே.()

100. சிறந்தமா ணுக்கனீ யேயென்று பலருஞ் சிரிக்கவா சாரி யன்றன்
றேவியினை வனமுலை ஞெமுங்கவகன் மார்பிற்றிளைத்துநீங் காதபழியோ
டிறந்தபே ரரியவெங் கவலையுந் தவலிலா வொருசாப மும்பூண்டுளா
யொழியாது தக்கனிடு சாபத் தொடக்குண் டுழன்றுவா னலைதறவிரா
யிறந்தமா மலமுடையரேயடையுமித்தலத் தெய்தியிக் கருணாம்பிகை[ர்வா
யிணையிலரு ணோக்கமும் பெறினினக் கெத்துயர மெய்துமிவ் யாவர்கிக
ரறத்தவா தோங்குந் திருப்பெரு மணத்துமையொ டம்புலீ யாடவாவே
யலகில் புவனங்கண்முற்றீன்றதாய் காணிவளொடம்புலீயாடவாவே.()

101. வையமுழு துய்யவொரு வாவியங் கரைநின்று வாய்மலர்ந் தழுத பிள்ளை
மதுரமிகு செவ்வாய்க் கருங்குழற்காதலியை மாமணஞ்செய்தூான்று
செய்யமலர் மீதனந் துஞ்சுபஞ் சாக்கரத் தீர்த்தக் கரைக்க ணின்று
சேர்ந்தார் களங்கமுற் றொழியவெண் ணீறுதன் செங்கரத் தாலளித்தா
ளுய்யவிவள் வாவென் றுரைத்தபடியேவிரைந் தொருவனீ வந்து சேரி
னுன்களங் கந்தவிர வெண்ணீறு நல்காள்கொ லோவிதனை யுணராததெ
னையமன மோவித் திருப்பெரு மணத்துமையொ டம்புலீ யாட வாவே
யலகில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீயாடவாவே.

102. குறைவடிவி னேடுசிவ லோகத் தியாகர்தங் கோடீர மாமுடிக்கட்-குலவுகங்கையின்மூழ்கி யவ்வடிவ மேருது குறையா திருத்தல் பெற்றாய், நிறை வடிவினெடுங்கடைந்துகங் காகூப நிறைபுனலின் மூழ்கினினைய-நிகழ்வடிவ மொருதன்மை யாய்மருவ வுருவவள நிமலையருள் பெறுவ துண்மை, பொறைவடிவம் வாய்ந்துவினை காய்ந்து மலமாய்ந்தொளிர் புகழ்த்தரும நெறியி னிற்போர் - பொருவரு மனப்பெருங் கோயிலக மேவியெம் புந்திக்கு மந்திக்குமோ, நறை வடிவ மேவிய திருப்பெரு மணத்துமையொ டம்புலீ யாட வாவே-யலகில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீ யாட வாவே. (கூ)

103. வாவென்றபோதுவா ராதுபா ணித்ததெம் மதிகதி யுனக்குவேறென்-மற்றிவட வர்க்குமுடி முதலடி வரைக்குமுள வாளராத் தொகைகணக்கில், சோவென்ற நகையுண்டு தக்கன்வேள் விக்களந் தோய்ந்ததா ளுண்டுநின்னேர் - சுடர்நகை தகர்த்தசெங் கரமுண்டு மாரற் றொலைத்தவிழி யுண்டுகண்டாய், காவென்ற கைத்தலத் திவண்முனிவு செயினினைக் காப்பவரு மிலரிவை யெலாங் - கருதிவந் தருள்பெறுதி கடலுலக முழுவதும கட்டிற் கலக்குமாவா, யாவென்ற வன்புகழ் திருப்பெரு மணத்துமையொ டம்புலீ யாடவாவே - யல கில்புவ னங்கண்முற் றீன்றதாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (க0)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

# அ:—அம்மானைப் பருவம்.



104. சொல்லூர் வயத்தசிவ லோகத் தியாகர்தந் தோட்டுணை குழைக்காளுந்
தோலா தெழுந்தநின் றுணைமுலைக் குவடுபோர் தோற்றியெழுதோற்றகோ
வில்லூர்நெடுஞ்சிகரமேருவென் றுரைசெய்வடவேதண்டமுற்றகொற்ற [க்கி
வீறுமுற் றுந்தபப் பொடிசெய்து கடிசெய்து மேவுப லுருண்டையாக்கி
யெல்லூர் மணிக்கங்க ணக்கரத் தேந்திமே லெறிவது கடுப்பவுறமுற்
றேறுமங் கைத்தலத் துறுசிவப் பேறுவதை யெண்ணாது விண்ணுடைா
மல்லூர்பொழிற்பெரு மணத்தமர்பராபரை பொன்னம்மானையாடியருளே
யருளினெங்குடி முழுதுமடிமை கொண்டருளுமுமை யம்மானை யாடி
[யருளே.

105. மறமணக் குங்கனன் மழுப்படைத் தம்பிரான் மலர்பொரு திருக்கையுல
வாழ்தரக் கோத்துமவ் வுலகமஞ் சாதுய்ய வரதாப யங்கொடுத்து [கம்
நிறமணக் குந்தரும முப்பத் திரண்டுநெனி நெடுநாளு மமரவைத்து
நிலவுஞ் சிருக்குமணி வடமேமி வளைசூல நிலவுவே ருங்கிமூவர்
புறமணக் குந்தொழிற் கேதுநீயென்பதுபுலப்படுத் தியுமொளிருநின் [ப்ப
பூங்கரப்புகழ்திரண்டொன் றன்பினென் றுமேற்போயடையவெழுவதொ
வறமணக்குந்திருப்பெருமணத்தம்மைமுத்தம்மானையாடியருளே [ருளே.
யருளினெங்குடிமுழுது மடிமைகொண்டருளுமுமை யம்மானை யாடி

106. இறைதிருமுகத்தகத் துந்திரு நுதற்கணு மிலங்குமிச் சுடருநோக்கி [து
யிருளப் பொலிந்தநமிருங்குழற் கெதிரால திவ்விருள்கொ லெனமுனிந்
கறைமருவுபூதவிருண்முழுதுங் கலங்கக் கலக்கித் துவைத் தவைத்துக்[ஞ
கச்சமிலுருண்டையாச்செய்துநீவாய்ப்பெயுங் கவளமிவை கோடியென்
நிறையவெளி யாயகா னுலவுகர மதமுமிழ் நெடுங்கதிர்க் குஞ்சரத்தி [நே
னேர்செல்ல வீசுதல் கடுப்பவெதிர்காண்குநர் நிலாவுபொன்னுலகமென்
யறைதருதிருப்பெரு மணத்தம்மை மாநீல வம்மானை யாடியருளே[ருளே.
யருளினெங்குடிமுழுது மடிமைகொண்டருளுமுமை யம்மானை யாடிய

107. பன்னுரிய திருமறைச் சிரமீது மருவும் பரம்பொரு டனைப்பகர்ந்து
பங்கயச் செங்கையமர் பைஞ்சிறைக் கிள்ளைமீப் பலகாற் பறந்தெழுந்து
நன்னய மிருந்தத் திருக்கரத் துறைவதென நாட்டத் தெழுந்த பார்வை
நக்கபே ரன்பர்பாற் செல்வது கடுப்பநனி நாடிமேற்சென் றுலாவ[நுண்
வன்னமிகு வெண்டாள மணிவடஞ் சூழ்ந்தமணி மாமுலை குலுங்க நுழை
மருங்குலையெடுத்தெடுத்துந்திநிறைநீர்த்தட மலர்ந்ததாமரைமலர்தொறு
மன்னமரு வும்பெருமணத்தம்மைமரகதத் தம்மானை யாடியருளே[ருளே.
யருளினெங்குடிமுழுது மடிமைகொண்டருளுமுமை யம்மானை யாடிய

108. கருகாத பத்திமை கொழுந்துகொண் டெழவுட் கசிந்துருகு மன்பர்நிதியே
கருதுபொழு தாறுமலர் மாலைசந் தாதிபல கைக்கொண்டு பூசையாற்றும்
பெருகாத காமத்தர் செல்வமே மாதவப் பெரியோர்கள் பெற்றபேறே
பிழையறப் பாமாலை பெருநய முறப்பாடு பெற்றியோ ருற்றவாழ்வே
திருகாத சிந்தைகொடு சகமுழுது நீயெனத் தேர்ந்துணர்ந் தாரின்பமே
தெள்ளமிர்த மேயினிய கனியே தெவிட்டாத தேனே யறங்களரு
மருகாத கற்பெரு மணத்தளி விளக்கமே யம்மானை யாடியருளே [ருளே.
யருளினெங்குடிமுழுது மடிமைகொண் டருளுமைமை யம்மானை யாடிய

வே று.

109. அன்ன மலிதண் டுறையுமணங் கனையார் மொழியும் பானலமோட்
டாமை யுறங்கும் வாவியுமற் றனையார் முலையுங் கோகநக
முன்ன வினிய பொழிலுமவர் முழக்குங் கூந்தற் பகுப்புமஞ்சு
முகிற்றேய் மதிலோ வழமனையார் முழுமேனியுநல் லஞ்சுவணம்
பன்ன முடியா மனையுமவர் பாதத் தணியுஞ் சிலம்புநெடும்
பழன மெங்கு மத்தகைய பாவை மாருஞ் செஞ்சாலி
யென்ன வளங்கூர் பெருமணப்பெண் ணெடுத்தா டுகபொன் னம்மனையே
யெங்கள் குடிக்கோர் வாழ்முதல்கை யெடுத்தா டுகபொன்னம்மனையே.

110. காலா தரிக்குங் கழனிதொறுங் கமஞ்சூ லுயிர்ப்ப வயிறுளைந்து
காண்டற் கினிய சலஞ்சலநீர் காலு மடைவாய் முத்துகுப்பக்
கோலா வொளிரவ் வெண்டரளக் குவையா லடைபட் டறநேங்கக்
குலவ விளைந்த செஞ்சாலிக் கொடுவெண் கதிர்மூழ் கும்பொழுது
மாலா வெழுவெள் ளோதிமந்தம் வயங்கு சினையென் றவைகவர்ந்தம்
மடையைத் திறந்து பெருகியநீர் வடியச் செயலாற் பலருவக்குந்
தோலா வளமை நல்லூராய் தொட்டா டுகபொன் னம்மனையே
சூழும் பிறவி யெனக்கொழிப்பாய் தொட்டா டுகபொன் னம்மனையே.

111. மதிக்குங் கடவுட் பஞ்சதரு வயங்கு நிழலில் வீற்றிருந்து
மாறுக் கருவி பலகொண்டு வண்ட லாடு மடவாரும்
துதிக்கு மருத நன்னிழலிற் றேலிற் கிடத்தி யிளங்குழவி
துஞ்ச வுறக்கிக் களைகடியுந் தொழின்மேற் கொளன்மே வரிவையரும்
பதிக்கும் பயமுட் புகக்கொண்டு பலகா லிரிய மேலெழுந்து
பற்றுங் கொடிய கழுக்கடைபோற் பாய்ந்து பாய்ந்து பருவரலை
குதிக்கும் புனனல் லூரமுதே கொண்டா டுகபொன் னம்மனையே [யே.
கோலம் பொலிவெண் ணீற்றுமையே கொண்டா டுகபொன் னம்மனை

112. ஆண்டா தரித்து நாயேனை யல்லற் பிறவி யறுத்தருளு
மருளா னந்தக் கடற்பிறந்த வளவா வின்பச் சுவையமுதே
யீண்டார் கலிசூழ் புடவிமுத லெப்பு வனத்து முறையுயிர்க
ளெல்லாம் பிறவிப் பிணியறுமா றிமய முயிர்த்த வருமருந்தே

வேண்டா நிற்கு மெய்யடியார் விரும்பு முள்ளக் கோயிலகம்
விருப்ப முறுது நாணுளு மேவி யமர்சிந் தாமணியே
தூண்டா விளக்கே நல்லூராய் தொட்டா டுகபொன் னம்மனையே [யே.
தோன்றாத் துணைக்கோர் துணையானாய் தொட்டா டுகபொன் னம்மனை

113. குணத்தே பொலியு மெய்யடியார் கோலம் பொலியுங் குளிர்சிந்தைக்
கோயில் பொலியு மாறுகுடி கொண்டு பொலியுங் கோமளமே
யணத்தேர் வரிய மறைமுயன்று மணுகற் கரிய பேரொளியே
யறிவி லார்க்கு முணிவரிதா யள்ளூ றினிய பசுந்தேனே
கணத்தே மலர்செற் றியபொழிலிற் கனிந்த தேமாம் பழச்சாறு
கால்கொண் டோடிக் கடல்புகுந்து கழியா வுவரைக் கடத்துபெரு
மணத்தே யமர்வெண் ணீற்றுமையே மகிழ்ந்தா டுகபொன் னம்மனையே
மலையிற் பிறந்த மடப்பிடியே மகிழ்ந்தா டுகபொன் னம்மனையே. (௧௦)

௮.—அம்மானைப்பருவம் முற்றிற்று.

# ௯.—நீராடற்பருவம்.



114. எள்ளுதற் கரியகுழல் சைவல மெனச்சுழல விணைவிழிகள் சேலி
னிலக-வெழில்வளர் குழைச்செவிகள் வள்ளையிற் பொலியமுக மிலகுதா மரை,
யின்மலர, வுள்ளுதற் கரியவிரு கொங்கையும் புற்புதத் தொளிரமல ருந்திசுழியி-
னுறமுழுந் தாளலவ னிற்கவின மற்றுள வுறுப்புமொவ் வொன்றி னிகழக்,
கொள்ளுதற் கரியவொளி வயிரமுந் தரளமுங் குருமணியு மொலிதிரைக்கை-
கொண்டிரு கரைக்கணு மெறிந்தரம் பைச்செழுங் கூன்குலைமுறித்து நிகழும்,
விள்ளுதற் கரியவொரு கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே-விண்
ணேத்து சீர்மேவு வெண்ணீற்று மாதேவி வெள்ளநீ ராடியருளே. (௧)

115. புள்ளாறு காலுழக் குங்குழ லணிந்திதை பொருங்கணை யனுக்கு மொண்
பொற்புமலி கமலினி முதற்றோழி மார்பலர் புரிந்துசூழ் நிற்பநடுவ [கட்
ணுள்ளாறு பங்கயற வொழித்தமா தவருளத் துள்ளொளிய தாகினளு
முறைபரா பரைநின்ற செவ்வாய் விளர்ப்பவரி யுறுகருங் கண்சிவப்ப
நள்ளாறு பழையாறு கஞ்சாறு கோட்டாறு நல்லாறு தருமையாறு
நரிவலா றெழுகுவட மேருமுற் பலதே நயந்தவர் சடைக்குமஞ்சா
வெள்ளா றெனப்பரவு கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே
விண்ணேத்து சீர்மேவு வெண்ணீற்று மாதேவி வெள்ளநீ ராடியருளே.

116. முண்ணுறு பங்கயச் சேக்கையம ரொருநான் முகப்பிரம னுவுமோவா
முரண்மிக்கமுரனுயிர் முருக்குமுழுவலியிடை முகுந்தனகன் மார்புமே
பண்ணுறு மொழிமாத ரிருபாலு நின்றுதம் பங்கயச் செங்கையுதவப் [வு
பற்றுபு சிலம்பொலித் திடநடந் திடுகிடைப் பட்டறலு ணணையநின்று

கண்ணுறு கொன்றையுந் தும்பையும் பாசொளிக் காமாறு குங்கமழ்ந்து
 ககனத் துலாம்பிறைச்சிறுமதியைவெண்டிரைக்கையாலலைத்துவரலால்
விண்ணு றெனப்பரவு கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே
 விண்ணேத்து சீர்மேவு வெண்ணீற்று மாதேவி வெள்ளநீ ராடியருளே.

117. பாலைநிகர் சொற்பலமி ளூர்தகவடித்தவிரை பான்மையி னொருத்துதவநீள்
 படைவிழிக் கமலமட வார்தங்கைகொண்டுநின் பசுமேனி யிற்றிமிர்ந்து
சோலைமயிலொத்தவிய லாயருள்விளக்கியெங்தொல்வினைகழிவுதோன்றச்
 சூட்டோதிமத்தினின் றினிதாடு வாயென்று தொலைவின்முக மன்பல
மாலைமதிவைத்தமுடியாரொடுபகைத்ததெனமதமலையெடுத்தடுத்து[சொல்
 வருமீனம் வாய்க்கொள வெறிந்துவிட முன்றந்த மாபாதகந் தெரிந்தவ்
வேலையை யுடைக்குமொரு கொள்ளிடத்திருநதியின் வெள்ளநீராடியருளே
 விண்ணேத்து சீர்மேவு வெண்ணீற்று மாதேவி வெள்ளநீ ராடியருளே.

118. பற்றியர மாதர்முத லாயபல மாதரும் பன்மலர்க் கொடியினின்று[நின்று
 பணிதலைக் கொள்ளவவர் நாப்பணொருபைங்கொடிப் பண்பினுல கேத்த
முற்றியறியாதமுலை முத்தமோடெதிர்வருவெண்முத்தமிக் குறவுகொள்ள
 முரிநுசுப் பணியுமே கலைமணியி னோடுபன் முழுமணியு மளவளாவச்
செற்றிய கடுக்கைமலர் சூடிமா னேந்தியெண் டிசைநடுங் காவத்தொடு
 சினக்கோல வெண்மருப் புப்புனைந் தடுபுலிச் சிறுதோல் விரித்துடுத்து
வெற்றிவிடை யானில்வருகொள்ளிடத்திருநதியின் வெள்ளநீ ராடியருளே
 விண்ணேத்துசீர்மேவு வெண்ணீற்றுமாதேவி வெள்ளநீராடியருளே. ()

வே று.

119. உன்னு மனவாக் குடன்மூன்று மொன்று துடற்ற லொழிதரவுள்
 ளுருகி யுருகி நெகிழ்ந்து நெகிழ்ந் துடையு மிடையும் பேரடியார்
துன்னு முழுவற் பேரன்பிற் றுளைந்து துளைந்தா டுதல்பொருவத்
 தோன்றுத் துணைக்கோர் துணையாய சூட்டோ திமமே நடுநின்று
மன்னுந் தனக்குத் துணையாகி வன்காப் பியற்றும் பெருங்குலைக்கு
 மகிழ்ந்து கொடுக்கும் பரிசென்ன மருங்கு முளரிக் கைநிறையப்
பொன்னு மணியு மெறியும்வட பொன்னிப் புதுநீ ராடுகவே
 பொற்பார் மணவை யம்மைவட பொன்னிப் புதுநீ ராடுகவே. (௬)

120. சேலே பொருவப் பிறழ்கருங்கட் செவ்வாய் வெண்பற் றேழியருட்
 செய்ய வெளிய மடமாதர் தெண்ணீர் முழுகிச் சிலம்பணிபூங்
காலே வருட வெளிசெய்தவர் கமல முகத்தின் முகந்ததுணைக்
 கைநீர் கடுகி யிறைப்பநறுங் கங்கா சலமென் றுன்னுபுதீம்
பாலே புரைசொ லனையர்சிரம் பரவக் கவிழ்ப்ப வரையுதித்துப்
 பலவா முயிர்ப்பைங் கூழ்தழையப் பண்ணித் தண்மை வாய்ந்துநினைப்
போலே சிறப்ப நிகழும்வட பொன்னிப் புதுநீ ராடுகவே
 பொற்பார் மணவை யம்மைவட பொன்னிப் புதுநீ ராடுகவே. (௭)

121. தென்னங் குரும்பை யனையமுலைச் செவ்வாய்க் கருங்க ணரமாதர்
தேம்புநறைநுண் ணூசுப்பொசியத் தெற்கும் வடக்குந்திரிந்துலவ
வன்னங் குலவு மொலிச்சிலம்பி னனிச்ச மருட்டு மடிகள்பெயர்த்
தம்பொற் சிவிறி பந்துகள்கொண் டவர்மேன் முகந்து நறும்புனறா
யின்னம் பிறவிக் கடலழுந்த லெங்கட் கியல்போ வருள்பொழிவா
யென்பா ரின்பார் கடன்முழுகி யென்று மாட வினிதாட்டும்
பொன்னங் கொடியே யெடியவட பொன்னிப் புதுநீ ராடுகவே
பொற்பார் மணவை யம்மைவட பொன்னிப் புதுநீ ராடுகவே. (அ)

வேறு.

122. நீடுக லாகம மோதிய வாறருள் புல்லா ராயினுநன்
னேயம ருதவொர் ஞானமு ளார்மன முள்ளால் வாழ்மயிலே
பாடுக லோனுவ னுருவ னேவென வெள்ளா தேயடியேன்
பாடுபல் பாடல்வி ராவிய தார்புனை பொன்னே கோமளமே
யாடுக லார்மதி யாள்சடை யார்மலை வில்லார் மேனியினே
ராகிய பாதியில் வாழ்குயி லேவரை மின்னே யூர்பலவு
நாடுக லூரமர் வாய்வட காவிரி நன்னீ ராடுகவே
நான்மறை மேகலை யாய்வட காவிரி நன்னீ ராடுகவே. (௯)

123. பூமக ளுமக ளாதிமி னூர்தொழு பொன்னே கோகிலமே
போதமு ருவெளி யேனவில் பாடலு மெள்ளா தேபுனைவாய்
தேமரு மாலைய ளாவிய வார்குழ லல்லாய் கார்மயிலே
தேவர்பி ரானியன் மேனியி லோர்பயல் விள்ளா தேபொலிவாய்
காமரு சோலையு ணீர்நிறை வாவியி னெல்லே கூர்செறுவிற்
காலில்வி ராவிய வோடையி னீள்கயல் புள்ளா ராய்வளனூர்
நாமரு லூரமர் வாய்வட காவிரி நன்னீ ராடுகவே
நான்மறை மேகலை யாய்வட காவிரி நன்னீ ராடுகவே. (௧௦)

௯.—நீராடற்பருவம் முற்றிற்று.

## ௧௦.—பொன்னூசற்பருவம்.

124. கொன்செய்த வயிரக் கொழுங்கா ணிறுத்தியொளி கூர்பவள விட் டமிட்டுக் - குளிர்மருவு நித்திலத் தொடர்பூட்டி நவமணி குயிற்றுபொற் பலகை மாட்டி, மின்செய்த சிற்றிடைப் பெருமுலைக் கோகனக மீதுமொண் புண்ட ரீக-மீதுமுறை மாதரிரு பாலுமின் முர்வடம் விரும்புதங் கைகள்பற்றத், தென் செய்த தமிழ்முனியை யெண்ணுது மீட்டுஞ் சிலம்பெழுந்ததுகொலென்று-செ ங்கதிரும்வெண்கதிரு நின்றுன்னி யுள்ளந் திகைப்பவான் கீண்டெழுந்து, பொ ன்செய்த மதில்சூழ் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடியருளே-பொ ருவின்மந் திரசொரு பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (௧)

125. தேமணக் குங்குமற் செய்யவாய் வெண்ணகைச் சேல்விழிப் பனுவ லாட்டி - திரைவீசு சுவையமு தொழுக்கியது போன்மெனத் திருவூச லினிது பாடப், பாமணக் கும்புகழ்ச் செஞ்சடைத் தம்பிரான் பார்த்துளத் துவகை பூப்பப் - பல்லா யிரங்கோடி யண்டமு மவற்றுள்ள பலசரா சரமு மாட, வாம ணக் குங்கரு முகிற்படாங் கீண்டுமே லாயவுல கம்பு குந்தாங் - கமர்வார் செழு ங்கற்ப கத்தினின் றும்பிரித் தந்தரா வண்ண நாளும், பூமணக் கும்பொழில் வளப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மங் . திர சொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (உ)

126. கொங்குமலி தேமாங் தளிர்ப்பொழி னடுக்கணமர் கோகிலப்பேடு பொருவக்-கோகனக ராகமணி யேசுற்று முற்றுங் குயிற்றுபொற் பலகையேறிச், செங்குமுத வாயர மடந்தையர் விரைக்குமலர் செங்கைநிறை யக்கொண்டு நின் - திருமுனர்த் தூவுபு குடந்தமுற் றகலாது சேவித்து வந்து நிற்கச், சங்கு பல வெங்கும் கரும்பாரம் பைக்குலஞ் சாலியா யுறலு ணர்ந்து- தாவாத வேதனை யொடுந்தவழ்ந் தேறியங் தாமரையின் முத்து யிர்க்கும், பொங்குபுனல் . வாவித் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மங் திர சொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (௩)

127. மேலாயசத்துவ மெனப்பகர் குணத்தநடு வீற்றிருந்தருளலென்கோ- மெய்யடியர் முன்செல நடாத்துவா ஞெதிம மிசைப்பொலிந் தமர்வ தென்கோ, நாலாய மறைபுகழும் வெள்ளிவெண் கயிலைவரை நாப்பணமர் தோகை யென்கோ, நானென்று கலைமகள் வியந்து பாடச்சுரர்க ணங்குகண் டுவகை நீடப், பாலாய வொள்வயிர முற்றுங் குயிற்றகன் பலகையி லிவர்ந்திருந்து - பைம்பொன்செய் கோபுர மெழுந்தொளி பரப்பிநுள் பாற்றிவட மேருவெற் பைப்,போலாய வளமைத் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடியருளே- பொருவின்மங் திரசொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடியருளே. (௪)

128. கயறங்குநின்றிருக்கட்கடை யுதித்துமிசைகாணப்பரந்தெழுந்து-கரு துவா ரிருவினை மரங்கள்கால் சாயவலை கான்றனையர் பிறவிவாரி, மயறங்குவன் கரை யுடைந்தடி யறப்பொங்கும் வான்பெருங் கருணை வெள்ளம்-வற்றுது நின் கைக் கடைப்பிறங் தெழுவெள்ள மனமஞ்சி யுட்கி வட்கி, யய்றங்கு மொருதிவ லை யாகப்ரவாகமுற் றகிலநிகி லமும்விராவ - வமரா வதிக்கற்ப கத்தோ டமர்க் குமதகற்றுவான் மேற்படுத்துப், புயறங்கு சோலைத் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மங் திரசொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (௫)

129. நன்னயம் விராவியுள கெக்குகெக்குருகுநர் நயக்குநின் றுமரைத்தா- ணகுபொழிற்பிண் டியை யுதைந்தாடு தொறுமதுநகத்தளிர்த்தினிதுபூத்தல்,பன் னயம் விராவுமச் சிற்றடிப் பெருமையுட் பதிதர வுணர்ந்து பூசை - பண்ணுவா னிற்குநிலை காட்டவது கண்டவை படுந்தொறு மருக்கமலர்து, மின்னியல் பிரான்சடை யழுக்காறு மேவான் மேகமு முடுக்கூட்டமும் - விராவிய வென

க்கா ரடைத்திர ளரும்புகள் விளங்கச் சுமந்து சூழ்ந்த, புன்னையங் கானற் றிருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மந் திர சொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (௬)

130. ஆதார பங்கயந் தொறும்வன்ன ரூபியா யமர்வதுங் கருணையே மெய்-யாயபெரு மான்பெறற் கரியவா மத்திலினி தமர்வதுங் கருணைமிகையாற், பர்தார விந்தம் பதித்திருங் கயிலைமுற் பஃறலத் தமர்வதும்விடார் - பற்றிறு ருள்ளகத் தமர்வதும் பொரவொளி படுந்துகிர்ப் பலகையிலமர்ந், தோதாரம் வில்லிடக் குறுமூர னிலவெழ வுறுங்கருணை பொங்கச்சிறை - போதிமஞ் சிறையிலோ திமநிகர விரைதேர்ந் துருங்குறிப் பிற்கமலமென், போதார வம ருந் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மந் திர சொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (எ)

131. வலியவர னுலமரர் வானகங் கூட்டுண்டு மகிழ்முரட் சூரனிளவன்-மக்களொடு வாழ்கின்ற பேரிலழி யச்சிற்றின் மறுகூடு லாயழித்தும், கலியவவன் வாய்தற் பெரும்பறை முழக்கறக் காமர்சிறு பறைமுழக்கங் - கண்டுமெவ னூரு மிந் திரஞால மென்றுரை கதிர்ப்பொலந் தேருருளுரு, தொலியசிறு தேரினி துருட்டியும் விளையாடு மொண்சதங் கைச்சிறியதா - ளொருகுழவி யைத்தனி யுவந்தெடுத் துப்புல்லி யொண்மணித் தொட்டிலேற்றிப், பொலியவினி தாட் டுந் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மந் திர சொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடி யருளே. (அ)

132. ஆதரம்பெருகக் கசிந்துநெக் குருகுபழ வடியர்மன மாயதூய-வால யத் தினிதமர்ந் தாடுதலையொப்புமுத் தவிர்செழும் பலகையேறிக், காதரங்கடை யேங் கழிந்துய்ய வெவ்வினை கழீஇப்பொங் கிடுங்கடைக்கட் - கருணைவெள் ளம்பெருக வெம்பிரான் சடைமுடிக் கங்கைவெள் ளஞ்சுருங்க, மீதரம்பையர மர ரொடுகீ ழிறங்கவகன் மேதினியு ளாரவ்வாறு - மேலேற வைத்தநெட்டே ணியே யாமென விளங்குகோபுரம் வடாது, பூதரம் பொருவுந் திருப்பெரு மணத்தம்மை பொன்னூச லாடி யருளே - பொருவின்மந் திரசொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடியருளே. (௯)

133. அற்புமலி யுள்ளம் புகும்பரி புரத்தாளு மறைவிலை யிலாதசெம்பட்-டாடைபுனை மேகலை மருங்குலு நெருங்குபே ரண்டமுற் றீன்றவயிறும், வற்பு மலி பரஞான மூறுமிரு கொங்கையும் மங்கலம் பொலிகழுத்து-மாறுதிரண்டு தலை யிட்டமுப் பஃதறமும் வளர்பங் கயச்செங்கையும், வெற்புமலி பசுவேய் சுவட்டுமிரு தோளுமிள வெண்மூரலுஞ் செவாயு - மிளிர்குழையு மலர்முகமு மணிநாசி யுங்கருணை விழியுங் கருங்கூந்தலும், பொற்புமலி யப்பொலி திருப் பெரு மணத்தம்மை பொன்னூச லாடியருளே - பொருவின்மந் திரசொரூ பத்தனி விமானத்தி பொன்னூச லாடியருளே. (கO)

கO.—பொன்னூசற்பருவம் முற்றிற்று.

---

## திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

# திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்

## * சிறப்புப்பாயிரம்.



### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

134. மாமேவு செஞ்சலச மலர்மேவு தவளவளை வயங்கு தோற்றத்
தேமேவு பசுந்துழாய்த் தெரியலணி கரியநிறச் செம்மல் செங்கைப்
பூமேவு நவநீதம் பொருவுநிறை புனல்வாவி புடைசூ லாவித்
தாமேவு வளம்புனைந்து துலங்குமெழி லிலங்குதமிழ்ச் சோழநாட்டில்.(க)

135. முருக்கலையப் புரிவாயா ராமியத்திற் பந்தெறிந்து முடித்த கூந்த
லுருக்கலைய வாடுதலி னுகுந்தபூந் துகட்குப்பை யொளிரம் மின்னார்
திருக்கலைமா மதிமுகங்கண் டுருகியிந்து காந்தத்திற் செய்செய் குன்றம்
பெருக்கலைநீ ரறக்கழுவு பெருமணநல் லூரென்னும் பெருந்தலத்தில்.(உ)

136. ஊற்றிருக்கு மதுக்கமலத் துவந்திருக்கு மயன்முதலா மும்ப ரஞ்சுங்
கூற்றிருக்குங் கருங்களமுங் குளத்திருக்குஞ் செவ்விழியுங் குளிர்வெண்
யேற்றிருக்கு நெடுஞ்சடையு மேய்ந்தசிவ லோகத்தியா கேச ரோடு[கங்கை
வீற்றிருக்குந் திருவெண்ணீற் றுமைவேத முடியிருக்கும் விரைப்பூந் தா

137. நீரேறு செஞ்சடில நின்மலனே பதியென்று நிலவச் சாற்று [ளில்.
நாரேறு ஞானகலை முதலியநற் கலைபலவு நன்கு தேர்ந்தோன்
காரேறு மகத்தெனையுங் கற்றோர்சே ரவைக்களத்தோர் கடையிற் சேர்த்த
சீரேறு மீனாட்சி சுந்தரநா வலரேறு சிறந்த வன்பால். (ச)

138. சொல்வளமே பொருள்வளமே துலங்குறுபல் லணிவளமே தூய பத்தி
நல்வளமே முதலாய வளங்களெலாங் கவிதொறு நனிசி றப்புற் [லை
றெல்வளஞ்சேர் தாவியற்றிப் புனைந்தபிள்ளைத் தமிழென்னு மியற்பா மா
பல்வளஞ்சேர் புடவியிடைப் பரவுறுமா றினிதச்சிற் பதிக்க வென்று.(ரு)

139. சேவார்பொற்கொடியுடையசிவபெருமான்குடியிருக்குஞ் சிந்தை யுள்ளான்
காவார்பூங் கரதலத்தான் கடிகமழ்பைங் குவளையணி கவினார் தோளான்
நாவார்பல் கலையுணர்ந்த பெரும்புலவர் பலர்குழுமி நன்கு சொற்ற
பாவாரை யாறப்ப சுந்தரவேள் புரிந்ததவப் பயனா வந்தோன். (சு)

140. வாசவனோ போகத்தில் வடதிசைக்கோ னோநிதியில் வானு லாவுந்
தேசவனோ வாளொளியிற் செழுமதியோ சாந்தத்திற் சிவனே சத்திற்
கேசவனோ வெனப்பலருஞ் சொலவிளங்கி நல்லொழுக்கங் கிளரப் பூண்டு
நேசவன்பூ பூசியொளிர் தருசபா பதிவள்ள னிகழ்த்தக் கேட்டு. (எ)

141. தான்றோன்று பதியமர்ந்து தண்கருணை யோவாது தவச்சுரக்கு [ணி
மீன்றோன்றுவாள்விழிவெண்ணீற்றுமையாள்பெரும்புகழைவிளக்கவெண்
தேன்றோன்றுமொழியினையன்புகறனன்றென்றுவகையுளஞ்சிறப்புற்றோங்க
வூன்றோன்றுமுடம்பெடுத்தபயனிதனின்வேறெவனென்றுள்ளத்தோர்ந்து.

142. பழுதகல வாராய்ந்து பதிப்பித்து நல்கினனப் பண்பின் மிக்கான்
கொழுதுவரி வண்டுழக்குங் கொன்றைமா லிகைவேணிக் குழகன் சீரே
முழுதுலகு மெடுத்தேத்தப் புகனுவான் கலைகள்பல மொழியு நல்லோன்
எழுதரியபெரும்புகழான் றியாகரா சப்பெயர்கொ ளியல்வல் லோனே.(கூ)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

* இஃது இந்நூற் பழைய பதிப்பைச்சார்ந்தது.

சிவமயம்.

# திருவானைக்கா

# அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### விநாயகக்கடவுள் வணக்கம்.

143. சீருலவு வனசமகள் புரையுமட வார்களிக நீர்ந்தோ மெனக்களிப் பச்-செறிப்புடக் கணமுருவில் புத்தே டிகைப்பவிது நீங்கவள மென்றுததிதோய், காருலவு மாகநடு வட்பொலியு மாம்பலங் காதன்மதி மீப்பனையெழில் - காட்டுங் கை நீட்டுமொரு கோட்டிரு பதத்திரி கடாக்குஞ்ச ரத்தை நினைவாங், கூருலவு கவரிலை யயிற்படை சுமந்தவெங் கோமா னுடற்கண்வாமங் - கொண்ட கொண் டற்குழற் கொவ்வைவாய் வெண்ணகைக் கொம்மைமுலை யம்மை யைப்பூத், தாருலவு பொங்கரிற் செங்கதிர் மயங்குமொரு *சம்புவன மமர் தேவியைச்- சகல வண் டமுமளிக் கும்பிராட் டியையுரைசெய் தண்டமிழ் வளம்பெருகவே. (க)

### பரமசிவ வணக்கம்.

144. தெள்ளமு துடற்கூன் மதிக்குழவி கொட்டவெந் தீயசஞ் சரவு கொட்டச்-சேர்த்தசைக் குஞ்சடை முடித்தண்ட மிடியச் சினந்தொலிக் குந்து டித்துப், பள்ளவட வைக்கன றூங்குமிரி யாணப் பருங்கறை யடித்துரித்து - பாயுழைக் கைத்துமுத் தலைசேர் படைத்துவெண் பலிகொளிரு நான்குதோட்டு, கள்ளவிழ் பூப்பூந் தொடைத்திறுத ஞுறுசெங் கட்டுமெண் டொட்ட கருமாக் - காணவரி தாருதிரு தாட்டெ து வதைப்பணிபு கைகுவிப் பேமாறுகாற், புள்ள மர் மலர்த்தெரிய லார்தவள மாடமீப் போய்மதியை வான்யாற்றுவெண் - பூங் குமுத மலரெனக் கைநீட்டு *காவையம் பூந்தோகை யைப்பாடவே. (உ)

### பராசத்திவணக்கம். வேறு.

145. வெள்ளநீடுஞ் சடைமுடித்தா ருடலப்பாகி வியந்துகவர்ந் துலக மெலா மளித்தண்டத்துரு, ருள்ளமுழு வதுங்கவர்ந்து கொள்ளாநிற்கு மொருத் திபொற்று ளருத்திகொண்டு ளிருத்துநிற்பா, மள்ளலெழு முள்ளரைப்பூங் கம லக்காட்டி லளிகளிழிந் தழுதழக்க வழிதேனூறு, தெள்ளமுதக் கடன்மடுக்குங் காவை மேவுஞ் சிவஞானப் பிராட்டிதமிழ் செழிக்க வென்றே. (௩)

---

* திருவானைக்கா,

## விநாயகக்கடவுள் வணக்கம்.

**146.** கோமேவு மதிலொருமூன் றெரிக்கு ஞான்றெங் குனிமதிசெஞ் சடைச்செருகும் பெருமா னன்பர், நாமேவு தமிழ்க்கொருபூங் கொடிபாற் றாது கடக்தகா யகன்விநா யகவென் றேத்தி, மாமேவு கதிர்க்காற்றேர் நடத்து மாறு வருமடிக டிருவடிகள் வணக்கஞ் செய்வாம், பூமேவு திருக்காவை மேவுஞானப் பூங்கோதை பாடல்வளம் பொலிய வென்றே. (௪)

## சுப்பிரமணியக்கடவுள் வணக்கம். வேறு.

**147.** இரசத விலங்கன்மிசை யொழுகருவி புரையவீ ரிருமருப் பாம்பன் மாறு- திழிமுக் கடாம்பொழிய மென்சினைப் பைந்தரு விளங்காடு நறவு பொழி யச், சுரபிபல் வளன்பொழிய வேமவுல காளுமொரு தோன்றன்மனை யாட்டி கண்டஞ்-சூழுமங் கலகா ணறுதுறை கழித்துவே றெட்டவனை யஞ்ச லிப்பா, முரகம்வல் விலங்குதுடி நவ்விமுத லமலர்மே லூரறிவரு காலை யிற்றன்-ஞெளி ரவ யவங்களிலொவ் வொன்றுகண் டொவ்வொன் றெதுங்கியவர் கையடைய வப், பரமரிட மகலா திருந்ததுணை யைப்பைம் பசுந்தோகை யைக்காவைவாழ்-பச்சைப் பசுங்கிளியை வாழ்த்துமெந் நாவுரைசெய் பாடலில் வளம்பெருகவே. ()

## நந்திதேவர் வணக்கம்.

**148.** புள்ளேறு நேமியம் படையுடைக் குரிசிலும் பூந்தவி சுகந்து ளோ னும்-பொதுளுஞ் சினைத்தரு நிழற்கோனு மமரரும் புகலவரு மெங்கோ னவைக், குள்ளேறு மாறுத வெனச்சிறிய வாய்மொழி யுரைத்தடரும் வேலை யவர்வா -ளோங்குமணி முடிசிதற வேத்திரப் படையெடுத் தோச்சுவா னைத்துதி செய்வா, முள்ளேறு தாட்பா சடைக்கமல வாவியின் முழங்கிய வரால்வெடி கொளா -மோட்டெருமை பாயுமொலி கேட்டுள நடுங்கியலை முந்நீர் மடுத்து மடவார், கள்ளேறு டைந்தொடைகொ ளைம்பால் கடுக்கக் கறுத்தமுகில் வரையி னேறுங்-காவைப் பிராட்டிக் குரைக்குமெஞ் சிறியபுன் கவியவள் செவிக் கேறவே. (௬)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் வணக்கம்.

**149.** தீயேறு கைத்தலத் தையரு ளாற்பொருவில் சிரபுர மறைச் செல் வரிற்-சிவபாத விருதயர்த மதலையாய் ஞானக் தெவிட்டவுண் டாண் பனையெ லாம், காயேற வரவின்வாய் முள்ளெயிற் றிழிகொடுங் கடுவேற வீந்த வொரு வன்-கடத்திலுயி ரேறவள வன்றிரு மகட்குட் களிப்பேற மதுரை நகர்வாய்ப், பாயேறு மிடையுடை முடைப்பறி தலைச்சமணர் பதறவுடு மேடு கனலிற்-பைம் பசப் பேறவொரு குடிஞையெதி ரேறவப் பதகர்வலி யக்கழுவினிற், போயேற வினியபதி கம்பாடு மையனடி போற்றுவாம் வெண்ணாவலெம் - புண்ணிய னிடப்பாக நண்ணிய பிராட்டியைப் புகழுமெங் கவிதழையவே. (எ)

## திருநாவுக்கரசுநாயனர் வணக்கம்.

**150.** அருங்கலை விளங்குதிரு வாமூரி லோங்குவே ளாண்குலப் புகழ ஞருக் - கணிதிலத வதியா ருதித்தபி னுதித்தறமி லமணரிடு மலையெறிபெருங், கருங்கடல் கடக்துலக முழுதுமொரு கழலாற் கடக்குமொ ரிலச்சினையுடன் - கவரிலைவை வேலிலச் சினையுமிரு தோட்கட் கலக்திடப் பெற்றெனையுமா, ளிருஞ்

கருணை யார்விழி மிழலையிற் பொற்பீடமெறிகா செடுத்ததிருவாக் - கென்கோ
னடித்தலம் வழுத்துவேன் கோட்டெயிலி விட்டகொடி முட்டநெடுவான், வருங்
கலை மதிக்குடல் கிழிந்திழியு மமுதமணி மறுகுபெரு கிக்கிடங்கர் - வாய்மடுக்
குங்காவை யம்மைக் குரைக்குமென் வாய்த்தமிழ் வளம்பெருகவே. (௮)

### சுந்தரமூர்த்திநாயனார் வணக்கம்.

151. மங்கலம் பொலிநாவ லூர்மறைச் சடையனார் மகவா யுதித்தெ
மிறைவன் - மணம்விலக் காவணங் காட்டிட வருட்டுறையுள் வந்தருட் டுறை
யளவளாய்க், கொங்கலர் குழற்பரவை குயமணைந் தினியதமிழ் கூறியுடல்
கொண்டு முதலை - கொண்டபொருண் மீட்டுக் கடாத்திரி நடாத்துமெங் கோ
மானை யஞ்ச லிப்பாஞ், செங்கமல வங்கையி லிலங்கிழைகொண் மங்கையர்
திரட்சியம் மனையெடுத்துச்-செறுசுடர்கொ ணவமணி குயிற்றுமணி மாடமேற்
சென்றிருந் தோச்ச வமரர், தங்களர சூருமுத் தானமலை கவளமிது தானென
நெடுங்கை நீட்டுந்-தண்காவை யம்பிகைக் கடியே னுரைக்குமொண் டமிழ்வள
மிகப்பெருகவே. (௯)

### மாணிக்கவாசகசுவாமிகள் வணக்கம்.

152. கடிமதில் வளைத்தகூ டற்றேன் பிலிற்றுமொண் கண்ணிகம் பற்
கிருமையுங் - காட்டிவெம் புத்தர்களை யோட்டியெங் கோன்செவி களிக்கவாக்
கமுத மூட்டி, முடிவில்பர மானந்த வெள்ளத் திரைக்கடலுண் மூழ்கித் திளைத்
திருந்த - முதல்வர்நந் திருவாத வூரடிக ளடிகளை முடிக்கணிய தாக்கி நிற்பாம்,
துடியிடை நயங்கண் டொதுங்கிமா சுணமண் சுமக்கமுதி ராவிளமுலைத்-துணை
கண் டிடற்சிலம் புடல்வளைய நெய்த்துநெரி சுரிகுழற் கண்டுததிபோய்ப், படியு
முகி லலறிவரை முகட்டேற விழிகண்டு படையுறை புகுந்தடங்கப் - பனிமலர்ச்
சோலைதிகழ் காவைவரு மிமயநன் பாவைசொற் றமிழ்தழையவே. (௧௦)

### தண்டீசநாயனார் வணக்கம்.

153. வாரிகு மூலகுபுக மூந்திருச் சேய்ஞலூர் மறைவாணர் குலம்
விளங்க-வருமெச்ச தத்தர்மரு வானு வுதித்தரிய மறைநான்கு மோர்ந்து தெளி
வாய்ச், சீரிலகு சைவநெறி யொழுகுஞான் றொருஞான்று செங்கோக் குமா
மருத்துந் - தேந்தளவ னொருசுரபி மீப்பருந் தண்டாற் சினந்தோச்சல் கண்டு
தானே, யூரிலம ராவின மொருங்கவொரு கோலெடுத் தோம்பிவயி றாரவூட்டி -
யொழுகுதீம் பால்கொண்டு வாலுகத் தாலெந்தை யுருவுகண் டாட்டி யொளிர்
பைந், தாரியைய விட்டஞ் சலித்துவரு நாளிலத் தந்தைதா ளறவெறிந்தோன் -
றனதா டுதிப்பமுயர் தண்காவை யம்பிகை தமிழ்க்குவளன் மிகவளரவே. (௧௧)

### திருத்தொண்டர்கள் வணக்கம்.

154. காயமன வாக்கொன்ற மும்மல மொரீஇச்சைவ காவியங் கற்ற
றிந்துங்-கனசரியை கிரியையோ காதிஞா னந்தேர்ந்து கந்துமவ் வழிபயின்றுந்,
தீயபிணி யாம்பந்த பாசமு லங்கெடச் சிதறியெனை யாண்ட முக்கட்-செஞ்சடா
டவியண்ணல் திருவடியின் மருவிய திருத்தொண்ட ரைப்பரவுவாம், தோயநிறை
பண்ணையி னறுக்கமல மலரைச் சுரும்பலறி முரலப்பசுஞ் - சூட்டெகின மேங்
கவளை கோட்டெருமை மேய்ந்துநெற் சூற்பயிரை வாய்குதட்டிச், சேயகுமு

தத்தடம் பாயவத் தடவாளை சேண்முகிற் கிண்டுபாயுந் - தென்காவை மேவும் பிராட்டிக் குரைக்குமென் செந்தமிழ் நலம்பெருகவே. (௧௨)

### அவையடக்கம்.

155. பொங்குமலை நீர்பருகு மொருமுனிவ னமர்தரும் பொதியத் திருந் தெழுந்து-புன்னைவீ யின்று தனைந்தவிள மென்சிறு புதுத்தென்றல் வந்தரும்ப, வெங்குமொளிர் செந்தமு ரும்புதே மாவட ரெழிற்காவை யம்பதியின்மே - வெம்பிராட் டிக்கியா னுரைசெய்பிள் ளைக்கவியி தென்போ லிருக்குமென்னிற், றங்குமு தறிவுடைய சான்றோ ருறுந்தெய்வ சைவநெறி யொழுகு வோரின்-சங் கத்து மெய்ப்பொரு ளுணர்த்துநூல் புகலுவது தான்கேட் டெழுந்து தீம்பால், செங்குமுத வாயொழுக மந்தமந் தச்சென்று தேருமக் கழகமுற்றோர் - சிறுமட ல்கை பற்றியொரு சிறுகுழவி குழறுஞ் சிறப்பினுக் கொக்குமன்றே. (௧௩)

---

# ௧.—காப்புப்பருவம்.

### திருமால்.

156. பூமேவு வெண்ணுவ னீழலமர் முக்கட் புராதனர்க் கின்ப வெள் ளம் - பொங்கித் ததும்பிமீ திட்டுவழி தரவவர் புரத்தொரு புறத்த மர்ந்து, மாமேவு மண்டம் புரக்குமட மானையெழில் வாய்த்தசெந் தேனை யொளிர் செவ் - வாயனத் தைக்கருங் குயிலைப் பசுந்தோகை மயிலைப் பரிந்து காக்க, தேமேவு துளபப் பெருங்கா டளிக்குமிருள் சீத்துத் திசாதிசை தொறுஞ் - சேயொளி பரப்புங் கவுத்துவத் தொருமார்பு திருமார்பு முலைபொ ருந்தக், கோமேவு மகவான் முதற்புலவர் மார்பவர் குலக்கொடிகண் முலைபொ ருந்தக்- கொழுமுழுத் திண்கிரியை யோராழி யிடையிட்ட கூராழி யங்கைமுகிலே. (௧)

### சம்புநாயகர். வேறு.

157. மதிநதி தும்பை வாச விதழிக ரந்தை நாகம் வனைசடை முன்கு லாவு புண்டரக் கீற்றினர் - வழுதிமு னந்து வாய கரிபல கொண்டு தாவும் வலியய மென்று கூறி யங்குறத் தோற்றினர் - மகரம லம்பு நீரி லமரர்க ளஞ்சி வாடி மறுகுற வந்த காரி கண்டமட் டேற்றினர் - மறையினொ டங்க மாறும் வலவர்க லங்கு றுதொர் வடநிழ லின்பு றுவ மர்ந்துறத் தேற்றினர், கொதி கொள் சுரந்தண் மேவ நிழல்விரி டந்த ருடு குளிர்புனல் கொண்டு சாலின் மொண்டெடுந் தூற்றினர்-குலமலை நின்று தாழ நமமலை யின்றி மேவு கொடுமுடி தங்கு மேரு விண்டெடுத் தாற்றினர்-குவிகையு டன்க ணீர்கொ டுருகுவர் துன்ப மான குவிதல்கொள் பஞ்சை வாரும் விஞ்சருட் காற்றினர் - குடபுல வந்தி மாறு முடனிற கம்ப நீறில் குணமலி சம்பு நாதர் மென்கழற் போற்றுதும், அதிகா சங்கண் மீறி யருமையி தென்று பேசு மமுதையி கந்து பேசி டுங்கு யிற் பேட்டினை - யனுதின மும்ப ராவி வழிபடு மன்ப ரான வடியவர் கண்க ளார நின்றமெய்க் காட்சியை - யவிர்கதிர் குன்ற வீசு மணிகள்சு மந்த வாச

மலர்தரு கொம்பை யேட விழ்ந்துமிக் கூற்றெழு - மருகற வுண்டி ராக மிட
றுதி றந்து படி யளிகளி ருந்து வாழ்சு கந்தநற் றூட்பொதி, வதியும லங்கன்
மேவு மளகவ ரம்பை மாதர் வனசமி ருந்த மாதர் கும்பிடத் தோற்றிய - மயி
லைவ ளங்கு லாவு மணியைவி ளங்கு சோதி வடிவைந ரும்ப டீர குங்குமச்
சேற்றனை - வனமுலை கொண்டு லாவு கொடியையி ருண்ட சோலை மதுமடை
விண்டு பாயு மம்புயப் பூச்செறி - மடுவைய லம்பி வாளை கமுகைய டர்ந்து
பாய மலிவள மொன்று காவை மங்கையைக் காக்கவே.                        (௨)

விநாயகக்கடவுள். வேறு.

158. சீர்பூத்த வன்பரிபும் வெள்ளரிக் குலையைத் திரட்டிச் சடைக்கண்
வாரித் - தின்றுகரு மாசுண மெனக்கூனன் மதிமுகில் செறியப் புழைக்கை
நீட்டித், தார்பூத்த வச்சடைக் கமலமொண் டுண்டுகட் டழல்கண்டும் வெரு
வாதுதன்-றந்தையென வெந்தையிட முலவுந் திருக்குஞ் சரக்கன் றினைப் பணி
குவர், நீர்பூத்த முள்ளரைப் பாசடைப் பூங்கமல நிறைநறை யிழிந்து பாய -
நெட்டித ழவிழ்க்குமொரு வட்டமலர் மாளிகையு ணீங்கா திருந்து வாழுந்,
தேர்பூத்த வல்குன்மட வாரிரு வருந்தனைச் சிந்திப்பர் கட்பொருந்தத்-திருக்கட்
கடைப்பார்வை செய்யுநன் காவையமர் தேவியைக் காக்க வென்றே.          (௩)

முருகக்கடவுள். வேறு.

159. கறைவாய கண்டத் தெம்பெருமான் கரகங் கணங்கள் கரந்து
சடைக் - காட்டு நுழைய மால்கரச்சங் கத்து ளவன்பாய் புகுந்தொளிக்கச்,
சிறைவாய் மஞ்ஞைப் பரிகடத்தித் தேம்பாய் தருவி னிழற்பிறந்த - தெய்வக்
களிற்றை மணஞ்செய்த செவ்வேண் மலர்த்தா டலைக்கொள்வாம், தரைவாய்
மணிமுத் தனைகொழிக்குஞ் சலதி மடுத்த சூன்மேகந் - தவழ்ந்து திரிவ தேய்ப்
பமத சலமூன் றுடைமா திரம்பயிலு, நறைவாய் வனத்து ளுயர்ந்தெழும்
வெண் ணாவன் மருங்கு முளைத்ததுகிர் - நாகத் தொருபாற் படர்ந்தபச்சை
நறும்பூங் கொடியைப் புரக்கவென்றே.                                  (௪)

நான்முகன். வேறு.

160. ஒலிகெழு மலையலை பருமுத் தாக்குட முறழ்வரி வளைவயி றுமிழ்
பொற் பாற்கட-லுவகையொ டெழுமொரு மதியைப் போற்கய லுகண்மடு நடு
வெழு பசுமைச் சூட்டனம், வலியய மெனநனி கடவிச் சீர்ச்சித மலர்மிசை வதி
யுமொ ரெகினப் பேட்டினை - மறைபுறை கடையடை யெனவைத் தாற்றிய
மலர்தரு கலைமக ளுலகைப் பூத்தவன், புலியத ளிடையிடை சலவக் கூக்
குரல் புரிபரி புரமடி யலறப் பாப்பணி - பொலிதர முழவொடு புவிவிட் போற்
றிடு பொதுவினி னடமிடு மழுவைத் தூக்கிய, மலிசடை யவர்மகிழ் துணையைத்
தீத்தொழில் வலியவென் முடிமிசை யடியைச் சூட்டிய - மணியைமென் மலர்
விரி கொடியைப் பூத்தொளிர் மதகரி வனம்வரு மயிலைக் காக்கவே.        (௫)

இந்திரன். வேறு.

161. மோகத்தை யாங்கொண்ட போதெலா மிக்கின்ப முனியா தளித்
திடுச்சி-மொய்குழ லுசப்புமுலை சொற்பகைக் களிவையென முராரிமகிழ் வெய்

நவேறி, மேகத்தை யோட்டித் திசாதிசை திரிந்தலைய மின்னைத் துரத்தி யோங்கும்-வெற்பைத் துணித்தமுதை வாய்ப்பெய்து தருநீழல் மேவுமொரு கடவுள் காக்க,நாகத்தை வாங்கிய பிராணியற் பகைமனையை நண்ணியது மதிலி லங்கை-நாதன்மனை விக்கின்ப நல்கியது மொருபூவ ணத்தடைந்ததுமி ராவிற், பூகத்தை யனையகந் தரமாது பாற்றாது போனதுமு ளோர்க் திடைவிடாப்-புந்திச் சிறைப் படுத் தொளிர்காவை மேவுநம் புண்ணியப் பூங்கொம்பையே. (௬)

திருமகள்.

162. முத்தநகை விதுமுகப் பொதுவியர் கடப்பான் முழுக்கவன் றாழ்வித்து-மூடுங்கவாடந் தடிந்துமனை புக்குண முனிந்தவர் பிணித்த டிக்கும், மத்தடி பொறுத்துவரு துணைமுகிலை யுண்டுகண் வளர்ந்துறைதி யென்று தன்னை-வயிறுளைத் தீன்றவொரு பாற்கடற் குடியாக்கு மடமானை யஞ்ச லிப்பாங், கொத்தவிர மத்தமணி வெண்பொற் பிறங்கற் குலாவும் பெருங்க ளிற்றைக்-கூடிப் பயந்தவொரு கோட்டடன் மழக்கன்று கூடிவிளை யாட ஞடி, யத்தவுல கக்களிறு பாறவீ றேறுமத வத்தியா ரணிய மேவு - மமையம் பிறங்கவ்ள ரிமையம் பிறந்தபிடி யைக்காத் தளிக்க வென்றே. (௭)

கலைமகள்.

163. வாவியம் போருக மலர்த்தவி சுறுங்கடவுள் வாக்கினுமெ ஞக்கிணுகறு - வழியுஞ் சிதத்தகட் டேடவிழ்க் குங்கமல மனையினுங் குடிகொண்டு பொற், றாவியந் தொற்றுட் கருங்கடல் கொழித்தசெந் துகிரனைய வாய்ப்பசும் பொற்-சூட்டெகின மேறும்வெண் பேட்டெகின மலர்மென் றுணைத்தா டுதித்து நிற்பாங், காவியை முனிந்துசண் பகமீக் குதித்தொளிர் கனங்குழையை மோதிடுங்கட் - கட்பிலிற் றுந்தெரியல் சூழ்ந்தளிகண் முரலக் கனங்கதற வாட்டு மைம்பாற், றேவியைச் சகலவுல கும்புரக் கும்பெருஞ் செல்வியைக் கருணை பூத்த - திருவைத் தடம்பணைத் தென்காவை யம்மையைத் தினமும் புரக்க வென்றே.()

காளி.

164. விரிவுற்ற பையரா நண்ணுலகு மண்ணுலகும் விண்ணுலகு நன்கு காக்க - வெற்றிகொ டெடுத்தெனக் கைத்தலையின் முத்தலைய வேல்பரித் திறுமாந்து நீங், கருவிற் பொலப்பெய ரனைத்தெறப் பொற்றறி யகட்டைக் கிழித்தெழும்பே - ராளரி திகைக்கவொரு கோளரி யுகைத்திவரும் யாளிப் பிணவளிக்க, செருவற் றொடுங்கிக் கருஞ்சுரும் பிட்டவிற் செஞ்சுவைத் தண்டணிறவெண் - டிரிபுண் டரத்தநுதல் வெம்புலிக் கங்கொட்டு சம்புலிங் கப்பெமானை, மருவிப்பன் மான்கண்மதர் நோக்கமறி யச்சூழ மற்றுமொரு மான்வயிற்று - வந்தகுற மான்முறை பொருந்தமுக் கடமான் வனத்துவரு மட மானையே. ()

சத்தமாதாக்கள். வேறு.

165. அனமிசை யேறி யுலாவரற் றொடுத்தவ ளடுபுலி கீறிய தோல்வைத் துடுத்தவ - ளசுரகு லாதியர் சாயப் படுத்தவ ளலைகட னீரழ லாகக் கடுத்தவ, ளினமடர் பாரையொர் கோடிட் டெடுத்தவ ளிறையொடு மாமலை யேகற் றடுத்

தவ-ளரிகவர் வேல்கொடு காவற்க டுத்தவ ளனுமெழு மாதர்க டாளைத் துதிக குதுங், கனமலி வாய்வரல் போலச் சினத்தெழு கடமிழி தோல்வர வோதைப் பரிப்படை - கடலலே போய்வர மேருக் கிரிப்புரை கதிர்விடு தேர்வர வீரப்புயப் படை, வனம்வர வானவர் பாறக் கறுத்தெதிர் வருமொரு தாருக னோடத் தரத் திய-மதலையு லாவுக வானுத்தமப்பொழில் வளமலிகாவைகன் மாதைப் புரக்கவே.

முப்பத்துமூவர். வேறு.

166. வேலையினுதித்தவிடம் வைத்தகிரிபத்தனெளி தற்புக்களிப்போடு நாணவெதிர்நிற்பவு-மேவிரதமுக்கனிச ருக்கரைமுதற்சுவைகள் கைப்பத்தமிழ்ப் பாடல் நாகனிகொழிப்பவும் -வீறுறுசிவத்தல டக்கநடைகற்றிலனெ னப்பெற்று ற்றுதை தோளிடைபரிப்பவும்-வீழிமிழலைப்பதியெ னப்ப ரமணியப்புபடி வைத் திட்டபொற்காசு நாடொறுமெடுப்பவு, மாலைமதிவைத்தகுடி லப்பரனெனச்சிவி கை பெற்றுத்தொனிக்காள மோடுகுடைத்தவு - மாமறைவணக்கதவ மெய்ப்புகழ ரெச்சமு னடைப்பச்சிறப்பூறு வாயமுதடொட்டவும் -வாரிலைகண்மொய்த்தபுரு டப்பனையில்ப்பொழுது கொத்துக்குலைக்காய்கு லாவவருள்வைப்பவு - மாதராசி க்குமொர்கு லச்சிறைதனக்குழ ளுவப்பப்பொறித்தோலை காணுபுவியப்பவுங், காலைவருசெக்கதிர்க டுப்பவொர்கடத்துறுவெ ளற்புக்குணத்தோடு மாதரு வெடுப்பவுங் - காணியிதெனக்கொண்மட னிற்செறுநர்வைத்ததம வெப்பத்தழற் சீறி மாறனுடைநப்பவுங்-காய்சினவழற்குண்மடல் பச்செனவெடுத்துவரை கொ ட்டப்பெருக்கேறு நீரெதிர்செலுத்தவுங் - காருடலுடைப்பறித லைச்சமணர்முற்ற நெடு விட்டொட்டமுட்டாரு மீயிவரவைப்பவும்,சோலைபுடைசுற்றமது ரைப்பதி முதற்பதிமு மூக்கத்தழைத்தோகை நீறுகைகுழைப்பவுங் - தோமில்புகலிக்குரிசி லுக்கமுதளித்தகுயி லைப்பொற்றகட்டுடு மாமணிகுயிற்றிடுஞ்-சூழெயின்மதக்கரிவ னத்தமரனத்தையிரு செப்புத்தனப்பார மாமயிலைசித்தலுஞ்-சூரியர்மருத்துவரு ருத்திரர்வசுக்களெனு முப்பத்துமுக்கோடி தேவர்கள்புரக்கவே. (கக)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

---

# உ.—செங்கீரைப்பருவம்.



167. பங்கய மலர்த்திவரு செங்கதிர் நிறத்தவுடல் பனிமதி நிறங்கொ ளாது - படரரி மதர்த்தகண் குழியாது நாடிகள் பசந்துநா றாது நுனைவாய், கொங்கைகள் கறாதுமட் சுவைநாப் பெறாதகடு குழையா துறாதி னம்பல் - குறி படா தருமையொ டுயிர்த்திமய மாதேவி குளிர்பு னல்பொன் வளைகுளிறிடும், அங்கையி லெடுத்தாட்டி நீவிட்டு மட்காப் பணிந்தொழுகு திருமு லைப்பா-லார்வ மொ டருத்தவுண் டயறவழ்ந் தேறிமலை யரையன் புயத்த உன்பொற், செங்கை விரல் சிரமீது பற்றிநின் றுடுமயில் செங்கீரை யாடி யருளே - தென்காவை யம் பதி செழிக்கவரு மென்னம்மை செங்கீரை யாடி யருளே. (க)

168. காராடு மாடமலி கூடலிற் பொன்மாலை கைசின் றிழிந்த வண்மடிக் கட்டவிழ்தல் கண்டுவக் தம்மைவா வென்றிரு காத்துவிர னீட்டு நிம்பத், தாராடு மார்பனிரு குழைபிருகை பற்றியத் தடமார்பு தாழ்ந்தொ ளிரும்வெண்-டண்ட ரள மாலையி னிருந்துமற் றொருமாலை தாளுநைத் தூச லாடி, வாராடு மிருமுலை சுமந்தமட வார்தொடர வளருமும் முலைசு மந்து - வானுடு முதலபல நாட்டுங் கயல்கட்டி வடகயிலை சென்று பொதுவிற், சீராடு மெந்தையொடு போராடு மொருபூவை செங்கீரை யாடி யருளே - தென்காவை யம்பதி செழிக்கவரு மென்னம் மை செங்கீரை யாடி யருளே. (உ)

169. கற்றிணி தடம்புயக் காருடற் றிமிலர்மீன் கையுறை யளிப்ப வாங் கிக் - காவல்புரி செய்தலங் கண்ணிய னளாவிக் கடற்றுகிர் படர்ந்த மனையிற், பொற்றிகழ் முலைச்சிலை சுமந்திடை நுடங்கவாள் பொருவுதங் கட்பகையெனுப்- புலான்மீ னுணக்குத நணைந்துமுக மன்பல புகன்றுமகிழ் குரவை குழறிச், சுற் றியெம் பெருமான் குடம்பைதோட் சூட்டச் சுறாவிலைப் பைம்பொற் கலன் - சூட்டிவலை முடியமுண் மடற்றாழை யம்போது சுரிகுழற் குறமு டித்துச், சிற் றிடை யளத்தியர்கள் கொண்டாடு மொருநங்கை செங்கீரை யாடி யருளே - தென்காவை யம்பதி செழிக்கவரு மென்னம்மை செங்கீரை யாடியருளே. (௩)

170. அஞ்சியய ருங்கமல மின்றட லுடைத்தா யடர்த்ததென நாணி யுடல்கூ-னுகிய மதிக்கொழு நனைக்கண் டரற்றிடு மரக்காம்பன் மான மணிவாய், வெஞ்சினஞ் சிறிதெழலி னற்சின்மொழி கழறலவண் விரவரவு துவள லேய்ப்ப- மின்னிடை தளரடமர் தாகினி யெனும்பெயரள் வெங்கிடை தவழ்ந்துமாலை,மஞ் சிஞெளி பாய்புய வரைக்கட் டவழ்ந்துமகன் மார்பவெண் பொடிக ரைத்தும் - வண்கைவாழ் கழிதலை புகுந்துமறு கச்சடை வனஞ்சேப்ப வெங்தை முடிமேற், செஞ்சிலம் போலிடு மடிக்கமல நீட்டினவள் செங்கீரை யாடி யருளே - தென் காவை யம்பதி செழிக்கவரு மென்னம்மை செங்கீரை யாடி யருளே. (௪)

171. நந்தாத செல்வச் சிலம்பரசன் மனையாட்டி நகிலொழுகு பாலுண்டு புன் - னகைகாற வவள்வா யுமிழ்ந்துந் துகிர்ப்பாவை நயமொழி மொழிந்தெடுத் து, வந்தாவல் பூண்டணி யணிந்துந் தருப்பாவை வல்லிடையின் மெல்லிடைத் தான் - வனையுமென் சிறுசீரை சுற்றியுஞ் சுடராடி மன்னுமிழ லைக்கூவியுஞ்,சந் தார் திருத்தாதை யகன்மார் புழக்கித் தவழ்ந்தும்விளை யாட்டயர்தல் போற் - றண்காந்த ளங்கைக ணிலத்துற நிமிர்த்துமங் தாகினிப் புனலலம்புஞ், செந்தா மரைச்சரண் கோட்டிப் பிராட்டிநீ செங்கீரை யாடி யருளே - தென்காவை யம் பதி செழிக்கவரு மென்னம்மை செங்கீரை யாடி யருளே. (௫)

வே று.

172. கெண்டை யிரண்டு மருண்டொரு முளரி கிடந்து நடந்தாடக்
கெளிறொரு பதுமலை மகளை விடாது கிளர்ந்து தளர்ந்தாடக்
கொண்ட றிரண்டொளி ருச்சியின் மீது குவிந்து கவிந்தாடக்
குமுத மலர்ந்தபொன் முளரி பிறந்தெழு குறுவெண் மணியாடத்

துண்டு படுங்கலை மதியிற் கட்டிய சுட்டி யசைந்தாடச்
சூழ்ந்திரு காந்த ளடிப்படி வண்டு சுழன்று முரன்றாட
அண்ட மனைத்து முயிர்த்த பொலங்கொடி யாடுக செங்கீரை
அத்தி வனத்தம ரத்த ரிடத்தவ ளாடுக செங்கீரை. (சு)

173. பாத சதங்கை புலம்பு சிலம்பு பதிந்து பொதிந்தாடப்
பால்வளை யிற்சுட ராகை குயிற்றிய பல்சுடர் மணியாடக்
காதள வுங்கயன் மோது நறுங்குழிழ் கதுவிய முத்தாடக்
ககனத் திடைபொலி மின்னலின் மின்னிய கனவிரி சிகையாடத்
தாதவிழ் நறுமென் குமுதத் தமுதொழு தழைகுறு நகையாடத்
தழைதரு மரகத நிழல்விரி மேனித் தண்ணெனு மொளியாட
நூதவ ளொளியென வென்னுட் பொலிபவ ளாடுக செங்கீரை
அத்தி வனத்தம ரத்த ரிடத்தவ ளாடுக செங்கீரை. (எ)

174. மருங்கணி யாடைகை வென்றிட் டுதையா மலரடி கன்றாமே
வாயமு தூர லளித்த விரற்படு மண்ணென வெண்ணாமே
கருங்குயின் மென்குரல் விம்மிப் பொருமிக் கம்மிப் போகாமே
கயலின் முத்தென நுண்டுளி முத்திரு கட்கயல் சிந்தாமே
சுருங்கு மருங்கு றுவண்டற வுந்தித் தொந்தி ததும்பாமே
சூழ்சுடர் மேனிப் புழுதி பொருந்தத் தொட்டுமெ ணளையாமே
அருங்கலை மேகலை யாக வணிந்தவ ளாடுக செங்கீரை
அத்தி வனத்தம ரத்த ரிடத்தவ ளாடுக செங்கீரை. (அ)

வேறு.

175. கடல்சுவ றிடவட வுடல்வரை பொடிபடல் கண்டோ டுங்காலன்
கடவிய முதுபக டடியொடி படவெரி கண்சா லும்பீழைப்
படவர வுடலடல் விடநெடு நிலமகள் பண்பா டுங்கீதம்
பயிறுள வுழவனை முனிதர வமரர் பயந்தீ ரென்றேல
மிடவிள முளரியில் வளர்பவன் முதலிய ரெந்தா யெங்கோவே
யெனமுனர் வருமசு ரர்கள்பொடி படவலி பெஞ்சா நின்றோர்வேல்
திடமொடு தொடுமொரு மதலையை யுதவினள் செங்கோ செங்கீரை
சினமுடை மதகரி வனம்வரு மொருமயில் செங்கோ செங்கீரை. (௯)

வேறு.

176. நெக்குரு கிக்கசி வுற்றவர் கட்டனி நின்று டுங்கேர்காய்
• நெட்டட லப்பன கத்தலை நிற்குநி லந்தா ழும்பாவாய்
மைக்கரு மெய்ப்புயல் பிற்பொலி வுற்றுவ றும்பூ மென்கோதாய்
மட்டுவி ரித்தெனு ளக்கம லத்துறும் வண்டே தண்டேனே
அக்கர வப்பணி முக்கணர் பக்கல மர்ந்தி ரைந்தாரே
டுத்தொகை பெற்றவ றத்தவ ளர்க்கும ணங்கே கொங்கேறுஞ்
செக்கம லத்தைந கைக்குமு கக்குயில் செங்கோ செங்கீரை
சித்திய ளித்திடு மத்திய னத்தவள் செங்கோ செங்கீரை. (௧0)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

## ௩,—தாலப்பருவம்.



177. சேற்று மணிகள் சலஞ்சலங்கள் சிதறிச் சிலம்ப ஞிமிறலறச்
செந்தா மரையின் வெள்ளிமுளை சிந்தித் தெறிக்கச் சினைவாளை
நாற்று வயலிற் குதிக்கவளை நடுவட் கயல்க ளொளிக்கநடு
நடுங்கிக் கமடஞ் சுரிக்கவரா ஞரம் புரண்டு துடிக்கமது
ஊற்றுங் குமுதம் படைச்சாலி னூடே யரையக் கருங்கடைஞ
ருழும்வெம் பகட்டை யுரப்பமலை யும்பர் கரத்தை யவர்செவிக்க
ணேற்றும் பழனச் செழுங்காவை யென்றாய் தாலோ தாலேலோ
எல்லா வுலகுஞ் சராசரமு மீன்றாய் தாலோ தாலேலோ. (௧)

178. அரும்பு முலைசிற் றிடைநுடங்கி யசையப் பரித்த கடைசியர்க
ளலர்வாய் நறவுங் குயம்பாளை யரியு நறவு மருந்துமள்ளர்
கரும்பு வடித்த தீஞ்சாறு கதலிப் படப்பை புகுந்துநெடுங்
கமுகம் படப்பை யுலவியிளங் கன்னற் படப்பைத் தூரகழ்ந்து
சுரும்புமடுக்கு முளரிமடுச் சுருங்கப்பெருகிச் சலதியுவர்த்
தோயங் கலக்க முகின்மேய்ந்து சொரியும் புவன மினிப்பவறிந்
திரும்பு வனந்தாழ் வயற்காவை யென்றாய் தாலோ தாலேலோ
எல்லா வுலகுஞ் சராசரமு மீன்றாய் தாலோ தாலேலோ. (௨)

179. செரிந்து சரிந்து நெய்த்திருண்டு நீண்டு சுருண்டு மகரந்த
நிமிரத் திமிர்ந்து நறியபனி நீரி னனைந்த குழன்மடவார்
பரிந்து குடையு மணமஞ்சட் படுநீர் பாய்ந்து தழைத்தசெழும்
படப்பைக் கதலிப் பசுங்குருத்தொண் பரிதிக் கடவு டனைமுடுக்கி
விரிந்து படக்க நிலம்படுத்த மென்பூத் தருந்தேன் மிஞிறருந்தி
மிடறு திறந்து பாண்மிழற்ற விரைப்பங் கயத்துஞ் சனந்துயிலா
திரிந்து மறுகும் வயற்காவை யென்றாய் தாலோ தாலேலோ
எல்லா வுலகுஞ் சராசரமு மீன்றாய் தாலோ தாலேலோ. (௩)

180. உடுக்கும் படங்க வுகள்கயலா வொற்றை யாழி வையமுமிக்
தூரு மொளிர்மா னமும்விரைய வோடுங் கலமாச் சலராசி
மடுக்குங் கனங்கள் பச்சொளிச்சை வலமா வொளிகள் சலஞ்சலமா
மருவி மிதப்ப வுடற்கண்ணன் மனையூற் றெடுப்ப வுயர்ந்துமால்
படுக்கும் பாயல் பின்னோடப் பயத்தன் பயத்த னுகவுடற்
பரிய மகரஞ் சரியவலை பாய்ந்து பாரை யகழ்ந்து பெருக்
கெடுக்கும் பொன்னித் தடங்காவை யென்றாய் தாலோ தாலேலோ
எல்லா வுலகுஞ் சராசரமு மீன்றாய் தாலோ தாலேலோ. (௪)

181. கங்கு லனைய குழல்காட்டுங் கலாபத் தோகை கடுப்பாருங்
கருங்கண் மழவே றனையாருங் கலவிப் பூச லயரவனை

கொங்கு மலிதே மலர்மாலை கொட்டுந் துகளுஞ் சிதறுசுண்ணக்
குவையு நறுங்குங் குமத்தூளுங் குண்டுக் கிடங்கர் நிரைதூர்த்துப்
பொங்கு மதவெண் டிகையானைப் புழைக்கை மடுத்துக் கோட்டெயின்மீப்
பொலியுங் கொடிகள் கிழித்தவழிப் புயல்வான் புகுந்து பொன்னுலக
மெங்கு மணக்குந் திருக்காவை யென்றாய் தாலோ தாலேலோ
எல்லா வுலகுஞ் சராசரமு மீன்றாய் தாலோ தாலேலோ. (௫)

வேறு.

182. இரசத வரையமர் பவள விலங்க லிடம்படர் பைங்கொடியே
யிமையவர் மகிழ்வொடு புகழுஞ் சிமயத் திமயம் வரும்பிடியே
சரணினை பவருட் டிமிரஞ் சிதறச் சாரு மிளங்கதிரே
சதுமறை யாறு மளப்பரி தான தயங்குபொ லாமணியே
மரகத வரையின கியவெழி லெனவெழில் வாய்த்த செழுஞ்சுடரே
மதுரித நவரச மொழுகக் கனியும் வளத்த நறுங்கனியே
தரணி மிசைப்பொலி தருமக் குயிலே தாலோ தாலேலோ
தழையுந் தந்தி வனத்தமர் மயிலே தாலோ தாலேலோ. (௬)

183. அங்கம் புளகுற் றுருகுவ ரிதையத் தவிரும் விளக்கொளியே
யறிதற் கரிய பரஞ்சுட ராயவெ னையர்க் கொருதுணையே
பொங்குங் கதிர்மணி யணிகள் சுமந்தவிர் புண்ணிய மென்கொடியே
பொய்ய ரகத்து மினிக்கு மினிப்புறு புத்தமு தச்சுவையே
கொங்குந் திணர்விரி பைந்தொடை நிம்பர் குலத்துறு செந்தேனே
கோகன கச்சின கரமொரு வாவிரு கோதைய ருக்கரசே
தங்குங் கருணை மலர்ந்தெழு கொம்பே தாலோ தாலேலோ
தழையுந் தந்தி வனத்தமர் மயிலே தாலோ தாலேலோ. (௭)

வேறு.

184. சயிலத் தரசற் கொருபுத் திரியே வானுள் வார்தாயே
தழலைத் தருகட் பரமற் றுணையே நாயேன் மாவாழ்வே
கயலைக் கடுவைக் கணையைக் கவினூர் மாகா வார்கார்சேர்
கடலைப் பிணையைக் கடுகிக் குழைதோய் காதோ டேமோதா
வுயர்பொற் குமிழிற் குதியுற் றெளிசூர் கோமா னேதேனே
யுவமித் திடுதற் கருமைக் குயிலே தூயோ ராய்மாயா
மயலற் றவருட் படுமெய்ப் பொருளே தாலோ தாலேலோ
மதவெற் பமர்பொற் பதியுத் தமியே தாலோ தாலேலோ. (௮)

வேறு.

185. தானக தம்படு வெண்கரி தாழா வீழாமே
தானவர் மங்கையர் மங்கல நீணாள் வாழாமே
வானவர் நங்கைய ரங்கைகள் வார்மேன் மோதாமே
வாள்விழி பஞ்சசி வன்றுய ருடே போதாமே

தேன்மலி பைந்துணை ரைந்தரு வார்வேர் காயாமே
தேகம டங்கலு மம்பக ரூர்போய் மாயாமே
கான்முனை யொன்றருள் பைங்கிளி தாலோ தாலேலோ
காவை யமர்ந்த கருங்குயில் தாலோ தாலேலோ. (௯)

வே று.

186. இருவர்க் கரியவெ னட்பணிடத்தவள் தாலோ தாலேலோ
விமயத் தலைவனு யிர்த்தமடப்பிடி தாலோ தாலேலோ
கருணைக் கடல்பெரு கப்பொலிகட்குயில் தாலோ தாலேலோ
களகப் பிடரிவ ரத்தியளித்தவள் தாலோ தாலேலோ
பொருநைத் துறையர்கு லத்தைவிளக்கினள் தாலோ தாலேலோ
புணரித் துறைவரு புத்தமுதொத்தவள் தாலோ தாலேலோ
மருமிக் கெழுதுள வற்பினுறுத்தவள் தாலோ தாலேலோ
மதவெற் பமரும் வனத்தமர்பொற்கொடி தாலோ தாலேலோ.

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

# ௪.—சப்பாணிப்பருவம்.



187. செய்யதே மலர்மருவு நீலத்தி னெண்காந்தள் சேர்ந்தெனப் பின்கூனமுவாய்ச் - செங்கையொன் றுறவொருகை யிருகடன் மறைக்கத் தெரிந்தன ளெனப்பொதிகையா, னெய்யுமோர் பைந்துழாய்க் கோலிருகை சேமித்த தெறுமுதன் றொருகையிவ - ளிருகோன் மறைத்தவலி நன்றுநன் றெனமகிழு மெந்தையொடு மகிழுநறவம், பெய்யுநாண் முளரிமலர் வலியவொரு கமலம் பிறந்தகிதத்தையடையும் - பெற்றிபோற் சிற்றிடை நுடங்கக் கடங்கால் பிறங்கல்வழுதிப்பொன்மனையிற், றையலார் மைக்கண் புதைக்குங்கை சேர்த்தம்மை சப்பாணி கொட்டியருளே - தண்ணுவ லோர்புகழும் வெண்ணுவலூரரசி சப்பாணி கொட்டியருளே. (௧)

188. கந்தமலி நெட்டித ழவிழ்க்கும்வெண் டாமரைக் கவின்மயிலுமுவரிபடியுங்-காளமே கத்திற கத்தும்மா கத்தெண் கடற்கட் சனித்தகுயிலும், வந்திரு மருங்குமின் மைம்பான் முடித்துநறு மாலைசெரு கிக்குனிநுதல் - மணநந் தந்தூரி யங்கொண்டு தீட்டிமதர் மாழையுண் கட்குமையிட், டந்தரமடந்தையர் பணிந்துபுடை சூழமணி யணிபல வணிந்துநெடுவா - னளவிய மணக்காவணத்திருத் தத்தழன்மு ழுவைரைக் கரையமைவுமுன், றந்தைதர வெந்தையார் தொட்டகை முகிழ்த்தம்மை சப்பாணி கொட்டியருளே-தண்ணுவ லோர்புகழும் வெண்ணுவ லூரரசி சப்பாணி கொட்டியருளே. (௨)

189. கலைமணக் குங்கொடிக் கொருபீட மானநாக் கடவுளொரு வாதமர்ந்த-கமலபீ டமுமகில மகளிடை பொதிந்தபூங் கலைவயி றுளைந்துயிர்த்த, சிலைமணக் குஞ்சிறு நுதல்சின கரப்பூஞ் செழுங்கபா டந்திறக்கும் - திறவுகோலைச்செக் கருங்கரள வரவெனச் சென்றொளி கவர்ந்தபடையா, னலைமணக் கு

திருப் பாற்கடலும் வேற்கணைப் ராணியின் பந்தினைக்கு - மண்ணலைத் தாங்கு சிறு கண்ணநாற் கோட்டுவெள் ளருவிச் சிலம்புநின்று, டலைமணக்கும்படி வணங்குவோர்க் கருள்கைகொடு சப்பாணி கொட்டியருளே - தண்ணுவ லோர் புகழும் வெண்ணுவ லூரரசி சப்பாணி கொட்டியருளே. (௩)

190. அருமறைக் கிழவன்முத லவருக் குந்தொழில்க ளைந்தெண்ண ளவைசெய்ய - வைவிரல் படைத்தகை யாற்சுட்டி னுடைவர்க் கத்தொழில் காட்டு கையாற், பருமுலை மருப்புற வளைக்குறி படத்துகிர்ப் பட்டகோ டீரமுடியெம் - பரமனைத் தழுவுகை யால்வள ரறங்களை முப் பத்திரண் டும்புரிகையாற், குருமணி குயிற்றிய விருங்கங்க ணக்கையாற் கொடியேனை யஞ்சலென்ற - கோலக்கை யான்மடப் பொய்தற்பி ளுக்களொடு குளிர்பனி வரைச்சோலைதன், டருநறவு கொட்டுமலர் கொய்யுங்கை யாலம்மை சப்பாணி கொட்டியருளே - தண்ணுவ லோர்புகழும் வெண்ணுவ லூரரசி சப்பாணி கொட்டியருளே. (௪)

191. பாகமுற வம்மைநினை வைத்தவெம் மான்கரப் பால்வைத்த மான் மருண்ட - பார்வைகொண் டதுகொலைச் சிலைவேடு கூடும் பருப்பதந் தோறு மாடு, மேகமுற முங்குழற் சிறுகுறவர் சிறுமிவாய் மிக்கமோ கப்புலவுலாம் - வேற்குழவி யெனுமருக னருகுறைவ தறகன்று விரவிநங் கைப்பட்டதா, லேக வரி தெனநினைத் தன்றுனை லனலொளி ரிணைக்கணெழு கருணைவெள்ள - மெங்கும் பரந்தப் பரற்குமீ திட்டடிய ரிருவினையை வாரியோடக், கோகனக மதின் முளைத் தாலெனப் பொலிகையாற் கொட்டியருள் சப்பாணியே - கொடிவிரவு கடிமதிற் காவையிம யப்பாவை கொட்டியருள் சப்பாணியே. (௫)

192. வெள்ளன மெனத்தமிழ்க் கூடல்வாழ் வகதவன் விழுப்பெறவுதித் தெதிர்த்த - வேலைத் தழற்கணுற் செற்றவெம் மானளவில் வேடிரண் டென வரச்செய், தெள்ளலில் கலாங்லா மேலாக்கி மலயவெற் பீந்ததி னரும்புமென் காற் - கிறையாக்கி வெம்பா ரிடஞ்சூழு மென்னாற விழிகிம்ப மாலையீந்து, கள் ளவி ழிலம்பகத் தயலா ரரயங் கலகதுபுடை சூழமுடியிற் - கவின்முடி தரித் தரி யணைக்கண்வைத் திருகயல் களிக்கநோக் காவொருகயல், கொள்ளென விரும் பிக் கொடுத்தகை சிவப்புறக் கொட்டியருள் சப்பாணியே - கொடிவிரவு கடி மதிற் காவையிம யப்பாவை கொட்டியருள் சப்பாணியே. (௬)

வேறு.

193. அரவப் பரிபுர மேகலை பம்பி யலம்பிப் பதறுமே
அம்போ ருகமொடு வெம்போ ரிடுகர மணிவளை சிதறுமே
யிரவிற் பொலிமதி வகிரிற் சுட்டி யிரிந்தது பிறழுமே
யியல்பன் றியுமிரு கரமலர் சேந்தட லேறிக் கன்றுமே
பரவைக் கடல்சுல வுலகினி லலகில் பவக்கடல் வீழ்ந்துழலும்
பயனில் லாவெனை வழிவழி யடிமை படைத்த பிரான்மகிழுங்
குரவக் குழலி துயின்ற கரக்கொடு கொட்டுக சப்பாணி
கொம்பு படைத்த சிலம்பு வனத்தவள் கொட்டுக சப்பாணி. (௭)

194. எங்கள் பிரானடி வைத்த கருத்த ரிடர்க்கடல் வீழாமே
யெறிதிரை படுமொரு குடிஞையின் மறைமட லெதிர்ந் தேறாமே
வெங்கன றங்கு மடத்தறு தூமம் விரித்து முழங்காமே
மெச்சு குலச்சிறை கட்ட நுனைக்கழு வீணுப் போகாமே
அங்க மலம்பு சிலம்பு கலந்தமெல் லடியல தாகாமே
அரவொலி மலிசிர புரம்வரு குழவிக் கருணு னங்கலவாக்
கொங்கை சுரந்திழி பாலமு தூட்டினள் கொட்டுக சப்பாணி
கொம்பு படைத்த சிலம்பு வனத்தவள் கொட்டுக சப்பாணி. (௮)

வேறு.

195. மும்மலக்கருளற வொருவினர் மனனெனு மற்புத நச்சாரு
முளரிச் சததள விளமல ருளிவிள ரிப்பண் மிழற்றுறைதைப்
பமரக்குலமுடி யடிபடி தரமது மிக்க பெருக்கூறும்
பதிபச் சடையுடை மரைமடல் புரையடி வைப்ப வப்பார
மமர்பொற் கிரியென வளரிள முலைகள்ப ரித்தெழு பொற்பாவை
யமலச் சுடரிட மருவிய வொருகொடி புத்தமு தப்பூவை
கமலக் குயில்புணர் குயில்வர வருகுயில் கொட்டுக சப்பாணி
கரடக் கடமுமிழ் கடகரி வனமயில் கொட்டுக சப்பாணி. (௯)

வேறு.

196. மலையெனவளரிரு பாரப்பூண்முலை வனிதையர்குடைபனி நீர்கட்டாமரை
மலிமடுநடுவிரை வோடிப்பாயமி குத்தபெருக்காகி
வரிவளைவயிறுளை வாகிக்கான்மணி நிலவொளியலகினி லாவொப்பாகலின்
மலர்தருகயிரவ ஆறற்றேறன்ம ணத்தபணைக்கோடித்
தலைமடையகடுவி ராவிக்கிற்முண் மடலொம்சுலவிய தாழைத்தூர்முறி
தரவெறியலையொடு வேள்கைச்சாபவ னத்தைநனைத்தேறத்
தனியுருளிரதந டாவற்சார்பில னெழுபரிபசியமெய் கீறித்தோகைக
டழையவிணைளவிய தாலக்கானைம டித்துமுறுக்காலை
அலையெறிபிரசமி டாவிற்பாய்பொழு திரிசிறுதுளிபிர வாகக்காவிரி
யலைபடவொழுகிய வோதைக்கேயுண டுக்கமெடுத்தோடி
யருகொருகுளனிள மேதிச்சூன்முகி னிரைவிழவெருவுவ ரானெட்டேடவி
மூயல்வளர்கதலிகள் சாயப்பாசுநி றத்தமடற்பூகக் [வொடு
குலைமிடறொடிபட வானிற்போயதென் முதிர்பலனுதிர்தர மோதித்தா
குதிகொளும்வளமலி யானைக்காமயில் கொட்டுகசப்பாணி
குரைகழலடிபடி வாழ்விற்கூடிய மனனுடையவென்முடி மீதிற்சூடிய
குனிமதிலதிசடை யாருக்கோர்துணை கொட்டுகசப்பாணி. (௰)

௪.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

# ரு.—முத்தப்பருவம்.



197. கோதிக்குங் கலைச்செங் கொழுந்தழற்கட் குளிக்கு மெழுகொத் துருகியறக்-குழைந்து கசிந்து கரஞ்சிரமேற் குவித்துக் கொழுநாத் தழும்பேறத், துதிக்கு மடியா ருளக்கோயிற் றூண்டா விளக்கே மெய்ஞ்ஞானச்-சுடரே யமலச் சுடர்க்கொருவாத் துணையே யிணையின் மணியேயய, திதிக்கு மொருகா சிபற்கும் வருஞ் சிறுவர் பணிந்து கரங்கூப்புஞ் - சிலந்தி பணிந்த நகரில்வளர் செழும்பூங் கொம்பே சிரபுரச்சர், துதிக்கு முலைப்பான் முன்னளித்த தாயே முத்தந் தருகவே - சயிலத் தரசன் றவத்திலவ தரித்தாய் முத்தந் தருகவே. (க)

198. கன்னோ ருள்ளங் கரைந்துருகக் கரைவித் தொருபைந் தருவறைந்த
கருந்தா தாணி யெனக்கசிவு காணக் கடையேன் றனைப்புரந்த
பொன்னே பளகற் றொளிகாலும் பொல்லா மணியே மெய்ஞ்ஞானப்
பொருளே யருளொண் ணறுங்கமழும் பூத்த கொடியே பொற்கொம்பே
மின்னே மழலைப் பசுங்கிளியே வெள்ளோ திமமே கருங்குயிலே
வேம்பர் குடிக்கோர் செங்கரும்பே வெள்ளை நாவ லடிமுளைத்த
தன்னே ரிலிக்குத் துணைவருமென் றாயே முத்தந் தருகவே
சயிலத் தரசன் றவத்திலவ தரித்தாய் முத்தந் தருகவே. (உ)

199. பொங்குங் கருணைப் புதுவெள்ளப் புணரி யெழுந்து திரையெறிந்து
பொறிபோ னெறியி லுளஞ்செலுத்தாப் புனித வடியர் குழாமடுக்க
வெங்கும் பரந்து பெருக்கேற வெனையாள் வாத வூரடிக [கக்
ளியற்செந் தமிழி னமுதருந்து மெங்கோன் செவிகள் குளிர்தூங்
கொங்குந் திணர்கொள் பொங்கர்வனக் குயிலே பொருந்த மதர்நோக்கங்
கொள்ளா வதனங் கோட்டிநறுங் குதலை ததும்பப் பேசுநறுந்
தங்குங் குமுத மலர்வாயாற் றாயே முத்தந் தருகவே
தானப் பொருப்பு வனந்தழையத் தழைந்தாய் முத்தந் தருகவே. (ங)

200. போதார் நினது பொன்னடியிற் புரமூன் றெரித்த வெம்மிறைவன்
புலவி தீர்ப்பான் வணங்கமுடிப் பொலியுங் குடிலத் துகிர்க்கொடி
காதார் வளையுங் கமடமுமேற் காணப் பாந்து பெருக்கெடுத்த [யுங்
கங்கைப் புணரி நாறுமதிக் கலையைச் சிறிது கண்ணுற்று
மீதார் நாணுற் றவண்சிறிது மென்றாட் கமலஞ் சுருங்கமகிழ்
வேரிக் குமுத மலர்கடுப்ப வெள்ளி முறுவல் சிறிதரும்பும்
தாதார் தளவஞ் செறிவாயாற் றாயே முத்தந் தருகவே
தானப் பொருப்பு வனந்தழையத் தழைந்தாய் முத்தந் தருகவே. (ச)

201. வண்ணங் கரிய முகிலுயிர்த்த மணிமுத் தம்மே நீயுயிர்த்த
மணிமுன் றளர்ந்து பிணிக்கவுரு மாறிப் போன முத்தமலை
கண்ணம் புவரி முளைத்தமதி களிர்முத் தொளிர்முத் தமிழ்க்குரிய
நால்வர்க் கசைக்கு மைந்தலையுன் றூத னடிக டேய்த்தமுத்தம்

வெண்ணத் தமிழ்வெண் முத்துநெடு வேயின் முத்து நின்மு னெச்சில்
விரவி யிருப்ப தவையார்க்கு வேண்டு மடியேம் விரும்பிடநின்
றண்ணங் குமுத மலர்வாயாற் றயே முத்தந் தருகவே
தானப் பொருப்பு வனந்தழையத் தழைந்தாய் முத்தந் தருகவே. (கு)

வேறு.

202. கையடி புடைத்தெழு மருப்புப் பொருப்புக் களிற்றைக் கிழித்து நெடிய-கன்னலிற் கயலிற் கனன்றுநுத றுறுசெங் கட்டழலை யிட்டுமிடைவாய்ப், பையடியி னுனிவால் பொருந்திட மூறுக்கிவெம் பாம்பைப் பிணித்துமடல்வாய்-பரியவெறு ழிக்குறங் சோட்டினை முறித்தும் பயக்குருகி னிறகொடுங்கார், மை யடி படச்சடைக் காட்டினிடை போட்டுநின் மணவாள னென்னுமுக்கண்-வானவனிவ் வண்ணம்வெண் டாளங்க ளுக்கொவ்வொவ்வொர் மாசுறச் செய்தவத னல், மெய்யடியர் நசையாகி வேண்டுவன வருளுவைநின் வீழிவாய் முத்தமரு ளே-வெண்ணுவ லடிவளர் கரும்பினை விரும்புகொடி வீழிவாய் முத்தமருளே. ()

203. கடியவிழ் நானைக்கண்ட கப்பசிய நெட்டிலைக் கண்டலம் போது மதரக்-கள்ளூறு புன்னைமல ருங்குருவை யர்தாலி கட்டுங் களச்சிறுமியர், முடி மிசை சுமந்துவிலை கூறிட விடைக்கிடை முறங்குழைய வாரிவாரி - முருகுவிரி குழலருண வல்லிமுலை புலனுமெழின் மொய்ம்பனதி யாசன்மனையில், வெடி படு வராற்பட வுடற்றிருக நின்றலையில் வீசுவலை யுதையமதியம் - விரவவமு தள வலாற் றேன்சா றெனச்சொலியம் மீன்சாறு பருகுங்கருஞ், செமயுடல ரிறை யருளு முத்தமரு ளம்மையொரு செம்பவள முத்தமருளே - செம்புநா யகரிடம் விரும்புநா யகினது செம்பவள முத்த மருளே. (எ)

204. துடிகொண்ட கொடியிடை துவண்டுகுடி வாங்கச் சுரும்பர்பண் மிழற்றுங்கருஞ்-சுருளோதி யிமயமா தேவிகச் சிட்டுச் சுமந்தமுலை மந்தாத்திற், கடிகொண்ட வெண்டரள நிலவொளி நிலாவெனக் காலுமொளி கிரணமென்னக்-கருதிச் சகோரம் புகுந்தது கடுப்பவொண் கவினுசி மோதியர்களும், படிகொண்ட திவலையென முத்தொன்று தூங்குமப் பைங்குமிழ்த் துண்ட மொளிர்சண் - பக மென நினைந்துவிழி வண்டுகடை பிறழப் பசுங்குதலை வாய்மடுத்துக், குடி கொண்ட பாலருவி யுண்டசிறு பெண்பிள்ளை கொவ்வைவாய் முத்தமருளே - கொம்புவரை பம்புவன வம்பிகை விரும்பிநின் கொவ்வைவாய் முத்தமருளே. ()

வேறு.

205. வெப்பவ னற்சினம் வைத்த தரக்கையு ரித்தவ தட்புனையா
விட்பர வப்படி மட்சுவை பெற்றக ணைப்புற னிட்டெழிலார்
தப்பின்ம திக்கலை நெக்குவி திர்த்தமு தத்தையு குத்திடவோ
தப்புனல் வெட்கம ருத்தையெ டுத்தயில் கட்செவி யைப்பிணியாத்
துப்புறழ் பொற்சடை யைச்சுமை கட்டியி றக்கிமு டித்தொளிகா
றுத்திய ரக்கயி றிட்டுவ ளைத்தொரு பொற்கிரி யைச்சுமவா
முப்புர முற்றெறு முத்தரி டத்தவள் முத்தம ளித்தருளே
முத்திய ளித்திடு மத்திய னத்தவள் முத்தம ளித்தருளே. (க)

வேறு.

206. சிரபுரச்சர் தநிதழைக்க முலைகொடுத்த தலைவிமுத்தந் தருகவே
திருமகட்குங் கலைமகட்கு மெழில்சிறக்கு மிறைவிமுத்தந் தருகவே
தரணிமுற்றுந் தனிதழைக்க வணிபுரக்கு மமலைமுத்தந் தருகவே
சடைமுடித்தும் பியையிருப்ப முடனுயிர்த்த விமலைமுத்தந் தருகவே
மரகதப்பொன் சிமயவெற்பு நிகர்தழைக்கும் வடிவிமுத்தந் தருகவே
மழைமுகிற்கண் டெழுபசுத்த மடமயிற்கு நிகரண் முத்தந் தருகவே
உரகபொற்கங் கணரிடத்து மருவுசத்தி கவுரிமுத்தந் தருகவே
உரலடிக்குஞ் சரவனத்து மௌனதளத்து முறைவள் முத்தந்தருகவே.()

௫.—முத்தப்பருவம் முற்றிற்று.

## சா.—வாரானைப்பருவம்.



207. செம்பொற் பிறங்கலை வலஞ்சூழு மமுதவெண் டிங்கள்செங் கருங்கட் - செவியஞ்சி யாம்பல்புக் கொளிகால்வ தெனநின்வாய்த் தெண்ணிலா முறுவல்பூப்பக், கம்பக் களிற்றுரியர் கட்சுடரி லங்கியைக் கைத்தலையிருத்தி மதியைக் - கங்கைமுடி வைத்தல்போல் வையாமை கண்டுசெங் கதிர்நினது செவிபுகுந்தோர், கும்பத்த னஞ்சடை யிடைக்கரந் தார்நின து கொழுநரென மொழிதலேய்ப்பக் - குழைத்தோ டிலங்கமணி மேகலை சிலம்பக் குழைந் திளங் கொடிதளாட, அம்பொற் சிலம்பலறி முரலவுர லடிவனத் தமரிளம் பிடிவருகவே - அகிலாண்ட முழுவது முயிர்த்துமெழின் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே. (க)

208. வெஞ்சின முறுத்திப் பதங்கனெண் கிரணவாள் வீசித் துணிக்க வீந்து - வீந்தெழு மிராக்குல மிகற்களித் திடுபாக்கவ் விரிசுடர்க் குறவுபூண்ட, கஞ்சமலர் முன்பணிபு முறையிடுத லேய்ப்பவவிர் கனகலோ கதரிவைமார் - கழல்பெயர்க் குந்தொறு மளிகுல முழக்குதங் காரளக பாரமோதக், குஞ்சர வதட்பரமர் கோமர முடிகண்டு கொள்வான் விரும்பியதலாற் - கோலநடை பயில்வதுங் கற்பான் விரும்பியெழில் கூர்மென் சிறைப்பவளவாய், அஞ்சநின் னடிதொடரும் வண்ணமுர லடிவனத் தமரிளம் பிடிவருகவே - அகிலாண்ட முழுவது முயிர்த்துமெழின் முதிரமுதி ராதபூங் கொடிவருகவே. (உ)

209. எண்ணரிய செஞ்சடை முடங்கற் கலாநிலவொ டெறுழிவெண் கோடிணைப்ப-வெழும்வெள்ளி முழுமதி யெனக்கொடிய வெட்டரா வெட்டிக் கழுத்தைநீட்டி, வண்ணமிகு நின்சாயல் கண்டுள நடுங்கிமரை மலரோன் றலைப்புகுங்கால் - வாலினடி யுண்டசிற் றிடையுடைத் தண்ணுமைவிண் மண்செவிடு படவிரட்டத், தண்ணமுத மதிமான் வெருண்டிட மருண்டுகைத் தனிமானெழுந்து துள்ளத் - தழையயறு கெடுத்து நீ வாவெனுமு னின்விழி தனைக்கண் டொடுங்க வெனையாள், அண்ணலிட மொருவியப் பயருமுர லடிவனத் தமரிளம் பிடி வருகவே - அகிலாண்ட முழுவதுமுயிர்த்துமெழின் முதிரமுதி ராதபூங் கொடி வருகவே. (௩)

**210.** கடியவிள ஞாயிறு கடுப்பவவிர் மணியணிக் கற்றையொளி சுற்ற வற்றுக் - சட்கடல் பிறந்தகரு வைப்புணரி நீத்தமெழு கடன்முடை திரந்த தேய்ப்பக், கொடியன மருங்குலரு இந்துவண் டெய்த்துகனி குடிவாங்கி யேங்கவீங்கும் - கொங்கைகள் சுமந்தமட வார்தனி வராருயிர்க் கொழுநர் விட் டென்பதால்வெண், பொடிவிரவு செம்புய மலைக்கட் கொலைத்தொழிற் பொங்குவெங் காரிபில்கும் - புழைவா ளெயிற்றரவு பூண்டமுக் கட்டிரி புராந் தகக் கொழுநர்துணைகொண், டடியர்பிடி தீரவரு மமுதமுர லடிவனத் தம ரிளம் பிடிவருகவே - அகிலாண்ட முழுவது முயிர்த்துமெழின் முதிரமுதி ராத பூங் கொடிவருகவே. (ச)

**211.** கடக்குஞ்ச ரங்கடவு மொலியுமிளை யோர்நடவு கவணவாம் பரியமலை யுங் - கரியவிருள் சரியச் சிவந்துதய மெழுமெழு கடும்பரிக் கவரியேபோ,னடக் குக் தடங்தே ருருட்டரவ முங்கடி நலங்கெழு மியத்தமரமு - நளிர்முத் தலைக் கடலு மிடலுடைக் கருமஞ்சு நாணத் தடிக்கும்வேலை, வடக்குங் குமக்கொங் கை மாதரெழி லானறு மலர்ப்பகழி யானைவென்ற - மைந்தரோ டேச் சினந் தொளிர் மணிப்பணிகண் மறுகெறிய வெழுமோதையே, யடக்குந் திருப்பொடி வளங்கொளுர லடிவனத் தமரிளம் பிடிவருகவே - யகிலாண்ட முழுவது முயிர் த்துமெழின் முதிரமுதி ராத பூங்கொடி வருகவே. (ரு)

வே று.

**212.** பொன்னைப் புணரு மகன்மார்பப் புயலும் புயறேய் கடலுலகம்
பூத்த சுருதி காத்தவனும் போற்றி போற்றி யெனத்தோற்றி
மின்னைப்பொருவு நுசுப்பொசிய விலங்கற் பொருவு முலைசுமந்த
மின்னார் மாயக் கடல்வீழ்ந்து வெறும்பொய் யுடலை வேட்டுவந்த
என்னைத் தனது வசமாக்கி யிறப்புப் பிறப்பென் கடல்வீழா [தோர்
தெடுத்துத் தடுத்தாட் கொண்டவண்ட ரிறைக்கு மிதழி யிலம்பகத்
மன்னைத் தனது வசமாக்கு மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே. (சு)

**213.** பருத்தா ரமுங்குங் குமச்சேறும் பம்ப விணங்கிச் சுணங்கரும்பப்
பணைத்துத் தடித்துப் புடைத்தமுலைப் பாரஞ் சுமந்த கொடியசையத்
தருத்தா மூலகு முதலான சகல வுலகுஞ் சராசரமுஞ்
சற்றே யசைய வசைவில்லான் றானு மசையச் சுரர்க்கமுத
மருத்தா விடமுண் டுவந்தவந்த வையன் காந்தொட் டிடச்சிலைமே
லலரிபுரையுஞ் சிலம்பவிர வலர்ந்த வடியேன் முடிக்கேற
மருத்தா மரைமென் மலர்பெயர்த்து மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே. (எ)

**214.** வேலை யலம்பக் கருஞ்சுரும்பர் விளரி யலம்பி முளரிவிட்டு
மென்பூங் குமுத வீயலம்ப விரியஞ் சிறகர்க் குருகினங்கள்
காலை யலம்பப் பொலிகதிர்மேற் கடல்போய் விழவெள் ளியகிலவுக்
கற்றை பரப்பு மதியைமுக கமலங் காட்டி வாட்டியபூஞ்

சோலை யலம்பும் பைங்கிளியே சுகமா ரின்பப் பெருங்கடலே
சொல்லற் கரிய மறைப்பொருளே துளிக்கும் பிரசத் துளபநறு
மாலை யலம்புங் குயிற்கிளைய மயிலே வருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே. (அ)

215. ஒன்றுந் திமிரக் கருளறவென் னுள்ளத் தொளிரு மொளிவிளக்கே
யுருகிப் பெருகுங் கண்ணீரென் னுததி யழுந்திப் பதைபதைத்துக்
கன்றுமடியா ருளத்தின்பங் கனியக் கனியு மெய்ஞ்ஞானக்
கனியே கனியா நவரசமுங் கலந்து காட்டுஞ் செழுந்தேனே [கு
என்று புரையு மணிப்பொறைகொண் டெழும்பூங் கொம்பே யிரைத்தெடுக்
மின்பப் பெருக்கே முருக்கவிர்மெல் லிதழ்ப்பூங் குயிலே யிமைக்குமம்
மன்று ணடனத் தனையாட்டு மயிலே வருக வருகவே [பொன்
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே. (கூ)

216. பொன்னே வருக மூவுலகும் பூத்தாய் வருக நாயேனைப்
புரந்தாய் வருக வழுதியர்கோன் புதல்வீ வருக முகிற்கிளைய
மின்னே வருக மெய்ஞ்ஞான விளக்கே வருக மறைநான்கின்
விரிவே வருக பேரின்ப விளைவே வருக மிகுங்கருணை
யன்னே வருக வகநெகுவார்க் கணியே வருக வலர்மடவார்க்
கரசே வருக வுரைப்பருஞ்சீ ரம்மே வருக வழற்கரத்து
மன்னே ருடலம் பகிர்ந்தவிள மயிலேவருக வருகவே
மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே. (௧௦)

௬.—வாரானைப்பருவம் முற்றிற்று.

# எ.—அம்புலிப்பருவம்.



217. புன்னைவீ யார்தரு நெடுங்கோட்டு மோதிப் பொருங்கட லுதித்த லானும்-புன்சிறு மதிச்சிறு விதிக்குறவு பூண்டுபின் போதப் பகைத்தலானும், பின்னைவாழ் செந்தா மரைக்கோயில் சாயவொளி பெறுமுகங் காட்டலானும் - பெட்பினிம மாதிரந் தவழவர லானும்வெம் பேய்க்கூத் துவந்தபெருமான், மின்னையேய் செஞ்சடை முடிப்பொங்கு கங்கைமகள் வெருவர வுழக்கலானும்- வேம்பர்கள் குலம்புகழ வருதலா னுங்குலவி விளையாட நின்னையெங்கள், அன்னைவா வென்றன டனக்கொப் பெனக்கருதி யம்புலீ யாடவாவே - அம்பு வன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (௧)

218. தும்பியுரி போர்த்தவ ருடற்பாதி கொள்ளலாற் றுள்ளுமீ னுதரித் துத் - தோன்றலா லத்திரி தவத்திற் பிறத்தலாற் றுகடீர் குணம்பொலிதலால், வெம்பிவரு செங்கதிர் கரந்திடப் பூணொளி விரித்தலாற் குமுறுசங்க - மேகத் திடன்றேன் றி வருதலாற் குமுதவாய்விரியவெண் ணகைகாட்டலாற், பம்பியு

பிய சுரர்க்கமு தளித்தலால் வெள்ளிப் பருஉமுத் துயிர்த்தலானால் - பகரநிகு னென்சே யளித்தலாற் றண்ணளி பயத்தலாற் கலைநிலாவெழ, மம்பிகை நினக்குநிக ராகா திராள்குலவி யம்புலீ யாடவாவே - யம்புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (௨)

219. இலைவந்த கமலந் திரட்டலல் லாதுதிரை யெற்று கமலநதிரட்டா-யெழிலாம்பல் பூத்துவரு வாயன்றி யொருமருப் பேராம்பல் பூத்துவாராய், கொலைவந்த நாகத்தி னுககமுத மல்லாது குளிர்நாக வமுதமாகாய்-கொம்பனைய ருக்காசை தரலன்றி யெண்மருங் குடிகொள்ளு மாசைதாராய், கலைவந்த நிறை மதி லெனப்பொலிவை யடியரைக் காக்குநிறை மதியுமுளதோ - கயிரவ நகைக் கவரு கருளொளி நினக்குமிக் காளிவளஃ தறியாய்கொலோ, அலைவந்த கங்கை தொழு மலைவந்த மங்கையுட னம்புலீ யாடவாவே - அம்புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (௩)

220. மத்தமத வானைமுலை மணமாதர் வாய்பேசு வசைகளேற் றுத்திரிந் தாய் - மாலெச்சி லைச்சுற்று முனியெச்சி றேன்றியொரு மாசுணத் தெச்சிலா னாய், தத்தம துளப்படி சகம்பேச வாசான் றனக்கும் பிழைத்துநின்றாய் - தண்கலை நிலாவெனப் பலர்வெறுக் கக்கதிர்செல் சமயந் தெரிந்துவருவா, யித் தனை களங்கநின் பாற்பொதிதல் கண்டுமோ ரேசிலா ளைக்கூவியாங் - கெங்கள் பெருமாட்டிநினை வாவெனக் கூவிட வியற்றுமா தவமென்முனெம், அத்தர்கயி லாசரமு தீசர்மண வாட்டியுட னம்புலீ யாடவாவே - அம்புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (௪)

221. நீரேற்ற தெண்கட லுயிர்த்தபரி வாற்சொரிக ணீரென்ன வாரமிறை யா - நெட்டுடல் விடப்பட வராக்கதுவு மேயென நினைந்துவாய் விட்டலறவுஞ், சீரேற்ற வெண்சம்பு வின்கொம்டர் வைத்ததீந் தேனிறு லென்றுடனகர்ச் - சிறு பிடிக் குதவப் பெருங்களிறு பற்றவுந் தேவர்கள் பிழிந்தெறியவுந், காரேற்ற ககனத் துதித்திராக் கதிரெனக் கலைவலோர் புகல்வதுண்மை - காட்டுவா னுட்குநாட் டேய்ந்தொழியு நின்னையுங் கருணையின் வரக்கூவினாள், ஆரேற்ற குடிலப் பிரான்மகிழ் பிராட்டியுட னம்புலீ யாடவாவே-அம்புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (௫)

222. சுமையாக மாசுண முடித்தாங்கு குவலயஞ் சூழ்தெண் கடற் புகுதியேற் - றேகைபில வீன்றவொரு குழலிகதிர் வேற்படை சுவற்றுமென் றுளம்வெருவுவாய், கமையார் தவப்பொதியின் முனிவருவ னெனவுங் கலங்கு வாய் விண்புகுதியேற் - கருணை லயற்குநிழ லீயும்வெண் ணுவலின் கவடுரிஞ் சத்தேய்குவா, யிமையாத முக்கணப் பரனேக்கி னுஞ்சடை யினும்பொலிதி யேலிமைக்கு - மிவள்கரங் கால்பட வருந்துவை யிவண்சேர்வை யென்னினிற் கொப்புயார்நிற், கமையாத நலனென்று மின்றுதுன் றேதியுட னம்புலீ யாட வாவே - அம்புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே.()

223. பூவேறு நான்முகப் புத்தே டிலோத்தமை புணர்ந்தமா பாதகமும் வெவ்வ, போதக நடாத்திச் சிலம்புகள் புலம்பவிறை போக்குங்க ணுக்கையற்குஞ்,

காவேறு மழைமுகில் கடுக்குமெழில் வண்ணனென் கண்ணனுக் குங்கொள் பிரம - கத்திபு மகற்றியவோ ரித்தலத் தின்பெருமை கருதிலாய் போதுமோ ரேழ், மாவேறு தேர்க்கதிர் திறக்கரின் னொருதங்கை வாழ்மனை யடைக்குநீயிம்-மாஞான பூமியிடை வருதியே னின்றேய்வு மாறலோர் பெரிதன்றுகாண், ஆவேறு கொடியுளார்க் காசையேற் றங்கொடியோ டம்புலீ யாடவாவே - அம் புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (எ)

224. மனையார் நெடுங்கொடிக ளாலகல் விசும்புபடு மாசொருவு மித்த லனின்மெய்ம் - மாசொருவ லரிதன்றோர் குழவியாற் கடல்விட்ட மாலினி துறங்கச் செயுஞ், சினையார் நறும்புன்னை நீழல்விரி நின்பெயர்த் தீம்புன லிரா முழுதும்விண் - டெருவா றலைந்துகண் டுயிலாத நின்குறைவு தீர்ப்பதரி தன்று தாணி, தனையா யிரங்கதிர்கொ ளெனவளித் தருண்மூர்த்தி தப்புநின் கதிர்க ணிறையத் - தருவதரி தன்றிவை யுணர்ந்திமய மகளாயொர் சங்கமுகி றங்கை யாயென், அனையாய் நனைச்சூலி மனையாய்ப் பொலிந்தவளொ டம்புலீ யாட வாவே - அம்புவன மும்மைதரு சம்புவன் வம்மையுட னம்புலீயாடவே. (அ)

225. சேலையலை யெற்றுநெடு வேலையுல கத்தர்வெஞ் சிலையைனற் கொப் புளிக்குஞ்-செங்கட் கடைத்திறற் சிங்கப் பெயர்ச்செழுந் திங்கட் சிறக்குமொரு நாட்,காலைமுத லாகமறு காலையள வுங்கறைக் காலொரு மருப்புமுக்கட்-கடவார ணப்பூசை யயராது கண்ணுறக் கடவதன் றென்றிகழ்வதும், வேலையடும் விழி மாதர் முறையிம்ம் போதுசிறு விதிதந்த கயரோகமும் - விட்டொருவு ஞான் றின் றடுத்தது கயக்காவும் வெறுமையே னுள்ளமுந்தன், ஆலைய மெனக்குடி புகுந்தபெரு மாட்டியுட னம்புலீ யாடவாவே - அம்புவன மும்மைதரு சம்பு வன வம்மையுட னம்புலீ யாடவாவே. (கூ)

226. வாவென்று கூவுமுனம் வந்திலை யெனச்சினம் வருங்கொலென் றஞ்சி வஞ்சி - வாண்மணிநி னகைநாணி யோசடை தனக்கொவா மாசுண மெ னக்கருதியோ, தாவென் றுலாயதென வணிமணிப் பணியொளி தழைப்பது தெரிந்தஞ்சியோ - சற்றிருந் தனனென விலக்கின முனிந்திடிற் றடைசெய்வா ரெவரதன்றிச், சோவென்ற புன்னகையர் பின்னக வராவொன்று தூண்டி னும் போதுமோதுங் - துணையடி மறந்தனைகொ லினியெங்கண் மேற்பழி சொலக்கரு திடேலயிலமட்,காவென்ற கொண்டன்முன் வரப்பின்வரு பூங்கொம் பொ டம்புலீயாடவே - அம்புவன மும்மைதரு சம்புவன வம்மையுட னம்புலீ யாடவாவே. (௧௦)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

# அ.—அம்மானைப்பருவம்.



227. விரிநறை யிதழ்ப்பொலி மரைக்கட் பெருக்கெழு விரைக்கட் குடித்தெழுந்த - மென்சிறைப் பமரங்கண் மேற்கடி தழுக்காது மேவிமற் றோர் கமலம் வாழ், வரியிறைத் தும்பிக டொடர்ந்தென முகத்தவிர்நின் வாள்விழி

தொடர்ந்திடப்பொன் - வளர்சடை முடிக்கூனிலாப்புனையு மெம்பிரான் வளரிர சதப்பொருப்பும், பரியவுர லடியுடைப் பொன்னுலகு வாழ்வீர பட்டப்பொருப்பு நீலப் - பைம்பொருப் பாகவெளி பம்பவெகி னஞ்சிகிப் பண்புறக் கருடிரண்டோர், அரியொளிதன் மேற்பாய்வ போலநீ லங்குயிற் றம்மானையாடியருளே-அத்திவன வுத்தம ரிடத்தமர் பசுத்தகொடி யம்மானை யாடியருளே.(க)

228. பங்கய மலர்ப்பொலியும் வெள்ளிமணி துள்ளிமீப் பாய்ந்ததுகடுப் பவமார் - பைந்தருவி லரிதுகொளு மென்றநா வற்கனி பறித்தெறித லேய்ப் பவலைவெண், சங்கலர் பெருஞ்சலதி மங்கையிடை தங்கியொரு தண்சுடரெழுந்த தொப்பச் - சலிலந் திரட்டியது விரியாது தெரியத் தடக்கைமாற் றுதனிகர்ப்பக், கொங்கலர் செழுங்கற் பரும்பா லசைத்தவொளி குலவுபங் தாடலுறழ்ங் - கூட்டவிரு ளோட்டுத றெரிந்திரவி வெப்பங் கொளப்பயனி லெனையஞ்சலென், அங்கையி னெடுத்துநித் திலமன்றி மற்றிலா வம்மானை யாடியருளே - அத்திவன வுத்தம ரிடத்தமர் பசுத்தகொடி யம்மானை யாடியருளே. (உ)

229. பன்னக நெடும்பாய்க் கருஞ்சுன் முகிற்கதிர்ப் படலைமார் பத்துமணியும் - பரியவுர லடிமுக் கடாத்தவள யானையான் பதிவதியு மணியும் வாங்கி,மன்னருட் பொலிபுமுப் பத்துமுக் கோடிநப வாணர்மா னவர்யாரெனுமனநசை யுடைத்தெனிற் கொண்மின்கொண் மின்னென வழங்குதல் கடுப்பவன்னை, நின்னயன விணையோடு மேல்சென்று கீழ்படிய நெடியகோ டீரப்பிராணொஞ்சக் கலன்றரு மணிக்குவை திரட்டியெறி நீர்மைபோன் மென்னடையைவெள், அன்னமறி யத்தனி நடக்குமயில செக்கர்மணி யம்மானை யாடியருளே - அத்திவன வுத்தம ரிடத்தமர் பசுத்தகொடி யம்மானை யாடியருளே. (௩)

230. கம்பமிட றுங்கடக் கரியுரியை யங்கக் கபாபெனக் கண்டவெண் டோட்-கண்ணுதல் சடாடவிச் செம்மைமிக ராயினுங் காற்சிவப் பானநீநம், வம்பலரு மாம்பற் சிவப்பினை யெனப்பொற வாய்க்குமிரு கைவிரற்கு - மானமாட் டாயென் றெடுத்தெறிவ போலவும்வெள் வளைமருவு குணகடலெனுங், கொம்பனரி னம்மனை நினக்கருளம் மனையெனக் குலவிப் படர்ந்தபவளக்-கொடியினை விலக்கியெழு செங்கதிர் கடுப்பவுங் குழையினை யடர்ந்துமோதும், அம்பன கருங்கட் பசுந்தோகை செம்பவள வம்மானை யாடியருளே - அத்திவன வுத்தம ரிடத்தமர் பசுத்தகொடி யம்மானை யாடியருளே. (௪)

231. எங்கள்பெரு மானடி முடிக்காண்ப லெனவும்ப ரெட்டிமுட் டிப்பறந்து - மிருநில மிடந்துநனி யெய்த்தவரை யேய்த்தன ரெனப்பல ருரைப்பமுளரி,மங்கைநின தம்மனைகை பற்றமுடி யாமையால் வாளாவிருப்பமறைமின்வாக்குடைய னாதலிற் கைப்படா முன்னமிது வவ்வினே னெனவுரைத்துச், செங்கையி னுறப்பற் றிடாதுவெங் காமமுஞ் சினமுமொரு வீர்வொருதவன் - றெளிவந்த மாதவர்மு னுணல்போ னுணிய திருப்பெனுட னுண்கொள்ளநின், அங்கையி னுறத்தோ டசைந்தாட வனையாட வம்மானை யாடியருளே-அத்திவன வுத்தம ரிடத்தமர் பசுத்தகொடி யம்மானை யாடியருளே. (௫)

## வேறு.

232. குரும்பை யனைய பொம்மன்முலைக் கொடிநுண் ணிடையார் கொழுநரொடுங் - கூடிக் கலவி யயர்ந்தவிரைக் கொழுநாண் மலர்மென் மாலை யொடு, மிரும்பை யரவ முயிர்த்தசுட ரெறியு மணிமாலையும்வெறுப்புற் - றெறி யச் சிதறி மறுகினிடை யிமைக்கு மணியைக் குரீஇயினங்கள், சுரும்பை யகலா மலர்த்தருவிற் றொடுத்த சிறுகூட் டுய்க்கவெழுந் - சுடர்போய்த் தூய்மா னத வாவி துன்னுஞ் செழும்பா சடைக்கமல, அரும்பை மலர்த்தும் பெருஞ்சோ ணாட் டரசா டுகபொன் னம்மனையே-அமுதப் பெருமா னொடுவரும்பெண் ணமு தா டுகபொன் னம்மனையே. (சு)

233. கள்ள முளரிப் போதின்முகங் கருகிப் படுத்த செம்மல்கழீஇக் - கவினு ணறவ மலர்மேய்ந்து கடைவரய் குதட்டும் புனிற்றெருமை, வள்ள மனைய வாய்க்குமுத மடுவை யுழக்கி நெடுங்கோட்டு - வளர்தென் னருகுற் றுடற்றினவு மாற்ற வுரிஞ்ச வுதிர்பழமாத், துள்ள வுருளொன் றுடைக்கவரி துளங்க வருணன் றலைமோதித் - துடித்து விழக்கூன் குலைசாய்த்துத் தோட் டுக் கதலி தலைசாய்க்கும், அள்ளல் வயல்சேர் பெருஞ்சோணாட் டரசா டுக பொன் னம்மனையே - அமுதப் பெருமா னொடுவரும்பெண் ணமுதா டுகபொன் னம்மனையே. (எ)

234. பாரப் புறமுட் கனியிழிந்த பசுந்தேன் சாறு திரையெறிந்து
பரவை புரையப் பெருகிநெடும் படப்பை தொறும்புக் குலவமட
லீரக் கதலிக் குலமுமிடற் றேந்துங் குலைச்செங் காய்ப்பசிய [யப்பால்
விளமென் கமுகு முதிர்சுவைநெட் டிலைக்கன் னலும்வா னெட்டி
வீரக் குலிசப் படைக்கடவுள் வெய்ய தழல்கட் கடைக்காட்டும்
விறன்மா மடங்க லாதனத்து வியன்மண் டபத்துக் கலங்காரம்
ஆரப் பொலியும் பெருஞ்சோணாட் டரசா டுகபொன் னம்மனையே [யே.()
அமுதப் பெருமா னொடுவரும்பெண் ணமுதா டுகபொன் னம்மனை

235. வாக்கும் பிரசச் செழுங்கொழுநாண் மலர்பெய் நறவ மலர்கொய்யும்
வண்மைத் தருமென் மலர்த்தேன்வாய் வைத்துக் குடித்துக் குமட்
காக்குந் தகரக் கரியகுழற் கடவுட் சாதி மகளிர்முலை [டளிகள்
கழுவி யிழிந்து நெற்சூட்டுக் கழனி புகுந்து வண்டலிட்டுப்
போக்கும் வரவு நீக்குமலைப் புனற்செங் கமல முகுத்ததுகட்
பொதியுங் கரைத்துக் கால்வழிபோய்ப் புணரி நான்கு மூன்றையுமே
டாக்கும் பொழிலார் பெருஞ்சோணாட் டரசா டுகபொன் னம்மனையே
அமுதப் பெருமா னொடுவரும்பெண் ணமுதாடுகபொன் னம்மனையே.()

236. புடைக்குங் களபக் குரும்பைமுலைப் பொலம்பூங் கொம்ப ரன்னா மின்னார் - பொலியுங் கனக வெயில்பரப்பும் புரவு மணிசின் றொளிர்மனைமீத், கிடைக்குங் கடவுண் மயன்மதவெண் கிரிசா டமைத்துத் தெளிர்தமைத்த - ளிர்கொள் பளிக்கு வேதிகைமேற் கெழும விருந்தஞ் சனம்விழிவாட், படை

க்கு கறுஞ்சிக் தாறுதற்கும் பம்ப வெழுதி யெழுக்கமஞ்சூற் - பசுஞ்செல் லளக மூதறமணப் பலகுப் பையும்வீழ்க் தொருவான்யா, றடைக்கும் வள மைப் பெருஞ்சோணாட் டரசா டுகபொன் னம்மனையே - அமுதப் பெருமா னொடு வரும்பெண் ணமுதா டுகபொன் னம்மனையே. (௰)

அ.—அம்மானைப்பருவம் முற்றிற்று.

# கூ—நீராடற்பருவம்.



237. வேதமொரு நான்குநெடு காட்டுருவி யுந்தெரிவில் மெய்ப்பரம் பொருள்வடிவமா - விரிபுவன் மலிந்துள வெனச்செங் கரங்கொடு வியப்பிற் றிரட்டிடாமே, மாதவனென் முன்னவற் காமென்ன மூரிவளை வாரிக் குவித் திடாமே - மழைமத மொழுக்குகர டக்கறை யடிகளென்றோர் வண்கோடு நாடி டாமே, தாதவி மூலங்கலர மாதர்மான் மதநாறு தண்டரள மாலைசூட்டித் - தத் தங் குயத்தைநனி யெள்ளக் குரும்பைகொடு தாழைவா னோங்கிநிற்கும், போதக வனங்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே - பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே. (க)

238. நிகரறு பிறங்கற் பிறந்துமக் தாகினி நெடுங்கவலை யுறவெழுந்து - நிரைமலர்க் கொன்றைதா ளுந்திக் கயற்கொடிவி ணேசிக்க விபுலைகடவா, மகர மூல வுங்கடலி னுஞ்சென்று விளையாடி வனசநீ லங்குமுதமென் - மலர்பூத்து நின்போ லிருந்தது மலாலம்மை வரவேற்று நின்றவதனுற், பகரரிய செங்கதிர்ப் புத்தேள் வலஞ்சூழ் பசும்பொற் பிறங்கலென்னப் - பரவிவலம் வரவெண் டிகைத்தலை விழுங்கிவிண் பாய்ந்துபொலி யுங்கோபுரப், புகர்முக வனங்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே - பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே. (உ)

239. கயலார் மணிக்குவை கொழித்துச் சுழித்துவரு கங்கா நதிக்கு நினது - காறேய வீறுய தன்மேனி முழுதுமென் கண்டோய யான்பெறுவ தான், மயலார் மலப்பகை யலப்பிய தலைபொதி மலைக்குறு முனிக்குமின்று, மகிழ்வெய்து மெனல்போ லிரைத்துத் திரைக்கைகொடு வம்மென வழைத்த வதனுல், வயலார் மலர்த்தட னுழக்கிப பழுக்குலை மரத்துத் தகட்டகட்டு - வாளை தாய் வானதிச் சுறவொடுற வாகும்வள மதம்மதக் கரடகும்பப், புயலார் வனங்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே - பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே. (௩)

240. முறைபுகும் வழக்கா திழுக்காது கோலோச்சு முருகாத்தி யப யன்மகிழ - முடியிலவெள் ளென்பையே கொத்தார மிட்டவரை முத்தாரமிட்ட வதனுன், மறைபுகு மணித்தாலர் மூக்குறும் பற்றவர் மருந்தண வறுதவாயர் - வாழ்த்துவது மன்றிநின் னொருகளி றுளத்துள்ளும் வழியொழுகி நிற்புதாற்செ

நறைபுகு மலங்கலசை திண்டோளர் மந்தர நகும்பரூஉ மார்பமுருவு - நிற்
கொடியர் மாட்டுத் துகிற்கொடிகள் போய்வா னதிப்புனலை நக்குமொருகைப்,
பொறைபுகும் வனங்குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே -
பொருமானை வைத்தகைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே. (௪)

241. மழைமா நறுங்குழற் கடவுண்மட வார்புடை வளைந்துசூ ழப்பெ
ருந்தா - மரைமல ரிருந்தநறு விரைமல ரலங்கலிரு மாதர்நின் பாதமேத்தக்,
குழைமா நறுங்கலவை காசறைச் சாந்தினொடு குங்கும மளாயதோயம் - குண
கடல் கலந்ததி னெழும்பருதி சேப்பமென் கொம்பர்போ லிடைநுடங்கத்,தழை
மா'வுறுங்கனி நறுங்கனி யுகுத்ததேஞ் சாறுபாய் நாறுநெடுவான் - நடவிப்
பசும்புரவி கடவிச் செலுங்கதிர்ச் சாமரை யெனப்படுங்கைப், புழைமா வனங்
குடி புகுந்தமென் காமர்பிடி பொன்னிநீ ராடியருளே - பொருமானை வைத்த
கைப் பெருமானை மருவுமான் பொன்னிநீ ராடியருளே. (௫)

வேறு.

242. படைவிழி கண்டு மருண்டு வெருண்டு பதுங்கிக் கயலொழியப்
பணியணி கண்டங் கண்ட கமஞ்சூற் பணில முரன்றொழியக்
குடைதொறு மொருபிடி யிடையு மிலங்கு குழைக்கா தும்பாராக் [ளக்
கொள்ளைக் கொடிகண்மென் வள்ளைக் கொடியொடு கூடி வணங்கல்கொ
கடைவிழி விடையவர் சடையிவர் மாதைக் காதும் போதுறுதல்
காட்டத் துப்பன வோட்டம் விளர்ப்பக் கருணைக் கொடிநின்றூர்த்
தொடையலர் சென்னிச் சென்னிப் பொன்னித் துறைநீ ராடுகவே
தும்பி வனத்துறை யம்பிகை பொன்னித் துறைநீ ராடுகவே. (௬)

243. தூவி யனம்பல சூழ்தர நின்றவொர் தோகை மயில்போன்றுஞ்
சுடரு முடுக்க ணடுக்க ணடுத்தவொர் தூமதி யம்போன்றுங்
காவி நெடுங்க ணடுங்கு மருங்குற் கடவுட் சாதியின்வாழ்
கவின்மட வார்புடை சூழ மலர்ந்தொளிர் கருணைக் கொடிநின்றேர்
மேவிய துங்கக் கொங்கைகள் கண்டு மிகும்புற் புதமுடையா
விரியச் சுரிகுழல் சரியப் பிரிய மிகுங்கலை வல்லோர்செக்
நாவிரி பாவிரி பூவிரி காவிரி நன்னீ ராடுகவே
நாகா டவியமர் தோகாய் காவிரி நன்னீ ராடுகவே. (௭)

244. மாமயின் மணியுமிழ் சுரிவளை நின்கர வரிவளை போற்குளிற
மண்குழை யும்படி வருநீர்ப் பூங்குழை வண்குழை போலாடக்
காமர் திருக்கை யெனப்பல திருக்கை கவர்த்த முழக்கல்செயக்
காஞ்சி யொதுங்குதல் போலத் தழைகெழு காஞ்சி யொதுங்கல்கொளத்
தேமல ரிதழென வெண்ணகை யொளியாற் செம்மல ரிதழ்வெளிறச்
செறிகா ரோதி யெனப்புன லுண்டு செழுங்கா ரோதியுறப்
பூமக ளுமைகள் கோமகள் பொன்னிப் புதுநீ ராடுகவே
பூவலர் சம்பு வனத்தவள் பொன்னிப் புதுநீ ராடுகவே. (௮)

வே று.

245. சேற்று முளைத்த மரைமலர்த்துஞ் செங்கே ழிரவி வரவுகவாச்
செறியுஞ் சுடர்க்காஞ் சனநாட்டுத் தெய்வச் சாதி மகளிர்கரு
றூற்று மலர்க்கற் பகமாலை யுயர்தோட் கொழுந ருடன்பவனி
யுலவும் பொழுதம் மடமாத ருடுத்த நுண்டு சொருங்கானை
வேற்று நிதம்ப முதலவுறுப் பெல்லா மெளிது வெளிப்படலா
லிருகண் புதைக்க வெடிவாளை யெறிநீர்த் திவலை யெழுப்புகல்லோர்
போற்றும் வளவர் நாட்டரசே பொன்னிப் புதுநீ ராடுகவே
புழைக்கை யடவி தழைக்கவந்தாய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (கூ)

246. காரார் கங்குற் பொங்கர்நெடுங் கமுகிற் றாளத் தாம்பசைத்துக்
காசு குயிற்று முடலூசல் கதுவப் பூட்டிக் கழல்வீரர்
வாரார் களபத் தனத்தியரை மருவி யிருந்தத் தாம்பசைக்க
வான மளவக் கமுகசைந்தவ் வானத் தருக்கொம் பசைப்பதனுற்
றாரார் குழனின் புகழ்பாடித் தழைந்தா டுவர்க ளெனநினைந்தத்
தருநாண் மலர்க ணனிபொழியத் தண்டேன் பெருகுங் கடிவடிவாட்
போரார் வளவர் நாட்டரசே பொன்னிப் புதுநீ ராடுகவே
புழைக்கை யடவி தழைக்கவந்தாய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (கഠ)

கூ.—நீராடற்பருவம் முற்றிற்று.

---

# கഠ.—பொன்னூசற்பருவம்.



247. வெள்ளிக் கொழுங்கதிர் விரிக்கும்வயி ரக்கால் வெயிற்றொட
கிறுத்தியதன்மீ - வித்துரும விட்டமிட் டொட்டியெட் டித்தரள வெண்டாம்
பிசைத்தசைத்துத், துள்ளித் தழைக்கவுமிழ் செங்கேழ் மணிப்பலகை தூக்கி
மலர் மாலைவீக்கிச் - சொற்குயின் மலர்க்குயின் முதற்குயின் மொழிச்சியர்கள்
சூழ்ந்துநின் றனரன்பர்நாத், தெள்ளிக் கொழிக்குநய மதுரமொழி யொடுகொடு
ஞ்சிறியேன்சொல் வறியபுன்சொற் - செவியிட்டு நின்றகரு ணைப்பூங் கொழுங்
கொம்பு செம்புநா யகரிடைக்கட் புள்ளித் தடங்தோ ளுடுத்தாட வாட்டினவள்
பொன்னூச லாடியருளே - பொன்னகர் பொருங்காவை நன்னகர் வரும்பாவை
பொன்னூச லாடியருளே, (க)

248. கொடிபூத்த துடியிடை துவண்டாட நறவுவிரி கோதைவண் டாட
வண்டோல் - கொண்டாட வயிரச் செழுங்கால் பசப்புறு கொழுங்கால தாநின்
மேனிக், கடிபூத்த பச்சொளி மலர்ந்தாட வெண்ணகை கலந்தாட விருகுழையு
லாங் - காதாட வூசலா டுந்தொறுமெம் மையன் கருத்துநின் றூசலாடப், படி
பூத்த வெள்ளப் பரப்பென விரைத்துப் பாங்தெழுங் கருணைவெள்ளப், பரவை

யுட் பாடிக் கரங்குவித் தாடியழல் பட்டமெழு கொத்துருகும்வெண், பொடி
பூத்த மேனியடி யாரைநன் காட்டுமயில் பொன்னூச லாடியருளே - பொன்ன
கர் பொருங்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (௨)

249. மாவந்த மணிமுடி யனந்தரா மத்தரவின் வாருடற் றளர்வதெ
ன்ன - வாங்குநுண் ணிடைபுவனம் யாவுமமை யத்துவள மதுரம் பழுத்தொ
ழுகுசெந், நாவந்த சொற்கொடி பழிச்சுவர் பவக்கடலை நக்குகரு ணைக்கடலுள்
விண் - ணுடளவ வெண்டிரை யெழுந்தென வரம்பையர்கை நறுமலர்க் கவரி
துள்ளக், காவந்த தொல்புவி யியற்றவு நிறுத்தவுங் கட்கரிய தாயதுகளாக் -
காணவு மய்க்கவு மளிக்கவுஞ் சற்றே கடைக்கணித் தேவலர்களாப், பூவந்த
வொருவன்முத லைவரையு மாட்டுபவள் பொன்னூச லாடியருளே - பொன்னகர்
பொருங்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (௩)

250. கூராடு மொள்ளொளி யயிற்படை பரித்துவெண் குறுநகை நிலா
விரித்துக் - குதைவரிச் சிலைவா ளெடுத்துக் கடுத்தமர் குறித்திதழ் கறித்துவரு
சூற், காராடு செடியுடல் கடைக்கனற் றுங்குகட் கடையுடைப் படையவுணரா-
கவபூமி யுட்சிர கரந்தறி படப்பல கவந்தநின் றூடவன்னூர், தாராடு மார்பந்
திறந்தொழுகு செங்குருதி சலராசி யேழுமொன்றாத் - தடவிப் புறப்புணரி யுங்
கோப்ப வண்டத் தலப்பித்தி தத்திவிழவெம், போராடு மொருகுழவி தொட்டி
ளுட் டாட்டினவள் பொன்னூச லாடியருளே - பொன்னகர் பொருங்காவை
நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (௪)

251. தெள்ளார் பெருந்திரைத் தோன்றமுது கைப்பச் செழுங்குயி
றிகைப்பநவிலுந் - தெய்வதச் சைவச் செழும்பூங் கொழுங்கொம்பு செங்கே
ழெறிக்குமணியார், கள்ளார் மலர்த்தொடைய ஞற்றிச் சமைத்தபல கைக்க
ணூற் றூடுதோற்றங் - கதிர்மண்ட லம்புக்க வமுதமய மானதண் கதிர்மண்ட
லத்தையேய்ப்ப, நள்ளா ரெனுஞ்சமணர் தழையாது குழையாது நட்டதரு
வேறமடலோர் - நதியேற வுயிர்கள்சிவ கதியேற மதியேற நகிலேறு பான்மரா
ளப், புள்ளார் புனற்புகலி வள்ளற் கருத்தினவள் பொன்னூச லாடியருளே -
பொன்னகர் பொருங்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே.()

252. தங்கும் பெருங்குரற் கொண்டலைத் தாங்குமின் றண்டலைப் பசிய
பூகத் - தருவிணை நடுப்படுங் கவிழிணர்ச் சூதமென் சந்தனக் காலரும்ப, வெங்
குங் கொழுந்தழற் செந்நிற மரும்பிய தெனத்தளி ரரும்பநோக்கி - யினிதுவந்
தொருகுழை யிருந்தசைந் தாடுமொ ரிளங்கருங் குயில்கடுப்பச், செங்குங் குமச்
சே றளாவிய குயப்பொறைச் சிற்றிடை நுடங்கநெற்றிச் - செங்கட் கருங்களச்
செக்கர்வா ணுட்களி சிறந்திடக் கருணைவெள்ளம், பொங்கும் படிக்கினி துலா
வுங் கலாபமயில் பொன்னூச லாடியருளே-பொன்னகர் பொருங்காவை நன்ன
கர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (௬)

253. தாதார் கடுக்கையணி யெம்பிரா னபவாணர் தம்பிரான் முடியன்று
பூக் - தாமரை யிடத்தன்முழு விண்ணுளி முதலோர் தரித்தமணி முடிகளன்று

நாதாரகீயென வணங்கினர்; கொம்மைமுலை யம்மைபொன் னூசலையுகைத்-தாமெம யத்தநினனிச்சமலர் நச்சடிக ளம்முடிக ளிற்படாமே,காதார் குழைத் தோ டிளம்பருதி பொலியவொண் கமலமுக மலரநாசிக் - கவின்முத்த நிலவுமிழ வாயாம்பன் மலரக் கரந்திரு சுடர்க்குமஞ்சிப், போதார் குழற்கருட் கற்றைசுவல் சுற்றிடப் பொன்னூச லாடியருளே - பொன்னகர் பொருங்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (எ)

254. பண்ணியற் கும்பிழை யளித்தினிய தெள்விளிப் பாண்முரலும் வரிமிடற்றுப் - பைஞ்சிறை யளிக்குல முழக்கவர மாதர்கைப் பங்கயம் பொழி மலர்நறுக், கண்ணியிற் சூழக் கிடப்பதென் னம்மைநின் கழன்மென்மை கவர்த லேய்ப்பக் - கயல்பசிய வள்ளையொடு முட்டிமீண் டாலெனக் கண்குழையை முட்டிமீள, வெண்ணில்பொற் பூவின மிருப்பமு டித்திறந் திருளையர் மனைக்கு காளு - மின்னு விழைக்கின்ற துன்னியஞ் செங்கர விதழ்க்கமல மலர்கொடெங் கள்,புண்ணியர் திருக்கண் புதைத்துத் திறந்தபெண் பொன்னூச லாடியருளே-பொன்னகர் பொருங்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியடிளே.

255. குரவுகமழ் குழலூச லாடுமெழி ஞேக்கிமுக் குடுமிப் படைக்கை யெம்மான்-கோலச் சடாமுடி துளக்கக் கலங்கிக் குதித்தோடு மதுபொழுதரா, விரவுகர முந்தனி விதிர்த்திட வதிற்பதியும் வெண்டலை யிமைக்கவிமையா - விழியாள னீத்தல்கண் டெனநகைக் கின்றதென விரிபகீ ரதியுணை,விரவுமதி தவழிமய வரைமக ளெனப்பிறந் தெப்பொருப் புங்கைக்கொளா-தெள்ளுதலில் வெள்ளிமலை கனகமலை மகிழ்சர்க்கு மேனைமா மலைகள்யாவும், புரவுமணி யன விளைய மைந்தற்கு மீந்தபெண் பொன்னூச லாடியருளே-பொன்னகர் பொருங் காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (௯)

256. வழியுநற வாறுபட் டறுகா லுழக்கமலர் மாலைபுனை சீறடியுமா - மணிநூ புரம்புலம் புஞ்சிலம் புங்கட்டு மறுகிடைச் சேர்தபட்டுஞ், சுழியுமுவ ரெழுகழிய சலதிவயின் வருமணி தொடுத்தமணி மேகலையும்விற்-றேன்றெட்டி யாணமுந் தொகையில்செங் கதிரெனச் சுடராதனப்பணிகளுங், கழியுமொளி யுமிழ்வயிர வளைபரித் தடியார் கலக்கநீக் கபயவரதக் - கையுமொண் டரளமணி நாசியு மணிக்குழைக் காதுமிரு கண்ணுமருளே, பொழியுமலர் முகமும்வடி வழகுபொலி தரவம்மை பொன்னூச லாடியருளே-பொன்னகர் பொருங்காவை நன்னகர் வரும்பாவை பொன்னூச லாடியருளே. (௰)

௰.—பொன்னூசற்பருவம் முற்றிற்று.

---

ஆகக்கவிகள் - ௧௧௪.

---

அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

## *சிறப்புப்பாயிரங்கள்,



### மழவை, மகாலிங்கையர் பாடியகவிகள்.

விருத்தம்.

257. தருமைவளர் குமரகுரு முனிவன் கல்வி சார்பகழிக் கூத்தனெனத் தரணியோர்சொ, லிருவருமே நன்குபிள்ளைத் தமிழைச் செய்தற் கேன்றவரென்றிடுமுரைவெற் கிட்டதம்மா!, அருமைபெறு காவையகி லாண்டவல்லியம்மைமேன் மேற்படிநற் றமிழை யாய்ந்து, சுருதிநெறி தவறாத குணன்மீனாட்சி சுந்தரமா லன்பினொடு சொல்லும்போதே. (க)

வேறு.

258. சிரபுரக்கோன் மீனாட்சி சுந்தரவேள் தன்பெயரின் சீர்மைக் கேற்ப
வரனுறுநற் பிரபந்த விடயத்து முயர்ந்தெல்லாம் வல்லோ னானுன்
தரைமிகுநன் காவையகி லாண்டவல்லி மேற்பிள்ளைத் தமிழைச் செய்தல்
ஒருபெருமை யோவவற்குத் தேவிபர மாதலினு லுயர்ந்த தாமே. (உ)

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்

### தாண்டவராய சுவாமிகள்பாடிய கவி.

259. சிற்பரன்சேர் சிரகிரியெம் மீனாட்சி சுந்தரமாஞ் சீரார் கொண்மூ, கற்பனைவண் கடலைமுகந் தத்திவனத் தொளிருமுக்கட் கரும்பைப் புல்கிப், பொற்புறவா ழகிலாண்ட வல்லியெனுங் கொடிதழையப் புவன மூன்றிற், பற்பலரும் புகழ்பிள்ளைக் கவிமழையைப் பொழிந்ததென்பர் பாவ லோரே.

### காஞ்சீபுரம், சபாபதி முதலியார்பாடிய கவி.

260. தங்கமிகு வானின்வரு மதிகண்டு கயலினந் தொலைவிலாக் கயரோகிநீ - தொண்டர்வினை நீக்கியெமை யடிமைகொளு மிருவிழித் தோகையுமை வதனநிகரா, யிங்குவரு வாய்கொலுன் னேழைமதி யாலென வெழுந்துமேற் பாய்ந்தமுதெலா - மெங்கணு முடுக்கண மெனச்சிதற மோதிப்பி னிச்செய்தி யவள்கரத்திற், றங்கிவரு வானதியொ டுரைசெய்தல் போலதிற் றுவியினை யாடிமீண்டு-தண்கழனி வருசம்பு வனலிங்க ரிடமருவு தையலகி லாண்டவல்லி, புங்கமுறு கின்றபிள் ளைக்கவிதை யாமமுது புலவர்மகிழ் கொண்டருந்தப் - பொற்புட னளித்தனன் மீனாட்சி சுந்தரப் பொன்னிறங் கொண்டமாலே.

### திருநெல்வேலி, திருச்சிற்றமபலத் தின்னமுதம்பிள்ளைபாடியது.

நிலைமண்டில ஆசிரியப்பா.

261. திருவளர் சீர்த்திச் சென்னிநன் னாட்டு, மருவளர் பொன்னி மாநதி யடபாற், கூங்குயி லுலாவக் கொங்குலாம் பொழில்க, ளோங்குதென் னானைக்

* இவை பழையபதிப்பைச் சார்ந்தவை. [கி. பி. 1842.]

காவெனு மொப்பில், பதியகத் தெழுந்துவான் பதியுற நிமிர்ந்து, கதிர்மதிக் கொழுந்தொடு கங்கைகமுடி தாங்கிக், கோடுந் தோலுங் குழையுமா டரவமும், பீடுறு சடையும் பெறீஇயெவ் வுயிர்க்கு, மடிநிழ றந்துதண் ணளியுறத் தன் போ, னெடியவெண் ணுவ னிற்பது நோக்கி, யதனிழ லமர்ந்த வருட்கட லிடத் திரு, குதா மேந்திய கொடியெனப் பொலியு, மாதகி லாண்ட வல்லிபொற் றாளின், மேதகு பிள்ளைக் கவித்தொடை மிலைச்சினன், செல்வமிக் கோங்கு சிராப்பளி மாநகர், மல்குசோ ணாட்டுவே ளாளர்மாண் குடிக்கோ, ரணிமணி விளக்கிற் றணிவில் புகழொடு, திணிபொருள் கல்வி கணிதமி லீகை, பொலிதரத் தோன்றிப் போற்றுறு சிறப்பின், மலிதரு சிதம்பர வள்ளன்மா தவத்தி,னிந்து பாற்கடல் வந்தெழுந் தென்னச், செந்தமிழ் விளங்கச் செந்நெறி திகழ, நற்குண னமைந்த பொற்புட னுதித்தோன், வண்டடர்குவளைத் திண்டடந் தோளினன், படிபுகழ் மேழிக் கொடிதிகழ் குரிசில், நதிகுலம் விளக்கு மதிமலி திறலினன், கலைமுழு துணர்ந்த கவிஞர் குழாத்துட், டலைமை நடாத்துஞ் சைவ சிகாமணி, நாச்சுவை யமுதினு மோங்குநனி சிறக்கும், பாச்சுவை யறைதைப் பற்பக ரேறும், பெருவா ணாட்டுப் புலவரும் பெட்புறத், தருமீ னாட்சிசுந் தரநா வலனே.

## புரசை, அஷ்டாவதானம் சபாபதி முதலியார்பாடிய கவி.

### விருத்தம்.

262. முற்றுறா வுணருநல் லவையடக் கந்தர முதிர்ந்தசெஞ் சொற்றமிழினைப்
பற்றுமத் தியாசமா வியலணி யுறச்சுரர் பராவுமா னைக்காவினி
னற்றமகன் மதிவேணி யிடமருவு மங்கலாண்ட வம்மைபிள் ளைத்தமிழெனச்
சொற்றனன் றிகழ்சிர புரத்திலுறை மீனாட்சி சுந்தர வியற்புலவனே.

## இராமநாதபுரம், அஷ்டாவதானம் வேலாயுதக்கவிராயர்பாடிய கவி.

### வேறு.

263. கந்தவே ளோவலது கலைமகளோ யிவ்வுருக்கொண் டாய்கா ணின்னை
யந்தநாட் டவமிருந்து புலவோருக் கரசுசெய்ய வன்பாற் பெற்ற
தந்தையே தந்தையுனைத் தாம்படிக்க வைத்தவனே தமிழுக் காசான்
சுந்தரமா மதிவதன மீனாட்சி சுந்தரனே துலங்குமாலே.

விருத்தாசலம் குமாரதேவர்சந்ததியினருள் ஒருவராகிய

## பொன்னம்பலசுவாமிகள்பாடிய கவி.

### கட்டளைக்கலித்துறை.

264. தெள்ளித் தெளிகவி மீனாட்சி சுந்தரன் செந்தமிழால்
அள்ளற் பழனத் திருவானைக் காவகி லாண்டவட்குப்
பிள்ளைக் கவியொன் றுரைத்தே யிவண்பெற்ற பேறுகண்டன்
புள்ளைத் தமர ருசனன் குகன்கவி யுன்னுவரே.

## காரைக்கால், முத்துச்சாமிக்கவிராயர்பாடிய கவி.

### விருத்தம்.

265. சீராட்ட வல்லவன்யா னேயென்று மலையரையன் செருக்கு மாள
வாராட்டத் தனக்காவை யகிலாண்ட வல்லிதனை மண்ணுளோரும்
பாராட்டக் காப்பாதி யாப்பிள்ளைத் தமிழொன்று பாடித்தந்தான்
போராட்டச் செயலுணரா மீனாட்சி சுந்தரனும் புலவன் மாதோ.

## காயாறு, சின்னையா உபாத்தியாயர்பாடிய கவி.

### நேரிசை வெண்பா.

266. தேனருஞ் சோலைத் திரிசிராப் பள்ளியில்வாழ்
மீனாட்சி சுந்தரன்சீர் மேவவைத்தான் - வானருஞ்
சம்புவனம் வாழுந் தருமவகி லாண்டவம்மை
தன்புகழ்ப்பிள் ளைத்தமிழைத் தந்து.

## திரிசிரபுரம், சோமசுந்தர முதலியார்பாடிய கவி.

### விருத்தம்.

267. புவிமாதுக் கொருதிலகங் காவையகி லாண்டவல்லி புகழை யாய்ந்து
குவிமாலைப் புயசயிலன் மீனாட்சி சுந்தரமால் கூறும் பிள்ளைக்
கவிமாரி யுயர்நிலத்தும் புலவர்மனத் தழைந்துவகைக் களியுண்டாகச்
செவிமார்க்கம் பாய்ந்ததென்று விதுபோல விண்முகிலைச் செப்ப லாமோ.

## உறையூர், முத்துவீர உபாத்தியாயர்பாடிய கவி.

268. தண்ணறுமுண் டகப்போதி விருந்துலக மாக்கியவே தாவே யிந்தக்
கண்ணகன்ற புவியினிற்றன் னுருமாற்றி மக்களுருக் கவினத்தாங்கி
வண்ணமுறு மீனாட்சி சுந்தரமென் றொருநாமம் வயக்க வின்பம்
விண்ணவரும் பெறத்தந்தி வனப்பிள்ளைத் தமிழினிதா விளம்பினனே.

## திரிசிரபுரம், வீரராகவ செட்டியார்பாடிய கவி.

269. இப்புவிசெய் தவந்தானோ தந்தைதாய் செய்தவமோ விசைத்த வாசான்
செப்பமுடன் செய்தவமோ மீனாட்சி சுந்தரவேள் செனனமாகி
யொப்பிலுயர் கல்வியுஞ்சற் குணமுநிறைந் தகிலாம்பை யுபயபாத
வைப்பிலன்பா லினியபிள்ளைத்தமிழுரைத்தான்புலவரெலா மகிழத்தானே.

இந்நூலை அச்சிற்பதிப்பித்த

## புரசைப்பாக்கம், பொன்னம்பல முதலியார்பாடிய கவி.

### விருத்தம்.

270. சகரர்கரந் தொட்டதிரைக் கட லுலகிற் சிறந்தசைவ சமயமோங்கத் [ன்
தகரநறுங் குழல்பாகன் றிருவருளாற் சிராப்பளியென் றலத்தில்வாழ்வோ
சிகரவட வரைப்புயத்தெம் மீனாட்சி சுந்தரமால் திருந்தெந் நாளும்
புகரவலோ னொருபிள்ளைத் தமிழுரைத்த தொருவியப்போ பாவலோரே.()

### கட்டளைக்கலித்துறை.

271. திருவளர் பங்கய வாவிகள் சூழுஞ் சிராப்பள்ளிவாழ்
மருவளர் பூங்குவ ளைத்தாம லட்சு மணன்விரும்பத்
திருவளர் சம்பு வனவல்லி பிள்ளைத் தமிழியற்றி
யுருவளர் மீனாட்சி சுந்தரன் றந்தா னுணர்பவர்க்கே. (உ)

## பென்னேலூர், நாராயணசாமி நாயகர்பாடிய கவி.

### நேரிசை வெண்பா.

272. தேனாட்சிச் செஞ்சொற்பிள் ளைத்தமிழைச் செய்தளித்தான்
மீனாட்சி சுந்தரவேள் மேன்மையோன் - வானாட்சிக்
காவையகி லாண்டவம்மை காதற் கடல்மூழ்க
நாவலரின் பூற நயந்து. (க)

### நிலைமண்டில ஆசிரியப்பா.

273. மலர்தலை யுலகின் மல்கிய சீர்சால்
சிரபுர மதில்வாழ் செவ்வே ளனைய
மீனாட்சி சுந்தர மேன்மை நாமத்
தொருகற் பகமெழுந் தோங்கிய புகழ்சேர்
பிள்ளைத் தமிழெனும் பெரும்பா மாலை
திருவானைக் காவுறை தேவி யுமையா
ளகிலாண்ட வம்மை யணிதற் பொருட்டுப்
புலவர் களிப்புறப் புனைந்தளித் ததுவே. (உ)

### கட்டளைக்கலித்துறை.

274. தேனூருந் தீஞ்செஞ்சொற் பிள்ளைக் கவியெனுந் தெள்ளமுதைக்
கானூருங் காவை யகிலாண்ட வல்லி களித்தருந்த
மீனாட்சி சுந்தரமென் னுஞ் சுரபி மிகமகிழ்ந்து
வானோரும் வாழ்த்தமண் ணோரும் பராவ வழங்கியதே. (ந)

## திரிசிபுரம், நாராயணபிள்ளைபாடிய கவி.

### கட்டளைக்கலித்துறை.

276. வேலா யுதனிகர் மீனாட்சி சுந்தரன் வீறுயர்வாக்
காலானைக் காவினள் பிள்ளைக் கவியொன் றமுதெடுத்து
மாலாதி காலத்திற் றேவருக் கூட்டி மகிழ்ச்சிசெய்தாற்
போலா தரித்துப் புலவோர் செவிக்குப் புகட்டினனே.

# உறையூர்

(திருமூக்கீச்சரம்.)

# ஸ்ரீகாந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### காப்பு.

### விநாயகர்.

276. மாமேவு மேனியஞ் செக்கர்வான் கார்க்கவுண் மதக்கமஞ் சூற்கொண்டலோர் - வண்கோட் டிளம்பிறை விளங்குபுகர் மீன்செம்மை வாய்ந்த நயனக்கதிரவன், காமேவு குடிலத் தடித்தொளிர் தரச்சுரர் கணம்புகழ்ந் தேத்தெடுப்பக் - களிமிக்கு மண்ணுலகம் விண்ணுலக மாகவமர் கடவுளடி முடிசூடுவாம், தேமேவு கொன்றையணி துன்றுசடை யெந்தையார் சிந்தைத் தடத்துண் மலருஞ்-செங்குங்கு மத்தாது விழியளி மொழித்தேன் றிகழ்ந்தமுக வம்போருகப்,பூமேவு பொற்கொடியை மற்கெழுமு மளவில்பல புவனப் பரப்பெலாமுன்-பொறையுயிர்த் தாளையிறை யுறையூர்ப் பிராட்டியைப் புகழ்தமிழ்க் கவிதழையவே. (க)

### சிவபெருமான்.

277. தேனெழுகு செழுமலர்ப் பொழில்சுலவு கழுமலச் சிறுகுழவி நாவரசுநற் - றென்னுவ லூர்நம்பி வாதவூ ரெம்பிரான் றிகழுமிந் நால்வர்தம்வாய்க், காலெழுகு மமுதமழை கொடுகுளிர்ப் பித்திடக் கண்டுவெண் டிண்டமதியுங் - கங்கையு மிலைந்தவை தருங்குளிர்க் காற்றான் கடுப்பக் கரத்தினுதலில், வானெழுகு செந்தழ லிருத்திக் கரித்தோல் வயங்குதிரு மேனிபோர்த்த - வள்ளலைப் பரசியெம துள்ளலைக் குங்கொடிய மாசறப் பாஞ்சுடர்த்த, மீனெழுகு மதிதவள மாடத் தரிஞ்சலுடல் விரவுமுய னீத்துமடவார் - விழைமுக மடுப்பது கடுக்குமுறை யூரம்மை விரிதமிழ்க் கவிதழையவே. (உ)

### உமாதேவியார்.

278. வண்ணமதி யிற்கலையு மிரவியிற் சுடருமல ரிற்பொலியு நாற்றமும்போன் - மறைதுதிசெ யிறைவரொடு பிரியாத தனதியல்பை மாலயன்முதற் சுரர்க்கு, நண்ணரிய தாயவொரு திருமேனி வாய்த்தி னன்குறக் காட்டிநிற்கு-நாயகியை யகிலமு மளித்தபெரு மாட்டிதனை நாத்தழும் பத்துதிப்பாம், பூண்ணமு தசும்பமுயன் மதிகடு வுறச்சுற்று தவளமா ளிகையருகெலாத்-தாவில்சூற் கொண்டமலை தாங்கித் துகிற்கொடிக டங்குவது பாலொழுகுவா, யண்ணல்பசு மடலோடு நீற்றடியர் கடுநின் றுரைப்பாய் நுடங்கிடக்கா-ரமணரைக் கழுவேற்றி யதுகாட்டு முறையூரெ மம்மைநற் றமிழ்தழையவே. (௩)

## விநாயகர்.

279. கண்ணுறு நெற்றிப் பிரான்சடை யிடைப்பொற் கடுக்கையந் தாதளாவுங்-கலைமதியை யிகல்வென்று கறைகொண்டு வாங்குதன் கைக்கோ டுடன்பொருத்தி, விண்ணுறு வொருகதிர வன்றோற்றல் காட்டியவ் வியன்சடைக் கங்கையாற்றில் - வீழ்த்தத்த மனமுந் தெரித்துப்பின் முன்போல் விரைந்தெடுத்துப்பொருத்தித், தண்ணுறு வொருமுழுத் திங்களுத யங்காட்டு தம்பிரான் றிருவடிக்கே-சரணடைந் தேமுளரி மலரிதழ்பொன் மூடித் தயங்கலம் மாதுகொழுநன், புண்ணுறு ஞாட்பிற்றன் மகிழ்நனை மறைத்தபகை போற்றுதல் கடுக்குமுறையூர்ப் - புண்ணியம் பூத்தருள் பழுத்தபொற் கொம்பினைப் புகழ்தமிழ்க்கவிதழையவே. (௪)

## சுப்பிரமணியர்.

280. கொங்குலவு கோதையயி ராணிதாள் பட்டமரர் கோமான் புயஞ்சிவப்பக் - கூடித் திளைத்தவள் கருங்கண் சிவப்பக் கொடுந்தொழிற் றகுவர்மடவார், செங்கையொடு கொங்கைகள் சிவப்பக் கடைக்கண் சிவந்தானை யொருகுறப்பெண் - சீறடிக் கல்லால் வணங்கா முடிப்பெருஞ் சேவகனை யஞ்சலிப்பாஞ், சங்கெறி துறைக்கட் குடம்பையோ டொருபூந் தருத்தாழ்ந்து நிற்பவம்பர்த்-தாமரைக் கொடி நுழைந் தம்மலர் மடுத்தத் தடத்தினுட் பாய்கயலெலாம், பொங்குமீன் கூடபி னுறக்குனிந் ததிபத்தர் பொள்ளல்வலை படுமுன்மீனைப் - பொற்கையி னெடுத்துவிடன் மானுமுறை யூர்க்கருணை பூத்தா டமிழ்க்கருளவே.

## திருநந்திதேவர்.

281. கருதரிய வுலகெலாங் காக்கும் பிரான்றிருக் கயிலையைப் பொதுமைநீக்கிக் - காக்குமோ ருரிமைகொண் டெழின்மார்பின் முடியிற்பல் கடவுளர்தரித்தொளிவிடுங், குருவருங் கவுத்துவ முதற்பல மணித்தொகைக டொளா யெழுப்புடைக்குஞ் - சூலப்படை யாக்கொண்ட வெந்தைபெரு மானடித் தொண்டரைக் கண்டுபணிவர், மருகுபெரு காற்றுப் புனற்றெளிவின் மூழ்கிடா தள்ளற்கருஞ்சேற்றின்வா - யாழ்ந்தே யுழக்கிக் குலைக்கனை ருதுழ லடிப்பிள வுடைப்புன்மேதி, திருவமுறு சைவத் தழுந்தாப் புறச்சமயர் திறமிற் றெனத்தெரிக்குந்-தென்னுறந் தைப்பதியின் மன்னும் பிராட்டிதன் செந்தமிழ்க் கவிதழையவே.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

282. பார்லொழுகு குமுதவாய்ப் பிள்ளையைக் கள்ளப் படிற்றமணர் கூற்றை நீற்றைப்-பற்றியவர் புற்றறப் பற்றுமொரு களைகணைப் பாரிக்கு ஞான வொளியை, மாலொழுகு புன்புற மதத்தாரும் வியந்துதுதி வாய்பேச வென்பினைப்பெண்-வடிவாக்கு தூமணியை மாமறைத் தமிழ்மொழி மழைக்கொண்டலைப்பரவுவாஞ், சேலொழுகு கண்ணிய ரியக்குமொழி லிற்சுருஞ் செழுமுகில் விராவொருதருச் - சினையுறுஞ் செந்தே னிறாலொரு வளாருறச் சென்றுவளிபெறியமோதல், நீலொழுகு மூடலவுண ரைச்சவட் டியவலி நிறுத்தவொரு திரும்பைவனையா-னெமொல்பஃ றமோதல் காட்டுமுறை யூர்க்கண்வளர் நிமலைநற் றமிழ்தழையவே. (௭)

## திருநாவுக்கரசுநாயனார்.

283. *கருமுருட் டுப்பறி தலைச்சமண ராழ்துயர்க் கடலிடை யழுந்த வெம்மான் - *கருணையங் கடலிடை யிழுந்திப் பறம்பொடு கருங்கடலின் மிசை மிதந்த, திருவமுறு செந்தமிழ்க கடலைத் தலைமுழ்ந்தொளிகொள் சிவஞான தீபத் தைநற் - சிவமணங் கமழ்மறைத் தமிழ்பொழியு முகிலைத் தினம்பணிந் தேத் தெடுப்பாம்,பருவமுகி னித்திலச் சுதைதீற்று மாடப் பரப்பிற் படர்ந்துதுயிறல்- பார்கடலின் மீமிசைக் கண்டுயில்கொள் சக்கரப் படையுடைப் பகவனேய்க்கு, மொருபெரு வளத்தவுறை யூரிடை யமர்ந்தருளு முமையவளை யிமையம்வந்த - வொண்பிடியை யுலகெலா முதவிய வொருத்தியை யுரைக்குமின் றமிழ் தலையவே. (அ)

## ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனார்.

284. முன்னரிய முதுகுன்றர் தந்தபொரு ளாற்றிட்டு முரிதிரைப் பூங் குளத்தின் - முன்னெடுத் தவனைவெம் முதலைவாய்ப் பிள்ளைதரு முதல்வனைப் பிறைமுடித்து, மன்னுமொரு தம்பிரான் றோழனைக் களிகொண்டு மதுவுண்டு வண்டுமூச - மணமாலை துயல்வருந் தோளனைப் பரவைமண வாளனைப் பரவி நிற்பா, மின்னனைய சடையர்முடி காறுமய ஞணச்செல் விரிதலைத் தாழைக ளெலாம் - மெய்யநின் போனீர் தரித்துமுக் கட்பெறுமெ மெய்ச்சினையை யுலகின்மடவார், தென்னுலவு கொங்கைபொப் பென்பரென வவர்திருச் செவி யறி வுறுத்தல்காட்டுஞ் - செறிவள மலிந்ததிரு நாவலூ முறந்தையுமை செந் தமிழ்க் கவிதழையவே. (௯)

## திருவாதவூரடிகள்.

285. திருவார் பெருந்துறையி லொருகுருந் தடியிற் செழுங்கங்கை முடி மிலைந்த-சிவபிரா னருளுதலு மழல்வெண்ணெய் கல்லெனச் சிந்தைநெக் குருகி யுருகி, மருவார் மலர்க்கரஞ் சென்னிமீக் கொண்டிருகண் மழைவார வானந்த மே - மாறாத சிவபோக நறவுண் டிருந்தவருள் வள்ளல்பொற் றாள்பரசுவாம், வெருவா விளஞ்சூற் றகட்டகட் டிளவாளை மிடறிறப் பாய்வதஞ்சி - விரிதலைக் கதலியுஞ் செங்காய்ப் பசுங்கமுகும் வேழக் கரும்புமாராய்ந், திருவா னளிக்கு மக வான்கருணை பெறமே லெழுந்தது கடுப்பவன்று - னெழின்மண்ட பத்தி னுக் கழகுதரு முறையூ ரிருந்தா டமிழ்க்குதவவே. (௰)

## ஸ்ரீசண்டேசுவரநாயனாரும் மற்றநாயன்மார்களும்.

286. சிவகருமம் யாவர்கள் சிதைத்திடினு மவர்களைத் தேர்ந்துயிர் தபக் கோறலே - சிவதரும மென்பது தெரிந்துயிர்க ளுய்யத் திருத்தாதை தாளெறி ந்த, தவமழ முனித்தலைவர் தாளுமா ரூர்நம்பி சாற்றுமறு பத்துமூவர் - தாட் டா மரைப்போது மெப்போது முடிமீத் தரித்துத் துதித்தல்செய்வாம்,துவரெறி யிளந்தளி ரரும்பிய நறுங்கனிச் சூதம்வா னோங்கிநிற்றல் - துருவரிய வினமான வொருமாவை யிளையவன் சுடரயில்கொ டடல்பிளக்கத், திவளொளி முடித் தேவர் செய்தது தெரிந்தத் திருத்தேவ ருலகடர்க்கச் - சீறிச் சிவந்தெழுந் தது சிவனு முறையூர்ச் செழுங்கோதை தமிழ்தழையவே. (௧௧)

# க.—காப்புப்பருவம்.

## திருமால்.

287. நீர்கொண்ட வேணிப் பிரான்கருள் விருந்தினை நிசர்ப்பமுகிழ் நகை செய்தோறு - நிலவெழூஉப் பொங்கித் துளித்துக் கிடப்பது நிகர்ப்பநிரல் படமிலைந்த, வார்கொண்ட மணிவடக் கொங்கையுடை நங்கையைவிண் மங்கையர்க் கரசியைச்சீர் - மலியகில நிகிலமு முயிர்த்தகரு ணைக்காந்தி மதியம்மை யைப் புரக்க, தார்கொண்ட துளபப் பெருங்கா டலைத்தொழுகு தண்ணறுக் கலுழி பொங்கத் - தவலறு மொளிக்கவுத் துவமணி சமழ்ப்பவத் தடமார்பு செக்கர் காட்டக், கூர்கொண்ட வேல்விழிச் செங்கமல மங்கையிரு குங்குமச் சேறளா வுங் - கொங்கைகண் ஞெமுங்கத் திளைத்துக் களிக்குங் குருஉச்சுடர்ப் பச்சை முகிலே. (க)

## வேறு. பஞ்சவர்ணேசுவரர்.

288. நிலவுபொங்கவொரு சிறையொதுங்குமிரு ணிகரவெண்பொடிபொ திந்தமெய்ப்பூச்சொளி - நிமிரவெங்குமலை கடலெழுந்தகொடு நெடுவிடங்குலவு கண்டனைத்தார்ப்புய - நெடியவன்பிரம னுணர்வமென்றகில நிகிலமுந்துருவ நின்றமெய்த்தீர்த்தனை - நிகரில்வெங்கொடிய மகமெழுந்துபொறி நிறைபணங் கெழுமு கங்கணச்சேர்ப்பனை,

விலகிரன்கிரண முமிழ்பொலங்கொண்முடி மிசைவியன்சுரர்க ரங்குவித் தேத்தவும் - விறல்கொளும்பணியு முழுவையும்பரவி மிளிரவும்புரிபொ னம்பலக்கூத்தனை - வெருவிலண்டரெழு விடையைவென்றமுழு விடையில்வந்த ருளு மைந்தனைக்கார்ப்புயல் - விரிவிசும்பினிடை விரவுமிந்திரவில் விழையு மைந்துநிற நம்பனைப்போற்றுதும்,

மலர்பெரும்புவன முவகைகொண்டுயர வழுவகன்றமறை யந்தமிழ்ப்பாட் டினை - வளமிகும்புகலி மழலையின்சொலுடை மழமொழிந்தருளு மின்சுவைத் தேக்கமழ் - மதுரநின்றவமு துதவுகொங்கைமிசை வடபதம்புலவு திங்களைப் போற்சுடர் - மணிவடங்குலவ வெழுபசுங்கொடியை மலர்மடந்தையர்ம ருங்கு கைக்கூப்புட,

னிலகுனன்பரெவ ரெவர்செயும்பணிக ளெவன்மொழிந்தருள்வை யென் றெடுத்தேத்திட - விருகணின்கருணை பொழிபுநின்றவளை யெமதுளங்குடிகொள் பைங்கிளிப்பேட்டினை - யிமயம்வந்தமட நடையமென்பிடியை யெழிறழைந்து மலர் கொம்பரைச்சூட்டர - விறைவணங்குறுழை யிடையையம்பிகையை யிசை புறந்தைநகர் மங்கையைக்காக்கவே, (உ)

## வேறு. நிருத்தவிநாயகர்.

289. முப்புரமுருக்குதிற லாளனைப்போற்கோலை
முற்றுபகைசெற்றவொரு கோடுறத்தூக்கியே
ரப்புசுடர்விட்டெறியொர் கோடுவிற்சேர்த்தெழு
மற்புதநிருத்தமத வானையைப்போற்றுவாக்

திப்பியமலர்த்தருவின் மேவுபட்பாட்டளி
தெற்றெழுநறப்பருகி யேமுறப்பூத்துவார்
குப்புறுமிணர்த்தொகைய சூதம்விட்போய்ப்பொலி
குக்குடநகர்க்கணமர் தேவியைக்காக்கவே. (௩)

## வேறு. முருகக்கடவுள்.

290. வரியளிக்குல முழக்கிடநறப்பொழியு மென்மலர்த் தீர்த்தனன் - மணிமுடித்தலை சடக்கொலிபடப்புடைசெய் கைம்மலர்க் காய்ப்பனை - வழுவறக் குறு முனிக்கினியநற்றமிழ்சொ லையனைச் சூர்ப்புயல் - வளர்வரைக்குறவர் பொற் கொடியடிச்சுவடு மொய்புயக் காட்டனை, விரிகடற்புடவி முற்றுமறையச்சிறை கொண் மஞ்ஞையிற் கார்க்கடல்-வியன்முகட்டெழு மழப்பரிதியொப்பவரு செம் மலைச் சூர்ப்பிடி-விழிகளிப்புற நறைத்தருமலர்த்தொடைகொள் செல்வனைக் கூப் புகை - விதுமுடிப்பரம ருக்கருண்மறைக்குரிய வள்ளலைப் போற்றுதுங், கரிய வுட்பலம் விளர்ப்பவற நெய்த்திருள்செய் பெய்குழற் கேற்பவோர் - கதிருமிழ்த் தில மணிப்பிறையணிச்சுவடு செய்திடச் சூட்டுபு-கணவர்செக்கர்முடி யிற்றிவள் பிறைச்சுவடு பொன்னடிச் சேர்த்திய - கவினுடைத்திருவை மிக்கருள்பழுத்த மலை வல்லியைத் தூப்படு, மரியநற்றவ ருளத்துமெமுளத்துமமர் செல்வியைக் கூர்ப்படை - யலைதரப்பொருது பொற்குமிழ்மிசைக்குதிகொள் கண்ணியைக் கூட்டுணு - மமுதுபெற்றணி பணிக்கொழுநர்முத்தமிடு கிள்ளையைத் தேக்குறு - மருமறைக்கினிய குக்குடநகர்க்கண்வள ரம்மையைக் காக்கவே. (௪)

## வேறு. பிரமதேவர்.

291. பாயிருட் படலங் கிழித்தொழுகு செங்கதிர்ப் பருதிவா னவன் முடங்கும் - பைந்திரைக் கார்க்கட லகட்டெழூஉ தெனவிரைப் பைந்துளவ னுந் திநாறுஞ், சேயபொற் றாமரை மலர்த்தவிசி னேறியத் திகிரியங் கொண்டல்காக் கச் - செயிர்தீர் பெரும்புவன முழுதும் படைத்தகைத் தெளிமறைக் கடவுள் காக்க, மாயிரு விசும்புறு முடுக்கணந் தம்மகிழ்நன வள்ளலார் கொள்ளைவேணி-மன்னியதை யுன்னியிக கன்னிதிரு முடியே வயங்கியெக காலுமழியாக், கோயி லென வாழ்வது கடுப்பமுத் தணியாற் குலாவிக் கமழ்ந்துநெய்த்த - கூந்தலிம யப்பிடியை மடநடை யனத்தையொண் கோழிநகர் வாழ்மயிலையே. (௫)

## வேறு. தேவேந்திரன்.

292. பண்டு சமரிற் புறங்கொடுத்த பரம்பு திறம்பா வெறுழ்படைத் துப் - பகைத்துப் பொரல்போ லயிராணி பசும்பொ னசும்பு மார்பினிடங், கொண்டு பணைத்துப் புடைத்தெழுந்த கொம்மை யிளமென் முலைக்கோடு - குத் திப் பொருத வடுப்பொலியுங் குருமா நிறப்புத் தேள்புரக்க, வண்டுடலைத்தா ராரு ரன் மாறுநிதிக்கோ னிருவரையு - மதியாப்பொருளோ ரிரண்டினுக்கும் வயத் தோ முமைகொள் பிரானேபோற், றுண்டு படுவெண் மதிநுதற்பூந் தோகைமார்த ரிருவரையுஞ், சொறுங்தோ முமைகொண் டருளுறையூர்ச் சுரும்பார் குழலெம் பிராட்டியையே. (௬)

### வேறு. திருமகள்.

293. வரியளி யுழக்கப் பசந்தே னசும்பூறு மாலைத் துழாய்க்கொண்ட
றன்-மறுமார்ப மறுமாதர் மருவப் பொருதிதழ் மணத்தபங் கயமிருந்து, கரிய
கண் முகிழ்த்திடுத லின்றிக் கடுங்காப் புறத்தவு மறப்பொதுமையே - காட்டு
மம் மார்பத் திருந்துரிமை கொண்டுமகிழ் கன்னிகையை யஞ்சலிப்பாம், தெரி
வரிய வரமுடைத் தக்கனார் புரிதருந் தீத்தொழி லழித்துநகைபோய்ச் - செயி
ருற்ற செங்கதிர் கடைக்கணருள் பெறுவான் செழுங்கா தடைந்ததேய்ப்பத்,
துரிசறு நிறங்கெழு மணித்தொங்க குயிற்றுபொற் றேருடைக் குயிலையெயிலைச்
சுற்றுடுத் தோங்குவள முற்றவுறை யூர்க்கணமர் தோகையைக் காக்கவென்றே.()

### வேறு. கலைமகள்.

294. பல்கும் பொறிச்சிறைப் பண்மிடற் றளியிளம் பைங்குழவி
வயிறுவிம்மப் - பருமுகை முலைக்கண் டிறந்தொழுகு மின்னறுப் பாலூட்டு பங்
கயத்து, மெல்குந் தகட்டகட் டிதழ்மேயி ஞான்மறை விரிந்தொளி பழுத்தசெந்
நா - மேற்றனது வெண்மேனி செம்மேனி யாகவமர் விமலைபொற் றாள்பரசுவாம்,
மல்குந் துகிர்க்கொடி பழுத்தனைய செஞ்சடை மணாளன் றிருக்கரத்து - மறி
மான் றழைந்ததன் றிருவுருப் பசுமையொளி வார்ந்தெழக் கண்டுதுளிநீர், பில்
கும் பசும்புலென வாய்கறிப் பதுகண்டு பெருநகை கொளாவமகிழ்நன் - பிணை
யலறு கூட்டியுறை யூரில்விளை யாடுபெண் பிள்ளையைக் காக்கவென்றே. (௮)

### துர்க்கை.

295. துறைபட்ட மறைபரசு மிறையவ னுதற்சுடர்த் தொகையழலு
நகையழலும்வெந் - தூமம் படுங்காசச் சிகையழலு மிகையெழூஉச் சுழல்வது
கடுப்பவளவாக், கறைபட்ட வெந்நுனைய முத்தலைப் படையொன்று கைத்தலை
யெழுந்து சுழலக் - கனல்பொழி விழித்துணை முடங்குளை மடங்கல்வரு கன்னி
யைப் பரவுவாம்பொற், சிறைபட்ட வெள்ளனப் புள்ளேறு நான்முகச் செம்ம
லும் பொம்மன்முலையர் - திருமாது கொண்கனுந் தெரிவரிய பிறைமுடிச் செம்
பொன்மலை யைப்புணர்ந்தோர், நிறைபட்ட கோடுடைக் கைம்மலையை யீன்றொளி
பிறங்குமா கதமலையையின் - பிறழிமய மலைவந்த வுறையூ ரிருக்குமம் பெண்
ணமலை யைக்காக்கவே. (௯)

### வேறு. சத்தமாதர்கள்.

296. சிறைபடுநிலைவெழ வனநட வுபுமறை நூலினை விரித்தவள்
திசைகெட நகைகொடு திரிதரு தரியலர் மூவெயி லெரித்தவள்
செறிகட லழலெழ நெடுவரை குடரிற வோரயி றிரித்தவள்
திருகிய மனனுடை யுருமுறழ் நிசிசரர் கோன்முடி நெரித்தவ
ளிறையள வெனவறை கடல்வளை புடவியொர் கோடிடை தரித்தவ
ளிணருறு தருநறை யணிகமழ் தரவரை பாய்சிறை யிரித்தவ
ளெரிதரு திரிதரு இரிதலை யயிலைவி டாதுகை தரித்தவ
ளெனுமிவ ரெழுவர்கள் செழுமல ரடிமுடி வாழ்தர விருத்துதும்

மிறைநிறை மனனுடை யமரர்க டமருட னேவிட வலைக்கடல்
வெருளெழு விடமடை மிடறுடை யடிகளை நாடொறு மயக்கியை
விரிசுட ரெரிவிழு மெழுகெனி வுருகுவர் பாலுறை திருப்பெணை
வியனுல கிலெழு முதவிய வயிறுடை யாளெழு ளரைச்செழு
நறைமல ருறையெழி லரிவைய ரிருகர மாமல ரருச்சனை
நனிசெய முனிவறு பணிவிடை யருளிய நீள்கடை விழிச்சியை
நளிநற விழிபொழின் மருவிய திருவுறை யூரம ரொருத்தியை
நயமிலெ மொழியையு மினிதென வுவகைகொ டேவியை யளிக்கவே.

வேறு. முப்பத்துமூவர்.

297. மாமத மொழுக்குதவ ளக்கரியு கைத்தலொடு
செக்கர்க்குருத்தோடு சேர்மலரிருக்கையும்
வாளர வணைத்துயிலு மற்பொடு துதிப்பவர்
திளைப்பக்கொடுப்பாளை யாரணமுடிக்கரும்
பூமல ரடித்துணை தருக்கினை முருக்கியெ
முளத்துப்பதிப்பாளை நூறினமயக்கறு
பூதியொளி யற்றணியு மக்கமணி விட்டவர்
கருத்துக்கொளிப்பாளை யாரமுதருத்தியொண்
காமர்கிளி யைத்தனது கைத்தல மிருத்தியெழின்
முத்திட்டிருப்பாளை யோவில்கவிசெப்பெனக்
காமுறு மியற்றமிழ் மணத்தசொ லெமக்கினி
தெடுத்துக்கொடுப்பாளை மாமுகிறுயிற்றிடக்
தோமறு மதிற்பெரிய குக்குட நகர்க்கண்வளர்
செப்புத்தனத்தாளை நாடொறும்விருப்பொடு
சூரியர் மருத்துவ ருருத்திரர் வசுக்களெனு
முப்பத்துமுக்கோடி தேவர்கள்புரக்கவே. (கக)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

---

## உ.—செங்கீரைப்பருவம்.



298. பொன்செய்த செஞ்சடைப் பெருமான் றிருக்கையாற் பொங்காழி யெழுசெக்கதிர்ப் -புத்தேட னகையிழக் தாங்கக் கதிர்க்குரிய புண்டரிக மனையாட்டியுங்,கொன்செய்த நகையிழக் துறுகணீர்சிந்தியுட் கொள்ளும் பயத்தழுந்தக்-கோலம்பொலிந்தொளிகொள் செங்கையம் பங்கயங் குப்புற நிமிர்த்துநிலமீ,மன்செய்த கொங்கையர் திருமகளை யவளரிய மருமகளை யருள்மென்றுண் - மரையொன் றெடுத்தொன்று கோட்டியிருள் வீட்டியொளிர் வள்ளைக் குதம்பையாடத், தென்செய்த தமிழ்மணக் கோழிநகர் வாழுமயில் செங்கீரை யாடியருளே-சிமயம் பிறங்கவள ரிமயம் பிறந்தகுயில் செங்கீரை யாடியருளே. (க)

299. உருவம் பழுத்தது கிரொத்தசடை மதியமு துருக்கவகி விடமுருக்க - வுறுபுனல் பனித்திவலை வீசக் காத்தினழ லொளிரும் புலிம்கம்வீசப், பருவம் பழுத்தநீற் றொளிநிலவு தோன்றவெள்ளி பாய்கழற் பரிதிதோன்றப் - பாத தாமரையொன் றெடுத்தூன்றி யொன்றுமறை பாடவிரு முனிவர்பரசக், கருவம் பழுத்தமுகில் குளிறுத லெனப்பெருங் கருமால்கை முழவதிர்க்கக் - கணநாதர் களிகொண்டு நின்றாட மன்றாடு கண்ணுதலை யாட்டுமமுதே, திருவம் பழுத்த செங் கோழிநகர் வாழுமயில் செங்கீரை யாடியருளே - சிமயம் பிறங்கவள ரிமயம் பிறந்தகுயில் செங்கீரை யாடியருளே. (உ)

300. காறுறு சூழியக் கொண்டையின் மணிப்பணி கவின்கொள நிறுத்தியதனிற் - கட்டிவிடு நித்திலச் சுட்டிவா ணுதலிற் கஞன்றிள நிலாவெறிப்ப, வாறுறு வள்ளையிற் றுள்ளொளி மணித்தோடு மழவிளங் கதிரெறிப்ப - மணிமூர லெழுநடக் திமயமா தேவிதிரு மடியேறி முத்தளித்துப், பாறுறு குமுதப் பசுந் தேற லூட்டியவள் பைம்பொற் றனங்கைவருடிப் - பாய்சுரப் பெழுசுவைப் பாலுண்டு விளையாடு பைங்கிள்ளை வானுரிஞ்சுங், தேறுறு பூம்பொழிற் கோழிநகர் வாழுமயில் செங்கீரை யாடியருளே - சிமயம் பிறங்கவள ரிமயம் பிறந்த குயில் செங்கீரை யாடியருளே. (௩)

301. வல்லே றுகைப்பவ ரரக்கெறி கொடிச்சடை வதிந்தபய னுற்றேமெனு - மந்தா கினிப்பெயர்க் கங்கையுந் திங்களும் மனமகிழ்ந் துவகை தூங்கக், கல்லேறு கொண்ட திரு மேனியர் களிப்பெனுங் கடன்மூழ்க நின்னருட்கட் - கருங்குவளை செங்குவள பூப்பநுழை நுண்ணிடை கழிந்தொசிதல் கண்டன்னை நின், வில்லேறு புருவங் குனித்திடே னின்னிலென வேண்டியோ விடல்கடுப்ப - விரிபரி புரங்குளிற வக்கொழுநர் முடிமீது மென்றாள் செலுத்தன்னம்வண், செல்லேறு மணிமதிற் கோழிநகர் வாழுமயில் செங்கீரை யாடியருளே - சிமயம் பிறங்கவள ரிமயம் பிறந்தகுயில் செங்கீரை யாடியருளே. (௪)

302. மொய்த்தகுடி லத்துவெண் டும்பையும் பாசறுகு முருகுவிரிபொற் கொன்றையு - முளைமதியும் வேய்ந்தவையொ டொப்பவெண் டலையுமுடைமூடென்பும் வார்நரம்பும், பைத்தபட வரவுந் தரித்தவரொ டொப்பநன் பாடலொடியான்சொலும்புன் - பாட்டுநனி கேட்டுமறை சூட்டுமிரு தாட்டுணை பதித்தென் றலைக்கணருளு, நெய்த்தகரு நீலக் கதுப்பம்மை காழிமழ நிகரறுந் தமிழாரண - நெடியாது நொடிதரப் படியிலா ஞானமரு ணித்திலக் கொங்கைமங்கை, செய்த்தவள வளைகண்முரல் கோழிநகர் வாழுமயில் செங்கீரை யாடியருளே-சிமயம் பிறங்கவள ரிமயம் பிறந்தகுயில் செங்கீரை யாடியருளே. (௫)

வே று.

303. தருவரு நித்திலம் வைத்த தலைப்பணி சுற்று மிசைந்தாடச்
சூழிய மொடுநுத லுழக் கட்டிய சுட்டி யசைந்தாடப்
பொருவரு திருமுக முழுமதி யெழுசிறு புன்னகை நிலவாடப்
பொற்கொளி தங்கு குதம்பை ததும்பப் பொருகட் கயலாடக்

கருகிரு டின்று விளங்கு மிளங்கதிர் கால்பொற் குழையாடக்
 கான்மலர் பெயர்தோ றுங்கிண் கிணிகள் கலின்கலி னென்றாட
வருள்வளர் தருதிரு வுருவமு மாடிட வாடுக செங்கீரை
 யழகிய திருவுறை யூரமர் நாயகி யாடுக செங்கீரை. (சு)

304. செங்குமு தம்பொதி யூற லெனுஞ்சிறு தேறல் வழிந்தோடச்
 செழுமணி மேகலை தழுவிய நுழைநுண் சிற்றிடை யொசிவெய்தக்
கங்குன் மழுங்க வெழுங்கிர ணம்பொலி காதணி வெயில்வீசக்
 காமர் முகப்பது மக்குமிழ் முத்தங் களுலொளி நிலவீனத்
துங்க மிரும்புவ னம்பல நந்திய தொந்தி ததும்பியிடத்
 துகளறு சிந்தை யிருந்த சிவந்த துணைத்தா ளணிமுரல
வங்கலும் திருவுரு வத்தொளி மொய்த்தெழ வாடுக செங்கீரை
 யழகிய திருவுறை யூரமர் நாயகி யாடுக செங்கீரை. (எ)

வேறு.

305. எமதுபவப்பிணி யிரியவிரிக்குமருந்தேயன்பாள
 ரிதயமுளைத்தூற லெழிலொடினித்தகரும்பேவிண்டாமு
மமரர்முடிப்பொலி மணியெனுமத்தர்வி ருந்தேதென்றேதா
 வகமகிழச்சிறு நகைவிரிபொற்பமர் கொம்பேபண்பாடுந்
தமரமிடற்றபல் பமரமுழக்குற றுந்தார்கொண்டாயுந்
 தகரமொழுக்கிய கருநிறமைக்குழ னங்காயிந்துருஞ்
சிமயமிமைத்தெழு மிமயவரைப்பிடி செங்கோசெங்கீரை
 திகழ்தருகுக்குட நகரிலிருப்பவள் செங்கோசெங்கீரை. (அ)

வேறு.

306. எறிதிரை யமுதமும் வாழ்பி ராணித னங்கோபஞ்சிறு
 மிதழ்பொதி யமுதமு மோகைகு லாவநு கர்ந்தேசந்தான
முறிபுனை நறுநிழல் வானவர் சூழவி ருந்தேறுங்கோப
 முனையடு புகர்முக மாலயி ராவத முந்தாநந்தாத
செறிதரு களியெனு மாழ்கடன் மூழ்கியு வந்தோர்விண்கோமான்
 றிருவுற வொருசிறு சேயினை மாணொடு தந்தாயெந்தாயே
யறிஞர்க ளறிவுறு மாரண நாயகி செங்கோசெங்கீரை
 யருள்வினை திருவுறை யூரமர் நாயகி செங்கோசெங்கீரை. (கூ)

வேறு.

307. பொங்கு நறைப்பொழி மாமலருங்கா னுஞ்சீர்சால்
 பொன்செ யருக்கனு நீளொளியும்போ லம்போடு
திங்கண் முடித்தபி ரானுறைவெங்கே யங்கேவாழ்
 செங்க ணகச்சிலை மானிருகொங்காய் நங்காயோர்
தங்கு வரைக்கிறை யோனருள்கன்றே நன்றாய்வார்
 தங்க ளுளத்தமு தூறுகரும்பே வம்பேசூ
ரெங்கள் குடிக்குமோர் வாழ்முதல் செங்கோ செங்கீரை
 யின்சொல் பெருக்குறை யூர்மயில்செங்கோ செங்கீரை. (கo)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

# ௩.—தாலப்பருவம்.



308. ஒல்குங் கொடிநுண் ணுசுப்பொசிய வுளருஞ் சுரும்பர் விரும்புமது
வுண்டு தெவிட்டி யுவட்டெடுப்ப வூற்றும் பசுந்தே னசும்பூறிப்
பில்கு நறுந்தார் குழல்செருகிப் பேதை மாதர் பயின்மறுகு
பெரும்பொற் றகடு படுத்திருளின் பிழம்பை மழுக்கி யடிக்கினிதே
நல்குங் குணத்தா யினும்புலவி நண்ணு மடவார் சிதறுகல
நவமா மணிகள் பரந்துகுறு நடையே யெவருங் கொளக்காணு
மல்குஞ் செல்வத் திருவுறையூர் வாழ்வே தாலோ தாலேலோ
மறைநான் காற்றும் பெருங்கருணை வடிவே தாலோ தாலேலோ. (௧)

309. கூட முயருங் குன்றனைதங் கொம்மை முலைக்குப் புறங்கொடுத்த
குருமார் பகத்திற் புயத்தினறுங் குஞ்சித் தலத்தி லஞ்சிறைய
கிடமிரியப் பகன்முழுதுங் கிள்ளை மொழியா ரலத்தகந்தோய்
இளர்தாட் சிலம்பி னொலியெழுப்பக் கெழுமு மிரவின் மைந்தர்மலர்ப்
பீட மருவு மம்மடவார் பெருங்கா ழல்குன் மிசைக்கிடந்து
பிறழ்மே கலைபி னொலியெழுப்பிப் பெருகுங் களிப்பிற் றிளைத்துவளர்
மாட மலியுந் திருவுரையூர் வாழ்வே தாலோ தாலேலோ
மறைநான் காற்றும் பெருங்கருணை வடிவே தாலோ தாலேலோ. (௨)

310. பண்ணுங் கனியுங் கனிமொழியார் பயின்மே னிலத்திற் றிரணீலம்
பதித்து விதித்த செய்குன்றப் பரப்பில் வரப்பில் கொழுந்தோடி
கண்ணுஞ் சுடரி லறமுழுகி நாடற் கரிதா யுயிர்க்குயிரா
நம்மான் றிருக்க ணிபுதைத்த நாளோ வென்று ளயிர்த்துநெடு
விண்ணுந் திசையு மிகமயங்கி விரகா ஞடி யாய்தோறும்
விலகி விலகி வில்லுமிழும் விதத்தா லஃதிற் றெனத்தெளியும்
வண்ணம் பொலியுந் திருவுறையூர் வாழ்வே தாலோ தாலேலோ
மறைநான் காற்றும் பெருங்கருணை வடிவே தாலோ தாலேலோ. (௩)

311. கருமால் யானை யனந்தனுளங் கலங்கக் கலக்கி விளையாடுங்
கார்க்குண் டகழி கடலெனவக் களிற்றை யினமென் றுளத்துன்னிக்
திருமா லெழிலிப் படலமவ ணிழிந்து குழிந்த வகடெடுப்ப
விரைத்துத் திரைத்த நீர்கொடுவிண் ணேறும் பொழுதவ் விபப்பாகர்
பொருமால் களிறென் றதனெருத்திற் பொள்ளென் றேறிப் பொன்னுலகம்
புரப்பான் போல்விண் புகுந்துணராப் பொருக்கென் றயற்சோ பான
வருமா ளிகைசூழ் திருவுறையூர் வாழ்வே தாலோ தாலேலோ [வழி
மறைநான் காற்றும் பெருங்கருணை வடிவே தாலோ தாலேலோ. (௪)

312. ஊற்றும் பசுந்தேன் முளரிமுகை யுளர்வண் டடைய முறுக்குடைய
வோதக் கடலின் முகம்புழுங்க வுதயமெழுந்து சிதையவிருள்
பாற்றுங் கடவுட் கெதிர்கடவும் பசுமா வுருளைத் தனிவையம் [க்குங்
பகைகொண் டிளைஞர் மிகைகடவும் பைம்பொற் கொடிஞ்சித் தேர்முழ

கூற்றும் வெருவப் பொருங்களிறு பிளிறு மொலியுங் குளிற்றுலிமான்
குரற்கின் கிணியி னெழுமொலியுங் குழுமி யெழுமா முகின்முழக்கை
மாற்று மறுகார் திருவுறையூர் வாழ்வே தாலோ தாலேலோ
மறைநான் காற்றும் பெருங்கருணை வடிவே தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

313\. பொங்கும் பாற்கடன் முழுதுங் கொளுவு புழைக்கை யடக்கியெழூஉப்
பூமக ளுன்முகன் மால்சிவ னெயுயிர் போயின மெனமுறையிட்
டெங்குஞ் சிதறி விழப்பின் விடுத்தலை யெறிதரு மக்கடல்விட்
டேனைக் கடலு முழக்கிக் குலவரை யெட்டையு முட்டிநிறந்
தங்குங் குலவொரு கோட்டாற் குத்திச் சாய்த்துப் பிலநுழையத்
தாதை யெனப்பணி பூண்டு வருஞ்சிறு தந்திக் கன்றருளுஞ்
செங்குங் குமநிறை கொங்கை சுமந்தெழு சிறுபிடி தாலேலோ
செல்வத் திருவுறை யூரில் விளங்கு செழுங்குயில் தாலேலோ. (சு)

வேறு.

314\. உதைய மெழுங்கதி ரெதிரெழு செங்கே ழொழுகொளி முழுமணியே
யொண்பவ ளத்திரு வோங்கலெ நீங்கலி லோங்கொளி மரகதமே
இதைய நெகிழ்ந்தரு குங்களி யன்பின ரெய்ப்பகல் கற்பகமே
யெம்முள மூடிரு ளோடி மலங்க விலங்கும் விளக்கொளியே
குதைவரி விற்புரு வத்தர மகளிர்கள் கும்பிடு கோமளமே
குழைபொரு கட்கரு ணைப்பெரு வெள்ளக் கொள்ளைப் பேராறே
ததையு மலங்கன் மிலைந்த குழற்கொடி தாலோ தாலேலோ
தருமம் பொலிதிரு வுறையூ ருறைபவள் தாலோ தாலேலோ. (எ)

வேறு.

315\. தருவிற் பொலிமலர் மாமுடி மேல்விழ வானோரேனோருந்
தகைபொற் சிகைமலர் தாள்விழ மீளவிண் ணூர்வார்வாழ்வாரே
யுருவிற் பறவைகள் பூமக ளுமகள் சேர்வாரூர்வாரே
யொருவிற் குமரனை நீயுத வாவிடின் மாதாவேயோவென்
றிருவிற் புவனமெ லாமலர் போலடி மீதேதாழ்தோறு
மினிதுற் றருள்வர தாபய மேவுகை யாயேயோயாதே
கருவிற் படுமெனை யாளுடை நாயகி தாலோ தாலேலோ
கழகத் திருவுறை யூரமர் மாமயில் தாலோ தாலேலோ. (அ)

வேறு.

316\. குருமருவுசெம்பொன் வரைவில்கைசுமந்து கூடாரூர்தீயே
குடிபுகமுனிந்த சிவபரனைவென்றி டாதேயேகேன்யான்
மருமருவுதொங்கன் முடியமரர்வந்து பாரீர்போய்மோதா
வருகவெனவந்த வொருமதனனங்கம் வேவாநீறுக
வுருமருவுவெம்பு மழல்விழிதிறந்த கோமான்மாமோக
வுததியிலமுந்த விளகைகையெழுஞ்செ வாய்மானேதேனே
திருமருவுகொண்ட திகழவருதங்கை தாலோதாலேலோ
செழிதமிழுறந்தை தழைதருகரும்பு தாலோதாலேலோ. (௯)

வே று.

317. தெளிதருமறைய னைத்தையுமெழுதி டாதேயேர்தாமே
தெறுகழுவொருகு லச்சிறைநிறுவி வீணேபோகாமே
யளியறுபறித லைச்சமணிருளி லேபார்சூழ்காமே
யழலுருவிறைய வர்க்குடல்குளிரு மூண்வேறாகாமே
வளியெறிபொதியி னற்றவர்களிய லாவாறேகாமே
மடரறையுளமு னெக்கிடமுலையின் வாய்வார்தேனூர்பால்
குளிர்தருபுகலி யர்க்கினிதுதவு தாயேதாலேலோ
கொழிதமிழ்கெழிய குக்குடநகரின் வாழ்வேதாலேலோ. (௧0)

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

## ௪.—சப்பாணிப்பருவம்.



318. எண்கொண்ட தலையிரண் டிட்டமுப் பஃதற மிருக்குமா லய மென்றும்வா - னெம்பிரா னுயவொரு தம்பிரான் கைக்கமல மேந்துசெங் காந்த ளென்றும்,கண்கொண்ட விருசுட ரடங்கித் தடைப்படு கடுஞ்சிறைக் கூடமென் றுங் - காமரயி ராணிமங் கலநா ணளித்தசெய் கண்படைகொள் பள்ளியென் றும், பண்கொண்ட வஞ்சொற் கிளிக்குஞ்சு துஞ்சுதல்செய் பஞ்சரம தென்று மறைகள் - பாடித் துதித்துவகை தூங்கவெஞ் ஞான்றும் பரித்துபா ராட்டுசீர்த் தித், தண்கொண்ட தாமரை முகிழ்த்தொளி ததும்பவொரு சப்பாணி கொட்டி யருளே-தண்ணளி தழைந்துவளர் புண்ணியவுறந்தைமயில் சப்பாணி கொட்டி யருளே. (௧)

319. காயா நிறத்தவன் சுதரிசன மொடுமரைக் கண்ணனென் றொரு பெயருமுக் - கண்ணவ னிடம்பெறச் செய்தபே ருதவியைக் கைவிட் டிருட் பகையைமுன், னுயாது ஞாட்பிடை மறைத்ததை யறிந்துமவ னமுதைப் பரித் தல்செயுமே-யம்மைநின் னொருகலையை யிருகலைகொடு தாங்குவ தறிந்தலை கடற் றோன்றுமத், தூயாடவத்தனென நறுமுளரி யென்றுஞ் சுமக்குமா லென்று கூறிச் - சூரமடந்தையர்கள் பாராட்டு கையொளி துளும்பவெளி யெங்களுக் குத், தாயா யிருப்பதுமெ யானுன் மகிழ்நநின்றோர் சப்பாணி கொட்டியருளே- தண்ணளி தழைந்துவளர் புண்ணிய வுறந்தைமயில் சப்பாணி கொட்டியருளே.

320. பாராட்டு நின்சிறு சிலம்பிற் சிலம்பனப் பார்ப்புநா லைந்துதரு வேம் - பயில்குதலை நினதுவாய்ப் பவளமுத் தங்கொளப் பைங்கிளிக் குஞ்சு தருவேங், காராட்டு கந்தரத் தெம்மா னிடத்திருக் கைமானு மினிது தருவேங்- கவினுடைப் பாவையைக் கைபுனையும் வண்ணமுங் கற்கப் பயிற்றிவிடுவேஞ், சீராட் டுடன்குலவு வண்டற் பிணக்களுஞ் சேர்ப்பே மிதன்றியாமென் - செய் யினுங் கைம்மா றெனக்கருத லகவிதழ்ச் செங்கையொளி பொங்கநவத், தாராட்டு கூந்தலெம தெய்ப்பாற வெப்போழ்தோர் சப்பாணி கொட்டியரு ளே - தண்ணளி தழைந்துவளர் புண்ணிய வுறந்தைமயில் சப்பாணி கொட்டி யருளே. (௩)

321. ஆனசெய் தெளித்துகறு காளமு மளாய்ச்சூழி யணிபெற முடித்து மொளிசே - ரரிக்குரற் கிண்கிணியொ டம்பொற் சிலம்புகி னடித்தளிர் திருத் தியும்பாய்,மீனநெடுநோக்கினுக் கஞ்சனந் தீட்டியும் விளங்குபுண் டரநுதற்கண் - விலகிவில் லுமிழ்மணிச் சுட்டியது கட்டியும் வியன்கதிர் விழும்பொழுதுபொற் கானநிறை தொட்டியிற் கண்வளரு மாறுபல கண்ணேறு போக்கியுமுளங் - களிகொள்ளும் யாமுவகை மீக்கூர வன்பிற் கணக்கில்புவ னங்கணேக்கத்,தான மருள் கைத்தலனை நோக்கிசிற் கின்றேமொர் சப்பாணி கொட்டியருளே - தண் ணளி தழைந்துவளர் புண்ணிய வுறந்தைமயில் சப்பாணி கொட்டியருளே. (ச)

322. சிலையெடுத் தன்னகின் திருநுதலி னுண்டுளி செறிந்திடா மற்செ றிந்த - செழுநிறக் குருகுக ணெரிந்திடா மற்றளிர்ச் செங்கரங் கன்றிடாமன், முலையெடுத் துயர்மார்பி னமுதூற்று திருவாய் முகிழ்த்தநகை நிலவுகொட்ட - முனிவின்றி நின்கரங் கண்ணொத்தி முத்திட்டு மோந்துயா முவகைகொட்ட, அலையெடுத் துயர்கங்கை மங்கைதன் னெஞ்சகமு மஞ்சித் தடாரிகொட்ட - வம்மவிம் மிதமுறீஇ யவிர்முடி துளக்கிநம் மம்மான் குடங்கைகொட்டத்,தலை யெடுத் துயரறமு மாவலங் கொட்டவொரு சப்பாணி கொட்டியருளே - தண் ணளி தழைந்துவளர் புண்ணிய வுறந்தைமயில் சப்பாணி கொட்டியருளே. (ரு)

வேறு.

323. கருநிற வெழிலி முழக்கென வெம்மான் கயிலையின் மயிலாலக்
காயு மடங்கன் முழக்கென மகவான் களிறும் பிளிறியிட
வுருமின் முழக்கென வரவிறை யுள்ள முளைந்திட வரமாத
ருடல் வெறுத்து வெரீஇத்தம் மகிழ்ந ருரங்குழை யத்தழுவத்
திருமறு மார்பன் றுண்ணென வளர்துயி நீர்ந்தெவ னெனவினவத்
திகழண் டங்கள் குலுங்கக் குனில்பொரு செழுமுர சொலிகெழுமுங்
குருமணி வெயின்மறு காருறை யூர்மயில் கொட்டுக சப்பாணி
குழவி மதிச்சடை யழக ரிடத்தவள் கொட்டுக சப்பாணி. (சு)

324. பூணைப் பொருமுலை மங்கையர் பயிலும் பொங்கொளி வெண்மாடம்
புதுநில வொழுகொளி முழுகியு மெழுகழல் போகட் டதுபோற்கற்
றாணைப் பெர்ருமுட் டிருகரு முருகத் தோன்றுமு வற்பிரியத்
தூயோ ருருவத் திருவப் பேரொளி தோய்ந்தும் கழைசுளியா
மாணைப் பெறுமிரு வெள்வே ழத்தினை வாயிரு பாலுநிறீஇ
* மதமால் யானைகள் கற்பக் குளகுகொள் வண்கோ டொருநால்வெண்
கோணைக் களிறென வருமுறை யூர்மயில் கொட்டுக சப்பாணி
குழவி மதிச்சடை யழக ரிடத்தவள் கொட்டுக சப்பாணி. * (எ)

வேறு.

325. மடலவிழ்கறுமுட் டாழையில் வாழையின் மணமலிபிரசக் காவியில் வாவியின் முதிகதிர்தவழ்பொற் சோலையின் மாலையி னச்சுவடிப்பார்வை - வரிவ ளையவர்செய்த் தோதியில் வீதியி லகவிதழ்வனசப் பூவினின் மாவினில் வடிவுடை யலரிக் கூடையி லோடையின் மற்பசுமைப்பூக, மிடறுருளைதற் பாளையில்

வாளையில் விளைஞர்கள்சிகையிற் பூவிரி காவிரி வியலியல்குலையிற் சாலியின்வேலி யின் மைக்கவரிபபால்பாய் - விரிதருகுளனிற் கூவலி லோவலில் வளனருள் புறவப் பாரினில் வேரினில் விழைமதுநுகரப் போயுறவாயுற மொய்த்தசுரும்பு போ,லடலிளைஞர்கள்பட் டாடையி லோடையி லறவளைதனுவிற் றாணியிறணியி லவிர்கரமலரிற் றேளினில் வாளினில் விற்பொலிமுத்தாரத்-தகலமதனின்மெய்ச் சேயினில் வாயினி லொழுகொளிபுகலிற் றாழ்குழை வாழ்குழை வமர்தருசெவி யிற் றேரினி லேரினில் வைத்தமுடிப்பூணிற், றொடர்படுபொருணட் பால்விலை மாதர்க ளரிமதர்நயனக் காரளி போய்விழு துரிசறுவளமைக் கோழியில் வாழ் மயில் கொட்டுகசப்பாணி - துயல்வருமிதழித் தாமம் விராவிய புயமுதலவருக் கோர்துணை யாயவ டுகளறுகருணைக் கோயிலின் மேயவள் கொட்டுகசப்பாணி. ()

வேறு.

326. பரவு நெடும்புவ னந்தரு மைந்தன் விரித்தபடப்பாயற்
பகவன் மதம்பொழி வெண்கரி வந்தருள் கட்படி வத்தேவ
னுரக ரருந்தவ ரெண்டிசை நின்றவர் முப்பது முக்கோடி
யுறுதொகை யண்டர்கள் செங்கதிர் வெண்கதிர் சித்தகணத்தோர்கள்
கரமுடி சொண்டொரு நந்தி பிரம்படி பட்டும் விருப்பாகிக்
கவின வணங்க வுகுத்த மிகுத்த முடிப்பொன் மணித்தூள்டா
யரவொலி பொங்கு முறந்தை யிருந்தவர் கொட்டுக சப்பாணி
யழகமர் கொங்கை சுமந்த விளங்கொடி கொட்டுக சப்பாணி. (கூ)

வேறு.

327. ஒலிகட லமுதன மூவர்கள் வாயரு மைத்தமிழ் நற்பாட
லுடலுறு பிடகரை மோதிய சோதிவி ரித்தசு வைப்பாடல்
பொலிதரு சமையந னூலியல் யாவும யக்கமறத்தேறிப்
புறமத மறமெறி நூல்களு மோதியு ணர்ச்சிமிகுத்தோவா
வலியுறு பதிபசு பாசமு மீதிதெ னத்தெளிவுற்றாராய்
மயலறு விழிமணி வாள்வட நீறைபெ ழுத்துமதித்தோகை
மலிதர வொளிருவர் சேருறை யூர்மயில கொட்டுகசப்பாணி
மலர்தலை யுலகமெ லாமரு ளுபமி கொட்டுகசப்பாணி. (௪0)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# ரு.—முத்தப்பருவம்



328. வாரா ருசல் வடமலைப்ப மாறு தேறி யுடனலைந்தவ்
வடநா ணறக்கிழ் விழுவானை வல்லை நிலத்தாங் குவதேய்ப்பப்
போரார் பஞ்சப் புலக்கயிறு பொருக்கென் றறுத்தஞ் செயல்யாவும்
போக்கிக் கிடக்கும் பசுக்கடமைப் புகன்று தாங்கு மருட்கொடியே
நீரார் நிழலங் நிலந்தோற்று நீர்மை போல வுயிர்க்குயிராய்
நிற்பா ரோடு குணகுணியாய் நிற்பாய் பொற்பா ரடியார்க்கே

சீரார் திருவர் தருவாய்நின் றிருவாய் முத்தந் தருகவே
செழுநான் மறைகண் முழங்குறையூர்த் திருவே முத்தந்தருகவே. (க)

329. வாடுங்குழவிக் கிரங்கியிவண் வதிதலெனக்கண் டிடக்கூடா
மாதா முலைப்பா லூறக்கொண்டு வரல்போ லிறகண் மழைவார
கேடுமுயிர்கட் கிரங்கியரு ணிலைப்பே றுறுவங் கொடுதோன்று
நிமலத் தருவி னிடம்பிரியா நிறைப்பூங் கொடியே விரைந்தடியேஞ்
சாடும் புலக்கோ டறக்கருணைத் தனிமண் ணொடுகூர்ங் கருவியொடு
சாய்த்துட் புனலை நின்னிருதாட் சலதி மடுக்கப் பாய்ச்சிமகிழ்
சேடு பெறவுஞ் செய்வாய்நின் செவ்வாய் முத்தந் தருகவே
செழுநான் மறைகண் முழங்குறையூர்த் திருவே முத்தந்தருகவே. (உ)

330. கானார் கொன்றை முடிக்கணிந்த கடவுட் பெருமான் றிருவுள்ளக்
கமல மலர வரமடவார் கடகக் கரமுண் டகங்குவிய
வானார் சகோரப் பறவையியன் மதியி னிலவென் றோடிவர
வளைக்கை யிருந்த சுகம்பவள வள்ளத் தமுதென் றங்காப்ப
மீனார் தடங்கட் கலைமகடன் மேனி கருமைத் தெனநாண
விரும்பும் பணியிற் பாதிகொள்வாள் விளைவை யறிந்து திருமகிழத்
தேனா ரிளவெண் ணூரலெழுந் திருவாய் முத்தந் தருகவே
செழுநான் மறைகண் முழங்குறையூர்த் திருவே முத்தந் தருகவே. (ங)

331. அருந்த வொருவெங் குருமழவுக் களிக்கு முலைப்பா லன்றியவ
ளமுதத் திருவாய் மொழியுமுயி ரளிக்கும் வெளிற்றென் பினுக்கென்றே
பொருந்த விரைநா றுவளகத்திற் புல்லப் பொருந்தா தெனநினைந்தோ
பொதியவ் வணியை நீத்துறுநின் புலவி தணித்துன் முகநோக்குங்
கருந்தண் கடனஞ் சருந்துபிரான் கழியன் பொருநால் வர்கடமிழ்க்குக்
காணி கொடுத்த திருச்செவிகள் களிதூங் கிடமென் மழலைமொழி
திருந்து விருந்தூட் டிடுங்குமுதச் செவ்வாய் முத்தந் தருகவே
செழுநான் மறைகண் முழங்குறையூர்த் திருவே முத்தந் தருகவே. (ச)

332. ஓங்குஞ் சிகரப் பொருப்பிறைவ னுயிரே யனைய திருத்தேவி
யுவந்து கொங்கை நெரித்தூட்டி வுண்ட நறும்பான் மணநாற
வாங்கும் புணரிப் படைநெடுஞ்சூர் மாட்டுங் குழவிக் கூட்டியநின்
மணிக்கண் முலைப்பா லக்குழவி வாய்முத் துவப்ப தானறத்
தாங்குஞ் சிறைப்பைங் கிளிக்கருத்தறுந் தடித்த செருத்தற் சுரபியின்பாற்
சலதி நாற வெம்மான்வாய்த் தண்ணென் பவள நாறமதுத்
தேங்குங் குமுத மலர்நாறுஞ் செவ்வாய் முத்தந் தருகவே
செழுநான் மறைகண் முழங்குறையூர்த் திருவே முத்தந் தருகவே. (ரு)

வேறு.

333. வெண்ணிறக் கோடுபடு முத்தமான் மட்சுவைய மிச்சிலி னமுங்கு முகளு - மீனமுத் தம்புலால் கமழும்வேய் முத்தமதன் விரிகொடுக் தழலின் முழுகு, மொண்ணிறச் செஞ்சாலி முத்தங் கவைக்கா லொருத்தல்க ளுழக்க செரியு - மூற்றுங் கடாக்கரி மருப்புவிளை முத்தமிக லொன்னார் கறைக்கணளை

யுந், தண்ணிறக் சந்திபடு முத்தம் பசப்புறுந் தறுகட் பெருஞ்சூகரத் - தாளுல வை முத்தமண் ணுழுதலிற் றேயுமிவை தரினுமெளி யேமவிரும்பேம், தெண்ணி றக் சொங்கைபசு கும்பவள வல்லியொரு செம்பவள முத்தமருளே - திருவுறந் தையின்மருவு மொருபெருந் திருநினது செம்பவள முத்தமருளே. (சு)

334. அலைகொண்ட விப்பியிளை முத்தமுவர் மூழ்குநற வம்போ ருகத்து முத்த - மம்மைநின் சேடிய ரடித்துவைப் புண்ணு மிக் கவிர்முத்தம் வேள்கு ழைப்ப, சிலைகொண்ட வுருவமுடை பட்டுதிரு மகளிர்கள நேர்முத்த மகிழ்நர்தங் கை - நீட்டியிறு கத்தழு விடுந்தொறு மதுக்குணுமிர நீர்முத்த மெமதெமதெனு, விலைகொண்ட பைந்துழாய்க் கொண்டன்முத லிமையோ ரெடுத்துரைப் பார தன்றி - யிடைபடும் புண்ணுங் கரட்டோ டிரட்டைபடு மிவைசற்றும் யாங்கொ ளேம்பொற், சிலைகொண்ட கைத்தலத் தெம்பர னுவந்தநின் செம்பவள முத்த மருளே - திருவுறந் தையின்மருவு மொருபெருந் திருநினது செம்பவள முத்த மருளே. (எ)

வே று.

335. பொன்னியல் புரிசடை மாணிக் கத்தொரு புறம்வளர் மரகதமே
பொங்குங் கொங்கைக் கங்கைத் திருமகள் போற்றும் பொற்கொடியே
துன்னிய புவன மனைத்து முயிர்த்த சுடர்த்த விளங்கொடியே
தொண்ட ருளத்தமு தூறிட வூறுஞ் சுவைமுதிர் தெள்ளமுதே
பன்னிய கருணை நிதியே மறைமுடி வளரும் பைங்கிளியே
மடநடை பயிலும் வெள்ளன மேயொரு மாத்திரை நினைவார்க்கு
முன்னிய யாவுந் தருவாய் திருவாய் முத்த மளித்தருளே
மூவுல கேத்து முறந்தை யிருந்தபெண் முத்த மளித்தருளே. (அ)

வே று.

336. சிவந்த தழலிடை விழுந்த மெழுகென நெக்குரு கிக்கனிவார்
தெளிந்த வுளமுற நலஞ்செ யிருபத பத்ம நிறுத்திடுவாய்
நிவந்த சடையிடை வளைந்த மதியுர கத்தை முடித்திடுவார்
நிறஞ்செய் திருவுடல் பகிர்ந்து மகிழும தர்த்தகடைக்கண்மினே
தவந்த னளவில புரிந்தொர் மலையரை பெற்றமடப்பிடியே
தடங்கொ ளிருமுலை சுமந்து வருமொர்ப சுத்தவெழிற்கொடியே
யுவந்தென் மனனிலு முறைந்த களிமயில் முத்தமளித்தருளே
யுறந்தை நகர்குடி யிருந்த திருமகள் முத்த மளித்தருளே. (கூ)

வே று.

337. தகர மொழுகு குழலு நுதலு மொழுகு மருளி னக்கமுந்
தவள நிலவு குலவு நகையு மிலகு மிருசு வர்க்கமும்
பகர வரிய மலர்மெ லடியு மனனு ளொழுகி நித்தலும்
பரவி யுருகு மடிய ரிடமு நெடிய புகழ்கொள் குக்குட
நகரி னிடமு மெனது ளகமு மருவி யுறையு மூத்தமி
ழறவு குதிகொள் பொழிலி னளிக ளளிரி யிசைமி ழற்றிட
வொகர மகவு மிமய முதவு புதல்வி தருக முத்தமே
யொளிசெ யுலக முழுது முதவு முதல்வி தருக முத்தமே. (கo)

ரு.—முத்தப்பருவம் முற்றிற்று.

# ௬.—வாரானைப் பருவம்.



338. திண்டமதி வாணுதலி லிட்டபொட் டுங்கட்டு சுட்டியும் பட்ட
டும்பொற் - சூழ்சுடர் மணித்தோடு மிளஞாயி றுதயஞ் சுரப்பவிள நகை
நிலவெழக், கண்டன நறுங்குதலை யரமாத ரோதியங் கற்பமலர் பொற்பகீழ்த்
தக் - கான்மல ரடித்துணை யலம்புஞ் சிலம்புகள் கலின்கலி னெனக்களிப்போ,
டண்டர்பெரு மான்முடியை யின்னமுங் காணாத வன்னமும் பன்னுமறையு -
மடியேங்க ளுள்ளமுந் தொடரநுண் ணிடைகிடந் தசையுமே கலையொலிப்ப,
வண்டடை கிடக்குமலர் தாழ்பொழிற் கோழிநகர் வாழுமா மயில்வருகவே -
மன்னும் பெருங்கருணை யென்னுந் திருக்கோயின் மருவுநா யகிவருகவே. (க)

339. அலகில்பல புவனப் பரப்பிற்கு மருளுதவு மம்மையுயர் வொப்
பிகந்த-வப்பனுர் மேனியிற் செம்பாதி கொண்டனான் றவர்முடிக் கழகு
செய்யு, நிலவுபொழி மதியினும் பாதிகொண் டெனமுடியி னித்திலப் பிறை
யிலங்க - நிகரறுஞ் சீறடியி லரமாதர் முடியணி நிழற்பிறைக் காடுமொய்ப்ப,
வுலவுநின் வதனமதி கண்டவெளி யேங்கட்கு முவகையம் பரவைபொங்க -
வுறுகளி யனங்களடை கற்குமா தொடரவடி யொண்டளிர் பயப்பெயர்த்து,
மலர்பொலங் கேழிஞ்சி சூழிருங் கோழிநகர் வாழுமா மயில்வருகவே - மன்னும்
பெருங்கருணை யென்னுந் திருக்கோயின் மருவுநா யகிவருகவே. (உ)

340. பாயிருட் குழைபொரிய வில்லிடுஞ் செம்மணிப் பரலுமோ லிகளு
ரிஞ்சப் - பட்டுதிரு மம்பொற் பராகமும் போக்கிநுண் பட்டாடை பலவிரித்தங்,
காய்தருஞ் செந்தளி ரடுக்கிமலர் தூயினி தமைத்தமெல் லணையம்மைநின்-னடி
யா ருளத்தினுந் தண்ணென்று மெத்தென்று னடிமலர்க் கருமைசெய்யுந், தேய்
தரு நுழைச்சிற் றிடைக்கிரங் கியதெனச் செழுமணிக் காஞ்சியலறச் - சீறடி
பயப்பெய ரெனக்கழறல் போலொளி சிறந்தநூ புரமலம்ப, மாயிரும் புவனம்
பழிச்சிருங் கோழிநகர் வாழுமா மயில்வருகவே - மன்னும் பெருங்கருணை யென்
னுந் திருக்கோயின் மருவுநா யகிவருகவே. (ங)

341. நறைவா யனிச்சமு நச்சுநம் மாலரு ணலங்கிள ரிரண்டுதிருவி -
னயமதுர வெண்மக ளிருக்குமிட மேலெனவு நளிநற வருந்திமூசிச், சிறைவா
யளிக்குல முழக்குங் குழற்றிருச் செம்மக ளிருக்குமிடமோ-தேற்றமது கீழெ
னவு மறிவிப்ப தேய்ப்பநின் சீறடியின் மேற்சிறந்த,பிறைவா யுகிர்க்கண் டழைத்
தோங்கும் வெண்மையொளி பெருகவத் தளிர்நறுந்தாள்-பெயர்க்குந் தொறுங்கீ
ழுலத்தகச் சேயொளி பிறங்கவெங் கண்களிப்ப, மறைவாய் முழக்கறு வாழி
யொண் கோழிநகர் வாழுமா மயில்வருகவே - மன்னும் பெருங்கருணை யென்
னுந் திருக்கோயின் மருவுநா யகிவருகவே. (ச)

342. திணிகொண்ட கணிமலர்த் தேனருவி பம்பவளர் செம்பொன்
வரை யும்பர்குழுவிற் - சிவனென நகங்களுட் டலைபெற் றிருந்துநின் சீறடி
பெறுமையாளுட்,பிணிகொண் டழுங்கியெவர் நண்புறக் கொண்டியாம் பெறுவு

மென் றுய்க்குமுக்கட்-பெருமான் றிருக்கைநண் புற்றுக் குழைந்தொளி பிறங்கி நிற் பக்குலாவு, மணிகொண்ட திருமணப் பந்தரிற் சுந்தரத் தம்பியிற் கற்சாதி யோ - ரறிவெனக் கேற்புறப் பரிசித்து நின்றநின் னடிமலர் பயப்பெயர்த்து, மணிகொண்ட மாளிகை மலிந்தசெங் கோழிநகர் வாழுமா மயில்வருகவே - மன்னும் பெருங்கருணை யென்னுந் திருக்கோயின் மருவுநா யகிவருகவே. (ரு)

வே று.

343. திருவார் முளரி மூகைகிளைத் தேமாங் கனிக ளுகுத்துயர்ந்து
செருக்கும் வருக்கைப் பழஞ்சிதறத் தென்னம் பழங்கள் விழமோதிக்
கருவார் கொண்டற் கணம்பிளிறக் கலக்கி மதியத் துடல்போழ்ந்து
கவின்றாழ் மலர்க்கற் பகக்கோடுங் கடந்தா முயிரா வதநால்வெண்
குருவார் கோடு முறியவண்ட கோளா முகடு நாளமுறக்
குழவுப் பகட்டு வாளைகுதி கொண்டு வெடிபோஞ் செழும்பழன
மருவார் மருதத் திருவுறந்தை வாழ்வே வருக வருகவே
மாறாப் பவநோய் மாற்றுமலை மருந்தே வருக வருகவே. (சு)

344. பிஞ்சு மதிய முடிக்கணிந்த பெருமான் கயிலைப் பொருப்பில்வரம்
பெறுவான் விரும்பி வணங்கியொளி பிறங்கக் கிடக்கு நெடுமால்போல்
விஞ்சு குருச்செம் மணிகுயிற்றி விண்ணத் துலவும் பனித்துண்ட
மிலையப் புரிசெய் குன்றோங்க வெண்ணித் திலத்தின் சுதைதீற்றி
நஞ்சு பழுத்த நயனியர்வெண் ணகைமா றெருகோ சிகனியற்று
நலங்கொ ளொளிபோ லெண்டதச்ச னன்கு சமைத்த மாளிகையில்
மஞ்சு துயிலுந் திருவுறந்தை வாழ்வே வருக வருகவே
மாறாப் பவநோய் மாற்றுமலை மருந்தே வருக வருகவே. (எ)

345. ஒருகா ரணன்ற னடிமுடிகண் டேர்வான் புகுந்த துழாய்க்கேழ
லொப்ப வவனி யகழ்ந்துமறை யோது மனம்போல் விண்போழ்ந்து
குருகார் பொய்கைத் தோணிபுரக் குரிசி லேயென் றுய்திறத்தார்
கூறு மதற்குத் தகவடியார் கூட்டஞ் சுலவ விருந்துமிகப்
பெருகா றேற வம்பிவிடும் பிள்ளை போல விமானமுடன்
பெருவெண் மதிய முலவமுழுப் பிறங்க லுருட்டிப் பெருக்கெடுத்து
வருகா விரிசேர் திருவுறந்தை வாழ்வே வருக வருகவே
மாறாப் பவநோய் மாற்றுமலை மருந்தே வருக வருகவே. (அ)

346. கள்ளை யருந்தி யுவட்டெடுத்துக் கண்டர் திறந்து பாண்மிழற்றிக்
காளைச் சுரும்ப ரடைகிடக்குங் கருந்தா ரளகக் கற்பகமே
வெள்ளை மயிற்குஞ் செம்மயிற்கு மேலாய் விளங்கும் பசுமயிலே
மெய்யே யுணரு மூளத்தின்பம் விளக்குங் கனியே மடவன்னப்
பிள்ளை நடைக்கும் வழுவுசிறீஇப் பிடியி னடக்கும் பெண்ணமுதே
பேரா னந்தப் பெருங்கடலே பிறங்க வறங்கொண் மனைதோறும்
வள்ளை மலியுந் திருவுறந்தை வாழ்வே வருக வருகவே
மாறாப் பவநோய் மாற்றுமலை மருந்தே வருக வருகவே. (கூ)

347. என்றே புரையு மணிப்பணிபூண் டெழும்பூங் கொம்பே வருகவினைத்
தேத்து மடியார் பிழையைமறந் தேனோர் குணமு மிகந்தவிளங்
கன்றே வருக மெய்ஞ்ஞானக் கனியே வருக வானந்தக்
கரும்பே வருக கரிப்பகன்று கடையே னுயவாட் கொண்டருணக்
குன்றே வருக வருள்பழுத்த கொடியே வருக முடிவின்மறைக்
கொழுந்தே வருக செழுந்தண்மதி கூடுங் குவட்டுப் பொலங்கிரிபோன்
மன்றோர் நிலவு திருவுறந்தை வாழ்வே வருக வருகவே
மாறாப் பவநோய் மாற்றுமலை மருந்தே வருக வருகவே. (௧௦)

சு.—வாரானைப்பருவம் முற்றிற்று.

# எ.—அம்புலிப்பருவம்.



348. மறைமேவு மத்திரி தவத்திலோங் கும்பரவை மகிழ்வுகொண் டார்ப்பவந்து - வாய்ப்பவள நகைநிலவு தோற்றியிர வலர்முக மலர்த்தியொண் கங்கைதாங்கி, யுறைமேவு மிந்திரவி னோர்வா ளிடங்கலந் தொருபுலவ னைத்தந் துவந் - தொண்பரிதி மறையவங் குழையொடு விளங்கிவண் டுறபங்க யங்கள் குவிய, நிறைமேவு கலையுடைக் காந்திமதி யென்றுபெயர் நிறுவிநின் றுயாதலா- னிகரென வறிந்தம்மை வம்மென வழைத்தன ளெவெண் ணித்திலச் சங்கமெங்கு, மறைமேவு துறையூ ருறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்ட ரண்டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௧)

349. மணிகிளர் நெடும்பாற் கடற்றுயை நேயமொடு மந்தரத் தந்தை புணர - வந்துமலை மகவெனப் பெற்றுய் விளங்குமெம் மானிடக் கண்ணுயினுய், திணிகிளர் தரச்சிவந் தெழுமாவை யத்துவரல் செயுமாத வன்பின்வந்தாய்- திகழ்பசுங் கதிர்தழைந் தெழுபுகலி யம்புலவர் தெள்ளமுது கொள்ளநின்றுய், பணிகிளர் முடித்தலை பரிக்குமுல கத்தளவில பல்லுயிர்ப் பயிரளித்துப் - பரிவி னின் றுய்தெரியி னின்னுநின் பண்பம்மை பண்பினுக் கொக்குமாமிக், கணிகிள ரறந்திக ழுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்டரண் டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௨)

350. சேருமுய லொன்றினை வளர்ப்பைநீ பரசமய சிங்கத்தை யிவள் வளர்த்தாள் - சிறுமானை யுடையைநீ யிவளுயிர்க் குயிராய்த் திகழ்ந்தபெரு மானையுடையாள், சாருங் களங்கனீ யிவளெக் களங்கமுஞ் சாரா வியற்கை யுடைய - தன்மையள் பிறப்பிறப் பென்னுங் களங்கமுந் தன்னடிய ருக் கொழிப்பா, ளோருமறி வுடையவல் லுநரும்வல் லாருநீ யொவ்வாயெனத் தெரிவர்கா - ணுளத்திது மறைத்திவ ளுனைக்கடி தழைத்திட வுஞற்றுமுன் றவமென்கொலோ, வாருமமு தப்பணை யுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாட வாவே - யண்டரண் டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாட வாவே. (௩)

351. மகவா யுனைப்பெற்ற பாற்கடலை யிவடந்தை மரபிலொரு வரை யுழக்கி - மகிழுநின் மனைவியரை யிவணகரி லொருசேவல் வல்லைபொறி போற்

கொடிகளும், தகவாக நீருடையும் வானதியை யிவடிருத் தாளொன்று மேகலக் கும் - தரணியொடு நீயுமொளி வட்கிட வியற்றவிவ டங்கையொன் றேயமையு மான், மிகவான் மிசைத்தருவன் விடுசூத் திரப்பிணிப் புண்டுமெலி கின்றதிங் காள் - வேண்டுமிவ டுணைனினக் கிஃதெண்ணி வருவையேன் மெய்யருள் பெற் றுய்யலா, மகவாவி சூழ்தரு முறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்டரண் டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௪)

352. ஏரணவு பாற்புணரி வடவா னலத்தொடு மியைந்துபன் னுட்பயின் றங்-கிமையவர் மதித்திட விடத்தொடு மெழுந்தனை யிருங்ககன முகடுசென்று, காரணவு பாந்தளங் காந்துற விழுங்கிக் கடித்துக் குதட்டியுமிழக் - கறையூறு முடல்பட்டு கின்றனை யுனக்குற்ற கயமையா வுந்தெரிந்துஞ்,சீரணவு மணிமுடிப் பல்லா யிரங்கோடி தேவர்சூழ் நிற்பநின்மேற் - றிருக்கடைக் கண்பார்வை செய் துவா வென்றம்மை திருவாய் மலர்ந்ததருள்கா, ணூரணவு வாட்கண் ணுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்டரண் டங்களு மகண்டமுங் கண்டவ ளொ டம்புலீ யாடவாவே. (௫)

353. கறமலி கடுக்கையணி யெம்பிரான் யோகுபுரி ஞான்றுமல ரோன் றிட்டவே - ணம்பியுடல் சுவைகண்ட கனலிகால் வழியெழீஇ நடுவுடல் சுடக் கறுத்த, நிறமருவு மதுபுகல நாணிமறு வென்றுபெயர் நிறுவியிர வின்கண்வரு வாய் - நிறைதவக் குரவற் பிழைத்துக் கொடும்பாவ நீணில நகைக்கவேற்றாய், மறமருவு வீரனாற் றேய்ப்புண்டு காய்ப்புண்டு மாய்ப்புண்ட நீயம்மைபால்-வரி லக் களங்கமும் பாவமுந் தேய்வுநொடி மாற்றிநன் குறவாழலா, மறமகள் சிறந் தரு ளுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்டபகி ரண்டமு மகண் டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௬)

354. ஒளிபாய் நிறத்திருச் சேடியர்க ளாலய மொருங்கடைப் பதுவு மெம்மா - னுறுசடைக் கங்கையொ டுறைந்ததுவு மெண்ணினிவ ளுனைவா வெ னத்தகாதாற்,களிபாய் மனத்தோ டழைத்துநின் றதுபெருங் கருணையென மன் றவுணராய் - கதிரவப் பகைவரவு கண்டிவ ணகர்ச்சேவல் காட்டுமுப காரமுண ராய், வளிபாய் விசும்பலையு மெய்ப்பாற விவணகர் மலர்ச்சோலை புரிவதுண ராய் - மதிக்கடவு ளென்றுபெயர் வறிதுகொண் டாய்நறவு வழியூற் றெழுந்து பாய, வளிபாய் கருங்குழ லுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண் டரண் டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௭)

355. காயப் பரப்பிலுனை விக்கிட விழுங்குங் கடுங்கொடிய தீயவரவங் [சிறு
கருணைப் பிராட்டிபெறு குழகன்மயில் காணுஉக் கலங்கியிவண் வரவஞ்
சேயத் துடன்குலவி யொருகுஞ் சரத்தோன்ற னெடிதிடுந் தன்சாபமு
நீக்கிக் களங்கமும் போககித் துளங்குமா றெடியாது செய்வன்மெய்யே
பாயப் பிருஞ்சடைத் தம்பிரான் றரணியொடு பாரித்த வாழியாக்கிப்
படருகின் வட்டவுட றேயா தளிக்குமிவள் பாததா மரையடைந்தா
லாயத் துடன்குல வுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே
யண்டரண் டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே.()

356. நெடியவனு நெடியநான் முடியவனு மிந்திரனு நிமிரிவர் முதற்பல் சுரரு - நிலவர்க மத்தின்வழி பூசித்து நேசித்து நிறைபேறு பெற்றுயர்ந்த, வடிவுடைய விப்பெருந் தலமான் மியம்பேசின் மாசிலார் நச்சுவிச்சு - வப்பிரா னுறைகின்ற காசிக்கும் வாசியென வாசிக்கு மறைகள்கண்டாய், தடியுடை முகிற்குலம் பயில்வா னொரீஇயம்மை சன்னிதா னத்துவந்து - தாழ்ந்துபின் சூழ்ந்துவினை போழ்ந்துமிக வாழ்ந்துநீ தண்ணளிக் குரிமை பெறலா, மடியவ ருளம்புகு முறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்டாண் டங்களு மகண்டமுங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௯)

357. பாணித்து நீசிற்ப தறியா ளறிந்திடி ற் பாட்டளிக் கூட்டம்வீழப் - பாயுங் கடாங்கவிழ்க் குங்கவுட் குஞ்சரப் பகவனை விடுப்பளவனே, வாணித் திலஞ்சிதற நினையொருகை பற்றிநால் வாய்க்கவள மாக்கிவிடுமால் - மற்றிளவ லுக்குரை செயிற்கொடிய வேல்விடுவன் வல்லையோ வதுதாங்கநீ நாணித் திரிந் தழல வுன்னைமுன் தேய்த்தவலி நந்துதாள் வீரனுமுள - னுடியிவை முழுதுமா ராய்ந்துவரி னுய்குவை நலம்பெறுவை யாதலாலோங், காணிப்பொன் மாளிகை யுறந்தைப் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யண்டரண் டங்களு மகண்ட முங் கண்டவளொ டம்புலீ யாடவாவே. (௧0)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

# அ.—அம்மானைப்பருவம்.



358. நிறைதரு முழுக்கலை மதிக்கடவுள் வாவென்ன நெடியாது வரவெடுத்து - நெடியசெங் குழைபாய் கருங்கண் களிப்புற நிமிர்ந்தபே ரழகு நோக்கி, மிறைதரு மனத்தொடுமன் றமர்நாடு வார்யாம் விளித்தபோ திங்குவர லாம் - விண்ணசத் தொல்லெனச் செல்லென வெடுத்தும் மிசையெறிவ தேய்ப் பவாய்ப்ப, வுறைதரு பசும்பொற் றசும்பொளி யசும்பூற வோங்குபொன் மா டத்தினுள் - ளொளிபாய வெண்டிசையி லருவிபாய் வரைமுழுது மொழு கொளிய மேருவேய்க்கு, மறைதரு முறந்தைப்பெண் முத்திட் டழைத்ததிரு வம்மானை யாடியருளே - யம்பலத் திடையாட வெம்மானை யாட்டுமயி லம் மானை யாடியருளே. (௧)

359. நளியெறி செழும்பொற் றகட்டுநெட் டேட்டுநறு நளினமனை யாட் டிபாலின் - னசையுறத் தழுவித் திளைத்தெழீஇ மீச்செல்லு நாயகப் பரிதியேய்ப் ப, வளியெறி முறச்செவி மறம்பாவு நாற்கோட்டு மால்யானை குளகுகொள்ள - வானுறு தேனு றெனப்பொலிய வூற்றுதேன் மடைதிறந் தோடியெங்கும், களி யெறி மனத்தர மடந்தையர் பயின்றிடுங் கனகநகர் மறுகுபாய்ந்து - கால்வைத் திடுந்தொறு மிசும்புற விசும்பிடை யசும்பொளிப் பொங்கர்காணு, மளியெறி யுறந்தைப்பெ ணவிர்பதும ராகப்பொ னம்மானை யாடியருளே - யம்பலத் திடை யாட வெம்மானை யாட்டுமயி லம்மானை யாடியருளே. (௨)

360. பாயொளிய செங்கையம் பங்கயத் தமரிளம் பைஞ்சிறை மடக் கிள்ளைமீப் - பற்பல தரம்பறந் துன்கையின் மீட்டும் பரிந்துவந் துறல்கடுப்ப, மேயதிரை சூழக விடப்பொறை பரிக்குமொரு விறலாமை முதுகுளுக்க - விரி தரும் பஃறலை யரந்தன் படங்கிழிய வெற்றித் திசைக்களிறெலாங், காய்சின முகுத்துப் பிடர்த்தலை கவிழ்த்தடற் காத்திர மடித்துநிற்பக் - கடலள றெழப் பரிய கனகாச லம்பொருவு கதிர்மணித் தேர்செல்வீதி, யாய்தமி ழுறந்தைப் பெண் முழுமரக தக்கோல வம்மானை யாடியருளே - யம்பலத் திடையாட வெம்மானை யாட்டுமயி லம்மானை யாடியருளே. (ரு)

361. செந்நிற விதழ்க்கமல மலரின்மே னின்றுபொறி செறிவண்ட ரெழுவ தேய்ப்பச் - செந்நெற் படப்பைச் செழும்பழன நின்றெழுஞ் சினைவரால் விண்ணகத்துப், பொன்னிறக் காமதே னுவின்மடித் தலமுட்டு போதுகன் றென் றிரங்கிப் - பொழிநறும் பால்வெள்ள மடையுடைத் தோடியலை பொங்கிநறு நாற் றம்வீசி, மின்னிற மருப்புப் பொருப்புகணெடுந்தொண்டை மீமிசை யெடுத்து நீந்த - மிளிர்பொற் கொடிஞ்சியந் தேர்தெப்ப மாகநெடு வீதியிற் புக்குலாவு, மந் நிற வுறந்தைப்பெ ணவிருமுழு நீலப்பொ னம்மானை யாடியருளே - யம்பலத் திடையாட வெம்மானை யாட்டுமயி லம்மானை யாடியருளே. (சு)

362. விரிமல ரிருந்தவர் முதற்றனைச் சேடியர்கள் வீசுமம் மனைகை பற்ற-வேண்டிவல மோடியு மிடத்தோடி யுந்திரிய மேவுமம் மனைசெல் வழிநின், வரிமதர் மழைக்கண் டொடர்ந்தோட விருசெவி வதிந்தபொற் குழைவில்வீச- வண்கைவளை யோலிட் டரற்றக் கருங்குழலில் வரியளிக் குலமுமார்ப்பக், கரியமுது மேதிக ளுழக்கச் சினந்தெழுங் காமரிள வாளையெழில்சேர் - கற்பகக் காவின் கழுத்தொடி தரப்பாய் கருங்கழனி புடையுடுத்த, வரிலறு முறந்தைப் பெ ணணிப்பொ னம்பவள வம்மானை யாடியருளே - யம்பலத் திடையாட வெம்மானை யாட்டுமயி லம்மானை யாடியருளே. (எ)

வேறு.

363. வெதிர்படு தோளிணை மங்கையர் நம்பால் வீணுள் படுமென்று
மென்பெடை யைத்தழு விக்குயில் புணரும் விதம்பா ரீரென்று
மெதிர்படு வேனிற் பருவமி தெற்றுக் கெய்திய தோவென்று
மிளமென் கொம்பர்த் தழுவியு நகைசெய் தெழிலுட னிருகல்செய்துங்
கதிர்படு கொங்கை திறந்துந் தங்கள் கருத்தை யுணர்த்தமரீஇக்
காதல ரொன்று செயப்பொங் கோதைக் கவின்மே கலையொடுவெண்
டதிர்படு பொழில்சூழ் கோழியில் வாழ்மயி லாடுக வம்மனையே
யகிலமு நிகிலமு முதவிய திருமக ளாடுக வம்மனையே. (அ)

364. பற்பல மணிகள் குயிற்றிய செம்பொற் படரொளி யடருசற்
பருநித் திலமணி நீள்வட முயரிய பைங்கமு கிற்புனையா
விற்பொலி நுதலிய ரோடிள மைந்தர்கள் மிகுமுவ கையினேறி
மெல்ல வசைத்தலு மக்கமு கசையா விண்ணுல கத்தமருங்
கற்பக நற்கொம் பிற்புனை யூசல் கலித்தா டிடவிரைவிற்
கவின் வசைப்ப விறும்பூ துற்றுக் கடவுண்மி னார்மகிழு

மற்புத வளமலி கோழியில் வாழ்மயி லாடுக வம்மனையே
யகிலமு நிகிலமு முதவிய திருமக ளாடுக வம்மனையே. (எ)

வே று.

365. பாருந் துளைத்துக் கீழ்போகிப் படர்வான் முகடு திறந்துமிசைப்
பாய்ந்து பொலியுங் கோபுரத்திற் பசும்பொற் றகட்டிற் பதித்தநிறஞ்
சேரு முழுச்செம் மணிப்பிரபை திகழத் திரண்டு தழைப்பதனாற்
செழுந்தண் டுளபச் சூகரமுந் திரம்பா மறைக ளொருநான்கு
மோரு மனமுந் தெரிவரிய வொருவ ருருவ மீஃதெனவே
யும்பர் முதலோர் கரங்கூப்பி யுருகித் துதிக்கு மரவொலியே
யாரு முறந்தைப் பெண்ணரசி யாடியருள்க வம்மனையே
யடியா ருளத்துக் குடியாளு யாடி யருள்க வம்மனையே. (அ)

366. தெருள்சே ருள்ளத் தொருமூவர் திருவாய் மலர்ந்த திருப்பாடல்
திகழ்வெண் சுதைமா ளிகைமீது தீபம் பொலிய வதன்முனுமீஇக்
கருள்சே ரிம்மை வினையொழிப்பார் கருதி யுருவேற் றிடக்கண்டு
கயிலைப் பொருப்பி லெழுந்தருளிக் கழறிற் றறிவார் செம்மேனிப்
பொருள்சேர் பெருமாற் கினியவுலாப் புறங்கேட் பித்த துறழுமெனப்
புலவர் மகிழ்ந்து கொண்டாடப் பொங்குஞ் சைவத் தன்புதழைத்
தருள்சே ருறந்தைப் பெண்ணரசி யாடியருள்க வம்மனையே
யடியா ருளத்துக் குடியாளு யாடி யருள்க வம்மனையே. (௯)

367. மாடு மயில்க ணடமாட மாதர் குழலில் வண்டாட
மனைக டொறும்வெண் கொடியாட மலர்ச்செங் கொடியு முவந்தாட
நீடு துறைக டொறுங்களிறு நிலவும் பிடியு நீராட
நீறு புதைத்த முழுமேனி நிகரி லவருங் கூத்தாடக்
காடு புரிமென் குழல்சுமந்த கருங்கண் மடவார் குனித்தாடக் [ண்
கண்டோர் மனமுஞ் சுழன்றாடக் கவின்செ யிவைகண் டியர்வருங்கொ
டாடு முறந்தைப் பெண்ணரசி யாடி யருள்க வம்மனையே
யடியா ருளத்துக் குடியாளு யாடி யருள்க வம்மனையே. (௰)

அ.—அம்மானைப்பருவம் முற்றிற்று.

# ௯.—நீ ரா ட ற் ப ரு வ ம்.



368. அங்கட் பிசைந்தகட் டெழுபசித் தழன்முழுகி யழுபுலிக் குருளையுண்ண - வன்பினின் சுவைநனி பழுத்துவட் டெறியுமமு தனையபால் வெள்ளமருளுந், திங்கட் கொழுந்தணி பிரானெனப் பரசமைய சிங்கப் பறழ்க்கு வயிறு-தேக்கியெதிர் கொள்ளவின் பாலருளு மம்மைநின் சேடியர்கள் சூழநின்று, வெங்கட் கடுங்கொலைய வேழக் குழாத்தையிகல் வெற்புக் குழாத்தொடுங்கீழ் - மேலுற வுருட்டித் திரைக்கைகொடு பொன்னுமழன் மின்னுமணி யுந்தரளமும், பொங்கக் கொழித்துச் செழித்துச் சுழித்துவரு பொன்னிநீ ராடியருளே-பொன்னியல் சிறந்தவெயின் மன்னிய வுறந்தைமயில் பொன்னிநீ ராடியருளே. (க)

**369.** முற்றுங் கயற்றொகுதி கட்குடைந் திரியுமிள மோட்டாமை புற வடிக்கு - முன்னிலா தோடும்வியல் வால்வளை களங்கண்டு முரிதரும் வராலல வனு, மற்றுங்கணைக்கான் முழந்தா ளிணைக்கண்டு மறுகுமென் றுரைசெய்தமா- மாதர்கொண் டாடவவர் தொகுதிநடு நின்றுநல மருவுமலை யரையன்மகணி, பற் றுங் குலைக்கண்வளர் கந்திகள் கழுத்திறப் பாகற் பழங்கள்கிழியப் - பந்திவளர் தேமாங் கனிக்குலை முறிந்திடப் பரிதிமணி வயிரமுத்தம், பொற்றிரைக் கையா லெடுத்தெறிந் தார்த்துவரு பொன்னிநீ ராடியருளே - பொன்னியல் சிறந்த வெயின் மன்னிய வுறந்தைமயில் பொன்னிநீ ராடியருளே. (உ)

**370.** திருமலர்க் கார்க்குழ லவிழ்ந்துசை வலமெனத் திகழ்தரக் குழை யடர்ந்து - செறிகட் கருங்குவளை செங்குவளை பூப்பநகை செய்யொளியின் முழு தியாங்குக், குருமலர் முருக்கிதழ் விளர்ப்பநுழை நுண்ணிடைக் கொடிதுவண் டொசியவமரர் - கோற்றொடி மடந்தைமார் மொய்ப்பவடி யாருளங் குடிகொ ண் டிருக்குமம்மே, வெருவவரு வெம்புலியை யம்புலியின் மோதியுகண் மீனை யம் மீனின்மோதி - வெள்ளைக் களிற்றொடு கருங்களிறு முட்டவியன் விண்ணத் தெடுத்தெறிந்து, பொருகட லகட்டைக் கிழித்துச் சுழித்துச்செல் பொன்னிநீ ராடியருளே - பொன்னியல் சிறந்தவெயின் மன்னிய வுறந்தைமயில் பொன்னி நீ ராடியருளே. (ஙு)

**371.** தண்ணற வொழுக்கிமக ரந்தஞ் சிதர்ந்தசெந் தாமரை மலர்க்கானி னுட் - டாவில்பொற் புடைநடைக் கன்னியன் னப்பெடை தயங்குவது போலு மெழில்சே, ரொண்ணிற வுடுக்கண நடுப்பொலியும் வெண்ணில வுடுத்தெழுந் திங்கள்போலு-முறுதுணைச் சேடியர்கள் சூழநடு நின்றிமய வுயர்வரைத் தோன் றுபிடியே, மண்ணிறை யிரப்பவொரு முனிவாய் நுழைந்துசெவி வருகங்கை போலாதுவிண் - வளரிறை யிரப்பவொரு முனிகமண் டலநின்று வார்ந்தளவி லுயிர்வளர்த்துப், புண்ணியம் பூத்துலகி லெஞ்ஞான்று மன்னிச்செல் பொன் னிநீ ராடியருளே - பொன்னியல் சிறந்தவெயின் மன்னிய வுறந்தைமயில் பொன்னிநீ ராடியருளே. (ச)

**372.** கயல்பாய் கருங்கட் டுணைச்சேடி மார்களிரு கைமருங் குறநின்று செங் - கமலக்கை யானினது திருமேனி வருடவொளி காட்டரிச னப்பொடியு மெல், லியல்பாய் நறுங்குங் குமப்பொடியு நானமு மிழுக்குதக ரமுநனியளை இ- யேர்பெறக் குடைதோறு மம்மணமு மம்மைநின் னியற்கைமண முந்தழைப்ப, முயல்பாய் பனித்துண்ட மாலைப் பிராற்கிகலி முன்வந்த தென்றுவெங்கண் - மூரித் தடக்கைமத வானையை யுருட்டிவிட மூண்டெழத் தந்ததென்று, புயல் பாய் நெடுங்கடலை மோதியதி லிட்டமெகிழ் பொன்னிநீ ராடியருளே - பொன் னியல் சிறந்தவெயின் மன்னிய வுறந்தைமயில் பொன்னிநீ ராடியருளே. (ரு)

வேறு.

**373.** அம்ம வடுக்கற் பொறையாற்று தம்ம வோவென் றரற்றுமிடை
யயில்வே லனுக்கி யம்பலைக்கு மங்கண் மடவார் பயில்பொழிற்கண்
விம்மு கருக்கொள் குயினதிர்ந்து விரியுஞ் சினையை மடக்கியதன்
மீது தவழ்த லைந்தருக்கள் விதிர்ப்ப வடர்ப்ப தாலுமெரி

தும்மு றுதிவாட் பகையுடன்மேற் றேற்ற முடைய தாலுமெடுஞ்
சுரர்கோ னூர்தி தனைநிறுவித் துனிசெய் யாமந் நகைதல் பொருடும்
பொம்மல் வளஞ்சே ருறந்தைக்கர்ப் பொன்னே புதுநீ ராடுகவே
புனிதற் குடன்முன் னுன்கானுய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (௬)

374. களிமிக் குடன்று வீரமணங் கல்லிற் கமழ வினனுடலக்
கடறு புகுந்து திறல்வானங் கலந்து சூர்மெல் லியர்ப்புணரு
மொளிமிக் கவர்போல் வாளைதம்மி லுடன்று நடுமண் டபத்துணத்
துலவாப் புலவு மணநாற வுரிஞ்சி யெழுந்து குலைக்கமுகி
லளிமொய்த் தொளிர்தே னடைகீறி யதன்வாய்ப் புகுந்து வான்யாற்றை
யணுகிப் பன்மீ னொடுகலவி யன்பிற் புணர்ந்து விளையாடும்
புளினத் தடஞ்சேர் திருவுறந்தைப் பொன்னே புதுநீ ராடுகவே
புனிதற் குடன்முன் னுன்கானுய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (௭)

375. வருந்தி யுயிர்த்த வேற்றைநனி வருத்தம் புரியும் படையைநெடு
மாலோர் பிறப்பி லாதரித்த வஷேவ பகைகண் டவன்முன்னே
னிருந்த திணையிற் புகுந்துபகை யியற்றல் போலம் மான்மனையா
ளில்லைக் கறித்துக் குதட்டிமக னெடுக்கும் படைக்கா டுழக்கியுயி
ரருந்து நமனை யடர்த்தவரு ளறிந்தெம் மான்பொற் சடைக்கடுக்கை
யமருந் திணையுட் புகாதுகவை யடிய பிணர்க்கோட் டிணைமேதி
பொருந்து மருதத் திருவுறந்தைப் பொன்னே புதுநீ ராடுகவே
புனிதற் குடன்முன் னுன்கானுய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (௮)

376. உலகத் துயிர்கட் குணவாக்கி யுணவு மாகு மிதிற்கந்த
முறுதென் பார்முன் றேன்றியசேய்க் கொருபேர் கந்த னெனலறியார்
பலரு மஃது நிற்கநமைப் பரிக்குங் குணத்தான் மிகுகந்தம்
பரப்ப லாமென் றுனிக்குமுதம் பங்கே ருகமே முதன்மலரா
வலர்முத் தரும்பி மரகதங்காய்த் தடர்செம் பவளம் பழுத்துமிழு
மந்தண் கந்திப் பொழினடுவ ணுவிப் புனற்கு மிக்கமணம்
புலர்தற் கரிதாய்ச் செயுமுறந்தைப் பொன்னே புதுநீ ராடுகவே
புனிதற் குடன்முன் னுன்கானுய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (௯)

377. அங்கண் வருக்கைக் கனிவிரலா லகழ வகழக் குழிந்தாழ்ந்த
வதுகண் டிட்சென் றெருகடுவ னவிருஞ் சுளைகொண் டெழும்வேலை
தெங்கிற் கவியொன் றுகுத்தபழஞ் செறிந்தவ் வழிமாற் றிடக்குருகுச்
சிலம்போ வெனவுட் டிகைத்ததனைத் தெளிந்து நீக்கி வெளிவந்து
தங்கு பிலத்து ணின்றுவழி தகைகற் சிதறி வந்திளைய [சீர்ப்
தம்பி யொடும்போர் பொருதான்போற் றுயக் கடுவ னொடும்பொருஞ்
பொங்கர் மலிந்த திருவுறந்தைப் பொன்னே புதுநீ ராடுகவே
புனிதற் குடன்முன் னுன்கானுய் பொன்னிப் புதுநீ ராடுகவே. (௧௦)

௯.—நீராடற்பருவம் முற்றிற்று.

---

# கω.—பொன்னூசற் பருவம்.



378. கதிர்விரவு வயிரக் கொழுங்கா ணிநீ இப்பிரபை கஞல்பவள விட்ட மிட்டுக் - கஞ்சுலை மழுக்குநித் திலவடம் பூட்டிக் கதிர்த்துலகம் யாவும்விற்க, வதியுமா ணிக்கச் செழும்பலகை சேர்த்துநறு மலர்பெய்து மறையின்முடியை - மானப் புனைந்தமைத் தினிதிணர மாதர்கள் வணங்கிநிற் கின்றனர்களால், மதி பக வெழுங்கவி ழிணர்ச்சூதம் வென்றுமருண் மாயச் சிலம்புகொன்று - மா மயி னடாவிவரு மைந்தரோ ரிருவரை மகிழ்ந்தெடீஇ வேறுவேறு, புதியபொற் றொட்டிலிட் டாட்டும் பிராட்டிநீ பொன்னூச லாடியருளே-பூந்தட நிலாவுபொ ழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியருளே. (க)

379. வதிவுற்ற வெண்பனி துவன்றியொரு வெள்ளிமால் வரையென விளங்குமிமய - வரைவா யரிந்தெடுக் கும்பளிங் கனையநீர் வாய்ந்ததண் சுனையகத்து, நிதியொத்த பூந்துணர்க் கொன்றையஞ் சிறுகாய் நிகர்த்துவரு வார்க்கருப் பை - நேரிணை யெயிற்றுமுட் டாட்டா மரைத்தொட்டி னிலையசைந் தாடலேய்ப்ப,மதிசத்தி யாய்விந்து வாய்மனோன் மணியாய் மகேசையா யுமையாய்த்திரு-மகளாய்கல் வாணியா யின்னும்வே றுயிறை வருக்கியைய நின்றுயிர்க்குப்,பொதிவுற்ற மலவிரு ளொளித்தின்ப மருள்புனிதை பொன்னூச லாடியருளே - பூந் தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியருளே. (உ)

380. சீதமா மலர்வதியு மிருளைமா ரிருவருஞ் சேர்ந்துபொன் னூசலாடித்
திகழ்வதென நின்றிருக் கண்கள்பொற் றேடுறு செழுங்கா தளாவியா
தாதளா வியநறுந் தாமரை யிருக்குநின் றன்னெழில் விளக்கியாங்குத் [டத்
தளிர்புரை நின்கர தலங்குடி புகுந்தவோர் தரும்பசுங் கிள்ளையாட
வேதன்மா லறியாத நாதனூர் வாமத்து வீற்றிருக் கின்றதாலவ் [த்துப்
வித்தகர் முடிக்கொன்றை யீன்றகனி யொருபால் விளங்கிக் கிடத்தலொ
போதளாய் நிறைகருங் கூந்தற் பிராட்டிநீ பொன்னூச லாடியருளே [ளே.
பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியரு

381. செங்கேழ் மணிப்பலகை நடுவணீ வதிதன்முன் றிருவாஎ வாய்ச் செழியர் கோன் - நீதற வுஞற்றுசெங் கோடு வெழுந்தவத் திருவங் தெரித்துநிற பச், சங்காழி தங்கிய குடங்கையா னெடுநறுஞ் சததள மலர்ப்பொகுட்டிற் - றங்குவோ னிற்றைவரை நாடியுங் காணரிய தம்பிரான் கழிதலை யெடீஇக், கொங்கார் கதுப்பினர்கள் பாலிரந் தானெனுங் கூற்றினுக் கையமெய்தக் - குலவுமொரு முப்பத் திரண்டறமு மோங்கவருள் கூர்ந்துகரை கொன்றிரைத் துப், பொங்கோத வேலையுல குய்யப் புரிந்தபெண் பொன்னூச லாடியருளே - பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியருளே.(ச)

382. ஓங்கொளிநம் மகிழ்நனுர் தாமரை யிருக்கைகொண் டியோகத் திருந்தவர்நா - ளூற்றுடல் லுயிரெலா முறுபோக மில்லா துணங்குத லறிந்துவா னேர், வீங்குமயல் புரிதரத் தாண்டவிந் தானைநுதல் வெந்தழலி னூற்கனற்றி - மேவுமரு ளாற்பின்பு நம்மைப் புணர்ந்தின்ப மிகுமுயிர்க் கருளினுரால், நீங்கி யிஃ தின்னுமொரு காலக் குணங்கொள்ளி னீடின் புயிர்க்கருளவே - ணினைவுஞ் செயானியா மேமயல் புரிந்திடுவ நேர்ந்தெனக் கொண்டதொப்பப், பூங்கணை கருப்புவிற் ருங்கியகை யம்பிகை பொன்னூச லாடியருளே - பூந்தட நிலாவு பொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியருளே. (ரு)

383. எண்ணுதற் கரியபல புவனப் பரப்பெலா மினிதுதரம் வைத்து யிர்த்து - மிளமுலைகள் சரியாது கண்கள்குழி யாதுமல ரேந்துகூந் தலும் விளர்ப்பை, யண்ணுத லுறாதிளமை நீங்காது கன்னியே யாகியெஞ் ஞான்று முண்ணெக் - கள்ளூறு மன்புடைய வடியருக் கமுதூறி யானந்த மாகுமம்மே, கண்ணுத லுடைப்பரம யோகியுழை யொன்றுசெங் கைக்கொண் டிருத்தல் போலக் - கதிர்விரவு கோற்றொடி புனைந்துதளிர் வென்றழகு காட்டுமங் கைத் தலத்திற், புண்ணியக் கிளியொன்று கொண்டபரி பூரணீ பொன்னூச லாடி யருளே - பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடி யருளே. (சு)

384. ஒருவார் பெருந்தூ ணகட்டைக் கிழித்துமறி யோங்கிரணி யப் பெயரினே - னுடல்வகிர்ந் தெழுநர மடங்கல்வலி செற்றெழுந் துலவுபிர ணவ களிறும்விண், டருவாளி வேண்டமுனி குண்டிகை கவிழ்த்துநதி தந்தவொரு கோட்டுமோட்டுத் - தவழ்கடாக் களிறுங்கை வளருங் கரும்பினைத் தக்கவுண வாம்வழக்கால்,வெருவாது கவரவரு மென்றுமஃ தன்றியும் வேழமென் பெயர் பெற்றதால் - வெகுளுமென வெண்ணியு மவைகூட் டுணுங்கால் விலக்கத் தரித் ததேபோற், பொருபாச மங்குசங் கொண்டபரி பூரணீ பொன்னூச லாடியரு ளே - பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடி யருளே. (எ)

385. தேங்கொளிய வெள்ளித் தசும்புடைத் தாலெனத் திகழ்முகை யுடைத்துமலருஞ்-செறிவெள் ளிதழ்த்தா மரைப்பனுவ லாட்டிபொற் றிருவூசல் பாடியாட, வாங்குகழை விற்குமர னைத்திருக் குளநடு வயங்குகட் டாமரை யினன் - மாட்டிய பிரான்றுகிர் பழுத்தனைய சடைமுடி வயங்கத் துளக்கியாட, வோங்குவரை மீதுநால் வேயுகுத் திடுமுத்த மொளிர்தல்போற் பொம்மன் முலை மே - லொழுகெழிற் றேள்புனைந் தவிர்முத்த மாலைதாழ்ந் துலவிவில் வீசியா டப்,பூங்கொடி மருட்டுநுண் ணிடையாட வம்மைநீ பொன்னூச லாடியருளே- பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியருளே. (அ)

386. பேழ்வாய்த் தரக்காவு பயிறலா லுடைதலை பெருந்தழ லிருத்த லாற்றேன் - பெய்யிதழி யுழையுறைத லாற்கமட மோடுறல் பிறங்கலாற் சுரி வனைவிடம், வாழ்வாய தாற்குறிஞ் சித்திணைமு னைந்திணையு மன்னுதன் னுட

லமைத்த - மகிழ்கனே போலிடை மடங்கரேள் வேய்கற்பு வாரமுல் முலைக் கோக்குமை, சூழ்வார் குழற்கான் றிருக்குமான் பொற்கவுட் டூயநீர் கிலைவில் வேழஞ் - சுடர்படைச் சங்குகைகை முத்தபிலை முதலாத் தொகுத்துரு வமைத் தவம்மே, போழ்வாய்ந்த மாவடுக் கண்ணெம் பிராட்டிநீ பொன்னூச லாடி யருளே - பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடி யருளே. (கூ)

387. தாவிலொளி மீனுமணி நூபுரம் விராவுபொற் றாமரைத் தாளு மருணன் - றன்னிளங் கதிரொத்த செம்பட் டுடுத்தித் தயங்குமே கலைநுணி டையு,மர்விய னறுந்தளிர் மருட்டிவர தாபயம் வழங்குசெங் கையுமெய்ஞான- மடைதிறந் தொழுகுமிரு கொங்கையு மிலங்குதிரு மங்கலச் சங்கமிடறுங், காவி நிகர் கருணைபொழி விழியுமுத் தணிகவின் காட்டுநா சியும்வள்ளைநேர் - கதிர் மணித் தோடுடைக் காதுமிள மூரலுங் கமலமுக மும்பொலிதரப், பூவின்மட வார்பரவு காந்திமதி யம்மைநீ பொன்னூச லாடியருளே-பூந்தட நிலாவுபொழில் வாய்ந்தவுறை யூரிறைவி பொன்னூச லாடியருளே. (கo)

கo.—பொன்னூசற்பருவம் முற்றிற்று.

---

* ஸ்ரீ காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

உ

## சிறப்புப்பாயிரம்.

388. தாமேவு திருமூக்கீச் சரப்பஞ்ச வன்னேசச்
சோதி பால்வாழ்
ஏமேவு திருக்காந்தி மதிபிள்ளைத் தமிழமிழ்த
மெமக்கீந் தானல்
காமேவு தமிழ்ப்புலமைக் கோரெல்லை யாயுறைந்த
நல்லோன் வல்லோன்
மாமேவு சிரகிரிவாழ் மீனாட்சி சுந்தரநா
வலவ ரேறே.

---

* இந்நூல், சென்ற விரோதிகிருதுளுல [கி. பி. 1852] வைகாசிமீ பதிப்பிக்கப்பெற்றது.

# திருக்குடந்தை

# ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்.



## பாயிரம்.

### ஆதிவிநாயகர்.

389. பூமேவு கொன்றைப் பொலஞ்சடா டவியிற் புதுப்பிறை நிலா வெறிக்கப்-போகுமிட மின்றித் துணங்கற லடிக்கீழ்ப் புகுந்தது படிந்தவேய்ப்ப, நாமேவு வினையுடைக் கருமூடி கப்பரி நயந்திசைய தாயகண்டை - நாதிக்க மிக் குலவு மாதிக்க டக்களிறு நன்கெமதுள் வாரிகொளலான், மாமேவு பிரமன்முற் பற்பல்புவ னங்களினு மருவுப லுயிர்க்குமென்று - மங்களந் தருமிறைமை தன் னிடத் தன்றியயன் மாட்டில்லை யெனல்விளக்கப், பாமேவு தெய்வமங் களநாய கிப்பெயர் பரித்தமுத கும்பநாதர் - பாலருளின் மேவுங் குடந்தைப் பிராட்டி யைப் பரவுநற் றமிழ்தழையுமே.



## க.—காப்புப்பருவம்.



### திருமால்.

390. பூமாலை சூடுமொரு கும்பம் பொருந்துபரி பூரணப் பரமர்சகல - புவனப் பரப்புயி ரனைத்துமின் பக்களி பொருந்தவிரு கும்பநறிய, தேமாலை சூடிப் பொருந்தப் பொறுத்தநுண் சிற்றிடைக் கொம்பைவம்பைச்-செறிபொழில் சுலாயகுட மூக்கமரு மங்களச் செல்வியை யுவந்துகாக்க, மாமாலை யைம்பான் மலர்ப்பசுங் கொடியையகன் மார்பின் புறத்துவைத்த - வண்ணந் தெரிந்தும் பொறுத்திருந் தாணில மடக்கொடி யெனத்தெரிந்து, பாமாலை சாலுமொரு கோட்டின் புறத்தும் பராவிய வயிற்றகத்தும் - பண்பினப் படிமகளை வைத்து மகிழ் வித்துமகிழ் பைந்துழாய்த் தோளண்ணலே. (க)

### அமுதகும்பேசர். வேறு.

391. பொன்செய்கொன்றையொடு மின்செய்வெண்பொடிபொ லிந்தமைந்த மருமந்தனிற்றேக்கடி - பொன்றலின்றிமுகை விண்டதண்டுளவு பொங்குசந்தமும ளைந்திடச்சேர்த்தவர், பொன்புணர்ந்தவம டந்தைபின்றிகழ் புறந்தழும்படியு மம்பெனக்கூட்டினர் - புங்கமங்கையவள் வெம்புறங் கருணை பொங்கநன்கமரி ரும்புகழ்க்காட்சியர்,

கொன்செய்தொண்டருட னண்டருங்குழுமல் கொண்டிறைஞ்சநவி லம்பலக்கூத்தினர்-கொங்குதங்குமல ரின்கணங்கையர்கு ழைந்துகும்பிடுகெருங்களச்சீர்த்தியர், குங்குமங்கலவு மென்புயங்கொளொரு குன்றர்குன்றமர்பெ ருந்திறற்பேற்றினர் - குன்றலின்றிமறை யந்தணன்றுசெறி கும்பலிங்கர்சர ணந்தலைச்சூட்டுது,

மன்செயன்புடையர் நெஞ்சமென்றிசை மலர்ந்தகஞ்சமம ரஞ்சநற்பேட்டினை - வஞ்சநெஞ்சர்கன வின்கணும்புகன் மறந்திருந்தவரு ளம்மையைப் பாற்பசு, வந்துமுன்பொர்புன றந்திறைஞ்சவுண் மகிழ்ந்தசுந்தரியை யண்டமுற்றேத்திட-மன்றநன்றருள்சு ரந்துநின்றருண்ம ணந்தகொம்பையெரு வம்பையிட்டார்த்திடும்,

மின்செய்கொங்கையமு தங்கவர்ந்தோர்மழ வென்புனைந்துருகு செந்தமிழ்ப்பாச்சொல-வின்பவுந்தியுயிர் முங்கமுன்புதவி யெஞ்சலின்றியொளிர் வஞ்சியைத்தீட்டரி, தென்றணங்குகளு ளங்கொள்சந்தவுரு வின்பசுந்திருவை நம்புமுட்பேற்றினை - யென்றுதங்குமதி லங்குடந்தைநக ரங்கண்மங்களம டந்தையைக்காக்கவே. (உ)

## ஆதிவிநாயகர். வேறு.

392. பார்தரு நான்முக னோர்தலை யேற்றொளிர் - பான்மையர் மான்முகி லூர்திற மேய்ப்புற, வார்தரு மோதகர் மூடிக மேற்பொலி-யாதிவி நாயகர் தாண்மல ரேத்துது, மோர்தரு வார்மன னூடவிர் பேற்றினை-யோமுத லாமறை யோலிடு வாழ்க்கைமெய், தேர்தரு தேவர்கள் சூழ்குட மூக்கமர் - தேவியை யோவலில் காவல தாற்றவே. (ரு)

## முருகக்கடவுள். வேறு.

393. அருமறைக்குடிலை யுளதுரைத்துநவி லறையிருக்கெனவி னவாமடக்குபு நீண்முடித்தாக்கிமேல் - லலரவற்சிறையி னிடுபுமுக்கணிறை யவனிரப்பவிடு ஞானதேயக்கும ரேசனைக்காப்பொலி,

குருமணித்தவிசி னமரிறைக்குமகள் கொழுமலர்க்கைதழு வேர்சால்புயத்தனை நீள்வரைப்பாற்றுதை - குறவர்பெற்றவொரு மடநடைக்குமரி கொழுநனைப்பொருவில் காலாயுதக்கொடி யாளனைப்போற்றுதும்,

மருமலர்க்கணமர் மகளிரைத்தொழுநர் மருவுறத்தருகண் மானுளேமுற்கொடு மாமலப்பூட்டற - வழுகிலைத்தகுதி யொழியெமக்குமொழி வகையனுக்கிரக மேயோவறப்புரி வாலனைப்பேட்டினை,

யுருகுபத்திமைய ருளவளத்தளியி னொளிர்விளர்க்கையமு தேயாமொழிச்சியை யாரணப்பேற்றினை - யொருகுடத்தமரு மிருவருக்கரிய வொருவர்பக்கமமர் மாதேவியைப்பெரு வாழ்வினைக்காக்கவே. (ச)

## பிரமதேவர். வேறு.

394. ஈன்றவத் தில்லவளு முணவுமா கப்புவியு மியல்கடி மணஞ்செய்தேமு - மினியவுவ ளகமுமா கக்கடலு மாலையு மிருப்பிடமு மாகவனமுந், தோன்றவழி யுங்குடையு மாகவரை யுஞ்செய்து சுதன்மகன் றிறவுகோலாத் - தூயதாய் மனைவிதற் குறையுளுஞ் செய்துமகிழ் தோன்றனுன் முகனளிக்க,

நான்றசடை யார்க்கும்ப நாயகரெனும்பெயர் நயத்தல்கண் டங்கண்மீன - நாயகி
யிடைச்சிங்க நாயகி யருட்கன்னி நாயகி யறம்பலவும்வாழ்,ஆன்றகைக் கடகநா
யகிகாது மகரநா யகிநுதற் றனுநாயகி - யடியமிதை யத்துலா நாயகி யெனப்
பல வமைந்தமங் களவுமையையே. (௫)

## இந்திரன்.

395. ஓங்குதிரை பலவெழும் பாற்கடற் கருவூல முதவுபல பொருள்க
ளுள்ளு - மொருதம்பி பாகமோ ரரமொரு பெண்ணமு துடன்கழிய மூத்ததற்
குப், பாங்குயர் விசேடபா கம்பெண்கள் பலர்தருப் பலகாம தேனுவென்னும் -
பசுநிதிய மணியானை பரியாதி பெற்றுமகிழ் பண்ணவர்க் கரசுகாக்க, வீங்குகரு
ணைப்பிழம் பாயகும் பேசர்க்கு மேவுதாய் தமைதங்கை - விழைமனைவி யாகி
யொரு தான்மருவ லாலவர்செ மேனியிற் பாதிகொண்டு, தேங்குபல வோடங்க
மல்லர்த வேணியிற் சீகரக் கங்கைமங்கை - செறிதரத் தகவினமர் வித்துமகிழ்
மங்களச் செல்வச்செ ழுங்கொடியையே. (௬)

## திருமகள். வேறு.

396. ஆரு நினைப்பா கியதிறப்பு மடரு மறப்பா கியவடைப்பும்
ஆய தொழிலை நாடோறு மாற்றுஞ் சகல கேவலம்போ
லோரு மகன்பே ரனுமுடன்வந் துதித்த வனுமா மிருபுலவ [வாம்
ருரைத்த வியற்று மிதழ்க்கதவத் தொண்பூ மனையாள் பதம்பணி
பாரும் விசும்பு முய்யவொரு பகழி சிலைக் கொண்டமுதம்
பரவு மொருகும் பஞ்சிதைத்த பரமர் போற்ற ஞானசுதை
வாரு மிருகும் பம்பரித்து வரிவிற் கழையு மலரம்பு
மாணக் கொண்ட மங்களமா மயிலை யினிது காக்கவென்றே. (எ)

## நாமகள்.

397. கற்று வெனவுட் கரைந்துருகக் கல்லா வெமது வாக்கிடத்துங்
கலந்த கருணை யாற்பிறந்து கதிக்குஞ் சீர்த்தி யுடம்பினுக்கும்
வற்று வதற்குக் காரணமாய் வயங்குந் தெய்வ வுடம்பினுக்கும்
வருவேற் றுமைமாற் றியவெண்டா மரைப்பி ராட்டி பதம்பணிவாஞ்
சற்று தரவு கொடுத்ததுவே சார்பா வயங்கி யதுபெருக்கித்
தனுவா மலமா திகடவிர்த்துத் தனித்த வான்ம மடவாரை
முற்று வொருதற் குரியதவன் முகிழ்க்கும் போக முறவிடுத்து
முடியா மகிழ்கூர் குடமூக்கு முதல்வி தனைக்காத் தருளென்றே. ()

## துர்க்கை.

398. சயங்காத் திருக்கு மடங்கல்விடு தறுகண் மகிடந் தலைசாயத்
தகுவ மகிடத் தலைசாய்த்துத் தயங்கு மணியா தனம்பரிக்கு
மியங்காச் சிங்க மிவரமர ரெவரு காணத் தலைக்கொள்ள
வியங்குஞ் சிங்க மிவர்கன்னி யெழிற்பொற் பாத முடிக்கணிவா

முயங்காக் கருணைத் திறத்தின்மல ரும்பன் படைக்க மால்காக்க
வொண்ணு வமுத கடத்துதித்த வொருவர் திருமே னியினளவாப்
பயங்காட் டிடுவான் கவர்ந்ததொரு பாதி யெனினு மவருள்ளம்
பண்பின் முழுதுங் கவர்ந்துமகிழ் பாவை தனைக்காத் தருளென்றே.

## சத்தமாதர். வேறு.

399. திருமறை தேர்பன மீதுற்றபொற்பின - டிகழிட பாசல மூர்தத் திறத்தினள் - சிறைமயின் மேன்மயி னேருற்றுகைப்பவள் - செறியா வூனுள தேறித்திருப்புக, ளிருவிற லார்தரு சியப்புறத்தின - ளெழிலியின் மாமதம் விசுற்ற வெற்பின - ளிருளில் விராவொரு பேயைச்செலுத்துந - ளெனுமெழு மார் தர்க டாளைப்பழிச்சுது, மருமல ரோன்முத லோரற்பினித்தலும் - வழிபட வாரரு ளேயச்செலுத்தியை - வருகடல் சூழுல காளுற்றசத்தியை - மலர்கழை கூர யில் பாசக்கரத்தியை, யருமறை யாகமம் யாவைக்கும்வித்தென - வவிர்குட மூடெழு சோதிப்பாற்கினி - தமைதர வோர்பயன் மேவுற்ற தத்தையை - யருளுரு வாமொரு மாதைப்புரக்கவே. (௧௦)

## முப்பத்துமூவர்.—வேறு.

400. அகனமர்ந்துதொழு மடியர்சிந்தையமு தனையநன்றமர்ப ராபரை யை யெப்பெற்றி யாருநன்கேத்திட - வருள்சுரந்துபொலி பெருமையம்பிகை யை யளவிலின்பசுக பூரணியை யொப்பற்ற கோமளங்கூர்த்திடு, முகன்மருங் குனலி முலையகங்கொணகை முகிழ்செறிந்தகரு வார்குழன் முதற்பொற்ற யா வையுந்தீட்டுபு - முளரிமங்கையர்த மனனகங்கொடுபன் முகமன்விண்டுதெரி காரணியை யப்புற்று லாநறும்பூச்சடை, யிகன்மலிந்தபுய விறைவர்தஞ்சமுற விருகைகொண்டுதழு வாரணியை மூட்டுற்றிடா நலம்பூட்டிடு - மியல்புகொண் டவிரு விழிமடக்கதையைக லினிமைதங்குசுவை யாரமுதை யெப்பற்று மேவிடுக் தீத்தொழி,னகன்மறந்துதமி யனுமுயர்ந்திடமெய் நலமியைந்தருள்பு ராதனியை வட்டத்து மேவுமண்போற்றிடு - நலகுடந்தைநக ரமர்தருங்கருணை நவிலுமங் களையை நால்வகைய முப்பத்து மூவருங்காக்கவே. (௧௧)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

---

# உ.—செங்கீரைப்பருவம்.



401. வானமுத லாயவொரு மூன்றனுக் கும்பொதுவின் மன்னியொ ளிர் கின்றவபய-வரததா மரைகணில மட்டுமுற லென்னையென மற்றவை யமுக் கறுக்கு, மானவது கொளினவைய தன்பயனே யுறுகமல ராளொருகை தாங்கு வேமென் - றகஞ்செருக் கினளச் செருக்கொழிய வனையண்மாற் றவளெனும ணுவகையெய்த,வீனமக லனையதா மரைபதித் தொருதா ளிருத்தியொரு தாளெ டுத்தே - யெழினனி கனிந்தமுக தாமரை மலர்ந்தசைய விருமணிக் குழையில் வீசத், தேனமர் நறுங்குதலை சீர்ப்பமங் களவல்லி செங்கீரை யாடியருளே - தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி செங்கீரை யாடியருளே. (க)

402. முதியவனைய நின்கரத் தாமரை சுமக்குமிரு முற்றிழைய ரைச்சுமக்கு - முள்ளிக ணினைச்சுமக் கப்பெறுந் தவமின்மை முன்னுபு துயர்க்கண்முழுக, மறுவிலுயர் பனிவரைச் சாரற் சுனைக்கணினை மாண்பிற் சுமக்கப்பெறும் - வளவம்பு யம்பொலிவு பெற்றுமீ ளவுநின் மணாளனொடு தாங்கப்பெறு, மறிவுபெற லின்மையு ணினைந்ததுவு மற்றாக வன்பினெக் குருகுமடியர் - அமலவிரு தயகோக நகமலர் களிப்புமிக் கடையவதின் மறையந்தமுஞ், செறிவருமணாளரொடு மமருமங் களவல்லி செங்கீரை யாடியருளே - தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி செங்கீரை யாடியருளே. (உ)

403. பரமன் றிருக்கண்ட நாளமு மிசைச்சென்னி பத்திய வடிப்பரப்பும் - பரவுமத னுச்சிப் பொகுட்டுமறு கொடுசூழ் படுஞ்சடைப் பைம்புலிதழு, முரமன் புயங்கங்கள் பைத்தலை யகவிதழு முவைவா னரம்புநறுநீ - ரொண்சுவைத் தேனுமொளிர் வெண்பொடித் தாதுமிக் கோங்குகண் மணிவண்டரும், வரமன் சிறப்பினொளி ரக்கொண்டு நாடொறும் வயங்குமொரு தாமரைப்பூ - வண்கரத் தாமரைப் பூக்களொடு மதியொடும் வணங்குமுனி வொழிசிலம்பு, திரமனிரு தாமரைத் துங்கமங் களவல்லி செங்கீரை யாடியருளே - தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி செங்கீரை யாடியருளே. (௩)

404. அந்தையுற வந்துவரை பேர்த்தெடுத் தான்சிர மனைத்துநெரி தாமடங்க - லாருயிர் குடித்தவொரு தாளொரு விரற்றுதியி னுடைத் திடலுமனையா, னிந்தைதபு துதிபுரிந் தழுதலு மிரங்கிவடி நெடியவா ளாதிநல்கி - நீபோ வெனச்செலுத் தியபின்பி ராகவ னிகழ்ச்சியுரை செய்துபோற்ற,முந்தைவிழை வாலவன் காயவேற் றஞ்செய்த முதல்வர்போ லாதுதிருமன் - முற்றுபே ரன்புபுரி சொன்னரோ மற்குவசி முனையவா ளாதிநல்கிச், சிந்தைமகி ழச்செய்து மகிழுமங் களவல்லி செங்கீரை யாடியருளே - தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி செங்கீரை யாடியருளே. (௪)

405. பிருகுமுனி வன்பெரிய முனிவனுய்ப் பின்புநவில் பேச்சுநிலை நிற்கவற்கும் - பேர்பல வெடுத்தோதி யுருவுபல வற்றையும் பெட்டொருசி லோரிறைஞ்ச,வருகுதலின்மாதவப்பெருமையான்மாதவ னவாவுமக வாகச்செய்தா-மவிர்கா மெனுங்கலைக் கோட்டுமுனி காசிபனை யாதியர் செருக்குநீங்கக், கருகுதலிலாதபடை கொண்டுபொரு பண்டனெதிர் கைவிரல்கள் சிறிதுவிதிராக்-கரியமாலுரியவுரு வொருபதும் வெளிப்படக் காட்டிநெடு வான்புரந்து, திருகுதவிர்பவருளத் தமருமங் களவல்லி செங்கீரை யாடியருளே-தெய்வக் குடந்தைவளர் சைவச் செழுங்குமரி செங்கீரை யாடியருளே. (ரு)

வேறு.

406. மணிகெழு பஃறலை மாசுண நாளமு மன்னு புறஞ்சூழும்
வாரிப் புறவித ழுந்திகி ரிக்குல மால்வரை யகவிதழுங்
கணிகெழு தோள்வரு னன்புர வாற்று கடற்சுவை கூர்மதுவுங்
காசினி யாகிய மகரந் தமுமுயிர் கள்ளெனும் வண்டுகளுந்
திணிகெழு பொன்வரை யாய பொகுட்டுஞ் செறிதர வதுசூழுந்
திகழ்வரை யாகிய தாதுவும் வாய்ந்தொளி செய்யுமொர் கோகநக

மணிகெழு தன்மையி னலர வெழுந்தி ராடுக செங்கீரை
யங்கண் மலர்க்குழன் மங்கள நாயகி யாடுக செங்கீரை. (சு)

407. புவிபுகழ் மறையின் சார மெனப்பொலி புண்ணிய வெண்ணீறும்
பூண்பல மணியின் சார மெனப்பலர் போற்றுங் கண்மணியுஞ்
செவிகவர் மந்திர சார மெனப்பொருள் செறியும் பதமைந்துந்
தெள்ளிய மாதவ சார மெனக்கொடு திகழு முதுக்குறையோர்
குவிகைய ராகவெண் ணில்லாத் தீர்த்தக் குலமலி சாரமெனக்
கூறு மகப்புனல் வதிதல சாரக் குடமூக் கிடமாக
வவிரொளி சார விமான மிருப்பவ ளாடுக செங்கீரை
யங்கண் மலர்க்குழன் மங்கள நாயகி யாடுக செங்கீரை. (எ)

408. நிலையுய ரெண்ணில்ப லண்ட முயிர்த்து நிலாவுவெ ளோதிமமே
நினைபவர் வினையர வங்கள் விலங்கிட நிகழும் பசுமயிலே
கலைதலில் வஞ்ச ரெனும்புயன் முன்குறு காத கருங்குயிலே
ககன மளாய விலங்க லுதித்தருள் கான்ற செழுங்கிளியே
மலைவற வோர்கழை யோர்கரம் வாங்கி வயங்கு கொழுங்கழையே
மாண்ட குடத்துறை செந்தேன் வாமம் வயங்கு பசுந்தேனே
யலையமு தொடுகலை யமுது மிறைஞ்சமு தாடுக செங்கீரை
யங்கண் மலர்க்குழன் மங்கள நாயகி யாடுக செங்கீரை. (அ)

வேறு.

409 தருமவெ ளேற்றகன் முதுகமர் வார்க்கிட மேவிய பைங்கோதை
சதுமுக மூர்த்திமு தலியர்ப ராய்த்தொழ வாழுமி ளம்பேதை
கருமமு ருத்தவ வெளியமு நீற்றிட நாளுந லங்கூடுங்
கருணைக டாய்ப்பர சுகவடி வேற்றுகு மாரிம ணங்கூரு
மருமலர் போர்த்திய குழலுடை யாட்டிந ருவொழு குந்தாமம்
வனமென வாக்கிய புயலைமு னுப்புரி பூரணி பொங்கோதை
யருமறை யாற்புக றுதிமுழு தேற்பவ ளாடுக செங்கீரை
யவிர்குட மூக்கமர் தருமொரு பார்ப்பனி யாடுக செங்கீரை. (கூ)

வேறு.

410. பொறிவழி நுழைபுல னறமிளிர் பவருணி றைந்தா யன்பாளர்
புகனின சரணென வடைதொறு மினிதுபு ரந்தா ணங்காய்மெய்
யறிமுது தவர்சுவை யமுதென நுகரும றங்கூர் கண்டேசொல்
லமுதமு முதுதிரை யமுதமு முறுகண ணங்கே சங்கோதை
மறிதலில் கடலினு மிகவெழு கருணைம ருந்தே சந்தானம்
வளர்தல முதலிய பலவுமுண் மகிழும டந்தாய் பண்பாடல்
செறிமறை முதனடு விறுதியு நிறைபவள் செங்கோ செங்கீரை
திடகவில் குடமுத லிடமமர் மடமயில் செங்கோ செங்கீரை. (க0)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

# ந.—தாலப்பருவம்.



411. செய்ய கனகம் வெள்வயிரஞ் சிறந்த கமல ராகமொளி
திகழு நீலம் வயிடூஞ் செறிய வொன்றன் மேலொன்று
வைய முறைவைத் துறவடுக்கி யவிரம் பூதத் தடுக்கென்ன
வமைத்த திருமா ளிகைமேலா லாடுந் துவசத் தருநுனையி
லெய்ய விவர்நீ ருண்டுபசந் தெழுந்த முகில்கோப் புண்டுசைவ
ரிடங்கா பாலர் கொடிமிடைதற் கேதி யாதென் றிருங்கடல்சூழ்
வைய மதிக்கப் பொலிகுடந்தை வாழ்வே தாலோ தாலேலோ
வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (க)

412. விண்ட மலர்க்கா வகத்துதய வீபத் தினைக்கண் டிளமந்தி
விழையுஞ் செந்தேத் தடையென்ன விரைந்து கடுவ னவற்பற்றக்
கண்ட புலவர் குரங்கியெனக் கரைபே ரலவற் கிரட்டலுறக்
கரைவா மெனவக் கடுவனுமாக் கவியென் பெயர்க்குத் தகவுணர்ந்து
கொண்ட பயத்தின் விடுத்திலச்சை கூர்ந்து தனது குலம்புரந்த
குனிவிற் புயத்தோன் செயனினைந்தக் கோலப்பிணவை யெழுகாதன்
மண்ட வணைக்குஞ் செழுங்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ
வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (உ)

413. உன்னும் வடுக ணொருகோளுண் டுமிழ்தா னிதுபல் கோள்களுமுண்
டுமிழா நிற்கு மெனவவற்றை யுட்கொண் டடனே புறந்தோற்றி
மின்னும் பொழிலி னடுப்பொலியும் வியனீர்த் தடத்துக் கமலமுதல்
வீவார் மதுவுங் குலைத்தருவின் விடப மதுவும் பெருகவெகி
னென்னும் பறவை படிந்துமிசை யெழுங்கால் வழிதேன் விழைந்தொழுகி
னெய்து மனிவெண் படமுமதற் கிட்ட கரிய கயிறுமென
மன்னு மழகார் திருக்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ
வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (ந)

414. ஆய்ந்த பொறிவண் டடைகிடக்கு மங்கட் பொழிலின் மடமாதர்க்
கணியா டவரோ ராவியகத் தகத்தா மரைத்தேம் புனலுங்கோட்
டேய்த்த தருப்பூ மதுப்புனலு மேனைத் தருப்பூப் பொழிதரவீழ்ந்
தியைந்து பாய்தேம் புனலுங்கண் டிந்நீர் முந்நீ ரெனக்கூறத்
தோய்ந்த முகிலைக் காட்டுகெனத் தூவெள் ளனம்வீழ்த் தருப்பாசி
தொடர வெழல்கண் டிதுவென்னத் தோலா மகிழ்விற் றலைசிறந்து
வாய்ந்த நலங்கூர் திருக்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ
வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (ச)

415. பழுத்து விழுந்த நறியசுவைப் பாகற் கனிமே லொருதென்னம்
பழமுக் கூழ்த்து விழுந்தமரப் பசுந்தேன் யொழுந்து மலரிறைத்துக்

கொழுத்து வரிவண் டிசைபாடக் கொண்ட கனியின் பெரும்பொறையாற்
குலவு மெதிரே பலசாகை குரங்கல் கும்பத் துதித்தொருமா
வழுத்து வடிப்பூண் முடிமுக்க ணமலற் காட்டி யருச்சித்தாங்
கறைந்து நிவேதித் தெதிர்வணங்கு மன்பர் நிகர்த்த லறிந்தமரர்
வழுத்து மலியுந் திருக்குடந்தை வாழ்வே தாலோ தாலேலோ
வளங்கூர் கருணை மங்களமா மயிலே தாலோ தாலேலோ. (௫)

வே று.

416. குமிழ்மல ருங்குளிர் முல்லையுமிந்திர கோபமும் வாமானுங்
கூங்குயி லுங்கின் கூறும ருலகு குலாம்பொரு ளெனவளையா
விமிழ்கலி மாமறை யைம்புல னுளதென லித்தொகை யாலுணர்வா
னியல்பி னமைந்துப லுலகு மவாவ வியைந்த தெனத்தோற்ற
வமிழ்து பொருஞ்சுவை யஞ்சுனை நீர்நிலை யான்ற சுருத்தலைநன்
காய கழைச்சிலை தாங்கி விளங்கிடு மம்போ ருகமுடையாய்
தமிழ்தெரி யுங்குட மூக்கமர் பைங்கிளி தாலோ தாலேலோ
சங்கள வுங்கர மங்கள நாயகி தாலோ தாலேலோ. (௬)

417. விண்டலர் செவ்விய தாமரை கொல்லோ வெண்டா மரைகொல்லோ
விரவுதல் பெற்றொளிர் தாமரை கொல்லோ வேறெது வாமென்று
தொண்ட ருளங்கொடு பன்முறை யாய்ந்துந் துணிவு பெறுமையினுற்
றெருகுபொது விற்பைந் தாமரை யென்றே சொற்றனர் களிதூங்க
முண்டக வதனக் கலைமக ளுங்கடன் முற்படு திருமகளு
முரணுத லின்றி வசித்திடு மாறொளிர் முகதா மரையுடையாய்
தண்டமிழ் தெரிகுட மூக்கமர் பைங்கிளி தாலோ தாலேலோ
சங்கள வுங்கர மங்கள நாயகி தாலோ தாலேலோ. (௭)

418. அருமறை முழுமையு மாயதன் முதனடு வந்த முரைப்பதுமா
யத்தகு மறையின் வரம்பு கடந்த வதீதமு மாயுளநெக்
குருகுதல் கொண்டு விடாது நினைப்பவ ருள்ளவிர் தீபமுமா
யுற்றடி போற்றி வணங்குந ரெய்ப்புத வுத்தகு நிதியமுமாய்த்
திருகுத லின்றி யுரைப்பவர் நாவிற் றீஞ்சுவை யமுதமுமாய்த்
திகழ்தரு பொற்கொடி யேயள வில்லாத் தெய்வத் திருமணமே
தருதமிழ் தெரிகுட மூக்கமர் பைங்கிளி தாலோ தாலேலோ
சங்கள வுங்கர மங்கள நாயகி தாலோ தாலேலோ. (௮)

வே று.

419. சிந்தனை யொன்ற நினைந்துக வர்ந்திடு தேனே வானாடர்
தெண்டிரை யின்க ணடைந்தனர் கொண்டது தேறு வாறுக
வந்தரு ளுஞ்செ யலின்றலை நின்றகண் மானே யாநேய
மண்டவி ருந்த வரண்டர்ப ணிந்தெழு வாழ்வே சூழ்பேறே
கந்தமளைந்த கருங்குழன் முன்பல காணு நாணுவா
கண்டலன் மங்கை முனங்கையர் கும்பிடு காலாய் மேலாய
சந்தம லிந்த குடந்தையி ளங்கிளி தாலோ தாலேலோ
சங்கனை யுங்கை மடங்களை மங்களை தாலோ தாலேலோ. (௯)

வேறு.

420. மணக்கும் வார்குழல் வெண்பிறை சூடுமை தாலோ தாலேலோ
வடிந்த காதிரு செங்கதிர் சேர்பரை தாலோ தாலேலோ
தணந்த காமியர் தந்துணை யாமளி தாலோ தாலேலோ
தவஞ்செ யாவெனை யுந்தனி யாள்கொடி தாலோ தாலேலோ
நிணந்த யோகியர் சிந்தையு ளுறுவொளி தாலோ தாலேலோ
நிவந்த வாருயி ருய்ந்திட மேவனை தாலோ தாலேலோ
குணந்த வாதவர் பங்கனை மாநிதி தாலோ தாலேலோ
குடந்தை வாழ்வெனு மங்கள நாயகி தாலோ தாலேலோ. (௧0)

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

---

# ௪.—சப்பாணிப்பருவம்.

421. வீங்குஞ் சுவைச்செங் கழைச்சிலை குழைத்தளி விராயநா ணம்பொருத்தி - விரைமலர்க் கோலைந்து கொண்டொரு மலர்க்கோல் விரைந்துவிட்டவனுடம்பு, தேங்குந் தழற்குணவு செய்துபண் டைப்படி திருந்தியோ கத்திருந்த - செஞ்சடைக் கருமிடற் றுத்தவள நீற்றுத் திருப்பெரும் பரமயோகி, வாங்குந் திரைக்கடற் புடவிமுத லேத்தலமும் வாழ்வெனும் புணரிமூழ்க-வணங்கா முடித்தலை வணங்கிட வணக்குகழை வண்சிலையு மலர்வாளியுந், தாங்குந் திருக்கைத் தலத்தொளி துளும்பவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (௧)

422. ஆக்குந் தொழிற்றமரு கம்புரக் குந்தொழி லமைந்தவட யஞ்சாம்பரா - வழிக்குந் தொழிற்றீ மறைக்குந் தொழிற்றலை யமைந்தூன்று தாண்மறைப்புப், போக்குந் தொழிற்குஞ் சிதத்தா ளிவைந்தும் பொலிந்திடச் சுருதிவாழ்த்தப் - புன்மையின் றுய்ந்தன மெனச்சகல புவனமும் போற்றெடுத் தேத்தமடமை, நீக்கும் புலிப்பத முனித்தலைவ னும்பணி நெடுந்தவ முனித்தலைவனு-நிறைமகிழ் திளைப்பமா தேவன்மன் றிடைநவி னிருத்தக் கியைந்ததாளந், தாக்குந் திருக்கைத் தலத்தொளி துளும்பவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (உ)

423. ஓங்கிய கொடைத்தலைமை பூண்டமை யிரும்புவன முணரவறி குறியமைந்தாங் - குத்தமோத் தமநீர் பொழிந்துதெய் வப்பசுவி னெண்முலையின் விரல்கள்வாய்ந்து, தூங்கிய மதுப்பொழி மலர்க்கற் பகத்திற் றுறுந்தளிரினியல்பூண்டு - துங்கமிகு சங்கமும் பதுமமு மிரேகையிற் றோற்றப் புனைந்துகொண்டு, வீங்கிய சுடர்ப்பிழம் பாற்றுணங் கறன்முழுதும் வெய்துவாய்ப் பெய்துதோன்றும் - வெய்யோன் சமழ்க்குமணி யாழிகள் புனைந்துமழை மேகமுத லாயபலவுந், தாங்கிய திருக்கைத் தலத்தொளி துளும்பவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (௩)

424. புண்ணிய மலிந்தவ ரகக்கணு முகக்கணும் பொங்குகளி தங்குமாறு-பொன்னஞ் சிலம்புபுனை தாமரை யியக்குகாற் புண்டரிக மலரகத்துங், கண்

ணிய செழுங்கோக நகமல ரகத்துங் கலந்தமர் நலந்தண்மடவார்-கைக்கமல மிசை வசிக் குங்கமல மலராய்க் கடற்றனை சுற்றுபுடவி, யண்ணிய பிலம்புக் கழுந்தப் பரந்தநீர்க் காயநற் றுயாய்ப்பல-வறங்களுக் குஞ்செவிலி யாய்ப்பொலிந் தச்சமற வபயவர தங்கொடுக்குந், தண்ணிய திருக்கைத் தலத்தொளி துளும்பவொரு சப் பாணி கொட்டியருளே - தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப் பாணி கொட்டியருளே. (௪)

425. மையற் றுறைப்படியு மெங்களை யெடுத்தாள வல்லசின் திருவடிக்கு - வந்தனம் பற்பல புரிந்தன மினுஞ்செயவு வந்தன மதான்றுபோற்று, கையற் திருக்குமடர் கூட்டத் துறுதுமிற் கருதுநரை யும்பரசுவோங் - கங்கையை நினக்கடிமை யென்றுசா தித்தளவில் கலையெடுத் துப்புகலுவோம், பையற் றெடுங்குமொரு பாம்பினெம் பொறியறப் பாவைநினை யேகருதுவோம்-பாடித் துதித்திடவ மெங்கட்கு நீயினிப் பண்ணுவது நிற்கவின்றுன், றையற் திருக் கைத் தலத்தொளி துளும்பவொரு சப்பாணி கொட்டியருளே, தண்டமிழ் வளம்பொலி குடந்தைமங் களவல்லி சப்பாணி கொட்டியருளே. (௫)

வேறு.

426. வழிவழி யடிமை யெமைக்கொண் டாளு மறுக்கருணைத்திருவே
மாயா மயகும் பத்து முளைத்தவர் வாமத் தமருமையே
கழிமகிழ் சால நினைப்பவ ருள்ளக் கமலத் துறையனமே
கல்லா மூடர் மதிக்கு மினித்துக் கமழும் பைந்தேனே
பழிதபு மறைமுறை யிடவு மதற்கப் பாலா கியகொடியே
பனிவரை யாற்று தவத்தின் முளைத்த பசுங்கிளி யேமயிலே
கொழியருள் வடிவுடை மங்கள நாயகி கொட்டுக சப்பாணி
குடந்தையுண் மேய மடந்தை பராபரை கொட்டுக சப்பாணி. (௬)

427. ஆலம் பொலிதரு கண்டத் தெண்டோ ளாண்டகை யெம்பெருமாற்
கைத்தொழி லும்முடன் மேவி யிருந்தினி தாக முடித்திடுவோய்
ஞாலம் பொலிதரு மாருயி ராய நலங்கெழு பைங்கூழ்க
ணன்று விழைந்து தழைந்து பொலிந்திட நக்கெழு பசுமுகிலே
சீலம் பொலிதரு செய்கையி னுள்ளத் திருகற் றுருகிடுவார்
செறிதரு சனனப் பரவை சுவற்றுஞ் செங்கதி ரேயளவாக்
கோலம் பொலிதரு மங்கள நாயகி கொட்டுக சப்பாணி
குடந்தையுண் மேய மடந்தை பராபரை கொட்டுக சப்பாணி. (௭)

428. கரையில தாகிய பரமா னந்தக் கடல்வரு தெள்ளமுதே
கருதிக் கருதி மிகக்குழை வாருட் கழனி யெழுங்கழையே
வரையி னுதித்தொர் மருப்புக் கன்றை வயக்கு மடப்பிடியே
மாறி லவித்தை யிருட்டற வன்பருண் மாமலை யெழுகதிரே
தரைமுதல் பூத்தரு ணன்று பழுத்துத் தழையும் பொற்கொடியே
தானே யாகிய தோன்றுத் துணைமகிழ் தக்க பெருந்துணையே
குரைமறை யோலிடு மங்கள நாயகி கொட்டுக சப்பாணி
குடந்தையுண் மேய மடந்தை பராபரை கொட்டுக சப்பாணி (௮)

வேறு.

429. மடமற நினைபவ ருளமெனு மொருதளி யுற்றவிளக்கேசொன்
மறைமுடி வினுமுணர் வருமொரு முதல்விய ருட்பெருமைத்தேவி
தடநெடு முடியுயர் பனிவரை யிமயமு யிர்த்தமடப்பாவை
தளர்வற வளவில்ப லுயிர்களு மெளிதின ளித்ததிறற்கோதை
படவர வமுமதி யமும்வர நதியுமு டித்தசடைத்தேவர்
படிமத சலவிற லடுகளி றுதவுரி பெற்றபுகழ்த்தூயர்
குடகடு வமர்பவ ரிடமமர் மடமயில் கொட்டுகசப்பாணி
குவலயம் விழைவன விழைவகை யருள்பவர கொட்டுகசப்பாணி. (கூ)

430. பொன்பொலி பாத மறந்தலை யாவொரு புக்கில மைத்தறியாப்
புன்புலை யேமும் விரும்பிடு மாறருள் புத்தமு தப்பாகே
மின்பொலி வேணியர் பங்கமர் வாய்திரு மெய்த்த வருட்பேறே
விண்பொலி யாவர்க ளுந்தொழ வாழ்வருள் விச்சை யனப்பேடே
தென்பொலி சீதரன் முன்பிற வாதசெ ழித்தசு வைத்தேனே
திங்களை நேர்முக மங்கநின் மாணிகர் செப்புவி ழித்தாயே
கொன்பொலி ஞால மலர்ந்த பராபரை கொட்டுக சப்பாணி
கொங்கலை வார்குழன் மங்கள நாயகி கொட்டுக சப்பாணி. (க0)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# ரு.—முத்தப்பருவம்.



431. சுரும்பு செறியு நாண்பூட்டித் தோகைக் கருப்புச் சிலைகோட்டித்
தோலா மதுகைத் திறங்காட்டிச் சுதைத்தேங் கணையொன் றுறக்கூட்டி
யரும்பு செருக்கிற் றொடுத்தான்மெய் யடலை புரிகண் ணுதற்பெருமா
னங்கங் குளிர்ந்துள் ளுருகவவ னைந்துளொன்று விகசிக்க
விரும்பு மதனுண் மற்றொன்று விடமு மமுது மெழுவிக்க
விழைமற் றொன்றை நகைமுகமா விண்ணோ ருணவும் விளர்த்திடுஞ்
கரும்பு கலந்து வெளிப்படுக்குங் கனிவாய் முத்தந் தருகவே [சொற்
கருணா கரமங் களவல்லி கனிவாய் முத்தந் தருகவே. (க)

432. தோட்டு மலரா சனத்தமருந் தோன்றற் பிரமன் முதலாகச்
சொற்ற வமரர் பெருங்குழுவுஞ் சொலுமற் றுளமன் பதைத்தொகை
வாட்டு முயிரொன் றுண்ணடுங்கி வருந்தக் கனக னுடல்கீண்டு [யும்
வருஞ்செந் நீருண் டுறவெறியான் வருத்து மடங்க லுயிர்சாம்பப்
பாட்டு மறைவாழ்த் திடவெண்காற் பறவை யாய சகோரம்விழை
பண்பிற் கவர்ந்து மகிழ்தூங்கப் பற்ப லுயிர்க்கு மின்பநலங்
காட்டு முறுவ னிலவரும்புங் கனிவாய் முத்தந் தருகவே
கருணா கரமங் களவல்லி கனிவாய் முத்தந் தருகவே. (உ)

433. வண்ணக் குழவி வடிவாய்முன் மகிழ்ந்து கவர்ந்த காரணத்தால்
வானம் பரவு மலையரசன் மனைவி மேனை முலைப்பாலுஞ்

சுண்ணப் பொடிசால் புயமலயத் துவசன் மனைவி பொன்மாலை
துணைத்துப் பணைத்த முலைப்பாலுஞ் சுடர்வேற் குழவி தனையெடுத்து
நண்ணக் குளிர்முத் துண்டுவந்து நக்கீ ரணத்தா லறுமாதர்
நலங்கொண் முத்த முலைப்பாலு ஞான மயரின் முலைப்பாலுங்
கண்ணக் கலந்து பரிமளிக்குங் கனிவாய் முத்தந் தருகவே
கருணு கரமங் களவல்லி கனிவாய் முத்தந் தருகவே. (ங)

434. ஆணைத் திருக்கை யிவருளமென் றுறைய நின்று நகங்கைநீ
ராட்டி னார்பச் சிலையிட்டா ராத லான்மற் றிவரின்னே
மாணைத் திருக்கை பயில்வேலா வலயப் புவிமன் னவராக
வானே ராக வரசாக மலரோ னாக மாலாக
வேணைத் திருக்கை யொழித்தமர்வா ரிவர்சா லோக முதலியவைக்
கிறைவ ராக விரைந்தருடி யெம்மா னேமற் றெல்லாருங்
காணைத் திருக்கை சாத்தென்னுங் கனிவாய் முத்தந் தருகவே
கருணு கரமங் களவல்லி கனிவாய் முத்தந் தருகவே. (ச)

435. மதிக்குஞ் சுவைத்தீம் பால்சுரந்து வடித்த கழைச்சா றுவட்டெடுத்து
மதுரம் பொதிகோற் றேன்பொதிந்து மாறு தினிக்கும் பாகூறி
யுதிக்கு மணியா ழோசையளா யுவக்குங் குயிற்கூங் குரல்விரவி
யுரைசெய் கிள்ளைக் கிளவிபயின் றுறுவேய்ங் குழலி னொலியமைந்து
திதிக்கு மொருமுக் கனிபழுத்துத் திகழும் புல்ல கண்டமுற்றுச்
செறிகற் கண்டு விளைந்தெழுந்து தெய்வங் கமழு மமிழ்தரும்பிக்
கதிக்குந் தமிழு மணந்துபொலி கனிவாய் முத்தந் தருகவே
கருணு கரமங் களவல்லி கனிவாய் முத்தந் தருகவே. (ரு)

வே று.

436. வண்பார் விரும்புங் கரும்புஞ் சுரும்புமிடை வாவிச் செழுங்கமல மும் - வானவ ரிருக்கையைத் தோயும்வே யும்புகல் வரம்பையி லரம்பையுமிகு, கண்பார் பசுங்கமுகு நாடுபுகழ் செங்நெலு நலங்கூர் கினக்குகினது - காதற்கு நீழலு மருச்சனைக் குபகரண நன்பொருளு மாகுமெனினுங், கண்பார் கினக்கு மாற் றுளெனும் புனலுருக் காரிகையொ டளவளாவிக் - கினிதூங்க லாலவை யுதித்தமுத் தங்கொளேங் கடவுள ரொருங்கவாவும்,பண்பார் குடந்தைப் பெருந் திரு நகர்க்கரசி பவளமுத் தந்தருகவே - பரவுமங் கிரபீடம் விரவுமங் களவல்லி பவளமுத் தந்தருகவே. (சு)

437. காராய் கருங்கடற் குட்டம்வட வைத்தீக் கலப்பின்வெப் புற்றதின் னுங் - கழியா வுவர்ப்பும் புலாலுஞ் செறிந்ததக் கடைபடு கடற்குட்டமே, யோ ரா யெனக்கொண் டுதித்தவளை யிப்பிநெட் டுடலவன் மீனமீன - முவையாதி தருமுத்த மெவ்வுயர்வை யுற்றதெவ் வுவகையை யெமக்காக்கிடும், போராய் மருப்புப் பொருப்பெறுழி வெங்கான் பொருந்தியுழல் கின்றதிறனுற் - புகர் பட்ட வன்னவை யுறுப்பின்முத் தங்களுமொர் பொருளென மதித்தல் செய் யேம், பாராய் குடந்தைப் பெருந்திரு நகர்க்கரசி பவளமுத் தந்தருகவே - பரவ மங் கிரபீடம் விரவுமங் களவல்லி பவளமுத் தந்தருகவே. (எ)

438. நீடுஞ் சிறப்பிற் பொலிந்தவலி முத்தமிகு நேயத் தளித்தபோது - நிகழ்தனி னுங்கோடி பங்கதிக மாயென்று நிலவுமித் தலமுத்தமுற்,கூடுந் தவத் திற் கிடைத்தமரும் யாங்களது கொள்ளேம் விரும்பியதுவே - கொடுத்தருள வின்றிரு வருட்கழகு செக்குருகு கொள்கையரு ளக்கோயில்கொண், டாடும் பிரா னெடுமமர்ந் தருள்விளக்கே யலங்குமறை முடியென்னுமோ - ராவியி னுலாவு பெடை யன்னமே முன்னரு மனைத்துநா லுங்தெரிந்தோர்,பாடுங் குடந் தைத் திருப்பெரு நகர்க்கரசி பவளமுத் தந்தருகவே - பாவுமந் திரபீடம் விரவு மங் களவல்லி பவளமுத் தந்தருகவே. (அ)

வேறு.

439. நன்று கருது மன்ப ரிதய கஞ்ச மருவு சத்தியே
நம்பு மறையி னும்ப ரிலகு துங்க விமல தத்தையே
கன்று பிறவி கந்து திருவர் சிந்தை குலவு வித்தையே
கந்தர் தருவி னைங்கை முதல்வர் மைந்த ரெனவ ணைத்துளா
யொன்று புகலி யந்தண் மழவு முந்த வருள்ப யத்தியே
யும்ப லிறைமு னந்து சுரர்கண் முந்து தொழுப தத்தியே
குன்று மகிழ வந்த கருணை யம்பை தருக முத்தமே
கும்ப முதல்வர் பங்கி னமரு மங்கை தருக முத்தமே. (௯)

440. கரிய முகிலி னளக மிருள்செய் கவுரி தருக முத்தமே
கருதி யுருகு மடிய ரிதய கமலை தருக முத்தமே
யரிய கருணை பொழியு நயன வமலை தருக முத்தமே
யழகு பொழியும் வதன பதும வபினை தருக முத்தமே
புரிய வினிய விமய முதவு புதல்வி தருக முத்தமே
பொருவில் கருணை யுருவ மருவு புனிதை தருக முத்தமே
துரிய முடிவில் வெளியின் மருவு சுமுகி தருக முத்தமே
சுவைய வமுத கலச முதல்வர் துணைவி தருக முத்தமே. (௧0)

௫.—முத்தப்பருவம் முற்றிற்று.

---

## ௬.—வாரானைப்பருவம்.

441. தேனளா வுங்குழற் சடையலங் காரத் திருப்பணியு மிருள்விழுங் கித் - திகழ்மணிப் பிறையுமொளி யுமிழ்மணித் தோடும்வளர் செஞ்ஞாயி றுத யஞ்செய, மீனளா வுங்கடற் றரளமா லிகையுமொளி மிளிர்குமிழ் விராய முத் தும் - வெள்வயிர கடகசூ டகமதா ணியுமுவவு வெண்டிங்க ளுதயஞ்செயக், கானளா வுந்தாட் சிலம்புஞ் சதங்கையுங் கலகல வெனக்கலிப்பக் - கனகமணி மேகலை புலம்பமறை யோலிடக் கடவுளர்கள் வாழ்த்தெடுப்ப, வானளா வும்ப தண மதில்சூழ் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே - மன்னுயிர்ப் பயிரெ லாந் தழையவருண் மழைபொழியு மங்களாம் பிகைவருகவே. (௧)

442. கண்டோர் பவத்துன்பு காணர்க ளாய்ப்பெருங் களியார் கலிக் கண்மூழ்கிக் - கற்பகப் பனிமல ரிறைத்தெதி ரிறைஞ்சிவர்ன் கடவுளர்க ளெதிர்

டப்பப்,பண்டோர் மறைக்குழவி யுண்ணமெய்ஞ் ஞானவின் பாலருள் பிராட்டி வந்தாள் - பார்பெறச் சுவணரோ மற்குமா றஞ்சுவாட் படையருள்கல் யாணி வந்தாள்,திண்டோள் வலிச்சிலம் பரசன் றவத்துவரு செல்வக் குமாரிவந்தாள்- செகமுழுது மீன்றதாய் வந்தா ளெனத்திருச் சின்னங்க ளார்ப்பெடுப்ப, வண் டோ லிடும்பொழி லுடுத்தொளிர் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே - மன் னுயிர்ப் பயிரெலாந் தழையவருண் மழைபொழியு மங்களாம் பிகைவருகவே. ()

443. ஒளியார் கருங்களச் செம்மேனி வெண்ணீ றுவந்தமா தேவனெம் மா - னூடலொழி யப்பணி தொறுஞ்சடிலம் வாழ்நில வொருங்கள வளாவலா னுங், களியார் கருங்கணஞ் செய்யவாய் வெண்ணகைக் காமரு மாதர்பலருங்- கனிவினெண் ணியபெறப் பணிதோறு மவர்குழற் காரிரு ளளாவலானு, மளி யார் பெரும்பனி வரைப்பயிற லானுமோ ரணுவளவும் வாட்டமடையா - வம் டோ ருகத்துணை பெயர்த்துமறை வாழ்த்தொலி யளாவியெங் கும்பரப்ப, வளி யார் பெரும்புவன மேத்துங் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே-மன்னுயிர்ப் பயிரெலாந் தழையவருண் மழைபொழியு மங்களாம் பிகைவருகவே. (௩)

444. பாடுவா ராணவம தென்னுமிரு கந்தபப் பாய்நின்ற புண்டரீகம் - பரவுவினை யாயவிரு காடுமுழு துந்தபப் பதிதருஞ் செய்யமுளரி, நீடுவார் மாயையென நிகழ்கதிர் நிலாவிதழ் நிரம்பிய செழுந்தாமரை - நீங்காத சேறுய விம்மூன்று மொழிதர நிலாவுமர விந்தமென்று, கூடுவார் மறைபல வெடுத்தி யம் புங்கனக கோகனக மலர்பெயர்த்துக் - கொண்டாடு மெம்மைவழி வழி யடிமை கொண்டுகதி கூட்டுவது முண்மையென்னின், மாடுவார் கொடியாடு மாடக் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே-மன்னுயிர்ப் பயிரெலாந் தழைய வருண் மழைபொழியு மங்களாம் பிகைவருகவே. (௪)

445. விள்ளத் கருஞ்செயலி னுருகியுரு கித்துதிசெய் வித்தகத் தவரிம் மையே - மேலாய கல்வியுஞ் செல்வமு மொருங்குபெற விழைவிற் கொடுத்தல் கருதி, யள்ளற் றலைப்படுங் கமலத் தலைப்பொலியு மங்கலா ரிருவர்கையு - மறங் கள்பல வுங்குடிகொ ளங்கையிற் பற்றலுற் றுங்கமை தரப்பற்றியே, யெள்ளற் றிறஞ்சிறிது மில்லாத மறைமுடியு மெங்களுளமுங் குடிகொளு - மெழில்கனிந் தொழுகுசிற் றடிமலர் பெயர்த்துவகை யெண்ணில்புவ னத்துமேவ, வள்ளற் பெருந்தகையர் பொலியுங் குடந்தைநகர் வாழ்வாய பரைவருகவே - மன்னுயிர்ப் பயிரெலாந் தழையவருண் மழைபொழியு மங்களாம் பிகைவருகவே. (௫)

வேறு.

446. வன்றேய் சுதரி சனப்படையா னொருமா வுருக்கொண் டும்பர்பிரா
னுபய பதமுங் காண்பான்புக் கொன்றுங் காணு தழிதந்து
மீன்றேய் பரவைப் புடைவிழுந்தான் விரும்பி யிவள்சிற் றடிதொடரின்
விழைந்து முயன்ற முடிகாணன் மேவு மேவா விடினுமிவ [மேற்
டேன்றேய் மலர்த்தாட் டொடர்பொன்றே யிருந்து மெனவுட் கொடுமலர்
ற்கமோ இமமென் னடைகற்பான் செறியோ திமங்க ளொடுந்தொடர
வான்றோ யிமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே
மறைவாழ்த் தொலிசா திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (௬)

447. உதிக்கு முடம்பை யேயாமென் றுள்ளி வினைநா டொறுமுனூற்றி
யோலரந் தவத்தை களினுழிதக் தொழியும் பொறியில் யாக்களுமெய்
பதிக்கும் கருணைப் பரவையிடைப் படிந்து துளையக் கடைக்கணித்த
பரமா னந்தத் திருவுருவப் பாவாய் புகழ்ந்து பாடுநர்பால்
விதிக்கு மயனு தியரிடத்து விரவ விடுக்குங் கருணையினு
மேலாங் கருணை விடுத்தளிக்கும் விமலாய் விண்ணோ ராதியருண்
மதிக்கு மிமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே
மறைவாழ்த் தொலிசா திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (எ)

448. இழியுந் தொழிலிற் புகுத்துமல விருட்டும் விளர்க்குங் கருங்குழலு
மெழில்கொப் புளிக்குந் திருமுகமு மிருகை யுதித்த பெருவெள்ளங்
கழியுந் திவலை யாயொடுங்கக் கச்ச மில்லா வருள்வெள்ளங்
கதிக்கப் பொழியுங் கடைக்கண்ணுங் கருது ஞானம் பொழிதனமும்
பழியு மறமுங் கடந்தன்பர் பற்றத் தகுமோர் பற்றாய
பாதாம் புயமு மிகப்பொலிந்து பாவப் பரவு வெள்ளருவி
வழியு மிமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே
மறைவாழ்த் தொலிசா திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (அ)

449. அஞ்சார் புரங்க ளொருமூன்று மழலோ னுண்டு தேக்கெறிய
வரும்பு சிறுவெண் ணகைபுரிந்த வமலற் குடலா திகளாவாய்
விஞ்சா ரனைய பெருமாற்கு மேவி யுடனீங் காதமர்ந்து
விதித்த லாதி யைந்தொழிலும் விருப்பின் முடிக்குந் திறற்பாவாய
பஞ்சா ரடியிற் சிறுசிலம்பும் பாத சால மெனும்பிறவும்
பற்று வரையின் மேகலையும் பண்டை மறையாக் கொண்டணிவாய்
மஞ்சா ரிமய வரைப்பிறந்த வனிதாய் வருக வருகவே
மறைவாழ்த் தொலிசா திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (கூ)

450. தானே தனக்குச் சரியாய தாயே வருக வுரைக்கவினை
தடிவாய் வருக நினைக்கமுத்தி தருவாய் வருக மலர்பொதிந்த
கானே புரையுங் கருங்கூந்தற் கவுரி வருக மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக வருள்பழுத்த கனியே வருக தெவிட்டாத
தேனே வருக வானந்தத் திருவே வருக பெருவேதச்
செல்வீ வருக வெங்கள்குல தெய்வம் வருக வுருகுநருண்
மானே வருக விமயவரை வனிதாய் வருக வருகவே
மறைவாழ்த் தொலிசா திருக்குடந்தை மடந்தாய் வருக வருகவே. (௧0)

சு.—வாரானைப்பருவம் முற்றிற்று.

---

# எ.—அம்புலிப்பருவம்.



451. நீடுசுப மங்கையென நன்னியற் பெயராலு நிறைவியிவள் பொலிவ ணியு - நிலவுஞ் சுபக்கிரக மென்றுரை செயப்பொலிவை நிகழ்கின்ற சமய மாதங், கூடுமிட மாகக் குறித்தமர்வ ளிவள்பெருங் கும்பமுற் கடகம் வரையுங்- கூடிய விராசியோ ராறுமம ரிடமெனக் கொண்டமர்வை நீயு மடமை. சாடுநர்

கள் பெண்ணரசி யாயபெண் ணென்னவிவ டழைவள்பெண் கிரகமென்னத் - தழைவைநீயுந் தெரியினெப்பாக லுண்மையுயர் தவளமாடக் கொடிகண்மே, லாடுகுட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாட வாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாட வாவே. (௪)

452. பாயநற வம்பொழியு மாம்பலை யுவப்பைநீ பற்பலம ரங்கண் மேசப்-பரவுதா னம்பொழியு மொருமருப் பாம்பலைப் பண்புற வுவப்பாளிவண், மேயபல கமலமு முகங்கவிழ் தரப்பொலி வியன்கரங் கொண்டுளாய்நீ-விளம்பு மக் கமலங்க ளணினவ் வாறும் வியன்கரங் கொண்டாளிவ, டோயமலி கடலக முதித்துளாய் நீபர சுகக்கட லுதித்தா ளிவள் - சொல்லுமிவை தேரிலொப் பாகா திராய்வளமை தொக்கவள காபுரியின்மிக், காயகுட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாட வாவே. (௨)

453. ஏன்றவொரு கும்பமுனை நீயுண்மை ஞானநிறை யிருகும்ப முள்ளாளிவ - ளியலுமொரு மீனமுனை நீகருணை வெள்ளநிறை யிருமீன முள்ளாளிவள், சான்றவோ ரேற்றினு னீதரும மாலெனத் தக்கவீ ரேற்றுளிவ - டங்கு கற் கடகமொன் றுடையனீ யிருளறச் சாடுகற் கடகநாளுந், தோன்றவொ ரிரண்டுடைய ளிவளின்ன திறலுடைத் தோகைநிற் கதிகமென்று - சொல்ல வேண் டுங்கொலோ வாவென் றழைத்தது சொலிற்கருணை யேவளத்தா, லான்ற குட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாட வாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாட வாவே. (௩)

454. நிற்குரிய கும்பமொரு முடவன்விழை குவனிந்த நேரிழைக் குரிய கும்ப - நெடுமறை முடிக்குமெட் டாதவொரு கும்பேச நிமலப் பிரான் விழைகுவன், சொற்குலவு நிற்குரிய வேறுபுகர் கொள்ளத் தொலைத்தனை யிவட் குரிய வை-துங்கமுற் றெத்தகைய வானவரு மேத்தித் தொழப்பொலிவ வெந்த ஞான்றும், விற்குலவு நின்மீன் விரும்புமொரு பொன்னிவள் விசாலமீன் கடையை மண்ணும் - விண்ணும்விழை யும்மிவ ளினக்கதிக மென்பதால் விளைவதொன் றில்லை யென்று, மற்குகுட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாட வாவே-யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. ()

455. செய்யகதி ராயிரம் விரித்திரு ளரித்துவரு செம்மனின் னொடொத் தவன்-றிண்ணிய மடங்கலை விரும்பிய துணர்ந்துநீ சேற்றுநில மாக்கள்போல, நொய்யசீ றலவனை விருப்பியப் பெயர்பூண்டு நோக்குறு துழல்வைநீய - நோன்மையி னுதித்திடும் போதுமத யானைவலி நூறிச் செகுக்குனெண்டு, வெய்யதா யனையுயி ரழித்தலைக் குள்ளொளியும் விழுமிய துணர்ந்தாய் கொலோ - வீபத் தெனும்பெயர் முதற்குறுக லடையாது மேலாய சார்புகோடற், கையகுட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (௫)

456. தெரியவொரு கோளுண் டெமிழ்ந்திடப் பட்டுஞ் சிறந்தவா சாற் றிழைத்துத்-தீயவெஞ் சாபத் தொடக்குண்டு மோகஞ் செறிக்குமல ரான்சாபமே,

யுரியதெனை வேற்குமொரு கோட்டும்ப ஞல்வா யுறுத்துசா பத்தொடக்குண் - டுழிதந்து மொழிதந்து நேர்தருமருங்குலா ரொள்ளணிகொண் ஞெள்ளன்மேவி, விரியவெரு விட்டெறிய வெளிவந்து நீயுறுதன் மேதகைய விவளுணர்ந்து-மெய்ம்மையுண ராளினுனை யாடவா வெனவிளித் தனள்விழை யறஞ்செயாருக், கரிய குட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (௬)

457. எடுத்தவெஞ் சினவனல் கனன்றெழப் பொன்வெதுப் பேறிநிற் சுட்டகாலை - யித்தலச் சோமேச நீர்படிந் தனுகூல மெய்திய தயர்த்துளாயோ, விடுத்தபெரு விதியிஞன் பக்கபா தஞ்செயல் விடுத்திலனெனச்சிறுவிதி - வெகுளத் தொடர்ந்தநோ யித்தளிபுண் மேயநீர் வீட்டியது முட்கொண்டிலாய், தடுத்தபொறி யாளர்செறி யித்தல மகத்துவஞ் சற்றுமுண ராதவன்போற் - றுமதஞ் செயறக்க தன்றுபகை வென்றுமினிர் தருதுவசம் வானுலகமீ, தடுத்த குட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (எ)

458. சாற்றொரு தலஞ்செய்த பாதகம் விசேடத் தலத்தடையின் மாயுமந்த்-தலத்துப் புரிந்தபா தகமிரும் காசித் தலத்தினைச் சாரமாயும், போற்றுமக் காசியிற் செய்தமா பாவமிப் புண்ணிய தலத்துமேவப் - போமெனவுரைக் கும் புராணமத் தகையவிப் பொருவாத தலத்தையுற்றுத், தோற்றுமா மகநீர் துளைந்துபொற் றுமரைத் தோயமுந் தோய்ந்தம்மைபொற், றுணையடி வணங்கிநீ பெறுமிலா பத்தளவு சொல்லவல் லவராார்பொறை, யாற்றுகுட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (அ)

459. துலங்குதன் திருவடிக் கன்புபுரி யதிதிமுற் றொன்றப் புகன்றசாபத் - தொடக்குண்ட காசிபமா மிகும்புனற் காவிரித் துறைபிற் படிந்தெழுந்து, கலங்குதலி லாததவ மாற்றமற் றவனுளங் களிகொளுங் காட்சிநலகிக் - கவற்றிய வலித்தன்மை யுந்தொலைத் தருள்செய்த கருணைப் பிராட்டியிவளான், மலங்குமன ஞேடவ மதித்தசிறு விதிசொற்ற வலியசா பத்தொடக்கான் - மாறிமா றிக்குறைத நீர்ந்துநீ யுயவருள் வழங்குவா ளெனல்வேண்டுமோ, வலங்குகுட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (௯)

460. பொருள்செயிவள் வாவென்று திருவாய் மலர்ந்தவப் பொழுதுநீ யந்தாயிலை - பொலியுநின் முகத்தெதிர்ப் படவஞ்சி ஞனெனப் போதவுரை செய்து காந்தேந், தெருள்செயிவ ளின்னும்வந் திலனெனச் சிறிதுகண் சேந்திடிற் புவனத்துளோர் - திக்கிலை நினக்கஞ்ச லென்பாரு மிலையிவள் சினந்தவிர்ப் பாருமில்லை, வெருள்செய்பணி பலவுளொன் றுவள்கொமூம் மேவிடின் விழுங்கியே விடுமேரைத்த - வீரனு முளானிவை யுணர்ந்துய்ய வேண்டிடின் விரைந்துவந் தடியர்யார்க்கு, மருள் செய்குட மூக்கெங்கண் மங்களாம் பிகையுட னம்புலீ யாடவாவே - யலகில்பல புவனமு முயிர்த்ததாய் காணிவளொ டம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

# அ.—அம்மானைப்பருவம்.



461. ஒளிதங்கு திருநுதற் பங்கையாகி மாற்றவளொ டுங்கூடி யும்பர் பெருமா - னொண்முடியி னமர்பிறையை நம்பாக விழியாய தோர்ந்தயர்த் தன மாயினுங், களிதங்கு தோழிய ரிருக்கையை யழித்திடக் கண்டிரே மென்றுபத் திக் - கலைமதி யினைப்பிசைந் துண்டைபல செய்துமேற் காணவெறி வதுகடுப் பத், துளிதங்கு மறிதிரை நெருங்குங் கருங்கடற் றொடுகுழி யிடைப்பிறந்து - தூயபல கழுநீ ரரும்புமுகை யவிழத் துலங்குவெண் ணிலவுவீசி, யளிதங்கு குணனமைய முத்திட் டிழைத்ததிரு வம்மானை யாடியருளே - யாரண முழங் குங் குடந்தைமங் களவல்லி யம்மானை யாடியருளே. (௧)

462. துலங்குபனி வரையாய வெந்தைமாற் றலனெனத் தோன்றும் பெரும்பிறையைநங் - தோழியர் மனைக்குதவி செய்குண முணர்ந்துளந் தொக வமைத் தனமாயினு,மிலங்குகரு மச்சான் றெனப்பொலிந் தும்பரனை யெண்ணு திகழ்ந்தவொருவ - னியற்றுகரு மக்களம் புக்கபிறை யாற்றே மெனப்பிசைந் துண்டைசெய்து, மலங்குதல் கொளப்பரிதி தனைமே லெடுத்தெறிதன் மானவுத யப்பொருப்பின் - வழிசெம்மை யருவியி லுயகம்பல வழுந்தியொளி மாட்சியிக் குற்றுமேன்மே, லலங்குசெங் கதிர்வீசு மணியிட் டிழைத்ததிரு வம்மானை யாடி யருளே - யாரண முழங்குங் குடந்தைமங் களவல்லி யம்மானை யாடியருளே.()

463. மலர்செறி கருங்குழற் பங்கையாய பிறைநமை மதிக்குமடி யார கத்து - மன்னு தொழிந்துமதி யாருட் செறிந்திடன் மதித்தயர்த் தனமாயினு, முலர்தலில் விளைத்தி னும்பர்நா யகன்முகத் துறுவிழி புதைத்தநாளி - லுயிர் கணித் தியமாதி யொழிதர நமக்குமாங் கொழியாத பழிவிராவக், கலர்தொழிலி னணுகிய துளம்பொருறே மென்றுவெங் காரிருளை யுண்டைசெய்து - கதிரவன் கூட்டுண்டு தேக்கெறியு மாறுமேற் கடுகவிட் டெறிதலேய்ப்ப, வலர்விலிந் திர நீல மணியிட் டிழைத்ததிரு வம்மானை யாடியருளே - யாரண முழங்குங் குடந் தைமங் களவல்லி யம்மானை யாடியருளே. (௩)

464. எண்ணிய பசுங்கிரணம் வீசுமர கதமிட் டிழைத்தது மிசைச் செலுத்தி - யிலகுற வதன்கிழக் கிற்கமல ராகத் திழைத்தது செலச்செலுத்தி, நண்ணிய வதன்கிழக் கொளிவயிர மாற்றிய நலத்தது செலச்செலுத்தி - நாடிய வதன்கிழக் கோங்குசெம் பொன்செய்த நல்லது செலச்செலுத்திப், புண்ணிய மலிந்தநீ யாடுதிற னோக்கினோர் பொங்குகதிர் மண்டலமுதற் - போற்றுமண்டல நான்கும் வரிசையி னிருத்தியது போலுமென் றுவகைபூப்ப, வண்ணிய விடைக் கொடி துவண்டிட வெடுத்தெடுத் தம்மானை யாடியருளே - யாரண முழங்குங் குடந்தைமங் களவல்லி யம்மானை யாடியருளே. (௪)

465. ஒள்ளொளிய வயிரத் திழைத்ததை யெடுத்துமே லுயர்தர வெறிந் திடும் போழ் - தொருபாதி யறமுழு வதுங்குடிகொ ளுஞ்செங்கை யொளிவிரா

ய்ச் சேத்தன்மேவ, கள்ளொளிய மற்றையொரு பாதிநின் றிருமேனி நக்கபா சொ
ளிவிராவி - நின்றுபச் சென்னவத னடியொன்றி நினதுவெண் ணகையொளி
கலந்ததோற்றங், துள்ளொளிய வெள்விடையின் மீதந்தி வண்ணரொடு துரிசில்
பச் சுருவமான - தோகைநீ யடியவர் மகிழ்ந்திடக் காட்சிதா றுணையுமென் றுல
குவப்ப, வள்ளொளிய வெள்வளை கலிப்பமிசை நோக்கெய்த வம்மானையாடி
யருளே - யாரண முழங்குங் குடந்தைமங் களவல்லி யம்மானை யாடியருளே.()

வேறு.

466. சொற்பொலி முன்கை வளைக்குல முழுதுந் துள்ளி முழக்கமெழத்
துடியிடை யென்னுங் கொடியிடை நொந்து துவண்டெழு தலைமேவ
விற்பொலி முத்தி னிழைத்த தெடுத்து மிசைச்செல வீசிடுகால்
வேல்புரை யங்கட் காரொளி யதனடு விரவப் பொலிதோற்ற
முற்பொலி வெள்ளிய மதியமு மதனடு மூசு களங்கமுமாய்
முற்றிய வென்று வியந்து புகழ்ந்தொரு மூவுல கும்போற்ற
வற்பொலி கண்ட ரிடத்தம ருங்கொடி யாடுக வம்மனையே
யாக்க மிகுங்குட மூக்கமர் மங்களை யாடுக வம்மனையே. (சு)

467. சொல்லமு துந்திரை யெறியும் பரவைத் துறையிற் றோன்றமுதந்
தொக்கிரு பாலு மிமைத்திலர் நின்று துணைந்திரு கைநீட்ட
வல்லவர் கைக்கு மகப்பட லின்றிநின் வண்கைத் தலமுறுவான்
வண்பவ ளத்தி னியன்ற தெடுத்து மதித்தெறி யக்கவலா
நல்லநி னங்கைச் சேயொளி யுந்தொடர் நலமொரு செங்கதிரை
நாடியொர் செவ்வர வுறனே ரும்மென நானில மும்போற்ற
வல்லமர் கண்ட ரிடத்தம ருங்கொடி யாடுக வம்மனையே
யாக்க மிகுங்குட மூக்கமர் மங்களை யாடுக வம்மனையே. (எ)

468. முத்த மிழைத்த தெடுத்தெறி யக்கடி மொய்த்த குழற்றலையொண்
முத்த மணிப்பிறை யிட்ட கதிர்த்த முழுப்பட லைக்கணுறீஇ
யொத்த கலப்புற வுற்பல வக்குழ லுற்ற கறுப்புறமே
லொட்ட மிசைப்பொதி வுற்ற திறத்தை யுணர்த்தின் வனத்துளவக்
கொத்தன் விளர்த்தமெ யுற்ற பயக்கடல் குறுகி விடந்தாக்கல்
கொண்டு கறுத்தது நேரு மெனப்பலர் கூறி யுவப்பெய்த
வத்தர்குடத்த ரிடத்தம ருங்கிளி யாடுக வம்மனையே
யாக்க மிகுங்குட மூக்கமர் மங்களை யாடுக வம்மனையே. (அ)

469. விம்ம லுறுவெகு ளித்தழன் மூண்டு வெருக்கொள வெதிர்வந்த
வெய்ய விராவண னோர்காற் கற்பக விடபத் தறையுணவு
நம்மறி வின்மையெ னுமிற் றென்று நடுங்கியொர் கால்வான
நாட்டுக் குடிஞை துளைந்தனன் மீளவு நக்கொரு கான்மதியைச்
செம்ம லினன்றலை யொருகாற் றீண்டுபு செத்தோ மெனவுறவுஞ்
செங்கை விரற்றலை யொன்றுற வுந்திச் சிறுநகை வாய்த்தோற்றி

யம்மனை யாடிய வொருமழ வின்றவ ளாடுக வம்மனையே
யாக்க மிருங்குட மூக்கமர் மங்கலை யாடுக வம்மனையே. (௯)

470. எண்ணுத லுற்றவ ருள்ளக் கமல மிருக்கு மனப்பேடே
யெப்பொழு துந்துதி பாடுநர் நாவி லினிக்கும் பைந்தேனே
கண்ணுதல் பக்க மிருப்பா யென்றடி கைதொழு பவர்வாழ்வே
கார்தவ ழும்பனி மால்வரை பெற்ற கருங்கண் மடப்பிடியே
யொண்ணுதல் வீக்கிய பட்டம்வில் வீச வொளிக்குழை தோள்வருட
வுத்தரி யத்தலை யார முறழ்ந்திட வொண்முக முத்தமெழ
வண்ணுத லுற்றிரு நோக்கமு மேலெழ வாடுக வம்மனையே
யாக்க மிருங்குட மூக்கமர் மங்கலை யாடுக வம்மனையே. (௧௦)

அ.—அம்மானைப்பருவம் முற்றிற்று.

# ௯.—நீராடற்பருவம்.



471. திங்குபாற் கடனடு வெழுந்தபைங் கொடியில்வெண் டரளயா னத்திவர்ந்து - தரைபுகழு மக்கடற் றிரையெழுந் துழிதருந் தன்மையிற் கவரி துள்ளக், கொங்குசா லக்கடற் சும்மையி னியக்குழாங் கொண்டலச் சுறவியம் பக்-குளிருவா மதியிசை யெழுந்துமின் றுலெனக் கோலவெண் குடைநி ழற்றத், தெங்குநேர் கொங்கையர மாதர்மொய்த் தென்னவண் சேடியர் குழாங்கண் மொய்ப்பச்-சென்றுகா சிபமுனி தவஞ்செய்தே முற்றெளிச் சிவிகையி னிழிந்து வாசம், பொங்குமே னியினைப்பி யெங்கள்கோ மளவல்லி பொன்னிநீ ராடி யருளே - புகரின்மந் திரபீட நிகரின்மங் களமாது பொன்னிநீ ராடியருளே. (௧)

472. ஒழுகுகுழ லுஞ்சைவ லமுங்கணுங் கயலுமழ குற்றமுக மும்க மலமு - மொள்ளதர முங்கிடையு மஞ்செவியும் வள்ளையு முவக்குநகை யுந்தர ளமு, முழுகுசெவ் வியல்புபொலி வாயுமாம் பலுமொளி முகிழ்த்தகள முஞ்சங் கமு - முதிராத கொங்கையும் புற்புதமு முந்தியு முயங்குசுழி யுங்கதிர்ப்பு, மெழுகுவயி றுமடிப் புந்திரையு முக்காலு மேயகட கமும்வராலும் - விழையாமை யுங்கைவிர லுங்களிறு மொன்றவெழு வேலையும் பரிமளித்துப், புழுகுமலி தாமுங்கி யெங்கள்கோ மளவல்லி பொன்னிநீ ராடி யருளே - புக ரின்மந் திரபீட நிகரின்மங் களமாது பொன்னிநீ ராடியருளே. (௨)

473. மருவுநறு மணமலி கருங்குழலு கும்புனலை மங்குனின் றுகுபுன லெனு - வானம் பறந்துதிரி சாதக மெனும்பெயர் மரீஇயபுள் வாய ணக்க, வொருவுத லிலாச்செய்ய வாயுமிழ் நறும்புனலை யொள்ளரக் காம்ப னின்று - முகுமதுப் புனலெனப் பிரமரக் குலமென வுரைக்கும்புள் யாவு மொய்ப்ப, வெருவுதலி லாதறங் குடிகொளு மகங்கையெறி மென்புனலை யனைய கைம்முன் - விட்டபுன லென்றனைந் திதைமுதல யோரென்னு மெல்லோதி மப்பு ளேற்க, பொருவுதவிர் கருணைகூர்க் தெங்கள்கோ மளவல்லி பொன்னிநீ ராடியருளே- புகரின்மந் திரபீட நிகரின்மங் களமாது பொன்னிநீ ராடியருளே. (௩)

474. ஊற்றுசுவை நறவுண்டு வண்டுபல மேலெழ வொருங்கிதழ் விரிந் து தோற்ற - முற்றசெந் தாமரை நெருங்குறச் சூழும்வெள் ளோதிமக் குலம மர்தரத், தோற்றுமொரு தேத்துநீ புக்குநடு நிற்றல்வான் றொடுகுடுமி மாட மோங்கும் - தொன்மதுரை நகரகம் பூதியணி வேதியர் தொடர்ந்துசுற் றமர காப்ப, ஞாற்றுபுகை மேலெழ வளர்த்தவினர் படுசெவ் வழற்குழி நடுக்கண் முன்னு - ளவதரித் துறநின்ற தொக்குமென யாவரு மறையுமா றங்கண் மேவிப், போற்றுகரு ணைத்திரத் தெங்கள்கோ மளவல்லி பொன்னிநீ ராடி யருளே - புகரின்மந் திரபீட நிகரின்மங் களமாது பொன்னிநீ ராடி யருளே.()

475. மலிதரு விரைச்செய்ய சாந்திகுளி மாதர்பலர் மண்ணுவினை நிற் காற்றலான் - மற்றினைய நதிசோணை நதியாகி வெண்முத்தம் வண்கமல ராக மாகி, யொலிதரு கடிப்புன லுறப்பாய்ந்த செறுவெலா முறுவெண்ணெல் செந்நெலாகி - யொளிர்வெண் கரும்பெலாஞ் செங்கரும் பாகியுட னுறைவாணி யாக்க மாகி,வலிதரு சடற்குட்ட முற்றபல் வல்லிகளும் வண்பவள வல்லியாகி- மாண்புண்ட ரீகங்கள் கோகநக மாகிமதி மருவுறும் பருதி யாகிப், பொலிதர வுவப்பூற வெங்கள்கோ மளவல்லி பொன்னிநீ ராடி யருளே - புகரின்மந் திர பீட நிகரின்மங் களமாது பொன்னிநீ ராடி யருளே. (௫)

வேறு.

476. அஞ்ச மிரிய மடப்பிடியு மஞ்ச நடக்கு மணிந்திதைமு
ஞய மடமா தருந்திருமா லயன்மார் பகமுந் தாலமும்போற்
கஞ்ச மருவு மடவாருங் கருணைத் திருமே னியினறிதாய்க்
கவின்ற மஞ்சட் பொடிதிமிர்ந்து கரைத்து விட்ட புனலெழுந்து
தஞ்ச மில்லாக் கருங்கடன்மேற் சார்ந்து பரந்து பொலிதோற்றஞ்
சார்ங்க தரன்கார் மேனியிற்செந் தாதுக் கலைபோர்த் தியதேய்ப்பப்
புஞ்ச வளைக்கைக் குடந்தையுமை பொன்னிப் புதுநீ ராடுகவே
பொற்பா ருண்மங் களவல்லி பொன்னிப் புதுநீ ராடுகவே. (௬)

477. மின்செய் மருங்குற் கமலைமுதல் விளங்கு மடவார் பலருந்த
மேனி நுரைமொய்த் துறவுரிஞல் விலக்கி நறுநீர் தோய்ந்தெழுந்து
மன்செய் நினக்கு மஞ்சண்முதல் வாசந் திமிர்ந்து பணியாற்ற
வந்து சூழ வவருடம்பில் வண்ணஞ் செறித்த திறமானத்
தென்செய் நினது திருமேனிச் செறிபச் சொளிசார்ந் திடக்கண்டோர்
திகழுஞ் சகநின் மயமென்னச் செப்ப றெரிந்தா மென்றுவப்பப்
பொன்செய் வளைஞ்சால் குடந்தையுமை பொன்னிப் புதுநீ ராடுகவே
பொற்பா ருண்மங் களவல்லி பொன்னிப் புதுநீ ராடுகவே. (எ)

478. சாற்று நினது வரவுவந்து தடவுக் குறிஞ்சி மணிகநகஞ்
சந்த மகிலா திகள்பரப்பித் தளவப் புறவ நறுங்கனியும்
வீற்று மலரு மெதிர்குவித்து வெய்ய பாலை யெழுமுருங்கை
மென்பூம் பொரிகண் மிகவிறைத்து விரும்பு மருதத் திணையென்றுஞ்
சேற்று முளைத்த கோகநகத் தீப மேற்றி யிலாங்கலியின்
செழுங்காய்க் குடங்கள் பலநிறுவித் தெய்வப் புனலார்த் திடுமதனுற்

போற்று வளஞ்சால் குடந்தையுமை பொன்னிப் புதுநீ ராடுகவே
பொற்பா ருண்மங் களவல்லி பொன்னிப் புதுநீ ராடுகவே. (அ)

வே று.

479. எண்ணிய வெண்ணிய படியடி யவர்பெற வினிதுத வுந்தருவே
யெப்பிற வியுகல நின்றரி சனமுறி னென்னப் பொலிகொடியே
கண்ணிய மறைமுடி யெனுமொரு கட்சி கலந்தமர் பைங்கிளியே
காட்சி விருப்ப ருளச்சூ தத்தொளி காலப் பயில்குயிலே
துணணிய யோகியர் சிந்தைக் கமலத் தடமக லாவனமே
ம்பற்று மெழுத்துரு வாகிய பரையே சகலா கமமுதலே
புண்ணிய நண்ணிய கன்னிப் பொன்னிப் புதுநீ ராடுகவே
புராதனர் பங்கிலை மங்கலை பொன்னிப் புதுநீ ராடுகவே. (கூ)

480. காவல ரல்லது பச்சிலை யேனுங் காய்ந்துதிர் சருகேனுங்
கையி னகப்படு மொன்றுகொ டுன்பொற் கமலத் திருவடியிட்
டாவல ராயுள னெக்குரு கிக்கனி யன்பின ரயனுதி
யமரர்க ணறுமுறு தன்மைய ராகி யயர்ந்திட மேற்போக்கி
நாவலர் நன்கு புகழ்ந்திடு மின்ப நலப்பெரி யவராக
நன்கருள் புரிவரை மயிலே குயிலே ஞான வரோதயமே
பூவலர் பாவலர் கன்னிப் பொன்னிப் புதுநீ ராடுகவே
புராதனர் பங்கிலை மங்கலை பொன்னிப் புதுநீ ராடுகவே. (கо)

கூ.—நீராடற்பருவம் முற்றிற்று.

## கо—பொன்னூசற் பருவம்.



481. பிரவுகர லையினறல் கவர்ந்தகரு முகின்மீப் படர்ந்துவெண் டாரை பொழியப் - பற்றியிரு பாலுமிரு வெண்டிரை யெழுந்தப் பயோதர மளாவகாப் பண், விரவுமொரு வெள்ளோதி மத்தின்மே லக்கடல் விராயவரை நின்றோர் மயின் - மேவியாங் கொண்மரகதம்படுத் தியபுடவி மிசைநிறுவு தூண்வயிரமே, லிரவுதரு நீலவிட் டக்கிடையின் முத்தவட மியையப் பொருத்திமாட்டு - மெறி சுடர்செய் வயிரக் கொழும்பலகை மேலிவர்ந் தெண்டிசையு மேத்தெடுப்பப், புர வுபுரி சோணு டளிக்குமா ருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (க)

482. மாண்டசெந் தாமரை நடுப்பொலிவ தெனவம் மணக்கோக கக மலர்த்தும் - வண்பரிதி மண்டல நடுப்பொலிவ தென்னவம் மண்டலத் தாலொ ளிபெறு, நீண்டவழன் மண்டல நடுப்பொலிவ தென்னவொளி நிறைசெம் மணிப்பலகைமே - னிலவுற வமர்ந்திருள் குடித்தெழு மணிக்குழை நிலாஞ்செ வியி லூசலாட, வேண்டவருள் கைவளை கலித்தாட முகமதியின் வெண்ணகை

நிலாவாடவுண் - மெல்லிடை துவண்டாட வகிலபுவ னமுமாட மிக்கவள மல்கு சீர்த்தி, பூண்டதிரு நீர்நா டளிக்குமா ரருண்முதல்வி பொன்னூச லாடியரு ளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே.

483. பழிதப வறங்குடிகொ ணினதுசெங் கையமர் பசுங்கிளியை மான வொளிகூர்-பவழச் செழும்பலகை யேறியயி ராணியும் பங்கயத் திருவுமிருபா, லுழியுமிளிர் மணிவடந் தொட்டாட்ட யோகிய ருளக்கமல மேயவனமே - யுண் மைவே தாந்தத் தலாவுமயி லேயெளி துறுதபர ஞானவாழ்வே, வழிவழி நினக் கடிமை யென்றுதுதி நன்றுபுரி மாட்சியர்க் கெய்ப்பில்வைப்பே - மங்களாம் பிகையே யெனக்கனி மனத்தினுயர் வாணிதிரு வூசல்பாடப்,பொழிவளப் புனனா டளிக்குமா ரருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (௩)

484. கொங்குமலர் நின்னடிக் கமலமலர் மிசைதூய்க் குலாவப் பணிந் தெழுந்து - கோலமிகு திருவுருக் கண்டுநெக் குருகிக் குடந்தமுற் றருகுநின்று, தங்குகரு மலமெனப் படுபலகை யுள்ளாற் றகைப்புண் டதற்கியைதரத்-தனையு மிரு வினையாய பாசந் தொடர்ந்தெண் டபுத்தமா யாபுவனமா, மெங்குமுழி தரவலைத் திடவூச லாடுவ தியாங்கடேர்ந் துய்யும்வண்ண - மிலகுமதி நடுவமரு மொருமா னெனத்தூள வெறிசுடர்ப் பலகையேறிப், பொங்குபுன னன்னா டளிக்குமா ரருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (௪)

485. இருவரும் புணர்மாத ரிருவருந் திருமுகத் தேற்றபா கத்துநின்று-மிலகுமற் றமாதர் யாவருந் தத்தமக் கேற்றநிலை நின்றுமேத்த, வொருவரு மிருங்கா ருமித்தபொன் வரைச்சிகர முற்றிலகு பசுமஞ்ஞைபோ - லொளிரிளஞ் சோலைநடு வம்பொன்மணி மேடைமே லுற்றபொற் பலகையேறி, வெருவரும் பெருவாளை தன்னிளஞ் சிறுமீன் வியப்புற்று நோக்கவினை - மீன்கணம் வெருக் கொள்ள வெடிகொண்டு வானீர் விராய்த்துளைந் தாடிமீளும்,பொருவரும் புனனா டளிக்குமா ரருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (௫)

486. ஒல்லுமிரு நாடிவழி யோடுமிரு காலா லுலாய்த்திரி மனத்தின் வழியே - யோடியை யாறும் புகுந்துபுல னைந்துநுக ருற்றுழல லற்றுமேலாச், சொல்லுமா னந்தத் தியாந்துளைந் தாடவொண் சூட்டோதி மந்தாமரைத்-தூய பா சடையிவர்ந் தாங்குமுத் தணிபூண்டு சுடர்மா கதப்பலகைமேல், வெல்லுமா தரவுற விவர்ந்தொளிர் பசுஞ்சாலி விறல்வேழ மறையவுயரும் - வித்தக மூணர் ந்துவிண் ணுறுசாலி மறையநனி வேழங்க ளோங்கி மலியப், புல்லும்வள நீர்நா டளிக்குமா ரருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (௬)

487. பத்தியெனு மிகுசுவைப் பரவைப் பெருங்கடல் படிந்துவினை யாடு மனமே - பகருநிக மாகமா தீதவா னந்தப் பராங்கட லுதித்தவமுதே, தத்தி

விழு மருவிமலி வரையிற் பிறந்தொளி தவாதபிர ணவகுஞ்சரந்-தன்னைப்புணர்ந் தொரு மருப்பிளங் களிறீன்று தழைதரு நலத்தபிடியே, சித்தியம்மை யோகிய ருளக்கமல மூறித் தெவிட்டாது பெருகுதேனே - தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு மாறாத செல்வத் தமைந்தவாழ்வே, புத்தியமை நீர்நா டளிக்குமா ருண் முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத் தமிழ்து பொன்னூச லாடியருளே. (எ)

488. இகலரிய பத்திமை யெனப்பகரு மஞ்சனத் தெய்தவெளி யாகிநிய மே - யெற்றைக்கு மகறல்சற் றில்லையாக வவ்வலை யிடைப்படுந் தெய்வமானே, நகலரிய தென்னு தவக்கோக நகமலரு ளுளுமமர் குட்டன்னமே - நன்றது விளைந்தமன மாகிய பெருந்தளி நயக்குறு மணித்தீபமே, பகலரிய சந்தமுங் காரகிலும் யானைப் பருங்கோடும் வெள்வயிரமும் - பரவுமா ணிக்கமும் வரன்றியிரு கோட்டும் படுத்திரைத் துலவுபொன்னிப், புகலரிய நீர்நா டளிக்குமா ருண் முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத் தமிழ்து பொன்னூச லாடியருளே. (அ)

489. எண்ணிய பெரும்புவன மெங்கணும் விராய்ப்பொலியு மியல் பின்றி யுக்தேவர்சூ - ழிடைமருது முதலைங் குரோசப் பெருந்தல மெனப்பகரு மைந்தகத்து, நண்ணிய பெரும்புகழ்ச் சோமேசம் விசுவேச நாகேச மபிமுகேச- நாடரிய கௌதமே சம்பாண புரமென நவின்றெவரு மேத்துமீச, மண்ணிய விரைப்பசிய மாலதிவ னேசமென வவிரிவை முதற்பஃறேத்து - மாகிய விசேடத்தி னமர்வாய் பெரும்புலவ ராலுமுரை செய்யமுடியாப், புண்ணியந னீர்நா டளிக்குமா ருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத்தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (கூ)

490. திகழ்தரு மணிச்சிலம் பாதிபுனை பாதமுஞ் செம்பட் டுடுத்த வரையுஞ் - செய்யவற முழுதும்வள ரங்கையும் பரஞான தேசுமலி தருகொங் கையு, மிகழ்தருத லில்லாத வேயையடு தோளுமழ கியமங் கலக்கழுத்து-மிண்டைமலர் வென்றதிரு முகமுமா ரருள்பொழியு மிணைவிழியு முபமானமுற், றகழ்தருவி னுதலுமென் புன்றுதியு மேற்றுமகி ழுஞ்செவியு முகில்விளர்க்கு- மாரளக பாரமு மிகப்பொலிய வண்டபகி ரண்டங்க ளுந்தழைக்கப், புகழ்தருந னீர்நா டளிக்குமா ருண்முதல்வி பொன்னூச லாடியருளே - பூக்கமழ் தடத் தகுட மூக்கமிழ் திடத்தமிழ்து பொன்னூச லாடியருளே. (கo)

கo.—பொன்னூசற்பருவம் முற்றிற்று.

---

மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

# *சாத்துகவிகள்.



கும்பகோணம் புரொவின்ஷியல்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்,

## திரிசிரபுரம் - சி. தியாகராசசெட்டியாரவர்களியற்றியது.

491. பூமேவு மடமாதர் முதலியோர் தன்பணி புரிந்திடற் குரியராகிப் - பொலிதரச் செயலொன்று கருதியோ தன்பணி புரிந்தவர்க ளெந்தஞான்று, மாமேவு மங்களம் பெறுவரெனல் வெளியிடன் மதித்துமா லயன்முனோர்கள் - வாழ்நாள் பிடுங்குங் கொடுங்கூற் றெனத்தோற்று வலியவிட மமிர்தமாகிச், சேமேவு பரன்மிடற் றுக்கழகு செய்யத் திருக்கணேக் கருள்குடந்தைத் - தெய் வமங் களவல்லி திருவடியி லஞ்சுவைத் தேனூற் றெடுக்குமின்சொற், பாமேவு பிள்ளைத் தமிழ்த்தொடை புனைந்தனன் பற்று வெனக்குமறிஞர் - பரவவையி லிடமருளு மீனாட்சி சுந்தரப் பைந்தமிழ்ப் புலவரேறே.

## சீயாலம் - சிவசிதம்பரம்பிள்ளையவர்களியற்றியது.

492. பூமேவு மலரயனு மணிவண்ண மாலும் புரந்தரன் முதற்புலவரும்
பொற்புமலி கலைமகளு மலைமகளு முன்னரிய பூரணி முருக்குநிகரு
மாமேவு மெல்லிதழ்ச் சுந்தரி முதற்பல்விண் மடந்தையரும் வடமீனெனு
மாண்பெயர் புனைந்தமக ளுங்கமலி னிப்பெயரை மருவியொளிர் கின்றமா
காமேவு மனமுடைத் தங்கடங் கட்குரிய கைப்பணி விழைந்துநவிலக் [துங்
கடிதருள் சுரந்தன்ப ரிதயமலர் மேவுமங் களநாய கிக்குநலமார்
பாமேவு பிள்ளைத் தமிழ்க்கவிதை சூட்டினன் பரவுறு சிராப்பள்ளிவாழ்
பண்பன்மீ னாட்சிசுந் தரநாம நாவலன் பைந்தமிழ்ப் புலவரேறே.

சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்,

திரிசிரபுரம் - சோடசாவதானம்,

## அ. சுப்பராயசெட்டியாரவர்களியற்றியது.

493. துன்றுபுகழ்க் குமரகுரு பரமே தக்கோன்
றொல்பகழிக் கூத்தன்முதற் புலவோர் தம்பால்
மன்னுமுது தமிழாய்ப்பஃ றலபு ராணம்
வடமொழியி னின்றுதமிழ் மொழியிற் றந்தோன்
மின்னுமணிக் குடந்தையுமை தமிழைச் சொன்ன
மீனாட்சி சுந்தரநா வல்லோன் றன்பாற்
றன்னமில்சீர்த் தலைமைதழைத் தோங்கும் பிள்ளைத்
தமிழ்பிள்ளைத் தமிழாகித் தயங்கிற் றன்றே.

---

* இவை பழையபதிப்பைச்சார்ந்தவை; இந்நூல் பதிப்பித்தகாலம், சென்ற விபவஹுு (கி. பி. 1869) ஆனிமீ.

சென்னைப்ரீ சர்ச் மிஷன் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்,

## தெய்வசிகாமணிமுதலியாரவர்களியற்றியது.

494. தக்கவர்கள் புகழ்குடந்தைத் தலத்திலொரு தனிக்குடத்திற் றழை வுற்றோங்கும், முக்கணொரு செங்கரும்பி னிடப்பாலின் முளைத்தெழுந்த முக்கட் பைங்கேழ்,நக்கவொரு பசுங்கரும்பி னிருதாண்மே னவில்பிள்ளைத் தமிழா மாலை, தொக்கவன்பாற் சூட்டினனான் மீனாட்சி சுந்தரநா வலவ ரேறே.

சென்னைப்ரீ சர்ச் மிஷன் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்,

## சின்னசாமிபிள்ளையவர்களியற்றியது.

495. மலையமுனி தவப்பேறோ கலைமகளின் றவப்பேறோ மதிநீர் வைப் பிற், றலைமைபெறு மிவன்சனன மெனப்பலபிள் ளைத்தமிழைச் சாற்றும் வல்லோன், குலைவில்புகழ் மீனாட்சி சுந்தரநா வலரேறு குடந்தை மேய், மலை மகண்மே லொருபிள்ளைத் தமிழுரைத்த தொருவியப்போ மதிமிக் கீரே.

## எட்டயபுரம் - சுப்பிரமணியபிள்ளையவர்களியற்றியது.

கட்டளைக்கலித்துறை.

496. காரார் தருபொழில் சூழ்குட மூக்கமர் கன்னியின்மேற்
சீரார் தருமொரு பிள்ளைத் தமிழினைச் செப்பினனாற்
பாரார் தருபெரு நூல்களு மோர்நொடிப் பன்னும்வல்லோன்
நாரார் தருபுகழ் மீனாட்சி சுந்தர நாவலனே.

## அரங்கேற்றுவித்தவர் சிறப்பு.

விருத்தம்.

497. கார்கொண்ட பொழில்சூழ் குடந்தைமா நகரின்மிகு கவின்மாத ளம்பேட்டைவாழ் - கல்விச் சிறப்பினுய ராறுமுக நிபுணனருள் காதனட ராச மகிப,னேர்கொண்ட விளவல்பர சிவதரும மோராளுமெண்ணுத லுரைத்தலாற்ற லியல்பினுற் றோனடிய ருள்ளக் குறிப்பறிந் தினியவமு தூட்டலாதிப், பார் கொண்ட பல்பணியு முகமனொ டியற்றுவோன் பகர்வார் பகர்ச்சிமுற்றும் - பரவுதன் புகழாக மிளிர்கனக சபையெனப் பகருநன் னுமவள்ளல், சீர்கொண்ட மங்கள மடந்தைபிள் ளைத்தமிழ்ச் சீரரங் கேற்றுவித்தான் - செல்வமுட னுயுளு மிகப்பெறீஇ யனையனித் திண்புவியி னுறவாழ்கவே.

# திருத்தவத்துறைப்
# பெருந்திருப்பிராட்டியார்
# பிள்ளைத்தமிழ்.



## பாயிரம்.

### விநாயகர்.

498. தேர்மருவு தேவரிரு கைவிரன் முடக்கிச் சிரத்துமும் முறைதகர்த்துச் - செஞ்செவியை யிருகைமா றித்தொட் டிருந்தெழச் செய்யுமசு ரக்களிற்றை, யார்மருவு மோருலவை யாற்குமைத் தூர்தியே யாக்கியவ் வணக்க முந்தற் - காக்கியருள் பொழியுமொரு தெய்வக் களிற்றின்மல ரஞ்சரண நெஞ்சுள் வைப்பா, மேர்மருவு மகிழ்நர்கை தொடக்குழை தலாலவர்க் கினனஞ்சருத்தலால் வெச் - சென்றகுணை மின்மையாற் சற்றும் பசப்புறுத லின்மையால் வின்மைதவழும், பேர்மருவு மேருமந் தரமிமயம் வெள்ளிப் பிறங்கலைச் செற்றகொங்கைப் - பெருமாட்டி நற்றவத் துறைவளர் பெருந்திருப் பெண்டமிழ்க் கவிதழையவே. ()

### சிவபெருமான்.

499. பரவாண வத்திடை யழுந்திக் கிடக்கும் பசுக்களை யெடுத்துடன் முதற் - பகர்நான்கு மாயையி னளித்துவினை யொப்புவரல் பார்த்தருட் குரவனுகி, விரவாவிருக்குமப் பாசங் கெடச்சின்மொழி விள்ளலா லப்பாசகம் - வீறுதப மொழிவதெவ் வாறிவ னெனக்கோபம் விஞ்சப் பிடித்துறைதல்போ, லரவாலுமிழ்ந்தவிட மொளிசெயுங் கண்டனையெம் மண்டனைக் கண்டுபணிவா - மாவிவெண்டாமரை மலர்ந்ததன் பாசடையி லதன்முத் தொளிர்ந்து தோன்றல், குரவார் கதுப்பினர்க டனிகுடையு நான்முகக் கோலமீ னுடுமதிவிராய்க் - கூட்டுண விருந்தசெயல் காட்டுந்தவத்துறைக் கோமாட்டி தமிழ்தழையவே. (௨)

### உமாதேவியார்.

500. அளவில்பல வலியுடைய வாணவ மகன்றவா லறிவன்றி யுருவமில்லா - வையனைத் திறசிற்கு மத்திரம் மணியொளியு மலர்மணமு முறழநின்று, தளர்வறு படைப்பாதி யைக்தொழிலு மாற்றியொளிர் சன்மார்க்க நெறியினிறுவித் - தாயாயெடுத்தணைத் தெவ்வுயிர்க் குஞ்சுகந் தருபரையை யஞ்சலிப்பாங், களமலியு மென்பகை கரப்பவிட னுதவுமைக் காயாது விடுவலோயான் - காணுமென்றேழ்பரியி னேனு யிரஞ்செங் கரங்களை நிறீஇயதொப்ப, வளமலி படப்பையிற் பொரியரைத்தேமா மரப்பொழி றளிர்த்தெழிதரும் - வயிரவி வனக்குடியிருந்தபெரு மாட்டிதன் வண்டமிழ்க் கவிதழையவே. (௩)

## விநாயகர்.

501. மூத்தமைந் தன்பா லளித்தவற் கார்வமெனு மூதுரை வழக்குடைமையான் - முப்புர முருக்குந் திறற்றந்தை தந்தருள முறைமையிற் கொண்டதேபோற், பூத்தவெண் டிங்களும் பாசமுகு மிதழியும் பொரியரவு மொண்கங்கையும் - பொற்புற வணிந்தருள் கொழிக்குமொரு கோட்டுப் புராதனனை யஞ்சலிப்பா, மீத்திகழ் துகிற்கொடிகள் பொன்னுலகை யுரிஞலால் வீழ்பராகத்தின் மூழ்கி, விச்சுவா மித்திரன் கண்டபொன்னுலகென வியந்தமர ரம்பர் நீங்கித், தாத்திரி வரப்பிரபை கொண்டொளிரு மாடத் தவத்துறை யிருந்தகருணைத் - தாயாம் பெருந்திருப் பெருமாட்டி யைப்புகழ் தருந்தமிழ்க் கவிதழையவே. (௪)

## சுப்பிரமணியர்.

502. பாற்கடலின் மீமிசைக் கார்க்கட லெனக்கண்வளர் பைந்துழாய்ப் படலைமார்பன் - பயோதர வுருக்கொள்ள மேற்கொண் டுலாவரும் பண்புடைத் தாதையேபோ, னுற்கடல் வளாகமறை யச்சிறை விரித்தசவி கந்துபோழ்ந்தன்ன வாயின் - ஞாலங்கொ ளுகக்கொண் டாமயி னடாவுமெழி லுயகனை யேத்தெடுப்பா, மாற்கடல் கடந்தவர் மனத்துறுஞ் சிவபிரான் மண்ணவரும் விண்ணவருமோர் - மாத்திரையி னிற்கூட மேருவைவளைத்தல்போன் மாளிகையின் மீதேறிவை, வேற்கண்மட வார்குழலின் மட்பூவும் விட்பூவும் விரவிடக் கற்பகத்தின் - விடபங்கை யால்வளைக் குந்தவத் துறையமரும் விமலைசொற்றமிழ் தழையவே. (௫)

## திருநந்திதேவர்.

503. பொங்குபடை தங்கவரு சுவடுமட வார்கொங்கை பொருதவரு சுவடுமின்பம் - புரிதலில நீதருஞ் சுவடர னடிச்சுவடு பூணமிக் கின்புதவலாற், றுங்கமுடன் வாழிய வெனப்பிரமன் மான்முதற் சுரரேத் தெடுப்பவொளிருஞ்- சுடர்ச்செலிச் சூரற் படைக்கைப் பிரான்பொற் றுணைத்தாண் முடிக்கணிகுவாந், தங்குமறி ஞோர்கபம் புகைசிற மெனக்கரை தரக்காடி யுண்டுகிர்க்குந் - தடங்கண்மட வார்குழற் குங்குமம வூட்டுபுகை தாவிலட் டிற்படுபுகை, மங்குதலி லாமகத் தெழுபுகை யொடுங்கலவி மண்ணின்று மீதெழுந்து - மாறு துலாவுமளகைப்பெருந் திருவம்மை வண்டமிழ்க் கவிதழையவே. (௬)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

504. தெளியா வமண்கைய ருள்ளம்வெப் பேறவுந் தென்னர்கோன் வெப்பொழியவும் - தீயிலவ ரேடுமிக வுங்கருக வுந்தமது திருவேடு செழுமையுறவு, நளியார் புனற்கணே டெதிரேற வும்மவர்க ணடுகழுத் தறியேறவு - நறுமுலைப் பான்மணங் கமழ்வாய் மலர்ந்தசிவ ஞானபா னுவையுள்குவா, மளியார் நறுஞ்சந் தனந்தன் னெடும்பிறந் தன்புற வளர்ந்துபின்னு - ளக்கலார் கொங்கையினு மாடவர் புயத்தினு மடைந்துறவு கொண்டுறைதலாற், களியார் விருப்பினொடு காடிவரல் போன்மணங் கான்றுதண் ணென்றதென்றற் - கன்றுவந் துலவுமறு காருமள காபுரிக் கன்னிகற் றமிழ்தழையவே. (௭)

### திருநாவுக்கரசுநாயனார்.

505. செந்தா மரைப்பொய்கை நடுவிருந் தாலெனச் செந்தழல் பழுத் தொழுகும்வெம் - நீயநீற் றறைநடு விருந்துமமு துண்டெனச் செம்மாந்து நஞ்சமுண்டு,நந்தாத புணைகொடு கடந்தா லெனக்கட னகங்கொடு கடந்துமுலக- னாடும்வான் சைவமே பொருளெனத் தெரிவித்த நாவலவனைப் பரசுவாம், கந் தார் மதக்களிறு போற்றமது காரேறு கட்டியுழு தாக்கிவையே - களமரிடல் கண்டுகொளல் போலநெற் கதிர்மென்று கடைவாய் குதட்டிமேதி, மந்தா நிலந்தைவர வொண்டளி ரரும்புதே மாம்பொழிற் கண்ணுறங்கும் - வயலுடுத் தோங்குந் தவத்துறைப் பெருமாட்டி வண்டமிழ்க் கவிதழையவே. (அ)

### ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனார்.

506. பொருவிலாத் தருமவெள் விடையே றுகைக்கும் புராதனனை யெற்பநட்பிற் - பொறையர்முன் பரியுகைத் தருளப் பெருந்தேவர் புரிவொடும் போற்றிசைப்ப, வெருவிலா மும்மதக் கழைசுளி நெடுங்கோட்டு வெள்ளைக் களிற்றெருத்த - மேற்கொண்டு கைலைக் குகைத்திட்ட நாவலூர் வேந்தன்மல ரடிபணிகுவாம், குருவிரா வியசெழுங் கோழரை யரம்பைகள் குருத்தைமீப் போக்கிநாளுங் - கூடுபெய ரொப்புமை யறிந்துதவல் போல்வளி குதித்தெழ வசைத்தசைத்துக், கருவிமா முகில்பொரு கதுப்பரம் பையர்கொண்ட கலவி யெய்ப் பாற்றிநல்குங் - கழனிசூழ் தெய்வத் திருத்தவத் துறைமேவு கன்னி சொரற் றமிழ்தழையவே. (௯)

### திருவாதவூரடிகள்.

507. பைங்கண்வெடி வாற்குறு நரிக்குழாந் தாவும் பரிக்குழா மாகவு நெடும்-பரிக்குழா ஞெண்டுணு நரிக்குழா மாகவும் பயில்பிடக முரைசெய்தோர், தங்கறி விழுந்துழூங் கைமையுறவு மூங்கைமை தவிர்ந்தொருபெ ணணிபேசவும் - தம்பிரா னருள்பெற்ற வெம்பிரா னம்புயத் தாட்டுணை முடிக்கணிகுவாஞ், செங்கயல் பொருங்கரு நெடுங்கண்மட மங்கையர் திளைத்தாடும் வாவிபூத்த - செந்தா மரைத்தண்மலர் நடுவன்னம் வதிதலோர் திருமக டவம்புரிந்து, துங்க மிகு பேறுபெற் றன்தயறிந் தொருகலைத் தோகையமு னடுவணின்று - தூத்தவம் புரிவது கடுக்குமளகையில்வளர் சுமங்கலி தமிழ்க்குதவவே. (௧௦)

### ஸ்ரீ சண்டேசுவரநாயனாரும் மற்றநாயன்மார்களும்.

508. புண்ணியஞ் செய்துபா தகமாக்கு தக்கனர் போலாது மாபாதகம்
புரிந்துசிவ புண்ணியம தாக்குசண் டீசரிரு பொற்றா மரைப்பாதமு
மெண்ணரிய பிறவிக் கொடுங்கோடை நீங்குமா றெம்பிரா னடிநிழற்கீ
ழெய்தியின் புற்றவறு பான்மூவர் பாதமு மெப்போது மேத்தெடுப்பாம்
வண்ணமுறு மல்குறற் பகைப்பாற் பிறந்தது மதித்தெறிதல் போலமடவார்
மண்ணிய மணித்தொகை குயிற்றுமே கலைபுலவி மலியமறு கிடையெறி
னண்ணிய விருட்படல நக்கிகிமி ரும்பிரபை நாளுந் தழைத்தமரர்கோ [தலா
னகரெனச் செய்யுந் தவத்துறைப் பெருமாட்டி நற்றமிழ்க் கவிதழைய
[வே.

# க.—காப்புப்பருவம்.



## திருமால்.

509. திருவளர் சதக்கிருது முற்றுமா றுதவிய திறத்தையுண ராதுார் தியாஞ் - செழுமுகிலி னுவிட ருறுத்திமுன் னேன்கொண்ட செம்மாப் படக்க ரசலை, யுருவளர் திருப்பெண்ணொடு வருசுரபி யினமென்ப தோர்ந்தளித் தாங்க வன்ற - னுறுபகைகொ டவ்விட ரகற்றிநிரை காத்தமல ருந்திப் பிரான்புரக்க, மருவளர் கடுக்கைத் தொடைக்குழக னுர்தனது மாண்கொங்கை யன்றிமற்றோர்-மாதர்கொங் கைகடழுவ வொட்டே னெனக்கொண்ட வகைமைபோ லப்பரம னுர், குருவளர்நன் மேனியிற் செம்பாதி கொண்டுமகிழ் கோதையைத் தாதுக மழுங் - குளிர்பொங்கர் சூழ்தவத் துறைவளர் பெருந்திருக் கோமளப் பெண்ணமுதையே. (க)

## வேறு. அழைத்து வாழ்வித்த பெருமான்.

510. மேருவை வளைத்தரவு நாணென விசைத்தவிரி டக்கைமேவக்கொள்பிர தாபச்சமர்த்தனை - வேடுருவெடுத்துவல னுகியவருச்சுனனில் வெற்றியே பெற்றவிரு நான்மற்புயத்தனை - வீமலிமதத்துளப வேனமுவரிப்புவிகிளைத்துமேவற்கரிய சோதிப்பதத்தனை - மேன்மைமுனிவர்க்கொருகல லானிழலிலற்பொடுவி ரித்துவேதப்பொருள்சொல் யோகுத்தவத்தனை,

மாருதமெனப்படரு மால்விடையனைப்பவள வெற்பையேயொத்ததிரு மேனிச்சிவப்பனை-வானவர்தமக்குரிய மாதர்கள்களத்தணித மைப்பமேவுற் றொளிசெய் பானற்களத்தனை - வாரணமுகக்குரிசின் மாமயினடத்தி யெனு மொப்பிலாவிப்புதல்வர் பான்மிக்குவப்பனை-மாசிலவருக்குளொளி யாய்நிறைபுமப்பனைய மைத்துவாழ்வித்தபெரு மானைப்பழிச்சுதுங்,

காருருவிளர்ப்பவற னீர்புகவிருட்படும ணத்தவோதிக்குயிலை வேழச்சிலைக் கையோர் - காமனையெரித்தவர வாவுசெவிதழ்க்கொடியை முத்தமேயொத்தநகை யானைப்பலப்பல, காமருகைத்தளவி லாவுயிர்களுக்குமருளைத்தராநிற்கும்விழி யானைத்தருப்பொலி - காழிமழவுக்கினிய ஞானமதளித்தளவில் பொற்பின்முழ்குற்றமுலை யானைச்சுடர்த்தழல்,

சாருமெழுகொத்துருகு மாதவர் மனத்திடைநி றுத்துபாதத்தளிரி னுளைப் பனிக்குலஞ் - சால்வரையிறைக்குமக ளாகியமடக்கொடியை முற்றுநூல்கற்றபெரி யோர்சொற்றொடைக்கிளை - தாழ்செவியிலற்பவெளியேன்மொழியும்வைத்தினிது வப்பினுடற்குரிய தாயைக்கதிர்த்தெழு - தாவில்கனகப்புரிசை சூழ்தருதவத்துறை யிருக்குமேன்மைத்திருமி னுளைப்புரக்கவே. (உ)

## வேறு. திருவாளப்பிள்ளையார்.

511. கருமுகில் விளராகத் துண்ணெனத் தோற்றிய
கனிவிட மமுதாகக் கொள்விதத் தாற்றவர்

மருவிய கயிலாயத் தையனைப் போற்றனி
வருமொரு திருவாளைப் பிள்ளையைப் போற்றுதுங்
குருமல ரணிமாலைக் கள்ளுடைத் தாற்றெழு
குழலியை யடியாருட் செல்லனப் பேட்டினை
யருமறை முதலாமெய்க் கிள்ளையைக் காப்பொலி
யாகையில் வளர்ஞானச் செல்வியைக் காக்கவே. (௩)

வேறு. முருகக்கடவுள்.

512. அளிமிடைந்தொழுகு நறவருந்தியிசை யயர்கடம்பணிபு னைந்தபொற்சீர்ப்
புய - வழுகுதங்குபெரு வரைதொறுங்குறவ ரரிவைகொங்கையெனு
மும்பலைச் சேர்த்துறு,
களிபொருந்துமுரு கனையடங்கலர்கள் கதறவெங்குரல்செய் செஞ்சிறைக்
காற்படை - கரமிலங்கமயில் வெரிநிவர்ந்தடியர் கருதுமங்குவரு கந்த
னைப் போற்றுதும்,
குளிரரும்புமலர் வதியுமங்கையர்கள் குவிகரங்கொடும ருங்கிறக்கூட்டிய -
குயிலையென்புன்மொழி யையுமுவந்தினிது கொளுமிளங்கொடியை
யஞ்சுகப்பேட்டினைத்,
தளிர்துவன்றியிருள் படநிழன்றுமதி தவழுநின்றமலர் பொங்கரிற்றேத்
துளி-தடநிரம்பும்வயி ரவிவனக்குடிகொ டகுபெருந்திருநன் மங்கை
யைக் காக்கவே. (௪)

வேறு. பிரமதேவன்.

513. தண்ணந் துழாய்ப்படலை துயல்வரு தடம்புயத் தாதைக்கு நீழல்
செய்யத் - தந்தவரை யினபறை யரிந்தபகை கண்டரி தங்குதற் கிடமிலாம,
லெண்ணுந் தனக்குமனை யாய்க்குமனை யிற்குமனை யிளவலுக் கேதியுறையு -
ளெகினுறையு ளாகமரு தத்திணையி லாக்கிமகி ழெண்கைப் பிரான்புரக்க, கண்
ணொன்று நுதலாளர் பலியேற்ற தன்மையைக் காட்டியாங் கிருநாழிநெற் -
கவினுற வளிப்பப் பெருந்திரு வெனும்பெயர்க் கருதுபொருள் காட்டியாங்குத்,
திண்ணங்கொண் முப்பத் திரண்டறமு முலகஞ் செழிப்புற வளர்த்துநாளுந் -
திருத்தவத் துறையினில் வளர்த்தோங்கு தெய்வதச் செந்தார்ப் பசுங்கிளியையே.

இந்திரன்.

514. அங்கணித் தொழுகுமயி ராணியுட னீராட் டமர்ந்துவினை யாடுபொழுதி-
னங்கலா னுண்டுகி னனைந்தல்கு றேன்றலா லதுகாண நாணிவளைசேர், செங்
கைகொடு தன்கண் புதைத்திடா தவளுடைய செங்கண்பு தைக்குமாறே -
செய்யதா மரைமலர்க் கண்ணுயி ரம்பெற்ற தேவர்பெரு மான்புரக்க, திங்கண்
முடி மகிழ்நரெத் திறநிற்ப ரத்திறந் திகழ்யாமு நிற்பமெனவே-சீவகோ டிகளறி
தாத்தெரிப் பதுபோற் றிருக்கயிலை விண்டுவின்கட், டங்கியவர் தாமரை யிருக்
கைகொ டிருந்தநாட் டருவிமய விண்டுவின்கட் - டாமரை யிருக்கைகொ டிருக்
கரு டவத்துறைச் சைவச் செழுங் கொடியையே. (௬)

### திருமகள.

515. மன்னுமாய்ப் பாடியிற் பானயிர்நெய் வெளவிநெடு மத்தின்மொத் துண்டுமகிழ்நன் - வருந்தாம லவைபெற்று விழிவளா வுங்கொண்ட மனைவழிச் சார்ந்துவாழ்ந்தா, னென்னுமொரு பழிமொழி விலங்கவும் பாற்புணரி யினிது றையு ளாக்கொடுத்து - மியைதனக் குறையுளம் மகிழ்நன்மார் பாக்கியு மிருக்கு மொரு பெண்புரக்க, பன்னகா பரணரோ ரிடமின்றி யெங்கும் பலிக்குழன் றிடலுநீங்கிப் - பகர்மனைத் தந்தைவழி யுறையுளென வுரைதரும் பழிமொழியு நீங்கவோங்கி, மின்னுபொன் மலைவெள்ளி மலைமுதற் பன்மலைகண் மேவுறையு ளாக்கியன்னார் - மேனியொரு பாதியைத் தற்குறையு ளாக்கிமகிழ் மெய்த்தவத் துறையுமையையே. (எ)

### கலைமகள்.

516. தேனு றுவட்டெழுப் பாய்தரு மடுக்கிதழ் செறிந்தசெம் பொற்று மரைச் - செழுமலரின் மேற்றனது பொன்மேனி யொப்புமை தெரிந்துறையு மகிழ்நனேய்ப்பக், கானுறு வெண்டா மரைப்போதின் மேற்றனது கவின்மேனி யொப்புமை தெரீஇக் - காதலி னமர்ந்தருள் கொழிக்குமறை முதலளவில் கலைஞான வல்லிகாக்க, வானுறு தாழ்சடைக் கூத்தனார் வெஞ்சூல மழுமுதற் படைசுமந்து - மணிமூரல் விழியுகிரி னுற்பகை குமைத்தல்போல் வளைதிகிரி ஞாங்கர்முதலா, வூனுறு பல்படை சுமந்துந் துதிப்பவர்க் குறுமல விருட்பகை யைமெல் - லோதியிரு ளாற்குமைத் தருள்பொழி தவத்துறையி லோங்கெழிற் பெண்ணமுதையே. (அ)

### வேறு. துர்க்கை.

517. பொன்னங் கடுக்கை மதியணிந்த புரிபுன் சடையெம் பெருமான்றீப்
புகைக்கட் குறளன் வெரினெரியப் பொற்றாள் பதித்து நடிப்பதுபோன்
மன்னு மமரர் குழாமுருக்கு மகிடக் கூற்றின் முடிநெரிய
மலர்த்தாள் பதித்து நடம்புரிந்த மாறு வீரப் பெருஞ்செல்வி
கன்னிக் கமுகின் மிடறொடியக் கதலிக் குலைகள் சாய்ந்திடப்பா
கற்றீங் கனிகள் இழியவிலாங் கலிமுப் புடைக்காய் விழமோதி
யன்னப் பழனத் தோங்குதகட் டகட்டுப் பகட்டு வாளைகள்பா
யணிசேர் செல்வத் தவத்துறையி லமரும் பரையைக் காக்கவே. (கூ)

### வேறு. சத்தமாதர்.

518. மலர்பல பொதுள்பா சடைப்பொற் றடத்தினும் - வரியளி புகுமோடை
யுச்சக் குலைக்கணு, மழைமுகி றொடுபோர் நிரைச்சொற் களத்தினும் -
வயலணி மடமா தரப்புக் கடத்தினு,

மலர்கதிர் வயறேறு மற்றைத் தலத்தினு - மணிவளை மணியீன மொய்த்
துச் சரித்திடு, மளவில்பல் வளம்வாய்பு கழ்ச்சித் தவத்துறை - யம
லர்த மிடமேவு பொற்புத் துரைப்பெணை,

நிலவெழு சிறையோதி மத்தைச் செலுத்துந - ணிகரறு மடலேறு கைத்
துக்களிப்பவ, ணெடுவலி மயில்வா கனத்திற் சிறப்பவ - ணிகழர
வுணுமூர் தியைப்பெற் றுகைப்பவ,

ளிலகிய வரிமா நடத்தச் சமர்த்தின - ளிமிழ்மத வயிராவ தத்தைப் புரப்பவ, ளெழுமல கையினோறு வெற்றிக் குணத்தின - ளெனுமிவ ரெழுவோரு மற்பிற் புரக்கவே. (கo)

வேறு. முப்பத்துமூவர்.

519. கானமர்குழற்கொளிசெய் நித்தில மிழைத்தபொ னூர்பிறைமு கிற்கணோர் மதிப்பிறைமு ளைத்தது சிவணவி ருத்தித்தி ருத்தாளில் வானவர் - காதல்செய் மடக்கொடிகண் மைக்குழன் மணிப்பிறை நாடோறு மதிப்பரி தெனப்பல்பல மொய்த்திட வருள்பொழி மைக்கட் பிணைச் சீர்கொ டேவியை,

வானமர் தவத்தர்புக ழச்சிர புரத்துறு மாமறை மழக்குழவு மெய்ப்பொரு ளினைப்பெற வமுதருள் செப்புத் தனக்கோல மாதினை - வால்வளை யெனச்சுனை யிடைக்குளிர் நிலப்பிறை யூரிமய வெற்பிறை தவத்தினி லுதித்தருள் பிடியை மயக்கற்ற வுட்பாவு சோதியை,

யூனம ருடற்பொறைய வெற்கு மருளைப்புரி ஞானவ முதைப்பசு மலர்க் கொடியை யற்புத மயிலினை நத்துக்க ளத்தூய பூவையை - யூரெழு வயப்புரவி கட்டுமிர தக்கதிர் மீமிசை தடுத்தரிய கற்பக மலர்த்தரு கலிய வருத்திச் சுரர்க்கார்வ மீதரு,

தேனமர் மலர்ப்பொழில்கள் சுற்றிய தவத்துறை யேழிருடி யர்க்கிறை யிடத்தினமர் சத்தியை யினிதி னளித்தற் குரித்தான காவலர்-தேரிடபமத்திபரி பொற்புற வுகைத்தருள் சூரிய ருருத்திரர் வசுக்கணன் மருத்துவ ரெனுமிவர் முப்பத்து முச்கோடி தேவரே. (கக)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

## உ.—செங்கீரைப்பருவம்.



520. நீர்பூத்த புண்டரிக நிகராகு மாறுள நினைத்திருமி ஞையைீன்று- நிறையழகு கூட்டுண்டு வருமாறு செயவவரு நின்பணி விடைக்கணின்று, பேர் பூத்த செங்கையுந் தாங்குகின் றூர்தமைப் பெற்றதாய்க் குதவவென்று - பெருமுலைச் சிற்றிடை யரம்பையர்கள் பேசப் பிறங்குமக் கரமிரண்டு, மேர்பூத்த நிலனிற் பதித்தொரு மலர்த்தா ளிருத்தியொர் மலர்த்தாளெடுத் - தெழின்முக நிமிர்த்தசைத் திரவிமண் டிலமானு மிருகுழையில் வீசியாடத், தேர்பூத்தவீதித் தவத்துறைப் பெருமாட்டி செங்கீரை யாடியருளே - தேமலர்க் கண்ணிபுனை கோமளப் பெண்ணமுது செங்கீரை யாடியருளே. (க)

521. குருவார் துகிர்ச்சடை திசைத்தட வரக்கங்கை குழமதியி னோடு துள்ளக் - குழையசை தரத்திருப் புருவமுரி தரவெழுங் குறுமூர லிலவெறிப்ப, மருவார் கடுக்கைவெண் டலையரவு திண்டோள் வயிற்றுயல் வரக்கதிர்த்து - மணிநூ புரங்குழ றிடப்படைப் பேற்றதுடி வாய்த்தநிதி யபயமாய்த்த, வரு

வார் கொழுந்தழ றிரோதமுன் றியதா ளுவப்பரு ளெடுத்ததாளி - லோங்கத் தெரித்துமன் றிடையென்று நின்றுட வொருவர்தமை யாட்டுமயிலே, திருவார் தவத்துறைக் கருணைப் பிராட்டிநீ செங்கீரை யாடியருளே - தேமலர்க் கண்ணி புனைகோமளப் பெண்ணமுது செங்கீரை யாடியருளே. (உ)

522. ஒன்றூர்த மும்மதி லொருக்கவிய வாங்குபொன் றேங்கல்விற் பழமையறிவா - ருற்றதனை யன்றியேத் தொழிலையெஞ் ஞான்றும் முருற்றவல் லாமைகண்டு, கொன்றூர் வளைக்கையுல குண்டமுன் றேனிமிற் கொல்லேற தாய தான்மேற் - கொள்பொழுது வேறுறைய நாணியோ ருடல்செய்த கொள்கை போ லம்மகிழ்நனூர், பொன்னுரு மேனியிற் பாதிகொண் டாளும் பொருப்ப ரைய னீன்றபிடியே - புண்டரத் திருநீறு கண்டோ ருளத்தையொண் புன லாக்கி நெற்றிபொளிரத், தென்னூர் திருத்தவத் துறைவளரு மென்னம்மை செங்கீரை யாடியருளே - தேமலர்க் கண்ணிபுனை கோமளப் பெண்ணமுது செங்கீரை யாடியருளே. (௩)

523 மைவைத்த கண்டரை வணங்கவரு தேவர்கள் வயங்குசா ரூப முற்று - மன்னுவார் தங்குழுவி னின்றும் பிரித்துணர வைத்தகுறியே போலவும், பொய்வைத்த நுண்ணிடை யரம்பையர்கள் பேரெழிற் பொலிவுகா ணுாஉமயங் கிப் - புணரவரி னவரஞ்சி யகலும்வண் ணம்பொறித் திடுமிலச் சினைபோலவும், பைவைத்த துத்தியுர கப்பணி யணிந்தவப் பரமனூர் திருமார்பினிற் - பைம் பொற் படாமுலைச சுவடுசெய் தகமகிழ் படைத்துக் களிக்குமயிலே, தெய்வத் தவத்துறைச் சைவச் செழுங்கொம்பு செங்கீரை யாடியருளே - தேமலர்க் கண் ணிபுனை கோமளப் பெண்ணமுது செங்கீரை யாடியருளே. (௪)

524. பாங்கினுறு செம்பதும பீடமேறப் பப்பதும ராகபீ டத்தினேற்றிப்- பாணிவரு மேன்மைகண் டுயர்கங்கை மஞ்சனம் பரிவினுட் டிப்பொய்கைகள், ளாங்கொடியை நுரைபொதக் தாலென வுவணுண்டுகிலி னுலீர மொற்றியொ ளிரு - மம்பிறையு ரோணியென நெற்றியயி ரப்பொட் டணிந்தரக் காம்பன் மலரி, லோங்குமதி யமுதுகுத் தாலென்ன முத்தணிந் தொளிர்வட்ட முலையமு துவா - யூட்டித் திருப்பணிகள் பூட்டியிம வான்மனை யுவந்துகொண் டாடுமயி லே, தேங்கொளிய மாடத் தவத்துறைத் திருமங்கை செங்கீரை யாடியருளே - தேமலர்க் கண்ணிபுனை கோமளப் பெண்ணமுது செங்கீரை யாடியருளே. (௫)

வேறு.

525. கடிமலர் முளரியி லெகினம் வதிந்து கலித்தா டுதல்பொருவக்
காமரு சீறடி வயிரத் தண்டை கலுன்று கலித்தாடக்
கொடியிடை யார்திரு மேனிச்சுவடு கொடுத்த திறங்கூறிக்
கூறிக் குமுறுதல் போல வொலிக்குங் கோல்வளை களுமாட
முடியுறு சூழிய மாட வெழுங்குறு முறுவன் மலர்ந்தாட
முழுமதி முத்தென முகமதி நுணுமளி மொய்குறு வியராட
வடிய முளங்குடி புகுமொரு சுந்தரி யாடுக செங்கீரை
யவத்துறை மாற்று தவத்துறை நாயகி யாடுக செங்கீரை. (௬)

526. சூழி முடித்த மணிப்பணி யடருஞ் சுடர்கான் றிருண்மேயத்
தொட்டிடு பொட்டொடு பட்டமும் வயிரச் சுட்டியும் வில்வீசத்
தாழிரு செங்குழை யோரிரு செங்கதிர் தம்முத யஞ்செய்யத்
தளவு முகைத்தவிர் குமுதத் தமுது ததும்பி வழிந்தோட
வேழிரு புவனமு முய்ந்தன முய்ந்தன மென்று களித்தாட
விழைபொரு மிடையிற் றழைசிறு கலையொடு மெழின்மே கலையாட
வாழிய வன்பின ருள்ள மிருப்பவ ளாடுக செங்கீரை
யவத்துறை மாற்று தவத்துறை நாயகி யாடுக செங்கீரை. (எ)

527. பமர முழக்க நறப்பொழி யுஞ்செம் பதும மருட்டியவின்
பாதப் புணைபற் றுகப் பற்றிப் பற்றற நிற்பார்த
முமல விருட்பகை சாய்க்கு நறுங்குழன் மொய்த்தெழு புகழ்மான
முத்தம் பத்தி நிரைத்த மணிப்பிறை முழுமதி யொளிசாய்ப்பக்
குமரி யனம்பயில் வயல்சூழ் காழிக் குழவுக் கமுதருளுங்
கொங்கைப் புகழென முத்தா ரம்பல குழுமப் பொலிவாயென்
றமரர் தொழுந்தொறு மருள்செயு மம்பிகை யாடுக செங்கீரை
யவத்துறை மாற்று தவத்துறை நாயகி யாடுக செங்கீரை. (அ)

வேறு.

528. கந்தர நெடுமுடி துஞ்சிம யந்தரு கன்றே மன்றுடுங்
கண்டார்த மொருபுற நண்பின்வ திந்தக ரும்பே யன்பாளர்
சிந்தையி னினிதுத ழைந்துவி ளங்கதி றம்பா வின்பாகே
திண்கையி லுலவைகொண் மைந்தர்வி லங்கல்சி வந்தார் தந்தாயே
யந்தரர் பணிபத பங்கய மென்கனு மஞ்சே லென்றீவா
யஞ்சுக மொருகைய ணிந்திய லஞ்சம மர்ந்தா ரும்பாவாய்
செந்திரு மகள்கலை மங்கைதொ ழும்பரை செங்கோ செங்கீரை
செந்தமி ழாளை யிருந்த பசுங்கிளி செங்கோ செங்கீரை. (கூ)

வேறு.

529. தாவின் மணிக்குழை தாவு கடைக்கண் மடந்தாய் சந்தாரஞ்
சால்பொதி யத்தவர் தேற வியற்றமிழ் விண்டார் தந்தாயே
பூவி னிருக்குமி ஞர்பர வற்புத நங்காய் வெங்காதல்
பேயற வற்பினுள் வார்த முளத்தில் வதிந்து றங்தேனே
கூவு கடற்படு மால விடத்தை யயின்றா ரின்பாய
கூர்சுவை முற்றித மூர்சுதை துய்ப்ப வுவந்தீ யுந்தோகாய்
தேவர் முடிக்கணி யான பதக்குயில் செங்கோ செங்கீரை
சீர்கொட வத்துறை மேவு மடப்பிடி செங்கோ செங்கீரை. (கo)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

# ௩.—தாலப்பருவம்.



530. தின்பா டொருவேள் மழவிளஞ்சேய் சதுமா முகத்துப் புத்தேளைத்
தகைந்து சிறைசெய் ததுநோக்கித் தாயென் முறைத்தண் புனற்கங்கை
யன்பாற் றடமா யப்பிரமற் கனையென் முறைகொண் டொழுகுமவை
யனைத்துந் தன்பா டவ்வணஞ்செய் தமைந்த தேய்ப்ப வாவிதொறும்
பொன்பா யிதழ்த்தா மரைகள்பல பொருந்தப் பொருந்துந் துணையாவப்
போதன் றன்னூர் தியையமைத்தாற் போலோ திமக்க ளுறல்கண்டு
மன்பார் புகழுந் தவத்துறைவாழ் மணியே தாலோ தாலேலோ
வளருங் கருணைப் பெருந்திருமா மயிலே தாலோ தாலேலோ. (க)

531. விண்ணிற் படரு முகிற்படலம் விறந்து கரைகொன் றிரங்கிமறி
வெள்ளத் திரைவா ரிதிபடிந்து வீங்கும் புலவு மணநாறி
யுண்ணற் கரிய வுவர்த்தோய முண்டு கதறி யெதிரெடுப்ப
துன்னி யவைகின் மகிழ்நன்முகி லூர்திக் கினமா கியதுகினர்
தெண்ணற் கரிய விளநீருண் டெம்பா லுண்மின் முகில்காளென்
றெட்டிக் கொடுத்து நிற்பதுபோ லெங்குந் தெங்கம் பொழிலுயரும்
வண்ணப் பணைசூழ் தவத்துறைவாழ் மணியே தாலோ தாலேலோ
வளருங் கருணைப் பெருந்திருமா மயிலே தாலோ தாலேலோ. (உ)

532. மின்னும் வயிர மிருள்சீத்து மிளிரும் பதும ராகமலை
வீச நிறைந்த வெள்வளையும் வேழக் கரும்பு முத்துதிர்ப்பத்
துன்னுங் கமுகு செம்பவளந் தூர்ப்ப நிறைந்த தாமரையுந்
துதிக்கு மிருமா நிதிபோன்று தோன்ற வெங்கு மள்ளரவை
புன்ன லின்றி யோட்டொடுபொன் றொப்பக் கண்ட ஞானியர்போ
லுள்ளங் களித்துத் திரிவதுகண் டும்பர் பெருமான் றலைசாய்க்கு
மன்னும் பழனத் தவத்துறைவாழ் மணியே தாலோ தாலேலோ
வளருங் கருணைப் பெருந்திருமா மயிலே தாலோ தாலேலோ. (௩)

533. கானைச்சுரும்ப ரடைகிடக்குங் கமலக் காட்டிற் பிணர்மருப்புக்
கவைத்தாட் கவரி புகவெருவிக் கனிந்த வருக்கைச் சுளையுதிரப்
பாளைக் கமுகு மிடறொடியப் பருமுப் புடைக்காய் பலசிந்தப்
பைஞ்சூற் கொண்டல் கருக்கலங்கப் படர்மா மதியத் துடல்கிழிய
வாளைக் குமைக்கும் வரிநெடுங்க ணரம்பை மடவா ருசலிடு
மந்தண் டருக்கோ டுகண்முறிய வண்டத் தளவு மெழும்போத்து
வாளைப் பழனத் தவத்துறைவாழ் மணியே தாலோ தாலேலோ
வளருங் கருணைப் பெருந்திருமா மயிலே தாலோ தாலேலோ. (௪)

534. ஏற்றி னுரிமங் கலமுரச மிரங்கும் வயிர்யாழ் கோடுமுத
லியம்பு மொலியு மங்கலவாழ்த் தெடுக்கு மொலியு மிரும்புலவி
யாற்று மடவார் கொழுநர்சிரத் தம்பஞ் சடிக ளோச்சவெழு
மலம்பு சிலம்பி னொலியுமவ ரல்குன் மணிமே கலையொலியு

மூற்றுங் கடக் கடாமலைக ளுரறு மொலியும் வயப்பரித்தா
ரொலிக்கு மொலியு மிளைஞர்பொற்றே ருருட்டு மொலியு முகிலொலியை
மாற்றி முழங்குந் தவத்துறைவாழ் மணியே தாலோ தாலேலோ
வளருங் கருணைப் பெருந்திருமா மயிலே தாலோ தாலேலோ. (௫)

வேறு.

535. செய்ய கரும்பு விரும்புவில் வாங்கிச் செறியளி நாணேற்றித்
தெண்ணீ ரருவி யிரங்கும் பொதியத் தென்றற் றேரேறி
யைய மலர்க்கணை யொன்று தொடுத்திடு மங்கச னங்கமற
வழல்கெழு நுதல்விழி யாற்பொடி யாக்கிய வாண்டகை யோகிகளை
மையமர் வாள்விழி யாலம ராடி மருட்டிப் பணிகொண்ட
மாமயி லேகலை நாமகள் பூமகள் வாழுயி ராணிமுதற்
றைய லருக்கர சாய பசுங்கிளி தாலோ தாலேலோ
தமிழ்ச்சுவை கண்ட தவத்துறை யம்பிகை தாலோ தாலேலோ. (௬)

536. வந்திக் குந்திரு மாலயன் முதலிய வானவர் துயர்நீங்க
மைநா கம்பொரு மேனித் தகுவ வயப்படை யுள்ளவெலா
முந்திக் கட்கடை சிந்தழல் வாளியு மொருகைப் புழைவருபே
ருலவைக் கணையும் பிருகவுள் வாக்கு முகாந்தப் புனலம்பு
நந்தச் சிந்தி யழித்துத் தலைமை நடாத்திய யானையையு
நாடிக் கூடி யுடன்று தொலைத்தெழு நற்புக ழொருகோட்டுத்
தந்திக் கன்றை யுயிர்த்த விளம்பிடி தாலோ தாலேலோ
தமிழ்ச்சுவை கண்ட தவத்துறை யம்பிகை தாலோ தாலேலோ. (௭)

537. முதிர்சுவை யமுத மொழுக்கிய தேயென மொய்த்த சிறைக்கிளிகண்
மூவர் திருப்பதி கம்பல பாட முழங்கி யெழுந்தழல்போற்
புதிய நறுந்தளி ரீன்று விளங்கிய பொற்சூ தக்குழையிற்
பொருந்து கருங்குயில் வாசக முழுதும் பொக்க மறப்புகல
கதிரும் பூவைகள் சாமம் பாடக் காமரு சோலையெலாங்
கனுதல் கண்டொரு வண்டுஞ் சேராக் கற்பச் சோலைவனைத்
தெ[illegible]தொழு மளகா புரியிற் குடிகொளு மெந்தாய் தாலேலோ
வெவ்வுல கங்களு மெவ்வகை யுயிர்களு மீன்றாய் தாலேலோ. (௮)

வேறு.

538. மழவனுடற்பிணி தப்வருள் வைத்தபி ரானு ரானுரு
மகிழ்நர்குணப்பொரு ளெனவறி விற்பெரி யோர்பே சோர்மானே
தழன்மெழு கொத்துரு குவர்தமு ளத்திடை வாழ்வாய் தாழ்வான
தமியன்மொழிக்குமி னருள்புரி யத்தகு தாயே மாயாத
குழகுருவச்சர வணபவ னைத்தரு பாவா யோவாத
குமரியிருட்படு நறுமண மொய்த்தவிர் கோதாய் வேதாதா
ழழகுபழுத்தவி ரளகை யிருப்பவ டாலோ தாலேலோ
வரியமறைக்கும்வி ளரிய புகழ்க்கொடி தாலோ தாலேலோ. (௯)

வே று.

539. வாரார் முலைக்கொடி மானே தேனே யூனேய
மாறு வெனக்கரு ளீவாய் பாவாய் தாவாத
காரார் முடிக்கிரி மாதே தாதேய் போதேறு
கானார் குழற்குயி லுவார் மூவா மாவாழும்
பேரா ரூரத்தினர் தாழ்வார் சூழ்வார் வாழ்வாராய்ப்
பேரா மலற்புற மாசார் மூசா தேசாரு
சீரார் தவத்துறை வாழ்வே தாலோ தாலேலோ
சேவே றுவர்க்கிட மானாய் தாலோ தாலேலோ. (௧0)

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

## ௪.—சப்பாணிப்பருவம்.



540. செம்மைதரு மொளிகளுள் ளனவெலா மொப்பிலாச் சிவனுருத் தேசதென்றே-சிவகோ டிகளறிய வப்பரம யோகிக டிருக்கண் புதைத்த ஞான்று, வெம்மைதரு கட்குறவு கொண்டொழுகும் யாமென்று மேவுமொப் பாகேமெனு-வில்வீசு பவளச் சரோருக மகன்றஞ்சி மேலுமுப லாதடங்க, மும்மைபுல குத்தொழும் வரைக்குமக ளாகியதை முன்னியத் திணையிலுற்று - மொய்யமுகு கூட்டுணச் சமயத் தெரிந்தினு முயன்றுசெங் காந்த ணிறப்பத், தம்மைநிக ராய விரு கைகண்முகிழ் செய்தம்மை சப்பாணி கொட்டியருளே - சதுமறைகள் கதறுந் தவத்துறைப் பூங்கொம்பு சப்பாணி கொட்டியருளே. (௧)

541. பந்தந் தனக்குடைந் தஞ்சிவந் தடையும் பசுக்களைப் பாதுகாக்கும்-பண்புபோற் பரமரிரு கட்குடையு நீலமும் பங்கயமு மெய்யொளிக்கு, நந்திய வசோகும்வெண் ணீற்றொளிக் குடைதளவு நற்சடைக் கவிழ்தொழிற்கு - காணி புடை மாந்துணரு மான்முதற் றேவர்தொழ நாடபிர ணவவேழமாய், வந்தகா லத்துடையும் வேழமும் வந்தடைய வாளிவில் லாக்கியென்று - மலர்வாளி வேழவிற் குமரனைப் போலாதம் மகிழ்நரொடு பொருதுவெல்லச், சந்தமுற வைத்தொளிர் தருங்கர தலங்கொண்டோர் சப்பாணி கொட்டியருளே - சது மறைகள் கதறுந் தவத்துறைப் பூங்கொம்பு சப்பாணி கொட்டியருளே. (௨)

542. பைவளர் மணித்திப மேற்றிக் கிடக்கும்வெம் பாம்பிற் கிடந்துறங் கும் - பகவனுந் திப்பவள வம்புய மிசைக்குடிகொள் பனவனுள் ளஞ்சிலாணச், சைவர்முத லறவருட் டாமரைதொ றுங்குடிகொ டெந்தையாரே யொப்பநீ - தங்கிவளர் தாமரை தனக்குமுண் டென்றினிது தங்கியது போன்முருகவே, டெய்வமண காறுசெக் தாமரைப் பூவிற் சிறந்தாறு மழவுருவமாய்ச் - சேர்ந்து தைய வவ்வுருவ மாறுமோ ருருவமாய்த் திகழ்தாத் தழுவிமுதுகு, தைவந் தணைக்குங் காத்தொளி ததும்பவொரு சப்பாணி கொட்டியருளே - சதுமறை கள் கதறுந் தவத்துறைப் பூங்கொம்பு சப்பாணி கொட்டியருளே. (௩)

543. மீனுமை கேழனர சிங்கம்வா மனனஞ்ச மிக்கதண் டம்புரிந்தும் - வேகனைச் சன்றக்க னிவர்தலை யறுத்துமத வேள்புரிசை மூன்றெரித்து,

மூனுறு பகுவாயச் சலந்தரனை மாட்டியு முடல்கூற் றுதைத்தும்வெந் - யுற
முந்த கனைறுனைச் சூலமேற் றூந்தும்பி யுழுவைமுதல் வென்றுமென்று, மானுத
வலியுடைய வாண்டகைக டோற்பகெட் டரவிற் படுக்குமாயோ-னரவுருவ மாய்க்
கழிய மூண்டகவ ருட்டத் தடிக்கடி பிடித்தெறிந்து, தானுடி வென்றசெங்
கையொடுகை சேர்த்தம்மை சப்பாணி கொட்டியருளே - சதுமறைகள் கதறுங்
தவத்துறைப் பூங்கொம்பு சப்பாணி கொட்டியருளே. (ச)

544. ஏற்றபுன லரவுமுத லாங்கலனை யீர்த்தோடு மென்றுள மதித்த
மைத்தாங் - கெழில்வட்ட வடிவா முடித்ததெற் றச்சடை யிருக்குமக் கீரறுகு
கண், டாற்றுபசி தீர்வா னருந்தமல ரயனென வடுத்தெட்டி யெட்டிமுயலு -
மாண்டகை கரத்துழை கடுப்பகின் செவ்வா யமைந்ததொண் டைக்கனியெனு,
மாற்றரிய நசைகொண்டு கவர்வா னினைந்திதழி மாலையணி யெம்பிரான்போல்-
வாயூறு பைங்கிளிப் பேட்டினஞ்சிறைதடவி மகிழ்வினகை செய்துதருவின்,
சாற்றுகனி கொண்டூட்டி மகிழ்விக்கு மங்கைகொடு சப்பாணி கொட்டியருளே-
சதுமறைகள் கதறுந் தவத்துறைப் பூங்கொம்பு சப்பாணி கொட்டியருளே. (ரு)

வேறு.

545. பொன்புரி செஞ்சடை யையர் பசித்த புலிச்சிறு குழமகவைப்
போரா ழிப்படை யேந்திய செங்கைப் புத்தே ணனிதுயர
மன்புரி பாற்கடல் கூயின்னி யூட்டி வளர்த்தது போலாது
மலர்தலை யுலகத் தெவ்வுயி ருஞ்சுகம் வாய்த்த தெனத்துள்ள
மின்புரி மாட நெருங்கிய காழியில் விழைசொற் குழமகவை
மென்முலை வழிபால் வள்ளத் தூட்டி விழித்துளி மாற்றியசின்
கொன்புரி செங்கை முகிழ்த்தெனை யாள்பவள் கொட்டுக சப்பாணி
கொடிகொ டவத்துறை யடிக ளிடத்தவள் கொட்டுக சப்பாணி. (சு)

546. உன்னத மால்வரை பல்ல வணங்க வொளிர்ந்தெழு மெழுவரையா
யுற்றத னுருவு குழைத்து வருத்த முஞற்றிய பகைகண்டு
பொன்னக மிகலொரு வன்பா லிருபேர் பொரின்வரும் வெற்றியெனுப்
புந்தி மதித்திரு கூறாய் நேரே பொருதுறு மாறேபோற்
கன்னவில் கொங்கைக ளெம்மான் மார்பு கவின்சுவ டுறமோதக்
கம்பா நதியிற் கட்டித் தழுவு கரங்கள் சிவப்பூறக்
கொன்னுனை யிணைவேல் வென்ற கருங்கணி கொட்டுக சப்பாணி
கொடிகொ டவத்துறை யடிக ளிடத்தவள் கொட்டுக சப்பாணி. (எ)

547. கனியுயர் வான மணப்பந் தரின்மறை நாதன் மகம்புரிய
காரணன் முதலியர் பணிதலை நிற்ப நயம்பெறு கணநாதர்
முனிவா ரரவொலி செய்திரு கைகண் முகிழ்ப்பப் பல்லியமேழ்
முகிலொலி சாய்ப்ப வரம்பையர் வாழ்த்து முழக்கக் கடிமலர்வாழ்
வனிதையர் கின்னே யணிந்து பணிந்து மணத்தவி சேற்றவவண்
மங்கல மாமுனி பன்னி யொடும்புனல் வாக்க மகிழ்ந்தேற்றுக்
குனிமதி வேணியர் தொட்ட கரங்கொடு கொட்டுக சப்பாணி
கொடிகொ டவத்துறை யடிக ளிடத்தவள் கொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

548. பவத்துயர் பாற வெனக்கரு ளைச்செ யருட்பாவாய்
பனிக்குல மால்வரை பெற்று வளர்த்த சுவைப்பாகே
சிவத்திரு வாள னிடத்தி லிருக்கு மியற்றோகாய்
திருப்பெணி லாவு கலைப்பெ ணிவர்க்கி ரசத்தேனே
கவத்தளிர் வேர்மலர் மொய்த்தவிர் மைத்த குழற்றாயே
கயப்ப வெணுலற முற்றும் வளர்த்த கரத்தாலே
தவத்துயர் வார்க ளுளத்தவள் கொட்டுக சப்பாணி
தவத்துறை வாழு மடப்பிடி கொட்டுக சப்பாணி. (கூ)

வேறு.

549. கனத்த மலர்க்குழ லுச்சியின் முச்சி யிசைத்தாருங்
கதிர்த்த மணிப்பிறை பொட்டொடு சுட்டி தரித்தாரு
முனக்கித மெப்படி யப்படி தொட்டி லசைத்தாரு
முவப்பி னினித்த கனிப்பல் வருக்க மளித்தாரு
மனப்பெடை யைக்கிளி யைப்புற வைக்கொணர் வித்தாரு
மடுத்த விருட்பொழு துற்றக ணைச்சி லொழித்தாரு
மனத்தின் விருப்பொடு சுற்றினர் கொட்டுக சப்பாணி
மணத்த தவத்துறை யுத்தமி கொட்டுக சப்பாணி. (கo)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

# ரு.—முத்தப்பருவம்.



550. ஒருமு வகையா யெண்ணிலவா யுணர்த்த வுணர்சிற் றறிவினவா
யுண்மை யினவாய்ச் சதசத்தா யுறுகண் ணியல்பா யுழல்பசுக்க
ளருமா தவசன் மார்க்கநெறி யடைந்த ஞதி யாயளவி
லாற்ற லுடைத்தாய்ச் செம்புறுமா சான மூல மலநீக்கி
யுருவோ டருவங் குணங்குறியற் றொளியாய் நிறைந்த பதியையுணர்
வுணர்வா னுணரும் பொருளொழியா தொழிந்து கதிர்மீன் போற்க
திருவா ரின்ப முறவருள்வாய் செவ்வாய் முத்தந் தருகவே [லந்து
தேவா திபர்சூழ் தென்னளகைத் திருவே முத்தந் தருகவே. (க)

551. தொன்றாய்ப் புதிதாய்ப் பேருணர்வாய்ச் சுடரா யிருளா யுயிர்க்குயிராய்த்
தரியா நீத வாழ்வினுக்குத் துணையாய் நின்ற பெருவாழ்வே
யொன்றாய்ப் பஞ்சப் பொறிவழித்த முள்ளஞ் செலுத்தா துண்ணிறைந்த
வொழியா வன்பு வழிவதுபோ லொழுகுங் கண்ணீ ரிடைமுழுகி
நின்றா ருள்ளத் தமுதூற நிறைந்த கருணைப் பெருக்காறே
நிலவு ஞானச் செழுஞ்சுடரே நீங்கா வினிய சுவைக்கரும்பே
தென்றாழ் நறுந்தே னுவட்டெடுக்குஞ் செவ்வாய் முத்தந் தருகவே
தேவா திபர்சூழ் தென்னளகைத் திருவே முத்தந் தருகவே. (உ)

552. வெள்ளிப் பொருப்பும் வெள்விடையும் வெள்ளை யிரண்டா யிர மருப்பு - வெள்ளைக் களிறும் வெண்பிறையும் வெள்ளே றுயர்த்த வெண்கொடி யுந், தள்ளித் தாளங் கொழித்துமறி தருவெண் புனலும் வெண்ணீறுஞ் - சங் கிற் புரிந்த வெண்குழையுந் தகுவெண் மனவு மணிவடமுந், துள்ளிச் சுவைத் தே னுவட்டெடுக்குந் தும்பைப் புதுவெண் மலர்த்தொடையுந் - தொலையா வுடைமை யாப்படைத்த தூயவடிகண் முடிவணங்கத், தெள்ளிச் சிறுவெண் ணகையரும்புஞ் செவ்வாய் முத்தந் தருகவே - தேவா திபர்சூழ் தென்னள கைத் திருவே முத்தந் தருகவே. (௩)

553. மஞ்சிற் பொலிந்த திருமேனி மாலை யயனை யிந்திரனை
மற்றைச் சுரரை முனிவரரை மடவார் வலையிற் புகுத்துமென்னை
யஞ்சப் பொடித்த நெற்றிவிழி யடிக டமையப் பகைதீர
வமைந்த தளவுக் கணையாலு மங்கைக் கரும்புச் சிலையாலும்
விஞ்சத் திறல்வென் றேனென்று மீனக் கொடியோன் களிபொருந்த
விமலப் பெருமான் பெருங்காதல் வெள்ளத் தழுந்த வெண்முறுவல்
செஞ்சொற் கிளவி யினிதரும்புஞ் செவ்வாய் முத்தந் தருகவே
தேவா திபர்சூழ் தென்னளகைத் திருவே முத்தந் தருகவே. (௪)

554. நெய்தல் கமழுங் கடல்கிழிய நெடுமான் முதல்வா னவர்பறம்பு
நிறுவிக் கொடிய பணிக்கயிறு நிகழப் பூட்டிக் கடைகாலை
வெய்தென் றெவரும் விதிர்ப்பவரு விடத்தை யருந்து மெம்பெருமான்
மிடற்றிற் கருமை யகற்றிமறை விரிவாய் கருமை மேவாம
லைது பொருந்தப் பொருத்தியினி தரும்பு மமுதச் சுவையூற
லருத்தியுடனன் கருத்தியென்று மழகிற் டொலிதன் சாரூபஞ்
செய்து விளங்கும் பவளநறுஞ் செவ்வாய் முத்தந் தருகவே
தேவா திபர்சூழ் தென்னளகைத் திருவே முத்தந் தருகவே. (௫)

வேறு.

555. வெண்பிறை யலங்கலணி செஞ்சடைக் கார்க்கரிய மிடறுடைப் பரமயோகி
வெள்வளைச் செவியங்கை மறிமான் முழக்கொலி விலங்கியெ்ங படையு
தண்புனற் றடமலரு மிந்தீ வரத்தைத் தடிந்துபொற் குழைகிழித்துத்[மாறு
தாவில்குமிழ் மேர்பாயு மரிமதர் மழைக்கணுற் றுவுமம் மானைவென்று
கண்பயில் சிலைக்கரும் புஞ்சிறைக் கிள்ளையுங் காமர்யா மூங்கரத்திற் [து
கவிழ்தலைக் கொள்ளவயிர் தாறிமென் குதலையொடு கனிமழலை யுங்கலந்
பண்பழுத் தொழுகுமது ரக்கிளவி தோன்றுசெம் பவளவாய் முத்தமருளே
பங்கயத் திறைபரசு மங்கலர்க் கொருபுதல்வி பவளவாய் முத்தமருளே.

556. குறியுடுத் திரளனைய முத்தமெல் லாங்குழக் கூடிமிக் கொளிருமழகு-கூட்டுண்டு கீர்த்திதனி கூடுமா றெண்ணியுயர் கோட்டுடைக் குமைத்திரங்கு, மறி திரைக் கார்க்கடல் புகுந்தகடு விம்மவறல் வாய்மடுத் துண்டமேகம் - வயிறுளைந் தீனுமுத் தென்னக் கருங்குழல் வயங்குபிறை யெனவடைந்து, செறியுமூக் கனி யென வடைந்துநீ சமயந்தெரிந் தவாவென வொர்முத்தைச் - செவுத்தவங் கின்னுமெட் டிப்பார்த்து நின்றிடத் திகழுமுத் தங்கள் கொண்டு, பறியனைய

வேணியடி கட்கினிய தானநின் பவளவாய் முத்தமருளே - பங்கயத் திரைபரசு மங்கலர்க் கொருபுதல்வி பவளவாய் முத்தமருளே. (எ)

557. ஊனுறு நுதிவைப் படைக்கைசவ வீரரொ டுருத்தெழுந் திந்த்ரஞால-முருட்டிவரு சூர்முதற் சேனை சமுத்திரத் துழைநுழைந் துடல்பிளந்து,வானுறு வைந்தடி சுவைத்துநெய் யொழுகிருள் வாய்ப்பெய்து குருதிமாந்த - வன்சிலை குனித்தடுங் கணைபல பணித்தமரர் வாழுநக ரம்புதுக்கித், தேனுறு கூந்தலர மங்கையர்கள் புருவமென் சிலைகுனித் தொளிர்கணம்பு - திண்புயத் தெய்யக் கலாபமயின் மீதுவரு செவ்வே ளெனுங்குழவிதன், பானுறு மழலைவாய் முத் தங்கொ ணினதுசெம் பவளவாய் முத்தமருளே - பங்கயத் திரைபரசு மங்க லர்க் கொருபுதல்வி பவளவாய் முத்தமருளே. (அ)

வேறு.

558. உருகியு ளுடைபழ வடியர்த மனநிறை வுற்ற விளக்கொளியே
யுதயம தெழுகதி ரெதிரெழு பலகதி ரொத்த சுடர்க்கதிரே
மருமல ரிதழிய ருளமெனு மடுவின் மணத்த மலர்க்கொடியே
மதிதவழ் தருமுடி யிமவரை மகிழ்வின் வளர்த்த மடப்பிடியே
யருமறை குறுமுனி பெறவருள் கனியை யளித்த சுவைக்கனியே
யளவில்ப லுயிர்தழை தரகனி யுதவு மருட்பெரு மைக்குயிலே
முருகவிழ் புதுமலர் செருகிய குழலினண் முத்த மளித்தருளே
முனிவரர் குழுவிய வளகையில் வளர்பவண் முத்த மளித்தருளே. (கூ)

வேறு.

559. வெச்சென மொய்த்த பவக்கட லுட்பல் விதத்துய ரத்தொடுமோழ்
வெப்ப மனத்தென் மொழிக்கு மளிக்கும் விருப்ப முடைக்குயிலே
கொச்சை மறைக்குரு ளைக்கமு துய்த்த குடப்பொன் முலைக்கொடியே
கொட்பக னற்றவ ருட்பொலி தட்ப குணத்த மதிக்கலையே
நச்சர வப்புரி கச்சை யரைக்கசை நக்க ரிருப்பிடமே
நத்தம் விளர்த்திட மைத்து மணத்த நறப்பெய் குழற்றிருவே
முச்சக மச்சு மருட்பெரு மைக்கிளி முத்த மளித்தருளே
முத்தமிழ் மொய்த்த தவத்துறை யுத்தமி முத்த மளித்தருளே. (கo)

ரு.—முத்தப்பருவம் முற்றிற்று.



## சு.—வாரானைப்பருவம்.

560. மாமலர் நறுங்குழற் கொண்டலிடை நித்தில மணிப்பிறை நிலா வெறிப்ப - வதனவம் போருகத் திடவல மணிக்குழைகண் மழஞாயி றுதயஞ் செயக், காமரு புரந்தரவின் மின்கலந் தாலெலக் கவினுதற் பட்டமொளிரக் - கழுத்தணி பழுத்தவிருண் மேயவனை யிலகவிடை கட்டுமே கலையொலிப்ப, வாமமிகு புன்னகை யரும்பமென் சாயற்கு மடநடைக் குந்தொடர்ந்து - மயிலனம் வரச்சுருதி மொய்த்திடுஞ் சிற்றடி மணத்தமல ரோடளாவித்,

தேமலி சிலம்புகள் கலின்கலி னெனப்பெருந் திருமடந் தாய்வருகவே - செய்தவத் தருமுனிவர் மொய்தவத் துறையில்வளர் தெய்வதக் கொடிவருகவே. (க)

561. அள்ளிதழ்த் தாமரை யிடைக்கல்வி செல்வமரு ளக்கலார் தோற்றமென்ப - றியா ரறிந்தபெரி யோர்கணின் பொற்சீ றடித்தா மரைக்கணென்பர், விள்ளுமி வுரைச்சான்ற தாகுமத் தாமரையை மேவினர் பெறுமனின்றுண் - மென் மரைப்போது மேவியம் மாதரை விருப்பொடும் பெறுதல்பின்னு, முள்ளுமிவ் விருவரைத் தோற்றுதல் வியப்பன் றெலிக்குறா புரமணியின் - சொன்பதின் மரைத்தருத லாலென வரம்பைய ருவந்தேத்து தாள்பெயர்த்துத், தெள்ளு மறை யோதிட்டு மறிவரிய வொருபெருந் திருமடந் தாய்வருகவே - செய்தவத் தருமுனிவர் மொய்தவத் துறையில்வளர் தெய்வதக் கொடிவருகவே. (உ)

562. அம்மையிக பரமுத்தி யருளுநின் பொன்னடி யடிக்கடி பெயர்த்திடு தொறு - மவிருஞ் சடாமகுடர் தந்தே ரிடைப்பல்வி லமைத்துக் கிடத்தி யதுபோல், வெம்மையக தண்பூம் பராகம் பரப்பிமெத் தென்றவிய வன்னிலத்தில் - வெண்பிறைச் சுவடுபல தோன்றவர மாதர்தம் மிளிர்பிறை யணிந்த குழலின், மும்மையுல குந்தொழு பதம்பதித் திடவுறு முழுச்சுவட தாய்ந்து வரவு - மொய்த்தவிவை களிலெது வெனக்கொழுநர் தம்பிறை முழுச்சுவட தாய்ந்து வரவுஞ், செம்மையா யிரமறை தொடர்ந்துவர வும்பெருந் திருமடந் தாய்வருகவே - செய்தவத் தருமுனிவர் மொய்தவத் துறையில்வளர் தெய்வதக் கொடி வருகவே. (ங)

563. சந்தமுற மாடமரும் வெண்ணிறக் கலைமக டழைந்துகளு லித்தோன் றுநின் - றன்னுருப் பச்சொளியி னனிமூழ்கி வேற்றுமை தபத்தோன்ற லால் விரைந்து, கந்தமல ராளிநீ யேயென மதித்துக் கதிர்த்துவள மிக்சுகாரைக் - காற்புனித வதியம்மை பொன்னடியில் வீழ்பதி கடுப்பப் பணிந்தெழுந்து, வந்தடி யரைப்பரம னேயென மதித்தேத்து வார்போற் றுதித்துநிற்ப - மற்றது தெரிந்துமா னீளைம யினீங்கிய வணங்கொழப் பெறுவமென்று, செந்திரு மடந்தையு ளுவந்துபர வும்பெருந் திருமடந் தாய்வருகவே - செய்தவத் தருமுனிவர் மொய்தவத் துறையில்வளர் தெய்வதக் கொடிவருகவே. (ச)

564. நந்தாத கலைசெலிக் கானிற் சரித்தவொரு நன்பிணை வழுத்தியலர்மே - னங்கையா யுழையாதல் கண்டுதா மும்பெற நயந்தபல பிணைகளும் பொற், பந்தார் விரற்கர மமர்ந்தொரு சிறைக்கிள்ளை பகருமஞ் சுகமெனும்பேர்ப் - பண்புறப் பயிறலாற் றாமும் பெறக்கருது பைஞ்சிறைக் கிள்ளைகளுமொய், யந்தா ரடித்தல மடுத்தொரோ திமமூர்தி யாயஞ்ச மென்றுறைதலா - லறிந்துதா மும் பெற மதித்தவன் னங்களு மடுத்துத் தொடர்ந்துவரநற், செந்தாரப் பசுங்கிளி கருந்தார்க் குழற்பெருந் திருமடந் தாய்வருகவே - செய்தவத் தருமுனிவர் மொய்தவத் துறையில்வளர் தெய்வதக் கொடிவருகவே. (ரு)

வேறு.

565. ஐயர் முடியை கேடியுங்கா ணரிய வனகே டியுமவர்தா
ளறியான் றந்தை யாதலினின் னடியை யறிவான் றொடர்ந்துவர
வெய்ய கடுவுண் மிடற்றவர்தேர் மேவிநடத்து காட்பரியாய்
விரைந்து முன்சென் மறையாவும் விரும்பி நின்பின் படர்ந்துவரப்

பொய்யில் பரம ரிடத்திருவர் போன்மென் னடையைச் சில்லோதிப்
பொலிவைக் கவர்வா னடிமுடிகாண் புலங்கூர் மயில்க ளடர்த்துவர
வையம் புகழுந் தவத்துறையில் வாழ்வே வருக வருகவே
வான்றோய் குடுமி வரைமுளைத்த மருந்தே வருக வருகவே. (சு)

566. செந்தா மரைமேல் விதழ்மருட்டித் தேமா நறுந்தண் டளிர்வருத்திச்
செயலை மலர்நன் னலங்கவற்றிச் செம்பஞ் சினையும் விளரியற்றி
யந்தார் புனையு முழுவலன்பர்க் கழியா வின்ப மளித்துமண
வம்மி யிடத்தும் பயின்றதனு லடியேன் மனத்திற் குடியிருந்த
பைந்தாள் பெயர்த்து மேகலையும் பாத சாலங் களுமொலிப்பப்
பவள வாய்ப்புன் னகையரும்பப் பயின்மா லையின்முன் றில்கடோறு
மந்தா நிலஞ்சேர் தவத்துறையில் வாழ்வே வருக வருகவே
வான்றோய் குடுமி வரைமுளைத்த மருந்தே வருக வருகவே. (எ)

567. ஆக்கன் முதலா வைந்தொழிலு மவிரு மதிபஞ் சடைமுடித்த
வமலப் பெருமாற் குடனிருந்தன் பாக முடித்து வரும்பாவாய்
தாக்கு மலமூன் றறச்சவட்டித் தாவா விருவல் வினைமுருக்கித்
தருமோன் றடைய வெளியேற்குந் தண்ணங் கருணை புரிதாயே
மேக்கு நிவந்த செழும்பொழிலின் விடபத் தலரு நறுமலர்கள்
விரைத்த சுவைத்தே னசும்பூறி விசும்பி னெவர்க்கு மிசும்புபட
வாக்கும் வளஞ்சேர் தவத்துறையில் வாழ்வே வருக வருகவே
வான்றோய் குடுமி வரைமுளைத்த மருந்தே வருக வருகவே. (அ)

568. அருவ முருவ மருவுருவ மமையு மொருநான் கொருநான்கொன்
றாக வொன்பான் றிருமேனி யடிக ணிலைக்குத் தகவுயிர்கள்
பொருளும் மலப்பா தகக்குழிசிப் புலைப்புன் றொடக்கைப் பெறலருவான்
பொருளா கியசத் திநிபாதம் பொருந்தியகன்று சிவாகந்தத்
தொருவா துறையச் சத்திமுத லொளிரும் வாணி யீறாக
வோரேழ் பேத மாய்நிற்கு முமையே யமையா வளமிக்க
மருவார் சோலைத் தவத்துறையில் வாழ்வே வருக வருகவே
வான்றோய் குடுமி வரைமுளைத்த மருந்தே வருக வருகவே. (கூ)

569. அரும்பே புரையு மிளமுலைப்பெண் ணரசே வருக வன்பருளத்
தமுதே வருக வெவ்வுயிர்க்கு மனையே வருக வினியசுவைக்
கரும்பே வருக பெருங்கருணைக் கடலே வருக பரஞானக்
கனியே வருக வோங்கொளியாங் கடவுட் குறையு ளேவருக
விரும்பே தைமையென் னுயிர்த்துணையா மின்பப் பெருக்கே வருகமுரு
கேந்துங் குழற்பூங் கொடிவருக யாருந் துதிக்குஞ் சைவநெறி
வரும்பேர் மருவுந் தவத்துறையில் வாழ்வே வருக வருகவே
வான்றோய் குடுமி வரைமுளைத்த மருந்தே வருக வருகவே. (௧0)

சு.—வாரானைப்பருவம் முற்றிற்று.

---

# எ.—அம்புலிப்பருவம்.



**570.** மங்கலப் பேரருட் சுகுணவத் திரியென்று மாமுனிவ ரன்றனக்கு-மகவாத லான்மலையின் மெய்ப்பொரு டலைக்கொண்ட மன்னுமா தீர்த்தமாகிப், பொங்குசிவ கங்கையிற் பைங்கதிரின் மழவுருப் பொலியவுற் றுறைதலால்வெம்-புரமுனி யிருந்தவர் வலஞ்சூழ்த லால்விண்டு பொன்னெய்த லுறவருளலால், வெங்கணுறு கோழிக் கொடித்தமர விற்கொள்கர வேட்கினிமை யேபுரிதலான் - மின்னுடுக் கணவிடை பொருந்தலா னின்செய்கை மேவுதன் செய்கையென்றே, யங்கலுழு மேனிப் பிராட்டிநிற் கூவினா ளம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (க)

**571.** பலவுயிர்ப் பயிர்தழைத் திடவரவ மணியம் பரத்திடைத் தோன்றி வந்தாய் - பரசமய விருளறப் புரிவெங் குருப்புலவர் பாலமிர்து கொளவளித் தாய், குலவுமுட் பாதக மலங்கவற் றிச்சுகக் குவலயம் பெறவுதவுவாய் - குளிருந் தசக்கங்கை மானப் பரந்தெழு கொழுங்கரங் கொண்டுபொலிவாய், நல மருவு மிறையுருப் பாதிகொண் டன்புற நயந்துநின் றுயாதலா - னன்னுமெம் பெருமாட்டி தன்னையொவ் வாதிராய் நாடிவிளை யாடிடநினக், கலகில்புவ னத் துமிவள் போலுமோர் துணையில்லை யம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (உ)

**572.** ஏற்றநின் வாயினில வமுதஞ் சகோரமெனு மிருகாற்பு ளுண்டு மகிழு - மிவள்வாயி னிலவமுத நாமடங் கலைவென்ற வெண்காற்பு ளுண்டுமகி ழும், போற்றநீ மாலவ னெனச்சொல்லு மொருமுகப் புலவனைப் பெற்றெடுத் தாய் - புலவர்க்கு மேலவ னெனச்சொல்லு மறுமுகப் புலவனைப் பெற்றாளிவ, டேற்றமின் மாதரிரு பானெழுவ ருள்ளாநீ சிறக்குமிவ ளோங்குகல்வி-செல்வமின் மாதர்முத லளவிலா மாதர்பணி செய்யவுள் ளாளாதலா, லாற்றவு நினக்கதிக மென்றவரு மறிவர்கா ணம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப் பெணுட னம்புலீ யாடவாவே. (ங)

**573.** வண்டமர் நறுந்துளப மாலைப் பிரான்றுயிலு மறிதிரைக் கடலுதி த்து-மற்றவ ணிருக்கையமை யாதுவெறு வெளியோடி வந்துகா ரிருள்விளைத்து, மண்டமரர் பிழிதரச் சுதைதயிற் சுடதேய்ந்து மாய்ந்தலையு மொருவினைக்கம் - மாயனு லறியப் படாதபே ரானந்த மாக்கட லிடைப்பிறந்து,கொண்டவ ணிருக் கையடி யார்க்குமும் மலவிருள் குமைத்தமர ரேத்தநாளும்-குணவமுத மோங்க நித் தியமாகி நிற்குமிக் கொடியமிக மெல்லியப்போ, வண்டபகி ரண்டமு மனைத்துமிவள் பெருமைகா ணம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (ச)

**574.** வஞ்சக மனக்கொடிய தக்கன்செய் வேள்வியிடை மாறிலவ மான முற்று - மன்னிய வருட்சுரவ னுக்குரிய கரியின்மட மங்கைமென் றோள்புணர்ந்து, நஞ்சுமி ழெயிற்றரவு விக்கிட விழுங்கிச்சி றுமிகை குதட்டியுமிழ - நப வழி யலைந்துமிவை முதன்மற்று நிற்றுள்ள நன்றில வெலாமறிந்து, மஞ்சனைய மேனிநெடு மான்முதற் பலகோடி வானவர்கள் சூழ்நிற்பவு - மலர்கடைக் கண் ணின்மேற் சாத்திப் பிராட்டிதிரு வாய்மலர்ந் ததுகருணைகா, ணஞ்சிலம் படி யென் றலைக்கண்ணும் வைப்பவளொ டம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (ரு)

575. மக்கட் புரோகிதன் மனைக்கற் பழித்துமழ வன்பெற்ற வெண்குட்டநோய்-மாற்றவுல கெங்குந் திரிந்தித் தலத்துவர மாற்றிச் சிறப்புமுதவிச், செக்கர்ச் சடாமகுடர் தாண்மலர்க் கன்புந் திருந்தக் கொடுத்ததீர்த்தந்-தெய்வப் புரோகிதன் மனைக்கற் பழித்தலிற் சேர்ந்தவெண் குட்டநோயே, மிக்குற்றெழுந்ததென வுலகுரைத் திடவுடல் விளர்த்துக் குறைந்தலையுநிற் - வினையொடு களங்கமு மிமைப்பொழுதின் மாற்றியுயர் மேன்மையு மளித்தம்மைதன், னக்கக் கடைக்குமொ ரிலக்காக்கு மாதலா லம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (சு)

576. நினையாமன் முன்னிவனை யவமதித் தவனுமவ னேருமவி யுண்ணமொய்த்த - கெடுமான் முதற்பல்வா னவருமவ ருடனிருந் நீயுமணி பட்டபாட்டைத், தினையார் கொடிப்பொழுது நினைகின்றி லாயினுஞ் செங்கதிர்ச் செல்வனொடுவெண் - செறிகதிரி னீயுமொளி வட்டியுட் கிடவிவ டிருக்கைசெய் ததுவுமுணரா, யுனையாவு மாமிவ ளழைத்திட விழைத்ததவ மொன்றல்ல வெனவுமுணரா - யுனைக்கலை மதிக்கடவு ளென்றழைக் குநருநல் லுணர்வுடைய ரேபிரானுக், கனையாகி மகளாகி மனையாகி நின்றவளொ டம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (எ)

577. இமையாத பவளச் சரோருகக் கண்ணனு மிருசிதிக் குரியகோவு
மிருடியர்க ளெழுவரும் வயிரவியு நன்புக ழிலக்குமியு மின்னுமளவில்
கமையார் தவத்தினரு மாசமப் படிபூசை கடவுளை யிபற்றியுள்ளங்
கருதரும் பேறெண்ணி யாங்குறப் பெற்றவிக் கரிசருந் தெய்வத்தல
மெமையா ளரும்பஞ்ச புண்ணியத் தலமெனு வியம்புநான் மறையாதலா
லிங்குவந் துன்களங் கங்கழிந் தின்பினி திருந்திடுதலே நன்றுரைக்க
வமையாத திருவருட் சூற்கொண்ட வம்பிகையொ டம்புலீ யாடவாவே
யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (அ)

578. பொற்புற விளங்கும் பணிக்கலைக ளொவ்வொன்று புதையிருள் சவட்டுங்கதிர்ப் - புசீதே ளிடத்துநா டொறுமடைய மெலிகுவாய் பொன்னஞ் சிலம்புசூழ்ந்து,பற்பக திரிந்துமோ ரதகங் கிடைத்துடற் பரவிய முயற்களங்கம்-பாற்றிலாய் தருவன்விடு சூத்திரப் பிணியுண்டு படருண்டு படருமதியே, மற்புய விருந்தேவர் சூழுமிவ டிருமுன்பு வந்திறைஞ் சிடுவையேனின் - மலமாயை கன்மங் குமைத்துச் சிவானந்த வாரியிற் படியவிடுவா, ளற்புதனை யம்பலத் தாட்டும் பிராட்டியுட னம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (கூ)

579. வாவா வெனச்சொலி யழைப்பவும் பாணித்து வருதல்செய் யாதுநின்றாய்-மாற்றவ ளொடுங்கலவி யிறைவனார் முடிவாழும் வாழ்வினை மதித்துக் கொலோ, மூவாத வவர்முடி யராக்களிலொ ரரவுண்ண முன்னுவரீ னஃதன்றியு - முளைக்குமு டலினினது குடர்குழம் பிடவும் முடிக்கணடி யாலெற்றுவாள், பூவாரு மங்கைப் படைத்தொகையி லொன்றினைப் பொள்ளெனப் பார்வைசெயினீ - போனவிட மெங்குக் தொடர்ந்திடுங் கருதினிப் பூவைசற் றேமுனிந்தா, லாவா நினைப்பரிவி னுதரிப் பாரில்லை யம்புலீ யாடவாவே - யமரா வதிக்குநிக ரளகா புரிப்பெணுட னம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

# அ.—அம்மானைப் பருவம்.



580. இலகுநிற வம்போ ருகச்சேக்கை யம்மைமுன் னென்னுரு வெடுத் தமர்ந்த-விளியகோ லங்கண்டு வாழ்ந்தன மெனுத்தேவ ரேத்தெடுப் பக்காத்து, கலமருவு படையா னெவனைக்கொண்ட நன்மையா னுயர்வு பெற்றேனெனு - நகைச்சகக மீமிசை யெறியெறிஇத் துள்ளிய யம்பொருவ வோகைகொண்டு, மலர்புனை கருங்குழற் சேடியர்க ளாடவெ ாவனைகலித் தாடமென்மை - வண் கையி னெடுத்திடை யெடுத்தெடுத் துயரவரி மதர்விழிப் பார்வைசெல்ல, வலர் நிலவு பொழியுமணி முத்திட் டிழைத்ததிரு வம்மானை யாடியருளே - யருந்தவ ருளம்புகு பெருந்திரு மடந்தையினி தம்மானை யாடியருளே. (க)

581. கம் மத வானையுரி போர்த்ததிரு வாருயிர் கட்குரிய போகமருள் வாள் - கருதிய நிலைப்புணர் தருங்காலை யவர்முகக் கண்ணு மிருகதுநோக்கி, எம்பவிழு மூவாகத துளாணு மாறுபுரி வகையறிந் திருகதிரையு - மலர்க்கரங் களிலெடுத் தும்டர்மோ திடமாறு மாறிமா று.தறிதல்போற், செம்பதுமை முதலோர் கருங்குழலின் மேற்றம்ம செங்கைகள் குவித்துநிற்பச் - செறிகுழ லின் மேனின்ன கைமலர்கள் மலரெனச் செருகித் நிலத்திணுலு, மம்பவள கற்றிரளி னுலுஞ் சய் தனவெடுத தம்மானை யாடியருளே - யருந்தவ ருளம் புகு பெருந்திரு மடந்தையினி தம்மானை யாடியருளே. (உ)

582. கருணைபொழி திருமுகக் கொப்பெனத் தோன்றுபல கலைமதித் திரளையுங்கொள் - கைக் கொப்பெனத்தோன்று முட்டாட் குருஉச்செங் கவின் கமல முகைகளையுமா, மருவுமரி மதாவிழ்க் கொப்பெனத் தோன்றுகரு வண் டர்களை யுங்கைபற்றி - வானகத் துநவெறிந் திட்டுப் பிடித்துமறு வலுமெறிக் திடல்கடுப்ப, விருவல் வயிரத்தா லிழைத்தனவு மண்ணுறு மெழிற்பதும ராகத் திணுலிழைத்தனவு மிந்திரப பெயர்மகாணீ லத்தா லிழைத்தனவு மான பலவு, மருளபொழி யறங்குடிகொ ளங்கையி லெடுத்தெடுத் தம்மானை யாடியருளே - யருந்தவ ருளம்புகு பெருந்திரு மடந்தையினி தம்மானை யாடியருளே. (ங)

583. சத்துவ குணந்திரள வெனநித்தி லத்தாற் சமைந்தவைகள் பல் லவுஞ்செங் - தடங்கைக் காணும்பொழுது சேயொளி விராயிரா சதகுணம தா கியும்பூங், கொத்துமலி மென்குழற் காராளி விராவிமேற் கொளபொழுது தா மத மெனும் - குணமதா கியுமுயிர்கள் கோதிலா வொளியினைக் கூடியொளியே யாகியு, மொத்துமற் றிருளோடு கூடியிரு ளாகியு மும்பரை யடைந்துமீண்டு - முழல்கின்ற தன்மைகாட் டிடச் சுட்டரவை யொக்குநுண் ணிடையினை யெடுத்,ததது சடைப்பழமை யறிவார் களிப்படைய வம்மானை யாடியருளே - யருந்தவ ருளம்புகு பெருந்திரு மடந்தையினி தம்மானை யாடியருளே. (ச)

584. ஓதிபடர் சைவலம் மிருசெவிகள் வள்ளைகண் ணுற்பலம் பொற் பிதழ்கிடை - யொளிருநகை முத்தங் கபோலநீர் நிலையமுத மூறுவாய் செய்யகு முதஞ், சோதிவளர் கணடரு சலஞ்சலந் திதலைத் துணைக்கொங்கை பங்கய முகிழ் - துவளுமிடை வலலியழ கியமடிப் பலையுந்தி சுழியா மிருத்தலாலிக், கோதில்வா வியின்முளரி மலரென வங்கரங் குடிகொளப் புக்கன்மையைக் - குழித்துமே லெழுவது கடுப்பநித் திலமே முயிற்றியன பலவும்மெடுத், தாதிநா யகரிட மமர்ந்தநா யகிமகிழ்வி னம்மானை யாடியருளே - யருந்தவ ருளம்புகு பெருந்திரு மடந்தையினி தம்மானை யாடியருளே. (ரு)

வேறு.

585. பூத்த செழும்பூங் கற்பக மேவும் பொற்பமர் பைங்கிளிகள்
புண்ணிய மலருஞ் செங்கைகள் யாரும் புகல்கற் பகமெனவு
மேத்த வமர்ந்த பசுங்கிளி தம்மின மெனவு மதித்தடைய
வெம்மையுறு தவமிக் கிளியொன் றூற்றிய தேது நமக்கென்று
மாத்தட வங்கைக ளவையத் தருவடை வண்ணம் விதிர்த்தலென
மண்ணிய மரகத மாமணி கொண்டு வகுத்தன பலவுமெடுத்
தாத்தி முடிப்பெரு மானிடம் வாழ்பவ ளாடுக வம்மனையே
யன்னப் பழனத் தென்னள கைப்பரை யாடுக வம்மனையே. (சு)

586. குரைகடல் சூழு நிலத்துயிர் யாவுங் குறைவற் றுவகைபெறக்
கோதறு நாலெட் டாய வறங்கள் குலாவ வளர்த்தமையா
னிரைவளை புனைதரு செங்கை களின்புகழ் நேரெழு மாறெனவு
நெடிய திறற்பிர தாபமு மொக்க நிமிர்ந்தெழு மாறெனவுந்
திரையெறி முத்த மிழைத்தன வுங்கதிர் செறிநால் வகைமருவுஞ்
செம்மா ணிக்க மிழைத்தன வும்பல சேண்வழி நோக்கியெழ
வரைமணி மேகலை யசைதர வம்மனை யாடுக வம்மனையே
யன்னப் பழனத் தென்னள கைப்பரை யாடுக வம்மனையே. (எ)

587. தேமரு வியசெந் தாமரை மருவுஞ் செல்வத் திருமகளுஞ்
சீதப் புண்டரி கத்தினி துறையுந் தெய்வக் கலைமகளுங்
காமர் வலத்து மிடத்தினும் வரநீ கசியன் புடையடியார்
கண்குளிர் காட்சி பெறத்தோன் றிடுதல் கடுப்பக் குருவிந்த
மாமணி யால்வயி ரத்தா லாக்கிய வையிரு பாலுமெழ
மரகத மாமணி கொண்டு சமைத்தது மற்றத னடுவெழவே
யாமரு வுங்கொடி யைய ரிடக்கொடி யாடுக வம்மனையே
யன்னப் பழனத் தென்னள கைப்பரை யாடுக வம்மனையே. (அ)

வேறு.

588. ஏடு மலிதார்க் குழன்மடவா ரெண்ணி லவர்கள் குடைந்தாட
வெழிலோ திமங்கள் சேடியரே யென்ன வுடனு டிடுந்துறைக்க
ணீடு கொழுஞ்செக் தழனுப்ப ணீங்கா தமர்ந்தோ ரைந்தடக்கி
நிறைமா தவஞ்செய் பெரியவரை நிகர்ப்ப கறுந்தே னுவட்டெடுக்குங்
காடு மலியு மெல்லிதழ்ச்செங் கமல மலர்க டொறும்பெரிய
கமடம் படுத்தோ ரைந்தடக்கிக் கண்டோங் குதல்கண் டியாவருங்கொண்
டாடு மருதத் தவத்துறைப்பெண் ணரசா டுகபொன் னம்மனையே
யன்ன முகைக்கு நன்னயவின் னமுதா டுகபொன் னம்மனையே. (கூ)

589. களிபாய் புனல்வெண் மணற்கின்ற நாணற் கிழங்கு முளைக்கலப்பை
களின நாளச் சிற்றேர்க்கா னண்ணு நுகமே ழியுமியைத்தே
யொளிபாய் நீல வுற்பலத்தண் டொருகைத் தார்க்கோ லாகவெடுத்
துற்ற வலவப் பகடுகட்டி யுழுது கமடப் பரம்படித்துத்
தெளிபாய் தரள வெண்சாலி செறிய வித்தி நறுங்கமலச்
செந்தேன் பாய்ச்சி யுழவுதொழி றிருந்தக் களமர் சிறார்பயிலு
மளிபாய் மருதத் தவத்துறைப்பெண் ணரசா டுகபொன் னம்மனையே
யன்ன முகைக்கு நன்னயவின் னமுதா டுகபொன் னம்மனையே. (கo)

அ.—அம்மானைப்பருவம் முற்றிற்று.

# ௯.—நீராடற்பருவம்.



590. பொன்னிமய மால்வரை முளைத்துமுழு வெள்ளிப் பொருப்பிற் செழுங்கற்பகப்-பூந்தருவி னொருபாற் படர்ந்தளவில் புண்ணியம் பூத்தருள் பழுத்தகொடியே, முன்னியொரு வெள்ளைக் களிற்றொடு கருங்களிறு முட்டமதி வளர்மாவொடு - முல்லையங் கோலமான் மோதவுடு மீன்கவொடு மொய்த்தபல மீன்கலப்ப, மன்னிய வரம்பைக ளரம்பைக ளொடுங்கூட வானத் தெடுத்தெறிந்து - வாரிதி யகட்டைக் கிழித்துச் சுழித்துநெடு வையமகிழ் செய்ய வொழுகு, மின்னிய பெரும்புகழ்க் கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே - மெய்த்தவத் துறைமேவு முத்தமக் கௌமாரி வெள்ளநீ ராடியருளே. (௧)

591. பள்ளமடை வாய்திறந் தனையகட் புனலிற் படிந்துநெக் குருகுமுழுவற் - பழவடிய ருள்ளத் தடத்தமுத மழைபொழி பசுத்தகரு ணைக்கொண்டலே, தள்ளரிய விருகுலைச் சார்பின்மே திகள்வந் திழித் தாள்பெயர்த் தோட்டெடுப்பத் - தாழைமுதிர் முப்புடைக் கனியுடைய மீமுட் டசும்புறழ் வருக்கை இழிய, வுள்ளகமு ழன்கமுத் தொடியகறு மாங்கனிக ளுதிரமுழு நீலம்வயிர - மொள்ளொளிச் செம்மணி திரைக்கையின் முகந்தெறிந் தொலிகட லகங்கலக்கும், விள்ளவரி தாம்புகழ்க் கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே - மெய்த்தவத் துறைமேவு முத்தமக் கௌமாரி வெள்ளநீ ராடியருளே. (௨)

592. கைவளை கலிப்பக கருங்கண் சிவப்பவங் கனிவாய் விளர்ப்பநீலக் - கார்க்குழ லவிழ்ந்துசை வலமெனத் திகழக் கவின்பழுத் தொளிரன்னமே, மைவளர் நெடுங்கணர மங்கையர் குடைந்தாடும் வானகக் கங்கையாற்றை - மடங்குந் திரைக்கொழுந் தாற்றடவி யவ்வின் மடங்கலை மடங்கப்பாய, மொய்வலியி னொடுநீ டெடுத்தெறிந் தார்த்தவிர் முழுப்பதும ராகம்வயிர - முத்தமிரு கோட்டினு மிகக்கொழித் தொலிகடன் முகங்கிழித் தப்பாய்தரு, மெய்வளர் பெரும்புகழ்க் கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே - மெய்த்தவத் துறைமேவு முத்தமக் கௌமாரி வெள்ளநீ ராடியருளே. (௩)

593. நயந்தரும் பழவடியர் திருவுளத் தாம்வஞ்ச ராயினே னுள்ளத்தினு-நால்வேத முடியினும் பொலிபத யுகச்செழு நறும்பங் கயப்பெணமுதே, வயந்தரு புரந்தர னடாவுமெழி லூர்தியான் மாண்புதற் குறலறிந்து-வரைவளமு நெடியபல செழும்புறவின் வளமுங்கனி வாரிக் கொணர்ந்தன்னவன், பயந்தரு மிருந்திணை சிறப்பியவ் வூர்திபசி பாற்றுவ தறிந்துநெடிய - பரவைக்கு மவ்வள மளித்துக் களித்துநற் பண்புடைச் சான்றோர்பலர், வியந்தருமை யென்னவிகழ் கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே - மெய்த்தவத் துறைமேவு முத்தமக் கௌமாரி வெள்ளநீ ராடியருளே. (௪)

594. சுரும்புளர் கடிக்கோதை மலர்மகளிர் முதலளவில் சுரமகளிர் சூழ்ந்துநிற்பத்-தூவியன் னக்குழா மடுவண்மயி லென்னவத் தோகையர்க ணடுவணின்று, வரும்பெருமை தற்குதவு மங்குன்மக வாறுறும் வாகனம தாகையால் - வானவன் பகைவரையம் முகிலையும் பகையா மதக்குமென் றுள்ளாகளிகூர், திரும்பய னளிக்குமவ னுக்குரிய திணையிலவ் வழுலிதங் கிடமமைத்தாங்-கார்ஞ்சோலை முதலொரா றுயிர்கடங் கிடநாளுமின்புற வளர்த்து நல்லோர், விரும்புபுகழ் நனிபெறுங் கொள்ளிடத் திருநதியின் வெள்ளநீ ராடியருளே - மெய்த்தவத் துறைமேவு முத்தமக் கௌமாரி வெள்ளநீ ராடியருளே. (௫)

வேறு.

595. அண்டர் பெருமாற் குரியதினை யகத்துப் பொலியு முரிமையினை
யறிந்தன் னவனூர் முகிலினங்க ளடைய வணைந்து கண்படுத்தல்
கண்ட மயில்க டணவாது கலாபம் விரித்து நனிநடித்துக் [வெற்றி
களிக்கும் பொழிலிற் செழுமலர்த்தேன் கண்ணுற் றமைவென் றுறு
கொண்ட மடமங் கையரையவர் குழற்பூ வுறுங்காற் றூரப்பாரைக்
குனிவிற் குமர னெய்யில்விரற் கோதை யழுக்கா வணஞ்செயல்போல்
வண்டு படர்ந்துண் டவத்துறைவாழ் மாதர்ப் பிடிநீ ராடுகவே
மறையா யிரமுந் தொடர்வரும்பெண் வடகா விரிநீ ராடுகவே. (சு)

596. மூரிப் பகட்டு நெடுவாளை முழங்கிப் பாய வெரீஇயெழுந்து
முடத்தாட் கைதைப் பெருவேலி முட்டாட் கமலக் காடுழக்கி
வேரிக் குவளை மலர்மேய்ந்து வெண்ணெற் பசுஞ்சூற் கதிர்குதட்டி
வேழக் கரும்பு பலகறித்து மென்று சுவைத்தாட் கருமேதி
யூரிற் பயிலும் புனிற்றிளங்கன் றுள்ளிப் பொழிபா லுவட்டெடுப்ப
வுழவர் கழனி புகப்பாய்ந்தி யுறுசெல் விளையித் தறுத்தடித்து
வாரிக் குவிக்குந் தவத்துறைவாழ் மாதர்ப் பிடிநீ ராடுகவே
மறையா யிரமுந் தொடர்வரும்பெண் வடகா விரிநீ ராடுகவே. (எ)

597. மீனத் தடங்க ணரமாதர் விளையாட் டயர்கற் பகநீழன்
மேவுஞ் சுரபி மடித்தலத்து வெடிகொண் டெழுந்த வாளைமுட்டத்
தானத் புனிற்றுக் கன்றெனவான் றவழுங் குழமி நந்திவரை
தனின்முன் சுரந்து பொழிந்ததெனத் தாரை கொள்ளப் பொழிதீம்பால்
பானற் றடங்க ணனிமூழ்கப் படர்கோட் டெருமை நீந்திவரப்
பலசெற் கதிர்ப்போர் மிசைமிதப்பப் பங்கர் முழுதும் பாற்கடலை
மானப் பெருகுந் தவத்துறைவாழ் மாதர்ப் பிடிநீ ராடுகவே
மறையா யிரமுந் தொடர்வரும்பெண் வடகா விரிநீ ராடுகவே. (அ)

598. கனகக் கலமும் வெள்ளியபொற் கலமு மலது சக்கிரிமட்
கலந்தோ யாப்ப லீர்ந்துறையுங் காம ரனங்கள் பலபயிலும்
வனசத் தடமுந் தெய்வதக்கா மானப் பொலியு மலர்ப்பொழிலு
மஞ்சு தவழிஞ் சியும்புறத்து வளைவா ரிதியை நிகர்கிடங்கு
மினலைத் தடவு மாளிகையு மேலக் குழலா ராடரங்கு
மிருந்தே ரோடு மணிமறுகு மெழில்செய் திடலாற் றுறந்தோரு
மனநெக் குருகுந் தவத்துறைவாழ் மாதர்ப் பிடிநீ ராடுகவே
மறையா யிரமுந் தொடர்வரும்பெண் வடகா விரிநீ ராடுகவே. (கு)

599. வேதா கமங்கண் முழுதுணர்ந்து மேன்மைத் திருநீற் றரியநெறி
விளக்குஞ் சைவ முனிவரர்கள் விருப்பி னிருப்பு மருப்பிலுந்
தாதார் கமலத் தாரணியுஞ் சதுமா முகத்தோ னிகர்மறையோர்
தங்க ளிருப்புந் திருநெடுமா றனைநே ரரசர் குடியிருப்பும்
வாதா சனப்பூ ணவன்றேழன் மானும் வணிக ரிருப்புநயம்
வாய்ந்த தரும நிகர்வேளாண் மாக்க ளிருப்புங் கொண்டெவர்க்கும்
மாதா வனைய தவத்துறைவாழ் மாதர்ப் பிடிநீ ராடுகவே
மறையா யிரமுந் தொடர்வரும்பெண் வடகா விரிநீ ராடுகவே. (கய)

கூ.—நீராடற்பருவம் முற்றிற்று.

---

# க0.—பொன்னூசற்பருவம்.



600. மின்பூத்த வெள்ளிப் பிறங்கலிரு கூறாய் வியப்பத் திரண்ட தென்ன - வெள்ளொளி விரிக்கும்வயி ரத்தூண நிறுவிப்பொன் வெற்பைத் திரட்டி நீட்டிக், கொன்பூத்த வத்தூணை மிசையிட்ட தென்னக் கொழும்பவள விட்ட மிட்டுக் - குருஉப்பொலியு மவ்வரைத் தவழ்முழு மதிக்கதிர்க் கூரமுத மொழு கிற்றெனத், தென்பூத்த நித்திலத் தாழ்வடம் பூட்டியொண் செம்மணிப் பல கைமாட்டித் - திருந்துமப் பலகைமேற் செய்யதா மரைவளர் சிறப்பையொத் திடவிருந்து, பொன்பூத்த திருமுகங் கருணைபொழி தரவம்மை பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடி யருளே. (க)

601. செழுமலர் ததைந்தபொழி லிடைநினது நகைகண்ட தேந்தள வரும்புவிள்ளல் - செவ்வாய்வெ ணகையெழில் பொற்றிலொரு கூறியாஞ் சேர வருள்.புரியவேண்டு, முழுமதி முகத்திருப் பெண்ணமுத மென்னநின் முன்னம் வாய் விண்டுகேட்கு - முறைமையினை யேய்ப்பவெள் ளொளிவீசு தெண்ணிலா மொய்த்தமுழு முத்தமுழுதூர், தழுவுபல கையின்மிசைப் பொற்றாவி வெள் ளனத் தாவிலூர் தியின்மேல்கொளாத் - தண்ணளி சுரந்தடியர் கண்ணுறக் காட்சிநீ தருவதை நிகர்ப்பவேறிப், புழுகொழுகு குழன்மாலை நறவொழுக வழகொழுகு பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (உ)

602. அன்னஞ் சிலம்புகுரன் மானச் சிலம்புமணி யவிருஞ் சிலம்படி களா - லஞ்சிலம் பீர்ந்தபிடி செயலையை யுதைத்துதைத் தாடுதோ றுந்தளிர்த்து, வன்னஞ் சிறந்திட மலர்ந்துகண் ணீரொழுக மன்னிநின் றிடுதலினது - மாண் படியர் செயலையே காட்டலன் றியுந்திய மலரால் விளக்கையுற்றே, முன்னஞ் செழுங்கலை மறைக்குமெட் டாததாண் முளரியின் றுதற்றேமெனு - முன்னி யெமை யொப்புடையர் யாரெனக் களிதூங்கி முகமலர் வதுந்தெரிப்பப், பொ ன்னம் பலத்தெங்கண் முன்னவனை யாட்டுபெண் பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (ஙு)

603. அரிமதர் மழைக்கண்க ளொன்னுமட வார்கட் கமைத்தபொன் னூசலென்ன - வழகொழுகு வள்ளைக் குழைச்செவித் துணைகள் கசைந்தாட வாவுறுகலைக், குரிய மட மாதர்பல ரிருபாலு நின்றுதிரு வூசலிசை பாடியாட - வுத்தரிய மாடவிரு கொங்கைமுத் தாரமொழு கொள்ளொளி பரப்பியாட, வரி யளி கருங்குழற் பிணையன்மது வுண்டாட வண்டாட வங்கையேந்து, மதுர வின் சொற்கிள்ளை பாடமணி மேகலை யயங்கிடை துவண்டாடவம், புரிசடைப் பரமருங் கொண்டாட வம்மைநீ பொன்னூச லாடியருளே - பொன்னகர நிக ரான தென்னள்கை நகர்மாது பொன்னூச லாடியருளே. (ச)

604. தகரமொழு குங்கருங் கூந்தற் பிராட்டிநின் றன்பணிகள் சில்லிட த்துத் - தயங்குசெம் மணிகளால் வெயிலாகி யுங்குளிர் தரச்சில் லிடத்துமுத் தாற், சிகரவட வரைமிசைத் தவழுநில வாகியுஞ் சிலவிடத் திந்த்ரநீலத் - திர ளினு லிருளாகி யும்பொலிதல் பரமனார் சிலவுயிர்க் கினனாகியும், பகர்சில வுயிர் க்குமுன் மதியாகி யுஞ்சில படிற்றுமூழ் கியவுயிர்க்குப் - பாயுமிரு ளாகியும் பொலிவது தெரிப்பவெம் பந்தத் தொடக்கினெனையும், புகர்மல மறுத்தடிமை யாக்குமரு ளம்பிகை பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்ன ளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (ரு)

605. சீராழி யங்கையிற் பச்சிளங் கிளியொன்று சேர்ந்துறைய விருள் குமைக்குஞ் - செம்மணிக ளான்மூழ்ப் பணிகளும் பூண்டவிர் திருக்கோல நின துகாட்சி, யோராழி யெழுபரிப் போகுயர் முடித்தேரி லுதயமெழு கதிருநாண- வொளிர்பவள மேனிப் பெருந்தகை யுடன்கலந் துறையுநின் றன்மைகாட்டப், பேராழி சூழுலகி லளவறு முயிர்ப்பயிர் பெருங்களி மகிழ்ச்சிறுங்கப் - பெரிது வட் டெழுநாளும் விளராது கருணைமழை பெய்துவாழ் விக்குமுகிலே, போராழி சங்கங்கை யேந்தும் பிராட்டிநீ பொன்னூச லாடியருளே - பொன்னகர நிக ரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (சு)

606. தேமலி யலங்கற் கருங்குழ லுடைப்பெருந் திருமங்கை பொங்கு மெழிலின் - திருமேனி வீசுபச் சொளிமூழ்கி மரகதச் சேற்றின்மூழ் கியன போன்று, மாமலி தரும்பலண் டங்களும வண்டங்கண் மருவுமிரு திணையுயிர் களும்-வயங்கிடுங் காட்சிமறை முதனூல்கள் யாவுநின் மயமெனுந் தன்மைகாட் டப், பாமலி கலைக்குரிய மங்கைமா ரிசையொடும் பல்லாண் டெடுப்பமுனிவர் - பன்னியர்கள் சோபனம் பாடவர மங்கையர்கள் பங்கயக் கைகுவிப்பப், பூமலி செழுந்தவி சிருக்குமம் பெண்ணரசு பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (எ)

607. தார்செய்த மார்பகச் சுரரு ருடைத்துத் தனித்துண்டு மகிழ்சிறக் குக் -தறுகண் புகுந்துறை யுலஞ்செய்த தோளுடைத் தாரகப் பெயரினவுணன், கார்செய்த வுடலம் பிளந்தொழுகு குருதியங் கடல்வாய் மடுத்து மாந்திக்-கருந் தடி குதட்டியும் பசியடங் காதுகடை வாயைநாக் கொண்டு நக்குங், கூர்செய்த கொலைபழுத் தொழுகுவெள் வேற்கரக் குழவியைத் தழுவிவாசங் - கூட்டிநீ ராட்டிமுலை யூட்டியிரு ளோட்டியொரு கோட்டில்வரு செங்கதிரோடும், போர் செய்த செம்மணித் தொட்டில்வைத் தாட்டுபெண் பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (அ)

608. மலர்நறு விரைக்கருங் குழலுமொண் ணுதலுமருண் மடைதிறந் தொழுகுகண்ணும் - வயங்குநா சியுமுத்த மூரலுஞ்செம்பவள வாயுங் குழைச் செவிகளு, நலமருவு முகமுமங் கலமிடறு முத்தரிய நற்றோளும் வளைகலிக்கு - களினச் செழுங்கையுந் தானவடம் வில்லிடு நகிற்றுணையு நவமணியிழைத், திலகுமே கலையொடுஞ் செம்பட் டணிந்ததிரு விடையும்ப லுயிர்களையும்வைத் - தீன்றசிற் றுதரமு மறைமுடிக் கணியாகி யெம்முளத் தும்புகுந்த, பொலநிறத் தளிரடியு மழகுபொலி தரவம்மை பொன்னூச லாடியருளே - பொன்னகர நிக ரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (கூ)

609. மறைமுதற் பலகலைகள் வாழவர் தணர்வாழ மாமகத் தழலும் வாழ - மன்னுமா னிரைவாழ மழைபொழியு முகில்வாழ மற்றுமெவ் வுயிரும் வாழ, நிறைதரு பெரும்புகழ் விளங்குசை வமும்வாழ நீடுவை திகமும்வாழ - நெக்குருகி நின்னன்பர் துதிசெய்த சொற்பொரு ணிலாவுபா மாலைவாழ, விறை யவ ரழைத்துவாழ் வித்தவர் திருப்புகழ மெஞ்ஞான்று நன்குவாழ - யார்க்கு மினி தாம்பெருந் திருவெண்ணு நின்பெய ரிலங்கிநனி வாழவுலகிற், பொறையரு டவந்தானம் வாழவெம் பெருமாட்டி பொன்னூச லாடியருளே - பொன்னகர நிகரான தென்னளகை நகர்மாது பொன்னூச லாடியருளே. (க0)

க0.—பொன்னூசற்பருவம் முற்றிற்று.

---

திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

# திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ்.

விநாயகர் வணக்கம்.

610. நீர்கொண்ட செஞ்சடைப் பெருமான் வளைக்கவொரு நெடிய மால் வரையெடுக்க - நிறைசுவைப் பழையமாங் கனிபோல்வ தென்றுள நினைந்து பறித்துநோக்கிச், சீர்கொண்ட வொருபாற் கறுத்துமற் றொருபாற் சிவந்த லான் முற்றும்பழாச் - செங்கா யெனப்புறத் தெறியுமொரு குஞ்சரச் செஞ்சரண மஞ்சலிப்பாம், தார்கொண்ட விந்திர னுபேந்திர னெனப்புகழ் தரன்வனைக் கரன்மரீஇப - தன்மைக் கிணங்கமுன் றெய்வயா னைக்குவண் டார்புனைக் திறவுளர்குலத், தேர்கொண்ட கோதைக்கொர் கோதையின் சூட்டியுல கின்புற்று மகிழமேவு - மிறைநிறை பொழிற்றிரு விடைக்கழிக் குமரேச னின்றமிழ்க்கவி தழையவே.

## க.—காப்புப்பருவம்.

திருமால்.

611. பூமேவு தாமரை முதற்பல விதழ்ச்செழும் போதமரும் வண்டும் வானப்-புத்தேளிர் மடமாத ரழகுபொலி திருமுகப் போதமரும் வண்டு மொய்ப்பத், தேமேவு நறவக் கடம்பணி தடம்புயச் செம்மலைத் தெம்மலைக்குஞ் - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமருவு சேயைப் பரிந்துகாக்க, மாமேவு வித்துரும வொண்கொடி யெனக்கமல வண்கொடி நிறத்துமருவ - மற்றுதய விண்மணி யெனக்கவுத் துவகாம வண்மணி கிடந்திமைக்கக், காமேவு புன்னையங் காடுசூழ் தென்னக் கருந்துழாய்க் காடு நழக்-கருங்கடற் கிடையிற் பெருங் கடற் படையிற் கலந்தமர் கருங்கொண்டலே. (க)

பாவநாசப்பெருமான்.

612. இளமதிக்குழுது பணிகளுக்குமிக விரிதரக்குடிகொ டானமாகிப்பொலி வேணிக்கருத்தனை - யிமயவெற்புதவு மடகடைக்குமரி யினிதிருக்கு மொரு பாதிமேனிப்பெரி யானைத்திருத்தனை-யிமயவர்க்குமிகு துயர் விளைத்தமதி லெனமெரித்தநகை யானைமானைக்கர மேவக்கொளத் தனை - யிடியுமுட்கவுல கதிர்தரக்குளிறி யிகல்களிற்றுரிவை மேனி யாரப்புனை போர்வைப்பரப்பனை,

வளமைமிக்கவிர ணியசபைக்கணுமை மனமுவப்பவினி தாடுபாதத்தனை
வேதச்சிரத்தனை - வளைகடற்புடவி யொருபதத்தினக மருவவைக்கு
மொரு காளையேறித்திரி வானைச்சமர்த்தனை-வடவரைச்சிகர மடியி
னொற்றமுனம் வளைசெய்வித்தகனை மாயனுடற்கரி யானைத்திரத்
தனை-வழுவில்பத்திமைய ரிருதயத்தளியின் மணிவிளக்கினமர் பாவ
நாசப்பெரு மானைப்பழிச்சுது,

முளைநெகிழ்த்தெமது குடிதழைக்கவரு ளுதவுமற்புதனை வானவாழ்வைச்
சதயாகற்களித்தவ-னுதவுபொற்கொடியை மணமியற்றியுல குவகை
முற்றவரு ளாயதோடப்பொலி தேவைத்தருக்குறு - முடல்சினச்
செறுநர் முடிதுளக்கியுள முலைதரக்குளிறு சீறுகோழிக்கொடி யா
னைப்புறத்திரு - ளுலைதரக்கிரியி னுதயமுற்றகதி ருடன்மறைப்ப
வொளிர் தேசுமேனித்திரு வானைத்தழைத்தெழு,

குளவனைக்கவுரி குமரனைக்கருது குழகனைத்திறல்கொ டேவசேனைக்கொரு
கோலைப்புனத்தமர்-குறவர்பெற்றவொரு மடமயிற்கினிய கொழுந
னைப்புலவர் பாடுபாவிற்கினி தாய்மிக்கநட்புறு - குணவனைச்சுருதி
புணர்வதற்குரிய குரவனைக்கரவி லாரைவாழ்வித்திடு வானைத்தவத்
தினர் - குலவிடைக்கழியின் மகிழ்வனத்திலொரு குரவடிக்கணமர்
நீபமாலைப்புய வேளைப்புரக்கவே. (௨)

## பராசத்தி. வேறு.

613. முதுபெருங்கருணை மடைதிறந்தனைய முகமலர்ந்தவிழி யம்பலக்கூத்தர்த-
முடிவணங்குதொறு முதிர்பெரும்புலவி முழுதும்விண்டகல வம்
புயத் தாட்டுணை-முறைவணங்குபுனன் மகடிறங்கருதி முகிழமைந்த
கைகொண்டபொற்பாற்பொலி - முலைசுமந்தொசியு மிடையிளங்
கொடியை முனிவர்சிந்தைமலர் தங்கனப்பேட்டினை,

விதுவுறழ்ந்ததிரு முகவனிந்திதைமுன் மிளிர்மடந்தையரொ டுந்திருப்பாற்
கடல்-விலைவரம்பின்மணி யுடனெழுந்ததிரு விளர்நறுங்கமல நங்கை
யிக்கார்க்கரு-விரைநறுங்குழலி யருமமர்ந்துபணி விழையநன்றுளமு
வந்தகற்பாட்டியை-வினைகடிந்தெமையு மடிமைகொண்டுபணி விடை
புரிந்திடெனு மம்பையைப்போற்றுதும்,

பதுமன்வெஞ்சிறையின் முழுகவண்டர்பலர் படுகொடுஞ்சிறை தவிர்ந்தெ
ழப்பார்த்திடு - பரனையன்புபுரி பவர்பவங்களைசெய் பவனுணங்கவ
ருண் மைந்தனைச்சூர்ப்பிடி - பவளம்வென்றவித ழமுதமுண்டுமயல்
பரவவெங்குறவர் மங்கைபெட்பாற்புயல் - பயினகங்குலவு புனமடை
ந்துபல பலமொழிந்து திரி பண்பனைப்பூக்கமழ்,

மதுவழிந்திழிய மணமெழுந்துதிசை மலர்கடம்புபுனை நம்பியைச் சீர்ப்
பசு-மயிலிவர்ந்துகட லெழுமிளங்கதிரில் வருநலங்குலவு மும்பனைத்
தீத்தொழின் - மலியவஞ்சநவி லவுணர்தங்கள்குல மடியவென்றிய
யில் கொண்டகைச்சேப்பனை-மலர்செறிந்தவொரு குரவுதங்குபெரு
மகிழ்வனங்குடிகொள் கந்தனைக்காக்கவே. (௩)

## ஐஞ்ஞூற்றுப்பிள்ளையார். வேறு.

614. எல்லார்க்குமூறு தவிர்த்தினிதாள்விருப் பாற்றிரு
வில்லார்க்குநேர்கிழி யிற்றிருமேனிபொற் பர்க்கொளீஇ
யல்லார்க்குமாறுட லக்கரிசாய்தரத் தீர்த்தொளி
யைஞ்ஞூற்றுநாம வருட்களியானையைப் போற்றுது
மொல்லார்க்குமாறு விளைத்திடுவேல்வலக் கூற்றிறை
யுள்வார்க்குமூற முதச்சுவையாயமெய்ச் சீர்த்தரு
வில்லார்க்குமாட மிசைக்கருமேகநட் பாற்றுயில்
விண்ணோத்துமேன்மை விடைக்கழிவாழ்வினைக் காக்கவே. (ச)

## நான்முகன். வேறு.

615. நீடுகுண மேன்மைப் பொறைச்சிறப் புற்றென்று நிகழுமொரு மனையாட்டியு - நிகரறத் தண்ணென்று மெத்தென்று நறுமண நிரம்பொரு படுக்கைவீடு, நாடுசுவை யார்பதமு நன்னீரும் வேறொன்று நாடாது கொள்ளு மாறு - நன்குதான் பெறுபாக்கு மும்முகத் தொருவனரு ணான்முகக் கடவுள் காக்க, வேடுமலி கற்பகத் தருநிழ லிருக்கையு மெழிற்புலோ மசைபோகமு - மிரவியிற் பொலிமோலி முப்பத்து முக்கோடி யிமையவர் வணங்குவீறு, மாடு கொடி மேலுருமு நீட்டுமக வானடைய வகிலநிகி லஞ்செழிக்க - வணிவிடைக் கழியமரு மைம்முகத் தொருவனரு ளறுமுகக்கடவு டனையே. (ரு)

## இந்திரன்.

616. அங்கையலர் தூவிமுப் பத்துமுக் கோடியிமை யார்முக மலர்ந்து நிற்ப - வழற்கணலர் தூவியறு பத்தாறு கோடிவெவ் வசுரர்முகம் வாடி நிற்பச், செங்கையொரு சதகோடி கொண்டுபே ரழகுபொழி திருமுகத் தயிராணிவாய்ச் - செவ்வாம்பன் மதுவுண்டு வெள்ளாம்பன் மிசையேறு தேவேந்திரன் புரக்க, கங் கைமக னைக்குகனை வெய்யகட் டகுவர்குல காலனைத் தாலனைத்தும் - கரையு நா மத்தனைக் கத்தனைச் சுத்தனைக் கற்பனை கடந்துளானை, மங்கையொரு பங் கருக் காசிரிய னென்பதை வயக்கமற் றவர்பின்மேவ - மகிழ்வனத் தினிதம ரும் வெயிலேறு மணிமோலி மயிலேறு பெருமானையே. (சு)

## திருமகள்.

617. வரையறி புரக்தரன் முதற்பல்வா னுடருமுண் மகிழமுன மீன்ற பொற்று - மரையமுக் காறடைய மதியோடும் வரலுணர் மதுக்குமுத முட் களிப்பக், கரையெறி தரங்கமலி வெண்ணிறப் பாற்கடற் கட்பிறக் துலகளந்த - கருநிறத் தொருவனை மணந்துமகிழ் செந்நிறக் கமலைதா ளஞ்சலிப்பாம், விரை யெறி கருங்குழற் செவ்வாய்க் குறக்கோதை வெண்முறுவல் கொண்டுரைக்கும் - வெம்மொழிக் கும்புலவர் தம்மொழிக் குங்குழை விருப்பனை யுருப்பனையைநேர், தரையெறி புழைக்கைக் களிற்றுமுகன் முற்றகுவர் தானையொடு பொருவிநோ தச் - சமரனைக் குமரனைத் திருவிடைக் கழிமருவு சாமியைக் காக்கவென்றே. (எ)

## நாமகள். வேறு.

618. மின்னும் பளிங்கீர்க் கெடுத்தென்ன விளக்கஞ் சால்வெண் டிருவுருவும்
வெள்ளித் தகடுஞ் சமழ்ப்பவிதழ் விரிக்கும் வெண்டா மரைமலரு
மன்னும் படிக வெண்மாலை வடமு முவக்கு மதற்கேற்ப
மாறு வெள்ளை மதியுடையேம் வாக்கும் புகுந்தாள் பதம்பணிவாந்
துன்னுந் திரைநீர்ப் பெருவாரி சூழ்மண் முழுது முட்காப்பத்
துவன்று சிறைசற் றேவிரிக்குந் தோகை மயில்வா கனமேற்கொண்
டுன்னும் பழைய சீரடியா ருளங்கூட் டுண்ண வெதிர்தோன்று
மும்பர் பெருமான் விடைக்கழிவா ழொருவன் றன்னைக் காக்கவென்றே.

## துர்க்கை.

619. காட்டுங் கனல்கண் பொழிதருவெங் காலன் கடுக வுதைத்துவரு
கடிய கெடிய கொடியமுரட் கடாவுங்கதறி யோட்டெடுப்ப
வாட்டுக் தகுவர் குலம்புரக்கும் வலைகோட் டெருமைக் கரும்போத்து
வாய்காத் தள்ள வதன்றலைமேல் வைத்தூன் றியபொற் பதக்குமரி
யாட்டுஞ் சமய மாறினுக்கு மாதாரங்க ளாறினுக்கு
மத்துவாவோ ராறினுக்கு மமையுந் தானே முதலென்று
தீட்டும் படியா வருக்தெளியத் தெளித்தாங் காறு முகந்திகழச்
செல்வ மலியு மிடைக்கழிவாழ் சேயைப் பரிந்து காக்கவே. (க)

## சத்தமாதர். வேறு.

620. சிறையோதி மஞ்சே மயூரகா காசனன் சீயமயி ராவதப் பேய்
திகழகிர வூர்ந்துவே தம்பினு கஞ்சத்தி திகிரியலம் வச்சிரஞ்சூன்
முறையே சுமந்தடியர் துன்பமு மின்பமு முருக்கிப் பெருக்கியருளு
முழுமாத ராயதிற லெழுமாதரும்புடவி முற்றுமெற் றுந்தரங்க [றுபன்
நிறையோர் கருங்கடல் புரண்டுமூ டியதென்ன நெற்யென்று குறியொன்
னெடியவா னவருமா சங்கையுட் கொண்டுழல நீள்சிறைத் துணைவிரித்
மறையோர் மயூரத் திவர்ந்தடியர் முன்புவரு வள்ளலைக் கள்ளலைக்கு [து
மலர்மகிழ்வனத்திலொருகுரவடியினமர்வள்ளிமணவாளனைக்காக்கவே.

## முப்பத்து முக்கோடிதேவர். வேறு.

621. மனநெகிழ் தரக்கர தலத்துணைமுகிழ்த்துயர்த் வத்திற்சிறப்பாய யாவரும் போற்றிட - மயில்வெரிந்மிசைக்கர தலத்தயிலெடுத்தலவு கொற்றப்பு யத்தானை யாரணக்கூக்குர, லினமிடுபுபற்றிய தொடர்ச்சியினடக்கவுமவைக்கப் புறத்தானை மாறடுங்கூற்றனை - யெழில்கனிதாரப்பொலி குறக்கொடி முலைத் துணை திளைத்துக்களிப்பானை வாரணநதீட்டிய, சினமிகுகொடித்தலை வளைப்பனி வரைக்குமரி யற்பிற்றரப்போத சேயைவண்டார்த்தெழு - செழுநிறை மலர்த் தவி சிருக்கையயனைத்தலைபு டைத்துப்படைத்தானை வாமனைமுங்காப்பொலி,கன கமதில்சுற்றிய புகழ்த்திருவிடைக்கழிவி ருப்புற்றிருப்பானை நாடொறுந்தோத் றஞ்செய்-கதிரவருருத்திரர் மருத்துயர்வசுக்களெனு முப்பத்துமுக்கோடி தேவ ருங்காக்கவே. (கக)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

# ௨.—செங்கீரைப்பருவம்.



622. விண்கொண்ட கோதண்ட மூதண்ட மதிர்தர விரைந்தொரு மலர்க்கைவாங்கி-மேவமற் றொருகையிற் றூர கணங்களவ் வில்லுண்டை யென்று கொண்டு, கண்கொண்ட வானவர் கரஞ்சிரம் புயமுதற் கருதிலக் கிற்றெறித் தங்-காகோ தரந்திக் கிருப்பொருவ வாங்கியக் கனகவரை சுற்றியார்த்து, மெண் கொண்ட பாற்கட றயிர்க்கட றயிர்க்கட லிலங்குபாற் கடனறிய நீ-ரின்கட லுவர்க்கட லுவர்க்கட னன்னீர்க்கட லெனக்கூற மோண்டுபெய்துந், திண்கொண்ட விளைஞரொடும் விளையாடு மொருமதலை செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (க)

623. மருத்தாய் கதிப்பரித் தேரிரவி விரவிமதி மண்டலத் துறவிடுத்து-மதியையவ் வாறிரவி மண்டலம் விடுத்துநெடு வானவ ருளம்புகுந்த, வெருத்தா யெழாதமைய மாதிரங் குடிகொண்ட வேதண்ட மெட்டுமொருமா - மேருவுங் கைக்கொண்டு தம்பியர்கள் பந்தாட வேணவா விற்கொடுத்தும், பொருத்தாய் திசைக்கரிக் கையொடுங்க தெற்றியொரு பூண்விரற் கொடுசுற்றியும் - பூமுடி யராவெடுத் தொளிமணிக் கதிரென்று பொன்வரைத் தலையடித்துந், திருத்தாய் மகிழ்ச்சிபுட் கொள்ளவிளை யாடுசேய் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (உ)

624. மறைப்புற வனப்புமலி வடிவொன்று கொண்டுமொளிர் மறைவிடேமென் றுபற்றி - வழியோல மிட்டுத் தொடர்ந்திட நடந்துவயன் மருதமுங் கருதுகலுழித், துறைப்புற வமுங்கடந் தொள்ளருவி யிழுமெனத் தூங்குவிண் டடவுகுடுமித் - தொல்வரைச் சாரற் றினைப்புனஞ் சென்றுநேர் தோன்றுங் குறக்கோதைதன், கறைப்புற மறுக்கடிய வாள்வே லனுக்குங் கருங்கணுஞ் செய்யவாயுங் - காமர்மற் றவயவமு மாதரங் குடிகொளக் கண்ணுறவிடுத்துணர்ந்தோர், சிறைப்புற மொதுங்கியுள நெக்குருகி நின்றவன் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே.

625. மீனுற'பேரகழ் யெழுமோ ரகழ்யென மேவநெய்த் தோர்விராவ-வேதாள பூதங்க ளாடமண் ணகழுழுது மேதினிப் பெயர்விளங்கக், காறுறு கற்பகக் காவும்யா வுங்கவர் கருத்தயித் தியர்குழாம்வெங் - களத்தெதிர்ந் தவி தரப் பொருதுமுன் றீராத கண்டேதி சிறிதொழிப்பா, ஊனுறு வெள்வேலு மொள்வாளும் வென்றுமிக் கொளிர்கருங் கட்செய்யவா-யொருதெய்வ யானையிரு வெம்முலைக் கோடுகொண் டுழுதழு தழக்குந் தொறுந், தேனுறு வட்டெழு கடம்பணி தடம்புயன் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (ச)

626. நாவலங் கொடுசினந் தெதிர்பகை சவட்டுமொரு நான்முகக் கடவுளின்றே - நமக்கிறுதி நாளென் றயிர்த்துள நடுங்கவொரு நாரணனு மனையனுகப், பாவலம் படுசிறை மூனித்தென உரைக்குலம் பார்முழுவ தும்பறக்கப் - பாவையே ழும்புடை பரந்தெழுந் தார்த்தொன்று பட்டலை யெதிர்ந்துசிதறக்,

கோவலம் படுமுடிக் கணமெலாம் பொறியிற் கொறித்துத் தெறித்தெழுந்து - குலவுநீ யர்யகதிர் தோன்றுதல் வெளிப்படக் கூவியிரு சிறையடிக்குஞ், சேவலங் கொடியுடைக் காவலன் பாவலன் செங்கீரை யாடியருளே - செருவிடைக் குழகனரு டிருவிடைக் கழிமுருக செங்கீரை யாடியருளே. (ரு)

## வேறு.

627. ஊறு மணத்தநெய் பூசிய முச்சிய துச்சி யமைந்தாட
வொட்டிய திற்றனி கட்டிய சுட்டியு மொண்ணுதல் வெண்ணீறும்
வீறு நலத்தெழில் சொட்டும் பொட்டும் விளக்க மிருந்தாட
விண்ணக மண்ணகம் விற்கவு மமையா வில்லிடு குழையாட
மாறு தவிர்த்தொளி ரைம்படை யுஞ்சுடர் வாய்த்தவி ரரைஞாணு
மற்றுடை மணியுஞ் சிறுகிண் கிணியும் வயங்கி யொலித்தாட
வாறு முகத்தொடு பொலியுங் குருபர னாடுக செங்கீரை
யாய விடைக்கழி நேய முடைக்குக னாடுக செங்கீரை. (சு)

628. மூரன் முகத்தெழு வேர்வு மணிச்சிறு முத்தி னிசைந்தாட
முச்சியின் முச்சியி னச்சிய பச்சை முழுப்பணி யும்மாடச்
சூர னெருக்கமை காமென முற்றிச் சுற்றிய படையொடுசூர்
தொலைதர மலைதரு நிலைதரு பன்னிரு தோளு மசைந்தாடச்
சாரல் வரைக்குல மீர னடுக்கத் தகுவலி மார்புடனே
சந்த மிருந்தவி ருந்தித் தொந்தி சரிந்து சரிந்தாட
வார லருத்திய பாலமு துண்டவ னாடுக செங்கீரை
யாய விடைக்கழி நேய முடைக்குக னாடுக செங்கீரை. (எ)

629. உள்ளுந ருக்குவ கைக்கடல் விம்ம வுதிக்கு முவாமதியே
யுழுவற் பேரன் புடையரு ளிருளற வுதய மெழுங்கதிரே
துள்ளு தயித்திய ராய கடற்கொரு சுடுவட வைக்கனலே
தொழுதகை வானோ ராய பயிர்க்கரு டோன்ற வெழும்புயலே
புள்ளு மலர்ப்பொழி லெயப் பிடிதரு பொருவரு மழகளிறே
புண்ணிய நண்ணிய தண்ணிய ரண்ணிய பொங்குமு தச்சுவையே
யள்ளு முகத்த வயிற்கர வாண்டகை யாடுக செங்கீரை
யாய விடைக்கழி நேய முடைக்குக னாடுக செங்கீரை. (அ)

## வேறு.

630. சந்துவி ராய தனக்குற மாமயில் பங்கா மங்காத
தம்பியர் சூழ நடுப்பொலி நாயக கந்தா நந்தாது
கொந்துகு லாவு மலர்த்தரு வானவ ரெந்தாய் வந்தாள்வாய்
கும்பியின் மேவு சிறைக்கள மோவவெ னும்போ தம்போது
வந்துற வாமடி பற்றுமுன் யாவரு மஞ்சீர் வெஞ்சூரன்
வன்படை யோடு மடித்திடு வாமென விண்டாய் வண்டார்கட்
செந்துவர் வாயுமை பெற்றரு சேயவ செங்கோ செங்கீரை
தெண்டிரை சூழும் விடைக்கழி மேயவ செங்கோ செங்கீரை. (கூ)

631. காமலர் பாமொழி தூமொழி யாரிடை நண்பா பண்பாளா
நான்மறை வேள்வியி னூடெழு மேடமு வந்தே றுந்தேவே
காமலர் தூவிய வாவிவி ராவிய டைந்தார் தந்தாயே
காமரு கானவர் மாமயி ரேள்புணர் கந்தா நந்தாதே
கோமலர் வானவ ரானவர் வாழநி னைந்தாய் மைந்தாயே
கோமள மேவுமி ராறுபு யாசல துங்கா மங்காதே
தேமலர் மேயகு ராநிழல் வாழ்பவ செங்கோ செங்கீரை
சேவல்கு லாவுப தாகைம ஞேகர செங்கோ செங்கீரை. (௧௦)

௨.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.



# ௩.—தாலப்பருவம்.

632. கீரைத் தடையு மாளிகைமேற் காதன் மடவார் கணவரொடுங்
கலவார் புலந்து பறித்தெறியுங் கமல ராக மாலையுடுச்
சீரைத் தடையு மணிமாலை செறிந்து கதிரோ னுருட்டுபெருந்
தேரைத் தடைய வடைய வும்பொன் செய்த வம்மா ளிகைக்கீழ்வாட்
கூரைத் தடையுங் கருங்கணவர் குளிர்வீ தியினெற் கொறிக்கவருங்
கோழி யெறியுங் குழைசெறிந்து குமரர் களிப்பி னுருட்டுசிறு
தேரைத் தடையும் விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (௧)

633. கால்பாய் தடத்தி னகம்படிந்த கயவாய்ச் செங்கட் கருமேதி
கறித்துப் பலபூக் குதட்டியிளங் கன்றை நினைந்து பொழிதருதீம்
பால்பாய் கழனிப் பரப்பெங்கும் பாட்டுச் சுரும்பு விரும்புநெடும்
பைந்தாட் செந்தா மரையாதிப் பன்மா மலரும் படுசுவைச்சா
றேல்பாய் கரும்பு மரும்புசெறி யொண்பூங் கொடியு மாங்குயிலு
மோங்கு மருதப் பூங்கிளியு முறுதற் கேற்ப வெழுந்துபல
சேல்பாய் வளமை விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (௨)

634. உரைசெ யுருவ மூத்தரும்பி யொருங்கு நெருங்கு மரகதங்காய்த்
தொளிசெய் பவளம் பழுத்துநெடி தோங்குங் கமுகும் வீங்குநறும்
விரைசெய் சுவைமாங் கனிகுலையும் வெய்ய புலிக்கால் விரற்பைங்காய்
மிருகூன் குலைப்பைங் கதலிகளும் விழையுந் தழையுங் கழையுமலி
கரைசெ யொருமுப் புடைப்புடைய காய்த்தெங் குகளு மிந்திரன்செங்
கனக மணிமண் டபத்தமைபொற் கால்க டொறுஞ்சார்ந் தழகுசெயுந்
திரைசெய் பணைசூ ழிடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறையோ விடங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (௩)

635. பொருந்து கடவுண் மறைமுழங்கப் பொல்லா விருள்கெட் டுடைந்தோடப்
புண்ட ரீக முறுக்குடையப் புட்கள் சிலம்ப வுதயவரை
யிருந்து வெளிக்கொ ளெழுபரித்தே ரென்றாழ் கதிரோ னெனுமொருபே
ரேற்பக் களம ருழுதுசெதும் பியற்றி நறுசெ்ன் முளைவித்தி

மருந்து சிகரின் புனல்பாய்ச்ச வளர்ந்து இளர்ந்து காள்நகதிர்
வளைந்து விளைந்து முதிர்ந்துரைத்த மார்த்தாண் டனைமூ டிடுவளமே
திருந்து கழனி விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறைபோ லிடுங்கருணைத் தேவா தாலோ தாலேலோ. (௪)

636. மாறு கடியும் வெள்ளிலைவேன் மாய்த்தக் கொடுங்கூற் றொடும்பொரவே
மடங்க லின்றி முடங்கல்விடு மைதோய் கருங்கட் செங்கனிவா
யேறு வளைமிக் கொலிமலர்க்கை யேழை மடவார் கூழைமுத
லினிய விரையுந் துவருமௌா யியைய குளித்த நறும்பனிநீ
ருறு நறவ முவட்டெடுக்கு மொண்மா விகைத்தோட் காளையர்க
ளொருங்கு நெருங்கிப் பூசிடவாங் கொழிந்து கழிந்த சந்தனச்செஞ்
சேறு கழுவும் விடைக்கழிவாழ் செல்வா தாலோ தாலேலோ
செழுநான் மறைபோ லிடுகருணைத் தேவா தாலோ தாலேலோ. (௫)

வேறு.

637. எண்ணிய சத்தி பதித்தவர் மும்மல விருளற வெழுகதிரே
யெங்குந் தங்கும் பொங்குஞ் சுடர்விட் டெழுமுழு வோங்கொளியே
கண்ணிய விமையத் தமையும் பெண்மணி காதற் கண்மணியே
கட்டுக் கெட்டுப் பெட்டமை வாருட் கனியமு தச்சுவையே
மண்ணிய மணியிற் பொலியுங் குறவர் மடப்பிடி புணர்களிறே
வானவர் கோமக ளாய சகோரம வாவு முவாமதியே
தண்ணிய குரவமர் புண்ணிய குரவா தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா தாலோ தாலேலோ. (௬)

638. உழையும் பிறகிடு கண்ணும் பண்ணு முவக்குஞ் சுவைமொழியு
முடையாண் மடவன மடையாள் குறவர்க் கொருமக ளாகியதாய்
குழையுந் தளிர்புரை செங்கையு மிணைதடி கொங்கையு மென்பதமும்
குளிர்மதி வெளிறுற வொளிர்திரு முகமுங் குலவத் தோய்ந்திடுவான்
மழையுங் கழையும் பொலிதரு மால்வரை மன்னுஞ் சாரலின்வாய்
வண்டு படாமலர் சாகை தொறுங்கொடு மருவியு வொருதருவே
தழையுங் குரவடி விழையுங் குரவா தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா தாலோ தாலேலோ. (எ)

639. வீங்குஞ் சுவைபடு மூனை யருந்தி விராவுந் தடியீருண்
மென்று விழுங்குபு மண்டையின் மொண்டு மிகுஞ்சுடு வல்குடியா
வோங்கும் பசியெழ வாங்கு துணங்கையொ டுந்தி யெழும்பேயோ
டொண்டலை விண்டு கிவந்த கவந்தமு மொக்க வெழுந்தாடத்
தேங்குந் தகுவர் கருந்தலை மோதுஞ் செங்கள நடுவடுமோர்
சிங்கக் குருளை யெனப்பொலி வீரச் செல்வ செழும்பாவை
தாங்குங் குரவடி யோங்குங் குரவா தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா தாலோ தாலேலோ. (அ)

வேறு.

640\. காதமகத்துவ வாயா தூயா மாயாவா
ருடர் முடிக்கணி பாதா போதா நீதாவோர்
சூதமடித்தெழு மாலா வேலா சீலாநீ
டோகை மயிற்பரி மோகா யோகா வேகாமா
மோதவமர்த்தெழு தாரா சோரா வீராதா
மோதரன் முற்பல ரேறே பேறே வீறேசேர்
மாதவ ருட்பொலி தேவே தாலோ தாலேலோ
வாவி விடைக்கழி வாழ்வே தாலோ தாலேலோ. (க)

641\. மந்திர மாயசொ ரூபா தீபா நீபாகா
மந்தவிர் வார்பவ நாசா வேசா வீசாபோ
தந்திர மேவிய யோகா வாகா வேகாவா
சந்திகழ் தேமலி தாமா வோமா நாமாவா
னிந்திர னாதியர் தேவே காவே பாவேபா
டென்றெனை யாள்குரு நாதா பூதா வேதாதாழ்
சந்திர சேகரர் பாலா தாலோ தாலேலோ
தண்குர வார்சிழல் வேலா தாலோ தாலேலோ. (கo)

ரு.—தாலப்பருவம் முற்றிற்று.

# ௬.—சப்பாணிப்பருவம்.



642\. மழைகொண்ட சிகரநெடு மேருவிவா ளத்திஞெடு வாரிதிக ளேழுமு த்த-மண்ணகத் தமர்பலரும் விண்ணகத் தமர்பலரு மாறுப் பலத்தொலைப்பான், குழைகொண்ட சுவைமருப் பொழிமலர் துவன்றுமைபக் குரவடி யமர்ந்துகருணை-கூர்ந்தருள் புரிந்துவே தாகம புராணமுற் கோதில்பற் பலகலைகளும், பிழை கொண்ட வில்லென வுணர்ந்தவொரு நால்வரே பிறவிநீர் வான்றழைக்து - பிற ங்குகல் லாலடி யமர்ந்தருள் புரிந்தவெண் பிறைமுடிப் பெருமானினுக், தழை கொண்ட புகழ்நனி படைத்தமகிழ் குருபரன் சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (க)

643\. பந்தமிகு தெய்வப் பெருந்திரு மறைச்சிரம் பாடியாடித் தொடர நீள்-பங்கய மலர்ப்பதம் பார்மக டிளைக்கப் பரித்துவழி கொடுகடந்து, கந்தமிகு தாமரைக் கழனியுங் குழனிக் கருங்கான முங்கடந்து-கார்வரைச் சாரற் றினைப் புனம் புக்கெழில் கனிந்தகுற மங்கையாணி, வந்தமிகு பேரழகு கோக்கிமகிழ் தேக்கிநெடு மாதேவ னஞ்சலித்து - வந்திக் கயுங்குவி தாரதரும் பெருமையை மறந்துவிரை விற்றுவிதருந், சந்தமிகு கைத்தல மலர்த்துணை முகிழ்த்தைய சப் பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (உ)

644\. தீதுபதி யாதகை லாயத் தளிக்குமுற் றிகழ்மணிக் கோபுரத்துட்-டிருவாய்தல் வைகியவ் வழியமற் றெழுமாதகு திசைமுகனை யருகழைத்தன், கேதுபுரி வாயென வினவப் படைப்பே னியானென்ன மறைவருங்கொ-லென்ன வரு மெனவிருக் கோதுகென வோதுவா னியையமுற் குடிலையோத,வோதுகுடி

லைப்பொரு ளுரைத்துப்பி னுரையென வொருங்கவன் மயங்கநோக்கி - யொள்ளித ழுதக்குபு நடுத்தலை புடைப்பமிக் கூறிப் புறஞ்சிவந்த, தாதும்லி கைத்தளி ரகத்துஞ் சிவப்பவொரு சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௩)

645. மால்வரை மறைக்கும்வெங் கேடகப் பரிகல மறித்துத் திருத்திவிண்ட-மண்டைமூ ழையின்மொண்டு மூளைப் பெருஞ்சோறு வாரிப் படைத்துமீது, பால்படு நிணப்பருப் பிட்டிமூது சொட்டும் பசுந்தடிக் கறிபடைத்துப் - பாவுசெய்த் தோர்செய்யும் வாக்கிப்பல் பெண்பேய் பரித்துப சரிப்பவாண்பே, யேல்வகை யருந்திபுடன் முற்றுவயி றுகமு னியற்றில னியற்றினுனென் - றெள்ளிவை யக்கருந் தகுவர்செறி போர்க்களத் திளவே றெனப்பொலிந்து, சால்புடைய வெஞ்சிலை வளைத்தலைக முகிழ்த்தைதய சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௪)

646. கோலக் கருங்குழற் செவ்வா யுமாதேவி குளிர்மென் கவானிருந்து-கொங்கைக் குடங்கொட்டு பாலுணும் போழ்தினக் கொங்கைத் தடத்திளெளியே,காலச் சமைந்தசெழு முத்தவட முஞ்சுடர்க் கமலரா கத்தொடையுமொண்-கதிர்ப்பவள மாலையு மொன்றொடொன் றளவிக் கலந்திடச் சிக்காற்றியு, நீலச்செவிக்குழைப் பூட்டுக் கழற்றியு நெற்றியிற் பொட்டழித்து - நேயமிகு மலர்மாத ரிருவர்க்கு மொழியா நெடும்பணி திருத்துபணியே, சாலப் புரிந்திடு தளிர்க்கர தலங்கொண்டொர் சப்பாணி கொட்டியருளே - தன்னிகர் விடைக்கழிப் பன்னிரு புயாசலன் சப்பாணி கொட்டியருளே. (௫)

வேறு.

647. தாரமை கோற்ற முடித்தலை வீரர் தடாவலி யிற்சூழத்
தானையொ டாகவ பூமியின் மேவிய தாரக னுடல்போழ்ந்தாய்
காரமை சேறு படாவகை செய்த்தோ ரத்தனை யும்பருகி
யள்ளூபு மூளை யடங்கலும் வாய்ப்பெய் தலைறு ருளுமென்று
காரமை புரணி குதட்டி விழுங்கியு கலிபசி தீராமே
காற்றிசை நோக்கி யினிச்செயல் யாதென நகுகடை வாய்நக்குங்
கூரமை வெள்வேற் செங்கை முகிழ்த்துக் கொட்டுக சப்பாணி
கோல விடைக்கழி நீல மயிற்குக கொட்டுக சப்பாணி. (௬)

648. பிழையற் றவருட் கருளற நின்று பிறங்கும் பேரொளியே
பேச நினைக்கக் காண வினித்துப் பெருகுஞ் சுவையமுதே
விழையப் படுகவி புனைவா ரெய்ப்பு விடப்பொலி திரவியமே
வெள்ளி வரைச்சிக் காமணி யணிமுடி மேற்கொளு முழுமணியே
கழையிற் சுவைபடு தெய்வப் பிடிதன் கலவைச் சாந்தும்விரை
கமழும் புழுகு மணைத்து மதர்த்தெழு காமரு கொங்கைமணங்
குழையத் தழையத் தழுவுங் கைகொடு கொட்டுக சப்பாணி
கோல விடைக்கழி நீல மயிற்குக கொட்டுக சப்பாணி. (௭)

வேறு.

649, வழிவழி யடிமை யெனக்கொள் விருப்ப மனத்து வளர்ப்போயே
வழுவினு மொழிவற வொட்டி யிழுத்து மயக்க மறுப்போயே
மொழிமுத லியவொரு மித்த தவர்க்கருண் முத்தி கொடுப்போயே
முகிழ்முலை யிருவர் புணர்ச்சி மகிழ்ச்சியை முற்று முவப்போயே

பொழிசுவை நறவமு வட்டெழ விட்டொளிர் பொற்ற கடப்போயே
புனமயி லகவி மயத்து மடப்பிடி பொற்ப வணர்ப்போயே
சொழிதமி ழுணரு முதற்புல மைக்குக கொட்டுக சப்பாணி
குரவடி யமரும் விடைக்கழி யற்புத கொட்டுக சப்பாணி. (அ)

வேறு.

650. பரவப் படுமெய்த் தவருட் பொலிவாய் சத்திதரித்தோய்நீ
பவளத் தொடையற் புயவெற் பிறைவா முத்திமுதற்றேவே
யரவத் தலையிற் றுயிலச் சுதனே தற்றமறைப்பால
னடியைத் தலையைத் தெரிதற் கரியார் பெற்றவருட்சேயே
கரவத் தகுவக் கலரைத் தடிவாய் வெற்புவிருப்பாளா
கடவித் தகரைத் திசையிற் றிரிவீ ரத்திறன்மிக்கோயே
குரவத் தடியிற் குலவற் புதவேள் கொட்டுக சப்பாணி
குருதிக் குடுமிப் பறவைக் கொடியாய் கொட்டுக சப்பாணி. (௯)

வேறு.

651. மணமலிநீபா வளர்பிரதாபா வித்தகநற்றேவே
வயமிகுவீரா வடிவகுமாரா பத்பதக்கோவே
யணவுநர்நேயா வமரர்சகாய பச்சைமயிற்பாகா
வழகியரூபா வசுரர்கள்கோபா செச்சைநிறத்தேகா
பணவரவாளா பரணவைதோளா முத்தெனவுற்றோயே
பரிபவமாயா விரிதரவாயா வெற்கருள்சொற்கோவே
குணபரிபாலா குலவுறுசீலா கொட்டுக சப்பாணி
குரவடியோமா தரமுறுகாமா கொட்டுக சப்பாணி. (௧௦)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

# ரு.—முத்தப்பருவம்.

652. சூரன் முளைத்த கான்யாற்றுத் துறையும் பிறையு மிருமருப்புத்
தும்பி யுலைவு கம்பியழல் சுழல்கண் மடங்க லுழலிடமும்
வேரன் முளைத்த வெண்முத்து மிளிர்செம் மணியும் பதத்துறுத்த
விரைந்து கடந்து கடந்தெடு விண்ணோர் தடவு குடுமிவரைச்
சாரன் முளைத்த புனம்புகுந்து தையற் குறக்கோ மளக்கோதை
சமயந் தெரிந்து சேர்சென்று சலாஞ்செய் பொழுது முகங்கொடுக்க
மூரன் முளைத்த செந்துவர்வாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (௧)

653. வழிந்து கருணை யுவட்டெடுத்து மாநீ ருலகெங் கணும்பரவ
வடவா னிழற்றென் பான்முகமாய் மருநி யமர்ந்து வெருவிமல
மழிந்து வெரிகிட் டிடைந்துடைநதோ ரைந்து மகல வொருநால்வர்க்
கறிவித் தொருமூன் றிரண்டறுமொன் றறையா தறைத்த மாதேவ

விழித்து வணங்கு முனைவ ரிணங்கி யிணங்கி யருள வேண்டுமென
விரப்பப் பரப்பு கருணைசுரந் தெல்லா முணரும் படியொருசொன்
மொழித்து திகழுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (உ)

654. கிலைப்பா ரினியின் றெனத்தகுவர் கிறைபே ரவையி லிருந்தொருசூர்
நெடுமூச் செறியுந் தொறுமவன்றே னிலவு நறுந்தார் புலால்கமழ
வலைப்பான் மடமா னனையவிழி வான நாட்டு மடமாதர்
வண்ணக் கிண்ண மாமுலையு மலர்க்கூந் தலுநல் விரைகமழ
விலைப்பான் மலர்ப்பா லொடுவேர்ப்பா லெல்லாங் கமழு நறுங்கூந்த
லிமய முதவெம் பெருமாட்டி யீர்ஞ்சாந் தொடுமென் புழுகுகமழ்
முலைப்பால் கமழுஞ் செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (ங)

655. வித்த முவந்த பெயர்த்தகுவ வெய்யோ னுரங்கீண் டெழுமடங்கல்
வெறிகீண் டெழுந்த முழுமடங்கல் விரும்பி யுயிர்த்த பெரும்பழமே
சுத்த முவந்த பேரவத்தைத் தோலா மேலா மாதவத்தர்
தூய யோக ராயர்சுகச் சுவையுண் முழுக நவையிலவர்
சித்த முவந்த பேரொளியே தேவர் பெருமா னினிதீன்ற
சிறிய மருந்துற் பெரியமுலைத் தெய்வ யானை செம்பவள
முத்த முவந்த செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (ச)

656. எழுது புகழ்சால் பெரும்புலவ ரென்பார் பலரும் பின்பாக
விருந்து பொருந்து கரங்கள்விரித் தென்று வருமென் றேமாறத்
தொழுது வணங்கி முன்பிருத்தித் துதித்துப் பூசித் துறுமுகமன்
சொற்று முனிவ ருருத்துமவிச் சுவையா ரமுதும் விரும்பாது
கொழுது வரிவண் டுழக்குகுழற் குறப்பெண் பாற்போய்ப் பசிவருத்தங்
கொடிதென் றோதி யிரக்தவள்கை கொடுக்குந் தேன்கூட் டியதினை [மா
முழுது முவந்த செங்கனிவாய் முத்தந் தருக முத்தமே
முகைக்குங் குரவு விரவுதிரு முருகா தருக முத்தமே. (ரு)

வேறு.

657. வெண்ணீ ரலைத்திருப் பாற்கடற் கண்டுயில் விறற்சக் கரப்படையி னன் - வியன்மார்பி லணியக் கவுத்துவப் பெயர்மணி விருப்பிற் கொடுத்துளாய் மற், றண்ணீர்மை மிக்கசிந் தாமணியை யிந்திரற் குதவினய் சூர்தடிந்தன்-பூற் றெழ வழுத்துநர்க் கின்பவள முழுதுதவு மொப்பிலா னியல்லையோ, பண்ணீர் மொழிக்கடைச் சியர்களை களைந்திடப் பண்ணைக் குலைக்கணுலவிப் - பார்த்துவரு தொழுவரிக் குதவுசா றடுகெட்டி பற்பல வெடுத்துடைந்த,தெண்ணீர் மடைக்கிடும் விடைக்கழி புரப்பவன் செம்பவள முத்தமருளே-தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு நாயகன் செம்பவள முத்தமருளே. (சு)

658. வெங்கட் கடுங்கொலைத் தநுவரொடு பொருதநாள் வெற்றிவேல் புக்குழக்க - வீறழிந் தநுவேலை மற்றத னெடும்புணர்வன் மீனரீ னிப்பிவனை கார், திங்கட் செழுங்கலையு மன்னவொண் கன்னலுஞ் செங்நெலுஞ் செழுவா ழையுஞ் - செந்தா மரைக்குலமு மற்றுமப் பரவைநீர் தேக்கியுயிர் வாழுமைய, வங்கட் புலிக்கணிவை யீனுமுத் தங்கொடோ மாயிர முகக்கங்கைசா - லவிமுத்த முங்கொளோங் குவிமுத்த மாமுலைய ராடுநீர் பாயவிண்மேற், செங்கட்க ருமபெரும் விடைக்கழி புரப்பவன் செம்பவள முத்தமருளே - தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு நாயகன் செம்பவள முத்தமருளே. (எ)

659. தோணுறு தொங்கற் பெருந்தேவர் மோலித் தொகைக்குமேற் பட்டொளிவிடும் - தூயவேய் முத்தமு மவாவியது முன்னமுன் றுண்டைவாய் முத்தமொன்றே, வாணுறு கண்ணியர் மணிக்குழை யசைந்தாட மாமுலை யணிந்த முத்த - வடமாட நுண்ணிடை தளாடவிள மைந்தர்த மனத்தோடு மூசலாடும், கோணுறு பொங்கரிற் பாணுறு காலுழக் குமலை நுகுத்ததாது - குரைகடற் சேதுவிற் பொங்கியிரு கரைமேற் குதித்துநீ ரோடாப்பட், சேணு றடைத்திடும் விடைக்கழி புரப்பவன் செம்பவள முத்தமருளே - தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு நாயகன் செம்பவள முத்தமருளே. (அ)

வேறு.

660. எழுதரும் வடிவழ குடையவ விடையவ னிச்சைசெய் புத்திரனே
யிமையவர் மடவியர் விழியளி குடையுமி ணர்த்தக டப்பணிவோய்
பழுதக னெறிபுகு மவருள நிறுவிய பற்பத தத்திறைவா
பலதலை பரவுபி ருலைதர வுலவுப சுத்தமயிற்பரியா
யொழுகொளி மரகத முழுமணி வடிவவு மைக்கொளிர் கட்டிணையூ
டொளிர்மணி யெனவழி படுமடி யவருளு வக்கு முயிர்த்துணையே
முழுதுல கமுநவில் சரவண பவகுக முத்த மளித்தருளே
முனிவரர் தொழுதுர வடியமர் குருபர முத்த மளித்தருளே. (கூ)

வேறு.

661. மதியு நதியு மணியு மொருவர் மகிழ நிகழு மத்தனே
வலிய குறவர் பொலிய வுதவு வடிவ மகர்வ சத்தனே
நிதிய மெனவு னிலையு மடியர் நிறைய வருளு மத்தனே
நிமலை யிருகண் மணியெ டுலவி நிலவு மறுமு கத்தனே
கதிய மயிலொண் முதுகி னுதய கதிரி னமர்ச மத்தனே
கமழு நறிய புழுகி னளறு கலவி யொளிர்பு யத்தனே
முதிய கருணை பொதிய வொருமு தல்வ தருக முத்தமே
முகைய தகைய குரவு விரவு முருக தருக முத்தமே. (கo)

ரு.—முத்தப்பருவம் முற்றிற்று.

# ௯.—வாரானைப் பருவம்,



662. ஏர்கொண்ட நெற்றியிற் சுட்டியும் பட்டமு மெழில்சொட்ட விட்ட பொட்டு - மெட்டுத் திசைக்குமொளி விட்டுப் பரப்புமிலை யில்லா மணிக்குழைகளுந், தார்கொண்ட வைம்படையு மொய்ம்படையும் வலயமுஞ் சாற்றுமுன் கைக்கடகமுந் - தாவாம தாணியு மிளங்கதிர் விளங்கவொளி தழை மூர னிலவெறிப்பப், பார்கொண்ட சிற்றடி புலம்புஞ் சிலம்பும் பருவுமணிப் பொற்றண்டையும் - பரவுஞ் சதங்கையுங் கிண்கிணியு மண்குளிர் படைப்பக் கலின்கலினெனச், சீர்கொண்ட மறைமுழுமை யுச்சொடர்ந் தோலிடச் சிவ பிரான்மகன் வருகவே - செந்தமிழ் மணந்தழை நடைக்கழி விடைக்கழித் தெய் வநா யகன்வருகவே. (க)

663. நாவடி மறைக்குமுத லோதியத னுட்பொரு ளயர்ந்துணர் வுறுத பிழையா - லுன்முகன் முடித்தலை நடுங்கப் புடைத்துக்கை நகுகாய்ப் படைந்த தன்றிப், பூவடி யருந்திவண் டடைகிடக் குங்குழற் பூரண வுமாதேவியார், பொலிதரு மடித்தல மிருந்திளங் கொங்கையிற் பொங்குபா லுண்டிடும்போ - தூவடி முனைச்சூல பாணியார் திருமார்பி லுற்றமுன் சொற்றபிரம - னுண்ட லைப் பெருமாலை சிக்குண்டு புரளா வுருண்டிட வுதைந்துதைந்து, சேவடி யினுங் காய்ப் புரக்கொண்ட திண்டிறற் செல்வப் பிரான்வருகவே - செந்தமிழ் மணந் தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (உ)

664. ஆராத காதலி னணைக்குமொரு தம்பிரா னக்கைத் தழற்கொழு ந்தி - னவிர்சடை மதிப்பிறைக் கோணலை நிமிர்த்திடற் காய்ந்துட னெடுத்து வாட்டச், சோராத மற்றதுமெய் சோர்ந்தமுத முற்றவுஞ் சொட்டவிட வது படிந்த - தூவரை யுடைப்புலித் தோலுயி ரடைந்தெழீஇத் தோகைகொடு மண் புடைக்க, வேராத மெய்நடு நடுங்கிக்கை நின்றுங்கீழ் வீழ்ந்தெழுந் தோடுமானை - மேவிப் பிடித்தொருகை யேந்திவா லோர்ந்துநீ மேவுநா னேயென்றவன், றீராத பேருவகை தேக்கச்செய் மழவிளஞ் சிறுகுறும் பன்வருகவே - செந்தமிழ் மணந்தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (ங)

665. கந்தையடு காடக் களிற்றுரிவை போர்த்தமுக் கட்பெரும் பரமனு ரங் - கைத்தலத் தமர்மா துளங்கனி பறித்துளங் கனியக் கழுத்துநீட்டுந், தந் தையுறழ் சிற்றிடைத் தாயார் திருக்கைத் தனிக்கிளி தனக்குதவியுந் - தாயார் திருக்கைத் தடஞ்சிலையின் மேற்பொலி தழைத்தோகை கொய்தெடுத்து, மூந் தைமறை நாடரிய தந்தையார் கைக்கணமர் முதுமா னுணக்கொடுத்து - முறை யினித் தகையபல செய்தெய்து தற்கரிய முதுகுரவ ரிருவருக்குஞ், சிந்தைமகிழ் பூப்பவெதிர் நின்றுவிளை யாடுமொரு செல்வப் பிரான்வருகவே - செந்தமிழ் மணந்தழை நடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (ச)

666. வெவ்வாய் முடைத்தகுவர் மேவுங் களத்திலவர் மேனிசெய்த் தோர்டாந்து - மீதலை யெறிந்திட வெருக்கொண்டு மற்றவர் விடக்குநிண மீருன் பலவும்,கவ்வா யிரம்பெரும் பேய்களச் செம்புனல் கடப்பதற்கெண்ணி யலையார் - கைவிட்ட கேடக மத்துக் கிடத்திக் கலந்ததி லிவர்ந்துமாண்ட, வவ்வாய் கரிட்

பிணங் குடர்கொடு பிணித்துமற் றதன்மே லிவர்ந்துமன்றெ - ரங்கைக் கழுக் கடை யெடுத்தூர்தி யிதுபிதவை யதுபரிசு காணுமென்னச், செவ்வாயின் வெண் ணகை யரும்பப் பெரும்போர்செய் சிறுகுமா ரன்வருகவே - செந்தமிழ் மணந் தழை கடைக்கழி விடைக்கழித் தெய்வநா யகன்வருகவே. (டு)

வேறு.

667. ஞாலக் கதிர்ஞண் மதிகொண்டு நுனித்துள் ளுணர்தற் கருள்சாலா
கோலா வினையேம் பவக்கடலு ஞானக் கடந்த வுயிர்க்கடலு
மாலைக் கதிரி னுடைகழைபோ லண்ட முடைக்கும் பெருமலையு
மடியேம் பாசக் கருமலையு மடியத் தொழியக் கடியுற்ற
மாலைக் கதிர்வேல் வலங்கொண்ட வள்ளா லுள்ளால் விடங்கரந்த
வைவாட் டூனைப்ப லரவனுக்கு மயில்வா கனத்தின் மீமிசைப்பல்
காலைக் கதிரிற் றோன்றுமிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (சு)

668. பணியா வழுத்தும் பேரன்பர் பவசா கரத்திற் கொருவடவை
பற்றற் றவரே பற்றகலப் பற்றும் பிரம முற்றுகுணங்
குணியா வையுமா யல்லவுமாங் கோதின் முதலென் றெடுத்துமறை
குலவ வுனையே நாளுளுங் கூறு மதுவுங் குறியாய்போற்
றணியா மோகத் தலைக்கொண்டு சாரற் புனத்து வேரலுகு
தரளப் பரல்கா லுறுத்தவுறீஇத் தையற் குறவர் கொடியின்பங்
கணியா முளைத்துத் திளைத்தவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (எ)

669. தோட்டுக் கமலத் தவிசுறையுந் தோன்றற் கியற்றமுடியாத
தோலா வனப்புச் சுமந்தகுறத் தோகை துணைத்தோ டோய்ந்திடுவான்
வேட்டுப் புகுந்த வொருபொழுது வேடர் பெருமான் வேட்டைவினை
விழைந்தாங் கடையப் பயந்தாய்போல் விருத்த வுருவந் தரித்துமொரு
கோட்டுக் கடக் களிற்றையிரு கோட்டுக் களிறு வரப்புரிந்துங்
குலவு பாயா வேங்கையுருக் கொண்டு மின்னும் பலசெய்து
காட்டுப் புனத்து மகிழ்ந்தவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (அ)

670. விண்ணே வளியே யொளியழலே விரியும் புனலே மேதினியே
வெளிய மதியே செங்கதிரே மேய வுயிரே யுயிர்க்குயிரே
பண்ணே பண்ணி னுடனமையும் பாட்டே பாட்டி னுட்பொருளே
பகரா றுக் கப்பாலாம் பரமே பரவு வார்வரமே
யெண்ணே யெண்ணின் மறைக்கொழுந்தே யெண்ணி யெழுதற் கரியபுக
ழேறே யிமையோர் பேறேநன் கிமய முயிர்த்த பெருமாட்டி
கண்ணே கண்ணுக் கினியவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (கூ)

671. மணியே மணியி னுள்ளொளியே மலரே மலரி னுண்மணமே
மதியே மதியி னுட்கலையே மாணப் பொலியு முதுகுரவர்க்
கணியே யெங்க ளாருயிரே யாரா வின்பப் பெருக்காறே
யாறு தினுக்கு மப்பாலே யப்பான் மையினின் றொளிர்முதலே

பணியே யமையப் பணிபவர்தம் பானின் றகலாப் பரம்பொருளே
பரமா னந்தப் பெருவாழ்வே பற்றிக் கொடிச்சி தழுவுந்தெய்வக்
கணியே யழகு கனிந்தவிளங் காளாய் வருக வருகவே
கழியா வளங்கள் பொழியும்விடைக் கழியாய் வருக வருகவே. (கO)

சு.—வாரானைப்பருவம் முற்றிற்று.



# எ.—அம்புலிப்பருவம்.

672. புற்புத வலைக்கடல் கலங்கியோ விடவெழுஉப் பொலிசத்தி யுடைமையானும் - புண்ணியக் கலைபல விரித்துநீர்க் குவலயம் பொலிதர மலர்த்தலானுங், கற்புதவு வண்ணமனை யாகவொளிர் தாரா கணப்பா லுவத்தலானுங் - காமனழ குக்குடை கொளப்பெரு கிராமங் கலந்துன்ன வெழுதலானும், வெற்புதவு மங்கைகான் முனையெனப் பரமர்முடி மேற்கொளத் தோன்றலானு-மேதகு தனக்குநிக ராயினு னென்றுனை விளித்தன னளித்தவர்கள்கு, முற்புத விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன கார ணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (க)

673. வில்லடு நுதற்றிருச் செய்யதா மரையாள் விழைந்தகோ லங்கெடுத்தும் - வெய்யவன் செயல்யாவும் வீழ்ந்தொழிய வேலைமே விக்காங் கொண்டெழுந்து, மல்லடு வலத்தம் புயங்குழைய வாம்பலை மணந்துதழு விப்புணர்ந்தும்-வானகங் குடிகொண்டு தண்ணளி சுரந்துயிர் வளப்பயி ரெலாம்வளர்த்தும், புல்லடு முடைப்பரம னூர்நயன மலரப் பொலிந்துவெளி வந்துமெங்கள் - புண்ணியத் தெய்வக் கொழுந்தினை நிகர்த்துளாய் பொன்மாட மணியுலகுகு, மல்லடும் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல் புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (உ)

674. ஈடுபதி னாறுகலை யுடையனீ யறுபத்து நான்குகலை யுடையனிவனே - நண்ணுசிற மாரோங்கி நீயிவ னிளங்கோக்க ணுடுபெரு மானேந்திகாண், கூடுமுய லொன்றுடைய னீயிவ னளாவிளங் கோளரிக ளொன்பதுடையான் - கொண்டாடு பறவையொன் றுடையனீ யிவனவனி சொண்டா டிரண்டுடையனுற், பாடுமொரு குண்டலம் பொலியவரு வாய்நீ பரந்துபனி ரண்டுபொலியும்- படிவருவ னிவனிவனை நீபொப்பை யென்றெப் படிப்பகர லாமூர்வலென், றுடுகொள் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (ங)

675. வருணமொன் றுடையைநீ யாறுடைய னிவனேடி மறைவைநீ மறையானிவன்-மாறுத வெண்மதிக் கடவுளே நீசெம் மதிக்கடவு ளேயிவன்று, விருணயத் தெழுவைநீ யொளிநயத் தெழுவனிவ னியலுநீ பலதன்மையா - னெற்றைக்கு மொருதன்மை யானிவன் கயரோகி யேநீ நிராமயனிவன், றெருணல மளித்திடாய் நீயடைத் தார்நலஞ் சேர்தர வளிப்பானிவன் - றெளிதர நினக்கதிக னெங்கள்பெரு மானெனச் செப்பவேண் டுங்கொலோவா, வருதணய விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல் புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (ச)

676. பாராய் தரப்பொலியும் வேதாக மங்கணனி பகர்குறி குணங் கடந்து - பரஈத பரவிந்து வுங்கடந் தோங்கொளி பரப்பியொளிர் பரமயோகி, சீராய் முடித்தலை வணங்கமெய்ஞ் ஞானோபதேசமுன் செய்தசைவத் - தெய்வ ஞானசாரியன்கா ணிவன்பெருஞ் சீர்மைக்கு வழிவருவசந், றோராய் பெருங் குரவன் மனையைப் புணர்ந்துபழி யுற்றவிட ஞயசின்றி-ரொக்குமென லெங்கள் பெருமடமையல் லாதுவே றுண்டுகொ லொருங்குலகமுற், றாராய் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (ரு)

677. வளியார் பெருங்ககன நடுவட் பொலிந்துநீ வருபொழுது கழுது மஞ்சும் - வல்லிருள் விழுங்கிய தெனக்கரும் பாம்பொன்று வந்துனை விழுங்கு மப்போ, தொளியா ருனைப்பற்றி கொடுத்திழந் தோமென் றொருங்குலக நீருண் முழுகி - யுறுபசியின் வாடுநீ யுற்றதுய ருன்னே டொழிந்ததிலை கன்குணர்தி யாற், களியார் செருக்கர வொருங்கஞ்சு மயில்வா கனப்பிரா னருகடைந்தாற் - கருதுனக் கெத்துன்ப மண்டுபுக லின்பமெது கலவாது புலவாதுபே, ளளியார் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே-யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (சு)

678. ஏடுறு மலர்க்கணை தொடுத்தகரு வேளுடலெரிக்குணவு செய்த பெருமா - னெழிலுதத் தனிவிழி வனப்பனை யழித்தனை யெனப்புவி யுரைக் கும் வசையொன், றோடுறு விதம்பெரு நலம்பொழி தரத்தர வுதித்தசெவ் வேளி வன்கா - ணுருவிழந் தவருரைக் கும்பனி யமாவிசிழ லுதவுகுடை யாயினுய்நீ, வாடுறு வருத்தமுல குக்கொழிக் குங்கருணை வள்ளல்வா வென்றழைக்கின் - வாரா திருக்கவிதி யுண்டுகொன் மணிக்கோயில் வாரணக் கொடிவான்கிழித், தாடுறும் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (எ)

679. தடையா வலிப்பரமர் திருமுகக் கண்ணுப்த் தலைப்பெருங் கல மாய்கலந் - தழைமேனி யெட்டுளொன் றியவர் நடாத்துந் தனித்தேர்ப் பதத்து ளொன்று, யுடையா மகிழ்ச்சியி னமர்ந்துநீ பெற்றபே றுள்ளன வெலாமிவன் பா - லுற்றொரு கணப்பொழுது கூடிவிளை யாடலா லுண்டாகி யுலகுகுறுக, மிடையா வரும்பேற்றி லாயிரங் கூற்றில் விரும்புமோர் கூறொவ்வாதான் - மெய் மையிது காணித்த மந்தனை முணர்ந்துமிதி வீதரும் போதுமிறுதி, யடையா விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே-யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (அ)

680. பொருள்சால் பொகுட்டிதழ் மலர்த்தவிசி னுன்முகப் புத்தேண் முதற்புலவரும் - பொறிபுல னடக்கியொரு நெறியுறு வசிட்டன்முற் புண்ணி யத் திருமுனிவரும், வெருள்சான் முனைத்தலைய வேற்கைமுசு குந்தனெடு வேந் தன்முற் பலவரசரும் - மேவிப் பணிந்துளத் தெண்ணிய தடைந்தவிம் மேதகு தலத்தடைந்தாற், கருள்சால் கணங்கமழ் முளரிங்கவனு மாதக் கனிட்ட சாப முந்தன் - கடவுள்மா குரவர்க் கியற்றுபா தகமுங் கழிந்துய்யும் வழியுண்டு கா, ணருள்சால் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே - யாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (கூ)

681. மணியார் கடற்கணெழு நின்னையொரு பொருள்செய்து வருதி யென் றெம்பிரான்செவ் - வாய்மலர்ந் தருளவு மென்கொல்பா ணித்துநீ வாரா திருந்தனைபெருங், கணியார் பொருப்பைக் கலக்கிய முனைத்தலைக் காலவேல் கையுண்டுகாண்-கருதுமதன் வலிநீ யுணர்ந்திலா யேனும்வின் கரைவது முணா

ர்த்திலாயோ, பணியார் முடித்தலை துளக்குமவ் வேலெதிர்ப் படவுநீ யொரு
பொருள்கொலோ - பரமகுரு சாமியிவன் முனியினுனை யாதரிப் பாரெவர் பசும்
பொனுலகினணியார் விடைக்கழி யுடைக்குமர நாயகனொ டம்புலீ யாடவாவே-
பாரணம் புகல்புவன காரணன் காணிவனொ டம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

# அ.—சிற்றிற்பருவம்.



682. மறையோ மறைமி னொருமுடிவோ வான்றோய் குடுமி வரையுதித்த
மங்கை யுமையாண் மடித்தலமோ மாறா வன்பர் மனக்குளிர்பூந்
துறையோ சிறியேம் விளையாடத் தொகுதே மடிக டிருவடிக
டோயப் புரிந்த தத்தவமோ தோற்ற முவந்தேங் கூற்றமுறழ்
கறையோ வரிய வடிவேற்கைக் காளா யசுரர் குலகலகா
கருணை நிதியே காமருதேங் கமலப் பொகுட்டிற் கலைமகள்போற்
சிறையோ திமஞ்சேர் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (க)

683. கோலம் பொலிய நீராட்டிக் குலவ நுதல்வெண் ணீறணிந்து
குளிர்நெய் தடவி நறுங்குஞ்சி கோதி முடித்து மையொடுபொட்
டேலம் பொலியுங் குழலுமையா ளிட்டுப் பலபூ ணணிந்துகனி
யெழிற்க போலங் கிள்ளுமுத் திட்டுப் பெட்டு வெளிவிடுத்த
தோலம் பொலியு மணிவீதி யொருசா ராடு மெளியேங்கட்
குறுபே ரிடுக்கண் புரிவதற்கோ வுனது பெருமைக் கிதுதகுமோ
சீலம் பொலியும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (உ)

684. எங்க ளுமையா ளருமருந்தே யென்று விளித்துப் புனைந்துனை
யெய்த வெளியில் விடுத்தனளிவ் வெளியார்க் கிடுக்கண் புரியென்றோ
வங்கள் வழிதார்க் கருங்கூந்த லனையா ளிணைந்து திருமேனி
யடங்கப் புழுதி படிந்ததுகண் டாற்று வாள்கொ லொருநான்கு
கங்க ளுடையான் முதற்றேவர் கண்ணு முகமு மணிமுடியுங்
கையும் புழுதி படமஃதுட் கருதி விலக்கி லெமதின்மேற்
றிங்க டவழும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (ங)

685. அழிக்குத் தொழினந் தந்தைதொழி லதனு லியாவு மதுபுரித்
லறனே யெனின்மற் றொருநான்கு மார்செய் தொழிலெங் களுக்குரை
கழிக்கு மதுவு மிளைப்பாற்று கருணை யென்பா ரதற்குமறை [த்தி
கரிநீ யியற்றுந் தொழிறனெங் களுக்கு மிகவு மிளைப்பேற்றுங்
கொழிக்குங் கருணைப் பெருக்காறே கோதி லாத குணக்குன்றே
குலவு மமரர் குலக்கொழுந்தே குரவ நிழலி னெளிர்குருந்தே
செழிக்கும் வளமை விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (ச)

686. மேவி யுலக முழுதழிக்கும் விமலன் மகன்யா னென்றெளியேம்
விரும்பி வருந்தி யியற்றுசிறு வீட்டை யழிப்பா யனையபிராற்

காவி யனைய பெருமாட்டி யண்ட முழுதுஞ் சிறுவீடென்
றாக்கி மகிழ்வா ளவண்மகளி யலையோ வலையாண் மகனென்று
பாவி யேங்கள் சிறுவீட்டைப் படைக்கு மாறே பணித்தேகிற்
பழியுண் டாமோ பொழிசுவைத்தேம் பங்கே ருகமென் மலர்மேற்சி
தேவி மகிழும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (ரு)

687. கண்ணீர் பெருக வுருகியுளாய் கசிவின் னடியார் மலமாயா
கன்ம முழுதுஞ் சிதையவர்முற் கடிய வினையைச் சிதையவர்த
மெண்ணீர் பிறவிக் கணக்கழுது மேட்டைச் சிதைநீ யேபரமன்
றெண்ணு மழுதை யுறுமுனக ரெண்ணுஞ் சிதைமற் றினைதவிர்த்து
புண்ணீர் கவரும வடிம்பேற்கைப புலவா புலவர் போரேற்றே
பொறியில் லேறுஞ்சிற் றிலஞ்சிலைதத்தல புகழ்றா வலது புண்ணியமோ
தெண்ணீர் வளாய்கூர் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (சு)

688. சொன்மா மறைக்கும் பெருந்தேவர் தொகைக்கு நறுங்கற் பகத்தாமஞ்
சூழ் முடிவா னுடையுக்குஞ் சூட்டோ திமஊர் பிரமனுக்கும்
பன்மா முரல நறவிறைக்கும் பசுந்துழாயப் பூந் தாமனுக்கும்
பன்மா தவர்க்கு மற்றையர்க்கும் பரம கரிய சிறடிகள்
பொன்மா மணியும் வெண்முத்தும் போற்றி யாக்க ளாடிடத்துப்
புழுதி பற்றச் செய்யவாயப் போதத் திறம்பு தோபிற்றோ
சென்மா மதிலசூழ் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (எ)

689. அன்று கயிலைப் பருப்பதத்தி லழகோ லக்கத் தினிதமர்ந்த
வருள்சா னுந்தை யிருசரணு மடைந்து பிரமன் மால்முதலோர்
நன்று வரம்பெற டியதமரர் நாடு கெடுத்த சூர்முதலோர்
நலலார் விரும்பு பெருவீடு கலிதத் கொருகசே யுத வன்றோ
நன்று செறிக்கை யினநலலார் கருதி விரும்பு சிறுவீடு
கழியப் புரிசே யுதவைக்கின்றோ கரையாய் வரையாள் கண்மணியே
சென்று பலாவும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (அ)

690. மையா நின்ற சிறுமருங்கு னங்கை யுமையாள் பரமனொடு
நறுநீர்ப் பொய்கைத் தடங்கரைவாய் நண்ணி முகமா றினுக்கேற்பக்
கையா றிரண்டு புரிந்ததும்போற் காலா றிரண்டு செய்யாது
கருதி யிரண்டே செய்தனைமுற் கடையேஞ் செய்த நல்வினையான்
மெய்யா றிரண்டா யிருந்துமவை விளக்குங் குறும்பு பொறுக்கரிதாய்
விளைந்த தினியாஞ் செயலென்னே வீடு தோறும் விடாதமர்ந்து
செய்யாண மகிழும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (கூ)

691. ஆர்வார் புனல்வெண் பிறையரவ மணிந்த சடைமா தேவனுக்கு
மகில மீன்ற வுமையவட்கு மருமை மகவி யருவினைக
ளிர்வார் விரும்பு நின்வரவிம் மையப் பெற்றே மெளிதாக
வெளியே மதற்குக் கைம்மாறொன் றியற்ற நினைந்தேம் வேறுணரேம்
பார்வார் மணற்சோ றுளிதுதினி து படைப்பே மடிகட் கதுகுறவர்
பாவை படைத்த மாவாமோ பன்னூல் களுமுக குற்றமறத்

தேர்வார் செறியும் விடைக்கழிவாழ் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்திப் பவருள் ளூறமுதத் தெளிவே சிற்றில் சிதையேலே. (கo)

அ.—சிற்றிற்பருவம் முற்றிற்று.

# கூ.—சிறுபறைப்பருவம்.



692. இந்தமிழ வாதபூ மேற்றேவர் புரிமகக் கனலெழூஉ துறமுழங்கக் - காலாதி யுண்டுபொறி கட்டமர் தவர்வாய் கலந்தவா சிகண்முழங்க, விந்தமிழ் தராதெழும் போதுகடல் போலற மெழுந்துமேன் மேன்முழங்க - விடியுண்ட வாளரவி னோங்கிமற முழுதுமினி யென்செய்து மெனமுழங்க, நந்தமிழ் திருக்குமிட மாயவம ராவதியி னன்மணப் பறைமுழங்க-நாடமேருண் முதநீர் மகேந்திர புரத்துவகை நலிபிணைப் பறைமுழங்கச், செந்தமிழ் முழக்கடை விடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை முழக்கினோன் சிறுபறை முழக்கியருளே. (க)

693. மலைநா ளுடற்கொடுங் கூற்றமென வொருபான் மயக்கமிரு ளென்ன வொருபால் - வடமேரு வென்னவொரு பாலலை யெறிந்துகரை மாய்க்குமுவ ரென்னவொருபா, லுலைநாண் மறக்கனலி யென்னவொரு பாலெங்கு முழ லும்வளி யென்னவொருபா - லோங்குங் குறட்பூத மென்னவொரு பாற்கொலை யுவந்தகடி யென்னவொருபாற், கலைநாண் மதிச்சடைக் காபாலிகண்டக் கருங்கா ளமென்னவொருபாற்-கலந்தெங்கு மாய்ப்போர் புரிந்தவெஞ் சூர்முழக் கந்தபக் கையில்வாங்குஞ், சிலைநாண் முழக்கிய விடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை முழக்கினோன் சிறுபறை முழக்கியருளே. (உ)

694. பண்ணீர் மொழிக்கருங் கட்செய்ய வாய்மலைப் பாவைக்கோர் பங்களித்த-பாலலோ சனநா யகன்கரத் தமருகப் பறையினைத் தும்படைக்கும், கண்ணீர் பிலிற்றுங் கடம்பனி தடம்புயக் காளைவே ளைப்பழிக்கும் - காமருரு வத்தினம் பிள்ளைப் பிராட்டிருக் கைப்பறை யெலாந்துடைக்கும், புண்ணீர் மணத்தவடி வாட்படைச் சூரன் பொரும்படைப் பறைமுழக்கம் - போயொழிக் ததுவெனப் புத்தேளிர் பலரும் புகழ்ந்துரை முழக்கமோங்கத், தெண்ணீர் முழக்குடை விடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை முழக்கினோன் சிறுபறை முழக்கியருளே. (ஙு)

695. வான்முழக் கஞ்செயும் புத்தேளி ராகிய மயூரங் களுக்கு நிறைசூன் - மழைமுழக் காகவுந் தகுவரா கியகொடிய வல்விட வராக்களுக்கு, மான்முழக் கஞ்செயும சனிமுழக் காகவு மதிக்குமுது குரவராய - வயல்குமச ணங்கட்கி யாழ்முழக் காகவும் வையகம் வளைந்துமேன்மேற், சேன்முழக கஞ்செயு மலைப்புணரி யாகிய செழுங்காட்டி னுக்குவெய்ய - தீமுழக் காகவு மெழுந்துற முழங்கச் செழுந்தளிர்ச் சோலைதோறுந், தேன்முழக் கஞ்செயும் விடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே - தெய்வமறை யாகிய பெரும்பறை முழக்கினோன் சிறுபறை முழக்கியருளே. (ச)

696. பொருவிடைக கொடியுடைப் புண்ணிய னலாதபிற புத்தேளிரும்பரந்து - புவியகத் தமருநற் றவருமற் றெவருமிப் போதுவம் மின்களென்வந்தாற், கருவிடைப் புகுதறவி ரின்பமுதல் யாவுங் கருத்தின் படிக்கெய்தலாங் - காணுமென் றவர்வர விளிக்கும் பெரும்பறை கடுப்பப் பகுத்தறாலே, புருவிடைக் கொடியிமை கருங்குழலி னீமுன்ன முற்றது கடுப்பவானத் - தோங்

இளஞ் சோலையிற் பொறிவண்ட ருற்றுமது வுண்டுவிண் டிசைமுழக்குந், திருவிடைக் கழியென்னு *மிடைக்கழி யுடைக்குகன் சிறுபறை முழக்கியருளே-தெய்வமறை யாகிய பெரும்பறை முழக்கினோன் சிறுபறை முழக்கியருளே. (௫)

வேறு.

697. எந்தை பிரானொரு கைக்கட் டமருக மிதுபறை குணின்மேய
தெவ்விட மென்று சடாடவி தேடி யிலங்கு மிளம்பிறையை
நிந்தை யிலாக்குணி லென்றுகை கொண்டு நெடும்புவ னம்பலவு
நெஞ்சு துணுக்கென வெற்றி முழக்க நிகழ்த்து நிகழ்ச்சியனே
சிந்தை விரும்பிய வெங்கண் மதங்களி தேக்கி யுவட்டெறியச்
சிறுகட கச்செய் யகக்கிளை யுங்குணில் சேரக் கொடுமோதி
முந்தை மறைப்பொரு ளாகிய செல்வன் முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௬)

698. மின்னு வளம்பொலி மேக மிவர்ந்தொளிர் வித்தக மாதவன்
விழைதர மழைதரு மகிழ்மயி லகல்வெரிந் திசையி னிவர்ந்தொளிர்வாய்
பன்னுப லண்ட மகண்டமு முண்டு படைக்க வமைத்தவிறற்
பன்மலர் மாலை புனைந்தொளிர் சத்தி பரித்த கரத்திறைவா
பின்னு திரைக்கடல் பொங்கி யெழுந்து பெயர்ந்தலை யக்கூவிப்
பேருஞ் சிறைவலி வாரண நின்று பிறங்குகொ டித்தருவே
முன்னுந ருள்ள முளைத்தெழு சோதி முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௭)

699. பந்திய மைந்த பலாச்சுளை விண்ட பசுந்தேன் மதகளிறு
படுபுழை யொருகர மேற்கொடு நீந்தப் பரவிப் பெருகுவள
நந்திய வங்கண் விலங்க லடங்க நகும்பல குகைதோறு
ஞான முவப்ப மடங்கற் குருளையி னுறு மமர்ந்தருள்வா
யுந்தி யெழுந்தவன் முற்பல தேவ ராருங்கு மிடைந்தாருநின் [ரான்
னொளிர்கைத் தொழிலிப் பறையினும் வலமா முணர்ந்திட மொய்த்தன
முந்தி யெழுந்தொளிர் சந்தன கந்தன் முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௮)

700. செக்கட் பணியுமிழ் செம்மணி யுங்கடி சேருங் காரகிலுஞ்
செறிகழை யுமிழ்குளிர் வெண்மணி யுங்கரு டேங்குங் கருமணியுந்
தொக்கட் டெழுவரி யேறெழு போதுந் துண்ணென லடையாத
தும்பிக் கொம்பு மயிர்ப்பீ லியுமஞ் சுவணத் தொடும்வாரி
சக்கட் கருமுகில காக்குங் கானத் தரைமுத லெங்கிலுநத்
தழைய வெடுத்தெதிர் வீசு தரங்கத் தணைகா விரிநாடா
முக்கட் கனிதரு மாமறை வித்து முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௯)

701. கற்று விளங்கு நலத்தினர் யாருங் கரையக் கரைகாணுக்
கரையில் வளம்படு கரையிரு பாலுங் கமலக் கையேற்ப
வுற்று விளங்கிய பலவகை மணியு மொருங்கொளிர் செம்பொன்னு
மோங்கியெழுந்து விழுந்து புரண்டுக ளுண்டவர் போனிகழும்
பற்று முடங்கு திரைக்கை யெடுத்துப் பார்முழு துங்கண்டு
பங்கே ருகநிதி யென்று வியப்பப் பலவெறி யுந்தகைசான்
முற்று முழங்குங் காவிரி நாடன் முழக்குக சிறுபறையே
முகைமகிழ் முகமலர் குரவமர் குரவன் முழக்குக சிறுபறையே. (௧௦)

௯.—சிறுபறைப்பருவம் முற்றிற்று.

---

* இடைக்கழியென்றும் இத்தலத்திற்கு ஒருபெயருண்டு.

# ௧௦.—சிறுதேர்ப்பருவம்.



702. தண்டே ருடைக்குந் தடாவலி நெடும்புயத் தானவர் கருந்தலை யெலாந் - தடிபடுஞ் செங்களத் தெதிரெதி ருருண்டுவகை தழைபெரும் பேயுருட்ட, வண்டே ருடைத்தொங்க லன்னையர்கைச் சக்கர மகிழ்ந்துசிறு பேயுருட்ட - வாய்க்கினிய மூளையுண் டுதவுதற் காலெனத் தன்னையர் மண்டைமுது பேயுருட்டப், புண்டேர் முடைப்பல்வா யவருடல சுழலொன்று புதியசெங் குருருட்டப் - போரி டைப் பட்டவவை நோக்கியவா மங்கையர் புலந்தழக டலையுருட்டத், திண்டே ருருட்டிய விடைக்கழ் யுடைக்குழக சிறுந்தே ருருட்டியருளே - திருமால் வயிற் றடை பெருந்தே ருருட்டிசெய் சிறுதே ருருட்டியருளே. (௧)

703. அலையுடைக் கடலுடை யகலபுவியு மெண்டிசையு மாழிமால் வரையும் வானன்றே - யமபொனமால வரையுமத் ததாமுதற் கோள்பல வமைந்தபெரு மண்டலமுமமைவம், முலையுடைக் கொடியரா மடந்தைய ரொடுஞ்சுரர் முயங்குமம ராவதியுநான - முதுமறைக் கிழவனுல கமுமிலகு சுதரிசன மொய்ம்பனமர் வை குந்தமு, நிலையுடைக் கதாமணிக் கட்செவிப் பாதலமு நீடுமற் றெங்குமாகி - நிறைந்தவெஞ் சூர்ப்படைக் கோட்டையற வப்புமழை நேர்பொழியு மேகமாய, சிலையுடைச் சேவக விடைக்கழ் யுடைக்குழக சிறுந்தே ருருட்டியருளே - திரு மால வயிற்றடை பெருந்தே ருருட்டிசெய சிறுந்தே ருருட்டியருளே. (௨)

704. கூர்கொண்ட கோட்டுக் கொலைக்களிற் றுருயிர் குடித்தவொரு கோட்டையானை - குடிகொள வைப்பனெதங் குலாவுமொரு வெண்பிறைக் கோட டினை யெடுத்ததற்கு, மார்கொண்ட தாலென வமைத்துமள வாதமுந் நீர்கொ ண்ட பரவைமுழுது - நெடும்புழைக் கையுற வடக்கியும் மனையகட னிறைய மத நீர் விடுத்துமம, பார்கொண்ட முடியர வணிந்தும் பிலம்புகூஉப் பார்துதிக் கைநிறுவியும்-பலவிளை நீகாப்பனைசெய தாங்கு களிற்றுள்வல படர்பெருங் கழ கந்தொறுஞ், சீர்கொண்ட தமிழ்சால விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டி யருளே-திருமால வயிற்றடை பெருந்தே ருருட்டிசெய் சிறுந்தே ருருட்டியருளே.

705. ஆக்கும் பெருந்தொழி லமைந்தவொரு தமருக மவாவுபறை யென் றுளங்கொண் - டன்னதை யடித்தடக் கைக்கொளுங் குணிநேடி யருகுவிளை யாடின்ற,தாக்குந் திறற்களிற் றுருகர தலக்கோடு தன்னையுறப் பற்றியீர்க்கத்- தவாவலிகொ ளக்களிறு மதிப்பற்று பீர்க்கத தழைந்திடு கலாமுணர்ந்து, வாக்குஞ் சுவைத்தேற மாலைக குழறுய வயங்குற நடுப்புகுந்து-மறையோதி மந்தேடு வேணிப பிறைக்குணில் வயங்கக் கொடுக்கவுவகை, தேக்குந்திறற்குக விடைக்கழி யுடைக்குழக சிறுந்தே ருருட்டியருளே-திருமால் வயிற்றடை பெருந் தே ருருட்டிசெய் சிறுந்தே ருருட்டியருளே. (௪)

706. தருமலகு மால்வரைச் சந்தனக் குறடுந் தவாவிரை யகிற்றுண்டமுந்
தறுகட் கடாக்களிற் றெறுணகோடு நீடுந் தகைமுட்பசுந் தோகையிறகுங்
குருமலகு பன்மணியுமம வாரியிரு கோட்டுங் கொழித்துச் சுழித்திரைத்துக்
குலவுபல மதகும் புகுந்துலா யோடிக் குளுந்துவா ரிதிகலக்கு
மருமலகு பன்மலாக காவிரிப் புனல்பாய வாழையுந் தாழையுங்காய் [ருந்
மன்னுபைங் கந்தியுங் கன்னலுஞ் செந்நெலும வானளாயு மோங்கியெளி
திருமலகு சோணா டிடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே
திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசெய் சிறுதே ருருட்டியருளே.

**707.** பொன்செய்த மெல்லிதழ்த் தாமரை யரக்காம்பல் பூத்துகனி பொலிவாவியிற் - பொம்மற் செருத்தற் கொடும்பிணர்க் கோட்டெருமை பொள்ளெனப்பாயவெருவி, மின்செய்தசெங்கட் டகட்டகட் டிளவாளை மீமிசையெழுந்து பாய்ந்து-மேவும்பெருங்குலைக் கட்பொலி யிலாங்கலி வியன்குலையை மோதவஃது, கொன்செய்த காய்பல வுதிர்க்கவவை யத்தடங் கொளவிழ வதற்கஞ்சியக்-கோட்டெருமை யோடவது கண்டனைய வாளையக் குளிர்தடம் புக்குமகிழுந், தென்செய்த மென்பால் விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே-திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௬)

**708.** கரையெறியும் வெள்ளப் பெருக்கிற் றருக்குடைக் காவிரி யொழுக்கின்வந்த - காமரு கமஞ்சூற் பெருஞ்சங்க மொருபெருங் கான்மதகு காலவெளியோர், விரையெறியு மொண்மலர்க் கொடியிற் கழைக்கூத்தர் விழையத் தவழ்ந்தேறியோர் - விரிதலைக் கமுகிநந் தொண்முத் துதிர்ப்பவவை வீழ்தலைக் கண்டநீல,வரையெறியு மைந்துடைத் தோளுழ வரிற்சிலர் வளக்கமு கரும்புகுக்கும் - வறிதெனச் சிலர்வான நீலுகுவ தெள்ளலையென மாறா வளங்கள்பெருகித், திரையெறியு மென்பால் விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே-திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௭)

**709.** எழுந்தோகை குடிகொள வறந்தலை யெடுத்தோங்கு மேறமறை யாயதுாய - விலதையந் தணர்கா வெழுங்கொம்பு பற்றிமே லேறவேள் விச்சாலையி, னெழுந்தோகை நீர்ந்துகிளர் வேதியுங் குண்டமு மலங்கமே கலையுநோக்கி-யரணியு தாத்தெழுந் தழலேற வழலேற வாவுமயி லெங்குமேறத், தழுந்தோகை மார்கருங் குழலினறு மாலையுந் தடமுலையி னெழுந்த புழுகுஞ் - சாந்துமே றத்தேவ ரமரா வதிக்கட் டழைந்துகுடி யேறநாளுஞ்,செழுந்தோகை மயிலே றிடைக்கழியுடைக்குழக சிறுதே ருருட்டியருளே - திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௮)

**710.** சுடர்செயும் பன்மணித் தொடைமாதர் மைந்தரொடு தொக்குவிளையாடநீடு - சோலையி னளிக்குல முழக்கியுண் டுமிழுமிழ் சுதைநறுந் தேறல்வெயிலான், விடர்செயும் புவியுட் புகுந்துபா தலமுழுதும் வெள்ளமே யெனநிரப்பி-நீதுபெரு கிப்பசுங் கன்னலுங் கதலியும் வேரொடு பறித் தாழ்ந்து, படர்செயும் போதெதிர்ப் பட்டவான் முட்டவெழு பசியகொற் போரனைத்தும் - பார்பொறையுயிர்த்திட வெடுத்துக் கடுத்தகழ்ப் பௌவத் தெறிந்த தலைவான், றிடர்செயும் பெருவள விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே - திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௯)

**711.** தாமலி கொடுந்தொழிற் கருமலைக் குக்கவலை தருமலைக் குங்காலவாய் - தருமகட் குந்துறவர் திருமகட் குங்கொழுந சாரமுகு வேராமுத்தங், காமலி பொருப்புதவு மங்கைக்கு மெறிதிரைக் கங்கைக்கு மொருபுதல்வமா-கடவுளார் மூவர்க்கும் யாவர்க்கு நாயக கருத்தைத் திருத்துமினிய, மாமலி பெரும்புகழ்த் தென்கலைக் குந்தெய்வ வடகலைக் குந்தலைவநுண் - மதிக்குந் துதிக்குந் திதிக்குங் கதிக்குமுண் மதிக்குநா யகமுதல்வனாந், தேமலி செழும்பொழில் விடைக்கழி யுடைக்குழக சிறுதே ருருட்டியருளே - திருமால் வயிற்றடை பெருந்தே ருருட்டிசேய் சிறுதே ருருட்டியருளே. (௧௦)

௧௦.—சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

**திருவிடைக்கழிமுருகர் பிள்ளைத்தமிழ் முற்றுப்பெற்றது.**

# சிறப்புப்பாயிரம்.

[இது பழையபதிப்பைச் சார்ந்தது. கி. பி. 1883.]

712. வண்மைதரு முழவினரு மறவோரும் பெருஞ்செல்வம் வாய்ந்து ளாரு, முண்மையுமோ வாப்பிணியு முறுபசியுஞ் செறுபகையு முறுதலில்லா, வொண்மையும்பன் னாட்டுறுபா ரம்முறினு மிறைகுறையா துதவித் தாங்குந், திண்மையுங்கொண் டரணுடைத்தாய் நாட்டியற்கோர் காட்டாய சென்னி நாட்டில். (௧)

713. துலங்குவயற் செஞ்சாலி வெண்சாலி யீன்றகதிர் துறுமி மீப்போ, யலங்கிரவி மதியுடல முறைதீண்டிக் கிரணத்தா னன்றி யன்றோ, றிலங்குறு செங் கதிரோன்வெண் கதிரோனென் றிசைத்திடுபே ரெய்தச்செய்யு, நலங்கு லவிப் பெருகுதிரு விடைக்கழியென் றொருநாம நவின்மூதூரில். (௨)

714. தண்ணியபுண் ணியநீற்றுச் சார்பொருவா மெய்யடியார் தமக் கெஞ் ஞான்று,மண்ணியபே ரின்பநல மருள்செய்வா னனிவிரும்பி யவனியேத் தப், பண்ணியன்மென் மொழியிருவர் பாலமரக் குரவடிவாழ் பரமன் செய்ய, மண்ணியமா மணியனைய முருகேசன் மறைச்சிலம்பார் மலர்ப்பூந் தாளில். (௩)

715. வில்லாரு மணிமாட மிலங்குசிராப் பள்ளிநகர் விளங்க வந்தோன், பல்லாருங் கொண்டாடப் பலகலையுங் கற்றுணர்ந்த பண்பின் மிக்கோ, னெல் லாரு மீனாட்சி சுந்தரநா வலர்பெருமா னினிய வன்பாற், சொல்லாரு மியற்பிள் ளைக் கவிமாலை தொடுத்தினிது சூட்டினனால். (௪)

716. அனையமாக் கவித்தொடையைக் கரலிகிதத் தமைவழுக்க ளனைத் துமோட்டிப், புனையுமா மணிச்சுடிகைப் பணித்தலையிற் கிடந்தபெரும் புடவி மீது, நினையுமா பரந்தெங்குஞ் சிறந்தோங்கி நனிவிளங்கி நிகழு மாறு, வனை யுமா வியலச்சின் மயலகலப் பதிப்பித்து வழங்குகென்று. (௫)

717. அல்லூரு மணிகண்டச் சிவலோகத் தியாகேச ரழகி னார்ந்த, செல்லூருங் கரியகுழற் றிருவெண்ணீற் றுமையோடு சிறப்பநாளும், வில்லூருந் திருக்கோயில் கொண்டமர்ந்தின் பினிதருளு மேன்மை நோக்கிப், பல்லூரு நல்லூரென் பெருமணநல் லூர்செய்தவப் பயனாய்வந்தோன். (௬)

718. நற்றமிழ்முற் றுறவோதிக் கற்றநா வலர்செய்ய நாவைமேவும், பொற்றவிசாப் பெற்றதன்க ணரசிருந்தன் றேரினிது புனைந்து நாளுஞ், சொற் றதமிழ்க் கவிமதகுஞ் சரத்தேறி யெற்றுதிரை சுற்றி முற்றி, யுற்றபெரும் புவியளவோ திசைகடந்தப் புறத்தும்போ யுலாவு சீரான். (௭)

719. நீங்குறத்துன் பிரவலர்க ளினிதுதரும் வள்ளன்மை நிரம்பக் கல் லா, தோங்குவள்ளற் பெயர்பூண்டு முன்னிருந்தா ரிக்காலத் துறினன் றே ரைத், தீங்குசெறி யாதவொரு சாலைமா ணாக்கரெனச் சேர்த்துக் கொண்டு, தாங்குபெரு வள்ளன்மை டயிற்றலா மெனநினையுஞ் சலசக் கையான். (௮)

720. தண்ணிலவு புனைசடிலத் திறையவன்றாண் மலர்க்கன்பு சார்ந்த தூயன், கண்ணிலவு மருமலர்கொண் டவன்றனையே யருச்சிக்கக் கருதுநேய, னுண்ணிலவு மவனடியார் தம்மையெலா மவனெனவே யுளங்கொள் சீலன், பண்ணிலவு மினியமொழிச் சபாபதிமா மகிபாலன் பகரக் கேட்டு. (௯)

721. இதுநமது முன்செய்பெரும் புண்ணியத்தின் பயனெனவே யெண்ணியுள்ளக், குதுகலத்தோ டாய்ந்தெழிலார் தருமச்சிற் பதிப்பித்துக் கொடுத்திட்டானான், முதுபுகழ்ப்போர் வையன்கலைகண் முழுதுணர்ந்த மூதறி ஞன் முனிவிலன்பன், விதுமுடியோ னடிபரவுந் தியாகரா சப்பெயர்கொண் மேன்மையோனே. (௧௰)

சிவமயம்.

# ஸ்ரீ சேக்கிழார் பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### விநாயகக்கடவுள் வணக்கம்.

722. மாமேவு வான்பிறை முடிப்பிறை யிரண்டென்ன வாய்க்கடைத் தோற்றியவிரு - மருப்பிரண் டென்னவங் கைக்கோ டிரண்டென்ன மார்பின் முத் தாரமென்னப்,பாமேவு பேருதர பந்தமென வரைசூழ் படாமெனத்தாளின் முத்தம்-பதித்தகழ லெனவிரவ மேலோங்கு பேருருப் பண்ணவனை யஞ்சலிப் பா, மேமேவு ஞானசபை யிறைவர்தம் மேனியி னிணங்குற வெழுப்புலகெலா - மென்னுமறை யாதியாக் கொண்டவ ருயிர்க்கருளு மியல்பனைத் துந்தெரித்து, காமேவு மம்முதலொ டொன்றவிளை யுருபுதொக நான்கனடி யாதிசெய்து - நாற்சீரி னுநெறி விளக்கியொளிர் சேக்கிழார் நற்றமிழ்க் கவிதழையவே. (க)

### குருவணக்கமும், அவையடக்கமும்.

723. ஓங்குகயி லாயபரம் பரைநந்தி யடிகட் குறுமரபெட் டாவது*பிற் றோன் றலா யெங்க - ளுயர்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய குரவற் குற் றபத்தொன் பதாவது†முற் றோன்றலாய்ப் பொலிந்து,
தேங்குசிவப் பிரகாச முதலியவாய் மலர்ந்து திகழுமா பதிசிவனே குன் றையுற மேவித்-திருத்தமேர் வளங்கொண்டு பெருமையின்மேலாகிச் சிறத்தலாற் செம்மேனிக் குமரவே ளொத்தும்,
பாங்குபெறத் துதிக்கையொடோர் கோட்டத்த னைய பயிற்சியினக் குமரவே டிருத்தமைய னொத்தும்-பரவுசேக் கிழானெனும்பேர் பரித்தலினக் கிணைசப் பண்ணவனை யினிதுயிர்த்த திருத்தாதை யொத்தும்,
வீங்குபுகழ் படைத்தவருண் மொழித்தேவன் புராணம் விரித்துரைத்தா னவன்டிதாழ்ந் தென்னறிவிற் கேற்ப - மேயபிள்ளைத் தமிழெனவொன் றுரைப்பலஃ தறிவான் மிக்கவர்தங் குழாத்தினுக்கு மிக்க நகை தருமே. (உ)

---

* பிற்றோன்றல்: திருநந்திதேவர், சனற்குமாரதேவர், சத்தியஞானதரி சனிகள், பரஞ்சோதிமாமுனிவர், மெய்கண்டசிவாசாரியர், அருணந்திசிவா சாரியர், மறைஞானசிவாசாரியர், உமாபதிசிவாசாரியர்.

† முற்றோன்றல்: அருணமச்சிவாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமச்சிவாய மூர்த்திகள், மறைஞானதேசிகர், அம்பலவாணதேசிகர், உருத்திரகோடிதேசி கர், வேலப்பதேசிகர், முற்குமாரசாமிதேசிகர், பிற்குமாரசாமிதேசிகர், மாசி லாமணிதேசிகர், இராமலிங்கதேசிகர், முன்வேலப்பதேசிகர், பின்வேலப்ப தேசிகர், திருச்சிற்றம்பலதேசிகர், அம்பலவாணதேசிகர், சுப்பிரமணியதேசி கர், அம்பலவாணதேசிகர், சுப்பிரமணியதேசிகர்.

# க.—காப்புப்பருவம்.

## *"தில்லைவாழந்தணர்"

724. கார்கொண்ட சோலைசூ ழாரூர ரோரரைக் கானம்பி யாரூரர்முக்-காலரைக் காலாக முடிவுசெய் தருண்மாக் கவித்திசையின் வீற்றிருக்கு, மேர்கொண்ட தில்லைமூ வாயிரர்முன் னெழுவரும் மெழுவருந் தழுவருமெம - திதயத் தழல்கொண் டுறைந்திடச் செய்தவரை யெப்போது மேத்தெடுப்பாம், பார்கொண்ட தொண்டர்வர லாறுசொல் புராணமம் பலவரரு ளாலமைந்த - படி தெரித் திடவுல கெலாமெனுஞ் சுருதிநாப் பண்ணுமேற்றும் பொருத்திப், பேர்கொண்ட சைவபரி பாடையறி வரியசம் பிரதாய முதலியாவும்- பிறங்கத் தெரித் தெம்மை யாண்டகுன் றத்தூர்ப் பிரானைப் புரக்கவென்றே. (க)

## "இலைமலிந்தவேனம்பி"

725. இலைமலி யெனுங்கவியு ளெழுபுவன மும்பரசு மெழுமுனிவ ரேத்த வமர்வா - ரெழுபுரவி வையமிசை யெழுகதிரும் வட்குமணி யெழுவுருவு மூட்டுமொளிசான், மலைமலி புயத்தரெறி பத்தர்முத லெழுபவமு மாய்த்தவிற லெழுவோரையும் - வாயார வாழ்த்தித் துதித்தவ ரடிக்கமல மலர்முடிக் கணியாக்குவான், கலைமலி பெரும்புலவர் கைகுவிக் கக்கலைக் கன்னிநின் றேவல்கேட்கக் - கனகசபை யார்முத லளித்தருள வாவாம கத்துவ மடைந்திருந்து, மலைமலி சுணங்கனைப் பேனென் றுரைத்தருளி யாம்பெருக் கத்துவேண்டு - மான்ற பணி வெனுமொழிப் பொருடேற்ற குன்றைநக ராளியைக் காக்கவென்றே. (உ)

## "மும்மையாலுலகாண்ட"

726. மும்மைமறை யும்பரவு மும்மையுல கும்புகழு மும்மையாப் பகரமாதி - மும்மையுயிர் குறினெடி றணித்துமத சவ்வூர்ந்து முதலமையு நாமமூற்றூர், செம்மைபெறு மும்மையாம் வருணத் துதித்துச் சிறந்தோங்கு மூர்த்தியார்முற் - செறியுமிரு மும்மையார் செம்பொற் பதாம்புயஞ் சென்னிவைத் தேத்தெடுப்பா, நம்மையருள் சிவபாத விருதய ருளத்துவகை நண்ணவொண் பொருளாதலா - னுடுமுழ வாரவல மியைதலா லியாவோரு நாவலர் பிரானென்னலால், வெம்மைதவிர் புகலியார் மூதன்மூவ ரும்புகலும் வேதத் தமிழ்க்கணுள்ள - மெய்ம்மையை விரித்துத் தெரித்தருள்செய் குன்றையூர் வேந்தைப் புரக்கவென்றே. (ந)

## "திருநின்றசெம்மையே"

727. திருநின்ற செய்யுள்புக னீற்றறையு ளருகந்தர் சிந்தைவெந் திடவமர்ந்துஞ் - செறிதுயர்க் கடன்மறக் கல்லொடவ ராழவொர் திரைக்கடற் கன்மி

---

* காப்புப்பருவத்திலுள்ள பதினொருபாடல்களில் ஏனைப்பிள்ளைத்தமிழ்களிற் கூறுவதுபோலத் திருமால்முதலியவர்களைக் காப்பாகக்கூறாமல் இந்நூலிற் சேவையர்காவலர்க்குத் திருத்தொண்டர்களைக் காப்பாகக்கூறத்தொடங்கிய இந்நூலாசிரியர் இப்பருவத்தில் அவர்களைத் திருத்தொண்டத்தொகைச் செய்யுள்முறைப்படி பாராட்டிக் கூறுகின்றனரெனக்கொள்க.

தத்துவ், கருநின்ற கண்டரருள் வெளிசெய்கா வரசர்முற் கருதுபுக ழெழுவோ ரையுங் - கருத்திடை யருத்தியி னிருந்திமற் றவர்பதங் காதலித் துத்துதிப்பாங், தருநின்ற செங்கைத் தலங்குவித் திடுமுனர்த் தையலொரு பாகர் தொண்டர் - சரித்திர மனைத்துமொரு வாதுற நிரம்பத் தவாமன வமைக்குவிக்க, வுருநின்ற சீர்கொள்புலி யூர்க்கோட்ட மேயதற் கொப்பவுல கேத்தநாளு, மோங்குபுலி யூர்க் கோட்ட மேயகுன் றத்தா ரொருத்தரைக் காக்கவென்றே. (௪)

"வம்பருவரிவண்டு"

728. வம்பரு யாப்புநவில் வம்பரு முலையொரு மடக்கொடியை வேட்ட லின்றி - வண்பிரம சரியநிலை வைகுநா ளொருமடப்பாவை யைப்பிறப்பித், தும்பரு வுந்திற லரிக்குருளை போலெழுந் துவகையார்க் கும்பிறப்பித் - துலா யவர்முனைவரைவெ லறுவர்பொற் பாதமல ருச்சிவைத் தேத்தெடுப்பா, மம்பரு வாழிமுழு துண்டதிரு முனிவிரித் தருளிய தமிழ்க்காக்கமா-வருண்மூவ ரருண் மறைப் பொருடெரிய முன்றொருவ ரருண்மறைப் பொருள்விளக்கு, நம்பரு வித்தியா ரணியமுனி வரனுள நயப்பயாப் புறவிரித்த-காவலர் பிரானைத் திருக் குன்றை யருண்மொழி நலத்தனைக் காக்கவென்றே. (௫)

"வார்கொண்டவனமுலையாள்"

729. வார்கொண்ட வனமுலை யெனுங்கவியு ளுயர்சைவ மாண்பினர்க டலைவணக்கி-வாயார வாழ்த்தித் தியானித் திடச்சங்க மங்கைவரு சாக்கியர்முத, லோர்கொண்ட புகழ்கொடைவை வேலடையு மடையுற்று மெய்தாது மாகின்ற- வினியநக ரடையுமேற் றொளிர்கின்ற வறுவரையு மிறுவரையு மேத்தெடுப்பாங், கார்கொண்ட வமணசிந் தாமணியை வளவர்கோன் கங்குல்பக லாராய்தரக் - கண்டொழித் தாவதிது வேயென்று தொண்டர்தம கத்துவங் கருதவுய்த்துப், பார்கொண்ட மன்னரல் லவைநீக்கி நல்லவை பரித்திடச் செயலமைச்சர் - பண் பென றெரித்தகுன் றத்தூ ருதித்தவெம் பரமனைக் காக்கவென்றே. (௬)

"பொய்யடிமையில்லாத"

730. பொய்யடிமை யில்லாத செய்யுளி னிலக்கியம் புகலிலக் கணமெய் ஞ்ஞான - போதரா லாதியா யாவுமறி தபவுணர்பு புரகரனை யேதுதித்து, மெய் யடிமை வாய்ந்தசங் கப்புலவர் முதலாய வித்தக வொழுக்கமிக்கார் -விண்மருவு வார்பரவு மெண்மருமெ மிருதயம் விடாதமர வேத்தெடுப்பாஞ், செய்யமல ராதன மிருந்துபல சாதியுஞ் சேரப் படைத்ததேவுஞ் - செப்பரிய வாயவவ் வச் சாதி குறிகுணஞ் செய்கைகுடி கொளுமியல்பு, வெய்யமொழி யுணவுமுன் விரித்தெலா மறியவலர் மெய்யறிஞ ரெலவிளக்கி - மேம்பட்ட வேளாண் குலக்கதி ரெனுங்குன்றை விமலனைக் காக்கவென்றே. (௭)

"கறைக்கண்டன்கழலடியே"

731. கறைக்கண்டன் யாப்பினைக் ததிகாரி மேலாதி காரிமலை மங்கை யொருபாற் - கலந்திருக் கவுநிருவி காரிசிர கங்காரி காரியா காரிநாளு, மறைக் கண் டருஞ்சோதி யோங்காரி யருமேய வாங்காரி முதலமர்ந்த - வண்கணம் புல்லர்முற் சைவரா மைவரு மகிழ்ச்சியுற வேத்தெடுப்பாம், பிறைக்கண்ட மிது

பகலின் முகினுழைவ ததிசயப் பெற்றியென் றுடுவார்கண் - பெட்பப் பெருக் கெடுத் துவருபா லாற்றலை பிறங்குவனை வீசவஃ்தத், துறைக்கண்ட நிமிர்கந்தி யஞ்சோலை தவழ்தரும் தொண்டைவள நாட்டு நாட்டும் - தொல்புகழ்க் குன்றை வருபாலறு வாயர்முற் றோன்றலைக் காக்கவென்றே. (௯)

" கடல்சூழ்ந்தவுலகெலாம் "

732. கடல்சூழ்ந்த யாப்பம ரறஞ்சூழ்ந்த செஞ்சொக் கழற்சிங்க மன்னன் மன்னிக் - கழியா மட்கழி யிடங்கழி யருட்கே கருத்துணை செருத்துணையரில், விடல்சூழ்ந்த சிந்தையொ ரிசழ்த்துணை பெறுதற விளங்கும் புகழ்த்துணைவய- வேட்புலி யெனுந்திருக் கோட்புலியிவ் வைவரைய மேன்மேலு மேத்தெடுப்பா, மடல்சூழ்ந்த தொண்டர்வர லாற்றுவிரி யுலகெலா மறியத் தெருட்டுகுரவிற் - கமையப் புனைந்ததுகொல் சாதியடை யாளங்கொ லமையுமெது சொலினு மென்ன, மடல்சூழ்ந்த செங்குவளை மாலையணி திண்டோள் வலத்தனை நிலத் தனைவரும்-வாயாரவாழ்த்துகுன் றத்தூ ருதித்தபெரு வள்ளலைக் காக்கவென்றே.

" பத்தராய்ப்பணிவார்கள் "

733. பத்தரா யென்றெடுத் தருடிருக் கவியிலிரு பைங்கோதை யாரை வேட்ட - டான்மைக் கிணங்கவோ ரிருபுதல்வி யார்தமைப் பயவாம லேபயந்த, சுத்தராய் வன்றொண்ட ரின்றொண்டர் தழுவித் துதிக்கவைத் தவர்களாய - தொகையுளா ரென்னுமெழு வகையுளார் பொற்பதந் தொழுதேத் தெடுத்தல் செய்வா, நித்தராய் மன்றுண்ட நவில்வா ருவக்கும்வெண் ணீற்றொளி நிலா வொளியென - நினைந்தணைந் தாங்குக்கு வனைபொலிய விங்ஙே னிரம்பவுண வளியடைந்தாங், கத்தராய் கண்மணித் தொடைபொலி தரப்பொலியு மம்புயத் தவனைநம்பு - மளவா வளந்துன்று குன்றைநகர் மேயவரு ளாளியைக் காக்க வென்றே. (௧௦)

" மன்னியசீர்மறைநாவன் "

734. மன்னிய திருப்பாட்டி லாகார முதலிய மறந்திராப் பகன்முய ன்று-வையத்து வாழ்வார்க ளேகாத வண்ணநவ மணியா லயம்புரிந்து, மின் னிய சடைப்பரமர் பிறதளி மறுத்தடை விதங்கண் டுவந்தபூசல் - வித்தகர்முன் மேயவெழு வோருமெம் மிதயத்து மேவவைத் தேத்தெடுப்பாம், பன்னியதொ கையும்வகையு முதலாத லான்முதற் பகர்சைவ ரேயருளினர் - பரவுவிரி யிறுதி யா தலினிறுதி யாரெனப் படுசைவ ரேயருளினர், துன்னிய பொருத்தமிது வென்றுலக மகிழ்தரத் தொண்டர்வர லாறனைத்தும் - தூளாய்மலர்ந்தவருண் மொழிவான வனையான்ற தோன்றலைக் காக்கவென்றே. (௧௧)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.



## ௨.—செங்கீரைப்பருவம்.

735. ஒண்கொண்ட பொதுவகத் துலகெலா முய்யநா முலகெலா மெ ன்ற தீஞ்சொ-லுவந்தே டெழுத்தாணி கொண்டெழு திரண்டுகை யும்புவி யுறப் பதித்து, வண்கொண்ட வொருதாண் மடித்தூன்றி யொருதாள் வயங்குற வெடுத் தூன்றியொண் - வாய்கவிச் சுவை யொழுக் கறிவிப்ப தெனவமுத மாட் சிமை யொழுக்கெடுப்ப, வெண்கொண்ட மதற்மீ திளநிலவு மொண்காதிருங்

குழை யிளங்கதிரும்விட் - டெறிப்பவிள முறுவலுந் தோன்றமலர் திருமுக மெடுத்துவா னளவுநோச்சித், திண்கொண்ட குன்றையம் பதியருண் மொழித் தேவ செங்கீரை யாடியருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குல திலக செங்கீரை யாடியருளே. (க)

736. பொருவரிய தொண்டர்கள் புராணத்து ளிறையருட் பொலிவா னிரம்பு சொற்கள் - போற்றிடு விருப்பநீர் நம்மைமழ வாக்கிவாய் புகல்குதலை மழலையென்ன, மருவுமொழி யாசையுற் றிப்பய னுறுமென்ன வள்ளான் மறுத் துரைத்தால் - வார்த்தைப் பயன்கொள வலேக்தக்க சான்றுநீ வாய்மலர் புரா ணநின்று, மொருவரிய தாஞ்செப்ப லுற்றபொரு ளொன்றுகவி யோதவேண்டுவ தினியெவ-னுனதுசொற் பயனுணர்த லிலமென்னின் மழவா வுவப்பதும் பொய் ம்மையாமே, திருவமிகு குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடி யருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடி யருளே. (உ)

737. ஒப்பரிய தொண்டர்தம் மருமையும் பெருமையு முவக்குமவ ரவர் செய்கையு - முவமையில் லாச்செய்கை நுட்பமுந் திட்பமும் மும்பர்கோ னரு ட்பமுந், தப்பரிய செந்தமிழ்த் தொடைச்சுவையு மடையுந் தவாப்பொரு ளணிச் சிறப்பும் - தமிழ்மறை யடங்குபல மந்தணமும் வெளிடைத் தவிரும்வெற் பெனவிளங்க, வெப்பரிய முழுமதிக் குடைநிழற் றனபாயன் மேயவவை யக நயந்து - வியந்துமெய்ப் பாட்டினொடு பாராட்டி மகிழமேன் மேல்விரித் தரு ளியபிரான், செப்பரிய குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடி யருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடி யருளே. (௩)

738. தாயவொளி யிருட்புபொன் மாளிகைத் தில்லைச் சபாநடன நாதர்பெத்தான்
சாம்பானை யுய்த்தனம் திருவாண நக்கையாற் றகுமுத்தி யடைவியெ
யாயதிரு முகமுய்த் திடப்பெற்ற கைலாய வம்பரம் பரையிலனவா [ன்றே
வருளுருவ மாயவ தரித்திட்ட மெய்ஞ்ஞான வற்புத வுமாபதிசிவ
னேயமிக விம்மைக்கு மறுமைக்கு மாதார நிலையதீ தென்றுணர்ந்து[தாய்
நினைதுவர லாதருமை பாராட்டி யருள்செய நிரம்புமான் மியமடைக்
தேயநிகழ் குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடியருளே
திருத்தொண்டை நன்னாட்டுவேளாளர் குலதிலகசெங்கீரையாடியருளே.

739. பொருந்துமா யிரமுகக் கங்கைமா யிற்கதிர்கள் பொலியுமா யிர முள்ளவன் - போற்றுமொன் றி யாயிர மறைக்குமெட் டாச்சென்னி பொற்பவா யிரமுடையகோன், மருந்துநே ரருள்பெற்ற மைக்கேற்ப வாயிரம் வயங்கு பொற்கானிறீஇய-மண்டப மிவர்ந்தா யிரந்தொண்டர் வரலாறு வாய்மலர்ந் தவ வாயிவா, யிருந்துசூழ் கொழுவுண்டு புண்டரீ கத்தின்வா யியைபுல வறத்துவட் டி - யிருஞ்சங்க னம்பேட டனத்தழுவி காணமுற் றியல்பேடு மற்றென்றுமூஞ், செருந்துசூழ் குன்றையம் பதியருண மொழித்தேவ செங்கீரை யாடியருளே - திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடியருளே. (௫)

## வேறு.

740. தோம்பல வுடையேம் பிறவியை யஞ்சேஞ் சுடர்சின் சினசாமுற்
றாகே மெழுகே மிரவும் பகலுந் துதியே மாயிடினு
நாம்பல தேவரை நண்ணே மெண்ணே நயவேம் வியவேமா
ணுண்மலர் பலகொடு நின்னடி யேத்தி நயத்தலை மேற்கொண்டு
கூம்பல்செய் கையே மெய்யே மிதனிற் கோமா னீயருளுங்
கூலி யெவன்கொ லவாயது நல்கிற் குலாவு முவப்புறுவே
மாம்ப லவாவுதன் மேய புயாசல வாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (சு)

741. புண்ணிய முதலே பொங்கொளி மணியே பொய்யாப் பெருவாழ்வே
பொள்ளலின் முத்தே களாயில் வித்தே புரையில் சுவைப்பாகே
தண்ணிய வமுதே மண்ணியன் மதியே தமிழ்நா வலரேறே
சத்துவ நிதியே பொத்திய மலநோய் சாடு பெரும்பகையே
யெண்ணிய வன்ப ருளத்தமு தூற வினிக்கு நறுந்தேனே
யென்றும் பத்தி ரசங்கனி கனியே யெங்நா ளினுமெங்கட்
கண்ணிய பொருளே யாய்பவர் தெருளே யாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (எ)

742. சூழிய மேவிய கொண்டை விளங்கத் தொட்டுக் கட்டியபொற்
சுட்டி யிலங்கப் புண்டா நீறு துதைந்து நிலாக்கால
வாழிய கனிவா யூறற் றேறன் மார்பின் வழிந்தோட
வடிகா திற்புனை குழையிற் செவ்விய மணியிள வெயில்வீச
வீழிய வாவிய வாயிள முறுவல் விளங்க வரைப்பொன்னாண்
மின்னுக் காலப் பேரெழி னோக்குநர் விழிகள் விருந்துசெய
வாழிய வன்ப ரகத்தமர் செஞ்சுட ராடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (அ)

743. இவர்சரி யையரிவர் கிரியையர் யோகத் தினரிவ ரிவர்ஞான
வியல்பின ரிவரி லறத்து வழாதவ ரிவர்துற வறநின்றார்
கவர்மன மொழியிவர் பிரமச ரியநிலை கைக்கொண் டோரிவரே
கண்குளிர் வேடம் பொருளென நம்பினர் கருதரு மிவராதித்
தவர்நிலை யுணரா வருளின னிறைவன் றக்கவ ருலகறியச்
சாற்றின னலனவ னேயுல கறியச் சாற்றிய படியென்ன
வவரவர் செயன்முத லருளிய வல்லவ வாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (கூ)

744. நந்தி வரைத்தலை யொருமுனி சுரபி நயக்கப் பொழிதீம்பா
னதியா யங்கங் கோடுபு கூப நயங்கிள ரேரிகுள
முந்தி யெழுங்கா லோடை தடாக முதற்பல வுந்நிறையா
முழுத்த சுவைப்பா லாக்குபு பின்னும் மூரிக் கடல்புக்குப்

புத்தி யவாவ நிரம்பலின் மாயோன் புரிகண் டுயிலுமிடம்
புகலிது வோவது வோவென வாயப் பொலிதண் டகநாட
வத்தி மதிச்சடை யண்ணற் கினியவ வாடுக செங்கீரை
யாரரு ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. (௧௦)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

# ௩.—தாலப்பருவம்.



745. வெண்ணந் தாறி வயிறுளைந்து வீற்று வீற்றுக் கருவுயிர்த்த
வெண்ணித் திலத்தை யரித்தெடுத்து வெள்வாய்க் களமர் கரைகுவிக்க
வண்ணந் துவரின் றுவமிக்கும் வாயோ திமநீர் குடைந்தெழுந்து
மற்றக் குவியன்மே லிவர்ந்து மருவி முதிரா வெயில்காயக்
கண்ணந் துறவுந் தெழுதருமக் களமர் மரா முட்டையினைக்
கதிர்நித் திலமென் றுறக்குவித்தோங் கடையே மயங்கி யெனநாளுந்
தண்ணந் துறைசேர் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (௧)

746. நண்பா லெவரு முறத்தரிக்கு நலங்கூர்நீற்றின் வெள்ளொளியா
ளுவா லெவரு மரமுழக்க நாளுஞ் செயவாம் பேரொலியா
லெண்பாற் புலவ ரமுதுகொளற் கெத்த விடத்து நெருங்குதலா
லேர்சா லரம்பை யெழுதலினு லியனு கேசன் வைகுதலாற்
கண்பாற் கரிதோய் திருமடந்தை காமுற் றிடலா னமாளிகைமேற்
கருமால் கிடந்து கண்டுயிலுங் காட்சித் திறனுற் பொங்கியெழூஉந்
தண்பாற் கடனேர் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (௨)

747. முத்தவெழுமாற் றுயர்பொன்னுன் முழுச்செம் மணியான் மாளிகையு
முதுகூ ளிகையுந் தெற்றிகளு முகப்பும் பிறவு மமைதலினு
லித்த நகரம் பொன்னகரத் திழுமிக் கிமைத்தல் விதியுளத்தி
லெண்ணி யாடெ மகமுவா மெல்லா வுயிரும் விழியிமைத்த
னந்த வருட்சம் பந்தர்மண நண்ணி யவர்க்குங் கதிகொடுத்த
நலம்போ லிதுசார் புவியகத்து நகர்க்க ளார்செய் தனனென்று
சந்தத் தவர்சொல் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (௩)

748. முரிவில் வயிரக் கால்யாத்த முழுமா ளிகைபாற் கடல்கடையா
முன்னந் திருமா லுருவொத்து முயங்கு மெனவு மதற்கருகே
பிரிவில் கருநீ லங்குயிற்று பெருமா ளிகையக் கடல்கடைந்த
பின்ன ரன்னு னுருவொத்துப் பிறங்கு மெனவு மதற்கருகே

யெரிவி லிடுசெந் துகிர்மாட மெயில்சூழ் காஞ்சி யடைந்தன்று
னெய்து முருவொத் தலைதென் றுமெச்சா வலருங் கொண்டாடச்
சரிவில் வளஞ்சால் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (ச)

749. சோறு மணக்கு மடங்களெலாந் தூய்மை மணக்குஞ் சிந்தையெலாஞ்
சுவண மணக்கு மாடையெலாந் தொங்கன் மணக்குந் தோள்களெலாஞ்
சேறு மணக்குங் கழனியெலாஞ் செல்வ மணக்கு மாடமெலாந்
தென்றன் மணக்கு மேடையெலாந் தெய்வமணக்குஞ் செய்யுளெலா
நீறு மணக்கு நெற்றியெலா நெய்யே மணக்குங் கறிகளெலா
நெருப்பு மணக்குங் குண்டமெலா நேய மணக்கும் வீதியெலாஞ்
சாறு மணக்குங் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிததெய்வச் சைவா தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

750. துங்க மிகுந்த வருந்தவ மேவிய தோலா காத்திரண
தூமாக் கினியரு டொல்காப் பியமே தோன்று மிலக்கணமாப்
பங்க மிலாச்சம யாதி யடைந்து பராஞ்சிவ சின்னமுறும்
பாக மருஉம்பக் குவரே கேட்கப் படுமெதி காரிகளா
வங்க மெடுத்துழ றன்ப மொழிந்தின் படைவது வேபயனு
வற்புத மேவிய தொண்டர் புராணம தருள்கரு ணைக்கடலே
சங்க மரீஇயமர் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (சு)

751. அடியார் பெருமையு மருமையு நாளு மறியம் பலவாண
ரவர்வர லாறு விரித்துரை செய்பவ ராரென வுட்கருதிக்
கடியார் மற்றவ ரன்பத் தனையுங் கண்காண் படிசெய்து
காமரு முதலு மெடுத்தரு ளினரிக் கடல்சூழ் புவியிடையிப்
படியார் பெற்றார் தமிழ்மான் மியமெப் பாடைக ளுக்குளதிப்
பாக்கிய நற்றவ மென்று பலோரும் பகரப் படுபவநின்
றடியார் தடிசூழ் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (எ)

752. பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ
பயனில தாகுஞ் சிந்தா மணிவழி படர்த லெனப்போதித்
தத்திச் சுமையொரு தோள்வைத் திடுபு லுயர்த்தோன் மனமடியா
ருறுசெய லுடைப் புரிமதி வலவ வொலாவரு கந்தர்திற
முத்தித் திறமல வென்றுள விலர்பான் முற்றிச் சிவமடைய
முயல்செயல் வலவ வயற்கண் மடைச்செறி முத்த மனைத்தினையுந்
தத்திப் புனல்பாய் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய லேலோ தாலேலோ. (அ)

753. ஈற்றுத் தலையொரு மவுலி புனைந்தா லென்னச் சொல்லணியோன்
றெய்திப் பொலியப் பொருளணி யாயின வெவ்விட னும்வீற்று

வீற்றுக் கிடையிறை பட்டன வமைய விளம்பு வனப்பினொடு
மேய முதற்பொரு ளாதிய மூன்றும் வேண்டுமி டத்தெய்த
வாற்றுப் புனறு மப்பொருள் கோண்முத லறைமற் றுள்ளனவு
மமையத் தொண்டர் புராண நவின்றவ வடருபு சூழ்ந்தபசுந்
தாற்றுக் கதலிக் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய ருலோ தாலேலோ. (௯)

754. மண்டலை வேலைப் புவியிற் பத்திசெய் மார்க்க மறிந்தவரார்
வண்சுவை யமுத வொழுக்கென வார்த்தை வழங்கத் தெரிகுநரார்
கொண்டலை கோபக ரேர்தரு கூற்றங் குதித்துயர்ந் திடவலரியார்
கொற்றக் கைலைக் கணநாதர் களொடு கூடுபுமகிழ் பவராரார்
விண்டலை யாரும் பெறலரு மின்பம் விராவுந் திறலினரார்
விமலா நீயவ தாரஞ் செய்யா விடி னென மேயவபைந்
தண்டலை சூழுங் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழை யும்புய ருலோ தாலேலோ. (௧௦)

௩.—தாலப்பருவம் முற்றிற்று.

# ௪.—சப்பாணிப்பருவம்.



755. விழையற முதற்கல்வி யறியுநுண் ணறிவுமம் மேதைக் கிணக்கொழுக்கு - மேயவிவை யுடையார்த் தழீஇயவர்சொ லினிதேற்கு மேம்பாடு மாறுகருதா, மழைநிகர் கொடைத்திறனு நனிவரு தினியிட்டு மாண்புமாற் றலையஞ்சா - வன்மையு மிடங்கால முதலறித லுங்கடிய மாற்றநவி லாத குணமு, முழையரும் விருப்பமறி யாதடக் குதலுநல னேங்குகாட் சிக்கெளி மையு - முடையனிவ ணுலகுவத் தற்குரிய னென்றுளத் துன்னியிறை புனைய மணிக, டழையுமுடி தொட்டுக் கொடுத்தருண் மலர்க்கைகொடு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௧)

756. கார்க்கோல மாலோன் புரந்தருள்வ னெனுமொழிமு கமனுண்மை வேளாண்மையைக் - காதவபி தானங்கொள் குலமே யெனப்பனுவல் கற்றவ ரியம்ப மறையோர், போர்க்கோல மன்னரெட் டியர்மூவர் புறமெனப் புகன் மூவர் பசிவருத்தம் - போக்கின னெனக்களிப் புறவிலே சருமது புகன்றுமகிழ் தலைசிறப்ப, வார்க்கோல முலைமங்கை பங்கர்தளி முற்பலவும் வண்பூசை யொடு சிறப்பு - மாறாது பொலியமழை வளனுஞ் சிறப்பவளா வாப்பெருமை வாய்ந்த மேழி, தார்க்கோ லொடுக்தொடுஞ் செங்கைத் தலங்கொண்டோர் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௨)

757. மேவாத பாயுடீஇத் தலைமயிர் பறித்துழறன் மேயசம யப்பாழ்ங் குழி-வீழ்ந்தவர்மு னச்சமய கண்டனம் பேசியது விடவாற்று திருவாயினின், றேவாத பிரதாப மொருகதி ரெனத்தோன்றி யுள்ளகோ கனகமெல்லா - முற மலர்த் திடவகைக யொப்பாயி னேமென் றுறப்பொலித றேறுபன்னூ,ராவாத

மியமெனவ பயகல்கி புண்மைகில யருளுங்கை கின்றெழுபுக-ழாலோ னெனத் தோன்றி யெல்லாங் குவித்தடென் றன்றோ ரெடுத்துரைக்கும், தாவாத வொளி ளர்கி னங்கைத் தலங்கொண்டோர் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௩)

758. தருமமலர் கொய்துகீ ராடிகீ யிட்டுகனி தூயக ணிருந்துநேரே - துலங்குமொரு குறியிலா வாகனமெ னுதலோடு தோன்றிடச் செய்வதன்று, பெருமவடி யேங்களைப் புரவென்று தாழ்பவர் பெருஞ்செல்வ மெய்தியைய - பிறங்குகா ராயணவு பகிடத முரைத்தபடி பெற்றருடி யிவர்வணக்கங்,கருமமுத லெம்மலமு நீத்தின்ப மெய்தக் கடைக்கணித் திடுதியென்று - கனிந்துவேண் டுவதன்று சிறுவருத் தமுமிலாக் காரிய மவாவிகின்றேந், தருமசின கரமாங் கரங்குவித் தையவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௪)

759. எண்ணியவை யெண்ணிய படிக்கடி யவர்க்கருளு மீசனருளா லருளுறு - வினசம யத்தொடக் கெல்லா மொழித்தன மெனக்கைதட் டுதலு மோவாத், திண்ணிய மலச்செருக் கெல்லா மொழித்தனந் தீர்ந்ததவ் வாதை யென்று - செப்பிக்கை தட்டுதலு மிந்திரன் மலர்க்கணன் றேர்ந்துழா யவன்வாழ் க்கையு, நண்ணிய வெழுங்கருத் துந்தவிர்ந் தனமென்று நாடிக்கை தட்டுதலு நேர் - கவிலகம் பரமகுரு சாமியென் றியாவரு நயக்கவவ தாரஞ்செய்தாய், தண்ணிய மலர்க்கைத் தலங்குவித் தையவொரு சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்க்குன்றையாங் குன்றுதித்தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (௫)

வே று.

760. வம்பிட் டொளிர்முலை மாதுமை கான மணிப்பொது நடனஞ்செய்
வார்முன மனைகந் தருகிட நீற்றன் மதித்தவர் முதனல்க
கம்பிட் டருமறை யோர்கை குவித்து நயந்து வியந்துடனே
கறுவிரை நல்கி யலங்கல் புனைந்து நகும்பரி வட்டமெடுத்
தம்பிட் டொளிர்சடை யவரே யிவரென் றைய மறத்தெளியா
யாத்திடு முன்னர் நன்னர் விபூதிய தள்ளுபு கொள்ளுகெனக்
கும்பிட் டேற்ற திருக்கை குவித்துக் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (௬)

761. உண்ட லுடுத்தன் மணத்தன் முதற்பல வுன்னுபு நன்னயமா
ருத்தம வென்றடை யாதுல ரென்ன மொருங்கு தெரிந்தனையார்
தண்ட விலாமகிழ் பூப்ப மலர்க்கைத் தலம்விரி யாதுகுவி
தருமொர் பழக்கமு னுள்ளதி யாங்கள்செய் தவம்வறி தாங்கொல்லோ
கண்டல் செறிந்த கருங்கடல் வண்ணன் கலிகெழு பாற்கடன்மேற்
கண்டுயில் வதுபொர வெண்சுதை தீற்றிய காமரு மாளிகைமேற்
கொண்ட லுறங்குங் குன்றத்தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (௭)

762. படியிடை யொருபை திரவரு ணனைபுரி பாவல ரைத்திணையும்
பகுத்தொரு முப்பொரு ளோடும் விரித்துப் பயனு கத்தெய்வக்
கடிதலில் சினகர முள்ளன வோதக் கற்பித் தவநெஞ்சங்
கனியக் கனியக் கண்ணீர் வாரக் கவிபா டியவிறைவ
வொடிவரி தாமிரு பன்னிரு கோட்டத் துள்ளொரு கோட்டமலா
தொருகோட் டமுமுற வில்லாய் நல்லா யுலவா வளமைப்பல்
குடிக ணெருங்கும் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (அ)

763. நாடிய விரிநூல் சொற்றிடு திறனு னன்னூ லாசிரிய
னருபா சுரமுத லுரைசெய் தவிறு னவிலுரை யாசிரிய
னீடிய பரசம யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்
நிலையாற் போத காசிரி யன்னிவை நிகழ்தொறு நிகழ்தோறு
மாடிய ஞானத் திறனுற லான்ஞா னசிரி யனுநீயென்
றுன்றோர் பலரும் புகழப் படுபவ வகில மெலாஞ்சென்று
கூடிய புகழ்சால் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (கூ)

764. நிலவிய நாகே சுரநினி தமர்தலி னிகழ்நா கேசுரமாய்
நீன்மணி மாட நிலாவலி னிந்திர நீல பருப்பதமாய்க்
கலவிய செம்மணி மாடத் தாலொளி காலர தனகிரியாய்க்
கருடப் பச்சை யிலாவியா வோருங் காண்மர கதமலையா
யுலவிய வெண்சுதை தீற்று மிலாலோங் கொருகை லைக்கிரியா
யுத்தம மார்பல வேதுவி னுலினு முறைதரு பற்பலவாய்க்
குலவிய வளமார் குன்றத் தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவல நாவல கொட்டுக சப்பாணி. (கo)

ச.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

## ரு.—முத்தப்பருவம்.



765. திருப்பஞ் சாதி மறையுணர்மட் டேவ ராதி நால்வர்களுஞ்
செறிந்த மற்றை மூவர்களுந் தீரா விருவல் வினைத்தொடர்பா
லுருப்பஞ் சரும் பிறந்தைமீஇ யுறமேற் போயுங் கீழிழிந்து
முழற லாய பெருந்தாக மொருங்கு மாய்த்திங் பொருங்கடைய
விருப்பஞ் சாரு மெய்யடியார் மிக்க தொகையா ரொன்பதின்மர்
மேய தனியா ரறுபதின்மர் மேலு மூவர் சரித்திரமாங்
கருப்பஞ் சாறு பொழிமதுரக் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (க)

766. எண்ணிற் பொலிபல் புலவர்குழாத் தெய்தி நம்மோ டியாமொருவே
மென்று கூறி யெம்பெருமா னிருந்தாய் தருநன் னயமுடைத்தாய்
மண்ணிற் பொலிபு கயிலாய வரைக்க ணிவர்க்தம் மாதேவன்
வடிகா தகம்புக் குள்ளுருக்கும் வளமை யுடைத்தாய் வளத்தருவாழ்
விண்ணிற் பொலிவார் களும்வியப்ப வெள்ளென் பழத்திற் குயிருளி
வெங்க ராக்கொண் டதுமீட்கு மிக்க விறலிர் ருயெங்கள்
கண்ணிற் பொலிசெக் தமிழ்மணக்குங் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (உ)

767. சொல்லும் பொருளு நனிசிறப்பச் சுருங்கச் சொல்லன் முதலாய
தோட்டி யமைய வமங்கலமாஞ் சொற்கள் புணரா தறக்களைந்து
வெல்லுந் தகைய முரண்காட்டி விலக்கு விலக விதிதழுவி
விரும்பு மூல விலக்கியமே வேறு காதென் றுலகேத்த
வல்லும் பகலு மம்பலவ ரருடற் காய வரும்பணிசெய்
தருள்பெற் றுய்ந்த வடியார்த மருமை பெருமை பாராட்டிக்
கல்லுங் கரையக் கவிபாடுங் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (௩)

768. எண்ணி யிதுசெய் திடினிதனு லெய்தப் படுவ திஃதெய்தா
திரியப் படுவ திஃதுன்மை யெய்தப் படலாற் பயனின்றே
நண்ணி யவதை மறந்தொழிக நள்ளார் முனேமே லிப்பொழுது
நயந்து படர்ந்து பொருவமே மதே யாகு நகுவாகை
தண்ணி மயம்போற் புகழ்ப்போர்வை தாங்கற் காய கருமமிது
தப்பா தாற்றப் பொருள்வருமா யதவா துண் டாமென் றிவைமுதலாங்
கண்ணி வளவற் குரைத்தருள்செய் கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (௪)

769. நிலஞ்சார் தெய்வக் கற்பகமே நிமல ஞான வாரிதியே
நீடுஞ் சைவப் பெருவாழ்வே நிலவா நின்ற குணக்குன்றே
வலஞ்சார் பெருள வலரேறே மாறு வருட்சிந் தாமணியே
மதிப்பார் மதியு ளெழுஞ்சுடரே வாழ்த்து வார்தம் பெரும்பேறே
புலஞ்சார் பத்தி விளைநிலமே போக்கு வரவில் பூரணமே
புந்திக் கினிக்குஞ் சுவையமுதே போற்றி யினிமே லொருதாயர்
கலஞ்சார் முலைப்பா லருந்தாத கனிவாய் முத்தந் தருகவே
கனகக் குன்றை யனகசெழுங் கனிவாய் முத்தந் தருகவே. (௫)

வே று.

770. நூலாறு தேர்ந்தவ ருளூற்றுமக் குண்டங்க ளுக்கியழல் பாயமேய
நுவல்புலவ ருதாகுண் டத்திற் சுருப்பாய நோன்மைசான் மேகமெல்
சாலாறு பாயவலை யெறியுததி பாயத் தவாதருவி வரைகள் பாயத் [லாஞ்
தைடலார் குரிசிலார் மேற்சம்ப ராரிபொழி சரமெலாம் பாயமலரிற்
காலாறு பாயவம் மலர்மதுப் பாயக் கமழ்ந்தபட் டத்தினின் றுக் *
கற்பங் கமுத்தொடிய வானைபா யப்பொய்கை கருமேதி பாயமிக்குப்
பாலாறு காலாறு பாய்தொண்டை நன்னுட பவளவாய் முத்தமருளே
பாவுசி ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே.()

771. மேயபல வாரியர் குழாத்தினுட பூரியர் விராயதென வாயதூய - வெள்ளோதி மக்குழா நிலைகுலைய மேதிகால் விசைத்தெழீஇப் பாயவாங்க, ஞய வெடி வாளையேர் பருகிலாங் கலிமோத வதினுதிர் பழத்தின்வெருவி - யம்மேதி கரையேற வதுகண்ட வவ்வாளை யாயவா லாமைதீரத், தூயநெடு வானீர் துளைங் தாடி மீளிற் றொடக்குநீங் காமையெண்ணிச் - சோதிமதி மண்டலங் கீண்ட முத தாரையொடு துனையக் கிழக்கிறங்கும், பாயதட மலியுந் திருத்தொண்டை நன்னாட பவளவாய் முத்தமருளே - பரவுசீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (எ)

772. மிக்குவரு வெள்ளத் தெதிர்ந்தேறு பருவரால் வேகத் தருண்டு போதும் - வேழத்தைமுட்டுபு வெகுண்டுவெடி கொண்டுதாய் விண்ணத்துளைத் துவிரைவிற், புக்குமகிழ் மழவிளங் கன்றது தெறித்தெழீஇப் போயதென் கென் றுகாடும் - புந்திப் பெருங்காம தேனுவின் மடித்தலப் பொம்மல்குழை வெய்த முட்டத், திக்குநிக ழுப்பசுப் பொழிகின்ற பால்வரால் செய்தபுழை யூடிறங்கித்-திரைகரை யெறிந்துவரு குடிநைக்கு முன்புதான் செய்தபெய ரைப்புதுக்கும், பக்குகவி லருவளம் படுதொண்டை நன்னாட பவளவாய் முத்தமருளே - பரவுசீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (அ)

773. வீங்குகரு மேதிபிணர் படுதட மருப்பினுல் விடுபடாக் கட்வேலி வாய் - விடநீக்கி யுட்புகூஉ மென்கரும் பினைமென்று மென்றுதின் றிடவழி தரா, வாங்குநிகழ் சாறப் படப்பையை நிரப்பிமே லம்பையக் குடவைமோதி - யாறுநி றெற்போ ரடங்கச் சுமந்துசென் றலையாழி யிற்கலந்து, தேங்குதிடர் செய்துவரு மாற்றியர் தமிழ்வாய்ச் செறிந்துவர லாவினிமையாய்த் - திகழ்கின்ற தென்றெண்ணி யாடோர்க ளுண்டுமகிழ் தேக்கவெங் நாளுஞ்செயும், பாங்குபடு செல்வமென் பாற்றொண்டை நன்னாட பவளவாய் முத்தமருளே - பரவுசீ ருலகெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (கூ)

774. நீளைநேர் மாதரொடு காளைநேர் மைந்தர்க ணெருங்கிவிளை யாடு பாலி - கெடுவெள்ள முவராழி யுட்புக வனூர்குழீஇ நிறைமலர்கொய் பொழில் வாவிவாய், வாளைதா யெழவிடபம் வைகுதேத் தடைகிற மடையுடைந் தென்ன வழியு - மதுவெள்ள மும்புகக் களமர்கள் கருப்பாலை வழிசாற்று வெள்ளமு மெழீஇ,யாளைமோ-தும்படி புகக்கண்ட வறிஞரே மாழியு மிதன்கணுய-வான்ற நுண் ணறிவினு ராயினென் றேதவமை யாப்பெரு வளங்குலாவும் - பாளை வாய் கத்திமென் பாற்றொண்டை நன்னாட பவளவாய் முத்தமருளே - பரவுசீ ருலகெலாம்,விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (கo)

ரு.—முத்தப்பருவம் முற்றிற்று.

---

## சா.—வாரானைப்பருவம்.



775. மண்டல மதிக்குமணி யாத்தவுச் சிப்பூவும் வண்பட்ட முஞ்சுட் டியும் - வாகுவல யமுமதா ணியுமுதய வெயில்செய மகத்துவத் தொண்டர் சீர்த்தி, விண்டல மதிக்கவெழு செய்யவாய்ப் புகழெழுதல் விழையவெழு குழு

முறுவலும் - வெண்ணீறு முத்தமா லிகையுமிள நிலவுசெய வெய்யே மனத்தடத்துக், தண்டலமை யாதலர் சரோருகப் பதமேற் சதங்கையுந் தண்டையுமொளிதவாஞெகிழி யும்படீஇக் கலகல விரட்டவுயர் சைவநிலை யெங்குநிகழக், கொண்டலமர் கொடைகொண்ட கரதலச் சேவையார் குலசிகாமணி வருகவே - கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப்பிரான் வருகவே. (க)

776. நிலவுவிரி மதியுமொண் பனியுமுவ வாமெனினு நெஞ்சமெப் பொழுதுநெக்கு - நெக்குருகு வார்மதியு மத்தகையர் கட்பனியு நேரேயு வத்தல்செய்வ, கலவுசெம் மையுமணமு முடலமக் கிணங்கவெவர் சடையினவையுள்ளவேனும் - காமுறுவ வளிவிரா வுறமலர்வ வாயகோ கனகநறு மலரிரண்டு, முலவுதலி லன்புசெறி யுந்தலைப் பெயராமை யுள்ளவே றும்பெயர்த்தே - யுவகையெய் கட்குவர மறுசமய ருக்கெலா முட்குவர முறுவலித்துக், குலவுபுகழேபோர்வை யாக்கொண்ட சேவையார் குலசிகாமணி வருகவே - கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப்பிரான் வருகவே. (உ)

777. நீடுமின் பரிவையர் புணர்ப்பென்ம ரும்மைந்து நிகழ்கந்த முங்கெடுதலே - நிலவுமின் பென்மருங் குணமூன்று மொழிதலே நிரம்பலுறு மின்பென்மரு, நாடுமின் பிருவினைக் கேடென்மரும்மல நசித்தலே யின்பென்மரு - நவில்விக்கி ரகசித்த மின்பென்ம ருந்தோன்று ஞானமே யின்பென்மருமு, பாடுமின் புயிர்கெடுத லென்மரும் பகுதிமேற் கெடுதலே யின்பென்மரும் - படுசித்தி யின்பென்ம ரும்பிறரும் வாதம் படர்ந்துவரு திறனறவாங், கூடுசெந் தமிழருமை யறிபெருஞ் சேவையார் குலசிகாமணி வருகவே - கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப்பிரான் வருகவே. (ங)

778. செற்றசெங் கன்னல்படு தாளமுங் கந்திச் செழுஞ்சோலை படுதாளமுக் - திண்மருப் புக்கடாக் களிறுமறை யப்போய செஞ்சாலி படுதாளமுக், துற்றபைங் கதலியிற் படுதாள மும்பாலி துறைதொறு மெடுத்துவீசுஞ் - சுடர்மணிக ளுங்கரும நடவுவோர் வாருபு சுமந்துகொடு வந்துதூய- முற்றமெங் கணுநிறை தரக்குவித் திடல்கண்டு மோகமுற் றேறுடியாடி - முகந்திடறி யெற்றியொன் றுக்கிவிளை யாடுசிறு முண்டகத் தாள்பெயர்த்துக், கொற்றவன் றருமுதன்மை கொண்டுமிளிர் சேவையார் குலசிகாமணி வருகவே - கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான் வருகவே. (ச)

779. மாயா மலங்கரும மலமிவைக் கேதுவா மலம்வே ரொடுங்கழன்று- வலியதன் சத்திகெடு மாறுதிரு வருள்பதிய வந்துபதி செம்மலர்த்தா, ளாயாத வெம்மனமு மகலாத தாளடிய ரவிர்புதல்வர் தோழர்தாங்க - ளடைக்தமார்க் கம்பொலிய வெண்ணுந் திருத்தா ளராவுரி நிகர்த்ததூசு, காயாத காளித்த மலரொடு விரித்தவிக் கடையிற் பெயர்த்துவைத்துக் - கருங்கொண்டல் போல்வானுமிகையெனக்கடல்சூழ்ந்த காசினியுளாரையெல்லாங், கூயா தரிக்குங் குணந்தழுவு சேவையார் குலசிகாமணி வருகவே - கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப்பிரான் வருகவே. (ரு)

## வேறு.

780. நலத்தி னுயரும் பழையனூர் நாளும் பொலியு மவையகத்து
நலிவு புரிநீ லியைக்கண்டு நடுங்கா நின்ற வணிகனுக்கு
நிலத்தி லியணின் னுயிர்க்கிறுதி நேரு மாயி னியாமெல்லா
நெருப்பின் முழுகி யுயிர்துறப்போ நீயோ ருதியென் றுரைத்தபடி
வலத்தி னுயரச் சொற்றவறு வண்ண மெழுநாக் குழிமுழுகி
வடவா ரணியத் தாடொருவர் மலர்த்தா ளடைந்த வெழுபதின்மர்
குலத்தி லுதித்தா ரருண்மழைபெய் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௬)

781. அண்ட மளவும் வரைநாட்டி லரசர் கலக மாதலினு
லாங்காங் கொருவி வணிகரெலா மயனுட் டகம்புக் கினிதமர்ந்து
விண்ட கலகத் திறந்தெரிந்து மேய தத்த மிடம்புக்க
விதமுள் ளுணர்ந்து தஞ்சரணு மேவி யிருந்த மடக்கொடியை
மண்ட வழைத்துக் கொடுசென்றிம் மடமா தினைக்கொள் ளுதிரென்ன
மயங்கல் கண்டு தங்கையெனும் வாய்மை கொடுமைத் துனக்கேண்மை
கொண்ட குலத்தி லுதித்தருள்பெய் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக் குன்றைக் கோமான் வருக வருகவே. (௭)

782. விற்றங் கியலி பூதியினல் விளர்ப்புத் த[illegible] வழியியங்கி
வேறு வேறும் பரசமய வெய்ய கோடை முழுதொழியச்
சிற்றம் பலநா யகர்கருணைத் திரைவா ரிதியிற் படிந்துண்டு
திசையெங் கணுந்தோற் றிடமின்னித் தீய வொழுக்கர் தபக்கறுத்துக்
கற்றங் கமையார் மலத்துன்பங் கழல வரமா முழக்கெழுப்பிக்
கருதா நின்ற திருத்தொண்டர் காமர் வாய்ந்த சரித்திரமாங்
கொற்றம் பொலியு மழைபொழிந்த கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௮)

783. விள்ளு மலரா தனத்தானும் வெய்ய சுதரி சனத்தானும்
விரும்பு மதிகா ரக்கதையா விளம்பா நின்ற கோல்கொள்ள
நள்ளும் பிரம சரியரெலா நாடும் பலாசக் கோல்கொள்ள
நான்கா மாச்சி ரமத்தமைந்தார் நயந்து முக்கூழ்க் கோல்கொள்ளத்
தெள்ளும் வணிகர் குலமெல்லாந் தேற்றுந் துலாக்கோ லதுகொள்ளச்
செம்பொன் மோலி யரசரெலாஞ் செங்கோல் கொள்ளச் சிறுகோல்கைக்
கொள்ளுங் குலத்தி லுதித்தவருட் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௯)

784. எள்ளுந் திறத்துப் பரசமய ரேறு வருக தேறுதலி
லெங்க ளுணர்வின் கனுமதுரித் தினிக்கு மிருங்கோற் றேன்வருக
தெள்ளும் புலத்தர் பெறுகாம தேனு வருக வருகந்தர்
சிந்தா மணியைப் பொருட்படுத்தாச் செல்வச் சிந்தா மணிவருக

வுள்ளு மவருக் கெய்ப்பிடைவைப் பொத்துள் ளெழுமொள் ளொளிவருக
வொழியாப் பத்திக் கடல்வருகவுலவா தமைந்த சிவபோகங்
கொள்ளுஞ் சைவப் பயிர்வளர்க்குங் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௧0)

௬.—வாரானைப்பருவம் முற்றிற்று.

# எ.—அம்புலிப்பருவம்.



785. பாமேதி யோனெனப் படுதலால் வாய்விண்டு பதின பிரஞ்சுரும்பர்
பண்பாட வின்னறவு வீசுகமழ் நீர்மாலை பாங்குற வுவந்திடுதலா
லீடுசுடர் படுசெம்பு வொடுகூட லாற்கலை நிரம்பத்தழைத்திடுதலா[மையால்
னெடியவம் பரவையல தத்தோன்ற லாலென்று நிகழ்சாந்த மேயுடை
வாடுதலில் சேக்கிழா ருதலா னருமோர் வளந்தழுவ லாலெமையன்
மானுத தெரிந்துவரு கென்றழைத் தான்மழைபெய் வானங் கிழித்து
யாடுகோடி மாளிகைக் குன்றைநக ராளியுட னம்புலீயாடவாவே[மேற்போ
யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

786. மேயவம் போருக மெலாங்குவி கரத்தினை விராமனை யடங்கவளவா - வியன்சாலி யொடுபொலிய மகிழ்வையா லோரறவர் விழியின்வெளி வந்தொளிருவை, பாயபர மன்சடா டவியமரும் வரநதிப் பக்தமுனை நந்தமர்கரப் - பண்ணவனு மிகைபெனப் பல்லுயிரு மோம்பிடப் படுகருவி யாய்நின்றனை, நேயமிகு மிவையாதி யாலெங்கள் பெருமானை நிகரா திராயடுக்கு - நிலையெழு கொண்டமையி னுலகேழு மேயென நிரம்புபா வலர்புகழுதற், காயமணி மாளிகைக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௨)

787. இரவோ னெனத்திரிவை நீமகாப் பிரபுவென வெங்களை யன்பொலிகுவ - னிகழ்ச்சிசால் கள்வனை புவப்பைநீ யுவவாம லிவன்வெறுப் பானென்று, முரவோனெம் வள்ளலே கல்லோ னெடுத்தினி யுரைப்பதெவ னியல்லோனே - யுயர்வினு லெமன்வான வன்கா னுரைப்பா ருளக்குமொரு தானவப்பேர், பரவோன லாதவ னெனல்குறித் தல்லவோ பாதிகொண் டானின்னையெம் - பண்ணவனை முழுமையுங் கொண்டனன் காண்மணிப் பணியெனத் தோள்புனைந்த,வரவோ னுணர்ந்திடுதி குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே- யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௩)

788. சாறுசால் வீதித் திருத்தில்லை யம்பலந் தன்னிலெஞ் ஞான்று நின்று - தாண்டவ நவிற்றியுல குய்யச் செயும்பரம சற்குரவ னினிதுசெய்யும், பேறுமே வியவனுக் கிரகமுழு தும்பெற்ற பெரியோ னிவற்கு வானோர் - பேணுரா வன்பாங்கர் நிக்கிரக மேபெற்ற பேதைநீ மாற்றுயர்ந்து, வீறுசெம் பொன்னே டிரும்பொத்த போதினும் மேவொப் புறாமை மண்ணும் - விண்ணுமுணருங்கருணை நினையழைத் தஃதிந்த விதமோர்ந்து கொடியோடும்வா, ஞறுதோய் சூளிகைக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௪)

789. எம்மையினி தாள்பவன் செம்மைமதி யவனீ யியற்கையேர் செண்மை மதியோ - னெற்றைக்கு மிருதண்மை யுடையரோ பேறவுகொளு மியல்பினை னெங்களையன், வெம்மையுடை யவர்களொடு மதிதொறும் மதிதொறும் விரா யுறவு கொள்ளுவோனீ - வியக்குமொரு தன்மையோ னெங்கள்திரு பாழர்த்தி மெய்ம்மைபொரு கால்வளருவாய், முன்மையுல கறியவொரு காற்றேய்கு வாயிலை முயங்காதொர் காலொழிகுவாய் - மொழியுநீ யிலையோர்ந்து மாடவா வென்றது முழக்கருணை காணெந்நாளுறு, மம்மையனை யார்மருவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவ னுட னம்புலீ யாடவாவே. (ரு)

790. குறையுடைய பாம்பொன் றெதிர்த்துண் டுமிழ்ந்திடக் குலைகுலைந் துழல்வை யெங்கள் - கோமான் பொருங்கல்வி யாட்சியை யுணர்ந்துசெங் குரு மணிச் சூட்டுமோட்டு, நிறைவுகொழு துத்திப் பணைவிப் பாம்பொன்று நேர டைய மற்றுனைறு - நினைநின்ற தொருபரவை யிலகுவே பாரமென றென்னு னைத்தனையு மெண்ணேன், முறைமெதிறந்த சிறுநூக்கி னெழுபரவை யும்புக முடித்துநறிறுத்தானிவன் - மொழிபெங்க டம்பிரான் வல்லப முணர்ந்திலை கொன் முத்தமா ளிகைவானயார், நறைமணித் திடராய குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம் புலீ யாடவாவே. (உ)

791. செறிதமிழ்ச் சங்கத்து முதன்மையோ னன்பினைத் தினையென நவின்ற நூலிற் - செப்பிய விதிப்படிக் கரிகுழைத் தொழுதகட் செய்யவாய் வெண்ணகைநலார், முறிவற வணங்குசோ றெருவிதித லால்வளரு மொய்ம்பு பெற்றனையெனாறு - மொய்த்தவெரு விதித்தலத ருல்வளர்த ஞழவுத்தொழின் முயலிவன் காட்டுதொழிலே, மறிவரிய விக்கன்றி யன்றுணர்ந் தனையென்னின் வாரா திருப்பை கொல்லோ - மதியோ னெனும்பெயர் குறிப்புறா மற்கவிக மகன்வாதி வாக்கியாய, வறிவர்கழ கம்பரவு குன்றைநக ராளியுட னம்புலியாட வாவே-யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

792. பெருநாவ லோவெனு முழக்கார மென்பாற் பிறங்குபயிர் கொடி செடியெலாம்-பேறுங் கருக்கொள்ள நீயுப கரித்தலுட் பேறு திருந்தானலன், திருநாவ லூரர்சீ காழியார் கூறத் திருவாய் மலர்ந்த தொப்பச் - செயிர் கொணிர் கூடுநேறிப் பான்வாய் மலர்ந்தருளுன் செய்யுளினு முறவைத்திலா, னொருநாவ லோடுபெயர் பெறும்பொலச் சிறுமானை யுரகவில்புராணத்திறே - ரொப்பிலா வெங்கள்பெரு மாளட்டு மகிழிற் குயிர்க்குறுதி செய்வதாகு, மரு நாவ லோர்பரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசு பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (அ)

793. தலைமயிர் பறித்தமரை யிற்பா யுடுத்துக் தழைத்திரள்கை வைத்து முழலுஞ் - சமுக்கர்மத மாங்களங் கம்பரவ வீக்கியுயர் சைவநிலை யெங்குமாக்கு, நிலையுடைய தம்பிரா னின்களங் கம்போக்கி நிகழ்புனித மேயாக்குவா - னீடு மிதன் மேலுறுதி யென்னைகொ னினக்கின்று நேரளப் பரியசான்றோர், கலை

பலவு மோருருக் கொண்டனைய ரருணெக்கு காதலார் சிறக்கவுசினைக் - கடைக் கணித் தாடவா வென்றழைத் ததபெருங் கருணையே கங்கை யிறுமிக், கலை மருவு புனல்வளக் குன்றைநக ராளிபுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசு பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (கூ)

794. காதலொடு வாவென் றழைத்தவுடன் வந்திலான் கருதியதெ னென்று சற்றே-கறுக்கச் சிவத்தல்கூ டாதுநாண் பூண்டான் களங்கத் திறத்தி னென்று, போதலுற யாம்புகன் றேமினி முனித்திடிற் போக்குவே றில்லையா கும் - புன்மையா னிவனென்றோர் கவிகூறின் முக்கட் புராதனனு முனைவெறுப் பன், வீதலுற லேயன்றி வேறொன்று முள்ளதுகொல் விளைகுவ தனைத்துமோர் ந்து - மேயினென் மேயினே னென்றடையி னலமுண்டு மேலுலக வாழ்க்கை யோர்மிக், காதலுற விழைதருங் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## அ.—சிற்றிற்பருவம்.

795. வாருந் திருவீ தியினொருசார் வண்ணித் திலங்கள் கொடுமுயன்றில்
வகுக்குந் திறத்தே யறிவுசெலு மாண்பா னினது வரவுணரா
தாருமிருக்கை யெழாதிருந்தே மறிந்து தருக்கி யிருந்திலமா
லண்ண லஃதுட் கொண்டுபகை யமைபப் பாராட் டுதலழகோ
வோரும் புகழ்க்கற் பகத்தளிக ளொருங்கு மொய்ப்ப தெவனென்றே
யும்பர் கடுக்கி நிலைகுலைய வொருவேற் றுமைபு முணர்வரிதாச்
சேரும் பொழிற்றண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றைபருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

796. ஒழிக்குந் திறத்தி னருகந்த முறையாநின்ற பாழிகொலவ்
வுறுவ ரமருந் பள்ளிகொன்மற் றுள்ளா ராய பரசமயர்
பழிக்கும் படிவா ழிருக்கைகொல்யாம் பாங்கிற் புரியிச் சிறுவீடு
பதத்திற் சிதைத்தால் வருகின்ற பயன்புண் ணியமோ புகழ்கொல்லோ
சுழிக்குஞ் செலவிற் பாலிநதி சுரந்து பாய மாலியானைத்
தொண்கட யெடுப்பு மறையும்விதக் குவன்றி வார்ந்து யினைசெச்செல்
செழிக்கும் வயற்றண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (உ)

797. வெய்ய வமையும் பரசமய விருப்பஞ் சுமந்த திருவில்லார்
வினையைச் சிதைத்தி யவர்மாயை வீயச் சிதைத்தி யாணவமு
மையச்சதைத்தி யிவைசிதைத்தா லும் புகழ்புண் ணியமிரண்டு
நாளு நினக்கு மேன்மேலா நகையா மெங்கள் செயல்சிதைத்தல்
வையம் வியக்குஞ் செங்கரும்பும் வாழைக் குலையும் பசுங்கமுகும்
வயற்கு மிளநீ ரிலாங்கலிபு மகவா னவைக்கோ ரலங்காரஞ்

செய்ய வுயர்தண் டகாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

798. பொருந்து நிலத்தே ராலுழுதல் புகழாம் விதியு மதுவாகும்
பொருந்தா நிலங்கா லாலுழுதல் புகன்ற விரண்டு மொன்றுமோ
வருந்து மரிய திருவடியு மண்டு புழுதி யடையுநறு
மலர்தோய் பவைமற் றிதுதோய்தல் வழக்கோ கண்டார் சகிப்பாரோ
முருந்து முறுவன் மடமாதர் முயங்கும் பொழில்வாய்க் கருஞ்சுரும்பர்
மூரலா நின்ற பண்கேட்டு முகந்து கொடுக்கும் பொற்காசிற்
செருந்து மலர்தண் டகாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (ச)

799. உற்றார் சகியார் புனலாட்ட லுரியார் பலரு மடிக்கடியிவ் [திற்
வொல்லாப் புழுதி தோய்வெவலன் றுரைப்பார் தவஞ்செய் தருமருந்
பெற்றார் செவியோ ரினும்பதைப்பார் பிறங்கக் காணி லென்படுவார்
பேசா வருமை பாராட்டிப் பேணி யெடுப்பா ரையுஞ்சினப்பார்
கற்றா ரரிய நூல்பலவுங் கண்டார் விளங்க நூலினுரை
கரைந்தார் வரைந்து சிவனடியிற் கலந்தார் கடிந்து பரசமயஞ்
செற்றார் செறிதண் டகாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (ரு)

800. தாங்கும் வளவ னனபாயன் றன்கண் மணியா யவனமைச்சர்
தங்கள் சூளா மணியாயுத் தமச்சோ ழப்பல் லவனெனும்பே
ரோங்கும் படிகொள் விண்மணியா யுவக்கு மடியார் சரித்திரமுற்
றுரைசெய் தருள்சிந் தாமணியா யுயர்வு பூணி னிளம்பருவ
வாங்கும் பிறைநன் னுதலார்செய் வண்டல் சிதைக்க வேண்டுவதோ
வாழைக் குருத்து மதிதடுப்போய் மாரன் குடைக்கோர் காம்பாகித்
தேங்குந் திருத்தண் டகாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (சு)

801. ஏத மகல வளவன்முன மேற்று குடிக ளொருநாற்பத்
தெண்ணு யிரத்து மொருகுடியென் றியம்பே மபய னமாத்தியருட்
போத மருவு மொருவ னெனப் புகலேம் புராணஞ் செய்தாருட்
பொலியு மொருவ னெனகவிலேம் புகலின் மூவ ருளுமொருவ
னோத மகன்ற பரமனென நவிலி னடைவ தடையுமென
வன்று தெரிந்தே மெங்கள்செய னயவா திருக்குந் திறமென்னே
சீத வளத்தண் டகாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (எ)

802. பொன்னஞ் சிலம்பு புலம்படிமண் பொருந்தித் துகளையும் விழைவடையிற்
பொலியும் பற்ப துபநிடதம் புகறல் கேட்டு நீறுருவு
முன்னங் கொள்சிற் சிலர்றுதலின் முயங்கிப் படிந்த மண்டோய்ந்து
முருக்கத் துணிதல் கூடிடினம் மோக மவர்நீத் துய்வாரே

கன்னங் கரிய கடாப்பாய்ந்து காமர் பொய்கை நீர்கலக்கல்
கழித்தோட் டெடுக்க வராலெழுந்து கடுக மோதப் பலவுதிருந்
தென்னம் பழத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (அ)

803. மாறு படுமன் னவரெனினும் வளவன் கழற்கா ளொழினவர்வாழ்
மணிமா ளிகைகண் மிக்குயரு மாறு விடுப்பாய் மறையோர்முற்
கூறு படுநம் பரனடியார் குறிப்புள் ளுணர்ந்து கெடுவாறுங்
குறுக நிமிர்மா டங்கள்பல குயிற்றிக் கொடுத்துக் குடியமைப்பாய்
வேறு படுமா தியாம்வகுத்த வீட்டை விடுத்துச் செலின்வராலென்
வேழக் கரும்பின் சாறோடி விரிந்த கரம்பும் பாய்ந்துகுழை
சேறு படுதண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௯)

804. அலைக்கும் புனல்சூழ் பலத்தி லாடும் பெருமா னருள்பெற்று
லவன் செய் தொழிலோ ரைந்துண்டு வமைத்த தொழிலோ மேற்கோட
னிலைக்குங் கடையென் றொழித்தனையோ நீயா நிற்கு மனுக்கிரக
நீயே யதுசெய் யாவிடினெந் நிரப்பு நீக்கு பவரியாரே
மலைக்கும் பிறவிப் பிணிமருந்தே வாழ்த்து வார்சிந் தாமணியே
வயங்குஞ் சைவப் பெருவாழ்வே மாறாக் கருணை மாக்கடலே
சிலைக்குந் தமிழ்த்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க0)

அ.—சிற்றிற்பருவம் முற்றிற்று.

## ௯.—சிறுபறைப் பருவம்.



805. ஆயபர சமயக் கருங்கடா யானைக் கரிக்குருளை வாய்முழக்கு - மரும்புகழ்ச் சைவப் பசும்பயிர்க் குலகுசூ ழாழியுண் புயன்முழக்கும், பாயமிடி யாளருக் களவில்பொன் செறிசெய்த பண்டார வாய்திறந்து - பலவுங் கவர்ந்திடுமி னெனத்தெரித் திடுகொடைப் பயன்முரசி னெழுமுழக்கு, தேயமிகு வளவர் பெருமாற்காக வப்பாரி னோர்ந்ததன் படையெழுப்பு - நிலாம்பணை முழக்குமாக்குணின் மலர்க்கைகொடு நிகழ்பாலி வளனுணர்ந்து, தேயமுழு தும்பரவு துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவோண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (க)

806. ஓங்குமுனி வரரிருவர் கைகுவித் தாமுழக் குதவெழுப் பிக்களிக்க - வுலகமுழு தீன்றசிவ காமவல் லித்தா யுல்லாசமப் விடுததுநிற்கப், பாங்குபுனை செம்பொனம் பலநடன நவிலும் பரஞ்சோதி மதுவொழுககும் - பச்சைத துழாயண்ணன் மத்தள முழக்கினும் பரவும்ப ருவகை பூப்ப, வாங்குதிரை யாழ்பாலி வீசுசெம் மணியும்வெள் வயிரமுங் கரையிராவ - வண்பயிகர் மேயும்வளை கோட்டெருமை யதுகண்டு வாய்வெரீஇ யோடவெடுக்கும், தேங்குதிரு வம்பரவு துண்டீர வளநாட சிறுபறை முழக்கியருளே - தென்றலங் கன்றுலவு மன்றவோண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (உ)

807. புகழ்சரியை கிரியையை யனுட்டித்து வருகின்ற புண்ணியப் பேற்றினார்க்குப் - புலரியிற் சிவபிரான் றளியெழுஞ் சங்கமுற் போதரு முழக் காகவு, மிகழ்வில்சிவ யோகசா தனமரீஇ யம்முறை யியங்குதிற லாளருக்காங் - கெழுகின்ற சங்கபட கம்பேரி யாதியி னிசைப்பெரு முழக்காகவு, மகழ்கின்ற பாலியாற் றலையுழீஇக் கற்பக மலைத்தோட வதனடிக்க - ணவாய்கின்ற காமதே னுவை நோக்கி நின்று லமைந்ததிப் படமெனவொலி, திகழ்கின்ற செல்வ முயர் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (ரு)

808. ஆன்றசிவ புண்ணிய முழக்கமும் பற்பலவ ராயவடி யவர்தம் வரலா - றுகிய சரித்திர முழக்கமுந் தெய்வமண மகலாத தமிழ்முழக்கு, மேன் றபல வரமுழக் கமுமிணை யிலாதாய வினியதிரு வருண்முழக்கு - மெய்துதற் கரிதாஞ் சிவானுபோ கப்பே ரிரும்பெரு முழக்குமான, மான்றலைங் கமுகம் பொழிற்றலைத் தவிர்செய்ய மதுவசிறை தேத்தடைக்கண் - வான்பிறைக் கோடுதற் கவரின னெனக்கள வாவிகுா மோடை யெங்குங, தேன்றவழ வது விமுந் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (சா)

809. வில்லூரு மணிமோலி வானவர்பெரு மான்பொனடி விழாத மருவ லர்க்கும் - வெண்ணீறு கண்மணி புனைதைத் தெழுத்தறு வீணராஞ் சமய ருக்கும், மெல்லூரு மொண்சிவ மணங்கமழ்த லில்லா தியைந்தவத் தாமணிமுத லெனூற்கு கெய்தலம் பறைமுழக் கேயாக வெல்லொளி மழுக்குமேனிச், சொல் லூரு மெம்பிரான் பெருமதம் பொழிமண முழாங்கைமா லியானைதந்த - தோற் போர்வை போர்தகெனத் தன்றல்வர் துலவுவழ மேருறு தேமாந் சோலைமேற், செல்லூரு மேன்மையமை துண்டீர வளநாட சிறுபறை முழக்கியருளே-தென் றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (எ)

வே று.

810. பிதிருந் தாமரை யின்பா லளயிப் பிழிச்சுவை மதுவிரவிப்
பிறங்கிய புல்ல கண்ட நிமீஇச்சுவை பெருகண் டுங்கூட்டி
யெதிரும் பொருளில் பலாககனி மாங்கனி யிலைவா ழைக்கனிமு
னியையு முழுக்கனி முந்திரி கைக்கனி யிவ்விர தமுநாட்டி
யதிருங் கடலமிர் தமுமு னுறுத்தி யவாங்குழல் வீணையிசை
யத்தனை யும்புக வைத்துச் சிவமண மகலா தேகமழ
முதிரு மருட்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (அ)

811. அத்தி தருங்கவி யென்மரு நன்று வரைகுதி ரம்மட்டோ
வவாவிய புத்தி தருங்கவி யென்மரு மதமட் டோவின்னுஞ்
சித்தி தருங்கவி யென்மரு மெல்லாத் தீர்த்தங் களுமுறுமா
செய்யாச் சுத்தி தருங்கவி யென்மருஞ் செப்பிய வம்மட்டோ

பத்தி தருங்கவி யென்மரு மாகிப் பாரிற் புலவரெலாம்
பல்லா ரோதுபு பாராட் டக்கதி பற்றிய பல்லோர்க்கு
முத்தி தருங்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (எ)

812. கனிவி லெமைப்பொரு வார்களு நெஞ்சு கரைந்து கரைந்துருகக்
காமரு பத்தியும் வயிராக் கியமுங் கவினக் குடிகொள்ளத்
தனிவில் பொன்மேரு வெனக்கொடு திரிபுர தகனம் புரிபெருமான்
தயங்குபொ னம்பல நின்றுடல் லோரஞ் சலிசெய நடநவில
கனிவி லிடும்புகழ் மிகுசம் பந்தரு நாவுக் கிறையவரு
நாவலர் கோவுஞ் சிரகர கம்பித நன்கு புரிந்தருள
முனிவி றமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (அ)

813. கந்த புராணமெவ் வளவா யிற்றென நாடுறு மனபாய
னுகைமகிழ் பூப்ப மணிக்கா லாயிர நண்ணிய மண்டபவாய்
வந்து விராவு மிடத்தி னமர்ந்து வயங்குறு கைபேட்டின்
மாண்பார் கண்டங் கொண்டங் கெழுதுர் மாறு தேயெழுதப்
பிந்து வரைந்த வெழுத்திலு மொன்றும் பெயரா தக்கரமாம்
பெயர்ப்பொரு டேற்றுபு நிலைபெற யார்க்கும் பெட்கும் விருப்பமெழ
முந்து தமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (கூ)

814. தங்கு தமக்கெதிர் நின்றுள முருகத் தரிசித் திடுவளவன்
றன்செவி பரிசன ரஞ்செவி மறைபவர் தஞ்செவி யுங்கேட்க
வெங்கு மளாம்புக ழ்ச்சே வையர்கோன் யாமே முதனல்க
வெம்மடி யார்வர லாறு முழுக்க விளிக்கப் பாடினனாற்
பொங்கு விருப்பிற் கேட்குக வென்னப் பொன்னம் பலவாணர்
பொலிதிரு வாக்கடி ஞெகிழியி னொலியொடு பொற்ப வெழுப்பவருண்
முங்கு தமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (க௦)

கூ.—சிறுபறைப்பருவம் முற்றிற்று.

---

# க௦ - சிறுதேர்ப்பருவம்.

815. மருவாய் நறுந்தா தகித்தொங்கல் வளவர்கோ மகனுடனிவர்த்திரு கையு-மணிக்கவரி வாங்கிவீ சக்கற் பகப்பூ மகிழ்ந்து வானுடர் தூற்றப், பெருவாய் திறந்துபட கம்பேரி முதலாம் பெரும்பணை யெலாமுழங்கப் - பிறங்குமூ வாயிரவர் முதலியோர் மறையொலி பிறங்கத் தொடர்ந்து போதக், கருவா யுறு மற்றை யாருந் தலைக்குமேற் கைகுவித் தேத்தி மேவக் - கருதும் புராணமுடி விற்குஞ்ச ரத்தில கடத்திவர்த் தோங்குதில்லைத், தெருவா யுலாப்போது சேலை

யர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே-சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௧)

816. முறியுமல ரும்பொருவு திருமேனி யுமையம்மை மூவுல குபத்தழுவுபு - மூரிப் புனற்கம்பை யெம்பிரான் றிருமேனி முற்றுங் குழைத்தனன்றி, லறியும்வகை யறமெலாம் பொலியவிரு நாழிநெல் லளந்தப் பிரான்கொடுக்க - வன்னையமா தேவியேற் றேற்றகை யுயிர்த்தமக ளாதுயிர்த் தோர்களோட்ட, னெறியுஞல னும்பெருக வுளரெனல் குறித்தவர்கை நீட்டப் பணிந்து வாங்கி - நீடுங்கொழுக்கொடுந் மனையுதவி யானி நிரம்பப் பெருக்கு குடியுட், செறியுமொரு குடியாய சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோலெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௨)

817. வெருவப் பகைக்கடல் சுவற்றழ லரும்புகண் விரைத்தாத கித்தொடையலான் - வீசவீ சப்பற்று வாம்பரி யுகைத்துமிளிர் வெங்கடாக் களிறுகைத்து, முருவக் கதிர்த்தாள மாலைகால் யாத்திட்ட வொள்ளொளிய யானையூர்ந்து - மொருநம்பி யாரூரனைப்புகலி யாண்டகையை யொப்பா யினையதா அன்று, மருவப் பொலிந்த மட்டேருரின் முதலடி மரீஇயவிரு வருளொருவரு - மானுவாய் வையக மெடுத்தேத்த நிறைபுனல் வயங்குமூ ரணிசிகர்த்த, திருவப் பெருக்கினமை சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே-சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௩)

818. வசைதவிர் வினைத்திட்பம் வாய்ந்தாக வப்பாரின் மாற்றல ரெதிர்ந்த காலை - மழைமதக் களியானை வாம்பரி சயந்தனமுடன் மற்றுள வரூதினியெலா,மசைவில் பல்படைக்கலங் கொடுநூறி லாட்டுபுப லாறு வெழுந்த செய்த்தோ - மவ்வனிக வழனிமூழ்த் தோடிபுவ ராழிபுக் களவிறிடர் செய்யநோக்கி, யிசைமல ரலங்கலொடு வாகையுஞ் சூடியா ரெய்தப் புனைந்த பெருமா - னிரும்புலியை மேருமுடி யேற்றிப் பெருக்தே ரிணங்குற வுருட்டிநேமி, திசைதிசை யுருட்டச்செய் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே-சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௪)

819. சாதகப் பறவைக் கிரும்புயற் றுளியுஞ் சகோரத் திளக்குதிக்குஞ்-சந்திரன் விடுக்கரமு மம்புயத் திற்கேழு தாம்பரித் தேரிரவியு, மேதக வுறுந்தவத் திற்கருளு மடவருள் விளக்கத் திஙக்குமுவெ நு-மேவருங் கல்விக்கு நுண்ணறிவு நுண்ணறிவு வீக்கத் திஙக்கொழுந்த்கு, நோதக விலாதமைச் தாங்கருள் வழிச்செலீஇ நோய்ப்பிறவி போக்கவார்க்கு - நோற்றவர் புராணமில் லாதமைதராதா றுவன்றெம்மை யாண்டவெம்மான், நீதக மதித்திடாச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞேன் சிறுதே ருருட்டியருளே. (௫)

820. எய்குன்ற வார்சிலைப் பெருமா னுளத்துவகை யெய்தமறை யோர்கள் குழுமி - யியையவுய கரணமெல் லார்தகச் சேர்த்தினிய தென்னுமொரு தேத்தமர்ந்து, பொய்குன்ற யாகருண் டத்தழ லெழுப்பமேற் போயபூம் புகைவானெடு-பொலியுமுச் சைச்சிரவ மயிராவ தந்தான் பொறுத்தசிறமேவச்செயா,

மெய்குன்ற வந்தவர் தென்னெனக் கற்பகம் வெதும்பப் புரிந்து பின்னும் - விண்ணுடடங்கவ கண்ணு வரம்பையர் விழித்துணை பொருந்தி மைப்பச், செய் குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினேன் சிறுதே ருருட்டியருளே. (சு)

821. புழுங்குங் கதிர்ப்பரிதி யெழுமுறுக் குடைமுகப் புண்டரீகத் தடத் துப் - பொலிதரச் சூழ்ந்துசிறகின் றதரு விடபமலர் பொழிமது முழுக்க வீழ்ந் தே,யெழுங்குங் குமத்தோ ளிணைக்கழலை யார்கள்கன விரதமன் றென்றுநீங்க- வெறிதிரை கொளுங்காலை யளவிலோ கிமமாங்க ணெய்திப் படிந்து துளையா, வழுங்குர் தாத்தவாய் மேலெழுமுன் சீங்கியோ ராகமுழு வ நகலைந்தே-யருமை வெண் முகில்செய்ய தேன்பொழித லெனவியங் தாகாய ரோக்கிநிற்குஞ்,செழுங் குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினேன் சிறுதே ருருட்டியருளே. (எ)

822. வெங்கடிய வாணவ மலக்குறட் டிருளாளம் வெரீஇப் பதறியோட் டெடுக்கும் - வெண்ணீறு சாதனம் விழைந்தவர்த முககமல மேவுத் தொறுங்கு மலரும், பங்கமுற மேவ பரசமயர்வா யாம்பல்பல வந்துயர மைந்து குவியும் - பரவுவே தாகம புராணமெனு மங்கலப் பணை சிக் கெழுக்கொலிக்க, மங்கலுழ மாதரா ருடலி னெதிர்ந்தகுழைய நீதித் தடப்பாரில - ரவைகளையு மகலுற வகத் தினே மண்ணகத் தமையவெழு கின்றதாய, செங்கதி ரெனச்சொலச் சேவை யர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறு த்தினேன் சிறுதே ருருட்டியருளே. (அ)

823. சுவையமையு மோதகங் கனிபலவு மற்றவுந் தும்பிமுக வற்குநல் கித்-தொழுவமுது செய்தலா லூறென் பதிந்தகர் சூழ்நக ரிலும்புகாது, நவைய தடை யாதென்னி னச்சுமுதல் வலியவே நவிலவெண் டுவதினியெவ - னன்னு தற் றிருநீறு நிலவெறிக் கக்குழை நலங்கொண்மணி வெயிலெறிக்க, வவையகம் வியக்குமப் புலவருண் முக்கனி யருந்தமிழ்ச் சுவையளைத்த-மாராய்க் தெடுத் துப்பட்ல் செய்புண்முக மாவறிய வறிவித்த பெருநாவலர், சிவையுதவு சொற் கொண்ட சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோ லெடுத் தரசு செங்கோ னிறுத்தினேன் சிறுதே ருருட்டி யருளே. (கூ)

824. பண்புகெழு கின்சரித் திரவினிய பாவாற் பரப்பிய திருக்கைலாய- பரம்பரை யுமாபதி சிவன்புகழு மவன்முனோர் பைம்புகழு மவன்வழிவரு. நண்பு புனை தவர்புகழு மினிமேலும் வருபவர் நயப்புகழு நீடுவாழ - நாவிவித நீசெய்த மாபுரா ணத்தமரு நாயன்மார் பெருமைவாழ, விண்புகழு நால்வர்திரு வாய் மலர்ந் தருடிரா விடவேத மென்றும் வாழ - மெய்யன் பினின்று லயப்பணி முதற்புரி விருப்பமிக் கார்கள்வாழத், திண்புவி யெடுத்தேத்த சேவையர் குலா திபன் சிறுதே ருருட்டியருளே - சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினேன் சிறுதே ருருட்டி யருளே. (கo)

கo.—சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

உ

சேக்கிழார் பிள்ளைத்தமிழ்ச்

# *சிறப்புப்பாயிரம்.

இது
திருவாவடுதுறை ஆதீனத்து
அடியார்குழாத்தொருவரும், இந்நூலாசிரியரிடத்திற் கல்விபயின்றவருமாகிய
**ஆறுமுகச்சுவாமிகளியற்றியது.**

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

825. சீர்பூத்த பாலாற்றின் புனல்பரந்து காலாற்றிற் சேற லாலே, பார்பூத்த குடிதழைப்பப் பலவளனு மாங்காங்குப் பரவ வாக்கிக், கூர்பூத்த வறிவான்மிக் கோர்பலரைத் தழுவியெள்ளை கூறுங் கூற்றை, கார்பூத்த காடொறும்பார் திறவிவருந் தொண்டைவள நாட்டின் மாதோ. (க)

826. மன்னியசீர் மறையொலியுந் தமிழ்வேத மறையொலியும் வயங்குசீர்த்தி, துன்னியவா சகவொலியுந் தொண்டர்கள்செய் யரவொலியுந் துவன்றியெங்கு, முன்னியமற் றவர்க்குவே ளாண்குலத்தோ ருபசரிக்கு மொலியு மேன்மேன், மின்னியகா லத்தொறும்விண் ணுறிசெவிடுறச் செய்குன்றை வியனூர் தன்னில். (உ)

827. நிலந்தழைப்ப வெண்ணீற்று நெறிதழைப்ப வஞ்செழுத்து நிலவி மேன்மேல், வலந்தழைப்ப வுயர்சைவம் வலிதழைப்ப மறுசமயம் வறப்பத் தொண்டர், புலந்தழைப்ப வடியேம்விண் டலந்தழைப்ப நலந்தழைப்பப் பொலிவேளாளர், குலந்தழைப்பச் சேவையர்கள் குடிதழைப்பத் தமிழ்தழைப்பக் குறிப்பாருய்ய. (௩)

828. உலகுய்யத் திருத்தில்லை நடாவில்வார் திருவருளா லொருவர்வந்து, கலவுபுகழ்ப் பாலறு வாயர்முனந் தோன்றியருட் கார ணூர்த்தம், விலகிலருண் மொழித்தேவ னெனும்பிள்ளைத் திருநாமம் விளங்கிப் பின்பு, சுலவுசேக்கிழார் மரபு விளக்கலிற்சேக் கிழாரெனும்பேர் துலங்கப் பூண்டு. (௪)

829. காற்றுபகை யநபாய னமாத்தியராய்ப் பெருமுதன்மை கதிர்ப்பப் பெற்றுத், தோற்றபுறச் சமயமெலா மொருங்கவிய வென்றருளித் தொழுவார்க்கன்பு, தேற்றுதில்லை நடராசர் முதலருளத் திருத்தொண்டர் புராணம், மாற்றுமல மருந்தெனவாய் மலர்ந்தருளும் பெரும்புகழார் மலர்ப்பூந்தாளிசை. ()

* இது பழையபதிப்பைச்சார்ந்தது. [பதிப்பித்தகாலம், கி. பி. 1876].

830. தேக்குபுகழ்ச் சோணாட்டிற் றிரிசிரா மலையின்மிகு திருவ மோங் குக், தூக்குபுகழ் வேளாளர் குலாம்புதியிற் சிதம்பரவே லெங்கப் பன்னு, ளாக் குபுக ழெனத்தோன்றிப் பலகலையு மொருங்கேயாய்ந் தான்றோர் பல்லோர், வீக் குபுகழ் பரத்தகவி லாயபரம் பரையாகி விளங்கா நின்ற. (சு)

831. எங்கமுறை சையையடைந்தம் பலவாண தேவனடி யினிது சூட் டத், தங்கமுடி வாய்ந்துசிவ ஞானகலை யகங்கை செல்லித் தோற்றத் தாய்ந்து, கங்கைதரித் தருள்சடையோன் பலதலத்து மான்மியந்தன் கருத்தி னோர்ந்து, சங்கையில்செந் தமிழின்மொழி பெயர்த்தியற்றுங் கடப்பாட்டிற் றலைமை யானோன். (எ)

832. மின்னுமரு னடியன்றிக் கனவிலும்வே றெண்ணாத விரதம் பூண் டோ, னின்னுமெம்போ லியர்பலருக் கிலக்கியமு மிலக்கணமு மெளிது தந்தோ, னன்னவன்பேர் மீனாட்சி சுந்தரநா வலவனெனு வாய்ந்தோ ரியாரும், பன்னு புகழ் பூதலமு மீதலமும் பாதலமும் பரவ நின்றோன். (அ)

833. மற்றவர்மான் மியப்பெருமை யருமையுட னுளத்துணர்ந்து மகிழ் வோன்பாற், கற்றபய னின்றடைந்தோ மிம்மைமறு மைப்பயனுக் கதிர்க்கு மீதென், றுற்றருமை பெருமைதொண்டர் புராணவிரா சியமுழுது மொருங்கே தோன்றச், சொற்றபிள்ளைத் தமிழெனவோர் பாமாலை தொடுத்தனன்மெய்த் துறவோர் போற்ற. (கூ)

834. வென்றபுக ழினையார்மான் மியந்தமிழால் விரித்தருளு மேன்மை யாள, ரொன்றுபுகழ் மாயிலுளா ரிதயத்தற் குரியரென வுவந்து சான்றோர், குன்றுபொலி துறைசையிற்சுப் பிரமணிய குருமணியுண் ணயந்து நன்றென், றென்றுமுடி யடிகடொறுந் தளக்கவவை வியக்கவரங் கேற்றி னனே. (கஓ)

சிவமயம்.

# திருவாவடுதுறை

# ஸ்ரீ அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### விநாயகர்துதி.

'835. சீர்கொண்ட தகுதியிற் றிரிகுணமு நிறுவிய திறத்தடிக் கருமுடிகள் - திகழ்நடுச் செம்மணி யொளிப்பணி முடிச்சிதச் சிறுபிறை வயக்கிடுதலாற், றூர்கொண்ட மலர்செறி கிழக்குமேக் கொடுபகை தவிர்த்துதாய் காப்பணட்டுத்- தாப்பிசைப் பொருள்கோளின் மேவவமர் கயமுகத் தம்பிரான் றாள்பரசுவாம், பார்கொண்ட தன்பொதுப் பெயரெழுத் தின்றுறைகைப் படிகொண்ட வாவடு துறைப் - பதிகொண்டு துதிசிறப் புப்பெயரு மத்தொகைப் படிகொண்டு பரவுயிர்கள்பாற், கூர்கொண்ட வத்தொகை யதன்றொழி லறக்கருணை குலவியத் தொகையபாசம் - கூடா தளிக்குமம் பலவாண தேசிகன் கொழிதமிழ்க் கவி தழையவே.

ஆன்றோரிலக்கணமுகமாகக் காவற்கடவுளாவா ரிவரெனத் துணிந்து அவ்வழிச் சென்றமைகூறியது.

836. வழிபடுதே வுளுங்கொலைதீர் தெய்வதங்காப்புரைக்கவென வகுத்த வான்றோர், மொழியுணர்ந்து மவ்வழிச்சென் றிலர்முன்னோ ரிரும்புகழ்க்கோ முத்தியெங்கள், பொழிகருணைச் சின்மயனம் பலவாண தேசிகன்மேற் புகலப் புக்க, கழிமகிழ்யா மவ்வழிச்சென் றனஞ்சிறக்கு மிப்பிள்ளைக் கவியுந் தானே.

---

## க.—காப்புப்பருவம்.



### திருநந்திதேவர்.

837. பூமேவு வேதா கமப்பொரு ளடங்கலும் பொங்கொளிக் கைலைப் பிரான் - பொற்பத் தெருட்டத் தெருண்டுஞா னக்குரவு பூண்டுமா லயனாதி யோர், தாமேவு மணிமுடித் தலைவணக் குத்தொறுந் தாங்குந் தொறுந்தழும்பு - தாட்புற மகங்கொண்டு பொலிநந்தி நாயகன் றன்பெரும் புகழ்பரசுவாம்,

பாமேவு பேருலகர் கருமவளை விற்கருவி பற்றியோ ருழியெய்தலே - பாங்கென வுணர்த்திடத் தொழிலொன்று கோடலிற் பகருநான் முகமொழித்துத், தேமேவு முகமொன்று தழுவியா வடுதுறை செழிக்கவதில் வீற்றிருக்குஞ் - செல்வனைக் குரவர்தங் கோனையம் பலவாண தேவனைக் காக்கவென்றே. (க)

## சனற்குமாரமுனிவர். வேறு.

838. எங்கள் பொதியத் திருமுனிவற் கியைந்த பழங்காப் பியக்குடியோ
னென்னக் கருணைச் சயிலாதிக் கியைந்து பிரமன் மான்முதலோர்
தங்க ளுணர்விற் கப்பாலாய்த் தனித்தா ருணர்விற் குள்ளொளியாஞ்
சனற்கு மார முனிவர்பிரான் சரணும் புயங்க டலைக்கணிவா
மங்கள் வழியு மாமலர்த்தா ளகத்துப் போகட் டிறத்தேய்த்த
வதனை முடிக்கொண் டனனெனமண் ணறையா வாறு திருமுடிமேற்
றிங்க ளொழித்து வளர்செல்வத் திருவா வடுதண் டுறைமருவித்
திகழுங் குருவம் பலவாண தேவன் றனைக்காத் தருள்கவென்றே. (உ)

## சத்தியஞானதரிசனிகள். வேறு.

839. பொய்யாத வேதச் சிரப்பொருளை யாரும் புறங்காண வானநின்றும் - பொலிதரு தியாகமணி கொடுவந்த மன்னனும் புந்திகாண் கொளவவித்தை, தையாத சருவசங் கப்பரித் தியாகமணி தண்பெருங் கைலைநின்றுந் - தவா தெங்கு நோக்கக் கொணர்ந்தசத் தியஞான தரிசனிக டாள்பரசுவா, மெய்யாத மாமலங் கழுநீ ரெனற்கினிய வினியகழு நீருமாயை - யெழினிறா நித்தற் றெரிக்குங்கண் மணியெனற் கியைக்கண் மணியுநீக்கஞ், செய்யாத வினைநீறு செயுமெனற் கியையத் திருத்தும்வெண் ணீறுமேனி - திகழவா வடுதுறையின் மருவுமம் பலவாண தேவனைக் காக்கவென்றே. (ந)

## பரஞ்சோதிமாமுனிவர். வேறு.

840. அந்த மருவுஞ்சீர் முசுகுந்த னன்பிற் றந்த மணியேற்ற
வான்ற நகரங் களுடசிறந்த வாரு ரெனச்சத் தியஞானி
தந்த மணிகைக் கொண்டுயர்ந்த தகவோர் பல்லோ ருளுஞ்சிறந்த
தலைவ ளுய பரஞ்சோதி தாட்டா மரைக டலைக்கணிவா
மிந்த வுலகிற் பரிபாக மெய்தார் பேத மபேதமென
விசைத்துப் பிணங்கா தெய்துவித்தே யியல்பு விளக்க வுருக்கொண்டு
வந்த கருணைப் பெருஞ்செல்வன் வானூரேய்பொழில்சூழ் திருத்துறைசை
மருவுங் குருவம் பலவாண வள்ள றனைக்காத் தருளகவென்றே. (ச)

## மெய்கண்டசிவாசாரியர்.

841. போந்து புறத்துப் படரிருளைப் போகுங் கதிரும் பன்னிரண்டே
பொங்கி யகத்துப் படரிருளைப் போக்குங் கதிரும் பன்னிரண்டே
யேந்து புடவி யிடத்தெனப்பன் னிருசூத திருசெவ் வாய்மலர்ந்த
வினையில் வெண்ணெய் மெய்கண்டா னிணைத்தா மரைத்தா ளிறைசஞ்
வாய்ந்த வடபா லாலவனம் வயங்கு தென்பாற் குருந்தவன [வாம்
மருவு வாரு மருள்பெறுவாரக மன்னு கடிப்பா லரசவனத்
தாய்ந்த சிங்க நோக்கமென வமர்ந்து நோக்குங் குருசிங்க
மருள்கூர் திருவம் பலவாண வடிக டமைக்காத் தருள்கவென்றே.(ரு)

## அருணந்திசிவாசாரியர்.

842. போத நவின்ற பெருங்குரவன் பொற்பார் சித்தி கேட்டமகிழ்
பூத்தச் சிறப்புப் பாயிரமாப் பொலிய முதலா சிரியன்பேர்
சாத மினக்குத் தகுமென்று சார்த்தச் சிறந்த திருத்துறையூர்த்
தலைமை யாள னருணந்தி நாட்டா மரைக டலைக்கணிவா
நாத மகன்ற பெருநிலையை நாடு முயிர்கட் கருள்புரிந்து
நாளும் பசுத்து வந்தீர்ப்போ னாமென் றதனுக் கறிகுறியாச்
சீத மலியும் புனற்றடஞ்சூழ் திருவா வடுதண் டுறைமருவுஞ்
செல்வ னருளம் பலவாண தேவன் றனைக்காத் தருள்கவென்றே. (சு)

## மறைஞானசம்பந்தசிவாசாரியர். வேறு.

843. அரியபுக ழாசிரியர் பலருமுடை யவரே
யாயினும்பங் கயம்போலத் தலைமைதரு வழக்காற்
பிரியமிகு மறைஞான சம்பந்த னெனும்பேர்
பெற்றுவிளங் கியகடந்தைப் பெரியோனைத் தொழுவாங்
கரியமலப் பிணிகழலக் கழல்சூட்டி யடியேங்
கன்மனத்தும் வன்மனத்தர் கருதாத கனகப்
பரியமதிற் றுறைசையகத் துங்கழலா தமரம்
பலவாண தேசிகனைக் காத்தருள்க வென்றே. (எ)

## உமாபதிசிவாசாரியர்.

844. விரும்புசிவப் பிரகாசத் தவப்பிரகா சமிலா
வெய்யயாங் களுமடையச் சிவப்பிரகா சத்தோ
டரும்புபல நூலருளிச் செய்தவருங் குரவ
னண்ணலுமா பதிசிவனை யஞ்சலித்துத் துதிப்பாம்
பெரும்புலவர் பெரியோனென் றறிந்தேத்தப் பட்ட
பின்னருமம் பலவாணப் பெயர்புனைந்த கள்வன்
கரும்புகழு கெனவோங்கும் வயன்மலிதண் டுறைசைக்
கண்ணமரண் ணலைநாளுங் காத்தருள்க வென்றே. (அ)

## அருணமச்சிவாயர்.

845. இருண்மலமு மாயையுமற் றிருவினையுங் கழிந்தின்
பெய்திடவெய் திடுமுயிர்கட் கினிதருளுந் திறத்தா
லருணமச்சி வாயனெனக் காரணப்பேர் புனைந்த
வண்ணலடித் தாமரைக ளண்ணல்குறித் திடுவாம்
பொருண்மலிசெங் கொன்றையொடு வெள்ளெருக்கு மொப்பப்
பொறுத்தபழங் காரணத்தா னலவர்துதி யொடுமித்
தெருண்மலியா வெர்துதியுங் கொண்டுதுறை சையில்வாழ்
தேசிகனம் பலவாணன் றனைக்காக்க வென்றே. (க)

### சித்தர்சிவப்பிரகாசர்.

846. தம்மடியர்க் கிருக்குமிடம் வரையறுத்துத் தெரித்துத்
தமக்கிருக்கு மிடங்குறியா தெவ்விடத்தும் பயிலுஞ்
செம்மனத்தா ராயினுமெஞ் சித்தத்து மமர்ந்த
சித்தர்சிவப் பிரகாசர் சேவடிக டொழுவாஞ்
செம்மலரும் வெண்மலரு மெடுத்தடியர் தூற்றச்
சேவடிமேல் வீழ்தலிரு தேசிகரும் பலகா
லம்மவணங் குதல்பொருவக் கோகழிவீற் றிருக்கு
மம்பலவா ணனைநாள்க டொறுங்காக்க வென்றே. (௧௦)

### நமச்சிவாயமூர்த்திகண் முதலியபதினால்வர். வேறு.

847. புரவு மிகுவள் ளுவர்குறளுட் புணர்பத் திலுமுன் பொருளிதெனப்
புகலு மொன்றிற் குருமூர்த்தம் புகல்பத் திலுமுன் பொருளிதென்று
பரவு முலக முணர்ந்தேத்தப் படிவங் கொண்டு வெளிவந்த
பண்பார் நமச்சி வாயர்முதற் பதினால் வரையுந் தொழுதெழுவாங்
குரவு புனையா வருமிருகை கூப்பப் பொலியு மரசெனநால்
குறியா வுணர்ச்சி யாளருமுட் கொண்டு தெளிதற் கறிகுறியா
விரவு மரச வனத்தமர்ந்து விளங்கா நின்ற சின்மயனை
மிக்க புகழம் பலவாண மேலோன் றனைக்காத் தருள்கவென்றே. (௧௧)

க.—காப்புப்பருவம் முற்றிற்று.

## உ.—செங்கீரைப்பருவம்.



848. நீர்பூத்த தாமரை சமழ்ப்புறப் பொலியும்விழி நெடியமா லும்ப மன்னியர் - நின்னு சுமத்தின்வழி புரிதீக்கை பெற்றநா ணீக்கின னெனப்புழுங் குந், தார்பூத்த கூந்தற் புலிக்கோதை யதுபெறத் தண்ணீரி லசைவிலாது - தானின் றருந்தவஞ் செய்வள்களை யாவுடைத் தன்மையஞ மாதலாலப், பார் பூத்த காற்றமுட் குறியாம லுட்கொண்ட பருவமோமான் றேகுறித்துப்-பங்கயச் செங்கைதலை மேல்வைத் தெடுத்தொரு பதஞ்சுருட்டி முகமலர்ந்து, சீர்பூத்த பேரருட் டிருமேனி கொண்டவன் செங்கீரை யாடியருளே - சிற்பரன் றுறை சையம் பலவாண தேசிகன் செங்கீரை யாடியருளே. (௧)

849. முக்தைமறை யாவையு முணர்ந்தகாலன் முகமுனிவன் முன்னின்று தாளமொத்த - முருகுவிரி பைந்துழாய் மாலைதுயல் வருபுய முகுந்தனெடு முழவதிர்க்க, வந்தைதவி ரகாவு மூகூவு மேழிசை யமைத்தமிர்த தாரைவாக்க-வரகர வெனக்கணங் களிகொண்டு துளிகொண்ட வங்கணர்க ளாகியேத்த, இந்தைதவி ரிருமுனிவர் புடைநிற்க வேண்டுமென நினையாது நினைவையாயி - னின்பமுழு வுருவமொடு கோர்நிற்றி யாலென நிகழ்த்துதற் கஞ்சமாட்டேஞ், சிந்தைகவி கூரவருள் வடிவாகி நின்றவன் செங்கீரை யாடியருளே - சிற்பரன் றுறைசையம் பலவாண தேசிகன் செங்கீரை யாடியருளே. (௨)

850. மும்மையுல கும்புகழும் வேதா கமம்பகர் முழுக்குறி குணங் கடந்து - மொழிகின்ற பரநாத பரவிந்து வுங்கழன் முழுத்தபே ரொளியாகிய, நம்மையொரு மழவிளங் குழவியென வுட்கொடு நயந்துபா ராட்டுமறிவு - நன்று ளிருந்தும் தெனக்கருதி யையநீ நகையற்க நகைசெய்வையே, வெம்மையறி யாமையுடை யாரிவர்க ளென்றநீ யின்றுதான் கண்டனைகொலா - மென்றுநினை யாங்களு நகைத்திடுவ மன்பினர்த மெய்ப்பில்லைப் பாயமுதல்வா, செம்மை நெறி யாரையு நிறுத்தவெழு கருணையோய் செங்கீரை யாடியருளே - சிற்பரன் றுறைசையம் பலவாண தேசிகன் செங்கீரை யாடியருளே. (௩)

851. ஐயசற் றிதநிரு வுளஞ்செய்து கேட்கவய னரியையெண் ணுத யாங்க - ளமைதர நினைக்குவழி வழியடிமை யுண்மையென் றுவணம் வரைந்து தவுவோம், பொய்யமை தராதுபக விரவுநின் குற்றேவல் போற்றுவ மதாஅன்று துதியும் - புதிதுபுதி தாகப் புரிந்திடுவ மிவைகளும் போதா வெனத்தெரிந்து, வெய்யவுட லும்பொருளு மாவியு மடங்கா விருப்பிற் கொடுத்துவிடுவே - மேலு மினியென் செய்து மிதனின்மேற் செய்பவர்கள் விண்ணுமிலையிது மொழிதலுஞ், செய்யதன் றினிநீ செயத்தால தெங்கொலோ செங்கீரை யாடியருளே - சிற் பரன் றுறைசையம் பலவாண தேசிகன் செங்கீரை யாடியருளே. (௪)

852. காமரு மதிப்பிறையு மறிதிரைக் கங்கையுங் கங்காள மும்பிர யன்மால் - கழிதலைத் தொடையலுங் காகோ தரங்களுங் காடுபடு பொற்கொன் றையு, மாமரு விருஞ்சடையு மாகிய பெருஞ்சுமை யகன்றுயிர்ப் புற்றதிலனு - லையநின் றிருமுடி யசைத்திட வருத்தமின் றடைமிருக மோடுபரசுங் - தாமரு விலாமையாற் செங்கைகில மூன்றுந் தடுக்குமிடை யூறுமின்று, தாங்குகுஞ் சிதமின்மை யாலடி பதித்திடத் தடையவன் புடைவிராவித், தேமரு வுறங் காவி சூடிய புயாசலன் செங்கீரை யாடியருளே - சிற்பரன் றுறைசையம் பல வாண தேசிகன் செங்கீரை யாடியருளே. (௫)

வேறு.

853. பிறைபடு பற்குற ளுடனொளி யப்பிணர் பெறுவெரிந் மிசையொருதாள்
பெயர்வற ஊன்றபு மற்றொரு பொற்றாள் பேண வெடுத்தொளியே
நிறைதரு குஞ்சித மாக்குத லன்று நெடுங்கக னடக்தவ
நிலவொரு பாத மெடுத்து நிமிர்ந்து நிசழ்த்தலு மன்றபெருங்
கறையடி யானை யுரித்துரி மேனி கலப்புற மூடியொரு
காலை முடக்கி மடக்குத லன்று கரும்பிர சம்பொழிதேன்
றுறைதரு மாவடு தண்டுறை நாத னாடுக செங்கீரை
யறிவுரு வாகிய வம்பல வாண னாடுக செங்கீரை. (௬)

854. துங்கப் பெருமறை யந்தண ராதியர் சூழ்ந்தனர் கொண்டாடத்
தோலா வாகம முற்றுஞ் சென்னி துளக்கி யெழுந்தாடச்
சங்கத் தமிழெனு மொருதே வுவகை தழைத்துல கத்தாடத்
தளர்வுறு பரசம யப்பே யஞ்சுபு தலைசுற் றினவாடச்
சிங்கக் குருளை யெதிர்ப் டும் யானைத் திரளென வெங்கண்மலத்
திரள்குடி வாங்கி நினைக்கரு தாருட் சென்று பதிந்தாட
வங்கத் துறைகெழு மாவடு துறையிறை யாடுக செங்கீரை
யறிவுரு வாகிய வம்பல வாண னாடுக செங்கீரை. (௭)

855. துள்ளிய கர்தா மேவிய கருமை யொழித்தனை யப்பொழுதே
யுற்ற மலத்தின் கருமையும் யாங்க ளொழித்தனம் வெங்கொலைசாச்
வெள்ளிய கோட்டுக் கரியுரி போர்த்தல் விலக்கினை யப்பொழுதே
மேவிய மாயை போர்த்தலும் யாங்கள் விலக்கின மேவுபணப்
புள்ளிய வாளர வத்தொகை பூணுதல் போக்கினை யப்பொழுதே
பொங்கு வினைத்தொகை பூணுதல் யாமும் போக்கின மலர்கமவி
லள்ளிய வாவிய கோகழி நாயக னாடுக செங்கீரை
யறிவுரு வாகிய வம்பல வாண னாடுக செங்கீரை. (அ)

856. பாசம யத்தவர் வாயு னுழைந்து பயின்றிடு பிருதிவியே
பற்றிய தொண்டின் வழிப்படு சைவப் பைங்கூழ் பாய்புனலே
விரச வழுத்துநர் வெவ்வினை யடவி வெதுப்பி யெழுங்கனலே
மெய்யுற நோக்கினர் பாவ மெனுந்துய் விலக்க வுலாம்வளியே
வரசர ணத்தின் மனத்தை நிறுத்தி வயக்கி முயக்குறுவான்
மாதவ மாற்றுந ருள்ளந் தோறும் வளர்ந்து விராம்வெளியே
யரச வனத்தம ருங்குரு நாத னாடுக செங்கீரை
யறிவுரு வாகிய வம்பல வாண னாடுக செங்கீரை. (க)

வே று.

857. காவடுவொன் றசி னுமைவின் றிடு மொண்சில
காடியவெங்களை நீயயலென் றுநினைந்தாய்கொல்
லோவடுவொன்றிய காளிதமென்பது விண்டேனின்
னூடுறலென் றுத யாநிதியென் றெவ ரும்பேச
மாவடுவென் றகண் மாதரொரேந்திசழ் பைந்தூவி
வாலெகினம்பல வாவிதொறுங்களி கொண்டாடு
மாவடுதண்டுறை மேவுமிளங்கதிர் செங்கீரை
யாருளம்பல வாணசவுந்தர செங்கீரை. (கo)

உ.—செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

## ந.—தாலப்பருவம்.

---

858. நிருந்து முறுவ விளமாதர் முன்னியாடும் பெருந்தடத்து
மூழ்கிச் சிறகர் வெள்ளெகின முற்றும் பாசி போர்த்தெழுந்து
பொருந்துங் கரையி லிருந்துதறிப் பொலியும் பழைய நிறமடைந்து
பொலித லொருங்கு வெண்முகில்கள் புணரி தோய்ந்து கறுத்தெழுந்து
வருந்து திறத்தின் வரைமிவர்ந்து மன்னும் பயசநீர் தாவுதறி
வயங்கும் பழைய நிறமுறுதன் மானுங் கழனி யுடுத்துவளந்
திருந்து திருவா வடுதுறைவாழ் செல்வா தாலோ தாலேலோ
சித்திற் பொலியம் பலவாண தேவா தாலோ தாலேலோ. (க)

859. வான்றோ யடுக்கு மாளிகைமேல் வைகு மாமை மடநல்லார்
வயங்கு பவனக் குடங்கரைவெள் வாய்வாள் விழியி னுறநோக்கி
யூன்றோய் குலிசப் படைவேந்த னுடைய வமிர்த கடமென்று
மொருதக் கிருமா ளிகைத்தேவ ருபர்த்த வமிர்த கடமென்று
மான்றோய் நின்னை யடையாதா ரபேதம் பேத மெனப்பிணங்கு
மதுபோற் பிணங்கிப் பெயர்நின்னை யடைந்தார் போலத் தெளியும்வளத்
தேன்றோய் திருவா வடுதுறைவாழ் செல்வா தாலோ தாலேலோ
சித்திற் பொலியம் பலவாண தேவா தாலோ தாலேலோ. (௨)

860. ஓங்கு நினது திருமுன்ன ருயர்த்த காவிக் கொடிமதன
னுயர்த்த மீனந் தனக்கினமா யுள்ள வனைத்துங் கீழ்ப்படுத்தி
வீங்கு மமரர் நாட்டினுக்கும் விடுத்த நி[illegible]து திருமுகம்போல்
வேந்தன் சுதன்மை கிழித்தெழுந்து மேவ விரைவி னுண்டளப்பா
னுங்கு நோக்கி நடுநடுங்கி யந்தோ சாரு வாகநா
லறைந்தா மரசன் வினவிலெவ னறைவா மெனவுட் டுயரமிகுந்
தேங்குந் திருவா வடுதுறைவாழ் செல்வா தாலோ தாலேலோ
சித்திற் பொலியம் பலவாண தேவா தாலோ தாலேலோ. (௩)

861. கூருங் கருணை நின்காவிக் கொடிமீப் போய்க்கற் பகக்கிளையிற்
கூட நறுஞ்செந் தளிர்கொய்வான் குறித்த தேவ குருவாங்கண்
யாருங் குறுக வடைந்த வன்மற் றிதனை மயங்கித் தீண்டுதலு
மின்ன தசைய வெழுங்காற்றி னிணர்த்துப் பாங்கர் நின்றசைந்து
தேருங் கவுளி னுறப்புடைத்துச் சிந்தை வெருவி மெய்ந்நடுங்கித்
தெளியா வனையா னோட்டெடுப்பச் செய்யா நின்ற திருவரசு
சேருந் திருவா வடுதுறைவாழ் செல்வா தாலோ தாலேலோ
சித்திற் பொலியம் பலவாண தேவா தாலோ தாலேலோ. (௪)

862. அழிக்கு நினது பழம்பகையு ளாய்ந்து வடிவம் பலதாங்கி
யடுத்த கருவி யொடுமதவே ளமைந்து நிற்கு நிலையென்னக்
கொழிக்குங் கரிய காஞ்சிகளுங் கொடியால் வளைந்த பலகரும்புங்
கூவா நின்ற மாங்குயிலுங் குலவு மாந்தக் கிள்ளைகளும்
விழிக்குங் கமல முதன்மலரும் விரிந்த கமுகம் பாளைகளு
மீன மெழுந்து பாய்தலுமாய் விளங்கா நின்ற கருங்கழனி
செழிக்குந் திருவா வடுதுறைவாழ் செல்வா தாலோ தாலேலோ
சித்திற் பொலியம் பலவாண தேவா தாலோ தாலேலோ. (௫)

வேறு.

863. உரைதரு தன்மையில் செல்வ மயக்க முறாது பிழைத்தவரு
மொள்ளிய வேல்விழி மங்கையர் கொங்கை யுவத்த லொழிந்தவரும்
கரையரு கல்வி முயன்று பயின்ற களிப்பி னகன்றவருங்
காமரு சைவ மலாத மதங்கள் கலத்தல் கழிந்தவரு

மிரைதரு கின்ற தருக்க மகம்பர மென்ப திரித்தவரு
மென்று நமக்கரு ளுங்கொ லெனப்புடை யெண்ணிலர் சூழ்ந்தேத்தத்
தரையில் விளங்கும் பேரரு ளாளா தாலோ தாலேலோ
தண்டுறை சைப்பதி யம்பல வாண தாலோ தாலேலோ. (சு)

864. முளைமதி நாளும் வளர்ந்திருள் சீத்தலின் முன்னு பெருங்கருணை
மொய்த்தப லுயிர்க ளிடத்தும் வளர்ந்து முருக்க மலக்கருளை
விளைகதிர் ஞாயி றெனச்சுடர் தோற்றி வெளிப்படு மேன்மையனே
மேவிய கேவல நிலைமலர் பைந்தரு விட்டக லாத்தழலும்
வளைதரு சகல நிலைக்கட் கற்பொலி வற்றழ லுஞ்சுத்தம்
வாய்த்த நிலைக்க ணயத்தழ லும்பொர மற்றணி வயங்கிடுவோய்
தளையவிழ் செங்குவ ளைத்தொடை யாளா தாலோ தாலேலோ
தண்டுறை சைப்பதி யம்பல வாண தாலோ தாலேலோ. (எ)

865. நின்னை யிளங்குழ விப்பரு வத்து நிகழ்ச்சி யுறத்துதிசெய்
நீர்மையி னெங்களை யையுற லைய நிலாவிய செங்காட்டின்
முன்னை யடைந்தது போலடை வாயெனின் முன்னிய தெய்தாய்நீ
முற்றிய வெங்களை யேநனி நல்குது மொழிவது மொன்றுளதாற்
பின்னை யெனுதுரை செய்குது நின்னைப் பெட்பொடு பாராட்டும்
பெற்றி யுணர்ந்தனை மற்றொரு ரிடத்துப் பெற்றிலெ னடையற்க
தன்னை யிழப்பின் விரைந்தருள் குரவா தாலோ தாலேலோ
தண்டுறை சைப்பதி யம்பல வாண தாலோ தாலேலோ. (அ)

866. புண்ணிய வேத முடிப்பொரு ளெளிப் புகறலி னிசரிலதாய்ப்
பொங்கொளி வெண்குடை நீழலின் வைகப் புவன நடாத்துதலி
னெண்ணிய வெங்களை வாங்கி யுனைத்தந் திடுதலி னங்களுயி
ரென்று நிலத்துணர் வென்புனல் பாய்த்தி யிறு தழு பேரின்ப
நண்ணிய போகம் விளைத்தலி னொத்தனை நால்வரு மென்பதலா
னருவரு ளுதி யொழிந்தொளி நுண்மை நலந்தெளி யேமெளியேந்
தண்ணிய மேலவர் கண்ணிய முதல்வா தாலோ தாலேலோ
தண்டுறை சைப்பதி யம்பல வாண தாலோ தாலேலோ. (கூ)

867. நகைதிக ழாகம வன்றொடர் பூட்டி நலங்கிளர் மாமறையே
நாடிய தொட்டி லெனச்செறி வித்து நவின்றப லுபநிடத
வகையணை மீமிசை வைகுறும் யாமிம் மடவர்செய் தொட்டிலினும்
வைகுவ தோவென் றெண்ணலை யெண்ணிடின் வையை யடைத்திடுநாண்
முகைசெறி யோர்தரு நிழலினும் வைகினை முதுமறை யாதிகளு
முற்றிய வோவவ ணென்றிடின் யாது மொழிந்திடு வாயளவாத்
தகைபடு சுகுணமெய்ஞ் ஞான விநோதா தாலோ தாலேலோ
தண்டுறை சைப்பதி யம்பல வாண தாலோ தாலேலோ. (க0)

க.—தாலப்பருவம் முற்றிற்று.

# ச.—சப்பாணிப்பருவம்.



868. உரைசெயெப் புவனத்தி னுங்கைப் பரச்சமை யொழித்தவர்க டக்கவேலை - யொன்றினி தியற்றுதற் கென்னு ரதன்றியு முரைக்குமுன் செயவும்வல்லார், கரைசெயிது நிற்கமழு மானெடுஞ் சூலங் கபாலம்வெக் தழமருகன் - காணுமிவை மற்றமை கழித்தலி னுடம்படுதல் கடன்மையே கன்றுமென்னில், விரைசெய்மலர் செற்றுபொழில் சுற்றும நுரையில்விறகு வெட்டிமண் வெட்டியங்கம் - வெட்டிப் பயிற்றவங் கைத்தலங் கொடுகவில வேண்டுமென் போமென்செய்வாய், தரைசெய்பப நுய்வந்த மெய்ஞ்ஞான பாற்கரன் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்த் துறைசையம் பலவாண தேசிகன் சப்பாணி கொட்டியருளே. (க)

869. புண்ணிய மலிர்தகின் றிருவார்த்தை யென்னப் பொலிர்தபேராகமத்திற்-போற்றுபெரு முடைவயிற் சமயமும் விசேடமும் பொற்பப் புரிந்துபின்ன, ரண்ணிய சிரதகின்மேற் றங்கிமூல முதலாய வத்தவடி வங்களாறு - மமைதரச் சோதனை புரிந்தபின் விரும்பியே யபிடேக மாதிகொண்டு, கண்ணிய நறுந்தா மரைத்திரு வடித்தலங் கருதுமச் சென்னியேறக் - கண்டபின் யாவருங் காணரீ றுதயியெங் கைம்மீது மேற மிளிரக், தண்ணிய மலர்க்கைகொடு ஞானவடி வாயிநேர் சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்த் துறைசையம் பலவாணதேசிகன் சப்பாணி கொட்டியருளே. (உ)

870. கின்னையொப் பில்லாத சின்மய னெனக்கலை நிரம்புபா டியமுனிவனு - நெடியசிவ ஞானமுனி யாதுயலார்த் தேத்துதி நிகழ்த்தலிவ் வாறதென்றே, யன்னையொப் பாய்கச்ச யப்பமுனி யானவர் றமிழ்த்தன மினித்துதித்தற் - கஞ்சுறு மெங்கள்செய லெற்றுக வெங்களி னகப்படா தகல்வையலைநீ, பின்னைமற் றுன்றென்னி யகலகில வாயினிற் பெரிதுமகிழ் செய்தல்பாட்டே - பேணுகென வன்றொண்டர் பாற்பேசி னுவலாவ பேசெனி னெவன் பேசுவாய், தன்னையொப் பாய்கருணை யுருவாய சின்மயன சப்பாணி கொட்டியருளே-தண்டமிழ்த் துறைசையம் பலவாண தேசிகன் சப்பாணி கொட்டியருளே. (௩)

871. தூயதிரு வாதவூ ரடிகளின் றுங்கோவை சொற்றிடுத லின்றுகன்று - சூழுமொரு மூர்த்தியின் றுவகைமுன் கைசூளை சொரிதரத் தேய்பதின்று,மேயவொரு கண்ணப்ப ரின்றுங்க ணப்புவான் விழியிடந் திடுதலின்று- மெய்க்குறிப் புத்தொண்ட ரினுமுத்த மாங்கங்கள் மீதுமோ துதலுமின்று, பாயதிரி புரநீறு பட்டமையை மாமேரு பற்றிவாங் குதலுமாயப் - பகழிகோடலுமில்லை சமயமிது போதுமோர் படைவிது கருவையார்ந்து, தாயனைய சிற்பரன் றுமறை மலர்க்கைகொடு சப்பாணி கொட்டியருளே-தண்டமிழ்த் துறைசையம் பலவாண தேசிகன் சப்பாணி கொட்டியருளே. (௪)

872. எள்ளருங் கைலாய வரைவிற் றிருந்தகா ளிய்யனம் பாராட்டுதற் - கேற்புடைய வடிவமன் றென்றுமை விடுத்தன மிருந்தவர்க ளுலவரேத்த, விள்ளருந் தனிராலக் கண்ணிழலு மொருகுத்த மெண்ணிழலு மொருவரேத்த-வீற்றினிதிருந்தகாள் சிலவன்றி யிலையென விடுத்தனம் பல்லோர்தொழ, வுள்ளரும்

பேரருளி னிவ்விடத் துறைபுரா னூழியினு மேலுமேலு - முள்ளவென வோர்க் திது துணிந்தன மகிழ்ச்சியெளி யோங்கட்கு மேன்மேலுறத், தள்ளருஞ் சுத்த மேற் சித்தாந்த சைவமணி சப்பாணி கொட்டியருளே - தண்டமிழ்த் துறைசை யம் பலவாண தேசிகன் சப்பாணி கொட்டியருளே. (ரு)

வே று.

873. விண்டல ருக்கிற மின்றி யெழுந்து விளங்குறு தானவனை
வெய்யவ னாகிய தங்கொழு நன்புடை மேவு தொறும்பற்றித்
தண்ட லிலாதிடி செய்து பொடித்துத் தாமரை மலரள்ளித்
தானெறி தரனே ராமென வெள்ளிய தண்ணிய நீறள்ளி
யண்டல்செய் தொண்டர் தமக்கருள் கையா லருணோ தயமெழுவா
யறுசிறு பொழுது மெருத்துரி போர்த்தி யமைந்தவள் வார்முரசக்
கொண்டன் முழங்குக் கோகழி யூரன் கொட்டுக சப்பாணி
குரவர் சிகாமணி யம்பல வாணன் கொட்டுக சப்பாணி. (சு)

874. பாலம் பொலிதரு செங்க ணநங்கன் படரா னமர்புரியும்
பான்மை குறித்தென வோவி யெழுந்தருள் பண்ணவ னின்னும
ஞாலம் பொலிதரு குரவர்கள் யாவரு நன்கு நவிற்றலலா
னூடி வரைந்து விடுத்திடு மாற்ற மமக்கிலை யென்றயரச்
சீலம் பொலிதரு பக்குவ ரஞ்செவி செப்பி விடுத்தலொடுந்
திசைதிசை செல்ல வரைந்தும் விடுத்திடல் செய்யு மலர்க்கையினாற்
கோலம் பொலிதரு கோகழி யூரன் கொட்டுக சப்பாணி
குரவர் சிகாமணி யம்பல வாணன் கொட்டுக சப்பாணி. (எ)

875. நீடிய வன்பு நிகழ்த்திடு தொண்டர் நெருங்கி வணங்குதொறு
நிறைதரு திருவருள் பொங்குற நோக்குபு நிலவுவெ ணகைசெய்து
நாடிய வன்னர் பசிப்பிணி யும்படர் நல்கு முடற்பிணியு
நாளும் விலக்க லிலாது பவம்புக நாட்டு மலப்பிணியு
மோடி யவிந்திட வுண்கல சேடம துதவு திருக்கையினா
லுறுவிடை யின்மையி னுமுறு வாமென வுன்னுபு வானிடபங்
கூடிய மதில்சூழ் கோகழி யூரன் கொட்டுக சப்பாணி
குரவர் சிகாமணி யம்பல வாணன் கொட்டுக சப்பாணி. (அ)

876. பொருவாய் தரினு மிலாதவ னேனும் போற்றி வளர்த்தமுனைப்
பொய்யில் பழக்கம் விடுத்தில னிங்குப் போந்து மனப்புகல
வருவாய் மையுக லொழுக்க விழுப்பமு மொள்ளறி வுங்குணனு
முண்மையு மோருபு சுத்தி குலத்திற் கொருகதிர் நீயென்று
திருவாய் மலருபு குறுகை கொண்டொளி திகழ்சுப் பிரமணிய
தேவனை முதுகுதை வருமலர் புரையுஞ் செங்கையி னுன்மணிசால்
குருவாய் மாடக் கோகழி யூரன் கொட்டுக சப்பாணி
குரவர் சிகாமணி யம்பல வாணன் கொட்டுக சப்பாணி. (கூ)

877. சேர்த்தறி யாசங் கைம்மல ரென்றன் றிருவாய் மலருதியேற்
றெளியா யாங்க டெளிந்திடு மாறு சிறப்ப நினைப்பூசை
யார்த்துமு னியினி தாற்றிய துன்பே யன்று குவித்தனையா
லன்ன தயர்த்தனை கொல்லோ வின்று மப்பரி சேகினையா
வோர்ந்து முணர்ச்சி யிலாப்பர சமய ருரைத்திடு வார்த்தைகளு
ளொன்றும் பொருளல வென்றுகை தட்டுத லொப்ப வுவந்தறிவு
சூர்ந்தவர் வாழுங் கோகழி நாதன் கொட்டுக சப்பாணி
குரவர் சிகாமணி யம்பல வாணன் கொட்டுக சப்பாணி. (௧0)

௪.—சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# ரு.—முத்தப்பருவம்.



878. கருகு மூல மலத்தினுயிர் கலப்புற் றதுவே யகப்பந்தங்
கவற்று மாயை கன்மமொடு கலந்த பந்த மகப்புறமாம்
பெருகு புறமாந் தனுகரணம் பெற்ற பந்தம் புறப்புறமாம்
பிறங்கு புவன போகத்திற் பிணைந்த பந்த மெனவிரித்தே
யுருகு மடியார்க் கிரங்கியவை யொழியு மாறு மிப்பரிசே
யுதிக்கு மாறு முண்மையிலொன் றுபதே சிக்குந் திருவாயான்
முருகு மலியும் பொழிற்றுறைசை முன்னோன் முத்தந் தருகவே
முத்தன் குருவம் பலவாண முதல்வன் முத்தந் தருகவே. (௧)

879. தங்கு பருவ மரம்பாகஞ் சத்தி பதிதல் வினையொப்புச்
சார்ந்து மலக்கட் டற்றுயிர்சுத் தத்திற் றசஞ்செய் தத்துவிதத்
தெங்கு நிறைகம் மொடுங்கலத்த லிதுவே யகச்சம் பந்தமரு
ளிடத்து நிற்ற லகப்புறமவ் விலகு மருளி னுபகாரம்
பொங்கு மருவார் தரக்காண்டல் புறமாம் பிரம மென்றல்புறப்
புறமா மிவற்றுண் முன்னையதே பொலியா நின்ற தென்றதனுண்
முங்கும் வகைசெய் தருந்துறைசை முன்னோன் முத்தந் தருகவே
முத்தன் குருவம் பலவாண முதல்வன் முத்தந் தருகவே. (உ)

880. நாடு நிலமுன் னிருபத்து நான்கு நாளம் வித்தையெட்டு
நறிய விதழ்க ளெட்டு காலெட் டாய கேசரங்க
ணீடு மீசர் சதாசிவரே நிகழுஞ் சத்தி கேசரத்து
ணிலவும் பொகுட்டு வடிவுசிவ நிலைய வனைய பொகுட்டகத்துட்
கூடு மைம்பத் தொருபீசங் குலாய விதய பங்கயத்திற்
குறிக்கு கர்த்தா ணிலையென்று கொண்டா டெங்கட் கருள்வாயான்
மூடும் பொழில்சால் வளத்துறைசை முன்னோன் முத்தந் தருகவே
முத்தன் குருவம் பலவாண முதல்வன் முத்தந் தருகவே. (௩)

881. உற்ற விதய பங்கயத்தி லோரைந் தெழுத்தா லையவடிவி
னுனைக்கொல் லாமை முதலெண்பூ வுறவம் மறவா லருச்சித்தும்
பொற்ற வுந்தித் தலத்தழலைப் பொலிய வெழுப்பி விந்துவகம்
புணராச் சியத்தை யிருநாடி பொய்தீர் தாக்கொண் டோமித்துஞ்
செற்ற புருவ நடுச்சிவய திகழு மூன்று பதப்பொருளாந்
திறமை நோக்கி யதனாலே சிவோக மேபா வனைசெய்ய
முற்ற வுணர்ந்தார்க் கருடுறைசை முன்னோன் முத்தந் தருகவே
முத்தன் குருவம் பலவாண முதல்வன் முத்தந் தருகவே. (ச)

882. நகைசெ யுயிர்க ணசிக்குமெனி னசித்த லாலொன் றுவவில்லை
நசியா வென்னி லிரண்டுபட்டு நம்மை யொன்றா வனவல்ல
வுகைசெ யருத்தா பத்தியா லுப்புத் தனது கண்டிப்பை
யொழிந்து புனலி னொன்றுமா றெப்பத் தமது சகசமலப்
பகைசெ யாற்றல் கெட்டொழியப் பண்பி னொன்றி நங்கழற்குப்
பகருஞ் சேட மாமென்று பரிவுற் றெங்கட் கருள்வாயான்
முகைசெய் பொழில்சூழ் தருதுறைசை முன்னோன் முத்தந் தருகவே
முத்தன் குருவம் பலவாண முதல்வன் முத்தந் தருகவே. (ரு)

வேறு.

883. உண்ணீர்மை யுயிருணர்ந் துய்யவே தாகம மொருங்கெடுத் துட்பு கன்று - மோலமென் றபயமிடு நெடியமான் முதலமர ருய்யநஞ் சயிர்தமுண் டும், புண்ணீர்மை யாயசு ரழுந்துலக முய்யமுப் புரநீறு படநகைத்தும் - புல வரொடுவழுதியு மயக்கந் தெளிந்துயப் பொருண்மரபு முழுதுரைத்து, மெண் ணீர்மை யார்க்குமதி மலிகொங்கு தேசமுய் யியற்றமிழ்க் கவிபாடியு - மிரும் புகழ் படைத்தநின் செய்பவா யாங்களுய வித சயிற் பழியாகுமோ, தெண்ணி ருடைப்பொன்னி சூழுமா வடுதுறைச் செல்வன்முத் தந்தருகவே - சின்மய னருட்பெருங் குரவனம் பலவாண தேவன்முத் தந்தருகவே. (சா)

884. மிக்கதுவர் வாய்ந்தகம் மிதழ்முன் பொருத்திப்பின் மேவக் குவிக்கு மாறோர் - வேலைவந் ததுகொலென நின்றிரு வுளங்கொளேல விமலநீ கொள்வா யெனிற், றெக்கநின் பாதுகாம மாமைந் தெழுததிலுஞ் சுடருஞ் சிறப்புநாமத்- தொகையைந் தெழுத்தினு மா ரைந்தெழுத் தென்னவில் சூக்குமத் தினுநினடி யார்க், கொக்கமுத லயலா மிரண்டா மெழுத்தினை யொழித்தருளு வாய்கொலோ சற்-றுரைபொழித் தருள்வதெனின் முற்றுமுடி யாதிதனை யோர்ந்துபல மாளி கைதொறுஞ், செக்கர்மணி யிருள்பருகி யோங்குமா வடுதுறைச் செல்வன்முத் தந்தருகவே-சின்மய னருட்பெருங் குரவனம்பலவாண தேவன்முத் தந்தருகவே.

885. ஒளிவார் திருப்பனந் தாளின்முன் னொளிதுள் ளுருகுநி னடிப் பூசையாற் - றெருமாது சூட்டுபூ மாலையை விரும்பிநின் னுருவமிக வுங்குனிந் தா, யளிவார் மனத்தினெம் பாமாலை வேண்டுமே லவ்வளவு குனியல்வேண்டா- வையசற் றேகுனிந் தெண்ணியதை யன்புடனளித்தருள வேண்டுமின்னும்

வளிவார் பெரும்புலி தெரிக்கவவ் வணகிற்கின் மாண்புடைக் கலயனுறை - மற்றெங் கியாஞ்சென்று தேடுவே மாதலால் வளமிக்க கழகந்தொறும், தெளிவார் குழாங்குழுமி யோங்குமா வடுதுறைச் செல்வன்முத் தந்தருகவே - சின்மய னருட்பெருங் குரவனம் பலவாண தேவன்முத் தந்தருகவே. (அ)

886. முன்னைநா ளின்னல் வெலப்பட்ட கரிவன்றி முதுமீன முதவுமுத்து - முண்டக மலர்த்தாளி லரைபட்ட வெண்மதிய முத்துநஞ் சுணவுதந்த, புன்னைவாய் நெய்தற் கடற்றோன்று மிப்பிவலை பொறையுயிர்த் திட்டமுத்தும் - பொருதிக லழித்தகோக் குதவுமுத் துங்கொண்டு பூணுத னினக்கேகட, னென்னையோ துந்திற மெனிற்சின்ன மேற்றதா ரிங்காளி லில்லையென்னி - லிலகுகண் மணிமாலை யிடையிடைக் கோத்திடுக வெண்ணில பழுத்தபாக, நென்னைமா வாதிபல சூழுமா வடுதுறைச் செல்வன்முத் தந்தருகவே - சின்மய னருட்பெருங் குரவனம் பலவாண தேவன்முத் தந்தருகவே. (௯)

887. பல்காது நின்னைத் துதித்துநின் பதமுட் பதித்துவாழ் வேங்களுக்குப் - பயனைவொருதர மெனுந்தந் திடாயெனிற் பல்வளப் பூவணத்தி, லல்காத மாமைநிறை பொன்னனையண் முன்னைநா ளன்னிமுத் தங்கொள்ளுமா - றளவளாய் மேயதை வெளிப்பட வுரைத்திடுவ மதனிறு மிங்காயெனி, னொல்காத மற்றவ ளுநிர்க்குறி கபோலத்தி லுற்றது முறைத்துவிடுவோ - மொண்கதிர்ச் செல்வன்மதி யோனெனத் தண்ணென் றுடம்புகூ ளிக்கடந்து, செல்காறும் வளைபொழி லுயர்ந்தவா வடுதுறைச் செல்வன்முத் தந்தருகவே-சின்மய னருட்பெருங் குரவனம் பலவாண தேவன்முத் தந்தருகவே. (௧௦)

௫.—முத்தப்பருவம் முற்றிற்று.

# ௬.—வாரானைப்பருவம்.



888. உறந்தகதிர் மண்டிலத் துறைவது தெரிப்பதென வொண்மேனி சேயொளிசெய - வோங்குமதி மண்டிலத் துறைவது தெரிப்பதென வொளிர்நீறு வெள்ளொளிசெய, வறந்தலை பெடுப்பவொளி ரிவ்வொளிக ளேக்குதொறு மடியர்மல பந்தமுழுது - மடலற வழித்தழி விலாதபே ரின்பநிலை யநளிற் கொடுத்திடுதலாற், பிறந்தபிர தாபமும் புகழுமே யென்றறிநர் பேசிமகிழ் தூங்கவளவை-பேசிய துணர்த்துநகை செய்திதன முகத்துப் பிறங்குபுன் மூரறோன்றச், சிறந்ததிரு வாவடு துறைக்கண்வளர் திருவருட் செல்வப்பிரான் வருகவே-செம்மைதிகழ் சிவஞான வடிவனம் பலவாண தேசிகோத் தமன்வருகவே. (௧)

889. உற்றபெரு மாதவ முநுற்றுநர்க் கல்லா தருநற்றுதவ மொன்றுமில்லா - வுவர்வருக வென்றழைத் திடநா மடைந்திடுத லுரிமையன் றென்றுநினையல், பொற்றமதி நிலவுநக ரன்றிவெங் காட்டிலும் புணரிவா யுண்டெழுந்த - புயன்மழை செழும்பணை நிலத்தன்றி யுவர்பற்று புவியகத் தும்பொழியுமே, துற்றமலர் தளிர்மெத் தெனப்பரப் பினமுளத் தூயர்கை கொடுக்கநின்றார்-தோலாத விருதுகளு மெதிரெடுத் தேநின் றுணைத்தாள் பெயர்த்துவளமே, செற்றதிரு வாவடு துறைக்கண்வளர் திருவருட் செல்வப் பிரான்வருகவே - செம்மைதிகழ் சிவஞான வடிவனம் பலவாண தேசிகோத் தமன்வருகவே. (௨)

890. வருந்துத லிலாதுநின் றுள்பெயர்க் குந்தோறும் வயக்கொடுங் கூற்றமுன்போன்-மார்பிடைத் தாக்குங்கொ லென்றஞ்ச நக்தலையில் வைக்குநர் தலையில்வைக்கும், பொருந்துவித மென்றுசில ருண்மகிழ் தரச்சிலர் பொருந்து மென் பூந்தூவவப் - பூவினை மிதித்தலவேள் கணையடிக் கீழ்ப்படப் போகட் டடர்த்தலேய்ப்பக், குருந்துமிழ லாளிவந் தானருட் சயிலாதி குலமணி நமச்சி வாய - குரவன்வந் தானென்று சின்னங்க ணின்பெயர் குறித்தூத வளவிலற மே, திருந்துதிரு வாவடு துறைக்கண்வளர் திருவருட் செல்வப் பிரான்வருகவே - செம்மைதிகழ் சிவஞான வடிவனம் பலவாண தேசிகோத் தமன்வருகவே. (க)

891. பாங்குபெற வீரடி நடந்துகா லடியெனப் படிறுரைத் தனைதக்க தோ - பார்முழுது நின்விடைக் கோரடி யெனப்பகர்தல் பட்டாங்கு நீபுமுணர் வா, போங்குமகிழ் வெய்தவிறு மோரடிநடந்திடுக வுள்ளடிகள் கன்றுமென்னி - லொருகாவ லூர்நம்பி வாட்டந் தவிர்ப்பதற் கோரிராப் பொழுதினுப்பண், வீங்கு மிள முலையுடைப் பரவையார் மாளிகை விழைந்துதிரு வாரூர்ப்பெரு - வீதியிற் பலகா லுழன்றததி யேங்கொலோ வேதா கமத்துநெறியே, தேங்குதிரு வாவடு துறைக்கண்வளர் திருவருட் செல்வப் பிரான்வருகவே - செம்மைதிகழ் சிவ ஞான வடிவனம் பலவாண தேசிகோத் தமன்வருகவே. (உ)

892. கள்ளுமண மும்பரவு மென்மலரில் வைக்கவுங் கன்றுநம் மடிக ளென்னிற்-கல்லுமுரு டும்பொருவு மெங்கடலை வைத்திடல் கருத்திற் பொருந்தி லாயென், றுள்ளுதொறும் வெய்துயிர்ப் போங்குமது தீர்பொருட் டுன்னடிபெய ர்த்துவைக்க - வோரடி யெடுத்துவைத் திடுவமெனி லெங்களுக் குதுபோது மிரு திறத்துங், துள்ளுமகிழ் கொண்டியா மீரடி முதற்பலடி தொக்கபா மாலையோடு - தோன்றவோ ரடியெனு மிலாதபூ மாலையுஞ் சூட்டுவேந் துறைகொள்பலநூ, தெள்ளுதிரு வாவடு துறைக்கண்வளர் திருவருட் செல்வப் பிரான்வருகவே - செம்மைதிகழ் சிவஞான வடிவனம் பலவாண தேசிகோத் தமன்வருகவே. (ங)

வே று.

893. ஒருவா ஞானக் கிரியையென்று முடக்கு மறைக்குந் திரோதான
முவப்பப் பொலியு மனுக்கிரக வுண்மை யென்று மிவ்விரண்டா
மருவா நிறைநின் திருவடியை வகுப்பர் யாமு மிவ்விரண்டா
வருக வருக வெனவடுக்கி மகிழ்ந்து விளிப்போ மாமேதி
பெருவாய் பாய விளவாளை பிறங்கு கமுகிற் பாயவதிற்
பெயர்ந்து கருவா னரமெழுந்து பெருங்கற் பகமேற் பாயவொளிர்
திருவா வடுதண் டுறையமருஞ் செல்வன் வருக வருகவே
திகழ்சீர்க் குருவம் பலவாண தேவன் வருக வருகவே. (ச)

894. ஒன்று நிறுவி யொன்றெடுத்தே யூழி பலகண் டம்பலத்து
ளொருவா தொருநீ நின்றமையி னுற்ற வருத்தஞ் சிறிதுயிர்ப்பா
னன்று புகறு மடிகள்சற்று நடத்தல் வேண்டு மதின்வருத்த
நண்ணிற் றுயிற் றடையின்றி நாயே முள்ளத் திருந்திடலாங்

துன்று கதிரோன் றேர்ப்பரிக டுனைந்து படர்வான் மணிமாடந்
தொறுமின் றிலகு துகிற்கொடிக ளுக்கும் வளியி னசைந்தசைந்து
சென்று புடைக்குந் துறைசையமர் செல்வன் வருக வருகவே
திகழ்சீர்க் குருவம் பலவாண தேவன் வருக வருகவே. (எ)

895. கல்லார் புகழுந் திருநாவ லல்லூ ரகத்தி லவதரித்த
நம்பி யியற்று திருமணத்தி னுடி நின்னை யழைத்தவரா
ரல்லார் கண்ட மறைத்தெழுந்தா யழையா திருக்க வடைந்தமையா
லாங்கு நிகழ்ந்த பெருஞ்சிறப்பு மடியோ மறைய வேண்டுவதோ
வல்லா ராய யாம்பலகால் வருந்தி யழைக்க வாராமை
வழக்கோ வழைத்த படிவந்தால் வாழ்த்தே பெறலா மையமிலை
செல்லார் பொழில்சூழ் துறைசைவளர் செல்வன் வருக வருகவே
திகழ்சீர்க் குருவம் பலவாண தேவன் வருக வருகவே. (அ)

896. தந்தைக் கொலைசெய் திட்டவர்க்குந் தாயர்க் கொலைசெய் திட்டவர்க்குந்
தாரக் கொலைசெய் திட்டவர்க்குந் தனயற் கொலைசெய் திட்டவர்க்கு
முந்தைத் தொடர்பி னுறுங்கடும்பு முழுதுங் கொலைசெய் திட்டவர்க்கு
முத்தி முந்திச் செல்லவையெம்பான் முத்தி வருதற் கென்செய்தோங்
கந்தைக் கறுத்த கரடமதக் களிற்றீ ருரியுண் மறைந்துகருங்
கடலுண் மறைந்த கதிர்கடுக்குங் காட்சி கரந்து வெளிவந்து
சிந்தைக் களிப்பார் துறைசையமர் செல்வன் வருக வருகவே
திகழ்சீர்க் குருவம் பலவாண தேவன் வருக வருகவே. (௯)

897. முத்தன் வருக யாவருக்கு முன்னோன் வருக முப்புவன
முதல்வன் வருக முன்னுரை முன்னன் வருக மறைமுடிவி
லத்தன் வருக வகரவுயி ரனையன் வருக நமவொழிக்கு
மையன் வருக வகரமளித் தருள்வான் வருக வாகமநூற்
கத்தன் வருக கருதுநர்தங் கருத்தன் வருக கலப்புணர்த்துங்
கையன் வருக வருளுருவக் காளைவருக கவின்றுபொலி
சித்தன் வருக கோமுத்திச் செல்வன் வருக வருகவே
திகழ்சீர்க் குருவம் பலவாண தேவன் வருக வருகவே. (௧0)

௬.—வாரானைப்பருவம் முற்றிற்று.

# எ.—அம்புலிப்பருவம்.



898. கலைமைமதி கொடுகடுங் காரிருள் கடிந்துபைங் கழுநீ ருவந்திடுதலாற்
காகோ தரத்துதர பந்தங் கழிந்துகதிர் காலுரு வமைந்திடுதலா
லிலையமக தண்ணளி யமைந்தெவரு மாலோ னெனப்பொலி தருந்திறத்தா
லெழிலம்பு யங்கவிழ் தாக்கரந் தலைவைத் திலங்குயிர்ப் பயிருடலான்

மலைவரு கதிர்ப்பருதி மண்டிலத் தெய்தலான் மதியோ னெனப்பொலித
மானேந்தி யாகலா னெங்கள்குரு சாமிதனை மாலுவா யாதலாலே[லான்
யலைவிலா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே
யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனொ டம்புலீ யாடவாவே.(க)

899\. வண்ணமா மேருவை வளைத்தலாற் பன்னாளு மகிழப் பொலிந்திடுதலால்
வான்புலவர் பலர்சூழ் தரப்புது விருந்தாக வாய்ச்சுவை மருந்துதவலா
லெண்ணலா காதசத் துவகுணப் பிரதான னென்னத் திகழ்ந்திடுதலா[லான்
லெக்கா லு மிவருரிமை யாயவெறும் மிக்கவிமி லேறுபுகர் கொளவிடுத
மண்ணலால் வானகமு மேத்தவுய ராசுநிழல் வைகலா லெங்கள்குரவன்
வானகத் துலவுநினை நமையொப்ப னென்றுட னருகவென் றுறைதலா
லண்ணலா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே
யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனொ டம்புலீ யாடவாவே. (உ)

900\. கூடுநான் முப்பத்து மூவருக் கமுதுதவு கொள்கையுடை யவனீ யிவன் - குலவுபல நாள்கடொறு மெண்ணிலார்க் கமுதுதவு கொள்கையுடையவ னிதுவலான், மூடுபுற விருடபச் சிறிதுசிறி தாச்சில முருக்கிவரு வாய்நீயிவ ன்-மொய்த்தவக விருள்வலி யொருங்குகெட் டொழிதர முருக்கிவரு பவனுடைலா, நாடுமொரு பணிகொளப் பட்டுழல்வை நீயளவி னகுவலிப் பாம்புபூண்டு-நவையிலா னிவனிவனை நீயொப்ப தெங்ஙனமதி னட்டகொடி வானளாவி, யாடுமா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனொ டம்புலீ யாடவாவே. (௩)

901\. துன்னவரு மடவார் குழாத்தனீ யிவனளவி றாயமா தவர்குழாத் தன் - றெக்கவொரு வருணமுடை யவனீ யிவன்கருணை சூழுமை வருண முடையா, னன்னீ ரெண்கலைய னீயிவனெ ராறுபத்து நான்குகலை யுடையனீ யோர் - நகுமுய லுளாயிவன் விருதுமுதல் யாவையினு நண்ணுபல சிங்கமுடை யான், முன்னவும் கூடாக் களங்கனீ யெவருளமு முன்னுமக ளங்கனிவனன் - முத்தனிவ னுக்குநினை யொப்பென மொழிந்திடார் மூடருஞ் சிவலோகமே, யன்னவா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனொ டம்புலீ யாடவாவே. (௪)

902\. துலங்குபே ரருள்கொளுவி மலமாயை கன்மந் தொலைத்தள விலாதவின்ப-சுகவாரி யெவ்வுயிரு மூழ்கச் செயுங்குரவர் சூளா மணிக்குநாளுங், கலங்குநிலை யுடையையாய்க் குரவனில் விழைந்துபழி கைக்கொண்ட பாவியாய-காமுகா நின்னையொப் பென்றவெம் வாய்க்குமொரு கழுவா யியற்றல்வேண்டு, மிலங்குநெடு மாதவர்கள் பல்லா யிரங்கோடி யென்னவய னிற்கநின்னை-யிவன் வருக வென்றுகட் டளையிட்ட னன்கருதி னெத்தவ மியற்றினுய்மு, னலங்கு மா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத் துமம் பலவாண தேசிகனொ டம்புலீ யாடவாவே. (௫)

903\. செய்யவங் குருநாத னினையாட வாவென்று திருவாய் மலர்ந்த பொழுதே திருந்தக் குடக்குமுற் றடியனேன் வந்தனென் றிருவுள மெவன் கொலென்று, கையவுளம் விரையவந் தான்றதிரு வடிபணிமி னகுகருணை பூத்து நீறு - களினத் திருக்கரத் தள்ளியுன் னுதலிடுவ னுடுமைப் பெரியபேற்றால்,

வெய்யனின் கயரோக மும்பழியு மாறியுயர் மேன்மையும் பெறுவைமுன்போன்-மேவுமுடி வைத்திடினும் வைக்கும் பெருங்கருணை விள்ளத் தெரிந்தவர்களியா, ளையனு வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனு டம்புலீ யாடவாவே. (சு)

904. போற்றுமாம் வருகென் றழைத்தபொழு தெய்திலான் புகலிவ னெனத்திருக்கல் - போதச் சிவக்கொழுக் குரவர்ப்பிழைத்ததன் புகரெண்ணி யிரு வினைகளுங், காற்றுதிரு முன்னர்வர வஞ்சினு னென்றருகு கவினமே வுற்றவனை யான்-கண்மணியை யனையசுப் பிரமணிய தேவனக் கண்சிவப் பாற்றுவித்தான், மாற்றுவா னின்னமு மெனத்தா மதிப்பையேன் மற்றவனு மனையனுவன் - வாழ் வகை நினக்குமப் பாலுமுண் டோசெம்பொன் மாடமுடி மேலண்டம்வைத், தாற்றுமா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனு டம்புலீ யாடவாவே. (எ)

905. நீட்டுமா புகழுடைச் சின்மய னிவன்கலச் சேடமுகி லினுமுன்னை நாட் - சேர்ந்துநீ ருவாகத் தியபழங் கதையமரர் செப்பத் தெரிந்திலாயோ, சூட்டுமிப் போதுமச் சேடமனு வத்தலை கொடுத்திடப் பெற்றியெனிற்-கொடி யகய நோயொழிவ தற்கைய மில்லையிக் கூற்றுண்மை யென்றுணர்தியா, லீட்டு மா பாதகமும் வேறிடம் பார்க்குமினி யாஞ்சொன்ன வழிவருதியே - வெய் தாத மேன்மையிலை மாடத் துகிற்கொடி யெழுந்தசைந் தைந்தருவையு, மாட்டு மா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்து மம் பலவாண தேசிகனு டம்புலீ யாடவாவே. (அ)

906. எங்கனு யகன்வருதி யென்றபடி வாரா திருத்தியேல் வெய்யசாப-மிடுவனச் சாபநின் குரவனிடு சாபமென் றெண்ணுதி யதுவாழ்த்ததால், வெங் கணு டரவில னிருந்தவைகள் பலவுண்டு வெய்துயிர்த் தொன்றைநோக்கின் - விரையவத் தன்னைப் பிடித்துக் கடித்துடன் விழுங்கியிடு மீனாமலே, திங்கணு யகயா முரைப்பதுவும் வேண்டுமோ சிறுவிதி மகச்சாலையிற் - றேய்ப்புண்ட தத் தன்னையு மிற்றயர்த் தாய்கொலோ செங்கண்மால் கைகுவிக்கு, மங்கணு வடுது றைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்துமம் பல வாண தேசிகனு டம்புலீ யாடவாவே. (கூ)

907. வார்க்குங்கு மக்கொங்கை யுமையாள் பசுக்கோல மாற்றிமுற் கோல முதவு - மாத்தல மிதன்கணுளிர் குருதரிச னங்கருது வார்க்குமள வாதவின் பம், போர்க்குமொரு சிவலிங்க தரிசன மருட்பெருமை பூண்டசங் கமதரிசனம், பொற்பக் கிடைக்குமித் தலமனைய தலமெவண போய்ப்பெறுவ தோதுமதியே, சீர்க்குமொரு நவகோடி சித்தபுர மென்பதுந் தேர்ந்திலாய் தேருமாறு - செப்ப வுந் தேர்கிலா யிதுகன்மை யன்றெழு திரைக்கட லெனப்பன்முரச, மார்க்குமா வடுதுறைச் சித்தாந்த சைவனுட னம்புலீ யாடவாவே - யருணெறி நடாத்துமம் பலவாண தேசிகனு டம்புலீ யாடவாவே. (கo)

எ.—அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

# ௮.--சிற்றிற்பருவம்.



908. உருவார் மதிய மிளங்காலை யுதிப்ப தேவனென் றுன்னிமயங்
குற்றுக் கணப்போ திருந்தனம்பி னுணர்ந்தோம் வேடப் பொலிவதன்
மருவா ரரத்த மாலைதுயல் வருதோ ளொருநீ யெனத்தெளிந்தோ [பின்
மற்றப் பொழுதே விரைந்தெழுந்து மகிழ்ந்து பணிந்தோ நீநளித்தாய்
வெருவார் கண்ட வுடனெழுதன் மேவா ரென்று திருவுளத்து
மிக்க சினங்கொண் டிதுசெய்தன் மேலாம் பெருமைக் கழகேயோ
திருவார் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (௧)

909. ஒளிசா னினது வருகையுளத் துவந்தோம் யாங்கள் வகுத்தவறை
யொன்று ளிருத்தி யெனமுகம னுரைத்தோ மதனுக் கெங்கள்சித்த
ரளிசா லருளின் வகுத்தவறை யன்றென் றொழித்தா யடுமணற்சோ
றைய வுண்க வெனநமக்கிங் காகா தாநம் விடைக்கென்றாய்
களிசால் யாங்க ளினிச்செய்யக் கடவதொன்று மிலையடிகள்
கருத்தி லென்னோ நினைந்தீது கருதின் யாங்கள் செயலென்னே
தெளிசா றுறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (௨)

910. ஆரும் புழுதி யறப்புனல்கொண் டாட்டித் திருவொற் றுடையிடற்
கடியார் பலரு ளாரெனின்வே றளைந்து சென்று லாகாதோ
பேருஞ் சிறியோ மியற்றுவது பேணுச் சிறுவீ டாதலினாற்
பெரியோ யொருநீ யியற்றுவது பேரும் பெருவீ டாகியதா
லோரு மிதுவு நின்னடிம னுரிது மதனாற் கன்றுவது
மொருங்கி யாங்கள் வருந்துவது முணரா திருத்த லருளன்றே
தேருந் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (௩)

911. அருந்து பதம்பார்த் தோருவேட னமைத்துக் கொடுத்த வூனெச்சி
லடங்க நுகர்ந்து முடியிலவ னடிசூட் டிடவு மமைதரவேற்
றிருந்த துரையா நினையவனுண் டிட்ட சேட மெடுத்துதவி
யெல்லார் முடிக்கு மடிசூட்டு மென்று புகன்றோ மிதுபிழையோ
வருந்து மெமது விண்ணப்ப மறும லேற்க வேலாயேன்
மன்னு மருளி லானெனநின் மாணுக் கருக்கெல் லாமுரைப்போந்
திருந்து துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (௪)

912. ஐய முன்னைப் பழக்கநினைந் தழிப்பே னென்னி னுலகுயிர்கட்
கமைந்த மலமா தியமூன்று மடங்க வழித்தி யடுகாமம்
வெய்ய குரோத முதலாறும் வீட வழித்தி நினையன்றி
வேறும் பொருளுண் டென்றுரைக்கும் வீணர் மதமு மறவழித்தி

வைய மூவக்கு மிவையன்றி மதியா யாங்க ளாடிடத்து
வந்து வகுப்ப தழித்தனையேல் வருவ தறமோ மாப்புகழோ
செய்ய துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (ரு)

913. எல்லார் தமக்கு மனுக்கிரக மியற்று வோமென் றொருபெயரிட்
டிங்கு மேவி யெங்களிடத் தென்றோ வழித்தற் றொழில்பூண்டாய்
வல்லா ரெதுசெய் யினுஞ்செயலா மறுப்பா ரொருவ ரின்மையினால்
வல்லார் வாளா விருப்பதலால் வாய்பே சுதற்கும் வழக்குண்டோ
வில்லார் மணிமா ளிகைகடொறும் விளங்கா நின்ற நலநோக்கி [போற்
விண்ணோர் கண்ணே றுறுவண்ணம் விரித்துப் பொருத்து முறையே
செல்லார் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (சா)

914. கூறு முலகர் விரும்புபெருங் குரவர் பெருமா னியென்னிற்
குலவ நினைக்காண் டொறும்யாங்கள் கும்பிட் டிடுவோ மதுவன்றி
வேறு தனித்து மொழிந்திடினும் விரும்பிக் கேட்போ மினிதியற்றும்
வீட்டை யழிப்பான் றொடங்கினையேல் விதியா காது பொறுத்திருத்த
லூறு மலர்ப்பைம் பொழிறோறு மருப்பைங் கிளியா கமங்கூற
நச்சு பூவை புணர்ந்துகட்ப நண்ணுங் குயில்கட் கினிதோதத்
தேறும் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (எ)

915. கோனார் பிறையுங் கழிதலையுங் கொன்ற மத்தொடையும் புலித்தோலுங்
குலவு நுதற்க ணொடுபிறவுங் கூடா தொழித்துச் சுவேச்சையினே
ரேனுருக்கொண் டிங்கடைந்த திறைஞ்சு மவர்கட் கருள்வதற்கோ
வெங்கள் சிறுவீ டழிப்பதற்கோ வியம்பல் வேண்டு மிறையோனே
பூனார் முலைகண் மடமாதர் புணர்மா ளிகையிற் றுளிகையிற்
பொருத்து மணிச்செங் கதிரெழுந்து போய்வெங் கதிர்க்கு மாறாகச்
சேனார் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (அ)

916. மாலா ரிளைய மகனைய மதவே ளுடம்போ கற்பகஞ்சால்
வான்கூட் டுண்ணூர் திறலவுணர் வாழ்ந்த கொடிய முப்புரமோ
பாலா ரயன்மா லொடுங்கவரும் படர்பே ருழிப் புவனமோ
பரவு மடிகள் பொருளாகப் பற்றி யழித்தல் செய்வதற்குக்
கோலார் வளைக்கை மடவார்யாங் குழுமி யியற்று மிதுகுளிர்பூங்
கோலப் பொழில்சூழ் வாவியினுங் குளிரோ டையினுந் தாயெழுந்து
சேலார் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (கூ)

917. வீங்கும் விருப்பின் யாங்களணி வீதி யிடத்தி லியற்றுமிதின்
மேவுஞ் சுவரச் சிறுவிதிசெய் வேள்விக் களமே கலையன்று
தாங்கு மிதனுட் செம்மணிக டயங்கு மதனுட் டழலன்று
தழையா நின்ற வெங்குழுவத் தக்கன் மகத்திற் குழுவன்றே
பாங்கு பெறவா லடிக்குரவு பயின்றாற் போல வடுதொழில்யாம்
பயில்வோ மினையார் தடுத்திலமிப் பண்பு தகவோ பலவளமுந்
தேங்குந் துறைசை வளர்ஞானச் செல்வா சிற்றில் சிதையேலே
சிந்தா மணியம் பலவாண தேவா சிற்றில் சிதையேலே. (கo)

அ.—சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

# கூ.—சிறுபறைப்பருவம்.



918. விரைவீசு தாமரைப் பூவொத்த செங்கரம் விளங்குமொரு தமருகத்தை - மேவத் திரித்துவடி வொடுநிறமு மொத்தலான் மேதினி யெலாம் பரந்து, நுரைவீசு கங்கையொடு கட்புற் றுறும்பிறையை நோன்மையரு ளிற்றிரித்து - நுவலுமிப் பறைகுணி லெனக்கொண் டுளாய்கொலென நோக்கியுல கேத்தெடுப்ப, வரைவீசு வெள்ளொளிய வயிரமும் பாசொளிய மரகதமும் வாரிவாரி-வண்குலைப் படுகரிடை மேயும்வளை கோட்டெருமை வாய்வெரீஇ யோட்டெடுப்பத்,திரைவீசு பொன்னிவளை சென்னிவள நன்னாட சிறுபறை முழக்கியருளே-சித்தர்பலர் மொய்த்தகோ முத்தியம் பலவாண சிறுபறை முழக்கியருளே. (க)

919. அறிவிலே மிந்திரிய மாவேட்ட மாடுதற் கமைகுறிஞ் சிப்பறையுமா - யடங்காத மனமென்னு மிமிலேறு கோடற் கடுத்தமுல் லைப்பறையுமாய், முறிவிலுடல் பொருளாவி கொள்ளைகோ டற்குற முழக்குபா லைப்பறையுமாய் - மூதணர் வெனும்புன லறாதற வொழுக்கற்கு மொய்த்தமரு தப்பறையுமாய், மறிவிலெம ரொடுமோறு கொண்டபர சமயர்கோண் மாய்க்குநெய் தற்பறையுமாய்-மாறாது பொலியவரை நின்றிழிந் தெஞ்ஞான்றும் வற்றுத லிலாதுவெப்பச், செறிவிலுயர் பொன்னிவளை சென்னிவள நன்னாட சிறுபறை முழக்கியருளே - சித்தர்பலர் மொய்த்தகோ முத்தியம் பலவாண சிறுபறை முழக்கியருளே. (உ)

920. ஓங்குபல புவனத் தினைப்பாற்று முன்னிஃ தொலிப்பதெவ னென்றகருதி-புணர்வுடைய ருண்மயக் கினுமயங் குகபின் புணர்ந்திஃ தெனத்தெளிவரால், வீங்குபே ரறிவுடைப் பாணினியு முன்போல் வியாகரண வாஞ்சையுற்று - மேவிடினு மவனுமிஃ திற்றெனத் தேர்குவன் விளங்குகுணில் கைப்பற்றியே, வாங்குதிரை மால்யானை பற்பல வெடுத்துநால் வாயரற் றிடவெறிந்து வரைபல வுருட்டிக் கடுத்தப் புகுந்துவரு மறிதிரைக் கடல்கலக்கித்,தேங்குநீர்ப் பொன்னிவளை சென்னிவள நன்னாட சிறுபறை முழக்கியருளே - சித்தர்பலர் மொய்த்தகோ முத்தியம் பலவாண சிறுபறை முழக்கியருளே. (ங)

921. இருளின்விழி போற்கேவ லத்திற் கிடந்தநுமை யின்னருளி னுடல்விளக்க - மேய்ப்பவது வாய்வினை வயிற்படார்ந் தீர்பின்னு மெய்த்துமெய் யாதுகாளும், பொருளுற மூநந்தறப் புரிந்திரு தனைச்செறிவு பூறுத கீழ்ப்படுத் தப் - புகறத்து வத்துருக் காட்சிசுத் தியுமுறப் பொலிதரு நுமைக்கண்டுநீர், மருளமை செருக்குறுதல் மாற்றவரு ளேக்கிவினை மற்றைந்தி னெழுதரவிர - மன்னுமருண் முதலெனக் கண்டொன் றுறுதொன்ற வம்மினென் றறிவித் தல்போற், றெருள்விரவு பொன்னிவனை சென்னிவள நன்னுட சிறுபறை முழக்கியருளே - சித்தர்பலர் மொய்த்தகோ முத்தியம் பலவாண சிறுபறை முழக்கியருளே. (௪)

922. மதிசெயுஞ் சித்தாந்த சைவவசு ணங்கட்கு வரியாழ் முழக்கமெனவும் - வளமருவு சுத்தசை வப்பயிர் களுக்குநெடு மாமழை முழக்கமெனவும், விதிசெயுங் கிரியா குருக்களா வங்கட்கு விழைமபின் முழக்கமெனவும் - வெய்ய பரசமயப் பருத்திப் பொதிக்கழலும் வெவ்வழன் முழக்கமெனவு, நிதிசெயு மணிக்குவை களுஞ்சந் தனக்குறடு நீளகிற் றுணியும்யானை - நிகரில்வெண் கோடுகளும் வரைநின்று வாருபு சிலந்தொறு மெறிந்தியாரையுந், திதிசெயும் பொன்னிவனை சென்னிவள நன்னுட சிறுபறை முழக்கியருளே - சித்தர்பலர் மொய்த்தகோ முத்தியம் பலவாண சிறுபறை முழக்கியருளே. (௫)

வேறு.

923. புத்தமு தோவென மெய்த்துதி பாடிப் புந்தி விரும்புநரும்
புகரற வோரறு காலமு மெண்ணிப் போற்றி வணங்குநரும்
சித்த மிருத்தி விடாம லருச்சனை செய்து மதிப்பவருஞ்
செங்கை குவித்தரு கெய்தி யடிப்பணி செய்யும் விருப்பினரும்
மத்த வருட்கண் வழங்கென நின்றெதி ராடி வழுத்துநரு
மாகிய பற்பல செந்தா மரைக மலர்த்து மிளங்கதிரே
முத்தமிழ் தேர்துறை சைப்பதி வாணன் முழக்குக சிறுபறையே
முத்தி முதற்குரு வம்பல வாணன் முழக்குக சிறுபறையே. (௬)

924. மருவிய வாசைப் பேயை யொழித்திட மந்திர வாதியுமாய்
மாறாப் புண்ணிய மகவு வளர்த்திட வாய்ப்புறு மன்னையுமாய்ப்
பொருவி லிடும்பைச் சேறு புலர்த்தப் பொலிதரு பருதியுமாய்ப்
போர்த்திடு பரசம யக்களி றொழியப் போதரு சிங்கமுமாய்
வெருவரு வெய்ய வினைக்கா டொழிதர வெய்தெழு வன்னியுமாய்
விடாத பவக்கட் செவியொழி யப்புள் வேந்தது மாய்ப்பொலிவாய்
முருகலர் நீர்த்துறை சைப்பதி வாணன் முழக்குக சிறுபறையே
முத்தி முதற்குரு வம்பல வாணன் முழக்குக சிறுபறையே. (௭)

925. மன்னிய காமே பரசிவ மென்றும் வயங்கும் மடியாரை
வழிபடு மதுவே நம்மடி யடைதரு வழியென் றுங்கருணை
துன்னிய சுத்திரு காமம தேயரு டொகுமந் திரமென்றுந்
துயரம் வருத்து மவாமுத லடலே தோலா வலியென்றும்

பின்னிய கந்திரு வருளா னம்மொடு பெயரா தொன்றுதலே
பேரின் பென்று மெமக்கரு ளிப்பணி பேணிக் கொண்டருள்வோய்
முன்னிய வண்டுறை சைப்பதி வாணன் முழக்குக சிறுபறையே
முத்தி முதற்குரு வம்பல வாணன் முழக்குக சிறுபறையே. (அ)

926. மெய்வளை மாரி யெழுங்குமி ழிக்கிணை பெற்ற வுடற்கணரும்
பெட்பினர் வெய்ய சினக்கனல் பொங்கப் பெறுகொடு மனமுருடர்
பொய்வளை நாடபு செங்நில நீறிற் போர்த்த மயக்கமுளார்
பொல்லா ரிவர்தமை யாளுத லாலாம் புகழெனு வுட்கொண்டு
மெய்வளை மார்கரு ணைத்திறம் யாரும் வெளிப்படை யாவுணர்வான்
வெய்யே மையுமினி தாண்டருள் குரவா மேலோர் பலர்சூழு
மொய்வளை மார்துறை சைப்பதி வாணன் முழக்குக சிறுபறையே
முத்தி முதற்குரு வம்பல வாணன் முழக்குக சிறுபறையே. (கூ)

927. வாரி யுடுத்த புவிக்கண் விபூதி வயக்குத லிலராயு
மன்னிய புண்ணிய மேய்க்குங் கண்மணி வாஞ்சை யுறாராயுஞ்
சீரிய வக்கர மைந்து நவிற்றுத றேறு தொழிவாருந்
திகழ்தரு நின்னடி யார்த மடிப்பணி செய்யா தகல்வாரு
மாரியர் கோவென நின்னடி சார்ந்துநி னருண்முக மேலாரு
மாகிய முருடர் கவட்புடை பொரப்ப வலங்குபொ னுலாய
மூரி மதிற்றுறை சைப்பதி வாணன் முழக்குக சிறுபறையே
முத்தி முதற்குரு வம்பல வாணன் முழக்குக சிறுபறையே. (கo)

கூ.—சிறுபறைப்பருவம் முற்றிற்று.

# கo.—சிறுதேர்ப்பருவம்.



928. பருந்துபல சூழப் புலால்கமழும் வெம்படைப் பருவலித் தகுவர் மூவர் - பற்றியமர் சூக்கும வுடம்பனைய திரிபுரப் பாழிமூற றுங்கெடுப்பான், பொருந்துவட மேருவில் வளைத்தரவு நாண்கொளீஇப் பொருகடல் சுவற்றுவா ளிப் - பொருகணை கரங்கொண்டு நான்மறைப் பரிமலர்ப் புத்தேள் கடாவிநிற்ப, மருந்துபடு மதியமும் பருதியுஞ் சகடாய் வயங்கக் கொடிஞ்சிமுதலா - மற்றுள வுறுப்புமற் றுளதேவ ராகநெடு வாழ்த்துமல் குறவிவர்ந்து, திருந்துபுவி யாகிய பெருந்தே ருருட்டினோன் சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (க)

929. வெட்டவெங் கானக் திரிந்துழன் றுங்கரு விழிச்செய்ய வாய்த் தொறுவிமார் - வெள்வளைக் கையகப் பட்டிளங் கன்றணை தன் மேயதிரி புரி காரினல், வையமிது வென்னெனக் கட்டுண்டு முட்டுண்டு மத்தின்மொத் துண்டு வண்டு - வார்திரை யெடுத்தெறியு மார்கலியி னேடிவெரிக் வானகோக் காது வீழ்க்தே, பெய்யவவ ணின்றின்னு நீங்கா துறங்குமோ ரொருதேறி யதுவன்றியு- மென்சொல்வ லதுவுண்ட மண்ணை தேரேறி யென்றுமோர் சிறுமைநீரச், செய்யபொன் செய்துபல மணிவைத் திழைத்திட்ட சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (உ)

930. உருகுமன முடையராய்ப் பல்லோர் நடாத்துவதி னுறுமழகு நோக்கநின்று - ருற்றவவர் கட்குமெங் கட்குமகிழ் பூப்பநீ யொள்ளிதி னடாத் தல்வேண்டும், பெருகுமெழி லோடிவர்க் கினிநடத் தோமெனிற் பேசுபல் வடக் கழற்றிப்-பெருந்தேர் நடாத்தியரு டிருமாளி கைத்தேவர் பேணுசந் நிதியடைந் தே, யருகுசில விண்ணப்பம் யாங்கள்செய் வோமென்னி லவர்தா நடாத்துதற் கோ - வையமிலை யாமே நடத்தின மெனும்புக முடைந்திடுவை சொற்றபடிகே, டிருகுதவிர் பவருளத் தறிவுருவின் மேவுவோன் சிறுதே ருருட்டியருளே-செல் வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (௩)

931. துணைவந்த குஞ்சரமு மழகிய வுவாவுந் துலங்குமிந் நகரிடத்துத்-துன்னெனமு னச்சிறுத் திட்டகளி றிலையது துணிந்திங்கு வருவதுமிலைப், பணைவந்த கைத்தலத் ததுவந்து மேவினும் பனிமல ரிறைத்தெண்முதலாப் - பலவுற்ற சுவையமோ தகமாதி வீசிப் பணித்துவச மாக்கிவிடுவோ, மிணைவந்த பொருளென்று நீயுப சரிப்பதோன் றில்லாமல் யாமாதலா - லிடையூறு வேறி ன்று சிறுவீ டியற்றுமத னினமாகு மாதர்விலக்த்,தினைவந்த வளமல்கு சோணு டளிப்பவன் சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (௪)

932. வானுடு மேவும் புறத்தொண்டர் சொற்றபடி வையமு நடாத்தினு மிம் - மண்ணுடு மேவிய வகத்தொண்ட ரேம்யாம் வகுத்தபடி கேளாமையென், கானுடு மதுசொற்ற படிநடத் தோமெனிற் கைகுவித் தெய்தினது-கண்மணி யை யனையசுப் பிரமணிய தேவன்முன் கரைவோங் கரைத்தபொழுதே, பானுடு மனையனிர் பால்வந் துரைக்கினெப் படிமறுத் திடுவையனைய - பக்கநீ தவிர் வதே யிலையாத லால்யாம் பகர்ந்தபடி கேட்டல்வேண்டும், தேனுடு பூம்பொழிற் சோணு டளிப்பவன் சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பல வாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (௫)

933. முறையாய வெங்கண்மன மாம்புலத் திற்காம முதலாய பெரு மரங்கள்-முழுதுமற வருளாய தழல்கொளுவி யைந்தென முழங்குமக் கரமனு வெனு, மறையா யலப்படை யெனக்கொண் டுழச்செயா வன்பெனும் வித்து வித்தி-யார்வநீர் பாய்த்தியன் னியசமய மாக்களட ராதுபொறை வேலிகோலிப், பறையாத தவமெனும் பைம்பயிர் வளர்த்துபொய் படாதசிவ போகம்விளையாப்-பண்பினுகர் காறும்விட யக்காவர் கவருதல் படாதுகாத் தருள்சின்மயன், சிறையாத வளமல்கு சோணு டளிப்பவன் சிறுதே ருருட்டியருளே-செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (௬)

934. முந்தைமறை யாகம நவின்றரு ணினக்கியா முந்துபு நடத்தல் செய்யே - முந்துபு நடப்பவர் நடந்திடுக விதுகாறு முந்துபு நடத்தலாலே, யந்தைபடு பிறவித் துயர்க்கட லழுந்தின மதாஅன் றுபுற முதன்மையேபோ - லையவக முதன்மையு நினக்காக நல்குவா னடியே மமைத்துநின்றே, சிந்தையறு

மெங்கள்செய லிற்றாக லாற்பின்பு வேயத் தொடுக்கொடருவே - நிறைகருணை பூத்திபா வருமன மகிழ்ச்சியுற நிகழ்காம மாதிதீர்ந்த, சிந்தைகுடி கொண்டு சுடர் விட்டோங்கு சின்மயன் சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (எ)

935. அணிகொண்ட முன்னூ ணடாத்தியது பொன்னிற மமைந்ததிது முழுமையும்பொ - னுழிகின் கைகா லடர்ப்புண்ட விதனின்மரு வாழியத் தகையலவான், மணிகொண்ட வச்சுமுறி பட்டதது விதுவன்மை மாறாத தென்றுமத்தேர் - வண்மையிற் றாகவு முளஞ்செருக் கிக்கடினம் வாய்ந்தன மெனப் பொலியுமாற், பணிகொண்ட வதனுட் செருக்ககலும் வழியெனப் பகருமதன் மார்புகீண்டு - படரும்வெளி யாகவிது கோக்கிமகிழ் தருமெங்கள் பாழிமலமாயைகன்மத்,திணிகொண்ட மும்மதிலு நீறெழச் சின்மயன் சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (அ)

936. ஒருநாம மும்பெறுவ தில்லையா மென்றுமு னுரைத்தனை யதற்குமாறா - வுலவாப் பெருங்கருணை வெள்ளமலை யெறிதலா லுணர்விலெளி யேமுமுய்வான், றருநாம நந்தியங் குமாரசத் தியஞான தரிசனி பரஞ்சோதியார் - தழைதருமெய் கண்டவர்க ளருணந்தி மறைஞான சம்பந்தர் கொற்றவனெனும், பெருநாம கல்லூ ருமாபதி சிவன்கருணை பெருகரு ணமச்சிவாயர் - பிரகாசரைந்தெழுத் திறைமுனிரு பத்தைந்து பெயர்கொண்ட தன்றியின்னுந், திருநாம மெண்ணில புனைந்துவரு சின்மயன் சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (௯)

937. ஆவாழ்க மாமறைக் குலம்வாழ்க நலமாரு மாகமத் திரள்கள் வாழ்க - வருண்மல்கு சித்தாந்த சைவநலம் வாழ்கநினை யன்பிற் புகழ்ந்துபாடு, நாவாழ்க நின்றிரு வடிப்பணி புரிந்திடு நன்மலர்க் கைகள்வாழ்க - நண்புறவிராப்பக னினைக்குமனம் வாழ்கவிறை நடவுசெங் கோலும்வாழ்க, மாவாழ்க வெவ்விடனு மேவிமதி தோறுமும் மழைபொழிய மேகம்வாழ்க - மன்னுபைங் கூழ்வாழ்க வெவ்வுயிரும் வாழ்கநின் வயங்கூர்தி யர்யதருமச், சேவாழ்க சைலாதி சந்தானம் வாழ்கநீ சிறுதே ருருட்டியருளே - செல்வமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதே ருருட்டியருளே. (௧0)

௧0.—சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

# சிறப்புப்பாயிரம்.



இந்நூலாசிரியர்மாணுக்கரும்
சங்கரலிங்கம்பிள்ளையவர்கள் குமாரருமாகிய

## தெய்வநாயகம்பிள்ளையவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

938. பொன்பூத்த திரைப்பொன்னிப் புண்ணியமா நதிபுணரிப் புனல்கலந்த, கொன்பூத்த வுவரகற்றி யிழிந்தவரைக் கலந்தபெருங் குற்றம் போக்கு, மின்பூத்த பேரறிவா னமைந்தவான் றோர்சிகர்த்து மேவ லாலே, தென்பூத்த வளமன்னு பொன்னிநா டென்னுமுயர் செம்னி நாட்டில். (க)

939. தேன்கலந்த மலர்நிறையக் கலந்தும்வரி யளிக்கூட்டாச் செழும்பூர் தெய்வக், கான்கலந்த விண்கலந்தவ் வளிக்கினிய மதுவூட்டிக் கவின்ற செல்வர், தான்கலந்தும் வறியவர்க்கூட் டார்நகரங் கலந்தன்னஞ் சலிக்க ஆட்டும், வான்கலந்த வள்ளனிகர் பொழில்கலந்து சூழ்துறைசை மாத்த லத்தில். ()

940. துலங்குதிரு வெண்ணீறுங் கண்மணியும் பூங்காவித் துகிலு மோவா, நலங்குலவு சிவார்ச்சனையு நயந்தபெரு முனிவர்பலர் நண்ணி யெங்கு, மிலங்குசிவா கமமுதல விசைப்போர்கேட் போர்சிந்தித் திருப்போர் மற்றை, வலங்குலவத் தெளிவோர்க ளாயென்றும் வயங்குதிரு மடத்தின் மாதோ. (ங)

941. சடைகரந்த திருமுடியும் விழிகரந்த தனிநுதலுந் தழைபூங் கொன்றைத், தொடைகரந்த திருத்தோளும் விடங்கரந்த மணிமிடறுந் துலங்கு சூலப், படைகரந்த திருக்காமுங் குழைகரந்த வார்செவியும் பாய்பு லித்தோ, லுடைகரந்த திருவரையு மறைமணிநூ புரங்கரந்த வொளிர்பொற் றாளும். (ச)

942. உற்றுநனி யழுகெறிப்ப விளங்குதிரு வருளுருவ மொன்று தாங்கிக், கற்றவர்வெம் மலக்கருவை விழுங்குறுமெய்ஞ் ஞானபாற் கரனே குற்ற, மற்றகதிர் மாமணியே யாரமுதே யெய்ப்பினில்வைப் பனையா யென்று, சொற் றிடவீற் றிருந்தருளம் பலவாண தேசிகன்பூர் துணர்ப்பொற் றாளில். (ரு)

943. பிறந்துபல நாளிருந்து தரிசித்தோர்ச் சொலலென்னே பேணி யோர்நாட், சிறந்தொருகா லடைந்தன்பிற் றரிசித்தோர் தமக்குமருள் சிறப்ப நல்கி, மறந்தகலா வணம்புரியுந் தாயான மாதேவன் வைக லாலே, நிறந்தழையும் பெருஞ்சீர்த்தித் திரிசிராப் பள்ளியில்வாழ் நெடிய சீலன். (சா)

944. விண்ணுலகத் தமர்க்குதனை யடைக்தோர்க்கு விரைக்தழியும் வெறுக்கை நல்கிக், கண்ணுறுசிற் றின்புறச்செய் தறக்கழிவு கண்டிடுகற் பகம்போலாது, மண்ணுலகத் தமர்க்தடைக்தோர்க் கழிவில்கல்விப் பொருள்வழங்கி வனைபேரின்ப, நண்ணுறச்செய் தறம்பெருக்கு மீனுட்சி சுந்தரப்பேர் நல்லோனன்பால். (எ)

945. என்னறிவா லின்னவென வறிக்தறிக்து வகுத்துவகுத் திசைத்தல் கூடாப், பன்னலமு நனிசிறக்து விளங்கவனைக் தணிக்தபா மாலை யாய, நன்னலஞ்சே ரொருபிள்ளைத் தமிழினைவார் திரைசுருட்டு நரலை சூழ்க்த, மன்னுலகங் கொளுமாறு வயங்குறுமச் சிர்பதித்து வழங்கி னுனல். (அ)

946. அனையனுய ரிக்நூலா சிரியன்பாற் கற்றவனென் னருமை நண்பன், வினையமலி நூல்களெலா முணர்க்துணர்த்து நுண்ணறிவான் மிக்கசீலன், றனைநிகரு மணிமன்று ணடநவில்குஞ் சிதகமலக் தணவா னுள்வோ, னனையலர்தார்ப் புயத்தியாக ராசநா வலவனெழி னலமிக் கோனே. (க)

அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ்ச்

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வாட்போக்கிக்கலம்பகம்.

## பாயிரம்.

### காப்பு.

விநாயகர் துதி.

கட்டளைக்கலித்துறை.

947. முக்கண் ணொருத்தன்மற் றென்னுள வாரி முயக்குநலான்
மிக்கவெண் கோடொன்று மேசிதை யாநிற்கும் வெள்ளறிவை
யுக்க கருமத மேகரு மாசை யொழிக்குமருள்
புக்கசெம் மேனி மனஞ்செம்மை யாகப் புணர்த்திடுமே. (க)

சமயாசாரியர்துதி.

கட்டளைக்கலித்துறை.

948. சொல்லார் புவியி னெடுமறை யாதித் தொகையுணர்ந்த
வல்லார் மலமொன் றறுமே யடித்தொண்டு வாய்ந்தொளிரு
நல்லா ரிணக்கத்தி னென்பா ரதுநிற்க நால்வரையு
மெல்லா மலமு மறக்கூடு வேனின் பெளிதுறுமே. (உ)

நூல்.

ஒருபோகுமயங்கிசைக் கொச்சககலிப்பா.

949.

க. மாமேவு செங்கமல மலருறையுந் திருமகளும்
பூமேவு வெண்கமலப் பொகுட்டுறையுங் கலைமகளும்
பிரியாமே யென்ஞான்றும் பெருநட்புக் கொண்டுறையச்
சரியாமே புகழோங்கத் தழைந்துவளர் சோணாட்டில்
வரைக்கருஞ்சந் தனக்குறடு மால்யானைக் கோடுகளுந் [பாற்
றிரைக்கரத்தி னெடுத்தெறியுஞ் செழும்பொன்னி நதித்தென்
றணியவிரும் வாட்போக்கித் தடங்கிரிமேற் பேரருளா
லினியசுரும் பார்குழலோ டியைந்துறையு மருமருந்தே!

* இத்தலம், ரத்னகிரியெனவும், சிவாயமெனவும் இக்காலத்து வழங்கும்.

உ. குப்பாயங் கொடுப்பவனே கொழுங்கண்மல ரிடுபவனே
செப்பாய முலையுமையாய்த் திகழ்ந்திடப்பா லுறைபவனே
வெருவாழி கொள்பவனே விரலாழி கொடுப்பவனே
மருவாழி யென்றுரைக்கு மடைப்பள்ளி காப்பவனே
கையம்பா யெழுபவனே கருமுகிலாய்ச் சுமப்பவனே
வையம்பாய் வெள்விடையாய் வண்கொடியா யுறுபவனே
தேராவோர் மனையாளைச் சேர்ப்பவனே நெடுமாலென்
றோராவோர் புலவரெலா முவந்தேத்தப் பொலிவோய்கேள்.

(இவைஇரண்டும் எட்டடித்தரவு.)

க. அடித்தழும்பு புறத்திருக்க வாரியர்கோ மகன்கொடுத்த
முடித்தழும்புங் கொண்டனைவெம் முலைத்தழும்பிற் சீரியதோ!

உ. அருகாக முப்புவன மடங்கவெரித் தருளுநினைக்
கொருகாக மெரித்தனையென் றுரைப்பதுமோர் புகழாமோ!

௩. சீரியர்கைப் புனல்கொல்லோ திருந்துமைகைப் புனன்முடிமே
லாரியர்கைப் புனல்கொள்வா யடங்கானைத் திடுங்கொல்லோ!

௪. தருநிதிக்கோ விருக்கவொரு சார்வணிக ரொடுகலந்தாய்
பெருநிதிக்கோ வெனிற்பெருமான் பேராசை பெரிதன்றே!

ரு. தொடிமுழங்க மணியொலித்துத் துணைவிபுரி பூசைகோலொ
விடிமுழங்கப் புரிபூசை யெஞ்ஞான்று மினிதுவப்பாய்!

சு. உனையடைந்தார் பயமகன்றின் புறுவரெனற் கணியுரகங்
கனையடைந்த விடிநோக்கிக் களித்துறைதல் கரியன்றே!

(இவைஆறும் தாழிசை.)

க. அவனவ ளதுவென வறைதரு வகைமையு
ளிவனிவ ளிதுவென வியைதர லருமையை;

உ. அருவமு முருவமு மருவமொ டுருவமு
மொருவற வுளையெனி னிலையென வொளிருவை;

௩. இதுவலை யதுவலை யுதுவலை யெதுவென
முதுமறை கதறவு மதன்முடி மருவுவை;

௪. இருளென நிலவென வெழுதரு கதிரென
வருளுயி ருறுதர மணிதர நிலவுவை.

(இவைநான்கும் அராகம்.)

க. அருநாம மெனச்சொலுநின் னுயிர்நா மத்துளொரு
திருநாமங் கூற்றறுநின் றிருவடிதாக் குதன்மிகையே!

உ. பிரமனீ யெனவழுதி பிரம்படியே யுணர்த்தியது
சிரமம்வே தாகமங்கள் செப்புதனின் றிருவாய்க்கே!

௩. உள்வாரு ளொருவரே யொருகோடிக் கமைந்துறவுங்
கள்வாரே வுடைக்கோவைக் காயவிழி மலர்த்தியதென்!

௪. கண்டவிட நித்தியத்தைக் காட்டவுங்கங் காளமுத
லண்டவிடந் தரவைத்தா யம்புயஞ்செய் குற்றமெவன்!

௫. ஒருங்கருவி வரைநிகர்சே வொருங்கெரிக்கு நகையிருக்கப்
பெருங்கருவி பலகொண்டாய் பித்தனெனல் விளக்கினையோ!

௬. ஓரெழுத்துக் குரியபொரு ளொருநெடுமா லயனென்பார்
நீரெழுத்து நிகர்மொழிநின் னிலவிதழி முன்னெவனும்!

(இவையாறும் பெயர்த்தும்வந்ததாழிசை.)

௧. துருவொரு தயையினோந் தொழிலி யற்றியு
மருவொரு தொழிலுமில் லாத மாட்சியை;

௨. பெண்ணொரு பாலுறு பெற்றி மேவியு
மெண்ணொரு விகாரமு மிலாத காட்சியை.

(இவையிரண்டும் நாற்சீரடியம்போதரங்கம்.)

௧. உள்ளொளி யாகிநின் றுணர்த்துந் தன்மையை;

௨. வெள்ளொளி விடைமிசை விளங்கு நன்மையை;

௩. அம்பல நடுப்புகுந் தாடுங் கூத்தினை;

௪. நம்பல மெனப்பலர் நவிலுஞ் சோத்தினை.

(இவைநான்கும் நாற்சீரோரடியம்போதரங்கம்.)

௧. சடைநெடு முடியமர் செல்வினை;

௨. தவமுயல் பவர்வினை கல்வினை;

௩. கடையரு வடவரை வில்லினை;

௪. கவினுற நெடுமறை சொல்லினை;

௫. மிடைவலி யினர்தரு பல்லினை;

௬. விசயனொ டெதிர்பொரு மல்லினை;

௭. அடைதரு மிடையதள் புல்லினை;

௮. அளவிட லரியதொ ரெல்லினை.

(இவையெட்டும் முச்சீரோரடியம்போதரங்கம்.)

௧. அருள் கொடுத்தனை;

௨. இருள் கெடுத்தனை;

௩. ஆல மார்ந்தினை;

௪. சூல மேந்தினை;

௫. இசைவி ரித்தனை;

௬. வசையி ரித்தனை;

௭. எங்கு நீடினை;

௮. சங்கு சூடினை;

௯. மதிய ணிந்தனை;

௧௦. கொதித ணிந்தனை;

௧௧. மழுவ லத்தினை;

௧௨. தொழுந லத்தினை;

௧௩. பொருவி றந்தனை;

௧௪. கருவ றந்தனை;

௧௫. பொய்யி னீங்கினை;

௧௬. மெய்யி னோங்கினை.

(இவைபதினாறும் இருசீரோரடியம்போதரங்கம்.)

எனவாங்கு,

(இது தனிச்சொல்.)

பசித்தழூஉ ஞானப் பாலுண் மழவு
மேற்றொடு சூல மேற்றதோ ளரசு
மவிர்தரு செம்பொ ணற்றிடை யிட்டுக்
குளத்தி லெடுத்துக் கொண்ட கோவுங்
ரு. கனவினு மமரர் காணரு நின்னைப்
பரிமா மிசைவரப் பண்ணிய முதனுங்
கரைதரு தமிழ்க்குக் காணி கொடுத்த
நின்றிருச் செவிக்க ணெறிகுறித் தறியாப்
பொல்லாப் புலைத்தொழிற் கல்லாச் சிறியே
கo. னெவ்வகைப் பற்று மிரித்தவர்க் கன்றி
மற்றையர்க் கொல்லா வயங்கருள் பெறுவான்
கொடுவிட மமுதாக் கொண்டதை யுணர்ந்து
குற்றமுங் குணமாக் கொள்வையென் றெண்ணிப்
புன்மொழித் துதிசில புகட்டின
கரு. னன்மொழி யெனினு மருளுதி விரைந்தே.

(இதுபதினைந்தடி நேரிசையாசிரியச்சுரிதகம்.) (க)

நேரிசைவெண்பா.

950. விரைகமழ்பூங் கொன்றைமுடி வேய்ந்துவாட் போக்கி
வரைகமழ வீற்றிருக்கும் வள்ள - லுரைகமழ்பொற்
பாத கமலம் படுமுடியார்க் கப்பொழுதே
பாத கமலம் படும். (உ)

கட்டளைக்கலித்துறை.

951. படர்பா தலம்பொற் கனத்தக டாமப் பசுந்தகட்டு
ளடர்பாய் புவிமென் னிறத்தக டாமதன் மேலழுத்துந்
தொடர்பாய செம்மணி வாட்போக்கி வெற்பதிற் றோன்றுசுட
ரிடர்பா ரகம்விண் ணகமோவ வாங்குறை யெம்மிறையே. (௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

952. இறைவர்திரு வாட்போக்கி யுறைபவர்தா மடுபுன லிரும்பார் வீழ்ந்து, துறைகொளமுன் கவிழ்த்தவொரு காகத்தை முனியாராய்த் தூய தீம்பா, லுறைபடரக் கவிழ்த்தவொரு காகத்தை முனிந்தனர்பா லவாவா லெண்ணி, னுறைசெறிபா லாழியிற்றீ வாய்க்கணையைக் கிடத்தினர்க்கஃ தூண்டா மன்றே. (ச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

953. அன்று வருவிட மென்று கருதவ முன்று மதியெழும்வே
யொன்று மொருவரை நின்று வளியுமு மூன்று வருமயிலே
மன்று மரகத குன்று முறைவரென் வன்று யரமறியா
ரென்று கரையல்கை கன்று பெறவரு ளின்று புரிகுவரே. (ரு)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

954. புரிதருஞ்சடை தரித்தும்வின் மதனனைப் பொடித்துமென் பூங்காவி, விரிதருந்துகி லுடுத்தியு நீர்பொலி வேடமோர்ந் திலடேவி, யரிய வெம்மூலைச் சுவடுமொத் திரமுணர்ந் தாசையுற் றனளந்தோ, தெரிவின் மற்றிவள் பேதைமைக் கென்செய்கோ திருமுடித் தழும்பீரே. (சு)

நேரிசைவெண்பா.

955. தழுவுமையான் முன்னுந் தமிழிறையாற் பின்னுந்
தொழுமிறையான் மேலுஞ் சுவடு - கெழுமுவகீ
ழின்று லெனுங்குறைபோ மென்மனஞ்சேர் வாட்போக்கி
யன்று லமர்ந்தா யடி. (எ)

கட்டளைக்கலித்துறை.

956. அடியுற்ற பாதலம் பொற்றேர் செறிக்குமஞ் சாலையொளிர்
கடியுற்ற செம்மணிப் பூண்வைத் திடுங்கரு வூலமுண்ணும்
படியுற் றதுவிளை நன்னில மென்பர் பசுந்தழும்பு
முடியுற் றவர்திரு வாட்போக்கி மேய முதல்வருக்கே. (அ)

புயவகுப்பு.

ஆசிரியச்சந்தவிருத்தம்.

957. முதுமறையுணர்ந்து கவுணியர்முனன்பர்
மொழிதமிழலங்கன் முற்றப்புனைந்தன
முழுதுலகுமஞ்சி யதிர்தரவெழுந்த
முரணரமடங்கல் செற்றுப்பொலிந்தன
முகிழ்நகையணங்கு மலையரையன்மங்கை
முலையெதிருடன்று முட்டக்குழைந்தன
முடிமதிபொழிந்த நிலவெனவிளைந்து
முதிர்பொடிதிமிர்ந்து பொற்புற்றிருந்தன

பதுமமலர்தங்கு மறையவர்முகுந்தர்
படுதலையெலும்பு கட்டிச்சுமந்தன
பயின்முகமடைந்த கதிரவரொழுங்கு
படுமெயிறுசிந்த மொத்தித்திகழ்ந்தன
படவரவினங்கள் பலபலவளைந்து
பணியெனவிளங்க வொப்பிப்புனைந்தன
பனியிமயமங்குல் பொதிவதெனவும்பல்
படுமுரிவையொன்ற விட்டுச்சிறந்தன

மதுமடையுடைந்து வழியமுகைவிண்ட
மணமருவுகொன்றை பெற்றுக்கமழ்ந்தன
மகிதலநடுங்க வடவரைபிடுங்கி
வரையினும்வணங்கி நிற்கப்புரிந்தன
மழலையமுதின்சொ லிளமகவுநின்று
மலரடிநடுஞ்செய் பெட்புக்கிசைந்தன

மணிவல்யம்விண்டு சிதறவிசயன்செய்
மலியமரெதிர்ந்து மற்கட்டிநின்றன
வதுவிதெனநெஞ்ச மலைதலறவொன்றி
யடைபவர்மலங்க ளட்டுக்களைந்தன
வகிலபகிரண்ட நிலைகெடவெழுந்த
வயிர்சிகரவிந்த மொப்பற்றெழுந்தன
வழகுகுடிகொண்டு புழுகுமலிசந்த
மணிபுதிசையஞ்சி யெட்டப்பரந்தன
வரதகவிலங்கன் முடியமர்தழும்ப
ரரசமையிலிங்கர் வெற்றிப்புயங்களே. (கூ)

நேரிசைவெண்பா.

958 புயறவழ நின்றவாட் போக்கியா ரூர்மேன்
மயறவழ நின்ற மகளே - யயறவழ
நாணோ கலையோ நகுவளையோ மற்றுள்ள
பூணோ கொடுத்தல் புகல். (க0)

கட்டளைக்கலித்துறை.

959. புகலரும் வள்ள றிருமுடி காணப் புகுந்திளைத்தா
யகலரு மாரியர் கோன்வந் ததுகண் டறிகுறிவைத்
திகலருந் தாளுங்கண் டின்பமுற் றாணிலிந் தெண்ணுமிடத்
துகலருஞ் சீர்நும் மிருவருள் யார துரைவிதியே. (கக)

## தவம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

960. உரைதருகா லுண்டுகாலில்லையென நடையொழிவீ ரோங்குகான
வரைதருவெங் குகையிருளிற் புக்கிருள்போக் கிடமுயல்வீர் வையத் தீரே
விரைதருகற் பகநாறு மிளிர்சிகர வாட்போக்கி வெற்பு மேவி
யிரைதருவான் புனற்கங்கை முடியவரைப் போற்றிலுமக் கெம்மாசுண்டே.

## அம்மானை.

இடைமடக்காய் ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

961. எம்மா தவரு மிறைஞ்சுஞ் சடாடவியார்
செம்மா மணிவான் சிலம்பர்கா ணம்மானை
செம்மா மணிவான் சிலம்பரெனி னுய்கர்பொரு
ளம்மா விரும்புவர்கா ணற்றவரோ வம்மானை
யாசை யுடையார்கா ணரியரே யம்மானை. (கங)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

962. மான்கொண்ட கரதலத்தீர் மதுரைபுகுந்
தென்செய்தீர் வளையல் விற்றீ
ரூன்கொண்ட வுயிர்வகைமே வுறிற்போற்று
வணிகர்குழாத் தொருவ ரென்பீர்

தேன்கொண்ட தெனப்பொருட்பா கமுங்கொள்வீ
 ரின்னுமவர் தெரியா ரோர்ந்து
கூன்கொண்ட மதிமுடியி ரென்னெனின்முன்
 னெனினதுவுங் குறைவு தானே. (கச)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

963. குறையின்மா ணிக்கமலை வெள்ளிமலை நாளுங்
 குலவுசோற் றுத்துறைபாற் றுறைநெய்த்தா னமுநீ
ருறையில்கரச் சிலையம்பொன் வரைநெடுமான் முதலோர்க்
 குறுபோகங் கொடுப்பஃதுநுந் திருவருள்பா லுறைவாள்
கறையிலறம் பலவளர்ப்பா ளொருதோழ னிதிக்கோன்
 கரையில்பொருட் பங்களிப்பார் கனவணிக ருளர்நீர்
முறையிலெலும் பாதியணிந் தையமேற் றுழல்வீர்
 முடித்தழும்பீ ரிதுதகுமோ மொழிமினடி யேற்கே. (கரு)

கட்டளைக்கலித்துறை.

964. அடிபடு மால்விழி வாட்போக்கி நாத ரவிர்தழும்பு
 முடிபடு நீர்கொள் குடந்தோறு மேவ முயன்றுதவம்
 படிபடு மாறெவன் செய்தீர்முன் னென்று பகைத்துடம்பு
 பொடிபடு மாறுவிட் டீர்நன்று காண்கரும் புட்சங்கமே. (கசு)

## மடக்கு.

கட்டளைக்கலிப்பா.

965. சங்க வாய்முன மாய்ந்தது கூற்றமே
 தாளொ டாமுன மாய்ந்தது கூற்றமே
 யங்க மாலிகை செய்யவங் கொன்றையே
 யளித்தல் பேரன்பு செய்யவங் கொன்றையே
 செங்கண் மால்விழி யாரர விந்தமே
 திருமு டிக்கணி யாரர விந்தமே
 பொங்கு போர்வை தருமணி நாகமே
 புக்கி லும்பைந் தருமணி நாகமே. (கஎ)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

966. நாகமே யணிகலமாக் கொண்டவாட் போக்கி
 நாதருக்கென் னுளதுமணி மலையொன்றுண் டென்று
மோகமே கொண்டனையம் மலையுமவர்க் கெங்ஙன்
 முழுதுமா முள்ளதுபன் னிருபாகத் தினிலோர்
பாகமே யதுபோது மெனிற்றிருமே னியிலோர்
 பாதியா ளுமைமற்றைப் பாதியுள தென்னின்
மேகமே நிகர்மேனி மாலுளன்மற் றதறகும்
 வெறுவெளியே யிவர்க்குளது மெய்ம்மையிது மகளே. (கஅ)

நேரிசைவெண்பா.

967. மகளேமால் கொண்டதெவன் வாட்போக்கி யார்க்குத்
துகளேயா நீறுவிரை தோற்றென் - புகளேறு
நாகம்பூ ணஞ்சா நகுபுலித்தோ லாடைமுடி
யேகம்பூ ணஞ்சா மெனின். (௧௯)

மதங்கு.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

968. எனக்கரிய வண்டரெனுக் கனக்கரிய கண்டருறை யெழில்வாட் போக்கி, மனக்கரிய வளம்பாடி மணிமறுகி னின்றாடு மதங்கி யாரே, சினக்கரிய நுங்கள்விழி வாளிரண்டு மேயுயிருஞ் சேரப் போழும், கனக்கரிய வாளிரண்டு கைக்கொடுவீ சுவிரிலக்குக் கருதின் யாதே.()

கட்டளைக்கலித்துறை.

969. கருப்பங் கழனி வளைமா மணிவரைக் கண்ணுதரு ள்
விருப்பங் கழனி தமாலயற் போற்றென்று வேண்டினுமெம்
முருப்பங் கழனி கழப்புரிந் தாழு முறுத்தமனந்
திருப்பங் கழனி கருந்தளிர் பூவையுஞ் சிந்திப்பமே. (உ௧)

மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

970. மேதக வுரியாரும் போதக வுரியாரும்
விண்ணம் பணிவாருந் தண்ணம் பணிவாரு
மாதர மொழிவாருங் காதர மொழிவாரு
மமலையம் பதியாருங் கமலையம் பதியாரும்
பூதர வளைவாருங் காதர வளைவாரும்
பூதம் படையாரு மேதம் படையாரு
மாதல மிசையாருங் கோதல மிசையாரும்
வரதன வெற்பாரு மரதன வெற்பாரே. (உஉ)

வண்டுவிடுதூது.

கொச்சகக்கலிப்பா.

971. பாராய்வாட் போக்கிப் பரமனா ரெண்காற்புள்
வாரா யறுகாற்புள் வண்டேநீ யாதலினா
லோராய் பயந்தபமுன் னூற்றவிரு காற்புளலை
சேரா யவர்பாலென் சிந்தைமய லோதுதற்கே. (உ௩)

மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

972. ஓதுமறை யாருமருள் யாதுமறை யாரு
முரிவையுடை யாருமழு வெரிவையுடை யாருந்

தீதுபதி யாருமுல கோதுபதி யாருஞ்
செல்வமுடி யாருநறு வில்வமுடி யாருங்
கோதுபுரி யாரும்வெளி மீதுபுரி யாருங்
கோலமறி யாருமுயர் சீலமறி யாருங்
காதரவு ளாருமிய லாதரவு ளாருங்
கனவமலை யாருமர தனவமலை யாரே. (௨௪)

## மேகவிடு தூது.

கட்டளைக்கலித்துறை.

973. மலையா னிலத்து வருவேள் சினக்குமுன் மாமுகில்கா
டலையா னிலத்து வணங்குவல் சென்னித் தழும்பரங்க
மலையா னிலத்து விதயோகர் முன்வரு வாரணிம
தலையா னிலத்து மகிழ்ந்திருந் தேற்கத் தருதிரின்றே. (௨௫)

## வண்டுவிடு தூது.

தாழிசை.

974. இன்று பைங்கிளியை யேவி னம்மைமகை
யிருக்கு மோர்கிளியொ டுரைசெயு
மெகின நேடியறி யாத தேமுடிமு
னெங்ங னின்றுசெவி யருகுறு
மொன்று மங்குலரு குறின்வ ளைத்திவையொ
டுறுதி யென்றுசடை சிறைசெயு
முறுக ருங்குயிலொர் செவிலி பட்டதை
யுணர்ந்த தேசெலவு ளஞ்சிடுந்
துன்று தென்றலெதிர் சென்றி டிற்கடிது
தோள்கொள் பூணிரையெ னக்கொளுந்
துச்சி லல்லவென வண்டு வாழ்செவி
துனைந்து சேரும்வலி யார்க்குள
தன்று தொட்டெனது கொண்டை வாழும்வரி
வண்டிர் காண்மய லடங்கவு
மரத ஞசல ரிடத்து ரைத்தவ
ரணிந்த மாலைகொணர் மின்களே. (௨௬)

## காலம். மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

975. மின்னுமற லுறவருந்திக் குயினடுக்குங் காலம்
விடாதுமற லுறவருந்திக் குயினடுக்குங் கால
மன்னுபசுந் தோகைபரி விற்குனிக்குங் கால
மதவேணர் தோகைபரி விற்குனிக்குங் காலந்

துன்னுகொடித் தளவமரும் பப்படருங் காலந்
தோயார்பித் தளவமரும் பப்படருங் கால
முன்னுவெயில் வெம்மையுறப் புணராத கால
முடித்தழும்பர் வெம்மையுறப் புணராத காலம். (உஎ)

கட்டளைக்கலித்துறை.

976. காலங் கழியு மவமே நமன்றமர் கைக்கொளுங்கான்
மாலங் கழியும் வகையுள தோமல மாயவெனைச்
சீலங் கழியும் பருந்தாழ்கி னன்பரிற் சேர்த்தலனு
கூலங் கழியுந்தி வைப்பேத் தரதன குன்றத்தனே. (உஅ)

## சிலேடை.

நேரிசைவெண்பா.

977. குன்றுத வேங்கையுமொண் கொம்புபடு வேங்கையுமெய்
பொன்று தெனப்பொலிவாட் போக்கியே - நன்றுமேவார்
மின்னைப் புரப்பான் மிளிர்தரவைத் தானருள்வைத்
தென்னைப் புரப்பா னிடம். (உகூ)

கட்டளைக்கலித்துறை.

978. இடம்படு மாணிக்க மாமலை மேவு மிறையவரே
திடம்படு கூற்றடு நீரேயெல் லாம்வல்ல சித்தரெனி
னடம்படு தாமரை யென்னுளப் பாறை நன்மலர்த்த
வுடம்படு வீர்மறுத் தாற்சில வல்லரென் றேதுவனே. (கூo)

## குறம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

979. ஓதுவனப் பன்றிமருப் பொசித்தமலைக் குறவற்
குவந்தொருபெண் கொடுத்தகுடி யுதித்தகுற மகள்யான்
போதுறையு மோரிருவர் முதத்தலைநாற் றலையார்ப்
புணர்குறிசொற் றனன்முனநின் பொலிமலர்க்கைக் குறியம்
மாதர்கரக் குறிபலவுங் கடந்துமே லாய
வாட்குறியாய் மருவுதலின் மறைமுத லாகமங்கூ
றுதாரநற் குறிபலவுங் கடந்துவாட் குறிமே
லலங்கவொளி ரைந்தலையாற் புணர்குவையின் றறியே. (கூக)

## தவம்.

நேரிசைவெண்பா.

980. அறியா தவமே யடைந்தடவி நோற்ற
னெறியா தவமே நினைமின் - முறியார
நண்ணமா ணிக்கமலை நாத ரளித்தமரும்
வண்ணமா ணிக்க மலை. (கூஉ)

## தழை.

### கட்டளைக்கலித்துறை.

981. மலையா வருட்சிவன் வாட்போக்கி யன்ன மயில்வனப்புக்
குலையா விளந்தளிர் கொண்டுதன் மேனி குளிரவொற்ற
நிலையாக வேற்றுத் தளிர்மேனி யாயொப்பு நீத்துவிற
லுலையா தவநடு வாலாய மேவ வுடன்பட்டதே. (௩௩)

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

982. படவா ளரவ மரைக்கசைத்த பரமர் வாழும் வாட்போக்கித்,
தடவாள் வரையென் மனம்போன்ற தனித்தே மனையா ளியனஞ்ப,
விடவாள் விழிவேள் கழைக்கோடு வில்லே புருவ மெனைத்துயரங்,
கெடவாள் கொங்கை யிபக்கோடு கெட்டேன் மருங்குன் முயற்கோடே. (௩௪)

### வேற்றெலி வெண்டுறை.

983. கோடுபொலி வாட்போக்கிக் குளிர்வரைமே லஞ்சுரும்பார் குழற்கோ மாது
மேடுபொலி கடிக்கொன்றை முடிக்கொன்ற வெடுத்தணியு மெங்கோ மானு
மலிதளிர்ப் புன்னையும் வண்டளிர்ப் பிண்டியுங்
கலிகருங் கொண்டலுங் கவின்றசெங் கொண்டலு
மெலிவில்லைபங் குவளையும் விரும்புசெங் கமலமு
மொலிகெழு மிவ்விரண் டோருழைக் கண்டெனப்
பொலிதருந் தன்மையைப் புலியுளீர் பாருமே. (௩௫)

### ஒருபோருண்மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

984. க. பார்வளர்மா ணிக்கப் பராரை வரைமுடிமே
லார்வளர்செவ் வேணி யமலர் பொலிதோற்றஞ்
சீர்வளர்பொன் மேருவின்மேற் செங்கதிரை யொக்குமே;

உ. விண்பொலிமா ணிக்க விசால வரைமுடிமேற்
பண்பொலிநால் வேதப் பரமர் பொலிதோற்ற
மெண்பொலியன் ஞமலைமே லேற்றுசுட ரொக்குமே;

௩. தூயமா ணிக்கச் சுடரார் வரைமுடிமே
லாய தழும்புமுடி யையர் பொலிதோற்றஞ்
சேயபவ ளக்கிரிமேற் செம்மணியை யொக்குமே. (௩௬)

### நான்கடி வெளிவிருத்தம்.

985. ஒக்க வனைத்து மாக்கிடு வாரு மொருநீரே
தக்க சிறப்பிற் காத்திடு வாரு மொருநீரே
புக்கவை முற்றப் போக்கிடு வாரு மொருநீரே
மிக்க முடிக்கட் கீற்றுடை யாரு மொருநீரே. (௩௭)

### கட்டளைக்கலித்துறை.

986. நீர்கொண்ட சென்னித் தழும்புடை யீரென்று மீள்விடைமேல்
வார்கொண்ட கொங்கைச் சுரும்பார் குழலொடும் வந்தருள்வீர்

காரகொண்ட சிந்தை யிலாதவ ஞயிறு நாடிநுமைக்
கூர்கொண்ட வாள்கொண்டு வெட்டிடு வானுட் குறித்திலனே ()

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

987. குறிபடுபன் மணிவிற்றீர் மா தலஞய் வழக்குரைத்தீர் கூடன் மேவி
நெறிபடுமற் றவையோரா ராரியநீர்ச் சிறுகுறையு நிரப்பு கென்று
பறிபடுவே ணிப்புனல்வாட் போக்கியீர் பெருங்கணக்குப் பார்த்துநின்றீர்
செறிபடுபல் கிளைவணிகர் நுங்கூட்டுக் கிசைந்தனரச் சிறப்பொன்றோர்க்தே.

நேரிசைவெண்பா.

988. ஓராழி மேற்கிடக்கு மோராழிக் கேவிடுக்கும்
போராழி யேந்திப் பொலியுமே - நேராகா
வெம்மா னகத்திருக்கை வீத்தேந்து வாட்போக்கி
யெம்மா னகத்திருக்கை யே. (சo)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

989. ஏறெனவிப் புனத்திலடிக் கடிவருவார் நகர
மெங்கென்பார் நெடுங்கணக்கு மோர்ந்திலரோ நீரே
பேறெனநும் மிடையுணர்ந்துற் றனமென்பா ரிடையின்
பெற்றியிவ ருணர்வாரோ கைம்மாறே டியதிவ்
வாறெனரே வேர்கைம்மா னுடையவாட் போக்கி
யண்ணலோ மூறிகொள்ளு மென்பார்கொள் வீரிக்
கூறெனவிப் புனவேங்கை கொடுக்கவிசைந் தனமோ
குறித்தவிவர் கருத்துவிரித் துரைக்கரிதா யினதே. (சக)

மடக்கு.

விருத்தம்.

990.

ஆயு மிதழ்வாய் பானலமே யகலு மிதழ்வாய் பானலமே
யணவ மருங்கா மனப்புள்ளே யடவ மருங்கா மனப்புள்ளே
பாயுங் கயலா யினவளையே பாவிக் கயலா யினவளையே
பவளம் படர வருந்திடரே பாராய் படர வருந்திடரே
மேயுங் குருகே யமர்கழியே வினையேற் குருகே யமர்கழியே
விரைந்தம் பரவாய்ப் படர்படவே வினையோ பரவாய்ப் படர்படவே
வாயு மலராக் கழுநீரே மாறு மலராக் கழுநீரே
வளமா மலையா ரணையாரே மணிமா மலையா ரணையாரே. ()

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

991. ஆர்கொண்ட செஞ்சடையீர் வணிகருணீ ரொருவரெனற் கையமில்லை, கூர்கொண்ட சூலமழுக் கொண்டிருந்து மண்டுசினங் கொடுத ரத்திப், போர்கொண்ட வாரியர்கோன் வாள்கொண்டு வெட்டிடவும் பொறுத்துக் கொண்டீர், சீர்கொண்ட விதனுன்மற் றவர்கொடுக்கும் பொருட்பங்குஞ் சிதைத ராதே. (சங)

நேரிசைவெண்பா.

992. சிதைக்கலமே யாநின் றிருவடியைப் பற்றிச்
சிதைக்கலமே யாநின்ற தீமை - புதைக்குமெழு
தோற்றப் பரவை முடியாய்சொல் வாட்போக்கி
யாற்றப் பரவைமுடி யாய். (சுச)

## சம்பிரதம்.

எழுசீர்க்கழிநெடிலடி

இரட்டை ஆசிரியவிருத்தம்.

993. ஆயுமிவை மெய்ம்மையொவ் வொருவிரற் றலையொவ்வொ
ராழிகோத் துறவெடுப்ப
னம்பொற் சிலம்புகால் வளைதரப் புனைகுவ
னண்டங்கள் பலதகர்ப்பன்
பாயுமலை சூழ்புடவி வாயலரி மலர்தரப்
பண்ணுவன் குவல யங்கைப்
பற்றுவன் றிக்காம்ப லோடுவெள் ளாம்பலும்
பற்றிக் கசக்கி யெறிவ
னேயுமத யானையை பெறும்பிதான் மந்தியை
யிருந்தும்பி தானென்னவே
யிப்பொழு தியற்றிடுவ னின்னமும் பலசெய்வ
னித்தனையும் வித்தை யலவாற்
காயுமயின் மூவர்புரம் வேவநகை யாடுகங்
காதர னுமாத ரன்சங்
கரனதர னசலக் கடவுளுக் கிணையாவொர்
கடவுளையு மறிவிப்பனே. (சரு)

## மடக்கு.

எழுசீர்க்கழிநெடிலடி

இரட்டை ஆசிரியவிருத்தம்.

994. அறிதரு மிருக்கை மாணிக்க மலையே
யமையில்சொன் மாணிக்க மலையே
யவிர்தரும் வேணி யுருவுமோ ராறே
யத்துவா வுருவமோ ராறே
முறிதலின் முடியேற் றதுமொரு வெட்டே
மூர்த்தமுந் தோமொரு வெட்டே
மூடிய தெதிரி லாவுவா வுரித்தே
மூலமீ றிலாவுவா வுரித்தே
தறிபக வெழுந்த தம்மவன் கணையே
தாடரிப் பதுமவன் கணையே

தாளெடுத் தாடிக் களிப்பதம் பலமே
சாற்றுவார்க் களிப்பதம் பலமே
குறிகொடேர் விடுவா ரம்புயத் தாரே
கொன்றைவா ரம்புயத் தாரே
கோவதெவ் வளவா மனத்தனை யரையே
கொள்ளுவா மனத்தனை யரையே. (சசு)

சந்தத்தாழிசை.

995. அரைவிராவ வணியுமாடை யதளதாக வன்றிவே
றறைவதாக வரவமாக வணியதாக வெண்புதார்
புரைவதாக விரையுநீறு புரியுமூனு நஞ்சமே
புணர்வதாக வுணர்தராது புணருமாசை கொண்டுளாள்
கரையுறாத துயரினூடு கழியுமாறு கன்றியோர்
கடியபாவி மதனனேவு கணைதுழாவு நன்றிதோ
வரையவாரும் விரையவாசம் வரையின்மாலை தந்துநீள்
வரையிராசன் மகளொடாடி மகிழிராச லிங்கரே. (சஎ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

996. கருதுந் தருதும் விருதுமலி கதியென் றுரைப்பீர் கொதி சகடு, மருதும் பொருது மெருதுடையீர் மணிமா மலையீர் யானின்ற, விருதுங் கவன முலையாளைச் சுரும்பார் குழலி யென்றறகுந், தருதுங் கருது மிடமென்னீர் தருவீர் தகாவப் பெயராட்கே. (சஅ)

கட்டளைக்கலித்துறை.

997. பெயராத மாற்குழி வீழ்டனத் தேரைப் பிறங்கருளாந்
துயராத வேக்கொண் டெடுத்தேறி னீமுத் துகளுமறு
மூயராத தோவெனும் வாட்போக்கி யாய்பில முற்றபொற்றே
ரயராத வேக்கொண் டெடுத்தேறி முப்புர மட்டவனே. (சகூ)

நேரிசைவெண்பா.

998. அடரும்வன மேவுமிரண் டாயிரங்கோ டேந்திப்
படரும்வன மேவலரோன் பண்வாய் - தொடருமே
நாட்போக்கி யாளொருத்த னையா தருள்புரியும்
வாட்போக்கி யாளொருத்தன் மா. (ருo)

சித்து.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

999. மாமேவு வாட்போக்கி மாதேவர் தமக்கிருப்பு வரையை மூன்றுட், டீமேவு வெள்ளிவரை யாக்கியவண் சித்தர்யாஞ் சொல்லக் கேண்மோ, பாமேவு மற்றவர்கை நாகமும்பொன் ளுக்கினர்தாள் பணி வா னோர்க்குப், பூமேவு நாகலோ கத்தையும்பொன் னுலகாகப் புரிந் தோ மன்றே. (ருக)

### இதுவுமது.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1000. அன்றுமது ரையிலெல்லாம் வல்ல சித்த
ராயினு ரடிபரவி யருண்மா ணிக்கக்
குன்றுறையுஞ் சித்தர்யாம் புற்கை யேனுங்
கூழேனும் பசிதீரக் கொடுவா வப்பா
வின்றுவரு மிரும்புதனை யொன்றுஞ் செய்யா
திருந்துதயத் துதித்ததுபொன் னென்னச் செய்வோ
நன்றுமது நாள்வெள்ளி யெனவுஞ் செய்வோ
நானிலத்து நம்மருமை யறிவார் யாரே. (ருஉ)

### இதுவுமது.

வெடி விருத்தம்.

1001. ஆரப்பா நம்மருமை யறிய வல்லா
ரகிலமிகி லம்புகழ்வாட் போக்கி கண்டக்
காரப்பார் சடையார்மே லாணை மெய்யே
கரிகொணர்க விரும்புமா தங்கஞ் செய்வோம்
பாரப்பா வப்பரம ரெருத்துக் கொட்டில்
பைம்பொன்னே யெனச்செய்தோ முனமிப் போது
மோரப்பா வெனக்கொடுவா தாகந் தீர
முகந்தடிசி லளித்திடினு முகந்துண் போமே. (ருக)

### கலிவிருத்தம்.

1002. உண்ணு நஞ்சமு தாகு முனக்கமு
தெண்ணு நஞ்சம தாகு மெனக்கிதெ
னண்ணு மாணிக்க மாமலை யாய்நகப்
பண்ணும் விண்ணம் படர்மதி வெம்மையே. (ருச)

### கைக்கிளை.

மருட்பா.

1003. வெம்மையொடு தண்மை விரவத் தருமுலக
மும்மை யுடையான் முகநோக்க - மம்மா
தகரரு மற்றவை தனித்தனி யெழத்தரும்
புகாரு மொருவாட் போக்கிப்
பகரரு மடந்தை பனிமுக நோக்கே. (ருரு)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1004. நோக்குறுமா ணிக்கமலை யெதிர்ப்படுமோர்
பொருளகத்து நுழைவ தன்றித்
தாக்குமது தன்னகத்து நுழையவிடங்
கொடாதமருந் தகைத்து மீதா

தேக்குமொழிப் பரம்பொருளு மத்தகைத்திவ்
வொப்புமையின் றிறமு ணர்ந்து
தூக்குநவில் பவரனைய பொருளேமலைக்
கொழுந்தெனுமத் துதிமெய் தானே. (ருசு)

## ஊசல்.

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

1005. துதிக்கும் பரமர் சுரும்பார் குழலோ
டுதிக்கும்வாட் போக்கி யுறையுஞ்சீர் பாடிக்
கதிர்க்கு முலைகுலுங்கக் கைவளைக ளார்ப்ப
வதிர்க்குந் துடியிடையீ ராடுக பொன்னூசல்
ஆயும் பிடிநடையீ ராடுக பொன்னூசல். (ருஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

1006. ஊச லாடு நெஞ்சமே யோவி மாய வஞ்சமே
வீச லாதி யங்கரே மேவிராச லிங்கரே
வாசம் வீசு தென்றலோ வாது பாய நின்றலோ
மூச வேள தங்கையே மூட வாடு மங்கையே. (ருஅ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1007. மங்கையொரு பங்குடையார் மாணிக்க மலையொளிமேன் மருவி மென்பூஞ், செங்கையர மகளிருல கத்தமர்வெண் களிற்றுட லஞ் செம்மை செய்ய, வங்கையொரு சதகோடி யானெய்ததோர் மூழ்கவெப்போ ராற்றிற் றென்ரு, சங்கையுறும் வானுறு சோலை மதி பருதியெனத் தயங்கு மாலோ. (ருகூ)

கொச்சகக்கலிப்பா.

1008. மாலாய பச்சை மயிலையிடம் வைத்தனையென்
பாலா யவளும் பசப்புற்ற காரணத்தான்
மாலாய பச்சை மயிலே வலத்துவைவிண்
பாலாய வாட்போக்கிப் பைம்பொற் சிலையானே. (சுo)

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

1009. ஆனவனு காதவனென் றன்புடையார் பாலாயா
னுனவனு காதவனே நானுக வுட்குறிக்குங்
கோனவன்மு னுகியல்லாக் கோமான்மா ணிக்கமலை
வானவன்சீர் பாடாதார் வாயென்ன வாயே
மலைக்கொழுந்தென் றுரையாதார் வாயென்ன வாயே. (சுக)

## களி.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1010. வாயாது வருந்துமுயி ரும்பலவே பரமர்
வாட்போக்கி யமருமெழு மாதரடிப் பூசை

வியாது செயிற்பிறிதும் வேண்டுவதோ விண்ணோர்
விரும்புசுரா பானத்தா லமரரே யானார்
தேயாது தாலத்தின் கட்குடியர் நரர்மா
றெண்டிரைக்கட் குடியனைய னலரின்கட் குடிய
ரயாது வீணாகத் திரிவதெவ னங்தோ
வடைவரோ குருக்களொழித் தரியபர கதியே. (௬௨)

இதுவுமது.

கட்டளைக்கலித்துறை.

1011. கதிகாண் வழியொன்று கூறுதுங் கேண்மின் கடற்புவியீர்
விதிகா ணரியதென் றேகஞ்ச மேவுவன் விண்டுவென்பா
னிதிகா ணெனக்குலிலை கொள்வானிப் பூரண நீத்தலென்ன
மதிகா ணிதுகொளின் வாட்போக்கி யார்சத்தி வாய்ப்புறுமே.

இதுவுமது.

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1012. உற்றவொளி மாணிக்க மலையிறைவர் பனையடி
யுவந்திருப் பதும் வேடர்கோ
னுதவெச்சி லூன்மிசைந் ததுமறை மகஞ்செய
வுரைத்தவிதி யுந்தெளிகலார்
கொற்றமுறு மமரரொரு தக்கன்வேள் விக்களங்
குறுகியரு ருற்ற துணரார்
கொல்லா னெனுங்குறட் டொழுமெனலை விதியெனக்
கொள்வர்மறை வினையே யெனார்
பொற்றகலை மான்விருப் பன்பிரமன் மாயவன்
போகுமான் பின்றொடர் பவன்
பொருகேழன் மீனுரு வவாவினன் குக்குடப்
புட்பற்று வோன் முருகவேள்
சொற்றவிவை யாவுநன் குறவுணர்ந் துட்கொடு
தொடங்குமின் சத்திபூசை
தூயதே றலுமினிய தசையுமொரு வீர்பெருஞ்
சுத்திமுத் தியுமடைவிரே. (௬௪)

மடக்கு.

கட்டளைக்கலிப்பா.

1013. அடைய மாலை யொருவண் டரங்கமே
யப்புக் கூடு மொருவண் டரங்கமே
யிடையி லாவுமை யேயிடப் பாகமே
யிபவ னத்தலை யேயிடப் பாகமே

யுடையெ ளுவரை கூடுவ தாசையே
யுன்னு மன்பரங் கூடுவ தாசையே
சடைவி ராய விருப்புச் சிவாயமே
சங்கரற்க விருப்புச் சிவாயமே. (கூரு)

இதுவுமது.

1014. மேவ லார்புரத் துந்தழன் மூட்டுவார்
மேவு வார்புரத் துந்தழன் மூட்டுவார்
காவன் மேவிய மாற்கும் வெளிப்படார்
காவ லோவிய மாற்கும் வெளிப்படார்
ஓவ லோவினர்க் கும்பசப் பூட்டுவா
ரோவன் மேவினர்க் கும்பசப் பூட்டுவார்
நாவ லார்புகழ் மாணிக்க மாமலை
நாய ளுரு நடுநிலை யாளரே. (கூசு)

நேரிசைவெண்பா.

1015. ஆளாக வந்த வடியேற் கடர்கரும்பு
வேளாக வந்த விரவிழித்த - காளாய்
சிவாய வரையாய் தெளியவரை யாய்திக்
கவாய வரையா யருள். (கூஎ)

மறம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

1016. அருள்செறிமா ணிக்கமலை யிறைவன் செம்பொ
னணைத்தொருவா ரிதிநாப்பண் மிதக்குந் தோணிப்
பொருள்வணிகன் மூளைபல்கா னடந்த தோர்ந்து
போராட்டத் தொருவளர்ப்புப் பெண்ணை யீந்தோர்
தெருள்கிலளு யவற்கதிக னென்று வேந்துந்
தேறியொரு பெண்கேட்டான் செப்பி வற்குங்
கருளகல்யா னதிகனென விளிப்பார்ப் பானுங்
கண்ணறக்கேட் பான்மறவர் குலச்சீர் நன்றே. (கூஅ)

இதுவுமது.

கலிவிருத்தம்.

1017. நன்றக மகிழ்ந்துமற நங்கைவிழை வுள்ளத்
தொன்றரசு பொய்த்திரு முகங்கொடிவ ணுற்றாய்
கொன்றணியன் மெய்த்திரு முகங்கொணர்தும் யாமே
யின்றறிக தூதமணி வெற்பரு ளேற்றே. (கூகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

1018. ஏதமில்வாட் போக்கியிறை பல்வளைபார்ப் பனமடவா ரிடங்க வர்ந்து, மேதகுகூ டலில்விற்றான் முனமிந்நாட் கவர்வதெங்கு

விற்பான் கொல்லோ, வோதல்செயு முலகுள்ளங் கவர்கள்வ னுயிர்க டொறு மொளிக்குங் கள்வன், மேதகைய விவனெனும்யான் வளைக வருங் கள்வனென விள்ளுவேனே. (எ0)

கட்டளைக்கலித்துறை.

1019. விள்ளும் படிவரை வாட்போக்கி னீர்நும் விரைமலர்த்தார்
நள்ளும் படிகொடுப் பீர்மறுப் பீரெனி னூடுநதற் [வீர்
கொள்ளுங் கணுங்கட் செவிப்பூணுந் தாளுங் கொடுத்தருள்
உள்ளுங் கணைமதன் றென்றல்வெண் டிங்க ளூரனறவே. ()

மறம்.

நேரிசைவெண்பா.

1020. அறவர்புகழ் வாட்போக்கி யண்ணல்வரைப் பால்வாழ்
மறவர்குலப் பெண்வேட்ட மன்னர் - திறலி
னுறுவார்பின் றேமென் றுடன்றமர்த்து மாய்ந்து
பெறுவார்பின் றேவர்குலப் பெண். (எ௨)

கட்டளைக்கலித்துறை.

1021. பெண்பா லுகந்தருள் வாட்போக்கி மேய பெருந்தகைக்கு
வண்பால் கவிழ்த்தபுள் ளோகுயில் வாரிமங் தாகினியோ
விண்பா லுயர்தென்றல் வெற்பெழு மாதர் விழைந்தவெற்
கண்பா லிருளன்ப ருள்ளிரு ளோபுறங் காண்பதற்கே. [போ

பாண்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

1022. காணரிய மாணிக்க மலைவளரோங் கொளியிற்
கலப்புறுமின் பிதுவெனக்கொண் டலப்பறுசீர்த் தலைவர்
நாணரிய பரத்தையவா வினரினிமற் றெனையு
நச்சுவர்பாண் மகனேயன் பினர்நின்பா லெனநீ
பூணரிய பொய்பூண்டு வீணையிசைத் திடுதல்
போதுமிவ ணின்றகறி நின்றனையே லெறியுங்
கோணரிய கற்களினின் கருந்தலையுஞ் சுவற்பாற்
கொண்டிடுபத் தருந்தகரு மண்டிடுமோன் முடிவே. (எச)

வஞ்சித்துறை.

1023. முடித்தழும்பர்சீர்
படித்தவன்பர்பூ
வடித்தொழும்பரே
தடித்தவின்பரே. (எ௫)

வஞ்சிவிருத்தம்.

1024. இன்ப ராயொன் றிரண்டெனும்
வன்ப ராய்வழி மாற்றுவார்
முன்ப ராய்முடிக் கீற்றுளா
ரன்ப ராயமர் வார்களே. (எ௬)

கட்டளைக்கலிப்பா.

1025. ஆரவாவு படைநெடுங் கண்ணுமை
யாள வாவொரு பாலளித் தாரந்தச்
சீரவாவு மெனக்கொரு பாலருள்
செய்த வாவிக் கொடாதமர் வாரமென்
பாரவாவு குளிர்புனல் வெங்கொடும்
பால வாவழ லேந்திப் பொதுநின்று
நாரவாவு முடித்தழும் பாளர்தா
நடுவி லாதவ ரென்னினென் னுவரே. (எஎ)

நேரிசைவெண்பா.

1026. ஆவா வடியே னலந்தே னருள்வேத
மாவா வடியேன் மழுப்படைக்கைத் - தேவா
வரும்பாச மைந்துமற மாற்றூர்வாட் போக்கி
யரும்பாச மைந்து மற. (எஅ)

இடைச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1027. அறவிடையார் வாட்போக்கி யண்ணலார் நகரிடைச்சி யாரேயுங்க, ளுறவிடையார் வெறுப்புறுவா ராடைநீக் குபுபணப்பா லுறவெற்கீயுந், தெறவிடையா ரனுருமுவா திரண்டுபாற் குடங்களு மென் செங்கைக் கொள்வேன், பெறவிடையா ரருள்புரியு நயமோரோ மோரெனுஞ்சொற் பேசி டீரே. (எகூ)

இதுவுமது.

நேரிசைவெண்பா.

1028. பேசுமா ணிக்கமலைப் பெம்மா னணிநகரத்
தேசுமாண் வீதியுலாஞ் சிற்றிடைச்சி - மூசுபூ
வண்டரே யாவார் வனமுலைசேர் வார்யாரு
மண்டரே யாவார்மெய் யாம். (அ0)

வலைச்சியார்.

கட்டளைக்கலித்துறை.

1029. ஆவேறு மையர்செம் மாணிக்க மாமலை யாளர்மலர்
மேவேறு கூந்தல் வலைச்சியர் போகம் விரும்பியன்றோ
நாவேறு நால்வர்தம் பாவேறு மாலை நலமணக்குந்
தூவேறு தோளிற் புலவார் வலைமுன் சுமந்ததுவே. (அக)

கலிவிருத்தம்.

1030. வேலைவாய் விடமுணும் விருப்ப ரென்கனி
மாலைவா யமுதுணும் வாஞ்சை வைத்திலார்
கோலவாய் மணிவரைக் குழகர் மற்றவர்க்
காலவாய் விருப்பமே யளிக்கு மாலையே. (அஉ)

## வலைச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1031. மாலைமுடித் தழும்பரருள் போலெனக்கு வெளிப்பட்ட வலைச்சி யீர்நுஞ், சேலையணைத் திடச்சிலர்வா யூறுவரால் கெளிறு செறி திருக்கை கோப்ப, வாலையடு கரும்பினுடைந் துளமலங்கு வார் சிலர்சொல் லயிரை யேற்க, வேலையொழி வார்சிலர்யா ஞான்மன் னச்சுறவு மேவி னேனே. (அங)

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1032. மேவார் புரஞ்செற்ற வாட்போக்கி யார்தில்லை
மேவிநாங் கண்ட தில்லை
மேவால வாயால வாய்மனண் ணுமலை
விராவியக ணண்ணுமலை
மாவார் கழுக்குன்றம் வன்கழுக் குன்றமேர்
மலியொற்றி யூரொற்றியூர்
வாஞ்சியம் வாஞ்சிய மிபக்கா டிபக்காடு
மறைவனம் மறைவனநலத்
தாவார் விரும்பிமரு வாரூர் திருக்காழி
யம்மமரு வாரூர்திருக்
காழியா வடுதுறை யடுக்குமா வடுதுறைந
லவிநாசி யவிநாசிவண்
காவார் பெருந்திருக் காளத்தி யுரைதிருக்
காளத்தி யென்று கருதிக்
கழித்தென வொழித்திடி னழித்தல்செய் பழித்தனை
கழன்றுய்வ தென்றுமனமே. (அச)

## கூத்தராற்றுப்படை.

நேரிசை ஆசிரியப்பா.

1033. மனனமர் பவுரி மலைப்புப் பித்தங்
கடகமுள் ளாளனங் காணங் குனிப்பு
வீரட் டானம் விரும்பும் பிரமரி
பாத மிலயம் புரிய முப்பித
ரு மாமுதற் பலவு மரிறப நடிக்குங்
கூத்தன் மகனே கூத்தன் மகனே
கடற்புவி யாளுங் காவலன் மகனல
னின்போல் யானு நிகழொரு கூத்தன்
மகனே யென்வாய் மாற்றங் கேண்மதி
க0 வலம்பா டொழிக்கு மிலம்பா டெய்தி
மெய்ந்நவின் றறியா வீணர்வாய் பொருவக்
கொடிறுவீங் காது குதட்டலு மொழிந்த
வாயிடை நீர்நசை வந்த காலை

யுறுமறு சுவையுளொன் றுள்ள லூறலா
கரு னறுதி செய்தாங் கரும்பசி மேவின்
மற்றதை யொழிக்கும் வகையறி யாது
மூற்ற வருந்தி மூர்ச்சித் துடைந்து
சாந்திரா யணங்கிரிச் சரமுதற் கொடிய
விரதங் கொண்டோர் மேனியே பொருவ
உ0 வென்பு நரம்பு மெண்ணை வெளிப்பட்
டுதிற் பறக்க வுடம்படு மேனியிற்
போர்த்த போர்வை புன்மயி ருருவிப்
படிந்துதன் காரணம் பரப்பிக் காட்டச்
சிலம்பிநூல் கீழுஞ் சிதன்மண் மேலும்
உரு பொதியவுட் பட்ட புற்செறி குரம்பை
யுள்வாய்ப் பஃறுளை யொருபட லடைத்தாங்
கிந்திலை வெளிப்பட் டெங்கு முறுத்தப்
படுமொரு பழம்பாய் விடுதலை யணையொடு
நாணிலாத் தனுவென நகத்தனு மூடக்கி
ங0 வாடைவந் துடற்ற மலிகுளிர்க் குடைந்து
சானு விரண்டுந் தாடி தகர்க்க
வோட்டமு மதரமு மொழிவின்றி நடுங்கத்
தருமிரு நிரைப்பலுந் தாளந் தாக்க
வுலங்கு மசகமும் விலங்காது கறிக்கப்
ஙரு பசித்தழல் வெதுப்பப் பழவினை நினைந்து
முடக்கொழி யாது கிடக்குங் காலைப்
பல்லியு மரணையும் பாங்குற முட்டையிட்
டெல்லியும் பகலு மிரியாது கிடக்கும்
பவுத்த ரமணர் பாழ்நுதல் பொருவ
ச0 வடலைகண் டறியா வடுப்பக மருவிப்
பெரிது நோக்கிப் பெருமூச் செறிந்து
மாலைத் தாமரை மலர்புரை முகத்தொடு
மதுவந் துளிக்கு மழலைவாய்ச் சிறாஅர்
பொதிசித ருடைக்குங் கதியில் லாது
சரு கையே கொண்டு மெய்யினை மூடிய
வேயடு மென்றோட் டாய்முக நோக்க
மற்றவள் வருந்தி வறுங்கை நீட்டி
மார்பிடை யணைப்பச் சோர்தரு கண்ணீர்
சிறிதிடை யின்றியச் சிறாருட னணைப்ப
ரு0 மற்றவ் வீர மொற்றிடக் கருதி
யொருகை நீட்டி யொருவருக் கொருவர்
கோவணம் பறிக்கக் கூகூ வென்றுங்
கழுகுர லென்செவி யுழுகுர லாக
வென்செய் வாமென் றிறப்பதற் கெண்ணி

ருரு யொருப்பமு காலைல் லூழ்பிடித் தூர்த
மடிசற் றின்றிக் கடிதவ ணின்று
வெளிவர் தம்ம விரைந்து நடந்து
மாணு டென்னுஞ் சோணு டடைந்து
பூவிரி பொழிற்குலைக் காவிரி மூழ்கித்
சுO திருத்தகு மந்நுத் தென்பா லுறமேன்
பாயிருள் பருகும் பகற்கது ரநேக
மோருழித் திரண்டாங் குதித்துநின் றென்னச்
சேயொளி விரிக்குஞ் செம்மலை யொன்று
கண்டன னங்குக் கைகுவித தேத்துப்
சுரு பெயரரு மிம்மலைப் பெயர்யா தென்று
வினவினன் கேட்ட மேதகு பெரியோ
ரரதநா சலமீ தலங்குற விதனமேற
றழைதர வமர்சிந் தாமணி யொன்றுண்
டன்னது காண்போ ரரும்பெறல் வளங்க
எO ளெல்லா முடையா ரென்றினி திசைப்ப
வொருங்கெழு மகிழ்வி னூககமிக் கடைந்து
படித்தல நின்றுவிண் படர்வதற் கிட்ட
வேணியிற் பொலிசோ பானவழி யேறிப்
பிறங்குறும் வயிரப் பெருமாள் காவலி
எரு னறங்குல வம்மலை யணிமுடி யடைந்து
செயிரறு பொன்செய் சினகரம் புக்காங்
கெய்ப்பிடை வைப்பொன் றெதிருறக் கண்டெனச்
செந்தா மரைக்கட் டிருமறு மார்பனு
மந்தா மரைவா ழண்ணலு மின்னுங்
அO காணுப் பொருளைக் கண்டனன் மாதோ
தனிப்பெருந் திருமுன் றண்டனிட் டெழுந்தே
னடங்கா வுவகை மடங்காது பொங்கக்
கூடினன் றழைந்துசற் றூடின னப்பொழு
தெண்டோ ளப்பொரு ளின்னருள் சுரப்ப
அரு வடதிசை நிதிக்கோன மனமழுக் கறுப்பப்
பெறலரு வளங்கள் பெரிதும் பெற்றன
னன்றே யுவகை யார்கலி மூழ்கின
னின்னே விரைந்தவ ணேகுதி
யென்னே பெறலரி தெல்லா முறுமே. (அரு)

நேரிசைவெண்பா.

1034. உறவே தவித்தா யொளியிழைவாட் போக்கித்
திறவே தவித்தாய்ச் சிறந்தார் - நறவே
தருங்கொன்றை யம்பார் சடையதளித் தார்நம்
மருங்கொன்றை யம்பார் வரார். (அசு)

கட்டளைக்கலித்துறை.

1035. வரந்தரு மாணிக்க மாமலை யீசர்தம் வாம்பரியோ
திரந்தரு பாதுகை யோசிலம் போதிருக் கோவணமோ
வுரந்தரு மாதன மோகோயி லோநன் கொளிருருவோ
பரந்தரு வந்திய ரோமொழி யோமெய் பகர்மறையே. (அஎ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1036. மறைபுகலும் வாட்போக்கி வள்ளலுக்கு
விடையுருவாய் மாலை செங்கை
யுறையொருகோ டொழித்திருகோ டுற்றோசை
யிலாமணிநீத் தோசை மேய
வறைமணிபூண் டடர்விடமாற் றிடுவானீத்
தம்ஃதணுகா தமர்வா லுற்றாய்
நிறைபயனோர்ந் தனையேமா வாம்பொழுது
மவற்சுமக்க நினைத னன்றே. (அஅ)

குறளடிவஞ்சிப்பா.

1037. நன்றென்பதுந் தீதென்பது
மொன்றும்பவ மென்றுங்கொடு
கொதியாமனர் பதியாவொரு
சிறுநாயினேன் மறுகாவகை
யருள்புரிமதி கருமுகிலுகைத்
தெழுபுனிதனுங் குழுவமரரு
நறையிதழ்மல ருறைமுனிவனும்
வனமாலிகை புனைதோளனும்
பொறிவலியொருங் கெறியுறுவருஞ்
சூழ்பாரகம் வாழ்வாரொடு
முடிவறவடைந் தடிதொழுதெழ
நெடுமறைகனி வொடுதுதிசெயச்
சுரும்பார்குழ லரும்பார்முலை
தொடைமார்பகத் திடைமூழ்குற, நாளும்
புண்ணியம் பொலிவாட் போக்கி
விண்ணியன் முடிமேல் வீற்றிருப் போயே. (அகூ)

## கொற்றியார்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1038. இருப்பொலிசீர் வைப்பானு ரேங்கிடச்சக்
கரஞ்சுழற்ற லென்னை மால்சேர்
தருப்பொலியும் வடமலைதென் மலைகாட்டி
யுடனனந்த சயனங் காட்டிற்

திருப்பொலிமா லடிமையெனு நமக்கடிமை
யாவருமாய் செறிம ணித்தார்
குருப்பொலியப் பூண்டுமுடித் தழும்பர்விழாக்
கண்டுவக்குங் கொற்றி யாரே. (௬௦)

## பிச்சியார்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசியவிருத்தம்.

1039. ஆர்கொண்ட முடித்தழும்ப ரருட்பவனி நோக்கி
யணிமறுகிற் சுழன்றுருடி யடைபிச்சி யாரே
கூர்கொண்ட விழிநெடுவே லிருக்கவொரு சூலங்
கோடன்மிகை வெண்ணீறுங் கண்மணிமா லிகையும்
வார்கொண்ட செஞ்சடையும் பூங்காவி யுடையு
மயக்கமறுப் பதுமறந்து மயங்கிடுமா னுமைச்சார்ந்
தேர்கொண்ட விக்கோலங் கொண்டதுமா முனிவ [ரே.
ரியல்பனைத்துங் கவர்வதற்கோ வியம்புவிர்மற் றெனக்

## வி ற லி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1040. என்னை மேவுறு மிறையவன் றலையளி யென்னிடம் புக ழாயேன், முன்னை யாலவா யிடத்துவாட் போக்கியார் முதிரரு ளால் வென்ற, பொன்னை நேரென வுள்ளுநல் விறலிநீ புகழ்வையே லிசை தோற்றுப், பின்னை மற்றவட் சுமந்தவ ணேரெனப் பெரிதுமெள் ளுவலோரே. (௬௨)

## நா ரை வி டு தூ து.

கொச்சகக்கலிப்பா.

1041. ஓராய் கடுமொழியு மோரா யரங்கர்முனிந்
தாரா யெழவுறுநோ யாராயாய் திங்கள்சுடல்
பாராயா னந்தமுவப் பாராய் முடித்தழும்பர்
தாராய் மடநாராய் தாராயுண் ணாராயே. (௬௩.)

நேரிசைவெண்பா.

1042. ஆயும்வாட் போக்கி யான்முடிமே லாரியன்கூர்
தோயும்வாட் போக்கியநாட் டோன்றும்வடு - வாயிடைவாழ்
மங்கையடை யாணீர் வடிவமொழித் தாலடையுஞ்
சங்கையடை யாவாறு தான். (௬௪)

கட்டளைக்கலித்துறை.

1043. தானே தனக்கொத்த வாட்போக்கி நாத சடாமுடிமேன்
மீனேய வெள்ள லரோடுவைத் தாய்மன வெண்கலையை
யூனேய பல்லுயிர் சூழடிக் காரல ரோடுநறுங்
கானே யுறவைத்தி யென்றீ யமனக் கருங்கலையே. (௬௫)

### கலிநிலைத்துறை.

1044. கலந்த காதவென் பாக்கிவாட் போக்கியைக் கரும்பு
கலந்த காமர்சொல் லோடுகண் டினிதுப கரும்பு
கலந்த காரமே வாதுதீ வினைகட கரும்பு
கலந்த காவென லாமன மாமயற் கரும்பு. (௯௫)

### கட்டளைக்கலித்துறை.

1045. புரிதரு மாணிக்க வெற்பார் வதனம் பொலிவிழியுட்
பரிதரு மொன்று மறைந்து சுடும்வெளிப் பட்டுச்சுடும்
விரிதரு மொன்றிவை தீர்சுடு கலுணுடு வேற்றுமையென்
னெரிதரு செந்தழ லேமேனி யார்கண் ணியல்புமதே. (௯௭)

### நேரிசைவெண்பா.

1046. அதரஞ் சிவந்தா ளயலான்பின் சென்று
ளதரஞ் சிவந்தா ளலளா - லுதர
மடித்தழும்பா விக்கா மனன்மீட் டருள்வாய்
முடித்தழும்பா விக்கா முனம். (௯௮)

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1047. முன்னியயா வுந்தருவாட் போக்கிநா
யகவடியேன் மொழிந்த பாடன்
மன்னியகுற் றமுங்குணமாக் கொண்டுமகிழ்ந்
தருள்புரிதி மறுப்பா யென்னிற்
றுன்னியவூ ரினும்விரைசார்ந் தறியாத
புல்லெருக்குஞ் சூடிக் கொண்டாய்
மன்னியமற் றதன்குணமென் னெனின்விடைநீ
கொடுக்குமா வருங்கண் டாயே. (௯௯)

### நேரிசைவெண்பா.

1048. ஏற்றர்வாட் போக்கி யிராசலிங்கர் கூற்றினுக்கோர்
கூற்றர் சுரும்பார் குழல்பாகர் - நீற்றரெமை
நன்றுடல் கண்டோ நயவாமை வேண்டியவர்
மன்றுடல் கண்டோமம் மா. (௧00)

வாட்போக்கிக்கலம்பக முற்றிற்று.

---

திருவாவடுதுறை ஆதீனத்துக்

# குருபரம்பரையகவல்.



1049. திருவளர் கைலைச் சிலம்பில்வீற் றிருக்கு
மருவளர் கடுக்கை மாலிகைப் பெருமா
னருள்பெறு நந்தி யடிகடம் பான்மெய்ப்
பொருள்பெறு கருணைப் புகழ்ச்சனற் குமாரர்
௫ மற்றவ ரருளுறீஇ வையகத் தியங்கிய
நற்றவர் சத்திய ஞானதரி சனிக
ளவர்தெறு மன்னவ ரருளொருங் குற்றுப்
பவர்தெறு வாய்மைப் பரஞ்சோதி யடிக
ளத்தகு குரவ ரருளடைந் துயர்ந்த
௧௦ வித்தகர் வெண்ணெய் மெய்கண்ட தேவ
ரிவர்முதற் குரவ ரியைந்ததிரு நாமந்
தவர்புகழ் சமாதித் தலமடை மதிநா
ளிவைமுறை யுரைப்பா மிசைத்தமெய் கண்டர்
சுவையமை வெண்ணெய் துலாமதி சோதி
௧௫ தவலருங் கருணை தழையரு ணந்தியார்
கவலருந் துறையூர் கன்னிமதி பூரம்
படர்மறை ஞானசம் பந்தர்வண் டில்லை
வடகளாச் சேரி மடங்கன்மதி யுத்தரந்
திக்கொத் திறைஞ்சத் திகழுமா பதியார்
௨௦ மெய்க்கொற் றவன்குடி மேடமதி யத்தம்
வாய்ந்தவரு ணமச்சி வாயதே சிகர்மேல்
வேய்ந்தகொற் றவன்குடி வின்மதி யாதிரை
திண்ணிய சித்தர் சிவப்பிர காசர்
நண்ணிய தலமதி நாளவர்க் கில்லை
௨௫ யளவா வருளுற் றவிர்நமச் சிவாயர்
வளவா வடுதுறை மகரமதி மூதறு
ணலமலி தருமறை ஞானர்மே லுரைத்த
வலமலி துறைசை மகரமதி சோதி

வளம்பயி லம்பல வாணர் மேலெடுத்து
௩0 விளம்பிய துறைசை மேடமதி யவிட்ட
மொருவா வருண்மலி யுருத்திர கோடிக
டிருவால வாய்விருச் சிகமதி யனுட
மணவிய வருள்வே லப்பர் திருப்பூ
வணாகர் விருச்சிக மதியுத்த ராடந்
௩௫ தாமலி குமார சாமிகள் சுசீந்திரம்
வாமலி விருச்சிக மதியுத்த ராடந்
தரைசொல்பிற் குமார சாமிகள் சுசீந்திர
முரைமட ங் கன்மதி யுத்தரட் டாதி
மருவுமெய்ஞ் ஞான மாசிலா மணியார்
௪0 வெருவில்வெண் காடு மேடமதி யுரோகிணி
யிராம லிங்கர்மு னிசைத்தகோ முத்தி
பராவு விருச்சிகம் படர்மதி யனுடந்
தாவில்வே லப்பர் சங்கர நயினர்
கோவில்வான் கன்னி குலாமதி மூலம்
௪௫ பின்வே லப்பர் பெருந்துறை கோட்டிற்
பொன்வேய் சேமதி பூரட் டாதி
யாய்புகழ்த் திருச்சிற் றம்பல தேசிகர்
வேய்புகழ்த் துறைசை மிதுனமதி பரணி
யம்பல வாண ராவடு துறையே
௫0 நம்பலர் கொடுஞ்சிலை நகுமதி கேட்டை
வளமலி சுப்பிர மணிய தேசிக
ரளவரும் புகழ்த்திரு வாவடு துறையே
தெளிதர வொளிர்விருச் சிகமதி கார்த்திகை
வெளிதர வுரைத்தேன் வேணவா வானே.

---

உ

கணபதி துணை.

# திருவாவடுதுறை ஆதீனத்து

# ஸ்ரீ அம்பலவாணதேசிகர்கலம்பகம்.



## காப்பு.

### நேரிசை ஆசிரியப்பா.

1050. திருவளர் தெய்வச் சிறப்பொருங் கமைந்த
குருவளர் பன்மணிக் கோதில்கோ புரத்தோ
டெண்ணீர் மாட மிணைதபுத் தோங்குந்
தெண்ணீர் வளங்கூர் திருவா வடுதுறை
நம்பல மாக நண்ணிவீற் றிருக்கு
மம்பல வாண வருட்பெருங் குரவன்
புண்ணியம் பொலியும் புகழ்க்கழற் கட்சுவை
கண்ணிய கலம்பகக் கண்ணிபுனைந் தணியத்
திருகோட் டன்பர் சிந்தையுண் மலரு
மொருகோட் டாம்ப லிருதாட் டாமரை
யேரொடு பொலிபொழு திரண்டு
நாரொடு கொள்ளுது நலம்பெறற் பொருட்டே.

---

## நூல்.

1051. (ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.)

க. பார்பூத்த பெருந்தேமம் பற்பலவு மெடுத்தேத்தச்
சீர்பூத்த வெண்மகளுஞ் செம்மகளுங் கலந்துறையத்
தானமொடு தவமுமொரு தடையின்றித் தழைந்தோங்க
மானமொடு புகழ்வயங்க வயங்குபெருஞ் சோணாட்டின்
முத்தரெலாங் கொண்டாட மூவாதோன் பதுகோடி
சித்தரெலா மகிழ்ந்துறையத் திகழ்திருவா வடுதுறையிற்
புண்ணியமே தழைந்ததெனப் பொலிதருசத் துவந்தழைய
வெண்ணியவன் பருக்கருள்வா னினிதுவீற் றிருந்தருள்வோய்!

உ. சொல்லாலின் பூற்றரும்பத் துதிநால்வர்க் கருள்செய்வான்
கல்லாலி னமர்ந்ததுமுன் கற்றுவிட்ட படிசெய்து
திருநோக்காற் பரிசத்தாற் றிகழுமறைப் பொருள்வாக்கா
லுருநோக்காப் பாவனைநூல் யோகத்தா லவுத்திரியால்

வெம்பாச முழுதுமற மேவினருக் கறுத்தருளி
நம்பாச முகத்தரும்ப நகுதோள்வெண் ணீறிலங்கப்
பெருங்கருணை யுவட்டெடுப்பப் பெரிதுவக்கு மடிகேளென்
றிருங்கருணை யடியரெலா மேத்தெடுக்கப் பொலிவோய்கேள் !

(இவையிரண்டும் எட்டடித்தரவுகள்.)

க. மலைமாலை வயங்குறுகண் மணிமாலை கொண்டனைவெண்
டலைமாலை கொளினஞ்சுந் தரணியெனக் குறித்தன்றே !

உ. நிறைமதிய மொளிர்சிரமே னிகழ்குடையாய் நிழற்றுதலாற்
குறைமதிய மிகையென்று குறித்துவரைந் ததுநன்றே !

ங. அங்கைநீ ரொற்றுடை யாட்டியிடத் தருதேத்துக்
கங்கைநீர் தகாதென்று கரந்ததுவுங் காரியமே !

ச. அங்கதமொன் றேனுமடை யாதவருட் டிருவுருவக்
தங்கதமொன் றேனுமடை யாதொழித்தா யஃதழகே !

ரு. அங்கணனென் றுரைத்திடுபே ரன்றுமின்று நிகழ்கவினைல்
வெங்கணனென் றுரையாமை விழிநுதலிற் கரந்தனையோ !

சு. அண்டமுடை தராமுழுங்கு மம்மானை யமைந்தபனித்
துண்டமுடை நெடுங்காட்டுத் துரந்தனையோ சொலவேண்டும் !

(இவையாறும் ஈரடித்தாழிசைகள்.)

க. புனைபரி கலமுயிர் பொலிதர நுகருபு
வினைதப லுணருபு விடவுண வொருவினை ;

உ. அடியவர் சிவிகையி னடையற மூணருபு
நெடியவல் விடைவெரி னிலவிவர் வொருவினை ;

ங. மலைபவர் படையருள் வடிவுடை யவர்கொளன்
மலைவென வுணருபு மழுமுத லொருவினை ;

ச. கொலைபுரி விதமுறு கொடுமையு ணருபு
புலைமுடை நிணநுகர் புலியுடை யொருவினை.

(இவைநான்கும் அராகங்கள்.)

க. போதங்கைக் கொண்டுலகம் போற்றியெனச் சிவஞான
போதங்கைக் கொளலெங்கள் பொருட்டன்றே பூரணனே !

உ. ஒழியாது நின்னுடையோ மொள்ளிதிற்கூ டுறுநிலையை
மொழியாது மொழியுநின்சின் முத்திரைக்கை முழுதுணர்ந்தோ[ய்!

ங. பற்றமறுத் தெடுத்தவரைப் பாற்றுமுகில் போலெங்கள்
குற்றமறுத் தெடுத்தினிதாட் கொளவேண்டுங் குருமூர்த்தி !

ச. பிழைத்தியா முறினருளே பெயவேண்டு மிராவணனை
யழைத்தியா ரருளினரென் பாமறுக்கி னருளாளா !

ரு. ஊரொடுபே ருருவில்லா யூரொடுபே ருருவடைந்தா
யூரொடுபே ருருவெங்கட் கொழிப்பதற்கோ வுத்தமனே !
சா. ஆண்டவனீ யடியவர்யா மருளாது விடிற்கருணை
பூண்டவன்யா ரெனினென்றோ புகலுவாய் புண்ணியனே.

(இவையாறும் பெயர்த்தும்வந்ததாழிசைகள்.)

க. பெருமையுஞ் சிறுமையும் பின்னு முன்னுமற்
றொருமையும் பன்மையு மொருவ நின்றனை ;
உ. நன்மையுந் தீமையு நவிலொ ணுத்திறல்
வன்மையு மென்மையு மாற நின்றனை.

(இவையிரண்டும் நாற்சீரடி அம்போதரங்கங்கள்.)

க. காமமும் வெகுளியுங் கைத்த மாட்சியை ;
உ. ஏமமு முவகையு மியைந்த காட்சியை ;
ங. உற்றவர் பிழைமறந் தொழிக்கு நன்மையை ;
ச. மற்றவர் குணத்தையு மறக்குந் தன்மையை.

(இவைநான்கும் நாற்சீரோரடி அம்போதரங்கங்கள்.)

க. அளவறு கலைகண வின்றனை ;
உ. அடைபவர் மலவலி கொன்றனை ;
ங. களனமர் கருமை கரந்தனை ;
ச. கருணையி னெடிது பரந்தனை ;
ரு. உளநெகிழ் தரவவண் முந்தினை ;
சா. உணர்பவ ரிருவினை சிந்தினை ;
எ. பளகறு பெருநிலை கொண்டனை ;
அ. பசுவின துணர்வற வின்டனை.

(இவையெட்டும் முச்சீரோரடி அம்போதரங்கங்கள்.)

க. முத்தி யாயினை ;
உ. சித்தி மேயினை ;
ங. மூல மேவினை ;
ச. கால மோவினை ;
ரு. பத்தி நாட்டினை ;
சா. புத்தி சூட்டினை ;
எ. பந்த மற்றனை ;
அ. சந்த முற்றனை ;
கூ. கொற்றம் வாய்ந்தனை ;
கo. செற்ற மோய்ந்தனை ;
கக. கோலங் காட்டினை ;
கஉ. சீலங் கூட்டினை :
கங. பற்று மொன்றினை ;
கச. முற்று நன்றினை ;
கரு. பரவு சோத்தினை ;
கசா. விரவு கூத்தினை.

(இவைபதினாறும் இருசீரோரடி அம்போதரங்கங்கள்.)

எனவாங்குப்,

(இது தனிச்சொல்.)

பல்லார் துதிக்கும் பரமா சாரிய
கல்லா ரடையாக் காரண குரவ
மன்னிய வம்பல வாண தேசிக

கின்னிய லமைந்து நிகழ்திரு வடிக்கு
ரு. நாயினுங் கடையே னயினும்வின் ணப்பர்
தாயினுஞ் சிறந்த தயைசா னின்றோ
டொன்றியொன் ருதுறு மொன்றே
யன்றி வேண்டல னருளுதி யுவந்தே.
(இஃது எட்டடியான்வந்த நேரிசையாசிரியச்சுரிதகம்.) (க)

நேரிசைவெண்பா.

1052. உவப்பானென் புன்சொ லுவவாதென் பாசஞ்
சிவப்பானின் றின்பந் திளைப்பேன் - றவப்பா
னலவாணர் சூழ நகுதுறைசை வாழும்
பலவாண தேசிகனென் பான். (உ)

கட்டளைக்கலித்துறை.

1053. பானலங் கண்ணியர் மாலழுந் தாதெனைப் பார்கழுநீர்த்
தேனலங் கண்ணிய வம்பல வாண சிவக்கொழுந்தே
மானலங் கண்ணிய சோலையி னூடு மதிநுழைந்து
கூனலங் கண்ணிய கோமுத்தி மேய குருமணியே. (ங)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1054. குருவளர்தண் பிறைச்சடையாய் வெண்ணெய் நல்லூர்க்
குடிகொளும்வை திகமறையோ னாகி நாவ
லுருவளர்நா வலன்பித்த போவென் றெள்ள
வுவந்தடிமை கொண்டனையா லந்நா ளிந்நாட்
டருவளர்வண் பொழிற்றிருவா வடுது றைக்கட்
டழைபுகழும் பலவாண குரவ னாய்
திருவளர்பே ரருளினெனை யடிமை கொள்ளாய்
தெளியமுன்பெற் றதுபெறவோ தெரித ரேனே. (ச)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1055. தரைகமழ்வண் பொழிற்றிருவா வடுதுறைக்கட் குரவர்பிரான்
றானாய்த் தெய்வ
விரைகமழும் பலவாண மேலோனுண் மையையுணர்ந்தேன்
விளம்பக் கேளீ
ருரைகமழ்தண் கயிலாயத் தொருவன்கா னலவனத்
துறைந்தான் முன்னம்
புரைகமழிவ் வரசவனத் துறைவானிப் போதவன்சீர்
புகல்வார் யாரே. (ரு)

நேரிசைவெண்பா.

1056. புகவே தவித்தேனின் பொன்னடிக்கீ ழுண்மை
தகவே தவித்தேயான் சன்ம - முகவேபார்
வம்பல வாணு வருகென் றருட்டுறைசை
யம்பல வாணு வருள். (சு)

கட்டளைக்கலித்துறை.

1057. அரியாய் சிராசை யெனுமனை யாளை யவாய்ப்புணர்ந்து
பிரியாய் பரிபக் குவமக் களைப்பெறு வாய்துறைசைக்
குரியாய் புகழும் பலவாண தேவமிக் கோங்குசெல்வத்
திரியாய் சந்யாச நினக்கே யுரித்தென்ப தென்னுரையே. (எ)

புயவகுப்பு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியச்சந்தவிருத்தம்.

1058. உரிய தென்றெளிர் நீறென்ற வொன்றின
வுறுநர் தம்படர் பாசங் களைந்தன
கரிபு னைந்தப டாம்வின் டொளிர்ந்தன
கருது கண்டிகை யாரம் புனைந்தன
விரித ருங்கழு நீர்நன் றளைந்தன
விரவு சுந்தர வேடந் தவழ்ந்தன
துரிச றுந்துதி யாவுஞ் சுமந்தன
துறைசை யம்பல வாணன் புயங்களே. (அ)

நேரிசைவெண்பா.

1059. புயங்கொண்ட செங்கழுநீர்ப் பூவொன்றே வேட்ட
நயங்கொண்ட பேதைபல நண்ண - வயங்கொண்டு
வேளுமம ரம்பலவாண் மெய்யெனவெய் வான்றுறைசை
நாளுமம ரம்பலவா ணை. (கூ)

கட்டளைக்கலித்துறை.

1060. நாமா தரிக்கு மழும்விழுஞ் சோரு நலியுமெங்கள்
பூமா தரிக்கு மதவேளொன் றேங்கும் பொருளுமருள்
காமா தரிக்கு நலஞ்சார் துறைசைக் கமழ்கழுநீர்த்
தாமா தரிக்குமெய் யம்பல வாண தயாநிதியே. (கO)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1061. நிதியமெனத் துறைசைவள ரம்பலவா ணுவன்று நீ மெய் யாள்வா, ருதியமிற வாமெனவுள் ளுணர்ந்துவக்க வுயிர்கடொறு மொளித்த கள்வன், மதியமுத லியகரந்து மானிடன்போ லடைந் தெங்கண் மனங்க வர்ந்தே, பதியவமர் தலினின்று பெருங்கள்வ னென்றுனையாம் பாடு வோமே. (கக)

அம்மானை.

இடைமடக்கா யீற்றடிமிக்குவந்த
நான்கடிக்கலித்தாழிசை.

1062. பாடுந் துறைசைப் பதியம் பலவாண
ணாடுங் கயிலாய நாதன்கா ணம்மானை
நாடுங் கயிலாய நாதனே யாமாயி
னீடொன்று மென்பணியை யெங்கொளித்தா னம்மானை
யெப்போது மென்பணிகொ லேந்தல்கா ணம்மானை. (கஉ)

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1063. மாநலம் பொலிய வளர்பொழிற் றுறைசை மருவிய வம்பல வாணு, பாநலம் பொலியப் பாடுவோ நின்னைப் பரிசிலெங் களுக்கெவன் கொடுப்பா, யூநலம் பொலிய வூட்டுபு வளர்த்த வுடன் முதன் மூன்றையுங் கொள்வா, யாநலம் பொலிய வடியவர் பலர்க்கு மருளுநின் வள்ளன்மை யழகே. (கங)

மதங்கு.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1064. அழலமைகண் கரந்துகுரு வம்பலவா ணன்பொலிவா னவன்று ளுட்கொண்
டுழலமையிந் திரியமவித் தொருதிருவா வடுதுறைக்க ணுறைவோம் யாங்கள்
கழலமைதாண் மதன்பணிபூண் டடைமதங்கி யீர்கடகக் கைவா ளோடு
சுழலமையு முகவாளு மெவன்செயும்புல் லும்படை யாந் துணிவல் லோர்க்கே. (கச)

தவம்.

1065. வலியபெரும் போகியெனக் காலருந்தி யுரைதளர்ந்து வன்கோல்பற்றி, மெலிவறமுக் காலடைந்து மொன்றடையீ ரிதுதவமோ மிளிர்கோ முத்தி, யொலிமலியம் பலவாண குரவன்முனம் யோகியென வுற்றுப் பெற்ற, பொலிகலமுண் டிடுந்தளரா நடையொடு மாந் தவமொன்றும் புணரு வீரே. (கரு)

காலம். மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1066. வீரமதன் கறுத்தலரம் பெய்யுங் கால
மேகமெலாங் கறுத்தலரம் பெய்யுங் காலம்
ஊரவயல் சூழுங்கா விரிக்குங் கால
முறைதுறைசை சூழுங்கா விரிக்குங் காலம்
ஈரமிகு தளவம்பூ விரிக்குங் கால
மேழையர்மொர் தளவம்பூ விரிக்குங் காலம்
ஆரமெனத் திருக்கழுநீ ரடையாக் கால
மம்பலவா ணன்கழுநீ ரடையாக் காலம். (கசு)

மடக்கு.

கட்டளைக்கலிப்பா.

1067. காலை|யம்புய மஞ்சர ணங்களே
காய்ந்த தும்முன மஞ்சர ணங்களே
மாலை யாதன் மணத்த வரத்தமே
வந்து கூம்பு மணத்த வரத்தமே

வேலை கொண்டெங்கட் கீவதங் கொன்றையே
விட்டி ருக்கின்ற தாவதங் கொன்றையே
சோலை யம்பல வாண வடிகளேய்
துறைசை யம்பல வாண வடிகளே. (கஎ)

நேரிசைவெண்பா.

1068. அடியார்சிந் தாமணியே யம்பலவா ணாவன்
கொடியார் மதிற்றுறைசைக் கோவே - முடியாநீ
யன்றணிவாய் பாதத் தலருங் கருங்குவளை
யின்றணிவாய் செங்குவளை யே. (கஅ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1069. ஏகமுறு மறைமதியன் றவிர்கடுக்கை யடைந்தசிறப் பெல்லாந் தன்பால், மோகமுறு நறுமலரின் றடையவெய்த்துக் கவி கைமுழு மதியாய் நாளும், யோகமுறு மாவடுதண் டுறைவளரம் பல வாணு வுன்பா லன்பாய்ப், பாகமுறு பவரங்கா ளினுமிந்நாள் விளங்கு வரிப் படியிற் றனே. (கசு)

வேறு.

1070. படிக்கு மறையோ விடுந்துறைசைப் பதிவாழ் குருவம் பலவாணு, பிடிக்கும் வயிராக் கியருளக்கே பிரியா தமருநின்றிருத்தா, டுடிக்கு மடியேன் புன்றலைமேற் சூட்ட வேண்டுஞ் சூட்டினத்தாண், முடிக்குங் கழுநீர் மலச்சேற்றுண் முழுகு மெனக்குக் கழுநீரே. (உ0)

## கார்விடுதூது.

கட்டளைக்கலித்துறை.

1071. நீர்கொண்ட மேக நிரைகாண் மலர்பல நேர்பறித்துப், போர்கொண்ட வேள்செயல் பொங்கரிற் றங்கிய போதுணர்ந்தீர், சீர்கொண்ட கோமுத்தி யம்பல வாணனைச் சேர்ந்தவன்றேட், டார் கொண்ட செங்கழு நீர்கொண்டு வாருந் தகவுரைத்தே. (உக)

## தழை.

நேரிசைவெண்பா.

1072. உரையம் பலவாண வுத்தமன்கோ முத்தி
யரையன் றிருமுகமே யம்மா - கரைய
மலைவாநீ தந்தவரு மாகராட் கெங்க
டலைவாநீ தந்த தழை. (உஉ)

## நாரைவிடுதூது.

கலிநிலைத்துறை.

1073. தழையுஞ் சிறைமட நாராய் வாராய் சாராயாய்
விழையுந் துறைசையு ளம்பல வாணனை மேவாமே
யுழையும் பிறகிடு கண்ணாள் புண்ணு ளுண்ணுளாய்க்
குழையுந் திறமது தேறாய் மாறாய் கூறாயே. (உங)

## வண்டுவிடுதூது.

கலிவிருத்தம்.

1074. கூறுஞ்சிறை வண்டீர்குழல் கொண்டீர்மது வுண்டீ
ராறும்பசி யுடையீரரு கடையீரளி படையீ
ரேறும்புகழ்த் துறைசைப்பதி யெழிலம்பல வாணன்
றேறும்படி சொல்லீர்மயல் செல்லீர்பொழில் புகுமே. (உச)

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1075. புகழ்மிகு கயிலைப் புண்ணியா வன்று
புயறவழ் பொருப்புவிற் குழைத்திட்
டிகழ்தொழி லினர்முப் புரம்பொடி படுத்தின்
றெழிற்றிரு வாவடு துறையிற்
றிகழ்தரு கருணை யம்பல வாண
தேவனு மினையடி யேனன்
றகழ்மனப் பொருப்பைக் குழைத்துமும் மலச்சோ
வரும்பொடி படுத்திடா தென்னே. (உரு)

நேரிசைவெண்பா.

1076. என்னு மினக்குறுவ தென்னுண்டு மன்னுமரு
ளுன்னு லெனக்குறுவ தொன்றுண்டே - பொன்னரன்
மஞ்சார் துறைசை வளரம் பலவாண
வஞ்சா றலவே யருள். (உசு)

கட்டளைக்கலித்துறை.

1077. அருவிய ருவரை போன்முத்த மாலை யவிரிலஞ்சூழ்
பொருவிய லோவு திருவா வடுதுறைப் புண்ணியமா
சொருவிய வம்பல வாணு வடிய னுடன்முதலா [னே.
மருவிய மூன்றுங்கொண் டொன்றீ வதற்கும் வருத்தமென்

## சம்பிரதம்.

எழுசீர்க்கழிநெடிலடி

இரட்டை ஆசிரியவிருத்தம்.

1078. வருந்தாது கமலவட் டப்பூ வெடுத்துமுடி
வைப்பனோ திமமனைத்தும்
வானம் பறந்திட வெடுத்தெறிவ னறியபூ
மணமாலை யாத்துவிடுவன்
கருந்தாது கைக்கொடு பிசைந்தூது வன்பெருங்
கரியையும வாறுசெய்வன்
காட்டினுறை புற்கொண்டு புலிசெய்வ னின்னுமறு
கைக்கொண்டு யாளிசெய்வன்
பொருந்தாது வாய்திறந் தவணின்று புவனம்வெளி
போதப் புரிந்துவிடுவன்

பொங்கியெழு மாலமும் பருகுவன் பெருகுமிவை
புல்லியன வேறுமுண்டா
லருந்தாது நீர்கொள்கட லாடையுல கத்துயி
ரடங்கவா னந்தவெள்ளத்
தாவடு துறைக்கணம் பலவாண தேவனரு
ளன்றியு மழுத்திடுவனே. (உ௮)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1079. அழுவா ரயர்ந்து விழுவார்நின் றாடிப் பாடி யரவென்று, தொழுவார் துதிப்பார் பெருங்கருணை சுரக்குமாறு நினதடியா, ருழுவார் செறியுங் கோமுத்தி யொருவா வருளம் பலவாணு, வழுவார் கடையே னின்னெதிரெவ் வலிகொண் டடையக் கடவேனே. (உ௯)

அடி வேறு.

1080. கடிமலர் கைக்கொண் டன்பு கனியவம் பலவா ணன் பொன், னடியருச் சனைகோமுத்தி யம்பல வாணு செய்வாய், தடித வில் விதியான் முன்னந் தன்னைத்தா னருச்சித் தேத்தும், படிநினைந் தனைகொல் யார்க்கும் பழக்கவா தனைவி டாதே. (௩௰)

எழுசீர்க்கழிநெடிலடி
இரட்டை ஆசிரிய விருத்தம்.

1081. விடரடை வரிய வாவடு துறையுண்
மேவிய வம்பல வாண
விமலநீ யென்றோ யானுமன் றுன்பான்
மேவிலே னருளென வந்நா
ளிடர்தபு குழவி யறுத்தருத் தியுங்கற்
பெழின்மனை யாட்டியைக் கொடுத்து
மீன்றவற் செகுத்துங் கடும்பினைத் தடிந்து
மிடந்துகண் ணப்பியும் விடாது
படரொரு சூளா விளமையைத் துறந்தும்
பயந்தபெண் கருங்குழ லரிந்தும்
பசையற முன்னை தேய்த்துமற் றின்னும்
பலசெயற் கரியசெய் தார்க்கே
தொடர்புற வருள்செய் தாண்டனை யிந்நாள்
சொற்றவக் கொடுமைவேண் டாது
துதிசெய வாளுந் திறமுணர்ந் தடைந்தேன்
றுணிபிலே னுதவி னருளே. (௩௧)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1082. அருந்தவருக் கரசுகலை யறுபத்து நான்கினுக்கு மரசு ஞானம், பொருந்தவருக் கரசுசுர வருக்கெல்லா மரசுநெடும் பொன் மாமேருப், பெருந்தவருக் கரசுதுறை சைப்பதியம் பலவாண பிரானீ யென்றே, வருந்தவருக் கரசுபெரு நினையிழற்றுந் திருவாசு மகிழ்ந்து தானே. (௩௨)

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

1083. தானமொடு தவமோங்குந் தமிழ்த்திருவா வடுதுறைமெய்ஞ்
ஞானமுதல் வனைக்கருணை நமச்சிவா யனைப்பவஞ்ச
லூனமறுத் தொளிர்பரம யோகியைமிக் கோங்கொளியே
யானவனை வழுத்தாதா ரறிவென்ன வறிவே
யம்பலவா ணனைவழுத்தா ரறிவென்ன வறிவே. (௩௩)

எழுசீர்க்கழிநெடிலடி
இரட்டைஆசிரியவிருத்தம்.

1084. அறிவரும் பெருமை யாவடு துறைவா ழம்பல வாண மெய்க் குரவ,னனைத்திலுங் கலந்துங் கலப்புறா மையினொலடலுடைத் துறவியே தானே, செறிபல புவன நடத்தலி னரசே சிவானந்த நுதலிற் சுகியே, திகழ்சிவ யோகந் தனையநுக் கிரகஞ் செய்தலின் யோகியே நாளுங், குறிபடு பசுபோ தங்களை விழுங்கிக் கோடலிற் போகியே கருணை, கூர்சிவ தரும வடிவமா யிருக்குங் கொள்கையி னறவனே யடைந்தோர், முறிவரு மலங்கண் முழுமையு முருக்கு முறைமையின் மறவனே யிவனை, மூழுதுணர்ந் தவரு மின்னனே யென்றோர் முடிபுற மொழிந்திட வரிதே. (௩௪)

சிலேடை.

1085. அரியவன் றுறைசை யம்பல வாண வமலதே சிகனுத னேக்கம்,புரியவிழ் கழுநீர் மாலைநா லொண்டோள் பொறியரி தொடர் மலர்ப் பாதம், பிரியாந லங்கை யுழைநலம் பரசு பெற்றிமுத் திரையிவை யுடையா, னுரியயா னுணர்ந்தே னிவன்பர சிவனே யுண்மையா சங்கையொன் றின்றே. (௩௫)

நேரிசைவெண்பா.

1086. இன்றி யமையாத வின்பம் பெறச்சிறிது
நன்றி யமையாத நான்முயன்றேன் - றுன்றி
யலரளிசார் வான்றுறைசை யம்பலவா ணனின்
னலரளிசார் வானன் னருள். (௩௬)

கட்டளைக்கலித்துறை.

1087. அருண்மலி கோமுத்தி யம்பல வாண வமலனைக்,கிருண் மலி கண்ட மெனவுப மானமு மில்லையென்றேன், பொருண்மலி யன்னதுண் டேனுண்டு போலும் புகறியென்றான், வெருண்மலி யானுண் டெனயா ரெனநீமெய் யென்றனனே. (௩௭)

வேற்றொலிவெண்டுறை.

1088. என்றுமொரு தன்மையனு யாவடுதண் டுறையிலமர்ந் திருக்கு மூர்த்தி, நன்றுமகிழ்ந் தடியவருக் கருள்புரியம் பலவாண நமச்சி வாயன், சிற்பரம் பொருளெனச் சின்மயத் திரளெனச்,சொற்பதத் தளவிடத் தொலைவில்செஞ் சுடரெனக், கற்பகத் தருவெனக்

கருணையங் கடலெனத், தற்பெறக் கருதுவார் தங்குணக் குன்றெனப்,
பொற்புறப் பொலிவதெம் புண்ணியப் பெருமையே. (௩௮)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1089. புண்ணியவா வடுதுறையம் பலவாணன் பரசிவனே பொருந்து வேடங், கண்ணியமற் றவன்மறைத்து முகத்தருட்கண் மறைக்குமவை காண்டோ றன்பர், தண்ணியகைத் தாமரைகூம் புந் திருநீ றேற்றமலர் தரும்வா யாம்ப, லண்ணியதோத் திரஞ்செயவிண் டிடுங்கூம்பு மமைத்தபணி யடைத லானே. (௩௯)

ஒருபோகுண்மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

1090. க. ஆன்ற துறைசை யருளம் பலவாணன்
றேன்ற மொழியுந் தூசடர் திருவாய்ச்சொ
லேன்ற பவநோய்க் கிடுமருந்தே யென்பரால்

உ. அன்பார் துறைசை யருளம் பலவாண
னின்பார் தருமா றிசைக்குந் திருவாய்ச்சொ
றுன்பார் பவக்கடற்கோர் சூழ்வடவை யென்பரால்

௩. அண்ணுந் துறைசை யருளம் பலவாண
னெண்ணும் பலர்க்கு மிசைக்குந் திருவாய்ச்சொல்
கண்ணும் பவமலைக்கோர் காய்குலிச மென்பரால். (௪0)

நேரிசைவெண்பா.

1091. ஆலன்றி ஞான வரசமர்ந்து மேவுபரி
பாலன் றிருவம் பலவாணன் - மாலன்றிக்
கோலரியா னென்றுமயல் கொண்டாய் பெரும்பேதாய்
யாலரியாற் கேது மயல். (௪க)

கட்டளைக்கலித்துறை.

1092. மயல்கொண்ட பேதைக் குரைதோழி யம்பல வாணனு கள், கயல்கொண்ட வாவித் திருவா வடுதுறைக் கண்ணுயரி, லயல் கொண்ட வீதி யுலாப்போத நேர்தொழு தாசைப்பட்டே, னியல் கொண்ட யானென நீயலை யானென்ற தெப்பொருட்டே. (௪உ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1093. பொருவிறுறை சையிற்குருவம் பலவாணன் றிருவுலாப் புறம்போந் தானங், கொருவிலிவன் மானிடன்று னேயென்றேன் றோழியன்னை யோடி வந்து, மருவிலக லாவிவன்முன் மானிடன்று னெனத்தார்தா வாங்கி யெனறேன், கருவிலெச்ச தத்தனுக்குப் பிற வென்றுள் பயனுணரேன் கரைவாய் நீயே. (௪௩)

நேரிசைவெண்பா.

1094. நீயாக மத்தடைவு நீதி யுணர்த்தியருட்
டாயாக மத்தடைவு தானெழில்வன் - மாயா
வலத்துறைசை யம்பலவா மாளிகையா வென்னு
நலத்துறைசை யம்பலவா ணா. (௪௪)

கட்டளைக்கலித்துறை.

1095. நாடுந் துறைசைந மம்பல வாண நகுரவன்
பாடுந் தொழிலர் பவமாய்த் திடலிற் பவமிலியே
யாடும் பிறரடைந் தார்பசு போத மறுவகைசொற்
றாடும் பவம்விளக் குந்திறத் தாலவ ருள்ளவரே. (சரு)

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1096. வரையகம் பொலியுங் காழகிற் றுணியும் வரைக்கருஞ் சந்தனக் குறடு - மாமணித் திரளு மதகரிக் கோடும் வளமயிற் பீலி யும் வரன்றித், திரையெடுத் தெறிந்து கடலகங் கலக்குந் திருப்பெ ருங் காவிரித் தென்பாற்-றிகழ்தரு திருவா வடுதுறை யமருந் தேசிக னம்பல வாணன், புரைதபு சரணத் தடியவர் குழூமிப் பொங்குபே ரன்புபூண் டேத்திப் - பொலிமலர்க் கமல முதன்மல ரிடவப் பூப் பொதிந் தவிர்பெருங் காட்சி, விரைமலர்க் கணைவேள் பழம்பகை குறித்து விட்டபல் வாளியு மடிமேல் - வீழ்ந்துறப் பற்றித் தஞ்செய லின்மை விளக்குபு கிடத்தலொத் தனவே. (சசு)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1097. வேளிற் பொலிவார் செறிதுறைசை விமலா குருவம் பலவாணா, தோளிற் கழுநீர் திருவரையிற் சூழுங் காவி யுடையாய் முன், றோளிற் புனைந்தாய் கருங்குவளை தணந்தா யெனதுட் டாமரை யான், பீளிற் படாம லங்கணிந்தாற் பிழையுண் டாமோ பேசாயே. ()

கலிவிருத்தம்.

1098. ஆயமர் கருணைமிக் கமைந்த கோமுத்த
வாயம ரம்பல வாண தேவமுன்
சாயம ரைமதி தலைக்கொண் டாயின்றென்
காயமர் முழுமதி காற்கொண் டாலென்மன. (சஅ)

வேறு.

1099. நேயன் ஞானத் துறைசை நிமலன்செவ்
வாய னம்பல வாண குருபரன்
றூயன் யானல னென்னவுந் தொட்டிழுத்
தாயன் பானரி லாண்ட தருண்மையே. (சகூ)

கலிநிலைத்துறை.

1100. மைய ளாம்பொழிற் றுறைசையி னம்பல வாணன்
பொய்ய ளாமெனை யுந்தடுத் தாண்டனன் புகலி
னைய ளாங்கொடி யோன்மகா பாதக னன்னைச்
செய்ய ளாமது ரையின்முனுண் டதுபொருஉந் தெளிவே. ()

நேரிசை ஆசிரியப்பா.

1101. தெளிவளர் கருணைச் சின்மய குரவ
னளிவளர் துறைசை யம்பல வாணன்
வெண்மதிக் கவிகை மீமிசை நிழற்ற
வுண்மதித் திடுசிரு துலப்பில வோங்கப்

ரு பல்லிய முழுதும் பரவையின் முழங்கச்
சொல்லிய செந்தமிழ்ச் சுருதிமிக் கார்ப்பத்
தல்லணிய வடியார் சயசய வென்னப்
புண்ணிய முனிவர் புகழ்ந்தனர் வாழ்த்தத்
திகழ்மணி மறுகிற் சிவிகை யூர்ந்து
க0 புகழ்தரு திருவுலாப் போந்தன னாகக்
குலவுநீ ராசனங் கொண்டெதி ரிணையு
நிலவுகல் லாரொடு நேரிழை யாயுஞ்
சென்றன ளியானுஞ் சென்றெதிர் தாழ்ந்து
நின்றுகை குவித்து நேருற நோக்கி
கரு யாவன் பால னிவன்புக லென்றேன்
மேவன் பாங்கை மேவுறப் புரிந்து
முன்னிவன் பெருமறை மொழிக்கப் பாலன்
மன்னிவன் பராரையின் வளர்கப் பாலன்
மூர்த்தி முதலா மொழிமுப் பாலன்
உ0 சீர்த்திகொ ணீற்றொரு திகழ்கட் பால
னறுவகைச் சமயத் தறுவகைப் பாலன்
மறுவகை சுருதி மனைத்தக பால
னொரு ருய வவைக்கப் பாலன்
மாறு தியற்றி வயக்குகா பாலன்
உரு வளர்தரு தெய்வ மனுச்சா பாலன்
றளர்வரு கௌரி தனக்கழும் பாலன்
தழைதரு மிந்நாட் சைவபரி பாலன்
பிழைதரு தன்மையில் பெருந்தவப் பாலன்
பிறவா னிறவான் பிறப்பிறப் பொழிப்பான்
ங0 மறவா னினையான் வரவிலன் போக்கிலன்
பேதாய் நீயோ பேசினு முணர்வாய்
கோதா யாதமெய்க் கூற்றிது கண்டா
யடங்குதி யென்றன ளன்னை
தொடங்குதி தோழியிச் சொற்பொருள் சொலற்கே. (ருக)

தாழிசை.

1102. சொல்லரும்பகழி தூவுவான்விழி
சுரந்தவங்கியுன வாயவேள்
சுடுசினத்தழுவை போன்றுபாயுமணி
துத்திநாகவுண வாயகால்
கொல்லும்வெந்தழலை வீசுமிட்டியடி
கொண்டுதேய்த்தவொரு திங்கடான்
குழையெறிந்துசெவி சுமடங்குகொடி
தாயநஞ்சமு னெழுங்கட
லல்லுநண்பகலு மம்பறூற்றுவ
ரங்கனுக்குதவி யாயவ

ரளவிடற்கருநி னுண்மைமுற்றுமு
ளறிந்துபோலுமக ளென்செய்வாள்
வல்லுமஞ்சுமுலே யணையுமாறருள்செய்
மாலைவான்றுறைசை யம்பல
வாணதேசிக தயாகராவிமல
வான்பெருங்கருணை வள்ளலே. (ருஉ)

## சித்து.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1103. வள்ளலருட் குருராயன் றுறைசையினம்
பலவாணன் மலர்ப்பொற பாதங்
கள்ளலரிட் டருச்சிக்குஞ் சித்தரியாஞ்
செந்தாது கஞ்சங் காட்ட
வுள்ளலமப் பாவிரும்பு நாவாய்கொண்
டழமின்னே யுறச்செய் வேமற்
றெள்ளலர்கோர் தமுது தவிற செம்புதனே
மறுகாட்பொன் னெனச்செய்வாமே. (ருங)

## இதுவுமது.

1104. மேதகைய நவகோடி சித்தர்கள்வீற் றிருக்குநகர் விளங்கா நின்ற, மாதகையம் பலவாண மாசிலா மணிமலர்த்தாள் வணங்கி யேத்திக், கோதகையுஞ் சித்தருக்குங் குறையுளதோ புளித்தகூழ் கொடுவா வப்பா, தீதகைய வடுவெழுற்றீண் டுறுபொழுதே வேங்கை யெனச் செய்வோம் பாரே. (ருச)

## இதுவுமது.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1105. பார்பரவு மாவடுதண் டுறைக்கண் மேய
பரமகுரு வம்பலவா ணப்பேர் வள்ளல்
சீர்பரவு திருமடத்தி லியார்க்கு நல்குந்
திருவமுது கறியமுது நெய்பால் போல
வேர்பரவு மாறுபடை யின்றே லுன்ற
லியன்றணசெய் முடியாதே லிடுகூ ழேனும்
வேர்பரவுன் வறுமைதரித் திரமே யென்ன
மேவுசெம்பைச் சுவணமா விளக்கு ம்வாமே. (ருரு)

## இதுவுமது.

பதினன்குசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1106. விள்ளரும் புகழ்சா லாவடு துறையுள்
மேவிய வம்பல வாண
வித்தகன் திருமு னொருதினஞ் சென்று
மெய்யுறப் பணிந்தன யனையான்

றள்ளருங் கருணை கூர்ந்தவேண் டிவதென்
சாற்றுக வென்றுநீ றளித்தான்
றளர்விலாப் புடைவீங் கிடவுணல் வேண்டுந்
தயைபுரி யென்றலி தேற்றோ
மெள்ளருஞ் சுவைய வடிசின்முன் னளித்தா
னிலைதவிர்த் தியாவையு முண்டோ
மிவன்செய்பே ருதவிக் கினிச்செய வியாதென்
றெண்ணினேஞ் சாமியாய் விளங்க
வுள்ளரு மனையான் றிருமட முழுது
முளுற்றினே நமதுசித் தருமை
யுணர்பவ ரியாரே யாவயிற் சென்று
ணுரலா மோதுவார் பலரே. (நிகூ)

கொச்சகக்கலிப்பா.

1107. ஓதுவார் சூழ்துறைசை யோங்கம் பலவாண
காதுவார் வாளிபல காமன் றொடுத்தடலாற்
போதுவார் கூந்தல் புழுங்கு மழும்விழுநின்
றூதுவார் செங்கழுநீர் தாராமை தண்ணளியே. (நிஎ)

நேரிசைவெண்பா.

1108. தண்ணார் துறைசைத் தமிழம் பலவாணன்
வெண்ணர் துறைகையான் விண்டிவல - னெண்ணரிய
வன்னக் கொடியா னலரோ னலன்சிவனே
யென்னக் கொடியான மே (நிஅ)

கட்டளைக்கலித்துறை.

1109. யானென தென்றுஞ் செருக்கொழி யானின் னெதிர்ப் படினவ், வானென தென்றுமொண் கோமுத்தி யம்பல வாணபொதி, யூனென தென்னும் படியா னெறிதொழித் தன்னடிப்பூர், தேனென தென்னும் படிபே ரருளென்று செய்குவையே. (நிகூ)

கைக்கிளை மருட்பா.

1110. வைய மடிசூடும் வாட்க ணிமைகூடி
மைய மினியென் னணங்கல்லள் - வெய்ய
கவர்புக ழாத காமரு துறைசை
மலர்புக ழம்பல வாணன்
பலர்புகழ் கயிலை பயில்குலக் கொடியே. (சுo)

மடக்கு.

பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1111. குலவு கழிசேர் மருங்கரும்பே குழைந்து மதன மருங் கரும்பே - குளிர்செவ் வழியே பொழிவண்டே கொடிய வவனன் பொழிவண்டே, நிலவு மணல்வெண் ணந்தினமே நிகழின் புறவெண்

ணந்தினமே - நெஞ்ச மூவந்து வருமலவா நிலவே யுயிர்க வருமலவா, புலவு படுநீர்ச் சிறைக்குருகே பொல்லேன் படுநீர்ச் சிறைக்குருகே போகு மியலார் நாவாயே புழுக்கு மியலார் நாவாயே, சலவு சீரம் பல வாணன் றுறைசைச் சீரம் பலவாணன் - றுணைத்தோ டாங்கு கழு நீரே தோயி னறுமிக் கழுநீரே. (சுக)

## களி.

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1112. நீருறையும் வயற்றிருவா வடுதுறையம் பலவாண நிம லன் கண்டங், காருறையும் படிகலவான் கழல்புகழ்ந்து பாடிவரு களிய ரேம்யாம், பாருறையு மானிடர்காண் மாரியின்றி யுலகிலென்ன பய னுண் டாகு, நாருறையு மாதவமில் லாமலெவர் பரகதியை நண்ணு வாரே. (சுஉ)

### இதுவுமது.

1113. நண்ணரிய புகழ்த்துறைசை நாயகனம் பலவாண நமச்சி வாயு, னெண்ணரிய புகழ்பாடு களியர்யாம் வேம்புவப்பா ரிக்கு நீப் பார், மண்ணரிய வாம்பன்முழு மதியுவக்குஞ் சாலிதவ வசிட்ட னேம்புங், கண்ணரிய மேதைகொளா ரெடுத்தபிறப் பாற்பயனென் கைக்கொள் வாரே. (சுங)

### இதுவுமது.

### எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1114. வாரிபுடை சூழுலகின் முளைத்து நாளும்
வயங்குபெரும் பாதவங்க ளனைத்துந் தாழச்
சீரியவான் பனைதெங்கே யுயர்ச்சி வாய்ந்து
திகழுநறுங் சள்ளருள்கா ரணத்தா லன்றோ
பூரியர்சா ராததிருத் துறைசை மேவும்
புண்ணியனம் பலவாண புனித ஞான
வாரியன்சே வடியடைந்தா ரன்றி மற்றோ
ரருஞ்சாதிப் பற்றிலரென் றறைதல் வம்பே. (சுச)

### வஞ்சித்துறை.

1115. வம்பலர் துறைசை
யம்பல வாண
னம்பல ரடிகு
மும்பலர் பொருளே. (சுரு)

### வஞ்சிவிருத்தம்.

1116. பொருளி லாரைப் புகழ்ந்திடீஉர்
மருளி லம்பல வாணனே
யருளி னுண்டுமெக் கானந்தம்
வெருளில் கோமுத்தி மேவுமே. (சுசு)

குறளடிவஞ்சிப்பா.

1117. மேவும்பவம் யாவுந்தப
மலமூன்றற நலமூன்றுற
நாவருமறை யோவருமுறை
தெருண்மலிதர வருள்புரிமதி, நாளுந்
துன்னிய மிகுபுகழ்த் துறைசை
மன்னிய வம்பல வாணதே சிகனே. (சுஎ)

## குறம்.

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1118. சிகைபடு செந்தீ வளர்த்தவி நாளுந் தேவருக் கருத்து வே தியர்வாய்த் - திருமறை முழக்கஞ் சேணுல களக்குந் தென்றிரு வாவடு துறையிற், பகைபடு தகையி லம்பல வாணப் பண்ணவ னடி யண்டர் தார்க்குப்-பழங்கலை யருளப் புதுக்கலை மறைத்த படியெனப் பசுநற வூற்று, முகைபடு குழலாய் நீயுமவ் வாறே முன்னிய புதுக்கலை மறைத்து-முதுபழங் கலையே யெனக்களித் தனைநின் முகக்குறி கைக் குறி நன்று, தகைபடு மனையான் றடம்புயக் கழுநீர் தரப்பெறு வாயிது பொய்க்கிற் - சாற்றியான் குறப்பெ ணவலோ கரத்திற் றகுநறக் கூடையு மெடேனே. (சுஅ)

கலிவிருத்தம்.

1119. எடுப்பான்கழை மடுப்பானளி தொடுப்பானல ரிகல்வே
ளடுப்பானிம கரன்கோமுத்தி யருளம்பல வாண
விடுப்பானுளங் குறியேயொளி மிகுசெங்கழு நீரே
கொடுப்பானமை யின்றேமகள் குன்றுவகை நன்றே. (சுகூ)

ஊசல்.

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

1120. நல்லார் துறைசை நகுமம் பலவாணன்
பல்லார் வணங்கப் பரிந்தருளுஞ் சீர்பாடி
வல்லார் முலைகுலுங்க வண்கை வளையார்ப்ப
வல்லார் குழன்மடவீ ராடுகபொன் னூச
லணிமே கலையிடையீ ராடுகபொன் னூசல். (எ0)

வெளிவிருத்தம்.

1121. ஊருஞ் சகமெட னயானுழல் வதுதப வருளாயோ
பாரும் பிறவு மறுத்தெழு பண்புற வருளாயோ
தேருந் திறமிது வென்று தெளிந்திட வருளாயோ
வாருந் துறைசையு ளம்பல வாணவெய் யருளாயோ. (எக)

மறம்.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1122. அருள்விர வுருவ னம்பல வாண னுவடு தண்டுறை யரசே, பொருள்விர வொருவா னரசுமற் றரசு பூவர சௌத்தெளி தூத,வெ

ருள்விர வாத மறமுனு மரசின் மெய்த்திரு முகமுமு மதன்கண்,மருள்
விர வாத குழைபல வுண்டே மறிக்குள காமெனின் வையே. (எஉ)

இதுவுமது.

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1123. வையகம் புகழு மாவடு துறைக்கண் மன்னிய வம்பல
வாணன் - மலரடிக் கோதை மற்றவ னடியார் மார்பொடு தோளுறத்
தழுவுஞ், செய்யமற் றவன்முன் புனைந்தருள் கோதை சேய்ஞலூர்ப்
பிள்ளை தோடமுவுஞ் - சேரல நாட்டுச் சிறந்தவோர் கோதை செறியு
மே காலியுந் தழுவும்,வெய்யவெங் கோதை வீரர்கை யனைத்தும் வெளி
வரு கோதைகஞ் சாறர்-மென்மகள் கோதை யாவையு நகுமா விரதி
யர் மார்பையுந் தழுவுங், குய்யமொன் றின்றி யுரைத்தன மறவர்
கோதைசீ ரற்றன்று தூத - குலவுநங் குலத்துக் கோதைவேட் டவர்
கள் கோதையே யடைவது மெய்யே. (எ௩)

இதுவுமது.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1124. மெய்யனு வடுதுறையம் பலவாணன் விடுவதுபோல் விடு
க்கி னென்னும், வையமா ளரசர்திரு முகமெனிற்பெண் கொடுக்குங்
கொன் மறவர் சாதி, வெய்யவா ளவரெங்கள் பெண்ணுசைப் பட்டெ
திர்ந்தால் விண்பூப் பில்லாத், தையலார் முலைதழுவத் தடிந்துதூரந்
திடுவமிது சரதந் தானே. (எச)

## விறலிவிடு தூது.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1125. தான மால்களிற் றண்ணனின் பான்மிகு தண்ணளி யின
னென்றே, யீன மார்தரப் புகழுவை விறலிநீ யிஃதொரீஇ யின்னே
போய், மான வாவடு தண்டுறை யம்பல வாணனைப் புகழ்வாயேற்,
போன நாண்மது ரையிலவ னருள்பெறு பூவைமே ராவாயே. (எரு)

## பாண்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1126. வாய்ந்தவிசை நீலகண்டப் பெரும்பாணர் தமரென்று
வருவாய் பாணு, வேய்ந்ததலை வன்பரத்தை யலாவினனின் பாலன்ப
னென்பா யோர்வல், வேய்ந்தபுக ழாவடுதண் டுறைவளரம் பலவாண
விமலன் பாற்போய்த், தோய்ந்தவிசை பாடுகழல் சூடுபெரு வீடுபெறு
துணிபீ தோரே. (எசு)

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1127. துணிபிறை வெண்மை யெலும்பணி வெண்மை
சூடுகங் காளமும் வெண்மை
துரோணமும் வெண்மை கபாலமும் வெண்மை
துவலைசால் கங்கையும் வெண்மை
பணிதரு கொக்கின் றூவலும் வெண்மை
பயில்குழை யருக்கமும் வெண்மை

பரவுறு கபிலை வாகனர் துவசம்
பரிக்குமக் கிவைகளும் வெண்மை
மணியொளி நீறு வாளிதுஞ் சாவம்
வயங்குதேர்ப் பாகிலா ளில்லம்
மதம்பொழி யயிரா வணமிவை வெண்மை
மற்றியன் மேனியும் வெண்மை
யணிகிளர் முந்நா ணினக்கெனி னிந்நா
ளவிர்புகழ் நீற்றெருடு துறைசை
யம்பல வாண வாரிய வடியே
னறிவுவெண் மையுங்கொளல் வழக்கே. (எஎ)

நேரிசைவெண்பா.

1128. வழியென்று தம்பல வாணகோ முத்தி
யுழியென்கா ளுஞ்சார்ந் துறைவாய் - மொழியுங்
குறைமதியு மன்றுவந்து கொண்டா யடியேன்
குறைமதியு மின்றுவந்து கொள். (எஅ)

கட்டளைக்கலித்துறை.

1129. கொள்ளுந் தமரிலை தாயிலை தந்தையுங் கூடவிலை
விள்ளும் புதல்வர் மனையா தியுமிலை மேலுலகை
யெள்ளுந் துறைசையு ளம்பல வாணனை யெய்தினர்க்குந்
துள்ளுஞ் சிறுமகள் சார்வானுட் கொண்ட துணிபெவனே.()

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1130. எவர்பரவு பெருவெளியை வாள்கொண்டு வெட்டிவடு வியற்ற வல்லா, ரவர்நினது கருணையன்றி மலமாயை கன்மமறுத் தடைவார் முத்தி,யவர்படுசெஞ் சடைமுனிவர் பணிந்தேத்தப் பெருந் துறைசைப் பதிவாழ் வாய்கற்,றவர்வரைகைத் தாமரையம் பலவாண குரவவரு டரவல் லோயே. (அ0)

வலைச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1131. வலைகொடுமுன் மீன்படுத்தோன் றுறைசையினம் பல வாணன் வயங்கா னந்த, வலைகடலா னருள்வலையா லெங்கண்மன மீன்படுக்கு மதாஅன்றுநாளு,முலையைவரா லச்சுறவே திருக்கையடித் தின்பயிரை யூட்டு மிந்நாட், கொலையமையு மெங்கண்மீன் பரவாதிங் ககலும்வலைக் குலக்கொம் பீரே. (அக)

இடைச்சியார்.

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டைஆசிரியவிருத்தம்.

1132. குலவுபல புவனத்து மிருவகை யுறும்பசுக்
குலம்விரா வுறவி ரித்துக்
கோதில்பரி பாலனஞ் செய்தமும் பிள்ளைகள்
குடிக்கவின் பாலு முதவி
நிலவுமெழு விடையொடும பொருதமுழு விடையுடைய
நின்மலப் பே ரண்டனே

நிகழுமா வடுதுறையின் மேயவம் பலவாண
நெடியபேர்த் தோன்ற லாகிக்
கலவுவழி யாறுணர்பு மற்றுமொரு வகையிற்ச
கலபசுக் கிளையு மோம்பிக்
கருதுஞா னப்பால் பெருக்கியமர் வெண்ணெய்மெய்
கண்டானிந் நாளி லுணர்வீ
ருலவுபுகழ் சாலுமிவ் வூரினும் மோர்தயி
ருவந்துகொள் வாரும் யாரே
யொத்தபாற் கலையமோ ரிரண்டும்வேண் டாரகலு
மொள்ளிழை யிடைச்சி யீரே. (அ௨)

இன்னிசைவெண்பா.

1133. இடையான் கடையானு யென்று முழல்வா
னடையா னொருதற் கடுத்ததனை யுய்க்கு
முடையான் றுறைசை யொருவனியன் ஞான
நடையாள னம்பலவா ணன். (அ௩)

குறள்வெண்பா.

1134. நமக்காயு மம்பலவா ணன்றுறைசை யுற்றூர்
தமக்காயுந் தான்சூட்டித் தான். (அ௪)

பஃறொடைவெண்பா.

1135. தானந் தவந்தழைக்குந் தண்டுறைசை யம்பதிவா
ழானந்த போத னருளம் பலவாணன்
றேனந்த வுண்டு தெவிட்டிக் குமட்டெடுத்து
மோனந் தலைசிறந்த முத்த ரொடுகூட்டி
யீனந் தபுத்தான்மற் றென்முதன்மை யுந்தபுத்தா
னானந்தத் தானே நகுமுதன்மை யாயினு
னானந்த ராதினியொன் றும். (அ௫)

## பிச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1136. ஒன்றியமெய்ப் பொருளன்பர்க் குபதேசஞ் செய்யவந்த வொருவன் போல, வென்றியவெம் படைகரந்த கள்ளவிழி யோடுசிவ வேடந் தாங்கி, நன்றியலம பலவாணன் புகழ்பாடி னெவன்சுவண நகுவா னும், பின்றியவண் டுறைசைநகர் மணிமறுகில் வந்துலவு பிச்சி யீரே. (அ௬)

## கொற்றியார்.

இதுவுமது.

1137. ஈரஞ்சார் வனமணிமா லிகைமுதலா இயபலவு மெடுத்துப் பூண்டு, கூரஞ்சார் படைநெடுமாற் கடிமையெனவெளிவந்துங்கொற்றி யீரே, யாரஞ்சார் கழுநீர்த்தோட் டுறைசையுளம்பலவாணனருளவாவி, வாரஞ்சார் தரப்பாடு வீரொருசாக் கியர்போன்றீர் மகிழ்ந்தாம் யாமே.

## வெறிவிலக்கல்.

நேரிசைவெண்பா.

1138. மேலாய வான்றுறைசை மேவம் பலவாணன்
பாலாய வாசை பகர்வார்யார் - சாலாய்கே
டாளா வியங்கவெழு தாலத்தான் மையறினே
வேளா வியங்கே விடும். (அஅ)

கட்டளைக்கலித்துறை.

1139. விடலருங் கோமுத்தி யம்பல வாணமெய் யாசிரிய
கெடலரு நின்றடந் தோளலர் வேட்டவென் கேழ்கிளர்மான்
படலரும் வீர மதவேடன் கையலர் பறபலரா
யடலரு மூருறை வார்வா யலர்மிக் கடைந்தனளே. (அகூ)

நேரிசைவெண்பா.

1140. அடையார் புரஞ்சுட்டா யன்றடையு மானை
யுடையார் புரஞ்சுடு வானுற்றாய் - தடையாரே
செய்வார் துறைசைத் திருவம் பலவாண
வெய்வாரே நீத்தின்றீ தென். (கூ0)

கட்டளைக்கலித்துறை.

1141. எனக்கானந் தத்தை யருள்செயுங் காலமெக் காலமிகு
கனக்கானந் தத்தை யவாய்க்கேட்கப் பாடறு காலுளர்சந்
தனக்கானந் தத்தை யலராடு மாவடு தண்டுறையாய்
முனக்கானந் தத்தைய வம்பல வாண முதலவனே. (கூக)

காப்பியக்கலித்துறை.

1142. முத்த னாயினு மினியவன் கோமுத்தி முதல்வ
னத்த னாயினு மாசிலா னம்பல வாணன்
பித்த னாயினு முழல்பவன் றீவினை பெருக்க
சத்த னாயினுங் கடையனே யாண்டதுந் தகவே. (கூஉ)

நேரிசைவெண்பா.

1143. தகரம் படுங்குழனெஞ் சந்தளர வேள்வித்
தகரம் படுங்கழு நீர்தந்தான் - மகர
மடையாத் தவத்துறைசை யம்பலவா ணனைகை
யடையாத் தவத்துறைமெய் யாம். (கூ௩)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1144. ஆமலியும் வயற்பொதுவி னின்றருளி நடிக்குமிளைப் பாறுமாறு, தேமலியும் பொழிற்றுறைசை யிருந்தருளி யொருநடிப் புச் செய்யா விற்கு, காமலியு மித்தகுகா ரணங்குறித்தே துறைசைவா ணனையெஞ் ஞான்று, மேமலியும் பெரும்புலமை யினர்தாமம் பல வாண னென்பார் மெய்யே. (கூச)

வேறு.

1145. மெய்யே பெருமை யுடையார்பால் விரவிப் புகுநம் பெருங்கருணை, பொய்யே புரிந்து மிகச்சிறுமை பூண்டாய் பாலும்

புகுங்கொலெனிற், செய்யே மலியும் புகழ்த்துறைசைச் செல்வா திரு வம் பலவாண, வையே கடலன் றியுமுறவி யளையும் புகுங்காண் பிர ளயமே. (கூரு)

1146. மேகம் பொலியுங் குழன்மடவாள் விடாது தன்மேற் பழம்பகைபூண், டேகம் பொலியு நின்கூட்ட மிச்சித் தனளென் றுடன்றடும்வே, ளூகம் பொலியும் பொழிற்றுறைசை நம்பா நகுமம் பலவாணு, மோகம் பொலியுஞ் செங்குவளை முருக்குங் கருங்கு வளைக்கெதிரே. (கூசு)

கட்டளைக்கலித்துறை.

1147. எதிருற்ற யானுநின் பொற்று மரையடி யெய்தப்பெற்று
மதிருற்ற சிந்தையி னேடுழல வேன்கொலவ் வாறுழன்றுற்
கதிருற்ற கோமுத்தி யம்பல வாணமுற் காலத்திலன்
புதிருற்ற நெஞ்சத்தொ டீதுற்ற கூற்றத்தை யொப்பவனே.()

இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

1148. ஒப்பிலான் கோமுத்தி யுள்ளா னொளிர்சடையோ
டப்பிலா னெங்க ளருளம் பலவாணன்
றப்பிலான் மாக்களுக்கோர் தாய். (கூஅ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1149. தாயனையாய் முன்னநினைச் சார்ந்தாரைச் சார்ந்தார்க்குந் தந்தாய் முத்தி, பேயனையாய் வருதியென்று நினைச்சார்ந்த வெனக் கருளாப் பெற்றியென்னே, நாயனையா யகலென்றுற் கதியேதா வடு துறையாய் நமக்கான் சாடுங், தீயனையாய் திகழ்திருவம் பலவாண மெய்ஞ்ஞானச் செல்வக் கோவே. (கூகூ)

நேரிசைவெண்பா.

1150. வேதனைசெய் மும்மலமும் வேரோ டறுத்தருளா
யேதனையென் றென்றியொன்று மின்பமுறக் - கோதில்
குலவாணு மெய்ஞ்ஞானக் கோமுத்தி வாழும்
பலவாணு நீகடைக்கண் பார். (க00)

அம்பலவாணதேசிகர்கலம்பகம் முற்றிற்று.

---

## சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர்மாணக்கராகிய

திரிசிரபுரம். சி. தியாகராசசெட்டியாரவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1151. நலமன்னு கைலாய பரம்பரையி னருட்டுறைசை நமச்சி வாயன், குலமன்னு சூரியனம் பலவாண தேசிகன்மேற் குணத் தான் மிக்க, நிலமன்னு பெரும்புலவர் விரும்புகலம் பகம்புனைந்தா னிகழுங் கீர்த்தி, வலமன்னு சிராமலைவாழ் மீனாட்சி சுந்தரநா வலவ ரேறே.

---

கணபதி துணை.

# சீகாழிக்கோவை.



## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

ஆபத்துக்காத்த விநாயகர்துதி.

1152. குருக்காழிக் கோவைகொ லென்றுமை யோடு குலைத்த லைகோ, டுருக்காழிக் கோவைச்செ யாபத்துக் காத்த வொருகளிறு, தருக்காழிக் கோவை யுரித்தருப் பாயந் தரித்தவர்க்குத், திருக்காழிக் கோவை தனைச்செயுங் கோபஞ் செயாதுவந்தே. (க)

ஆண்டவிநாயகர்துதி.

1153. தரக்கோவை வாய்விலங் கோசீய மோவெனத் தாயுறுவ, தரக்கோவை வாளிற் றுணிக்கோவென் றென்றனந் தோன்றிநின் றெண், கரக்கோவை யெத்தனை யோகண்ட சீரிற் கமழ்பிரம, புரக் கோவை பாடுவிக் குங்காழி யாண்டசெம் போதகமே. (உ)

அவையடக்கம்.

1154. திருகோட்டு மன்பர் திருக்கோவை யார்முனந் தீட்டி யதா, லிருகோட்டு நீர்முடி யாளர் பிரியரென் றெண்ணிவிண்ணம், பொருகோட்டுக் காப்புக லிக்கோவை பாடப் புகுந்தகனுக், கொரு கோட்டு மாவையுள் ளூன்றினன் மேற்படர்ந் தோங்கிடுமே. (ந)

---

## நூல்.

### கைக்கிளை.

---

காட்சி.

1155. பூமேவு கஞ்சமு மேக்தெழி னீலமும் பூந்தளவு
மாமேவு கோங்கமும் பாங்கமர் காந்தளும் வாய்ந்தறிஞர்
நாமேவு கொம்பரொன் றுற்றது வானிலே நங்கைபங்கர்
தேமேவு கொன்றைச் சடையாளர் காழிச் சிலம்பகத்தே. (க)

ஐயம்.

1156. வெள்ளாம்ப லான்கொல்செந் தாமரை யான்கொலொண் மேனிகருங், கள்ளாங் குவளையன் னான்கொனங் காழிக் கடவுள் வெற்பி, னுள்ளா மிவரடி தோய்தவ முன்ன ருனுற்றுலக, நள்ளாங் குடிகொண் டரசா டவஞ்செய் நலத்தினனே. (உ)

துணிவு.

1157. நாமகண் மாமகள் சேர்காழி நாதர் நகுமிமயக்
கோமகள் பாகர் விடைப்பாகர் தென்கழுக் குன்றத்தொப்பி
லாமகள் கோதைநம் போல்வா டலினிமை யாடலிற்றாள்
பூமகள் சூடலி னேயமின் றாலிவள் பூமகளே. (௫)

துணிந்தவழி வியத்தல்.

1158. பிறையு முழுமதி யுங்கருங் கொண்டலும் பெற்றமின்
கொ,னிறையு முனிவர் பெரும்பகை மாற்ற நினைந்துவில்லே, ஞறையு
மெழில் னமைத்தபொற் கொட்புகொ லொத்துலகோ, ரறையும்
புகழ்ச்சண்பை யாண்டகை யார்வரை யாயிழையே. (௬)

குறிப்பறிதல்.

1159. போர்கால்வெஞ் சூலப் படையார் பிரம புரத்திறைவர்
சீர்கான் முகத்திரு நோக்குள் வலத்துச் செறிகணிய
லோர்காலெழுமற் றிடக்க ணியலொரு காலெழுமிப்
பார்கால் கொழுந்தனை யாரிரு நோக்குஞ்செய் பார்வையினே.

குறிப்பறிந்தவழித் தெய்வத்தை மகிழ்ந்துரைத்தல்.

1160. மேக்குங் கிழக்கும்பொற் குன்றகம் வாழ்நர் விராவவளைத்
தாக்குந் திறத்திற் கழுமலத் தீச ரருட்பெரியர்
போக்கும் படியில் கிளையிற் பிரித்திப் பொலிமினையெற்
றாக்கும் படியளித் தாரவ ரேதெய்வஞ் சத்தியமே. (௬)

---

## இயற்கைப்புணர்ச்சி.



இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

1161. கல்லா ரலர்முற்றுங் கற்றும்வன் றொண்டரங் கால்பரவை
வில்லார் முலையின் படையப் பிறாடி வீழ்ந்திரந்தார்
செல்லார் பொழிற்பு கலியார் பொதியச் சிலம்பமரிந்
நல்லா ரடியடைந் தேயிரப் பாமின்ப நாம்பெறவே. (எ)

இரந்துபின்னிலைநிற்றல்.

1162. விண்பர வாதிப் பிரான்றிருத் தோணிமுன் மேவிமிக்க
தண்பர ஞான வமுதமும் வாங்குந் தாமுடையே
னெண்பர வாயறுஞ் செவ்வா யமுதமின் னேயிரந்தேன்
பண்பர வாய மொழியீர் மறீர்பழி பற்றிடவே. (அ)

முன்னிலையாக்கல்.

1163. நாகங் கருதுஞ் சிரபுரத் தீசர் நசுவரைவாய்க்
கோகங் கருது முலையீர்நல் லாயக் குழுவினகன்
றேகங் கருதிச் சுனையாட லாதிய வின்றிநின்றீர் [யே. (கூ)
யோகங் கருதியென் றேநினைத் தேன்சொன்மி னுண்மையை

வண்டோச்சி மருங்கணைதல்.

1164. மோதுந் திரைக்கடற் காழிப் பிரான்வரை மொய்த்தவண்டீர்
யாதும் பெயர்பொய்ம்மை யேயளி யென்ற லஞரினொடு
தீதும் படவிடை கூந்தலிற் பாய்ந்து சிலீமுகமென்
றோதும் பெயர்மெய்செய் தீரிவர் பாலிஃ தொத்ததன்றே. ()

மெய்தொட்டுப் பயிறல்.

1165. எய்தவஞ் செய்கழல் காணெனுங் காழி யிறைவர்வெற்பின்
மெய்தவஞ் செய்த மனமே முகமு மிளிர்புயமு
மைதவஞ் செய்தடை கண்ணார்பொற் றாளும் வருடநந்தங்
கைதவஞ் செய்ததுண் டில்லையென் றாலது கைதவமே. (கக)

பொய்பாராட்டல்.

1166. வார்க்குங் குமமுலை யாணிலை யாளமர் வாமத்தர்நீ [யல்
ரார்க்குஞ் சடையர்தென் காழியன் னீர்நும் மலர்த்தொடை
போர்க்குங் குழற்கிணை யாமா கருதிப் புயல்கறுத்துப்
பார்க்குமொவ் வாமை விளர்க்குமிவ் வாறு பயின்றிடுமே. ()

இடம்பெற்றுத்தழால்.

1167. எண்ணார் புரஞ்செற்ற வல்லார்வில் லார்பொன் னெயிற்புக
கண்ணார் சிராமலை வாயெவ ருங்கல வாதவண்டின் [லிக்
பண்ணா ரிளமரக் காவுண்டு மாதவிப் பந்தருண்டு
தண்ணா ரிவர்கட் கடையரு ளுண்டு தழுவுவமே. (கங)

வழிபாடுமறுத்தல்.

1168. விண்ணியன் மாமதி வேய்ந்தார் கழுமல வித்தகர்தந் [யே
தண்ணியன் மால்வரை வாய்விரை வாய்மலர்த் தண்கொடி
பெண்ணிய லென்று வடநூலி னும்பெறு மிலச்சை
கண்ணிய லாமெனக் கஃதொழி யாதின்று காத்தருளே. (கச)

இடையூறுகிளத்தல்.

1169. ஞாலம் பொலியப் பொலிகாழி நாதர் நறுமலர்க்கைச்
சூலம் பொலியக்கொள் வார்பவர் வேணிச் சுடர்மதிபோற்
பாலம் பொலியநிற் பீர்மிசை யேயன்றிப் பாணியுள்ளா
னீலம் பொலியவைத் தீர்தகு மோவென் னிலைக்கண்டுமே. ()

நீடுநினைந்திரங்கல்.

1170. அருளாற் பரமர் புகலியிற் பாலுண்ட வையர்தென்னற்
கருளாற் புகுத்திய கோயவ ரேயொழித் தாங்கிவரெற்
கருளாற் புகுத்திய நோயிவ ரேதெற லன்றிமற்றோ
ரருளாற் புகன்மந் திரமாதி யானொழி யாததுவே. (கசு)

மருந்தெதிர்கோடல்.

1171. பேரியல் வையைப் பெருக்கன்பர் காமப் பெருக்கதனுட்
சீரிய லன்பர் விடுமேடு போலச்செல் லாதமணர்
காரிய லேட்டிற் கழிந்தது நாணங் கரைவதென்னே
யாரியல் செஞ்சடை யார்காழி நாத ரருளிதுவே. (களா)

வறிதுநகைதோற்றல்.

1172. பொருந்தும் பரவை புலவியிற் றேம்பும் புலவர்முனஞ்
சருந்தும் பிரான்முனைத் தாலெனக் காழி யணிவரைவாய்
வருந்துந் தலைவன் றடுமாற்றந் தீர வறிதுநகை
முருந்து நிகர்நகை யார்செய்ய வாயின் முளைத்ததுவே. (கஅ)

முறுவற்குறிப்புணர்தல்.

1173. அடியார் குறித்த தருள்காழி நாதர்வெள் ளானுயர்த்த
கொடியார் புரிந்த குறுநகை முப்புரங் கொன்றதிடைத்
துடியார் புரிந்த குறுநகை யென்னையென் றுரல்குலத்து
நெடியார் பலரை யுயச்செய்த தீது நிகரிதே. (கசு)

முயங்குதலுறுத்தல்.

1174. ஆடிய பாதர் பிரம புரேச ரருளனையார்
கூடிய மாமுலை பற்றி நிதம்பங் குடைந்துதுவர்
நீடிய வாயமு துண்டாம் வரைபற்றி நேமிகுடைந்
தோடிய வாரமு துண்டார்கொ லோநமை யொப்பவரே. (உo)

புணர்ச்சியின் மகிழ்தல்.

1175. தண்ணொளி தேயன்பர் மேவிக் கலப்பத் தனையருளு
மெண்ணொளி காழிப் பிரானெனத் தன்னை யிகறெறுமைக்
கண்ணொளி யாதுங் கருதா தளிக்கக் கலந்தனம்யாம்
விண்ணொளி யாரண னாரணன் போகமும் வேண்டிலமே. ()

புகழ்தல்.

1176. தண்டா ரரவர் சிரபுரத் தீசர் தனிவிழிபோன்
மண்டா ரழற்கரம் போய்வெயில் வாய்நின்று வாடித்தவ
மெண்டா ரணிவியப் பப்புரிந் தாலு மெனையடிமை
கொண்டார் வனமுலை யோலுவி ரோசெய்யுந் தோட்கங்களே.

### ஏற்புறவணிதல்.

1177. சேலிற் பிறழ்விழிக் கஞ்சனந் தீட்டித் திகழ்தொடையைம்
பாலிற் புனைந்து முலைமேற் கலன்கள் பலதிருத்தி
மாலிற் பொலியொரு பாலார்தென் காழியில் வண்சிலம்பு
காலிற் புனையவுங் கற்றன வாநங் கரதலமே. (௨௩)

---

## வன்புறை.



### அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

1178. மறிவா ளனையகண் ணாய்பரன் காழி மணிவரைவா
யெறிவா ளுடைக்கல மெல்லாநின் றேழியி னின்றணிந்தேன்
குறிவா ளுடையக் கலம்வாய் படைத்துண்மை கூறிடுமே
லறிவா ளஃதுள்ளி யுட்கொள்ள ணாணமு மச்சமுமே. (௨௪)

### பெருநயப்புரைத்தல்.

1179. நலரா யினரன்றி வேதா கமநன் னடைபிறழுங்
கலரா யினரணு காப்பாழி யார்புகழ்க் காழியின்வாய்ப் [காண்
புலரா விளம்பொழில் சூழ்வாவி வாயொண் பொறிவண்டு
மலரா வரும்புங் குவியா மலருங்கொள் வல்லியுண்டே. (௨௫)

### தெய்வத்திறம்பேசல்.

1180. துருவின மாலுக் கரியர் பெரியர்வண் டோணிபுரத்
திருவின பற்றுடை யார்விடை யார்த மிலங்கருளா
லுருவின ராய முருகனும் வள்ளியு மொப்பெனயா
மருவின மாலிஃ தியாரிடை நீக்கும் வலியினரே. (௨௬)

### பருவரலுணர்தல்.

1181. மயலா ரெனக்கு மலமாயை கன்ம மடித்தருளு
மியலா ரமலை பயலார்தென் காழி யிளங்கொடியே
புயலர் பொழிலகம் பாணித் துறையிற் புகுந்தமரு
மயலா ருணரவுங் கூடுமென் றேவின் றழுங்குவதே. (௨௭)

### பிரிவச்சம்.

1182. நில்லா துயிர்பிரிந் தாற்கணப் போழ்துமிந் நேரிழைக்குச்
செல்லாது பாணித் திருப்புமிச் சோலையிற் செய்வதென்யா
மல்லார் களத்தன் புகலிப் பிரான்பிரி வஞ்சியன்றே
வல்லார் முலையிலை மாதோடு மொற்றித்து வாழ்கின்றதே.

இன்றியமையாமை எடுத்துரைத்தல்.

1183. புகலும் படிபுகல் வார்புக லாய புகலியுள்ளான்
மிகலுங் குறைவுமில் லானருள் சாரினு மீன்கரையோ
டிகலும் புனலே யகலினெத் தன்மைத் தியலுநினை
யகலும் படியுறி னற்றென தாருயி ராரணங்கே. (உகூ)

பிரியேனென்றல்.

1184. வரியேன் மதர்விழிச் சங்கிலி காண மகிழடியிற் [தையான்
பிரியேனென் றோதிப் பிரிந்துவன் றொண்டர்முன் பெற்ற
றெரியே னலேன்வண் புகலியன் னீர்நுமைத் தீர்ந்துமுயிர்
தரியேன் பிரியே னெனச்சட்டை நாதர்முன் சாற்றுவனே.()

பிரிந்துவருகென்றல்.

1185. இருந்துமுன் சங்கத் தருந்தமி ழாய்ந்த விறைகடனஞ்
சருந்துமுன் னோன்றிருக் காழியன் னீரரும் புஞ்சுரும்புந்
திருந்துமுன் றோன்றும் பொழிலகத் தேகிநுஞ் சேற்கணி
பொருந்துமுன் வந்து புகுவே னகுமிப் புனத்தகத்தே. [மை

இடமணித்தென்றல்.

1186. கயலம ருங்கொடி யானை முனிந்து கனிந்துமெய்யிற் [மென்
பயலமர் வாட்புணர்ந் தாருணர்ந் தார்சண்பைப் பாங்குறு
வயலமர் வஞ்சிநின் குன்றம ரானை மருவுமயி
லியலமர் நின்னொடு மென்னொடு மாறுபட் டென்னமின்னே.

# தெளிவு.



1187. குழைதரு காத ருழைதரு கையர் குலவுகரு
மழைதரு கண்டர் தழைதரு காழியில் வாழ்க்கைபெற்ற
பிழைதரு தன்மையில் யாவருங் கூற்றம் பிழைப்பரென்பார்
விழைதரு தன்மையி லாக்கொலைக் கூற்றத்தின் மேற்றண்மையே.

# பிரிவுமகிழ்ச்சி.



செல்லுங்கிழத்திசெலவு கண்டு உளத்தொடு சொல்லல்.

1188. காணு மாயின தாலுயி றென்று கரைதருவார்
காணு மாயின ரென்னுயிர் காணு நலத்தினதாய்க்
கோணு வருவொழி செல்லுதல் பார்கனி கூர்மனமே
மாணு வெனக்கு மருள்காழி நாதர்பொன் மால்வரைக்கே. ()

### பாகனொடு சொல்லல்.

1189. அற்றே மலர்க்குழ லோர்கையின் றூங்க வவிழ்ந்தகலை
சிற்றே ரிடையி லொருகைமுன் றூங்கச் சிலம்பொலிக்கப்
பற்றே யிலார்தம் பரன்காழி வாயருட் பார்வையென்மே
லுற்றே நடப்பது பார்வல வாவென் னுயிர்த்துணையே. (௩௫)

## பிரிவுழிக்கலங்கல்.



### ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

1190. தீயிடை யாடும் பரமர் தமக்குந் திருநிலைக்குஞ்
சேயிடை மேவப் பொலிவார்தென் காழிச் சிலம்பின்மெலிந்
தோயிடை யாரிவர் மாண்பின்ன தேன்மகிழ் வுற்றிவரை
யாயிடை மேவி யதுநன வோகன வாயதுவே. (௩௬)

### நெஞ்சொடுகிளத்தல்.

1191. இலம்பாடு ளார்பெருஞ் செல்வர்தம் வாழ்வெய்த வெண்ணுவதி
னலம்பாடு மேவுங்கொல் காழிப் பிரான்பொன் னருவரைவாய்
நிலம்பாடு மாதவஞ் செய்திலம் யாநெஞ்ச மேயினிச்சஞ்
சலம்பாடு கோடு மெளியர் கொலோவிந்தத் தையலரே. (௩௭)

### வாயில்பெற்றுய்தல்.

1192. வேண்டா ருறவென்றும் வேண்டா ரரிக்கும் விரிஞ்சனுக்கு
நீண்டார் தலைக்கலம் பூண்டார்தென் காழி நெடுவரைப்பா
மூண்டார் மயற்கு மருந்துணர்ந் தாமுனி யாதுநம்மை
யரண்டார்கண் மானொரு மாதர்கட் பார்வை யவாவியதே. ()

### பண்புபாராட்டல்.

1193. கலரா யினரணு காக்காழி யார்வரைக் காரிகையார்
புலரா முகத்தை மலரினொவ் வாயம் புணர்முலையை
யுலரா தரும்பினொவ் வாய்விதி யாயு ளுளவரைக்கு
மலரா திருமற் றலரெனக் காவதெ னம்புயமே. (௩௯)

### பயந்தோர்ப்பழிச்சல்.

1194. கழிபடு வெண்டலை மாலையன் காழிக் கடவுள்வெற்பின்
மொழிபடு நான்முக னுயுள் வடதிசை மூர்த்திசெல்வம்
விழிபடு மேனியன் போகமிம் மூன்றும் விராயெனக்கோர்
வழிபடு தெய்வந்தந் தார்நீடு வாழ்கவிம் மாநிலத்தே. (௪0)

கண்படைபெறாது கங்குனோதல்.

1195. அனம்போ லியங்கு மணங்களை யாரிடத் தாய்துயிலென்
மனம்போ லடைந்தது மீண்டில தானெடு வானமுய்யக்
கனம்போ லிருண்ட களத்தார்தென் காழியிற் கங்குலொரு
வனம்போல் வளைவுற்ற தம்புலி வெம்புலி மானுவதே. (சக)

---

## இடந்தலைப்பாடு.

தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

1196. வன்றந்த யானை யுரித்தார் புகலிவல் லாரருளா
லென்றந்த காரமெஞ் ஞான்றுங் கெடுத்தொளி யேகொடுக்குந்
துன்றந்த வாயத்தி னீக்கிநம் மாவித் துணைபுணர
முன்றந்த தெய்வமின் னுந்தருஞ் சேறுமம் மொய்பொழிற்கே.

தலைவன் நெஞ்சோடுவினாதல்.

1197. வானோக்கி நிற்கு மயில்போற் பொழிலை மருவியெனைத்[லோ
தானோக்கி நிற்குங்கொ லோருங்கொ லாயத்திற் சாருங்கொ
மீனோக்கி பாகர் விடைப்பாகர் காழி விமலரருண்
மானோக்கி யின்னளென் றியானுண ரேன்புகல் வாழிநெஞ்சே.

அவளமரிடம் அவளாகக்கூறல்.

1198. பொன்னா ரிளந்தளிர் மேனியு நீன்மணிப் பூங்குழலு
மன்னார் பசுங்கழைத் தோளுங் குவட்டு வனமுலையு [தீந்
மின்னார்செங் காந்தட்கை யும்மையர் வெங்குரு வெற்பமைந்
தென்னா ருயிரனை யார்போன்று தோன்று மிதுவியப்பே.(சச)

மன்னனை நீனைந்து மின்னிடைமெலிதல்.

1199. என்னிரு கண்ணனை யாயக லேனென் றிசைத்தகன்ற
மின்னிரு தோளரிங் கெய்துவ ரோதமர் வெள்ளமிகத்
துன்னிருஞ் சாரவ ணெய்துவ ரோவென்ன சூழ்வரோ
பன்னிரு நாமப் பதிச்சட்டை நாதர் பழமலைக்கே. (சரு)

முந்துறக் காண்டல்.

1200. பொன்னே வெனுஞ்சடை யார்காழி நாதர்செம் பொன்வரைவாய்த்
தன்னேடொன் றுமெனை யல்லாது வேறென்று தான்புகுதற்
கன்னே கொடாவகத் தோடெங்கும் வீசி யவிரொளியி
தென்னே வெனவுற்ற தென்முடி மாணிக்க மின்றுவந்தே.()

### தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தல்.

1201. ஒருவரு மின்றி யசோகடி மேவினர் யோகிபரே
யொருவரு நீர்மை யிவரொரு நால்வர் புடைவளைப்ப
மருவரு மாலடி மேவு படாத வளம்படுவெங்
குருவரு யோகியின் மிக்கா ரிவர்க்குக்கை கூப்புதுமே. (௪௭)

### முயங்கல்.

1202. பெருமான் புகலிக் கவுணியர் முன்னம் பெருமணஞ்சார்ந்
தொருமான் கரம்பற்றி யுற்றவின் பேயிதற் கொப்பெனவித்
திருமான் கரம்பற்றிச் சேராப் பெருமணஞ் சேர்ந்துறமே
வருமான வின்பமுற் றேனிது வேபெரு வாழ்வெனக்கே. ()

### புகழ்தல்.

1203. பாவியல் சீர்த்திப் புகலிப் பிரான்பொற் பரங்குன்றின்வாய்த்
தேவியன் மேனித் திருவே திரிநேத் திரம்படைத்து [து
மேவிய தொத்தது கொல்லோநின் கொங்கைக்கு மேலெழுந்
தாவிய தாயெப் படிவரி னும்பந்து தானுமற்றே. (௪௯)

### உடன்புணராயத்துய்த்தல்.

1204. கதிர்நோக்கி நிற்குங் கமலத்தில் வானங் கலந்தகொண்மூ
வதிர்நோக்கி நிற்கு மயிலிற்றென் காழி யமலரருண்
முதிர்நோக்கி நிற்குமெய் யன்பரி னீவரன் முன்னியதற்
கெதிர்நோக்கி நிற்குநின் னாயத்துண் மெல்ல வெழுந்தருளே.

---

## பாங்கற்கூட்டம்.



### தலைவன் பாங்கனைச்சார்தல்.

1205. பற்றா வெனக்கு மருள்காழி மேய பரமர்திருக் [னார்
குற்றால மன்னசெவ் வாய்வெண் ணகைக்கருங் கூந்தன்மின்
முற்றா முலையின் படையத் தடையென் முழுக்கலையுங்
கற்றா னொருமறை யோனுள னான்மிகு காதலனே. (௫௧)

### பாங்கன் தலைவனை உற்றதுவினாதல்.

1206. கண்கொண் டவிர்நுதற் காழிப் பிரான்பொற் கயிலைவெற்பா
மண்கொண் டடங்கலர்க் கீந்தனை யோவிண் மணிபொன்முத
லெண்கொண் டவைகொண் டுயிர்ந் தனைகொ லெழுழ்கனிந்து
திண்கொண்ட நின்புயம் வாடுதற் கேதுவென் செப்புகவே.()

தலைவன் உற்றதுரைத்தல்.

1207. நிலைமுழு துங்கெடு நாளய ஞதி நெடும்புலவர்
தலைமுழு துந்தரிப் போன்காழி நாதன் றமிழ்வரையோர்
கொலைமுழு துஞ்செய்கண் ணுண்முக மாய குருஉமதிக்கென்
கலைமுழு துங்கொடுத் தேனடுத் தேனினைக் காதலனே. (ருந)

பாங்கனை நின்துறையாக இது முடிக்கவேண்டுமென்றல்.

1208. மயில்கா யியலின டந்தவெங் காமம் வரம்பொருவி
வெயில்கா யறைவெண்ணெய் போலப் பரந்தது மேனியெங்கு
மெயில்காய் நகையர் தகையர் புகலி யிறைவர்வெற்பிற்
குயில்கா யெழிலியி னீகாயின் மாயுமக் கோளினதே. (ருச)

கற்றறிபாங்கன் கழறல்.

1209. கரும்பைச் சிலைசெய்த காம னெரியக் கனல்விழித்தா [ற்
ரரும்பைப் பொருமுள் ளடையார்தென் காழி யடையலர்போ
றுரும்பைப் பொருள்செய்து வாடுநின் றேட்பெருந் தாணமென்று
விரும்பைச் சிதல்சென் றரிக்குமண் ணுனிற் கிதுதகுமே. ()

கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

1210. பண்பார் திருவெழு கூற்றிருக் கைப்பதிப் பற்றுடையார்
நண்பா ரருளி னெனக்ககப் பட்ட நறுநுதலை
விண்பாரின் மிக்கதன் றெலென மேவும் விளங்கிழையைக்
கண்பாரப் பாலுரை யாமெவ யாவுமென் காதுறுமே. (ருசு)

கிழவோன் பாங்கனை ஆண்டுச்செல்லவேண்டுமென்றல்.

1211. நன்று லடியுறை வார்பிறை வார்சடை நம்பர்செம்பொற்
குன்று லமைத்த மதிற்காழி யார்கொடுங் குன்றகநீ
சென்றுனண் பாசென் றனும னிராகவன் சிந்தைத்துயர்
கொன்று லெனவென் மனத்துயர் யாவையுங் கொல்லுவையே.

கிழவோற்பழித்தல்.

1212. எண்மையு ளேன்றன துண்மை விராவ வினிதருளுந்
தண்மையு ளான்கொச்சை யாளியண் ணுமலைச் சாரலினோ
பெண்மைகண் டாண்மை யுடைந்ததென் றுய்பிற ருக்குணர்த்தும்
வண்மையெங் கேமனத் திண்மையெங் கேயெங்கண் மன்னவனே. ()

கிழவோன்வேட்கை தாங்கற்கருமைசாற்றல்.

1213. இரியாவெப் பாளரைச் சூழவெந் தீயிட் டெரித்ததென
வரியா வுகைக்கும் புகலிப் பிரானரு ளாயமின்செய்
பிரியா வஞர்பெரு கப்பேசு வாயென் பிறதுயர்க்குத்
தரியாநின் மேற்குற்றம் யாதுநண் பாவென் றலையெழுத்தே.

பாங்கன் தன்மனத்தழுங்கல்.

1214. படியே பொலியப் பொலிதொண்டை நாட்டிற் படர்த்த முல்லைக்
கொடியே குறிஞ்சிக் கொடிபிறி தாய கொடியெனிற் பொன்
முடியே புனையுங் களிறுகட் டுண்ணுங்கொன் மொய்த்துவண்டு
குடியே கொளுங்கொன்றை யான்காழி வாயென் கொடுவினையே.

தலைவனுடைழுங்கல்.

1215. வெங்கூற்ற மாய்க்கும் விறற்காழி நாதர்பொன் மேருவின்வாய்
மங்கூற்றந் தீர்பெரு மானீ யொருசிறு மான்பொருட்டென்
செங்கூற்ற முற்றுங் கருங்கூற்றஞ் செய்யிலென் செய்குவல்
பொங்கூற்ற வாழி புரண்டாலெங் கேகரை போகடலே.[யான்

எவ்விடத் தெவ்வியற்றென்றல்.

1216. கரையோ விலாவலி யேமிரு வேமிது கட்டுரைகா
ணரையோ திமனுண ராமுடி யார்சண்பை நாடனைய
விரையோ வருங்குழ லாளியல் யாதவண் மேவிடம்பொன்
வரையோ திரையோ வுரையோ தரும்புகழ் மன்னவனே. ()

அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்றென்றல்.

1217. ஒருபா லுமையினர் தென்காழி மால்வரை யோர்முளைக்குத்
தருபால்பொற் றுள மொழிமுலை யானத் தாளநகை
பொருபா விலாதசெம் பொன்மேனி வெற்றி பொலிவியலோ
ரிருபான் முகிறவ ழுவ்வரை யேயிட மென்னுயிர்க்கே. (சுாரு)

பாங்கன் இறைவனைத்தேற்றல்.

1218. கலங்காரி னுள்ளங் கலங்கக் கலக்குங் கருங்குயிலை
மலங்காய் பவரை விலங்கான் புகலி மணிவரைசார்ந்
துலங்கா முறுபுயத் தாய்கண்டு மீள்வ லுறைபிவணின்
விலங்காத துன்பந் தனக்கு மெனக்கும் விடைகொடுத்தே.()

குறிவழிச்சேறல்.

1219. நலஞ்சாரன் பாளரொ டென்னையுஞ் சேர்த்தரு ணம்பன்
குலஞ்சார் புகலி வரைவாய் முளைத்த கொடியெனத்தா[முகிற்
ணிலஞ்சார் தரநிற்கு மோவண்ட லாட்டி னிகழுறுமோ
வலஞ்சார்நங் கோனு ளழலரக் காக்கிய வாணுதலே. (சுாரு)

தலைவியுருவு வெளிப்பட்டமைகண்டு தலைவன்கூறல்.

1220. காய்மா றிலாத்தென்னங் காச்சண்பை யார்வரைக் கண்முகின்மேற்
பாய்மா முலைமத மாவல்குற் றேர்நுதற் பாரவில்கண் [மால்
ணுய்மா வடுவெம்புங் கொண்டெங்குந் தோன்றுமென் னுருயிர்
சேய்மார னென்னைக் கறுப்பது நோக்கிச் சிவப்பதொத்தே.()

காணுங்கொலோவெனத் தலைவன் ஐயுற்றிரங்கல்.

1221. விண்டா னெனப்பொலி வேணு புரேசர் வியன்சிலம்பிற்
பண்டானண் பாகி யவனென் னருமைப் பசுங்கிளியைக்
கண்டான்கொ லோவவட் காணுது தேடிக் கழியவலங் [வே.
கொண்டான்கொ லோவறி யேன்குறி யேனென்றுங் கோளுற

இறைவியைக்காண்டல்.

1222. சேவே கொடியமைத் தார்காழி வாணர் சிலம்பிதுவே
காவே குழலுழ லேவே விழிநறுங் காமர்கஞ்சப்
பூவே முகமத மாவே முலையிப் புனையிழையே
யாவே நிகர்வண்மை யான்சொற்ற மாதிதற் கையமின்றே. ()

பாங்கன் இறைவியை எளிதிற்காட்டியதெய்வத்தை வணங்கல்.

1223. உன்னும் பெருந்திருக் கோனுமற் றியானுமின் றுய்யும்வண்ண
மின்னுங் கொடியிடை யாளைத் தமர்நின்றும் வேறுசெய்து
துன்னும் பொழிலி லெளிதுறக் காட்டிய தொல்புகலி [தே.
மன்னுங் கடவுளை யேதொழு வேனென்றும் வாழ்த்தல்செய்

பாங்கன் இகழ்ந்ததற்கிரங்கல்.

1224. எண்ணுது கூற விழுக்கெனன் மெய்ம்மை யெடுத்தமிர்த
முண்ணுது நஞ்சுண்ட வன்காழி யன்னவ ளொண்குணமு
மண்ணு தொளிர்மணிப் பூணுனுட் காதலும் வன்பொறையுங்
கண்ணுதி யானிகழ்ந் தேபெரும் பாவங் கவர்ந்தனனே. (எ0)

தலைவனைவியத்தல்.

1225. ஊரைக் கடக்கு நகையானி லேதி யொருவிநெடு
நீரைக் கடக்கு மதிற்காழி யன்னவிந் நேரிழையார்
சீரைக் கடக்கு முலையானை யும்மிடைச் சிங்கமுஞ்செய்
போரைக் கடக்குநம் மண்ணலை யாவர் பொருவுவரே. (எக)

தலைவியைவியத்தல்.

1226. மறியா ரிடத்தர் புகலி வலத்தர் மணிவரைவாய்ப்
பொறியா ரசோகநன் னீழல்வன் பூவின்மென் பூவடிவைத்
தறியாரி னிற்பர்நங் கோமகன் சோக மகற்றியவன்
குறியா ரிதய கமலால யங்குடி கொள்பவரே. (எஉ)

தலைவன்றனக்குத் தலைவிநிலைகூறல்.

1227. நிலவா தவனழல் கண்செய்த கோனிறை நீர்ப்புகலி
வலவா தரவரை வாயண்ண லேயெழில் வாய்ந்தொளிரோ
ருலவாத வல்லி யொருகொம்பர் நோக்கி யொருவர்வந்து
கலவாத சோலைக் கடைத்தனி யேநிற்கக் கண்டனனே. (எ௩)

தலைவி தலைவன்வருங்கொல்லோவென நினைத்தல்.

1228. உடையும் படியுள் ளுருகுநர் பால்வின் னுளரொருங்கு
மிடையும் படியடை வேணுபு ரேசர் விழையவனூர்
குடையும் படிமெலி வேன்பா லுவகைக் குலங்குடிகொண்
டடையும் படியின் றடைவர்கொ லோவென்னை யாள்பவரே.

தலைவன்சேறல்.

1229. மன்றுடு மையர் கழுமலத் தீசர் மணிவரைவாய்
நின்றுடு மாயத் தொடுகெலந் தாடுங்கொ னேயத்தொடு
கன்றுடு மங்கை திருமுகந் தாங்கக் கருதிவெப்பங்
கொன்றுடு சோலையி னிற்குங்கொ லோவென் குலதெய்வமே.

தலைவன் தலைவியைக் காண்டல்.

1230. விறலெதிர் தோட்சண்டை யாரமு தோடன்பர் மேவுமுன்மீ
னறலெதிர் வண்குரு காவூரில் வந்துநின் றுங்குவில்வே
டிறலெதிர் வாயமு தோடிப் பொழில்யான் செறியுமுனென்
னுறலெதிர் நோக்கிநின் றாரென்னை யாளு மொருவர்வந்தே.

கலவியின் மகிழ்தல்.

1231. அம்பல வாணர் கழுமலத் தீச ரருள்வலியா
னம்பல மாவிவர் தோள்சேர்ந்தின் பேயுற்ற நந்தமக்கு
வம்பலர் கூந்தலொவ் வோர்மாதர் தோள்கண் மருவித்துன்பே
தம்பல மாக்கொண்ட மாலய னிந்திரன் றாழ்ந்தவரே. (எஎ)

பாங்கனை உண்மகிழ்ந்துரைத்தல்.

1232. ஒருகா னடந்தென் வருத்தந் தணித்த வொருவன்முன
மிருகா னடந்துதன் றேழன் வருத்த மிரித்தபெருங்
குருகான் மலர்ப்புனற் கொச்சைப் பிரானிற் குலவுநல்லோ
னருகா லவனட் பெழுமையு மோங்க வளியனுக்கே. (எஅ)

புகழ்தல்.

1233. மறையே புகலும் புகலிப் பிரான்பொன் மணிமுடிமேற்
குறையே யறத்தண் டுறையே முழுகிக் குடிகொளினும்
பிறையேயொப் பாவைகொல் லோவென்னை யாண்ட பிறழ்நெடுங்கண்
ணறையே கமழ்குழ லாணீறு பூசு நறுநுதலே. (எகூ)

தலைவியைப் பாங்கியொடுவருகெனப்பகர்தல்.

1234. அமையாளந் தோளணங் கேமணங் கேழில் வலர்ப்பொழில்வாய்
நமையா ளுறவ னறவன் புறவ னகுமருளா
முமையா ளொடுமொண் கமையாள் பவர்மு னுறவினினி
யிமையாள்கண் போனின் னிகுனையொ டென்மு னெழுந்தருளே.

பாங்கிற்கூட்டல்.

1235. உடுவே யனபன் மணிநாப்ப ணணிமுத் துற்றதெனக்
கடுவே பொலிகளத் தான்காழி நாதன் கயிலைவெற்பிற்
கொடுவே தனைகொடு நோக்குநின் னையக் குழுநடுவே
நடுவே யிலாயுறு வாய்தகப் பாத நகப்பெயர்த்தே. (அக)

## பாங்கிமதியுடன்பாடு.

நாற்றத்தான் ஐயமுற்றோர்தல்.

1236. அலையும் புனற்சடை யார்விடை யாரடை யார்புரங்கள்
குலையும் படியெய் தவர்பவர் வாழ்வெங் குருவரைமான்
முலையுங் குழலும் புழுகுந் தொடையு முயங்கிமுன
மலையுங் கடியை மலையும் புதுக்கடி வாய்ந்தனவே. (அஉ)

தோற்றத்தான் ஐயுமுற்றோர்தல்.

1237. ஆளும் பரமர் பிரம புரேசர்மன் றுடுமையர்
நீளுந் திருவரை வாய்வெள்ளை நோக்கின்றி நேர்ந்தவற்றைக்
கீளுங் கருந்தடங் கண்ணுந் துணைத்துமெல் லிப்பணைத்த
தோளுங் கனதன முங்காட்டு மானலந் தோகைக்கின்றே. ()

ஒழுக்கத்தான் ஐயமுற்றோர்தல்.

1238. கோடாண் முகன்குகன் றந்தைதென் காழி குலவுபொன்னி
நாடா ணறும்புன லாடாள் பறித்து நறுமலருஞ்
சூடாள் குறிஞ்சியும் பாடா ளசும்பு சுடர்மணிப்பந்
தாடாள்பொன் னூசலு மாடாளென் னேயிவட் காயதுவே.

உண்டியான் ஐயமுற்றோர்தல்.

1239. விண்ணா ரமுதமுன் வைத்துண்க மாவென்று வேண்டி னுந்தீக்
கண்ணார் கழுமலத் தாருண வென்று கழித்துமற்றோன்
றெண்ணார் கொடிய விரதங்கொண் டாரி னிரிவளிந்தப்
பண்ணார் மொழிமட வாளெண்ணம் யாதென்ன பாவமிதே.

செய்வினைமறைப்பான் ஐயமுற்றோர்தல்.

1240. பணியே படுவரை மங்கைபங் காளன் பரவுமறை
நுனியே யமரும் பிரான்காழி சூழ்ந்த நுவலருந்தீங்
கனியேய் பொழிலிற் றனியே பயிலவுங் கற்றனள
வனியேக மென்னு நமையு மறைத்திம் மடமயிலே. (அசு)

செலவுகண்டு ஐயுறற்றேர்தல்.

1241. வல்லிட பக்கொடி யாளன் பவப்பகை மாய்ப்பதற்கு
நல்லிட மாய புகலிப் பிரானுண்மை நன்குணர்ந்தார்
செல்லிட மோபல் லிடமொழித் தோரிடஞ் சென்றுநிற்பாள்
சொல்லிட வேண்டுங்கொ லோவுளத் தொன்றுண்டு தூமொழிக்கே.

பயில்வான் ஐயுறற்றேர்தல்.

1242. வலைத்தலை மானன்ன கண்ணுள் செவிலி மடித்தலையொண்
முலைத்தலை நீத்துத் துயிலாணற் றுய்முழு முத்தமுலை
யலைத்தலை கொண்டெழு பாலன்றி யுண்டறி யாள்புகலி
மலைத்தலை யானிற் றணிபயில் வாளிவண் மான்புநன்றே. ()

அவ்வகைதலைன் ஐயந்தீர்தல்.

1243. பற்றூர் கதியர் திருமாலை மாற்றுப் பதியர்மறைப்
சொற்றூர்பொற் றேணி வரைவாய்விற் றேணி சுடர்முகத்து
பெற்றூர் மணமுங் குணமு முறவும் பிறவுமிவட்
குற்ற ரொருவ ருளராயி னுரென் றுணர்த்திடுமே. (அகூ)

பிறைதொழுகென்றல்.

1244. ஆலங் குடிகொண் மிடற்றூர் கழுமலத் தையர்செய்ய
சீலங் குடிகொள் செழும்பொன்னி நாட்டிற் சிறுபிறைகண்
டேலங் குடிகொள் குழலாய் குவியுமெத் தாமரையுங்
கோலங் குடிகொணின் கைத்தா மரைகுவி யாமையென்னே.

காந்துரைத்தல்.

1245. பொன்னிழல் செஞ்சடை யார்தோணி மேய பொருப்புடையா
ரன்னிழல் கண்ட ரருள்போற் குளிர்ந்தொளி ரப்பொழில்வாய்
நன்னிழ லின்பந் தருந்தரு வொன்றைநண் ணுமையினே
மின்னிழல் பூண்மட வாய்திரு மேனி மெலிவதுவே. (கூக)

கிரவுநாட்டம்.

1246. கருநீலஞ் செம்ப வளஞ்செய்து காமரு செம்பவள
மருநீல் வார்குழல் வெண்முத்தஞ் செய்து வயங்குவது
திருநீல கண்டர் திருத்தோணி மால்வரைத் தேத்தளிசால்
குருநீல வாழ்சுனை யேலடி யேன்களி கூருவனே. (கூஉ)

சுனைநயப்புரைத்தல்.

1247. விண்ணப்ப மொன்றெம் பெருமாட்டி நின்திரு மேனியெல்லாம்
வண்ணப்ப சும்பொற் றுகளப்பி மாமுலை மான்மதச்சாந்
தெண்ணப்ப ரப்பிடு மேலடி யோமுமெய் திக்குடைவோங்
கண்ணப்பர் கோனம ருந்தோணி மால்வரைக் கட்சுனையே. ()

சுனைவியந்துரைத்தல்.

1248. வளமுலை யாத புகலிப் பிரான்வெள்ளி மால்வரைவாய்த்
தளமுலை யாத மலர்ச்சுனை சூந்தற்குத் தாழ்தொடையு
முளமுலை யாதெழ வேயடு தோளுக் குறுபுழுகு
மிளமுலை யார்க்கன்பி னல்கிடு மேலதை யாதொக்குமே. (கூச)

தகையணங்குறுத்தல்.

1249. மலைமீது தோணி யுறைவார்குற் றால வரைத்தலைமே
கலைமீது பூணல்குல் வான்மக ளோநின் கலப்புநன்று
முலைமீது முத்தவெங் கோமாட் டியுமிவண் முன்னியுறு
மலைமீது வல்லிக ளென்னவொத் தீர்சுனை யாடுவிரே. (கூரு)

நடுங்கநாட்டம்.

1250. அங்கோட்டு வார்சிலை வாணுத லாணிலை யம்மைக்கொரு
பங்கோட்டு வார்பொற் றிருத்தோணி மால்வரைப் பாற்பயிலுஞ்
சங்கோட்டு கந்தரச் சுந்தர மேயென்ன சாற்றுவலோர்
செங்கோட்டு யானைமுன் வேலெறிந் தாரொரு சேவகரே. ()

பெட்டவாயில் பெற்றுச்சேறல்.

1251. ஒன்றியொன் றுதம ரின்பிச்சை யார்நற வூற்றுதுழாய்ப்
பன்றியொன் றுத பதக்காழி யாரருள் பற்றுதல்போ
லின்றியொன் றுத விவர்காம மெய்யின்ப விச்சைகொள்யான்
வென்றியொன் றுத விடைத்தோழி யார்பற்று மேவுவனே. ()

இரவுவலியுறுத்தல்.

1252. துறையார் மலரொற்றிச் சங்கிலி யார்கண்செய் துன்பமெல்லா
நறையாரந் தார்ப்புயத் தாரூரர் காழிநம் மாற்குரைத்தாங்
கிறையார் வளையிவ் விளங்கொடி யார்கண்செ யின்னலெல்லாம்
பொறையார் மனத்துப் பெருந்தோழி யார்க்குப் புகலுதுமே.

ஊர்வினுதல்.

1253. அவஞ்செய நின்ற கொடியனை யுந்தடுத் தாண்டுகொள்வார்
சிவஞ்செய மேவு திருத்தோணி மால்வரைச் சேயிழையீர்
பவஞ்செய நின்றபல் லூரொழித் தேன்மனம் பற்றமுற்றத்
தவஞ்செய வேண்டுநும் மூருரைத் தாலங்குச் சாருவனே. ()

பெயர்வினுதல்.

1254. யாரா யினுந்தொழு தான்மல மாதி யிரித்தருளுஞ்
சீரா யினுஞ்சிறந் தார்காழி வாணர் திருச்சிலம்பி
னூரா யினுமுண ரேனுரை யீரினி யுங்கடிருப்
பேரா யினுமுரைப் பீருரைத் தால்வரும் பீழையென்னே. ()

ஊரும்பேரும் உடன்வினுதல்.

1255. கனக்கா வலர்செறி காழியில் வாழ்நுதற் கண்ணரெண்ணு
மினக்கா வலர்திருக் காளத்தி மால்வரை யேந்திழையீர்
தனக்கா வலர்விழை நும்மூர்சொல் லீர்தவிர் வீரினியிப்
புனக்கா வலரெவ ரோசொல்ல வேண்டும் புலப்படவே. ()

வேழம்வினுதல்.

1256. பைந்நாக நாண்புனை காழிப் பிரானற்குக்க பாய்கொடுத்த
கைந்நாக மேயெனத் தக்கதென் வேலுங் கவர்ந்ததொரு
மைந்நாக மொப்பதுங் கொங்கையொப் பாய மருப்பதொளி
தைந்நாக மாமட வீர்வந்த தோவொன்றித் தண்புனத்தே. ()

பன்றிவினுதல்.

1257. பூவுண்டு வண்டுறங் கும்பொழில் சூழும் புகலிப்பிரான்
சேவுண் டுமிழ்ந்த தவாவநிற் பீரத் திகழ்பெருமான்
பாவுண் டுறுபத நாடிய தொத்ததொர் பன்றியென்கை
யேவுண் டுடைந்திங் கடைந்ததுண் டாயி னியம்புமினே. ()

மரைவினுதல்.

1258. நாம்பல் லமரரை நாடா தருள்புரி நம்பரும்பர்
கூம்பல் பரிகை கொடுபோற்றுங் காழி குறுகலரிற்
றேம்பல் கொளுஞ்சிற் றிடையீர் தலையளி செய்துநுஞ்செவ்
வாம்பன் மலர்த்து மொருதா மரையிங் கடைந்ததுண்டே.()

கலைமான்வினுதல்.

1259. கானென்று வேணியர் பூணியர் தோணியர் கைக்கமலந்
தானென்று ருததுங் கட்பகை யாய்மிசைத் தாவுதலாற்
றேனென்று பூங்குழ லீர்கணை யேவச் சிறிதுடைந்த
மானென்று வந்ததுண் டோபுகல் வீரிவ் வரைச்சரியே. ()

மதமாவோடு மனம்வினுதல்.

1260. பாலார் மொழியொரு பாலார்பொற் றோணிப் பருப்பதத்து
மேலார் கயிலை மலைச்சார லுங்கள் வியன்முலைநேர்
மாலார் கரிமுன் வரவிடை நேரென் மனம்பின்வந்த
தாலார் திருவயிற் றீர்கண்டி ரேனுரை யாடுவிரே. (௧௦௬)

வழிவினுதல்.

1261. பழியா யினுங்கிடை யாக்காழி மேய பரம்பரனூர்
விழியா யினுங்கிடை யாதது வோநும் விரிபொழிலூ
ரொழியா யினுமுனக் கென்னிங்கெ னுதந்த வூரடையும்
வழியா யினுமுரை யீர்விரை யீர்ங்குழன் மங்கையரே. (௧௦௭)

இடைவினுதல்.

1262. மடையெங்கு முத்தஞ் சொரிந்தற றேக்கி வளைகழனிப்
புடையெங்கு நீந்தும் புகலிப் பிரானருள் போற்பொலிவீர்
தடையெங்கு நீத்தெழு கொங்கையு மல்குலுந் தங்கக்கண்
மிடையெங்கு வைத்து மறந்துவர் நீரஃ தியம்புமினே.[டோ

மொழியாமைவினுதல்.

1263. செய்யோன் புகலிப் பெருமான் கயிலைச் சிலம்பிலெனை
வெய்யோனென் றேயுங்கள் வாயரக் காம்பல்விள் ளாதுமுழுப்
பொய்யோ வெனுமிடை யீர்விருந் தாய்வந்து புக்கவர்பா
லையோவொன் றேனுஞ்சொ லாடா திருந்த லடுத்ததன்றே.

யாரே இவர்மனத்து எண்ணம் யாதெனத்தேர்தல்.

1264. வில்லில ரம்பிலர் வேட்டம்வந் தோமென்பர் மெய்ம்மையெனுஞ்
சொல்லிலர் பொய்யுரு மல்லர்நன் மேனியிற் றோன்றிவிளங்
கெல்லில ரெண்ணமுள் யாதோ கழுத்தன்றி யெவ்விடத்து
மல்லிலர் காழி யமர்தேவர் வெற்பகத் தாரிவரே. (௧௧௦)

எண்ணம் தேரிதல்.

1265. யானை யவாமரை வன்றி யவாவியற் பேரொடூழ
ரேனை யவாவிவை யெல்லாம்பொய் யன்பர்மு னிட்டவெச்சி
லூனை யவாவிய காழிப் பிரான்வரை யுத்தமர்நம்
மானை யவாவிய தொன்றேமெய் சான்றவர் வார்த்தைகளே.()

கையுறையேந்திச்சேறல்.

1266. காவாற் பொலிதண் கடற்காழி நாதர் கயிலைவெற்பிற்
றூவாப் பெருங்குணத் தோழியும் வாழி தலைவியுநம்
மோவாத் தவமும் பயனுமொத் தேயிங் கொருங்கமர்ந்தார்
மேவாக் குறையினைத் துந்தெரிப் பாமின்ப மேவுறவே.(௧௧௨)

புனங்கண்டு மகிழ்தல்.

1267. வலமே பொலிமழு வார்தொழு வார்வினை மாய்த்தருளு
நலமே மலிபு கலிவரை வாயென்ன நன்மைசெய்வாங்
குலமே வியபைங் குரல்கொண் டிவரைக் கொணர்ந்துநங்கட்
புலமே மகிழ விருந்துசெ யேனற் புனத்தினுக்கே. (௧௧௩)

புனத்திடைக்கண்டுமகிழ்தல்.

1268. தேரா னருமையுட் டேர்ந்தா னெனிலித் தினைப்புனத்தே
பாரா னிவரைப் பயந்தா னெவரும் பரவுசண்பை
யூரா னெனெஞ்சினும் பேரான் முடியுற் றொழிந்தமலர்த்
தாரா னருமை யறிந்தன னேவெச்ச தத்தனன்றே. (௧௧௪)

இருவரும் உளவறிந்தேறல்.

1269. வெண்காட்டு நங்கையுஞ் சந்தனத் தாரும் விழைதரமிக்
கொண்காட்டு நீரமர் வீர்காழி யாரரு ளொத்தவரே
பண்காட்டு வாய்மலர்ந் தாலோல மென்று பலகிளியுங்
கண்காட்டு நும்புனத் தேயழைப் பீர்நல்ல காவலிதே. (௧௧௫)

பாங்கி எதிர்மொழிகொடுத்தல்.

1270. தாரே வளையுஞ் சடைக்காழி நாதர் தமிழ்வரைநன்
னீரே வளையும் பொழுதெங்ஙன் வந்து நெருங்கும்வன்னி
யேரே வளையும் புயத்தீரிக் குன்றகத் தெவ்விடத்துங்
காரே வளையும் வழுவையெக் காலமுங் கண்டிலமே. (௧௧௬)

இறைவனை நகுதல்.

1271. பன்னக நாணினர் தென்காழி மால்வரைப் பால்வருத்துந்
தன்னமு மேவரு மோராம்ப லாய்ப்பின்பு தாமரையா
யன்னமன் றயொண் கருநீலக் கோலமு மாயதுமற்
றின்னமென் றுகுங்கொ லோதழை யாலிவ ரெய்தநுவே. ()

மதியினின் அவாவர் மனக்கருத்துணர்தல்.

1272. சொல்லார் பரமர் பிரமலிங் கேசர் சுடர்க்கிரியிந்
நல்லார் தினைபுனங் காப்பதும் வேட்ட நலங்குறித்திவ்
வில்லா ரிறைவர் வருவது மாதவர் வேடமுனங் [வே.
கொல்லார் படைக்கை யிராவணன் சீதைமுன் கொண்டது

---

## பாங்கியிற்கூட்டம்.

தலைவன் உட்கோள்சாற்றல்.

1273. சேலாழி நல்கக்கொண் டார்காழி நாதர் திருவருளாற்
பாலாழி வைகு மமுதமொன் றேமதிப் பாலமுதுங்
கோலாழி கொள்விரற் கொம்பரன் னீர்கொடுப் பேணருள்வீர்
மாலாழி மூழ்கி யிறந்து படாத வகையெனக்கே. (௧௧௮)

பாங்கி குலமுறைகிளத்தல்.

1274. மதிக்கு முயர்குலத் தோனீ யிழிகுல மாதர்நல
முதிக்கு மிகழ்வொடு வேட்டனன் றேவென் னுளத்துமொண்டாள்
பதிக்குங் கருணைப் பரன்றேணி மால்வரைப் பாலழல்போற்
கொதிக்கும் பசியுற்ற போதுங்கொ ளாதுபுல் கோட்புலியே.()

தலைவன் தலைவிதன்னை உயர்த்தல்.

1275. நீடுங் தியாகரைப் போலேயிம் மாதரு நீத்தமையால்
வாடுங் தருவிணின் சொற்படி யாய மரபெனினுங்
கோடுங் குவடும் பொருமுலை யாயொர் குறத்தியைச்சேர்ந்
தாடும் பிரான்சண்பை யானிளஞ் சேயுற்ற வாசென்னையே.()

பாங்கி அறியாள்போன்று வினுதல்.

1276. குன்றாடு வாரரு வித்திர ளேற்றுங் குலவுமன்று
ணின்றாடு வார்சண்பை மால்வரை வாய்ச்சுனை நீர்குடைந்து
மின்றாடு வார்பல ரன்னருண் மன்னரு ளேறனையாய்
நன்றாடு வாருன் மனங்கவர்ந் தாளெங் நறுநுதலே. (கஉஉ)

இறையோன் இறைவிதன்மையியம்பல்.

1277. தானே தனக்கிணை யாங்காழி நாதன் றளிர்பொருகைம்
மானே விழிமுடி வாழ்பிறை யேநுதன் மன்னுகொன்றைத்
தேனே மொழியர வேயல்குல் கொங்கையுஞ் சேவியிலே
மீனே பொருகணல் லாயென்னை யாத்தவொர் மென்கொடிக்கே.

பாங்கி தலைவியருமை சாற்றல்.

1278. மருட்குரி யர்ரெண்ண வும்படு மோவிம் மணிவரைவாய்த்
தெருட்குரி யார்மக ளாரூரர் மேவிரு தேவியர்போற்
பொருட்குரி யாரொரு தோழமை யார்நம் புகலியர்பே
ரருட்குரி யார்க்கன்றி மற்றோர்க் கெளிய ளலளலளே. (கஉச)

தலைவன் இன்றியமையாமை இயம்பல்.

1279. வாரா வமரர் வணங்குங் கழுமல வாழ்க்கையென்றுந்
தீரா தவர்தந் திருவருள் போலச் சிறந்ததுகாண்
பாரார் புனலன்றி மீனிற்கு மோவப் பரிசினுங்க
ளாரா வமுதமின் றேனிற்கு மோவென தாருயிரே. (கஉரு)

பாங்கி நின்குறை நீயே சென்றுரையென்றல்.

1280. நவையா முரும லெனைப்புரப் பார்சண்பை நாட்டிளவேய்
குவையா முறித்துக் களிறின் பிடிக்குக் கொடுக்கும்வெற்பா
செவையாக நின்குறை நீயேசென் றோதெங்கள் செல்விமுன
மிவையா திகளெம்ம ஞேரிசை யாரச்ச மெய்துவரே. (கஉசு)

பாங்கியைத் தலைவன்பழித்தல்.

1281. வானே நிலவுல கோபுகழ் காழி வரதரிளங்
கானே வுருவரை வாய்விரை வாயிரு கைவிரித்தாய்
தேனே வெனுமொழி யாய்நல்ல காரியஞ் செய்தனை நீ
யேனோநிற் பற்றித் தொடர்ந்து திரிந்தினைத் தெய்த்ததுவே. ()

பாங்கி பேதைமை யூட்டல்.

1282. வாராண் முலேகிலே மங்கையொர் பங்கர் மதியமுகிழ்த்
தாராள் சடையர் புகலிவெற் பாவெங்க டையலெனுங்
காராள் குழலி புணர்தொழி லோவத்துங் கண்டறியா
டோணி னுட்டியர் பல்காற் பலர்சென்று செப்பினுமே. ()

காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்.

1283. நன்றே யதற்கெதி ரேபுரி காவி நளினமைத்
தன்றே வருத்திநின் றூரறி யார்கொனல் லாயகவை
யொன்றே குறித்தறி யாரெனிற் காழி யொருவர்தம்பாற்
குன்றே பொருமுலேப் பாலுண்டு ளாருமக் கொள்கையரே.

பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

1284. ஆரூர்வன் றொண்டர் கழுமலத் தீச ரனுஞைமுன்பெற
றேரூர் பரவையின் பெய்திய தாற்பின்னு மெய்தப்பெற்றார்
போரூர் களிற்றண்ண லேசுய மேமுன் புணர்ந்தனைநீ
காரூர் குழலியை மீட்டுமென் பாலென்ன காரியமே. (கங0)

தன்னிலை தலைவன் சாற்றல்.

1285. தெருளன்றி மற்றென் றிலார்சூழ் புகலிச் சிவபெருமா
னருளன்றி முத்தி யடைவதுண் டோநின் னனுஞையெனும்
பொருளன்றி முன்னம் புகுந்தவென் குற்றம் பொறுத்தருள்க
விருளன்றி வேறென் றெனக்குழ லாயினி யென்செய்வனே.

பாங்கி உலகியலுரைத்தல்.

1286. சூதாக மீதெழு கொங்கைமின் னூரின்பந் தோய்ந்தமர்தற்
கேதாக முற்றவ ரெல்லாம் வரைந்தன்றி யெய்துகிலார்
போதாக வெண்பணி வார்காழி யீசர் புரிந்துரைத்த
வேதாக மங்களி னுள்ளதன் றோவிவ் விதியண்ணலே. (கஙஉ)

நீவரைகென்றல்.

1287. கிடைசிறி தேனுமில் லாக்காழி வாணர் கிளரருளாற்
கடைசிறி தேனுமில் லாவலி யோய்நற் கடிமணஞ்செய்
திடைசிறி தேனுமில் லாமட மாதினை யெய்தினின்பந்
தடைசிறி தேனுமில் லாதெய்த லாமித் தரணியிலே. (கஙங)

தலைவன் மறுத்தல்.

1288. செப்போது கொங்கைத் திருவனை யாய்திரு மான்முதலோர்
முப்போது மேத்துங் கழுமலத் தீசர் மொழிவழியே
தப்போ துதலொழி யந்தணர் சூழத் தமர்மகிழ
விப்போ துயிர்பிழைத் தாற்செய்ய லாம்பி னியன்மணமே. ()

பாங்கி அஞ்சியச்சுறுத்தல்.

1289. பண்ணார் மொழியுமை பங்கர்தென் காழிப் பருப்பதத்தி
னுண்ணார் தொழுகழ லாயிங்கு மேவி னமர்கொடுமை
யெண்ணார் புரிவ ருனையு மனையு மெனையும்வையுங்
கண்ணார் கதிரும் படுமினி நீயுங் கழிதனன்றே. (கஙரு)

தலைவன் கையுறைபுகழ்தல்.

1290. பரிவா யருள்சண்பை யாரரு ளாலொளி பற்றுதய
கிரிவா யிழிசெவ் வருவியுண் மூழ்கிக் கிடந்ததய
னரிவாய் புகழ்வது பெற்றேனந் தோவிவ் வருமணிநுஞ்
சுரிவாய் குழலி மூலையேறிற் கண்டு தொழுதுய்வனே. (கஙசு)

பாங்கி கையுறைமறுத்தல்.

1291. அண்டார் புரஞ்செற் றவர்காழி நாத ரருணைவெற்பில்
வண்டார் குழலி யணிமுலை மேலிம் மணியமையக்
கண்டா ரெனிலெமர் காணுய்பி னீயெமைக் கன்னவிரேட்
டண்டா ருடையண்ண லேயெண்ண லேதச் சழக்கருக்கே. ()

ஆற்றநெஞ்சினேடு அவன்புலத்தல்.

1292. விழையுங் குழையு மனத்தன்பர் கூட்டம் விழையுமையர்
மழையுங் குழையுங் களத்தார் புகலி வணங்கலர்நோய்
தழையுங் குழையுந் தளர்வொழி யாத தனிமனம் போற்
குழையுங் குழையும் படியுற்ற தாலென் கொடுவினையே. ()

பாங்க் ஆற்றுவித்தகற்றல்.

1293. மதிக்கும் புகலிப் பெருமான் றிருமலை வாணர்குலத்
துதிக்குங் கொடியொண் முலைமேனின் கைம்மணி யுற்றொளிருந்
திதிக்குங் கருணைத் திறத்தாய் நின்னூர்க்கின்று சென்றுகுன்று
துதிக்குங் கதிரெழு காலையில் வாவிந்தச் சோலையிலே. ()

இரந்து குறைபெறுதுவருந்தியகிழவோன் மடலேபொருளெனமதித்தல்.

1294. ஆலஞ் சிதைத்தட ராதயின் றூர்சண்பை யாளர்துழாய்க்
கோலஞ் சிதைத்து மருப்பணிந் தார்குடி கொண்டிடினு
நீலஞ் சிதைத்தொளிர் கண்ணாள் பொருட்டு நெடியபெருந்
தாலஞ் சிதைத்து விடலே துணிபெத் தடையினியே. (கசo)

பாங்கிக்கு உலகின்மேல்வைத்துரைத்தல்.

1295. கடல்சூழ் புவியிளங் காளையர் தாந்தங் கலைமதியை
விடல்சூ ழிடைமட வாரல்குற் பாம்பு விழுங்கியதே
னுடல்சூழ் தரச்சண்பை யார்நீறு பூசி யுழுளையொடு
மடல்சூ ழெருக்கணிந் தேமட லூர்வர் மடமயிலே. (கசக)

அதனைத் தன்மேல்வைத்துச் சாற்றல்.

1296. ஒன்பா னுருவ முளனு கியுமுரு வொன்றுமிலா
னன்பான் மலிபு கலியுங்கள் வீதியி னூனைநல்லா
யென்பா னணிந்து மடன்மா விவர்ந்துகை யேற்றதொடு
வன்பான்மை யின்வரு வேனென்செய் வீரிந்த வல்வினைக்கே.

பாங்கி தலைமகள் அவயவத்தருமைசாற்றல்.

1297. வாரார் விழிக்கு வலயமங் கைக்கம வஞ்சொல்வன்னி
காரார் கருங்குழற் கொண்ட லிடைவிண் கமழுமுயிர்
நீரார் முகமதி மெய்கதி ராக நிகழ்சண்பையா
ரேரார்மெய் யெட்டு மெழுதியன் றேமட லேறுவதே. ()

தலைமகன் தன்னைத்தானேபுகழ்தல்.

1298. கடையு மிடையு முதலுமில் லான்றிருக் காழியன்னாள்
படையு முடையும் விழிமுத லியாவும் படமுணர்ந்தோர்
மிடையு மடையு மிருபிடி யென்ன விரைந்தெழுதி
யிடையு நடையு மொருபிடி யென்ன வெழுதுவனே. (கசச)

பாங்கி அருமையல்க்ளத்தல்.

1299. பாவா ருலாப்புகன் றேகயி லாயம் படர்ந்தவர்தோட்
பூவா ரலங்க லிழந்தனன் றேபுவிப் போனகங்கொ
ளாவார் புகலிப் பிரமலிங் கேச ரருட்குரியார்
மேவார் வரைப்பெண்ணை வேட்டே கடற்பெண்ணை வேட்டுதற்கே.()

பாங்கி கொண்டுநிலைகூறல்.

1300. ஆரா வமுதன்ன வெம்பெரு மாட்டி யடிபணிந்து
தீரா நினுள்ளக் குறையாவும் விண்ணப்பஞ் செய்வனின்னே
நாரா யணனுண ராச்சண்பை யார்வரை நண்பவுள்ள
நேரா குறுதெனிற் போந்துகொண் டேமய னீந்துகவே. ()

தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவற்குரைத்தல்.

1301. பொறியா ணிறத்தன் மலரா ளறத்தன் புகல்புகலி
மறியா ளிடத்தன் மழுவாள் வலத்தன் வரையணங்கு
சிறியாண் முலைத்தப னேற்றிரண் டேநின் செறிதுயர
மறியா ளுளத்தும் குறியா ளவட்கெ னறைவதுவே. (கசஎ)

தலைவன் தலைவிவருந்தியவண்ணமுரைத்தல்.

1302. ஒருபார்வை வெப்ப மொருபார்வை தட்ப மொருவர்முகத்
திருபார்வை யொப்பத்த ஞெண்முகத் தேயமைத் தேவெதிர்ந்து
வருபார்வை யாயென் னகத்தாமரையைமுன் வாட்டுவளென்
றருபார்வை யோபின் மலர்த்துவள் காணிந்தச் சண்டையிலே.

பாங்கி செவ்வியருமைசெப்பல்.

1303. தருக்கும் பகைவர் மணிமோலி யெற்றுபொற் றாளுடையாய்
பெருக்கும் பலவிளை யாடலு நீத்தொரு பேச்சுமின்றி
மருக்கும்ப மென்முலை யாள்சண்பை யாரை மனத்திருத்தி
யிருக்கும் பெரியவர் போலிருப் பாளென் னியம்புவதே. ()

தலைவன் செவ்வியெளிமைசெப்பல்.

1304. பாராய் புகழ்ச்சண்பை யாரரு ளப்பர்தம் பால்வருகைச்
சீராயப் பூதி யடிகளைப் போலென் றிகழ்வருகைக்
காராய் பவளென் வரவோதி னப்பொழு தேயலர்ப்பூந்
தாரா யெதிர்கொண் டுனையு மெனையுந் தழீஇக்கொளுமே. ()

பாங்கி என்னைமறைப்பின் எளிதெனநகுதல்.

1305. கடம்படு வேழ முரித்த பிரான்றிருக் காழிவெற்பா
மடம்படு கோதையு நீயுமொத் தீரன்ன மாண்பினிரே
விடம்படு மென்னை மறைத்துப் புணர்திற மெய்துவிரோ
வுடம்படு மெய்யின்றி யேபுண ராதுயி ரோடுயிரே. (கஙுக)

அந்நகைபொறாது அவன்புலம்பல்.

1306. அப்பார் சடைய ரடற்கூற் படைய ரமர்விடையர்
செப்பார் முலைநிலை மங்கையொர் பங்கர் திருப்புகலி [ன்
யொப்பார் கருங்கணுஞ்செவ்வாயுஞ் செய்த வொழிவருமெ
வெப்பார் பிணிக்குப் புளியிட்ட தாயிற்றுன் வெண்ணகையே.

பாங்கி தலைவனைத்தேற்றல்.

1307. பெம்மான் புகலியிற் சம்பந்தர் பால்வைத்த பேரருள்போ
லம்மான் விழியெம் முதல்வியென் பானல் லருள்பெரிய
ணம்மானச் சம்பந்தர் சொற்படி யாவு நடத்தினன்மற்
றிம்மானென் சொற்படி யெல்லா நடத்து மியல்பினளே. ()

கையுறை ஏற்றல்.

1308. வெற்றகட் டுக்கன மீவார் புகலி விமலரெனக்
குற்றகட் டுக்களைந் தாள்வார் வரையி லொளிறுவைவேல்
செற்றகட் டுக்க மருச்சிற் றிடைப்பெருஞ் செல்வியல்குற்
பொற்றகட் டுக்கணி யாமைய நின்கைப் பொலிமணியே. ()

கிழவோன் ஆற்றல்.

1309. திருத்திய வாஞ்சண்பை நாயக ரப்பர்க்குச் சூலைவெந்நோய்
பொருத்திய வாறவர் பாலரு ளாகிப் புகுந்ததுபோ
லிருத்திய வார்வத் திவர்பல கால்வன்சொ லீந்துநம்மை
வருத்திய வாறுநம் மாட்டரு ளாகி மலிந்ததுவே. (கஙுரு)

இறைவன்றனக்குத்துறைநேர்பாங்கி இறைவிக்கு அவன்குறையுணர்த்தல்.

1310. அருவ ருருவ ருருவுரு வாள ரவிர்புகலித்
திருவ ரிருவ ருணரார் வரைநஞ் செழும்புனத்தே
வருவ ரொருவ ரரியர் பெரியர் வயமுருகே
பொருவர் தருவர் தழையவர்க் கென்ன புரிதுமின்னே. ()

இறைவி அறியாள்போன்று குறியாள்கூறல்.

1311. நாம்பணி தாளர்வெம் பாம்பணி தோளர் நகுபுகலிக்
காம்பணி மால்வரை யார்வீழி மேவிக் கவுணியர்க்குக்
கூம்பணி கைகொடு காண்கரற் றோணிமெய்க் கோலமிதே
யாம்பணி கென்றுமுன் காட்டினர் காண்மிக் கதிசயமே. ()

பாங்கி இறையோர்கண்டமை பகர்தல்.

1312. தலையானை யைந்தினப் பாலானை யைந்துமெய்ச் சாமியெண்ணெண்
கலையானை யாறினொ டாறுக் கதிதன் கயிலைநெடு
மலையானை நேடிவந் தாரல ராலதை வாட்டியநின்
முலையானை நேடிவந் தார்சண்பை வாழ்நண்பர் மொய்குழலே.

பாங்கியைத் தலைவிமறைத்தல்.

1313. விரைப்பால் வளர்குழ லாய்மான மீக்கொள்வில் வேடர்குலத்
துரைப்பால் வழுவி னுயிரே வழுவுமென் றோர்ந்துளநீ
தரைப்பா லெவரும் புகழ்நம் பிரான்றம் பிரான்புகலி
வரைப்பா லுறைபவர்க் குந்தகு மோவிந்த வார்த்தைகளே. ()

பாங்கி என்னை மறைப்பது என்னெனத் தழாஅல்.

1314. இருமாட் டியன்றன வெல்லாஞ்சொ லென்றினி தேற்றன்
வருமாட் டியபம் பரம்போற்சுழலு மனமிற்றைநாள் [முன்மே
கருமாட்டி நம்மைப் புரக்கும் பிரான்றிருக் காழியிலெம்
பெருமாட்டி யென்னை மறைத்தலி னாலென்ன பெற்றியதே.

பாங்கி கையுறைபுகழ்தல்.

1315. குரவே கமழுங் குழலாய் புகலிநங் கோனருளாற்
புரவே புரியரி மார்புகண் டான்முன் பொலிவதொளி
யிரவேயென் றேவி யவாவுந் தகைத்து னெழில்செயல்கு
லரவே யணியக் கிடைத்தது காணிவ் வருமணியே. (கஙூக)

தோழி கிழவோன் துயர்நிலைகிளத்தல்.

1316. வண்டார் கடுக்கை மலைவார் கழுமல வாணர்வெற்பிற்
றண்டா ரணிகுழ லாயொரு வேழந் தடக்கைகொடு
விண்டார் முளைமுறித் துப்பிடி வாய்விருப் பிற்கொடுக்கக்
கண்டா ருட்னுயிர் விண்டார்கொ லென்னக் கலங்கினரே. ()

மறுத்தற்கு அருமை மாட்டல்.

1317. வெய்யோ ருரூச்சண்பை யார்வரை வாய்மென் றளிர்கள்கொய்து
கையோ சலித்தன வென்பார் துயர்கண்டு கண்வெதும்பும்
பொய்யோ வினிப்புக லக்கிடை யாதொரு போக்குமின்று
லையோ பெரியவர் முன்செல நாணுற் றகன்றனனே. (கசுந)

தோழி தலைமகன்குறிப்புவேறாக நெறிப்படக்கூறல்.

1318. மிடிகெட்ட தென்று புகுவார் மகிழ்தரும் வெங்குருவார்
கடிகெட்ட தென்றுஊர யாமழு வார்தங் கருதருளாற்
படிகெட்ட தென்றுரை யாடா தளிப்பவர் பல்களியர்
குடிகெட்ட தென்றுரை யாடுவ ராலென்று கூறினரே. ()

தோழி தலைவியையறனிதல்.

1319. கறுப்பார் களத்தர்தென் காழியன் னீர்முற் கலப்புணர்ந்தே
மறுப்பா ரலரென்று வாய்திறந் தேனிற்றை மாண்புணரேன்
வெறுப்பார்சொல் லுள்ளத் தொழிகவென் மீதும் விருப்புறுக
பொறுப்பாரன் றேபெரி யோர்சிறி யோர்செய்த புன்மையையே.

தலைவி பாங்கியையறனிதல்.

1320. மாதேநின் வார்த்தை புகலிப் பிரான்றிரு வார்த்தையென்று
தீதே யறக்கொள்ளு வேன்பழங் கேண்மைச் சிதைவுமின்று
சூதேயுட் கொண்டு பலபல கூறத் துணிந்தனையிப்
போதே திலளெனக் கொண்டாய் நினக்கிது புந்தியன்றே. ()

தலைவி பாங்கிதன்கைக் கையுறையேற்றல்.

1321. பழுதே யுறூர்தம் பரன்காழி வெற்பர்நம் பால்வரில்வண்
டுழுதே மலர்க்குழ லாய்சில வாமொழி யிற்பலவாந்
தொழுதே மடல்கொள லாலலர் நின்கையிற் றுன்னியவப்
பொழுதேயென் கையுற்ற தாயிற் றவர்தந்த பூந்தழையே. ()

இறைவி கையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல்.

1322. மன்னு சிறந்ததொன் றன்பே யஃதின்றி வாசவுன்மு
னின்னுவுற் றூனின் றளிர்சண்பை யாரரு ளிற்கவர்ந்து
முன்னு முடிவைத் திருவிழி யொற்றி முகத்தணைத்துத்
தன்னுக முற்றுமெய் நின்னுக மாகத் தழுவினளே. (கசுஅ)

பாங்கி தலைவற்குக் குறியிடங்கூறல்.

1323. தார்கோ ளரவெனக் கொண்டார் புகலித் தடங்கிரிப்பா
லூர்கோண் மதியி னவெட் பளிக்கறை யொன்றமராக்
கார்கோள் வளாகம் புகழ்பொழில் சூழ்ந்து கனலுமிட
மார்கோ ணெடும்புயத் தாய்பகல் யாம்விளை யாடிடமே. ()

குறியிடத்து இறைவியைக் கொண்டுசேறல்.

1324. பொன்னே பொருசடை யார்சண்பை யார்வரைப் பூஞ்சுனைநீ
ரன்னேநின் மேனி நறுமண மீங்கெதென் னகக்குறைதீர்
பின்னே யெனுமெனுஞ் சென்றுபு தற்குன் பிறங்குபத
மின்னே மெலப்பெயர்த் தெம்பெரு மாட்டி யெழுந்தருளே.

குறியிடத்து உய்த்துநீங்கல்.

1325. மண்ணுக் குவகை செயுங்காழி நாதர் வரைமயினின்
கண்ணுக் குவகை செயுமாடி மற்றிது கண்டிவணில்
பண்ணுக் குவகை செயுமொழி யாய்நின் பசுங்குழற்கார்
விண்ணுக் குவகை செயுமலர் கொய்திங்கு மேவுவனே. (கஉக)

நீங்குந்தோழி தலைவற்குணர்த்தல்.

1326. சற்றுய் பவர்க்கும் பெரும்பய னல்குந் தனிமுதல்வன்
பற்று யுறைநிறை பொற்றோணி வெற்பிற் பசுமயிறு
னற்றுய் செவிலியு மின்றிமற் றுரொடு நாணுமின்றிக்
கற்றுய் தமியணிற் கின்றாள் வெறுதன்பிற் காத்தருளே. ()

இறையோன் குறியிடத்து எதிர்ப்படுதல்.

1327. குளத்தே விழியொன் றுளார்சண்பை யாரன்பு கூர்ந்தவருட்
டளத்தே யமர்ந்து மவர்க்கே வெளியுந் தயங்குதல்போல்
வளத்தே மலியும் பெரிதாங் கருணைநன் மாட்சியினென்
னுளத்தே யமர்ந்தும் வெளிநின் றுளாரிவ் வொருவரின்றே.

புணர்ச்சியின்மகிழ்தல்.

1328. நன்கோடி நோக்கிப் பணிந்திரப் பார்க்கரு ணம்பர்நெடுந்
தென்கோடி சூழும் புகலியி லெத்தவஞ் செய்தனமிப்
பொன்கோடி யுள்ள கருவூலம் புக்கிரு பொன்மலையும்
பின்கோடி நீங்க விலாநிதி யங்களும் பெற்றனமே. (கஉச)

புகழ்தல்.

1329. மழையுந் தொழுங்குழ லீருங்கள் கண்களை வாணுதலைத்
தழையுஞ் செருக்கி னெதிர்ந்துவெல் லாதிரி தன்மைகண்டே
யுழையும் பிறையு முலகமுற் றீன்ற வொருபெரியாள்
விழையும் புகலித் திருத்தோணி யப்பர் வெறுத்தனரே. ()

தலைமகளைத் தலைவன்விடுத்தல்.

1330. கலர்வருத் தங்கரு தாக்காழி நாதர் கருணையன்னீ
ருலர்வருத் தந்தவி ரிச்சோலை யுற்றொரு வேனுளத்தே
யலர்வருத் தந்தணித் தீர்கண் ணுறும லலைந்தனுர்கொள்
பலர்வருத் தந்தணிப் பீராய நாப்பட் படர்ந்தினியே. (கஉரு)

தலைவி சோர்தல்.

1331. வானவ ரிந்திர னாரண னாரணன் மற்றுமுள்ளோ
ரானவர் போற்றுங் கழுமலத் தீச ரருள்வலியாற்
கானவா காவலிச் சோலையி லேயெனைக் கைகலந்து
போனவர் பின்சென்ற தாலென்செய் வேனென் பொருமனமே.

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

1332. கோகந கங்குறித் தாலுங் குறித்தல்கொள் ளேற்குமருள்
கோகந கங்குல வுஞ்சிலை யான்வெங் குருவரைவாய்க்
கோகந கங்கொள் குவிமுலை யாய்நின் குழற்கணியக்
கோகந கங்கொணர்ந் தேன்பொறி யேறுமுன் கொண்டருளே.

பாங்கி தலைவியைப் பாங்கிற்கூட்டல்.

1333. கடிமலர் பூங்கடுக் கைத்தொடை யாரென் கருந்தலைக்கு
மடிமலர் சேர்த்துநன் காள்வார் புகலி யருவரைவாய்க்
கொடிமல ரொன்று மிகைகொடி யேமற்றைக் கோலஞ்செய்மும்
படிமல ரும்புனைந் தேன்பண்ணை மேவப் படருதுமே. (கஎகூ)

நீங்கித் தலைவற்கு ஓம்படைசாற்றல்.

1334. போத முருவெனை யும்புரப் பார்தென் புகலிவெற்பிற்
பேத முருமனத் தாள்பொருட் டியான்செய் பிழைமறக்க
நீத முருமின் றனக்கு மெனக்கு நினக்குமினி
யேத முருதண்ண லேயெண்ண லேநிற் கியலறமே. (கஅo)

உலகியன்மேம்பட விருந்துவிலக்கல்.

1335. வானும் புகழ்திற லாய்சுடர் மாயும் வழிப்புனலுங்
கானுங் கடத்த லரிதினித் தேனுங் கடியுழையூன்
றூனுங் கவர்ந்துத யத்தேக லாமன்பர் தந்தவெச்சி
லூனுங் கவர்ந்தனர் காளத்தி வாய்ச்சண்பை யுத்தமரே. ()

விருந்திறைவிரும்பல்.

1336. வாங்கிய வானுத லார்செங்கை தொட்டது மாற்றருங்கைப்
போங்கிய வேம்பெனி னுங்கரும் பாமுரை யாடுவதென்
வீங்கிய மாமுலை யாய்வள்ளி யாருண்ட மெல்லிலையிற்
றேங்கிய மிச்சிலன் றோசண்பை யாரிளஞ் சேயுண்டதே. ()

# ஒருசார்பகற்குறி.



கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்.

1337. வாரின்றி யேவுத லில்லா மலைநிலை மங்கைகொங்கைப்
போரின்றி மேவுத லில்லாப் புயத்தர் புகலிவெற்பி
லூரின்றி யூழற் றதுமுடிப் பானுற் றொருவன்மலர்
நாரின்றி யேதொடுத் தான்பெரு மாலை நணுகுறவே. (க௩௬௩)

பாங்கி புலம்பல்.

1338. வண்டாய் கமல முகம்வாடச் செய்தவிம் மாதுமுகங்
கண்டா யதைவருத் தக்கதி ரேபு கலியரற்குத்
தொண்டா யுறுரி னழுவம் புகுந்துன் சுடர்மறைத்துக்
கொண்டாய் கவிமறைந் தெய்தவன் மேலொரு குற்றமின்றே.

தலைவனீடத் தலைவிவருந்தல்.

1339. வேதரிப் பாரளந் தார்தலை கண்முடி மேலடிமே
லோதரிப் பார்சண்பை யுன்னூரி னென்னை யொருகமைக்கோட்
போதரிப் பார்விடு பூந்தோணி காமப் புனலழுத்து
மாதரிப் பார்வந் தணைந்திலர் தேம்புமென் னுருயிரே.(க௩௬௫)

தலைவியைப் பாங்கிகழறல்.

1340. அமைகூடு தோளணங் கேபிரிந் தாருயி ரன்னவரென்
றுமைகூடு மெய்யர் புகலியுன் னூரி னுடங்குவையுட்
கமைகூடு மன்னரு நீயு மினனுங் கரமுங்கொல்கண்
ணிமைகூ டுவதும் பிரிவதுஞ் சற்றுளத் தெண்ணுகவே. ()

தலைவி முன்னிலைப்புறமொழி மொழிதல்.

1341. சொல்லாமுன் முன்னங்கொ டெல்லா முணருஞ் சுகுணர்க்கன்றி
யெல்லா முரைத்து முணரா தவர்க்கொன் றிசைப்பதினுங்
கல்லா தவரானு காக்காழி வாழ்மணி கண்டர்நுதற்
பொல்லா வழற்க ணெதிராத னன்று புரிபவர்க்கே. (க௩௬௭)

தலைவி பாங்கியோடுபகர்தல்.

1342. தேருந் திறமெற் கருள்வார் சிரபுரச் செல்வர்வெற்பி
னேருங் கிளிமொழி கட்கினி தாய நெருஞ்சிமலர்
சாருங் கொடுங்கண் டகமாய தென்னத் தலைவரெனக்
காரும் படிசெய்த வின்ப மெலாந்துன்ப மாயதுவே. (க௩௬௮)

தலைவியைப் பாங்கி அச்சுறுத்தல்.

1343. உள்ளே யொருகதிர் மேவுற வோம்பி யொழிவில்கதிர்
கள்ளே மலிகுழ லாய்வெளி யோம்பலை கஞ்சமனப் [ர்ந்தாற்
புள்ளேகொ ணீர்ச்சண்பை யார்வரை வாழ்நம்பொல் லாருண
கொள்ளேயென் றுக்குவர் வெஞ்சிறை யாய குகையிருளே.()

நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

1344. வரியார் விழியணங் கேயுயிர் நீத்துடல் வாழுங்கொலோ
தரியாவின் பந்தந் தவரையெவ் வாறு தணப்பல்சண்பைக்
குரியா ரரிக்கு மரியா ருடனுமை யொற்றித்தென்றும்
பிரியா திருக்கச் செயுமா தவஞ்செயப் பெற்றிலனே. (கசூ0)

தலைவிக்கு அவன்வரல் பாங்கிசாற்றல்.

1345. பாடி வருந்து மவர்க்கருள் காழிப் பரன்வரைநீ
நீடி வருந்து மதுதணிப் பானன்பர் நீண்மணித்தே
ரோடி வருந்துங்க மாரோதை கேளவ் வொருவர்நம்மைத்
தேடி வருந்து மதுகாண லாமிச் சிறைமறைந்தே. (கசூக)

தோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

1346. ஓங்கை முகவர் தகவர் பகவ ரொளிமழுக்கொள்
பூங்கை யுடையர் விடையர் சடையர் புகலிவெற்பிற்
றீங்கை யுறுத்துந் தழல்கண் ணுநீரித் தினைக்கிளிகாள்
வேங்கை சிவந்த தினியெங்கண் மானிங்கு மேவரிதே. ()

தோழி முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

1347. விண்ணுடை யார்புனன் மேலுடை யார்சண்பை வெற்பமரு
மெண்ணுடை யாரினிக் கொய்வார் தினையிங் கியன்மயில்காண்
மண்ணுடை யாரன்பர் போலெங்கண் மாதை மறப்பின்மிகக்
கண்ணுடை யாரெனும் பேரில்லை யாகுங் கருதுமக்கே. ()

பாங்கி தலைவன்முன்னின்று இற்செறிப்பு அறிவுறுத்தல்.

1348. கோட்புலி யார்விரை யாக்கலி தப்புங் குலமடங்க
வாட்புலி யார்கொடு மாய்த்தா லெனத்தினை மாய்த்தனர்செவ்
வேட்புலி யார்நிகர் வேந்தேயிக் காவல்கை விட்டதுறேந்
தாட்புலி யார்தொழு மம்பலத் தார்சண்பைத் தாழ்வரைக்கே.

முன்னின்றுணர்த்தி ஓம்படைசாற்றல்.

1349. தழையாற்று வேணிப் பெருமான் புகலித் தனிமுதல்வன்
பழையாற்று நன்கு வெளிப்படுங் காறுமப் பாலகலா
துழையாற்று ளங்கொண் டமர்ந்தவர் சீர்த்தி யுணர்ந்தமன்னு
விழையாற்று மங்கையை நீமறந் தாற்கதி வேறில்லையே. ()

தலைவன் தஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்.

1350. கனத்தே மலர்க்குழற் சீதையைக் கொண்டகல் கள்வனிலென்
மனத்தே யமரும் பிரான்காழி வாணன் மணிவரையிப்
புனத்தே யமருங் கிளியையெங் கோகொடு போயினரித்[சே.
தினத்தே கொடுஞ்சிலை வேடரென் றாலென்ன செய்வனெஞ்

# பகற்குறி இடையீடு.



இறைவனைப் பாங்கி குறிவரல்விலக்கல்.

1351. மாவேட்ட மாடவில் லம்புட னேகுன்ற வாணரன்பர்
பாவேட்ட நாதர் திருத்தோணி மால்வரைப் பாலுழல்வார்
நாவேட்ட வின்புக ழாய்புனிற் றாவி னயர்துநும்
பூவேட்ட வார்குழல் பாற்பல காலும் புகுமன்னையே. (௧௬எ)

இறைவியைப் பாங்கி குறிவரல்விலக்கல்.

1352. நடத்தே பழகிய தாளான் புகலிநம் பன்களத்தே
விடத்தே சளான்பசப் போர்பாதி முற்றும் விளைந்ததனுன்
மடத்தே மலர்க்குழ லின்னளென் றாய்மனம் வைத்தனளிவ்
விடத்தே வருதல்சொன் னேன்மயி லேநிற் கியல்பல்லவே.

இறைவி ஆடிடம் நோக்கி அழிதல்.

1353. தென்னுவ லூரரின் பந்தந்த வொற்றியைத் தீர்ந்தடைந்த
வின்னு வுணர்ந்து மொருதோணி யப்ப ரிரும்பொருப்பு
மூன்னு வளையுஞ் சுனையு நனையு முழுமலருந்
துன்னு வொளிர்பொழி லுந்துறப் பாநந் துணிபென்னையே.

பாங்கி ஆடிடம்விடுத்துக்கொண்டகறல்.

1354. குழையே பொலியுஞ் செவிச்சட்டை நாதர் குலவிநிற்கு
மழையே தவழு மலைச்சாரல் வாய்மண வாளர்வந்தாற்
கழையே தருதழல் கொண்டதெண் ணுது கவின்கிளிகாள்
பிழையே யிலாருயி ரோடுசென் றாரென்று பேசுமினே. ()

தலைவனுருவு வெளிப்படஇரங்கல்.

1355. மேவா வெனக்கு மருள்சட்டை நாதர் வியன்கிரிப்பா
லோவா வளமைப் புனமு மிதனு மொளிர்பொழிலுந்
தாவாநன் னீர்ச்சுனை யுந்தேடி நாமிங்குச் சார்வதன்மு
னுவா வெதிர்வந்து நின்றன ரானம்மை யாள்பவரே. (௨0௧)

பின்னுள் நெடுந்தகை குறிவயின் நீடுசென்றிரங்கல்.

1356. வாய்மையி னுற்பொலி வார்சூழ் புகலி வடுகன்வெற்பிற்
றூய்மையி னுற்பொலி மாலைய தாயவிச் சோலையெதிர்
சேய்மையில் யான்வரும் போதே தரிசனஞ் செய்யநிற்கு
மாய்மயில் காணவொண் ணுதாயிற் றலணி மைக்கண்ணுமே.

தலைவன் வறுங்களநாடி மறுகல்.

1357. மதிக்கும் புலமை யிடைக்காடன் சீற்ற மளிந்தவர்நாட்
கதிக்கும் புகழ்ச்சண்பை யார்மகிழ் கூடற் கனதளியுட்
டுதிக்கும் விமானங்கொ லோநம தாவித் துணையகல
வுதிக்கும் விழியின் முகம்போன் றிருந்தவிவ் வோரிதனே.

குறுந்தொடிவாழும் ஊர்நோக்கி மதிமயங்கல்.

1358. சொல்லரி தாம்புக ழாரூ ருயர்த்தவன் றேணிவெற்பிற்
கல்லரி தாஙங் கவலைக் கிழங்கையக் காரிகையைப்
புல்லரி தாமினி யூரது வேனும் பொருக்கென்றங்குச்
செல்லரி தாநெஞ்ச மேயென்செய் வாமிந்தத் தீவினைக்கே. ()

## இ ர வு க் கு றி.



இறையோன் இருட்குறிவேண்டல்.

1359. பொன்னங் கவர்மலை போன்முலை யீர்கடல் பூத்தவிட
முன்னங் கவர்பவன் சண்பையுன் றருண் முளைப்பதொடு
பன்னங் கவர்வினை போலெழு காரும் படர்ந்ததுங்க
ளன்னங் கவர்விருந் தாயடைந் தேனிங் கருளுமினே. (௨0௫)

பாங்கி நெறியினது அருமைகூறல்.

1360. மடங்காப் புகழ்ச்சண்பை வாழும் பிரான்செய்ய வார்சடில
மடங்காக் கலுழி யனையான்கை யஞ்சரு மானைபுலி
முடங்காத் திறலுடைப் பஞ்சா னனமுழு துங்கடந்து
தடங்காத் திடுபுயத் தாயெங்க ளூர்வர ருனரிதே. (௨0௬)

தலைமகன் நெறியினது எளிமைகூறல்.

1361. நெல்லே விளையும் வயற்சண்பை யார்வரை நீள்புலியோர்
புல்லேவல் யாளி யறுகே புகர்முகப் பூட்கைகொடும்
பல்லே யுடைக்களி றோரம்ப லேயஞ்சிப் பாறுவலோ
வல்லே பொருமுலை யாய்நீந்து வேனெழு வாரியுமே. (௨0௭)

இரவுக்குறிக்குப் பாங்கியுடன்படல்.

1362. புரவைக் கருதிப் புகலியின் மேவும் புராணர்வெற்பி
லிரவைக் கருதி யரவைக் கருதி யிரும்புனல்வாழ்
கரவைக் கருதிப் புகல்வதல் லாதெங்கள் காவலநின்
வரவைக் கருதிப் புகல்வாரு முண்டுகொன் மாநிலத்தே. ()

பாங்கி அவனுட்டு அணியியல்வினுதல்.

1363. பூவேது கொய்வ ரிழையே தணிவர் புரிந்துபண்ணை
காவேது செய்வர் விரையேது பூசுவர் காமருபட்
பாவேது பாடுவர் நாரா யணனொடு பங்கயற்குஞ்
சாவே தினியென நஞ்சமுண் டான்புகழ்ச் சண்பையிலே. ()

தலைமகன் அவள்நாட்டு அணியியல்வினுதல்.

1364. நாற்றங் குடிகொள் குழனி வினையது நானுணர்ந்தேன்
சீற்றங் குடிகொ டிகிரிப் பிரான்முதற் றேவர்கடங்
கூற்றங் குடிகொள் களத்தா ரொருவெங் குருவரைவா
யேற்றங் குடிகொளு நின்னாட் டணியியல் யாதுரையே. ()

தன்னாட்டு அணியியல் பாங்கிசாற்றல்.

1365. வரையேறு நீர்ச்சுனை யாடுவர் சூடுவர் வான்கணிப்பூ
விரையேறு சந்தனம் பூசுவர் பேசுவர் மென்குறிஞ்சி
திரையேறு வாரிதி சூழுல கானுஞ்செல் வாதெளிமோ
நரையே றுயர்த்த பிரான்காழி சூழெங்க ணாட்டவரே. (உகக)

பாங்கி இறைவிக்கு இறையோன்குறை அறிவுறுத்தல்.

1366. கூம்ப லவாவுகை யாரு ளவாவுமெய்க் கூத்துடையா
னோம்ப லவாவுதென் காழியின் வாயொழி யாவிருளிற்
றேம்ப லவாவிடை யாய்மதி கண்டுசெந் தேனுணச்செவ்
வாம்ப லவாவுங் குவலய மானு மளியரசே. (உகஉ)

நேராதிறைவி நெஞ்சோடுகிளத்தல்.

1367. பொறையா ருமைதென் புகலிப் பிரான்கண் புதைத்தவர்நாட்
குறையா விருளும் பகலே யெனச்செய் குருட்டிருள்வாய்
மறையா வனவெங் கொடுமா வுழல்சிறு வட்டையினம்
மிறையார் வரல்புகல் வார்பாவம் பாவ மிதுகொடிதே. ()

பாங்கி இரவுக்குறி ஏற்பித்தல்.

1368. பல்லா ரவாஞ்சண்பை யாரொரு பாற்பெண் பசுங்குழல்வீழ்
சொல்லா ரளியை நிகரொரு வண்டுதற் சூழ்பெடையைக்
கல்லார வின்மது முன்னூட்டிப் பின்னுணக் கண்டுயிர்த்தார்
வல்லா ரமாமுலை யாய்கொடி யேன்கண்டு வாழ்குவனே. ()

நேரிழை பாங்கியோடு நேர்ந்துரைத்தல்.

1369. நாமப் புனல்விழு நாள்வீழ்ந் தெடுத்திடு நம்பெரியோர்
காமப் புனல்விழு நாளு மெடாதது கைதவமாந்
தாமப் புனற்சடை யார்காழி வாணர் சயிலத்திற்பூஞ்
சோமப் புனற்குழ லாய்செய்க நின்னுளஞ் சூழ்துணிபே. ()

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தல்.

1370. மிறையே யிலாயிங்கு நீவந்த வேளைநல் வேளையின்று
முறையே புகலி வடுகப் பிரானடி முன்பணிந்து
பறையேதும் வஞ்சமி லாண்மலர்த் தாள்பின் பணிந்திருந்தே
னறையேய் மனமுகை போதா யுடன்மல ராயதுவே. (உகரு)

பாங்கி தலைமகனைக் குறியிடைநிறீஇத் தாய்துயிலறிதல்.

1371. பாதங்க மாலயன் காணவொண் ணாத பரனவர்த
மாதங்கம் பூண்டவன் காழியன் னாய்முன்னம் வான்புனர்தப்
பாதங்க வாவி யடிக்கடி மேவிப் படருமொரு
மாதங்கம் வந்ததுவோவெழும் வேங்கையின் வாய்முழக்கே.

இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்தல்.

1372. சேலே பொருவிழி யாய்கடற் காழிநஞ் செல்வர்கழற்
காலே கருதுங் கருத்துடை யன்பர் கருதுகலை
போலே வனத்துப் படர்யாறு மிந்தியம் போற்களிறு
மாலே யெனவிரு ளுங்கடந் தாரிங்கு வந்தனரே. (உகஅ)

பாங்கி தலைவியைக் குறியிடத்துக் கொண்டுசேறல்.

1373. விட்கெதி ராக மிளிர்காழி நாதர் வியன்கிரியுன்
கட்கெதி ராகப் பகல்வரு வானிக் கருகிருளிற்
பட்கெதி ராக வருமொழி நீலம் பயிலுமலர்க்
துட்கெதி ராகவின் னேசென்று பார்த்துண்மை யோருகவே.

பாங்கி தலைவியைக் குறியிடத்து உய்த்துநீங்கல்.

1374. சிவைதழு வக்குழைந் தார்காழி யோங்கலிற் சேவலைப்பே
டவைதழு வப்பொலி சோலையின் வாயணங் கேமலர்ப்பூங்
குவைதழு வப்பொலி கொம்பரை யொவ்வொர் கொடிதழுவு
மிவைதழு வக்கண் விடுத்துநி லங்குற்றிங் கெய்துவனே. ()

தலைவன் தலைவியைக் குறியிடத்து எதிர்ப்படுதல்.

1375. விண்பார் புகழும் புகலிப் பிரான்றன் விளங்கருளா
னண்பார் சகல மொடுகே வலமொழி நல்லவர்போற்
பண்பார் மலர்தல் குவிதலில் லாதபொற் பங்கயமோ
வண்பா ரிரவிதழ் வாயடை யாதநும் மாளிகையே (உஉ௧)

தலைவன் தலைவியைச் சார்தல்பயனைகப் புகழ்தல்.

1376. மிடியாளர் வெம்பசி மேவிய வேலைவிண் ணாரமுதே
கடியாளர் கண்பிழைத் துற்றது போலுமிக் கங்குலினீர்
முடியாளர் சண்பைக் குடியாள ரென்வினை முற்றுமெற்று
மடியாளர் மால்வரைச் சார்நீ ரெனக்கெதி ராயதுவே.(உஉஉ)

தலைவி ஆற்றினது அருமைநினைந்திரங்கல்.

1377. மின்னு முழங்கிப் பொழிமா முகிலந்த விண்மறைக்கு
மன்னு முழங்கி வருவெள்ள நீரிந்த மண்மறைக்கும்
பன்னுக வேணிப் பிரான்சண்பை நின்றிப் பசும்பொழிலென்
முன்னுக நீவந்த வாறெந்த வாறிருண் முன்னவனே. (உஉ௩)

புரவலன் தேற்றல்.

1378. இருள்வா யழுந்தி யெழாதார்க்கு முண்டுகொ லின்பமென்றியா
னருள்வா யழுந்தித்தம் மோடொன் றுருதொன்ற வாள்பரமர்
தெருள்வா யழுந்தினர் சேர்காழி நாதர்செவ் வாய்மலர்நூற்
பொருள்வா யழுந்திய தோரிரு ளோருநர் புன்மையரே. ()

புணர்தல்.

1379. முன்றே மலர்க்குழ லூருற் றுறைபொழின் முன்பினுற்றுங்
கொன்றே யெனவுரு வுற்றுரை யாவின்ப முற்றதனு
னன்றேசை வம்புகல் சாலோக மாதியொர் நான்குமுற்றே
மின்றே யெனிலிது தான்காழி நாயக ரின்னருளே. (உஉ௫)

புகழ்தல்.

1380. சமைய விசேட நிருவாண மென்றுநஞ் சண்டைப்பிரா
னமைய வுரைத்த துணர்ந்தாய்கொ னீதனி யாகுவதே
சமையநி னங்கை தொடலே விசேடந் தரித்தகலே
யமைய நெகிழ்த்திட லேநிரு வாணமெய் யாமிதுவே. ()

தலைவி தலைவனைக் குறிவரல்விலக்கல்.

1381. பாதம் பெரிதடுப் பார்க்கருள் வார்தம் படையெனப்பல்
பூதம் பெரிதுடை யார்காழி யார்சிர பூதரப்பா
லோதம் பெரிதுகொ லென்ன வழுவை யுழுவைகொள்கா
னேதம் பெரிதண்ண லேயெண்ண லேது மிரவரலே.(உஉஎ)

தலைவன் தலைவியை இல்வயின்விடுத்தல்.

1382. நீண்டங்கு மாறு படுமா லயன்முனின் றோனவர்மெய்
பூண்டங்கு மாறு புனைந்தோ னவர்ப்புணர் வார்களத்து
நாண்டங்கு மாறுநஞ் சுண்டோன் புரலிநல் லாய்துயர்தா
யாண்டங்கு மாறு கொளத்தேடு நீமு னணைந்தருளே. (உஉஅ)

பாங்கி இறைவியையெய்திக் கையுறைகாட்டல்.

1383. சேற்பா லருகு முருகு பெருகு செருகுமலர்
நாற்பான் மலருறு மைம்பாற் கியைமலர் கான்கொணர்ந்தேன்
காற்பால் வனமுறா லுங்காழி நாதன் கயிலைவரை
மேற்பா லமர்தருக் கோற்பாலந் தேனிகர் மெல்லியலே. ()

பாங்கி தலைவியை இற்கொண்டேகல்.

1384. பழிப்பாளென் பாட்டு முவந்தவ னண்ட பகிரண்டமுற்
றழிப்பா ளருளுடை யான்காழி மால்வரை யன்னபொன்கண்
விழிப்பாளப் போதெதிர் நில்லோ மெனிற்றன் விழிசிவந்து
தெழிப்பாள் பலவுங் கொழிப்பாள்செல் வாநந் திருமனைக்கே.

பாங்கி பிற்சென்று தலைமகனை வரவுவிலக்கல்.

1385. பெருமான் கரத்தி லொருமான் றரித்தபெம் மானெருதேழ்
பொருமா னுயர்த்த வருமான் புகலிப் பொருப்பிறைவா
கருமான் கொடுமை செருமான வேடர் கலகமெண்ணு
தொருமான் பொருட்டுக் குருட்டிருள் வாய்வரலொத்ததன்றே.

தலைமகன் மயங்கல்.

1386. சேவென் றுரைக்கத் திருமாலைச் செய்த சிவபரனே
கோவென் றுரைக்க வெனக்கருள் வோன்வெங் குருவரைவாய்ப்
போவென் றுரைக்கப் பயின்றது போலவிப் பூங்கொடிவாய்
வாவென் றுரைக்கப் பயிலாமை யான்செய்த வல்வினையே.()

தோழி தலைவிதுயர்கிளந்து விடுத்தல்.

1387. பாட்டொலி மல்குநின் னூருற்ற பின்பு பலதழூவு
மாட்டொலி மல்கும் புகலிப் பிரான்பொன் னடிச்சிலம்பு
காட்டொலி கேட்டன்றி வாழாவெொர் கோதையிற் காவலநின்
கோட்டொலி கேட்டன்றி வாழா துயிரெங்கள் கோதைக்குமே.

திருமகட்புணர்ந்தவன் சேறல்.

1388. மருணீக்கி யேயென் குடிமுழு தாளும் வரதர்மனத்
தருணீக்கி யென்று மமர்ந்தறி யார்சண்பை யாரணங்கே
வெருணீக்கி யென்னுயி ரன்னார்தம் மேனி விளக்கங்கொண்டே
யிருணீக்கி யிப்பொழு தேகுவன் யானென் னெயிலினுக்கே.

---

# இரவுக்குறி இடையீடு.

இறைவிக்கு இதுளை இறைவரவுணர்த்தல்.

1389. கலையே யுணர்வரி யான்காழி சூழுங் கடற்றுறைவா
யலையே யறைந்தது வோபடர் பூந்துகி ரங்கொடியின்
றலையே வளைத்தது வோபுதி தாவனந் தண்மலரே
யிலையே செறிபுன்னை வாயிரு ளேங்குதற் கேதுவென்னே. ()

தான்குறிமருண்டமை தலைவி பாங்கிக்கு உணர்த்தல்.

1390. வெளியே யுரைசெயி னுண்கேடு மாண்கொணம் வேந்தர்செயு
மளியேயென் றேரொலி கேட்டணைந் தேன்மற்றென்றுகியத
நளியே செறியுநங் கானலின் வாயெனி னென்செய்கே
னினியே புரைமொழி யாய்காழி வாண ரிருந்துறைக்கே. ()

பாங்கி தலைவன் றீங்கெடுத்தியம்பல்.

1391. களியாப் பொலிகை வளைநீ யிழக்கக் கருத்துமுதல்
வெளியாப் பொருளுரைக் கத்தெரி யார்சொல் விழையவென்று
முளியாத் தளிரிளங் கானலின் வாய்நம் முயலுளமுந்
தெளியாக் குறிவிளைத் தார்காழி யார்கடற் சேர்ப்பரின்றே.()

தலைமகன் புலந்துபோதல்.

1392. சேலே பொருகண் பொருட்டுக் குருட்டுத் திருட்டிருட்டுள்
வேலே பொருமுட் கடத்துத் தடத்து விடத்திடத்து
மாலே வியல்சிலைக் காழிப் பிரானருண் மாறுபட்ட
நூலே யெனவலைத் தாயென்னை யென்னை நுவறிநெஞ்சே. ()

புலர்ந்தபின் வறுங்களம் தலைவிகண்டிரங்கல்.

1393. தாயோ வருமிடம் வைத்தார் புகலித் தனிமுதல்வர்
வேயோ தருமண மாலைகொண் மாணி விழையவைவேற்
சேயோ வெனவிங்கு மேய புகார்த்துறைச் சேர்ப்பர்தந்தார்
நீயோகொண் டாய்புன்னை யேபெரி தாலுன் னெடுந்தவமே.

தலைவி பாங்கியோடுரைத்தல்.

1394. வானப் பிறைக்குண மென்றிருந் தேன்சண்பை மன்னர்சடைக்
கானப் பிறைக்குணம் போன்றுலு நன்றுநங் காமர்குழற்
றூனப் பிறைக்குணம் போற்றேய்ந்து தேய்ந்துபின் சாயுங்கொலோ
தேனப் பிறைக்குங் குழன்முகி லாயன்பர் செய்யுநட்பே. ()

தலைமகளவலம் பாங்கிதணித்தல்.

1395. மதனீள் புயத்தர் குறிபிழை யார்வண் கமலைவிண்வாழ்
சிதனீள்வன் மீகத் துறைவார் சிரபுரச் செல்வரெனப்
பதனீள் கழிப்பெருஞ் சார்பா லடிக்கொளும் பான்மையன்றி
முதனீ டழையவ் விதநீள் கவினைய முடிக்கொளுமே. (உ௬௯)

இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றல்.

1396. மறியிடத் தேகொள் பெருமான் புகலி வழுத்துமன்பர்
குறியிடத் தேவந் தருளுதல் போலெங்கள் கோதைகுறி
செறியிடத் தேவந் தருளுகி லீரென்செய் தீர்படருங்
கறியிடத் தேசந்தின் பூஞ்சினை தாழ்வரைக் காவலரே. ()

இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பேற்றல்.

1397. மழைவர வோர்ந்து மயிலா டுறுங்குன்ற வாணர்மக
ளுழைவர வோர்ந்துகொள் ளாதோடி வாடி யுழன்றவனென்
பிழைவர வோர்ந்துகொண் டோன்சண்பை யேத்தல ரிற்றனது
பிழைவர வோர்ந்துசொல் லாளெனின்யா னெவன் பேசுவதே.

தலைவி குறிமருண்டமை தோழி தலைவற்குணர்த்தல்.

1398. ஒருகா லெழுந்தெறி யுந்தொறுங் காய்மு னுதிர்வனதேர்ந்
தொருகால்கொ ணின்குறி யென்றுபல் காலங்கங் குற்றுழன்ற
ளொருகான் மிசைமுக் கிளையோன் மன்றுட னுவந்தெடுத்த
வொருகாலென் னுட்பதிப் போன்காழி மால்வரை யோரணங்கே.

தலைமகன் சொல்லியகொடுமை தலைமகட்குச்சொல்லல்.

1399. காட்டொடு வெங்கொடுங் கான்யாறு நீந்திக் கார்வரைசேர்ந்
தீட்டொடு நித்திரை யில்லா தழுங்கிய தென்னளவோ
வாட்டொடு மன்றுணிற் பார்காழி நாத ரருளனையாய்
பேட்டொடு புள்ளுமற் றேயென்று காவலர் பேசினரே. ()

என்பிழைப்பன்றென்று இறைவிநோதல்.

1400. பகல்வா யுறங்கி யிருள்வாய் விழித்துப் பசுநறுந்தே
னுகல்வாய் குவளை யனையகண் ணாளிவ ளுண்மையெனப்
புகல்வாய் புகலிப் புராணர் பொருப்பிற் புரிந்திருந்து
மிகல்வாய் புயத்தன்பர்க் கென்பய னைய திளங்கொடியே. ()

தலைவி யிருக்தனவந்த பெருந்தகைநிலைமைகூறல்.

1401. இரவே குறிபிழைத் தார்பக லேகம்மி லின்னமுதா
தரவே யுளேனென் றுற் றுரன்னை நல்கென்று சாற்றினள்யான்
கரவேயில் சோறு முதன்மூன்று மோர்ந்தனன் காழிப்பிரா
னுரவே யுறுமொழி யன்றென்று நீங்கின ரொண்ணுதலே. ()

தாய் துஞ்சாமை.

1402. பழுத்துப் படர்திரை யன்னை துஞ் சாத படியெவன்மெல்
லெழுத்துப் படர்வல் லினமுலை யாய்சன்பை யெய்தியன்பர்
கொழுத்துப் படர்புரி கூற்றங்கொன் றுரைக் குழீஇப்பணியும்
வழுத்துப் படரொரு நல்லிரு ளோவிந்த வல்லிருளே. ()

நாய் துஞ்சாமை.

1403. என்கொடு மாமலர் தீர்ப்பார் புகலி யிகலில்கல்வி
நன்கொடு கேள்வி யிலாருரை போற்றுயி னண்பொழித்துப்
புன்கொடு வானெடும் போந்தின் கருக்குப் புரைபுலைவாய்
வன்கொடு நாய்குரைத் தாற்கொடுங் கூற்றும் வரவஞ்சுமே.()

ஊர் துஞ்சாமை.

1404. மலைவிதி சென்னிகைக் கொண்டார்மெய் யன்பின் வழிகழியா
நிலைவிதி யேத்தும் பிரம புரேசர் நிறைவிழவோ
கலைவிதி யாமவர் கூத்தோ நகர்கண் படாததற்கென்
றலைவிதி யேயொரு பாழ்ங்கூத் துருக்கொடு சார்ந்ததுவே. ()

காவலர் கடுகல்.

1405. சேறந்த கண்ணி யொருபாகர் காழித் திருத்தளியு
ளேறந்த வின்பறைக் கியா தனூர்தரு மிப்பறைக்குத்
தோறந்த வேறும்வன் கோறந்த தாருவுந் துஞ்சலொழி
மாறந்த காவலர் வன்கையும் வாழிய வாழியவே. (உருக)

நிலவுவெளிப்படுதல்.

1406. மதியே யுணர்ந்த் குலக்கோதை கேள்வற்கு வாஞ்சைநற்றாய்
துதியேய் மலர்க்கை யவள்சோண் முகக்கண் டொடலரிதோ
நிதியே யடக்க மமராரு ளுய்க்கு நிறைபுகலிப்
பதியேய் பவர்மதி போலடங் காயெனிற் பண்பல்லவே. ()

கூகை குழறல்.

1407. எல்லா வுயிர்க்கு மிருடீர்த் திடுமெம் மிறைவலக்கண்
பொல்லா நினக்கிரு ளுண்டாக்கு மானின் புரையுணர்ந்தே
கல்லா தவரனு காக்காழி யன்பரெங் கண்ணெதிர்நா
ளொல்லா தவரில்வெங் கூகாய் குழறுத லொத்ததன்றே. ()

கோழி குரல்காட்டுதல்.

1408. கோழிக்கு வேளுட னீருக நோக்கு குழகர்கொம்பில்
கோழிக்கு நாயகர் மேவிய வீழிக்குங் கூடலுக்குங்
கோழிக்கு மன்புடை யார்வரும் போது குரலெழுப்புங்
கோழிக்கு நான்செய்த தீங்கெவ னோசொல் கொடியிடையே.

---

## வரைதல் வேட்கை.



பாங்கி தலைவியைப் பருவரல்வினுதல்.

1409. சடையென வேமின் றரித்தவர் காழித் தடத்திலன்னப்
பெடையென வேநடப் பாயன்ப ரென்று பெருமையினோ
டுடையென வேயனை மார்சொற் பனிவந் துலாயதுவோ
விடையென வேமுகத் தாமரை வாடுதற் கேதுவென்னே. ()

அருமறைசெவிலி அறிந்தமைகூறல்.

1410. கொண்டலம் பான லெனுங்களத் தார்வெங் குருவரைவாய்
விண்டலம் பார்புகழ் வேந்தரை யெண்ணி விழிபனித்தேன்
கண்டலம் பாவலிற் கைத்தாயென் னெனன்னக் கடற்றிரையென்
வண்டலம் பாவைகொண் டோடிற்றென் றோதி மறைத்தனனே.

தலைமகன்வருந்தொழிற்கு அருமைசாற்றல்.

1411. கூடிய பாசமொ ரைந்தொழிற் றேவெங் குருப்பரன்மன்
றுடிய பாத மடைவது போனில வாய்நகர்நாய்
நீடிய காவலர் வெங்காவ லேந்த னிகழ்வொழிந்தே
நாடிய வன்பரிங் கெய்தலுண் டாகுங்கொ னன்னுதலே. ()

தலைவி தலைமகனூர்க்குச்செல வொருப்படுதல்.

1412. தாரூர் தடம்புயத் தோணிப் பிரானரு டாங்கியன்பர்
சேரூ ரடையத் தடையெவ ரோமுன் சிறந்தவரைப்
பாரூர் புகழ்மிகு நும்மூ ரெதுவெனப் பன்னிரண்டு
பேரூரென் றுரெங்கு நாந்தேடிச் செல்வது பெண்ணணங்கே.

பாங்கி இறைவனைப் பழித்தல்.

1413. நன்கண்மை யாரணங் கோநம்மை யாளு நலத்தர்மலர்ப்
புன்கண்மை யாளர் திருத்தோணி யாரடி போற்றலரி
னின்கண்மை யாத்த லுடையாரின் மேவிப்பி னீங்குதலால்
வன்கண்மை யாருண்மூற் றும்பூலம் வாங்குநர் மற்றவரே. ()

தலைமகள் இயற்பட மொழிதல்.

1414. வளக்குங் குமமுலை யாயுயி ரோம்பு மகிழ்நர்நம்பாற்
கிளக்குங் கருணை யிலரா குதனங் கெடுவினைவா
னளக்குங் கனக மதிற்காழி நாத ரருளினெல்லாம்
விளக்குங் கதிரிரு ளாகுத லோர்தி விழிக்குற்றமே. (௨௬௦)

கனவுநலிபுரைத்தல்.

1415. பூவலர் சோலைப் புகலிப் பிரானருள் போற்றியமுந்
நாவல ராதியர் நாமாயி னுனை வாங்கனவு
மாவலர் கோதைநல் லாய்நென்ன லாரிருள் வந்துவந்து
காவலர் மார்புதந் தார்விழித் தேனொன் றுங் கண்டிலனே. ()

கவினழிபுரைத்தல்.

1416. அன்பே யவாவு புகலிப் பிராற்கன்பு ளாரையுன்னி
யென்பே வெளிக்கொண் டிடமேனி வாடி யெழிலிழந்து
வன்பே யுருவமுற் றேனப் பிரானை வழுத்தியொரு
மின்பே யுருவமுற் றுளென்ப ராலென் வியப்பதிலே. (௨௬௨)

தலைமகள் தன்றுயர் தலைவற்கு உணர்த்தல்வேண்டல்.

1417. சேவாய்நஞ் சண்டைப் பிரானைச் சுமக்குந் திறத்தனுமோ
ரேவாய் விழியை வருத்தி யுருப்பத் தெடுத்துழன்ற
மாவாய் கதையுடன் யான்படும் பாடும் வகுத்துரைத்துப்
பாவாய் வருந ரெவரோநங் காவலர் பாலடைந்தே. (௨௬௩)

நின்குறை நீயே சென்றுரையென்றல்.

1418. எப்போது நின்றை எமர்வார்க்கொன் றேதவஞ் செய்தவர்யார்
செப்போது கொங்கைத் திருவனை யாய்திரு மாலொடயன்
முப்போது மேத்தும் புகலிப் பிரானெம் முதலினஞ்சே
யொப்போத னன்பர்க்கு நீயே யுரைநின் னுளத்ததுவே. ()

அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி.

1419. நல்லா ரொருவர்கற் றூற்றவு மாற்றிய நம்புகலி
வல்லா ரொருவ ரலர்தூற்ற வாற்றிலர் மற்றவரும்
பல்லார் களுநனி தூற்றலர் யானெப் படிபொறுப்பேன்
வில்லார் மதிநுத லாய்நினை தோறெழும் வெய்துயிர்ப்பே. ()

ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி.

1420. தோளா மணிசண்பை வாழ்வடு கேசன் றுணையடிக்கே
யாளா னவர்நம் புடைசார்ந் தியற்று மருண்மறந்து
வாளா விருப்பது கண்டுங் கொடிய வழியெனையுங்
கேளா தெழுந்தவர் பாற்செல்லு மாலென் கிளர்மனமே. ()

காமமிக்க கழிபடர்கிளவி.

1421. நீரே நிலாமன மேபிறி தாகு நிலாமனமே
காரே கரும்பனை யேகுயில் கூவுங் கரும்பனையே
பாரே பரவலை யேமய றீயப் பரவலையே
வாரேகொள் வாரல ரேகாழி யார்க்கன்பர் வாரலரே. (உ௬எ)

தன்னுட் கையாறெய்திடுகிளவி.

1422. பன்னாக வேணிப் பிரான்காழி சூழும் பனித்துறைவாய்
நின்னாக முற்றும் பசந்தா யசைந்துகண் ணீருகுப்பாய்
முன்னாக மேவி யகரும் பனையலர் மூழ்கிநிற்பாய்
புன்னாக மேநினை நீத்தகன் றாருமெப் புண்ணியரே. (உ௬அ)

தலைமகள் நெறிவிலக்குவித்தல்.

1423. மன்னுங் கொடுமலர் தீர்ப்பார் புகலி மறந்துமற்றோன்
றுன்னுங் கொடுவினை யாரினங் காவலர்க் கொண்டொடியே
பன்னுங் கொடுவரி யாளி யரிகரி பம்பியிரு
டுன்னுங் கொடுநெறி வாரற்க நீயென்று சொல்லுகவே. ()

குறிவிலக்குவித்தல்.

1424. பொறிவா யரவரைப் புண்ணியன் காழிப் பொருப்பணங்கே
நெறிவா யெமருட் சிலர்குறிப் பாலொன்ற னீருணர்வார்
கறிவாய் நறுஞ்சந் தனச்சாரல் வேரல் கலந்தபொழிற்
குறிவாய் வருத றகாதென்று கூறுநங் கொற்றவர்க்கே. ()

வெறிவிலக்குவித்தல்.

1425. பாடுதற் கெண்ணிய யான்மல மாதி பறித்தருளிற் [மின்ப
கூடுதற் கெண்ணிய கோன்சண்பை யேத்துநர் கொள்ளு
நீடுதற் கெண்ணி யவர்தரு நோய்வினை யாதுவெறி
யாடுதற் கெண்ணிய வன்னைக்கொன் றேதி யகற்றணங்கே.()

பிறர் விலக்குவித்தல்.

1426. புரியொன்று கூழைநல் லாயன்பர் தம்மணம் போற்றியயான்
விரியொன்று மற்றையர் தம்மணம் போற்றும் விதியுமுண்
வரியொன்று மேனி யரன்காழி வெற்பி லரியையவாய் [டோ
நரியொன்று பெற்றெழுழி வாருமுண் டோவிந்த நானிலத்தே.

நூரவரை வரைவெதிர்கொள்ளுவித்தல்.

1427. தீங்கோய் புகலிச் சிவனு ருமையொடு சேர்ந்துறையு
மீங்கோய் மலையன் றிருஞ்சுனை வீழ வெடுத்தளித்தார்
தாங்கோய் வருநசை யோடுறு போது தவாநமரென்
பாங்கோய் வரைவெதிர் கொண்டிடு மாறு பகருகவே.(உஎ௩)

வரைவுகடாதல்.



வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

1428. வலநீர் விறற்கழ லோயன்னை யென்னைநம் மாதர்முக
நலநீர் மெலிவுற்ற தென்னென வென்ன னவிற்றியசிற்
றிலநீர் பான்சண்பை சூழ்கடல் வாய்ப்புக்க தென்றுவிழிக்
குலநீர் கவிழ்ப்பமெய் வாடின ளாலென்று கூறினனே. ()

அலரறிவுறுத்தல்.

1429. நன்மாலை கொன்றையுந் தும்பையு மாக்கிய நம்பரென்பு
வன்மாலை யும்புனை வார்காழி வாணர் வரையிறைவா
தன்மாலை யன்றி யொருமத வேள்பல் சரந்தொடுக்க
நின்மாலை யுற்றவட் கூரலர் சூழ்ந்து நெருங்கியதே. (உஎ௫)

தாயறிவுணர்த்தல்.

1430. நன்கண்டு மாறடி யேற்கருள் வார்நறு நாவன்மலர்ப்
புன்கண்டு நீழலி ளுர்சண்பை நாட்டுப் புனிதவன்னை
மின்கண்டு தாழு மருங்குனல் லாண்முலை மேற்பரந்த
பொன்கண்டு நெட்டுயிர்த் தாளினி யாட்கெம்மன் புக்கதென்றே.

வெறியச்சுறுத்தல்.

1431. அசத்துக் கிரங்குகி லார்காழி வாழு மவரெனவோ
ரசத்துக் கிரங்குகி லாளாயி னுளெங்க ளன்னையுநின்
வசத்துப் படுமொரு மாங்குயில் சோர்ந்து மயக்கமுற்ற
வசத்துப் பதைத்தல்கண் டாள்வெறி யாடன் மதித்தையனே.

பிறர் வரைவுணர்த்தல்.

1432. பண்ணவ ரேத்து குருலிங்க சங்கமம் பற்றுபதிக்
கண்ணவர் காழிக் கழுக்குன்ற மால்வரைக் காவலமுன்
விண்ணவ ரத்திரு மாதையிச் சித்த விதம்பொருவ
மண்ணவ ரித்திரு மாதையிச் சித்து மயங்குவரே. (உஎ௮)

வரைவெதிர்வுணர்த்தல்.

1433. முருகோடு முன்ன முனிந்தேற் றமர்த்தவெம் மொய்குலத்தோர்
திருகோடு நிற்பது தீர்ந்துநன் கேற்றுச் சிறப்பளிப்பா
ரிருகோடு கோட்டுக் களிற்றாய் வரைவென் றெழுதரினீ
குருகோடு வண்டுறங் குந்தடங் காழியெங் கோன்வரைக்கே.

வரையுநாளுணர்த்தல்.

1434. ஆருற்ற வேணிக் கமலர்பொற் றோணி யமலர்வெற்பிற்
சீருற்ற கோதைக் குழல்வேட்கு நாளிது தேர்ந்துகொண்மோ
காருற்ற சோலைக் கணிபூ மலர்ந்து கலைமதியோன்
றாருற்ற போதல்ல வோமணங் காட்டுமெம் மூரண்ணலே. ()

தலைமகளறிவு தலைமகற்கு அறிவுறுத்தல்.

1435. விழியேறு நெற்றி யுடையார் கொடியில்வெள் ளேறமைத்தார்
மொழியேறு சீர்கெழு சண்பைநண் பாமுழு முத்தமுலை
யுழியேறு பீருங் கழலும் வளையு முணர்ந்துனக்குப்
பழியேறு மென்று மறைத்தா ளெனையும் பசுங்கொடியே. ()

குறிபெயர்த்தீடுதல்.

1436. பொருவா ரிலாத புயத்தார் புகலிப் புராணர்வெற்பின்
மருவார் தொழுங்கழ லாயிப் பொழிலமர் மாதவிப்பா
லொருவார் பலரும் வருவா ரணிமையி னேவிமணிக்
குருவார் நகையொடு செல்லுதி சேய்மைக் குறிகுறித்தே. ()

பகல்வருவானை இரவுவருகென்றல்.

1437. கதிவாய் விருப்பங் கழலா தெனக்குங் கடைக்கணித்த
நதிவாய் சடையர் கொதிவாய் மழுவர் நயந்தமரு
கிதிவாய் புகலிப் பதிவாய் மடந்தை நிகரின்முக
மதிவா யமுது பகல்வா யடைவதெவ் வாறண்ணலே. (உ௮௩)

இரவுவருவானைப் பகல்வருகென்றல்.

1438. உகல்வாய் வினையுடை யேன்யா னெனவெனக் கோங்கருள்செய்
மிகல்வாய் புகலி நகுவடு கேசன் வியன்சிலம்பி
னிகல்வாய் களிற்றண்ண லேமாதர் செவ்விள நீரிரண்டும்
பகல்வா யடையினன் றேநல மாய பயன்றருமே. (௨௪௪)

பகலினு மிரவினும் பயின்று வருகென்றல்.

1439. புகலும் வரவுஞ் செலவுமில் வேணு புரேசரன்பு
நகலும் விரவுநர் பாலுறு போழ்து நவிலினென்றே
யிகலு மரவுந் தொழுமல்கு லாளின் பினிதடையப்
பகலு மிரவும் பயின்றே வருக பகட்டண்ணலே. (௨௪௫)

பகலினுமிரவினும் அகலிவனென்றல்.

1440. ஏதிலர் வாயல ராம்பக லெண்பணி யேற்றருளுஞ்
சூதிலர் கண்ணல ராமிரு ணீவரிற் றேன்றுமிரு
போதில ரென்னும் புகழ்மேவண் ணலற் புதர்வலப்பான்
மாதிலர் பிட்டுக்கு மண்சுமந் தார்சண்பை மால்வரைக்கே. ()

உரவோனுடுழநங்குலனுமரபும் புகழும்வாய்மையுங்கூறல்.

1441. பொன்னடு போற்றும் புகலிப் புராணர் புகழ்ப்பொருப்பிற்
கொன்னடு வேல்வலங் கொண்டுதண் டாவிறல் கொள்பவநி
னன்னடு மூருங் குலனு மரபு நகுப்புகழு
மன்னடு மெய்யு மணஞ்செயு மாதை மணஞ்செயினே. ()

ஆறுபார்த்துற்ற அச்சங்கூறல்.

1442. வேட்டுக் குளிர்நகை யாளின்ப நீவரல் வேலவவெண்
பாட்டுக் கருளும் பரன்காழி நாதன் பசும்பொன்மன்ற
மாட்டுப் புலியர வோவழி நேர்புலி வல்லரவு
காட்டுக் களிறுந மாவத்துக் காத்த களிறலவே. (௨௪௬)

ஆற்றாத்தன்மை ஆற்றக்கூறல்.

1443. பச்சை மயிலொரு பாலுடை யாயெனும் பையரவக்
கச்சை யரைக்கசைத் தாய்தென்றல் சீறுங் கலங்தெனுமெ
னிச்சை முழுதுமென் னன்பரெண் ணுதமை யென்னெனும்வண்
கொச்சையுன் றரி னழும்விழு மோரெங் குலக்கொழுந்தே.

காவன்மிகவுரைத்தல்.

1444. நீங்கும் பொழுதுகொன் றுகாது தன்னை நினைப்பித்தென்னை
வாங்கும் பொழுதுட் குறித்த பிரான்சண்பை மால்வரைவா
யோங்கும் பொழுது வறிதாக்கு வாய்கை யுறவணைத்துத்
தூங்கும் பொழுதும் விடாரன்னை மாரொரு தோகையையே.

காமமிகவுரைத்தல்.

1445. கொட்கும் புலனுடை யேனுளர் தீர்க்குங் குழகர்சண்பை
நட்கும் பயனடை யார்போற் கலங்குவ னல்லமுது
முட்கும் வருக்கைச் சிறுகோட்டுத் தூங்கு மொருகனிபோற்
பெட்கு முயிர்சிறி தாயினுங் காமம் பெரிதையனே. (உ௯௯)

கனவுநலிபுரைத்தல்.

1446. நனவே யெனக்கருள் வார்காழி வாணர் நகுவரைவாய்ப்
புனவே யடுவளைத் தோளா ளிரவிற் புகுந்துயிலிற்
கனவே சிறந்ததென் பாளல ரோவலிற் காணுமதை
யுனவே கொடியதென் பாளிடை நீங்கலி னுத்தமனே. ()

கவினழிபுரைத்தல்.

1447. வருமந்த மாருத முன்றி லுலாஞ்சண்பை வாணரெனைப்
பொருமந்த காரம் புடைப்பா ரருளுறு புண்ணியர்பாற்
றருமந்த மாதவ மெய்தார் படைத்த தனம்பொருவ
வருமந்த மேனி யழகண்ண லேகொள்ளை யாயினதே. ()

---

## ஒருவழித்தணத்தல்.



தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல்.

1448. கரும்பே கமுகு கமுகேதென் னென்னுங் கழனியெம்மூ
ரரும்பே பொருமுலை யாய்குறை யொன்றுண் டதுமுடிப்பான்
பொரும்பே ரடல்விடை யான்காழி யூர்வழி போயுங்களூர்
விரும்பேர் மரையிதழ் மூடித் திறக்குமுன் மேவுவனே. ()

மென்சொற்பாங்கி விலக்கல்.

1449. இடைக்குறை யுள்ள விவள்குறை யன்றிமற் றேதுகுறை
விடைக்குறை கொட்டில்லை குந்தஞ்செய் தோனிண்டை மேவியபா
சடைக்குறை முத்தி னழகுசெய் சண்பை யடைவழகே
படைக்குறை யொன்னலர் மார்பாக் கியவிறற் பார்த்திபனே.

தலைவன் நீங்கல்வேண்டல்.

1450. முடியாரை வேய்ந்த பெருமான் புகலி முழுமுதல்வ
னடியாரை நீங்கி யிருக்கினுங் கொங்கை யடர்மருங்குற்
றுடியாரை நீங்கி யிருக்ககி லேனின்னுஞ் சொல்லுவதென்
கொடியாரை சூழெயி லின்றேசென் றிங்குக் குறுகுவனே.()

தலைவனைப் பாங்கிவிடுத்தல்.

1451. என்றூர் கொடிமதிற் காழிப் பிரானையெண் ணாதவரின்
மென்றூர் மலர்க்குழல் சோர்வது யான்சொல்ல வேண்டுங்கொலோ
குன்றூர் முலையின் கொழுநர்தம் மூர்க்கொரு கோள்குறித்துச்
சென்றூ ரெனுமுனம் வந்தா ரெனவந்து சேரண்ணலே. ()

பாங்கி தலைவிக்கு அவன்செலவுணர்த்தல்.

1452. தொடையேறி வண்டு துயில்குழ லாய்துய ராதிதுகேள்
விடையேறி காரிய மொன்றறுப் பான்சங்கம் வெண்முத்தநீர்
மடையேறி யீனும் புகலிசென் றூர்குழை வாயுங்கள்கட்
கடையேறி மீளுமுன் னேவரு வேனென்று காவலரே. ()

தலைவி நெஞ்சொடுபுலத்தல்.

1453. நன்றேறு நூல்பல வோர்ந்தார்க்கு மீது நலந்தருமே
துன்றேறு பங்குடை யார்சண்பை நாயகர் தோளமர்வி
லொன்றேறு யென்பய னுமெனுந் தோள ருனைப்பிரியே
னென்றேறு முன்பிரிந் தார்தெளிந் தாரிடத் தென்பிழையே.

சென்றேனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

1454. விரைமே விரவல ரேயன்னை மாரும் விரவலரே
கரைசூழ் கருங்கழி யேயூ ரலர்ப கருங்கழியே
திரைசால் சிறைக்குரு கேயெளி யேன்வெஞ் சிறைக்குருகே
வரைதீர்வெள் வார்க்குரை யேசண்பை யாரையுள் வார்க்குரையே.

தலைவியைப் பாங்கி ஆற்றுவித்தல்.

1455. பாசங் கொடுவருந் தாதென்னை யாளும் பரன்புகலி
நேசங் கொடுதுதிப் பார்நகர் நின்று நிகழ்குடிஞை
யோசங் கொடுமுத்து முந்துதல் பாரவ ரூரின்மௌவல்
வாசங் கொடுவரல் பார்மாத ராய்மந்த மாருதமே. (௩0௧)

நெஞ்சுநினைந்திரங்கல்.

1456. கஞ்சர் தொடர்ந்து வருங்கழ லார்பின் கனிந்துதொடர்
நெஞ்சர்தொடர்ந்துடன் சென்றது வோவிடை நின்றதுவோ
வஞ்சர் தொடர்ந்துபின் மீண்டது வோவன்றி மாண்டதுவோ
நஞ்சர் தொடர்ந்து பொலிகளத் தார்சண்பை நாட்டகத்தே.()

நெஞ்சொடுகிளத்தல்.

1457. மஞ்சே பொருகளத் தார்காழி வாணர் வரையிலெனை
நஞ்சே யெனவெறுத் தஞ்சேலென் னூர்வழி நண்ணியவென்
னெஞ்சே யவரென்சொன் னூது கேட்டபி னீயென்சொனாய்
வஞ்சே யுளார்கொ லிலார்கொலெற் கோது மறையொழித்தே.()

கடலோடு புலம்பல்.

1458. அருந்திய நஞ்சமுன் காழிப் பிரானுக் கருளியநீ
வருந்திய வெற்கெது செய்யாயென் கேள்வர்வை வேல்வலத்திற்
பொருந்திய ஞேக்கி முருகனெனன் றெண்ணினே போலுமவர்
திருந்திய தேர்செல் வழியழித் தேறுந் திரைக்கடலே. (௩௦௪)

ஆற்றேடு புலம்பல்.

1459 மூவல்செய் வார்புனல் சூழுமை யாறு முதுகுன்றம்வெண்
ணுவல்செய் வார்நிழல் யேய பிரான்சண்பை நாட்டினின்று
மோவல்செய் வார்நுரைத் தூசாஃ மறைத்திங் கொழுகுவைபெற்
காவல்செய் வார்தொழில் கூறற்கு நாணிக்கொல் காவிரியே.()

புள்ளொடு புலம்பல்.

1460. பிரியா ரெவர்கொல் கொழுநரை யோர்வரைப் பெண்ணன்றிமாற்
கரியார் புகலிநல் லாரெனே நோக்கி யசிப்பரென்னே
வரியார் சிறையளி காளன்றில் காண்மகி ழோதிமங்கா
ளுரியார் பிரிவரி யாராக வாற்று முறுதவமே. (௩௦௬)

கையறுகிளவி.

1461. மடலே பொலிகொன்றை மாலிகை யான்வழுத் தேனேயுங்கை
விடலே துணிபெனக் கொள்ளாத வன்சண்பை மெய்ந்நகர்சூழ்
கடலே கழிக்கரை யேகைதை யேகுளிர் கானன்மணற்
றிடலே தலைவர்சொல் சூளுற வாலுயிர் தேம்புவனே. (௩௦௭)

கூடலிழைத்தல்.

1462. விழிக்குந் திருநுத லான்கொடி யேன்வெவ் வினையனைத்து
மழிக்குந் திறலுடை யான்காழி சூழ்துறை யாய்சுவைத்தேன்
மொழிக்குங் குமழலை யாள்விரல் கன்றவெண் முத்தமணற்
சுழிக்குங் கழிக்கு மொழிக்குங்கண் ணீரென்று துன்புறுமே.

சூளுறவு பொய்யென்றல்.

1463. மெய்த்தா ரிதழியர் வேணுபு ரேசர் விரிதுறையன்
புய்த்தார்வெள் ளோதிமஞ் சான்ருக முன்ன முரைத்திடுசூள்
பொய்த்தா ரவர்வருந் தாதிருந் தாரது போற்றிமெய்யென்
றெய்த்தார் வருந்துவ ரென்றானன் றுன்முன் னெழுத்தியலே. ()

மடமைகூறல்.

1464. பெருகுறு நீர்வென் மதிற்காழி யாருண் பெருவிடம்போற்
கருகுறு போதடி சூழ்பாம்பு மாவுங் கடந்தளியே [வேன்
னருகுறு வார்பொருட் டிம்மெலி வோவின்னும் யானடை
முருகுறு கூழைநல் லாய்மட வோரிது முன்னுவரே. (௩௧௦)

தன்னுட்கூறல்.

1465. புரிதரு செஞ்சடை யார்காழி நாதர் பொருப்பர்தந்த
விரிதரு வெப்ப மவரூர் வழிவரு மென்புனல்யாற்
றிரிதரு மாறு படிவோமவ் வீர்ம்புன லீர்த்துவரு
மரிதரு பைந்தளிர் போர்ப்போநம் மேனி யடங்கலுமே. ()

பாங்கி தலைமகட்குத் தலைவன்வந்தமையுணர்த்தல்.

1466. கண்பொழி நீருந் தனிமையும் பீருங் கழல்வளையும்
பண்பொழி வாய்மயி லேயினி யேதுரின் பாலுணர்மோ
விண்பொழி நீர்வைத்த செஞ்சடை யார்விளங் கும்புகலி
நண்பொழி யார்மணிப் பொற்றே ரொடுமிங்கு நண்ணினரே.

வந்தோன்றன்னொடு பாங்கி நொந்துவினுதல்.

1467. நனவி னுணர்ந்திலி ராயினு மெங்க ணறுங்கொடியைக்
கனவி னுணர்ந்திருப் பீருண்மை யேயெனிற் கண்டனிரோ
சினவி னுதன்முலைப் பீருங்கண் ணீருமுட் சேருந்துன்பு
மனவி னிடையர் கழுமலத் தார்வரை மன்னவரே. (௩௧௩)

தலைவன் பாங்கியோடு நொந்துவினுதல்.

1468. வீழ்வது கண்முத்த மோமுலை மேலணி வெண்முத்தமோ
சூழ்வது பாயல ரோவயல் வாய்நடுத் தோயலரோ
போழ்வது மாலைகொல் வேலைகொ லோது புலையடியேன்
வாழ்வது செய்த பிரான்காழி நாதன் வரையணங்கே.(௩௧௪)

பாங்கி தலைவியை ஆற்றுவித்திருந்த அருமைகூறல்.

1469. செயிர்முடி யாவிதந் தீயோர்க் கருள்சண்பைச் செல்வர்துவள்
பயிர்முடி யாவிதம் பெய்மழை போலப் பரவருளான் [கியா
மயிர்முடி யாவிதம் பொன்போர்த் தெழுகொங்கை மங்கைக்
ணுயிர்முடி யாவிதங் காத்தேன் வருத்தமுற் றுத்தமனே. ()

---

## வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல்.



என்பொருட் பிரிவுணர்த்து ஏந்திழைக்கென்றல்.

1470. ஒருவா வளச்சண்பை யோவார் கவுணியர்க் கோக்குபைம்பொன்
றிருவா வடுதுறை யிற்கொடுத் தார்தந் திருவருளான்
மருவா வருஞ்சுரம் போய்வரு வேனுங்கண் மங்கைகொங்கைப்
பொருவா விலைகொண்டு மாதே புகறியப் பூங்கொடிக்கே. ()

பாங்கி நின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றல்.

1471. தாயே யனைய கருணைப் பிரான்றிருச் சண்பைநகர்
போயே வருவல் புகறியென் பாய்புன்மை பூண்டுழலும்
பேயே யெனினும் பிரிவுரை யோதவுட் பேனுங்கொலோ
நீயே யுரைநின் பிரிவெங்கள் வாணுத னேரிழைக்கே. (௩௧௭)

நீடேனென்றவன் நீங்கல்.

1472. தொடைநிலை வேணிப் பிரான்கூடல் வாய்ச்சொன்முற் றாக்குறுநா
விடைநிலை யெய்தி னுடனெய்த லாமற் றிருநிலையும்
படைநிலை நோக்கி கழுத்திற்பொன் னேறப் பசும்பொனுங்கள்
கடைநிலை யிற்குவிப் பான்சென்று மீளுவல் காழிமட்டே. ()

பாங்கி தலைமகட்குத் தலைவன்செலவுணர்த்தல்.

1473. வலம்புரி நேர்நின் கழுத்திற்பொன் னேற்றியுன் வண்ணமுலைக்
குலம்புரி யும்பொ னிறக்கிடு பைம்பொன் கொணர்வதற்கே
யுலம்புரி தோளன்ப ரின்றுசென் றூர்மன மொன்றுநன்று
னலம்புரி காவற் கமைத்தரன் காழி நறுநுதலே. (௩௧௯)

தலைமகளிரங்கல்.

1474. சீரார் கவுணியர் போற்பாலை நெய்தல் செயவுமென்போ
ரேரார் மயில்செய வுங்கற் றுளார்சொ லிறைபுகலித்
தாரார் புயத்தர் தமையு மெமையுந் தழுஉந்துயர
மோரார் பொருள்குறித் தேசுரம் போயின தொத்ததன்றே. ()

பாங்கி கொடுஞ்சொற்சொல்லல்.

1475. கயலார் புனற்பல் வயலார்தென் காழிக் கடவுள்வெற்பில்
வியலார் மயிலனை யாயார் பொருட்டன்பர் மேவியதோ
ரியலார் மழைக்க ணெனன்மெய்ம்மை யாக விரங்குவையே
லயலா ரறியவுங் கூடுமன் றோநின் னகத்ததுவே. (௩௨௧)

தலைவி கொடுஞ்சொற்சொல்லல்.

1476. அண்ணலென் பார்துயர் நண்ணு வகையரு ளண்ணல்வரைப்
பெண்ணு தரஞ்செய் பிராற்பணி யாரிற் பிறர்துயர
மெண்ணு மனமு மனமாகண் ணோட்ட மிலாதகண்ணுங்
கண்ணு வவர்பிறப் பும்பிறப் பாசண்பைக் காரிகையே. ()

வருதுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்.

1477. காழியம் மானைக் கழுக்குன்றிற் போற்றுங் கழுகுமன்று
வீழியொண் வாய்மயில் வீண்கழு கொன்றுதன் மென்பெடைகற்
பூழிவெங் கான்வெயில் சாரா திறகுட் புகப்புரிதல்
வாழிகண் ணுற்றுமப் பாலே குவார்கொனம் மன்னவரே. ()

பருவங்கண்டு பெருமகள்புலம்பல்.

1478. கதிக்கும் புகலிப் பிரான்றிரு நீற்றிலிக் கானகத்துத்
திதிக்குந் தளவம் விளர்த்தன கொன்றை சிவந்தனமெய்
பதிக்கு மவன்மெய் வலத்தி னிடத்திற் பசந்தனதோண்
மதிக்குங் களத்திற் கறுத்தன காரன்பர் வந்திலரே. (௩௨௪)

இதுவன்று வம்பென்றல்.

1479. மருவ மருவ வினிக்கும் பிரான்சண்பை வாணர்வெம்மை
யொருவ வருவி மழையெனச் செய்யுளொன் றோர்புலவன்
றிருவ முறச்செயப் பெய்ததென் றேதுந் திசைமுற்றுங்கார்ப்
பருவ மிதுவெனல் வம்போநம் பேர்கொள் பனிமொழியே. ()

இறைமகள் மறுத்தல்.

1480. நனையின் றனபசுங் கொன்றைக டோன்றி நகமலரு
முனையின்ற முத்தலை வேலண்ணல் காழி முதுகுன்றின்மின்
றனையின்ற கார்ப்பரு வம்பொய்ம்மை யாலெனச் சாற்றுமின்சொ
லெனையின்ற தாய்வந்தி யென்னுஞ்சொற் போலு மிளங்கொடியே.

அவர்தூதாகிவந்தடைந்தது இப்பொழுதேனத் துணைவிகூறல்.

1481. நீர்வந்த தோணி புரத்தீசர் வெற்பி னிகழ்பருவக்
கார்வந்த தென்று கருதினை யேனங் கடைமறைக்கும்
பார்வந்த பொன்னெடு மார்வந் தவாதன்பர் பன்மணிப்பொற்
றேர்வந்த தோதநம் மூர்வந்த தாலித் திருமுகிலே. (௩௨௭)

தலைமகள் ஆற்றல்.

1482. பழியே யறநல் வழியே யுலகம் பரிப்பவர்சொல்
விழியே யலர்செயு மாறெழுங் காழி விமலர்செவ்வாய்
மொழியே யெனத்துணிந் தேனினி முன்னலென் முன்னுகடற்
குழியேய் தரக்கொள் புனன்மான் குளப்படி கொள் புனலே.

அவன் அவட்புலம்பல்.

1483. கார்கொடி தென்னுங்கொல் கூடலு றூது கவிழ்க்கும்விழி
நீர்கொடி தென்னுங்கொ லென்னைச் சுமந்து நிகழ்தருமித்
தேர்கொடி தென்னுங்கொ லூர்கொடி தென்னுங்கொ றீரிய
நார்கொடி தென்னுங்கொ னம்மான் புகலி நறுநுதலே. ()

தலைமகன் பாகனொடுசொல்லல்.

1484. ஆரோடு கொன்றையுந் தும்பையுஞ் சூடு மழகரம
ரேரோடு வாழ்வயற் காழியில் வாழி யியல்வலவா
பீரோடு சிந்துகண் ணீரோடு வாடுமொர் பெண்மூணமிக்
காரோடு முன்னநந் தேரோடு மாறு கருதுகவே. (௩௩0)

தலைமகன் மேகத்தோடு சொல்லல்.

1485. தெண்ணீர் பருகி யெழுமுகில் காணந் திருந்திழைமு
னண்ணீர் நணுகி னிறையவர் காழிநண் ணுரிலிரு
கண்ணீர் பொழியுமவ் வெங்கீ ரமலைகைந் நீர்நிகர
மண்ணீ ருலகெனப் போர்க்குமொண் டேரு மறிதருமே. ()

பாங்கிவலம்புரிகேட்டு அவன்வரவறிவுறுத்தல்.

1486. வலம்புரி யேற்கு நலம்புரி வார்வண் டுழாயணிகா
வலம்புரி யேமெய்க் கிடுவடு நேசர் வரைநினக்க
வலம்புரி யேதமொன் றுண்டுகொ லோவன்பர் வந்தனர்வெள்
வலம்புரி யேயினி தார்க்கின்ற தோர்கொச்சை மாமயிலே. ()

வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

1487. வள்ளிய வன்பர் வரவெனக் கோதியென் வான்றுயரந்
தள்ளிய சங்கமங் கம்புனை வார்திருச் சண்பைவள
ரொள்ளிய ஞானசம் பந்தப் பிரான்மு னொலித்தல்செயும்,
வெள்ளிய முத்தின் றிருச்சின்னம் போன்று விளங்குகவே.

தலைமகன்வந்துழிப் பாங்கி நினைத்தமைவினுதல்.

1488. நடத்தே பயில்கழ லார்சண்பை நாடன்ன நங்கைகொங்கைக்
குடத்தே நிறைந்தபொ னேக்காது வேறுபொன் கொள்ளகெடுங்
கடத்தேசென் றீருண்டு கொல்லோவம் மாதுங் கலங்கலினெஞ்
சிடத்தே பயிறல் வலத்தே யயில்கொ ளிறையவரே. (௩௩௪)

தலைவன் நினைத்தமைசெப்பல்.

1489. படந்தொறுஞ் செம்மணி வாய்ப்பணி பூண்பரன் பங்கயப்பூந்
தடந்தொறு மன்ன மலிசண்பை நாடன்ன தாழ்குழலோர்
திடந்தொறு மேவிவெந் தீவினை யேனனி சென்றசென்ற
விடந்தொறு நீநின் மடப்பாவை யோடு மியங்கினையே. ()

தலைவன் ஆற்றுவித்திருந்த அருமைவினுதல்.

1490. கன்னு ருரித்தது போலென்னை யாண்ட கருணைப்பிரான் [ப்
றன்னுர் மதிலொரு மூன்றுஞ்சுட் டோன்சண்பைத் தொல்வரைவாய்
பொன்னு ரணிமயில் யானும்மி னின்றங்குப் போகியபி
னென்னு ருயிரையெவ் வாறுற்று வித்திங் கிருந்தனையே. ()

தலைவியைப் பாங்கி ஆற்றுவித்திருந்த அருமைகூறல்.

1491. கடல்சூழ் புகலிப் பெருமான் றிருநுதற் கட்பொலிவை
யடல்சூழ்வை வேலிறை வாசிறி தோதி யலர்ப்பகழி [ன்
யுடல்சூழ் வதுசற் றொழித்துநின் வாய்மை யுரைத்தளித்தே
மடல்சூழ் கருங்குழல் வெண்ணகைச்செவ்வாய் மயிலினையே.

## வரைவுமலிவு.



காதலன்முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தல்.

1492. ஆரு ரடங்க முனங்குண்டை யூர்செ லடங்கவுய்த்த
காரூர் குறளிற் புகலிப் பிரான்விற்ற கர்த்தெடுத்தாங்
கேரூர் களிறு மிசையேற் றுபுவர் திறக்கினநம்
மோரூர் முலைவிலை யென்றன்பர் நல்குபொன் ளெண்ணுதலே.

காதலி நற்றயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

1493. பொன்ரு வளமைப் புகலிப் பிரான்மணம் பூண்டுமுகின்
மின்ரு விமயம் புகுதரு கான்மகிழ் மேனையைப்போற்
குன்ரு விறலுடை யார்மணம் பூண்டு குறுகினம்மூர்
நன்ரு மணவணி கண்டாய் மகிழ்தரு நம்மினுமே. (௩௩௯)

பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைமகட்குணர்த்தல்.

1494. மேற்ரு ரகையி னரும்பார் பொழிற்சண்பை வித்தகர்வெண்
ணீற்ரு ரடல்விடை யேற்ரு ரருளி னிறைமகிழ்விற்
போற்ரூர் முடியிட றுங்கழ லார்தந்த பொன்முழுது
மேற்ரூர் நமரினித் தூற்ரு ரயலவ ரீர்ங்கொடியே. (௩௪௦)

தலைமகள் உவகையாற்றது உளத்தொடுகிளத்தல்.

1495. அரவெழுந் தார்க்கு மவிர்சடை யார்சண்பை யாளர்வெற்பி
லுரவெழுந் தார்க்கு முருவுடை யார்நம தூரகத்தே
வரவெழுந் தார்க்கும் பகலே யிகலின் மணமுரச
மிரவெழுந் தார்க்கு முருவ மிலார்மூர செஞ்செயுமே. ()

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

1496. மன்னும் புகலிப் பிரான்கட வூரில் வழுத்தொருவற்
றுன்னுங் கொடுஞ்சம னேர்ந்தெறல் போலச் சுடரிலைவேன்
மின்னுங் கரத்தரிம் மாதுயிர்க் கூற்றம் விலக்கினரென்
பன்னுந் திறத்த தவர்வாழ்க வாழ்கவிப் பாரென்றுமே. ()

தலைவி மணம்பொருட்டாக அணங்கைப்பாரநிலைகாட்டல்.

1497. செய்யே மலிசண்பை யார்பாற் கவுரி திருவடிகண்
மொய்யே ருருக்கு மணிபணிந் தாங்கிம் முதுகுன்றின்வாய்
மையே பொலிகண் மணம்பொருட் டாக மகிழ்ந்தணங்கைக்
கையே குவித்துப் பரவுதல் காண்கநின் கண்விடுத்தே. ()

பாங்கிநிலைகண்டதலைவன் மகிழ்தல்.

1498. நாதன்மை தாய களத்தான் புகலி நகுவரைமா
ஞேதன்மை சானம் மணம்பொருட் டாக வுவந்தணங்கைத்
தீதன்மை மேவ மலர்தூய்ப் பராவுத றேர்தரினங்
காதன்மை தானெஞ்ச மேவஞ்ச மேயிக் கடலகத்தே. (௩௪௪)

---

# அறத்தொடுநிற்றல்.



கையறுதோழி கண்ணீர் துடைத்தல்.

1499. ஆலத்தின் கீழுறை வார்காழி நாத ரருளனையாய்
கோலத்தின் கிள்ளை குளிர்மொழி பேசுங் குலவுபொழில்
காலத்தி னன்மலர் நல்கும்பந் தாடுங் கடும்புமுண்டு
நீலத்தின் முத்தம் பிறப்பதற் கேதுவெ னீயுரையே. (௩௪௫)

தலைமகள் கலுழ்தற்காரணங்கூறல்.

1500. பூண்பது வாளர வாக்கிதென் காழிப் பொருப்பிறைவற்
காண்பது நாமது கார ண மாகக் கரிகுழைத்து
மாண்பது மேவப் புனைபூங்கை யோவும் வளையென்றெரீஇ
யேண்பது மாதனி போல்வாய் கலுழு மிருவிழியே. (௩௪௬)

தலைமகன் தெய்வங்காட்டித்தெளிப்பத் தெளிந்தமை எய்தக்கூறல்.

1501. பொன்னே பொருசடை யார்காழி நாதர் புகார்த்துறைவாய்
மின்னே கடற்றெய் வதங்காட்டி யன்பர் விரித்ததெல்லாங்
கொன்னே யலவென் றிருந்தேன் கயல்கொல் குருகினொடாங்
கென்னேமுட் கைதையு முண்டோது மோகரி யென்செய்வனே.

தலைவன் இகந்தமை இயம்பல்.

1502. போழுங் குளிர்மதி சூடும் பிரான்புக லித்துறைவாய்
வாழுந் தலைவர் கலந்தவர் நாளங்கு வைகுகொலை
சூழுங் குருகு கரியுரை யாமை துணிந்தஞரி
லாழும் படியெனை நீத்தடைந் தார்த மகனகரே. (௩௪௭)

தோழி இயற்பழித்துரைத்தல்.

1503. மேதக் கவர்புக ழுங்காழி மேய விறல்வடுக
நாதக் கடவுளை நண்ணுறி னீதுயர் நண்ணமயி
லேதக் கனமு னிசைத்தயர்ந் தார்பின்ன ரென்னிலிவ
ரோதக் கவர்மிக் கவர்யா ரிவரி னுணர்தரினே. (௩௪௮)

தலைமகள் இயற்படமொழிதல்.

1504. அடியார் கருத்தின் படியார் பிறைகொண் டலங்கரித்த
முடியார்நஞ் சுண்டு முடியார் புகலி முதுகிரிவாய்
வடியார் மலர்க்குழன் மாதேமுற் சூளு மறந்தகலுங்
கொடியா ரெனினு மவரே யெனக்குக் குலதெய்வமே. ()

தெய்வம்பொறைகொளச் செல்குவமென்றல்.

1505. நொதுமல ரல்லர்தஞ் சூண்மறந் தாரென்று நோதலுறப்
புதுமலர் மாலைப் புயத்தாரைச் சீறல் பொறுத்தியென்று
விதுமலர் வாண்முகத் தாயெழு வாவப்பி மென்புழுகு
மதுமலர் தூவிப் பணிவாம் புகலி வடுகனையே. (௫௱௧)

தலைவி இல்வயிற்செறித்தமை இயம்பல்.

1506. கற்றைச் சடையுடை யான்காழி நாதன் கயிலைவரைச்
சுற்றைப் புனைபொழி லூடுசென் றூடற்க தோகையென்று
ளிற்றைத் தினமன்னை யெய்த்தனள் போலுமெய் யேறியபீ
ரொற்றைத் திகிரியுள் ளார்மாத ராயி துணர்ந்திலரே.(௫௱௨)

செவிலி கனையிருளவன்வரக் கண்டமைகூறல்.

1507. மைவாய் விழியொரு பாலார் புகலி மணிவரைப்பாற்
கைவாய் வடிநெடு வேலோடு வந்துநங் காளைநிற்கப்
பைவா யரவல்கு லாய்தா யிருணடுப் பார்த்தற்புதத்
தைவாய் முருகென் றெழுந்தா ளதுநந் தவப்பயனே. (௫௱௩)

செவிலி தலைமகள்வேற்றுமைகண்டு பாங்கியைவினுதல்.

1508. கனங்காவல் கொண்ட குழலாய் பொழிலெழிற் காழியினென்
மனங்காவல் கொண்ட பெருமான் வரையில் வயங்குதினைப்
புனங்காவ னீத்தபின் மெய்வேறு பட்டுநம் பொன்கைவளை
யினங்காவ லோவி யொழிவதற் கேது வியம்புகவே. (௫௱௪)

வெறிவிலக்கல்.

1509. சொல்லவர் தீரிக் குடில்வா யரன்சண்பை துன்னலரிற்
பல்லவர் தீர்கொம் பரின்மெலி வாளுட் படர்தருநோய்
வெல்லவர் தீர்கொல் வெறிவேல ரேயிவ்வெறுந்தகரைக்[கே.
கொல்லவர் தீர்கொல் சொலவேண்டுங் கோபங்கொளாதெனக்

வெறிவிலக்கியவழிச் செவிலி தோழியைவினுதல்.

1510. குறியாட்டை மன்று ணவில்வார் புகலிக் குழகர்வெற்பிற்
செறியாட்டை யென்னிலு நீகண்டு ளாய்கொ றிருந்திழையே
மறியாட்டை யீர்ந்து முருகனுக் கீந்தும மங்கையுய்ய[ன்னே.
வெறியாட்டை யாற்றிடுங் காற்றடுத் தாய்சொல் வினைந்ததெ

தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

1511. அரனூர் புகலிக் கடற்றுறை வாய்வண்ட லாட்டிற்கைதை
வரனூர் மடல்குரு கென்றனள் யான்மட லென்றனனென்
கரனூர் தரச்செ யெனக்கலுழ்ந் தாளது கண்டுவிரைந்
தரனூ ரொருவர் முறித்தளித் தேகின ருள்ளதிதே. (௩௬௭)

புனறருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

1512. மருதுறை யேகன் புகலிப் பிரான்வள நாட்டுநதி
யொருதுறை மூழ்கவுண் ணீர்த்த லான்மற் றொருதுறைபோய்க்
கருதுறை நாவுக் கரசெனத் தோன்றுமக் காலையினோர்
விருதுறை வேலவ னற்கரை யேறினன் மெய்ம்மையிதே. ()

களிறுதருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

1513. வாரேறு பூண்முலை பங்கர்தென் காழி வரைப்புனத்துக்
கூரேறு கோட்டுக் களிறொன்று சீறிக் குறுகவிரைந்
தேரேறு கோதை நடுக்குற்று வீழ வெடுத்தணைத்தாங்
கோரேறு போல்வந் துதவின ரான்முன் னுதவினரே. ()

மணம்விலக்கல்.

1514. அற்றூர்க் கருளும் பிரான்காழி நாத னருளியநா
லுற்றூர்க் குரியவர் பொற்றொடி யாரென் றுணர்த்துதலான்
மற்றூர்க் குரிமை யுளதாகு மோவென் வகுப்பதன்றாய்
நற்றூர்க் கருங்குழற் செவ்வா யொளிர்வெண் ணகைமணமே.

தலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியைவினாதல்.

1515. கங்கா தரர்தென் கழுமலத் தீசர் கழனிவளைவார்
தங்கா தரம்பொரு வப்போம் வளைகளத் தாளமைத்த [பொன்
பொங்கா தரமெங்கும் போர்ப்பது போலெங்கும் போர்த்தெழு
மங்கா தரகர வென்னுற்ற தோநம் மயிற்கணங்கே. (௩௬௧)

செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்றல்.

1516. மாறுறு பாகத்தர் தென்காழி நம்மகள் வாயின்முலைப்
பாறுறு மின்னும் புறந்தோன் றினவல பல்லுமுதிர் [ன்
கூறுறுற் றென்ன முதுக்குறைந் தாளினிச் சொல்வதென்யா
றேறுறு பூங்குழ லன்னா யினித்தக்க செய்கைநன்றே. ()

நற்றாய் தமருக்கு அறத்தொடுநிற்றல்.

1517. குருத்துக் கிசைந்த பொடிபூச மேனியர் கோயில்கொடென்
மருத்துக் கிசைந்த மணிமாடக் காழி வரைநமர்காண்
முருத்துக் கிசைந்த முகைமூரன் மாது முதுக்குறைந்தாள்
கருத்துக் கிசைந்த வரைநாடி யாற்றுங் கடிமணமே. (௩௬௩)

## உடன்போக்கு.



பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தல்.

1518. பொல்லா மலமொழிப் பார்காழி நாதர் பொருப்பிறைவா
வில்லா நுதல்பிரி வாற்றுள்பொற் கொங்கை விலைக்குலக
மெல்லா மளிப்பினு மீயா ரெமரிஃ தெண்ணினரு
ரொல்லாநின் னூருக் குடனழைத் தேகுத லுத்தமமே. ()

தலைவன் உடன்போக்கு மறுத்தல்.

1519. முடியைத் துடைய பிரான்காழி வாணன் முதுகிரிவா
யடியைத் தெடுத்துவைத் தைங்காத மென்றஞ்சு மாயிழையை
வடியைந்து பாற்குழ லாய்கொண்டு செல்ல மனங்கொள்வலோ
கடியைத் துடைய விரதிய ரேசெலுங் கானகத்தே. (௩௬௫)

பாங்கி தலைமகனை உடன்படுத்தல்.

1520. ஆலை மலியும் வயற்காழி நாத ரருள்கலந்த
வேலை மறமு மறமா மருளும் விரும்பருளா
நூலை மதிக்கு நினைக்கலந் தாலெங்க ணூலிடைக்குப்
பாலை மருதமன் றோவினி யாது பகர்வதுவே. (௩௬௬)

தலைவன் போக்குடன்படுதல்.

1521. நுண்ணிய நாயகன் றென்காழிச் சம்பந்தர் நோக்கமெய்யி
லண்ணிய வெப்பம் வழூதியற் றுங்கெனை யாண்டுகொண்ட
புண்ணிய மாமயி லேக்கவெம் பாலையிற் பொங்குவெப்பந்
தண்ணிய தாகுமென் றேதுணிந்தேனின் றனிக்கருத்தே. ()

பாங்கி தலைவிக்கு உடன்போக்குணர்த்தல்.

1522. சேலை யவாவு வயற்காழி நாதர்பஃ றேவரெற்பு
மாலை யவாவு சடையார் கயிலை மயிலனையா
யோலை யவாவு செவிகுவி மாமுலை யுங்களன்னம்
பாலை யவாவுங்கொ லென்றார்நங் காவலர் பைங்கொடியே. ()

தலைவி நாணழிபிரங்கல்.

1523. எண்பிறப் பைத்தவிர்த் தார்காழி நாத ரிமயத்திரு
ணண்பிறப் பைத்தர லானம் பிறப்பு நகுபிறப்பே
யொண்பிறப் பைத்தரு வண்காரைக் காலம்மை யோர்த்தலவோ
பெண்பிறப் பைத்தவிர்த் துற்று ளொருகரும் பேய்ப்பிறப்பே.

கற்புமேம்பாடு பாங்கிபுகறல்.

1524. பூவனை யாய்நினக் கோதுவ தென்னை புகலியினர்
தேவனை யேயருச் சிப்பார்க்கு மாமந் திரங்கிரியை
பாவனை நாண மடமச்சங் காண்குலப் பாவையர்க்கு
மேவனை யார்க்கன்பு தேரினை யார்க்கு விரும்புகற்பே. (௩௭௦)

தலைவி ஏருப்பட்டேழுதல்.

1525. நாறுங் கடுக்கைச் சடையார் புகலிநல் லார்பலர்வாய்
கூறுங் குறிப்பு மனைமா ரியற்று கொடுஞ்சிறையு
மேறும் பசப்பு மதவே டிடிப்புமற் றெய்துமிடை
யூறுங் கெடுப்பலின் னேயொரு நானன்ப ரோடுசென்றே. ()

தலைவி ஏருப்பட்டேழுந்தமை பாங்கி தலைவற்குணர்த்தல்.

1526. பந்துங் கழங்குமென் கைக்கொடுத் தாளுட் பரிந்துகண்ணீர்
சிந்தும் பசுங்கிளி சிந்தா து போற்றிச் சிறப்பியென்றாள்
சந்துங் கறியுஞ் செறிபொழிற் குள்ளந் தளரலென்றாண்
முந்துங் களிற்றண்ண லேயரன் காழி முகிழ்நகையே. (௩௭௨)

பாங்கி சுரத்தியல்புரைத்துழித் தலைமகள்சொல்லல்.

1527. மறைக்குந் திருநெடு மாற்குமெட் டான்சண்பை வாணுதலா
ரிறைக்கு மலர்க்கு மதவே ளலர்க்கு மிலகுறுவான்
பிறைக்குங் குறைக்குந் தனிமைக்குந் தாயர் பெருக்குகொடுஞ்
சிறைக்குங் கொடியது வோவன்ப ரோடு செலுஞ்சுரமே. ()

பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடைகொடுத்தல்.

1528. யான்செயும் விண்ணப்ப மீதுநற் றாய்தந்தை யான்றவனீ
மான்செயு நோக்கிக்கு நின்னருண் மாறுநின் மாலயன்மேன்
மீன்செயு நீர்த்தடங் காழிப் பிரான்றிரு வீழிப்பிரான்
றுன்செயும் பேருண் மாறுறு மோர்தி தராதிபனே. (௩௭௪)

பாங்கி வைகிருள்விடுத்தல்.

1529. பற்றுமுன் மேவும் பரன்காழி நோக்கியிப் பாவையொடு
சற்றுமுன் போதிரிவ் வைகிருள் வாயெங்க டாய்நமரை
யுற்றுமுன் கூறுவ கூறியிவ் வூர்க்கௌவை யோவச்செய்து
மற்றுமுன் னேவந்து கூடுவ ஞானிற்பன் மன்னவரே. ()

தலைவன் தலைவியைச் சுரத்துய்த்தல்.

1530. மணம்புரி நாளம்மி யேற்றலெவ் வாறென்று மாழ்குறுமென்
குணம்புரி காரிய மிக்கழ காயிற்றுக் கோமளமே
பணம்புரி பாப்பணி யார்காழி யெண்ணலர் பற்றுவெம்மைக்
கணம்புரி காட்டுண் மெலப்பெயர்ப் பாய்திருக் காண்மலரே.()

தலைமகன் பொழில்கண்டுவியத்தல்.

1531. சுந்தரர் தென்குரு காவூர்க்குச் செல்வழித் தோன்றுமொரு
பந்தரின் ஞானசம் பந்தர்க்குத் தோன்றுமொர் பந்தரினிற்
சுந்தர மார்சண்பை யாள்வா ரருளிற் றெருகுகிழலின்
பந்தரு சோலையொன் றுற்றது காணம் படர்தெறவே. ()

தலைமகன் தலைமகள் அசைவறிந்திருத்தல்.

1532. மருக்கோல வார்குழன் மாதே பருதி வழங்கழலு
முருக்கோல மார்பின் முகமா மதிநல் குறுபுனலு
மிருக்கோல மிட்டு முணரான் புகலி யெனவடுத்த
திருக்கோலக் காவி னிருந்தொழிப் பாம்பின்பு செல்லுவமே.

தலைவன் தலைமகளை உவந்தலர்சூட்டி உண்மகிழ்ந்துரைத்தல்.

1533. மையோ வெனுங்களத் தார்காழி நாதர் வழங்கருளாற்
பொய்யோ வெனுமிவ் விடைகூந்தன் முன்செய்புத் தேடன்கையோ
வையோவக் கூந்தன் முடித்துமென் பூவு மணிதல்செய்யென்
கையோ சிறந்தன யாருரைப் பாரிந்தக் கானகத்தே. (௩எ௬)

கண்டோர் அயிர்த்தல்.

1534. புன்முளை யாவிந் நெடுங்கொடுங் கானம் புகுநரல்லர்
நென்முளை யாமென் மலங்கெடுத் தாள்சண்பை நித்தனருண்
மன்முளை யாமுரு கோவிந்த நம்பிநல் வள்ளியெனு
மன்முளை யாமதி போன்முகத் தாள்கொலிவ் வாயிழையே. ()

கண்டோர்மகிழ்தல்.

1535. அணிகெழு மாதின் பிடிநடை காண வவள்பின்செலு
மணிகெழு தோள னரன்காழி யன்னவன் மால்களிற்றின்
றிணிகெழு போர்நடை காண்பா னனையன்பின் செல்லுமிந்தப்
பிணிகெழு கூந்த லெனில்யா ரிவரன்பு பேசுநரே. (௩அ௧)

கண்டோரிரங்கல்.

1536. கடந்தா ளலள்சிறு பேதைப் பருவமிக் கன்னியன்றே
நடந்தாள் கணவன் பணிதலைக் கொண்டிந் நகுகொடுங்கான்
றடந்தா ளுடைத்தருச் சூழ்சண்பை நாதர் சயிலத்துண்ணே
யிடந்தா ளலளிவ ளைப்பெற்ற பாவியென் னுருகுவளே. (௩அ௨)

கண்டோர் காதலின்விலக்கல்.

1537. மெல்லியல் வாடு நகரணித் தன்றுவெய் யோன்விழுந்தா
னல்லிய லாழி யகம்பரன் காழி யணுகலரிற்
கல்லியல் காடுபல் கானியா றியங்குங் கடுங்கொடுமோ
வல்லிய றோளவெம் மிற்றங்கி யேகுக மாதொடின்றே. ()

கண்டோர் தம்பதியணிமைசாற்றல்.

1537. மின்னு வெனநுடங் கும்மிடை யாளொடு வேல்வலங்கொண்
மன்னு வினைய கழிப்பாலை முல்லை வனமிரண்டும்
பின்னுக நீகடந் தாலெதிர் தோன்றும் பிறங்குமுல்வோர்
முன்னு வமலமுன் னேனுறை காழி முதுநகரே. (௩௭௪)

தலைவிக்குத் தலைவன் தன்பதியணிமைசாற்றல்.

1538. உடல்சூழ் பிணிக்கு மருந்தாக மண்ணிட் டுதையொழிக்கு
மிடல்சூழ் புகழ்த்திரு வேளூர் கடந்து விரவுவமேன்
மடல்சூழ் கருங்குழ லாய்காண லாமின்னும் வந்துகருங்
கடல்சூழ் வதுபொரு வும்பொழில் சூழ்பரன் காழியையே. ()

தலைவிக்குத் தன்னகர்காட்டல்.

1539. நல்லாய் நயனம் விடுத்தெதிர் காண்க நகுகடலே
வெல்லா யகலக வென்றுகை நீட்டி விலக் குதல்போல்
வல்லாய் கொடிதுவள் பொற்கோ புரமு மணிமதிலுஞ்
செல்லாய்செய் குன்றமுஞ் சூழ்பரன் காழித் திருநகரே. ()

தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

1540. திகழும் பிரம புரமிஃ தப்பெயர்த் தீர்த்தமிது
நிகழும் பிரமலிங் கேசரி வீது நிலையமுகி
புகழுமி வீதிது தோணிப் பிரானில் புகுந்துயரெற்
சுகழும் வடுகனி வீதிது சம்பந்த னுரின்மின்னே. (௩௭௭)

தலைவன் தலைவியோடு தன்மனைசார்தல்.

1541. சொல்லிய சீர்த்திருக் காழிப் பிரான்றளி சூழ்ந்திறைஞ்சிப்
பல்லிய மார்ப்ப மறுகூடு சென்றுபல் லாண்டிசைப்ப
வல்லிய நேர்விறன் மன்னன்மின் னொளொடு மாளிகையுட்
புல்லிய மங்கல மோங்கப் புகுந்து பொலிந்தனனே. (௩௭௮)

---

## கற்பொடுபுணர்ந்த கௌவை.

சேவிலி பாங்கியைவினுதல்.

1542. கல்லா தவர்கரு தாக்காழி நாதர் கயிலைவரை
நல்லா தரஞ்செய் பொழிற்கெழி லில்லை நமைப்பிரிய
வொல்லா மகட்குற்ற தென்னினக் குற்றதெ னூர்க்கௌவையெ
னில்லா விழிமுகம் போனம்மி லாயதெ னேந்திழையே. ()

பாங்கி செவிலிக்குணர்த்தல்.

1543. கண்ணு ணுதற்பெரு மான்காழி நாதன் கருணைகொடு
மண்ணு ளொருவலி யான்மண மேற்றிலர் வன்கணமர்
புண்ணுண் மனத்த ணமையுஞ் சுரத்துப் புழுங்கழலு
மெண்ணு ணடந்தன ளன்னையின் றேநின் னிளங்கிளியே. ()

பாங்கியினுணர்ந்தசெவிலி தேற்றுவார்க்கு எதிராழ்ந்துமொழிதல்.

1544. அறவே தனையுளை யாறுகென் பீர்சண்பை யண்ணலரு
ளுறவே முயலுந ரொத்துறங் காமலுண் ணுமலரு
ரறவே துயிற்றி யருத்தி வளர்த்ததற் காகவய
லுறவே பொருளெனக் கொண்டுசென் றாளென் னொருமகளே.

செவிலி தன்னறிவின்மைதன்னை நொந்துரைத்தல்.

1545. புகராய் பவர்க்கொழிப் பார்காழி நாதர் பொருப்பிளமா
னிகரா யினுமின் முருகோடி யாரையு நீத்துவள்ளி
நகராய் தரமுனஞ் சென்றதற் கேதுவெ னுடியன்னுய்
பகராயென் றுணென்ன லம்முன்ன மோர்த்திலன் பாவியனே. ()

செவிலி தெய்வம்வாழ்த்தல்.

1546. மின்னுங் கொடுங்குன்று ளார்காழி நாதரை மேவலர்போன்
மன்னுங் கொடுஞ்சுரஞ் சென்றவண் மீண்டு வரப்புரியிற்
கொன்னுங் கொடுமுடி வாழ்முரு கேயெங் குலத்தொருபெ
ணின்னுங் கொடுத்துத் தொழும்பாகு வேமுனக் கெற்றைக்குமே.

செவிலி நற்றயக்கு அறத்தொடுநிற்றல்.

1547. கயலார் கருங்கண் சுனைவீழ வன்று கலங்கெடுத்த
மயலார் களிற்றண்ண னிறகமற் றோர்த மணமிசையு
மியலார் நமரென்று சொல்லாது வெஞ்சுரத் தெய்தினண்மின்
பயலார் புகலியன் ஞய்நங் கொழுந்தென்ன பண்ணுதுமே. ()

நற்றய் தன்னுளிரங்கல்.

1548. ஊரும் பிறைமுடி யார்காழி நாத ரொருவர்வரை
நேருங் கிளியொடு பூவையும் பாவையு நீத்திருகண்
வாரும் புனல்கொடு கைத்தாயும் பாங்கியும் வாடவழல்
சேருஞ் சுரத்தடைந் தாய்மக ளேயென்ன செய்குவையே. ()

நற்றய் பாங்கிதன்னெடுபுலம்பல்.

1549. பாவா யிதுமுன் பகர்ந்தா யலைபகர்ந் தாலுடனே
யேவாய் சிலைத்தடந் தோளான் திருமண மெய்துவள்பூங்
காவாய் புகலிக் கடவுள்பொற் பாதங் கருதலரிற்
பூவாய் குழலியை வீணே யருஞ்சுரம் போக்கினையே. (௩௬௬)

தோழியழுங்க நற்றாய்புலம்பல்.

1550. அறியாப் பருவத் தறிவே தலைக்கொண் டருந்துயரங்
குறியாச் சிறிய ளயலான்பின் வெஞ்சுரங் கூடுதனன் [வாய்
னெறியாக் கருதினள் சண்பைப் பிரான்வரை நீயென்செய்
மறியாப் பொலிகண் மகளே வருந்தி வருத்தலையே. (௩௬௭)

நற்றாய் பாங்கியர்தம்மோடு புலம்பல்.

1551. பெற்று வளர்த்த வெனைமறந் தாள்பிரி யாதமரும்
பற்று வளர்த்த வுமைமறந் தாள்பதிப் பற்றடையிற்
சுற்று வளர்த்த துணர்ப்பொழிற் காழித்தொல் லோனுதற்றீ
மற்று வளர்த்த சுரம்போக வேண்டுங்கொல் மங்கையரே. ()

நற்றாய் அயலார்தம்மோடு புலம்பல்.

1552. கொன்னூர் மறுகவுங் கைத்தாய் துயரிற் குறுகவுஞ்செம்
பொன்னூர் வதனஞ் சிறுகவும் பாங்கி புரத்தமர்வீர்
தன்னூர் கழுமல மாகக்கொண் டானருள் சாரலரின்
மன்னூ ரழற்சுரஞ் சென்றா ளவண்மன வன்மையென்னே.

நற்றாய் தத்தையொடுபுலம்பல்.

1553. கள்ளாய் மலர்க்குழல் காழிப் பிரான்வரைக் காளையுரைக்
குள்ளாய் நடப்பவள் வள்ளாய்முன் னோரை பொருக்குவிட்டா
டள்ளா யெனைச்சற்று மெள்ளாய்தள் ளாயென்று சாற்றிமெலி
கிள்ளா யுனையுங்கை விட்டா ளெனிலென் கிளப்பதுவே. ()

நற்றாய் தலைமகள்பயிலிடந் தம்மோடு புலம்பல்.

1554. கள்வார் கணையுடைக் காமனைக் காய்ந்த கனல்விழியோன்
வள்வார் முரசதி ருங்காழி யோன்வரை மன்னனையே
யுள்வார் குழலுமக் கேதுரைத் தாளிங் குறுவதென்று
கொள்வா ரெவர்நும் மலர்சுனை யேகனை கூர்பொழிலே. ()

நற்றாய் நிமித்தம்போற்றல்.

1555. வரைந்தாலிவ் வாறு வரலின்று காண்வரை யாமலிப்போ
திரைந்தாற் பயனெ னிருங்காழி யார்வரை யேந்தலொடு
விரைந்தா ளிளந்தளிர் மெல்வயிற் றென்மகண் மீண்டுவரக்
கரைந்தா னிணப்பலி யின்னே கொடுப்பல் கருங்கொடியே.()

தலைவன் மீக்கன்புசெய்கவென்று தெய்வம்பராவல்.

1556. பிணியார் மலர்க்குழல் சென்றாள் சுரத்திலப் பேதைக்குள்ள
பணியார் புரிவர் மணவாள னேமுற்றும் பண்பிற்செய
வணியா ரவன்றிரு மார்பே துயிலிட மாகவருண்
மணியார் மதிற்சண்பை வாழ்வடு காவின்னை வாழ்த்துவனே,

நற்றாய் சுரத்தணிவித்தல்.

1557. சந்தாபந் தீர்த்தென்னை யாள்வோன் புகலித் தனிமுதல்வ
னந்தா வருளி னியல்கதி ரேயுன்னை நான்றொழுதேன்
முந்தா வழற்சுரந் தண்மைசெய் தேமுத்த மூரன்முகச்
செந்தா மரையை மலர்த்தியல் பேயத் திறநினக்கே. (சoச)

நற்றாய் தன்மகள் மென்மைத்தன்மைக்கிரங்கல்.

1558. பூமேன் மிதிப்பினுந் தீமேன் மிதித்தது போற்பதைப்பாள்
காமே லணவு புகலிப் பிரானுதற் கட்டழலுஞ்
சேமே லவன்சடை நீர்போற் குளிரச் செறிதழற்கா
னூமே லுரைப்பதெ னூமே துணிந்து நடப்பதற்கே. (சoரு)

நற்றாய் தன்மகள் இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கல்.

1559. உட்டா னமர்ந்தென்னை யாள்வோன் புகலி யொருவன்வரைக்
கட்டா னுணன்முலைப் பாலேயல் லாற்பதங் கண்டறியாண்
முட்டா னெனவெம் பரல்செறி கான்சென்று முன்னமங்கை
தொட்டான் பணிசெயக் கற்றதெங் கோவெத் துணிபிதுவே.

நற்றாய் அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல்.

1560. பூசையை யோவத்துக் காணினு மஞ்சிப் புழுங்குமுளத்
தாசையை யோவென் னுரைக்கேன் செடிக்கொவ்வொன் றுகமுழங்
கோசையை யோவரும் வெம்புலி துஞ்சு மொருகடத்தி
லிசையை யோவரி யான்காழி மாமயி லென்செயுமே. (சoஎ)

கண்டோரிரக்கம்.

1561. காவி விளர்த்த களத்தான் புகலிக் கயிலைவரை
யாவி நிகர்த்தவள் சென்றாள் சுரத்தவ ளாடிடமு
மேவி யிருக்கு மிடமுங்கண் டான்முன் விழைந்துபெற்ற
பாவி வயிற்றிடை மூளா தவியுங்கொல் பற்றழலே. (சoஅ)

செவிலி ஆற்றத்தாயைத் தேற்றல்.

1562. பொற்பே மலியும் புகலிப் பிரான்பொற் பொருப்பிடைத்தன்
கற்பே நிறுத்தப் புகுந்தாட்கில் வாறு கலங்கலன்னாய்
வெற்பே முதலிய வெல்லா நிலமும் விரைந்துதுரீஇ
யற்பேகொ ளண்ண லொடுமோதை மீட்ப லறிதியின்றே. ()

மூக்கோற்பகவரை வினதல்.

1563. பதியிய லிற்று பசுவிய லிற்றுவெம் பாசவகை
மதியிய லிற்றென் றுணர்ந்தேழ் வகைப்பவ வாய்மணிட்டீர்
நதியியல் செஞ்சடைக் காழிப் பிரானொடன் னூரினிந்தக்
கொதியியல் கானொரு காளையொ டோர்மின் குறுகினளோ. ()

மாவிரதியரை வினுதல்.

1564. மொழிதரு பஞ்ச வடியோ டடிப்பஞ்ச முத்திரையுங்
கழிதரு மெற்பணி யும்புனை வீரிக் கடத்துவழி
விழிதரு நெற்றிப் பிரான்காழி நாதனை மேவலர்போற்
பொழிதரு மேரொரு பூவையொர் காளைபின் போயினளே. ()

உய்த்துணர்வோரை உரைமினென்றல்.

1565. எல்லா வுயிர்க்கு முயிராய காழிக் கிறையவனை
நல்லா தரத்தழ லிற்கண்டு போற்றிடு நான்மறையீர்
பொல்லா வழலிச் சுரத்தொரு காளைபின் போகியமா
னெல்லா வெனவெதிர் மீளுங்கொ லோவுணர்ந் தோதுமினே.

மிக்கோர் ஏதுக்காட்டல்.

1566. மாதே யுலகிய லோர்ந்திலே யாலன்பு வைகுமுள்ளப்
போதே யமரும் புகலிப் பிரான்றென் பொதியவரை
மீதே பலாமுற் றருவின் கனிகள் விரும்புநர்க்கே
தீதேயி னின்மக ளும்மன்ன ளாலென்று தேருதியே. (சகரு)

செவிலி எயிற்றியொடுபுலம்பல்.

1567. அறப்பாவை பாகர் பிரமலிங் கேச ரவனியுண்மா
ணிறப்பாவை வாழ்சண்பை யூருடை யானொடு நேயமிக்கோர்
குறப்பாவை வந்தன ளோகொடு வேங்கைப்பல் கோத்தணிந்த
மறப்பாவை யேயுண்மை யோதுபு கோடி மலியறமே. (சகச)

செவிலி குரவொடுபுலம்பல்.

1568. தற்று யொடுதந்தை யில்லான் புகலித் தடவரைவாய்
நற்றாய் வருந்தநின் றுயமுந் தேம்பநல் லூர்மறுக
வுற்றாய் நினக்குத் தகாதென்று நீயென் றெருமகட்குச்
சொற்று யலேநின்று ளாய்பயன் யாது துணர்க்குரவே.(சகரு)

செவிலி புறவொடுபுலம்பல்.

1569. வல்லா யெழுமுலே வெங்கா னடைய வழிமறித்து
நில்லா யெனத்தகைந் தாயில்லை யேசெல்ல நீளவிட்ட
பொல்லாயுன் வன்மை யுணர்ந்தல்ல வோபுற வேயுணவு
கல்லாய் முடிய வகுத்தான் கழுமலக் கண்ணுதலே. (சகசா)

சுவடுகண்டிரங்கல்.

1570. சிற்பங் கதிர்க்கு மதிற்காழி நாதன்செம் மேனியில்வெண்
கற்பங் கதிர்க்கும் படிபுனை வோன்றிருக் காளத்திவா
யற்பங் கதிர்க்கு மருங்குனல் லாள்சிற் றடியிதது
பொற்பங் கதிர்க்கும் புயத்தா னடியென்று போற்றுவனே. ()

கலந்துடன்வருவோரைக் கண்டுகேட்டல்.

1571. இன்பார் முருகனும் வள்ளியும் போல வெதிர்வருவீ
ரன்பார் மொழியென் னனுர்கெடு மாறென் றறைமினிந்த
வன்பார்நும் போல்வ ரொருதோன்ற லும்மொரு மாமயிலு
மென்பா ரணிசடை யோன்காழி நோக்கியின் றெய்தினரே.()

கலந்துடன்வருவோர் புலம்பறேற்றல்.

1572. யானெதிர் கண்ட வெழில்வள ரேந்தலு மிம்மடமான்
றனெதிர் கண்ட மடமானும் போயின்று சார்வர்கரு
வானெதிர் கண்டனம் மாதேவன் சங்கரன் வானவர்கோன்
கானெதிர் கண்ட பொழில்சூ ழுடுத்த கழுமலமே. (சகசு)

செவிலி புதல்வியைக்காணுது கவலைகூர்தல்.

1573. படைபோ லொளிர்கண் ணொருபாற் பரன்சண்பை பாடுதலில்
கடைபோன் மெலியு மெனக்கெங்ஙன் வாயுண்டு காணகர்போய்
விடைபோ னடையொரு வேந்தன்பின் னேசென்ற மெல்லியலா
ளிடைபோன்மற் றுள்ள வுறுப்பொன்றுங் கண்டில னென்பதற்கே.

---

## மீட்சி.



தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல்.

1574. சேரா ருயிருண் டிழல்வடி வேலுடைச் செம்மலொடு
வாரா ரிளமுலை வெங்கான் கடந்து மருவினளின்
றோரார்த முள்ளத் தொளிப்பா னளிப்பா னுயிரளித்த
காரார் களத்த னுறையு நிறையுங் கழுமலமே. (சஉக)

உடன்போய்வரைந்த நெடுந்தகை மீட்சியுரைத்தல்.

1575. வண்டாள் குழலை வடிவே லவனருண் மாட்சியினர்
தொண்டாள் பரமன் புகலியிற் றன்மனை துன்னிமணம்
பண்டாள் விதஞ்செய் தமர்நாணம் மானம் பதிநினைத்துக்
கொண்டா னுணர்ந்தது மீண்டன னலக் குரிசிலின்றே. ()

தலைவன் தம்மூர்சார்ந்தமை சாற்றல்.

1576. விதுகா ணரிய கழற்சண்பை நாயகர் வெற்பதுமற்
றதுகாணின் னையத் துடனீ பகல்விளை யாடுமிட
மிதுகா னுனைமுத னுன்வந்து கண்ட விரும்புனமற்
றுதுகா ணிரவுக் குறிகொண்டு முன்பயி லோரிடமே. (சஉ௩)

தலைவி முன்செல்வோர்தம்மொடு தம்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

1577. பூமா னொடுகலை நாமான் மருவும் புகழ்ப்புகலி
யோமா னொடுபங் குமையையும் போற்றியெம் மூர்புகுவீர்
வாமா னொடுசம ரேற்குங்கண் ணுய மடந்தையர்க்குக்
கோமா னொடுசுரஞ் சென்றாள்வந் தாளென்று கூறிடுமே. ()

முன்செல்வோர் பாங்கியர்க்குணர்த்தல்.

1578. அருவார் சதுக்கொ ளுருவார் புகலியன் னீர்களுங்க
ளிருவார் முலையுஞ் செருவார் சிலைகொளொ ரேந்தலுமுள்
வெருவா ரணங்கு பொருவா ரொருவரை விட்டொருவ
ரொருவார் வழியில் வருவா ரிதுண்மை யுரைத்தனமே. ()

பாங்கியர்கேட்டு நற்றாய்க்குணர்த்தல்.

1579. அன்னாய் முதலை கொடுபோன பிள்ளை யருட்புகலி
மின்னாய் சடைப்பெரு மான்றேழ ராற்பின்பு மீண்டதெனப்
பொன்னாய் கழல்வலி யோன்கொடு போயநின் பூங்கொடிமற்
றுன்னாய் தருநன்மை யான்மீண் டுளாளிவ் வுரையுண்மையே.

நற்றாய் தலைமகனுளங்கோள் வேலனைவினுதல்.

1580. ஆலம் புனையுங் களத்தான் புகலிபி லாய்ந்தொருமுக்
காலம் புனையு முணர்வுடை யீர்கழற் கால்விறலோ
னேலம் புனையுங் குழலா ளொடுமென திற்புகுமோ
கோலம் புனையுந்த னிற்புகு மோவுண்மை கூறுகவே. (௬௨௭)

---

## தன்மனைவரைதல்.



நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியைவினுதல்.

1581. சிம்மனை வாயர வம்புனை வோன்வரைச் செல்வியெனு
மம்மனை வாய்திரு மேனிப் பிரானமர் காழியன்னாய்
நம்மனை வாயம்மி யோமண மாலை நகுபுயத்தார்
தம்மனை வாயம்மி யோமட மானடி தாங்குவதே. (௬௨௮)

செவிலிக்கு இதுளை வரைந்தமையுணர்த்தல்.

1582. கண்டு வருந்திப் பியமொழி பாகன்றென் காழியுள்ளார்
மண்டு வருந்திப் புவிபுரப் பார்வரைந் தார்மணிவாய்த்
தண்டு வருந்திச் சுழியையென் றூர்வன் றரைமெழுகி
யுண்டு வருந்திப்பெற் றூட்கன்னை போயென் னுரைப்பதுவே.

வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தல்.

1583. பகலருங் கோளு மிகலரு நாளும் பலித்தனவென்
றகலருஞ் சீருடை யார்பரன் காழியி லாய்தொடியைப்
புகலருஞ் செல்வம் பொலியச்செய் தார்புதுப் பூங்கடியென்
றுகலரு மெய்ம்மொழி யோதுந ரன்னையெற் கோதினரே. ()

தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை
நுமர்க்கியம்புசென்றென்றல்.

1584. தெங்குங் கமுகுங் கதலியுஞ் சூழெழ் திருநகரிற்
பொங்கும் புகலிப் பிரானரு ளாலுங்கள் பூங்கொடியைத்
தங்கும் பெருமறை யந்தணர் சூழத் தழன்முனர்யா
மெங்கும் புகழ்மணஞ் செய்தாறும் மன்னைக் கியம்புகவே ()

தானது முன்னே சாற்றினனென்றல்.

1585. வல்லாண்டு கொள்ளு முலையாளை மங்கல வாழ்த்துவிம்மப்
பல்லாண்டு மல்கப் பரன்காழி யின்மணப் பந்தர்நல்லோர்
சொல்லாண்டு நீமணஞ் செய்தாய்முன் னேயத் துணிபுணர்த்தேன்
வில்லாண்டு வாழ்நுதற் றேரெளமர்க் கோதினன் வேலவனே.

---

## உடன்போக்கிடையீடு.



நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவு உணர்த்திவிடுத்தல்.

1586. ஒருவன் புடைகொள் கழுமல நின்றுமெம் மூர்புகுவீர்
மருவன் புடையென் றுணைவியர் பாலுங்கண் மங்கையென்பா
டருவன் புடைவனத் துங்களை யேநெஞ்சுட் டான்சுமந்தோர்
திருவன் புடையக லாதுசெல் வாளென்று செப்புமினே. ()

தலைமகள் தன்செலவு ஈன்றாட்கு உணர்த்திவிடுத்தல்.

1587. தாவாத சண்பைச் சதாசிவற் றூழ்ந்தெழு தாழ்சடையீ
ரோவாத துன்பத் துழலுமென் றுய்முன முற்றுவசை
மேவாத பண்குடி யோர்ந்தொரு வேந்தன்பின் மேவினளே இ
யேவாத நின்மகள் சென்றுளென் றேது மிறைஞ்சுவனே. ()

நற்றாய்க்கு அந்தணர்மொழிதல்.

1588. அன்னாய் புகலி யரனடி யேமெங்க ளாசிகொண்மோ
மின்னாய் மருங்கு லொருவே லவனொடு மேவிநல்லோர்
முன்னாய் வழிச்செலக் கண்டே மனையண் மூதுக்குறைவின்
றென்னாய் வினையுங்கொ லோவட மீது மிறைஞ்சிடுமே. ()

நற்றாய் அறத்தொடுநிற்றலிற் றமர்பின்சேறலைத் தலைவிகண்டு தலைவற்குரைத்தல்.

1589. மூதண்ட கூட முடியாக வோங்கு முதல்வர்வெள்ளி
வேதண்ட வாணர் கழுமலஞ் சூழ்பெரு வீரையென
மாதண்ட நேர்புய மன்னநின் மேலம்பு மாரிபெய்வான்
கோதண்டம் வாங்கி வளைந்தா ரெமரென் கொடுவினையே. ()

தமர்பின்சேறலைக்கண்டோர் இரங்கல்.

1590. மெலியுங் கொடிநுண் ணிடையா ளொடுசெல் விடலையைப்பொன்
மலியும் புகலிப் பிரானையுன் னுரை வளைக்கும்வெய்ய
கலியுங் கடுவினை யும்போல் வளைந்தனர் கானவர்மேற்
பொலியுஞ் சமரிது பார்ப்பதிற் றேடம் புகும்புகுமே.(௬௩௭)

தலைவியைத் தலைவன்விடுத்தகறல்.

1591. தகையே மலிபுக லிச்சட்டை நாதர் தமதருளாற்
பகையே யெனில்வெங் களிற்றுக் குழாத்துட்பஞ் சானனம்பாய்
வகையே யெழுவனிற் பாய்நீ நுமரென வந்தமையான்
முகையே பொருமுலை யாயஞ்சு வேனிவர் முன்செலற்கே. ()

தமருடன்செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றுஅரற்றல்.

1592. அரியார் மதலை யொடுசூழ் புகலி யமருமறைப்
பரியார் கயிலை வரைவா யெனைமுற் பயந்தவர்மு
னுரியார் வளைக்கவு மஞ்சினர் போலென் னுயிரனைய
பெரியார் புறங்கொடுத் தாரென்சொல் வேனிவர் பேரருளே.

---

## வரைதல்.



சென்றோன்மீண்டுவந்து அந்தணரையும் சான்றோரையுமுன்னிட்டு வரைந்துகொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்துரைத்தல்.

1593. அருகாத பூரணர் காழியிற் பாலுண்ட வையருமற்
றொருகா தலியு மணந்துட னேதம் முருக்குலைந்தார்
கருகாத மாலைப் புயவேந் தனுமிக் கனங்குழையுந்
தருகாத லின்மணந் தார்தளிர்த் தாருடன் றம்முருவே. ()

---

# இல்வாழ்க்கை.



தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தல்.

1594. ஆன்மா புகலிப் பெருமா னடிக ளடையளவுந்
தான்மா முயற்சி தவாவருள் போற்றமி யேனறும்பூந்
தேன்மா வுணுங்குழன் மான்மா மூலத்துணை சேருமட்டு
மான்மா வனையகண் ணைய்முயன் றயுன் மதிப்புநன்றே. ()

தலைவனைப் பாங்கிபுகழ்தல்.

1595. புடைக்குஞ் சிறுபசு வேய்முளை வானம் பொதுத்தெழுஞ்சீர்
படைக்கும் பனிவரை நன்னுடை வையர்சண் பைப்பெருநின்
னடைக்குநின் கேண்மைக் கொடைக்கு மவாவுபு நானறுஞ்சக்
துடைக்குங் குமமுலை நாணுமெண் ணேன்முய லுற்றனனே.

தலைவனைப் பாங்கிவாழ்த்தல்.

1596. நாரலர் சிந்தை யகலார் புகலிமுன் னூணுரைத்த
சீரலர் சொற்படி பொன்புனைந் தேசெல்வி செல்வரின்று
வாரல ரென்றுகண் வாரல ருருறை வாரலர்வேள்
போரலர் மாற்றிய நீவாழ்க வென்றும் புரவலனே. (௪௬௩)

வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை பாங்கி தலைவியைவினுதல்.

1597. தடுப்பது முன்னி யிமைத்தலுந் தீர்ந்து தவாவணங்கா
யுடுப்பது முண்பது முன்னுது வந்தின் பொருங்குறுநீ
கடுப்பது தீர்பரன் காழியி லன்னையர் காவல்செய்நாள்
விடுப்ப திவர்செய்த நாளெங்ங னாற்றினை மெல்லியலே. ()

தலைமகள் வருந்தாதிருந்ததற்குக் காரணங்கூறல்.

1598. பூங்காது வார்குழை மாதொரு பாகர் புகலியிலெற்
றூங்கா தகன்றன ராயினுந் தாயினுந் தாமகத்தே
நீங்கா திவரிருந் தார்புறத் தேயொரு நீயிருந்தா
யேங்கா தியானுயிர் வாழ்ந்தேனிச் சார்புகொண் டேந்திழையே.

பாங்கி தலைவனை வரையுநாளளவும் நிலைபெறவாற்றிய
நிலைமைவினுதல்.

1599. மோந்து மணைத்துந் தழுவியு நோக்கியு முத்தங்கொண்டுஞ்
சாந்தும் புழுகு மொழுகுமென் கொங்கைத் தலைதுயின்று
மேந்தும் பிறைச்சடை யார்காழி வாயிவ ளின்புறுநீ
நீந்தும் படியுற்ற தெவ்வாறு முன்ன நெடுந்தகையே. (௪௬௬)

பாங்கி மணமனைச்சென்றசெவிலிக்கு இருவரன்புமுரைத்தல்.

1600. நிகர்வா ரிலாத நிருமலன் காழி நிரைவளையும்
புகர்வா ரயில்கொள் புயவேந் தனுமன்பிற் பூரணரே
நகர்வார் குழலிய ராடவர் போலலர் நாடினும்யார்
பகர்வார்மெய்ம் மாத்திரம் வேறிது நாஞ்செய்த பாக்கியமே.

இல்வாழ்க்கை நன்றென்று பாங்கி செவிலிக்குணர்த்தல்.

1601. மன்பா லடிசில் வறையல் கருனைகுய் வாய்புளிம்பா
கன்பானமீ மான்கை துழந்தட்ட தேயிறை யார்தலினென்
றன்பா லருள்வைத்த கோன்காழி வாழ்பலர் தாநுகரு
மின்பாலன் றுய்மிக வும்பொலி யாநின்ற தில்லறமே. ()

மணமனைச்சென்றுவந்தசெவிலி போற்றேடிகற்பியல்
நற்றாய்க்குணர்த்தல்.

1602. விழியென்று தீநுதல் வைத்தோன் கழுமல வேதியர்த
மொழியென்று பெய்யு மழையென்று கேட்ட வுலகமிகை
பழியென்று மோவுமன் றுயின்றுன் செல்வி பயோதரமே
பொழியென்று கூறினப் போதே பொழியுஞ்செம் பொன்னையுமே.

செவிலி நன்மனைவாழ்க்கைத் தன்மையுரைத்தல்.

1603. கொந்தார் குழலொரு பாலா ரமர்வெங் குருநகர்வாய்ச்
சந்தார் வனமுலைத் தாழ்குழ னின்மக டன்மனைவாய்
வந்தார் பசித்தறி யாரென்றும் பொங்கி வழிதரும்பா
லந்தா ரணிப்பொரு ளெல்லா மறையொன் றகங்கொண்டதே.

செவிலி நற்றாய்க்கு இருவர்காதலும் அறிவித்தல்.

1604. காரிற் பொலிதண் பொழிற்பூந் தராய்ச்சங் கரனுமைபோ
லேரிற் பொலியுடம் பொன்றுக் குறையொன் றுண் டில்லிடத்தே
வாரிற் பொலிமுலை வைகுத லாலண்ணன் மாற்றலர்வெம்
போரிற் பொலியவு மூர்மாவின் மூன்றும் போதறினே. ()

---

## பரத்தையிற்பிரிவு.



காதலன்பிரிவுழிக் கண்டோர்புலவிக்கு ஏதுவிதாமவ்
விறைவிக்கென்றல்.

1605. ஒண்மலர் தோறு நறவுண்டு வண்டுழ லூரனின்று
தண்மலர் வீதிவந் தான்முன்பு போந்துகை தாங்குவித்துக்
கண்மலர் நோக்கஞ்செய் தார்பரன் காழிக்கண் ணரிவனு
மெண்மலர் நோக்கஞ்செய் தான்மனை யூடுதற் கேதுவிதே. ()

தனித்துழி இறைவி துனித்தழுதிரங்கல்.

1606. நலத்தே வசிக்குங் குலமாதி னீத்து நவில்பதியில்
குலத்தே வசிக்கு மடவாரில் லேகுடி கொள்ளுதன்மும்
மலத்தே வசிக்கு மெமையெடுத் தாளும் வரதர்சண்பைத்
தலத்தே வசிக்கு மதுபோலு மானந் தலைவருக்கே. (௬௫௩)

தலைவனைத் தலைவி கனவிற்கண்டிரங்கல்.

1607. காணித் திலநகை யாயென வூரர் கனவில்வந்தார்
நாணித் தழுவ விழித்தேன் மறைந்தனர் நாடுறுங்காற்
பாணித்த தென்னென் றரன்காழி வாழும் பரத்தையருட்
கோணித் தமைமுனி வாரென்று போலுமுட் கொண்டதுவே.

செஞ்சுடர்க்குரைத்தல்.

1608. மூந்தாநம் மூரன் முகநோக்கி வாக்குநெய் முற்றுமுண்டு
நந்தா தெழுசுட ரேயெனைப் போனிற்ற னன்மையென்றெண்
சிந்தா குலமுரை யாய்பரன் காழிப்பல் செல்வர்நல்கு
மந்தார் புனையு மடவார்க்கு நீயுமுள் ளஞ்சினையே. (௬௫௫)

வாரம்பகர்தல்.

1609. காருந் தழுவப் பிறையுந் தழுவக் கழிதலையு
நீருந் தழுவப் படுசடை யார்சண்பை நீணகர்வாய்ப்
பாருந் தழுவப் பலருந் தழுவப் படுமடவார்
யாருந் தழுவக் கொடுத்தன ளாலென் னிறைவனையே.(௬௫௬)

அடிசிலமைத்தமடவாலிரங்கல்.

1610. ஆளும் பரமர்தென் காழியின் வாயிசை யாருணவு
வாளும் பணிகணல் லார்செவிக் கூட்டலின் மன்னுபுகழ்
நீளுந் திருவள் ளுவர்சொற்ற வாறு நிலவகட்டுண்
மூளும் பசியிலை யாயிற்றம் மாநம் முதல்வருக்கே. (௬௫௭)

தலைவன்பிரிந்தமைக்கு இரங்கல்.

1611. மாவுங் கரியும் புரியும்பொற் றேருநம் மாளிகைமுன்
மேவும் படியி லரன்காழி யல்குல் விலைமடவார்
பாவுந் தெருவுறு மானல்ல காதன்மை பங்கயமென்
பூவும் புலவுங் கமழ்புன லூரனுட் புக்கதுவே. (௬௫௮)

ஈங்கிதுவென்னெனப் பாங்கிவினுதல்.

1612. பொன்னேயென் னுள்ளப் புனலோடிப் பாயும் புணரியெனுந்
தன்னே ரிலாவடி யோன்சண்பை வாய்மணந் தான்முடித்து
நன்னேய மிக்கன்பர் நல்கவு நீமுன்னை நாளிலின்னுங்
கொன்னே வருந்துவ தென்னே யெனக்குண்மை கூறுகவே.

இறைமகன் புறத்தொழுக்கு இறைமகளுணர்த்தல்.

1613. நேருங் கரும்பு பொழிசாறு நீத்து நெடும்பகடாங்
கூருங் கலங்கற் புனல்கொளு மூர ருபேந்திரன்முன்
யாருந் தொழும்பெரு மான்சண்பை வாய்ப்பொன் னெழின்மடவார்ச்
சாருந் தகைய ரெனைநீத் தனரின்று தாழ்குழலே. (௪௬௦)

தலைவியைப்பாங்கிகழறல்.

1614. ஆனுண்ட கேதனத் தார்காழி வாயிர வாம்பன்மலர்த்
தேனுண்ட வண்டு சிறுகாலை யிற்கஞ்சத் தேனுமுண்ணும்
வானுண்ட கீர்த்தி மகிழ்நர்பொல் லாங்கு மறந்துஞ்சொலல்
கூனுண்ட வாணுத லாய்குல மாதர்தங் கோளலவே. (௪௬௧)

சேவ்வணியணிந்து சேடியைவிடுக்கவென்றல்.

1615. பவளம் புனைந்துசெம் பூமாலை சூட்டிச்செம் பட்டுடுத்தி
நவளம் படுகுங் குமம்பூசிப் பாகிலை நல்கிநனி
துவளங் கொடியிடை யாய்விடு சேடியைத் தோன்றறன்பாற்
கவளங் கொளுங்களிற் றீருரி யார்மகிழ் காழிக்கின்றே. ()

சேவ்வணியணிந்து சேடியைவிடுத்தல்.

1616. பாடியை யிந்திர கோபஞ் செறிந்த பசுங்கொடியு
மேடியை வண்கவிர் பூத்தபொற் கொம்பு மிணையவொரு
சேடியை விட்டனள் செங்கோலஞ் செய்து திருந்திழைவிண்
மாடியை மாடப் புகலிப் பிரானன்பர் மாடுறவே. (௪௬௩)

அவ்வணி உழையர்கண்டு அழுங்கிக்கூறல்.

1617. தோளா மணிதிருத் தோணி புரேசன் றுணைமலர்த்தாட்
காளா னவரை யடையா துழலு மறிவிலரிற்
கோளா டரவக லல்குலிம் மாதுசெங் கோலங்கொண்டு
வாளா விகழ்பவர் வீதியிற் போகுமிம் மாண்புநன்றே. (௪௬௪)

பரத்தையர்கண்டு பழித்தல்.

1618. தவந்தாள் பணித லெனக்கரு தேனுக்குந் தன்னருடந்
துவந்தாள் பரம னிகரில் புகலி யுரிமையுற்று
நிவந்தாள் சிறிது சிவந்தா ளதுநிகழ்த் தப்பெரிது
சிவந்தாடன் ஞணம் விளர்த்ததெண் ஞளித் தெருவகத்தே.

பரத்தையர் உலகியனோக்கிவிடுத்தல்.

1619. கல்லுக வீங்கு புயத்தாய் பரம்பரன் காழியினீர்
செல்லுக வாய்மலர் கின்றவ ஞளுந் திருந்தறமே
வெல்லுக வெண்பவள் பூத்தன ளாம்விடை கொள்கசெல்க
புல்லுக பன்னிரு நாளுமப் பாலிங்குப் போதுகவே. (௪௬௬)

வரவுகண்டுவந்து வாயில்கள் மொழிதல்.

1620. இமைய மடந்தை புணர்ந்தும் விகார மிலாமுதல்வ
னமையமை தங்கு கயிலைப் பிரான்சண்பை நங்கையர்பச்
சமையமை தோடமூ விக்கிடந் தாலுநம் மாயிழையார்
சமைய மறிந்துத வுந்தகை யாலிவர் சான்றவரே. (சகூஎ)

தலைமகன்வரவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

1621. முன்மா றெழுகினர் பின்னடைந் தாலின்ப முத்திதரு
மன்மா தவர்பெரு மான்காழி வாழி மடமயிலே
பொன்மாலை மார்பர் புறத்தா றெழுகினும் பொற்பவந்தின்
றுன்மா ளிகைமுனின் றூரெதிர் கோட லுயர்வுறுமே. ()

தலைவனைத் தலைவி எதிர்கொண்டுபணிதல்.

1622. ஊடா துவத்தலி னுண்டாகு மின்பமுள் ளூடல்கொளில்
வாடா வவர்க்குக் குறையுள தோசண்பை வாழ்பரமர்
கூடா ரரணந் தழல்விளை யாடக் குறுநகைகொ
ளேடா ரிதழித் தொடையா ரருளென் றெதிர்கொள்வனே. ()

புணர்ச்சியின்மகிழ்தல்.

1623. காரார் குழலியு நாமும் புணரின்பங் காப்புகலி
யூரார் முதலு முயிரும் புணரின்ப மொக்குமெனி
லோரா ரொருதலை யின்பே யதுமற் றிருதலையுஞ்
சேரா மருவின்ப மீதெனில் யாதிணை செப்புவதே. (சஎ0)

வெள்ளணியணிந்துவிடுத்தல்.

1624. இருளுத யஞ்செய் மிடற்றூர் கழுமல மெய்தலர்சேர்
மருளுத யஞ்செய் மனத்தார் முலைவளர் மன்னவற்குத்
தெருளுத யஞ்செய்வெண் பூமணி தூசு செறித்தடைந்தாள்
பொருளுத யஞ்செய் ததுபுகல் வாளொரு பூங்கொடியே. ()

வெள்ளணியணிந்து விடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

1625. யான்செய் பிழையை நினைந்து மருமலின் றேன்செய்மொழி
மான்செய் விழிமயிற் கோதுக தீதுக வல்லரக்கன்
றான்செய் பிழைமறந் தொள்வாளு நாளுமுன் றந்தபிரான்
கூன்செய் பிறைமுடி யோன்காழி வாழி கொடியிடையே. ()

தலைவி நெய்யாடியது இகுளைசாற்றல்.

1626. கையா டியமழு வோன்காழி நாதன் கருணையினன்
மையா டியகண் மயின்மணி போல மகவுயிர்த்து
நெய்யா டியமெய் யினள்கா ணறிவ ணெடுந்தகைநீ
பொய்யா டியமட வார்ப்புல்லு நீத்திங்குப் போந்ததுவே. ()

தலைவன் தன்மனத்து உவகைகூர்தல்.

1627. நாம்பா லுணுமழ வாகா தருள்புரி நம்பர்தமைப்
பாம்பா லலங்கரிப் பார்காழி வாயென்று பார்ப்பதுவோ
யாம்பா லடுநெய் யவிர்மெய்ப் பசப்பு மலர்முகமுந்
தீம்பால் பொழிகொங்கை யும்மக வேந்திய செங்கையுமே. ()

தலைவிக்கு அவன்வரல் பாங்கியுணர்த்தல்.

1628. ஒளிர்பரை பானள் ளொருசே யுளார்சண்பை யூரரின்று
தளிர்புரை மெல்லடி யாய்பச் சுடம்புந் தவாமகவுங்
குளிர்தரு பால்பொழி கொங்கையுங் காணக் குறுகுபுநின்
மிளிர்திரு மாளிகை வாயினின் றுரிதென் விண்ணப்பமே. ()

தலைவியுணர்ந்து தலைவனொடுபுலத்தல்.

1629. மட்டார் கடுக்கை மலர்மாலை யார்சண்பை வாழுநல்லார்
விட்டார்கொ னம்மைப் புரப்பாரெவ் வாறிங்கு மேவவுடன்
பட்டா ரவர்க்கிம் மனைவாயென் னுண்டு பழந்தொடர்பு
கட்டார் மகவுண்டு நானுண்டு காலங் கழிப்பனன்றே. (௪௭௬)

தலைவி பாணனைமறுத்தல்.

1630. தோயு மகிழ்நர்மிக் கன்பினர் நீயென்னை சொல்லன்முல்லை
வீயு மருவும் பொலிதேத் தெருக்கலர் விற்கவந்தா
யேயும் பரமர்தென் காழியில் வீணை யிசைக்குங்கைபோல்
வாயுங் கொளும்புலைப் பாண்மக சேறியென் வாய்தல்விட்டே.

வாயில்மறுக்கப்பட்ட பாணன்கூறல்.

1631. தாயே தலைவற் புகழ்ந்தே னதற்கென் றலைதகர
நீயே கருங்கலை வீசினை வாருஞ்செந் நீர்முழுகி
யாயேகர் காழி யதுசெங்க லாயிற் றமையுமிதே
போயே விடுவல் விடாதோங் குகநின் புலவியதே. (௪௭௮)

விறலி வாயின்மறுத்தல்.

1632. சேவுந் திருமறை மாவுஞ் செலுத்துந் திறத்தர்வளம்
பாவும் புகலி யடையாரி லொத்ததிப் பாவியில்ல
மாவுந் துணர்ப்பொலங் காவுமொப் பாங்கொடை யாளரென்று
மேவும் பரத்தையர் சேரியிற் பாடு விறலிசென்றே. (௪௭௯)

கூத்தன் வாயின்மறுத்தல்.

1633. முடித்திடு வேணிப் பிறையான் புகலி முதல்வன்மன்று
ணடித்திடுங் கூத்தன்றி நோக்கேனின் கூத்து நடிப்பதற்குத்
துடித்திடு கூத்தன் மகனே யகறிநந் தோன்றலுக்குத்
தடித்திடு மின்பர் தருமாதர் நோக்குவர் தாழ்வின்றியே. ()

பாங்கி வாயின்மறுத்தல்.

1634. அளியுற்ற காழிப் பிரான்ரு யுருக்கொண் டடைந்துமிடைந்
தொளியுற்ற தெய்வச் சிராமலை மேவுத லோர்ந்தவரில்
வெளியுற்ற சேய்வயிற் றுள்ளுற்ற போதிங் கிருந்துசென்று
வெளியுற்ற போதுவந் தார்நல்ல ரேயவர் மெல்லியலே. ()

விருந்துடன்வந்துழிப் பொறுத்தல்.

1635. உன்னுமுன் னுள்ளத் துறைவார் புகலிநல் லூரர்வந்தா
ரென்னுமுன் செங்கு வளையியல் பட்ட விருகண்களு
மின்னுமுன் றாழ்நுண் மருங்குனல் லாட்கு விருந்தொடென்று
பன்னுமுன் னம்ம கருங்கு வளையியல் பட்டனவே. (சஅ௨)

விருந்தொடுவந்துழிப் பொறுத்தல்கண்டு தலைமகன்மகிழ்தல்.

1636. மருந்தென்று பேசு நகைபாகர் சண்பையின் முற்றியது
வருந்தென் றெனைவைத்த தீவினை நல்வினை வந்ததன்றே
விருந்தென்று கொண்டிலம் வீயாப் புலவியை வீப்பதற்கோர்
மருந்தென்று கொண்டனங் காண்போநம் மாதை மகவொடுமே.

விருந்துகண்டொளித்தவூடல் பள்ளியிடத்துவெளிப்படல்.

1637. அல்லார் களத்த னழலார் குளத்த னருட்புகலிப்
பல்லார் புகழப் படுவோயிப் பள்ளி பலர்தழுவு
மெல்லா ரொடுமென்னை யுஞ்சும வாதென் றிழிந்துநின்றாள்
கல்லார வோதி கருத்தென் விளைந்த கலாமென்னையே. ()

தலைமகன் சீறேலென்று அவன் சீறடிதொழுதல்.

1638. உணங்கா விளம்பொழிற் கூடற் பிரானுமை யூடற்கன்றி
வணங்கா முடித்தம் பிரான்காழி யூரன் மலரடிவீழ்ந்
தணங்கா வருத்தலென் வாய்முத்த நல்கி யருளுமெனக்
குணங்கா முறுமயில் கண்முத்த நல்கிக் கொதித்தனளே. ()

இல்லது எங்கையர்காணின் நன்றன்றென்றல்.

1639. அண்மையின் மேவலென் பொற்றனை பற்ற லடிபிடியல்
வண்மையி னீமகி ழப்பலர் பாற்கற்று வந்திலன்யான்
றிண்மைகொ டேவர் புகலியி னீயின்று செய்வதெல்லா
முண்மையென் றோர்ந்தெங்கை மார்வெகு ளாநிற்ப ருத்தமனே.

நின்னலது அங்கவர்யாரையும் அறியேனென்றல்.

1640. புல்லாது காலில் விழவுமெண் ணாது புழுங்கியெனைக்
கொல்லாது கொல்லுதல் குற்றமன் றோவெங் குருப்பரனைக்
கல்லாது வாடுநர் போனினைத் தாயென்னைக் காதனின்னை
யல்லா தொருவரை யும்மறி யேனுண்மை யாரணங்கே. ()

காமக்கிழத்தியைக் கண்டமைபகர்தல்.

1641. திருவன் புகலிப் பெருவீதி யிற்சிறு தேருருட்டு
மருவன் புறநம் மகவைக்கண் டாள்கட்டி மார்பணைத்தா
ளொருவன் புடனது நோக்கிநின் றுயிவ ளோரினிவள்
பொருவன் பினர்பல ரென்று ளயவொரு பூங்கொடியே. ()

தலைமகளைப் பாங்கி புலவிதணித்தல்.

1642. உழைபொறுக் குங்க ணொருபா லுறவு மொளிர்முடியோர்
மழைபொறுக் குங்குழல் வைத்தார் புகலிநம் மன்னரின்றுன்
னிழைபொறுக் கும்முலை சேர்வான் வருந்துத லெண்ணிலைமுப்
பிழைபொறுக் கும்புன லென்பது மோர்கிலை பெண்ணணங்கே.

தலைவி புலவிதணியாளாதல்.

1643. மாறுறு பாகத்தர் காழிநல் லார்கள்செவ் வாயினிய
தேறுறு நிம்பநெய் நாறுமென் வாயவர் செம்பொன்முலை
மேறுறு நல்விரைப் பான்மக வுண்டு மிழத்திரிந்த
பாறுறு மென்முலை யென்னிலொவ் வாதுன் பகட்டினுக்கே.

தலைமகள் தணியாளாகத் தலைமகனூடல்.

1644. மான்மே லெழுநஞ் சமுதா யதுசண்பை வள்ளலுக்குத்
தான்மேல் விழுந்து தழீஇநமக் கின்பந் தருமமுதங்
கான்மேல் விழுந்து கரைந்திரந் தாலுங் கனிதலின்றி
மேன்மேல் வருத்தும் விடமாயிற் றூனம் விதிவசமே. ()

பாங்கி தலைவனை அன்பிலைகொடியையென்றல்.

1645. பைதொட்ட நாகப் பணியார் புகலிப் பதியனையாள்
கைதொட்ட வேம்புங் கரும்பேயென் றீர்கட் கடைக்குறிப்பால்
வைதொட்ட வெங்கழு வாயேறி வைகவும் வல்லனென்றீர்
நைதொட்ட வன்ன டனியாகக் கண்டு நகைப்பிரின்றே. ()

பாங்கி அன்பிலைகொடியையென்று தலைவனையிகழ்தல்.

1646. ஆரோடு சொற்று மிளங்கன்றை நாடி யணைபசுப்போல்
வாரோடு விம்மு முலைபா லடிக்கடி வந்தருள்வீர்
நீரோடு கண்ணிமெய்ப் பீரோடு வாட நிமலர்சண்பைத்
தேரோடு வீதியு ளூரோடு மாதரிற் செல்லுவிரே. (௪௬௬)

பள்ளியிடத்துத் தலைவி புறங்காட்டக்கண்டு தலைமகன்கூறல்.

1647. அறங்காட்டி யென்னைப் புரப்பான் புகலி யனையவரே
நிறங்காட்டி யுங்கண் மதவேள் சினந்து நெடுஞ்சிலையின்
மறங்காட்டி நின்று சமராடு கால மதித்தெனக்குப்
புறங்காட்டி மெல்லிய லாரெனும் பேரைப் புதுக்கினிரே. ()

காமக்கிழத்தி வாயில்வேண்டல்.

1648. பிழையே செயினு நினக்கே பொறுத்தல் பெருங்கடன்வா
வுழையே யனையகண் ணாயெனைப் போலலை யூடனிறத்
திழையே புனையு மகவின்றுங் கோட லியல்புகொலுட்
டழையேத நீத்துத் தழுவரன் காழித் தலைவனையே. (௪௯௫)

தலைவி காமக்கிழத்தியோடு பகர்தல்.

1649. தண்ணார் புகலிப் பெருமானு மாயனுஞ் சம்புபல
கண்ணார் கரும்புங் கடூழங்கி லுங்கழை காமரமென்
பண்ணார் மொழிமயி லேயானு மேய பரத்தையரு
மெண்ணார் பணியுநம் மூரற்கு மாத ரிதுமெய்ம்மையே. ()

பாங்கி வாயினேர்வித்தல்.

1650. நீலம் பொலியும் விழியாய் புலவியை நீளவிட்டுத்
தாலம் பொலியுந் தலைவரை வாட்டுத றக்கதன்று
லாலம் பொலியு மிடற்றார்தென் காழிநல் லாடவருட்
சாலம் பொலியும் பொதுமாதர் தோடழு வாரெவரே. ()

தலைவி மகவோடுபுலத்தல்.

1651. உள்ளாய் பவருக் கொளியா யமரிறை யொண்புகலிக்
கள்ளாய் குழற்பொது மாதர்தம் பாற்செல்லுங் காதலரைத்
தள்ளா யழுதழைத் தொண்மார்பிற் சாந்தந் தழீஇயழித்துப்
பிள்ளாய் பிழைசெய்துள் ளாய்வந்த தாலொர் பெரும்பழியே.

மகற்கறிவுறுத்தல்.

1652 எழுந்தே பணைத்த முலையார் பொதுநல மெய்துபுதி
கழுந்தே சுடைத்திருத் தந்தையைச் சார்ந்துமுக் கட்பெருமான்
செழுந்தே மலர்ப்பொழிற் சீகாழி யிற்சிறு தேருருட்டுங்
கொழுந்தே யிதுபிது ராசார மென்றுபொய் கொள்ளற்கவே.

மகற்பழித்தல்.

1653. அம்பல வாணர் புகலிநல் லார்மென் றமைத்தபொதுத்
தம்பல மேவிற்றுன் வாயினுந் தந்தைமுத் தங்கொளலால்
வம்பல வாலென்றன் வாயினும் பூசவந் தாயுனோநல்
கும்பல மோமக னேயிது தானின் குலத்தியல்பே. (௫௦௦)

ஆயிழைமைந்தனும் ஆற்றாமையும் வாயிலாக வரவெதிர்கோடல்.

1654. போதுசெய் கூந்தற் புணர்முலை பாகர்தென் பூம்புகலிச்
சூதுசெய் கொங்கைப் பொதுமட வாரிற் றுறந்தின்றுசெந்
தாதுசெய் பூணிளஞ் சேயையுந் தோளிற் றழுவிவந்தீ
ரேதுசெய் தாலு மியம்புந ராரெம் மிறையவரே. (௫௦௧)

மணந்தவன்போயபின் வந்தபாங்கியோடு இணங்கியமைந்தனை இனிதிற்புகழ்தல்.

1655. களிமிகு மாமயிற் சாயனல் லாய்கடை யேனிதயத்
தளிமிகு வாழ்வுடை யோன்சண்பை யூரிற்றன் றந்தைதனை
யளிமிகு மாறு பொருமிப் பொருமி யழுதழைத்தா
ஞெளிமிகு ஞானசம் பந்தன்கொ லோவென் னொருமகனே.

தலைவி தலைவனைப் புகழ்தல்.

1656. பெரியோர் பவஞ்சங் கலந்தமர்ந் தாலும் பெரும்புகலி
யரியோர் விடைய ரலர்தாட் கலப்படைந் தேயமர்வர்
கரியோர் தடங்கட் பொதுமாதர் கொங்கைக் கலப்புறினு
முரியோர்நங் கொங்கைக் கலப்பின்று காறு மொழிந்திலரே.

பாங்கி தலைவியைப் புகழ்தல்.

1657. மாலே யனையநங் காவலர் மேவலர் வாழ்புரந்தீ
யாலே யழிய நகைத்தார்தென் காழி யமருநல்லார்
பாலே பயின்று வரக்கண்டு மேற்றருள் பண்பினிவள்
போலே பெருங்கற் புடையாரு முண்டுகொல் பூதலத்தே. ()

---

## கல்வியிற்பிரிவு.



கல்வியிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

1658. வேய்பவ ரேபுரை தோளிடை யாய்வெவ் வினைமுழுதுங்
காய்பவ ரேசொல் கழுமல வாணர் கலைமடந்தை
யேய்பவ ரேயென் பவருட னய்ந்த வினியகல்வி
யாய்பவ ரேயற மாதியொர் நான்கு மடைபவரே. (௩௦௫)

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

1659. ஓங்கற்ற வாவில் லுடையார் புகலி யுறுநர்முன்போய்த்
தாங்கற்ற யாவுந் தகவுரைத் தேயவர் தாமுணர்ந்த
தீங்கற்ற யாவுந் தெரிந்துகொள் வான்சென்று ளார்பணியக்
கோங்கற்ற மோருங் குவிமுலை யாய்நின் கொழுநரின்றே. ()

கார்ப்பருவங்கண்டு தலைவிவருந்தல்.

1660. வெறுத்துப் புரம்பொடித் தார்காழி யூரில் வெளியெழுந்து
கறுத்துச் சிலையும் வளைத்தம்பு தூற்றுங் கனமுளெழூந்
தொறுத்துப் படர்செயு மவ்வா றொருவ னொருத்தியெங்ஙன்
பொறுத்துத் தனியிருப் பேன்வர்ந்தி லார்கற்கப் போனவரே.

தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தல்.

1661. சந்தார் தடம்புயத் தார்தடங் காழித் தனிமுதல்வர்
முந்தா ரருளின்முக் குற்றமு நீங்க முழுதுணர்ந்து
பந்தார் வனமுலை யாய்திரு ஞானசம் பந்தரொத்து
வந்தா ரெனச்சொல வந்தது காணிம் மழைமுகிலே. ()

## காவற் பிரிவு.



காவற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

1662. தண்மலர் கோதை யொருபாகன் காழித் தனிமுதல்வன்
கண்மலர் நெற்றிப் பிரானரு ளானிலங் காவல்செய்வோ
ருண்மல ரச்சமைந் தாங்காங்குற் றுருயிர்க் கோட்டிலரேற்
பண்மலர் சொல்லினல் லாயுறு வார்பெரும் பாதகமே. ()

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

1663. அடிமலர் மீதுதன் கண்மலர் சாத்து மரிக்குநெடுங்
கடிமல ராழிதந் தார்காழி நாதர் கருணையினன்
முடிமலர் மாலைநம் மன்னவர் நீதி முறைப்படியே
படிமலர் காவல்செய் வான்சென்று ளாரின்று பைந்தொடியே.

தலைமகள் கூதிர்ப்பருவங்கண்டு வருந்தல்.

1664. மண்காவல் கொண்டவர் பெண்காவ னீத்தனர் வாடைவந்தென்
கண்காவல் கொண்ட திதற்கஞ்சி யேதிருக் காழிப்பிரான்
புண்காவல் கொண்ட மருப்புப் பொருப்புரி போர்த்துபுமெய்
யொண்காவல் கொண்ட தழனின்று மாட்ட மொழிந்திலனே.

தலைமகளைப் பாங்கியாற்றுவித்தல்.

1665. மூவலை யாறு திருப்புக லூர்குட மூக்குகணு
மேவலை யாதரிப் பார்காழி சூழ்பொழின் மென்பெடைகள்
சேவலை யாதரிக் குந்திற னோக்கித் திரும்பினர்மண்
காவலை யாதரித் தார்வாடை தீர்ந்தது கார்மயிலே. (ருகஉ)

## தூதிற் பிரிவு.



தூதிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

1666. கடல்சூழ் புவியி னிருபெரு வேந்தர் கலாமொழித்த
வடல்சூ ழரசர் குலத்துதித் தாருக் கறநெறிகை
விடல்சூழ் தாதெனை யாள்சண்பை நாதர் விரும்பருளான்
மடல்சூழ் துழாய்க்கண்ண னுந்தூது சென்றனன் மாமயிலே.

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

1667. கலிக்காம ருக்கும்வன் றொண்டர்க்கும் வந்த கலாமறவார்
கலிக்காழி நாத ரிடைநின்ற தேய்ப்பக் கறுத்துளத்தி
கலிக்கா சினியிற் பொருமிரு வேந்தர் கலப்புறுத்தக்
கலிக்கா மருகழன் மன்னர்சென் றாரின்று காரிகையே. ()

தலைமகள் முன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

1668. இருகா வலர்வெம் பகைதணிப் பான்றுணிந் தெய்தியகம்
மொருகா வலர்வந் திலர்வந் ததுமுன் னுறுபனியே
யருகா வலர்செறி யும்பொழிற் காழி யரனருள்பால்
பருகா வலர்திரு நீலகண் டத்தமிழ் பாடுவமே. (௫௧௫)

தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தல்.

1669. நீங்கா விருவர் பகைதணித் தேநெடுந் தேர்கடவி
நாங்கா முறுமன்னர் செங்கதிர் போல நணுகினர்பார்
வாங்கா வருள்கடை யேன்பாலும் வைத்தவம் மான்சண்பைவா
யேங்கா மெலியற்க முன்பனி செய்வதெ னேந்திழையே. ()

---

## துணைவயிற்பிரிவு.



துணைவயிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

1670. கூற்றா ருயிர்முன் குடித்தபொற் பாதன் குளிர்புகலி
யேற்றார் கொடியுடை யான்கயி லாயத் திளமயிலே
மாற்றா ரமருண் மெலியொரு வேந்தற்கு வான்றுணையாய்ப்
போற்றா ரிருந்து மிறந்தவ ரேயிப் புவியிடத்தே. (௫௧௭)

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

1671. குன்றார் வனமுலைக் கோமள மேநின் கொழுநர்நண்பு
பொன்றார் துணையெனப் போயின ராலிப் பொழுதிகலி
னின்றார் குறையும் புரமொரு மூவர் நிறைந்தபுர
மன்றார் முடிச்சண்பை யார்நகை நேருற்ற தையுறுமே. ()

தலைமகள் பின்பனிப்பருவங்கண்டு வருந்தல்.

1672. கட்டார் புனையுங் கருங்குழ லாய்நங் கணவர்தமை
நட்டார் துயரந் தணிக்கச்சென் றாரின்று நாமவர்க்கு
விட்டார்கொ னந்துயர் தீர்ப்பவர் யார்சடை மேன்மதியம்
பெட்டார் புகலிப் பொழில்சூழ் வளர்ந்தது பின்பனியே. ()

தலைவி பாணனைப் பாசறைவிடுத்தல்.

1673. கண்புடை யார்தரு நீரோடு பிருங் கலந்தொருயான்
பெண்புடை யார்சண்பை யுன்னூரில் வாடுதல் பேசிடுக
நண்புடை யார்தமைக் காப்பான் றுணிந்து நமைக்கைவிட்ட
பண்புடை யார்தங்கு பாசறை வாய்ச்சென்று பாணவின்றே.

தலைவன் பாணனைவினுதல்.

1674. தீராத காத லுடைப்பாண ரேநெடுஞ் சேரியொரீஇ
வாராத நீரெங்கு வந்தீர் மதிக்கும்வல் லாரறிவிற்
காராத வின்னமு தன்னூர்மின் னூர்மெய் யமலர்சண்பை[கே
யோரா தவரினென் சொன்னாள்பொன் னுணெழி லோரணங்.

தலைவனுக்குப் பாணன்கூறல்.

1675. வரும்போது தண்டனிட் டேன்விடை தாபெரு மாட்டியென்றே
னரும்போது கொங்கை யமர்பாகன் காழியன் னூர்புகன்றாள்
சுரும்போது பண்பொலி சோலைநல் லூரர் துணையிற்சென்று
பெரும்போது நீட்டித்த லாலுயிர் நீட்டிக்கும் பேறின்றென்றே.

தலைவன் பாசறைப்புலம்பல்.

1676. தனிவந்து கூடு மவர்க்கொளி யாம்பரன் சண்பையிற்பின்
பனிவந்து கூடும் பொழுதுணர்ந் தேங்கிப் பதைபதைத்திங்
கினிவந்து கூடுங்கொ லென்றழு மேயெழு மேவிழுமே
கனிவந்து கூடு மெழிற்கொம்பு போன்ற நறுநுதலே. (௫௨௩)

பின்பனிப்பருவங்கண்டு வருந்தியதலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.

1677. தன்பனி மாமலர்த் தாட்டா மரையென் றலைக்கணிவோன்
நன்பனி மால்வரை நங்கைபங் காள னகுபுகலி
யன்பனி மாசலம் போன்மணித் தேரி னடைந்தனனிப்
பின்பனி மாதரை சூழ்ந்தினி யாவதென் பெண்ணரசே. ()

---

## பொருள்வயிற்பிரிவு.

போருள்வயிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

1678. அல்லற வாள்விட் டவிர்மணி மாட மளாம்புகலி
நல்லற வாணர் பிரமலிங் கேசர் நகுமருள்சால்
சொல்லற வேதிய ராதியர்ச் சூழ்தரு சோர்வொழிப்பா
இல்லற மாமது பொன்னையல் லாதிய லாதணங்கே. (௫௨௫

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

1679. கல்லாரை யுட்குறி யார்மூறி யார்பொழிற் கச்சியுள்ளார்
வல்லாரை மேன்மஞ்சு துஞ்சுதென் காழி மடமயிலே
புல்லாரை வாட்டுநங் காவலர் யாவரும் போற்றலின்றி
யில்லாரை யெள்ளுவ ரென்றூர் பொருள்குறித் தேகினரே.()

தலைவி இளவேனிற்பருவங்கண்டு வருந்தல்.

1680. மனவாசை நாயிற் கடையேற் கொழித்து வழுத்தடியா
ரினவாசை மேவவைத் தோன்காழி சூழ்பொழி லின்றளிர்கள்
தினவாசை போர்த்த திளவேனில் வந்திலர் செல்வரின்னுந்
தனவாசை யுற்றவர்க் கெவ்வாசை யுண்டுகொ ளுழ்குழலே.()

தோழி தலைவியை ஆற்றுவித்தல்.

1681. பரவலர் தூய்வழி பாடுசெய் யேற்கும் பதமளிப்பா
ரரவலர் செஞ்சடை யார்காழி நாயக ராரருளா
லிரவல ரேத்த வினவலை யார்ப்ப விருநிதிசால்
புரவலர் வந்தன ராலிள வேனிற் பொலிவுணர்ந்தே. (௫உ௮)

தலைமகன் தலைமகளது உருவுவெளிப்பாடுகண்டு கூறல்.

1682. பொன்னென்று மேனியன் சீகாழி நாதன் புரிந்தசடை
முன்னென்று பாதிப் பிறையு நிறையு முழுமதியும்
கொன்னென்று மேகமுங் கோபமுஞ் சாபமுங் கொண்டுபொலி
மின்னென்று பார்க்குந் திசைதொறுந் தோன்றும் வியப்பிதுவே.

பாசறைமுற்றி மீண்டு ஊர்வயின்வந்த தலைவன் பாகற்குரைத்தல்.

1683. ஈறென்ற தாதியொ டில்லான் புகலி யிகல்வலவா
வாறென்ற காலுமூ தார்ப்புயத் தாயிவ் வவிர்மணித்தே
ரேறென்ற நீயங் கிருக்குமுன் னேயிங் கிறங்கு கென்றாய்
மாறென்ற நீருநின் கைகாலென் றேயுண் மதித்தனனே. ()

தலைமகளோடுகூடியிருந்ததலைவன் கார்ப்பருவங்கண்டு மகிழ்ந்துரைத்தல்.

1684. அந்தா மரைமுகத் தாயிழை யார்த மலர்முலைக
ணந்தா தரத்தி னகன்மார் பழுந்திட நன்குதழீஇச்
சந்தாபந் தீர்ந்து தழைத்தனம் யாமினிச் சண்பையெங்கள்
சிந்தா மணியருள் போற்பொழி வாழி செழுமுகிலே. (௫௩௧)

சீகாழிக்கோவை முற்றிற்று.

---

ஆபத்துக்காத்தவிநாயகர்துணை.

---

## குளத்தூர் - ச. வேதநாயகம்பிள்ளையவர்களியற்றிய

## சிறப்புக்கவிகள்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1685. வாதவூ ருதித்தந்நா டிருக்கோவை யுரைத்த மாணிக்க வாசகரே சிரபுரத்தி லிந்நா, ளாதவனிற் றோன்றிமீ னாட்சிசுந் தர னென் றரும்பெயர்பூண் டொருகோவை யறைந்தனர்கா ழிக்கே, யேதமில் லைக்கோவை யாயுவதின் மூத்ததென் னினுங்கற் பனை நயத்தி லிக்கோவை முன்னும், மூதறிஞர் வைகலும் பாடப்பாட வாக்கின் முதுமைகொள்வா ரெனவுலக மொழியுமொழி மெய்யே. (க)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1686. திருவமர்கோ வையைமகிழ்ந்து வாதவூ ரரைத்தன்பாற் சேர்த்துக் கொண்ட, பொருவில்சிதம் பரநாதன் பின்னுமொர்கோ வைக்காசை பூண்டன்னுரை, மருவுசிர புரத்தின்று மீனாட்சி சுந்தரப் பேர் வழங்கிக்காழிக், கொருகோவை செய்வித்தான் * சிதம்பரநா தன்சேயென் றுரைத்தன்மெய்யே. (உ)

1687. பிரமபுரத் தீசர்மேன் மீனாட்சி சுந்தரமால் பெட்பிற் செய்த, வரமுறுகோ வையைக்கேட்போர் மகிழுவரஞ் சுவன்றமி யேன்†வள்ளி னிற்கேட், டரவரசு சிரமசைக்கிற் றரையசையும் வரை யசையு மசையு மாழி, மரமசையு மனையசையு மன்னுயிரெ லாமசை ந்து வருந்துமென்றே. (௩)

1688. குற்றமில்சீர் மீனாட்சி சுந்தரவா ரியநின்னைக் கோயின் மேவ, நற்றவமென் செய்தன்னை மகடமிழ்செய் தவமெவனீ நவிலு மேன்மை, யுற்றதிருக் கோவைபெறப் புகலிசெய்பாக் கியமெவனவ் வுயர்நூல் கேட்கப், பெற்றவென்போ லியர்புரிந்த மாதவமென் னோ துறுவாய் பெருமை மிக்கோய். (௪)

1689. வித்தகமார் மீனாட்சி சுந்தரவே ளே‡யொருநூல் விளம்பு மென்னைப், புத்தமுதார் நின்வாக்காற் றுதித்தனைநீ பாடி யதிப்பொருளா லொன்றோ, வெத்தனையோ கோவைகண்மற் றெத் தனையோ புராணமின்னு மெண்ணி னூல்க, ளத்தனையு மித்தனை யென் றெத்தனைநா ளிருந்தாலு மறையப்போமோ. (௫)

1690. பன்னூலு மாய்ந்தாய்ந்தோர் பயனுறா துளம்வருந்தும் பாவலீரே, நன்னூலோர் மீனாட்சி சுந்தரமா லொருகோவை நவின் றான் காழிக், கந்நூலு ளொருபாவி லோரடியி லொருசீரை யாய்வீ ராயி, னெந்நூலுங் கற்றவரா யிகபரமும் பெற்றவரா யிலகுவீரே. (௬)

---

* இந்நூலாசிரியருடைய தந்தையார் பெயர் சிதம்பரம்பிள்ளை யென்பது.
† வள் - காது. ‡ ஒருநூல் - நீதிநூல்.

1691. பரமசுக மறியாதார் சிற்றின்பம் பெரிதென்னும் பான்மை போல, வுரமுறுமுற் கோவைகளே சிறந்தவென வின்றளவு முன்னினோர், தரமுறுசீர் மீனாட்சி சுந்தரப்பேர்த் தமிழ்ப்புலமைத் தலைமை யோன்சொல், பிரமபுரக் கோவையே பரிதியக்கோ வைகளுடுக்கள் பேசி னெஞ்சே. (எ)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1692. தண்டமிழூன் பாலுணர வாசைகூ ரனந்தன் றனமீய வகையின்றி நின்சேடனாகிக், கொண்டனனந் நாமமே யகத்தியன்றான் றன்னைக் கூடாம லுனைமேவிக் குலாவுதமி ழுதனை, யண்டலரின் முனிந்ததனாற் றமிழ்முனிவ னெனும்பே ரடைந்தனனு தலினைலத் தியாவருனை நிகர்வார், வண்டமர்தார் மீனாட்சி சுந்தரவே ளேநீ வளப்புறவக் கோவைசொலின் வியப்பவரா ரையா. (அ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1693. இன்பாவிற் கோவைசொன்ன மீனாட்சி சுந்தரப்பேரிறைவ யானு, முன்பாவிற் கவிசொல்வே னென்கவிபார்ப் போரிதைமீண் டோரா தான்றோர், முன்பாச்சொ னூல்களையே துதிப்பருன்பாவுணர்வோர்கண் முன்னோர் நூலைப், பின்பாகச் சொலிவெறுப்பர் நல்லவனீ யோயானோ பேசு வாயே. (௯)

1694. விண்ணேறு மாதவனேர் மீனாட்சி சுந்தரவில் வேளேநீசொ, லெண்ணேறு கோவையினைப் புகழ்யான் றிறமில்லேனெனினு முன்சீர், மண்ணேறும் வானேறு மதியினர்த நாவேறும் வகையா லுன்னைக், கண்ணேறு மேவாமற் கறையேறு மென்புகழுங் கைக்கொள் வாயே. (௧௦)

1695. நலம்விளக்கு மீனாட்சி சுந்தரமா லொருகோவை நவின்றன் சண்பைத்,தலம்விளக்க வவற்குநாம் புரிகைம்மா றெவனழியாத் தனமே கங்கா, குலம்விளக்குங் கற்பகமே குருமணியே திருவணியே குணக்குன் றேயிந், நிலம்விளக்குந் தினகரனே யெனவவனை வாழ்த்திடுவாய் நிதமு நெஞ்சே. (௧௧)

வேறு.

1696. சொல்வள முறுமீ னாட்சி சுந்தரப் புனிதன் சொல்லு
நல்வள முடைய கொச்சை நகர்த்திருக் கோவை யாயிற்
பல்வள முடையே ஞானம் பதிவள முடையே மாலை
வெல்வள முடையே மின்ப மிகுவள முடையே நெஞ்சே. ()

வேறு.

1697. விதியெதிரி லரிமுதலோர் புகல்புகலி யீசரே விண்ணோர் மண்ணோர், துதிபொதிபல் பாமாலை பெற்றிருப்பீர் மீனாட்சி சுந்த ரப்பேர், மதிமுதியன் கோவையைப்போற் பெற்றீர்கொ லிக்காழி வைப்பி னீதி, யதிபதிகா மெனவறிவீர் நம்முன்னஞ் சத்தியமா வறைகு வீரே. (௧௩)

1698. நம்மாலே பெரியமெனன்னும் வைணவரே சுரர்க்கமுத நல்கச் சென்று, நும்மால்வெண் மேனிகரு மேனியா னுனார்தா நுகர வேண்டி, யெம்மாலா மீனுட்சி சுந்தரவேள் கோவையமு தீந்து சீர்த்தி, வெம்மாலில் விறலிவற்ருல் வெண்மேனி செம்மேனி விரவி னுனல். (கச)

1699. காஞேடு மிளிர்தாரான் மீனுட்சி சுந்தரமால் காழிக் கோவை, தேஞேடு பாலோடு நிகருமவன் பிரதாபஞ் சீர்த்தி யோங்கி, வாஞேடு மண்ஞேடு மற்ருேடும் வகையின்றி வடிவி ரண்டாய், மீஞேடு வான்றிரியும் பானுமதி யென்றுலகோர் விளம்பு வாரால். ()

1700. தண்டமிழ்மூந் நீர்பருகி மீனுட்சி சுந்தரப்பேர்த் தரு மக் கொண்ட, ஞெண்டர்கள்சூழ் சிரபுரத்திற் பொழிகோவை யெனு மமுதத் தூய மாரி, மண்டலமும் விண்டலமுங் கரைபுரண்டு திரை சுருண்டு வருத ஞேக்கி, யண்டர்தொழும் புகலியிறை தோணியுற்ரு னஃதின்றே லமிழ்ந்து வானே. (கரு)

1701. தேவேநோர் மீனுட்சி சுந்தரக்கோ ஞெருகோவை செப் பிப் பாரிற், ருவேயில் புகழ்படைக்கி னமக்கென்ன வவற்குமவன் றமர்க்கும் பாடாம், நாவேகா தேமனனே யவன்சீரைச் சொலிக் கேட்டு நனியிங் குன்னி, யோவேயி லாதருங்கா லங்கழித்தீர் பிறவினே மற் ஞெுன்றி லீரோ. (கள)

1702. அரியவமு தொருங்குகவர்ந் தசுரரைவஞ் சித்தவிண் ஞெட் டவரே மேன்மைக், குரியவனு மீனுட்சி சுந்தரமால் கோவை யமு துவந்தீந் தானுந், தரியலர்பெற் றிடினவரை வெலலரிது விரை வினீர் தாய தைக்கொண், டரியயன்சூழ் புகலியிறைக் கர்ப்பணஞ் செய் துண்டுய்மி னுவி தானே. (கஅ)

1703. நல்லார்க்கு நல்லவனு மீனுட்சி சுந்தரவே ணவின்ற கோவை, யில்லார்க்கு நிதிதுறவா வில்லார்க்கு விதிபுவிவாழ் வெல்லா நீத்த, வல்லார்க்குத் திதிஞானங் கல்லார்க்கு மதிவேலே வைய கத்திற், பல்லார்க்குக் கதிபுகலிப் பதியார்க்குத் துதியதன்சீர் பகர்வோர் யாரே.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

1704. தேமாரி பொழிபொதும்பர்த் திருக்காழி யிறைமுன் றிகழாண்டு சித்தார்த்தி திங்கள்பாத் திரத்திற், பூமாரி சுரர்பொழியச் செல்வர்பலர் கூடிப் பொன்மாரி மிகப்பொழியப் புலவர்குழாந் துதித் துப், பாமாரி நனிபொழியப் பல்லியங்கண் முழங்கப் பலம்புரிய நலம் புரியும் வலம்புரிமண் டபத்துத், தூமாரி யெனப்புகலிக் கோவை யைமீ னுட்சி சுந்தரப்பேர் மதிவல்லோ னரங்கேற்றி னுனே. (உ௦)

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவிடைமருதூர் உலா.



## ஆண்டபிள்ளையார் துதி.

1705. சீருலா வான்றோர் செவிக்க ணிடைமரு
தூருலா வேற வொளிதரும்பை - யேருலவப்
பூண்டமா தங்கமதுப் பூங்கொன்றை யாரளித்த
வாண்டமா தங்க மது.

## நூல்.

1706. கலிவெண்பா.

1 பூமேவு நான்முகத்துப் புங்கவனுஞ் செங்கமல
மாமேவு மார்பமணி மாயவனுங் - கோமேவு

2 மிந்திரனும் வானோரு மேனோரு மின்பமுற
வைந்துதொழி லாற்று மருட்கொண்மூ - வைந்துதொழில்

3 சந்ததமுஞ் செய்துந் தனக்கோர் தொழிலில்லா
னந்த மலையரைய னன்கீன்ற - சுந்தரப்பொற்

4 கன்னி யொருபாற் கலந்தும் விகாரமிலான்
முன்னியெவற் றுந்தோய்ந்துந் தோய்விலான் - முன்னியமண்

5 ணாதியுரு வெட்டுமெத்து வாவுருவோ ராறுமிருண்
மோதிய வைந்தொழிற்கு மூலமாய்ச் - சோதி

6 யுறுமுருவொன் பானுமுற்று மோருருவு மில்லான்
மறுவின்மறை யாதி வகுத்தோன் - பெறுநெறியே

7 யாமுயிர்க்கே யின்ப மருத்தி நெறிதப்பிப்
போமுயிர்க்கே துன்பம் புணர்த்துவோ - னாம

8 விருள்கே வலத்தி னிணர்த்தருவிற் றீயாய்த்
தெருள்சே ரிடையிற்கற் றீயா - யருள்சேருஞ்

9 சுத்தத்திற் காரிரும்பிற் றோய்தீயே - யாய்கிற்போ
னெத்தத் துவங்கட்கு மெட்டாதான் - முத்தன்றன்

10 வாமத்தைப் பூமேவு மாதர்கடொட் டேப்புனைய
நாமத்தைச் செய்விடமுன் னாளயின்றோ - னேமத்தன்

11 சொல்லமுதைப் பாகுவந்து தோயவைத்தோன் கைப்பகழி
வில்லமர்பூ நாரிதனை மேவவைத்தோ - னல்லம்

12 சிறுவிதியா கத்திற் றினகரற்கு முன்னங்
குறுகிருள் கூடவைத்த கோமான் - றெறுபசியால்

13 வந்தழுத சேயின் வருத்தந் தெரிந்தமுது
தந்தமடைப் பள்ளி தனைக்கொடுத்தோன் - கந்த

14 மலர்மலரென் றுன்னு மதன்மெய் குளத்து
ளலர்கட் கமலத் தழித்தோன் - பலர்வெருவத்

15 தோற்று தொழினஞ் சுதந்திரமன் றென்றெண்ணுக்
கூற்றுயி ருண்ட குரைகழலான் - சாற்றும்

16 பிரணவத்துண் மேயோர் பிரமன்மா லென்பார்
முரணவிக்குங் கொன்றையந்தார் முன்னோ - னரணவரை

17 மண்வைத்த குக்கி வளைவைத்த செங்கைமால்
கண்வைத்துங் காணுக் கழலினு - னெண்வைத்துக்

18 கண்கை யிடந்துகொலை கண்ணுபு கொள்ளாமல்
வண்கையிடங் கொண்டவசி வாய்ப்படையா - ஞெண்கவினூர்

19 தன்னிரதம் பாதலத்துத் தான்புக் கழுந்தாமன்
மன்னிரத நீர்வேணி வைத்தபிரான் - றுன்னுகணை

20 வாளியெளி தீர்தரப்பின் வாளிலங்கை மன்னனைமுன்
றாளின் விரனுதியாற் றனடர்த்தோ - னாளும்

21 புணரு மடியார் புரிபிழையு மேனோர்
குணமு மிகந்தகுணக் கோமான் - மணமலிபூங்

22 காவின்மயி லேத்தவரு கண்ணரைமா லென்றுமினைத்
தோவினடஞ் செய்கயிலை யோங்கலிடை - மேவிநல

23 மாவித் தகத்து வயங்கா கமமுழுதுந்
தேவிக் குபதேசஞ் செய்தருள - மாவிற்கண்

24 ணன்னமயின் மண்ணுலகை யான்றெரியு மாகாட்டி
யின்னலற நீவீற் றினிதிருக்கு - நன்னயவி

25 சேட தலமுந் தெரித்தருள வேண்டுமெனச்
சூடகச் செங்கைத் துணைகூப்ப - வாடமைத்தோ

26 ணங்காய்நன் றென்று நரையேற்றின் மீமிசைமற்
றங்கா தலியோ டமர்ந்தருளிப் - பங்காளுங்

27 கோதாய்காண் கென்று குவலயமுற் றுந்தெரித்து
மேதா வியர்புகழு மேன்மைபுனை - போதாருங்

28 காவிரியுங் கோட்டுவௗக் காவிரித்தென் பாற்பொலியும்
வாவி யிடைமருதூர் வாய்மேவ - வோவியனேர்

## தலவிசேடம்.

29 மின்னையு மாதவனும் வேதனுங் காணாத
தன்னையு நாடிவந்த தன்மைபோற் - பன்னுபுகழ்

30 வாகீசர் போல வருந்தித் தமிழ்நாட்டீ
ரேகீ ரெனவந் திருத்தனுபோல் - வாகார்

31 திருப்புவன முற்றுஞ் செழுமறைகள் யாவும்
விருப்புமிக நின்றேத்தும் வெள்ளிப் - பொருப்புப்

32 பெருவளவர் நாட்டின் பெரும்புண் ணியத்தா
லொருமருத மாகியவ னுற்ற - தருமையத

33 னன்னிழற்கண் வானி னரையேற் றிணைநிறுவித்
தன்னிட நீங்காத் தலைவியைப்பார்த் - தின்னகையாய்

34 மேவுறு நன்பூ மிகவுகுத்து விண்ணுலகைப்
பூவுல காக்கும் பொழில்பாராய் - தாவிமிசைப்

35 பொங்கவுரி ஞிப்பொற் பொடிவீழ்த் துபுமண்ணைப்
பங்கமில்பொன் னாக்கும்விட பம்பாரா - யெங்குநின்மெய்க்

36 காமரொளி பாய்தலிற்கார் கால மெனக்கருதி
மாமையினன் காடு மயில்பாராய் - பூமருநஞ்

37 சேயொளியாற் பைந்தழைகள் சேப்புற வேனிலென்று
கூயமருந் தேமாங் குயில்பாராய் - மேயவிரு

38 நம்மேனி யொன்றியென நன்கொருபாற் சேந்தொருபாற்
பைம்மேனி யாமாம் பழம்பாரா - யம்புலிக்

39 கான்முனிதன் மைந்தன்முதற் காணு முழுமுனிவர்
மான்முதனீத் தாற்றிடுத வம்பாராய் - பான்மொழியே

40 யென்றுகாட் டத்தனிகா ணெவ்வுலகு மீன்றுளுக்
கொன்றுமகிழ் வாற்க ணுறைதுளிப்ப - வன்றதுமுற்

41 காணுந் திசையோடிக் காருணி யாமிர்தமென்
பூணும் பெயரிலகப் பூண்டதன்மேற் - கோணிலவு

42 சூடியதன் கண்கள் சொரிநீ ரிருகூறு
யோடி வடமேற் குதக்கெதிருங் - கூடுதடத்

43 துட்போய் விழுமு னுலர்ந்த சலசரங்கா
ணட்பாம் விதிக்கு நறுந்தடத்துப் - பெட்பா

44 முருத்திர ராகியெழுந் தொண்மலர்த்தாள் போற்றிப்
பெருத்தசிவ லோகமுற்ற பின்னர்த் - திருத்தவண்வாழ்

45 தண்முனிவர் முண்பு தமிழ்மணக்குஞ் செங்கனிவாய்
வண்முனிவன் வந்துதவ மாமுனிவீர் - கண்ணுருமூன்

46 றுற்றபுகழ்ச் செய்யகரும் புங்கையுறும் பைந்தோகை
பற்றி முயலுமென் றப் பாற்போக - வெற்றி

47 முனிவரரவ் வாறெம் முதல்வியை நோக்கிப்
புனித தவம்புரியும் போது - கனிமகிழ்ந்து

48 தன்னே ரிலாத தலைவியை முன்புகுத்த
வன்னோர் குழலு மவணடைந்து - பொன்னோர்

49 வளவர்பெரு மானுடு மாதவத்த தென்ன
வளவிலா மாதவமங் காற்ற - வுளமகிழ்வுற்

50 றெம்மா லயன்முன்போ லின்றுஞ் செருக்கடைந்தா
ரம்மாவென் றியாரு மதிசயிப்ப - விம்மானன்

51 மேதினி நின்று வெளிமுகடு மூடுருவச்
சோதியுருக் கொண்டெழுந்து தோன்றினோன் - நீதிலரு

52 ளானேயென் றேத்து மவர்தெளியு மாறுதன்னைத்
தானே யருச்சித்த தம்பிரான் - வானுட

53 ராதியர் காமிகமுன் னுமா கமத்தின்வழி
யோதியருச் சிக்க வுவந்தருள்வோன் - போதியனீர்

54 காகம் படியக் கனகவுரு நல்கிப்பி
னேக வுருத்திரமெய் யெய்தவைத்தோன் - கோகநக

55 மாண்டமல ராதிகொடு மன்னு கமத்தின்வழி
யாண்டமத வேழ மருச்சித்தோன் - பூண்டதவத்

56 தோதை கெழுசீ ருரோமசற்கு வெற்பீன்ற
கோதையொடு காட்சி கொடுத்தபிரான் - மேதை

57 யொருவீர சோழ னுளிரா லயமும்
வெருவா நகரமுஞ்செய் வித்துத் - திருவார்தைத்

58 திங்கட் டிருநாளுஞ் செய்வித்துப் போற்றிசெய
வங்கட் கருணை யருளியகோ - னங்கண்மிரு

59 கண்டு மகன்பணியக் கண்டொரு பாற்பசுமை
கொண்டுமிளிர் காட்சி கொடுத்தகோன் - றண்டாப்

60 புரவுக் குறுமுனியெப் போதுறுமென் றன்னன்
வரவுக் கெதிர்பார்க்கும் வள்ளல் - பரவுற்ற

61 பூசைவினை முற்றுவந்து புண்ணியச்சு கீர்த்திதனக்
காசில்வினை யெச்ச மளித்தபரன் - காசிபன்றன்

62 கண்ணனிள மைக்கோலங் காணத் தவம்புரிய
வண்ணலது காட்டுவித்த வைம்முகத்தோன் - வண்ணக்

63 குமரன் முனிவரொடுங் கூடியரன் றிக்கி
லமர நதியை யமைத்துத் - தமரமிகப்

64 பூசிக்கப் பெற்றோன் புகழிட்ட ரோமன்சு
தேசிக் கினிய கிளர்மதலே - வீசி

65 யனையமகன் கங்கைபுகுந் தாடுறுபோ தந்த
நினையுநதி யோரா நெறிக்கொண் - டினையலென

66 வென்னைப் புரப்பாள்க ணீர்ம்புனல்வா விக்குள்வரக்
கொன்னைக் குழமகனுங் கூடவந்து - முன்னையொரு

67 வாவிபடிந் தையாற்று வாவியிடைச் சொல்லரசர்
மேவியெழுந் தென்ன வெளிவந்து - கூவிவரு

68 மத்தனொடு கூடி யடிபோற்றி யேத்தெடுப்பச்
சித்த மகிழ்ந்தருளிச் செய்தபிரா - னுத்தமச்சீர்

69 வாய்த்த தசரதற்கும் வண்பூவைப் பூவைநிறஞ்
சாய்த்தவுடற் கண்ணனுக்குந் தானுவந்து - பூத்த

70 மதலைபல நல்கி வழிபட்டா ரென்று
மதலைபல நல்கிய வள்ளல் - சுதமில்

71 புகழிரா மன்கணையாற் பூந்தடமொன் றாக்கித்
திகழ வழிபாடு செய்ய - மகிழ்சிறந்தோன்

72 மச்சகந்தி யைப்புணர வந்த வருவருப்பை
மெச்சும் பராசற்கு வீட்டினோ - னச்சமிலா

73 தாசா னிலாட்புணர்ந்த வாசுங் கலைக்குறைவுந்
தேசார் மதிவணங்கத் தீர்த்தருளு - மீச

74 னினைத்தொருதீர்த் தத்தி னிமிமகன்க ண்டப்பு
ணனைத்தவுடன் காயவைத்த நாதன் - வினைத்திறனோ

75 டைவரு நீர்தோய்ந் தடிபணிய மண்ணளித்த
தெய்வப் பெருமான் சிவபெருமான் - குய்யம்வைத்து

76 வேந்தன் வலற்செகுத்த வெம்பழிக்கும் பாகனைக்கொன்
றேந்துபழிக் கும்பழிச்ச வீறுசெய்தோன் - போந்துதழல்

77 காண்ட வனத்தைக் கலந்தவுயி ரோடுண்ண
வீண்டரின்முற் றும்பரவ வீடழித்தோன் - மாண்ட

78 குறுமுனி கண் களிக்கக் கூற்றுவி மேவி
மறுவி லகோரவுரு வாய்ந்தோ - னுறுசீர்

79 நிருதிதடந் தோயு நியதியரைப் பேய்முற்
கருதியடை யாவண்ணங் காப்போன் - சுருதி

80 நடையார் வருண னறுநீர் படியக்
கடையார்சோத் தீப்படியக் கண்டோ - னடையுங்

81 கிருகலன்கா னீர்மூழ்கிக் கேடிலா முத்திப்
பெருமுழுநீர் மூழ்கவைத்த பெம்மான் - வருமொருதன்

82 றேழுழன் றடம்படியுந் தூயோரை மற்றவனுந்
தாழ வுயர்த்துந் தனிமுதல்வன் - வாழ்வடைவா

83 னேகாமார்க் கண்டமுனி யீசான நீர்மூழ்கச்
சாகா வரங்கொடுத்த தண்ணளியோன் - வாகான

84 கண்ணன்கூ வத்துக் கருதிமழைக் கோண்மூழ்கக்
கண்ணன் களித்தருளுங் காபாலி - கண்ணுவணம்

85 பண்ணிய தீர்த்தமுதற் பத்துந்தோய் வார்பிறப்பை
மண்ணி யருளு மகாலிங்கம் - புண்ணியமே

86 மேவவளர் கச்சபனு மெய்ம்முனிவன் மூன்வாம
தேவவுருக் கொண்டெதிர்ந்த தேவர்பிரா - னேவறமுன்

87 கோதமதீர்த் தந்தோய் குணத்தா லகலிகைக்கு
வாதனைப்பா டாணவுரு மாற்றுவித்தோன் - போதலர்கல்

88 யாணதீர்த் தங்கார்க்கோ டன்படிய முன்பரிச்சித்
தேனைறத்தீண் டிக்கொள்பழிக் கீறுசெய்தோ - னீணிலஞ்சே

89 ரந்த நறுந்துறைபுக் காடுநள னுக்குச்சி
வந்த கலியைக்கறுத்து மண்கொடுத்தோ - னந்துமதில்

90 வெள்ளை முழுகவொரு வேதியனைக் கொன்றபழிக்
கள்ளக் கறுப்பகலக் கண்சிவந்தோன் - றள்ளரிய

91 சீர்த்திப் பகீரதனத் தீர்த்தம் படியநலங்
கூர்த்தவான் கங்கை குவலயத்தி - லார்த்துவரச்

92 செய்தோ ரறுப திணையிரரு முத்தியுல
கெய்தா விருக்க வினிதளித்தோன் - வையகத்துப்

93 பொல்லா னொருவன்வந்தப் பூசத் துறைபடிய
வல்லார் மெய்க் கூற்றவனுக் கஞ்சவைத்தோன் - சொல்லுமந்நீர்

94 வல்லா னெனச்சேடன் வந்தாட மண்சுமக்கும்
வல்லா னெனச்சொல் வலியளித்தோ - னல்லார்

95 திகழத் துறைகந்த தீர்த்தமெனக் கந்தர்
புகழூற்று டக்கருணை பூத்தோ - னிகழ்வற்ற

96 வத்துறையில் வேந்த னயிரா வதமுனிவன்
வைத்தசா பங்கழுவ வைத்தவருண் - முத்த

97 னொருகோட் டியானை யுவந்தாடித் தன்பே
ரிருகோட் டதற்கிடவுள் ளேய்ந்தோ - னொருவீர

98 சேனன் படியச் செறிபிர மக்கொலைதீர்த்
தீனமிலா வான்கைலை யேற்றினோன் - மானமிகு

99 சித்திர கீர்த்தி செறிந்துபடிந் தர்ச்சிக்கப்
புத்திரனை நல்கும் புகழாளன் - சுத்த

100 மறையோன் கனகதடம் வந்து படியக்
குறையார் குருடொழித்த கோமா - னிறையோனும்

101 விண்ணுலகை யாளமரர் வேந்தன் முடிதகர்த்து
மண்ணுலகை யாளும் வயவேந்தன் - றண்ணளிசேர்

வரகுணபாண்டியதேவர் வழிபாடு.

102 மன்னன் மதுரை வயங்கு வரகுணத்
தென்னன் பெருங்கானஞ் சென்றொருநாண் - முன்னுகடு

103 மாவேட்டஞ் செய்துவய வாம்பரிமேன் மீள்பொழுதோர்
தீவேட்ட வேதியனைச் செல்வழியின் - மேவி

104 மயங்கிக் கிடந்தகன வட்டத் தடியா
லுயங்கிக் கழிய வுணரா - னயங்கெழுசீர்

105 பெற்றதன்னூர் மேவப் பிரமக் கொலைதொடர
வுற்றதெவை யாலு மொழியாம - னற்றவர்சூ

106 ழாலவா யண்ண லடிபோற்ற வக்கடவு
ளேல விடைமருதூர்க் கேகென்னச் - சாலமகிழ்

107 பூத்தனையான் வந்து புகுபோதே யப்பழியைத்
தீர்த்தருளிச் செய்திடவத் தென்னவனு - மாத்தலமா

108 மித்தலத்தை நீங்கே னெனவங் குறைந்திடுநா
ளத்த கொடுமுடி யாவரணம் - வித்தகமாய்ச்

109 செய்தகு மென்று திருவாய் மலர்ந்தபடி
செய்துசூழ்ந் துங்கரவு தேரொருவன் - செய்யநுதல்

110 வெண்ணீறு கண்டு விசித்தகடுங் கட்டவிழ்த்து
நண்ணீ றிலாதபொரு ணன்களித்து - மெண்ணிநரி

111 யுள்ளன வெல்லா முடையானைக் கூவியவென்
றெள்ளரிய வாடை யினிதளித்தும் - விள்ளாத்

112 தவளை யரமுழக்கந் தான்செய்த தென்று
திவண்மணிபொன் வாரிச் சிதறி - யுவகையுற்று

113 மெள்ளுண் டவன்வா யிசைத்தமொழி கேட்டனையான்
றள்ளுண்ட வெச்சி றனைநுகர்ந்துங் - கொள்ளா

114 விழிகுல்த்தோன் சென்னியவ்வூ ரெல்லைகிடக் கக்கண்
டிழிகணீ ரோடுகரத் தேந்திக் - கழிவுற்

115 றடியேன் றலையுமிவ்வா ருகியிவ்வூ ரெல்லைக்
குடியாமோ வென்றிரக்கங் கொண்டும் - படர்தளிமுற்

116 புன்குல நாய்மலந்தன் பொற்பூங்கை யாலெடுத்து
நன்குறவேம் பிற்குவிதா னஞ்சமைத்து - மன்புமுதிர்

117 பொன்னு நிகராப் புணர்முலைத் தேவிதனை
மன்னு மியற்பகைக்கு மாறாக - முன்னு

118 மூயர்மருத வாணு வுவந்தடி யேனுய்ந்
தயர்வறநீ கொள்கென் றளித்தும் - பெயர்வரிதா

119 வின்னும் பலபணிசெய் தின்புறுமக் கோமாற்கு
மன்னுபுகழ் முத்தி வழங்கினே - னன்னிலைமைத்

120 தொல்லை யுவனுச் சுவன்வயிற்று மாறுப்புண்
வல்லை வலஞ்சூழ மாற்றினேன் - வெல்லுமவன்

121 மைந்தன் புறங்கொடுத்த மாற்றானைக் கொன்றபழி
முந்தவலஞ் சூழ்முன் முருக்கினே - னந்துவசு

122 மான்வந்து சூழ்போது மற்றவன்ற னுடைவனைத்
தான்வந்து சூழத் தலையளித்தோ - னீனந்தி

123 ரஞ்சத் துவச னடைந்துசூழ் முன்பவற்சூழ்
வஞ்சப் பிரமகத்தி மாய்த்தபிரான் - விஞ்சுபுகழ்ப்

124 பூசத் துறைபடிந்த புண்ணியர்கால் கைப்புனறோய்ந்
தாசற் றிரண்டுயிர்வா னண்ணவைத்தோன் - மாசற்ற

125 நாரத மாமுனிவ னண்ணிவிழாச் சேவிக்க
வாரம் படுகருணை வைத்தபிரான் - வார்மீ

126 னுணங்க லுயிர்பெற் றுருத்திரர்க ளாகி
யிணங்குலகத் தெய்தவரு ளேந்த - லுணங்கன்மீன்

127 கொண்டபொதி யிட்டிகைகள் கொண்ட வொருவனுக்குத்
தண்டவில்பொன் னுகச் சமைத்தபிரா - னண்டர்தொழப்

128 பொன்னுருவத் துட்டான் பொலியுமுரு வொன்றியைத்துத்
தன்னுருவி லாவுருவந் தான்றெரித்தோன் - பன்னுபொரு

129 ளோர்வளவற் கீந்தனையா னெண்பொருள்வீ சிப்பணிக
ளார்தரச் செய்ய வருள்வைத்தோ - னேரு

130 மணங்கனுக்கு மின்னு யவதரிக்கச் செய்தோர்
சுணங்கனுக்கு முத்திதந்த தூயோ - னிணங்குபொடி

131 மெய்ப்பூ சவர்கேட்ப மேவுதிரி யம்பகன்றான்
றைப்பூச மாடத் தகுமென்றே - னெப்பேது

132 மில்லா வலஞ்சுழியே யேரம்பன் வைப்பாக
மல்லே ரகமுருகன் வைப்பாக - நல்லார்சேர்

133 தண்மாட வாப்பாடி தண்டீசன் வைப்பாக
வண்மாந் துறையிரவி வைப்பாக - வெண்மாறு

134 நன்காமர் தில்லை நடராசன் வைப்பாக
மன்காழி யேவடுகன் வைப்பாக - முன்காணுந்

135 தென்னு வடுதுறையூர் சேவமர்வைப் பாவாரூர்
மன்னுசோ மாக்கந்தர் வைப்பாக - வுன்னிற்

136 றடைதவிரா லங்குடியா சாரியன்வைப் பாக
விடைமருதில் வீற்றிருக்கு மீச னடைதருசீ

137 ரேற்ற வுருத்திரர்க ளேகா தசரும்வந்து
போற்றவருள் செய்த புகழ்ப்பெருமான் - மாற்ற

138 மிணங்குமணி பொன்னுதி யிட்டமர ரென்றும்
வணங்கு மருதவன வாண - னணங்கயர்புற்

139 றேறுலுடையான் காதில்வளைத் தோடுடையா னீடமர்கல்
லாலுடையான் யாவரையு மாளுடையா - னூலுடையார்

140 நாடுவோன் பற்றுத நாயே னிதயத்துங்
கூடுவோன் பொன்செய் குளிர்மன்றத் - தாடுவோ

141 ஞேராழித் தேரோ னுதிசித் திசையென்னுஞ்
சீராழி யங்கைமகட் சேருவா - னேராகச்

142 செல்மதியுண் முன்மதியிற் றேய்மதியில் பக்கத்து
நன்மதிகொ டன்வத னத்தொகைகொ - டுன்னுதிதிப்

143 புட்கொடி யைக்கொண்டு பொறிக்கொடி மார்பிற்கொண்மைக்
கட்கொடி யேற்றிக் களிசிறப்ப - விட்குலவு

144 குன்றுபுரை தோளாருங் கோற்றொடியா ரும்புவனத்
தொன்று பலரு முடனெருங்க - வன்றுமுதற்

145 காலையினு மாலையினுங் காமர்பல தூரியமும்
வேலையினு மார்ப்ப வியன்மறுகின் - மாலைபெற

146 வெற்பு நிகர விளங்குபல வூர்தியினும்
பொற்பு மலிபவனி போந்தருளி - யற்புமுதி

147 ரின்பதா மென்ன வெவருந் தொழச்சேரு
மொன்பதா நாளென்னு மொண்டிருநாண் - மின்பயில்பூண்

148 வாய்ந்த பெருநல மாமுலை யோடியற்று
மேய்ந்த துயினீத் தினிதெழா - வாய்ந்தசெழும்

149 பைம்பொற் றகட்டிற் பலமணியுங் கால்யாத்த
வம்பொற் றிருமண் டபமணுகி - நம்புற்ற

150 வீறுதரு மாகமஞ்சொன் மிக்க விதிப்படியே
கூறு மபிடேகங் கொண்டருளி - நாறுகுழற்

151 பெய்வளைத்தோ ளெங்கள் பெருநல மாமுலைதன்
மைவளையு நீல மலர்நோக்கான் - மெய்வளைத்த

152 பேரழகு நோக்குதலாற் பேதை யவணயனக்
காரழகு மேனி கலந்ததென - வீரமலி

153 காத்திர கும்பக் கருமலையிற் கொள்போர்வை
போர்த்தி யிருந்த பொலிவென்னச் - சீர்த்திமிகு

154 பன்முகத்து முள்ள பலவண் ணமுமறையத்
தென்முகத்து வண்ணமெங்குஞ் சேர்ந்ததெனத் - துன்னுபிறர்

155 தப்பார் தருக்கொழிதல் சான்றிதென மால்கொடுத்த
குப்பாய மெய்ப்புனைந்து கொண்டதென - வொப்பேது

156 மில்லாத் திருமேனி யேந்தழகைச் சாந்தமுலைப்
பல்லாருங் கண்டு பசப்பெய்திப் - புல்லாளப்

157 பெட்டாவி மாழ்காமற் பெய்வளைக்கை யம்மைகரும்
பட்டான் மறைத்த படியென்னக் - கட்டார்கொ

158 ளோதிமுடி யாள்சமழ்ப்ப வோங்கற் புதல்விமற்றோர்
பாதியுரு வுங்கவர்ந்த பான்மையெனத் - தீதின்மணம்

159 பொங்குநீ லோற்பலப் பூமலர்த் தாளன்றி
யெங்குநெருக் குற்றே றியவென்னத் - தங்கு

160 மணமாரும் பஞ்ச வடியொளிபாய்ந் தென்னத்
தணவாத் திருச்சாந்து சாத்தி - நிணமலிவாய்

161 வேங்கை கொடுத்தகலை வீக்கு மிடத்தொளிரும்
வேங்கை கொடுத்தகலை வீக்கியே - யோங்குபய

162 னுய்ந்தவொரு பெண்ணுமற்றோ ரானு மனமகிழச்
சாய்ந்து நிமிர்ந்த தனியிடத்து - வாய்ந்தபுனற்

163 பெய்வளை மாதைப் பெருநல மாமுலைதன்
மைவிழிகா ணுமன் மறைத்ததெனக் - கைவல்லா

164 ராற்று மணிமகுட மம்பவள வோங்கன்மிசைத்
தோற்றுகதி ரென்று சொலக்கவித்துப் - போற்றுபுக

165 ழாற்றன்மிகு கண்ணப்ப ரன்பிற் சொலுமுகம
னேற்றுமகிழ் பூத்த வியலிடத்துச் - சாற்றுபுனன்

166 மங்கை யுரைக்குமொழி வந்து புகாதுமையாள்
செங்கை புதவஞ் செறித்ததெனப் - பங்கமிலா

167 மாமணிசெய் தோடும் வயிரஞ் செயுமம்பொற்
றாமகர குண்டலமுந் தொட்டணியா - வேமவரை

168 யொன்று படவிறுகி யோங்கன்மகண் மார்பில்வளர்
குன்றுபட மெல்கிக் குழையிடத்து - நன்றுதரு

169 போகுசுடர்ப் பன்மணியும் பொங்கியெழக் கால்யாத்த
வாகு வலயம் வயக்கியே - மாகவின்செய்

170 கஞ்சக்கண் மாயனயன் கற்பகக்கோ னாதியர்கூற்
றஞ்சச் சிறைவைத்த வவ்விடத்தே - விஞ்சுபுகழ்

171 மின்னுமுல கங்களெலாம் விற்றாலு மீடாகா
மன்னுமணிக் கட்டு வடமணிந்து - பன்னுமுமை

172 வட்ட முலைக்குமணி வாரா மிடத்தண்ட
மட்டினிலா விற்றாள மாலையிட்டு - முட்டரிய
173 தாவின் மணிவீர சங்கிலிம தாணிபல
மேவிய வாயிடைமேன் மேற்புனைந்து - தாவா
174 மடங்கீண்ட தொண்டருத்த மாங்கந்தாங் கக்கல்
விடங்கீண் டெழுந்த விடத்தே - மடங்காக்
175 கருவி தனக்குக் கருதுபிற வேண்டா
விருமை மணிக்கடக மிட்டுக் - கருது
176 மலரோன் முடிதுணித்த வைவாட் குறையா
யிலகுமிடத் தாழிபல விட்டு - நலமருவு
177 பொன்னுக்குப் பின்னிருந்து பொங்குவெள்ளி தங்கிடத்து
மன்னுதர பந்தம் வயக்கியே - துன்னியொரு
178 பன்றி தொடரமற்றோர் பன்றி தனைத்தொடர்ந்து
சென்ற விடத்துச் சிலம்பணிந்து - நன்றவற்றுட்
179 கொண்டசின மாதி குறையாதே தென்றிசைக்கோன்
கண்ட விடத்துக் கழல்கட்டித் - தண்டாத
180 மாதங்க வுத்தரிய மன்னு மிடத்தொளிசெய்
மாதங்க வுத்தரிய மன்னுவித்துத் - தாதுவிரை
181 தாவாத கொன்றையந்தார் சர்ப்பப் பிராந்தியிட
மோவாதாண் மேவ வுவந்தணிந்து - பூவார்கை
182 கொண்டகருப் புச்சிலையான் கோலத் திருமேனி
யுண்ட கடுங்கூற் றுறையிடத்தே - தண்டவில்பா
183 லேறு கடலலைமா லேய்நீற்றுத் தூளனமே
றுறுதிரி புண்டரநா னத்திலகம் - வீறுகொள
184 விட்டுமதிப் பாதி யெடுத்துமுடி மேற்கவிய
நட்டினது வைத்த நயமென்ன - வெட்டுணையு
185 மாசுசா ராத வயிரமுழுக் கச்செறித்த
தேசு மிகுவா சிகைசேர்த்துப் - பேசுபுக
186 ழிட்டமக் கோரிளவ லின்றுவரு மென்றுமலர்
மட்டுறுதா ராரூரன் மன்னுவகை - யுட்டுளைய
187 நின்வலப்பா கத்தொருத்தி நீங்கா திருப்பதென்னென்
றென்மலர்வா மத்தா ளிசைத்தூட - நன்மைதிக
188 ழும்மதியை யிவ்வரவு மவ்வரவை யிம்மதியுஞ்
செம்மை யுறவுகொண்டு சீர்படைப்ப - மும்மைப்
189 புவனத்துந் தான்றோய் பொலிவுணர்த்த லேய்ப்பப்
பவளக்காற் கண்ணடி பார்த்துத் - திவள்பருப்புப்

190 பொங்கல்பான் மூரல் புளியோ தனங்குளஞ்சேர்
துங்கமடை நெய்மிதக்குஞ் சொன்றியனை - தங்கயினி
191 பாகு கருனை பகரும் வறையறுவை
யாகு மிலட்டுகமெல் லாவியப்பம் - போகுசுவை
192 நோலை யடைநன் னுவணை முதற்பலவுஞ்
சோலை யுதவு சுவைக்கனியுங் - காலை
193 யிளநீர் குளநீ ரியன்மோ ரளாய
வளநீர் கனிபிழிந்த மாநீ - ரளவா
194 வெவையுஞ் சுவைதேர்ந் தியலவாய் பூசிக்
குவைகொள்விரைப் பாகடையுங் கொண்டு - நவையரிய
195 மேதகுதூ பந்தீப மிக்க விவைமுதற்செ
யோதுபசா ரங்க ளுவந்தருளிக் - கோதறுசீர்
196 வாய்ந்தவொரு தானும் வயங்கு தனதருளிற்
றோய்ந்தவடி யாருஞ் சொலவந்த - வாய்ந்த
197 வெழுதா மறையு மெழுது மறையும்
வழுவாது கேட்டு மகிழ்ந்து - தொழுவார்
198 நயங்குல வின்ப நறும்பலம்பெற் றுய்ய
வயங்கு மொருகோட்டு மாவுஞ் - சயங்கொள்சத
199 கோடி யரசின் குலந்தழைய வெம்பகையைத்
தேடியவோர் வேல்கொள் செழுங்குருந்தும் - பாடியலா
200 வோட்டை மனத்தக்க ணேம்பரணிச் சோதிமகங்
கேட்டை யுறச்சிவந்த கேடிலியு - நீட்டுமொரு
201 கைத்தலைநால் வேதங் கமழ்வாய்த் தலையொன்று
வைத்தலைநெய்த் தோரேற்ற வானவனு - நித்தமுந்தன்
202 ணுய்மனைசெந் தாமரையே யாக வுறைவாளைத்
தாய்மனை யென்றழைக்கத் தக்கோனுந் - தூயவையை
203 நீரு நெருப்பு நிரம்பு தமிழ்ப்பெருமை
யோரும் படியருள்கொ ளொண்மழவுந் - தீராத்துன்
204 பாய கடலமண ராழ வரையொடலை
மேய கடன்மிதந்த வித்தகனு - மாயவன்கண்
205 காணக் கமலநடுக் கங்குலிணு ரூர்த்தெருவின்
மாணகப் பூத்துழல வைத்தோனுங் - கோணுது
206 மூகைவாய் பேச முழுப்பேச்சு வாய்மூகை
யாக வியற்றிய வாண்டகையும் - பாகமிலாத்
207 தாதையிரு தாடடிந்து தாயையொரு பாகங்கொ
டாதையிரு தாளடைந்த சான்றவனு - மோதைகெழு

208 கைச்சிலம்பின் ரேனுடைத்தன் காற்சிலம்பி னோசைசெவி
வைச்சிலம்பி னுண்டுய்ந்த வானவனும் - பச்சுமைகை
209 யாய்நீர் கரந்த வரியமுடி மேல்வழிய
வாய்நீர் பொழியன்பு மாமுகிலும் - பாய்மை
210 தகவரிந்தூட் டாது தலையிழந்தா ணை
மகவரிந் தூட்டியசீ மானு - நகமறைக
211 ளீன்றதன்வா யென்று மிசைத்தறியா வம்மையெனு
மான்றசொல்லி சைக்க வமைந்தாளுஞ் - சான்றதிரு
212 மங்கலப்பொன் கொண்டுமனை வாய்மொழிசொற் கொள்ளாது
குங்கிலியங் கொண்டுவந்த கொள்கையனும் - வெங்கொடியோன்
213 கோச மறைத்தவாள் கொண்டுதகா தாற்றவுந்த
னேச மறைத்தறியா நீதியனும் - வாசமுறத்
214 தோய்ந்தபுக ழாரூரன் றொண்டத் தொகையுணிலைத்
தாய்ந்தபுகழ் மற்றை யடியாரும் - வாய்ந்த
215 வலர்துழாய் நாறு மகன்றளியைக் கொன்றை
மலர்துழாய் நாறவைத்த மானு - நிலவு
216 முலகுண் டுமிழ்ந்த வொருவனைப்பா லுண்போ
துலகறிய வுண்டுமிழ்ந் தோனு - மிலகுநடங்
217 கண்டே பசிதணிக்குங் காமர் விரதமொன்று
கொண்டே விளங்கு குணத்தவருந் - தண்டேறல்
218 பெய்தவர் பெய்யலர் பேசல ரேயாகச்
செய்தவ ரென்னுமற்றைச் செய்தவருங் - கையிற்
219 குடவனை கொண்டுங் குடவனைக்காய்ப் பாடி
வடவனை கட்டுண்ட மானு - மிடவனையப்
220 பூமேலெஞ் ஞான்றும் பொலிந்தும்புத் தேளாய்ச்செந்
நாமேல்வெண் மாதுவைத்த நான்முகனு - மாமே
221 லொருசுவர்க்கங் கைக்கொண் டுவந்தயி ராணி
யிருசுவர்க்கம் வைகு மிறையும் - பொருவரிய
222 வெற்பகா ணப்பொலிந்து வீங்குதோண் மேற்புனைந்த
கற்பக மாலைக் கடவுளரும் - பொற்பகலாத்
223 தேந்தா மரைமலர்த்துஞ் செங்கதிரும் பூவினுக்கு
வேந்தா மதுகுவிக்கும் வெண்கதிருங் - காந்தாப்
224 பொலிபடைகொண் டாசை புரப்போருஞ் சீர்த்தி
யொலிபடைத்த பூதகணத் தோரு - மலியுமிசை
225 பத்தர்பதி யாழ்கொண்டு பாடுந் தொழிலவருஞ்
சித்த ருரகர்முதற் செம்மையரு - முத்தமமீ

226 தெண்போ தெனவொருவ னெள்ளெச்சி லுண்டவிமற்
றுண்போர் பலரு ளுயர்ந்தோரும் - பண்போ
227 ரணிக்கோவை தீட்டி யகமகிழ்தற் கோர்ளும்
மணிக்கோவை சூட்டியகோ மானும் - பிணிக்கோதி
228 லாதிசைவ ராதி யணியா லயத்தொண்டிற்
கேதிலரா காதியற்று மெல்லோரு - நீதிநெறித்
229 தக்கபெருஞ் சீர்ச்சுத்த சைவசித்தாந் தத்திருவின்
மிக்க திருக்கூட்ட மேன்மையரு - மொக்கவரப்
230 பண்பார்கை லாய பரம்பரை மெய்கண்டா
னண்பார்சந் தான நனிதழைக்க - விண்பார்
231 புகழ வருங்குரவர் போரே றுனானந்
திகழவரு மானந்தச் செல்வ - னிகழ்வி
232 றுறவுபூண் டோர்பலர்க்குஞ் சூளா மணிமிக்
குறவுபூண் டெவ்வுயிரு முண்மை - பெறவுவக்கு
233 ஞான விநோதனுயர் நாவலர்தம் போரேறு
சான முடையார் தனித்துணைவன் - மானத்
234 திருவா வடுதுறைவாழ் செல்வன் கருணை
மருவா வருநமச்சி வாயன் - பொருவா
235 வரமணியென் றெல்லோரும் வாழ்த்தப் பொலிசுப்
பிரமணிய தேசிகனெம் பெம்மான் - பரவுமுண்மை
236 தாங்குபெருஞ் சித்தாந்த சைவக் குழாங்களென
வோங்குதிருக் கூட்டத் துடன்மேவ - வீங்குசெம்பொற்
237 றேரும் பரியுஞ் சிவிகையும் யானையுமற்
றூரும் பிறவுமுவந் தூர்தருபல் - லோருள்ளு
238 முன்னூர்வோர் பக்கத்து மொய்த்தூர்வோ ரோர்தனக்குப்
பின்னூர்வோ ரம்முறையே பெற்றூரப் - பொன்னூரு
239 மின்பணியும் வேத்திர மென்மலர்க்கை கொண்டசைத்துத்
தன்பணியி னந்தி தலைநிற்பக் - கொன்பரவு
240 வாரி யுடுத்தபெரு மண்ணெருதாட் குள்ளடக்கு
மூரி விடைக்கொடி முன்போத - வேரிவரு
241 மாலவட்டஞ் சாமரைசாந் தாற்றி யொலியன்முதன்
ஞாலவட்டஞ் சொல்பலவு நண்ணிமொய்ப்பக் - கோல
242 முழுவெண் மதியு முடிமேற்கொண் டென்ன
வெழுவெண் குடைமே லிகைப் - பழுதில்
243 பதலை முழவம் படகந் திமிலை
முதல முகிலின் முழங்க - நுதலிளெளிர்

244 கண்ணுடையான் வந்தான் கருது மொருபாகம்
பெண்ணுடையான் வந்தான் பிரான்வந்தா - னெண்ணினருக்
245 காய்தந்த வன்பருளி யாட்கொள் பவன்வந்தான்
ருய்தந்தை யில்லா தவன்வந்தான் - பாய்தந்த
246 நல்லா ரணியேக நாயகன்வந் தான்புலமை
வல்லா ரணிமருத வாணன்வந்தான் - புல்லார்
247 நயந்தபுரம் வேவ நகைத்தபிரான் வந்தான்
வயந்தழைவெங் கூற்றுதைத்தான் வந்தா - னயர்ந்தயன்மால்
248 சாவாம னஞ்சுண்ட தம்பிரான் வந்தானெம்
மூவா முழுமுதன் மூர்த்திவந்தான் - ருவாத
249 பொன்னம் பலத்தாடும் புண்ணியன்வந் தானென்று
சின்னம் பலவுமெதிர் சேவிப்ப - வன்னமணி
250 யாத்த வொளிமண் டபநின்று தேவியொடு
மேத்திமறை வாழ்த்த வினிதெழுந்து - தாத்திரிநின்
251 றம்பொன்முடி யண்ட மளாவவெழு கோபுரநற்
பைம்பொன்மணி வாய்தல் பலகடந்து - செம்பொன்மலர்
252 தூற்றியெல் லோருந் தொழுநடைக் காவணத்தி
னேற்ற வழியே யெழுந்தருளித் - தோற்றத்
253 தலங்குதிரு வீதி யணுகியம்பொன் வெற்பி
னிலங்கு திருத்தேர்மே லேறி - நலங்கொளரி

## குழாங்கள்.

254 யாதனத்து மேவமுடி யாரும் புனற்றுறைகண்
டாதரத்து மேவவந்த வன்னமெனச் - சீதநிழல்
255 வாழ்மருத வாழ்க்கை மதித்துறவு கொள்ளவந்த
கேழ்கிளர்செந் தார்ப்பசுங் கிள்ளையெனத் - தாழ்சடைமேன்
256 மின்னு முகிலின் விளக்க முணர்ந்துவந்த
மன்னு கலாப மயிலென்னப் - பொன்னிறங்கைத்
257 தாய்க்கு முனமளித்த தண்ணருள் கண்டுவந்த
கூய்க்குலவு தேமாங் குயிலென்னச் - சேய்க்குமுன
258 மேவுமொரு பெண்கொண்ட மெய்யுறவு கண்டுவந்த
வாவு மிளமட மானென்னத் - தாவாத
259 வொண்டரு வென்றுதனை யுள்கிப் படரவாக்
கொண்டருகு வந்த கொடியென்ன - மண்டு
260 சடையையின மென்று தவக்கருத்திற் கொண்டா
யிடையடைய வந்தமின லென்ன - வுடையதனைக்
261 கோணில் பிரணவ குஞ்சர மென்பதுளம்
பேணி யடைந்த பிடியென்ன - வாணிலவு

262 விண்ணுலக மேயபல மின்னாரும் வாரிசூழ்
மண்ணுலக மேய மடவாரு - நண்ணுபெரும்
263 பாதலத்து மேய பலமா தருமாட
மீதலத்துஞ் செய்குன்ற மேனிலத்தும் - பூதலத்துஞ்
264 சோதிமணிச் சாளரத்துஞ் சூழ்பசும்பொன் மன்றிடத்தும்
வீதியிடத் துஞ்சதுக்க மேவிடத்து - மோதிமநேர்
265 மாடமலி சோபான வைப்போ டரமியத்து
மாடகஞ்செய் வேதி யதனிடத்தும் - பாடமையு
266 மின்னென்று சொல்சடையீர் வின்மா ரனையெறித்த
தென்னென்று கேட்க வெழுந்துநிற்ப - தென்னக்
267 குருமுடிக்கா ரோடுறவு கொள்ளவிழைந் தென்னப்
பெருமுடிக்கா ரோதி பிறங்கத் - திருமுடியில்
268 வாழும் பிறைவடிவும் வண்ணமுமொத் தேமென்று
வீழும் பொடிநுதன்மேன் மேல்விளங்கப் - போழுங்
269 கருவிழிச்சேல் கங்கை கலப்பமுயன் றென்னப்
பொருவிலிரு பாலும் புரள - வொருவின்முடி
270 யவ்வாய் மதிநட் பமைந்தவரக் காம்பலெனச்
செவ்வாய் மலர்ந்துசுவைத் தேனூற - வொவ்வா
271 வலக்கணுற வுற்று வயங்குகம லம்போ
னலக்க முகம்பொலிவு நண்ண - நிலக்கண்
272 டனைவேய்கொண் டாங்குறவு தாங்கொளவுற் றென்னப்
புனைவேய் வளைத்தோள் பொலிய - வனையும்
273 வரையைக் குழைத்த வரைகுழைக்கு மாபோல்
விரையக் குவிமுலைகள் விம்மப் - புரையறுதன்
274 கண்ணெதி ராகாக் கணைமதவே ளன்றென்னு
மெண்ணெதி ராகா விடைதுவள - வண்ணவரைத்
275 தன்பணியை வெல்லத் தருக்கியெதி ருற்றெனச்செம்
பொன்பணி யல்குல் புடைவீங்க - நன்புவியோ
276 ரெண்ணியறோர் யாத்த வெழிலரம்பை முற்றும்வெலக்
கண்ணியடைந் தாங்குக் கவான்பொலியப் - புண்ணியத்தன்
277 பாடியறோர் மேவப் பழகுதல்போற் றன்பழைய
நீடியறோர் மேவுபத நேர்சிறப்பக் - கூடி
278 யெழுகடலு நாண வெழுந்தபெரு வெள்ள
முழுகு நெடியசடை மோலி - யொழுகழகும்
279 வையமிகழ் தக்கன் மகக்கூற் றவதரித்த
செய்யவிழி நெற்றித் திருவழகு - மொய்யப்

280 பகலிரவு செய்யும் பகத்தழகும் வேத
மகலரிய செவ்வா யழகும் - பகரடியார்
281 மெய்த்தசுவைச் சொல்லமுதே வேட்ட செவியழகு
மொய்த்த கருணை முகத்தழகு - மொத்துலகங்
282 காத்தமணி கண்டக் கறுப்பழகு மேருவலி
தேய்த்த தடந்தோட் சிவப்பழகும் - வாய்த்தசிவ
283 ஞானங் குடிகொ ணகுபூண் முலையுழக்குந்
தானமெனு மார்வத் தனியழகு - மானகுழ
284 ரோடையெனுந் தன்முகத்தி னெண்கணெனும் பூவமைக்குங்
கூடையெனுஞ் செந்தாட் குலவழகும் - வாடையுத
285 வெண்ணூற்ற வில்லோ வெனும்வா சிகையழகு
நண்ணூற்ற புன்மூர னல்லழகுங் - கண்ணுற்றார்
286 மாலானார் கண்ணிமைப்பு மாறினா ரோவியமே
போலானார் நெஞ்சம் புழுங்குவார் - சேலான
287 கண்முத்தஞ் சூடிக் கதிர்த்தமுலை மேற்பழைய
வெண்முத்தம் போக்கி வெதும்புவா - ரொண்மைச்
288 சுரிகுழ லாழ்ந்திடையைச் சூழ வுடுத்த
விரிகலை போக்கி மெலிவார் - பிரிவரிய
289 நன்னா ணொடுகதிரு நாணுமணி கோத்தபல
மென்னாணும் போக்கியுளம் விம்முவார் - பொன்னனை
290 கன்று கழன்றகறல் காணா ரிளந்தென்றற்
கன்றுகழ லாதடைதல் கண்டயர்வார் - நன்றுநன்று
291 பொன்செய்த செஞ்சடையார் போற்றியா - நோக்கியதற்
கென்செய்தா ராலென் றிரங்குவார் - மின்செயொரு
292 பங்காட்டி செய்தவமே பாடுற் றதுவீணை
யங்காட்டி நாம்பயில்வ தம்மவென்பார் - செங்காட்டுப்
293 பிள்ளைப் பழிகொண்டார் பெஃ பழிக்கு நாணுவரோ
கொள்ளைப் பழிகொள் கொடியரென்பார் - வள்ளைப்
294 பயம்பணையார் கூடற் பழியஞ்சி யாரென்
றியம்பு வதுமுகம னென்பார் - நயம்படரப்
295 பொங்கரவப் பூணுவந்தீர் புன்க ணுதவுமக்குச்
சங்கரரென் னும்பேர் தகாதென்பார் - துங்கமிகு
296 வேய்வன மேவல் விருப்பீரெம் பொற்றொடித்தோள்
வேய்வன மேவல் விரும்பீரோ - காயரவின்
297 வாயமுது கொண்டு மகிழ்வீரஞ் செம்பவள
வாயமுது கொண்டு மகிழீரோ - மேயமலர்க்

298 கொங்கைச் சிலம்பு குழைத்தீரெம் மார்பிடங்கொள்
கொங்கைச் சிலம்பு குழையீரோ - பங்கமிலிப்
299 பொற்றேர் விரும்பிப் புணர்ந்தீரெம் மல்குலெனும்
பொற்றேர் விரும்பிப் புணரீரோ - கற்றலஞ்சேர்
300 வாழை யடவி மருவினீ ரெங்குறங்காம்
வாழை யடவி மருவீரோ - தாழ்விழியாச்
301 சீத மதியைமுகஞ் சேர்த்தீரெம் பொன்வதனச்
சீத மதியைமுகஞ் சேரீரோ - நாதவரு
302 டாவென்ற வோரன்பர் தம்பாற்சென் றுன்மனையைத்
தாவென்ற தூர்த்தருநீர் தாமலவோ - மாவென்றிப்
303 பூதஞ் செயும்படையீர் பொன்னனையாள் பாலிரத
வாதஞ்செய் தன்புற்றார் மற்றெவரோ - சீதமலர்
304 மட்டார் புனன்மதுரை வாழ்வணிக மின்னார்கை
தொட்டாரும் வேறுமொரு சுந்தரரோ - கட்டார்கொ
305 ளோதியமைப் பாராநீ ரோரரசன் முன்கொடுத்த
மாதினையெவ் வேதுவினுள் வைத்திருப்பீர் - மோது
303 புரத்தை யெரித்ததுமெய் போர்புரித லால்வேள்
புரத்தை யெரித்ததுநீர் பொய்யே - சிரத்தையின்மாற்
307 காழி கொடுத்தநுமை யாதரித்த நாங்கள்கைப்பல்
லாழி யிழப்ப தழகாமோ - வாழ்தேவூர்க்
308 கன்றுக் கிரங்குங் கருணையீர் நீருமெங்கைக்
கன்றுக் கிரங்காவன் கண்மையெவ - னன்றோர்
309 நகரி லமண்சுருக்கி நங்கூறை தீர்த்திந்
நகரி லமண் பெருக்க னன்றோ - புகரில்
310 கருங்குயிலும் பாலடக்கக் கற்றீர் வருத்துங்
கருங்குயிலெம் பாலடக்கக் கல்லீர் - நெருங்குழலை
311 யுள்ளிடத்தும் வைத்தீ ரொருத்தி கவர்ந்துகொண்டு
தள்ளிடத்து மெம்மைவைத்த றுஞ்சகியீர் - வெள்ள
312 மடக்குந் திறலீரெம் மம்பகம்பெய் வெள்ள
மடக்குந் திறல்சற்று மாளீர் - கடுப்பின்
313 மதிமயங்கா வண்ணமுடி வைத்தீர் பரவெம்
மதிமயங்கா வண்ணம்வைக்க மாட்டீர் - புதியகரு
314 மஞ்சமையு மெங்கண் மணிக்கூந்தற் கட்டவிழ்ப்பீர்
பஞ்சவடிக் காங்கொலெனப் பார்த்தீரோ - வஞ்சம்
315 பயில்கொக் கிறகு படர்சடைவைத் தீர்வெங்
குயில்பற் றிறகெவனீர் கொள்ளீர் - வெயிலின்

316 மணியுடைதும் பூணுணவு மாற்றும் விரத
நணியனகொ றென்ற னடுக்கும் - பிணிதவிர்மெய்
317 யந்திவா னென்றே யமைத்தோ மமைப்பதற்கு
முந்திக் குவிந்த முககமல - நந்திப்
318 பரவு சடைமுகிலைப் பார்த்தவுடன் சொல்லாய்
விரவு குயிலொடுங்கி விட்ட - வுரவிற்
319 றிகம்பரா நும்மைத் தெரிந்தடைந்த யாமுந்
திகம்பரரே யாகிச் சிறந்தோஞ் - சகம்பரவு
320 மத்திக் கருளி யறங்கொண்டீ ரெங்கண்முலை
யத்திக் கருளி யறங்கொள்ளீர் - பத்தியருக்
321 கேற்று வருவீ ரிடர்க்கடலுண் மூழ்குமெமக்
கேற்று வராமை யியம்புவீர் - போற்றியனும்
322 மேனிதழ லென்றுரைப்பார் மெய்யே யருகடைந்தே
மேனிதழ லாய விதத்தென்பார் - மேனு
323 ணுணங்கன்மீன் றுள்ள வுவந்தீர்நீர் கண்மீ
னுணங்கன்மீ னாக வுவப்பீ - ரிணங்கு
324 மிடைமருதா னந்தத்தே னென்பா ரருளா
வடைவினிம்ப நெய்யென் றறைவோ - முடையவரே
325 கோதை தரினுவப்புக் கூடு மறுக்கின்மிகு
வாதையுறு மென்னுமட வாருளொரு - பேதை

பேதை.

326 விடாரய வாடவராம் வெவ்வரவம் பற்றத்
தொடரா மதிப்பிஞ்சு தோலா - நடமுடையார்
327 தேறுந் திறத்தமருந் தெய்வமரு திற்பறந்
தேறுஞ் செயலி லிளங்கிள்ளை - மாறுபடு
328 சூர்மாவென் றுள்ளந் துணிந்ததோ நாமறியோ
மூர்மா விவர்ச்சி யுருதகுயி - றூர்மார்
329 படலுடைய மார னவாவியினி தேறத்
திடமருவு றூதவிளந் தென்றல் - படம்விலக்கி
330 யென்மார்பி னில்லா விரண்டு புடைப்பன்னாய்
நின்மார்பி லுற்றமைசொ னீயென்பாள் - பொன்மார்பத்
331 தேறுகைத்தா ரன்ப ரிதயம்போல் வஞ்சமுதன்
மாறு விளையா மனத்தினா - டேற
332 நடந்தனேன் யானீ நடந்திலைபொற் பாவாய்
கிடந்தகுறை யென்னென்று கேட்பா - ளுடைந்திடுமுன்
333 வல்லையே பாலிம் மரப்பாவைக் கூட்டமுலை
யில்லையே யார்கொடுப்பா ரென்றழுவாள் - வல்லா

334 றெழுதுமொரு பூசையைக்கண் டின்றே கிளிக்குப்
பழுதுவரு மென்றேட்டப் பார்ப்பா - டொழுகுலத்தின்

335 முற்று தமிழ்விரகர் முன்னமணர் வாதம்போ
லுற்றுமுடிக் கப்படா வோதியாள் - பற்று

336 குடியிற் பொலிமாதர் கொண்டநாண் போலக்
கடியப் படாக்குதம்பைக் காதாள் - படியி

337 லடுக்கும்விடங் கொள்ளா வராக்குருளைப் பல்லே
கடுக்கு மெனப்புகலுங் கண்ணாள் - மடுக்குமுயி

338 ரொன்று கழிதரமற் றொன்றுபுகு மூலருடம்
பென்று கரையு மெயிற்றடியா - டொன்று

339 வினைபெற்ற மேருவல்லா வெற்பினங்கள் போலுண்
டனையுற் றறியாத் தகையாள் - வனையுங்

340 குழலும்யா ழுங்கைப்புக் கொண்டோமென் றெண்ணி
யுழலுமா றோர்சொ லுரைப்பா - ளழகு

341 பருவ மிரண்டிட் பருவமே யொப்பப்
பெருக வளர்ந்த பிணைக்க - டெருவி

342 னெருங்கப் புகுந்து நிறைகல்வி யான்றோர்
சுருங்கச் சொலன்முதலாத் தோற்றி - யொருங்கு

343 பொருள்புணர்த்திப் பாடப் பொலிசெய்யுண் முன்னந்
தெருளுணர்ச்சி சாலாச் சிறியர் - மருள்வகையிற்

344 பாடுகின்ற செய்யுளெனப் பற்பலவாஞ் சிற்பமெலாங்
கூடுகின்ற மாடக் குலமுன்னர் - நீடுபெரு

345 வீடுசிறு வீடென்று மேன்மே லுறவியற்றிக்
கூடு மவர்புனையுங் கோலமென - நாடுவிரற்

346 கோலம் புனைந்து குலாவி யவருவக்குஞ்
சீல மெனவுவக்குஞ் செவ்வியிடைச் - சாலு

347 மருவு முருவு மனனும் புனலு
மிருவுங் கொடையு மிரப்பு — மொருவா

348 விரவும் பகலு மினனு மதியும்
புரவு மழிப்பும் பொருந்திப் - பரவுசிறப்

349 பாணுருவும் பெண்ணுருவு மாலா லமுமமுதுங்
காணு மரவுங் கலைமதியும் - பேணுதிறல்

350 யோகமும் போகமு முள்ளா ருரைபலவு
மேகமு மாய விடைமருதர் - மோகப்

351 பெருந்தேர் நடத்திவரப் பெட்டனமா ரோடவ்
வருந்தேர் தொழுதற் கடைந்து - திருந்துமனை

352 மார்வணங்கும் போது வணங்கினான் மான்முதலோர்
நேர்வணங்குந் தெய்வவுரு நேர்கண்டாள் - காரும்

353 வணங்கோதி யன்னை வதனமலர் நேர்பார்த்
திணங்கோ திவர்யாவ ரென்று - ளணங்கே

354 யிடைமருது வாழீச ரெல்லா வுலகு
முடையர் நமையா ளுடைய - ரிடையறநன்

355 றாரும் விடைகருட னூர விடைகொடுத்தார்
சாருந் தமைப்புணர்ந்து சாத்தனையீன் - றுருங்

356 கொடிபுணரச் செம்பொற் கொடிகொடுத்தார் மூன்று
கடிமதிலும் வேவக் கறுத்த - வடியுடைப்பே

357 ரம்புசுமர் தெய்ய வகத்தியனார் தம்மைக்கொண்
டம்பு கொடுத்த வழகரென - நம்புமிவ

358 ரித்தெருவிற் றேரேறி யேன்வந்தார் சொற்றியென
முத்தமொளிர்ந் தென்ன முகிழ்நகைசெய் - தத்தரிவர்

359 நம்மையெலா மாட்கொண்டு நாம்வேட் டவையளிக்க
வம்மையொடும் வந்தா ரறியென்னச் - செம்மைமயி

360 லப்படியா னன்றே யையர்முடி யம்புலியென்
கைப்படியு மாறு கரையென்னச் - செப்புமஃ

361 தந்த விடம்பெயர்ந்தா லந்தோ வுருக்காண
லெந்த விடத்து மிலைகண்டாய் - முந்த

362 முனிதக்கன் சாப முராரிமுத லோருந்
தனிதக்க தென்னத் தருமோ - வனிதா

363 யெனவதனைக் கூவமன மில்லையெனிற் கைம்மான்
றனையெனக்கு வாங்கித் தருதி - யனையேயென்

364 றோத வஃதென்னென் றுண்ணகைத்தம் மான்முழக்கஞ்
சாத மெவர்செவிக டாமேற்கும் - போத

365 வொருமுழக்கஞ் செய்யி னுதிருமே யண்ட
முருமுழக்கம் யாவுமிதற் கொப்போ - திருவே

366 யடங்குகென மற்றதுவு மப்படியே லாட
ரெடங்குமரப் பாவைக்குச் சூட்டத் - தடங்கொளிவர்

367 தோண்மே லணிந்த தொடையா வதுவாங்கென்
றுண்மேற் கலைதொட் டலைத்திடலும் - வாணெடுங்க

368 ணன்னை முனிவாள்போ லாங்கு முனிந்தொருநீ
பின்னையெச்ச தத்தர்தரு பெண்ணல்லை - முன்னைத்

369 தவம்பெரிது வேண்டும்வாய் தன்னை யடக்கென்
றவஞ்சிறிது மில்லாதா ளாற்ற - நிவந்த

370 திருத்தேரை யப்பாற் செலுத்துதரங் கண்டு
திருத்தே ரனையொடுமிற் சென்றாள் - பொருத்துசிலை

371 கோட்டாது வண்டுநாண் கூட்டாது வாளியொன்றும்
பூட்டாது வேடேர்ப்பின் போயினான் - மீட்டுந்

பெதும்பை.

372 ததும்பு மணிக்குழைதோ டாம்வருடி யாடத்
ததும்புகொடி போலுமொரு தையற் - பெதும்பை

373 யலரும் பருவ மடுத்ததென்று மைந்தர்
பலருமெதிர் பார்க்கவொளிர் பைம்போ - திலகுமெழின்

374 மாட மிசைத்தவழு மாமுகிலின் றோற்றங்கண்
டாடமனங் கொள்ளு மழகுமயி - னீடுகடல்

375 கூடிக் கடைநாள் குடநின்றுந் தேவர்கலந்
தேடிப் புகுதாத தெள்ளமுத - நீடுசெண்டை

376 நாட்டிறைவ னூரெண் ணகத்தமண ரைச்செயல்போற்
கூட்டிமுடித்த குழலினாள் - வேட்டுவஞ்ச

377 முந்து களவு முனிவுங் குடிபுகுத
வந்துவந்து பார்க்கும் வரிவிழியா - ணந்து

378 கறியமைத்தார் தள்ளுங் கருவேப் பிலைபோ
லெறிகுதம்பைக் காதி னியலா - ளறிகயத்தின்

379 கொம்பு வெளிப்படன்முற் கூர்முனை தோற்றுதல்போல்
வம்பு முலைதோற்று மார்பினா - ளம்புபல

380 பூமாலை சூடுதற்கும் பூணாரம் பூணுதற்கு
மாமாலை தாக வமைந்துள்ளாள் - காமரசப்

381 பேறுங் குலமாதர் பேணும்பூ ணென்னுநாண்
வீறுஞ் சிறிதரும்பு மெய்யினா - டேறுசிலை

382 வேளா கமத்தின் விதப்புகல்வார் வார்த்தைசற்றுங்
கேளா தவள்போலக் கேட்டமர்வா - டாளாம்

383 பெரும்பகையெண் ணுதுவரை பேர்த்தான்போற் கொங்கை
யிரும்பகையெண் ணாத விடையா - ளரும்புபெருங்

384 காதலுடைத் தோழியர்கள் கைகலந்து சூழ்தரமிக்
காதலுடை வாவி யணைந்தாடிச் - சீதப்

385 பலமலருங் கொய்து பனிமாலை கட்டி
நிலமலரு மாதனிநன் னீழல் - குலவுபளிங்

386 காரப் படுத்தெழின்மிக் காக்கியதா னத்தமர்ந்து
சேரப் படைக்குந் திறல்படைத்தா - னோர்தான்

387 படையா தமைந்த பரிகலநல் கூரு
முடையா ததிர்ந்தமத வோங்கல் - புடையாருங்

388 கொம்புபட்ட போர்வை கொடுத்த தனியூரு
மம்புவிட்ட தின்மை யதுதெரிந்துஞ் - சம்பு

389 விடாதுவா ழூரும்விதி வீநா ளரசு
படாதுவா ழூருமருட் பற்றுக் - கெடாது

390 பதியே பசுவாய்ப் பயங்கொடுத்த வூரும்
விதியேமே னோக்குதிறம் வெய்ய - கொதிதழலுக்

391 கன்றிப் புனற்கென் றதிசயிப்பச் செய்யூரு
மன்றிமதன் றீக்குவிருந் தாமூரு - நன்றிதரு

392 தண்டீசர்ப் போற்றியடி தாழ்ந்தபின்னும் வேறொருவர்க்
கண்டாய்விற் போற்றவருள் காலூரு - மண்டிப்

393 பிறந்தார் பிறவாத பேரூரு நாளு
மிறந்தா ரிறவாத வூருஞ் - சிறந்தநலத்

394 தாட்டை விரும்பி யடுபுலியு மாடரவு
மோட்டை படாம லுறையூரு - மேட்டைதவிர்

395 கன்னியொரு பாற்கலந்து காலில்கட கம்புனைந்து
மன்னியிட பத்து வரைத்தனுக்கொண் - டுன்னியொரு

396 தம்பத் துதித்தசிங்கந் தான்றருமுட் சாத்தணிவார்
கும்பத் துதித்துக் குலவூரு - நம்புபொறை

397 யாதியடை யானு மரிக்கரிய செங்கமலப்
போதியைய மார்பேறகப் பூட்டூருஞ் - சோதிமணி

398 வாய்திறந்து பாடி மணியம் மனைகொண்டு
தாதியரோ டாடுஞ் சமயத்தி - லோதி

399 மழையனைய வோரணங்கு வந்து பணிந்து
கழையனைய செஞ்சொற் கனியே - விழையு

400 மொருபாற் பசப்பா யொருபாற் சிவப்பா
யிருபாலு மொன்றி னியையும் - பெருமான்

401 கொடுங்கோளூர் மேய குழகன் கொடுமை
விடுங்கோ ளிலியுமமர் மேலோ - நெடுங்கா

402 விடைச்சுரத்து வாழ்வா னிடைமருத மேயா
னடத்துதிருத் தேரணித்தே நண்ணிற் - றடக்கியெழு

403 சேவிக்க வம்மெனச்சூழ் சேடியர்க ளோடெழுந்தா
ளாவிக் கினியான்மு னண்மினு - டேவியொடு

404 வீற்றிருக்குங் கோலம் விழிகுளிரக் கண்டுவளை
யேற்றிருக்கு மங்கை யிணைகுவித்தா - ளூற்றிருக்கு

405 முள்ளங் குழைய வொருத்தியிவர் பாலமர்ந்தாண்
மெள்ள வவளார் விளம்பென்றாள் - கள்ளமிலா

406 மாதே யனைத்தும் வருந்தாது பெற்றவளு
மாதேய மற்றவளே யாதாரங் - கோதேயா

407 வன்னையவ ளேயுலகுக் காக்க மெனக்கோடி
பின்னையது நாம்பெற்ற பேறுகா - ணென்ன

408 வென்னையு மருகே யிருக்கவைப்பீ ரென்னப்
புன்னையு மலர்க்குழலார் பூவாய் - நினையுந்

409 தரமோவத் தாயர் தமக்கேயல் லாதப்
புரமேவ யார்க்குப் பொருந்து - முரமேவ

410 நீயருகு மேவுவையே னீடுலகி லாகமெலாம்
போயவர்பூ ணுகிப் பொலியுமே - தூயமன

411 மானக்கஞ் சாறர் மகள்கோதை யன்றிமற்றோர்
தேனக்க கோதைகளுஞ் சென்றேறி - மேனக்க

412 பஞ்சவடி யாமே பரவொருத்தர் கல்லன்றி
விஞ்சவெவர் கற்களுமெய் மேவுமே - துஞ்சு

413 மிருவ ரெலும்பன்றி யெல்லா ரெலும்பும்
பொருவரிய மேனி புகுமே - மருவுசிலை

414 வேடனெச்சி லல்லாது வெங்கா னுழலுமற்றை
வேடரெச்சி லும்முணவாய் மேவுமே - நாடுமறை

415 நாறும் பரிகலம்போன் ஞாலத்தார் மண்டையெலா
நாறும் பரிகலமா நண்ணுமே - தேறுமொரு

416 மான்மோ கினியாய் மணந்ததுபோன் மற்றையரு
மான்மோ கினியாய் மணப்பரே - நான்மறைசொல்

417 வல்லா னவனையன்றி மாலா தியபசுக்க
ளெல்லாம் பிரம மெனப்படுமே - வல்லார்

418 திருவருட்பா வோடுலகிற் சேர்பசுக்கள் பாவுந்
திருவருட்பா வென்னச் செலுமே - பொருவா

419 வரமணிமா டத்தா வடுதுறைவா ழுஞ்சுப்
பிரமணிய தேசிகன்போற் பேண - வுரனமையா

420 வெல்லாரு மெய்க்குரவ ரென்று வருவாரே
நல்லாயென் சொன்னய் நகையன்றோ - சொல்லாதே

421 யோலையிட்ட வள்ளை யொருத்திபோன் மாதவத்தான்
மாலையிட்டாய் கொல்லோ மறவென்ன - மாலை

422 யிடுவேனிப் போதென் றெழலு முருகர்
தொடுமாலை யன்றே சுமக்க - வடுமாறில்

423 வேழஞ் சிதைத்ததுகொன் மேதகுமூக் கோர்மயிற்குத்
தாழவரி வித்துச் சமைந்ததுகொல் - வாழி

424 திருமான் முகத்திற் றிருக்கா யதுகொல்
பொருமானின் கைத்தொடையிற் பூண்பூ - வெருவாத

425 கண்ணப்பர் பாதங் கமழ்செருப்புத் தோயுமென
வெண்ணப் படுவ திதற்குண்டோ - கண்ணன்முழந்

426 தாளில் விசயன்முன்னாட் சாத்தியபூ வோவிந்த
நாளினின்கை மாலை நறியபூ - வாளா

427 விருத்தியென்று ளெண்ணியது மிப்படியோ வென்று
விருத்தியுறச் சென்றமன மீட்டாள் - பொருத்தி

428 மடக்கினான் வின்னாண் மதவேள் சினத்தை
யடக்கினான் றேர்ப்பி னடைந்தான் - விடற்கரிய

429 செங்கைநடத் தாரப்பாற் றேர்செலுத்தல் கண்டந்த
நங்கைமனை நோக்கி நடந்தாளோர் - மங்கை

மங்கை.

430 திரையிற் பிறவாத தெள்ளமுத மோங்கல்
வரையிற் பிறவா வயிரந் - தரையிற்

431 பிறந்த மதியமைந்தர் பேராசை கொள்ளச்
சிறந்த பசுங்காம தேனு - வுறந்த

432 புரிகுழல் கட்டவிழ்க்கும் போதா டவர்த
மரிய மனமுங்கட் டவிழ்ப்பா - டெரியமுடி

433 செய்துமலர் சேர்த்துச் செருகும்போ தேபனித்தல்
செய்யுயிருஞ் சேர்த்துச் செருகுவாள் - வெய்யவிட

434 முண்டா னுமிழ்ந்தான்கொல் லோவென்று மால்பிரமன்
கண்டா னடுங்குமிரு கண்ணினா - டண்டாமை

435 கொண்டமைந்தர் நெஞ்சங் குடிபுகுந்தா டப்பொன்னாற்
கண்டதிரு வூசலெனுங் காதினா - ளண்டம்

436 வளைத்தாள் கதிர்மதிய மாக்களங்க மாற்றி
முளைத்தா லனைய முகத்தா - டிளைத்தபெருங்

437 காமரச மெல்லாங் கமழ வடைத்தசிறு
தாமச்செப் பென்னுந் தனத்தினா - ளைமமறத்

438 தன்னை யறிந்துபரந் தானேயென் பான்பொருவத்
தன்னை யறிந்து தருக்குவாள் - கொன்னே

439 பெருத்து முலைகணமைப் பின்பு வருத்தத்
திருத்துமெனத் தேர்ந்த விடையாண் - மருத்துப்

440 பொதியமலை நின்றுவரப் போயேற்பாள் பின்ன
ருதியமைதீப் போல்வ துணராண் - மதிய

441 மெழுந்துவரக் கண்டுவப்பா ளீதே வடவைக்
கொழுந்துபொரு மென்றுட் குறியாள் - செழுந்தாரைக்

442 கோவை புனைந்து குவட்டருவி பொத்ததென்று
பூவை யொருத்திசொலப் புந்திசெய்வா - டாவிக்

443 கரைகட வாத கடல்போல வன்னை
யுரைகட வாமே யுறைவாள் - வரையின்

444 பகையிந்தி ராணி பணைமுலைதோய் காலந்
தகையினுளங் கொள்ளுந் தகையா - ணகைசெய்

445 மனைமுகப்பி லெண்ணின் மடவாரோ டெய்தி
நினையு நிலாமுற்ற நின்று - புனையு

446 முலைப்பகை யாகி முளைத்த துணர்ந்து
தலைப்பகை கொண்டுசெங்கை தாக்கு - நிலைப்பென்னப்

447 பந்தடித்து முத்தம் பலமுகத்து நின்றுதிரச்
சந்தத் தனத்துமுத்தந் தாம்பிறழ - நந்த

448 விளையாடு போதில் விரும்புதாய் வந்து
வளையாடு செங்கைமட மாதே - யிளைய

449 ரியங்கு தலைமாற்று மெண்ணமோ மேலாய்
வயங்கு துறவுமடி யாதோ - பயங்கொள்

450 கருப்புவில்லி காணிற் கனகமய மான
பொருப்புவில்லி யோடு பொரவோ - விருப்பார்

451 திருமங்கை கண்டறிஞர் செந்நா வகத்த
மருமங்கை யாதன் மதித்தோ - வருமந்த

452 பொன்னே மணியே புறவே பசுமயிலே
மின்னேயிவ் வாடல் விடுகென்ன - வந்நேர

453 மண்டம் புவன மனைத்தும் விளராமற்
கண்டங் கறுத்த கருணையான் - பண்டு

454 வெருவருமா லாதிவிண்ணோர் மெய்வலியெ லாஞ்சிற்
றொருதுரும்பு கொண்டளந்த வும்பன் - பெருவரையைப்

455 பண்டு குழைத்த படிகருதா தம்மைசெங்கை
கொண்டு தழுவக் குழைந்தபிரான் - மண்டுபுலா

456 லேங்கொடுக்க மாட்டாதென் றெங்கட் குரைத்தொருவர்
தாங்கொடுக்கும் போதெல்லாந் தானுண்டா - னீங்கிடுமின்

457 பொன்மேனி மாதர் புணர்திறத்தை யென்றுரைத்துத்
தன்மேனி யோர்பாலோர் தையல்வைத்தான் - பன்மாடக்

458 கூடல் வழுதியடி கொண்டு பலவுயிர்க்குஞ்
சாட லமையாத் தழும்பளித்தா - னாடு

459 மொருவன் றலையை யுகிராற் றடிந்து
பொருவில்கழு வாயெவர்க்கும் பூட்டுந் - திருவ

460 னறிந்தடிமை செய்வார்பொன் னூடை யுடுக்கச்
செறிந்தசிறு தோலுடுக்குஞ் செல்வ - னறந்தழைய

461 வெல்லா முடையா னிறத்தல் பிறத்தலிவை
யில்லானென் றெல்லாரு மேத்தெடுப்பான் - வல்ல

462 விடைமருத வாண னிமைக்குந் திருத்தே
ரடையவணித் தேகண் டணைந்தாள் - புடைவிரவு

463 தையலா ரோடு தடங்கைகுவித் தாண்மாலு
மையலார் மேனி வனப்புணர்ந்தா - ளையோ

464 முளையாத காம முளைத்ததுசெங் கைவில்
வளையா மலர்சொரிந்தான் மார - னிளையா

465 ளுடுக்கை நெகிழ வுறுவளைகை சோர
விடுக்கை யடைந்து மெலிந்தாள் - கடுக்கை

466 புனைவான் கடைக்கண் பொருத்தினான் போல
நினைமூர ரேற்றி நெடுந்தேர் - தனையப்பா

467 லுந்தினான் வேளுமுடன் றென்றுபத்து நூறுமேற்
சிந்தினா னாகிச் செருச்செய்தான் - முந்தித்

468 தலையமைந்த தோழியர்கைத் தாங்கத் தளரு
தலையடைந்தாண் மாளிகையுட் சார்ந்தா - ணிலைநின்று

469 காதள வோடுங் கருங்கண்ணா ரெல்லாருஞ்
சீதள மெல்லாஞ் செயப்புகுந்தார் - போத

470 வவைக்குப் பொருளா யயர்தல்கண்டு காமச்
சுவைக்குத் தகுதோழி சொல்வா - ளவைக்குந்

471 தகச்செய்தா னீங்குந் தகாமைசெய்தாற் பெண்கா
ணகச்செய்வ தாகு நலமோ - மிகப்படுத்த

472 மார்தளிரை நீக்கி மகாலிங்க மேயமரு
தார்தளிரைச் சேர்த்தா லறமுண்டே - கார்த

473 வணிதரளம் போக்கி யமரர்பெருமான்கண்
மணிபுனையிற் சார்தம் வருமே - பிணிசெய்

474 பனிநீரைப் போக்கிப் பரமர்சடை மேய
பனிநீரைப் பெய்தல் பயனே - கனிசந்

475 தனம்போக்கி யையர் தவளப் பொடியின்
மனம்போக்கு மின்மறுக்க மாட்டாள் - சினந்த

476 பலமொழியா லென்ன பயன்மருத ரென்னு
நலமொழியே யென்று நவில்வீர் - குலவுசெய்ய

477 வாம்பன் மலரை யகற்றி யமையமரு
தாம்பன் மலரை யணிந்திடீர் - மேம்படிவை

478 யல்லாற் பிறிதுசெய லத்தனையுந் தக்கன்மக
மொல்லாதே யாயதிற மொக்குமே - யெல்லா

479 மறிவீரென் றோத வறைந்தமொழி யெல்லாஞ்
செறிநோய் மருந்தாய்த் திருந்த - வெறியார்

480 தடந்தார்க் குழலியுயிர் தாங்கி யமர்ந்தாள்
விடந்தா னெனப்பொலியும் வேற்கண் - மடந்தைவலி

## மடந்தை.

481 முற்றிச் சிலேவேண் முதுசமரா டற்குயர்த்த
வெற்றிக் கொடியின் விளங்குவாள் - பற்றுமல

482 ரைங்கோ லுடையா னரசு நடாத்திக்கொள்
செங்கோ லனையபெருஞ் செவ்வியா - டிங்கட்

483 குடையான் மகுடமெனுங் கொங்கையளன் ஞனே
யுடையா னெனப்புகறற் கொத்தா - ளிடையா

484 வனைய னிதமரு மத்தாணி யென்னுந்
தனைநிகரி லல்குற் றடத்தாள் - புனையுங்

485 கிழக்குமுத லெத்திசையிற் கிட்டினுஞ்சோர் வித்தாள்
வழக்கறுக்கும் பார்வை வலியான் - முழக்கறிவி

486 னேய்ப்பெய் துறுமுனிவ ரெல்லார் தவங்களையும்
வாய்ப்பெய் திடுங்கவவு வாணகையாள் - பார்ப்பினிய

487 வோதியாஞ் சைவலத்தா லொண்முகமாந் தாமரையாற்
கோதியலா மைக்கட் குவளையா - லாதரச்செவ்

488 வாயாங் கழுநீரால் வண்காதாம் வள்ளையா
னேயார் கபோலமெனு நீர்நிலையா - லேயு

489 மதரமாஞ் செங்கிடையா லங்கழுந்தாஞ் சங்கால்
பொதியுமுலை யாம்புற் புதத்தா - லிதமாய

490 வுந்தி யெனுஞ்சுழியா லொத்தமடிப் பாமலையாற்
சந்தி பெறுமுழந் தாண்ஞெண்டா - லுந்துகணைக்

491 காலாம் வராலாற் கருதப் பொலிந்தபுறங்
காலா மொளிர்பொற் கமடத்தா - லேலாவெங்

492 காமவிடாய் பூண்டு கலங்கா டவர்மூழ்கி
யேமமுறும் வாவி யெனப்பொலிவா - டாம

493 மணிநிலா முற்றத் தளவிலார் சூழ
மணிநிலா வெண்ணகையாள் வைகிக் - கணிதமறத்

494 துன்றுபன்மே லண்டத் தொகையுங் கடந்தப்பாற்
சென்று பொலியுந் திருமுடியு - மொன்றுதிற

495 லென்று மதியுமிவை யென்னப் பகலிர
வென்றும் விளக்கு மிருவிழியு - நன்றமைய

496 மும்மை யுலகு முகப்பவே தாகமங்கள்
செம்மை யுறவிரித்த செவ்வாயு - மம்ம

497 வடுக்கு மிரவு மவிரும் பகனு
முடுக்கும்வளி வீசுமென் மூக்குந் - தடுப்பரிதா

498 யெந்தப் புவனத் தெவர்கூறி னுலுமஃ
தந்தப் பொழுதேயோ ரஞ்செவியு - முந்தவரு

499 காவருநங் கூற்றடங்கு காரா கிருகமென்று
தேவர் பரவுந் திருக்கழுத்து - மேவு

500 பெருந்திசைப்போக் கன்றிப் பிறிதில்லை யென்னப்
பொருந்தி வயங்கும் புயமுந் - திருந்திய

501 விண்ணுலகுங் கீழுலகு மேல்கீழு மாகவைத்து
மண்ணுலகை மேயாய் வயங்குரையு - நண்ணு

502 மெழுபா தலமு மிகந்துமால் கண்டு
தொழுமா றிலாத்தாட் டுணையு - முழுதாள்வோன்

503 மன்னு மிடைமருத வாண னருட்பெருமை
யுன்னுந் திறத்தா ளொருத்தியைப்பார்த் - தென்னே

504 யிடைமருதென் றோது மிதன்பெருமை யாரே
யடைய வகுப்பா ரணங்கே - யுடையவரே

505 பேணு மருதின் பெருமை யெவருரைப்பார்
காணுந் தரமில் கயிலைகாண் - பூணுமன்ப

506 ரெல்லாரு நாவரச ரென்ன வடநாட்டிற்
செல்லா திருக்கத் திருந்தியதா - னல்லா

507 யிதுகண்ட நாமற் றெதுகாண்டல் வேண்டு
மதுகண் டவரா யமைந்தே - சதுர

508 ருருத்திரர்க ளோர்பன் னொருகோடி யாரும்
பொருத்த முறவந்து போற்றுந் - திருத்தகுசீ

509 ரிந்தத் தலமேய தித்தல மான்மியமற்
றெந்தத் தலத்திற் கியைந்துளது - நந்த

510 விழிதலை யொன்றனைக்கை யேந்தியொரு வேந்த
னழிதுயர் பூண்டதெங்கென் றுயா - யிழிதருநாய்க்

511 கட்டந் திருமுற் கலப்பதோ வென்றிறைகை
யிட்ட முடனெடுத்த தெத்தலத்தில் - வட்டமதில்

512 சூழுமது ராபுரியிற் றொட்ட பழிநீக்கி
வாழும் படிபுரிந்த மாத்தலம்யா - தேழுலகும்

513 போற்றுமொரு தன்னுருவைப் பொன்னுருவி னிற்புகுத்தி
யேற்றும் பெருமையுற்ற தெத்தலங்காண் - கூற்றமஞ்ச

514 மிந்தத் தலத்துதிக்க வெத்தவஞ்செய் தோமென்று
சந்தக் குயின்மொழியா டாளுரைத்து - நந்தக்

515 களிக்கும் பொழுது கசிந்தார்க்கே யின்ப
மளிக்கும் பிரான்றே ரணுக - வெளிக்கணந்த

516 மாதரொடும் வந்து வணங்கினாள் காண்பார்க்கு
மோத மளிக்கு முகங்கண்டாள் - காதற்

517 றிருத்தோளுங் கண்டா டிருமார்புங் கண்டாள்
பெருத்தாண் மயக்கம் பெருவே - ளுருத்தான்

518 பலகணைதொட் டெய்தானப் பைங்கொடிதான் சோர்ந்து
சிலதியர்மேல் வீழ்ந்து திகைத்தா - ளலமருவா

519 ளென்னை யுடையா னிவள்செய்கை நோக்கானாய்
நன்னயத்தே ரப்பா னடத்தினான் - பின்னைத்

520 தொடர்ந்து செலுமதனன் றோகைமேற் பல்லே
வடர்ந்து செலப்பெய் தகன்றான் - கிடந்தவளாய்ச்

521 சோருங் கருங்குயிலைத் தோழியர்கள் கைத்தாங்கிச்
சாரு மனையிற் றகப்புகுத்தி - நேரு

522 மலரணையின் மேற்கிடத்தி யான்ற பனிநீ
ருலர்தர மேன்மேலு மூற்றிக் - குலவுநறுஞ்

523 சாந்தமுங் கோட்டித் தகுசிவிறிக் காற்றெழுப்பக்
காந்துவது கண்டு கலங்கினாண் - மாந்தளிர்மு

524 னையவுப சார மனைத்துஞ் செயலொழிமி
னேயமுள தேலென்பா ளீவீரென்று - தூய

525 மணிவாய் திறந்தாண் மருதரே யும்மைப்
பணிவாருக் கீதோ பயன்கா - ணணியல்

526 சடைமே லதுகொடுத்தாற் றத்துதிரைக் கங்கை
விடைமேலீர் நும்மை வெறுப்பா - ளுடையு

527 மிடத்தோ ளதுகொடுத்தா லெவ்வுலகு மீன்ற
மடப்பாவை கோபநுமை வாட்டு - மடுத்த

528 வலத்தோ ளணியன் மருவ வளித்தாற்
சொலத்தா னொருவருண்டோ சொல்லீ - ருலத்துயர்தோள்

529 வெய்ய சிலையாளுன் மென்றுமிழ்வ தாயிருந்தாற்
செய்ய மணிவாய் திறந்தருள்வீ - ரையரே

530 யார்த்தார் கழைவண் டமைத்தொரு பூத்தொடுக்கப்
பார்த்தா லலவோகண் பார்த்தருள்வீர் - சீர்த்தகதிர்

531 பன்மோதி னீருயிரைப் பாற்றிடுவ லென்றுதலை
கன்மோதி னாலன்றோ கைதருவீர் - நன்மையெனுங்

532 கோளெறிந்த தந்தை கொடுவினையை நோக்கியவன்
றாளெறிந்த போதன்றோ தாரருள்வீ - ராளும்

533 பிரியமுடை யீரென்று பேரருள்செய் வீரென்
றிரியுமுயிர் தாங்கி யிருந்தா - ளரிவை

அ ரி வை.

534 யிளையான் குடிமாற ரெய்ப்பொழிப்பான் சென்று
முளைவாரும் போதுநிகர் மோகம் - விளைகுழலா

535 டேவர்க்கூ றுக்கினரைத் தேர்வலெனுங் கண்ணப்பர்
கோவச் சிலைநேர் கொளுநுதலாள் - காவற்செய்

536 நெல்லுண்டாள் பாலுண்சேய் நீக்கலற மென்றேற்றூர்
கொல்லுண்ட வாள்போற் கொடுங்கண்ணாள் - சொல்லரசர்

537 பேராலப் பூதிப் பெயரா ரமைத்ததடத்
தோராரும் வள்ளை யெனுஞ்செவியாள் - சீரார்

538 கணநாதர் நந்தவனக் கட்சண் பகம்போன்
மணநாறு நாசி வடிவாள் - புணருமருள்

539 வாயிலார் தொன்மயிலை வாரித் துறைப்பவளச்
சேயிலார்ந் தோங்குகுணச் செவ்வாயா - ணேயமுற

540 முன்னங்கண் ணப்பர் முறித்தமைத்த கோற்றேனி
லின்னஞ் சுவைகூரு மின்மொழியா - ளன்னம்

541 பயில்கட ளுகையதி பத்தர் துறையிற்
பயில்வெண் டரளமெனும் பல்லா - ளியலருளப்

542 பூதியார் முன்னம் புரிந்த தடக்கமலச்
சோதியா மென்னச் சுடர்முகத்தா - ளாதியருட்

543 சம்பந்த மேவவொரு தண்டீச ஞர்நிறைத்த
கும்பந்தா மென்றேத்து கொங்கையாள் - வம்பவிழ்தா

544 ராளுயர் முன்ன மரிந்தெடுத்துக் கொண்டவே
யேநாமென் றேது மிணைத்தோளா - ளாளுத

545 மூல ருறையமிழன் முற்றக் கொடுத்துவப்பி
ளுலரசின் பத்திரம்போ லல்குலாண் - மேலா

546 யிலகியசம் பந்தரோ டேற்ற வமணர்
குலமெனத் தேயுமருங் குல்லா - ணலவரசாஞ்

547 சிட்ட ரமுதுசெயத் திங்களூர் நாவரசு
தொட்ட கதலித் துடையினா - ளிட்ட

548 மடுத்த வதிபத்த ரங்கை யெடுத்து
விடுத்தவரால் போற்கணைக்கால் வீறுண் - மடுத்தவருட்

549 கண்ணப்பர் கையிற் கலந்ததவ நாய்நாவின்
வண்ணப் பொலிவின் வருபதத்தாள் - வண்ணஞ்

550 சிறக்கு மொருசித் திரமண்ட பத்தி
னிறக்கும் குழலார் நெருங்கப் - பறக்கு

551 மளியினங்கள் பல்ல வளகத் தலம்பக்
களிமயிலிற் சென்று கலந்து - தெளிய

552 விருக்கும் பொழுதோ ரெழில்விறலி வந்து
பருக்குமூலே யால்வளைந்த பண்பின் - முருக்கிற்

553 சிவந்ததா டாழ்ந்து திருமுன்னர் நிற்ப
நிவந்த கருணையொடு நேர்பார்த் - துவந்து

554 வருபாண் மகளே வடித்தகொளை வீணை
யொருவாது கொண்டருட்பே றுற்றூர் - திருவாய்

555 மலர்ந்ததிருப் பாட்டனைத்தும் வாய்ப்பப்பா டென்ன
வலர்ந்த முகத்தி னவளு - நலந்தழையும்

556 பத்தர்யாழ்ப் போர்வையப்பாற் பாற்றி யெதிரிருந்து
வைத்த நரப்பு வளர்ந்தெரிந்து - புத்தமுத

557 வெள்ளம் படர்ந்தென்ன வேணுபுர நின்றெங்க
ளுள்ளம் படர்ந்த வொருதமிழும் - பள்ளப்

558 பரவை சுமந்தமணர் பாழியிற்கல் வீழ்த்தா
தரவை யடைந்த தமிழு - முரவங்

559 குரித்தவா ரூர்த்தெருவிற் கூற்றுதைத்த கஞ்சஞ்
சரித்திடச் செய்த தமிழும் - பரித்தவுயிர்

560 தன்னடியே வேண்டத் தருபரமற் கோர்வழுதி
தன்னடி வாங்கித் தருதமிழு - மன்னுபொது

561 வாடி யருளி னமர்தலங்கட் கொவ்வொன்றுப்
பாடி யருளியவெண் பாத்தமிழு - நீடியதோர்

562 பேயேயென் றேதப் பிறங்கியு நம்பெருமான்
றாயேயென் றேதத் தருதமிழு - மாயோர்பா

563 னீங்க லரிய நெடுந்தகைநீங் காதமரு
மோங்கன் மிசையே யுலாத்தமிழுந் - தேங்கரும்பி

564 னுற்றூறு தரிதா முறுசுவையோ பற்றறுப்பார்
பற்றூறுவென் றோதுமிசைப் பாத்தமிழு - முற்றுமருள்

565 பூண்டுவாழ்த் தோதும் புராணன் விருப்புறப்பல்
லாண்டுவாழ்த் தோது மருந்தமிழும் - வேண்டு

566 பிறவுமெடுத் தோதப் பெருமருத வாணற்
குறவு நனிசிறந் தோங்கத் - துறவு

567 சிதைக்கும் விழியாள் சிறந்தமருங் காற்கூற்
றுதைக்குந் திருத்தா ளுடையான் - பதைப்புற்

568 றதிரோதை யிற்பல் லனைத்துங்கொட் டுண்ணக்
கதிரோன் முகத்தறையுங் கையா - னெதிராகின்

569 றெள்ளுந் திறம்படைத்த தென்னென் றெருதலையைக்
கிள்ளுந் திறம்படைத்த கேழுகிரான் - றுள்ளுமொரு

570 மீனவிழி சூன்ற விரலான் றிரிபுரங்கள்
போன வெனப்புரியும் புன்னகையான் - வானம்

571 வழுத்து மிடைமருத வாணன்றேர் தேமாப்
பழுத்து விளங்குமவட் பம்ப - வெழுத்து

572 முலையா ளெழுந்துதிரு முன்ன ரடைந்தாண்
மலையா ளெனுந்தாயை வாமத் - தலையாள்

573 பெருமான் றிருவுருவம் பெட்புற்றுக் கண்டா
டிருமா னொருத்திகொலோ செய்தா - ளருமைப்

574 பெருந்தவ மென்றாள் பெருமூச் சுயிர்த்தாள்
வருந்தமத வேள்விடுக்கும் வாளி - பொருந்தாளாய்

575 நேரே தொழுது நிலாவை வருத்துகவென்
றூரே சுமப்பா ரறைதிரே - பாரறிய

576 வன்றுதேய்த் தாரென் றறைவா ரதைப்புதுக்க
வின்றுதேய்த் தால்வருவ தெப்பழியோ - குன்று

577 குழையக் குழைத்ததிறங் கொள்ளமுலைக் குன்றுங்
குழையக் குழைக்கினன்றோ கூடுங் - கழைமதவே

578 ளங்க மெரித்தீ ரவன்சிலைநா ணம்பாய
வங்க மெரிப்பதனுக் காற்றீரோ - பொங்குவளி

579 யம்பு புணர வமைத்தீர்தென் காற்றைமத
னம்பு புணர வமைத்திலீ - ரம்பு

580 புணரினது வேறாகிப் போழுமோ மேனி
யுணரி னஃதெவருக் கொப்பாங் - குணமிலா

581 வந்தக் குரண்டத் திறகமைத்தற் காயசடை
யிந்தக் குயிலிறகை யேலாதோ - மூந்தத்

582 தனிநீ ரடக்குஞ் சடாமுடியில் வெய்ய
பனிநீ ரடக்கப் படாதோ - முனிவிடமா

583 மன்ன விருளை யடக்குந் திருக்கண்ட
மின்ன விருளடக்க வெண்ணாதோ - சொன்னமைக்கு

584 வாய்திறவீர் பூம்புகார் வாழ்வணிக ரில்லத்து
வாய்திறவீ ரென்னின் வருந்தேனே - மாயவனார்

585 கண்ணைச் சுமந்த கழற்காலீர் சென்னிமேற்
பெண்ணைச் சுமந்ததென்ன பேதைமைகாண் - மண்ணைமுழு

586 துண்ணும்விடை யீரென் றுரையாடி நிற்கும்போ
தெண்ணு முடையா ரிளநகைசெய் - தண்ணுகன

587 கத்தேரை யப்பாற் கடாவினு ரப்போது
முத்தேர் நகைமாது மூர்ச்சித்தாள் - சித்தம்

588 பருவந் தழிதருங்காற் பாங்கியர்க டாங்கித்
திருவந்த மாளிகையிற் சேர்த்து - மருவந்த

589 பாயற் கிடத்திப் பசுஞ்சாந் தளாய்ப்பனிநீ
ரேயப் பொருத்தியிருந் தெல்லோரு - நேயத்

590 திடைமருத வாண னிடைமருத வாண
னிடைமருத வாண னெனலு - மடையு

591 மரிவை யுயிர்தாங்கி யாற்றியொரு வாறு
பரிவை விடுத்தமர்ந்தாள் பைம்பூட் - டெரிவைமறை

தெரிவை.

592 வாசியான் கண்டம் வதிவதைநூற் றேமணநெய்
பூசிமுடித் தன்ன புரிகுழலாண் - மாசிலொளிப்

593 பாதி மதியம் படர்சடைநீத் திங்கமரு
நீதி யெவனென்னு நெற்றியா - ளாதிநாள்

594 விண்ட கமருள் விடேலென் றுலிதோற்றக்
கொண்ட வடிவகிர்போற் கூர்ங்கண்ணு - ளண்டமுழு

595 தீன்றவொரு பாற்கை யெடுத்தமல ரைந்துளொன்றாய்த்
தோன்ற விளங்குஞ் சுடர்முகத்தா - ளான்ற

596 நெடிய கடற்புகுந்து நீள்வலைவீ சிக்கொள்
கடிய சுறுத்தலைபோற் காதாண் - முடிவிற்

597 குருவடிவங் கொள்ளக் குறித்தடியர் சாத்து
மருமலரே போலுஞ்செவ் வாயா - ளொருவரிய

598 தன்போல் வெறுதுமதன் றன்னுஞென் றேவெறுத்த
கொன்பூ வனைய கொடிமூக்கா - ளன்பர்வரு

599 நாண்முன் குருகாவூர் நன்கமைத்த நீர்நிலையே
காணென் றுரைக்குங் கபோலத்தாள் - யாணரிசை

600 மூட்டு மிருவர் முயன்றமர்தா னத்தழகு
காட்டுங் குழைபோற் கழுத்தினு - ளூட்டுமொரு

601 முத்தென் றுரைக்க முயன்றுதனை யீன்றதா
யொத்த தெனவுரைக்கு மொண்டோளா - ளத்தவுடம்

602 பேத்தமிளிர் பச்சை யினிதளித்த தானத்துப்
பூத்தசெய்ய காந்தள் பொருஉங்கையாள் - கோத்தபெரு

603 வெள்ளத்துத் தற்றேற்ற மேன்மிதந்த கும்பமென்றே
யுள்ளத் தகும்பொ னெளிர்முலையாள் - வள்ளற்

604 றாத்தின் மரீஇய தனக்குநிழ னல்கான்
மரத்தினிலை போலும் வயிற்றாள் - புரத்தின்

605 மடங்கூர் முனிவர் மடிக்கவிட்ட பாம்பின்
படம்போ லகன்றநிதம் பத்தா - டடங்காமர்

606 வாழ்வளங்கூர் நீலி வனத்தி னிழல்கொடுத்துச்
சூழ்கதலி யென்று சொலுந்துடையா - ளாழ்கடல்சூழ்

607 வையம் புகழ்காஞ்சி வைப்பினிழற் றுஞ்சூதச்
செய்யதளிர் போற்சிவந்த சீறடியாள் - பையரவ

608 வல்குன் மடவா ரளவிலர் தற்சூழ்ந்து
புல்கும் வகையெழுந்து பொம்மன்முலை - மெல்கு

609 மிடைக்கிடுக்கண் செய்ய விலங்குமணிப் பந்தர்
படைத்தநிழ லூடு படர்ந்து - புடைத்த

610 விளமாம் பொதும்ப ரிடைக்கனகத் தாற்செய்
வளமாருங் குன்ற மருவி - யுளமார்

611 விருப்பி னமர்ந்தவளை மின்னுருட் கொங்கைப்
பருப்பதத்தோர் தோழிமுகம் பார்த்துத் - திருப்பதத்தான்

612 முன்ன மரக்கன் முடிகணெரித் தார்பச்சை
யன்னங் கலப்புற் றமரிடத்தார் - சொன்ன

613 வரைகுழைத்தா ராடல் வரம்பில்லை யேனு
முரைசிறக்குஞ் சில்ல வுரைப்பா - மரைமலர்க்கண்

614 விண்டு பணிந்திரப்ப வேதாவைக் காதலனைக்
கொண்டு மகிழ்தல் குறித்தளித்தார் - வண்டு

615 படுமலரோன் றாழ்ந்திரப்பப் பைந்துழா யண்ண
னெடுமகவாய்த் தோன்றுவர நேர்ந்தார் - வடுவின்

616 மலரொன் றெடுத்திட்ட மாரவேண் மேனி
யலர்செந் தழலுக் களித்தார் - பலக

617 லெடுத்துநா டோறுமெறிந் திட்டுவந்தார்க் கின்ப
மடுத்த பெருவாழ் வளித்தார் - கடுத்த

618 சிறுவிதி யென்பவன்முன் செய்புண் ணியத்தைத்
தெறுதொழின்மா பாதகமாச் செய்தா - ருறுதிபெறக்

619 கண்ணியதண் டீசர்புரி கைத்தமா பாதகமா
புண்ணியமே யாகப் பொருத்தினார் - திண்ணியமா

620 வென்றிக் கனக விலங்கல்குழைத் தாரொருபெ
ணொன்றித் தழுவ வுரங்குழைந்தார் - நன்று

621 மொருபா லொருவடிவ முற்றாரென் னேமற்
றொருபா லொருவடிவ முற்றார் - வெருவாத

622 வெய்ய பகையாம் விடவரவு மம்புலியுஞ்
செய்ய சடாடவியிற் சேரவைத்தார் - வையம்

623 பழிச்சுபெரு வாழ்வு பழிச்சற் களிப்பா
ரிழிச்சுதலை யோடேற் றிரப்பார் - வழுத்துசித

624 நல்லாடை யும்புனைத லாட்டுவார் மற்றுஞ்செங்
கல்லாடை யும்புனைதல் காட்டுவார் - பொல்லாத

625 மாலூரு மூன்றூர் மடிய வளங்கெடுத்தார்
நாலூர் பெருகுவள நன்களித்தார் - மேலா

626 ரருத்தி செயப்பொலியு மையா றிகவா
திருத்திய வாறு றிகப்பார் - விருத்தி

627 மணம்வீசு கைதை மலரை மலையார்
மணமி லெருக்கு மலைவார் - குணமாய

628 பொன்னு மணியும் புனையார் நரம்பெலும்போ
டின்னும் பலவு மெடுத்தணிவார் - முன்னமா

629 றேடப் பதங்காட்டார் தேடிப்போ யாரூரன்
பாடற் றலைமேற் பதித்திடுவார் - நாடிமிவ

630 ராட லெவரா லறியப் படுமென்று
நாட லுடையா ணவின்றிடுங்கா - லீடு

631 மலைவந்தா லென்ன மருதர் திருத் தேரத்
தலைவர் ததுகண்டா டாவா - நிலைவந்த

632 வண்ணமடைந் தாரின் மகிழ்ந்தாள் விரைந்தெழுந்தா
ளண்ணன்மணித் தேர்மு னணுகினு - ளெண்ணம்

633 பதிக்குந் திருமுகமும் பாரத்திண் டோளுங்
கதிக்கு மகன்மார்புங் கண்டாள் - விதிக்க

634 முடியா வனப்பு முழுதுந் தெரிந்து
கொடியா யிடைகை குவித்தா - ணெடியானு

635 நான்முகனு மின்னு நணுகருமெய்ப் பேரழகைத்
தான்முகந் துண்ணத் தலைப்பட்டாண் - மான்முகந்தா

636 ளந்தப் பொழுதே யடல்வேள் கழைச்சிலைநாண்
கந்தப் பகழிபல காற்றியது - முந்தத்

637 தடுமாற்றங் கொண்டா டவாமயக்கம் பூண்டா
ணெடுமாற்றம் பேச நினைந்தாள் - கொடுமை

638 மடுத்தசெய லின்மருத வாணரே நும்மை
யடுத்தவெமக் கென்னோ வளித்தீ - ரடுத்தநுமைக்

639 கும்பிட்ட கைம்மலர்கள் கோலவரி வண்டிமுத்த
னம்பிட்ட மாமோ நவிலுவீர் - நம்பிநுமைக்

640 கண்ட விழியழகு காட்டுங் கரியழியக் [றிக்
கொண்டன் மழைபொழிதல் கொள்கைகொலோ - தண்டலின்

641 காணும் விருப்பங் கடவ நடந்தபதம்
பூணு நடையிழத்தல் பொற்பாமோ - பேணு

642 முழைப்புகழ்ந்த செவ்வா யுறுகைப்பு மேவி
யமைத்தவுணு நீங்க லறமோ - வமைத்தடந்தோள்

643 செய்ய நிறநுந்தோள் சேர நினைந்ததற்குப்
பையப் பசந்த படியென்னே - யையரே

644 வேய்முத்தா நும்மை விரும்பியவென் கொங்கைகட
லாய்முத்தஞ் சூட லடுக்காதோ - வாய்தோ

645 ணிதிய மலையை நினைத்தவென யிந்தப்
பொதியமலைக் கால்வருத்தப் போமோ - துதியமைநும்

646 பார்வையடைந் தேற்குப் பனிமதியம் வேறுபட்டுச்
சோர்வையடை யத்தழலாய்த் தோன்றுமோ - நீர்செ

647 யருள்யா வருக்கு மருளாய் முடிய
மருளா யெனக்கு வருமோ - தெருளாமற்

648 காதலித்த தன்றே கருணையீர் நும்மழகின்
காத லொருத்திக்கே காணியோ - வாதலுற

649 வொன்று முரையீ ருரைத்தால் வருபழியென்
னென்று பலவு மெடுத்தோதிக் - கன்று

650 கழலவிழி முத்தங் கழல மனமுஞ்
சுழல விழுந்து துடித்தா - ளழலொருகை

651 யேந்திறு னென்று மிசையானைத் தேர்நடத்த
வேந்திறு ராகி யிகுளையரிற் - போந்தார்

652 விருப்ப வமளி மிசைக்கிடத்தி வெய்ய
வுருப்பர் தவிர்த்திடுத லுன்னிப் - பொருப்பா

653 மிடைமருதின் சீரு மிடைமருத மேவ
லுடையதலச் சீரு முவந்து - புடைவிரவு

654 தீர்த்தப் பெருஞ்சீருஞ் சேவுகைக்கு மாமருத
ரேர்த்தபெருஞ் சீரு மெடுத்தியம்பப் - போர்த்தமயல்

655 வாரிக் கொருபுணையாய் மற்றவைவாய்ப் பச்சற்றே
மூரிக் குழலாண் முகமலர்ந்தாள் - பேரிளம்பெ

## பேரிளம்பெண்.

656 ணென்பா ளொருத்தி யிளம்பருவத் தாரனையென்
றன்பா லழைக்க வமைந்துள்ளா - ணன்புவியோர்

657 நாடு கதிருதய நாழிகையைத் தென்னுங்காற்
கூடுமிருட் டன்ன குழலினு - ணீடு

658 கதிருதய மாதல் கருதி யடங்கு
முதிரு மதிபோன் முகத்தாள் - பிதிர்வறவெங்

659 கண்ணூர்மை தீட்டுகென் றுகைகளுக்கோர் வேலையிட
லெண்ணு திருக்கு மிணைவிழியாள் - பண்ணூர்பொன்

660 னூலையன்றி வேறுவே றுள்ளனவெ லாமணிதன்
மாலே மறந்த வடிகாதாள் - சாலுமடைப்

661 பையேந் துவமென்று பண்பினுமிழ் காற்சிலர்தங்
கையேந்து செய்ய கனிவாயாண் - மெய்யே

662 முடியவுத்த ராசங்க முன்னுவ தல்லாது
தொடியில் விருப்பமுறுத் தோளாள் - கொடியிடைக்குச்

663 சேர வருத்தந் திருத்தியதா லுட்பெருநாண்
கூர முகஞ்சாய்ந்த கொங்கையா - ளாரமுலே

664 தாந்தளர்முற் சோராது தாங்குஞ் சலாகையென
வாய்ந்த வுரோமமணி வல்லியா - டோய்ந்தமையக்

665 கூடுமோர் பேழை குறித்துத் திறக்கவெழூந்
தாடுபாம் பின்படம்போ லல்குலா - ணீடுகண்டை

666 யொன்றேகொள் வீர ரொளிர்கால் பொருவப்பூ
ணொன்றே யுவக்கு மொளிர்தாளாள் - குன்றே

667 யிணையுமுலேத் தோழியரெண் ணில்லார் நெருங்க
வணையுமொரு வாவி யருகே - பிணையுங்

668 குளிர்பந்தர் சூழ்ந்து குலவ நடுவ
ணொளிர்மண்ட பத்தே யுறைந்தாள் - களிகூரச்

669 செவ்வாய் திறந்தாளோர் சேடி முகம்பார்த்தா
ளெவ்வாயும் வாயான்சீ ரேத்தெடுப்பா - ளொவ்வா

670 மருதவ னத்தன் மலேமகட்கு மாற்கு
மொருதவ னத்த னுடையான் - கருது

671 திருத்தவ னம்பன் சிலேயெடுத்தான் றேம்ப
விருத்தவ னம்ப னிறைவன் - பெருத்த

672 பருப்பத முள்ளான் பணியார்க்குக் காட்டத்
திருப்பத முள்ளான் சிவன்மால் - விருப்பன்

673 றுருத்தி யிடத்தான் றுணேயாக மேய
வொருத்தி யிடத்தா னொருவன் - விருத்தியற

674 லாலங்காட் டத்த னடல்காட்டி னன்வளங்கூ
ராலங்காட் டத்த னருட்பெருமான் - சீல

675 விருப்புத் தவரான் மிகப்புகழ்வான் மேருப்
பொருப்புத் தவரான் புராணன் - கருப்புவயற்

676 கச்சிப் பதியான் கனிந்துருகார் செய்பூசை
யிச்சிப் பதியா னிலையென்பா - னச்சன்

677 வெருவா விடையான் விரியும் படப்பாம்
பொருவா விடையா னுயர்ந்தான் - மருவாரு

678 ரெற்றம் பலத்தா னெனக்கொண்டா னேத்துதில்லைச்
சிற்றம் பலத்தான் சிவபெருமா - னுற்ற

679 விடைமருத வாணனுல கெல்லா முடையா
னடைய விருப்ப மமைத்த - மிடைசீர்

680 மருதவட்ட மான்மியம்போன் மற்றொன்றுண் டென்று
கருதவட்ட ஞாலத்துக் காணேன் - கருதிதன்பால்

681 வந்து புகுந்தபதம் வான்பதமெல் லாம்புகுது
முந்துதெரி கண்ணிரண்டு மூன்றாகு - நந்திதனைக்

682 கும்பிட்ட கையிரண்டுங் கூடவொவ்வோர் கைமேவ
நம்பிட்டம் வாய்க்கும்வகை நான்காகும் - பம்பிதனு

683 லித்தலத்து மான்மியமற் றெத்தலத்து மில்லையயன்
கைத்தலத்து நெல்லிக் கனிகண்டாய் - முத்தலமு

684 நாடு மிதிற்பிறந்த நம்மா தவம்பெரிதாக்
கோடுமினி யென்ன குறையுடையோ - மாடும்

685 படியெடுத்த பாதமலர் பற்றிநாம் வாழ்தற்
கடியெடுத்த பேறீ தலவோ - தொடிபுனைகை

686 யாவியன்றாய் மேலுலக மாதரிப்பா ரித்தலத்து
மேவி யமர்கை விரும்பாரோ - நாவிகமழ்

687 வாசத் துறைமேலை வானதிதோய் வாரீங்குப்
பூசத் துறைதோய்தல் பூணாரோ - நேசமிக

688 மான்றுற்ற நெஞ்சமின்றி வான்சூழ்தல் காதலிப்போர்
தோன்றித் தலமொருகாற் சூழாரோ - வான்றவிண்ணின்

689 முந்திருக்கை வேண்டி முயலுவா ரித்தலத்து
வந்திருக்கை யோர்நாண் மதியாரோ - நந்துதமை

690 வானுடி யம்ப மதிப்பார் மருதாவென்
றோநாடி யோர்கா லியம்பாரோ - மானேயென்

691 றோது மளவி லுடையான்பொற் றேர்வாறு
மாதுபல ரோடு மகிழ்ந்தெழுந்தா - ளோது

692 பெருமான்முன் சென்றுமிகு பெட்பிற் பணிந்தா
ளொருமான் மதித்தபுர வோவித் - திருமலர்மே

693 னூன்முகன்றேற் றுத நலமார் திருமேனி
பூன்முகமாங் கண்ணுை லுறக்கண்டாண் - மான்முகந்தா

694 ளெள்ளி மதவே டொடுத்தான் பலகணைபல்
துள்ளி வருந்தி யுயிர்சோர்ந்தாள் - வள்ளலெனச்

695 சொற்ற நமைத்தொழுவார் சோர வருத்துகென்றே
வுற்ற மதனுக் குயிரளித்தீர் - செற்றகுயில்

696 காதுமெனி னீர்முன் கடிந்தது பொய் யென்பார்மற்
றேது புகல்வா ரிறையவரே - யோதுவீர்

697 மோது கடல்விடத்தை முன்னடக்கி னீரதற்கம்
மோதுகட லென்னை முனியுமோ - போதுமதன்

698 கைதை மலர்நீர் கடிந்தா லதற்காக
வெய்தெனவந் தென்னுயிரை வீட்டுமோ - பைபரவு ன்

699 காதன்மதி நுஞ்சடிலக் காட்டிலிருந் தாலென்னை
வேத வியற்ற விதியுண்டோ - மீதார்ந்

700 துறுமலைதீப் போற்கா லுடன்றுவீ சற்கோ
சிறுமுனியை வைத்தழகு செய்தீர் - மறுவிலா

701 வாய்முத்த மென்னை யழலாய்ச் சுடுவதற்கோ
வேய்முத்த மாகி விளங்கினீர் - தாயிற்

702 சிறந்தபிரா னென்றும்மைச் செப்புவார் தீயிற்
சிறந்தபிரா னென்றென்றே செப்பா - ரறந்தழுவும்

703 வேயிடத்து நீர்முளைத்து மேம்பா டியற்றினந்த
வேயெழுமோ ரோசை வெதுப்புமோ - நாயகரே

704 யேறுநுமைத் தாங்குறினவ் வேற்றின் கழுத்துமணி
மாறுபுரிந் தென்னை வருத்துமோ - தேறும்வகை

705 யந்தி சிறநீ ரடைந்தா லதற்காவவ்
வந்திசிற மென்னை யடர்ப்பதோ - முந்தவொரு

706 வாழை யடிநீர் மருவி னதுகுறித்தவ்
வாழைமுடி யென்னை வருத்துமோ - காழ்பகையின்

707 வாசநீ ரென்னை வருத்துமெனின் மற்றதற்காப்
பூசநீ ராடப் புகுவதோ - மூசு

708 மயக்க மிதுதெளிய மாண்பார்கோ முத்தி
நயக்குங் குருநமச்சி வாயன் - வியக்கும்

709 வரமணியென் றேயறிஞர் வாஞ்சித் திடுஞ்சுப்
பிரமணிய தேசிகன்பாற் பேணித் - திரமடைவே

710 னன்னவனு நீரேயென் றன்றே றுரைத்தக்கா
லென்ன புரிவே னிறையவரே - யன்னவன்போல்

711 யோகி யெனநீ ருறைந்தீரல் லீர்சிறந்த
போகி யெனவே பொலிந்துள்ளீர் - போகியெனற்

712 கென்றோ வுடையாள மென்றானும் பாகத்தாண்
மின்றோ வலங்கரித்த வேறென்றே - முன்னவரே

713 விண்ணைக் கடந்தமுடி மேலா னுமைப்போலோர்
பெண்ணைச் சுமந்தமரும் பித்தரா - யெண்ணேன்

714 வலியவந்து மேல்விழுந்து மார்பி லெழுந்து
பொலியு முலையொழுங்கப் புல்லேன் - பொலிய

715 வொருத்தியிடப் பாக முறவைத்தீ ரற்றால்
வருத்தி யதுபுரிய மாட்டேன் - றிருத்தி

716 புரிந்தன் றிப் போகிலீர் போவீரேன் மேன்மேல்
விரிந்தபழி வந்து விளையும் - தெரிந்தவரே

717 யென்று புகல்போ திடைமருத வாணரவ
னின்று கடவ நெடுமணித்தேர் - துன்று

718 நிலையுற் றதுதெரிந்து நெட்டுயிர்த்துக் கோடுஞ்
சிலையுற்ற கண்ணிமனைச் சென்றே - னுலையுற்ற

719 தீயின் வெதும்பித் திகைத்தாண் மருதரரு
ளேயி னுயலாகு மென்றமர்ந்தா - ளாயுமிளம்

720 பேதை முதலாகப் பேரிளம்பெ ணீறாகக்
கோதையெழு வோருங் கொடிமறுகில் - வாதை

721 மயலடைந்து தேம்பி மறுகிச் சுழலுற்
றுயலடையப் போந்தா னுலா.

திருவிடைமருதூர் உலா முற்றிற்று.

---

# *சிறப்புப்பாயிரம்.



இந்நூலாசிரியர் மாணாக்கராகிய

திரிசிரபுரம்

சி. தியாகராசசெட்டியாரவர்கள் இயற்றியது.

விருத்தம்.

1707. பூமேவு மடமாதர் களம்பொலிய வோரணபு
பொலிய முன்சேர்
நாமேவு களங்களத்தி லமைத்தவிடை மருதவன
நாதன் சீர்கொ
டேமேவு மூலாச்சிறப்பை விளக்குமூலா வைப்புலவோர்
செவிவி ருந்தா
மாமேவு மீனாட்சி சுந்தராநா வலரேறு
மகிழ்ந்து செய்து. (க)

1708. பொன்பூத்த ஞானவளம் பொலியவா வடுதுறையிற்
பொலிந்து மேவு
மன்பூத்த வருணமச்சி வாயகுரு சாமிபத
மலர்கள் பூத்த
தென்பூத்த வுளத்தடத்தன் சிவதாணு முனிவர்பிரான்
திலக மாகக்
கொன்பூத்த பேரவையம் பெருங்களிமூழ் குறவிரித்துக்
கூறி னானே. (உ)



* இது முன்பதிப்பைச் சார்ந்தது; பதிப்பித்தகாலம், சென்ற பவ௵ மாசிமீ.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தில்லையமகவந்தாதி.



## கற்பகவிநாயகர் துதி.

1709. கற்பகப்பாவடிவாரணம்பாற்கடந்தோன்செந்தமிழ்க்
கற்பகப்பாவடிவாரணங்கண்டவர்கோனருள்வி
கற்பகப்பாவடிவாரணங்கார்மலர்க்காமொய்தில்லைக்
கற்பகப்பாவடிவாரணம்யான்பெறக்காட்டிடுமே.

## நூல்.

1710. திருவம்பலவமருந்தடையுந்தபச்சேர்தரும்பி
திருவம்பலவமருந்தநெஞ்சேசிவஞானத்தின்மு
திருவம்பலவமருந்தடஞ்சோலைதிகழுந்தில்லைத்
திருவம்பலவமருந்தனையாற்றுதிசெய்தினமே. (க)

1711. தினந்தினமேவரியாரம்பலஞ்சிந்தியோஞ்செழுமுத்
தினந்தினமேவரியாரம்பணைத்தில்லைசேர்ந்திலம்பத்
தினந்தினமேவரியாரம்படாமுலைசேர்விருப்பத்
தினந்தினமேவரியாரம்பனீயென்றுதேர்வரின்றே. (உ)

1712. இன்னம்பரம்பரனேகதங்காவதத்தீசர்தில்லை
இன்னம்பரம்பரனேர்விழிபாகரென்பார்க்கிறையே
இன்னம்பரம்பரனேபிறைதோணிகொலென்னமுடி
இன்னம்பரம்பரனேதுயராதருளின்னருளே. (ங)

1713. அருகாதவத்தலைவாதில்லையம்பலத்தாடியடி
அருகாதவத்தலைவாரொடுறுதருள்வாயெனக்கும்
அருகாதவத்தலைவாசிகையாயென்றறைவல்புத்தா
அருகாதவத்தலைவாவென்பிரேலுமையாட்டுவனே. (ச)

1714. வனசங்குவளையலர்பணைசூழ்தில்லைவாணவெண்செய்
வனசங்குவளையலர்படராவகைமாற்றுங்கழல்
வனசங்குவளையலர்பயிலேலலம்வாடுறப்பாய்
வனசங்குவளையலர்படுவீரையும்வாய்விடுமே. (ரு)

1715. வாய்ப்பணியாகமஞ்சாரருணைக்குமனாகனிரை
வாய்ப்பணியாகமஞ்சாற்றியவாசெய்வர்மாண்பினரை
வாய்ப்பணியாகமஞ்சார்பொழில்சூழ்தில்லைவாணநின்ருள்
வாய்ப்பணியாகமஞ்சாலாச்சிலர்கருவன்றலையே, (௬)

1716. தலைமாலையாவம்பதிதில்லையாய்வளியைத்தழன்மு
தலைமாலையாவம்பயிலேச்செய்தாய்சந்தக்கால்கொடுமு
தலைமாலையாவம்பலர்மொழியாதழலம்புவிம்மு
தலைமாலையாவம்பலையென்றுநீங்குமென்ருர்க்குழலே. (௭)

1717. தாராதரிக்குமழும்விழுஞ்சோருந்தனிமதிதண்
தாராதரிக்குமழுவமுஞ்சீறுந்தமியுணர்போர்த்
தாராதரிக்குமழுங்கச்செயுமெங்கடையலைக்கே
தாராதரிக்குமழுவாவருதில்லைத்தற்பரனே. (௮)

1718. பரமாதவர்பணிநாடர்பொன்னுடர்பதுமர்பொன்னம்
பரமாதவர்பணிநாதபொல்லார்கரும்பாரிடையம்
பரமாதவர்பணிநாவடையாவகைபாலிப்பதோர்
பரமாதவர்பணிநாகமென்பாதில்லைப்பண்ணவனே. (௯)

1719. வனவலங்கற்புயமாயோனெஞ்ஞான்றும்வணங்குதில்லை
வனவலங்கற்புயர்மாதுறையாதிடம்வைத்தவயவ்
வனவலங்கற்புயனேர்குழற்பேதைக்குமன்மதன்செய்
வனவலங்கற்புயங்கத்துயிர்ப்பாய்த்தென்வளிநந்துமே. (௧௦)

1720. நந்தாதரத்தகரவித்தையோசெயுநாடகத்தால்
நந்தாதரத்தகரவித்தையற்கஞர்நன்கருள்வாய்
நந்தாதரத்தகரவித்தையார்கணயக்கவென்று
நந்தாதரத்தகரவித்தைமன்றுணடிப்பவனே. (௧௧)

1721. பவளங்கருமையனேரெனுமேனிப்பயல்வரையுற்
பவளங்கருமையனேயெனநல்குபண்பாமகளென்
பவளங்கருமையனேயகதில்லைப்பதிநிகரின்
பவளங்கருமையனேகங்கொன்றுலும்பயத்தலின்றே. (௧௨)

1722. இன்றுதரங்கம்புரைபவமுற்றதிறுமொழிந்தது
இன்றுதரங்கம்புரைபடையம்பவிரும்பொழிற்பூவ்
இன்றுதரங்கம்புரைவானதிச்செயுமேர்கொடில்லை
இன்றுதரங்கம்புரைதீர்மன்றுவருளெற்கடிக்கே. (௧௩)

1723. கடவாரணங்கடையார்ப்பமண்ணுள்வரொண்கட்டிரும
கடவாரணங்கடையார்பின்கலப்பர்கதிபரியாக்
கடவாரணங்கடையார்புரந்தீத்தகணேமெய்முலைக்
கடவாரணங்கடையார்ச்சடையார்தில்லைகண்டவரே. (௧௪)

1724. கண்டங்கரியன்றுவர்மேனியன்றில்லைக்கட்பொலிவோன்
கண்டங்கரியன்றுசாராதபாதன்கரிசறுத்தென்
கண்டங்கரியன்றுதிவெற்பர்பொய்த்தனர்கட்டுரைய
கண்டங்கரியன்றுகொல்லோவித்தெப்வமுங்கார்க்குழலே. ()

1725. காக்கைக்குளவிடைமாறின்றிவருங்கதியெனவங்
காக்கைக்குளவிடைமாறும்பவமன்றுகைதொழின்மண்
காக்கைக்குளவிடைமாவாய்கழுமலங்காசிகச்சி
காக்கைக்குளவிடைமாமருதூருங்கலந்தவனே. (௧௬)

1726. கலங்காமரிக்குமயற்குமெட்டான்கொன்றைகண்ணுறினி
கலங்காமரிக்குமயற்குணமிற்குங்கரத்துவளைக்
கலங்காமரிக்குமயற்குலப்பேச்சுங்கழியுமபங்
கலங்காமரிக்குமயற்குதவிற்றில்லைக்காரிகையே. (௧௭)

1727. காரிகையாதவவியாக்கியதில்லைக்கண்ணிருவி
காரிகையாதவன்பல்லுகநீட்டியைக்காமுற்றெங்கள்
காரிகையாதவரோமேயுயிர்த்தென்னைக்காய்வதுசங்
காரிகையாதவமோவென்றுவேலன்முன்கரைதருமே. (௧௮)

1728. கரவரைக்கொன்றடியார்க்கருடில்லைக்கடவுட்குநீள்
கரவரைக்கொன்றடியாரதள்போர்வையொண்காம்பினைநி
கரவரைக்கொன்றடியார்நகத்தோலுடைகண்டுமா
கரவரைக்கொன்றடியாவுமிலேர்மகள்காமுறுமே. (௧௯)

1729. காமாவடுவனவம்பகத்தாள்பங்கன்கஞ்சம்விலை
காமாவடுவனவம்பகலற்கருங்கண்ணிதருங்
காமாவடுவனவம்பகமன்றணுகாரின்மயங்
காமாவடுவனவம்பகலாயிக்கடையைவிட்டே. (௨௦)

1730. கடையாவஞ்சாவரும்பப்புரிவாரிகரியவன்வென்
கடையாவஞ்சாவருமேவானைக்காலிற்கடுங்கண்டகங்
கடையாவஞ்சாவருந்தாவுழல்வேன்மன்றிற்கண்டுதொழேன்
கடையாவஞ்சாவருகென்றுவெங்கூற்றங்கடுகுமுன்னே. (௨௧)

1731. கடுகத்தனையன்புரிகடும்போர்கணிறைத்திடவ
கடுகத்தனையன்புலையேன்விண்ணோர்கழிபாதமின்றான்
கடுகத்தனையன்புலியூரன்குஞ்சிதக்காண்மலர்க்குக்
கடுகத்தனையன்புமில்லேனெவ்வாறுகதியுறலே. (௨௨)

1732. கதங்காமனந்தியங்காமம்மர்தீர்ந்தருட்காப்பிடையே
கதங்காமனந்தியங்காதுமுண்டோவினைகாலைச்சுற்றங்
கதங்காமனந்தியங்காவறடாதுமெய்காட்டொழியுங்
கதங்காமனந்தியங்காவிமன்றுகறைக்கண்டத்தனே. (௨௩)

1733. தனக்கோங்கரும்புமடவார்முயக்கிற்றலைப்பட்டுநந்
தனக்கோங்கரும்புவிலாளிலென்பீரத்தருக்கதெனுந்
தனக்கோங்கரும்புகர்தீர்வதென்றேசிற்சபைநடிப்பான்
தனக்கோங்கரும்புகழ்வாசிகையாற்குச்சரண்புகுமே. (உ௪)

1734. சரம்பலவாணன்றென்றிக்கிறையென்னவெய்தார்வெஞ்சித்த
சரம்பலவாணன்றென்கார்தாங்குகூடற்றலைவனுயிர்ச்
சரம்பலவாணன்றென்சான்முழவாபடைகங்களம
சரம்பலவாணன்றென்றேத்துபொற்பாதன்றான்கொன்றையே.

1735. தரையாவிரதந்தடவரையாதவர்தாபதமா
தரையாவிரதந்தபுத்ததென்பாவணிதாரெனும்பந்
தரையாவிரதந்தவிர்முத்தர்வம்மின்சபைக்கென்றுகந்
தரையாவிரதந்தரநடிப்பாய்மநடற்கிரங்கே. (உ௬)

1736. இரங்காதமரவடியார்பணிசெய்திலமென்றோராய்
இரங்காதமரவடியார்கொலென்னவெங்குந்திரிந்தெய்த்து
இரங்காதமரவடியார்மலர்தருமீர்ந்தில்லைசேர்ந்து
இரங்காதமரவடியார்வெஞ்சூலவென்னேமென்னிரே. (உ௭)

1737. ஏதாயினுமினியாயறநல்கென்றிரப்பநல்க
ஏதாயினுமினியாயமென்பாரிலையென்பரிறை
ஏதாயினுமினியாயம்புயலிவரிற்றில்லையைய்
ஏதாயினுமினியாயகற்றப்புல்லிணக்கமதே. (உ௮)

1738. தேவாரமாதிருவாசகமாயைசெறேனடைந்தேன்
தேவாரமாதிருவாசகமாசெயுஞ்செய்யுள்குயத்
தேவாரமாதிருவாசகமாறெழுந்தில்லையமு
தேவாரமாதிருவாசகமாற்றிச்சிற்றம்பலத்தே. (உ௯)

1739. அம்பலவாவம்பலவாகதிர்க்கழித்தாயெனுநேப்
அம்பலவாவம்பலவாருளிரெனுமாய்மணமீது
அம்பலவாவம்பலவாவெனவிண்ணறைபொழில்சூழ்
அம்பலவாவம்பலவாவெனுமெம்மருமணியே. (௩௦)

1740. மணக்கோலஞ்செய்யதிருமேனியார்செய்யவந்திலர்வேண்
மணக்கோலஞ்செய்யவருமேபவமெனுமைக்குழம்பு
மணக்கோலஞ்செய்யமருமனஞ்சூழ்தில்லைவாழ்த்திலராய்
மணக்கோலஞ்செய்யநல்கூர்ந்திருப்பாரின்மதித்தனையே. ()

1741. மதியாதவனங்கிவாள்விழியாய்நல்வழிச்செலச்சம்
மதியாதவனங்கிரியங்கம்யானெனும்வாய்மையையுண்
மதியாதவனங்கிரிக்கீழுறமன்றவாணவருண்
மதியாதவனங்கினர்மறையோன்றொழுமாநடனே. (௩௨)

1742. மானந்தாதவிரகர்கள்வாழ்தில்லைவாணவிழி
மானந்தாதவிரகவிதழ்க்குழல்வாமவிலா
மானந்தாதவிரகருண்மேயமன்னுகுழைச்சு
மானந்தாதவிரகம்பிரமவழியெனக்கே. (௩௩)

1743. என்றுமதியாதவன்சுடக்காரணமெற்குநலம்
என்றுமதியாதவன்மதன்பூங்கணையிருமினி
என்றுமதியாதவன்மணிகண்டனிங்கெய்தத்தடை
என்றுமதியாதவன்றாழ்மன்றன்னளிரங்குறுமே. (௩௪)

1744. இரங்கத்தனித்தனியாயமென்னேவென்னிடத்தினும்வய்
இரங்கத்தனித்தனியாயதன்முற்றுறிலேய்பவனுய்
இரங்கத்தனித்தனியாயமன்றெண்ணலரிற்பதியாய்
இரங்கத்தனித்தனியாயமிலான்பின்மினேகினளே. (௩௫)

1745. நள்ளாறுதிக்குமகிழ்பதியார்தில்லைநாடகமால்
நள்ளாறுதிக்குமயிர்மாலைத்துத்தநகைமுத்தநீர்
நள்ளாறுதிக்குமறல்குழல்வேல்கணகுநலத்தி
நள்ளாறுதிக்குமரிக்கோடுகொங்கைநண்பாநங்கைக்கே. (௩௬)

1746. நங்கைக்கரியவரமார்பன்றாழ்தில்லைநன்னகர்ம
நங்கைக்கரியவரதனம்போலுநடநவில்வோன்
நங்கைக்கரியவரநேர்கட்கொங்கைநன்றென்றுவந்தூர்
நங்கைக்கரியவரஞ்செய்யுமாலையுநன்குதந்தே. (௩௭)

1747. தந்தவரைவனரயாருமையைச்செய்தகுமறைவி
தந்தவரைவரையானனர்வாரித்தடஞ்சிலைமி
தந்தவரைவரையாதாண்டவர்தில்லைத்தாண்டவர்தோந்
தந்தவரைவரையாம்வெலநல்குவர்தாம்வரமே. (௩௮)

1748. வரநகரம்பதம்வன்னிமப்பூதம்வயிறுவநல்
வரநகரம்பதம்பூண்டோள்சிதுடிவதனமிந்தீ
வரநகரம்பதம்பாலிக்குந்தில்லைவண்கைமுடிய
வரநகரம்பதம்போல்வானில்லான்மன்றவாணனுக்கே. (௩௯)

1749. வாளாவிருந்தவர்தூற்றுவராமூண்மடலுமுடை
வாளாவிருந்தவர்வாங்குவனுமைதன்வைதுமுனி
வாளாவிருந்தவர்கேட்பவுமன்னேநின்மாலைமணி
வாளாவிருந்தவர்காளைனுந்தில்லைமன்னுதரினே. (௪0)

1750. தருக்கம்பலவிடவாய்கொடுபேசுவந்தாழ்குழன்மா
தருக்கம்பலவிடவாண்மைவிழியென்றுசாற்றுவமுத்
தருக்கம்பலவிடவார்முலையாய்மறைதன்முடியில்
தருக்கம்பலவிடவாவெங்ஙனேகதிசாருதுமே. (௪௧)

1751. சாரம்பலமுறைநூலுமிதேயெனச்சாற்றுமென்வி
சாரம்பலமுறைவேடரிற்கூடித்தளர்மனமா
சாரம்பலமுறையார்சிவகங்கைத்தடம்படிதி
சாரம்பலமுறைசாங்காறுங்கூத்துத்தரிசித்திடே. (௪௨)

1752. சிற்றம்பலங்கண்டுபோற்றேன்மின்னார்கள்செவ்வாய்தருமெச்
சிற்றம்பலங்கண்டுபோலக்கொள்வேன்சிந்தையுந்திகைத்தெஞ்
சிற்றம்பலங்கண்டுமுன்னுண்டுகோடிசிலைச்சிலைக்கோர்
சிற்றம்பலங்கண்டுயிர்படையாற்செய்தசேவகனே. (௪௩)

1753. கனக்கந்தரத்தனமலைபங்காளன்களிமயில்வா
கனக்கந்தரத்தனமலைக்குநீர்த்தில்லைக்கண்விடைப்பா
கனக்கந்தரத்தனமலைநதியற்கைத்தார்புனன்மு
கனக்கந்தரத்தனமலைபுன்காடிக்கலைபவரே. (௪௪)

1754. கலையாவனவளவாத்தில்லையாய்கமழ்குங்குலியக்
கலையாவனவளவாழ்மனைச்செல்கைதொடுவெனப்பு
கலையாவனவளவாவுதியாகைதவாவிடவுள்
கலையாவனவளவானினைச்சார்ந்தெனைக்காத்தருளே. (௪௫)

1755. காதரங்காதரமாயமின்னார்கண்புரியமயங்
காதரங்காதரமாதர்கள்சூழ்தில்லைக்கண்டிசைமு
காதரங்காதரமாநிலமாக்குதிகாவென்வளைக்
காதரங்காதரமாய்நமையாள்வர்கருதுநெஞ்சே. (௪௬)

1756. கருமங்கருமங்கணம்பரமாகழியக்கழுவுங்
கருமங்கருமங்கணம்பரமாகடிந்தாண்டுமுகினி
கருமங்கருமங்கணம்பரமாகலைமான்றிசைமு
கருமங்கருமங்கணம்பரமாகம்பலக்கனியே. (௪௭)

1757. கனியக்கனியமனந்துதியாங்கைதொழாமெங்ஙன்றீக்
கனியக்கனியமனந்தும்பநன்றில்லைக்கண்ணமர்நக்
கனியக்கனியமனந்துயிர்யாவையுங்காமரிடக்
கனியக்கனியமனந்துடியான்கங்கோதெமக்கே. (௪௮)

1758. கோவாகுளத்துமுழுமுதலேபொறிக்கூட்டநலங்
கோவாகுளத்துமுழுவயற்சோற்றுங்குழையுமைய
கோவாகுளத்துமுழுவலன்பீந்துகைக்கொண்டருள்வேட்
கோவாகுளத்துமுழுகென்றதில்லைக்குணமலையே. (௪௯)

1759. மலையானிலங்கம்பலவுடைப்பாம்பின்வருமெவரோ
மலையானிலங்கம்பலராயென்றேவினர்வாடும்வெண்க
மலையானிலங்கம்பலமில்படையான்வணங்கிடத்த
மலையானிலங்கம்பலநடங்கண்டமடமயிலே. (௫0)

1760. மடங்கலையாதரியாகிறப்பூண்பன்றிவன்கொம்புக
மடங்கலையாதரியாப்புலித்தோலிடமன்றுகண்டு
மடங்கலையாதரியாளுனைமேவுவள்வன்னியின்மும்
மடங்கலையாதரியாதேகுமோமதன்வாளிகளே. (௫௧)

1761. வாளம்பரவையகிலம்பணிமன்றவள்ளுகிர்தோல்
வாளம்பரவையகிலம்படாதுவன்றொண்டர்முனி
வாளம்பரவையகிலம்படாமுலைவாழ்வித்தவா
வாளம்பரவையகிலம்பராவுமெய்வாழ்வருளே. (௫௨)

1762. அருத்தமருத்தமென்றேயுழல்வேந்துப்பொரைம்பொறிக்கும்
அருத்தமருத்தமென்றேறிற்புரியுமென்னமுதனூல்
அருத்தமருத்தமென்றேங்குழல்பாகரடியர்க்கெளிய்
அருத்தமருத்தமென்றேய்மன்றிற்கூத்தென்றருளுவரே. ()

1763. வருந்தவருந்தகமன்செறுமென்னமலத்துவெய்ய
வருந்தவருந்தகமன்றதுவாமுன்மண்ணீர்கொண்மின்றே
வருந்தவருந்தகமன்றேழமன்றும்வட்காருயிர்க
வருந்தவருந்தகமன்னுப்பொன்னுவெனெம்மான்றுணையே. ()

1764. மானம்பரம்பரமென்றொழிப்பார்கண்மருங்குன்முலை
மானம்பரம்பரவோங்கலொப்பார்பொதுமாதரில்வா
மானம்பரம்பரவாயொருவாதுறைமாட்சியினம்
மானம்பரம்பரன்வான்றில்லைமேயாவவர்தம்மதிக்கே. (௫௫)

1765. தமனியமன்றமலரோன்முனோர்தொழத்தாணிற்குமுத்
தமனியமன்றமர்வங்தெனைப்பற்றத்தடுத்திவன
தமனியமன்றமச்செய்கையிலாளிற்றழையுமங்க
தமனியமன்றமற்றென்னுதுதான்செயும்பேரருளே. (௫௬)

1766. பேரம்பலம்பலகாற்சூழ்தரேம்பித்தடிமையென்றும்
பேரம்பலம்பலங்கோதியிவணின்றுபேரெனினும்
பேரம்பலம்பலமாவிச்சித்தேமுதற்பின்னடைநாப்
பேரம்பலம்பலவீன்பொழிலூர்தில்லைபெற்றபொன்னே. ()

1767. பொன்னம்பலவன்மலக்கருங்குன்றைப்பொடித்திகிறப்
பொன்னம்பலவன்மலர்கதிராழிப்புவியிரத
பொன்னம்பலவன்மலர்க்குழல்பாகவென்னும்புலியூர்ப்
பொன்னம்பலவன்மலங்கொழித்தீயுங்கொல்பொற்பதமே. ()

1768. பதஞ்சலியாதவனேர்விளங்கும்புலிப்பாதர்தொழப்
பதஞ்சலியாதவனேகடித்தற்குன்பதமென்றுவாய்ப்
பதஞ்சலியாதவனேராக்கைதீயதுபாழ்மனமென்
பதஞ்சலியாதவனேசிப்பவென்றுகண்பார்த்தருளே. (௫௯)

1769. பாரத்தனமலைபாகனசொற்கமையாசைபற்றென்
பாரத்தனமலைபாகனல்லேன்முதற்பாற்சுவடை
பாரத்தனமலைபாகனடாவுடபரியிரதப்
பாரத்தனமலைபாகனமன்றன்பரிவதென்றே. (௬0)

1770. பரவரியக்கவணங்கேமுகில்கற்பறையரியம்
பரவரியக்கவணங்கேசெயவெழும்பற்றுடைப்பொற்
பரவரியக்கவணங்கேள்வரெய்தப்பகழிகலம்
பரவரியக்கவணங்கேடின்மன்றற்பரவுதுமே. (௬க)

1771. பரமானந்தத்தையனுக்கொண்டெல்லாம்படைப்பானுமற்றம்
பரமானந்தத்தையநடுக்கட்சொற்றிருப்பண்பனுந்தா
பரமானந்தத்தையர்வானெனன்பானும்பற்றுவெனக்கும்
பரமானந்தத்தையருள்வானுந்தில்லைப்பதிப்பரனே. (௬உ)

1772. பரவம்பரவத்தவரோடுறவும்பண்ணேங்கடுவெப்
பரவம்பரவத்தவறடைவார்ப்பற்றுவாமன்றநம்
பரவம்பரவத்தவத்தலைவாவம்பலவபொன்னம்
பரவம்பரவத்தவர்சிலையாயென்றும்பாடிலமே. (௬௩)

1773. பாடகந்தண்டையலையுணவென்னுட்பதிபதம்பூண்
பாடகந்தண்டையலைவாமம்வைத்தவன்பல்புலவோர்
பாடகந்தண்டையலைமோதிண்டைத்தடம்பாவுதில்லைப்
பாடகந்தண்டையலைநமன்றேன்றுமுன்பற்றினனே. (௬௪)

1774. பற்றினகரனுக்குத்தகரப்புரிபண்பற்குமான்
பற்றினகரனுக்குத்தகரய்யனப்பற்குத்தில்லைப்
பற்றினகரனுக்குத்தகரக்குழல்பாகற்கெனம்
பற்றினகரனுக்குத்தகரற்கிதப்பட்டனனே. (௬௫)

1775. பட்டவம்போருகந்தானங்கொடில்லைப்பரமநுதற்
பட்டவம்போருகந்தானடக்காக்கயம்பைத்தவிழும்
பட்டவம்போருகந்தானடல்வேளென்படுமெயிலூர்
பட்டவம்போருகந்தானறைந்தானும்படுதலின்றே. (௬௬)

1776. தலத்ததிகம்பரஞானமயசிற்சபையென்றுநு
தலத்ததிகம்பரவூண்படைபள்ளியன்றுழுங்கண்ணு
தலத்ததிகம்பரமேவாரேனுயவிவ்வுயிர்தழற்பா
தலத்ததிகமபரமில்லதென்றுளத்தகுநனக்கே. (௬எ)

1777. தகரானனந்தக்கனுக்கியைத்தான்கலர்தம்மலக்கல்
தகரானனந்தக்கவின்மன்றன்வெற்பிற்றவர்கழைப்பா
தகரானனந்தக்கடுமாவழங்குந்தனிவழிப்போ
தகரானனந்தக்கவர்வருவாரென்கொல்சாற்றுவதே. (௬அ)

1778. சாதனமாயவைநன் றினிலேனேச்சமனடவஞ்
சாதனமாயவைவேல்விழியார்மயற்றுழ்தருநெஞ்
சாதனமாயவைதாரகென் னுமுனஞ்சத்தியோ
சாதனமாயவைதென்புலியூரநின்றண்ணருளே. (௬௯)

1779. தண்டாதரித்தநமனென்னையாண்முன்றடவரைக்கோ
தண்டாதரித்தநமப்பவுண்ணென்றளித்தாய்வெள்ளிவே
தண்டாதரித்தநமன்பணைசூழ்தில்லைச்சங்கரவோ
தண்டாதரித்தநமக்களேந்தாளுநைகதக்கதுவே. (௭௦)

1780. வேதப்பரியவிலங்கஞ்சப்பாகன்விடுவையஞ்சு
வேதப்பரியவிலங்கஞ்சப்பாகஞ்சொன்மின்விடைத்தே
வேதப்பரியவிலங்கஞ்சப்பாகண்டபுண்ணிலருள்
வேதப்பரியவிலங்கஞ்சப்பாகஞ்செய்மன்றத்தனே. (௭௧)

1781 மன்றலங்காரப்புரிசடையாரிமவான்மகளே
மன்றலங்காரப்புரிபரனுரிருண்மாய்தரவ
மன்றலங்காரப்புரிதில்லையாரெனைவைப்பரிய
மன்றலங்காரப்புரிதலந்தீர்த்தருள்வான்றலமே. (௭௨)

1782. வானம்பவனந்தனஞ்சயனீர்குவலயமுமா
வானம்பவனந்தனஞ்சயன்மான்மடியாமலயில்
வானம்பவனந்தனஞ்சயஞ்சூழ்தில்லைமன்னிவளர்
வானம்பவனந்தனஞ்சயற்போய்வைப்பன்மன்னருளே.(௭௩)

1783. மனம்பாலனையமடமொழியாரிடைமாழ்குறக்கா
மனம்பாலனையமடங்காத்துயரின்மன்னுமைலிய
மனம்பாலனையமடங்கலிற்சீறிவருமுனேங்கை
மனம்பாலனையமடற்கொன்றையாயென்பமன்றஞ்சென்றே.

1784. மனம்பாவரியம்புயங்கநின்றுளிற்பொன்மாதரிற்க
மனம்பாவரியம்புயங்கறைகேட்பமுய்வாங்கொல்பொறி
மனம்பாவரியம்புயங்கடுக்கைப்பரமன்றப்பெரு
மனம்பாவரியம்புயங்கலந்தாற்கருமாமணியே. (௭௫)

1785. மாதங்கமடங்கல்சேர்வழிநள்ளிருள்வாய்ப்பொறைமண்
மாதங்கமடங்கல்வாயரவொப்பர்வருவர்கொல்பூ
மாதங்கமடங்கல்விச்சாலையார்தில்லைமன்சுரர்த
மாதங்கமடங்கல்பூண்பவன்காளத்திமால்வரைக்கே. (௭௬)

1786. வரைவனஞ்செய்யுந்தடமுஞ்சுலாங்கமலைவன்குற
வரைவனஞ்செய்யுந்தடங்கழுக்குன்றுறைமன்றுடையான்
வரைவனஞ்செய்யுந்தடவுவில்லாயினிமாழ்கவுனே
வரைவனஞ்செய்யுந்தடக்கெனையுய்வுமொய்வார்முரசே. ()

1787. வாரிக்குவளையும்வண்ணம்பயின்றுமதன்பன்மலர்
வாரிக்குவளையும்வண்ணம்படப்பெய்வதுசொல்வரு
வாரிக்குவளையும்வண்ணம்பதமென்வன்மூரியருள்
வாரிக்குவளையும்வண்ணம்பயின்மறைமன்றடைந்தே. (எஅ)

1788. அடையம்புயங்கலந்தானச்சுதற்குமரியனின்றுள்
அடையம்புயங்கலந்தானரவாய்பவவாரழல்வாய்
அடையம்புயங்கலந்தானஞ்சலென்றருளையனின்கை
அடையம்புயங்கலந்தானங்கொளிங்கென்றருண்மன்றனே. ()

1789. அரும்பாவருந்தனமாகமுளைத்திலவம்பன்முல்லை
அரும்பாவருந்தனமாகண்டிலாளயலான்பின்புதீய்
அரும்பாவருந்தனமாகக்கொள்ளாமன்றத்தாடியமர்
அரும்பாவருந்தனமாகவினூரடைந்தாள்சுரத்தே. (அO)

1790. தேயம்பலதிரியாக்கவன்றூட்டியர்சேறகணரந்
தேயம்பலதிரியாக்கடிவேலென்றுந்தேடிப்புனைந்
தேயம்பலதிரியாக்கடையேஞ்செல்லற்செல்வமமு
தேயம்பலதிரியாக்கவைதோங்கோறிருத்துவையே. (அக)

1791. திருத்தாதடிமைதவத்தேம்புதலுந்திருவருளோ
திருத்தாதடிமைதவச்சிரஞ்சூட்டுசிறப்புறுமெய்த்
திருத்தாதடிமைதவமாக்குதிசிவகங்கையெனுந்
திருத்தாதடிமைதவழ்மாடத்தில்லைச்சிவக்கொழுந்தே. (அஉ)

1792. சிவசிவசங்கரவைம்முகவென்றன்பர்சேர்தில்லைவ
சிவசிவசங்கரவைம்பொறியாமருடீரக்கொல்வ
சிவசிவசங்கரவைப்பூணியததுசேர்தரநே
சிவசிவசங்கரவையவென்முன்னூந்தெளிமனமே. (அ௩)

1793. நம்பனையன்றினகரன்பல்வீழ்த்தகைநாயகன்வா
நம்பனையன்றினரூரெரித்தானடமன்றிற்கண்டாள்
நம்பனையன்றினல்லார்கள்பல்லோரலர்நாட்டுறத்தி
நம்பனையன்றினகக்கூவவாடுமிந்நன்னுதலே. (அச)

1794. தலையரியக்கவலார்தனக்கில்லவன்றும்பெறும
தலையரியக்கவலார்கோன்மன்றன்சரம்பூண்பொன்முடித்
தலையரியக்கவலார்புனலாற்கிணர்த்தாழ்குழல்கா
தலையரியக்கவலார்முலையாய்சென்றுசாற்றுகவே. (அரு)

1795. கவியமகந்திரிவாப்பிறவாக்கழறூநரர்பாற்
கவியமகந்திரிவாச்சிறுதெய்வங்கருதமுழங்
கவியமகந்திரிவாரழலார்புகைகாண்மயில
கவியமகந்திரிவான்பொழிற்றில்லைமன்காதலமே. (அசு)

1796. காதற்பரவையகம்படிவேமறங்காய்ந்திலகீங்
காதற்பரவையகம்பயில்வேமெங்ஙன்கார்க்குழல்பங்
காதற்பரவையகம்பணிதில்லைக்கண்மேயகுழைக்
காதற்பரவையகம்பங்கொல்வேங்கடுங்காலன்முன்னே. (௮௭)

1797. முனிவருமானந்தக்கூத்தம்பலத்தன்புமுற்றுமிரு
முனிவருமானந்தக்கூப்பிக்கையேத்தச்செய்முத்தகுழை
முனிவருமானந்தக்கூர்விழிபாகமொய்க்கூற்றமெனே
முனிவருமானந்தக்கூடன்றியாவர்க்குமூத்தவனே. (௮௮)

1798. மூவாயிரவருந்தானவன்வாழ்முடியாய்முன்கைசேர்
மூவாயிரவருந்தாழ்வில்சொற்பேசச்செய்மொய்யன்புக்கொண்
மூவாயிரவருந்தாவுணவீரென்முதல்வமன்றுண்
மூவாயிரவருந்தாழநின்றுயருண்முத்தியின்பே. (௮௯)

1799. முத்தரும்பாவருமந்தண்டுறைத்தில்லைமுன்னவபன்
முத்தரும்பாவருமந்தகிற்கொப்புமுளரிமின்வாய்
முத்தரும்பாவருமந்தமிழைவருமோமுந்தவி
முத்தரும்பாவருமந்தருங்கூறூர்முனிந்தொப்பென்றே. (௯௦)

1800. முதலைப்பரவைத்திருக்காழியார்சொன்முதல்வர்செவ்வாய்
முதலைப்பரவைத்திருக்காமுறன்பர்சொன்மொய்த்ததில்லை
முதலைப்பரவைத்திருக்காற்றுந்தாளவென்பாமுழுவிம்
முதலைப்பரவைத்திருக்காற்றைமாயமுருக்குவமே. (௯௧)

1801. குவலயவம்பரமானந்தவாதவர்கோவரவா
குவலயவம்பரமானந்தவாதவர்கோமன்றகட்
குவலயவம்பரமானந்தவாதவர்கோள்புரிதீங்
குவலயவம்பரமானந்தவாதவர்கோவத்தனே. (௯௨)

1802. அத்தவெற்பாதவர்வெள்ளிவெற்பாவிலயனரிகாய்
அத்தவெற்பாதவர்சொல்பூணெனுமிரப்பார்க்கருள்சில்
அத்தவெற்பாதவர்தேவர்மன்றூர்தம்மகலத்துநேய்
அத்தவெற்பாதவர்தாமவரேயெனுமாயிழையே. (௯௩)

1803. ஆயங்கவலவருந்துபுயானுமலறவென்னள்
ஆயங்கவலவருந்துயராற்றியடையுமின்கான்
ஆயங்கவலவருந்துறவோரும்பனப்பனுள்ளென்
ஆயங்கவலவருந்துமன்றம்பணியாரினைந்தே. (௯௪)

1804. ஆரம்பரவியவானந்தமர்துறையம்பலவம்பு
ஆரம்பரவியவானந்தவைக்குமமாரவெண்டிக்கு
ஆரம்பரவியவானந்தமாதுக்களித்திரின்மார்பு
ஆரம்பரவியவானந்தமாமணியார்க்குமுன்னே. (௯௫)

1805. ஆரம்பரந்தடிவாள்விழியாய்நென்னலாரிரவென்
ஆரம்பரந்தடிவாய்முலைமேற்கைவைத்தாரொருவர்
ஆரம்பரந்தடிவாய்ப்புலித்தோலரருட்புலியூர்
ஆரம்பரந்தடிவார்சடையாரென்பராயெனக்கே. (கூசு)

1806. என்னத்தனையடிதேடவிட்டானையிருண்மவொடும்
என்னத்தனையடியாய்திருவம்பலத்தெம்மிறையே
என்னத்தனையடியென்றன்பருக்கெளிதாத்தெரிக்கும்
என்னத்தனையடியேன்மறப்பேன்கொலெழுமையுமே. (கூஎ)

1807. மையலங்காரகலம்மதியென்னுமதிவிளங்க
மையலங்காரகலமாக்கொள்கண்ணியர்மாலறச்செம்
மையலங்காரகலப்பரவம்பலவாதடிதி
மையலங்காரகலப்புகழாயருமாணிக்கமே. (கூஅ)

1808. மாணிக்கவாசகர்காணவைத்தீந்தனைமாலைமுன்வின்
மாணிக்கவாசகர்தெவ்வேயளபொன்றில்வாய்ந்தமுன்பின்
மாணிக்கவாசகர்சூழ்தில்லையாயென்சொன்மாலையுங்கொண்
மாணிக்கவாசகர்வாய்மலர்கோவைவரைந்தவனே. (கூகூ)

1809. அவலங்களைவம்பலர்நீர்ப்புலியூரணைவமுரிய்
அவலங்களைவம்பரும்புரியாதடர்ப்பாமழுமேய்
அவலங்களைவம்பலர்முலைவாமனருள்பெறு ாம்
அவலங்களைவம்பணிந்தெழுவார்திருவம்பலமே. (க00)

திருத்தில்லையமகவந்தாதி முற்றிற்று.

---

* இப்பிரபந்தத்தில் யமகவலங்காரநோக்கி அடிகளின் ஈற்றி விருக்கும் உடன்மேல் உயிரேற்றுமலும் உயிர்முன்உயிர்வரும்போது உடம்படுமெய்வருவித்து அதன்மேலுயிரேற்றுமலும் குற்றுகரத்தைக்கெடுத்து அது கெடநின்ற மெய்மே லுயிரேற்றுமலும் நகரம் வரவேண்டியவிடத்து னகரமும் னகரம் வரவேண்டியவிடத்து நகரமும் பதிப்பிக்கப்பட்டன.

வாசிப்பவர்கள் உடன்மேலுயிரேற்றியும் உடம்படுமெய்வருவித்து உயிரேற்றியும் குற்றுகரத்தைக் கெடுத்துக் கெடநின்றமெய்மேலுயிரேற்றியும் நகரனகரபேதங்களையறிந்தும் வாசித்துப்பொருள்கொள்க.

---

* இதுவும் பின்னுள்ள சிறப்புப்பாயிரமும் பழைய பதிப்பைச்சார்ந்தவை; பதிப்பித்தகாலம், சென்ற ருதிரோத்காரிஞு சித்திரைமீ.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.



இந்நூலாசிரியர் மாணாக்கராகிய
சோடசாவதானம்
சுப்பராயசெட்டியாரவர்களியற்றிய
நேரிசையாசிரியப்பா.

1810.

திருவளர் செங்கேழ்க் குருமணி கொழிக்கும்
பொருதிரை யுடுத்த விருநில வரைப்பிற்
றுவாத் துன்பத் தருபவ மறவொழித்
தோவா வின்பத் துறுதலை வேட்கு
5 மன்னிய வுயிர்காள் பன்னெறிச் செல்குவ
தொருவுமின் பெருமான் றிருநடங் காண
வுள்ளகத் தன்பொடு மொள்ளென வம்மி
னெனவிளித் திடல்போற் கனகத் தியன்று
மணிகால் யாத்த வணிகிளர் மாடத்
10 தும்பர்த் தயங்கு செம்பொற் கேதன
மாடுறுந் தெய்வப் பீடுசான் றோங்குந்
தொல்லைமா வளஞ்சேர் தில்லைமா நகரி
லிரசத வரைபிராற் கிடமா யெவரும்
பரசிடப் பெறுபெரும் பயனை நினைந்து
15 தானுமப் பயன்பெறத் தமனியக் குன்றம்
வானுயர் முடியொடு வந்தது மானக்
களங்கமற வோங்கி விளங்குபொற் பொதுவிற்
கலைமக ளம்பா லலைமகள் வணங்குந்
தலைமக ளென்னு மலைமக ளாய
20 வுலகுபல பயந்த வொருதா யொருபா
லிலகருள் சுரக்கு மிருவிழி களிப்ப
வண்டுமு ழுழக்குந் தண்டுழா யலங்கற்
றிண்டடம் புயத்துக் கொண்டல் வண்ணனு
முதுமறை தெரிந்த சதுமுகக் கிழவனுங்
25 கற்பக நீழலிற் பொற்புறு கோவு
மற்றவின் னவரும் பொற்றமன் னவருங்
கரஞ்சிரங் குவியக் கண்ணருவி பொழிய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யரகர வெனுமொலி பரவையை விழுங்க
30 வின்புறப் புரிபே ரன்புரு வாய
பொருவரு முனிவ ரிருவரும் போற்றித்
ததும்பு மானந்தச் சலதியுள் ளழுந்த
முயலகன் வெரிநிடை யியலடிநின் றருளித்
துவர்பழுத் தனைய வவிர்சடை யாடத்
35 தழைதிருச் செவியிற் குழையசைந் தாட
வருள்விழிக் கடையுமை தெருண்முகத் துலவ
வுறுதிரு வாயிற் குறுநகை யரும்ப

வடவரை குழைத்த தடநெடும் புயத்திற்
பாம்பொடு கடுக்கைத் தேம்பிணை மயங்கத்
40 திருவிடை யிற்புலி தருமுடை தயங்கத்
தாமரை மருட்டிய காமர்சே வடியிற்
செம்பொற் சிலம்பு பம்பிப் புலம்பத்
துடிமுத லாக கொடியுமைக் கிடத்துந்
தோற்றமுன் னாகச் சாற்றுமைந் தொழிலும்
45 வயங்குற வென்றுந் தயங்குமா னந்தத்
தாண்டவம் புரிந்தரு ளாண்டவன் கழற்கண்
ணுலகிடை யுதித்து நிலவுபல் லுயிர்க்குந்
தந்தையே யன்றித் தாயு மாவா
னிவனே யென்றிப் புவனியோர்க் துய்ய
50 நலமலி வணிகக் குலமகள் பொறையுயிர்த்
திலகுறு மளவும் விலகுற லின்றி
யன்னையா யளித்த மன்னுறு மப்ப
னெழுந்தரு ளப்பெறு செழும்புகழ் நிறைந்த
வொள்ளிய திரிசிராப் பள்ளிக் கேயினும்
55 பெரும்பொரு ளுளார்க்கே யரும்பொரு ளுறல்போ
லீண்டுபுகழ் செறிய வாண்டுவரு பெரியோன்
பிறைமுடிப் பெருமா னுறைதரப் பெற்ற
கறையூர் பொழில்சூ ழுறையூர்ப் புராணமுஞ்
சுரும்புபடிந் துண்ண வரும்புக டோறு
60 மட்டவிழ் குறுக்கைவீ ரட்டப் புராணமு
முற்ற பவஞ்சப் பற்றகன் றவர்பலர்
துற்றெளிர் வாளொளி புற்றூர்ப் புராணமு
முடைத்தெழும் வயன்மடை யடைத்திடக் கருப்புக்
கட்டி யிடும்விளத் தொட்டிப் புராணமுஞ்
65 சேற்றூர் வனைவய லாற்றூர்ப் புராணமு
மெயிலை யுடுத்தொளிர் மயிலைப் புராணமுங்
கமலைத் தியாக ராசல லீலையு
மூழியும் பெயராக் காழிக் கோவையு
மெருதூர் பரனிடை மருதா ருலாவு
70 மேவு புகழானைக் காவி னிடத்தருள்
பூண்டமர்ந் தருளகி லாண்டநா யகிக்கு
முருத்தவத் துறைதெறுந் திருத்தவத் துறைவளர்
கருப்புகல் கடிபெருந் திருப்பிராட் டிக்கு
முன்னவி லுறையூர் மன்னிய வடியவ
75 ரேந்திமதி யமைக்குங் காந்திமதி யுமைக்குந்
தருப்பெரு மணந்தரு திருப்பெரு மணத்துறை
போற்றுவார்க் கருடரு நீற்றுமை யவட்கும்
பெருவிடைப் பரனரு டிருவிடைக் கழியமர்
தருமரு கனுக்கு மொருமுரு கனுக்குங்
80 காவடுத் துறைதிரு வாவடு துறையி
னம்பல மாக நயந்தெழுந் தருளு
மம்பல வாண வருட்குரு பாற்கும்
பெருநயந் துவன்றிய பிள்ளைத் தமிழு
மாதனு சலத்துறை வாதனுக் கும்மேற்
85 சொன்ன குருபாற்கும் பன்னு கலம்பகமும்

விற்குடி கொளுமுடிக் கற்குடிப் பாற்கு
மிதம்புகல் கலசைச் சிதம்பரேச் சுரற்குஞ்
சொற்றவா னைக்கா வுற்றவன் னைக்குக்
தருமையில் வளர்தருஞ் சச்சிதா னந்த
90 குருபர னுக்குமேர் தருதமிழ் மாலையு
மறைதுறை சையுமரு ணிறைசிராப் பள்ளியு
மமரம லற்குநல் யமகவந் தாதியு
நீலி வனத்துறை நிமலனுக் கும்முரற்
காலிப வனத்துமுக் கட்பரஞ் சுடர்க்கும்
95 விரிபொருள் இடக்த திரிபந் தாதியுஞ்
சீருறை பூவா ளூருறை யரற்கு
நாருறை பூறை நண்ணிய பரற்கும்
தண்டபா ணிக்கும் வண்டமிழ் மதுரை
ஞானசம் பந்த நற்றே சிகற்கு
100 முத்தமப் பதிற்றுப் பத்தந் தாதியு
நறும்பலாச் சோலை யெறும்பி யூரின்
மேவுசோ திக்குவெண் பாவந் தாதியு
கவின்றமா மதுரையிற் கவின்றருண் ஞானசம்
பந்த தேசிகற்கா னந்தக் களிப்பு
105 மொருகவி யேனு மொழிதர லின்றி
யிருளகன் றொளிரு மெல்லாக் கவிகளுஞ்
சொன்னலம் பொருணலஞ் சுவைமிகு பத்திமை
நன்னலம் பல்லணி நலங்கள் செறிந்து
முழங்குற வெளிதின் மொழிந்தபெரு நாவலன்
110 குலத்திற் குடியிற் குணத்திற் குறையா
நலத்தின் மாண்பி னருசிவ பத்தியில்
வாய்மையிற் பொறையின் மலிதரு நிறையிற்
றாய்மையிற் கொடையிற் றகளரு நீதியின்
மயக்குறு பிறப்பி லுயங்கலை யாண்ட
115 தயங்குபே ரருளிற் றலைமைபெற் றுயர்ந்தோன்
சந்த மலிந்த செந்தமிழ்க் கரசாய்
வந்த மீனாட்சி சுந்தர வாரியன்
புல்லிய வென்றுஞ் சொல்லி யடங்கா
நன்னல மகமத்துப் பன்னிப் புனைந்த
120 வமலமலி தில்லை யமகவந் தாதியைக்
கதித்திடு மச்சிற் பதித்துத் தருகென
நல்லோர் பல்லோர் நயந்துரை யிடனெனத்
தொல்லோர் சொல்லிய தொண்டைமண் டலத்தி
லுலமலி திண்டோ ளுபேந்திர னைய
125 கலமலி கொங்கைக் கமலைவாழ் மார்பன்
றன்னுறு காவலின் மன்னுறு முல்லையிற்
கோதார் தராத சேதா விளங்களைச்
சேர்த்துற வைத்ததை யோர்ந்து நின்றே
யன்றோன் முன்றோ னாகிய விந்திரன்
130 மின்னுதன் காவலிற் றுன்னு நிலத்திற்
பயிலுற வைத்த செயலே மானக்
கலையடிக் கயவாய்க் காரா வினங்கள்
செலவுறு மிடனெலாஞ் சேர்த்திடக் துறங்கும்

பெருவளஞ் சிறந்த மருதஞ் சூழ்ந்து
135 மருவுபூ விருந்த வல்லிகன் னுடை
னுருவிற் பொலிந்த திருவினுஞ் சிறந்த
சிறுகிய மருங்குற் பெருமுலை மடவா
ராடகத் தியன்ற மாடத் தும்பர்க்
குழூஉமி யிருந்து செழுமலர்க் கரத்தா
140 னலகமுக மதியொடு பகையுறு மதியினைப்
பிடித்துப் பிடித்து விடுத்தெறி தால்போற்
றாளங் குயிற்றிய திரண்மணி யம்மனை
யாடன் மலிந்த பீடமர் செல்வ
மோவாப் பம்ம லூரார் செம்மல்
145 வலம்புரி யுதித்த கலம்புரி முத்தென
மிளிர்தரு புகழுயர் துளுவவே ளாளர்
குலமதி லுதித்த நலத்தின் மிக்கோன்
வாகா ரதஞ்சே ரேகாம் பரவேள்
செய்தவந் தெரிக்கு மெய்யுறு சீலன்
150 புண்ணியம் பழுத்த தண்ணளித் தாரு
வொர்க்கமில் சத்துவ நற்குண வாரிதி
யிரப்பவர்க் கின்பஞ் சுரக்குமா நிதியம்
புல்வரம் பகன்ற கல்வியின் மேரு
வுவமை யிலாப்பர சிவனடி யருச்சனை
155 பத்தியிற் புரியு முத்தம குணத்தோன்
பொங்குசீர் விசய ரங்கபூ பால
னுளத்தமை விழைவொடு விளம்பின னாக
வள்ளலிற் சிறந்த வள்ளலிவ னாதலிற்
றலங்களிற் சிறந்தமா தலமாந் தில்லையுட்
160 டேவரிற் சிறந்தமா தேவன் றாளிற்
புலவரிற் சிறந்த புலவரு விளங்கிய
கமலா சிரிய னவிற்றணி யமகவந்
தாதியுட் சிறந்தவந் தாதியை யோர்ந்துமின்
றேவுத னன்றெனன் றெண்ணுள முவந்து
165 மதித்திட யாரும் பதித்து முடித்தனன்
மன்னுயுறு மிகநூல் சொன்னபெரி யோன்பா
லென்னொடு கற்ற துன்னுயு மற்றுன்
கல்லைநீர் சூழ்ந்த கண்ணகன் ஞாலத்
திடம்படு மனபதை மடங்கெடப் பன்னூல்
170 விரித்துரை புலப்படத் தெரித்திடும் வல்லோன்
கனியினு மமுதினுங் கண்டினும் பாலினு
மினியதமிழ்க் கவிதை யியம்பத் தெரிந்தோன்
பவமறுத் தின்பப் பயனளித் தருளுஞ்
சிவபிரா னடிக்கீழ்ச் சிந்தைவைத் திருப்போன்
175 சுதந்தவிர் பெருஞ்சீர்ச் சிதம்பர மகிபன்
பண்ணிய தவத்தாற் பயந்தரு ளாமணி
நண்ணிய புலமை நலஞ்சேர்ந் தொளிரு
மேசுத லில்லா வெவரும்
பேசுபுகழ்த் தியாக ராசமா வலனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

சிவமயம்.

# திருச்சிராமலையமகவந்தாதி.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகக்கடவுள்.

1811. கராமலையாநின்றபோதுபங்கூவக்கடிதக்கரா
விராமலையாழிவிட்டாற்குமயற்குமெட்டாதுநிற்குஞ்
சிராமலையாதிபனெம்மானந்தாதியைச்செப்பவிடர்
வராமலையாவங்குசபாசவென்முன்புவந்தருளே. (க)

### ஸ்ரீ தாயுமானவர்.

1812. துப்பனைத்துந்தொழுஞ்செஞ்சடையான்கவிதொண்டருரைக்
கப்பனையேட்டிற்பொறித்தான்கடுப்பொலிகண்டன்றனை
யொப்பனையம்பனைச்செற்றான்சிராமலையுத்தமனென்
னப்பனையன்றிப்புகழாதென்வாய்புறத்தாரையுமே. (உ)

### ஸ்ரீ மட்டுவார்குழலம்மை.

1813. அகந்தக்குழலுமனத்துயர்தீரவயிலங்கைவைத்
தகந்தக்குழகனையீன்றாய்குயிலைத்தடிந்தமுதை
யிகந்தக்குழலைக்கடிந்தசொல்லாய்முத்திளநகையாய்
சுகந்தக்குழலம்மையேயடியேற்குமுன்றோன்றுவையே. (௩)

### செவ்வந்திவிநாயகர்.

1814. ஆனக்குழையுடையம்மான்புயத்துமழன்மெழுகு
மானக்குழையுமனத்தினராய்ப்பத்திமார்க்கநின்று
கானக்குழையையணிவார்சிரத்துங்கழனிறுத்துந்
தானக்குழைசெவிச்செவ்வந்தியானைதருமின்பமே. (௪)

### முருகக்கடவுள்.

1815. கரம்பன்னிரண்டுமுடியாறினனெவன்கைக்கவண்கன்
னிரம்பன்னிலத்திற்றினைத்தாளடர்நெறியேகிக்கண்ணை
விரம்பன்னியமொழிவேடிச்சிபாற்சென்றுவேண்டிமிக்கா
தரம்பன்னினனெவனோவவனேயெனைத்தாங்குவனே. (௫)

### கலைமகள்.

1816. எண்டோட்டுமுக்கட்டுநீரார்சடைத்திடுமாதர்பலி
கொண்டோட்டுவைத்தபொருளைசூவோவதைக்கூறவிருள்
விண்டோட்டுசெம்மணிமான்மகளுவின்விளங்குநரு
வெண்டோட்டுமுண்டகத்தாண்மலர்த்தாண்முடிமேல்வைப்பனே. ()

### திருநந்திதேவர்.

1817. இன்னடியார்களுடனிருப்பாநல்வினமணிக
ன்னடிவாயிலினின்றேபிரம்புகைதொட்டுமையாண்
மன்னடிகொள்ளவருமாலயன்முதல்வானவர்க்குத்
தன்னடிமுந்திக்கொடுப்பானடியெந்தலைக்கணிந்தே. (எ)

### சமயாசாரியர் நால்வர்.

1818. கருமப்பரந்தவிர்த்தாள்வாருததியிற்கன்மிதக்கத்
தருமப்பதியிற்கராச்சேப்தரவெண்புதாழ்குழலா
மருமப்பணிந்தபெருமானரியுருமாற்றிவர
வருமப்பர்சுந்தரர்சம்பந்தர்மாணிக்கவாசகரே. (அ)

### சண்டேசுரநாயனார்.

1819. மூரண்டடிகொண்டுவெம்போத்தைநடாத்திமுனிந்துநிற்பா
னரண்டடியப்பவமப்புறத்தோடவருந்துதிக
டிரண்டடியார்சொலத்தன்னையன்றூளைச்சிதைத்தெனைய
லிரண்டடிசேர்ந்தவிறையடிப்போதென்னிதயத்ததே. (கூ)

### மற்றைத் திருத்தொண்டர்கள்.

1820. பருத்தொண்டராகிற்குங்கொங்கையர்மான்முதற்பற்பலவாங்
கருத்தொண்டராதலவிச்சைவெப்போடிக்கழியவந்திக்
குருத்தொண்டராசின்மலரடிநீழற்குறுகுகின்ற
திருத்தொண்டரானவர்தாடொழுவாமுட்டிருக்கறவே. (௰)

### சேக்கிழார் முதலியோர்.

1821. மாக்கிளையார்மொழிபங்கனுக்கேயன்புவைத்தளவி
லாக்கிளையாரன்பறுத்துய்ந்ததொண்டரரும்புகழை
வாக்கிளையாரெனநாவலரோதவழுத்தியுய்ந்த
சேக்கிளையார்முதற்பல்லோரும்வாழ்கவென்சிந்தையினே. ()

---

### அவையடக்கம்.

1822. கடியார்கடுக்கையணிந்தார்நெடியவன்கண்ணிருக்கு
மடியாரணத்துமுடிமீதுவைத்தவராப்பணியார்
துடியார்கரத்தெஞ்சிராமலைநாதரைச்சொல்லுவதாற்
படியார்களிகழ்வாரோநல்லோர்களென்பாடலையே. (கஉ)

---

## நூல்.

1823. திருமாதிருக்குமணிமார்பனுன்முகன்றேவர்செங்க
திருமாதிருக்குந்தொழுநின்றநாயகன்றீவினைமூ
திருமாதிருக்குமடியார்க்கறுக்குஞ்சிராமலையான்
திருமாதிருக்குநுதலான்பொற்றுளென்சிரம்வைப்பனே. (க)

1824. சிரமரவம்புதரித்தசிராமலைத்தேவனைவச்
சிரமரவம்புணைநீர்பாய்ந்தபோல்வினைதேய்க்கநொந்தேஞ்
சிரமரவம்புயத்தாடாவென்றேதிச்சிறப்பினிறைஞ்
சிரமரவம்புரிவெங்காலன்செய்யினென்செய்குவிரே. (உ)

1825. குவையாவலவினையப்பவெப்பேமிகக்கொண்டுநொந்தேன்
குவையாவலவித்துநின்றிருத்தொண்டரிற்கூட்டச்செய்
குவையாவலவிழுங்கண்டாநறுங்கொன்றைகொண்டொளிர்வா
குவையாவலவிர்தனத்திபங்காசிரகுத்திரனே. (ங)

1826. திரங்காவலமரலிவ்வுடற்கெய்துமுன்செவ்வியபத்
திரங்காவலர்கொண்டருச்சித்திடேனிருள்சீக்குஞ்செங்க
திரங்காவலரும்பநின்றதொப்பாஞ்சிகரச்சிரகுத்
திரங்காவலவுமைபங்காவென்றீவினைதீர்த்தருளே. (ச)

1827. அரவப்பணிலனயன்மகவான்முதலாகியபொய்
அரவப்பணிவிடைசெய்துழலேனுழையார்த்திடுங்கை
அரவப்பணிந்தசடையாய்சிராமலையாதிபனே
அரவப்பணியுடையாயடியேனுன்னடைக்கலமே. (ரு)

1828. கலக்கந்தரமடவார்மயல்வாரிகலந்தவென்முன்
கலக்கந்தரவெஞ்சமன்வருங்காலங்கடுக்கைதப்ப
கலக்கந்தரநதிசூடுஞ்சிராமலையாய்கன்னிபா
கலக்கந்தரநினைவேண்டிக்கொண்டேனெனைக்கண்டுகொள்ளே. (சு)

1829. கண்ணுடிமானப்பொலியுங்கபோலத்தர்காதலெனுங்
கண்ணுடிமானமற்றுண்டிருந்தேன்கடையேன்பொன்மன்றின்
கண்ணுடிமானத்தனேயினிமேனின்கழல்வைப்பனென்
கண்ணுடிமானச்சிராமலையாய்சடைக்கங்கையனே. (எ)

1830. கங்காதரவிண்டொடுஞ்சிரபூதரக்காவலமு
கங்காதரவிந்தம்வள்ளையொப்பாமலைக்கன்னிபங்கா
கங்காதரவிதழிச்சடையாய்நின்கழற்கிலெனு
கங்காதரவிலுடையாய்புரத்தைக்கடந்தவனே. (அ)

1831. கடனுகவதரிக்குந்தரளப்பற்கவுரிபங்கா
கடனுகவதட்சிராமலையாய்வினைகட்கிடனுங்
கடனுகவதனென்றுலுனையாதெனைக்காத்தனிற்கே
கடனுகவதண்டங்கொண்டெமன்றேன்றிடுங்காலத்திலே. ()

1832. காலக்கடியமடவாரலறவிண்கன்னியர்செங்
காலக்கடியவிர்பஞ்சார்சிராமலைக்கத்தசெங்நீர்
காலக்கடியரவாபரணகண்சிவந்துவருங்
காலக்கடியனையஞ்சேலெனவந்துகாத்தருளே. (கoo)

1833. காதாசங்கத்தமியேனுகியவென்கருமக்குவி
காதாசங்கத்தண்குழைசேர்ந்திலகிக்கவின்பெருகுங்
காதாசங்கத்தழனேத்திரத்தாய்சிகரச்சிரா
காதாசங்கத்தர்மயற்குள்விழாமனின்கான்மலரே. (கக)

1834. கானகத்தானவனைகரியோற்களித்தாய்சிரா
கானகத்தானகரியுரித்தாய்பொற்கடுக்கைமலர்க்
கானகத்தானயம்போலேபிறந்துகழிந்தசுடுங்
கானகத்தானமெலாமென்னென்பேகுப்பல்கண்டதுவே.(கஉ)

1835. கண்டமட்டுங்கடுங்காலற்கஞ்சேன்கடைநாளினில
கண்டமட்டிந்தருவானைமொய்கோடொளிர்காழகில்சி
கண்டமட்டுந்துபொழில்சேர்சிராமலைக்காவலனைக்
கண்டமட்டுங்கறுத்தானையென்றுச்சொலக்கற்றபின்னே. ()

1836. கற்பகச்சோலையின்மீப்பாய்முடிக்கதிராற்கதிர்வி
கற்பகச்சோதமெனவாஞ்சிராமலைக்காவலனே
கற்பகச்சோரியயிலேவியகுழகற்கத்தனே
கற்பகச்சோரவின்னின்னையெந்நாளிற்கலப்பதுவே. (கச)

1837. கலக்குஞ்சரமைந்துடையானைச்செற்றகண்ணுபிழைய
கலக்குஞ்சரமுமணிந்தாய்சிராமலைக்காரணவி
கலக்குஞ்சரமுரித்தாய்துயராங்கடையேன்றலையிற்
கலக்குஞ்சரணத்தனேகத்தனேவெங்கறைக்கண்டனே. (கரு)

1838. கண்டாவியங்குமிழ்மேற்பாய்ந்துமீண்டுசெங்கத்திரிகைக்
கண்டாவியங்குலிக்கையோட்டிநிற்கமைதீட்டுவரை
கண்டாவியங்குருத்தமொறுவேற்றருளக்கடுவார்
கண்டாவியங்குஞ்சிராமலையாயென்கருதினையே. (கசா)

1839. தினைப்போதகத்தன்பிலார்க்குநெஞ்சேசெந்திருத்தவனர்
தினைப்போதகத்தனைத்தையறுமுகன்செய்யகுந்தத்
தினைப்போதகத்தன்மினைக்களஞ்சாரங்கண்சிரேனவோ
தினைப்போதகத்தன்சிராமலையானெனச்செப்பலையே. (கஎ)

1840. ஏற்றானைச்சாரர்க்கருள்கூர்சிராமலையிசனைமுன்
ஏற்றானைச்சாரதள்பேர்போர்த்தானையெம்பெருமானையையம்
ஏற்றானைச்சாரவிக்கானைச்செற்றானையெண்ணுர்களையிடு
ஏற்றானைச்சாரநிற்பேறில்லையோநல்லவின்பங்களே. (கஅ)

1841. இன்பந்தரும்பிறப்பேகுநெஞ்சேயிளமாதர்முலை
இன்பந்தரும்பலின்முத்தென்றிரங்கியிடாமலும்பர்
இன்பந்தருமலர்போலாஞ்சிரவெற்பிறையவனீர்
இன்பந்தரும்பர்புகழவைத்தான்கழலேத்துவையே. (௧௯)

1842. வையம்பரிவிற்புகழுஞ்சிராமலையாய்வயங்கும்
வையம்பரிவின்மலைநாணிவாசுகியாய்தலைக்கு
வையம்பரிவில்வம்பூண்டாயுமைமணவாளதயை
வையம்பரிவிடையாயென்னையாளவருமப்பனே. (௨௦)

1843. அப்பாசிராமலையாயென்னையாளென்பவர்க்கன்பவால்
அப்பாசிராமலையாநிற்குமோதியவள்பங்கனே
அப்பாசிராமலையாநின்னையேசொல்லலன்றியுடல்
அப்பாசிராமலையார்மலரீரென்றறைகிலனே. (௨௧)

1844. அறக்காதகன்கொடியேன்வினையேனெள்ளளவுமனத்து
அறக்காதலென்பதில்லேனைச்சிராமலையாய்கரியல்
அறக்காதவள்ளுகிராலுரித்தாயடியாரெனுமைய்
அரக்காதநெஞ்சருடன்சேர்த்தருள்செய்யகளங்கனே. (௨௨)

1845. களங்கறுப்பானஞ்சடைசிவப்பான்மறைகாண்பரியான்
களங்கறுப்பானன்மொழிபூண்முலையிதழ்க்கன்னிபங்கன்
களங்கறுப்பானபுரரைச்செற்றானெனைக்காயும்வினை
களங்கறுப்பானஞ்சிராமலைவாழுமுக்கட்பரனே. (௨௩)

1846. கட்பரவச்சுரும்பேறுங்கடுக்கையங்கண்ணியது
கட்பரவச்சுகைத்தேயுயிரோடுமக்காலத்துநின்
கட்பரவச்சுத்தமாவறியாவெனைக்காத்தருண்முக்
கட்பரவச்சுதன்போற்றுஞ்சிரவெற்புகந்தவனே. (௨௪)

1847. கந்தரத்தாவண்சிராமலையாய்வெங்கறையுறையுங்
கந்தரத்தாவலினென்பணிந்தாயந்திக்காலம்வந்தாற்
கந்தரத்தாவலர்ப்பூங்குழல்சோருமென்கன்னிக்குச்சு
கந்தரத்தாவறுநின்மாலைவேண்டுங்கருத்தினனே. (௨௫)

1848. கருமந்திரண்டதினாடோறும்வாடிக்கரையுற்றுறு
கருமந்திரங்குநெற்போலாதநீர்ந்துகதியடைவீர்
கருமந்திரதமதுவுணுங்கொன்றைக்கணியனைப்ப
கருமந்திரவஞ்செழுத்தாற்சிராமலைகைகுவித்தே. (௨௬)

1849. குவிக்குந்தரமறியேன்சிரமேற்கரங்கொண்டுயர்பா
குவிக்குந்தருமொழிபங்காசிரகுத்திரகொலையாக்
குவிக்குந்தறுகட்சமன்வருநாண்மெய்குலைவுற்றன்னைக்
குவிக்குந்தருணத்தஞ்சேலென்றெனையுய்யக்கொண்டருளே,

1850. அருந்தவருமந்தாருமடுகுலிசங்கொளங்கை
அருந்தவருமம்பும்வெற்பரியாயென்றடிதொழத்தீய்
அருந்தவருமழுவேந்துஞ்சிராமலையாய்விடத்தை
அருந்தவருமம்வைத்தாயென்னையாள்பணியத்தியனே. (௨௮)

1851. தியங்காமனந்தந்தைதாயானவாசிரவெற்பவிர
தியங்காமனந்தமுனிந்தாயெனவுனைச்சிந்தைவைத்தோ
தியங்காமனந்தனையில்லேற்கெவ்வாறினித்தீர்வதுசத்
தியங்காமனந்தணன்மாறுழ்பதநமன்சேரச்சமே. (௨௯)

1852. அச்சங்கராமலையக்கொண்டயானைமுன்பாகியவெள்
அச்சங்கராவணையானம்பமாதுக்கருமயறீர்
அச்சங்கராசிரவெற்பரநீயிங்கணைவதனுக்கு
அச்சங்கராகவிதழியந்தார்கொடன்பாகவின்றே. (௩௦)

1853. கவனத்தனேகமினர்பாற்றிரிகடையேன்கயமு
கவனத்தனேசிரவெற்பானேகஞ்சக்கண்ணன்றுர
கவனத்தனேடிடநின்றவனேயுன்கழற்கன்பனு
கவனத்தனேரிட்டுழல்விலனைக்கருணைசெய்யே. (௩௧)

1854. கருத்திருக்கையவர்தாளிலென்றேதிக்கசிவுறுவார்
கருத்திருக்கையறுப்பார்நரர்காள்சங்கரியிடப்பா
கருத்திருக்கையமற்றேத்துஞ்சிரவெற்பர்காலுமழற்
கருத்திருக்கையர்சரணேசரணென்றுகாத்திருமே. (௩௨)

1855. இருந்தாலமேழினர்கையறுத்தாரெதிரேற்றடுசெய்
இருந்தாலமுண்சிரவெற்பரென்னுதயினியமுதய்
இருந்தாலம்வைத்துண்டரிவையர்பாலிறுமாந்திருப்பார்
இருந்தாலதிலென்னிராதொழிந்தாலுமென்னிப்புவிக்கே. ()

1856. விக்காதமலைசெலுந்தெறுநோய்கண்மிகுந்துபர
விக்காதமலைக்கும்வெஞ்சமனஞ்சுமெய்யன்பர்க்குச்செவ்
விக்காதமலைபங்கார்சிரவெற்பரைமேவிக்கைகு
விக்காதமலையுடையார்க்கன்றேவிம்மிகுந்தத்ததே. (௩௪)

1857. குந்தனஞ்சந்தனம்புற்றமைதீட்டுகட்கோதைநெருங்
குந்தனஞ்சந்தனம்பூசாததுங்குயில்காண்மயன்மி
குந்தனஞ்சந்தனந்தாமலர்நீத்ததுங்கூறுமின்வை
குந்தனஞ்சந்தனங்குந்தன்றொழுஞ்சிரகுத்திரற்கே. (௩௫)

1858. குத்தம்புவிற்கணுதலாள்பங்காவெங்கொடியரைச்செ
குத்தம்புவிக்கிடர்தீர்ப்பாய்நிலவுமிழ்கோதின்முத்து
குத்தம்புவிண்செல்சிராமலையாயெனக்கோக்களின்மி
குத்தம்புவிட்டுருகிப்பாடுவார்க்குக்குறைவிலையே. (௩௬)

1859. இலங்காதவருறவாகாதென்பீர்தன்னையேத்துந்தொண்டாய்
இலங்காதவருக்கிலான்சிரவெற்பனியாகசபை
இலங்காதவருக்குப்பற்புடைத்தானென்றியம்பிடவாய்
இலங்காதவருசமனுக்கென்செய்வமென்னுதரமே. (கஎ)

1860. தரங்கந்தரங்கச்சிளமுலைபொன்மலைதண்முருக்க
தரங்கந்தரங்கச்சபங்கூந்தல்சார்புறங்கால்வடமு
தரங்கந்தரங்கச்சுரர்தொழச்சூரடுசத்திகண்ணுந்
தரங்கந்தரங்கச்சடையார்சிராமலைத்தையலுக்கே. (கஅ)

1861. தைக்குஞ்சரமெனமுன்னின்றெய்வேளைச்செற்றான்சமன்வ
தைக்குஞ்சரணத்தம்மான்சாயுகிர்பெறுந்தாளுடைத்தத்
தைக்குஞ்சரவொலிசெய்யுஞ்சிராசலத்தானுருமோ
தைக்குஞ்சரமுரித்தானெனக்கின்பந்தருமப்பனே. (கக)

1862. பனையஞ்சருகிற்கவிபொறிப்பார்மடப்பாவியர்க்கொப்
பனையஞ்சருமகவான்மாலுமென்றலைவார்பகர்ந்தப்
பனையஞ்சருவணர்போற்றுஞ்சிராமலைப்பார்த்திபன்பண்
பனையஞ்சருக்கனெயிறுகுத்தானெனப்பாடிலரே. (உ0)

1863. இலங்காரமாடைகலன்பூமிமக்களிளமுலைமேல்
இலங்காரமாதர்தமர்நெஞ்சமேயிவையாவுஞ்சென்மத்து
இலங்காரகனட்டமச்சனியாமெனவெண்ணியிகழ்ந்து
இலங்காரணுசிரவெற்பாவென்றேம்பலனென்கடத்தே. (உக)

1864. கடத்தும்பியானனத்தானைப்பெற்றானைமுக்கண்ணனைத்திங்
கடத்தும்பிணையனறுங்கொன்றையானைக்கவர்வினைச்சங்
கடத்தும்பிணியினும்யானுழலாமலென்கண்மயக்கைக்
கடத்தும்பிரானைச்சிராமலைமீதினிற்கண்டனனே. (உஉ)

1865. கண்டங்குறெற்றியுமான்மழுக்கையும்வெங்கார்விடஞ்சேர்
கண்டங்குலவரவப்பணியுங்கதிர்கான்றிடக்கற்
கண்டங்குதலைச்சொல்பங்கன்சிராமலைக்கத்தனிற்கக்
கண்டங்குநின்றுதொழுதேனென்றீவினைகைவிட்டதே. (உங)

1866. கையிலாயனம்பன்முக்கண்ணன்சிராமலைக்காரணன்செங்
கையிலாயனம்பனடிபணியாமல்வெங்காதலுவ
கையிலாயனம்பன்னரும்வினைக்கன்னெஞ்சமளவுசங்
கையிலாயனம்பன்மின்மண்முதலாசைகதியலவே. (உச)

1867. அலரிக்கதிருக்குடுவொக்கினுமைந்தருவுக்கெட்டி
அலரிக்கடுமரமொக்கினுமாதிரவங்கனைமை
அலரிக்கரைச்செற்றவையர்சிராமலையன்பருக்கொப்பு
அலரிக்கரியவன்வேதாபுனிதனமரருமே. (உரு)

1868. அமலத்தவரைச்சிராமலையாதிபரையழகிய்
அமலத்தவரையுடையாரைநாளுமருமறையோது
அமலத்தவரையரைப்பணியீர்முன்னடுத்தும்முடல்
அமலத்தவரையெவ்வாறுவெல்வீரிவ்வருஞ்சன்மத்தே. (௬௬)

1869. சனனம்பலவடிவம்பலவூர்பலதாய்பலவ
சனனம்பலமும்பலவிதிலவெள்ளித்தடவரையா
சனனம்பலவன்சிராமலையானெனத்தான்சொலும்வ
சனனம்பலனிச்சனனத்துண்டேயென்றனிநெஞ்சமே. (௬௭)

1870. தனங்கட்டிமாங்கனிசெந்தாமரைசத்தியொத்திடும்வ
தனங்கட்டிருவொப்பர்மின்னுரென்றைவர்தளம்பினர்மைந்
தனங்கட்டிடென்றசிராமலையாய்தமிழ்க்கூடலிலிந்
தனங்கட்டிவிற்றவனேயென்னையாட்கொள்சலதரனே. (௬௮)

1871. தருக்கும்படருஞ்சிராமலையாய்தனந்தாங்கியமா
தருக்கும்படர்வினைக்குஞ்சுழலாதெனைத்தாங்கிக்கொள்வே
தருக்கும்படலைத்துளவார்க்குங்காண்பரியாய்சலமுந்
தருக்கும்படவெரித்தாய்புரமுத்தலைச்சத்தியனே. (௬௯)

1872. சத்தியங்கார்கலிவற்றவிட்டாற்கத்தனேமிகுவஞ்
சத்தியங்கார்புரஞ்செற்றாய்சிரசயிலாவினைப்பா
சத்தியங்கார்களிற்சேர்த்தெனையாதரித்தாளிதுவே
சத்தியங்கார்விடக்கண்டாசரணஞ்சரணுனக்கே. (௭0)

1873. சரமலங்காரமதனெய்யநீத்துவெண்டண்டாளச்
சரமலங்காரநறுங்குழலாளைத்தழுவுசல
சரமலங்காரச்சுனைசேர்சிராமலைச்சங்கரகுஞ்
சரமலங்காரவுரித்தாயுன்செஞ்சந்தனப்புயத்தே. (௭௧)

1874. தனத்துக்கவானைதயடியேன்சிரசயிலச்சிவவ
தனத்துக்கவான்மதியொத்தாள்பங்காகலன்சார்களஞ்சந்
தனத்துக்கவான்செங்கதலியொப்பாமொருதாயிடம்பால்
தனத்துக்கவாவுற்றழாதாண்டருண்முக்கட்சங்கரனே. (௭௨)

1875. சங்கமையானனங்கைகாறமைத்தடவித்தமரின்
சங்கமையானந்தலென்றலறுமுனென்றன்னைவெம்பா
சங்கமையானதற்றுன்கொண்டடாமுன்றளர்ந்துடல்க
சங்கமையானமுறுமுன்சிராசலத்தாயருளே. (௭௩)

1876. அரும்பாலனம்பகமீராறினுனென்றளித்திடுங்கற்பு
அரும்பாலனம்பல்வயினடைத்தேவிபங்கற்புதவும்
அரும்பாலனம்பசிரவெற்பநீயணையாமையினய்
அரும்பாலனம்பல்கலனீத்துவாய்விட்டலறுமின்னே. (௭௪)

1877. அலரம்பையோதிகவான்றுப்பதரத்தரிவையர்காள்
அலரம்பையோதிமன்றந்தைகுமாரனடுத்தெய்யவே
அலரம்பையோதிருக்காலுதிர்த்தேங்குவனத்தையறி
அலரம்பையோதியென்னோதீர்சிராமலையையரையே. (ருரு)

1878. ஐயரைக்காணிக்கணமாவதுகினைத்தன்புடன்மெய்க்கு
ஐயரைக்காணிபத்தோல்புலித்தோலரையன்றெடுத்த
ஐயரைக்காணிசிரபூதரமென்றமர்ந்திருக்கும்
ஐயரைக்காணிலையோநெஞ்சமேமனஞ்சுதற்கே. (ருசு)

1879. அஞ்சார்கருமலரப்பாரைச்செற்றவென்னப்பன்வெப்பால்
அஞ்சார்கருமிடற்றான்சிரபூதரத்தையன்சரண்
அஞ்சார்கருதுமடியார்வெங்கோபத்தடுமியமற்கு
அஞ்சார்கருமந்தொலைப்பார்சுவர்க்கமவரதுவே. (ருஎ)

1880. அவராகமருப்படலாமையோடறுகக்குநெடி
அவராகமருப்பனமுலையாமினணிந்தவதூய்
அவராகமருப்பதமலரீந்தஞ்சிராமலையை
அவராகமருப்பமுள்ளேனையாண்டருளஞ்சலென்றே. (ருஅ)

1881. அஞ்சலிக்குஞ்சடையானைச்சிராமலைபையனையம்பு
அஞ்சலிக்குந்திபவில்லானைச்செற்றவெனப்பனையால்
அஞ்சலிக்கும்படியுங்கடானைவாழ்த்தியனுதினமும்
அஞ்சலிக்குந்தொழும்பேறகில்லையோமுத்தியாயதுவே. (ருகூ)

1882. ஆயாவப்பாலரியம்பாய்சிராமலையையகின்னை
ஆயாவப்பானிற்கும்வெவ்வினைப்பட்டலைந்தேமனம்புண்
ஆயாவப்பார்சடையாவுழல்வேற்குவையச்சிலரை
ஆயாவப்பாவென்றினிப்பிறந்தோதலைதைத்தவிரே. (சுo)

1883. அதரம்பவளமழகார்கபோலங்களத்தமனை
அதரம்பணைகொண்முலைமிகுவாசவனிச்சமலர்
அதரம்பதகிகரன்றெனமாதர்க்கறைவேற்குநல்
அதரம்பரசிரவெற்பாவருளங்கைநாகத்தனே. (சுக)

1884. நாகங்கண்மொய்த்தலர்ந்தோங்கிடகிற்குஞ்சிரநகமன்
நாகங்கணக்கையுமைமணவாளநம்பாவடியேன்
நாகங்கணங்கைசொலறுழல்பார்த்தனனிகுவித்தல்
நாகங்கணற்பணியாயுனக்கேசெயுநாடொறுமே. (சுஉ)

1885. நாடியிலங்குவருள்ளுறைவாய்சிரநாகதமிழ்
நாடியிலங்குலவும்மணவாளநம்பாவருவாய்
நாடியிலங்குலிசேர்த்தாயுள்வேதியர்நண்ணியென்கை
நாடியிலங்குக்கருத்தேதென்றேதுமன்னாள்விரைந்தே. (சுந)

1886. விரைத்தடங்கற்பகச்சோலைகள்சூழ்தரவெய்யவன
விரைத்தடங்கற்செய்தொளிர்சிகரச்சிரவெற்பரத
விரைத்தடங்கற்பின்மூலைகையானைவிரும்பிமெய்யை
விரைத்தடங்கற்கும்புறம்பாய்நின்றேன்வினைவெப்பரிந்தே.()

1887. அரிக்குங்கடியபிணிக்குமஞ்சேனென்னலர்க்குமஞ்சேன்
அரிக்குங்கடியரவுக்குமஞ்சேனென்னையாளுடையான்
அரிக்குங்கடியம்புயற்குமெட்டானமருங்குவடல்
அரிக்குங்கடியஞ்சிரவெற்பெனுதவர்க்கஞ்சுவனே. (சுரு)

1888. அஞ்சங்கருடன்பரியார்க்கரியசிராசலத்தாய்
அஞ்சங்கருப்பமனத்தேனைக்காலனணுகுறுங்கால்
அஞ்சங்கருக்குப்பசுத்தானமீயுமுனச்செனுமுன்
அஞ்சங்கருகுகளரலருமுன்வந்தாதரியே. (சுசு)

1889. ஆதரிக்கப்பட்டவெஞ்சூலர்கூடலையன்றினிதா
ஆதரிக்கப்பட்டஞ்சூடினரஞ்சிரவெற்பர்கயில்
ஆதரிக்கப்பட்டருமொழிபாகரென்னார்வினைப்பொல்
ஆதரிக்கப்பட்டந்தோகுணுங்காயலைவார்கரைந்தே. (சுஎ)

1890. கரியவனந்தணன்காண்பரியான்கடுஞ்சாபத்தின்வெள்ள
கரியவனந்தலிலாதளித்தான்கறித்தோங்கிடஞ்சி
கரியவனந்தமுறுமீச்சிராமலைகாயும்வினை
கரியவனந்தறவிர்ந்துலகீர்சென்றுகைதொழுமே. (சுஅ)

1891. கைக்கும்பிணுகந்தரித்தான்புரத்திற்கனலுறந
கைக்கும்பிணுகக்கரத்தான்சிராமலைகண்டிடினங்
கைக்கும்பிணுகம்புரைமனஞ்சென்றுகவலையுறல்
கைக்கும்பிணுகமவற்காயிச்சன்மங்கடிதறுமே. (சுகூ)

1892. கடிக்கமலங்குவளைமுகங்கண்ணெனறுகாட்டியிதழ்
கடிக்கமலங்குவிர்மாதர்கள்பானுங்கனவினைபோக்
கடிக்கமலங்குன்றவேத்துஞ்சிராமலைக்காவலனைக்
கடிக்கமலங்குலவுஞ்சடையானைக்கதிதக்கவே. (எ0)

1893. தக்கனியாகஞ்சிதைந்தாய்விண்கர்க்கடகந்தனைச்சூ
தக்கனியாலிகன்மந்திகடாவுஞ்சிரசயிலா
தக்கனியாயபுரத்தைவென்றாய்நின்றனக்கன்பின்மே
தக்கனியானலனுயினுந்தாளுதவியருளே. (எக)

1894. தவியாச்சிறுமைதனிலுழல்வேற்குநின்றாளிணைப
தவியாச்சிறந்தளியாவிடிற்றான்சிரவெற்பமண்ணு
தவியாச்சியப்பிட்டுகந்தாய்தமியன்வழக்குப்பொல்லா
தவியாச்சியம்விடமாட்டேன்செவ்வந்திதகும்வண்ணனே. ()

1895. வணமாடக்கூடமனைமக்களெஞ்சேயிந்தவாழ்க்கைகள்பொய்
வணமாடக்கூரகிபூண்டான்சிராமலையான்வளவா
வணமாடச்கூடலிற்சென்னியின்மேற்றட்டுவைத்துப்பின்கோ
வணமாடக்கூலிக்குமண்சுமந்தான்கழல்வந்தித்தலே. (எ௩)

1896. வந்துடைத்தாயவினையேற்கருள்செய்வணங்குவர்ப
வந்துடைத்தாயற்றுடைப்பானகையைமகத்திற்கண்சி
வந்துடைத்தாயன்மகற்கோர்சிரமறுத்தாயதரு
வந்துடைத்தாயமதென்றாய்சிராமலைவாழ்சம்புவே. (எ௪)

1897. சம்பையக்கூடலின்மாவாக்கிஞைரச்சிராதரம்வாழ்
சம்பையக்கூரகிபூண்டாரையன்னைதராததின்வ
சம்பையக்கூழிலிட்டாலெனப்பாலனந்தள்ளினனி
சம்பையக்கூடுவமென்றாற்சகிப்பின்றுமால்சகியே. (எ௫)

1898. மாலையிராவதன்வேதாவொப்பார்கொல்கண்வாய்திறந்தால்
மாலையிராவதுபோல்வானிலங்குமவுலியெலா
மாலையிராவணனைநெரித்தானைவழுத்தியுன்னி
மாலையிராவருத்திச்சிரபூதரம்வாழ்பத்தர்க்கே. (எ௬)

1899. பத்தானனத்தனழூந்தப்பனிமதிகேம்பவெள்ளி
பத்தானனத்தன்பணியச்சமனுயிர்பாறநற்ற
பத்தானனத்தன்விழிகூடத்தேடப்பண்பாயினசு
பத்தானனத்தன்சிராமலைநாதன்பொற்பாதங்களே. (எஎ)

1900. தங்கக்கலைவளைத்துச்சூரியன்பற்றகர்த்தடுமா
தங்கக்கலையுரித்தந்தணன்சென்னிதடிந்தறுப
தங்கக்கலைக்கண்டுழன்றோடரியைத்தடுத்தனசீர்
தங்கக்கலைச்செஞ்சடைச்சிரவெற்பன்றடக்கைகளே. (எஅ)

1901. தடவரைவில்லிசிராமலையப்பன்சரணத்தைநீ
தடவரைவீசங்கணமாயினுமென்றுசாற்றிற்றுப்பு
தடவரைநாடினைநெஞ்சேநல்லோரினித்தானெனைச்சி
தடவரைபட்டுழலென்பார்கிற்கீதுதருமமன்றே. (எகூ)

1902. தருமங்குலவவளர்த்தபிராட்டிபொற்றாளுக்கும்வே
தருமங்குலனமெய்யாரும்பணியுநின்றாளுக்குநாத்
தருமங்குலச்சொன்மலர்தூய்த்தொண்டாயினன்றங்கியமா
தருமங்குலவுமின்னுஞ்சேர்சிராதரத்தாவருளே. (அ0)

1903. தாவிப்படிவழிமீதேறிமந்திகடண்டருவில்
தாவிப்படிகொள்கடகத்தைச்சீறுஞ்சிராதரவத்
தாவிப்படியடியேன்வாடவோகிற்குச்சம்மதியுள்
தாவிப்படியுளரேசாமனின்பதத்தாமரையே. (அக)

1904. மருமந்தாசையொழியாதுமிக்கமயக்கமுற
மருமந்தாரியரின்பமெய்யாக்கிவந்தேனையல
மருமந்தானெனச்சொற்றேயமன்வருகாலத்தைய
மருமந்தாளிற்சிரவெற்பமேயும்வரலந்தமே. (அஉ)

1905. அந்தனையாரிடையார்சிறியாரையலைக்கழிக்கும்
அந்தனையாரையகன்றுநெஞ்சேதொண்டனுவெனையால்
அந்தனையாவலினுஞ்சிரவெற்பனடிகட்குநல்
அந்தனையார்சுகந்தக்குழறுள்கட்குமாக்குவையே. (அங)

1906. ஆகம்பரியன்சிகியம்பரியனத்தாகரிய
ஆகம்பரியனயற்கரியாயஞ்சிராமலையை
ஆகம்பரியமறைகந்தரவிடையாள்பங்கவென்
ஆகம்பரியடலேற்றுய்கின்றுள்கட்கன்பாவதென்றே. (அச)

1907. ஆவிக்குமண்சுமந்தாயையவானத்துக்கப்புறமன்
ஆவிக்குமரியதாஞ்சிரபூதரத்தற்புதவென்
ஆவிக்குமறலிமீதான்றிடுநாட்டொண்டையாவென்றுமெய்
ஆவிக்குமப்பொழுதெற்கேதுன்றுளன்றியாதரமே. (அரு)

1908. ஆதரத்தந்தமிலன்பர்க்கன்பாயுப்கிலார்மனங்கை
ஆதரத்தந்தருவாயார்க்கன்பாகியவரிதழ்த்தேன்
ஆதரத்தந்தமிலுண்டோய்ந்துநல்வழியற்றுழலும்
ஆதரத்தந்தசத்தெங்கள்சிராமலையத்தனுக்கே. (அசு)

1909. அத்தந்தருணமறிந்தார்க்குமீகையிலையகின்
அத்தந்தருவொக்குமென்றேகவியசடர்க்குரையேன்
அத்தந்தருஞ்சடையான்சிரபூதரத்தானொருவீர்
அத்தந்தருக்கத்தனெம்மானையான்சொல்லலானபின்னே. ()

1910. ஆனனம்பாணியைந்நீரைந்துளாயஞ்சிராமலையாய்
ஆனனம்பாவென்றுரைக்கினெஞ்சேகொடிதாய்மிகுபொய்
ஆனனம்பாற்சமணுணேசெல்லாதழலார்க்குமம்மய்
ஆனனம்பாரவுடல்சேருமன்றுண்மையாமிதுவே. (அஅ)

1911. ஆவணங்காட்டமதிக்கச்சுமக்கவப்போதுதெரி
ஆவணங்காட்டநரியையெல்லாம்பரியாக்கமுதிர்
ஆவணங்காட்டநம்மையன்சிராமலையானைவைத்தது
ஆவணங்காட்டன்மையாரன்பன்றேயிதறிமனமே. (அகூ)

1912. மனந்தனவாசையொழியாதுமாதர்மயலொருக
மனந்தனடுக்கமகலாதென்செய்குவன்வந்தெதிர்கா
மனந்தனயனந்திறந்தாய்சிராமலைவாணவெழில்
மனந்தனகந்தரிபங்காகின்பாதமலரருளே. (கூ0)

1913. மலையரையன்செழியன்றிருப்பாவையெனவளர
மலையரைமெய்யுறவைத்தாரைவாணிவலவரைக்க
மலையரையாளுஞ்சிராமலையாரைவருதுயர்விம்
மலையரையென்றுவைத்தேனடியேன்கன்மனத்திடத்தே. ()

1914. மனையாட்டிபங்குறவைத்தார்க்குமாதங்கவத்திரத்து
மனையாட்டினேறுங்குகனைப்பெற்றார்க்குவராகனைப்பூ
மனையாட்டிரங்கொள்சிராமலைவாணர்க்குமாத்திரஞ்ச
மனையாட்டிவைக்கவழிபடுவீர்வையமானிடரே. (சுஉ)

1915. மானுட்டமங்கைமணமாலைசூட்டமதுரைவள
மானுட்டமர்ந்துசெங்கோலோச்சியசிரமாதிரவெம்
மானுட்டமன்றிற்புரிந்தோனென்றோதிமனத்திலன்பாய்
மானுட்டமன்பர்க்கிணையோபுரந்தரன்மாலயனே. (சுங)

1916. அயனத்தமாறகலிந்திரன்செல்வத்தருத்தியில்லேற்கு
அயனத்தமானகளத்தார்படையினிதாகுங்கிளை
அயனத்தமாம்பலுடையானைச்செற்றசிராசலத்தாய்
அயனத்தமாசையறுத்தருள்வாய்நின்னடித்திருவே. (சுச)

1917. திருமாரனந்தனன்காண்பரியானெஞ்சிராமலையான்
திருமாரனந்தமுனிந்தான்சடையிற்செறியிருட்க
திருமாரனந்தநதிமாதுமுள்ளவன்றேன்மிகவ
திருமாரனந்தண்முளரியந்தாளென்சிரம்வைப்பனே. (சுரு)

1918. பன்னகமாலையுறக்கடிந்தான்முதற்பண்ணவர்வைப்
பன்னகமாலையன்வேதங்கள்வாழ்த்தும்பனுவலுடன்
பன்னகமாலையரஞ்சிரபூதரப்பண்பரன்பிற
பன்னகமாலையர்தஞ்செவிக்கேறுமென்பாடலுமே. (சுசா)

1919. பாடலமானப்பொலிகுழல்பாகன்சிராமலையான்
பாடலமானதென்றூர்ந்தானையன்றிப்பரந்தலர்ந்த
பாடலமானபுன்மைத்தேவரைச்சொப்பனத்திலும்யாம்
பாடலமானமற்றெண்ணலநண்ணலம்பார்க்கலமே. (சுஎ)

1920.*பாரம்பரியமென்னைம்பொறியுண்......
பாரம்பரியவகந்தோறுஞ்சென்று......
பாரம்பரியசிராமலையாவிட......
பாரம்பரியம்விடையாய்வினையற....... (சுஅ)

* இந்நூல் எழுதப்பெற்றிருந்தபிரதியில் இப்பாட்டும், சOO-ஆவது பாட்டும் உள்ள ஏடு முறிந்துபோய்விட்டபடியால், முற்றும் அறிந்து இவற்றைப் பதிப்பிக்கக்கூடவில்லை.

1921. பகவகங்காளசிரபூதரவயில்பாரவரை
பகவகங்காயம்புகழவிட்டாற்கப்பசிர்த்திரியம்
பகவகங்காதலொடுகாத்தற்கியார்பணிவாரெனுஞா
பகவகங்காரமறவெற்கருளுனன்பதத்திருவே. (கூகூ)

1922. திருக்கையிலாதறுத்திந்தி......
திருக்கையிலாயத்தடைந்......
திருக்கையிலாங்கடனஞ்சு......
திருக்கையிலாயுதனீந்தா....... (௧00)

திருச்சிராமலையமகவந்தாதி முற்றிற்று.

---

உ

# சிறப்புப்பாயிரம்.



கட்டளைக்கலித்துறை.

1923. பூவார் பொழிற்சிர பூதரம் வாழ்முக்கட் புண்ணியனுந்
தேவாதி தேவனுக் கந்தாதி மாலையைச் செய்தணிந்தான்
பாவார் தமிழின் றவப்பய னுவரு பண்புடையான்
நாவார் பெரும்புகழ் மீனாட்சி சுந்தர நாவலனே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

1924. தேன்பிறந்த கடுக்கையணி சடைப்பெருமான் றாயான
செல்வ மாய்ச்சேர்
வான்பிறந்த தலப்பனுவல் பிறதலநூல் களினுமென்னே
வயங்க லென்னிற்
கான்பிறந்த குவளையந்தார் மீனாட்சி சுந்தரமா
கவிஞர் கோமான்
தான்பிறந்த தலநூன்மற் றையதலநூ லினுஞ்சிறத்தல்
சகசந் தானே.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# துறைசையமகவந்தாதி.



## பாயிரம்.

1925. கணையாவனமணிமாலைச்செய்தோனவன்கண்மலர்கு
டிணையாவனசமலர்ப்பதத்தோனருளெய்தல்குறித்
தணையாவனநடைசெய்பூந்துறைசையந்தாதிசொல்லத்
துணையாவனநம்மழகியவேழந்துணைவந்ததே.

## குருவணக்கம்.

1926. பாவன்புதீரென்றலைமீதும்வைகியின்பஞ்செய்தது
பேவன்புலவுக்கடன்மாற்றருட்சுப்பிரமணிய
தேவன்புடையுறவாழ்வான்றுறைசைச்சிவன்முனமா
லாவன்புகழ்க்குருவம்பலவாணனடிமலரே.

---

## நூல்.

1927. திருவம்பரவமலமாயைகன்மஞ்சிதைதரவ
திருவம்பரவமகலத்திகழ்சிவஞானத்துமு
திருவம்பரவமருமாவடுதுறைச்செல்வபுற்றேல்
திருவம்பரவமரவென்றுஞ்சிந்தைசெயின்மனமே. (க)

1928. மனமாதவநந்தவேமுயலாநிற்குமாதர்தங்க
மனமாதவநந்தவேதமுற்றேனருள்வாமத்துச்ச
மனமாதவநந்தவேதாதுறைசைவள்ளால்வளைவா
மனமாதவநந்தவேற்றியென்றுமெங்ஙன்வாய்ப்பதுவே. (உ)

1929. பதுமத்தவளைநிகர்வாட்குமாரன்பகழிதுளைப்
பதுமத்தவளைகழல்வதுந்தீமதிபாரித்திறைப்
பதுமத்தவளைமுரல்வயற்கோமுத்திபற்றலரொப்
பதுமத்தவளைகவர்விடையாயறப்பார்த்தருளே. (ங)

1930. பாராதரிக்குமதிகாயுமாரன்பகழியொன்றும்
பாராதரிக்குமதிவேதனையுறும்பற்றநினைப்
பாராதரிக்குமதிலரகுருவப்பாரெனுந்தேர்ப்
பாராதரிக்குமதிமாலஃமேதாவப்பரிந்தருளே. (ச)

1931. பரம்பரமானந்தவாவரசூரபலியிடுகற்
பரம்பரமானந்தவாங்கிழப்பான்சென்றபண்பவெங்கும்
பரம்பரமானந்தவாங்குழையாயென்படர்மனம்பம்
பரம்பரமானந்தவாழ்க்கையெவ்வாறுறும்பாவமற்றே. (ரு)

1932. பாவனஞ்செய்யவொருநீநினையிற்பலிக்குமதப்
பாவனஞ்செய்யவுழல்பிறராலென்படுமஃதப்
பாவனஞ்செய்யமருமாவடுதுறைப்பண்ணவவொப்
பாவனஞ்செய்யவுணர்த்துநின்கண்டம்பதிந்தமர்ந்தே. (சு)

1933. பதம்படையாவந்தியேனடியார்க்குப்பல்பாவெனச்சொற்
பதம்படையாவந்திவன்றனெனவுழல்பாவிக்கும்வாய்ப்
பதம்படையாவந்திரைக்கடலாய்செய்யபங்கிக்குறும்
பதம்படையாவந்திவண்ணுதுறைசைப்பதியினென்னே. (எ)

1934. பதிகந்தரங்கவமுதெனமூவரும்பாடினர்கைப்
பதிகந்தரங்கடிக்குநின்றுளமர்பற்றறக்கன்றே
பதிகந்தரங்கமரசூர்முனைபணியாய்விடமுட்
பதிகந்தரங்கரியாயுணரேமெப்படியுய்வதே. (அ)

1935. படியாதவனிகமங்கூறுமாற்றுமெய்ப்பத்தியெய்தப்
படியாதவனிகழும்பரமுந்தவிர்பாவியிந்தப்
படியாதவனிகராசாற்கன்பில்லவன்பண்புறலெப்
படியாதவனிகவாதேத்துகோமுத்திப்பண்ணவனே. (கூ)

1936. வனத்தாமரையரக்காம்பற்றுறைசைவனப்பர்விரை
வனத்தாமரையரக்காம்பற்படாத்தர்வைவாய்ந்தசடை
வனத்தாமரையரக்காம்பற்றலையணிவார்விடிற்க
வனத்தாமரையரக்காம்பற்றினோர்திமடநெஞ்சமே. (கo)

1937. மடக்கொடியாரையினிநோம்பல்வேட்டுவளந்தபுசு
மடக்கொடியாரைமரீஇத்திரிவாஞ்சைநின்மாட்டுவர
மடக்கொடியாரைவனேசடையாயன்னமாமலைகூர்
மடக்கொடியாரைமதிலாவடுதுறைமாமணியே. (கக)

1938. மாவலங்காரத்தனத்துமையாண்மணவாளனின்றே
மாவலங்காரத்தண்கோமுத்திவாழுமம்மானிடமம்
மாவலங்காரத்தநேர்ந்றத்தாரைவைத்தான்களம்விம்
மாவலங்காரத்தழைவானலாற்கதிமற்றிலையே. (கஉ)

1939. மத்தாகமந்தரமாகீர்நட்டாருமருவருமே
மத்தாகமந்தரமாணுவெனக்கருள்வாயருள்வா
மத்தாகமந்தரமாலாய்தென்கோமுத்திவாழ்பவகா
மத்தாகமந்தரமாக்கிவோனுனைவந்திப்பனே. (கங)

1940. வந்தனங்காமருவாளியெய்வாய்நின்வலிவளமு
வந்தனங்காமருவாவடுதண்டுறைமன்முன்செலின்
வந்தனங்காமருவார்சடையாயென்பைமற்றதுநி
வந்தனங்காமருவாவென்றுநாணமருவிலேயே. (௧௪)

1941. மருவளகத்துமைமாதோடுயிரின்பவாழ்வுறக்கா
மருவளகத்துமையற்றுறையாரின்மன்னுங்கொன்றைத்தா
மருவளகத்துமையில்லார்புயத்தின்வண்காவிசுவை
மருவளகத்துமையாமவர்கோமுத்திமாநகரே. (௧௫)

1942. நகரமகரந்தகர்த்தாளிறைவர்க்குநற்றுறைசை
நகரமகரந்தகட்குழலோடுநயந்தமர்சி
நகரமகரந்தகப்பயில்வாரிதிநஞ்செனத்தி
நகரமகரந்தகர்மேவுமுன்னங்குநண்ணனன்றே. (௧௬)

1943. நந்தாவரத்தநகர்ஞானக்கோமுத்திநம்பவருள்
நந்தாவரத்தநமானுக்கியதெய்வநாதகுழை
நந்தாவரத்தநகுதோட்பஞ்சாக்கரநாமகுரு
நந்தாவரத்தநமென்றுகொள்வாஞ்சையிந்நாய்க்கருளே. (௧௭)

1944. அரவாவரையிலருண்ஞானக்கோமுத்தியையமறை
அரவாவரையிலகுங்கயிலாயத்தநாமயபொய்
அரவாவரையிலடியேனையேற்றலடல்விடைமேல்
அரவாவரையிலழல்கால்கட்கூற்றமணுகுமுன்னே. (௧௮)

1945. அண்ணுமலையத்தனை ஞானக்கோமுத்தியண்ணலையாம்
அண்ணுமலையத்தனைவினையாலயர்ந்தாந்தமிழை
அண்ணுமலையத்தனையாண்டவாபல்லமராருக்கும்
அண்ணுமலையத்தனையொப்பவாவென்றறைந்திலமே. (௧௯)

1946. அறையாகமநம்படைத்தானயனெற்கதுதுயர்சார்
அறையாகமநம்பலவாநின்சீர்த்தியவாவச்செவி
அறையாகமநம்பகோமுத்திவாணவருளொடுநீ
அறையாகமநம்பமாட்டேனெவ்வாறுன்னடியுறலே. (௨௦)

1947. அடியாரையாவடுவேற்கண்ணிபாகவரவுமுடி
அடியாரையாவடுதண்டுறையாய்மலமாதிகுற்றம்
அடியாரையாவடுவென்றுய்தலின்றியமரயன்மால்
அடியாரையாவடுப்பேன்பவமாய்த்தின்பமர்வதற்கே. (௨௧)

1948. தக்கசிதம்பரவாந்தொழிநீரச்சுதாவருணந்
தக்கசிதம்பரவாதங்கொள்வேலெனததண்டித்தவா
தக்கசிதம்பரவாவொளிர்நீற்றதண்கோமுத்திமே
தக்கசிதம்பரவாகதியுன்னைத்தவிர்ந்திலேயே. (௨௨)

1949. தவர்தானஞ்சற்றுமிலானுளென்றோர்தமக்கினிதோ
தவர்தானஞ்சற்றுமிலானென்றுநீயெனைத்தள்ளுதல்கை
தவர்தானஞ்சற்றுறுங்கண்டத்திறைவடிதண்டுறைநா
தவர்தானஞ்சற்றுநின்றன்மையென்றுளத்தடையெவனே. ()

1950. ஏதங்கலங்கப்பணிவார்முன்னிற்பவரெண்ணில்வலி
ஏதங்கலங்கப்பணிவார்துறைசையிறைவர்பணி
ஏதங்கலங்கப்பணிவார்திருவரசீயுநிழல்
ஏதங்கலங்கப்பணிவார்சடையிலென்பார்முத்தரே. (உச)

1951. முத்தனையானைக்கொடியிடையொப்பின்முலையுவந்த
முத்தனையானைக்கொடியமைத்தானைமுழங்குமலி
முத்தனையானைக்கொடியானைமூர்த்திமுதனவிலு
முத்தனையானைக்கொடியேன்றுறைசையின்முன்னுவனே. ()

1952. முன்னவராகந்தவாதாவடிதுறைமுற்றிநல
முன்னவராகந்தமாதியபொய்முகக்குங்கரணை
முன்னவராகந்தகுபாற்பசப்பினர்மொய்கழறோர்
முன்னவராகந்தனக்கரியாரெங்ஙன்முந்துவரே. (உசு)

1953. வரசங்கமங்கையுதித்தார்கலேற்றவவண்டுறைசை
வரசங்கமங்கையுடையவெள்ளேற்றுவருபவதா
வரசங்கமங்கையுருவாறளவியவாவனலி
வரசங்கமங்கையுயுமாறிழந்தும்வளமிலையே. (உஎ)

1954. வளவாகுரவையுடைமதவேளெய்மலர்க்கணையெவ்
வளவாகுரவையுவக்குமளகமயிலெனுமி
வளவாகுரவையுமொவ்வாதின்பத்துமருவுபுதி
வளவாகுரவையுள்ளார்ஞானக்கோமுத்திவானவனே. (உஅ)

1955. நவகோடிசித்தமிறேலவவாதநகர்வருப
நவகோடிசித்தமையுநூலெனமுனநல்கியவா
நவகோடிசித்தமுகவனக்கேழனண்ணுக்கழலோய்
நவகோடிசித்தபுரவாசவென்னுநறுநுதலே. (உகூ)

1956. தலையாலங்காடவர்சாராப்பிறவுந்தலப்பதம்வி
தலையாலங்காடவர்கோன்றலைப்பாச்செய்வதவன்முனைமு
தலையாலங்காடவர்காணத்தந்தார்நட்பர்தாரணிம
தலையாலங்காடவர்தொண்டர்நங்கோமுத்திச்சங்கரற்கே. ()

1957. சங்கந்தாங்கக்குழையாவமாயன்சரம்பதநஞ்
சங்கந்தாங்கக்குழைவார்மன்றுற்றுதல்வாகனம்பஞ்
சங்கந்தாங்கக்குழையாரவஞ்சடைக்கலமெச்
சங்கந்தாங்கக்குழைநேர்வர்சூழ்துறைசைப்பாற்கே. (௩க)

1958. பரவாதவத்தன்மையுற்றேயவத்தைப்படுங்கொடியேன்
பரவாதவத்தன்மைபற்றிநிற்பேன்மறைபன்னுசிதம்
பரவாதவத்தன்மைதீரமுராரிபணிதுறைசைப்
பரவாதவத்தன்மைதந்திருபந்தமும்பாற்றுகவே. (௩௨)

1959. பாலத்தனையத்தனையோவழற்கட்பரமனைக்கா
பாலத்தனையத்தனையரசூரனைப்பன்மறைக்க
பாலத்தனையத்தனைமநமாய்த்தளிப்பானையுமை
பாலத்தனையத்தனைநேர்பவனையுட்பற்றினமே. (௩௩)

1960. பற்றம்பலமங்கைமார்நல்கக்கொள்வர்பரவிமறை
பற்றம்பலமங்கைகூப்பார்துறைசைப்பதிநினையம்
பற்றம்பலமங்கையாரிசையாயறப்பற்றலரும்
பற்றம்பலமங்கையாகூற்றரிக்கவர்பாழ்ம்பலமே. (௩௪)

1961. பலமாவருக்கவங்கம்பெறுசோலைப்பதித்துறைசைப்
பலமாவருக்கவங்கம்புனைவாரைப்பற்றான்கணையுற்
பலமாவருக்கவங்கம்பணிவான்மகன்பண்ணுவன்றேர்ப்
பலமாவருக்கவங்கம்பெறினீந்தப்படுமிருளே. (௩௫)

1962. இருப்புவனத்தையடையானையுண்குளகெய்துங்கொலெய்த்த்
இருப்புவனத்தையுணிற்றாகம்போங்கொலிருந்துறைசை
இருப்புவனத்தையணிவிடையாளர்க்கென்றெய்திப்பணி
இருப்புவனத்தையெவராற்கடந்தின்பமெய்துவிரே. (௩௬)

1963. விரகம்பரமையவாங்கணல்லார்கண்விடுத்தொழிவான்
விரகம்பரமையவாற்றிப்பின்னாளுமெய்க்கோமுத்திய
விரகம்பரமையமாய்ப்பான்மகிழ்ந்தமர்விண்ணவத
விரகம்பரமையவென்னும்பொல்லாதவிரதத்தையே. (௩௭)

1964. விரியம்புவனம்பறிப்பானெரியவிழித்தவன்கா
விரியம்புவனம்பயில்கோமுத்தீசனைவிட்டயனீ
விரியம்புவனம்பரிப்பானைவேண்டலம்வேதமென்ற
விரியம்புவனம்பதினாலுங்கேட்கவிரித்திடுமே. (௩௮)

1965. விரையாக்கலியையொழித்திடமானிடர்மேற்கவிசொல்
விரையாக்கலியையுள்ளீர்ஞானக்கோமுத்திவிண்ணவனா
விரையாக்கலியைச்செயுங்கயிலாயத்தன்மேற்புகல்வீர்
விரையாக்கலியைதராவெருக்குஞ்சடைமேவியதே. (௩௯)

1966. வியவருகந்தபயன்பெறவும்மிளிர்கோமுத்திமே
வியவருகந்தபவோங்காரசாருன்னின்மேன்மையுத
வியவருகந்தபரணத்தர்மாமொழிவிட்டமர்வெவ்
வியவருகந்தபவுத்தர்சொல்வேட்பதுவென்னாகே. (௪௦)

1967. நரம்பாயவம்பலம்போன்மொழிமாதுமெய்நாடிமத
நரம்பாயவம்பலம்யாஞ்செய்வதாயிற்றுநாரதகிந்
நரம்பாயவம்பலம்வாழ்வாய்முகிலுநடுங்குறவா
நரம்பாயவம்பலம்வீழ்பொழிற்கோமுத்திநாயகனே. (சக)

1968. கனகத்தியாகந்தபப்போழ்ந்தபோதுங்கடுந்தழல
கனகத்தியாகந்தனேமானமூட்டினுங்கண்ணுதலே
கனகத்தியாகந்தர்பாற்சேறியென்றவன்காத்துறைசைக்
கனகத்தியாகந்தந்தானையல்லாதுகருதிலமே. (சஉ)

1969. கரும்பாவியங்கங்கங்கவராமுன்கரிசுகட
கரும்பாவியங்கங்கணிசாறுறைசைக்கனமலிந
கரும்பாவியங்கங்கபத்திரம்வேதங்கரியவனே
கரும்பாவியங்கங்கமின்றியென்றாயுன்கருத்துறவே. (சங)

1970. கருத்தாதரித்தமைநோக்கியையோர்கையணைத்தனைய
கருத்தாதரித்தமைசாய்த்தியல்காவிரிக்காத்துறைசைக்
கருத்தாதரித்தமைதீருடைபோயுனைக்காமுற்றினிக்
கருத்தாதரித்தமைவாளுமின்பெய்தவோர்கையணையே. (சச)

1971. கையிலாயமானும்பலவளக்கோமுத்திக்கட்பொலியங்
கையிலாயமானும்பரசுமுள்ளான்கஞ்சன்வாய்பரிவாழ்க்
கையிலாயமானும்பர்சூழ்பாற்கடலமர்கண்மலைமங்
கையிலாயமானும்படர்வினைதீர்ப்பனங்கைதொழுமே. (சரு)

1972. கைதவமேதகவாற்றிநின்றேனரகத்தமரு
கைதவமேதகவாள்வதென்றேகற்றுளாரியற்று
கைதவமேதகவாணம்வண்டார்க்குமங்காமதுரைக்
கைதவமேதகவாய்மாடக்கோமுத்திக்காவலனே. (சசு)

1973. காவியங்கண்ணியமார்பாநெய்த்தோர்கவிழ்த்தாய்புவனங்
காவியங்கண்ணியமந்தவிர்ந்தாமென்றகாவலநின்
காவியங்கண்ணியநாவலர்கோமுத்திக்கட்சென்றுடைக்
காவியங்கண்ணியயாவருமாமுத்தர்கட்டுரையே. (சஎ)

1974. கட்டளையாவும்பன்மாமதங்கோடல்கடுத்துழல்வேன்
கட்டளையாவும்பறிமாயைவாதக்கலப்பெனும்புன்
கட்டளையாவும்பரோங்கரசூரகமழுநின்வாய்க்
கட்டளையாவும்பரேத்தடியாரிற்கலப்பித்திடே. (சஅ)

1975. கலக்கந்தரமஞ்சவாமேனிமாஞெருநகண்பதிற்றுக்
கலக்கந்தரமஞ்சளாங்குழல்சோரக்கரைந்துநெஞ்சு
கலக்கந்தரமஞ்சலிப்பாடுறைசைக்கபாலிமறந்
கலக்கந்தரமஞ்சநஞ்சமுண்டான்வந்துகாப்பதென்றே. (சகூ)

1976. காப்பரவத்தையலைவாரிநஞ்சைக்கைகண்டங்கொண்டார்
காப்பரவத்தையலைவாய்துறைசைக்கண்ணார்கழிநீங்
காப்பரவத்தையலைவாமங்கொண்டவர்கட்டறுத்துக்
காப்பரவத்தையலைவாயதோவக்கலப்பளித்தே. (ரு0)

1977. கலகலவார்க்குங்குலமாமறைக்கழலாயிடஞ்ச
கலகலவார்க்குங்குமமுலையாய்கடுக்கைத்தொடைய
கலகலவார்க்குங்குளநேர்துறைசைக்கண்ணாய்நமனி
கலகலவார்க்குங்குளிர்தாளளித்தலென்காதன்மையே. (ருக)

1978. காதம்பலபலசெல்வோரிற்சூழக்கடுமுடநீங்
காதம்பலபலவாண்மடவார்கண்ணென்றேத்துவமங்
காதம்பலபலமுற்றோர்துறைசைக்கண்ணாளகுழைக்
காதம்பலபலமென்றடைவோரினைக்கண்டுவந்தே. (ருஉ)

1979. வந்திக்குமண்ணும்பரித்தனராவெனும்வண்டுறைசை
வந்திக்குமண்ணும்படியெங்ஙன்மன்மதரேநனிசி
வந்திக்குமண்ணும்பகழியும்வாட்டுவமாற்றுமெனும்
வந்திக்குமண்ணும்பகீரதியாரருள்வாரென்னுமே. (ருங)

1980. வாரம்படைத்தகைவெய்யோர்குலஞ்செற்றவாளிமுளை
வாரம்படைத்தகைகொண்டமராடன்மகிழுமுழ
வாரம்படைத்தகையார்புகழ்கோமுத்திவாணர்வரு
வாரம்படைத்தகையாகாதலங்கரிமாளிகையே. (ருச)

1981. மாளிகைத்தேவனைசித்தார்துறைசைவயிற்றிதழி
மாளிகைத்தேவனைமெய்ம்மாலதென்பன்வல்லேறுபெரு
மாளிகைத்தேவனையத்தோன்றுமின்பமருவுந்திரு
மாளிகைத்தேவனையுந்தொழுவேனுண்மயக்கறுத்தே. (ருரு)

1982. மயக்கந்தரத்தரைமேற்சீவர்போன்றுழல்வானவர்ச
மயக்கந்தரத்தரையிற்றேலரைவண்டுறைசைநிரா
மயக்கந்தரத்தரையாலாலமுண்டுவயங்குமெழின்
மயக்கந்தரத்தரையேத்தாரவர்கொடுவல்வினையே. (ருசா)

1983. வல்லியங்குஞ்சரங்கொங்கைகண்ணாகவயங்குமலை
வல்லியங்குஞ்சரமென்னநின்றார்மன்னுகோமுத்தியார்
வல்லியங்குஞ்சரந்தைப்பட்டவேங்கும்வரைச்சரிவாய்
வல்லியங்குஞ்சரநீந்திநம்மாட்டுவரல்கொடிதே. (ருஎ)

1984. வருந்தவரும்பணிநஞ்சன்னகாலன்வருமுனமே
வருந்தவரும்பணியும்பறம்பென்பர்வயங்குமறி
வருந்தவரும்பணிமாயோன்செய்கோமுத்திவாணர்விண்ண
வருந்தவரும்பணியும்பதம்போற்றுமின்மானிடரே. (ருஅ)

1985\. மானக்கஞ்சாறனைமயிக்கின்சொன்மங்கைமருவிடக்கோ
மானக்கஞ்சாறவிருங்கோவைபூண்டவன்வானத்தைவி
மானக்கஞ்சாறருகோமுத்தியான்மகளோதினன்றன்
மானக்கஞ்சாறவென்றுனென்றுகூறுநம்மாமயிலே. (ருகூ)

1986\. மாமதலையரியாதியர்போற்றவனைவணங்க
மாமதலையரியாவட்டதென்னமகிழ்ந்தவன்புன்
மாமதலையரியாயென்றசித்தவன்வாழிடம்பூ
மாமதலையரியார்வயற்கோமுத்திமாநகரே. (சுo)

1987\. மாஞகமாதுளங்காச்சூழ்துறைசைவாதனணி
மாஞகமாதுளங்காப்பூதமாபடைவண்கரக்கோண்
மாஞகமாதுளங்காவரையாவிலென்பாள்வயங்கம்
மாஞகமாதுளங்காமுற்றிவ்வாறுதன்வாய்மலர்ந்தே. (சுக)

1988\. மலராதனத்தமருவோன்றிருநெடுமாலெனுமும்
மலராதனத்தமின்ஞேரசூர்சொலல்வல்லர்விடா
மலராதனத்ததிபஞணைப்பூணியுள்வார்முடிக்க
மலராதனத்தமிலராதன்மெய்யெனுமாமறையே. (சுஉ)

1989\. மறையாகமந்தவவோதிமெய்ஞ்ஞானமருவினர்க்கு
மறையாகமந்தவமாயேவிளங்கும்வயங்கியெதிர்
மறையாகமந்தவறிவாள்பவர்க்குவண்கோமுத்திச்செம்
மறையாகமந்தவழ்வான்றிருப்பாதமறைவனவே. (சுந)

1990\. வனமணமாலைமலரோனைவேட்டுமதிப்பொருவு
வனமணமாலையுறேன்பிறவேண்டலன்வாழ்தரப்பு
வனமணமாலையுமையாளொடுமையன்வாழரச
வனமணமாலையுற்றேன்பவங்கான்முன்மலர்ந்தபஞ்சே. (சுச)

1991\. பஞ்சாக்கரவைபதந்தொழுமாறுபணிவினைதீப்
பஞ்சாக்கரவைங்கர்மலமாயைபறித்தெறியின்
பஞ்சாக்கரவைபவமாகவாவினன்பறகடகர்ப்
பஞ்சாக்கரவையகோமுத்திமேயபராபரனே. (சுரு)

1992\. பரந்தாமனுக்குமரியவிடையைப்பணைத்தமுலைப்
பரந்தாமனுக்குமரியமர்தோணமர்பார்த்துச்சிவப்
பரந்தாமனுக்குமரியவிவ்வாய்தலில்பங்கயற்கும்
பரந்தாமனுக்குமரியர்துறைசைப்பதியணங்கே. (சுசு)

1993\. பத்தவளக்கரும்பாசமினீயும்பயிலிடத்த
பத்தவளக்கரும்பாவியுமேவப்பணிநகையின்
பத்தவளக்கரும்பார்மொழிபாகபாவுபுயம்
பத்தவளக்கரும்பாலாய்துறைசைப்பதியரசே. (சுஎ)

1994. அரசவனத்தைமகிழ்மாசிலாமணியையமலை
அரசவனத்தையணைத்தெழுந்தாயெங்குமாய்வயங்கும்
அரசவனத்தையணிமாலயன்முதலாயவர்சீர்
அரசவனத்தையவாவேனின்சீர்த்தியமுதைவிட்டே. (சஅ)

1995. அம்மனையாடுதிபந்தாடுதிகழங்காடுதியென்று
அம்மனையாடுதிவாவீர்ந்துமாற்றிலளன்னமிடத்து
அம்மனையாடுதிசெய்கோமுத்தீசரருள்புரிந்தால்
அம்மனையாடுதிவைவாண்மதனெடுத்தார்ப்பினுமே. (சசு)

1996. ஆரத்தனத்தையலையாலவாய்மணமாற்றியின்பம்
ஆரத்தனத்தையலையாடவேழழைத்தோனணிகா
ஆரத்தனத்தையலையாதமைத்தவனுய்ந்தவிடத்து
ஆரத்தனத்தையலையாற்றுகோமுத்தியாய்கைகன்றே. (எ௦)

1997. கையரும்பாவரும்பாராத்துறைசைக்கமழ்தெருவேற்
கையரும்பாவரும்பாசாங்குசருங்கனக்குமழுக்
கையரும்பாவரும்பாமாமுலையுங்கலக்கவிண்வாழ்க்
கையரும்பாவரும்பான்மையெம்போலியர்கண்ணருளே. (எக)

1998. கண்ணப்பரைவரையாதுவந்தாள்வர்கரையொளிருங்
கண்ணப்பரைவரையோடேற்றினுர்கனிர்தூனருத்துங்
கண்ணப்பரைவரைக்காளத்தியாண்டவர்கட்டுசடைக்
கண்ணப்பரைவரைமாய்ப்பார்துறைசைகலந்துய்ம்மினே. ()

1999. கலவரையாதவமாற்றுரெனினுங்கடுவினைய
கலவரையாதவமாற்றுவதேதின்கருணைதலைக்
கலவரையாதவமாலையுற்றேற்கென்கதிசிலைய
கலவரையாதவமாலேக்கொள்கோமுத்திக்காரணனே. (எ௩.)

2000. காமாசிலாமணியார்க்குமுன்வாங்கிக்கரும்பிணர்நீங்
காமாசிலாமணிவார்குழல்சோரவெய்கண்ணின்மைதீங்
காமாசிலாமணிகற்றூர்மருவக்கமழரசக்
காமாசிலாமணிநின்சீர்நறவங்கவரும்வண்டே. (எச)

2001. வண்டலம்பாவைகும்பூங்குழன்மாதுமதியெழுத்து
வண்டலம்பாவையழலாவுடைத்தென்றுமாழ்கிநசை
வண்டலம்பாவைமுதலியநீத்தனள்வாழ்துறைசை
வண்டலம்பாவையடியார்புனையவதிபவனே. (எரு)

2002. பவனுசனூர்த்தனன்மூண்டடையார்கட்படர்கடுப்பாம்
பவனுசனூர்த்தனன்பானீர்த்துறைசைப்பதிமருவு
பவனுசனூர்த்தனன்காணரியாப்பரனுவென்பன்காய்
பவனுசனூர்த்தனன்றுனென்றுசெய்வன்பரிந்தருளே. (எசு)

2003. பரவலந்தீர்த்தமுழுகிலங்கோமுத்திப்பண்ணவசிற்
பரவலந்தீர்த்தநமனஞ்சுசேயுயிர்ப்பாலபரா
பரவலந்தீர்த்தவயனைவைத்தாயென்றும்பாடிலமன்
பரவலந்தீர்த்தநின்பாதாம்புயமெங்ஙன்பாலிப்பதே. (எஎ)

2004. பாலக்கரத்தர்துறைசைத்தியாகர்பழமறைக்க
பாலக்கரத்தர்நெடுமறையந்தப்பயனெனுமைம்
பாலக்கரத்தர்சிலைவேளெரியப்படர்ந்தநுதற்
பாலக்கரத்தர்பதம்பணியார்சிலபாதகரே. (எஅ)

2005. தகரங்கலந்தகுழல்பாகராவடுதண்டுறைவித்
தகரங்கலந்தவழ்வெம்முலையாரத்தழுவுறின்யாந்
தகரங்கலந்தவனுரென்றிடாதுதபும்பலவன்
தகரங்கலந்தபொழுதுமென்னுமிந்தத்தையலுக்கே. (எகூ)

2006. தையலையாதரியாதெழும்வீழுந்தசம்படவத்
தையலையாதரியாதேகுமோவெனுஞ்சார்மதியத்
தையலையாதரியாரெனும்வேளைத்தவிரெனுமுத்
தையலையாதரியாக்கோமுத்தீசசெய்தண்ணருளே. (அ0)

2007. தண்ணந்தமருகமேற்றூர்க்கிடந்துறைசையுவமை
தண்ணந்தமருகவாய்வைக்குமால்விடைசாற்றுடைதோல்
தண்ணந்தமருகமெண்ணில்கண்டார்குழைசங்கொடுபாந்
தண்ணந்தமருகவென்பான்மலையிறைதார்கொன்றையே. ()

2008. தாரங்கடுக்கைசிலைமலைபூதஞ்சமர்பொருது
தாரங்கடுக்கையடியாருளமுற்றுந்தந்தநற்றாய்
தாரங்கடுக்கைமலம்போக்கல்வேலைதனியிடங்கே
தாரங்கடுக்கையமைத்துண்பதுதுறைசைப்பரற்கே. (அஉ)

2009. கேதனமாவடுகோட்டேறுமேவிக்கிளர்தருநி
கேதனமாவடுதண்டுறையாவென்றுங்கேடிறனக்
கேதனமாவடுநேர்விழியாவென்றுங்கேட்பளிவட்
கேதனமாவடுமாற்றிடுவானெழுகேண்மையனே. (அங)

2010. அனேகந்தரத்தகைமாபாதகம்புரிந்தாங்கொடுமை
அனேகந்தரத்தகையேனைளற்றூழவருட்டுறைசை
அனேகந்தரத்தகையேற்றூலந்துஞ்சவயின்றொளிரை
அனேகந்தரத்தகைவிட்டாலெனக்கினியார்துணையே. (அச)

2011. ஆராவமுதையனையநின்சீரறையேநினக்கியாம்
ஆராவமுதையடைந்தான்கவரவடையும்பச்சை
ஆராவமுதையலாக்கான்வெள்ளேற்றவவிர்சடைமேல்
ஆராவமுதையனேயரசூரவருள்புரியே. (அரு)

2012. புரப்பானலங்கண்டவாவளமோங்கும்புகழ்த்துறைசை
புரப்பானலங்கண்டவாணர்கொண்டாடப்பொலிபவநா
புரப்பானலங்கண்டவாமொழிமாதுபொருந்தியொளிர்
புரப்பானலங்கண்டவாதமியேன்பவம்போக்குறவே. (அசு)

2013. வேதண்டவில்லியைவாய்வான்வெரீஇத்தொழமேலெழுவெள்
வேதண்டவில்லியைவார்தெருவான்மிளிர்கோமுத்திக்கோ
வேதண்டவில்லியைவாய்போலடைதல்விலக்கெனவவ்
வேதண்டவில்லியைவாழ்த்தார்பிறப்பென்னவீண்பிறப்பே. ()

2014. பிறவித்துருமங்கவடுவிட்டோங்கிப்பிறங்குமதன்
பிறவித்துருமங்கவுய்வதென்றியான்வெண்பெருமுத்தங்கள்
பிறவித்துருமங்கள்சூழ்கோமுத்தீசனின்பெய்கழற்கண்
பிறவித்துருமங்கமுந்தண்ணென்றுநினைப்பேசுநர்க்கே. (அஅ)

2015. நரந்தந்தகரங்கமழ்குழல்வான்செயுநற்றவத்தி
நரந்தந்தகரங்கடிகட்டொழில்சொனகாவிடைகிந்
நரந்தந்தகரங்கடுப்பார்துறைசைநல்லாளியல்வா
நரந்தந்தகரங்கனிவான்கொண்மாம்பொழிறுடிடமே. (அகூ)

2016. நாடரும்பாதகமாயாநவிலொருமாத்திரையில்
நாடரும்பாதகவுரிபங்காகற்பநண்ணியவான்
நாடரும்பாதகவார்சூழ்துறைசைநம்பாநெடுமால்
நாடரும்பாதகமலமென்றேவொருநான்பெறலே. (கூ0)

2017. நானந்தவாதகுழலார்புணர்ச்சிநசைஇயுழலு
நானந்தவாதமருதுசெய்வேனுய்யநாடுமறை
நானந்தவாதமயில்பணியாய்நவின்றுய்செவிவாய்
நானந்தவாதவன்சூழ்பெருங்கோமுத்திநாயகனே. (கூக)

2018. அகங்காதரசங்கமந்தவிர்ப்பானுன்னையாதரித்தை
அகங்காதரசங்கரவோரிருவரறையிசைகூர்
அகங்காதரசங்கவார்குழையாயென்றறைகுவனென்
அகங்காதரசங்கவின்வணஞ்சூழச்செயற்புதனே. (கூஉ)

2019. அற்பரவைக்கட்புகுதாமன்மாமயிலன்னவர்மை
அற்பரவைக்கட்குடியாமற்கோமுத்தியையகண்டத்து
அற்பரவைக்கட்கமர்விழிபாகவன்பாற்றுநர்பால்
அற்பரவைக்கட்டடியேனவினைநின்னருளழலே. (கூங)

2020. அரும்புங்கவருமணிமுலைபாகனருமறையை
அரும்புங்கவருமணிதருகோமுத்தியண்ணலம்பொன்
அரும்புங்கவருமணிமைநின்மிறத்துமாசிறைமால்
அரும்புங்கவருமணியேயென்னுள்ளத்தவிரொளியே. (கூச)

2021. ஏதம்படரும்பலதொழிலாற்றியிளைத்திடுதற்கு
ஏதம்படரும்விழியார்மயன்முன்னியமரிறை
ஏதம்படரும்வரவிடுவாரினியானியற்றல்
ஏதம்படரும்பயிர்நான்றுறைசையிறையவனே. (சுரு)

2022. இறைக்கும்வளைக்கும்பொருத்தமின்மாமதியென்பதழல்
இறைக்கும்வளைக்கும்பொருகழைவேள்விடுமேவெனுமய்
இறைக்கும்வளைக்கும்பொருவாக்கடலிரைக்குந்துறைசை
இறைக்கும்வளைக்கும்பொருட்கீர்சொல்வாரினிலையருளே. ()

2023. இலையமலைக்கவளந்தீரிருவரையெண்ணலம்பொன்
இலையமலைக்கவளவாந்துறைசையிறைக்கன்புசெய்து
இலையமலைக்கவளருந்திருமடத்திற்கலப்புற்று
இலையமலைக்கவளமார்ந்தின்பெய்தவெழுமனமே. (சுஎ)

2024. மனம்புதைக்கும்பலமாயவெங்காமமதிசுடுங்கா
மனம்புதைக்கும்பலமின்றென்றுயிரைவருத்திவிடா
மனம்புதைக்கும்பலவின்றேமொழிக்குவளங்கொள்பொன்னி
மனம்புதைக்கும்பலகால்பாய்தென்கோமுத்திவானவனே. ()

2025. வானம்பரவுமையாள்சணவாவெனின்வாழவருள்
வானம்பரவுமையாறன்றென்கோமுத்திவாணனணி
வானம்பரவுமையான்வருமென்னுமயின்மதனெவ்
வானம்பரவுமையாலோசிறந்துயிர்வாழ்வதுவே. (சுசு)

2026. வதனமைந்தான்குஞ்சியாகாயன்சேய்முனம்வந்தமம
வதனமைந்தான்குஞ்சிதையாவியமன்றன்வாழ்வுமைந
வதனமைந்தான்குஞ்சிசூழ்வயற்கோமுத்திமன்னினிய
வதனமைந்தான்குஞ்சிதபாதமேபல்வளத்திருவே. (௧00)

துறைசையமகவந்தாதி முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பைஞ்ஞீலித்திரிபந்தாதி.



## காப்பு.



### விநாயகர்துதி.

2027. ஒருமான்கரத்துத்தரித்தபிரானையனோடுகிறங்
கருமான்முதற்சுரர்யாருங்கொண்டாடுங்கதலிவனப்
பெருமானந்தாதியுரைக்கமுக்கட்டுப்பெருகிமதம்
வருமானற்றேட்டகிப்பூட்டிருதாட்டென்வயினுளதே.

## நூல்.

2028. திருத்தாமரையிலனஞ்சேர்பைஞ்ஞீலிசிறக்கவளர்
கருத்தாமரையமர்கையாமுகில்கடுக்குங்குழலின்
மருத்தாமரையமிடவேற்றவாவினைவாட்டுதலி
னுருத்தாமரைபடுவேனையின்றுளவுரைத்தருளே. (௧)

2029. அருந்தவரும்பர்குழாம்புடைசூழவரம்பைவனத்
திருந்தவரும்பலுரித்தார்புரத்திடைநாணுமடும்
பெருந்தவரும்பணிவெற்பாக்கொண்டார்பிறங்கும்புயத்திற்
பொருந்தவரும்பணிபூண்டாரின்றென்னைப்புரப்பவரே. (௨)

2030. புரங்காவலரைமுன்செற்றாய்வெண்மேனிபொருந்தும்விடைத்
துரங்காவலர்கொன்றைத்தாராய்பைஞ்ஞீலியெங்கோன்றன்மன
மிரங்காவலனைக்கின்றுதலினின்றெடுத்தவுட
றிரங்காவலமருமுன்னெனையாண்டருள்செய்குவையே. (௩)

2031. செய்யுந்தரம்பைக்கவானுமைக்கண்ணுஞ்செந்தாமரைப்பூங்
கையுந்தாளநகையுமெய்யாகக்கழறும்வெறும்
பொய்யுந்தரங்கொடனமுமுள்ளாரைப்புரிந்துலைவே
னுய்யுந்தரமுமுளதோபைஞ்ஞீலியென்னுத்தமனே. (௪)

2032. உத்தமனேயென்றும்பைஞ்ஞீலியாயென்றுமொண்கனல்சே
ரத்தமனேயென்றும்வாழ்த்தறியேனையின்றாண்டருள்வாய்
சித்தமனேயப்பனேயென்றலறுவர்நெஞ்சுறுவாய்
முத்தமனேகம்பொலிமுலைபாகவென்முன்னவனே. (௫)

2033. முன்னர்தவம்புரிந்தேனலனின்பதமுன்னுவதற்
கன்னர்தவம்பொலிநெஞ்சேனையோவினியாழ்வினைக
டன்னர்தவம்புக்கிடனாய்விடாதெனைத்தொண்டுகொள்வாய்
வன்னர்தவம்பிறபயிலுங்கதலிவனத்தவனே. (௬)

2034. வனக்காரிகையர்கணேற்றாற்குநீலிவனத்தவற்கு
மினக்காரிகைப்பில்பணியணிந்தாற்குவிளம்பிழைகொ
டனக்காரிகைவளைசோர்ந்ததெல்லாமுபசாரஞ்சொல்ல
நினக்காரிகைக்குஞ்சுகப்பரிமாரனெருங்குமுன்னே. (௭)

2035. நெருங்குந்தனத்தியொருபாகனாரநிறைபழன
மருங்குந்தனத்திரள்சூழுங்கதலிவனத்துறைவோன்
பெருங்குந்தனத்திமுகனத்தன்மேற்சொலப்பெற்றனன்யான்
சுருங்குந்தனத்தினரைப்புகழ்ந்தேகவிசொல்லலற்றே. (௮)

2036. சொல்லற்கரியயனுமொண்ணாப்புகழ்த்தொன்மையனே
மல்லற்கரியதள்போர்த்தாய்கதலிவனத்தையனே
வெல்லற்கரியதென்றாலுநின்றாளைவிரும்புமென
தல்லற்கரியவருள்செயின்யானினக்கானவனே. (௯)

2037. ஆனக்கரவம்பரிகலன்கச்சையென்றுதரித்தோய்
வானக்கரவஞ்செலவேதம்வாழ்த்தும்பைஞ்ஞீலிமன்னா
தானக்கரவல்விலங்குரியாய்வினையைத்தவிரா
யானக்கரவகன்றெஞ்ஞான்றுனைவந்தடைகுவதே. (௧௦)

2038. அடைந்தேலனின்றாள்கதியென்றினிமேனினக்காளலன்போ
லுடைந்தெனின்றாலதுநன்றேவினைப்பட்டுழலுமென்முன்
மிடைந்தேனின்றாவென்றதென்றருணீலிவனமெய்யதேன்
குடைந்தேனின்றாதளைந்துண்டேனென்றாடுங்கொன்றையனே

2039. கொன்றைக்கனியனகூந்தன்மின்னார்கள்குலமடங்க
வென்றைக்கனியமெனத்தள்ளியேநினக்கின்புறுவே
னன்றைக்கனியநன்மாச்சேர்பைஞ்ஞீலியையாவென்மனக்
குன்றைக்கனியவைத்துன்னடியாரொடுங்கூட்டுவையே. (௧௨)

2040. கூட்டப்படைகொள்புரத்தைவென்றாய்நறுங்கொன்றையனே
வேட்டப்படையுஞ்சடையாய்பைஞ்ஞீலிவிமலமின்னார்
நாட்டப்படைதெறவெம்பிநின்றாள்கணண்ணாமலெனை
வீட்டப்படைத்தவிதியார்பொருளிலென்வெஃகினனே. (௧௩)

2041. இனகரமைந்தர்மடவாரென்றெண்ணியிடைந்தவிவீர்
கனகரமேன்மழுவுள்ளார்கதலிவனத்தமரு
மனகரமாரனைச்செற்றாரெனைத்தடுத்தாண்டவையர்
சினகரமேவித்தொழுவீர்விடுமுங்கள்சென்மங்களே. (௧௪)

2042. மங்காதசெல்வம்பெருகுங்கதலிவனத்தனைவான்
றங்காதவன்பற்புடைத்தவெம்மானைச்சலந்தரனென்
வெங்காதகனைத்தடிந்தானையோதவிரும்பிலர்துன்
பங்காதவர்தகற்காளாய்நரகிற்படுபவரே. (கரு)

2043. படந்தாங்குவெம்பணிப்பூணுய்பைஞ்ஞீலியப்பாவரிமண்
ணிடந்தாங்குரேடவெட்டாதநின்பாதத்திறைஞ்சியன்பாய்க்
கிடந்தாங்குநாட்டமற்றின்றிக்கதறிக்கிடந்துவினைக்
கடந்தாங்குநீரெனக்கண்ணீர்பெய்யேற்கென்கதியுளதே.(கசு)

2044. கதிக்குந்தங்கைக்கொடுலகாண்டுமாற்றலர்கண்பிதுங்க
மிதிக்குந்தடக்கரிமேல்வரும்வேந்தர்பொய்வாழ்வைமெய்யா
மதிக்குந்தரத்தவரென்னுவர்நீலிவனத்தையனே
கொதிக்குந்தழற்கட்பிரானேயெனைப்பணிகொண்டவனே. ()

2045. கொண்டற்புரையுங்கருங்குழல்வெண்ணகைக்கோதையரைக்
கண்டற்புறுமனமேகனறுங்குகண்காட்டியன்பு
விண்டற்புடைக்குநிறத்தான்வரினென்விளம்புவையின்
றண்டற்புதனையெம்பைஞ்ஞீலிமேவியவத்தனையே. (கஅ)

2046. அத்தனைவாம்பரியேற்றனைநீலிவனத்தமர்ந்த
நித்தனைவாவென்றென்குற்றேவலுங்கொணிருமலனைக்
கத்தனைவாய்மனமெய்யாற்றொழுதார்முற்கருமங்களா
லெத்தனைவாசித்திருக்கினுநீங்குவதேதவர்க்கே. (கசு)

2047. ஏதென்பணிகொண்டருள்வதின்றேவிரங்காமனமோ
வோதென்பணியதுனக்கியான்மந்தாகினியுற்றசடை
மீதென்பணிந்தவெம்பைஞ்ஞீலியையநல்வெற்பரையன்
மாதென்பணியைமொழியொருபாகமறைமுதலே. (உ0)

2048. முதலிவனத்துச்சடையானெனமுன்னவின்றியைம்பா
லதலிவனத்துக்களந்தனங்கஞ்சவரும்பெனவே
நுதலிவனத்துமடவார்பின்சென்றுறுநோயகலக்
கதலிவனத்துப்பெருமான்றிருவடிகண்டனனே. (உக)

2049. கண்டலப்போதைமுடிக்கணியாதமுக்கட்பரற்கு
வண்டலப்போதைமலியுங்கதலிவனத்தவற்கு
விண்டலப்போதைநகையுடைத்தாற்குவிருப்பிலேநீ
தொண்டலப்போதையலார்பாலுயிர்த்துணைசூழ்ந்துநெஞ்சே.

2050. நெஞ்சத்திருக்குமடவார்மயக்கமுநீங்குதல்செய்
தஞ்சத்திருக்குமான்றுதையைவெள்ளனப்பெடைகள்
கஞ்சத்திருக்குமெம்பைஞ்ஞீலிநாதனைக்கண்டுதொழா
வஞ்சத்திருக்கும்விடுமோபிறப்புமரணமுமே. (உ௩)

2051. மரணங்கடந்துய்யலாகுங்கண்டீர் முன்வருங்கரியை
மூரணங்கடங்கவுரித்தார்பைஞ்ஞீலிமுதல்வரொன்னு
ரரணங்கடங்கலிலாதெரித்தாரெனையாண்டவர்பொற்
சரணங்கடந்திடத்தொண்டாகிவாழுந்தரத்தருக்கே. (உச)

2052. தரங்கர்தரும்பிறவிக்கடன்மூழ்கித்தளர்ந்துமனக்
குரங்கந்தமாதரைப்பற்றநிற்பேன்முன்கொடியகடாத்
துரங்கர்தருகட்சமனேநிவேகக்கிற்றேன்றுவனீ
யிரங்கர்தாளினிற்பைஞ்ஞீலிமேவியிருப்பவனே. (உரு)

2053. இருந்தனமீதெனவீட்டிமின்னார்களியம்புமொழி
மருந்தனமென்னடையென்றுமுல்வீர்நமன்வந்துவிட்டான்
முருந்தனவெண்ணகைபங்கனைநீலிவனாமதிலைப்
பொருந்தனன்னெஞ்சமுறுமோவுறுதல்பொல்லாத்தரமே. ()

2054. தரத்தருக்கன்றனகர்சூழ்தாவச்சந்தபத்துச்
சிரத்தருக்கன்வலிகேய்க்தார்க்கரம்பைசெறியுஞ்சிவ
புரத்தருக்கன்மலிகண்டர்க்குத்தொண்டர்புகழவருள்
வரத்தருக்கன்புடையேற்கேதிருவினைவாட்டுதலே. (உஎ)

2055. வாடாதிசைமலர்க்கண்மடவார்வலைப்பட்டுழன்று
நீடாதிசைவநெறிச்செல்கிலாதுநினகடிக
டேடாதிசைபகராதிருந்தாலுமென்றீமைகெடத்
தாடாதிசைதொழும்பைஞ்ஞீலிமேவியசங்கரனே. (உஅ)

2056. சங்கரனேசம்புவேபிறையேபொற்றனவமலை
பங்கரனேயெனப்பாடாவெனக்கருள்பாதமணிப்
பொங்கரனேசத்தணிந்தவனேமுக்கட்புண்ணியனே
செங்கரனேதிருப்பைஞ்ஞீலிமேவுஞ்சினகரனே. (உகூ)

2057. சினத்தையில்வழிபேசவுஞ்சிறியேன்சிறிது
மனத்தைனச்சுத்தஞ்செய்யேன்பொல்லாமடவார்மயலா
மினத்தைனிலத்தைவுமோங்குமிருங்கதலி
வனத்தைனத்தொழுவேற்கில்லையோசிவமாகரே. (௩0)

2058. மானடும்வாசவன்வானடுமற்றயனடுமினி
யானடும்வண்ணமிலையேயென்றாலருளெம்பெருமான்
றேனடும்பொங்கர்மலியும்பைஞ்ஞீலிச்சிவனுமையாள்
கோனடுமன்னையுமூர்ந்தானுக்கத்தன்கொடுத்தனனே. (௩க)

2059. கொடுக்குந்தருகன்னிழலிருந்தேயிகல்கொண்டடல்வே
லெடுக்குந்தருக்கர்குறும்போட்டிவாழ்தலுமெண்ணுகிலேன்
முடுக்குந்தருமன்சினந்தெதிராமுனையக்கரங்கா
னடுக்குந்தருணத்தில்வர்தாள்பைஞ்ஞீலியென்னாயகனே. ()

2060. அகத்தாசையற்றிலனின்னடியார்க்கன்பனுகிலனிச்
சகத்தாசையெங்குந்திரிந்துழன்றேசலித்தேனதனு
லுகத்தாசைநீக்கியென்னையாளவேண்டினனுன்னையுயர்ந்து
முகத்தாசையிலச்சிலையாய்பைஞ்ஞீலியின்முக்கண்ணனே. ()

2061. கண்ணுதலிக்குப்பனைசேர்பைஞ்ஞீலிக்கடவுண்மலைப்
பெண்ணுதலிக்குறிக்கும்பாகமீந்தபெருமகிமை
யெண்ணுதலிக்குமற்றங்கேனெனலன்றியேங்கிடுமென்
னெண்ணுதலிக்குமனமிரங்காததென்னுத்தமனே. (௩௪)

2062. உத்தமனத்தனமலைபங்காளனொளிர்சடையா
னித்தமனத்தன்முகிலூர்புரந்தரனேமியொடு
சுத்தமனத்தன்பணியும்பைஞ்ஞீலியெஞ்சுந்தரனிம்
மத்தமனத்தன்மடனென்றெண்ணுதென்னுள்வந்தனனே. ()

2063. வந்தானைசீறிப்பொரும்போதுரித்ததன்மாவதனை
நந்தானையென்றரைமீதுடுத்தானைநஞ்சுண்டவனைப்
பந்தானைகொங்கைவயினுமைபாகனைப்பங்கயனைத்
தந்தானையம்பனைப்பைஞ்ஞீலியானைச்சரண்புகுமே. (௩௬)

2064. சரமாரனைச்செற்றவனைப்பைஞ்ஞீலிச்சயம்புவைமுப்
புரமாரனைவின்றியுண்ணக்கண்டானைப்பொருவில்பல
சிரமாரனைத்தொழுதேத்தீர்நுஞ்சென்மங்கடீர்வதற்கா
தரமாரனையர்கருப்பாழ்படாதங்கடுப்பவரே. (௩௭)

2065. அடுவாரணவுரிபோர்த்தபிரானையணிகளத்திற்
கடுவாரணலையெம்பைஞ்ஞீலியானைக்கனதனத்திற்
றெரு' வாரணங்கொருபாகனையேத்தித்தொழாதகளெல்லாம்
படுவாரணங்கிலெனமறைநான்கும்பகர்தருமே. (௩௮)

2066. தருமந்தகவின்றியமடமாதர்தருமயல்பட்
டருமந்தகல்வியிழப்பீர்பைஞ்ஞீலியனைப்பணியீர்
தெருமந்தகன்றுதிரிந்தால்வெம்பாத்தைச்செலுத்தியெதிர்
வருமந்தகன்விடமாட்டானெங்கோடிமறையினுமே. (௩௯)

2067. மறைவாயவர்புகழ்ந்தேத்துங்கதலிவனத்தினமர்ந்
துறைவாயன்றுழிமதித்துடுங்காலத்துதித்தவிடக்
கறைவாய்மணிமிடற்றெம்மையனைக்காண்டலின்றித்
தறைவாயடியன்வருந்துவதுனிதாங்கிக்கொள்ளே. (௪௦)

2068. தாங்கரும்பாரமெனயான்பெறும்வினைதன்றுடென்று
போங்கரும்பாரமயக்கமெல்லாமுக்கட்புண்ணியனே
கோங்கரும்பாரமுலைபங்கனேகுற்றமற்றவனே
தீங்கரும்பாரஞ்செறியும்பைஞ்ஞீலிச்சிவபரனே. (௪௧)

2069. சிவசம்புசங்கரனின்மலதீன்செங்கழைகட்குமீ
துவசம்புமஞ்சளுமோங்கும்பைஞ்ஞீலியுறைபவபொற்
கவசம்புயங்கத்தரின்மேற்கவிபகரத்தலைவி
திவசம்புன்னைச்சிறியேனுக்குண்டாயதுன்செவ்வருளே. ()

2070. அரும்பன்னமென்முலைமேற்சாந்திடாவெனதாசைமுற்றும்
விரும்பன்னமேதிருப்பைஞ்ஞீலிமேவும்விமலற்கெதிர்
பொரும்பன்னகப்புலித்தோலணிந்தாற்குப்புகைந்துழலா
வரும்பன்னகப்பணியாற்கோதியிங்குவரச்சொல்வையே. ()

2071. வரந்தந்துதொண்டனையாளுங்கதலிவனத்தரனை
நரந்தந்துதைகொன்றைத்தாரனைவாழ்த்தியெஞ்ஞான்றுமிரு
கரந்தந்துயர்கெடச்சென்னிவையார்கள்கணக்கில்பல்லா
யிரந்தந்துகற்றிருந்தாலும்விடாவினையீட்டங்களே. (சச)

2072. ஈட்டமரப்பனையேட்டைவிடாதெடுத்தேயெழுதும்
பாட்டமரப்பனையார்மீதன்பாகப்பகர்ந்தென்பெற்றீர்
வாட்டமரப்பனைவிக்குநஞ்சுண்டவனைக்கதலிக்
காட்டமரப்பனைப்பாடாதுழலுங்கவிஞர்களே. (சரு)

2073. கவிக்குமகுடம்புனைந்துசெங்கோலொன்றுகையிற்கொண்டு
புவிக்குமனுகவிருக்கினும்வானம்புரக்கினுமெ
னவிக்குமகிழுஞ்சுரர்சூழரம்பைவனத்தனைக்கை
குவிக்குமனத்தன்புகொண்டிலராயிற்குறித்திடினே. (சசு)

2074. குறித்தேனினியபைஞ்ஞீலியென்பார்முன்னுங்குற்றமற
முறித்தேனினித்திலப்பல்லார்மயலென்பர்முன்னுநிற்பாய்
வெறித்தேனினின்னருளாலடியேன்வினைவேரொடுங்கப்
பறித்தேனினியந்தகற்கொருநாளும்பயமிலையே. (சஎ)

2075. இலையம்புயனெடுமாற்குமெட்டாதபைஞ்ஞீலியெம்மான்
றலையம்புயங்கமணிந்தோனைப்பாடித்தழைமினிப
மலையம்புயர்கழையான்செயும்போரினறிவழிந்து
மலையம்புயவெனமூடரைப்பாடிவருந்துவிரே. (சஅ)

2076. வருந்தத்தைகாள்கைவளைசோர்ந்தனையர்மனம்வெறுக்க
விருந்தத்தையின்றறியீரோபைஞ்ஞீலியிறையவற்குப்
பொருந்தத்தையற்கொருபாகந்தந்தாற்கின்றுபோயெனது
பெருந்தத்தையோதிவருவீர்மதியம்பிறக்குமுன்னே. (சகூ)

2077. முன்னும்படியறிவில்லாதவென்முழுமூடநெஞ்சை
மின்னும்படிகமெனவாக்கிவெவ்வினைவேரறுத்தான்
மன்னும்படியெங்குங்கொண்டாடவாணிமலர்மகளுந்
துன்னும்படிக்குளப்பைஞ்ஞீலிமேவியசுந்தரனே. (ருo)

2078. சுந்தரத்தார்நின்பதத்தணிந்தாடித்துதித்துவிடக்
கந்தரத்தாவெனப்போற்றறியேற்குன்கழறருவாய்
குந்தரத்தாவெங்கொடுங்காலற்செற்றகுரைகழலா
யந்தரத்தார்தொழும்பைஞ்ஞீலிமேவியமரத்தனே. (௫௧)

2079. அத்தத்திலங்குசபாசமுள்ளாற்கத்தனேவினையேன்
சித்தத்திலங்கும்பரனைப்பைஞ்ஞீலியிற்சென்றுதொழார்
கத்தத்திலங்குழைப்பார்போல்யமன்கசங்கத்திரிபட்
டுத்தத்திலங்குமழிந்திங்குந்தோன்றியுலைபவரே. (௫௨)

2080. உலகஞ்சவெம்மைகொண்டோங்குஞ்சமனையுதைத்தவனே
பலகஞ்சமீதுபொற்றூவிசெங்கால்பசுஞ்சுட்டுடனே
யிலகஞ்சமேவும்பைஞ்ஞீலியசற்றுமிரக்கமிலேன்
கலகஞ்சங்கேந்தியுங்காணுநின்றருள்கொளக்கண்டனனே. ()

2081. கண்டனஞ்சத்திவரைகடுப்பாள்பங்கனேகொதிப்புக்
கொண்டனஞ்சத்திறல்குன்றவுண்டாய்குளத்தாமரையில்
வண்டனஞ்சத்திக்கும்பைஞ்ஞீலிநாதமனமயங்கு
தொண்டனஞ்சத்தினம்வாட்டிடுமோவினைத்தொல்லைகளே. ()

2082. தொல்லையிலாயவினையாற்சுழன்றடைந்தேன்மனத்தை
யொல்லையிலாக்குடிகொள்வாய்பைஞ்ஞீலியென்னுத்தமனே
வெல்லையிலாதரன்றந்தாய்பொற்கோபுரமேவுதிருத்
தில்லையிலாடியதாளாயத்தீவினைதீர்வதற்கே. (௫௫)

2083. சீராக்கவலையுடையேனையன்பரிற்சேர்த்தருளிச்
சீராக்கவலைப்புனல்வாவியிலுகள்சேலைக்கண்டு
சாராக்கவலைச்சிரல்கொள்பைஞ்ஞீலித்தலைவகைக்குப்
பேராக்கவலையாப்பாமென்னகந்தையைப்பேர்த்தருளே. ()

2084. பேரரம்பைக்குலமோங்கும்பைஞ்ஞீலியர்பெய்மதுவார்த்
தாரரம்பைச்சடைவைத்தவர்முப்புரந்தம்மைவென்ற
வீரரம்பைப்பணிபூண்டவர்மேவவிரும்பியவென்
னோரரம்பைக்கனையாளையின்றாளவந்துற்றிலரே. (௫௭)

2085. உற்றவர்தொண்டர்வினைவேரறுப்பதற்கும்பருட
னற்றவர்சூழ்திருப்பைஞ்ஞீலிமேவியநாயகர்பொற்
கற்றவர்கொண்டருள்புண்ணியர்தாளையென்கன்னெஞ்சமே
பற்றவரன்றிமற்றாரேகொடுப்பர்பரகதியே. (௫௮)

2086. பரமனையன்புசெறிநெஞ்சியற்பகையார்க்குமுத்தி
தரமனையிற்சென்றவனையெம்மானைத்தழங்குகனற்
கரமனையோங்குங்கதலிவனத்தூமுக்கண்ணனைநல்
வாமனைவர்க்கும்கொடுப்பானைவாழ்த்திவரன்னெஞ்சே. ()

2087. வருந்தாரெனமகிழ்ந்தேனிற்றைஞான்றுவரையுஞ்சும்மா
விருந்தாரனுப்புதலின்றிவண்டீரின்றுபோய்ச்சொலுங்கோள்
பெருந்தாரணிபுகழ்ந்தேத்தும்பைஞ்ஞீலிப்பெம்மானுக்குத்தேன்
றிருந்தார்முடியுடையாருக்குத்தேவர்தந்தேவருக்கே. (௬0)

2088. தேவிக்குருவம்பகிர்ந்தார்பைஞ்ஞீலிச்சிவபுரார்க்குப்
பாவிக்குருகுமனமிலராயபரமருக்குத்
தூவிக்குருமணிநந்தினஞ்சிந்துந்துறைமலியும்
வாவிக்குருகினங்காள்சொல்லுவீரென்றன்மையலையே. (௬௧)

2089. மையற்கடாக்களிறல்லாநடத்திவருமதனப்
பையற்கடாதென்செய்தேனெஞ்ஞான்றும்பகைத்துவெங்கோன்
மொய்யற்கடாவினனுகப்பைஞ்ஞீலிமுழுமுதலென்
னையற்கடானையுரித்தாற்குறுமையலாயினனே. (௬௨)

2090. ஆயனையம்பனுமையொருபாகனரம்பைவனத்
தூயனையம்பன்மினிரிடதமேற்றவன்றாத்திரையான்
சேயனையம்பகத்தாலெரித்தானைச்சிலகவிதந்
தாயனையம்பதவென்மேருதிடவென்றளர்விலையே. (௬௩)

2091. இல்லாதவாதனையீராகவையனிரும்புகழைக்
கல்லாதவாவுற்றுழல்வீர்கதலிவனத்தமர்ந்தோன்
பல்லாதவாவற்றனையோவென்றியாரும்பகரச்செய்தோ
னல்லாதவானவனும்டோறுந்தீமையறுப்பதற்கே. (௬௪)

2092. அறுகாரணிசடையாற்குயரோங்கலரையனன்பாய்ப்
பெறுகாரணியொருபாகற்குத்தேவர்பிராற்கிலங்கு
மறுகாரணிதிருபைஞ்ஞீலியாறகென்வருத்தஞ்சொல்லி
யுறுகாரணியலகொணர்ந்தாலென்னுங்கொலிவ்வொண்மதியே.

2093. மதித்தலையாழிகடைவேலைவந்தநஞ்சுண்டவனே
விதித்தலையார்கரத்தோனேபைஞ்ஞீலியெம்வித்தகனே
துதித்தலையான்செய்திலனேனுமின்னந்தொடர்ந்தனைபா
லுதித்தலையாமலெனையாளநீயென்றுடம்படலே. (௬௬)

2094. படப்பணிபூண்டபுயத்தபைஞ்ஞீலிப்பரம்பரபூங்
கடப்பணிவேளத்தசெங்கையினவண்டுகழலமுத்து
வடப்பணிசிந்திமலர்ப்பாயணீத்துமருவவெண்ணி
நடப்பணிற்பாடிகைப்பாளுயிர்ப்பாளெங்கணன்னுதலே. ()

2095. நன்னத்தனேடும்பொற்பாதத்தனேநல்லரம்பைவன
மன்னத்தனேரில்பைஞ்ஞீலியனேமருவாரைவெல்வேன்
மின்னத்தனேகமருப்பன்விரும்புமவ்வுருப்பத்தனே
யென்னத்தனேநினையல்லான்மற்றியாரையுமெண்ணலனே.()

2096. எண்ணாதவனன்பொடுநின்பதத்தையென்றானுமெனை
யுண்ணாதவன்னஞ்சமுண்டதுபோலவுவந்தருள்வாய்
விண்ணாதவன்கதிர்தோற்றவரம்பைவியன்வனமாக்
கண்ணாதவனன்குடையார்மனத்துறைகாரணனே. (௬௯)

2097. காராழியொக்குநிறத்தான்செய்பூசனைகண்டினிதா
வாராழிமுன்னமளித்தாய்பைஞ்ஞீலியமர்ந்தவனே
பாராழிக்கேகருதையாய்மடவார்மயல்பட்டுழலும்
பேராழியவினையேனுன்னருளென்றுபெற்றுய்தலே. (௭௦)

2098. பெற்றனடாவும்பெருமான்பைஞ்ஞீலிப்பெம்மானிலங்கும்
பொற்றனடாவுமைக்கண்ணிபங்கானன்பபூண்மனத்திற்
குற்றனடாமற்குணநடுமன்றுகட்கோவைத்தொழக்
கற்றனடாவந்தகாவந்துபாரொருகையினியே. (௭௧)

2099. கையத்தியங்கலறத்தோலுரித்தவன்காலற்செற்றோன்
மொய்யத்தியங்குஞ்சடையான்பைஞ்ஞீலிமுழுமுதல்வன்
வையத்தியங்கொள்பொற்றேரானையன்றிவருந்தம்வினை
செய்யத்தியங்கினும்பாடேனினிமற்றோர்தேவரையே. (௭௨)

2100. தேவாகருங்குழல்பாகாபைஞ்ஞீலிச்சிவபுரனே
மாவாகருங்குலவேகருந்தேடுமறைமுதலே
பூவாகருங்குன்றுபன்னிரண்டாற்குப்பொருந்தத்தனே
நீவாகருங்குண்டைமேலம்மையோடென்முனேயமுற்றே. ()

2101. உற்பத்தியாவதுஞ்சாவதுமன்றியுன்றாண்மலர்க்கு
நற்பத்திகொண்டுய்ந்திபேன்பைஞ்ஞீலியென்னையகனே
கற்பத்தினைச்சக்கரத்தானின்றேத்தக்கடம்புரம
திற்பத்திவேவச்செற்றாயுய்யுமாறருள்செய்தருளே. (௭௪)

2102. செய்க்குவளைக்குநிகர்நேத்திரம்புனல்சிந்துவதுங்
கைக்குவளைக்குலஞ்சேராததுஞ்சுகங்காள்சொலுநன்
மைக்குவளைக்குங்கடல்சீறிடுமுன்மதியெழுமு
னைக்குவளைக்குழைபாகற்கரம்பையடவியற்கே. (௭௫)

2103. அடவிக்கதலிப்பசுங்குருத்தோடியகல்விசும்பைத்
தடவிக்கறக்கநிரோன்குரகதத்தைத்தகர்த்துக்
கடவிக்கதனஞ்செய்பைஞ்ஞீலிமேவுங்கடவுண்மதன்
படவிக்கமுறச்செற்றாயருணின்பொற்பாதத்தையே. (௭௬)

2104. பாதம்பணியும்வகையறியேற்குன்பதம்பணியும்
போதம்பணியுமைபாகபைஞ்ஞீலியபொற்சடையின்
மீதம்பணியும்விமலமன்றேறிவிமலையுடன்
வாதம்பணியும்பரேத்தநின்றாடுமறைமுதலே. (௭௭)

2105. மறைவழியேநின் றிருப்புகழோதிமனங்கனிந்து
முறைவழிபாடுபுரியமுன்னுதிருப்பேற்குமனக்
குறைவழியத்தயைசெய்தாண்டருள்வைபொற்குன்றுவில்லாய்
நறைவழியுங்கதலிச்சோலைமேவியநாயகனே. (எஅ)

2106. அகலப்படவரவாய்த்தேரைபோலுமம்மாதர்விழி
யிகலப்படவரந்தைக்கிடனுய்க்கொடியேய்கடன்மே
வுகலப்படவரவந்தீர்ந்தபோலுமுள்ளேற்குளத்தா
சுகலப்படவரம்பைக்காடவோடத்துரத்துதியே. (எகூ)

2107. உதிக்கின்றவம்புலிவெம்புலியாகியுறவவ்வுடு
பதிக்கின்றவம்புரிந்தேன்சந்தம்பூசப்பருமலைமேற்
கொதிக்கின்றவம்பல்செய்வேனோபெண்காளென்குறையுரையீர்
மதிக்கின்றவம்பலத்தாடும்பைஞ்ஞீலிவாணுக்கின்றே. (அ0)

2108. வரம்பலமாவொன்றுநாயேற்குதவுமருமலர்ச்செ
யிரம்பலமாமொய்யனைச்செற்றவாநல்லிருங்கதலி
மரம்பலமாப்பலசேரும்பைஞ்ஞீலிமறைமுதலே
சிரம்பலமாலையணிந்தாய்நின்றுட்கன்புசெய்வதற்கே. (அக)

2109. செல்லைக்கடுத்தகுழலார்பிறையைச்செயித்துவரி
வில்லைக்கடுத்தநுதலார்மயக்கைவிரும்பிவினைத்
தொல்லைக்கடுத்தவுடம்பெடுத்தேனைநின்றொண்டரிற்சே
ரொல்லைக்கடுத்தருக்கோட்டிபைஞ்ஞீலியுறைபவனே. (அ௨)

2110. பவனுசனப்பனெம்பைஞ்ஞீலிநாதன்பருப்பதவிற்
சிவனுசனங்கயிலாயவெற்பான்செஞ்சடைப்பெருமா
னிவனுசன்மக்கடனீத்தேறுவனென்றியம்பவமைந்
தவனுசன்வஞ்சனென்றென்னையெண்ணுதினிதாண்டனனே.

2111. ஆண்டலைப்பத்திரக்கேதனத்தாற்கத்தனேயணிகொள்
பூண்டலைப்பத்திரியேற்றாய்பைஞ்ஞீலியனே நின்பொற்றாள்
காண்டலைப்பத்தியிலாலறியாக்கள்வனேற்குவினை
யீண்டலைப்பத்தியங்கித்திரிவேற்கென்றிரங்குவையே. (அச)

2112. இரக்கஞ்சற்றுங்கிடையாமனத்தேற்கஞ்சலென்றுநின்செங்
கரக்கஞ்சங்காட்டிநின்றொண்டர்குழாத்திற்கலக்கவைப்பாய்
தரக்கஞ்சமுன்னமுரித்தாய்பைஞ்ஞீலித்தலைவமிக்க
விரக்கஞ்சர்ப்பந்தரித்தாய்மழுவேந்தும்விடையவனே. (அரு)

2113. அவனிவனென்றலையாமனெஞ்சேயென்னையாளுடைய
சிவனிவமேறுடைப்பைஞ்ஞீலிநாதன்றிசைமுகத்தோன்
புவனிவனிதைபுணர்வோன்கிளைத்தபுராணுமைக்கோர்
தவனிவரும்பவந்தீர்ப்பான்பொற்றாளிணைசாருவையே. (அசு)

2114. சாருக்கனையமொழியாயிர திதவனடத்தும்
போருக்கனையர்பகைக்கினிச்செய்வதென்பூங்கதலித்
தாருக்கனையடர்பைஞ்ஞீலிமேவுந்தலைவனெம்மான்
மேருக்கனையக்குழைத்தானிங்கெய்தின்மிகவுநன்றே. (அஎ)

2115. நன்றத்தம்வேண்டினனீகெனமூடரை நண்ணியம்பொற்
குன்றத்தடம்புயனேயெனப்பாடிக்குறைந்தலைந்து
வன்றத்தளாவித்திரியாமனீலிவனத்தவபொன்
மன்றத்தயானினக்கேகவிபாடமனந்தந்ததே. (அஅ)

2116. தந்தக்கரியதள்போர்த்தான்பைஞ்ஞீலித்தலைவனுள்ளு
வந்தக்கரியணிந்தான்கோலமாகிமலரடியை
முந்தக்கரியவன்றேடநின்றானென்முழுவினைநோய்
சிந்தக்கரியப்புரிந்தாண்டருடருந்தேசிகனே. (அகூ)

2117. கனத்துப்புடைகொடனமதர்நோக்கங்கறுத்தகுழல்
வனத்துப்புடையிதழம்மைபங்காகஞ்சவாவிகளி
னனத்துப்புடைமலங்குந்துபைஞ்ஞீலிநம்பாநிற்றொழ
மனத்துப்புடையவரோவாதலாலெற்குவந்தருளே. (கூ0)

2118. வந்தித்தலையுடையார்க்கன்பனீலிவனத்துறைவோன்
பந்தித்தலையன்வரைக்கீழலறும்படிநெரித்தோன்
சிந்தித்தலைகடல்போலேகண்ணீர்மிகச்சிந்துமென்முன்
னிந்தித்தலைவருமுன்வருமாறியம்பெய்திமஞ்சே. (கூக)

2119. மஞ்சனகண்டனைப்பைஞ்ஞீலிவாழுமறைமுதலை
வஞ்சனமன்புரளக்கழறாக்குமெம்மானையொண்கண்
ணஞ்சனமாதர்மயல்வீழ்ந்தறிவற்றழிந்துழல்வீர்
வெஞ்சனனங்களைந்தேடேறியுய்யவிரும்புமினே. (கூ௨)

2120. விருப்பன்னமீதில்லைபாலினுமில்லைவெண்முத்தணிகொ
ளருப்பன்னமென்முலைகாந்துவதாலவ்விருப்பமெங்ங
னிருப்பன்னமுண்டகஞ்சேரும்பைஞ்ஞீலியினெம்மிறைவர்
திருப்பன்னகந்தரித்தார்புயத்தேறுந்தெரியலினே. (கூ௩)

2121. அலம்புகுவால்வினையென்னான்றும்வாட்டவயர்ந்திருகண்
ணிலம்புகுமாறலறித்திரிவேனையென்றாண்டருள்வாய்
விலம்புகுலாறுதற்கண்ணிபங்காமிகுமென்கதலிக்
குலம்புகுகோயிலிருப்பாயடியன்குலதெய்வமே. (கூ௪)

2122. குலமலையாவுந்தொழநின்றபொன்மலைக்கோனருளு
நலமலைபாகபைஞ்ஞீலியனேநதிபோலுமத
சலமலையுங்கவுட்டோலுரித்தாயென்னைச்சார்ந்தவினை
வலமலையாமலினிதாவென்றேதலையவைப்பதுவே. (கூ௫)

2123. பதுமத்தனங்குடிகொள்ளும்பைஞ்ஞீலிப்பரசிரத்தில்
விதுமத்தனங்கையொருபாகவெள்ளைவிடையனை
முதுமத்தனங்கம்வருந்தலுந்தேடலுமுன்னலைச்செய்
வதுமத்தனங்கொண்மடவார்க்கென்றுலெங்ஙன் வாழ்த்துவனே.

2124. வனத்தனையன்றேழும்பைஞ்ஞீலிமேவுமறைமுதலை
யெனத்தனையன்றுபுரமெரித்தானையிலங்கிலைவேற்
சினத்தனையன்குகனைப்பெற்றானைச்செம்மான்மழுவாண்
மினத்தனையன்றிப்புகழேன்புறஞ்சிலவீணரையே. (கூஎ)

2125. வீணாகவம்பரைக்கொண்டாடிப்பாடும்வெறும்புலவீர்
காணாகவம்பலகோடலல்லாற்சற்றுநன்மையுண்டோ
பூணாகவம்பலர்கொன்றையவேோங்குகதலிப்பொங்கர்
வாணாகவம்பற்றுமுன்வாவென்றேதும்வருந்தலின்றே.(கூஅ)

2126. வருத்தத்தையாற்றுதல்செய்யேனினியத்தைமாற்றிவருங்
கருத்தத்தையுந்தவிர்த்தாள்வாய்கடற்கட்டுகிரினிறப்
பொருத்தத்ன.தமேவுஞ்சடையாய்பைஞ்ஞீலியெம்புண்ணியனே
மருத்தத்தையார்கொன்றைத்தாராய்புரத்தொருமாதினனே.

2127. மாதப்புனற்குமனஞ்சேரொட்டாதகைமாற்றுதல்செய்
தேதப்புனற்பரிற்கூட்டாதெனையுய்யவைத்ததுபூந்
தாதப்புனற்கொன்றைத்தாரானென்னம்மைதழுவிடத்தான்
சீதப்புனற்பணைப்பைஞ்ஞீலிநாதன்றிருவடியே. (கூ00)

திருப்பைஞ்ஞீலித்திரிபந்தாதி முற்றிற்று.

---

## *சிறப்புப்பாயிரம்.



2128. மறைநூறுகளையறவோர்ந்துளாருமகிழ்ந்துபவக்
கறைநூறுமாறுணர்ந்துய்ந்திடுமாறுகயிலையொப்ப
வுறைநூறுமாடங்கொள்பைஞ்ஞீலிநாதற்குவந்துகலித்
துறைநூறுசொற்றனன்மீனாட்சிசுந்தரத்தூயவனே.

---

* இதனை இயற்றிவர்பெயர் தெரியவில்லை.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குடந்தைத்திரிபந்தாதி.



## காப்பு.

### ஆதிவிநாயகர்துதி.

2129. சோதிக்களிற்றையலோடுறுமாறுதுதிசெயற்கா
நீதிக்களிற்றைவரையருந்தாப்பிழைநீங்கவரால்
சாதிக்களிற்றையளாநீர்க்குடந்தையந்தாதிசொல்வா
ஞாதிக்களிற்றையடுத்தாமடுத்தவனைத்தும்வந்தே.

### அவையடக்கம்.

2130. குடந்தையந்தாதிதிரிபாவொருசதங்கூறிடுவ
னடந்தையந்தாதிகழுமாவலியென்றநாதனிற
மடந்தையந்தாதிவினைசெயவாழ்மங்களைமகிழ்ந
னிடந்தையந்தாதிவருந்தாடருமெனுமெண்ணங்கொண்டே.

## நூல்.

2131. பூந்தாமரையில்வதிவானுமாயனும்போற்றிடப்பொன்
னூந்தாமரையில்வளக்குடமூக்கமரண்ணற்கடி
யேந்தாமரையில்வனத்துழலாந்தவமெய்தவனூர்
மாந்தாமரையில்வன்றுருமுடாமுள்ளிவாழ்குதுமே. (க)

2132. வாழும்பரவைபுகழ்குடமூக்கமர்வள்ளலுல
கேழும்பரவையமுதகும்பேசனிருந்தளியைச்
சூழும்பரவைவிடமயின்றாயென்றுசொல்லுமெதிர்
தாழும்பரவைமனைக்கேகவன்செயுந்தண்ணளியே. (உ)

2133. தண்ணஞ்சுமந்ததிருக்கரத்தானைச்சலதிசுற்று
மண்ணஞ்சுமந்தகனையுதைத்தானைவிண்மாய்க்குமென்று
கண்ணஞ்சுமந்தமுறுத்தவொண்ணாங்கடேசற்றொழா
ரெண்ணஞ்சுமந்தவறிவினராயளற்றெய்துவரே. (ங)

2134. வரசங்கமங்கையுதித்தார்கல்லேற்றவரதகலைப்
பிரசங்கமங்கையுறுநாவரேத்தும்பெருங்குடந்தை
யரசங்கமங்கையுடைக்கணையாய்நின்னடிக்கமலம்
பரசங்கமங்கையுறுமாறுண்டோவெம்படரொழிந்தே. (ச)

2135. படவரவத்தையணிவார்கும்பேசர்படியளந்த
விடவரவத்தையறுப்பார்நகர்வில்லையேந்திழையார்
நடவரவத்தையுகப்பாரெனினுநமக்கருளக்
கடவரவத்தையடையவிடார்பொற்கனங்குழையே. (ரு)

2136. கனகச்சிலம்புவளைத்தார்கும்பேசர்கனமறையா
மனகச்சிலம்புபுனைவார்மறுகிலணிவிடைமீ
துனகச்சிலம்புமுரசோடணையத்தொழுதவர்பான்
முனகச்சிலம்புதொடுப்பான்கொலோமதன்முற்றிழையே. (சு)

2137. முற்றத்துவந்தனைசெய்ந்தனுனக்குமுழுமதியே
சொற்றத்துவந்தனையாம்குடமூக்கமர்சுந்தரர்வெண்
பெற்றத்துவந்தனையார்மார்புறயான்பெறுந்துணைநீர்
செற்றத்துவந்தனையாய்ப்பயில்வாயச்செழுவிசும்பே. (எ)

2138. செழுங்கமலத்துவெடிவாளைபாய்தரத்தேனெனக்கீழ்
விழுங்கமலத்துவழிசார்குடந்தைவிமலர்பொற்று
ளழுங்கமலத்துநிலங்கரையக்கரைந்தன்பினுள்வாம்
புழுங்கமலத்துவிழுந்துயர்தீர்ந்தின்பம்புல்லுதற்கே. (அ)

2139. புல்லாவரையுடைநல்குங்குடந்தைப்புகழ்ப்பதியா
வல்லாவரையுடைசார்கயிலாயவரைவிடையேழ்
வெல்லாவரையுடையாரெனக்கூறும்விதமென்னெனு
மொல்லாவரையுடைகொங்கையிம்மங்கையுணர்ச்சிநன்றே. ()

2140. நன்றுதரித்தகுடந்தைப்பிரானைநயந்துவெள்ளிக்
குன்றுதரித்தமழுவாவெனத்துதிகூறக்கற்றேம்
பொன்றுதரித்தவினைகாளைமைவிட்டுப்போய்விரைவி
னன்றுதரித்தகையோராரவரையடைமின்களே. (கo)

2141. அடைந்தவராகமளவாப்பசப்பினமையச்சுற்றந்
தடைந்தவராகமளித்தருள்வார்கொறவாதவலி
மிடைந்தவராகமருப்பணிந்தார்விண்ணர்மேவிமல
முடைந்தவராகமரூஉங்குடமூக்கமருத்தமரே. (கக)

2142. உத்தமனத்தனவிர்மழுவோடுழையுற்றமரு
முத்தமனத்தனடிதேடநீண்டவனும்மலர்தூய்
நித்தமனத்தனவாங்குடமூக்கமாநன்மலனிப்
பித்தமனத்தனமன்றுனென்றென்னையும்பேணுவனே. (கஉ)

2143. பேணுதடென்னைதமைப்பேணுவாகூரப்பிறைமதிய
மாணுதடென்னைவருத்துதற்கேயெழும்வானளவு
கோணுதடென்னையடர்குடமூக்கிற்குலாங்குழகர்
நாணுதடென்னையுறுபுகழார்கனனூட்டத்தரே. (கங)

2144. நாட்டஞ்சிவந்தனையென்செயலாநமனேகுடந்தைக்
கோட்டஞ்சிவந்தனைநேர்ந்தேயுறுமங்குக்கூடிமலப்
பூட்டஞ்சிவந்தனைசெய்தோங்கருணைபுரிந்ததிலே
வாட்டஞ்சிவந்தனைப்பொன்சொரிந்தாலுமதிக்கலமே. (கச)

2145. மதிக்கலமாலயனாதியர்வாழ்க்கையைமற்றுமொன்றைத்
துதிக்கலமாலயமாமறையானென்புந்தொண்டர்நெஞ்சு
நிதிக்கலமாலயமாகக்கொண்டான்பதநெஞ்சுள்வைத்தா
முதிக்கலமாலயனீத்தாங்குடந்தையுவந்தனமே. (கரு)

2146. உவமையிலாடுபலவரிந்தாலுமொழிவதுண்டோ
வவமையிலாடுகரத்தனத்தாகும்பத்தற்புதனே
தவமையிலாடுதுறையாயலருந்தவாதுநெருங்
குவமையிலாடுநைதையுந்துயர்நீங்கக்குறித்தருளே. (கசு)

2147. அரும்பாவலருமுலையென்பதென்பல்லுமத்தன்மைத்தே
விரும்பாவலருமகள்சுரம்போதல்விழைந்ததென்னோ
வரும்பாவலரும்புகழ்குடமூக்கமர்வள்ளல்வெற்பிற்
றிரும்பாவலருமுலகெங்குமாகுந்திறந்துணிந்தே. (கஎ)

2148. திறம்பாவமென்றுகுறிப்பார்மனைதொறுஞ்சென்றுழன்ற
மறம்பாவமென்றுமறிதருமேதிமரைபலர்வாய்
நிறம்பாவமென்றுதிரிகுடமூக்கமர்நித்தசிவே
பறம்பாவமென்றுகடலுருளாக்கொண்டபண்ணவனே. (கஅ)

2149. பண்ணைப்பணைத்ததிருவுமுருவும்பலமகவுங்
கண்ணைப்பணைத்தமொழியார்கலப்புங்கலப்புறுதோ
மண்ணைப்பணைத்தவளவனையூரும்வளக்குடந்தை
விண்ணைப்பணைத்தசடையானைமேவினமேவினமே. (ககூ)

2150. மேவியகல்லும்படியென்னைத்தென்றலும்வெண்மதியு
மோவியகல்லும்புனைதலைமையென்றுளிவளைமேற்
றூவியகல்லும்பொறுத்தார்கும்பேசர்துனைந்தருளா
ராவியகல்லும்படியுற்றதாலினியாரணங்கே. (உ0)

2151. ஆரம்பரந்தமுலையாய்பங்கேருகத்தண்ணலும்பொற்
பேரம்பரந்தகைசிற்புனைவானுமுட்பேணிவளங்
கூரம்பரந்தமிலாநல்லமேவிகுடந்தைவெற்பிற்
காரம்பரந்தவழுஞ்சென்றுளார்வரக்கண்டிலமே. (உக)

2152. கண்டத்திருப்புவயவிடமாவுட்கலங்குபுமா
றண்டத்திருப்புவதுமழுவாதண்டமிழ்க்குடந்தை
யண்டத்திருப்புவனைஞாலமேத்தவமர்பதியா
மண்டத்திருப்புவனச்சடையார்க்கெனுமாமயிலே. (உஉ)

2153. மாமையிலங்கையரிவிழிபால்வண் குடந்தையனை
நாமையிலங்கைநகத்தரிப்பாற்றருநம்பனைவெந்
தீமையிலங்கையறச்செற்றவாளிச்சிவனையெண்ணார்
தாமையிலங்கையையோவென்செய்வார்வெஞ்சமன்வலிக்கே.

2154. வல்லியம்பாயும்வனங்குடமூக்குள்வையாரினுயிர்
கொல்லியம்பாயும்வன்மீனூற்றின்வாய்க்குலவேதந்துழாய்
புல்லியம்பாயும்பராரிறையோயென்புராணர்வெற்பி
லல்லியம்பாயும்பலேநேர்பவரிங்கடைதனன்றே. (௨௪)

2155. அடைக்கலமாலைவளக்குடமூக்கமர்வாய்தலைப்பன்
முடைக்கலமாலையணிவாய்மறையின்முழுமுதலே
யுடைக்கலமாலைவகைப்பொறியாற்றலுன்றாளுக்கன்பு
படைக்கலமாலயன்றேமெங்ஙன்வாழும்பரிசுளதே. (௨௫)

2156. உளத்துக்கலந்தகடுந்துயர்யாவுமொழிவதென்றோ
களத்துக்கலந்தகவில்லாநஞ்சாக்கிக்கனலில்விழுந்
தளத்துக்கலந்தகமலைமுன்னேரைத்தழைவித்தவா
வளத்துக்கலந்தகராக்குடமூக்கமர்மாமுதலே. (௨௬)

2157. மாமனுக்காட்டுமுகங்கொடுத்தாற்குமஃதுப்பெய்கொன்றைத்
தாமனுக்காட்டுவளப்பதத்தாற்குத்தவாதநல்லோர்
நாமனுக்காட்டுகுடந்தைப்பிராற்குநகுதழனீர்
காமனுக்காட்டுகண்ணாற்கடியோமுட்கலங்கலமே. (௨௭)

2158. கலங்கலந்தாரையறியாரினின்றுகைகூப்பினல்கு
நலங்கலந்தாரைவளக்குடமூக்கமர்நம்பரைக்கண்
டலங்கலந்தாரையருண்மினென்றேயிவ்வணங்குவிழிக்
குதங்கலந்தாரைகவிழ்ப்பநின்றுளென்னகோலமிதே. (௨௮)

2159. கோலமருப்புமுறித்தார்குடந்தைக்குழகரிந்தக்
காலமருப்புமுலையார்க்கருளக்கடவரல
ரேலமருப்புகுதும்போதுழிக்குமிருங்குழன்மிக்
கோலமருப்புவனஞ்செவ்வீத்திடுமொண்டொடியே. (௨௯)

2160. தொடிக்கமலங்குவித்தேன்குடமூக்கிற்சுடர்மறுகி
னடிக்கமலங்குபயில்பண்ணைத்தலைநயந்தவர்க்கு
முடிக்கமலங்குலவப்புனைந்தார்க்கிம்முதுபிழைக்காத்
துடிக்கமலங்குமனமமர்ப்பானொருதுட்டனென்னே. (௩0)

2161. என்னையப்பாவலர்தூற்றுநர்தூற்றவெண்ணூதெறிந்து
நன்னையப்பாவலர்சூழுங்குடந்தைநகுமுதலை
யுன்னையப்பாவலர்செஞ்சடைமேலென்றுரைத்தடைந்தேன்
பின்னையப்பாவலர்கூட்டத்துச்சேர்த்துப்பிறக்குகவே. (௩௧)

2162. பிறப்பாலனந்தமனூராமவற்றினும்பேணுதலி
சிறப்பாலனந்தமடுப்பதுநேருமென்செய்துமுற்றூர்க்
குறப்பாலனந்தமகிழ்விற்றருமொண்குடந்தையுள்ளா
யறப்பாலனந்தமரசேயின்பெய்தவருள்புரியே. (கஉ)

2163. புரிந்தவரங்கம்வெதுப்புதலால்வரல்புண்ணியமோ
பரிந்தவரங்கம்வணக்கிடுமுன்னம்பரிந்துவந்து
விரிந்தவரங்கம்பலைபருள்கும்பவிமலவென்று
தெரிந்தவரங்கம்புகலவுள்ளார்க்கிதுசீர்த்தியன்றே. (கங)

2164. அன்றலைவாரியெனக்கொடுபோகவமுங்குபுயான்
பொன்றலைவாரியெடுத்தொழித்தார்க்கன்றிப்புன்மைபுகல்
வன்றலைவாரிசனுக்கொழித்தான்கும்பவள்ளல்வெற்பி
லின்றலைவாரிவரியாருறுவர்கொலென்மணமே. (கச)

2165. என்னப்பனுகம்பவளமொப்பான்மின்னிருஞ்சடைமேன்
மின்னப்பனுகம்பகர்குடமூக்கமர்வித்தகன்பேர்
பன்னப்பனுகம்படுவிடந்தீர்ந்தோர்பனவன்மகன்
மன்னப்பனுகம்பலைக்கவுய்ந்தானோர்வணிகனுமே. (கரு)

2166. வண்ணக்குவளைவிழியாளிவளென்றுமாழ்கிமண்ணோ
ருண்ணக்குவளைமுதுகாயினீரென்றுரையளவு
மெண்ணக்குவளையிலக்காக்குவீர்பயனென்குடந்தை
யண்ணக்குவளையணிபெருமானையடுத்துய்ம்மினே. (கசு)

2167. உய்யாதபாதகனுமெனையாருணர்வார்குடந்தை
மெய்யாதபாதபுகழாய்துறைசைவெளிப்பட்டுநீ
யெய்யாதபாதரசம்போறலையற்றிருவென்றுநோய்
செய்யாதபாதமலர்தலைச்சூட்டல்செய்யாவிடினே. (கஎ)

2168. விடக்கந்தரத்தருமாபாகர்கும்பவிமலர்பைம்புற்
றடக்கந்தரத்தருவாவுரித்தார்பொற்றடவரைவா
யடக்கந்தரத்தருமம்புரிவார்மதன்பர்வினை
மடக்கந்தரத்தருமஞ்சுமிவ்வாற்றுவரல்கொடிதே. (கஅ)

2169. வரந்தந்தவரைபெறநாவன்மேயவர்வாழ்த்துநரைப்
புரந்தந்தவரையுயர்த்துங்கும்பேசர்பொருப்பிலருள்
சுரந்தந்தவரைசெயவந்தயானைதொலைத்தென்னுயிர்
திரந்தந்தவரைவிடுத்தெவர்க்கார்க்குமித்திண்முரசே. (கக)

2170. முரசம்பலவனிதஞ்சிலைக்குங்குடமூக்கமர்வா
னரசம்பலவனிகமஞ்சொற்றுனெளியானரியான்
பரசம்பலவனியுள்ளார்க்கரன்வெற்பிற்பங்கயத்து
விரசம்பலவனிதாய்கொடுங்கூற்றுநின்மெய்ம்முற்றுமே. (சo)

2171. மெய்யாதரித்தமழுவாசெந்தாமரைவெள்ளையன்னஞ்
செய்யாதரித்தகுடமூக்குளாயென்றுதேர்ந்துரைப்போ
மெய்யாதரிந்தவினைகாள்விரைந்தினியெம்மைவிட்டுப்
பொய்யாதரித்தகவில்லார்கட்சென்றுபுகுந்துய்ம்மினே. (சக)

2172. புக்கவரிக்குமயனுக்குமுய்தல்பொருந்தஞ்சுண்
டக்கவரிக்குவயற்குடமூக்கமர்சங்கரர்நீர்
மிக்கவரிக்குவியன்றேரர்சீரன்றிவெவ்வியகா
ணக்கவரிக்குநிகர்வாரைப்பாடுதனன்றலவே. (சஉ)

2173. அலவானினக்குமொழிகுவதொன்றுண்டதுகுடந்தை
வலவானினக்குமிளிரவருமொருவள்ளல்வெற்பிற்
குலவானினக்குநலனுந்தவனெற்குறித்துறுங்கா
னலவானினக்குவெளிப்படலோவுநலமுணரே. (சங)

2174. நலப்பரியாயமறையான்குடந்தைநகர்புரப்பான்
கலப்பரியாயவளியாதொளிக்குங்கடவுள்பெயர்
சொலப்பரியாயமனந்தமுண்டேத்தித்தொழுதுருகி
யுலப்பரியாயமுதேயெனிலாடலொருதலையே. (சச)

2175. ஒருதலையாகவமோவிப்பொழிலினுதையத்தொன்னூர்
விருதலையாகவவேடர்செறிவர்வெய்யோன்மறையுங்
கருதலையாகவலாமலின்றேகுகழியயன்மா
றருதலையாகவமான்கும்பநாதன்றமிழ்வரைக்கே. (சரு)

2176. வரைதலையாற்றுவருவானிரவென்றுமாழ்குமங்கை
கரைதலையாற்றுவிடாவின்பந்துய்த்தியெங்காவலவெண்
டிரைதலையாற்றுவரைநேர்சடைக்கணிசெய்துமிலான்
புரைதலையாற்றுமகிழ்வான்கும்பேசன்பொருப்பகத்தே. ()

2177. அகத்திருப்பாரைமுகத்தாயெனினவரைப்பவத்து
நகத்திருப்பாரையரிக்கண்ணிபாகர்நடுங்குபுர
முகத்திருப்பாரைமுன்னூர்ந்தார்கும்பேசரையுற்றுத்தொழாச்
சகத்திருப்பாரையிரந்தும்பெறீர்மிடிதாக்கப்பட்டே. (சஎ)

2178. பட்டாதிசைவரகங்கணமாபணிபாயும்விடை
முட்டாதிசைவரவேயூதியாகுடமூக்கிடமா
தொட்டாதிசைவரவாய்ப்போற்றமேவுநந்தோன்றற்கெனுந்
தட்டாதிசையவரனுமேலின்பாமெனுந்தாழ்குழலே. (சஅ)

2179. குழக்கன்றியங்கமுலைபசுவாய்க்கொடுத்தாயெழுமா
முழக்கன்றியங்கநகைபுடைத்தாய்குடமூக்கமர்வாய்
சழக்கன்றியங்கம்மலிகடலானம்புதைப்பத்தென்ற
லுழக்கன்றியங்கமெலிதலுற்றாளொன்னொருமகளே. (சகூ)

2180. ஒருத்தலரிக்குக்கரும்பொன்செம்பொன்னிற்குடுவொளியே
திருத்தலரிக்குக்கடுப்பாய்வரினும்வெந்தீயவிடம்
வருத்தலரிக்குக்கழித்தாய்சுதைக்கும்பவாணமையக்
கிருத்தலரிக்குக்கரனேச்செற்றாய்நினக்கில்லையொப்பே. (ருO)

2181. ஒத்தவராகவருவாரிலாய்மலரொண்டொடிவாய்
முத்தவராகவலனழித்தாய்குடமூக்கமருஞ்
சித்தவராகவனமூலமாதுசினந்தகரும்
புத்தவராகவந்தீர்வதென்ஞான்றுபுகனுதியே. (ருக)

2182. புகவெளிதாயமனுமஞ்சதரிருள்போந்ததிங்கல்
குகவெளிதாயபதமூனருந்திக்குறியிடம்வா
னகவெளிதாயதுணர்ந்தேகலாமன்பகப்பொருளூன்
மிகவெளிதாயமையென்றீரும்பேச்சுரர்வெற்பகத்தே. (ருஉ)

2183. வெற்புக்குமரியவாங்கும்பகாதர்விலங்கலிலென்
பொற்புக்குமரியதோர்மகள்காதற்புணர்ப்பென்றிபோ
ரிற்புக்குமரியவாள்விதிர்ப்போய்நின்னிசைப்பருந்தோள்
வற்புக்குமரியகற்புக்குமீதுவனப்பல்லவே. (ருங)

2184. வனத்தையவாயமலப்பாண்டம்வீழ்முனமால்விடைவா
கனத்தையவாயவினிப்பாய்குடந்தைக்கண்ணும்மறைவ
சனத்தையவாயவுனேயேயுணருந்தவாதவன்ப
ரினத்தையவாயவியான்சேரச்சேர்ப்பித்தினிதருளே. (ருச)

2185. அருளாகரனேமலமாயைகன்மமகழ்ந்தவர்க்கே
பொருளாகரனேவிடுத்தயலேயென்புலன்கள்சென்று
மருளாகரனையடரேவக்கும்பவரதனேயே
தெருளாகரனேவரும்வாழ்கவாழ்கவிச்சேணிலத்தே. (ருரு)

2186. நிலங்கமலங்கனல்கால்வெளியென்றுநிலாவுயிரென்
றிலங்கமலங்கனல்குங்குடமூக்கினிறையவனே
யலங்கமலங்கனல்காரருளென்னினவ்வாணவநோய்
கலங்கமலங்கனல்கூர்தரவாளுங்கருணையென்னே. (ருசு)

2187. கருங்கலசத்தையுவந்தார்குடந்தைக்கண்ணார்சிலம்பி
லருங்கலசத்தையுடையாரின்வேலரடைந்ததொன்று
மருங்கலசத்தையலையிழந்தாயுயிர்மாற்றுதற்கோ
பெருங்கலசத்தைவதைப்பதற்கோவன்னேபேசுகவே. (ருஎ)

2188. பேசவந்தானலமார்க்கமுள்ளாரினோர்பேதையுள்ளா
ரேசவந்தானலமோநிற்கெனவேகினன்விடம்பூ
வாசவந்தானலமார்குடமூக்கர்வயக்கிடினே
யோசவந்தானலவோவவன்றாழ்புருடோத்தமனே. (ருஅ)

2189. மனவருத்தத்தையடைந்தோம்புவியையடந்தையரைக்
கனவருத்தத்தைவிழைந்தேயொழிவதெக்காலமறை
யினவருத்தத்தைமுனிவருக்கோதுகும்பேசரின்பா
கனவருத்தத்தையொருபாகர்தாண்மலர்க்காணம்வைத்தே. ()

2190. ஆணவமாயமலம்பலநாளுமலைக்கப்பட்டேன்
பூணவமாயவிரங்கவெஞ்ஞான்றுபுவனமெல்லாங்
காணவமாயவனேயேச்செய்தாய்கும்பக்கண்ணுதலே
யேணவமாயவிவளுவுறுமெனவெண்ணலற்றே. (சுO)

2191. எண்ணம்பலவன்குடமூக்கிறைவனிசைப்பரிய
வண்ணம்பலவன்மனுப்பீடமங்களமாதுபங்கன்
விண்ணம்பலவன்முடியாளன்வெற்பினின்மேனியலாற்
கண்ணம்பலவன்மலர்க்குழலாயுயிர்காற்றுவதே. (சுக)

2192. காற்றருந்தும்பையராப்பூண்கும்பேசர்கடல்கிடக்கு
மேற்றருந்தும்பைதிரப்புவியார்கொன்றையீயுமெனப்
பாற்றருந்தும்பைமதற்கீந்தனர்பயிணைமெனு
மாற்றருந்தும்பையறுத்தெழுமாலென்மனப்பசுவே. (சுஉ)

2193. மனவிடையாமைவனேயுங்கும்பேசர்வனம்பயிலுஞ்
சினவிடையாமைதவிரெனவாண்டருள்செல்வர்வெற்பி
னனவிடையாமைவரக்கண்டிலஞ்சுற்றிநள்ளிருள்கூர்
கனவிடையாமையனேக்கண்டுங்கண்டிலங்கண்விழித்தே. ()

2194. கண்ணப்பரைவரையாதாண்டவர்கும்பக்கண்ணுதலார்
வண்ணப்பரைவரைமாதொருபாகர்வனச்சடைமேல்
விண்ணப்பரைவரைவெல்லாமெனினும்விழைந்தருளே
பண்ணப்பரைவரைநீழலில்வாழெங்கள்பண்ணவரே. (சுச)

2195. பண்ணஞ்சுமாறுபடச்செயுமாற்றம்பதுமமுகங்
கண்ணஞ்சுமாறுவராகுங்குழலிதழ்கன்னியிய
லெண்ணஞ்சுமாறுமொருநான்கிரண்டொன்றுமெய்தெழுத்தார்
மண்ணஞ்சுமாறுபுனேந்தார்கும்பேசர்வரையிடமே. (சுரு)

2196. வரையாரணியமகிழ்வார்கும்பேசர்மதலையொடு
விரையாரணியமலர்கலர்காணரும்வித்தகரா
திரையாரணியவர்க்கேயினிப்பார்தந்திருவருட்டேன்
றரையாரணியமமருவுவரவர்தாங்கொள்வரே. (சுசு)

2197. கொள்ளப்படாதுசிறுகாமமுமதுகொள்ளின்மத
னள்ளப்படாதுவிடுமோகும்பேசரணிமலர்த்தார்
கள்ளப்படாதுகதிரெனுமிந்துகைக்குமெனுங்கண்
டள்ளப்படாதுமலர்க்குழல்சோரத்தரைவிழுமே. (சுஎ)

2198. தரங்கப்பரவையெழுவிடநோக்கிச்சதுமுகன்மால்
குரங்கப்பரவையருளாலஃதுண்குழகர்புவி
யரங்கப்பரவைமுடித்தார்குடந்தையமலரன்பர்க்
கிரங்கப்பரவைபுகுத்தியுயர்த்தியெமைவைப்பரே. (சுஅ)

2199. வையம்படைத்தவரன்றூழ்கும்பேசன்மடங்கருமோ
தையம்படைத்ததிருமால்வடவரைத்தாதுமலர்க்
கையம்படைத்தகைவாகைவில்லான்பொற்கழற்றொழுவே
னையம்படைத்தகராச்சினக்கூற்றுவனண்ணினுமே. (சுகூ)

2200. நண்ணுதவரைநணுகாய்குடந்தைநகர்த்தளிவா
ழுண்ணுதவரையகலாய்மெய்ப்பாதியணங்குடையாய்
விண்ணுதவரைவிழிபறித்தாயுனைவிட்டுமற்றொன்
றெண்ணுதவரைநிழற்பாற்பயிலினுமென்மனமே. (எo)

2201. மனமடங்காதுபொறிவழிபோம்பத்திமார்க்கமியங்
கினமடங்காதுநெறிகாட்டவுங்கண்டிலமென்செய்வோ
மனமடங்காதுகுடைமுரசார்ப்பவரம்பையெலாங்
கனமடங்காதுகிழிக்குங்குடந்தையிற்கண்ணுதலே. (எக)

2202. கண்ணுதலத்தனைவண்குடமூக்கிற்கடவுளைநீர்
மண்ணுதலத்தனையீவானையாழின்வளம்புகழ்வீர்
பண்ணுதலத்தனையும்பழுதென்னுஞ்சொற்பாகனைப்ப
லெண்ணுதலத்தனையேததார்பிறப்புமற்றெப்பிறப்பே. (எஉ)

2203. பிறவியலைக்கவருந்துகின்றேனிற்பெறுவதற்கா
மறவியலைக்கவலாதுணரேனினையன்றியெவ
னுறவியலைக்கவரிசெய்குடந்தையொருவவண்டு
நறவியலைக்கவருங்கொன்றையாயிந்தஞான்றருளே. (எங)

2204. அரும்பாதகன்மத்தன்மாறுவெங்கோபத்தனுகமநூல்
விரும்பாதகன்மத்தன்யான்கும்பமேயவவிற்கழல
திரும்பாதகன்மத்தன்மானத்தருவிடஞ்சேர்களத்தே
வரும்பாதகன்மத்தன்பித்தனென்பேர்க்கொப்பவந்தருளே. ()

2205. வந்தித்தலையுந்துதித்தலையும்முனம்வைத்தலையு
நிந்தித்தலையுந்துகில்லேனுறுப்பொடுநீண்மகத்து
முந்தித்தலையுந்துமித்தார்தென்காற்றின்முறுக்கவிழ்பூக்
கந்தித்தலையுந்துநீர்க்குடமூக்கரென்கற்பிப்பரே. (எரு)

2206. கற்பனையத்தனையாதிகும்பேசனைக்காய்மலமா
மற்பனையத்தனையீயும்பிரானையடியவர்க்கே
பற்பனையத்தனைமாமயிலானைப்பண்பார்முகத்தோர்
பொற்பனையத்தனையின்றூனையன்றிப்புகழ்கிலமே. (எசு)

2207. புகழுமலத்தையெடுத்தொன்னலார்நிறம்போழ்தருமா
லகழுமலத்தையுடையவனுகவடிதொழுநா
தகழுமலத்தையனேத்துங்குடந்தைத்தலத்தவின்றே
திகழுமலத்தையுடையானெனவெற்சிறப்பிப்பையே. (எஎ)

2208. சிறந்தவருக்கன்மதியழனுட்டச்சிவன்றெளிய
வறந்தவருக்கன்றமையச்சொற்றுனறமாயதனே
மறந்தவருக்கன்பிலார்சேர்குடந்தைவரதன்முடி
யுறந்தவருக்கன்பரிந்தெனையாண்டனனுண்மைசொற்றே. ()

2209. உண்மையறுக்கமிகச்செயுமன்னையரோர்கிலராய்
வண்மையறுக்கமுயல்வார்கும்பேசமகிழ்ந்தெனைவந்
தண்மையறுக்கவுகரகள்ளூற்றதங்கனறுந்
திண்மையறுக்கவலாதின்பெணுமைநின்சீரருட்கே. (எசு)

2210. அருகாதவன்பகத்தைத்தெறுமென்றறிந்தாருக்கென்றுந்
திருகாதவன்பகத்தைத்தடிந்தானென்சிறுசொற்குந்தேந்
தருகாதவன்பகத்தைக்கும்வெஞ்சூலன்றண்கும்பத்தைச்சார்ந்
துருகாதவன்பகத்தைப்பெற்றுளாரிடருற்றவரே. (அO)

2211. உற்றவரையரைவண்கும்பநாதரையொண்புலித்தோல்
சுற்றவரையரையெண்ணரினங்கைத்துணரொடலை
வற்றவரையரைசூழிப்புனத்திலலைத்தனன்றோ
கற்றவரையரையிந்துவொப்பாநுதற்காரிகையே. (அக)

2212. காரியங்காதுசுடலஞ்சியத்தகுகானினறு
வேரியங்காதுவலைசெயமேற்றவழ்விண்ணைமக
தூரியங்காதுகுடந்தைப்பிரானைத்தொழாரினிள
நாரியங்காதுமென்றோரேதிலன்பினடந்தனளே. (அஉ)

2213. நடலையகற்றிநமைப்புகழ்கல்விநயப்பலென்று
சடலையகற்றியெனையாண்டுகும்பத்தருளினமர்
விடலையகற்றியருன்புனிற்றுவெனமேவுந்த
முடலையகற்றியுழல்வார்பரமதத்தூமர்களே. (அங)

2214. ஊமரும்பாவலராவார்வறியருமுத்தரநற்
றேமரும்பாவலராவாவினிச்செப்பவேண்டுவதென்
னுமரும்பாவலராவாசவன்றெழுநற்குடந்தைக்
காமரும்பாவலராவாரடிநினைக்கைதொழினே. (அச)

2215. தொழுதனையேற்றமருங்கும்பநாதனைச்சொன்மயல்பூண்
டழுதனையேற்றமருகத்தவனருள்வான்கொலெங்குங்
கெழுதனையேற்றமருவினரேகெழுமக்கொடுப்பான்
பழுதனையேற்றமருவர்தவேள்செயல்பண்ணலென்னே. (அரு)

2216. என்னுயகனைமகராலயஞ்சிறுத்தகண்ட
பொன்னுயகனையமுன்னங்குழைத்தபுராணமலர்
மின்னுயகனைவிடைசெய்தகும்பவிமலவென்று
பன்னுயகனையறுத்தின்பவீடெட ரநெஞ்சே. (அசு)

2217. படப்பாயலையம்பரம்விரித்தோன்ருெழும்பண்ணவர்தோம்
விடப்பாயலையம்பரவேற்றுக்கும்பவிமலர்வெற்பி
னடப்பாயலையம்புவிபோர்த்தனரண்ணருங்கான்
கடப்பாயலையம்பரக்கண்ணெடும்வைகிக்காலையிலே. (அஎ)

2218. காலையம்போருகமேகமுகங்குழல்கண்கவா
ழாலையம்போருகமேவாரைநோக்கபயன்பைதிரஞ்
சோலையம்போருகமேயதென்பாய்துயர்நீர்நொடியும்
வேலையம்போருகமேகும்பநாதனைமேவிலர்க்கே. (அஅ)

2219. மேவாதவரைவிழையார்கும்பேசவிமலர்வலி
தாவாதவரைவளைத்தாருருக்கண்டுதண்மதிகண்
டோவாதவரைவிடுத்தாரெவரெனுமோர்மதன
னுவாதவரைவளைப்பதென்னேவெனுமாயிழையே. (அகூ)

2220. ஆயத்தவரைமறந்தாளெனையுமறமறந்தாள்
சேயத்தவரையறையில்வெப்புந்தெளியாள்புரங்கண்
மாயத்தவரைவளைத்தகும்பேசர்வரையிலய
னேயத்தவரைமதித்தேகினுளென்னிரைவளையே. (கூ0)

2221. வளையவளையவரம்பார்செய்வேழம்வளைத்தனன்வே
ளிளையவளையவமேகொல்லுவானெவன்செய்வளின்பம்
விளையவளையவருளுங்கும்பேசவிரும்புமன்ப
ருளையவளையவயலுடையாயெங்களுத்தமனே. (கூக)

2222. மன்னவராகமதாணிவலாரிமலரயன்மான்
முன்னவராகமதித்துழலாங்குடமூக்கின்மணி
யன்னவராகமநூல்கொண்டறிவதறிந்தடங்கி
நன்னவராகமலரடிக்காட்செய்நசையினமே. (கூஉ)

2223. இன்னம்பரம்பரவாயவர்நேயவிருங்குடந்தை
நன்னம்பரம்பரவாயவனியைநடாத்தினவ
ருன்னம்பரம்பரவாயமன்சேர்முனென்ருேதுமின்வை
மன்னம்பரம்பரவாயகண்ணேடும்வந்தாளுவரே. (கூஙு)

2224. ஆளாயமைதலையெண்ணுவிருவரடிமுடிதேர்
கோளாயமைதலைவென்றுழல்வேங்கும்பகோணமமர்
காளாயமைதலைசாயப்பொலிகவின்ருேட்கருங்கண்
வாளாயமைதலையாகாதிடங்கொண்டவானவனே. (கூச)

2225. வானவரம்பரையாண்டாருலாக்கொண்டுமாண்டபத்தி
யானவரம்பரைதாங்குடமூக்கரடிமையுறின்
மோனவரம்பரையோடும்வந்தீபவர்மூன்றுதலைத்
தானவரம்பரையேத்தாரிருத்தலிற்சாதனன்றே. (சுரு)

2226. சாத்திரமோதியளவுணர்ந்தேமிருதன்மைபடப்
பாத்திரமோதியமென்பதனுலெவன்பன்னிரண்டு
சூத்திரமோதியமைந்துகும்பேசற்றொழுதுருகி
யேத்திரமோதியமண்ணீரிடரிரியீருண்மையே. (சுசு)

2227. உண்மையவாவியநாயேனுறும்வகையுற்றமலத்
திண்மையவாவியவென்றூளுநாளென்றுதேர்வரிய
நுண்மையவாவியசெவ்வியன்மேனிநுவலொருபாற்
பெண்மையவாவியதென்குடமூக்கிற்பெருந்தகையே. (சுஎ)

2228. தகைத்தலையாற்றுதிநேர்மலநாளுந்தகச்செயுந்தோ
முகைத்தலையாற்றுதியார்தொழவாழ்குடமூக்கிறைவா
நகைத்தலையாற்றுதிதாராக்கிளுயென்னலிபிறவி
யகைத்தலையாற்றுதிநின்வசத்தாக்கென்னறிவினையே. (சுஅ)

2229. வினையகலாமதியாப்பரமார்க்கவிழைவகற்று
மனையகலாமதியாதாங்குடந்தையனையிடத்தங்
கனையகலாமதியார்முடியாளமுக்க ண்ணென்றேத்
தினையகலாமதியார்க்குஞ்சமார்க்கஞ்செறிப்பதற்கே. (சுகூ)

2230. பத்திக்கணங்கணமேனும்விடாதுபடர்குடமூக்
குத்திக்கணங்கணந்தோமறநோக்கியுங்கும்பிட்டுய்வாங்
கத்திக்கணங்கணவென்னவொர்பானல்குகாரணனெம்
புத்திக்கணங்கணவப்பதித்தான்றன்பொற்பூவடியே. (க00)

திருக்குடந்தைத்திரிபந்தாதி முற்றிற்று.

## திருக்குடந்தைத்திரிபந்தாதியின்

# *சிறப்புப்பாயிரங்கள்.

இந்நூலாசிரியர்மாணாக்கராகிய

**சி. தியாகராசசெட்டியாரவர்களியற்றியது.**

கட்டளைக்கலித்துறை.

2231. தண்ணிய வெண்மதி சூடுகும் பேசன் றமிழ்க்குடந்தை
பண்ணிய புண்ணியம் போலமர் வானடிப் பத்திமையே
நண்ணிய தீஞ்சுவை யந்தாதி யொன்று நவின்றணிந்தா
னண்ணிய வான்புகழ் மீனாட்சி சுந்தர வாரியனே.

---

இந்நூலாசிரியர்மாணாக்கரும்

திருவனந்தபுரம், மகாராஜா காலேஜில்

தமிழ்ப்பண்டிதராக இருந்தவருமாகிய

கொட்டையூர்,

**சி. சாமிநாததேசிகரவர்களியற்றியவை.**

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

2232. சீர்கொண்ட சிதம்பரமால் செய்தவத்தின் மலைவிளக்கிற்
சிறக்கத் தோன்றிப்
பார்கொண்ட புகழ்முழுது மொருபோர்வை யெனப்போர்த்த
பண்பின் மிக்க
ஏர்கொண்ட மீனாட்சி சுந்தரவேள் குடந்தைநக
ரிறைவர்க் கீந்தான்
பேர்கொண்ட கவிஞரெலா மதித்தேத்தந் தாதிப்ர
பந்த மாதோ. (க)

2233. அப்பவந்தங் கருத்துரையோ டம்புவியோர் மகிழ்ந்திடவச்
சமைத்திட் டாலும்
ஒப்புயர்வி லாப்புலமை யப்புலவ ரேறுணர்த்த
வுணர்ந்தவ் வாறே

---

* இவை பழையபதிப்பைச் சார்ந்தவை; பதிப்பித்தகாலம் சென்ற விஷு-வருடம் ஆடி மீ.

திப்பியகன் னடைதெளிந்தோன் றிரிசிரா மலையுடையோன்
செப்ப மிக்கோன்
இப்புவியிற் புகழ்ப்பெரிய பெரியண்ணப் புலவனெனு
மியைபு ளோனே. (உ)

---

இந்நூலாசிரியர்மாணாக்கரும், கும்பகோணத்திலிருந்தவருமாகிய

திரிசிரபுரம்

### தி. க. பெரியண்ணபிள்ளையியற்றியது.

கட்டளைக்கலித்துறை.

2234. பூவிற் சிறந்த வளக்குட மூக்கமர் புங்கவனற்
றேவிற் சிறந்த வமுதகும் பேசன் றிருவடிக்கீழ்ப்
பாவிற் சிறந்த வந்தாதிச் சொன்மாலை பரிந்தணிந்தான்
நாவிற் சிறந்தவன் மீனாட்சி சுந்தர நங்குருவே.

---

இந்நூலாசிரியர்மாணாக்கராகிய

காரைக்கால்

### அ. சவேரிநாதபிள்ளையியற்றியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

2235. கோமேவு பொன்னகரை யின்னகராக் கிடுவளஞ்சால்
குடந்தை யீசற்
கேமேவு மந்தாதி நந்தாத வணியெனநன்
கிசைத்திட் டானால்
காமேவு கலைச்சலதி நிலையுணர்ந்தான் புகழ்க்கலைமேற்
கலையாக் கொண்டான்
றேமேவு சிரகிரிவாழ் மீனாட்சி சுந்தரதே
சிகனா மன்னோ. (க)

2236. அத்தகைய வாரியன்பால் வித்தைபயின் றிடுதீர
னளவில் சீரன்
உத்தமவண் புகழுடையான் றிரிசிரா மலையுடையா
னுவக்கு ஞான
தத்துவஞ்சால் பெரியண்ணச் சற்குணவா னப்பவந்தத்
தமிழ்க்கு மோலி
பத்தியுறச் சூட்டலெனக் கருத்தொடுநின் றொளிரவச்சிற்
பதிப்பித் தானால். (உ)

சிறப்புப்பாயிரங்கள் முற்றுப்பெற்றன.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவிடைமருதூர்த்திரிபந்தாதி.



## காப்பு.



### ஆண்டவிநாயகர்துதி.

2237. சிதவாரணங்குமுறுந்துறைமூழ்கித்திருமறையோ
ரிதவாரணங்குலவச்செய்யிடைமருதீசனென்றோ
மதவாரணங்குழலைபாகற்பாடுதற்காண்டபெரு
மதவாரணங்குவலயங்கொண்டாடும்வரந்தருமே.

### குருவணக்கம்.

2238. பெரும்புங்கவர்புகழ்கோமுத்திவாழ்சுப்பிரமணிய
வரும்புங்கவன்பதம்யான்றொழுவென்கையருட்குறியொண்
றிரும்புங்கரையவெடுத்தளித்தானதையேத்தல்செய்வேன்
கரும்புங்கனியுமெனவன்புசாருங்கதியுமுண்டே.

---

## நூல்.

2239. திருவருந்தாமரைமேலாருமாயசிறப்பினர்க
ளிருவருந்தாமரைநாட்டேடிக்காண்பிலிடைமருத
வொருவருந்தாமரைபோலுமுலாமலுவந்தெனையா
டருவருந்தாமரைவேண்டேனிதரசமையத்தரே. (க)

2240. சமையத்தவரையிகழாந்தற்போதந்தடிந்துசெம்பொ
னிமையத்தவரையெடுத்தவிடைமருதீச்சுரரை
யுமையத்தவரையரையோர்ந்துதம்மையுமோர்ந்தருள்பெற்
றமையத்தவரையடிமலர்தாழ்ந்துள்ளடங்குறினே. (உ)

2241. அடக்கந்தரத்தரைமேற்பயிலாமன்பருளடையா
மடக்கந்தரத்தரையென்றுழிநல்கவருகொடிய
விடக்கந்தரத்தரைமேவிடைமாமருதூரின்மென்புற்
றடக்கந்தரத்தரையெவ்வாறுநாஞ்சென்றுசார்வதுவே. (ங)

2242. சாராதவென்னைதமைவிழைந்தாரைவிண்டாங்குதவிற்
சோராதவென்னையிடைமருதீசர்தந்தூமனமு
மோராதவென்னையொருவேள்சமருமுடற்றியென்றுந்
தீராதவென்னைதரக்கரம்வீசுறுந்திங்கள்வந்தே. (ச)

2243. வந்தித்தவரையயன்மால்வந்திக்கவிண்வைப்பவரைச்
சிந்தித்தவரையிடைமருதீரென்றுந்தீயமதின்
முந்தித்தவரையெடுத்தீரென்றுந்திண்ணர்மொய்செருப்புக்
கந்தித்தவரையுடையீரென்றுஞ்சொலக்கற்றனமே. (ரு)

2244. கற்றனமாலையிடைமருதூரரைக்கம்பவென்று
முற்றனமாலையலாருங்கோமுத்தியும்பவென்றுஞ்
சொற்றனமாலைமின்னாரம்பராயென்றுஞ்சொற்றிடாண்
விற்றனமாலையிராவதவாழ்க்கையும்வேண்டலமே. (சு)

2245. வேண்டாதவரைவிழையாதவரைவிழைந்தெனுள்ளத்
தீண்டாதவரையிடைமருதீசரையென்றுமன்பே
பூண்டாதவரையரையக்கரைப்போந்துகொடி
தீண்டாதவரையுறைவாரையன்றியொர்தெய்வமுண்டே. (எ)

2246. உண்டலங்காரவனையாயத்தாரொடுமுற்றுச்செய்த
வண்டலங்காரவுற்றேனென்றுகூறியொர்மாரனைப்பா
னெண்டலங்காரமனையாரிடைமருதீசர்க்கொல்லாக்
கண்டலங்காரகனைப்போற்பறித்திவள்கைத்தந்ததே. (அ)

2247. தந்தவளக்கரிகொங்கையொண்பாம்பல்குல்சங்கங்கள
நந்தவளக்கரியன்றுதருநஞ்சநாட்டமிய
லந்தவளக்கரியான்கோலமாகியறமுயன்று
முந்தவளக்கரியானிடைமாமருதூர்முதலே. (கூ)

2248. முதலைப்பரவைதருநஞ்சமுண்டமுதல்வமண
மதலைப்பரவையிடைமருதூரவிண்வாழ்க்கைபெற்ற
சிதலைப்பரவையகந்தாழ்வன்மீகசிறிபனென்றும்
விதலைப்பரவையமூர்ந்தாதுகாத்தலுன்மெய்யருளே. (கo)

2249. மெய்யருளத்தனைநண்மருதூரனைவிணர்க்கெல்லாம்
பொய்யருளத்தனையியானைமாரிப்புயல்சமழ்க்கப்
பெய்யருளத்தனையும்முடையானைப்பெரிதெண்ணினேஞ்
செய்யருளத்தனையாருறுந்தீர்த்தருடேவனென்றே. (கக)

2250. தேவவருக்கம்பணிவானயனரிதீர்தருநாண்
மேவவருக்கவெலும்பணிவான்விழைகங்கைமங்கை
நோவவருக்கஞ்சடையேற்றினனனுதல்வதன
மேவவருக்கன்மதியழலான்வைப்பிடைமருதே. (கஉ)

2251. மருதவனத்தனிடைமுதலாங்கடைமன்னியவுள்
கருதவனத்தனரிமுதலோருங்கழிந்தபெரு
விருதவனத்தன்விண்மண்முடிந்தாலும்விளங்கவனெற்
கொருதவனத்தன்மையனெனவோதுமெம்மொண்ணுதலே.

2252. ஒண்ணுதலானைகரந்தீர்ந்தவர்க்கொளியைப்புரவு
பண்ணுதலானையுகைப்பானைத்தன்னுருப்பற்றுருவென்
றெண்ணுதலானையெனையாண்டவனையிடைமருதூர்க்
கண்ணுதலானைக்கருதார்பிறப்பிற்கரங்கணன்றே. (கச)

2253. கரமனகத்தையுறுநாயுமற்றெளிகால்கனக
வரமனகத்தைவளைத்தபிரானிடைமாமருதப்
புரமனகத்தையலர்பணிபூண்டுழல்புன்மையரப்
பரமனகத்தைமுழக்காரடைந்தபவத்தினுமே. (கரு)

2254. பவம்பலவாயினுமாகவெனக்குவிண்பற்றுகன
கவம்பலவாயினுநல்லவகற்றுவல்லாமுருடர்க்
குவம்பலவாயினுந்தீதில்லிடைமருதூர்குறுகுந்
தவம்பலவாயினுமென்றெருஞானந்தலைப்படினே. (கசு)

2255. தலையுமடியுமிசைகிழக்கார்பியருங்கப்பெற்றே
அலையுமடியுமதளாரிடைமருதார்நமனூர்
குலையுமடியுமென்றுதருள்வார்நஞ்சுகொண்டிலரே
னிலையுமடியும்படைப்புமடியுநெடுநிலத்தே. (கஎ)

2256. நிலங்காவலவென்றுமேதக்கவதமிழ்நேயத்தின்மிக்
கலங்காவலவென்றுபோலொளிர்வாய்கவியாய்கொடையின்
மலங்காவலவென்றுபாடாமலேயிடைமாமருதூர்த்
தலங்காவலவென்றுமுள்ளாயென்றீசனைச்சார்மின்களே. ()

2257. சாரலங்கற்றைநினைந்துசெலாவெனத்தானங்கிழி
வேரலங்கற்றையொளிக்கயிலாயத்தும்வேட்கைமிக
வாரலங்கற்றையலாள்பாகன்வாழ்மத்தியார்ச்சுனத்தை
யோரலங்கற்றையையோவறிதேபொழுதோட்டுவமே. (கக)

2258. ஓடுங்கனகமுமொன்றூர்கொண்மன்றுமுபரிகையென்
றூடுங்கனகமுஞ்சேரிடைமாமருதூரண்ணலைப்
பாடுங்கனகமுமுண்டாகுமின்பப்பயனென்பது
நீடுங்கனகமுமொவ்வாவருள்வந்துநேர்நிற்குமே. (உ0)

2259. நிற்குநடக்குமிருக்குநின்றுடனெறியனைத்துங்
கற்குநடக்கும்படியெவனென்றுகருதியுள்ளத்
தற்குநடக்குமிடைமருதூரவத்தாணியிருப்
பிற்குநடக்குமுலாவிற்குங்காமுற்றவென்மயிலே. (உக)

2260. என்னுவியன்னமணிமிடற்றானையிமையவர்தோய்
துன்னுவியன்னமலியிடைமாமருதூரனைச்சொ
ன்னுவியன்னமவென்குழல்பாகனைநாடினர்போன்
மன்னுவியன்னமடமாதர்மேவுமில்லைகளிலே, (உஉ)

2261. வையம்பரவவிடைமருதூர்வதிவார்வரைவாய்க்
கையம்பரவமெனக்கொடுவேடர்கலப்பருள
னையம்பரவலரிப்பானிற்பானெனினண்ணவனு
தையம்பரவவருதியித்தானந்தராதிபனே. (உங)

2262. தரங்கந்தருவல்விடமுணிடைமுதல்சார்மருதே
புரங்கந்தருவமறையுடைதோறில்லங்காடுபொலி
யரங்கந்தருவமைவாழ்க்கையர்யாருமடிமையென்னிற்
றிரங்கந்தருவகைசெய்யும்பிதாவிவர்செய்கைநன்றே. (உச)

2263. நன்றாவிருக்கினுந்தீதாவிருக்கினுநல்லருளே
யொன்றாவிருக்கினுமோராவிடைமருதூரன்செய்கை
யென்றாவிருக்கினும்பாலேயிகபரமெய்துங்குணக்
குன்றாவிருக்கினுமாலாதியரிதுகொள்வரிதே. (உரு)

2264. அரியரவிந்தன்மகவான்முதலியரஞ்சலிக்க
வரியரவிந்தம்புனைவாரிடைமருதூரர்வரைக்
குரியரவிந்தமடவாள்பொருட்டிங்ஙனுற்றுச்சொல்லும்
பெரியரவிந்தமுயலூனுந்தேனும்பெறுகைநன்றே. (உசா)

2265. பெற்றங்குலவவிடைமருதீசர்பிறங்குமறு
குற்றங்குலவக்கரங்குவித்தாளிவ்வொருபிழைக்காச்
சுற்றங்குலவமடமாதரம்பறுணியப்பொன்செ
யிற்றங்குலவவெளிப்பட்டுளாளென்னிளங்கொடியே. (உஎ)

2266. இளங்கொடியானவுமைபாகன்வாழுமிடைமருத
வளங்கொடியானஞ்செயேன்பூசநீர்த்துறைவாஞ்சைவையேன்
களங்கொடியானலேவேனையயோவென்னகன்மந்திரு
வுளங்கொடியானனினைத்ததென்னேவொன்றுமோர்கிலனே.

2267. ஓராதவனையிருட்புகுத்தானையுணர்தலில்லார்ச்
சாராதவனையொருபாகனைத்தங்கிடைமருதம்
பேராதவனைப்பெயருகென்றாலுமென்பேதைநெஞ்சந்
தீராதவனமயிலொடுவாழுந்திறனெவனே. (உகூ)

2268. திறப்பாவனையமனமோரனுத்துணைசெப்பலென்ன
மறப்பாவனையமனமிலேயோவிடைமாமருதுஞ்
சிறப்பாவனையமருதருந்தேவியுந்தேவிடையு
மறப்பாவனையக்கொடுவைகவென்னுளடக்கியதே. (௩௦)

2269. அடத்தருமன்றண்டங்கொண்டமாற்றியலக்கணைந்தும்
விடத்தருமன்றண்டங்கொண்டாடவந்துவிலக்குதுயில்
வடத்தருமன்றண்டமென்னிடைமாமருதூரவின்னு
நடத்தருமன்றண்டவுஞ்செய்யவேண்டுமிந்நாயினையே. (௩க)

2270. நாயகத்தன்மைகொளச்சிலர்நாணிலர்ஞாலமுற்று
மேயகத்தன்மைவிழியொருபாகனிடைமருத
னாயகத்தன்மைவிளக்கவிரங்கியரியகண்ட
வாயகத்தன்மையுறநஞ்சங்கொண்டவலிகண்டுமே. (௬௨)

2271. கண்டனங்கோலம்வருமாமுயல்வுங்கண்டங்கறுப்பும்
பெண்டனங்கோலமெய்வாழ்வுந்தலைப்பெருக்கத்தொடையு
முண்டனங்கோலமடமாரிடைமருதூருறையு
மண்டனங்கோலமலையானுமூவருளண்டனன்றே. (௬௩)

2272. அண்டத்திருப்புநரலையிலாகியடர்ந்தவிடங்
கண்டத்திருப்புமண்ணூதியபூதங்கலங்கிலய
மண்டத்திருப்புவதுசூலமேனண்மருதர்மதித்
துண்டத்திருப்புவனமான்றவனைத்துணைபவரே. (௬௪)

2273. துணைத்ததனத்தியொருபாகர்மாண்டுதொலைந்ததன்றோ
பணைத்ததனத்தியெனுன்வாள்கொடுத்தவன்பால்விருப்ப
ரணைத்ததனத்திரளென்னுவியார்நண்மருதரவா
வுணைத்ததனத்தினுழலாதருளெற்குதவுவரே. (௬௫)

2274. உதவாதவரையுபகாரரொன்றுங்கல்லாதவரு
சிதவாதவரைவெலுங்குரவோரெனவேதிறந்த
புதவாதவரைப்புகழாநும்வாயிதுபோக்கியொரீஇ
மதவாதவரையிடைமருதூரரைவாழ்த்துமினே. (௬௬)

2275. வாழ்த்தாதவாயுமிடைமருதூரர்மலரடிப்பாற்
றாழ்த்தாதவாயுந்தலையுமுன்னூத்தனிநெஞ்சுந்தள்ளூ
மூழ்த்தாதவாயுமறுப்பாங்குணமுமுலகத்தில்லாப்
பாழ்த்தாதவாயுமெனக்கேபிரமன்படைத்தனனே. (௬௭)

2276. படைப்பருந்தானையிடைமருதூரர்பதம்பணியார்
இடைப்பருந்தானைசிதராகக்கொண்டுகெழுமுசெல்வப்
புடைப்பருந்தானையர்வீடுகடோறும்புக்குண்டுபுலான்
முடைப்பருந்தானையுடம்போம்பிங்கைமொழிகுவரே. (௬௮)

2277. மொழிவருங்கூற்றநல்லார்தமைப்பேசிமுனிந்துசினங்
கொழிவருங்கூற்றமுமெண்ணார்பரிற்குழுகியுண்டே
யிழிவருங்கூறறமுமில்லாரிடைமருதீசனெந்தைக்
கொழிவருங்கூற்றமுதனீள்கருணைபெற்றுய்வதென்றே. (௬௯)

2278. என்றுவருந்துமதுதீர்ந்தின்பெய்தியிருப்பன்மிளிர்
மின்றுவருந்துதிவேணியிடைமருதூரன்விடைக்
குன்றுவருந்துகளிலானடியர்குழாங்குறுகி
நன்றுவருந்துபணியாற்றியுள்ளநலமடைந்தே. (௭௦)

2279. நல்லங்கமலேசிராப்பள்ளிகாஞ்சிநணுகுடந்தை
வல்லங்கமலேவயற்றில்லேவாழிடைமாமருதார்
சொல்லங்கமலேபவரெற்றூறைசையிலாண்டிலரே
லொல்லங்கமலேவறக்கோடிகொள்ளினுமுய்தியுண்டே. (சக)

2280. உய்தியவாயகுணமேலிடைமருதூர்ப்பரனே
எய்தியவாயவொருநானடைந்தனனென்றிருத்தல்
செய்தியவாயடையாத்தெருச்சூழ்ந்துதெரிசிமலர்
கொய்தியவாயமலன்றாள்புனைந்துகொண்டாடுநெஞ்சே. (சஉ)

2281. ஆட்டிற்குவந்தவிதியெவனோவன்றியானைகொன்றான்
ரேட்டிற்குவந்தமுறினுமருநகைதோன்றவெறி
நாட்டிற்குவந்தமையும்மன்றிலேறணகைதருமென்
பாட்டிற்குவந்தவிடைமருதூரன்பணிவரைக்கே. (சங)

2282. வரையாதவரைமகட்பேசல்வேட்டுவருகுநருக்
குரையாதவரைமறுத்தலொல்லாதின்னுமுத்தமர்க்குக்
கரையாதவரையிருட்காவொத்திடுங்காவலபொன்
னரையாதவரையிடைமருதூரரணிவரைக்கே. (சச)

2283. அணியாமருவியிடைமருதீசரமர்ந்தருளு
மணியாமருவிவழங்குங்குற்றாலவரைக்கணன்றித்
தணியாமருவியரைமெங்குண்டுதெரிற்கவரேங்
கணியாமருவியவாமருதாயிற்கவருதுமே. (சரு)

2284. கவராததில்லேகடவுளரேனுமென்கையதிதற்
குவராததில்லேயுளாருட்டுறவுளிலேகுறிகொள்
ளவராததில்லேயுளேன்கொளல்வேண்டுமென்றாரணங்கே
யுவராததில்லேயிடைமருதீசனொருவரைக்கே. (சசு)

2285. ஒருவரையூழியங்காதுசெய்வான்கொளுளங்குறித்தல்
மருவரையூழியலர்தாரச்சூழிடைமாமருதூ
ரிருவரையூழியராக்கொளுமீசனிறையவன
கருவரையூழியளவும்வசைக்கதிர்வேலருக்கே. (சஎ)

2286. வேலவன்றந்தையிடைமருதீசன்விரிந்தமறை
நாலவன்றந்தையுறழிடைபாகன்வெங்நஞ்சங்கண்டு
மாலவன்றந்தையறவுண்டுமாலவன்வாழச்செய்தான்
மூலவன்றந்தையெனக்குபதேசமொழிந்தனனே. (சஅ)

2287. மொழிமனங்காயமைதீர்தரநண்ணுபுமொய்த்தவலஞ்
சுழிமனங்காயமைமெய்பாதியென்றவன்சொற்றநன்னூல்
வழிமனங்காயமைதுஞ்சில்லிடைமருதூர்வசிப்பாங்
கழிமனங்காயமைசாராதுமுத்திகலப்புறுமே. (சகூ)

2288. கலந்தநலாரையிகழ்வார்வெம்போலிக்கவிபுகழ்வார்
குலந்தநலாரைப்பாரர்கொளவேங்கிமெய்திகூசிச்சில
ரலந்தநலாரையிடைமருதூரிலடைந்திறைஞ்சா
துலந்தநலாரையவிப்பாரிலுண்டுண்டுழலுவரே. (ருo)

2289. வரந்தந்தவரைபெறநாவல்வாய்வழங்கிச்சிலம்பிக்
குரந்தந்தவரையிடைமருதீசரையுன்னினர்போற்
சுரந்தந்தவரைவனர்ந்தந்தமாந்தழைதூமொழிக்கா
யிரந்தந்தவரைதெனவரைகாறுமிலங்கியதே. (ருக)

2290. இலங்கியவேதமுதனடுவீற்றுமிடைமருதுந்
துலங்கியவேதம்பலத்தொளிமுத்தலைத்தூக்கிரிவாய்க்
கலங்கியவேதநடுவெந்தயானைகடிந்தவர்க்கோ
மலங்கியவேதமுகிலினின்றூர்க்குமணமுரசே. (ருஉ)

2291. மணமதலையுமரவுமுள்ளாணிடைமாமருதூர்க்
கணமதலையும்பவந்தீர்க்கவைகுமுக்கட்கடவுள்
குணமதலையும்பலுஞ்சேயுமாகக்கொண்டான்மிடற்று
வணமதலையுந்தலின்றேலின்றுகுவர்மாலயனே. (ருங)

2292. அயனுகமஞ்சுநிகர்மேனிமாயவனுகமற்று
மியனுகமஞ்சுபடையானுமாகவிடைமருது
தயனுகமஞ்சுபெறத்துதித்துப்பணிந்தேதழைந்தார்
வியனுகமஞ்சுகுணத்தாய்ந்துவேண்டிலர்வீணர்களே. (ருச)

2293. வீணுவுடலமெடுத்தனன்யான்பெருவிண்ணவர்த
மேணுவுடலமிடைமருதீசரிகலினர்போற்
கோணுவுடலமதன்வருவான்மணிகொண்டலைக்கும்
பூணுவுடலமளியிற்றுயிலும்பொருந்திலதே. (ருரு)

2294. பொருந்தாதவரைதெனவாழ்புரமடுபுண்ணியர்நன்
கிருந்தாதவரைப்புரப்பாரிடைமருதூரிலிரு
ளருந்தாதவரைநிகர்வார்நந்துன்பமறிந்திலரால்
திருந்தாதவரைகொல்லோவவர்திண்ணியசிந்தனையே. (ருசு)

2295. சிந்தனையாதும்வறிதுசெலாமற்செலுத்திநமன்
வந்தனையாதுநரகதுதானெனென்முன்வாய்திரம்பக்
கந்தனையாதுநிகண்மருதூரவெனக்கலப்பிற்
பந்தனையாதுவிடுமோவிடாதவிப்பாரகத்தே. (ருஎ)

2296. பாராதரித்தவிடைமருதூரற்குப்பாரகமே
தேராதரித்தகலமரவாசெழுந்திங்களொடு
நீராதரித்தசடைமேலிருப்பென்றுநெட்டுயிர்ப்பாள்
பேராதரித்ததுயரமென்ஞான்றிவள்பேர்ப்பதுவே. (ருஅ)

2297. பேர்ப்பதுமத்தவிடைமருதூர்நல்குபெற்றியும்வெள்
ளேர்ப்பதுமத்தவருக்குமலமருளேனுமையர்
போர்ப்பதுமத்தகரித்தோலுடைபுலித்தோறெரிந்தும்
வார்ப்பதுமத்தவளேகிர்வாள்பெருமால்கொளுமே. (ருகூ)

2298. பெருமாலையனேயிடைமருதூர்க்குடிபேணுங்கொன்றைத்
திருமாலையனேயெண்ணுதவர்செல்லுஞ்செலவிற்செல்வி
கருமாலையனைவருநீப்பவேதிலொர்காளேபின்செ
றருமாலையனேவிலேயைகொள்வெய்யதனியிடமே. (சு௦)

2299. இடந்தந்தவளேநெடுமோன்முயன்றுமெய்தாக்கழற்கீழ்க்
கிடந்தந்தவளேயிடைமருதூர்கெழுமிற்கிடைக்கு
நடந்தந்தவளேவுடனேயணுகுநமனகலு
மடந்தந்தவளேயளமுண்டெம்மானைவழுத்துதுமே. (சுக)

2300. வழுத்துப்படருமிடைமருதூர்வதிவான்முளேமேற்
கொழுத்துப்படரும்வரவருங்கூற்றங்கொன்றானருளாம்
விழுத்துப்படரும்பெரியானவன்புகழ்மெய்யன்றியோர்
எழுத்துப்படருமதிப்புமுண்டாகுங்கொலெங்களுக்கே. (சு௨)

2301. எங்கடந்தேயவனிதாழிடைமருதெவ்வகைத்தன்
மங்கடந்தேயவழிமல்கவைகும்வல்லானணிற்கோ
பங்கடந்தேயவ்வினுண்மையுமோர்ந்துபகருமலச்
சங்கடந்தேயவொன்றுதொன்றுமுத்திதலேப்படுமே. (சுஙு)

2302. படமாசுணத்தையணிவாரிடைமருதிற்பயில்வார்
திடமாசுணத்தையலர்பாற்பயிக்கஞ்சென்றூர்தயிர்பாற்
குடமாசுணத்தையெடுத்தாட்டவாடுங்குழகருணு
விடமாசுணத்தையமைகுழையேலிவர்மேன்மையென்னே. ()

2303. என்னுயகனேயிடைமருதானையிமையவர்க்கு
முன்னுயகனேகடனஞ்சமுண்டமுதலவனே
மன்னுயகனேயவாங்கியவாவென்றுன்மாண்புதபத்
துன்னுயகனேதருமலமாசுந்துணிதருமே. (சுரு)

2304. துணிந்தாரையன்றிகழுங்கூடற்சோதிபொற்றாயமுடிக்
கணிந்தாரையன்றினரூரெரித்தான்கஞ்சக்கண்ணிற்றம்மை
யணிந்தாரையன்றிகிரியான்றொழுநன்மருதடைந்து
பணிந்தாரையன்றியெவர்காணுயர்வுபடைத்தவரே. (சுசு)

2305. படைத்தவராகமுழுதும்பசலேபகலருங்கே
ளுடைத்தவராகமுடையவராகவுளுற்றுங்கொலோ
புடைத்தவராகந்தொழுமிடைமாமருதூரர்பொற்று
ளிடைத்தவராகப்பணிந்தேத்தெடுப்பினவ்வேத்தலொன்றே.

2306. ஒன்றியம்பக்கவர்பாங்கவிடைமருதூரர்வெற்பே
நன்றியம்பக்கமயிலிடமாமியனஞ்சாமன்
வென்றியம்பக்கமனேதுறவேகொங்கைமென்மருங்கு
லென்றியம்பக்குடும்பசங்கியாசமிருட்கதிரே. (௬௮)

2307. கதிரங்கதிர்க்கும்பருப்பதத்தான்றிருக்காளத்தியா
னதிரங்கதிர்க்குமிடைமருதூரனடிகட்கன்பு
பிதிரங்கதிர்க்குமனமிருளாநம்பிணியைச்செய்தா
முதிரங்கதிர்க்குமுடம்பிலினிக்குறையொன்றிலையே. (௬௯)

2308. இலையுமலருமிடைமருதூரரையெய்தியங்கைத்
தலையுமலரும்பணியென்றுகொண்டுதவாதிறைப்பா
முலையுமலருநலராவர்கூற்றமுடன்றுவிடு
நிலையுமலருமுறவாவரியாவுநிரம்பிடுமே. (௭௦)

2309. நிரம்பாசமன்றுகுறுமூரலான்மதினீறுசெய்தார்
திரம்பாசமன்றுபெற்றுயென்றுதீர்த்தருள்செல்வர்வறுங்
கரம்பாசமன்றுகொளாவிடைமாமருதூரிடையா
யிரம்பாசமன்றுகளிலாநின்மெய்யுறுப்பியாவையுமே. (௭௧)

2310. யாவருமங்கைகுவிக்கவிடைமருதின்னமர்வார்
தேவருமங்கையருமாடுகொளத்திதெண்சுனைவாய்
மேவருமங்கைதெனத்தோன்றியீர்த்துவெளிவிடுத்தார்
தாவருமங்கைத்தவராயிவளுய்தரற்பொருட்டே. (௭௨)

2311. தரங்கந்தரங்கவெழுவிடமூண்சலசத்தவன்மா
லிரங்கந்தரங்கப்பெருந்தானந்தில்லையிடைமருதே
புரங்கந்தரங்கற்றமாதவர்வாழ்பொருப்புக்கயிலை
திரங்கந்தரங்கடுப்பாள்பாதியாளெங்கள்செல்வனுக்கே. (௭௩)

2312. செல்லத்தனையுமிவர்மாடத்தில்லைச்சிவக்கொழுந்தை
வில்லத்தனையுமணியரவத்துவிளங்கியைமால்
பல்லத்தனையுந்நிடைமருதப்பைங்கிளியையன்றி
நல்லத்தனையுமனையையுந்தேர்கிலநானிலத்தே. (௭௪)

2313. நிலாவையரவைமுடிக்கணிந்தார்நிகழ்சேரரரு
ளுலாவையரவைவியக்கும்புலமையரொண்மைவிழாக்
குலாவையரவைகிடைமருதூர்க்குறியைக்குணம
கலாவையரவையமாதேவகாவெனக்கற்றனமே. (௭௫)

2314. கற்றவருக்கங்கலவேனென்புன்சொலுங்கைக்கொளுவா
னற்றவருக்கங்கமோதியிடைமருதூரைநண்ண
லுற்றவருக்கங்குமுன்னிற்பவனிமையோர்க்கிறைவன்
வெற்றவருக்கமதலையிற்சூடும்விதியெண்ணினே. (௭௬)

2315. எண்ணத்திருந்தவிடைமருதூரெய்தியெல்லைதொழா
வெண்ணத்திருந்தகரத்தேக்கரனைவிரிந்தமனங்
கண்ணத்திருந்தவடியேன்பெற்றேன்கைவிடினுடனே
நண்ணத்திருந்தவறேலென்பன்யானுநலமுறவே. (எஎ)

2316. உறவனிகலனெனறவக்கூறதையுள்ளங்கொள்ளேன்
மறவனிகலனென்றேதுவரேயிடைமாமருத
வறவனிகலனரிசெய்தகோனடிக்கன்புறினப்
புலவனிகலனெனநினையாள்வள்பொறுப்புவைத்தே. (எஅ)

2317. பொறுத்தவளகத்தடமாரிடைமருதிற்புலிடை
சிறுத்தவளகத்திற்றேசாஞ்சிவன்பொற்சிலம்பிலிலா
மறுத்தவளகலைமாமதியுப்பக்கமன்னவென்பாற்
கறுத்தவளகத்திருள்வந்தகூடலென்காரிகையே. (எகூ)

2318. காரம்பரந்தவழாநிற்குங்கொன்றைசுளுலியபூ
ரம்பரந்தமுலையாயினும்வந்தடைந்திலரே
சீரம்பரந்தவிடைமருதூருறைசெல்வரெங்க
ளேரம்பரந்தமுருத்தந்தையார்வெற்பிறையவரே. (அ0)

2319. இறையவனையிடைமாமருதூரனையேய்ந்தசெம்பட்
டுறையவனையிடையாளொருபாகனையொண்முழக்க
நிறையவனையிடையாரணமார்தில்லைநேயனைநான்
மறையவனையிடையாதேழ்பிறப்பும்வணங்குதுமே. (அக)

2320. வண்டாரவாயைந்தருநிதிதேனுவுமானுங்கொல்லோ
வண்டாரவாயைதெனவடையாத்தில்லையாளியின்சொ
லொண்டாரவாயைமணந்திடைமாமருதூரினல்கும்
பண்டாரவாயைத்தகர்த்தானதுவுநம்பாக்கியமே. (அஉ)

2321. பாக்கியமாவதுவேறிலையென்றுபகரச்சொற்றேன்
வாக்கியமாவதுவையாள்பெருநலமாமுலையே
தேக்கியமாவதுசூழ்மத்தியார்ச்சுனஞ்சேருமிடம்
யோக்கியமாவதுலாவென்றுசேர்மினொருவனையே. (அங)

2322. ஒருவனையாறுவிழைவான்பிறரையுறுதபெருந்
திருவனையாறுதவிர்மத்தியார்ச்சுனத்தேவனுரு
வருவனையாறுமையாறுமெட்டானனைத்துக்கொள்பெருங்
கருவனையாறுசெயக்காப்பவனன்றிக்காப்பிலையே. (அச)

2323. காயாவகலவரிநீயினிதென்றுங்கஞ்சனெனு
நாமாவகலப்புவியளிப்பாயென்றுநல்கியபூர்
தேமாவகலவிடைமருதாவென்றுசிந்தைசெயி
னுமாவகலதுணிவன்றிக்கூற்றமடைவதற்கே. (அரு)

2324. அடையம்புயனைத்திருமாலைப்பாங்கரமைத்தகொன்றை
மிடையம்புயனையிடைமருதூரனைமேவுகிலா
ருடையம்புயனைகருமேனிக்கூற்றமுற்றாலதற்குக்
கடையம்புயனைதருமானமானிற்கலங்குவரே. (௮௬)

2325. கலங்கச்சினந்துநமன்றூதர்வந்தெனைக்கைக்கொளுங்கால்
விலங்கச்சினந்துமுதலியமார்ப்பவிடையில்வம்மோ
பலங்கச்சினந்துவர்முற்பூண்முலையொருபாகவலி
வலங்கச்சினந்துதியாரிடைமாமருதூர்வள்ளலே. (௮௭)

2326. வள்ளலைக்குங்குமக்கொங்கையள்பாகனைவாவியன்னப்
புள்ளலைக்குங்குலநீரிடைமாமருதூர்புகுந்தே
யுள்ளலைக்குங்குலுவொப்பப்புகையொழியாவின்பென
விள்ளலைக்குங்குவலாற்றருமோரிடம்வேறிலையே. (௮௮)

2327. வேறாகவந்தநமன்கூற்றுவாவில்லவாவளவா
வாறாகவந்தமடித்தான்றொழுமிடைமாமருதூர்ப்
பேறாகவந்தமுழுதும்பசுபதும்பணொருநீ
கூறாகவந்தவிரார்சிலமூடக்குருடர்களே. (௮௯)

2328. குருக்கத்திமாலைக்குழலாளிடைமருதூர்குறுகி
வெருக்கத்திமாலையுறநீள்விழியுறக்கண்டனளாங்
திருக்கத்திமாலையிராவதமஞ்சச்செயிர்த்தவரைப்
பெருக்கத்திமாலைவருமுனமார்த்துப்பிறங்கிடுமே. (௯௦)

2329. பிறங்கும்பரவையனலினுந்தோன்றுபெருவிடத்தா
லுறங்கும்பரவைபுரந்தானிடைமருதூரன்கலாத்
திறங்கும்பரவைமனைநடந்தானருளெய்ந்திலமேற்
கறங்கும்பரவையமேற்போஞ்சகடமுங்காண்பிறப்பே. (௯௧)

2330. பிறவானவரையிடைமருதூர்க்கன்புபேணலின்றி
யுறவானவரைவெண்ணீற்றினிலாசையொருங்கவிக்குந்
துறவானவரைமறந்தொழியாதுள்ளஞ்சூழுவனே
லறவானவரையுகைப்பார்க்கடிமையலனலனே. (௯௨)

2331. அல்லையப்பாகமற்றோர்நான்குமற்றுனையாருணர்வார்
நெல்லையப்பாகமழ்முல்லையப்பாதில்லைநேயவப்பா
சொல்லையப்பாகமுறாவெனுலாவுங்கொடியேவகல்
வில்லையப்பாகவமாலாவிடைமருதூர்விளக்கே. (௯௩)

2332. விளங்கவிதனையுணர்நெஞ்சமேசற்றுமெய்ம்மையிலே
னிளங்கவிதனையும்மேற்றபிரானிடைமாமருதத்
துளங்கவிதனையுமீவானவன்பாலுமைமலத்து
களங்கவிதனையுநீங்காதுகாக்குங்கருணையனே. (௯௪)

2333. கரியவரையைச்சுவணவரையைமெய்க்கண்ணிருத்தும்
பெரியவரையையொருபாகர்பேணுமிடைமருதந்
தெரியவரையைமுறிநமன்சேர்கிலன்செய்சினமும்
பொரியவரையைக்கடவானுமாவனிப்பூதலத்தே. (௯௫)

2334. பூத்தமருந்துதிசாலிடைமாமருதம்புகழேஞ்
சோத்தமருந்துதியென்னுமைபாதந்தொழுதுருகி
யேத்தமருந்துதிவாவுமிரவுமென்றெம்பரன்சீர்
யாத்தமருந்துதியென்றுமற்கூற்றமறைந்திலமே. (௯௬)

2335. அறையாகமனமமைந்ததெனக்கதனாலருளு
மறையாகமனந்தவோராதுபின்னும்வயங்குபத்தி
முறையாகமனல்லறிவாமுளைத்திடுமோவடுதண்
டுறையாகமனவிடைமருதூருறைசுந்தரனே. (௯௭)

2336. சுந்தரநந்தமிடைமருதார்தந்தைதூயரென்று
கந்தரநந்தந்தரஞ்சொலப்பெற்றகருணையினு
ரந்தரநந்தவிடமுண்டுளாரருள்வார்மலமா
செந்தரநந்தவுயர்சிவலோகமதெய்துவமே. (௯௮)

2337. துவரவலஞ்சுழியேரகமாப்பாடிகூதத்துறை
யிவரவலஞ்சுழிகோமுத்துகாழியலங்குதில்லை
கவரவலஞ்சுழியாரூருடனிரும்பூளைகண்டீர்
குவரவலஞ்சுழிகொள்ளிடைமாமருதன்கொளலே. (௯௯)

2338. கொள்ளவரையும்படருறுத்தாதின்பங்கூட்டியதா
னள்ளவரையும்பர்மேறசெய்மகாலிங்கநாதருல
கெள்ளவரையும்பழிபாவஞ்சறற்றிடைமருதர்
தெள்ளவரையுமொண்குஞ்சிதமாயதிருவடியே. (௧00)

திருவிடைமருதூர்த்திரிபந்தாதி முற்றிற்று.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பாலைவனப்பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

### விநாயகர் துதி.

2339. மாவார் நிறத்துத் துழாய்மாலு மணத்தா மரையா ளியுந் துதிக்கும், பாவார் பாலை வனப்பதிற்றுப் பத்தந் தாதி யுரைசெய்யப், பூவார்கடுக்கை புனைந்துமுத லெழுத்தின்பொருள்யா மனத்தெரிக்குங், காவார் கொடைக்கைக் களிற்றுமுகக் கடவுட் பெருமான் பதம்பணிவாம்.

## நூல்.

2340. பூவும் பழுத்த செழுங்கனியும் புனலும் விரையு மற்றுமுள
யாவுங் கொணர்ந்தின் னடிப்பூசை யியற்று துழலு மிழுதையே
னாவுந் துதிக்கப் பணித்தபணி நன்று பாலை வனத்தமர்வோய்
சேவுந் தனிமா மறைமாவுஞ் செலுத்தா நிற்குந் திறலோயே.

2341. துறலார் சூலப் படையுடையாய் செந்தா மரைக்கண் விடையுடையா, யறலார் கூந்தற் கருநெடுங்க ணருட்பார்ப் பதியார் பங்குடையா, யுறலார் பாலை வனமுடையா யுன்னைத் துதியா வெனைக் குறித்து, மறலார் கூற்றங் கடாமேலால் வருமுன் விடைமேல் வருவாயே. (௨)

2342. வருவாய் குறித்துப் பற்பலகா வதம்போ யுழலு மென் பாதம், பொருவாய தாணு மல்லாந் பொலியா லயஞ்சூழ் தரமுடமாம், வெருவா யெனவந் தருளுவதென் றுரையாய் விண்மணூர் தொழுதேத்த, வருவா யுருவா யருவுருவா யமர்ந்தாய் பாலை வனத்தரசே. (௩)

2343. அரசே கருணைப் பெருங்கடலே யறிவே யறிவி னுள் ளொளியே, புரசே மலர்ந்து பொலிவனமம்பொற பொலியு மேனிப் பெருந்தகையே, பரசே மலியும் பாலைவனப் பரமா பாத பங்கயத்து, விரசே யெனப்பே ரருள்புரியா விருந்தா னிதுவென் றுரையாயே. ()

2344. உரையே னினது பெருங்கீர்த்தி யுரைப்பார் கூட்டத் துற்றுமனங், கரையே னினது பாலைவனங் கண்டுவழிபா டியற்று தற்கு, விரையேன் சிறிது பொழுதேனும் வெய்ய மனமவெவ் விடய முறல, வரையேன் பயனென் பெறவுதித்தேன் வண்டார் கடுக்கை மலைவோயே. (௫)

2345. மலையா நிற்கும் வினையொருபால் வருத்தா நிற்கு மல மாயை, யுலையா நிற்கு முடற்சுமையற் றொன்றா நிற்கு மனமலமே,

னலையா நிற்கும் புனல்வளங்கூர்ந் தமையா நிற்கும் பணையுடுத்துத், தலையா நிற்கும் பாலைவனத் தனியா நிற்கும் பெருமானே. (சு)

2346. மானே பொருவு மதர்விழிக்கோ மளப்பார்ப் பதியார் மணவாளா, தேனே யமுதே செங்கரும்பே தெவிட்டாக் கனியே தேவர் கடங், கோனே பாலை வனத்தரசே குணங்கூ ருன்னைப் பரவாமல், யானே கழித னன்றுமோ யாரும் பரவி யின்புறவே. (எ)

2347. இன்பார் பொதுவுஞ் சிறப்புமென விசைத்த விருநூல் வழியிருநான், கன்பார் மனத்த ருகாம லடியேன் பிறவிக் கடல் வீழ்ந்து, துன்பார் தரநிற் கயலேனோ துதிக்கும் பாலை வனத்திறைவா, நன்பார் முதலெட் டுருவுடையாய் நல்லா யெனக்கு நவிலாயே. (அ)

2348. ஆயே யனைய பெருங்கருணை யரசே நின்னைப் புகழாமல், லேயே மலடு கறந்துகறந் திளைத்தே னிளைத்தே னென்செய்கேன், பாயே யரவாக் கொள்பவற்கும் பங்கே ருகற்கு மளப்பரியாய், வேயே யனதோ ளுமைபங்கா வினையேற் கழித்த லறனன்றே. (கூ)

2349. அன்றே மலத்து மறைப்புண்டு கிடந்தேற் கருளாற் றனுவாதி, நன்றே யருளி யுபகரித்தாய நானோ வந்த நலனறிவே, னென் றேபுரையு மணிமாட மிலங்கும் பாலை வனச்செம்பொற், குன்றே குன்றாப் பெருங்கருணைக் கோவே யாவா கொடியேனே. (கO)

வேறு.

2350. கொடியவ னெனினுங் குணமில னெனினுங் கோதறு நின் றிருவடிக்கே, யடியவ னிவனென் றெடுத்துரை செய்வா ரகவிடத் தவர்பொது நோக்கா, னெடியவன் றுதிக்கும் பாலையூர்ப் பரமா நீங்கரு மும்மலத் தோடு, கடியவன் பிறப்புங் களைந்துநீ சிறப்பிற் கரையுமா கடைக்கணித் தருளே. (கக)

2351. அருளெனப் படுவ தெவற்றினுஞ் சிறந்த ததுபெறுந் தகுதிய ரன்றி, யிருளெனப் படுவ துரிதராக் கொடிய விழுதையோ பெருந்தகு தியன்சொன், மருளெனப் படுவ தடைதராப் பாலை வனத்தமர் மாசிலா மணியே, பொருளெனப் படுவ கிரியை ஞானமுமாய்ப் பொலியுநின் பூங்கழற் றுணையே. (கஉ)

2352. துணையெனப் படுவ வுயிர்க்கள வரிய தொல்லைவெவ் வினைவரை துளைக்குங், கணையெனப் படுவ நீந்தரும் பிறவிக் கருங்கடல் கடப்பதற் கமைந்த, புணையெனப் படுவ கட்டுவீ டென்று புகன்றிடப் படுவவே தில்லை, யிணையெனப் படுவ பாலையூர்ப் பெருமா னிருபதத் தாமரை மலரே. (கரு)

2353. மலர்தலை யுலகிற் பொற்கொழுக் கொண்டு வரகினுக் குழுவது செய்வேன், பலர்புகழ் தருகற் றுவொரீஇக் கருங்கற் பசுவினைக் கறந்திடத் துணிவே, னலர்மதுப் பொழியும் பாலைமா வனத்தி லற்புத மெய்ப்பரஞ் சுடரே, கலர்கருத் தமையா நின்னருளென்றே கடையனேன் கைக்கொளு ளுரையே. (கச)

2354. உரைபல செறித்துக் கவிபல புனைந்து முன்னடிக் கன் பிலே யென்னின், விரைபடு தகையின் மலரெனப் படுமே மேதகு மருளமை யாத, புரையில்செய் தவமு மொப்பெனப் படுமே புண்ணி யப் பாலையூர் விளங்க, வரைமக ளொடுநன் கமருவா யதனால் வயங்கு மன் படியனேற் கருளே. (கரு)

2355. அருந்தவர் புகழும் பாலையா ரணியத் தடைதரா ரடங் கலர் நடுங்கப், பெருந்தவர் சிலையாக் கொண்டநம் பெருமான் பேணி வாழ் பெருந்தளி புகுதா, ரிருந்தவர் பூமேற் கிடந்தவர் கடன்மே லெய் தரு மெய்யெழி லேக்கார்,வருந்தவர் கலக்க வலரொடுங் கலந்து மறு குவார் பிறப்பென்ன பிறப்பே. (கசு)

2356. பிறந்தவர் தமக்குப் பெருந்திரு வாரூர் பேசரும் பத்தி மை யியற்றச், சிறந்தவர் தமக்குச் சிறந்தகா ளத்தி திகழ்தரி சனஞ் செய்து பவஞ்ச, மறந்தவர் தமக்குச் சிதம்பர நினைக்கு மாண்பினர் தமக்கண்ணு மலையே, யிறந்தவர் தமக்குக் காசியே யெம்மா னிருந்த ருள் பாலைமா வனமே. (கஎ)

2357. வனம்பயின் மார்பிற் கவுத்துவம் புனைவார் மாமலர்த் தவி சின்மே லிருப்பா, ரினம்பயி லமரர் குழாந்தலை வணங்க விருந்தரு நீழலில் வாழ்வா, ரணம்பயில் கழனி புடையுடுத் தோங்க வளப்பிலா வளமமைந் தறவோர், மனம்பயில் பாலை வனச்சிவ பரனை வழிபடு தொண்டுபூண் டவரே. (கஅ)

2358. பூணுத லமைந்த பத்திய ருடலம் பொருளுயிர் மூன் றையு நல்கிப், பேணுத லமைந்த வுறுதியர் சலியாப் பெருநிலை யாள ருக் கல்லான், மாணுத லமைந்த வயன்றுறுங் கயல்பாய் வளமலி பாலையூ ரமர்ந்த, கோணுத லமைந்த பிறைமுடிக் கணிந்த குருமணி வெளிப்படா தன்றே. (கசு)

2359. அன்றுமுப் புரமு நீறெழ நகைத்தா னலடி யமர்ந்தொரு நால்வர், நன்றுமெய்ப் பொருளைத் தெளிதர வளித்தா னடுங்கவெங் கூற்றினை யுதைத்தான், றுன்றுமெய் யன்பிற் பணிபவர் முடித்தாள் சூட்டினான் பாலைமா வனமு, மன்றுமெம் முளமும் வதிபவன் றன் மை வகுக்கினோர் தன்மைய தன்றே. (உ0)

வேறு.

2360. அன்றினார் புரங்கண் மூன்று மழலெழச் செற்ற செம்பொன்
மன்றினார் வளங்கூர் பாலை வனத்தினார் வயங்கு வெள்ளிக்
குன்றினா ரொருவெள் ளேற்றுக் கொடியினா ரடிகள் போற்றி
யொன்றினா ரன்றி மற்றோ ருடலெடுத் ததிற்பே றென்னே.

2361. என்னரும் வணங்கி யேத்த வெழிற்பெரும் பாலை யூர்வாழ்
பன்னரும் புகழார் தெய்வப் பார்ப்பதி மணாளர் பாத
முன்னரு மனத்த ரெல்லா முன்னரு மனைய ரோர்
பின்னரு மனைய ராகிற் பிழைப்பதெக் காலத் தேயோ. (உஉ)

2362. ஓதரு மூலக மெல்லா முறுமுறை யுதவ வல்ல
நாதரு மவற்றை யெல்லா நலமுறப் புரக்க வல்ல
நீதரு மவற்றை யெல்லா நிலையறத் துடைக்க வல்ல
போதரும் பாலை யூர்வாழ் புண்ணியப் புராண னாரே. (உ௩.)

2363. ஆரணி சடையான் பாலை வனத்தம ரண்ண லன்று
காரணி கொடிய நஞ்சங் கண்டத்துக் கொண்டி லானேற்
றாரணி படைப்பா ரெங்கே தகவது புரப்பா ரெங்கே
போரணி வயிர வாட்கைப் புலவரெங் கேசெல் வாரே. (உச)

2364. வாரியே கருணைக் கென்றும் வான்றருக் குலமே வள்ளற்
பாரியே யென்று லோபர் பாற்கவி புனைவீர் வெற்பு
நாரியே யிடப்பால் வைத்த பாலையூர் நம்மான் சீர்த்தி
மூரியே யன்பிற் பாடின் முற்றுறு தொன்றுண் டாமோ. ()

2365. மோகமாஞ் சலதி மூழ்கி முழுவினைச் சுறுவாய்ப் பட்டுப்
பாகமாம் பத்தி யின்றிப் பாவியாய் வருந்த லாமோ
வேகமே யொருபான் மேவு மின்பமே பல்லு யிர்க்கும்
போகமே பொருளே பாலை நிழலமர் புனித வாழ்வே. (உசு)

2366. வாழ்வினைக் கருதி மோக வலையகப் பட்டு முட்டாத்
தாழ்வினை யியற்றி யோவாப் பழிதலை சுமக்க லுற்ற
வூழ்வினை யொழிந்து நின்பே ரருளெனு மொப்பில் வாரி
யாழ்வினை யுறுத லென்று பாலையூ ரமர்ந்த தேவே. (உஎ)

2367. தேவரு மகத்து வேந்துந் திருமல ரவனு மாலும்
யாவருங் காண வொண்ணு வெந்தையே யெனினு மன்பிற்
பூவரும் பிலையே தேனும் புரிந்திட்டுப் போற்றி னப்போழ்
தேவரும் வெளிப்பட் டம்மா பாலையூ ரிருக்குங் கோவே. ()

2368. கோவண மறையாக் கொண்ட குழகனைக் கொழும்ப லாசப்
பூவண மேனி யானைப் பூவண நகரி னானைத்
தீவண மாக மூன்றூர் செற்றசே வகனை நாளுங்
காவணப் பாலை யானைக் காண்பவர் கடவு ளாரே. (உகூ)

2369. கடல்விளிம் புடுத்த ஞாலங் காவல்செய் சிறப்பும் வேண்டார்
மடல்கெழு கற்ப தாரு வானுல கிருப்பும் வேண்டார்
விடலரு மயன்மால் போக வெள்ளத்துந் துளைய வேண்டா
ரடல்கெழு பாலை யண்ண லடியவர்க் கடிமை யாரே. (௩௦)

வேறு.

2370. ஆரேறு முடிப்பாலை யடிப்பிரான் கழல்பரசுஞ்
சீரேறு பெருஞ்சிறப்பிற் செம்மையர்கள் யாரெனினுங்
காரேறு மகவானுங் கடிக்கமலத் தனுந்துளவத்
தாரேறு புயத்தானுந் தொழத்தக்க தன்மையரே. (௩க)

2371. மையாரு மிடற்றிறைவர் வண்பாலை வனத்துறைவார்
பொய்யாருஞ் சிறுமருங்குற் புண்ணியப்பார்ப் பதிபாகர்
மெய்யாரு மடிக்கன்பு மேவாதார் யாரெனினுங்
கையாரும் பலனாகக் கொள்வர்கருங் கடுநரகே. (௩௨)

2372. நரகத்தே புகவிரும்பி நானிலமங் கையராசை
விரகத்தே மாழாந்து விழுமனமே யிதுகேட்டி
யுரகத்தே சவிர்முடியா ரூழியிறு தியுமுடியார்
கரகத்தே மலர்க்கையார் பாலைவனங் கருதுவையே. (௩௩)

2373. கருந்தாது நிகராமென் கடைப்பட்ட மனங்குழையா
தருந்தாது நலஞ்சிறிது மந்தோவித் திறத்துளது
திருந்தாது போமென்னிற் செய்வதெவன் பாலைவனத்
திருந்தாது மலர்க்கொன்றைச் சடாமோலி யிறையோனே. ()

2374. இறையானும் பிறர்க்குரிமை யில்லாதெல் லாம்படைக்கு
மறையானும் புரவுபுரி மாண்பானு முழுதழிக்குந்
துறையானு மயக்கநிகத் தறுப்பானு மறுப்பானும்
பொறையானு நிறையானும் பொலிபாலை வனத்தானே. (௩௫)

2375. வனத்தானை யூர்தருமை வனத்தானை யாடரங்காம்
வனத்தானை யன்பருட்ப வனத்தானை முடிக்கணிந்த
வனத்தானை யூழியுட்பெள வனத்தானைப் பணிசெயும்பு
வனத்தானை நெடும்பாலை வனத்தானைத் தொழனலமே. ()

2376. நலமென்று நயமென்று நாப்பயின்ற கலையென்றுங்
குலமென்றுங் குடியென்றுங் கோத்திரசூத் திரமென்று
மலமென்று மருளென்று மன்பென்று மமைந்தபெரும்
புலமென்றும் பாலைவனப் புண்ணியனை வணங்கார்க்கே. (௩௭)

2377. வணங்காது நின்னடியை மறவாது பயில்பவரோ
டிணங்காது பாலைவனத் தெய்தாது நின்விரதத்
துணங்காது சற்றுமன முருகாது திரிகின்ற
குணங்காது மூடருமென் பெறுவரோ குணக்குன்றே. ()

2378. குன்றாத வனமுலையோர் கூறுடையா யூழியினும்
பொன்றாத பெருஞ்சிறப்பிற் பொலிபாலை வனத்தபசே
யொன்றாத மனங்கொடுனை யொன்றியதொத் தேத்திடினுங்
கன்றாத பேரருளிற் கலக்குமா றெண்ணுகவே. (௩௯)

2379. எண்ணுதலிற் குறையில்லை யெண்ணியவா றென்றாலும்
பண்ணுதரு னிலையிந்தப் பாவிசெய லிதுவானா
லொண்ணுதலோர் பான்மருவ வொண்பாலை வனத்தமருங்
கண்ணுதலே நின்னருளிற் கலப்பதுமெவ் வாறுரையே. (௪௰)

வேறு.

2380. உரைசெ யுந்திற மொன்றுள தன்னதை யுரைத்திடக்
கேணெஞ்சே, வரைசெ யுஞ்சிலை யாளனைப் பாலையூர் வள்ளலை வழுத்

தாதே, விரைசெ யுங்குழன் மின்னனார் மயற்குழி வீழ்ந்துதாழ்ந் துழல்வாயேற், புரைசெ யும்பவத் துயரங்கிற் கழியுமோ புணருத லிலையின்பே. (சக)

2381. இன்ப மேயெனப் பவஞ்சவாழ்க் கையிற்சுழன் றெய்த் திளைத் திடுநெஞ்சே, துன்ப மேயலாற் கண்டது வேறெவன் சொற் றியா லதுதீர்ந்து, நன்ப தாம்புய மாலவற் கரியவ னம்மனோர்க் கெளி யன்கா, ணன்ப வாவுபூம் பாலையூ ரண்ணலை யவாய்த்தொழு தமர் வாயே. (ச௨)

2382. வாயி னாற்பல வுரைப்பரப் படிநிலை வாய்த்துமன் னுத லில்லை, யாயி னாற்பல னென்னைநன் னெஞ்சமே யஃதொரீஇ யன் புற்று, வேயி னாற்பெற லரும்பசுந் தோட்கயன் மிளிரரி மதர்ச்செங் கட், டாயி னாற்பொலி பாகனைப் பாலையூர் சார்ந்துபோற் றுதனன்றே.

2383. நன்று சற்றுநீ ரெண்ணிலீர் மனைமுத லவில்பெருங் குடும் பத்தே, சென்று மற்றதி லழுந்துவீ ரென்செய்வீர் திருகுவெஞ் சினங்கொண்டு, கொன்று செற்றிடக் கூற்றுவன் குறுகிடிற் குவல யத் துள்ளீர்கா, ளென்று சென்றுநம் பாலையூ ரிறைவனை யேத்துபு தொழுவீரே. (சச)

2384. வீரம் வேண்டினு மனைமக வேண்டினும் விளைநில முத லாய, சாரம் வேண்டினு முலகெலாம் படைத்திடு தலைமைவேண் டினுங் காவற்,பாரம் வேண்டினும் பற்றறுத் துயர்கதி படர்தரு மதற் காய, வீரம் வேண்டினும் பாலையூ ரிறைவனை யேத்துபு தொழினாமே.

2385. தொழுதெ ழுந்துகை தலைமிசைக் குவித்திலை சொற் பதங் கடந்தாயென், றழுது நெஞ்சநெக் குருகிலை யடியரை யஞ்சலித் தடைகில்லை, பழுது தீர்வதெப் படிமன மேபெரும் பாலைமா வன மேய, முழுது மாகிய தம்பிரான் றிருவருண் முயங்குத லெவ்வாறே.

2386. எவ்வ மேபடு மலமுதன் மூன்றுமற் றின்பவீ டுறுபாக் குப், பவ்வ நீர்விட முண்டகண் டனைப்பெரும் பாலைமா வனத்தா னைச்,செவ்வ னேபணிந் திறைஞ்சிலை யென்செய்தாய் தீயவெங் கொடு நெஞ்சே, கவ்வ நோயுடற் பரஞ்சுமந் தலைதலிற் கதிவழி பெறலாமே.

2387. மேவ லார்புரத் தழலெழ நகைத்தவன் விடையுடைப் பெருமான்பொன், காவ லாற்கொரு தோழமை யுற்றவன்காமத கன ஞ்செய்தோன், பாவ லார்புகழ் பாலைமா வனத்தவன் பணிபவர் தமக் கென்று, மேவ லார்மக வானயன் மாலென விசைத்திடு மிதுமெய்யே.

2388. மெய்யை மெய்யெனக் காணல ருண்மையா மெய்பையே யுறக்காண்பார், பொய்யை யாதரிப் பார்முக நோக்குறார் பொலிவுமே தகப்பூண்பார், பையை மேவராப் பாயலான் முதலிய பலர்திருக் குறிக் கொள்ளார், செய்யை மேவுநம் பாலைவ னேசனைச் சிந்திக்கு மடியாரே.

2389. அடிய ராதலே நன்றுநன் றுள்ளமே யரவஞ்சு மிடியேற் றுக், கொடிய ராதலிற் றமரை மலரணைக் கோளரா தலிற்செங்க, ணெடிய ராதலி னிவ்வுரை கடைப்பிடி நிலவிய வெண்ணீற்றுப், பொடிய ராவலிற் சூழ்பெரும் பாலையூர்ப் புண்ணிய னடியார்க்கே. ()

வேறு.

2390. அடியர் காணமன் றுடிடு மழகர்வெண் ணீற்றுப்
பொடியர் வாளராக் குலந்தபு புட்கொடி பொறுக்குங்
கொடியர் பாலைமா வனத்தவர் திருவருள் குறியாக்
கடிய ரெவ்வலி கொடுங்கடப் பார்பவக் கடலே. (ருக)

2391. கடல கத்தெழுந் தெங்கணும் பரந்தவெங் கடுவின்
மிடல டக்கிய கண்டரைத் தொண்டரை வெருட்டு
மடல் படைத்தவெங் கூற்றினைப் பாற்றிய வவரை
யுடல் படைத்தபே றுறத்துதி பாலையூ ருற்றே. (ருஉ)

2392. உற்ற செஞ்சடை யொருபுற மொருபுறங் கருமை
செற்ற பூங்குழ லொருபுறங் கழன்மணிச் சிலம்பு
பொற்ற வோர்புறம் புலியத ளொருபுறம் பட்டு
மற்ற வோர்புறம் பாலையூர் மருவுமெம் மாற்கே. (ருங)

2393. மாலு நான்முகத் தொருவனும் விலங்குரு வாய்த்துங்
கோலும் வார்சிறைப் புள்ளுரு வாகியுங் குணங்கள்
சாலுந் தாண்முடி கண்டில ராயினுந் தனித்தோர்க்
காலும் பாலையா னெத்திறத் தினுமெளி யவனே. (ருச)

2394. எளிய னன்பருக் கெங்கணு மாய்நிறைந் தியலு
மொளியன் மாமறை முடியம ரொப்பிலா னந்தக்
களியன் பாலையூர்க் கருத்தன்மா நடம்பயில் பரமா
வெளிய னென்பவ ரிம்மையே யடைவது வீடே. (ருரு)

2395. வீடு வேண்டினு மெய்துவர் விண்ணகம் புரக்கும்
பீடு வேண்டினு மெய்துவர் தனதனிற் பிறங்கு
மாடு வேண்டினு மெய்துவ ரயனரி வாழ்க்கைப்
பாடு வேண்டினு மெய்துவர் பாலையாற் பணிந்தே. (ருசு)

2396. பணியுந் திங்களும் பயின்றமர் செஞ்சடைப் பரமா
வணியும் பாலையூ ரண்ணலே யன்றொரு துரும்பாற்
றணிய வானவர் வலிதனை யளந்தநா ணின்னைத்
துணிய வோர்ந்திலர் யாங்களோ வுணர்பவர் சொல்லே. (ருஎ)

2397. சொல்லத் தக்கது நின்புக ழுடிமையிற் றுனைந்து
புல்லத் தக்கது நின்கழல் புண்ணிய மிகையால்
வெல்லத் தக்கது மலர்திருப் பாலையூர் விமலா
கொல்லத் தக்கது கூற்றினை நலங்குறிப் பவரே. (ருஅ)

2398. குறிகு ணங்கடந் தவனிரா மயன்குணக் குன்ற
னறிவன் ஞாதுரு ஞானமே யங்களற் றருத
மறிவி னன்னிலை யாளருக் கொளிமய மானோன்
பொறிவி ளங்கிய பாலையூர் மருவுமற் புதனே. (ருசு)

2399. ஆற்ப வாழ்வினை மதியன்மி னலரகத் தமர்வான்
கற்ப மெண்ணில கண்டமர் பாலையூர்க் கடவுள்
சொற்ப தங்கடந் தவன்றுணை யடிமலர் பற்றி
நிற்ப வுண்டுகா ணிகரினின் மலப்பெரு வாழ்வே. (சுO)

வே று.

2400. வாழ வேண்டிய வையகத் தீர்வினை
போழ வேண்டினும் புந்திகொள் ளீரின்பத்
தாழ வேண்டினு மையன்பொற் பாலையூர்
சூழ வேண்டித் தொழுந்து நடமினே. (சுக)

2401. நடலை வாழ்வினை நம்புத லோவுமின்
சுடலை சேர்ந்து சுமந்த வுடற்பொறை
யடலை யாமுனம் பாலை யடுத்துவேல்
விடலை தாதையைப் போற்றி விழைமினே. (சுஉ)

2402. விழையு மால்வரை மெல்லிய லாளொடுந்
தழையு மால்விடை மேல்வரு தம்பிரான்
குழையும் பூவுங்கொள் பாலையைக் கூடிலோ
ருழையு மொண்மழு வுந்தரு முண்மையே. (சுங)

2403. உண்மை யோதி யுளங்குளிர் வித்திடியால்
வெண்மை மேய வினையுடை யேனுக்குப்
பெண்மை மேவிய பாகப் பெருந்தகாய்
வண்மை மேவிய பாலை வனத்தனே. (சுச)

2404. வனத்தை மேவி வளிமுத லுண்டுடற்
கனத்தை வாட்டுத லாற்பயன் காண்பதெ
னனத்தை யார்வயற் பாலையூ ரண்ணல்டான்
மனத்தை வைத்துண் டுடுப்பினு மாட்சியே. (சுரு)

2405. மாட்சி மேவிய பாலை வனம்பர
னாட்சி யென்ப தறிந்தன மாங்குறீஇக்
காட்சி யெய்திக் கலந்து களிப்புறப்
பூட்சி வீழுமுன் போதுவம் வாநெஞ்சே. (சுசு)

2406. நெஞ்ச மேயிது கேணி னினைப்பெலாம்
வஞ்ச மேயது யாற்றி வயறொறு
மஞ்ச மேபொலி பாலை யரன்கழ
றஞ்ச மேகொள் சமானநிற் கிலலையே. (சுஎ)

2407. இல்லை யுண்டென் றிசைக்கு மமணர்முற்
றொல்லை வல்வினை யாளர்தஞ் சொல்லொரீஇ

யல்லை நேர்களத் தண்ணறன் பாலையூர்
நல்லை மேவினெஞ் சேநலம் வாய்க்குமே. (சஅ)

2408. வாயுங் கையு மனமும் படைத்தனை
தாயுந் தந்தையு மாய சதாசிவ
னேயும் பாலை யிடந்துதி செய்பணி
தோயு மாறெண் ணுயிரே துலங்கவே. (சக)

2409. வேத நான்கும் விரித்துரை செய்யவும்
போதம் வேறு படுநர் புலைமதஞ்
சாத மென்றடை யோர்தமை பாலையூர்
நாத னாரடித் தொண்டு நயப்பமே. (எ0)

வே று.

2410. நயமலி பாலையூர் நங்கள் கோன்மறை
வயமலி பரிமிசை வருபி ரானடிக்
குயமலி பத்திசெ யுண்மை யாளரே
சயமலி முத்தியிற் சார்ந்து வாழ்வரே. (எக)

2411. வரைவரு பார்ப்பதி மணாளன் பாலையூர்
விரைவரு கொன்றையான் விழையும் பாதமே
திரைவரு பவக்கடற் செறிந்து வீழ்ந்தவர்
கரைவரு தகைமரக் கலமென் பாரரோ. (எஉ)

2412. அரவணி சடையனை யாழி யேந்துபு
புரவணி விடையனைப் புகுந்து பாலையூ
ருரவணி மதியினன் குவப்பப் போற்றுவா
ரிரவணி கருமல மெமக்கு மாற்றுவார். (எங)

2413. வாரணி வனமுலை மங்கை பங்கனை
நீரணி பாலையூர் நிமல னைக்கடற்
காரணி கண்டனைக் கைதொ ழாதவ
ரேரணி யுடல்பொறை யிந்தப் பூமிக்கே. (எச)

2414. மிக்கவர் பாலையூர் விமலர் மார்பணி
யக்கவர் புகழ்வரும் பாத மூடர்துன்
பக்கவர் குழிவிழாப் பதைப்ப ரின்பத்துப்
புக்கவ ருய்வதெப் போது தேரினே. (எரு)

2415. தேர்வரு கதிர்மதி செய்ய தீயெனப்
பேர்தரு கண்ணினார் பிறக்கும் பாலையூ
ரேர்தரு மாபணிந் திறைஞ்சி னென்செய்வான்
கார்தரு கடாம்மிசைக் கடுகுங் காலனே. (எசு)

2416. காலனைக் காய்ந்தசெங் காலனைத்திரி
சூலனைப் பாலைமா வனத்துத் தோன்றலைச்
சீலனை யன்றயன் தெரிப்ப வைகிய
வாலனை யறிதரா ரறிவென் னுவதே. (எஎ)

2417. ஆவது மழிவது மவன தாணையென்
றேவருங் கொள்ளநீ யிகலி யென்செய்தாய்
மாவது மலர்செறி பாலை வள்ளரு
ளோவரு மன்பூண் டுறத்தொ ழாய்நெஞ்சே. (எஅ)

2418. சேவுறத் திகழ்பவன் றிகழும் பாலையூர்
மேவுறத் திருவரும் விஞ்சை மேவிடும்
பாவுறச் செறிமல பந்த நீங்கிடுந்
தேவுறற் கருங்கதிச் செல்வ மெய்துமே. (எகூ)

2419. எய்த்தனம் பாலையூ ரிறைவற் கன்புளம்
வைத்தன மும்மல வாழ்க்கை யார்தமைப்
புய்த்தனம் வேறொரு புந்தி செய்கிலோ
முய்த்தன மனமவ னொளிசெய் தாள்கட்கே. (அ0)

வேறு.

2420. தாள தாமரை தழையும் பாலையூர்க்
காள கண்டனார் கரும லந்தவிர்த்
தாள வல்லர்நா மங்கு மேவியே
நீள வின்பமார் தருவ நெஞ்சமே. (அக)

2421. மேலை நாள்வினை முழுதும் வீதரு
மாலை வார்குழன் மடந்தை பாகனைச்
சோலை சூழ்குயிற் றுழனி யோங்கிடும்
பாலை யூரிடைப் படர்ந்து போற்றினே. (அஉ)

2422. போற்றி வானவர் துதிக்கும் புண்ணிய
னூற்றி யைந்தொழி லருண டாத்துவோன்
பாற்றி வெவ்வினை பாலை வாழ்பவ
னீற்றி நம்வினை நிரப்பு மின்பமே. (அங)

2423. இன்பம் வேண்டுமே லீது செய்ம்மினோ
துன்ப மேவிமா ழாந்து சோர்தரீ
ரென்ப ருதபூ ணிறைவன் பாலையூ
ரன்ப ரோடினி தடைந்து வாழ்மே. (அச)

2424. வாழி பாலையூர் வைகு மெம்பிரான்
சூழி யானைத்தோல் போர்த்த சுந்தரன்
வீழி வாயுமை பங்கன் மென்கழற்
றாழி னல்லதை யின்பஞ் சாருமே. (அரு)

2425. சாரு வாகமே யாதி சார்ந்துளீர்
தேரு மாறிலா தலைதல் செவ்வியே
யோரும் பாலையூ ரொருவன் றாளிணை
கூரு மன்பராய்க் குறிக்கொண் டேய்ம்மினே. (அசு)

2426. மின்னை நேர்தரத் தோன்றி வீந்திடு
மென்னை யிவ்வுட லெண்ணி லீர்கொலோ
பொன்னை நேர்சடைப் புனிதன் பாலையூ
ரன்னை பாகனை யடைத னன்மையே. (அஎ)

2427. ஏல வார்குழ லிறைவி பாகனைக்
கால காலனைக் காள கண்டனைப்
பால வாள்விழிப் பாலை யூரனை
யேல வேத்துவார்க் கில்லை துன்பமே. (அஅ)

2428. துன்ன லார்புரஞ் சுட்ட வெம்பிரான்
பன்ன லாருளம் பதித ராதவ
னன்ன மார்வயற் பாலை யண்ணலைச்
சொன்ன பேரெலாந் தூய முத்தரே. (அகூ)

2429. முத்த ராகுவர் மூட ராயவுன்
மத்த ரோடளாம் வாஞ்சை நீத்தெழீஇப்
பத்தர் தம்பிரான் பாலை யூர்புகுஞ்
சித்த ராவரேற் றேவர் போற்றவே. (கூ0)

வேறு.

2430. போற்றுநெடு மாலயனுக் கரியானைப் பெரியானைப் புவன மெல்லாஞ், சாற்றுபவன் முதலாய வரியபெய ருடையானைத் தரணி வேத, மாற்றுநெடுந் தேர்பரியாக் கொண்டானைப் பாலைவனத் தமர்ந்து பல்பூ,வேற்றுமவர்க் கருள்சுரக்கு மவனையெண்ணு தித்தனைநா ளிரித் தோம் வீணே. (கூக)

2431. வீணாக நாள்பலவுங் கழித்தனம்பொற் பாலையூர் விரும் பிச் சார்ந்து, நீணாகம் பூண்டானைக் கண்டிறைஞ்சி யவனடியார் நேயத் தாழ்ந்து, கோணாக மொழிதரத்தீர்ந் தேன்றுபணி விடைபுரிந்து குல வப் போற்ரு, தாணாகப் பிறந்தத்னுக் கிவ்வுலகி லெப்பயனை யடைந் தாம் யாமே. (கூ௨)

2432. அடையானை யுரிபோர்த்த பெருமானை யொருமானை யங்கை யேந்துஞ், சடையானை வெஞ்சூலப் படையானை யுலகமெனத் தக்க யாவு, முடையானை நெடும்பாலை வனத்தானை யெழுவிடையு மொருங்கு சாய்த்த, விடையானைப் பூசிக்கப் பெற்றவரே நற்றவர் மேன் மேலுந் தானே. (கூ௩)

2433. மேலாய பொன்னுலகிற் சுதன்மையடைந் தைந்தருவின் விழையு நீழற், பாலாய வரியணைமே லிருந்திடிய முதலனைத்தும் பணி யின் மேவ, மாலாய வரமகளிர் போகநுகர்ந் திருப்பதினும் வளமை மேய, தாலாய பாலைவனத் தழகனடி தொழுதைய மருந்தும் பேறே.

2134. அருந்தவம்பன் னூளும்வன மாதியதேத் திருந்தூணி யமைந்தா ரேனும், பெருந்தவமா மறைபலகற் றூரெனினு மகம்புரிந்த

பெரிய ரோனு, மிருந்தவர்சூழ் பாலைவனத் தெம்மானுக் கன்பினரா யெழில் விபூதி,பொருந்தவவிர் கண்மணிபூ ணுநவரே லவரெமக்கோர் பொருளா காரே. (கூரு)

2435. பொருளாகக் கொலைகளவு முதலியபா தகம்புரியும் புலைய ரேனும், வெருளாகத் தொழுமுதலாப் பலநோயு மீடழிக்கும் வீண ரேனு,மிருளாகத் திலர்பரவு பாலைவனப் பெருமானுக் கென்றுந்தீராத், தெருளாகப் புரியன்ப ரெனினவரே நமையாளுந் தேவ ரன்றே. (கூசு)

2436. அன்றுமதி லொருமூன்று மழலாட நகைத்தனைக் கரி தோ னாயேற், றுன்றுகொடு மலமூன்றுந் துகளாக நகைத்திடுதல் சொல் லாய் வஞ்சக்,கன்றுகொடு கனியுகுத்தோன் காணுத பாலைவனக் கடவு ளேறே, மன்றுமறை முடியுநிறை வளரொளியே பெருங்கருணை வாழ்க்கைக் கோவே. (கூஎ)

2437. கோவேநின் புகழ்பாடேன் பாடுவார் கூட்டத்துங் குறுகே னெங்க, டேவேயென் றுனைத்துதித்துன் றிருவடிசேர்ந் தவரடியுஞ் சேவித் தேத்தே, னேவேபோன் றொளிர்விழியார் மயலலையின் மூழ் கிடுவ தென்று மென்றாற், பூவேசெய் பாலைவனப் புண்ணியா வுய்யு நெறி புகலு வாயே. (கூஅ)

2438. வாயினுற் பலபுகல்வோம் புகன்றவழி யேநடக்கை மறந்தோ மிவ்வா, றாயினு மினிச்செயலென் னஞ்சேலென் றிரங்கியினி தருள வேண்டும், வேயினுற் புரிபசுந்தோ ளுமைபாகா விடைப்பாகா விண் ணந் தோய்ந்து, காயினுற் பொலிபாலை வனத்திறைவா கடவுளர்தங் கடவு ளானே. (கூகூ)

2439. ஆனேறு கொடியுயர்த்தாய் திருப்பாலை வனத்தரசே யடி யார் வாழ, மீனேறு கடலுலகி னெடுங்கருணை மழைபொழியு மேக மானுய்,மானேறு கரதலத்தா யெனக்கடங்காப் பெருவாழ்வும் வானுஞ் சூழுங், கானேறு பெருங்கதியு நெடியமால் காணுநின் கமலப் பூவே.()

பாலைவனப்பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.

---

## *சிறப்புப்பாயிரம்.

2440. அருள்பழுத்த சிவபெருமான் பரபோக மன்பர்தமக் களிப்போ னஞ்சின், கருள்பழுத்த மிடற்றான்பா லைப்பதிற்றுப் பத் தந்தா தியினைக் கல்லா, விருள்பழுத்த மனத்தினரை யெவ்வறிவு முடையரென வியற்றுந் தூய்மைத், தெருள்பழுத்த மீனாட்சி சுந்த ரனா வலனினிது செப்பி னானே.

---

* இதனை இயற்றியவர்பெயர் தெரியவில்லை.

சிவமயம்.

# *திருவூறைப்பதிற்றுப்பத்தந்தாதி.



அழகியவிநாயகர் துதி.

2441. செய்ய முகிலின் மெய்யனயன் றெரிய வரிய பெரியா னென், னையன் வளர்தென் றிருவூறை யந்தா தியையன் பாவுரைக்க, கையன் பரைவிட் டகலாத நால்வாய் முக்க ணிரண்டிணையோர், கை யன் மதத்த னழகியநங் கயமா முகத்த னடிதொழுவாம்.

---

## நூல்.

2442. பூமா திருக்கு மணிமார்பன் புயநா லிணையன் புருகூ தன், நாமா றுறவே வழுத்தூறை நகர்வாழ் நம்பா நாறிதழித், தாமா னினது தாட்குமலர் சாத்திப் பிறவிக் கடனீந்த, ஆமா றிதுவென் றறி யேனை யாண்டாய் காண்டற் கரியானே. (க)

2443. அரிய திதுவென் றணிமாத ராசை வலைப்பட் டுழல் வதுவும், பரிய பிறவிக் கருங்கடலிற் பற்றும் வினையாட் டுடையது வும், இரிய வருடந் தெனையாண்டா யெந்தா யூறைக் கிறையவனே, கரியவரியஞ் சலிக்குநுதற் கண்ணு மற்றூ றெண்ணமின்றே. (உ)

2444. எண்ணம் பலவா வுளத்தினடைந் திருந்தே நின்பாற் பொருந்தாத, திண்ணன் கொடிய னுறைலுந் திருச்சே வடிதந் தாண் டருள்வாய்,வண்ணந் துகளூர் வயலூறை வாணுவுமைக்குமணவாளா, விண்ணந் தரர்கள் பணிந்தேத்தும் விமலா வேத மெய்ப்பொருளே.()

2445. மெய்யா வரவப் பணியாவெள் விடையா சூலப் படை தாங்குங், கையா வூறைக் கிறைவாமுக் கண்ணு வண்ணு நண்ணு மருள், செய்யா விதமென் னுடோறுந் தேடித் தேடித் திகைத்துருகி, யையா வப்பா வெனக்கூவி யலறித் திரியு மடியேற்கே. (ச)

2546. அடியு முடியு மாலயனு லறிய வரிய பெருமானே, துடி யுங் கொடியும் புரையுமிடைத் தோகை பங்கா செழுமலருங், கடியுங் குடிகொ ளூறையுளாய் கயற்கண் மடவார் மயற்கண்மிகப், படியுங் கொடிய னீடேறப் பாரா யருட்கண் பரம்பொருளே. (ரு)

2447. பொருந்தார் புரமூன் றெரித்தோனே பொன்னூர் சடை யெம் புண்ணியனே, இருந்தா ரிதழிப் புயத்தானே யென்னு வினுக்கி ரதத்தேனே, முருந்தார் நகைபங் குடைமுக்கண் முதல்வா வூறைக்

---

* ஊறை - ஊற்றத்தூர்; ஊட்டத்தூரென வழங்கும்.

இறைவாவிப், பெருந்தா ரணியிற் பிறதெய்வம் பேணே னினக்கே தொண்டனே. (சு)

2448. தொண்டார் புகினு மவர்க்கின்பஞ் சுரக்கு ஞானப் பெருமானைத், தண்டா ரிதழிப் புயத்தானைச் சண்டன் பதற வுதைத்தானை, வண்டா ராத்தி முடியானை மழுக்கை யுடையென் னப்பனைமண், உண்டார் காண்டற் கரியானை யூறை நகரிற் கண்டேனே. (எ)

2449. கண்டே னூறை தனின்ஞானங் கனிந்த கனியைக் கண்டு மிக,வுண்டேன் பரமா நந்தநற வுண்டு தெவிட்டி யுளமகிழ்ச்சி, கொண்டேன் கொண்டு மெய்சிலிர்த்தேன் கூறற் கரிய பேறுபெற்றேன், விண்டேன்கொண்ட வினையையினி வேண்டே னேனைத் தேவரையே.

2450. தேவாநின்னை யன்றியொரு தெய்வ மெண்ணேன் கரங் குவியேன், நாவாற் றுதியேன் றலைவணங்கே னாட்டஞ் செய்யே னன்றாகக், காவா ரூறைக் கிறைவாமுக் கண்ணா வண்ணா கமலநறும், பூவா யிரங்கொண் டரிபணியப் போரா ழியைமுன் னளித்தோனே.()

2451. அளிக்கும் புறுபங் கயப்பொகுட்டி னளிந்த தேமாங் கனியுடைந்து, துளிக்கும் பிரசம் பெருகிவய மூறும் பாய்ந்து விளைசெந் நெல், களிக்குங் கமுக மீப்பாய்ந்து காட்டு மூறைக் கிறைவவெனுட், பளிக்கு மான நினதடிகள் பதுப்பா யுரகப் பணியானே. (க0)

வேறு.

2452. பணிகின் றேனிலை நாத்தழும் புறநினைப் பலகவி யாற் பாடத், துணிகின் றேனிலை தீவினை தொலைக்கநின் றொண்டரிற் றொண்டாகத், தணிகின் றேனிலை யுள்ளநெக் குருகியுன் றாள்களி னறும்பூக்கொண், டணிகின் றேனிலை யெங்ஙன முய்குவே னரதன புரத்தானே. (கக)

2453. புரம டங்கமுன் வென்றவ னூறைவாழ் புண்ணியப் பெருஞ்செல்வன்,சிரம டங்கலுஞ் செஞ்சடைக் காட்டினன் றிரண்ட தூண் டனிற்றோன்று, நரம டங்கலை யுடல்வகிர்ந் தாண்டவ னுயிினுங் கடையேனை, யுரம டங்கனைந் தாண்டுகொண் டானிதை யொக்கு மூதிய மென்னே. (கஉ)

2454. என்ன வோதியுங் கொள்கிலாய் மடநெஞ்சே யினி யொன்று சொலக்கேளா, யன்ன வூர்தியன் மான்முத லோர்க்கரு மரதன புரத்தம்மான், கன்னன் மென்மொழிக் கன்னியோர் கூறுடைக் கடவுளென் றொருகானீ, சொன்ன காலையிற் சொலற்கரும் பெரும்பதந் தோன்றுமஃ துணர்வாயே. (கங)

2455. உணத்த காவிட முண்டகண் டனைவள ரூறையம் பதியானைப், பணந்த ராப்பணி யுடையனை விடையனைப் பால்புரை நீற்றானை, மணத்த கொன்றையந் தாரனை வாழ்த்தியன் புறுவர் யாரெனுந் தேவ, கணத்த ரிந்திரன் மாலயன் முதற்சுரர் கைதொழுஞ் சுரர்தாமே.

2456. சுரக ணத்தவர் சூழ்தரக் கற்பக நீழலிற் சுடரோங்கு, மாத னத்திரு லமைத்தசிங் காதனத் தரம்பையர் நடங்கண்டு, கரத லத்திரு னிதிசொரிந் துறைதரு செல்வமுங் கருதேன்யான், உரகக் கச்சுளா யூறையா யுன்னடித் தொழும்பினி லுளத்தேனே. (கரு)

2457. உளத்தி லுன்னுத லொன்றுவாய் பன்னுத லொன்றதா யுழல்வேனைக், களத்தி னஞ்சணி யையநின் றிருண்டரிற் கலப்பதெந் நாடேமா, துளத்தின் மந்திபாய்ந் தக்கனி பறித்துவிண் டொருகழுங் கெனவோச்சு, வளத்தின் விஞ்சிய வூறைவாழ் நாயகா வானவர் பெருமானே. (கசா)

2458. பெருகு காதலங் கடல்விழுந் தறிவெனும் பெரியவங் கழுங்கைவிட், டுருகு நெஞ்சனாய் வினைச்சுற வுண்ணவூ னுடல்சுமந் துழல்வேற்குக்,குருகு மூத்தியர் கண்ணிழுன் மீனெனக் கொத்துதண் பணைச்செந்நெல், அருகு சென்றன மடையுறு மூறைவா னையனே யருள்வாயே. (கள)

2459. அருள்சு ரந்தெழு வாரியே யன்பருக் கமுதமே யெனதுள் ளந், தெருள்சி றந்திட வூற்றெடுத் தாநந்தந் தித்திக்குஞ் செழுந்தே னே, மருள்க டந்தவர் சூழ்தரு மூறைவாழ் மாசிலா மணியேசென், றிருள்வ ணங்குறு மோதிபங் குடையவா வென்னையாட் கொண் டானே. (கஅ)

2460. கொண்ட லேதரு வேமத னேயெனக் குணமில்வன் மடர்பாற் போய்ப், பண்ட மீகுவை யெனக்கவி பலபல பாடிடுங் கவி ஞோர்காள், தொண்டர் சூழ்தரு மூறையம் பதிவளர் சுந்தரப் பெரு மானை, யண்டர் நாதனைப் பாடிவீ ரினியுமக் காநந்த முடைத்தாமே ()

2461. உடைந்து போய்மட மாதருக் கனற்றலை யுறுமெழு கென வாடி,யிடைந்து தேம்பிடு நெஞ்சமே யூறைவா ழீசர்க்குப் பெருவாரி, கடைந்து வானவ ரமுதுண விடமுண்ட கண்டர்க்குத் தொண்டாகி, யடைந்து வாழ்த்துவை யாடுவை பாடுவை யழிவிலாப் பதமுண்டே.

வே று.

2462. உண்டனை விடத்தை வேங்கை யுரித்தனை புயங்க மெல் லாந், கொண்டனை பணியா மேருக் குனித்தனை கொடியோர் தீமை, விண்டனை பெரிதா வெண்ணி விட்டதோ கருத்தென் பொய்யாந், தொண்டனை மெய்ய னாக்கல் சோலைசூ ழூறை யானே. (உக)

2463. ஊறிய தன்பவ் வன்பா லுருகிய துள்ள மங்கு, மாறிய மலங்கண் மாற மாய்ந்தது பிறவி யின்பம், ஏறிய வகையென் சொல் வேனென் செய்தே னிருந்து வாயாற், கூறிய துண்டவ் வூறைக் கோ திலா மணியைத் தானே. (உஉ)

2464. தானவா ரிழியத் தோன்றுந் தறுகண்வெந் தோற்றோல் போர்த்த, ஞானவா ரிதியே யூறை யுகருறை தேவ வெற்பு, மானவா

வுற்ற பாகம் வழங்கிய முதல்வா நாயேன், ஆனவா றெழுக வைத்தா யையவீ தருமையாமே. (உ௩)

2465. மையுறு கருங்கண் வேய்த்தோண் மணிநகைத் துவர்த்த செவ்வாய்ப், பையுறு மல்குற் றேன்சொற் பாவைய ரென்ன வேங் கிப், பொய்யுறு முளத்தி னேனைப் புரந்தரு ளரம்பை சூழ்ந்த, செய் யுறு மூறை வாழுந் தேவனே தேவ தேவே. (உ௪)

2466. தேவரு மவரு நாகச் சிறையரிந் தவனுஞ் செய்ய, பூவரு மயனு மாலும் புகலரும் பாட லோடு, மாவரும் பியநல் லூறை வாண நின் செவிக்கு நாயேன், நாவரும் பயனில் புன்மைப் பாடலு நண்ணு மன்றே. (உ௫)

2467. நண்ணுத லில்லேங் கூவி நாடுத லில்லே முள்ளத்,தெண் ணுத லில்லேஞ் சற்று மியம்புத லில்லேம் பூசை, பண்ணுத லில்லே மெங்கள் பரகதி காட்டு வானெங், கண்ணுத லூறை வாழுங் கடவு ளர் பெருமா னெஞ்சே. (உ௬)

2468. மானமர் நோக்கி பாகன் மழவிடை நடாத்து மெங்கோன், கானமர் பொழில்சூ ழூறைக் கடவுளுக் கடிய ராவார், தேனமர் மல ராள் கேள்வன் றிசைமுகன் றேவர்க் கெட்டா, வானம ரின்ப வீட் டில் வைகுவ துண்மை யாமே. (உ௭)

2469. உண்டுவந் தலங்கல் சூடி யுறவென மடவார் பால்வீழ்ந், தெண்டுவந் தனைய ராகி யிருக்கின்றீ ரினிவெம் பாசங், கொண்டுவந் தணைவாற் கென்னோ கூறுவீ ரூறை யானைக்,கண்டுவந் தனைசெய் தேத் திக் கழலிணை துணைக்கொள் வீரே. (உ௮)

2670. துணையரி தோன்றுங் காலைத் தொண்டனேற் குன்பொற் பாதங்,கணையரி மேரு வில்லாக் கடுவரி நாணுக் கொண்டாய், பிணையரி பரந்த நாட்டப் பெண்ணொரு பாகா வின்புற் றணையரி வையைமேற் சூடி யரதன புரத்து ளானே. (உ௯)

2471. உள்ளநைந் துருகேன் பாடே னுன்னியக் கரமைந் தோ தேன்,கள்ளம்விண் டினதாள பூண்டு கதியுறேன் மதியார் கொன்றை, வெள்ளநின் றுறையும் வேணி விமலனே யூறை வாழ்வே, பள்ளநஞ் சுண்ட கண்டா பதம்பெற வருட்கண் பாரே. (௩௦)

வேறு.

2472. பார மேரு வைக்குழைத் தெடுத் தறிந்து பத்தருட், டூர மான வெண்மனங் குழைத்தெ டுத்த தூயவ, ஞர மேவு வாரி சத்தி ணுரை சேரு மூறையான, சீர வாணி பாக னேக னுகர் தேவர் தேவனே. (௩௧)

2473. தேவ னேநி னக்குறுந் தொழும்பரிற்சி றந்திலேன், பாவ னேப ழிக்குளேன தாதலிற்ப சுங்கழைக, காவ னேக முற்ற வூறை

காவல்கொண்ட வப்பனின், னேவ னேரெ னக்கு மற்ற தில்லையில்லை யில்லையே. (க உ)

2474. இல்லை யுன்க ழற்க ணன்றி யெற்கு வேறி ருப்புடற், கல்லை யன்றெ டுத்து வில்லெ னக்கு னித்த காவலா, வல்லை யம்பு யப்பொ குட்டை மத்த கத்தை யெத்தியே, வெல்லை கொண்ட கொங்கை பங்க வேத வூறை நாதனே. (கக)

2475. நாத னேவி டத்தை யுண்ட நம்ப னேசெவ் வம்புயப், பாத னேபொ ருப்பு வல்லி பங்க னேக ரங்களால், வேத னேமி யத்த னஞ்ச லிக்கு மூறை மெய்யனே, தீத னேக முற்ற தற்று னைத்தெ ரிந்து கொண்டனே. (கச)

2476. கொண்ட லொத்த கண்டனைக் கொலைப்பு ரத்தர் சண்ட னைப், பண்ட விற்கை யத்த னைப்பொய் பாறு மூறை நித்தனைக், கண் டருத்தி கொண்ட வன்க ழற்ச ரண்க ளுக்கியான், றெண்ட னிட் டிருந்த போது தேய்ந்து சென்ம மாய்ந்தவே. (கரு)

2477. மாய னந்த னன்றெ ரிந்து தேட நின்ற வன்வன, வேய நேக முற்ற தேவ வெற்ப னூறை யற்புதன், தூய னந்த மாதி யற்ற சோதி வஞ்ச லந்தரத், தீய னந்த வைத்த தேவ னென்னு ளத்தி ருப் பனே. (கசா)

2478. இருப்பு வன்ம னத்தி னேனி யம்பி டுந்த ரத்ததோ, கருப்பு மென்சி லைக்கை யானை வென்று நின்ற காரணன், பொருப்பு நன்சி லைக்கை யாள னூறை மேவு புண்ணியன், கருப்பு ணர்ந்து யான லைந்தி டாது காட்சி செய்ததே. (கஎ)

2479. செய்யி லம்பு யப்பொ குட்டை முட்டை யென்று சிந் தியா, வெய்த னஞ்சி றைக்க ரத்த னைக்க வாய்வி ரிக்கவே, ஐய மெய்தி வெள்கு மூறை யம்ப திப்பு ராதனன், கையி லங்கு சத்த னத்த னென்னை யாண்ட கத்தனே. (கஅ)

2480. கத்த யானை யைக்கி ழித்து ரித்தெ டுத்த காவலா, பத் தர் யாழி டந்த ழீஇப் பரிந்து கூடன் மேயனே, யெத்த ராத லத்து ளோரு மேத்து மூறை காத்தவா, அத்த வுன்னை யேது திப்ப வாக்கு விப்பை யென்னையே. (ககூ)

2481. என்னை வேறு தேவர் பாலி ரந்து கையெ டாமலே, தன் னை யேபு கழ்ந்து கொண்டி ருக்க வைத்த தற்பரன், பொன்னை யேய்ச டைப்ப ரன்செய் பூத்த வூறை காத்தவன், அன்னை யாய வப்ப னன்பர் சிந்தை யால யத்தனே. (சo)

வேறு.

2482. ஆலையிற் கழைக ளுடைந்துசா றூடி யலர்தலை யரம் பையைச் சாய்த்துச், சோலையிற் புகுந்து கமுகினை மாய்த்துத் துன்னு

செங் நெல்வயற் பாய்ந்து,வேலையிற் பெருகு மூறையம் மானே வெய்ய கூற் றுவனெனைத் தொடருங், காலையிற் கடுகி மழவிடை மீதிற் கெளரியோ டெழுந்துவந் தருளே. (சக)

2483. வந்துமங் கையர்கள் கரநெரித் தேங்கிவாய்திறந் தாற் றுதன் முன்னம், வெந்திற லியமன் சினந்தொரு பாசம் விட்டுயிர் கவருதன் முன்னம், இந்திர நகரம் பார்ப்பபோற் கொடிமே லேகிடு மூறையம் மானே, சந்திர னிலங்கு மௌலியாய் நீயத் தருணம்வந் தாண்டுகொண் டருளே. (சஉ)

2484. கொண்டதீ வினையா லுடற்றளர்ந் திருமல் கோழைபித் தங்களு நெருங்கப், புண்டர நுதலின் வெயர்வுற வீடு போவெனக் காடுவா வென்னக், கண்டவ ரிகழக் காலன்வந் தணுகக் கருங்களு ரலறுமக் காலம்,வண்டமர் குழலா ளுடனெழுந் தருளி வந்தரு ளூறை நா யகனே. (சங)

2485. அகத்திரா தெடுங்கோ ணென்னலிற் கழிந்த தாகுமீ தெனப்பலர் கூடிச்,சகத்திரா வருமுன் றூலேக்குது மெனவேசாற்றுதன் முன்னமெட் டிரண்டு, முகத்திரா வணன்வெற் படிவிழுந் தலற முன்னநின் றடர்த்திடு மலர்த்தா, ணகத்திரா டரவப் பணியிரு றைமினி னல்லடி காணநின் றேனே. (சச)

2486. அடிபெயர்த் திடலற் றலமரும் போது மாயுள்வே தியர் பலர் கூடிக், கடிதினிற் கரந்தொட் டறிந்தினி யேது கருத்திலே யென்னுமப் போது, நெடிதுறப் பெருமூச் சோடுமப் போது நின்மலா வூறையம் மானே, முடியிலக் கணிந்தோ யடியனுக் குனது மூளரியந் தாளிணை யருளே. (சரு)

2487. அருநற வழியுங் கமலமென் பொகுட்டி னணிதிகழ் கமு கின்வெண் மணியின், கருநிற முகிலி னயிலினங் கொங்கை களநகை குழல்விழி யுமையாண், மருவுசுந் தரனே கறங்கெனச் சுழலு மனத் தெனைச் சினத்து வந்தியமன், வருகவென் றழைக்கும் போதுன் பொற் றாளும் வருகவெம் மூறைவாழ் பவனே. (சகா)

2488. பவந்தனை யகற்றுந் தன்மையீ தென்னப் பற்றியுற் றுசையி னோடு, குவந்தனை புரியு மூறையாய் நறும்பூங் கொன்றையாய் வன்றழு கணன்கண், சிவந்தனை முதலோ ரலறவெம் பாசஞ் செலுத்துநா ணிதனடி காணுந், துவந்தனை யுடையே னுவனோ வலது துறப் பனோ விறப்பிலா தவனே. (சஎ)

2489. இறப்பது மீண்டு பிறப்பது மாக விருக்கும்பஃ றேவர் பால் விருப்பைத், துறப்பது நின்றன் றுரண்டரிற் றுரண்டாத் துணிவது மடந்தையர் மயலே, மறப்பது மைய வென்கட னள்ளி வாக்கு பால் விக்குமக் காற்பொன், னிறப்பது மஞ்சு மூறையா யென்னை யாள்வது நின்கட னுமே. (சஅ)

2490. கடக்கரி யதனை முன்புரித் தவமுக் கண்ணகண் ணுறங்கு மென் பாயல், வடக்கரி யவனு மவன்றரு மகனும் வணங்குமெம் மூறையம் மானே, இடக்கரி வீழச் சடக்கென வுதைத்த வெந்தைநா யேனையின் ருளத், தொடக்கரி தாய தென்னுனக் கழலுஞ் சூலவெம் படையுடை யோனே. (சகூ)

2491. உடைந்தசிந் தையனுப் தந்தைதாய் தமரென் றுற விஞழ்ந் திருவினைக் கூட்டத், திடைந்தவ ஞனே னென்செய்கே னுனையோ ரிமைப்பொழு தேனுமின் புறவந், தடைந்தவ னல்லே னூறையம் பதிவா ழையனே துய்யமா மணியே, குடைந்தரி யின் றேன் குடித்துக்கொப் புளிக்குங் கொன்றையா யென்றருள் வதுவே.

வேறு.

2492. என்றேயு நெஞ்சினனு யிருந்தவிடத் திருப்பதியான்
பொன்றேயு மணிமதில்சூழ் புகழூறை யோய்புரத்தை
வென்றேயெத் தேவருக்கு மேலோயுன் பொன்னடிக்கா
ளன்றேவிங் கொருமாற்ற மடியேனுக் கியம்புதியே. (ருக)

2493. இயங்குமெழிற் கோபுரஞ்சே ரெழிலூறைக் கிறைவா வுண், மயங்குமெனை யொருபொருளா மதித்தாட்கொண் டருளுவ தென், றயங்குதிரை யெனவுதைந்தோ னத்தாதே டரும்பொருளே, பயங்குமுறுஞ் செஞ்சடையாய் பணியணிதிண் புயத்தோனே. (ருஉ)

2494. புயலனையோன் பூவுறைவோன் பொன்னுட்டோ னிடம் வெறுத்த, மயலனைநீ தடுத்தாள வந்தருள்வ தென்றெழிற்செங், கய லனைய கட்பாவை கலந்தூறையு மிடப்பாகா, வயலனைத்துந் தரள முறும் வளவூறைக் கிறையவனே. (ருங)

2495. இறைவாவுன் றிருவுள்ளத் தெண்ணமியா தினுநாயேன், றறைவாய்நின் றிருவினையாற் றளர்வதுவுந் தகவோவெண், பிறை வாழ்செஞ் சடைப்பரனே பேரூறைப் பெருந்தகையே, யுறைவாயன் படியார்க ளுளங்குடிகொண் டிருப்போனே. (ருச)

2496. இருப்பாய்நம் மிடங்குடிகொண் டெனவுரைப்போ மாகி னெஞ்சே, கருப்பாலே மலியூறைக் கடவுள்விடை யாய்ச்சுமந்த, திருப்பாவை மணவாளன் றேடியுங்கா ணரும்பாதம், விருப்பாயிங் களித்தருள்வான் மெய்யிதென் றெண்ணுநீயே. (ருரு)

2497. எண்ணமன முண்டுதொழற் கிருகரமுண் டிணியதுதி, பண்ணநன்னு வுண்டிணங்கப் பழவடியா ருண்டேயான், றண்ணுறு செந் தாமரைப்பூந் தடவூறைக் கடவுணினை, நண்ணுகில னுயிருந்தா னன்றுமென் செய்கையதே. (ருசா)

2498. செய்யும்வகை யொன்றறியேன் சிறியேனு யிருந்துழல் வே,னுய்யும்வகை யுண்டோவென் றுனைக்கேட்கு மெனக்கருள்வாய்,

னையுமனத் தடியரெனும் பயிர்தழைப்ப நாடோறும், பெய்யுமருண் மழைமுகிலே பேரூறைப் பெருங்கடலே. (ருஎ)

2499. கடன்ஞால முழுதளந்த கண்ணனுக்கு மேலாய்ச்செஞ், சுடர்சூடு மௌலியெனச் சூடுமுடிக் கோபுரஞ்சேர், தடவூறைப் பெருந்தகைநின் சரணீழற் புகுந்துவினை, யடநாயேன் வருந்தியதங் தருளலைபொங் கியசிரனே. (ருஅ)

2500. பொங்கரவார் புயத்தவோ புண்ணியவோ வூறையவோ, சங்கரவோ வெனக்கூவித் தடுமாறுந் தரத்தேனுக், கிங்கரவச் சிலம்படிதந் தினியஞ்சே லெனவுனிரு, செங்கரவம் புயமலராற் றெரிய வைப்ப தெந்நாளோ. (ருகூ)

2501. என்னைவினை யென்செயுங்கூற் றென்செயுமா லயன்முதலோர், பின்னையென்னே செய்வதுவெம் பிணிமுதற்கோ ளென்செயுமா, றென்னையடர் திருவூறைச் செல்வனுமை யொருபாகன், பொன்னைநிகர் சடையானென் புந்திகுடி கொண்டனனே. (சூo)

வேறு.

2502. கொண்ட வாசை குலைந்தன கூற்றமும்
விண்ட தோங்கு வினையும் விலகின
அண்ட ரேறுநல் லூறையு ளானெனைத்
தொண்ட னாக்கித்தன் றொண்டரிற் சேர்க்கவே. (சூக)

2503. சேர்த்த கட்செவிக் கச்சுஞ் சிறுபிறை
யார்த்த வேணியு மைம்முக மும்மதள்
போர்த்த மேனியும் பொன்மதி லூறையிற்
பார்த்த போதென் பழவினை தீர்ந்ததே. (சூஉ)

2504. திரு மோவென் சிறுமை புவனியு
நீருங் காலு நெருப்பும் வெளியுமுள்
ளோருங் காலத் துளவில வாக்குவா
யாரு மேத்துநல் லூறையென் னையனே. (சூங)

2505. ஐய னேபுக ழூறைக் கரையனே
துய்ய மாமணி யேபரஞ் சோதியே
பொய்யி னேன்வஞ்சப் புன்மைய னென்னினும்
மெய்ய னாக்குவிப் பாய்விரைந் தென்னையே. (சூச)

2506. என்னை மாதா வயிற்றினின் னும்பிறந்
தன்னை பாலென் றலறச்செ யாதவன்
பொன்னை யேய்சடைப் புண்ணிய னூறையான்
றன்னை யேதனக் கொப்புறுஞ் சம்புவே. (சூரு)

2507. சம்பு சங்கர வூறைச் சதாசிவ
அம்பு பம்பு நெடுஞ்சடை யாவெனு
வெம்பு கின்றிலன் வீரிட் டலறினன்
நம்பு கின்றில னுய்யு மாறென்னே. (சூசூ)

2508. ஆறு போல்விழி யாற்புனல் வார்த்திடேன்
நீறு பூசி நெடுந்தவஞ் செய்கிலேன்
நாறு சேர்வய லூறையென் னுயகற்
கேறு கைத்தவற் கெவ்வண நல்லனே.

2509. நல்ல தென்று நயந்தனை யானெஞ்சே
கொல்ல வெண்ணிய கூற்றமுன் றேற்றுமோ
அல்லல் செய்வினைக் காளையுஞ் செல்லுமோ
வல்ல வன்றிரு வூறையை வாழ்த்தவே. (சுஅ)

2510. வாழி வாழிநெஞ் சேவள ரூறையான்
றாழி ருஞ்சடைத் தற்பர னற்புதன்
ஆழி சூழுல கன்னையென் னம்பிகை
வீழி வாயுமை பங்கனை வேண்டிடே. (சுகூ)

2511. வேண்டு வார்க்கு விருப்பன் சுடலையிற்
றூண்ட வம்புரி யைய னெனைத்தடுத்
தாண்ட நாயக னூறைக்கன் பாகுவார்க்
கீண்டு ரைக்க வுவமையெத் தேவரோ. (எ0)

வே று.

2512. தேவருட னயனன்மறை முனிவரயன் மான்முதலோர் செங்கை கூப்பக், காவடர்பூந் தென்னூறைத் திருக்கோயில் வளர்ந் தோங்குங் கைலை நாதன், யாவருங்க படசிதட வெனச்சொலவு னுடல்சுமந்த வென்னைத் தன்னை, மேவவருள் புரிந்துதடுத் தாண்டு கொண்டா னென்னினியான் விரும்பு மாறே. (எக)

2513. விரும்பியவன் பருக்கினிய திருவூறைப் பெருங்கோயின் மேவுந் தேவன், கரும்பினைக்கைக் கொடுகுனித்து நாண்பூட்டி மயல் பூட்டுங் காமற் காய்ந்தோன், அரும்பினையொத் தரும்புமுலைக் கயற் கண்ணார் மயற்கண்விழுந் தழிகின் றேன்வெம், பெரும்பிறவிக் கட லீர்ந்தத் தனதுதிரு வடிகாட்டப் பெற்றேன் யானே. (எ௨)

2514. பெற்றமுகைத் திடுந்தேவன் பேரூறைப் பெருந்தகை யெம்பெம்மானம்மான்,பற்றலர்கள் புரநீறு படநகைத்த பெருமானைப் பரவி வாழ்ந்தாற், சுற்றமனை மாதர்பொரு ளெனச்சுழலு நரர்காள் போர் தொடுக்கப் பாசங், கொற்றமுறுஞ் சமனணுப்பின் விலக்கி யைய னடியாரைக் கூட வாமே. (எ௩)

2515. ஆமமைசெஞ் சடைக்காடு மதகளிறுடுத்த வரையுமர வணிந்த தோளு, மாமணிப்பொற் சிலம்பொலிக்கு மிருதாளு முக்கணுஞ் செவ் வதன மைந்துந், தாமநறுங் குழலுமையா ளிருக்குமிடப் பாக முமந் தணர்க ளாற்று, மோமமிகுந் திருவூறைக் கோயிலுக்குட் கண் டேனென் னுளங்கொண் டேனே. (எச)

2516. கொண்டறவஞ் பெருஞ்சோலைப் பலவின்ற கனியுடைந்த கொழுஞ்சா றோடி, வெண்டமையு மிடமுதலாப் பணைக டோறும் புகுமூறை திருத்தா னாயேன், வண்டமர்கட் பகழேல் வைகினும்வெம் பிறவியிடை வரினு நின்பொற்,புண்டரிக மலர்ச்சரணத் தன்பென்னு மழிவிலாப் பொருடந் தாளே. (எரு)

2517. பொருந்தார்வெம் புரமெரித்த புண்ணியா திருவூறைப் பூராத ஞதீங், கருந்தார்கொள் குழலியுறை நாவருமற் றியாவருமென் கண்மு னுவர், திருந்தாரென் னினுமலது நின்றாரென் னினுநடந்தா ரெனினும் வேண்டேன், முருந்தார்வெண் ணகைபாகா முக்கண்ணு நினைக்காணு முயற்சி யேனே. (எசு)

2518. ஏனிவனின் றலறுகின்ற னெனக்கேட்கி லாயெனினு மினுநாற் றஞ்சேர், ஊனியைவெம் பிறவியிடத் துழலெனவிட் டாயெ னினு நரகுக் காளாய்ப், போகியெனத் தள்ளிவிட்டா யெனினுமில கூறைநகர்ப் புண்ணியாநீந்,தேனியைகொன் றையந்தாராய் மற்றொரு தே வரையடியேன் சிந்தி யேனே. (எஎ)

2519. சிந்தையிலெண் ணுவனுனையே தெய்வமென்று நினது திருப் பாதம் போற்றின், சிந்தைதருங் கொடும்பிறவி நீங்குமென்றும் பின்னுமந்த நினைவை நீக்கிப்,பந்தையுறு மிருதனத்தார் பக்கநிற்பேன் மீண்டுமெதிற் பயங்கொள் வேன்மெய்த், தந்தையெழி லூறைநகர்க் கடவுளெனக் கெவ்வணநீ தயைசெய் வாயே. (எஅ)

2520. செய்க்குவளை நயனமர விந்தமுகங் கோங்கரும்பு திரண்ட கொங்கை, கைக்குவளை பொருந்தலின்மின் சுற்றியயாழ் கடிதடங் காக் கணம்பூ வென்று, மெய்க்குவளை வுறுமளவு மடவார்பாற் றிரிந் துழலும்வீண னுனேன், ஐக்குவளைச் செவிபாகற் கூறையற்கெஞ் ஞான்று நல்ல னுவ னெஞ்சே. (எகூ)

2521. நெஞ்சேவல் லாண்மை செய்யா தருள்புரிந்து கேட்ட குன்செய் நெருங்குமூறை, யஞ்சேவ லாருலகை யாண்டவளோர் பங் குடையா ரழல்கொள் கையார், செஞ்சேவ லாரையொரு மருப்பா ரைப் பெற்றார்தந் திருத்தாள் போற்றி, துஞ்சேவ லாய்ந்துபுரிந் துயர் ந்தாரோ டிருப்போமீ துணரு வாயே. (அ0)

வே று.

2522. வாயி லொன்பது கொண்டபாழும் பொய்யுடன் மயக்கம்
பேயி னேன் மயற் பித்தினேன் பேரறி வில்லா
நாயி னேனுனை நண்ணுவ தெங்ஙன நண்ணுந்
தாயி னல்லனே யூறையம் பதியுறை சம்பே. (அக)

2523. சம்பு ஞாளிகட் குணவென வருத்தவிச் சடத்தை
நம்பு நாயினேன் மனக்குரங் கலைப்பவெந் நாளும்
வெம்பு கின்றன னரதன புரத்துறை விமலா
அம்பு பம்பிய நெடுஞ்சடை யாவியா யருளே. (அஉ)

2524. அருக்க ரஞ்சநீள் கோபுரத் தூறையா யன்னை
கருக்க லந்ததென் றதுமுத லிதுவரைக் காலம்
பருக்குந் தீவினைக் ககத்தனாய் மனப்பெரும் பாழ்ம்பேய்த்
திருக்க டைந்தவெற் கருள்வையோ நின்னடித் திருவே. ()

2525. திருக்கண் மூன்றுடை நாயகா வூறையஞ் செல்வா
இருக்கு மோதுதற் கரியநந் தாநதிக் கிறைவா
மருக்கொள் கொன்றையா யென்மனம் வலியகல் லெனினு
முருக்கு நின்னருள் வெளிப்படி னதுபெற வுதவே. (அச)

2526. உதிக்குஞ் செங்கதிர் பலவென விமானஞ்சே ரூறைப்
பதிக்கு நாயகன் சரணமே சரணெனப் பணியோங்
கொதிக்கும் வெஞ்சமன் குறுகிடிற் செய்வதென் குறித்துத்
துதிக்கு நாளுமொன் றுள்ளதோ நெஞ்சமே சொல்லாய். ()

2527. சொல்லத் தான்பற்று வாக்கையை நம்புதுர்ச் சனனைக்
கொல்லத் தானெனத் தோன்றிடும் வினையை யான்கொல்ல
வில்லத் தானருச் சித்தடி வீழ்ந்தில னூறை
யில்லத் தானெனக் கெங்ஙன முதவுவ னெதிர்ந்தே. (அசு)

2528. எதிரும் வெஞ்சினக் காலனை யுதைத்தவ னிரவின்
கதிரு மம்புநீங் காமுடி யூறையங் கடவுள்
முதிரும் வெம்பவக் கடலிடை மூழ்கிநிற் பேறிங்
கதிருந் தீவினை யனைத்தையு மகற்றி விட்டானே. (அஎ)

2529. ஆனை மானென நடத்திமா னேந்தியோ ரானைத்
தானை போர்த்தவ னூறையம் பதியுறை தக்கோன்
ஊனை நச்சிய வுடம்பினை நச்சினே னுளத்திற்
றேனை யொத்திட வுயர்ந்தனன் மனக்குறை தீர்ந்தேன். ()

2530. தீர ரென்பவர் யாரெனி னெஞ்சமே தெரிவாய்
சோர வம்புறு சமயவெம் பிணக்கினிற் சுழலா
தீர நன்பணை மலிதரு மூறையெம் மானை
யார மென்முலை பங்கனைத் தெரியவாய் குவரே. (அகூ)

2531. அவனி யாவுந்த ஞணையே நடக்கவோ ராழித்
தவன னன்ன பொன் முடிசுமந் திருந்தவர் தங்கள்
நவமி குஞ்செல்வ மியாவும்விட் டொடுங்கின ரதனை
சிவனை யூறையஞ் செல்வனை வாழ்த்துதிர் தெரிந்தே. (கூ0)

### வே று.

2532. தெரிய நாயினேன் முன்னம் வந்தருள் செய்த நாயகா தெய்வ நாயகா, கரிய கண்டனே செஞ்ச டாடவிக் கருணை வள்ளலே கரிய மேனியாற், கரிய தேவனே போற்றி யூறைவா ழைய னேயெவ ரும் பொய்யர் பாற்செலாப், பெரிய னேயிடைப் பரிய னேயிடம் பெண்ணை வைத்தவெம் மண்ணல் போற்றியே. (௬௧)

2533. அண்ண லேதிரு வூறை மாநக ராதியே பரஞ் சோதி யே யெனு, மெண்ண மற்றநா யேனை யுஞ்சபைக் கேற்றி வைத்தவா போற்றி போற்றியோர், பெண்ண வாவுறும் பாக மீந்தவா பிறைகொள் செஞ்சடை யிறைய வாநுதற், கண்ண வந்தியேய் வண்ண நண்ணு வோர் கருத்து ளாடிடு நிருத்த போற்றியே. (௬௨)

2534. போர்த்த பஞ்சியாற் கொங்கை யுப்பலாற் பூச்சு மஞ்ச ளால் வீச்சி டுங்கையாற்,கூர்த்த கண்களார் மயக்க வங்குழல் கொடிய னேனையோ ரடிய ளுமுகம், பார்த்த வாசரண் போற்றி யூறையம் பதிய வேணிமே னதிய வல்வினை, தீர்த்த வாசரண் போற்றி யைம் முகா செய்ப மானுறுங் கைய போற்றியே. (௬௩)

2535. கைபி லேந்தியோ ரன்னை யின்னமுங் கலைத்தொட் டிற் குட்போட் டலைத்தெ டுத்துப்பா, லைய வுண்ணெனு வகையின் யான் பிற வாதிருந்திடக் கோதி லன்புதந்,தூய்ய வைத்தவா போற்றி யூறை வாழொப்பி லாதவென் னப்ப போற்றியென், பைய ணிந்தவா மரக தக்குயில் பங்க போற்றிசெவ் வங்க போற்றியே. (௬௪)

2536. அங்கை மீதினிற் சங்கு ளானய னண்டர் கோமகன் கொண்ட செல்வமோ, சங்கை யென்றுளத் தெண்ண வெண்ணமுந் தந்து நின்னடிக் கந்த மாமலர், செங்கை தாங்கியென் முடியிற்சேர்த் திடு செல்வ மீறிலென் றறிவ ளித்தவா, மங்கை பங்கனே போற்றி யூறையின் வாச நங்கயி லாச போற்றியே. (௬௫)

2537. ஆசை வேலையின் மூழ்கி வாடிநின் னடிய ரிற்செலாக் கொடிய நாயினேன், பாச நீக்கியெப் போது நின்னையே பாடவைத் தவா போற்றி போற்றியென், னீசனே சரண் போற்றி யூறைவா ழேக னேயுமை பாகனேகயி, லாச னேசரண் போற்றி மன்றினின் றாடி போற்றிநீர் சூடி போற்றியே. (௬௬)

2538. சூட வேண்டுநின் னடிகள் போற்றியான் சுற்ற வேண்டு நின் னூறை போற்றிவாய், பாட வேண்டு நின் சீர்கள் போற்றிகண் பார்க்க வேண்டுநின் வடிவம் போற்றியான், கூட வேண்டுநின் னடி கள் போற்றியுட் கொள்ள வேண்டுநின் னன்பு போற்றிமால், தேட வேண்டருண் மேகம் போற்றிநுண் சிற்றி டைக்குயில் பாகம் போற் றியே. (௬௭)

2539. பாகின் மென்மொழிப் பாவை யார்மயற் பட்ட லேந்திடுந் துட்ட நாயினேன், சோக நீக்கிவெங் கூற்றை நில்லெனச் சொல்ல வாய்தருஞ் செல்வ வூறைவாழ்,ஏக நாயகா போற்றி யன்பரு ளிருக்கு நாயகா போற்றி யந்தியேய், தேக நாயகா போற்றி வேறுள தெய்வ நாயகா போற்றி போற்றியே. (கூஅ)

2540. போற்றி டாமலுஞ் சொப்ப னத்திலும் பொய்வி டாமலுந் துய்ய நின்பெயர், சாற்றி டாமலுஞ் சமய வாதையைத் தள்ளி டாம லுங் கள்ள வாணவம், மாற்றிடாமலு முழலென் வல்வினை மாற்று வித்தவா போற்றி நல்லறம், ஆற்று மூறையாய் போற்றி யொப்பிலா வமல போற்றிசே வடிய போற்றியே. (கூகூ)

2541. அடைய லார்புரஞ் செற்ற வாவினை யற்ற வாசரண் போற்றி போற்றிசெஞ்,சடைய வாசரண் போற்றி யென்னையாள் சம் புவேசரண் போற்றி போற்றிமால், விடைய வாசரண் போற்றி போற்றிமெய்ஞ் ஞான சோதியே போற்றி யம்மையோர், புடையவா சரண் போற்றி யூறையாய் பொருவி னின்னடிப் பூக்கள் போற்றியே.

சுத்தரத்தினேசுவரர் துணை.

---

நேரிசை வெண்பா.

2542. காதும் பிறவிக் கடல்வீழ்த் திருவினையின்
தீதுங்குறைத்து முத்தி சேர்க்குமே - போதம்
அடையூறை யந்தா தியைக்கருது வாருக்
கிடையூறை நீக்குவதன் றி.

---

திருவூறைப்பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.

---

## * சிறப்புப்பாயிரம்.



2543. உய்ய மணிமார் பரியயன்விண் ணோரும் புகழ்ந்த திருவூ றைத், துய்ய மணியீ சருக்கன்பு துலங்கத் தாதி சொற்றுயர்ந்தான், செய்ய மணிச்சீர்ச் சிதம்பரமன் சேயா யுதித்தெம் மானருளைப், பெய்ய மணிமாக் கவிசொலுநாப் பெறுமீ னாட்சி சுந்தரனே.

---

* இதனை இயற்றியவர்பெயர் தெரியவில்லை.

சிவமயம்.

# திருப்*பழைசைப்பதிற்றுப்பத்தந்தாதி.



## விநாயகர் துதி.

2544. ஓங்கு பழனத் திருப்பழைசை யுறையும் பெருமா னிறை யருட்குப், பாங்குபெறுவா னொருபதிற்றுப் பத்தந் தாதி யுரைசெய்ய, வாங்கு மொருகோட் டிருசெவிமும் மதநால் வாயைங் கரத்தலங்க, டாங்கு சோதிக் குணப்பெருங்குஞ் சரக்கன் றடிக டலைக்கொள்வாம்.

## நூல்.

2545. பூவார் முளரிப் புத்தேளும் புயங்க வணைமேற் றுயில்வோ னும், நாவார் துதிசெய் தஞ்சலிக்கு நலமார் பழைசை நாயகனே, தேவா தேவர்க் கிறைவாநின் றிருத்தாள் கருத்தி லிருத்தேற்கு, மாவா வென்றிங் கருள்புரிந்தா யதுதா னின்பே ரருட்கழகே. (க)

2546. அழகா ருமையோர் பங்குடையோ யமர ரேத்துந் திருப் பழைசைக், குழகா கொன்றை முடிமிலைந்த கோமா னேநின் னடிய ரொடும், பழகா திருக்கும் வன்னெஞ்சப் பாவி யேனைப் பவமென்னுந் தழல்கா யழுவத் தழுத்தாது தடுத்தாட் கொள்ள றக்கதே. (உ)

2547. தக்க னியற்று மகஞ்சிதைத்தாய் தறுகட் கூற்றந் தனை வதைத்தாய், செக்கர் முகிலேய் சடைமுடிமேற் றிங்கட் கொழுந்தோ டரவணிந்தாய், முக்க ணுடையாய் திருப்பழைசை முதல்வா நின்றாட் கன்பில்லாப், பொக்க முடையே னுனையும் போற்றிக் கோடல் கடனு னக்கே. (ந)

2548. கடங்கால் பொருப்பி னுரிபோர்த்தாய் கண்ணார் நெற்றிப் புண்ணியனே, விடங்கா லரவ மரைக்கசைத்த விடங்கா தடங்க ணுமைபாகா, தடங்கா மருவுஞ் செழும்பழைசைத் தலைவா பல நா ளினைப்புகழா தடங்கா வுள்ளம் பொறிவழியே யணுகத் திரிந்தே னுறவுள்ளே. (ச)

2549. உள்ளம் பொறியின் வழிநடையுற் றோடச் சுழன்று மடமாதர், கள்ள விழியின் வலைப்பட்டுக் கடையே னாகித் திரிவே னைத், தெள்ளு தமிழ்நற் றொடைப்பாடல் செய்து பணியப் பணித் தாண்டான்,பள்ளவயற்கண் வளைமுத்தீன் பழைசைப் பதிவாழ் பெரு மானே. (ரு)

* பழைசை - பட்டீச்சரம்; இத்தலம் கும்பகோணத்தின் தென்மேற்கி லுள்ளது.

2550. மானேர் நோக்கி யொருபாகா மறைவாய் முழக்க கிறை பழைசைக், கோனே பொதுவிற் குனிக்குமருட் கூத்தா மூக்கட் கொழுங்கரும்பே, தேனே கனியே யன்பருளத் தித்தித் திருக்குந் தெள்ளமுதே, வானே பெறினும் யானின்றாள் வழுத்து மன்பின் மாண்பருளே. (சு)

2551. மாணு வுள்ளப் பறவைமட மாணூர்மையற் கண்ணிவிழ, நாணு துழன்று தமொறி நவவாய்ப் புழுக்கூ டதுசுமந்து, வீணுள் கழிக்கு மறிவில்லேன் மெய்யா பழைசை யையாநின், பூணூர் மலர்த் தாண் முடிக்கணிந்து புகழப் பெறுநா ளெந்நாளோ. (எ)

2552. என்னு யகனை விண்ணவருக் கிறையா யவனை மறை நான்கு, முன்னு நிற்கும் வடிவானை மூவா தானை மூத்தானைப்,பொன் னூர் மேனிப் புயலும்விரைப் பூந்தா மரைவே தனுநாடிப், பன்னு டிரிந்துங் காணுனைப் பழைசை நகரிற் கண்டேனே. (அ)

2553. கண்டேன் பழைசைப் பதியானைக் கைகான் முடங்கு மறிவிலிவாய்த், தண்டே னெடுங்கோட் டிருந்தொழுகுந் தன்மை யெனக்கண் ளெங்களிப்புக், கொண்டேன் சிரமே லிருகாமுங் குவித் தேன் குளித்தேன் முகமலர்ந்தேன், விண்டேன் பண்டை வினைக் கடலை வேண்டேன் மற்றைத் தேவரையே. (கூ)

2554. வரைமா திருக்கு மொருகூறு மழுமா னணிந்த திருக் காமு, மரைசேர் வேங்கை யதளுடையு மரவா பரணத் தகன்மார் பும்,விரைசேர் கொன்றை முடியுமரை மேவுமடியும் வெளித்தோற்றி, நரைசேர் விடையான் றிருப்பழைசை நகரி லருளப் பெற்றேனே.()

வே று.

2555. பெற்ற மேறிய பிரானையெம் மிறைவனைப் பெய்வளை கூறுனைச், சுற்று நாககங் கணத்தனைப் பழைசைவாழ் சுந்தரப் பெரு மானை, யற்ற மின்மதி முடியனைப் பொடியணி யையனைக் கரங்கூப் பிப்,பற்றெ லாமறப் பற்றுவா ரெவரவர் பவக்கடல் கடந்தாரே. (கக)

2556. கடத்த யானையின் சருமமே யங்கக பாயெனக் கொண் டானைப்,படத்த ராவணி புயத்தனை நயத்திருப் பழைசையம் பதி யானை, நடத்த பாதனை வாழ்த்தியன் பொடுதின நாடுவா ரெவரே னும், வடத்தின் மேற்றுயின் மாலயன் முதற்சுரர் வாழ்த்தவீற் றிருப் பாரே. (கஉ)

2557. இருப்பை நேரும்வன் னெஞ்சனய் மானமி லீனனு யெழிலாரும்,மருப்பை நேர்முலை மாதர்பா லாதரம் வைத்துழன் றலை வேனைக், கருப்பை நீங்கித்தன் றாள்களிற் செந்தமிழ்க் கண்ணிசூட் டிடச்செய்தான், பொருப்பை வாங்கிய புராதனன் பழைசைவாழ் புண்ணியப் பெருமானே. (கங)

2558. பெருகு மையலம் பறவைவீழ்ந் தறிவெனும் பெருங்கலந் தகர்ந்தோடத், திருகு வெஞ்சினத் தீவினைச் சுறவுவாய் திறந்துணச் செயலின்றிக், கருகு நாயினே னுருகியுன் சிவானந்தக் கனிதரு செந்தேறல், பருகு மாறளித் ததுதிருப் பழைசைவாழ் பரம்பரன் விளையாட்டே. (கச)

2559. ஆட்ட மன்றிடைச் செய்பவன் பழைசைவா ழந்தணனந்தாத, நாட்ட மூன்றுடைப் புண்ணிய னாலய நண்ணியஞ் சலிப்பாரே, வாட்ட மின்றியிப் புவனபோ கந்துய்த்து வானிடைப் புகுந்தாங்கு,வேட்ட போகமுந் துய்த்துப்பின் சிவபுர மேவிநன் குறைவாரே. (கரு)

2560. வாரு லாமுலை மாதர்பா லாதரம் வைத்துழன் றலைவீர்காள், தேரு லாமணி மறுகும்பொன் னெயிலுஞ்சூழ் திருப்பழைசையிற்சென்றே, காரு லாமணி கண்டனைக் கண்டுகண் களிப்புறத் தொழுதன்று, னேரு லாம்புகழ் பாடுவீ ராடுவீ ரெழுபிறப் பறுமாறே.

2561. மாறு கொண்டெனை வஞ்சித்து நின்றனை மதியிலா மடநெஞ்சே, தாறு கொண்டபைங் கமுகடர் பழைசையிற் சார்ந்துசந்தனக்கொங்கை, கூறு கொண்டதம் பிரானடி கண்டுகை குவித்துக் கண்ணீர்வார, நீறு கொண்டணிந் துருகிலை யெங்ஙன நிறையருள் பெறுவாயே. (சஎ)

2562. வாயி னாலுனை வாழ்த்தவுஞ் சென்னியால் வணங்கவு மடங்காச்செந், தீயில் வீழ்மெழு கொத்துள முருகவுஞ் செய்தவமுனமில்லேன், பேயி னேனின தருளுறேன் பழைசைவாழ் பிறைமுடிப் பெம்மானிற், றேயு மாறினி நின்னடிக் காம்பவந் தோன்றிடவருள்வாயே. (கஅ)

2563. அரிதுமானிட யோனியிற் சனித்திட லதனினு மரிதாகு, மூரிய வாகிய வுறுப்புக்கள் குறைபடா துதித்துநான் மறையாதி, விரியு நூலறிந் தநித்திய நித்திய விவேகமுற் றிருபற்றும், பரிய மால்பணி பட்டிலிங் கேசர்தாள் பற்றிநின் றிடற்னே. (கசு)

2564. தான வாறிழி தரவரு வாரணச் சருமமே னியிற்போர்த்த, ஞான வாரியே யன்பருக் கமுதமே நற்பழை சையின்வாழ்வே, கான வார்குழ லம்மையோர் பங்குடைக் கடவு ளெல் லாம்வல்ல, ஞான மூர்த்திநீ யென்னையு மடிமைகொண் டாளுத லரிதாமோ. (உ0)

வே று.

2565. அருவரை யேய்க்குங் குஞ்சரவுரித்தா ரமுதொழு கிய மதி முடித்து, மருவிய வரிண மழுவணி கைத்து மாண்டசெஞ் சூட்டகிப் பூட்டு, கருநிற வேனங் காணருந் தாட்டுக் கனலவிர் மத்தகக் கட்டு,தருவடர்பழைசை யென்னவென் னுளத்துஞ் சார்ந்தினி திருந்தபே ரொளியே. (உக)

2566. ஒளிபெறு நீலப் பொருப்பென நடக்கு மொழுகுமுக் கடத்தகுஞ் சாத்தை, அளிபெறு முளரி நாளநூல் கைக்கொண் டசைத்திட வொருமுடச் சிறுவன், தெளிவுற நினைத்த தேய்க்குமா லடியேன் சிற்றறிவா னின்றன் பெருஞ்சீர், களியுறப் பாடி நின்மல ரடிகள் கைக்கொளல் பழசையம் பரனே. (உஉ)

2567. அம்பரம் புலித்தோ லணிகல மரவ மாமையோட் டெலு முழு வெலும்பு, வெம்புசெந் தழல்வெய் யவன்மதி நாட்டம் விரும்பு மூண் வெய்யவெங் காளம், பம்புவெம் பேய்கள் படையெனி னரு ளார் பட்டிலிங் கேசனைப் பழிச்சு, மும்பர்தம் பிரானை மண்ணுல கடி யா ருற்றுநின் றேத்தலெவ் வாறே. (உங)

2568. எவ்வமாம் பிறவித் தொடுகட லிடைவீழ்ந் திந்திரி யச்சுற வரித்துக்,கவ்வநீள் வினையின் சுழலகப் பட்டுக் கதறுவேற் கின்னருள் புரிந்தான், மவ்வலங் கோதை தன்னையோர் பாகம் வைத்தவன் பட்டிலிங் கேசன், தெவ்வர்த மரண மூன்றும் வெந்தொழியச் சிரித் தவன் றேவர்தம் பிரானே. (உச)

2569. தேவர்தம் பிரானே பட்டிலிங் கேசா செப்பரு மொப்பி னின் குணங்கள், தாவரு மறைக ளுரைப்பது கேட்டுச் சரணடைந் தேனலேன் றேனுந், தீவரு விடமு மரவும்வெள் ளென்புஞ் செறி முடைத் தலைகளு நமக்கே, யாவவென் றுடுத்துப் பூண்டு கொண்டி ருக்கு மதிசயங் கண்டடைந் தேனே. (உரு)

2570. ஏனமு மனமு மாயவர் வாய்வாழ்த் திடுமொலி யெழு கட லடைக்கும், வானவர் கணங்கள் வச்சிரத் தடக்கை வள்ளல் வாழ்த் தொலிமுகின் மாற்று, மானமா முனிவர் மறைமுழக் கொலி யெண் மாச்செவி கலைச்செவி டாக்கும், ஞானநா யகனைப் பழசையி லடியே னுவழுத் தொலியெங்குப் புகுமே. (உசு)

2571. எங்குநின் னடியார் நின்னிடம் பெற்ற தெடுத்துரை யாடி வீற் றிருப்பார், செங்கரங் குவிப்பார் கண்கணீர் சொரிவார் சிந்திப்பா ரவையெலா முணரேன், பொங்கொளி மலையைக் குழைத்தது கேட் டுப் புகுந்தன னென்மன மலையுங், கொங்குலா மிதழிப் பட்டிலிங் கேசா குழைத்தெடுத் தாளுவை யெனவே. (உஎ)

2572. எனக்குநீ யருளு நல்வர மொன்றஃ தியாதெனி னெப்பி றப் புறினுங், கனக்குழன் மடவார் மயக்கிடை விழினுங் கற்பகா டவி நிழ லிருந்து, மனக்கினி தாம்பல் போகமுந் துய்த்து வாழினும் வரை யிடை யுதித்த, வணக்கொடி பாகா பட்டிலிங் கேசா மலர்புரை நின் னடிக் கன்பே. (உஅ)

2573. அடிநினைந் துருகித் தொடுமணற் கேணி யதனினுங் கண் களுற் றெடுக்கப், படிமிசைப் புரண்டு பதைபதைத் தலறேன் பாடி டே னாடிடேன் பணியேன், முடிவது மறியேன் மூர்க்கனே னெனையு

முன்னிலீ யருள்புரி வாயோ, பொடியணி மேனிப் புண்ணியா பழசைப் புராதனா பூரணப் பொருளே. (உ௯)

2574. பொருளலா வதனைப் பொருளென மதித்துப் பொறிவழிப் புலன்செலப் போக்கி, மருளிலா மடவார் மயக்கிடை முயங்கி மாண்டதோர் செய்கையு மின்றித், தெருளிலா தடியேன் றியங்குவதழகோ திருப்பழ சையில்விருப் புடையாய், இருளுலா மிடற்று யமரர்நா யகநின் னிணையடிக் கருதவன் பருளே. (௩0)

வேறு.

2575. அன்புகுடி கொண்டுபெழுத் தமைந்தமனத் துன்னடியார்
பின்புசிவ மணங்கமழப் பித்தேறித் திரிகில்லே
னென்புதசை பொதிகுடிலை யினிவேண்டே னிரங்காயோ
தென்புனபாட் டளிச்சோலைத் தேனுபுரி மேயவனே. (௩௧)

2576. மேயகொடும் பாசமொடு வெம்போத்தை நடத்திவருங்
காய்சினக்கூற் றென்செயுந்தீக் கடும்பிணிகோ ளென்செயுமால்
வேயனமென் றிரடோளி மேவுமொரு கூறுடையான்
தீயகொடி யேனுளமுந் தேனுபுரி யாக்கொளினே. (௩௨)

2577. கொள்ளையின வண்டிழிந்து கொழுதிழுக் குழலுடைந்து
கள்ளொழுகு நறுங்கொன்றைக் கண்ணிமுடி மிலைந்தபிரான்
தெள்ளுபுனற் பெருவேலி திகழ்பட்டீச் சரமுமென
துள்ளமுநான் மறைமுடியு முறையிடமாக் கொண்டானே. ()

2578. ஆனமருங் கொடிவலத்தா னழகமருங் கொடியிடத்தான்
கூனமரு மதிமுடித்த கோதிலாக் குணக்கொண்டன்
றூனமருந் தடஞ்சோலை தழைபழசைப் பதியன்றே
வானமரர் தாம்வாழ்வான் வலஞ்செயவந் தடைவதுவே. ()

2579. அடையலார் புரம்பொடித்த வண்ணலார் நறுங்கொன்றைத்
தொடையலா ரென்னுளம்போற் றோன்றவினி துறையுமிட
மடையெலாந் தவழ்சங்க மணியீன்ற வயற்சாலிப்
புடையெலா மணங்குலவப் பொலிபட்டீச் சரந்தானே. (௩௫)

2580. பட்டாரு மிடைமடவாள் பாகாதென் பழசையாய்
மட்டாருஞ் சடைமுடியாய் வானவர்தம் பெருமானே
கட்டார்நின் றிருவடிக்கே கசிந்தணியேன் கரங்குவியேன்
ஒட்டாம லுழல்வேனோ வுடையாய்நின் னடியேனே. (௩௬)

2581. அடிமுடியன் றோடேடி யலைந்ததுவு மறிந்திலார்
முடிவின்மடி வதுங்கருதார் முழுவெலும்பு தலைமாலை
பொடியணிமே னியினைக்கார் புகழ்ப் பழசைப் பரனைடுவெங்
கொடியவர்மா லயனையுடன் குறித்தெண்ணி யெய்ப்பாரே. ()

2582. எய்த்தேத முறுவேனை யிறப்பினொடு பிறப்பேற்று
பொய்த்தேவர் புன்சமையம் புகுத்தாது புரந்தளித்தான்
மெய்த்தேவ னுமைபாகன் விரிசெழுந்தா மரைமலருஞ்
செய்த்தேறன் மடையுடைக்குந் திருப்பழசைப் பதியானே.

2583. ஆனையுரி போர்த்தபிரா னருட்பழசை நகர்வாணன்
தேனொழுகு மலர்வாயாற் றீவிடமன் றருந்தானே
லூனொழுகு நேமிதரித் தோங்குமா லயன்முதலாம்
வானவர்மங் கையர்கழுத்தின் மங்கலநா ணிற்குமே. (சுகூ)

2584. இருக்காதி மறைமுடிமே லிலங்குதிரு வடிப்பெருமான்
மருக்காவுந் தடஞ்சோலை மந்திமதி மேற்பாயப்
பெருக்காறு பொன்கொழிக்கும் பெரும்பட்டீச் சரமெனவுட்
டிருக்காதி யரிறபவென் சிந்தைகுடி கொண்டானே. (சo)

வே று.

2585. கொண்டலி னிருண்ட கண்டன் கோமள வல்லி பாகன்
தண்டலை வேலி சூழுந் தடமதிட் பழசை வாணன்
புண்டரீ கத்தாள் போற்றிப் பூசித்த பெரும்பே றன்றோ
வண்டுளர் தண்டுழா யோன் மலரவன் குதுகலிப்பே. (சுக)

2586. கலம்பயில் கடனஞ் சுண்ட கண்டனே பழசை வாண
நலம்புனை குடங்கை நீரு நறியபச் சிலையு மிட்டோர்க்
கலம்புபாற் கடலு மென்பூ வணையுநாற் கோட்டு மாவு
மிலங்கிட வளிப்பாய் நீசெ னேற்றதென் னியம்புவாயே. ()

2587. இயம்புபல் வண்ட மெல்லா மிமைப்பொழு தழித்து மாற்றி
வயங்கெழ மட்டித் தாடும் வல்லவன் பழசை வாணன்
சயம்பெறு வான்கூட் டுண்ணுந் தரியல ரரண மூன்றுந்
தயங்கற வழித்தா னென்று சாற்றுதல் சீர்த்தியாமே. (சுங)

2588. சீரமர் கஞ்சத் தண்ணல் சிரங்கர நகத்தாற் கொய்தாய்
தாரம ரடிந கத்தாற் சலந்தர னுடலங் கீண்டாய்
போரமர் வேளைப் பார்த்தும் புரத்தினை நகைத்துந் தீத்தாய்
வாரமர் பழசை யாய்கைம் மழுச்சூலஞ் சுமந்த தென்னே.

2589. என்னிது விடையு நீவீற் றிருந்தருள் பொருப்பும் வெள்ளி
மன்னிய கலையும் வில்லு மாதங்க மதிண்மூன் றெய்யப்
பொன்னிற வாளிகொண்ட புராதன பழசை வாண
சென்னியி லிரந்துண் பாய்நன் செய்கைநின் செய்கை தானே.

2590. செய்தவ முடையீர் நுங்கள் செறிபிறப் பகலக்காண்மின்
கையில்வெண் டலையொன் றேந்திக் கடியபாம் பரைக்கசைத்துப்
பொய்யினூற் சரட்டாற் பொல்லம் பொத்துகோ வணமுஞ்சாத்தி
யையனற் பழசை வாண னுடிவா னெங்கும் போந்தே. ()

2591. எங்கணு நிறைந்து நின்றோ னெழினகர்ப் பழசை வாணன்
திங்களங் கண்ணி வேய்ந்த சிவபரஞ் சோதி பாத
பங்கயம் புணையாப் பற்றிப் பவக்கடல் கடக்க வல்லா
ரிங்கெவ ரேனு மன்னா ரிணையடிக் கடிய னியானே. (சஎ)

2592. யானுனக் குரைப்ப தொன்றுண் டறிவினெஞ் சினிது கேட்டி
வேனெடுங் கண்ணி னார்கள் விருப்பறுத் துய்ய வேண்டி
னூனுடற் குயிரே யாயவ் வுயிர்க்குமோ ருயிராய் நின்ற
பானலங் குழலி பாகன் பழசையை வணங்கு வாயே. ()

2593. வணங்குநுண் ணிடையாள் பாகன் மானிட மேந்தும் வள்ளல்
குணங்கினந் துணங்கை கொண்டு குதித்திடக் குனிக்கு மையன்
பணங்கெழு மரவப் பூணன் பட்டிலிங் கேசன் யான்றன்
மணங்கமழ் மலர்த்தாள் பாடி வழிபட வருளி னானே. (சகூ)

2594. அருட்பெருங் கடலைத் தேவ ரணிமணி முடியை யின்பத்
திருக்கிளர் தவத்தோர் நெஞ்சுட் டித்திக்கு மமுதை யென்னை
யுருக்குமொள் ளொளியை மாட முயர்பழ சையிற்கண் டோர்கள்
கருக்குழி வீழார் காலன் கண்ணுற வும்ப டாரே. (ருo)

வே று.

2595. படவர வணிகலம் பலிக்க லந்தலை
யுடல்பொதி சாந்தநீ றுறையு மூர்வனம்
விடமுண வுடையதண் மேவக் கண்டும்வா
னடர்சுரர் பழசையாற் கடிமை யாவரே.

2596. ஆவலித் தழுதுதீ யடுத்த வெண்ணெயை
யோவருங் கல்லென வுருகித் தேம்பியே
பாவலர் குழாம்புகழ் பழசை வாணனுக்
கேவர்தா மிரங்கிடா திருந்த பேர்களே. (ருஉ)

2597. போருண் மேனியன் பிறைமு டித்தவன்
தாரணி கொன்றையன் சரும வாடையன்
பார்புகழ் பழசையன் பதக னேனையு
மோரடி யானென வுயக்கொண் டானின்றே. (ருஙூ)

2598. இன்றமிழ் மாலைபொன் னிணைய டிக்கியான்
பொன்றிகழ் கொன்றையிற் புனைந்து சூட்டிடேன்
பன்றிகண் டறிவரு பழசை வாணன்றா
னொன்றிவெம் பவமறுத் துய்யு மாறெனே. (ருச)

2599. என்னினி யான்பெறு மிலாப மாவது
பன்னரும் புகழுடைப் பழசை நாயகன்
பொன்னடி மலர்தலை பூணப் பெற்றது
மன்னிய சீர்த்திவாய் வாழ்த்தப் பெற்றதே. (ருரு)

2600. பெறற்கரும் பேறெலாம் பெறவ ளித்தருள்
சிறக்குநன் பழசையிற் செழிக்கு மையனை
யறக்கொடி பாகனை யமரர் நாதனை
மறக்கொடும் பதகரே மறக்கு நெஞ்சரே. (௫௬)

2601. நெஞ்சிடைக் கவலையு நீங்கிற் றேதஞ்செய்
வெஞ்சினக் கூற்றமும் விலகிற் றெம்பிரான்
பஞ்சடி கூறுடைப் பழசை நாயகன்
செஞ்சடைப் பிரானடி சேர்ந்த பின்னரே. (௫௭)

2602. பின்னிய குழன்முடிப் பேதை பாகனார்
பன்னிய மறையொலிப் பழசை வாணனார்
பொன்னடி துதித்தபின் பொய்யனேன் மற்றோ
ரன்னைதன் வயிற்றுதித் தலற லற்றதே. (௫௮)

2603. அற்றமின் மதிக்கலை யணிந்த வேணியன்
நற்றமிழ்ப் பழசைவாழ் நாய கன்வசை
சற்றுமில் லவனடி தாழ்ந்த வென்றலை
மற்றொரு தேவர்க்கும் வணக்கஞ் செய்யுமே. (௫௯)

2604. செய்யுறு பழசையிற் சிறக்கு நாயகன்
மெய்யறி வானந்தம் விளங்கு மூர்த்தியா
மையனை யன்றிமற் றவரை நாயினேன்
கையுமஞ் சலிக்குமே கண்ணு நோக்குமே. (௬0)

வே று.

2605. நோக்க மூன்றுடை நோன்மைய னுன்மறை
யாக்கும் வாய னருளும் பழசையான்
தேக்குந் தேனினுந் தித்திக்குஞ் சீர்புகழ்
வாக்கு வந்திட மாய்ந்ததென் றுன்பமே. (௬௧)

2606. துன்ப மேயடர் சோற்றுத் துருத்தியாம்
புன்பு லாற்புழுக் கூடு பொறுக்கிலே
னின்ப மேவு மெழிற்பழ சைப்பதிக்
கன்ப னேயெனை யாட்கொண் டருள்வையே. (௬௨)

2607. வையு லாமயின் மானு நெடுங்கணார்
மையல் வாரியின் மாழ்கி யழுந்துவேன்
பைய ராவணி பட்டிலிங் கேசவென்
னைய வுய்ய வளித்தருள் செய்வையே. (௬௩)

2608. செய்யி ருக்குந் திருப்பழ சைச்சிவா
நெய்யி ருக்கு நெறிக்குழல் பாகனே
பொய்யி ருக்கும் புலைத்தொழி லேற்கருண்
மெய்யி ருக்குமுன் னன்பருண் மேவவே. (௬௪)

2609. மேவி ராமன் வணங்கும் விமலனூர்
தேவ தேவர் சிறக்கும் பழசையார்
தாவின் மெல்லடித் தாமரை வாழுமே
தீவி னைச்சிறி யேனுட் சிலையினே. (சுரு)

2610. சில்ல ரிச்சிலம் பாரடிச் சேயிழை
புல்லும் பாகன் புரக்கும் பழசையான்
எல்லை யில்வினை யாவு மடியனேற்
கொல்லை நீக்கின னேரில் வியப்பிதே. (சுசு)

2611. இதையந் தீமெழு கென்ன வுருகுவார்
புதைகொள் கண்ணியர்க் குப்பொற் பழசையிற்
சிதைவி லான்றனைத் தேர்கிலர் காலனு
ருதைய மெய்தினெங் கோடி யொளிப்பரே. (சுஎ)

2612. ஓடு வீருழல் வீரைம் பொறிக்கிரை
தேடு வீர்கிடை யாமற் றிகைத்துப்பின்
வாடு வீரிங்கு வம்மின் பழசையைக்
கூடு வீரெங்கள் கூத்தனை வாழ்த்தவே. (சுஅ)

2613. கூத்த யர்ந்து குழைந்து கசிந்துநின்
றேத்தும் பட்டிலிங் கேசனை நேசனைத்
தோத்தி ரஞ்செய்ம்மின் றொல்லை வினையறக்
காத்த ளிப்பன் கருணை வடிவனே. (சுகூ)

2614. வடியுண் கண்ணியோர் கூறன் மழுவலான்
பொடிகொண் மேனியன் பூம்பழ சைப்பிரா
னெடிய பாத நினைப்பவர் யாங்கணு
முடிவி லின்பத்து மூழ்கி யிருப்பரே. (எ0)

வே று.

2615. இருவி னைக்கிட மாயவிப் புழுக்குடி லினிதென்
றொருவி டாதெடுத் துழலுவே னியமனு ருடன்று
தருவி நாளையென் முன்வரி லென்செய்வேன் சுருதி
மருவி யேத்துநற் பழசையம் பதியுறை மணியே. (எக)

2616. மணியை மாதவர் முத்தியைப் பழசைநன் மருந்தைப்
பணியை நேரல்குன் மாதரார் மையலிற் படுவார்
பிணியை மெய்யடி யார்நிதிச் சேமத்தைப் பெட்பி
னணியை யாசையை மாற்றியா னடைவதெந் நாளே. (எஉ)

2617. நாளெ லாம்வறி தாய்ச்செல வஞ்சரை நட்டு
வாளெ லாமணி கண்ணியர்க் குருகிமா ழாந்தேன்
றோளெ லாமர வணிந்தவா பழசைவாழ் தூயா
ஆளெ லாம்வல்ல வுனக்கெனைப் புரப்பது மரிதே. (எஙு)

2618. அரிமு ரட்கருங் கேழலா கியுமல களித்தோன்
வரிசி றைப்பெரு வாரன மாய்முன மேவித்
தெரிவ தற்கரி தாகிய பழசையான் றிருத்தாள்
பரிவு பெற்றவோர் பற்றிலார்க் கெளிதகப் படுமே. (எச)

2619. படரு மண்புன லனல்வளி விண்ணெனப் பட்டங்
கடரு மவ்வைந்தி னேடிய மானனிந் தருக்கன்
றொடரு மெட்டுரு வாகிய பழசையான் றேற்று
மிடரும் வீணுமென் றனக்கிலை யாக்குவ னினியே. (எரு)

2620. இனிய வாசக மிதுபறி தலையிக லருகர்
முனித ரும்புத்தர் சூனிய வாதியர் முதலீர்
புனித மாமறைப் பழசைவாழ் பூரண னவனே
நனிசெய் முத்தொழிற் றலைவன்யா வருக்கு நாயகனே.(எசு)

2621. நாயி னேனுக்கு மின்னருள் சுரந்தவ னலஞ்சேர்
தூய மாதவர் சூழ்பழசைப்பதித் தோன்றல்
பாயும் வெண்கதி ரொண்மணிப் பந்தரொண் காழி
மேய பிள்ளையார்க் கருளினு னென்பதும் வியப்பே. (எஎ)

2622. ஏத மாறுந்தென் கூடலிற் பழசைவா ழிறைவா
ஓது நாவொரு பாணற்கா விறகெடுத் துழன்றாய்
வாத வூரெம தடிகட்கா மண்சுமந் துடலிற்
போத வோரடி பொறுத்தது போதுமோ வுனக்கே. (எஅ)

2623. உன்னு வோர்க்கருள் சுரக்குநற் பழசையுத் தமனே
பன்னு மப்பர்தம் வயிற்றிடை நஞ்சினைப் பதித்தாய்
மன்னு காழியர்க் கமுதுவைத் தாயிது வஞ்ச
மன்ன தாலன்றே நினக்குமு ணஞ்சமா கியதே. (எகூ)

2624. ஆக மாதுற வருளிய பழசையம் மானே
யேகி நாவலூ ரார்மணந் தவிர்த்ததென் னினிநீ
போக தூதென வவர்சொலு முனம்புரி குழல்பால்
வேக மாகவே நடந்ததென் னிதுவிளம் புவையே. (அ0)

வே று.

2625. விளம்புவதொன் றுளதுனக்கு மடநெஞ்சே கேட்டி யருள் வேட்டுநின்று, வளம்புகுநன் மணச்சோலை வளர்பழசைப் பெருமானை வானோ ருய்யத், தளம்புதிரைக் கடனஞ்ச முண்டவனைக் கண்டுகரந் தலைமேற் கூப்பிக், களம்புனையா தாடுவை பாடுவை யவன்றிருத்தாள் காணுமாறே. (அக)

2626. காணியிது வெனமண்ணைக் கருதியரைக் காணியருள் வேறுங் காணு, தூணியைபொன் மனைமாத ரெனவுழல்வீ ருய்யுமா றுரைப்பக் கேண்மின், சேணியைகற் பகந்தாழுஞ் செழுஞ்சோலைத்

திருப்பழசைத் தேவதேவன், வேணியிலொண் புனறரித்தான் றாள டைமி னுங்கள்வினை வீயத் தானே. (அஉ)

2627. வீயாத பெருவாழ்விங் கடிமைநா யேற்கிதனின் மேலு முண்டோ, வேயார்மென் றடந்தோளி யொருபாகன் றிருப்பழசை மேவு மையன், தீயார்தம் புன்சமயத் தீநெறியிற் செலுத்தாது தேவர் வாய்வாழ்த், தோயாத தன்னடிக்கே யெனைப்புகுவித் தாண்ட தையிங் குணருங் காலே. (அங)

2628. காலனுர் விழச்சினந்த கழற்காலா பழசைநகர்க் கட வுள் கேட்டீ, கோலவா ளரக்கன்முடி நெரித்துமண்டோ தரிக்கின்பங் கொடுத்தாய் கட்புச், சாலவியற் பகைபாற்சென் றென்னேற்றாய் பொன்னனையா டனக்கென் செய்தா, யேலவிவை கண்டலவோ வம் மையுடற் பாதிகொண்டா ளென்செய் வாளே. (அச)

2629. செய்யேந்துந் திருப்பழசை யெம்பிரா னுடையின்றிச் சென்னியோடு, கையேந்தி யரவசைத்துச் சண்ணித்த நீறுகவின் புதைப்பக்காள, மையேந்து மிடற்றெருடுசென் றிடுபலியேற் றான் கண்ட மாயோன் மாழ்கிப், பையேந்து மரவல்கு லாவானேற் பெண் கள்மயல் பட்டிடாரே. (அரு)

2630. பட்டாரு மிடையாளைப் பாகத்து வையாயேற் பழசை வாணு, கட்டாருங் குழலார்நீ பலியேற்ற ஞான்று மனங் கலங்கிச் சோர்ந்தார், முட்டாத மால்கொண்டா னெடுமாலா தலினழகு முழு துங் கண்ணுற், றெட்டாமன் மலர்மாதர் முதலரம்பை மாதரெல்லா மிகல்செய் வாரே. (அசு)

2631. செய்யிருக்குங் கழைகுழைக்கு மைங்கணைக்கா ளைவிழியாற் சினந்து சுட்டீ,ரையிருக்குஞ் சடைதரித்தீர் விற்கருஞ்செங் கற்றேய்த்த வாடை கொண்டீர், மையிருக்கு மணிமிடற்றீர் துறவி யர்சூழ் பழசைநகர் வாழ்வீர் நீவிர், பொய்யிருக்கு மருங்குலாண் முலைச்சுவடு கொண்டதென்னை புகலு வீரே. (அஎ)

2632. வீரமழு வலந்தரித்த பழசைநகர்ப் பெருமானே வெய்யோர் மேவு, மாரவொரு மூன்றுமெரித் தம்மூவர் நிரயம் வீழ்ந் தாழா தாண்டாய், சோருமறி வுடைநாயே னின்றிருத்தா ளன் றியொரு துணையுங் காணேன், சீரருடன் தாண்டிடினுய்ந் திடுவேன் கை விடில்வாடித் தியங்கு வேனே. (அஅ)

2633. வேனில்வேள் கணைகிழிக்கப் பொறிவழிச்சென் மன மலைப்ப வெம்பி வாடிப், பானலார் கண்ணியர்வாய்ப் பட்டுழலு வேற் குமருள் பாலிப் பாயோ, கானவார் பசுங்கதலி கமுகுநிறை படப்பை யிற் போய்க் கழுநீர் பாயுந், தேனவாம் பொழிற்பழசைச் சிவபுரத் தில் வீற்றிருக்குஞ் செம்பொற் குன்றே. (அகூ)

2634. குன்றனைய முலைமடவாள் கூறனை நீறனைக் கொன்றை வேய்ந்த, பொன்றிகழ்செஞ் சடையானை விடையானைக் கருமிடற்றுப் புனிதன் றன்னை, வன்றறுகட் கூற்றொடுங்கச் சினந்தானை மானேந்து மலர்க்கை யானை, கன்றுகுணி லாக்கொண்டோன் காணுனைப் பழசைநகர்க் கண்டே னியானே. (கூ0)

வே று.

2635. கண்ட பேர்க்குடன் காணு மற்புதம்
பண்ட மாடமார் பழசை வாணனுர்
வண்டு லாங்குழல் வல்லி பாகனுர்
தொண்ட னேற்கருள் சுரந்த வாற்றையே. (கூக)

2636. ஆற்ற வஞ்சினே னளவி னுளெலாம்
போற்றி வைத்தவிப் புழுக்கு டம்பையைக்
கூற்ற நாடுமுன் கூவிக் கொள்ளுவாய்
பாற்ற டங்கள்சூழ் பழசை வள்ளலே. (கூ௨)

2637. வள்ள லேயினி மற்றொர் பற்றிலேன்
றள்ளு வாயெனிற் றளர்வ தன்றிப்பின்
கொள்ளு வாரிலை கூவிக் கொள்ளுவாய்
பள்ள வாவிசேர் பழசை யப்பனே. (கூங)

2638. அப்பு லாஞ்சடைப் பழசை யையனே
துப்பு லாமிதழ்த் தோகை பாகனே
கப்பு லாவுடல் கழிய நின்னருள்
வெப்பு லாமனத் தேற்கு வேண்டுமே. (கூச)

2639. வேண்டு நந்திநீ விலகெ னச்சொனாய்
பூண்ட வன்புடைப் புகலி வள்ளற்கா
மூண்ட வென்வினை விலக முன்னினு
மீண்டிய் வேனருள் பழசை யெந்தையே. (கூரு)

2640. எந்தை யெம்பிரா னெங்கு முள்ளவன்
நந்த லில்சுக நல்க வேண்டினால்
வந்த நாவலீர் வம்மி னிங்கனம்
பந்த நான்மறைப் பழசை பாடுமே. (கூசு)

2641. பாட வேண்டுநின் பழசை யம்பதி
கூட வேண்டுநின் கூட்டத் தார்களைத்
தேட வேண்டுநின் செம்பொற் சீரடி
வீட வேண்டுமென் வினைகள் யாவுமே. (கூஎ

2642. வினையி லாதவன் விடையொன் றுள்ளவன்
புனைக ருங்குழற் பூவை பங்குளான்
றனைய டைந்தனன் பழசை யந்தலத்
தினைவு தீர்ந்தன னின்ப மெய்தியே. (௯௮)

2643. எய்யு மாரனை யெரித்த வீரனார்
பைய ராவணிப் பட்டி லிங்கர்தஞ்
செய்ய தாண்மலர் சிரத் திருத்தியே
யுய்ய வேண்டுவீ ரொருங்கு வம்மினே. (௯௯)

2644. வம்மி னெந்தைவாழ் பழசை வந்துநீர்
கைம்ம லர்கொடு காலிற் சூட்டிநின்
றெம்மை யாளென வெளிமை யின்மைவெம்
பொய்ம்மை தீர்ப்பனம் பூவை பாகனே. (௧00)

திருப்பழசைப்பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.



சிவமயம்.

# *பூவாளூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி.

## சமயாசாரியர் துதி.

### விருத்தம்.

2645. நிறைவளருந் தவஞானப் புகலிவருஞ் சிவஞான நிமலக் கன்றைத், துறைவளருங் கருங்கடற்கல் லொடுமிதந்த தமிழ்க்கட லைத் தூய சைவ, முறைவளரும் புக்கொளியூர் முதலைவாய்ப் பிள்ளை தரு முதலைத் தெய்வ, மறைவளரும் பரிமிசையெம் மிறைவரச்செ யிறையையன்பின் வணங்கு வாமால்.

## நூல்.

2646. திருவார்பொற் பூவாளூர்ப் பங்குனிமா நதிக்கரையின் றெனுது வைப்பிற், றருவார்கூ விளவனத்துக் குங்குமசுந் தரியொரு பாற மயங்க வைகும், குருவாருஞ் சடைமோலித் திருமூல நாதர் பதங் குறித்து வாழ்த்துற, கருவார்வெம் பவக்கடனீந் திடலாகு மிவ்வுரைமெய் காண்பாய் நெஞ்சே. (௧)

2647. நெஞ்சமே பொறிவழிச்சென் றலையாதோர் கணப்போது நின்றுகேட்டி, வஞ்சமே யழுக்காறே வரும்பொய்யே முதலனைத்து மறத்தி மேது, கஞ்சமெய்ந் தடர்சூத நிழலுறங்கும் பூவாளூர்க் கட வுள் பாதந், தஞ்சமே யெனச்சென்று பற்றுதிபற் றறுத்துய்தி தக்க தாமே. (௨)

2648. ஆமாறு மனக்கசிந்து நீறணிந்து கண்மணிபூண் டஞ்சு மெண்ணிக், காமாரி தனைச்சிறந்த கௌமாரி நாயகனைக காம ரூர்வாழ், தேமாரி பொழிகொன்றைச் சடைமோலிப் பெருமானைச் சென்று தாழார், மாமாயக் கடலுழல்வர் போமாறென் மனமவன்றுண் மதுக்கு மாலோ. (௩)

2649. ஆலும்விட மமுதாக்கும் காமர்பதித் திருமூல வமல னூர்க்குச், சாலுமணிக் குழையொருபா றோடொருபா னமுத்தொரு பாற சாப்ப மோர்பா, லலுமுறகுங் குமமொருபா னீறொருபாற பட் டொருபா லியைந்தா லோர்பா, லாலமொருபாற சிலம்பொருபாற கழ லொருபாற பண்ணுளு மொன்று மனமே. (௪)

---

* இந்நூல பூர்த்தியாகக் கிடைக்கவில்லை.

2650. அன்றினர் புரமெரித்த வம்மானே செம்மேனி யமலத் தேவே, மன்றுளா டொருமணியே மாவாளும் பூவாளூர் வயங்குஞ் சோதி, வன்றிமா மலத்தழுந்து மாறேபோன மடவார்த மயற்சேற் றழுந்தேற், கொன்றுமா வினைமதற்காய் நின்னுதற்கட் கிலக்காக வுறு நா ளென்றே. (ரு)

2651. என்றுநெடு மாலயனுக் கரியபிரா னென்றுமன்பி லிரு ணெஞ் சத்தார்க், கென்றும்வெளிப் படானென்று மனவாக்கிற் கெட்டாதா னென்று மோலிட், டென்றுமறை விரித்துரைப்பக் கேட்டிருந்தும் பேதைமையோ யாதோ வென்னெஞ், சென்றுமொரு பூவாளூர்ப் பெருமானைப் பேசவிருப் பெய்து மன்றே. (௬)

2652. அன்றுவட வானிழற்கீ ழமர்ந்தறவோர்க் கறமுதனுன் கருணு மண்ணல், கொன்றைநெடுஞ் சடைமோலித் தேவாநற் பூவா ளூர்க் கோவா முத்தே, கன்றுகொடு விளவெறிந்தோன் காணருஞ் செஞ் சிலம்பணிபூங் கமலத் தாளென், புன்றலையி லுறப்பதித்துப் புரிந்தடிமை கொள்ளுவதெப் போது தானே. (எ)

2653. போதாருந் தடஞ்சோலை மயிலாலக் குயில்கூவும் பூவா ளூர்வாழ், காதார்வண் குழையுடையாய் கட்டங்கா காபாலீ கால காலா, வோதாயோ நின்னுண்மை பொன்செய்கொழுக் கொடுவரகுக் குழாவின் றேனின், பாதார விந்தமலர் பற்றிவிடா விருவினையும் பாற்று மாறே. (அ)

2654. பாறுடும் வெஞ்சூலப் படையானை யெவ்வுலகும் படைத் திட் டானை, யேறுடுங் கொடியானைப் பெருமானைச் சிறுமானை யேந்து னேச், சேறுடு தண்கழனிப் பூவாளூ ருடையானைச் சிறப்பிற பாடார், மாறுடும் பசுக்கடமைப் பாழ்வாா பலம்லார்தம் மயக்கி னுலே.

2655. மயலாருந் திரைக்கடலுட் பட்டலையு மாறேபோல் வாரார் கொங்கைக், கயலாருங் கண்ணியர்மாற் கடலிடைப்பட் டிடாதுகடைக் கணித்தல்வண்டும், வயலாருஞ் செங்கமலத் தேனோடி மடையுடைக்கும் வண்பூ வாளூர்ப், பயலாரு மாதுடையாய் வண்சங்கக் காதுடையாய பாவமேயறகே. (௧௦)

வேறு.

2656. பாவிய கரும மின்றியே பசுவும் பதியும்பா சமுமென வுரைக்கு, நாவினன் மதமே கொண்டுழலாம னுயினேற் கென்றருள் புரிவாய், காவியங் கண்ணி கூறுடைக கனியே காமர்பூம் பதியுறை முதலே, தீவிழிப் பகுவாய்க் கூறறுயிர் குடித்த சேவடிச் சிவபராஞ் சுடரே. (௧௧)

2657. சிவபராஞ் சுடரே யுள்ளகந் தெவிட்டாத் தெள்ளமு தேசு வைக் கனியே, யவனவ ளதுவென் றுரைத்திடும் புவன மாகியு மதற குவே றுனாய், நவவடி வுடையாய் காமர்பூம் பதியாய் நரியினுங் கடைப்

படு வேற்குத், தவலரு மூல மலச்செருக் கொழிந்து சத்தினி பாத மென் றுறுமே. (கஉ)

2658. உறுவர்க டுதிக்குங் கூவிள வனத்தா யுணர்வுடை யோர்க் கெளி தானாய், சிறுபுழுப் பொதிந்த புன்புலா லுடைய தேகமே நானெனக் கருதி, வருமிரு வகைச்சார் புடங்குறங் கொண்டு வரும வத் தைகடொறுஞ் சென்று, பெறுவதொன் றின்றி யலையுநா யேனின் பிறங்கருள் பெறுவதெந் நாளே. (கங)

2659. நாளொலா மோடிக் கற்பசுக் கறந்து நல்லவர் நகைக்குமா திரிந்தேன், மீளவு முழல்வேன் வல்வினை ஞான மெல்வினை ஞானமு மில்லேன், பாளைவாய்க் கமுகின் பசுங்கழுத் தொடியப் பருவரால் குதிகொளுங் கழனி, வாளுலாம் பொழில்சூழ் காமர்பூம் பதிவாழ் மாணிக்க மேயெனக் கருளே. (கச)

2660. அருளெனப் படுவ தெவைக்குமே லென்ன வறிகிலே னருளலா வெவையும், பொருளென மதித்தேன் புலையரும் விரும் பாப் புன்புலாற் சுமைவெறுப் பில்லேன், கருள்படு மனத்துக் கடைய னேற் குனது கருணைவந் துதவுவ தென்றோ, மருளற முனிவர்க் கருளிய காமர் வளம்பதி விளங்குமொண் பொருளே. (கரு)

2661. பொருந்துசன் மார்க்க நெடுஞ்சக மார்க்கம் புத்திர மார்க் கமு மில்லேன், திருந்திய தாத மார்க்கமு மில்லேன் றீவினை மார்க் கமே யுடையேன், கருந்தலைப் பூவை மூவர்பாட் டெடுப்பக் காமரு கிள்ளைகேட் டுவக்கும், பெருந்தடம் பொழில்சூழ் காமர்பூம் பதிவாழ் பிஞ்ஞகா பேரருள் புரியே. (கசு)

* * * * *

வே று.

2662. ஏலக் குழலியோர் பாகம் போற்றி யெனக்கு வெளிப் படும் பாதம் போற்றி, மாலைப் பிறைமுடி வேணி போற்றி மான்மழு வைத்த கரங்கள் போற்றி, காலைக் கதிர்த்திரு மேனி போற்றி காம னைக் காய்ந்தகண் போற்றி யென்றே, யோலிட் டருமறை தேடும்பூவா ளூரரை யான்சொல்லி யுய்வ தென்றே. (கஎ)

2663. இன்றமிழ் ஞானசம் பந்தர் பாலு மெய்திய நாவுக் கரசர் பாலும், தென்றமிழ் நாவலூரச் செல்வர் பாலுஞ் சிற்றன்பு சிந்தை யிற் செய்து மில்லேன், குன்றமவில் லாக்கொண்ட புண்ணியனே கோதறு காமர் பதிக்கண் வாழ்வே, மன்றுணின் றாடிய வல்ல சோதி மாறிலன் புள்ளத் துறுதல் செய்யே. (கஅ)

* * * * *

வேறு.

2664. உணர்வினுக் குணர்வாம் பூவா ளூரமர் தம்பி ரானுர்
மணமலி முடியினீரு மரகதப் புல்லுங் கொள்வான்
குணமலி கரத்து நவ்வி குறித்தெட்டி யெட்டி வீழும்
பணவரப் பள்ளி யான்சேய் பட்டபா டறிந்தி லாதே. (௧௯)

* * * * *

2665. என்னென வுரைக்கேனையா வேழையேன் புன்சொ னிற்கு
நன்னய முறையோ நல்லோர் நாடுவா சகமோ வன்பு
துன்னிய வேடர் கோமான் சொற்றிடு முகம னேமற்
றுன்னிடின் வில்வக் கானத் துறைதிரு மூலத்தேவே. (௨௦)

2666. தேவர்கள் சிகைபூ ணூல்போற் செய்யமா ரிலங்குந் தோற்றந்
தாவில்செஞ் சடைக்கா டுற்ற தறுகண்வா ளரவு கக்கப்
பாவுகார் விடமோர் பாங்கர்ப் பாய்ந்தொளி வீசல் போலு
மோவில்பல் லறஞ்சூழ் பூவா ளூரமர் கடவு ளார்க்கே. (௨௧)

* * * * *

வேறு.

2667. காலைக் கதிராய்ச் சில்லுயிர்க்குக் களைவெண் மதியாய்ச் சில்லுயிர்க்கு, மாலை யிருளாய்ச் சிலவுயிர்க்கு வைகும் பொருணீ யென்றறியேன, சோலைக் குயில்கூ வொலியெடுக்குந தொலையா வள மைப் பூவாளூர், வேலைக் கருநஞ் சுறைகண்டா விமலா னந்த மெய்ப் பொருளே. (௨௨)

* * * * *

2668. காட்டிற் பயிலும் பசுங்கிளியைக் கருதி வளர்த்தோர் பூசையிடங்,கூட்டிக் கொடுப்பா ரளுமுண்டோ கோவே யாவா கேவ லத்தி, னீட்டித் திருந்த வெனைச்சகள நிலையிற் படுத்து வளர்த்தெ மன்பாற், காட்டிக் கொடேலுன் னடைக்கலம்யான் காமர் பதுவாழ் கண்ணுதலே. (௨௩.)

* * * * *

2669. மயங்கிப் பிறவிக் கடல்வீழ்ந்து வலிய வினையாந் திரை யலைப்ப, வுயங்கிக் காமச் சுழலகப்பட் டுய்யும் வகைசற் றறியாதே, தியங்கிக் கிடக்கு நாயேற்குன் செம்பொற் பாதப் புணைதாராய், வயங் கிப் புரிசை யடுத்தோங்கி வளர்கல் யாண புரத்தரசே. (௨௪)

---

கணபதிதுணை.

# மதுரைத்

# திருஞானசம்பந்தசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி.

## விநாயகர்துதி.

2670. ஓத வினிய தமிழ்க்கூட லோங்கு ஞான சம்பந்தர்
பாத யுகமே லொருபதிற்றுப் பத்தந் தாதித் தொடைசாத்தப்
போத மலர்நா ரினிதுதவும் பொல்லா வினையிற் புக்குழலு
மாத ரகஞ்சா ராவொருகோட் டாம்ப லடித்தா மரைமலரே.

## நூல்.

2671. சீர்பூத்த திருமுகமுந் தேவிமுலைப் பால்பூத்த செய்ய வாயு, மேர்பூத்த வருள்பொழியு மிருவிழியும் பொற்றாள மேந்து கையும், பேர்பூத்த தமிழ்க்கூடற் றிருஞான சம்பந்தப் பெருமான் செம்பொற், றார்பூத்த சிறுதண்டைத் தாளுமுளத் துள்ளிவினை தள்ளி வாழ்வாம்.

2672. வாழிநெடு வழுதிபுறக் கூனிமிர்த்த நினக்கரிதோ மாறாச் சன்ம, வாழியுழல் வேனகக்கூ னிமிர்ப்பதுதென் கூடலம ரமல வாழ்வே, ஆழியித ழுமையளித்த வள்ளநிறை பரஞான வெள்ள முண்டாய், காழிவளர் மாமணியே கவுணியர்தங் கற்பகமே கலைவ லோயே. (உ)

2673. கலைபுகழா யிரமுகத்தெய் வதமந்தா கினியுடைய கட வுண் மற்றை, யலைபுனலாட் டவுமகிழு மதுபோற்றென் கூடலகத் தன்பர் வாழ்வே, விலையில்கவு ணியமணியே வேதாதி முழுதுடைய விமல நீயோ, தலையடையாச் சிறியேன்செய் புன்றுதிக்கு மகிழ்கூர்த றக்க தாமே. (ங)

2674. தக்கபடி யன்றியிரும் படியிடந்து வரையுருட்டிச் சலதி மோது, மிக்கபுனற் பேர்யாற்றிற் பல்லோருங் கரையேறி விளங்கச் செய்தாய்,தொக்கசுவைத் தமிழ்க்கூடற் கவுணியக்கன் றேயொருவே ன்றொடர்ந்து நாளும், புக்கபவப் பேர்யாறுங் கரையேறச் செயினின க்குப் புகழன் றாமோ. (ச)

2675. புகழ்பரவு தமிழ்மதுரைப் புகலிகா வலசலசப் பூந்தார் மார்ப, நிகழ்கருணைக் குரவமறை நிறைசெல்வ பரஞான நேய வாய, வகழ்வினையி ருளத்தமரு மமரசிறு சிலம்பொலிக்கு மம்பொற் றாள, திகழ்வினையி லமணரென வடியன்மல நினக்கெதிராய்ச் சிதைவ தென்றோ. (ரு)

2676. என்றுநிகர் மணிமாடக் கூடலிட மோவினையி லெண்டோ ளம்மா, னன்றுதிரு வரத்துறையி லளித்தமணிச் சிவிகைகொலோ வருநோன் புற்று, நன்றுமிகு சிவபாத விருதயர்தந் திருத்தோளோ நாயே னுள்ள, மொன்றுதலி னீயுறைய மழவிளங்கன் றேமணியே யுவட்டாத் தேனே. (௬)

2677. தேனூர்க்கு மலர்த்தடத்து மோட்டெருமை பாயவெரீஇச்சினந்த வாளை, கானூர்க்குங் கற்பகத்தின் கழுத்தொடிய மீப்பாயுங் கணிசூழ் கூடல்; வானூர்க்கும் பெரும்புகழாய் வண்புகலிப் பெருந்தகையே மறையோர் பேறே, யானூர்க்குங் குடியல்லே னினக்கடியேனுய்யுநெறி யருள்க வின்றே. (௭)

2678. அருண்மிகுபொற் றில்லைமூ வாயிரருங் கணநாத ராக வாங்கே, தெருண்மிகுநன் னீலகண்டப் பாணருக்குக் காட்டியசீ தேமாஞ்சோலை, பொருண்மிகுவிண் ணுலகளக்கும் புகழ்க்கூடற் சம்பந்தா புலவரேறே, வெருண்மிகுநா யேன்காண வொருநினைக்காட் டாதிருக்கும் விதமற் றென்னே. (௮)

2679. என்னையிவன் றனையடிமை கொள்கென்பா னடியார்தாமில்லை யோவென், றன்னையனே யாய்கூடற் சம்பந்தா நீநினையே லலகிலாச் செம், பொன்னையுடை யாருளதன் வரவைவெறுத் தாருமெவர் புத்த ராணோர், முன்னையடி யாராகக் கொண்டவனு நீயன்றி மொழியின் யாரே. (௯)

2680. மொழியுமறை யாயிரமு மெண்ணிறந்த மறையோர்க்கு மொழிந்தா சங்கை, யொழிதரவைந் தெழுத்துமே யந்திரமந் திரமென்று முணர்த்தி நின்றாய், பொழிநறவப் பூஞ்சோலைப் புகழ்க்கூடற் சம்பந்தா புகலடைந்தேன், வழிதருமத் துணைவேண்டா வைந்தெழுத்தே யுணர்த்துகெனின் வருத்தமென்னே. (௧௦)

வே று.

2681 வருந்துபொய்ப் பவஞ்ச வாழ்க்கையை மதித்துன் மலரடி யிணைமதி யாதே,யிருந்தனூர்ப் பிறந்தை யுற்றுழல் வேன்கொ லின்னமு மிடையறு வன்பி, னருந்தவர்க் கரசே யாலவா யமுதே யருட்கவு ணியர்குலக் கன்றே, திருந்துபல் லோர்க்குஞ் சிவகதிப் பரிசு சேர்தர நல்குதே சிகனே. (௧௧)

2682. தேசினுற் பொலிநின் றிருமணத் தடைந்த செழுந்தவத் தவரொடும் விரைந்து, கூசிலா தடியே னடைந்திலே னடையிற் குலவுவா னவர்க்கெலா மரிய,வாசிலாப் பதப்பே றெளிதினி முன்னியாவதென் னுவவென் செய்கேன், மாசிலா மணியே மதுரைவாழ் தருவே வளர்கவு ணியர்குல விளக்கே. (௧௨)

2683. குலவுநின் கருணை பெரியர்பா லன்றிக் குணமிலாச் சிறியனேன் பாலு, நிலவுறப் புகுதல் வழக்கருண் மதுரை நிறைதிரு ஞான

சம் பந்தா, மலர்தலை யுலகில் வருபெரு வெள்ளம் வாரிவாய்ப் புகுவ தே யன்றிப், புலர்தரு முறவி யளேயினு மோடிப் புகுதனீ யறிந்திலாய் கொல்லோ. (கங)

2684. கொல்லையா னுகைக்குங் குழகனை ரிடப்பால் குடிகொளுங் கோதைமெல் வருப்பு, முல்லைநேர் நகையாண் முலைபொழி தீம்பான் முற்றுமுண் டாங்குமிழ்ந் தாங்கு, வல்லமா மறைநற் றமிழ்பொழி மதுரை வள்ளலே புகலிமா மணியே, யில்லையன் பென்பா லாயினும் புரத்த லிலகுநின் னருட்கியல் பன்றே. (கச)

2685. இயறெரி புலவர் புகழுமோத் தூரி லேற்றுவன் பனை யெலா மிலகி, மயலறு கதியிற் புகவருள் புரிந்தாய் மற்றவை செய்த வன் பெண்ணே, புயறவழ் குடுமி மாளிகை மதுரா புரியுறை முத் தமிழ் விரகா, வுயலுற வெனையு மங்ஙன மினைந்தாண் டென்னடி யிருத் துத லழகே. (கரு)

2686. அழகிய மயிலை யத்தியைப் பூவை யரசுசெய் தனையுத வாமை, பழகிய பெண்ணை பலவுமின் குரும்பை பலகொளப் பாடினை பற்பல், கழகமுற் றோங்கு மாலவா யமுதே கவுணியர் பெருங்குல விளக்கே, மழவிளங் களிறே யென்மனந் திருத்தின் மற்றுமப் புகழொ டொன் றாமே. (கசு)

2687. ஒன்றுவெங் காமம் வெகுளியுண் மயக்க மோங்குமும் மதமெனக் கொண்டு, கன்றுமென் மனமாங் களிறகல் பவஞ்சக் காடெலா முழிதரு மதனை, வென்றியா னடக்க வலியிலா மையினுன் மேதகு கூடலென் றுரைக்குங், குன்றில்வாழ் தெய்வக் குருபர சமய கோளரி சரணடைந் தனனே. (கஎ)

2688. அடையல ரஞ்சுஞ் சூற்படைச் சொக்க ரங்கயற் கண் ணியோ டமர்ந்த, நடைகெழு கூட னன்மறைக் கொழுந்தே நண்ணி னர்க் கெய்ப்பினில் வைப்பே, யிடையறு வன்பி னெண்ணிலார் குழுமி யேத்துநின் சந்நிதா னத்திற், கடையனேன் புரியன் பறுதுதி நாணங் கழித்தெதி ரடையவும் பெறுமே. (கஅ)

2689. பெறலருஞ் செல்வ நின்னடி யேத்தும் பெருமையே யென்பது தெரிந்துந், திறல்கொண்முற் றவமில் லாமையால் வருந்தித் திகைத்திடு நெஞ்சமென் செய்கே, னறவருள் விளக்கே யாலவா யமுதே யற்புதக் கற்பகக் கனியே, புறவவண் களிறே போற்றுவார் பொன்னே பொங்குபே ரருட்பெருங் கடலே. (கக)

2690. கடல்விளிம் புடுத்த கண்ணகன் புவியிற் கழிதரு பொய் யெனு மெய்யை, யடன்மிக யானென் றவாய்வினைச் சிமிழ்ப்புண் டவத்தைக டொறும்புகு மடியே, னுடலவி மான முதலிய வெறுத் துன் ஞெண்சிலம் படியடை குவனோ, மடல்விரி கமல வாவிசூழ் மது ரை மாநகர்க் கவுணியக் கன்றே. (உ0)

வேறு.

2691. நன்றி யொறுவே னிவண்வருந்தக் கடவ னேவங் கயற்கண்ணி,யொன் றிமகிழ மொருமூதல்வ னுறைதென் கூடற் சம்பந்தா, நன்றி வருத்து குளிர்க்கன்றித் தொண்டர் குழாமி முறைமிடு, னன்றி யுதவு நீலகண்ட நவின்று தீர்த்த நல்லோயே. (உக)

2692 நல்லாய் கூடற் சம்பந்தா நல்லார் போல நமைத்தொழுநீ, கல்லா யென்று கைவிட்டாற் கடையே னுய்யு நெறியுளதோ, செல்லா மழைபெய் யாதொழிமிற் றிரைசூழ் புவிக்குய் வகையுண்டோ, வல்லா யுறவென் றாழுதய மாகா விடிற்கண் ணறிவதெவன். (உஉ)

2693. அறிவ தறியும் வகையுணர்த்தி யால வாயி னகத்தொருநீ செறிய வுறைத லாற்புகலித் தேவா வடியர் சிறந்துய்ந்தார், வெறிய ரைமி னேனொருவேன் வெய்யோ னுதயத் தெவர்விழியுங், குறிகொ ளொளியே யடைமவிருள் கூகை விழிக ளடைவனபோல். (உ௩)

2694. அடைய வினிமை யாருளுநின்பொன் னடிக ளடைந்தே னதற்கேற்ப, விடைய ருக வன்மில்லே னெனினுங் கூடற் சம்பந்தா, தடைமி லடியா னினக்கென்றே சாற்று நிற்ப ரெனையுலகர், மிடைசில் லுறுப்பி லார்தமையு மக்க ளென்றே விளம்புதல்போல். (உச)

2695. விள்ளுங் கருணைப் பெருந்தகையே விண்டாழ் பொழில்சூழ் வியன்மதுரை, யுள்ளு மடியே னுள்ளுமுறை யொருவா பெருமூத் தமிழ்விரகா, தள்ளு மமணர் குலகாலா தண்டைத் தாளா தனிமுதலே, துள்ளுங் கயல்சேர் வயற்புகலித் தோன்றா லென்முன் றோன்றாயே. (உ௫

2696. தோன்றாய் விழிமுன் மனமாசந் துடையா யென்னே வருந்திமன, மான்றா யென்றும் வாய்மலராய் மன்னன் றென்னன் மதுரைவளர், சான்றாய் பெருமா னிடப்பாகத் தையன் மூலைப்பா லுண்டடனே, கான்றாய் போலின் றமிழ்பொழிந்த கருணாநிதியே யிதுதகவோ. (உ௬)

2697. தகவே யென்றுன் சரண்புகுந்தேன் றள்ளி விடநீ வல்லாயோ, நகவே திரிவா னடியார்போ னடிக்குங் கள்வ னிவனம்பாற், புகவே தகானென் றுளத்தெண்ணல் புகழ்த்தென் கூடற் புகலியாய், மிகவே யலைசெய் வாரிதியுள் விரைந்தங் கணநீ ரும்புகுமால். (உ௭)

2698. புகுமே பிறந்தை யென்பாலும் போமே பொறியின் வாய்மனமூ, நகுமே சகமு மெனை நோக்கி நண்ணு மேயுண் மயக்கமுநீ, தகுமே யென்று தடுத்தாளிற் சம்பந் தாதோ மொருமூன்றுஞ், செகுமே லவர்க டொழுங்கூடற் றேவா குரவர் சிகாமணியே. (உ௮)

2699. மணியே யனையாய் திருப்புகலி மறையோர் பேறே மதுராகர்க், கணியே தோர் பலரையுநீ யடிமை கொண்டா யதற்காகத்

தணியே முனிவென் றுனேவெறுக்கத் தக்கார் சிலரு மிருந்தாரோ,
துணியே யெனையு மடிமைகொளத் துணிந்தால் வெறுப்பரெவரையா.

2700. ஐய வயனு னெடுமோலா லளந்து காணுப் பரம் பொருளேத்
துய்ய வொருகை விரலாலே சுட்டிக் காட்டுஞ் சம்பந்தா
வைய மதிக்குந் தென்கூடன் மணியே வயங்கு பொற்றாளக்
கைய வுன்னை யெனக்கறியக் காட்டி லதுவே போதுமால். ()

வேறு.

2701. போதுசெறி பிரமபுரப் பொய்கையதன் கரையிடத்துத்
தாதுசெறி மலர்ச்சோலேத் தண்கூடற் சம்பந்தர்
யாதுரைசெய் கேன்ஞான வமுதுண்ட நாளமண
ரோதுகொடுங் கடியவிட முண்டார்போன் றுலேந்தனரே. ()

2702. உலேயாத புகழ்க்கூட லுவமையின்முத் தமிழ்விரகர்
கலேயாரு மதியனேய காமர்மணிச் சிவிகைமிசை
யிலேயார்தண் பொழிலுலக மேத்தவே றியஞான்று
கொலேயாரு மனத்தமணர் கூர்ங்கழுவே றினரொத்தார். ()

2703. ஓத்தபுக ழாலவா யுறையுமறைக் கவுணியனூர்
சித்தமகிழ் திருமுனெழு திருச்சின்னப் பெருக்கோசை
வித்தகமி லமணருக்கு வெங்கூற்றி னோசைகொலோ
குத்திரவம் மறலிகடாக் குரலோசை யோவறியேம். (௩௩)

2704. அறிவுருவ னலவா யாண்டகைமுத் தமிழாளி
செறிநிழல்செய் மணிமுத்தின் சிவிகைகுடை செழும்பந்தர்
பறிதலேய ரூற்றைவாய்ப் பதகர்முதற் பரசமய
வறியருக்கு வேனில்வெயில் வயங்குதலொத் திருக்குமால். ()

2705. இருக்குமுத லோதாம லெளிதுணர்ந்த கவுணியர்கோன்
குருக்கிளர்சண் பையினின்றுங் கூடலடைந் திருந்தவுடன்
றருக்கமிகப் பேசிமயிர் தலேபறித்திட் டிழலமணக்
குருக்கள்புவி நின்றுகழுக் கூடலடைந் திருந்தனரே. (௩ரு)

2706. இருந்தவர்க ளேத்தெடுக்கு மெம்மிறைமுத் தமிழாளி
யருந்தமிழ்நா வலருறையு மாலவா யமரண்ணல்
பொருந்துதிரு மறைக்காட்டிற் புகல்சதுர மறைப்பாடல்
வருந்துமனப் பரசமயர் வாயடைத்த பாட்டன்றே. (௩சு)

2707. பாட்டுவரிச் சுரும்புளரும் பைம்பொழிலிற் பசுமயிலிற்
கோட்டுமுலே யார்பயிமேறன் கூடன்மறைக் குலக்குருளே
வாட்டுவ்னே கடிமயிலே மட்டிட்ட வெனப்புகல்பா
லூட்டுபுகழ்ப் பெருஞ்சைவர்க் குயிர்கொடுத்த பாவன்றே. ()

2708. அன்றுகனி வொடுபோக மார்த்தபூண் முலேயாண்மற்
றென்றுகவு ணியாமதுரைக் கிறைவாரு ளியபதிக

நன்றுசெறி நெறியொருவா நல்லறிவி னோர்முகங்கட்
கொன்றுபொலி வுறுத்தியதே லுவமையதற் குளதாமோ. ()

2709. உளரளிவண் பொழின்மதுரை யொப்பிலா மணிபுகலிப்
பளகில்கவு ணியக்கன்று பாலறு வாய்க்குருளை
வளமலிபா சுரமொன்றே வான்சைவ மீடேற
வளவிலமண் கழுவேற வாற்றெதிரே றியதம்மா. (௩௯)

2710. மாமேவு திருவால வாய்ஞான சம்பந்தர்
பூமேவு திருக்கரத்தாற் புரிந்தளித்த திருநீறு
கோமேவு வழுதியுடல் குளிர்தரச்செய் தாங்கிருந்த
தீமேவு தொழிலமணர் சிந்தையில்வெப் புறுத்தியதே. (௪௰)

வேறு.

271ǃ. தேவர் தானவர் சித்தர்வித் தியாதரர் திசைபுரப் பவர்மற்றும்
யாவ ருள்ளவ ரவரெலாம் வந்துவந் தடியிணை தொழமேவு
மூவர் தம்பிரா னுலவா யினிதமர் முத்தமிழ் விரகாயான்
பாவ ரோடுற வுறலுழ லாதுநின் பதத்துற வுறவுன்னே. ()

2712. உன்னு வார்பிறப் பொழித்திடு மொருவனை யுத்தமர் பெருமானைப், பன்னு வார்க்கினிப் பானைமெய்ஞ் ஞானவின் பாலறு வாயானை, மன்னு வார்பொழின் மதுரையா சிரியனை வழிபடா தவ ரெல்லாந், துன்னு வார்பிறப் பொழிவரோ வொழி ◌ரார் தொழுதவத் தவரேனும். (௪௨)

27 13. தவரெனப்படு வார்களு மும்மலத் தடையறு சிவஞானத், தவரெனபபடு வார்களு மிருவளி யடைத்தொரு வழிநிறபா, நவ ரெனபபடு வார்களுஞ சிவகதுக் கெதுவழி யென்றேயாய், பவரெ னப்படு வார்களு மதுரைச்சம் பந்தன்மெய் யடியாரே. (௪௩)

2714. அடியர் செலவமே யாலவாய் முத்தமி ழாளிகேண் மதி பொல்லாக, கொடிய நாயினேன் விண்ணபப மொன்றுவான் குளிர் மது நதகுமு, முடிய னையபற மகனையமனற கனையைநீ முடிவினமற றவறமகாாநீ, மாடிய சீாபுனை மயனையனமற றனையனே நினககியா னலமலமன. (௪௪)

2715. அல்லை நேர்களத் தண்ணறன் றிருவடிக் கருகாா யனை யோருக, தொலலை மாவனைத மதாடமொழிந தானநதக துயததுட வருளகூாநது, வலலை வசுபனு சாககா மமாதுய வததக வியனகூட, னலலை நீயடி மயறகுமவ வாறரு ணலகிடி னுயமவமன. (௪௫)

27 16. உய்ய லாமவகை மயானறுகண் மடனஃ துண்மையே யினிதோாமன், வைய வாழவடை மயஙகமய யுழிதரு மாநதர்காண மடைகனனாச, மசயய வாலவாயத துருகக ாடததமா தேசகன சம பநதன, யுயய காணமலாச சுறுசலம மபாலயடித தொழுமபுூண டுறுமன. (௪௬)

2717. உறவும் வேனிளன் பகலழ லிடைப்புகுந் துணங்குத லுணர்த்தே, யறவும் வாடுதன் மூச்சவித் திருத்தல்கா லாதிதுய்த் தலுமோவ, விறவு நேருமென் றிடக்குகை வனம்புகல் யாவுநீத் திடும்வம்மின், புறவ நாயகன் கூடல்வாழ் புண்ணியன் பொன்னடி யடைவீரே. (சஎ)

2718. அடையு நற்பசு விருக்கயான் கற்பசு வடைந்தனென் கறந்தெய்த்தே, னடைகொ ளாலவா யிடையமர் தருபர ஞானபோ னகக்கன்றே, குடையும் யானமும் பந்தரு முத்தமாக் கொண்டமுத் தேபொன்னே, மிடை யு முட்மல மகன்றருள் பெறும்வகை மெய்ய ருள் புரிவாயே. (சஅ)

2719. வாய்ந்த செம்பொனாற் செய்கொழுக் கொண்டியான் வர கிலுக் குழலுற்றே, னேய்ந்த தீஞ்சுவைக் கனியொரீஇக் காய்கவர்ந் தென்றுமுண் பவன்போன்றே, ஞய்ந்த நாவலர் புகழ்மது ராபுரி யண்ணலே யடல்கொண்டு, காய்ந்த காமத்தர் கருதிடுங் கவுணியர் காவலா வருள்வாயே. (சகூ)

2720. அருந்து தற்கமை பாலைவிட் டருந்தினே னமைதராப் புளிங்காடி, பொருந்து கங்கையா டப்புகுந் தள்ளலைப் பூசிடு பவன் போன்றேன், றிருந்து மாலவாய்த் தெள்ளமு தேவர சிரபுரத் தவ ரேறே, மருந்து நேருன தருண்மொழி பெற்றியான் மலமறுத் துய லென்றே. (ருo)

வே று.

2721. என்றவ றனைத்து மெண்ணு தின்னருள் புரிய வேண்டு
நின்றசீர் நெடிய மாற னிலவுநன் னெறிக்க ணேவந்
தொன்றமுன் றடுத்தாட் கொண்டா யுவமைதீர் புகலி வாழ்வே
வென்றசீ ருடையாய் கூடல் விளக்கமே மெய்ம்மை யானே.

2722. யானென தெனுங்கோண் ஞான வழல்கொடு கிமிர்க்க வல்லான்
ஞானசம் பந்த னன்றி நாடின்மற் றகிலத் தியாவ
ரீனமி லறவொர் சூழு மிருந்தமிழ்க் கூடல் சார்ந்து
மானமா ரனைய வள்ளன் மலரடி வணங்கு வீரே. (ருஉ)

2723. வணங்குவா ருள்கு வார்வாய் வாழ்த்துவார் வழுத்து வாரோ
டிணங்குவா ரன்பொற் பாத மெய்துவா னெண்ணி யன்பர்
குணங்குலாந் துவாத சாந்தக் கூடன்மே வியசம பந்தா
வணங்குறுப் பவஞ்ச வாழ்க்கை யேட்டையே னென்செய் கேனே.

2724. செய்ம்மலி துவாத சாந்தத் திருநக ரொருசம் பந்தா
மெய்ம்மலி வடிவேற் செங்கோ னின்றசீர் வழுதி முன்னு
மெய்ம்மலி செல்வ ரின்பம விழைந்தனர் புகுநின் னருளிற்
பொய்ம்மலி யேழை வாழ்க்கைப புன்மையேன புல்லெ ளன்றோ.

2725. ஒண்ணுத லுமையாள் கொங்கை யூறிய பரமெய்ஞ் ஞானங்
கண்ணுத லருளா லுண்ட கவுணியர் காளாய் மேலோ
ரெண்ணுதல் செய்யுங் கூட லுடையநீ யென்னோ டேல்
பண்ணுத றகாதுன் றீராப் பரவருட் பெருமை நோக்கின். ()

2726. நோக்குயர் கூடல் வாழ்வே நோன்மைசா லருட்சம் பந்தா
தேக்குசீர் வீரட் டானச் சிவபிரா னுடல் கண்டா
யாக்கிய புகழின் மேலா மையநின் சித்த மென்றன்
பாக்கிய மலர ருட்கட் பார்வைக்கே பார்வை வைத்தேன். ()

2727. வையகத் தன்பு பூண்டார் குற்றமு மற்றஃ தில்லார்
செய்யநற் குணமு முள்ளஞ் செறித்திடாக் கருணை வாழ்வே
பொய்யகன் மதுரை மூதூர்ப் புகலியாய் நின்று ளன்றி
வெய்யவேழ் பிறவி யென்னும் வீரைக்கோர் மதலை யின்றே.

2728. இன்றடம் பொழில்சூழ் கூட லெழிற்கவு ணியர்தங் கன்றே
யொன்றவைந் தெழுத்தி னுள்ளே யோதுமுப் பொருளுந்தேற
நன்றடி யவர்க்கு ணர்த்தி நலமுறுத் திடுதல் போலெற்
கென்றருள் புரிவை யென்றே யிருந்தன னெதிர்பார்த் தம்மா.

2729. அம்மைபா லுண்ட ஞான வருட்பெருங் குருவே கூட
லெம்மையா ளுடைய தெய்வ மிலகரு ணைக்கஞ் செய்ய
நம்மையாய் புரிந்த பாச நசித்திடு நம்பு நெஞ்சே
வெம்மையார் கதிரோன் றேன்ற வீடடா விருளு முண்டோ.

2730. உண்டிடுத் துழல்வேன் றெய்வ முண்டெனு முறுதி நெஞ்சட்
கொண்டிசற் றறியேன் காமக் கொள்கல னாகி நிற்பேன்
றெண்டிபெட் டின்று ளேத்தத் துணிவனோ கணித மில்லா
வண்டிதுற் றியபூஞ் சோலை மதுரைமா ஞான வாழ்வே.(சுo)

வே று.

2731. வாழு மாறுளத் தெண்ணினன் மற்றது மருவத்
தாழு மாறுனைத் தாழ்ந்தில னாகிலென் றவமே
சூழு மாதவிச் சோலையின் மலர்தொறுந் தும்பி
வீழு மாலவாய் மேவிய சிரபுர வேந்தே. (சுக)

2732. வேந்த ராகிலென் மூப்பகை யறுத்தற விளங்குஞ்
சாந்த ராகிலென் றக்கவ ராகிலென் றவஞ்செய
மாந்த ராகிலென் மதுரையிற் கவுணியன் மலர்த்தா
ளேந்த வாய்ந்தநெஞ் சுடையரே சிறந்தவ ரென்றும். (சுஉ)

2733. என்று நேர்மணி மாளிகைக் கூடல்வா ழிறையை
யன்று ஞானபோ னகமினி துண்டவா ரமுதைக்
கன்று சூழ்வனை களைந்தடி யார்க்கருள் கனியை
நன்று கண்டுதோத் திரஞ்செயார் நாவென்ன நாவே. (சுங)

2734. நாவ லோர்புகழ் ஞானசம் பந்தனை நல்லோ
ராவ லோடணை யாலவா யிருந்தரு ளமுதைத்
தேவ லோகமே யெனச்சொலுஞ் சிரபுரச் செல்வர்
காவ லோனைநேர் கண்டிடார் கண்ணென்ன கண்ணே. (சுச)

2735. கண்ண கன்புவி தொழுதெழ வாலவாய் கலந்தே
யெண்ண வம்புரி யமணரைக் கழுவில்வைத் தியார்க்கும்
வண்ண நீறளித் திருந்தருஞ் ஞானமா மணியின்
றிண்ண வண்புகழ் கேட்டிடார் செவியென்ன செவியே. ()

2736. செவிய வாவுமின் றமிழ்மொழி செய்யவாய்த் தேனைப்
புவியு ளோர்புகழ் மதுரைமா நகருறை பொன்னைச்
சவிவி ராங்கவு ணியர்குல மணியைவெண் டரளக்
கவிகை யாளியை யருச்சியார் கையென்ன கையே. (சுசு)

2737. ஏல வார்குழ லுமையருண் ஞானமுண் டெழுந்து
சால வெங்கணும் பொழிகமிழ்க் கொண்டலைத் தாவாச்
சீல மாதவ ராலவாய் மேவிய தேவைத்
தால மேலுற வணங்கிடார் தலையென்ன தலையே. (சுஎ)

2738. தலைமை வைதிக மெய்தவுந் தெய்வமாச் சைவ
நிலைமை யெய்தவு ஞானவா ரமுதுண்ட நிதியை
மிலைகு லாம்பொழில் சூழ்மது ராபுரியிறையைக்
கலைவ லாளனைச் சூழ்தரார் காலென்ன காலே. (சுஅ)

2739. காவி ஞர்பொழிற் கனியுதிர் தரவெழுங் கடுப்பிற்
சேவி ஞர்வயற் றிருமது ராபுரித் தேவைச்
சாவி ஞர்மறைக் கவுணியன் றனைத்தொழச் சாரா
மாவி ஞருடைப் பிறப்பையெப் பிறப்பென வகுக்கேன். ()

2740. வகைசெய் மூலமா விலக்கிய மாகவு மறையிற்
றகைசெய் பல்பொருண் மூற்றவுந் தமிழ்மொழி தருவை
முகைசெய் வான்பொழி லாலவாய் மேவிய முதலைத்
தொகைசெ யுந்துதி சொற்றனன் சிறந்ததென் றுணிவே. ()

வேறு.

2741. துணியு மாறொன்று சொல்லுவன் யார்க்கும்வான்
பணியுங் கூடற்சம் பந்த னடிதொழிற்
றணியும் வெவ்வினை சார்த லறும்பவ
மணியு மொன்றியொன் றுக்கதி யாருமே. (எக)

2742. யாரு மேத்து மியன்மது ராபுரிச்
சீருந் தேசுந் திருந்துசம் பந்தர்தா
மூரும் யானமுன் றூங்கின ரொண்பதந்
தேரு நீரிலென் சிந்தையுந் தாங்குமே. (எஉ)

2743. தாங்கு பேருட் சம்பந்தன் கூடலா
னோங்கு மாமுறை யோதி யெழுதினோ
ரேங்கு வேனுக் கெழுவகைச் சன்மமுந்
தேங்கு மாறெழு தாவகை தீர்ப்பரே. (எ௩)

2744. தீரன் ஞான சிகாமணி பூந்தரா
யூரன் கூட லொருத்தன் றிருமுன
ரார வொண்டிருச் சின்னம தூதுவார்
வீர மல்கென் வினையையு மூதுவார். (எ௪)

2745. வாரு மன்பினர் வாழ்த்தும் புகலியார்
தேருங் கூடற் றிகழ்தரு பிள்ளையார்க்
கோரு மன்பின் விருந்தமு தூட்டினு
ராரு மெற்கரு ளாரமு தூட்டுவார். (எ௫)

2746. ஊட்டி யன்புயிர்க் கோரெழு சன்மமும்
வீட்டி யாளும் விரகர்சம் பந்தர்க்கு
நாட்டின் மிக்கநல் லாலவா யீதென்று
காட்டி னூரெற் கருங்கதி காட்டுவார். (எ௬)

2747. வார மிக்க மதுரையிற் சம்பந்தர்
சேர வாற்றியெண் ணாயிரந் தீக்கழு
வார வஞ்ச வமணருக் கூன்றினார்
பார வாங்கதிப் பாடெனை யூன்றுவார். (எஎ)

2748. ஊன்ற வுள்ளத்தி னுள்ள பொருளெலா
மீன்ற மாதொடு மின்றமிழ்க் கூடல்வா
ழான்ற சம்பந்தர்க் காக வொதுக்கினார்
மான்ற வென்னை மலமின் றொதுக்குவார். (எஅ)

2749. குவல யம்புகழ் கோமது ராபுரித்
தவல ரும்புகழ்ச் சம்பந்தப் பிள்ளையா
ருவமை தீரடித் தொண்டருக் கொல்லையே
கவலி றொண்டுசெய் வார்கள வானரே. (எ௯)

2750. வான வாழ்வு மதிப்பரி தாஞ்சிவ
மோன வாழ்வெனு முத்தியு நல்குமிக்
கான கூடன்மெய் யாறு முகத்திரு
ஞான சம்பந்தர் நாண்மலர்ப் பாதமே. (அ0)

வேறு.

2751. பாதக மும்மல பந்தத் தாலுறு
நோதக வொழிதர நூலு ணர்ச்சிசான்
மேதக வோர்குழு மேவு மாலவாய்ப்
போதகன் கவுணியன் புகழ்வி ரும்புவாம். (அ௧)

2752. விரும்பிடப் படுவது மெய்ம்மை யாவதுங்
கரும்பினு மினிப்பதுங் கவலை தீர்ப்பதுஞ்
சுரும்புளர் நறுமலர்ச் சோலை யாலவா
யிரும்புகழ்ப் பிள்ளையா ரிணையில் சீர்த்தியே. (அஉ)

2753. சீர்மலி யாலவாய் திகழும் வானகம்
பேர்மலி கவுணியப் பிள்ளை யார்மதி
யார்மலி யவர்புக ழும்ம திக்கதிர்
நார்மலி யடியவர் சகோர நாளுமே. (அ௩)

2754. நாள்பல கண்டதென் மதுரை நற்றட
நீள்பல விகழ்மலர் நிரவு சம்பந்த
ராள்பல சீர்த்தியவ் வலரி லூறுதேன்
றுள்பல வளிக்குலந் தழைந்த வன்பரே. (அச)

2755. அன்பமை யாலவா யவிரு மோர்சிலம்
பின்பமை சம்பந்த ரினிய நீர்முகின்
மன்பெருங் கருணையம் மங்குல் பெய்யுநீர்
துன்பமி லடியவர் சூழு மாமயில். (அரு)

2756. மயலகல் கூடல்வாள் வழங்கு வானக
முயல்புரி கவுணிய ரோங்கு கற்பகஞ்
செயன்மிகு பொருட்கொடை திருவ ருட்கொடை
யயல்விரா வடியவ ரளவில் வானவர். (அசு)

2757. வானமும் புகழ்திரு மதுரை பாற்கடல்
ஞானசம் பந்தனர் நயக்கு நல்லமு
தானமில் சைவர்க ளுவந்த வானவர்
தீனவெவ் வமணரே திதிதன் மைந்தர்கள். (அஎ)

2758. மைந்துசே ருகயமால் வரைதென் னலவாய்
நந்துசீர் மழகதிர் ஞான சம்பந்தர்
முந்துபு முகமலர் முளரி சைவரே
சிந்திரு ளறிவிலா வமணர் தோரே. (அஅ)

2759. தேருமின் கவுணியர் செய்ய சீரினி
தோருமி னவர்கனிந் துரைத்த மாமறை
சாருமி னலவாய் சார்ந்து தாழ்வற
வாருமி னருங்கதி யகிலத் தியாருமே. (அகூ)

2760. மேவுதென் னலவாய் விரும்பு புண்ணியன்
மூவுல கும்புகழ் முதல்வன் சம்பந்தன்
பூவுயர் பொன்னடி போற்று வார்மல
நோவுதீர்ந் துய்வது நுவல வேண்டுமோ. (கூ0)

வே று.

2761. வேண்டாமை வேண்டேன் விழைந்தே திரிந்தேன்
பூண்டார் நினைக்கன்பு பொய்ப்பாச மற்று

ராண்டா தரிப்பா யருட்கூடன் மேய்
தூண்டா விளக்கே தொழுஞ்சண்பை யானே. (கூக)

2762. யானேது செய்கேனென் மனமெங்கு மோர்ந்
கோனே தமித்தாட் கொளிற்பொய்ய னுய்வேன்
றேனே கரும்பே திருக்கூடல் வாழும்
மானே பெருஞ்சண்பை வள்ளற்பி ரானே. (கூஉ)

2763. பிரான்வேறும் வேண்டேனீ பித்தற்றித் திரிந்தே
னிராதார ஞகாம னீயாண்டு கொள்வாய்
குராவாச மென்சோலை கொள்கூடன் மேவும்
பராஞான சம்பந்த பண்பாளர் பேறே. (கூங)

2764. பேறே துதிப்பார் பெருஞ்சண்பை யாள்
ரேறே தமிழ்க்கூட லின்பப் பிரானே
மாறே படும்புன் மனத்தேன் மதித்துன்
ஞறே யடைந்துய்வ தற்கின்றி லேனே. (கூச)

2765. ஏமங் குறித்தே யிருந்தே னதற்குன்
ஞமங் குறித்தோத நால்வத் திருப்பேன்
பூமங்கை மேவும் புகழ்க்கூடல் வைப்பே
காமங்கை யாருட்பு காச்சண்பை வாழ்வே. (கூரு)

2766. வாழ்வான திருண்மாய மென்றெண்ண மாட்டேன்
ரூழ்வான தேகொண்டு தடுமாறு கின்றேன்
சூழ்வான ரேத்தித் தொழுங்கூடல் வாழ்வே
யாழ்வாரி சூழ்காழி யாள்வார்க டேவே. (கூசு)

2767. தேவே கரும்பே தெவிட்டா ததேனே
கோவே திருக்கூடல் குடிகொண்ட பொன்னே
மாவேரி யொண்டா மரைத்தொங்கன் மார்பா
நீவேறு செய்தென்னை நீக்காம லாளே. (கூஎ)

2768. ஆளா னவர்க்கே யருட்டே சுறுத்துந்
தோளாத முத்தே தொழுங்கூடல் வைப்பே
கீளாத ரத்தியாரு நின்றேத்து காழிக்
காளா யெனைக்கா கருப்பால் கடிந்தே. (கூஅ)

2769. கடிமா மலர்ச்சோலை க்கனந் துழாவும்
படிமே லெழுந்தண் பழங்கூடல் வைப்பே
கொடிமாட மிகுவெங் குருக்கொண்ட லேநின்
னடிமா மலர்க்கென்னை யான்செய்த பிழையே. (கூகூ)

2770. பிழையாது செயினும் பிறக்கா தகற்று
மழையா ருட்பெருமை வாழ்கவளர் கூடத்
தழையாறு முகஞான சம்பந்த குரவன்
விழைமியாறு கனிவாழ்க மிகவாழ்க சீரே. (௬00)

மதுரைத்திருஞானசம்பந்தசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.

---

மதுரைத்

திருஞானசம்பந்தசுவாமிகள்

# ஆனந்தக்களிப்பு.



ஆனந்த மானந்தந் தோழி - திரு
வாளர்சம் பந்த ரருள்விளை யாடல்
ஆனந்த மானந்தந் தோழி.

2771. க. பார்புகழ் காழி நகரிற் - சிவ
பாத விருதயர் செய்த தவத்தாற்
சீர்புகழ் மிக்க மகவா - ஐயர்
திருவ ருளாலவ தாரஞ்செய் தாரால். (ஆனந்த)

2772. உ. கூடும் பருவமோர் மூன்றி - லம்மை
கொங்கை சுரந்த கொழுஞ்சுவைத் தீம்பா
லூடுபொன் வள்ளத்தி னூட்ட - உண்டு
ஞானசம் பந்த ரெனப்பொலிந் தாரால். (ஆனந்த)

2773. ௩. சொல்லு மயனரி யாலு - மென்றுஞ்
சுட்டி யறியப் படாத பொருளை
யொல்லுஞ்செந் தாமரை யன்ன - செங்கை
யோர்விர லாற்சுட்டிக் காட்டினின் றாரால். (ஆனந்த)

2774. ச. வைதிக சைவந் தழையப் - பெரு
மண்ணுல காதி மகிழ்சிறந் தோங்க
வுய்திற மாந்தமிழ் வேதந் - தோ
டுடைய செவியனென் றாரம்பித் தாரால். (ஆனந்த)

2775. ரு. விண்ணும் புவியுங்கொண் டாடுந் - தமிழ்
வேத மொழியும் பொழுதொற் றிடுமோ
ரெண்ணூர் திருக்கோலக் காவி - லேந்
தெழுத்தும் பொறித்தபொற் றாளம்பெற் றாரால்.(ஆன)

2776. சு. என்னென் றியானுரை செய்கே - னேய
ரேழிசை யோங்க வினிமை ததும்பப்
பண்ணும் புகழ்த்திரு வாக்காற் - கொடும்
பாலை குளிர்செய்த வாதிய தென்னின். (ஆனந்த)

2777. எ. மூவுல கும்புகழ் தில்லை - வளர்
மூவா யிரர்கண நாதராய்த் தோன்றப்
பாவு மிசையுரு வாய - புகழ்ப்
பாணருக் காங்கறி வித்துநின் றாரால். (ஆனந்த)

2778. அ. மும்மை யுலகும் புகழச் - செழு
முத்தின் சிவிகை குடைதிருச் சின்னஞ்
செம்மை யரத்துறை மேய - தேவ
தேவ னருளச் சிறப்பிற்பெற் றாரால். (ஆனந்த)

2779. கூ. தாரை திருச்சின்ன மெல்லாம் - பர
சமயத்தின் கோளரி வந்தன னிந்தப்
பாரையுய் விப்பவன் வந்தான் - ஞானப்
பாலறு வாயன்வந் தானென வூதும். (ஆனந்த)

2780. கo. முந்திய மாமறை யின்க - ணைய
முற்று மொழிய மொழிந்து மறையோர்க்
கந்தியின் மந்திர மோரிற் - திரு
வைந்தெழுத் தேயென் றருளிச்செய் தாரால். (ஆன)

2781. கக. அண்டர் புகழ்ந்துகொண் டாடும் - பாச்சி
லாச்சிரா மத்தெம் மடிகண்மு னன்பு
கொண்ட மழவன் மகளைப் - பற்று
கொடிய முயலக நோயொழித் தாரால். (ஆனந்த)

2782. கஉ. கொங்கி னடியரைச் சார்ந்த - வெங்
குளிர்ப்பிணி யாதி குலேந்தொழி வெய்த
வெங்கும் புகழ்திரு நீல - கண்ட
மீற்றி னுறுதமிழ் வாய்மலர்ந் தாரால். (ஆனந்த)

2783. கங. தாவில்பட் டீச்சரத் தையர் - நன்கு
தந்த மணிமுத்துப் பந்தர் விரும்பி
மேவு திருச்சத்தி முத்தத் - திடை
மெய்ம்மையிற் பெற்றனர் வெங்குரு வேந்தர். (ஆன)

2784. கச. தந்தை கருத்து முடிப்பான் - வளஞ்
சார்பொழி லாவடு தண்டுறை யார்பா
லந்தமின் முத்தமி ழாள - ருல
வாக்கிழி யாயிரம் பொன்னிற்பெற் றாரால். (ஆனந்த)

2785. கரு. நீலகண் டப்பெரும் பாணர் - திரு
நெஞ்ச முவந்து நெடுங்களி கூரக்
கோலத் தரும புரத்து - விசை
கோலிய யாழ்முறி வாய்மலர்ந் தாரால். (ஆனந்த)

2786. கசு. மாங்குயில் கூவும் வளஞ்சேர் - திரு
மருகலிற் பிள்ளையார் வாக்கெழு முன்னே
தூங்கி யெழுந்தவன் போல - விடத்
தோய்வா லிறந்தவன் றானெழுந் தானால். (ஆனந்த)

2787. கஎ. வீழி மிழலைப் பிரானு - ரெங்கள்
வித்தகர் சண்பை விரகர்முன் றோன்றிக்
காழியிற் றோணியின் மேவும் - வண்ணங்
காட்டுகின் றோமென்று காட்டப்பெற் றாரால். (ஆ)

2788. கஅ. காமரு வீழி மிழலை - யமர்
கண்ணுத லாரடி யார்க்கமு தாக
மாமரு வோர்செம்பொற் காசு - தினம்
வைக்கப்பெற் றார்சண்பை வந்த விரகர். (ஆனந்த)

2789. கசு. மன்னிய மாமறைக் காட்டிற் - சண்பை
வந்த கவுணியர் வாய்திற வாமுன்
றுன்னிக் கதவ மடைத்த - திறஞ்
சொல்லி னெவரே வியப்படை யாதார். (ஆனந்த)

2790. உ௦. மானியா ரன்பு மமைச்சிற் - புகழ்
வாய்ந்த குலச்சிறை யாரன்பு மோர்ந்தே
யானி யிலாமறைக் காட்டி - னின்று
மாலவாய் மேவ வெழுந்தன ரையர். (ஆனந்த)

2791. உக. செழுமணி யானத் திவர்ந்து - திருச்
சின்ன முழங்கத் திசைதொறு மொய்த்து
வழுவி லடியவர் போற்ற - ஆல
வாய்வந்து காட்சி கொடுத்தனர் யார்க்கும். (ஆனந்த)

2792. உஉ. கூடலின் மேய பிரானூர் - கழல்
கும்பிட் டடியவர் கூட்டங் குலாவ
வாட லமைச்ச ரமைத்த - திரு
வார்மட மேவி யமர்ந்திருந் தாரால். (ஆனந்த)

2793. உஙூ. தீய வமணக் கொடிய - ரையர்
திருமடத் திற்செய்த தீமை யருளான்
மேய வழுதி யுடம்பு - பற்றி
வெஞ்சுர மாகத் திருவாய் மலர்ந்தார். (ஆனந்த)

2794. உச. செம்மையில் கூனெடு வெப்பு - நின்ற
சீர்நெடு மாறற்கு நீங்கப் பொலிவு
வெம்மை யமணர்க்கு நீங்க - ஐயர்
மேதகு நீறு திருக்கைதொட் டாரால். (ஆனந்த)

2795. உரு. அருகர் முகமு மனையா - ரழ
லாங்கிட்ட வேடு மொருங்கு கருகப்
பெருகிய சைவர் முகமு - மையர்
பேரழ லேடும் பசந்தன காணாய். (ஆனந்த)

2796. உசு. அண்ணுங் கொடிய வமணை - ரோரெண்
ணாயிர ருங்கொடுங் கூர்ங்கழு வேற
வெண்ணு முயிர்களீ டேற - வைவை
யாற்றிட்ட வேடெதி ரேறிய தம்மா. (ஆனந்த)

2797. உஎ. உள்ள நிகரப் புறமு - மிக்
கோங்கிருண் மூடிக் கொடுவினை பூண்ட
கள்ள வமணர்கள் யாருங் - கண்
கலங்கிக் கழுமரத் தேறினர் மாதோ. (ஆனந்த)

2798. உஅ. நந்திய சீர்மலை மங்கை - கொங்கை
ஞானமுண் டார்திரு வாய்மலர் சொல்லே
யுந்தி விடுநெடுங் கோலாச் - சுழ
லோடங் கரையரு குற்றது நோக்காய். (ஆனந்த)

2799. உகூ. வித்தகர் தந்திரு முன்ன - ருது
மெய்த்திருச் சின்னமெண் ணுது தடுத்த
புத்தன் றலையுருண் டோடச் - சினம்
பொங்கி யுருமொன்று வீழ்ந்தது கண்டாய். (ஆனந்த)

2800. ௩௦. வெங்குரு வேந்தர் திருமுன் - வாத
மேன்மேலுஞ் செய்து மெலிவுற்றுத் தோற்றே
அங்குறு புத்தரெல் லோரும் - சைவ
ராகின ரைய ரடிமலர் போற்றி. (ஆனந்த)

2801. ௩௧. நாடுல கத்தெவர் பெற்றார் - திரு
நாவுக் கரசுஞ் சிவிகையைத் தாங்கிக்
கூடுமன் போடு மகிழ்ந்து - தவங்
கூடிற் றெனவருங் கோதற்ற பேறு. (ஆனந்த)

2802. ௩௨. மன்னன் திருவீரட் டானங் - காழி
மாமறைக் கன்று மகிழ்ச்சியிற் றெல்லைப்
பன்னும் புகழ்த்தம்பி ரானார் - நடம்
பண்ணிய மேன்மைத் திருவரு ளோரின். (ஆனந்த)

2803. ௩௩. உய்ய வென்மையெடுத் தாள்வார் - திரு
வோத்தூரில் யார்க்கு மதிசய மேவ
வையர் திருவருள் வாக்காற் - பல
வாண்பனை பெண்பனை யாயின மாதோ. (ஆனந்த)

2804. கச. கச்சியின் மேற்றளி மேய - கருங்
கண்ணனங் கண்ணுத லெண்ணுரு மேவ
வுச்சியின் மாத்வர் சூடு - மைய
ருண்மைத் திருவாக் கியற்றிய தோராய். (ஆனந்த)

2805. கரு. பெற்றனர் யாவர் பெறுவ - ரறம்
பேணு திருவாலங் காட்டுறை யையர்
பற்றுங் கனவினிற் றோன்றி - நம்மைப்
பாட வயர்த்தனை யோவென் றருள. (ஆனந்த)

2806. கசு. மேவு சமயம் பலவுஞ் - சைவ
மேபொரு ளென்று விரும்பிக்கொண் டாடத்
தூவு மெலும்புபெண் ணாக - அருள்
சொல்லி னதிசய மல்லதெ னுண்டாம். (ஆனந்த)

2807. கஎ. நாட்டும் புகழின் மலிந்த - திரு
ஞானசிந் தாமணி நல்லெழி லென்றுங்
காட்டும் பெருமண நல்லூர் - மணங்
காணவந் தார்சிவம் பூணச்செய் தாரால். (ஆனந்த)

2808. கஅ. ஆரண மாகமம் வாழ்க - புக
ழாறு முகத்திரு ஞானசம் பந்த
காரண தேசிகர் வாழ்க - நெடுங்
கால மவரடி யார்களும் வாழ்க.

ஆனந்த மானந்தந் தோழி - திரு
வாளர் சம்பந்த ரருள்விளை யாடல்
ஆனந்த மானந்தந் தோழி

திருஞானசம்பந்தசுவாமிகள் ஆனந்தக்களிப்பு முற்றிற்று.

---

# *சிறப்புப்பாயிரம்.



இந்நூலாசிரியர் மாணாக்கராகிய

**தெய்வநாயகம்பிள்ளையவர்களியற்றியது.**

---

நேரிசையாசிரியப்பா.

2809. மாமலி பொருநை வளஞ்சுரந் தளிக்கும்
பாமலி பெரும்புகழ்ப் பாண்டிநன் னாட்டின்
மிளிர்மணி குயிற்றிய வொளிர்மணி மாடத்
தும்ப ருலாவும் வம்பலர்க் குழலார்
ரு முகமதிக் குருகி நகநிலா மணியிற்
புரிசெய் குன்றஞ் சொரிபுனல் பெருகி
வீசுவளி துறுத்த மாசறக் கழுவும்
பீடமர் வளஞ்சால் கூடன்மா நகரிற்
பிறவிப் பகைக்குள முறவுடைந் தடைந்தே
கo யொழியா வன்பின் வழிபடு மடியார்
மலவிருள் குமைக்கு நலமலி கதிரெனப்
போற்றிப் புவனஞ் சாற்றவீற் றிருக்கு
மீன மிலாத்திரு ஞானசம் பந்த
வருளா சிரியன் றிருவடிக் கன்பாய்ப்
கரு பூவிரி பொழிற்குலைக் காவிரி புரக்கு
மளவிலா வளம்புனை வளவனன் னாட்டிற்
பத்தியிற் றவறா வுத்தம வணிகக்
குலமக டனக்கு நலமலிந் தோங்குந்
தாயா யளித்த தம்பிரா னென்று
உo மாயா வருளிற் கோயில்கொண் டமரத்
துரிசிரா திலங்குந் திரிசிராப் பள்ளியிற்
கடன்மருங் குடுத்த தடநெடும் புடவியி
லுற்றநூல் யாவுங் கற்றவ னென்றுந்
தோலா நாவின் மேலோர் வகுத்தத்
உரு தந்தருள் பலபிர பந்த மென்பன

---

* இது பழையபதிப்பைச்சார்ந்தது.

வெல்லாஞ் சொல்ல வல்லோ னென்று
மூமிழ்சுவை யாரியத் துற்றபல் புராணமுந்
தமிழின்மொழி பெயர்க்கத் தக்கோ னென்றுந்
தனையடைந் தவரை நினைதரு தனைப்போல்
௩௰ வல்லவ ராக்க நல்லதன் னியற்கையா
மெலியா வன்பிற் சலியா னென்று
மற்றவர் பிறரைச் சொற்றன போலா
துற்ற குணங்கண் முற்ற வுணர்ந்து
செப்பமுள் ளோர்பலர்க் கொப்பயா னுள்ளன
௩௫ நினைந்துரை செய்வது புனைந்துரை யன்றெனக்
காட்சியின் விளக்கி மாட்சியி னமர்வோன்
கற்றவர் குழுமி யுற்றபே ரவையிற்
கனக்குநுண் ணறிவிலா வெனக்குமோ ரொதுக்கிடந்
தந்தமீ னாட்சி சுந்தரப் பெரியோன்
௪௰ வனைந்து புனைந்த மாநலஞ் செறித்து
வைத்த பதிற்றுப் பத்தந் தாதியு
மூன மொழித்தரு ளானந்தக் களிப்புந்
துதித்திடு மச்சிற் பதித்துத் தருகெனத்
தகவுளோ ரென்றுந் தங்கப் பெற்றுத்
௪௫ துகளிலா தோங்குந் தொண்டைமண் டலத்திற்
கயல்செறி புனல்சேர் வயல்செறி பண்ணையிற்
குடமருள் செருத்தற் றடமருப் பெருமைக
ளொருங்கு குழீஇயெம் மருங்கினு முலாவல்
விண்மூ டிருங்கருங் கொண்மூ வினங்கண்
௫௰ மேவுசீர்த் தம்மிறை காவலிற் பொலிவுறு
மிந்நில மென்றகத் துன்னிச் சூழ்ந்து
தயங்குவள நோக்கி யியங்குதல் கடுக்கும்
வயங்குபூ விருந்த வல்லிநன் னாட
னடகத் தியன்ற மாடந் தோறும்
௫௫ வண்டமர் புரிகுழ லொண்டொடி மடவார்
மாந்தளிர் கவற்றி யேந்தெழில் வாய்ந்த
காற்சிலம் பணியு மரைமே கலையு
முன்னும் பின்னு முறையி னொலித்தன்
மாறுப் பம்மன் மாநக ராளி
௬௰ மதியெழச் சிறக்கும் வானக மென்னத்

துதியுறக் கொளுமுயர் துளுவவே ளாளர்
குலஞ்சிறப் படையக் கலஞ்சிறப் பப்புனை
வாகார் தருபுக ழேகாம் பரவே
ளீட்டு தவப்பயன் காட்டவந் துதித்தோன்
௪௫ பிறங்குசீர் விசாகப் பெருமா ளையனென்
றறங்குல வுலக மறைபுல வன்பாற்
றீந்தமி ழுணர்ந்தறி வேய்ந்தகுண சீல
னெட்டுத் திசையினு முட்டும் புகழா
னடைபிற ழான்பெருங் கொடையொடு பிறந்தோன்
௫௦ கவிஞயந் தெரிதலிற் குவிதரா வுணர்வினன்
மற்றைநற் குணமெலாம் பெற்றதா யானோன்
கங்கைபொற் கடுக்கை வெங்கண்வா ளரவந்
திங்கள்சேர் வேணி யங்கண னருச்சனை
மங்கலின் மலர்கொடு பங்க மறப்புரி
௫௫ துங்கனும் விசய ரங்கபூ பாலன்
கவின்றவுண் மகிழ்வொடு நவின்றன னாக
மின்னுமிந் நூல்கள்செய் வினைமுத லானோ
னென்னா சிரிய னாகவிந் நூல்கட்
குரிமையா னோன்றற் குறுமா சிரிய
௬௦ னாகவி னொற்றுமை யறிந்துநின் றெனையிவ
னேவலு நன்றியா னேவப் படுதலு
நன்றுநன் றென்றுளந் துன்றுபே ருவகை
கதித்தெழ வன்பிற் பதித்து முடித்தன
னிலக்கண விலக்கிய நலக்க வுணர்ந்தோ
௬௫ னென்னுடை நட்பனு விலங்கு
நன்னயத் தியாக ராசநா வலனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

சிவமயம்.

# திருக்கற்குடிமாமலைமாலை.

## நிருத்தவிநாயகர்.

### விருத்தம்.

2810. திருவளர் செம்பொன் மாளிகை யுடுத்துத் திகழ்தருங் கற்குடி மலைவாழ், மருவள ரிதழி மாலையெம் பிராற்கு மாலையென் றொருபிர பந்தங், கருவள ரளக்கர் நீந்துவா னியற்றக் கருணைமா மதம்பொழி முகச்சீ, ருருவளர் நிருத்தக் கணேசர்பொற் பாத முளத் துவைத் துன்னுது முவந்தே.

## அஞ்சனக்கண்ணம்மை.

2811. பங்கய மலர்த்து மிரவியிற் கரமும் படரிராக் கதிரினிற் கலையு, மங்கியிற் சூடு மறலிற்றண் மையுஞ்செய் யலரின்வா சமுமென வரவுங், கங்கையு மிலைந்த சடைப்பிரான் குணமாய்க் கருதுல களித் தருள் புனிதை, மங்கையர்க் கரசி யானவஞ் சனக்கண் மடவா திரு வடி போற்றி.

## சைவசமயாசாரியர்.

2812. பூசுரர் விளங்கும் புகலிகா வலனார் புண்ணியப் பாதமு முலகம்,பேசுசீர் நாவுக் கரசர்பொற் றாளும் பெருகுமா நதிவழி தருமா, மாசுதீர் பதிகம் பாடுநா வலர்தா மரைமல ரடியும்வன் கதிர்போற், றேசுசெய் வாத வூரர்பொற் கழலுஞ் சிறியனேன் சிந்தைவிட் டகலா.

## நமச்சிவாயதேசிகர்.

2813. அகழுமா கடல்சூ ழுலகின்மன் பதைக ளடர்புறச் சம யர்பொய் யுரைவிட், டிகழுமா றில்லாப் பதிபசு பாச மிஃதிஃ தெனத் தெளிந் துய்யப், புகழுமான் மழுவு நுதற்கணுங் கரந்து பொங்கருள் வடிவெடுத் துவந்த, திகழுமா வடுதண் டுறைநமச் சிவாய தேசிகன் றிருவடி போற்றி.

---

## நூல்.

2814. மலர்தலை யுலகிற் புன்னெறிச் சமயர் வாய்ப்பிதற் றுரை மனங் கொளாது, பலர்கொள்பூ தியுங்கண் மணியுமைந் தெழுத்தும் பற்றியா னுய்யுமா றருள்வாய், வலனுடைத் திகிரிப் படையினன் வணங்க வரமுகி லெனவுள மதித்துக், கலபமா மயில்கள் களிசிறந் தாடுங் கற்குடி மாமலைப் பரனே. (க)

2815. பண்வழுக் குற்ற வீர்ஞ்சொலார் மையற் பரப்பினை நயந்துபா ராட்டிப்,புண்வழுக் குற்ற மெய்யினைச் சுமந்தேன் பொய்யினைப் போக்குநா ளுளதோ, வெண்வழுக் குறுவா னவர்கள்பொன் மோலியிணைந்திணைந் துரிஞ்வீழ் துகளாற், கண்வழுக் குறுவின் மேருவே போலுங் கற்குடி மாமலைப் பரனே. (உ)

2816. இட்டமா விரையாக் கலிபிழைத் தாரென் றிருங்கிளை தந்தைதாய் மனையாள், பட்டபால் வாய்ச்சே யொறுத்தகோட் புலியார் பத்திபெற் றுய்யுநா ளுளதோ, வட்டமாய் நடுப்பொன் மானந்தாங் குதலால் வரத்தகா தவருங்கண் டுறுதிக், கட்டறுத் துய்ய வருட்குறியாகுங் கற்குடி மாமலைப் பரனே. (௩)

2817. நளிமனம் வாக்குக் காயமூன் றூலு நனிமுயன் றவர் கொணின் னருளை, யொளிர்பசும் பொன்செய் கொழுக்கொடு வரகுக் குழுதயான் கொள்வது முளதோ, குளிறுமா மேகந் தவழ்ந்துறை பிலிற்றுங் குளிர்க்குடைந் தாலென வுடலிற்,களிவரக் காந்தட் டழல் வளர்த் தணைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (ச)

2818. மங்கைமூக் கரிந்த தொன்றுமோ போது மாமலர் தொட்டது கரமென், றங்கையுந் துணித்த வன்பரோ வடியா ரஃதிலா வெமர்களோ வடியார், பங்கமி றவத்தா னினதுசா ரூபம் பயனுறப் பெற்றென வானக், கங்கையு மதியு முடிதரித் தோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (ரு)

2819. புண்ணிய வடிவாம் வேடர்தம் பிரானூர் பொன்னடித் தாமரைச் செருப்பு, மண்ணிடைத் தோய வேட்டஞ்செய் நாளவ் வழிப்புலாய்க் கிடப்பினு முய்வே, னெண்ணுவ தினியா திமையவருலக மிறுதிநா ளழிவது நோக்கிக், கண்ணகன் குடுமி மதியினு னகைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (சு)

2820. மறைநெறி வழாத புகலிகா வலனூர் வளங்கொளோத் தூரிலாண் பனைகாய், நிறைதர வருள்கால் யானுமோர் பனையாய் நிற்பினு முய்வனென் செய்வே, னிறைவநின் றனக்குப் போர்வையுமுடையு மீந்தவென் றூதரித் தாற்போற், கறையடி புலிகன் பயிலவீற்றிருக்குங் கற்குடி மாமலைப் பரனே. (எ)

2821. மண்பொழி தானக் களிற்றொடு பாகர் மடிந்தது போதுமோவெனையும்,புண்பொழிவாளாற்கொல்லுமென் றவர்வாழ் புரங்குடியிருப்பினு முய்வே, ஞெண்பொழி லேத்தச் சிவானந்த வெள்ள மூற்றெழத் தவஞ்செயு மடியார், கண்பொழி நீரோ டருவிநீர் பாயுங் கற்குடி மாமலைப் பரனே. (அ)

2822. யாதனின் யாத னினீங்கியா னோத லதனின தனினிவெனனமுன், னோதிய பெரியோர் வார்த்தையும் பேணு துழல்கொடியேற்கருள் குவையோ, மேதகு புழுகு நானமு மகிலும் விரைதரு

மாரமு நூற்றுக், காதநாற் றிசையுங் கமழ்தருந் தெய்வக் கற்குடி மாமலைப் பரனே. (சூ)

2823. சாவிபோ மற்றைச் சமயங்கள் புக்குத் தவறுறேல் சைவ சித்தாந்த, மோவுறே லெனமுன் வாய்மலர்ந் தவர்த முறைவழி நிற் குமா றருள்வாய், பாவிய பாகற் கோட்டினிற் பற்றிப் படர்கறிக் கொடி யினை வணக்கிக், காவளர் சார லருவிகல் லெனப்பாய் கற்குடி மாம லைப் பரனே. (கo)

2824. மெல்வினை ஞானம் வல்வினை ஞான மிளிரிவை பத்தி வை ராக, நல்வினை யென்ப ரவற்றிலோர் வினையு நண்ணிலேன் றீவினை யன்றிச், செல்வழி யருள்வா யகத்திரு டனைநின் றிருவரு ளோட்டல்போற் புறத்துக், கல்லரு மிருளை யராமணி யோட்டுங் கற் குடி மாமலைப் பரனே. (கக)

2825. மெய்யெலா முரோமஞ் சிலிர்ப்பவென் புருக விழிகணீர் சொரியவன் புருவா,யையநின் புகழே பேசிடார் நாவா யளக்கரின் மித க்குநா வாயே, தெய்வமங் கையர்கள் சுனைகுடைந் தேறித் திருமகப் பெறுவரம் வேண்டிக், கைகளேந் துதல்போற் காந்தள்கண் மலருங் கற்குடி மாமலைப் பரனே. (கஉ)

2826. செயிரறு நினது திருவருள் காட்டுந் திறத்திறற் காண் பதை யன்றிப், பயிறரு கல்வி கேள்வியா னின்னைப் பளகறக் காண வும் படுமோ, வயிரமா மலைச்செம் மணிக்குவால் பச்சை மணிக்கு வா லொடுபிறங் கிடுதல், கயிலைநீ யுமையோ டிருப்பது தெரிக்குங் கற்குடி மாமலைப் பரனே. (கங)

2827. ஏந்தறற் செறுவிற் செங்நெலுட் பதடி யென்னவிப் புவி யிடைப் பிறந்த, மார்தருட் பதடி யானயான் மூல மலத்தொட ரறுத் துய்வ தென்றோ, பாந்தளின் மிசைக்கண் படுக்குமா யவன்போற் பரப்பிய தழலெனப் பூத்த, காந்தளி னருகு யானைகண் படுக்குங் கற்குடி மாமலைப் பரனே, (கச)

2828. கல்லினால் வல்லப் பலகையால் வாளாற் கமரினாற் சாணை யா லன்பர், புல்லுமும் மலமும் போக்கிநின் னடிக்கண் புகுந்தனர் யான்புகு மாறென், வெல்லும்வான் சைவம் விட்டுப்புன் சமயம் விரும்புவார் போற்பல கந்தங், கல்லுவார் மணிக ளகழ்ந்தெறிந் தெடுக் குங் கற்குடி மாமலைப் பரனே. (கரு)

2829. வேணவா வெகுளி முதற்களை கட்டு வேரற மனச்செயி லன்பாம், பேணறல் பாய்த்திப் பத்தியாம் பைங்கூழ் பிறங்கயான் வளர்த்துய்வ தென்றோ, மாணுறு வட்டப் பளிக்கறை மதிபோல் வயங்கலா லுடுக்கண மதனைக், காணவர் தாற்போல் வேரன்மூத் திமைக்குங் கற்குடி மாமலைப் பரனே, (கசு)

2830. சூதினாற் பொருள்செய் துன்னடி யார்க்கே துறுத்த மெய் யன்பரோ மூர்க்கர்,வாதினாற் பொருள்செய் துண்டுடுத் துவக்கு மறத்தொழி லெமர்களோ மூர்க்கர், சீதளக் கதிரோ னெனவுல கேத்தத் தினமும்வெண் மதிமலர் ததைந்த, காதலீள் சுனையின் மூழ்கிநின் றேறுங் கற்குடி மாமலைப் பரனே. (கஎ)

2831. துன்றிய பூத விருளொரு பொருளுந் தோன்றக்காட் டாதுபோ லிரண்டு, மொன்றினை யேனுங் காட்டிடா வனுதி யுறுமல மொழித்துய்வ தென்றோ, நன்றுநின் னுருவங் கண்டுகண் புனல்பெய் நற்றவர்க் கருகுறி லாக்கல், கன்றலின் மதியைக் கண்டுதண் புனல்பெய் கற்குடி மாமலைப் பரனே. (கஅ)

2832. தாணியான் மாக்க ளுடற்குறி மைகளிற் றலைக்குமே லிலாதது போல, வுரவுசெய் நின்ற னருட்குமே லிலையென் றுண்மை யோ ரறிவர்யான் வலனோ, பொருள்செய்நம் மகளார் கதுப்பினுக் கிணையாப் புகறகா தெனக்கறுத் துவந்த, கருளினைத் துரந்தெக் காலமும் பகல்செய் கற்குடி மாமலைப் பரனே. (கசு)

2833. சேரர்நின் கயிலைக் கெழுந்தநாட் பரிக்குந் திருப்பரி யுருக்கொண்டே னெனினு, மோருமென் கிளையு முய்யுமெற் குறுமோ வுதிக்குமாற் பரிக்குமஃ துறுமோ, பாரவில் வயிரப் படையினாற் சுமந்த பகையற வடுத்துற வுறல்போற், காரணைந் திரவி வெப்பற வுறைபெய் கற்குடி மாமலைப் பரனே. (உ0)

2834. அன்றுநன் புகலூர் மணிமுதற் றோற்றி யரசினைச் சோதனைசெய்த, தென்றுமெம் போல்வா ருய்பொருட் டன்றோ விதனையு மெண்ணிலன் சிறியே,னென்றுமும் முனிவர் தமிழ்வளர் வரையென் றொருமுனித் தமிழ்வரைத் தென்றற், கன்றுபன் மலர்வா சனையொ டுற் றுலவுங் கற்குடி மாமலைப் பரனே. (உக)

2835. பிறைவடங் கிடந்த பொம்மல்வெம் முலையார் பெருங்களி மயக்கிடை வீழ்ந்து, நிறைபொறி யிலானை யாண்டதென் னென்று நினைவெறுப் பாரிலை யருள்வா, யிறைபிர ணவகுஞ் சரமுமை பிடியீ ரெச்சமும் யானையா னைக்கோ, கறையடி வதியு மிடமெனக் கரிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (உஉ)

2836. வறியவ ரகட்டுப் பசித்தழ லவிய வல்சியீந் திடுதலோ மாயாக், குறியுடைச் செல்வர்க் கீதலோ வறமக் கொள்கைதேர்ந் தெனைப்புரந் தருள்வாய், சிறியபுன்சுரர்நன் றிலரென நின்னைத் தேடுவார் போற்பல்வா னரங்கள், கறிகறித் துமிழ்ந்து குளிர்சுனை நேடுங் கற்குடி மாமலைப் பரனே. (உங)

2837. பொற்புறு சபையின் மாதரார் நடனம் புரிந்தியான் காண்பதை யொழித்துச், சிற்பர சபையி னின்திரு நடனந் தரிசிக்கப் பெறுவதெந் நாளோ, மற்பொரு முசுக்கள் கார்தனைப் பார்தண் மணிப்

பட மெனப்பயர் துந்திக், கற்பக தருவின் கழுத்தொடி தரப்பாய் கற்குடி மாமலைப் பரனே. (உச)

2838. தட்பமே மிகுந்த சாகரம் புனிதத் தடாநதிப் புனலலா லெவரும், பெட்புறு திழிக்கு மங்கணப் புனலும் பெருகிடின் வெறுப் பது முளதோ, கொட்புறு மனத்தேன் பிதற்றுரை யுங்கொள் குகை தொறு முறைதவர்க் குறுவெங்,கட்பணி யுமிழ்ந்த மணிவிளக் கெடுக் குங் கற்குடி மாமலைப் பரனே. (உரு)

2839. மைக்கணார் முதலா மாயகா ரியங்கண் மயலென வெறுத் தென துள்ள,மெய்க்கணின் னடியார் பாதமே பற்றி விடாவிருப் புட னுற வருள்வாய், மொய்க்குமீ னுவரி புகுந்தறன் மடுத்து முழங்கிவந் தணைதரு முகிலைக், கைக்களி றேடிப் பிடியென வணைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (உசு)

2840. வேடமே பொருளா வுயிரளித் தவரை மெய்ப்பொரு ளென்பருய் திறத்தோர், மாடமின் மக்கண் மெய்ப்பொரு ளென்று மயங்குவேற் குய்திற மெவனோ,பேடைமா மயின்மீ நோக்கியே யகவப் பெருமகண் மகிழ்நனூர் தியெனக், காடுடைத் தருக்கோ னூர்தியை யுய்க்குங் கற்குடி மாமலைப் பரனே. (உஎ)

2841. பனிமதி நுதலெம் பிராட்டிமேற் கடைக்கண் பாய்த்திநீ யாடுமா னந்தத், தனிநடங் காண வருள்வையேன் மற்றோர் தவமு மோர் பேறும்வேண் டுவனோ, கனியரம் பையர்தங் குழைகள்கொண் டெறிய நறுவிளக் கோட்டுவா னரமக், கனிகள்கைப் பறித்து மீச் செல வெறியுங் கற்குடி மாமலைப் பரனே. (உஅ)

2842. வளிமுதன் மூன்றும் பயிறர விடக்கால் வகுத்தவிப் புழுக்குடி லந்தோ, விளிவுறக் குலையு முன்னராண் டிடினுண் டெனக் கினி யெப்பிறப் புறுமோ,துளிமுகிற் கூந்தற் சசிபுல வியினுற் றுரந்த முத் தாரமா நடஞ்செய்,களிமயிற் கழுத்திற் பரிசிலின் வீழுங் கற்குடி மாமலைப் பரனே. (உகூ)

2843. மனனெகப் புளக முடலெலாம் புதைப்ப மழைபொழி தருங்கணி னடியா, ரினநகத் திரிவே னுணஞ்சற் றில்லே னென்செய் கே னருள்செயு டலினுற், சினமதக் களிறு தொடர்ந்திட வோடுஞ் சிறுபிடி குறமட மாதர், கனதனத் திடியுண் டஞ்சிமீண் டணைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௩o)

2844. தடித்தெழு மன்பே யுருவமாம் வேடர் தம்பிரா னோ வென்றி முன்னீ, பொடித்தழுப் புரத்தும் வலியதோ வெய்ய பொய்யி னேன் றீவினை யுரையாய், கொடிச்சிய ரேன லிடித்திடு முலக்கைக் கொம்புபட் டுடைந்திழி பாகற், கடிச்செழு நறவவ் வுரற்குழி நிறைக் குங் கற்குடி மாமலைப் பரனே. (௩க)

2845. தேயுநுண் மருங்கு விறுத்தெழு முலையார் சீறடிச் சிலம்பொலி நேடி, யாயுமென் செவியின் குஞ்சித பாதத் தணிசிலம் பொலியுறிந் திடுமோ,பாயுமம் புலியின் குழவியும் வானப் பரப்பிடை யுதித்திரு ளனைத்துங், காயுமம் புலியின் குழவியுந் தவழுங் கற்குடி மாமலைப் பரனே. (௩௨)

2846. பந்தமார் கிளைக ளறத்துணித் துரிமைப் பண்புடை மனையைநிற் களித்த, வெந்தையா ரவரோ பிறர்மனை நயக்கும் யாங்களோ நின்னடிக் கன்பர், முந்துமா தவத்து முனிவரே போல முடிச்சிகை வளர்த்துவன் கிராதர், கந்தமே யுண்டு கலையத னுடுக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௩௩)

2847. நண்ணிமுன் னுலங் காட்டிற்குத் தலையா னடந்திடு மம்மையோ நினது, புண்ணியத் தலத்திற் காலினு னடந்தும் புகாப்பெரும் படிறனே பேயார், விண்ணியை யமர ரவியுணு விரும்பி விரித்திரு கைகளு மேந்தக், கண்ணிய யாக முறுவர்செய் சாரற் கற்குடி மாமலைப் பரனே. (௩௪)

2848. மதித்துனை யுள்ளச் சினகரத் திருத்தி வாழ்ந்தவர் வாயிலா ரல்லர், துதித்துனைப் புகழாக் கொடியவெம் மனோரே துயரும்வாயிலாரிஃ துண்மை, யுதித்தசெங் கதிர்மீச் செல்பொழு தேத்த வுறுந்திசைப் பாலரோ டுற்ற, கதித்தகூற் றினைமுத் திட்டிட வுயர்ந்த கற்குடி மாமலைப் பரனே. (௩௫)

2849. ஏத்தியன் புறுநின் னடியரை நின்னை யிகழ்ந்துரை யாடி யுமத்தி,நாத்தியென் றுரைத்து நான்பர மென்று நந்துவார் மாட்டெனைக் கூட்டேல், பூத்திரள் சிந்திச் சூழ்பவர் பாவம் போதல்போற் கயக்கருந் தானங், காத்திர னுடுத்த சாரனின் றேடுங் கற்குடி மாமலைப் பரனே. (௩௬)

2850. பொருந்திய சாந்தம் பொற்பணி முனிந்து புண்ணிய நீறுகண் டிகையே, தருந்திரு வெனவுட் கொள்ளுநா ளென்றோ சாரலிற் குடாவடி தவழ்த, லருந்தவ ரியற்றும் பெருமகஞ் சிதைப்பா னடுத்தவர் சாபத்திற் கஞ்சிக், கருந்தயித் தியர்க ளிரிவது கடுக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௩௭)

2851. அருந்தலை விரும்பி யணைத்தலைக் காண வவாவலை யுயிர்த்தலைக் கேட்க, வருந்தலை யெல்லா நின்னடிக் காக்கி வருந்தலை மையுமெனக் குளதோ, முருந்தலை சாரற் றேக்கடிப் படுத்த மொய்ம்மயி ரெண்கின்மேற் கிராதர், கருந்தலை வைத்து முடங்கத னுறங்குங் கற்குடி மாமலைப் பரனே. (௩௮)

2852. மன்னுசெங் கதிரோ னன்றியு மவன்கல் வாய்த்தழ றோன்றுமோ வதுபோற், பன்னுநின் னருளை யன்றியெவ் வுயிரும் பவக்கறு முத்தியிற் புகுமோ, மின்னிடை யெயிற்றி மாதர்தண் சுனைத்

தம் விளங்குருக் கண்டறற் குடிகொள், கன்னிய ரெனக்கை கூப்பி நின் றழைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (ந௬௯)

2853. சந்திரற் றரித்த நின்திரு முடியிற் றழலரா வையுமுடன் வைத்தாய், வந்தது புகழே யன்பரோ டெனைநீ வைப்பினும் வருவது புகழே, யிந்திரன் மயங்க நீன்மணிச் சுடர்மே லெழீஇயொரு முனி வனே போல்வெண், கந்தடு களிற்றைக் கருங்களி றுக்குங் கற்குடி மாமலைப் பரனே. (சo)

2854. தெளியுநின் கருணை மரகதக் கொழுந்தே சிவனுமென் பசியபுனேடிக், குளிர்பய னுதவுங் கோவினை யருத்தேன் கோதினை யருத்துவேற் குளதோ,வொளிசெய்பொன் னுலகிற் கொடுமுடி யுரிஞு வுதிரும்பொற் றுகளிடை மூழ்கிக், களிறுமா தங்கப் பெயர்ப்பொ ருள் விளக்குங் கற்குடி மாமலைப் பரனே. (சக)

2855. தேகமே நானெனன் றுனியிரு சார்புந் திடமுறக் கொண் டவத் தைகளுள்,ளேகியே யுழன்று திரிபுநா ளொழிந்துன் னிணையடி வணங்குநா ளுளதோ, போகுயர் குடுமிக் கருகிருந் தெயினர் பொன் னுல கத்தவ ரிசைக்குங், காகுளி துத்தந் தாரங்கேட் டுவக்குங் கற் குடி மாமலைப் பரனே. (சஉ)

2856. பணியும்வெள் ளெலும்பு நரம்பும்பூண் டதற்குன் பாலெ வர் வினவினர் தகாதென், றணிதர விடையார்க் கருளினை யெனையு மாளினத் தன்மையாய் விடுமால், பிணிமுகச் சாயற் கொடிச்சியர் வதுவைப் பெருநல நுகரமங் கலநாள், கணியெனக் கணிக ளோட விழ்த் துரைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (சங)

2857. மல்லலம் புவியிற் கூற்றினைக் கடத்தல் வயங்குநின் றிரு வடித் துணையே, புல்லிய நெறியார்க் கன்றிமற் றல்லாப் புல்லிய நெறி யினர்க் காமோ, வல்லியங் குழலா ருறுவெறி யாட்டி லணிகெழு முருகியந் துவைக்கக், கல்லெனு மொலியே செல்லொலி மழுக்குங் கற்குடி மாமலைப் பரனே. (சச)

2858. பஃறலைப்பாய லான்முதற் றேவர் பகுத்தொது துக்கிடநந்தி யோச்சுஞ், சுஃறெலிச் சூரல் கண்டுகை யேந்தித் துதிக்குநின் றிருமு னென் றுறுவேன், சிஃறெழில் களுஞ்செய் யாதுசெய் நின்னைத் தெ ளிதவர் புரிமகப் புகைபாற், கஃறெனுங் கானிற் குயினொடு தவழுங் கற்குடி மாமலைப் பரனே. (சரு)

2859. மையினுங் கழிந்த கருங்குழன் மடவார் மயக்கினை நயந்து மட் சுமையா, மெய்யினுட் புகுந்து பொய்யினுட் சுழலும் வீணனுக் கெங்ஙன மருள்வாய், வையினுட் பழகு நெடுங்கணைக் கிராதர் வயங் கெழு தொண்டகந் துவைப்பக்,கையினுட் குணிலென் றுளிர்பிறை யெடுக்குங் கற்குடி மாமலைப் பரனே. (சசு)

2860. கொடும்பசித் தழலு ணனிமூழ் கியும்பொற் குடமெடுத் தாட்டிஞ ரன்ப, ரடும்பலூ னுண்டுங் கைதொழ வருந்து மடியனுக்

னெங்ஙன மருள்வாய், விடுஞ்சுடர்க் கற்ப மாமலர் பறித்து மேலவர் கண்வழி விரும்பிக், கடும்புட னிறங்க வேரல்க ளோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (௪௭)

2861. மறையவர் திருவை வைதிகர் துணையை வருபர சமயகோ ளரியைக், குறைவிலா வழுதைக் காழியுண் ஞானக் கொழுந்தினைத் துதிக்குமா றருள்வாய், நறைகம ழலங்கற் கதுப்பரம் பையர்க ணன் குஞ்ம திலகந்தீட் டுதற்குக், கறைதபு சுனைக ளாடியிற் பொலியுங் கற் குடி மாமலைப் பரனே. (௪௮)

2862. மைக்கருங் கடலிற் கன்மிசை மிதந்து மாறினின் னருட் கட லழுந்து, மெய்க்கணெம் பெருமா னுவினுக் கரசை விளம்பிலே னெங்ஙன முய்வே, னைக்கரு நெடுங்க ணுய்ச்சிய ருறிக்க ணவெயெ டுத் தவனென நிலவைக், கைக்கருங் களிறு கவளமென் றெடுக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௪௯)

2863. நின்னுடைத் தோழப் பெருந்தகைப் பிரானை நிகரறு முதுகிரிச் செம்பொன், மன்னுமாற் றிட்டுக் குளத்தினி லெடுத்த வள்ளலைப் பரசுமா றருள்வாய், துன்னுசெந் தினையின் குரல்கவர் குருகின் றொகுதியைக் கவண்கயிற் றெறினக், கன்னியர் மணிவைத் தெறிந்தெறிந் தோட்டுங் கற்குடி மாமலைப் பரனே. (௫௦)

2864. துதிகரைந் துனக்குன் னடியருக் கன்பு துறுத்தலே முத்தியென் றெண்ணேன், மதிசெயு நானே பரமெனு மாயா வாதியு மாயின னழகே, திதியவன் பிரம னின்னமுந் தேடத் திகழுநின் னுருவென வோங்கிக், கதிரொளி மழுக்குங் கோபுரம் பலசூழ் கற் குடி மாமலைப் பரனே. (௫௧)

2865. ஆணவ மகன்ற வறிவன்றி யுருவி லையநீ பல்லுருக் கொ ண்டு, பேணுபன் னுமம் புனைந்துபல் விடத்தும் பிறங்குத லுயிர் கட்கென் றறியேன், மாணநின் னடியு முடியுங்காண் கினுமம் மாலய னிவற்றடி முடியுங், காணரி தெனச்செய் பொன்மதில் பலசூழ் கற் குடி மாமலைப் பரனே. (௫௨)

2866. தினகரன் பூத விருள்விடக் கிரணஞ் செலுத்தல்போற் சிறியன்மும் மலமா, மினவிருள் விடநீ யருள்செலுத் திடினுண் டின்றெனின் விடலென்று மின்றாந், தனபதி நகரி லதிகமீ தென்னத் தவழ்சுடர் மணிபல பதித்த, கனகமா ளிகைகள் பலவுடுத் தோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (௫௩)

2867. நவையறு மரசி னுமமப் பூதி நாயனூர் தாஞ்செயு மறங்க, ளவையினன் கெழுதி யுய்ந்தனர் யானின் றளவுஞ்சொல் வியுமறி யேனாற், சுவைதரும் பல்பூக் கறித்துவாய் குதட்டித் துணர்த்தபைஞ் சூதமா நீழற், கவையடி மேதி துயில்வய லுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (௫௪)

2868. தாலிகொண் டுறுநெற் கொளச்செலும் பொழுது தக்க குங் கிலியங்கொள் புனிதர்க், கேலுமன் பனந்தங் கோடிகூற் றொருகூ-

றெய்தினு மையமின் றுய்வேன், மாவிருங் கடத்த களிற்றின் மறைய வளர்கதிர்க் குலைச்செழுஞ் சாலிக், கால்கள்பாய் பழனம் பல வுடுத் தோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (ருரு)

2869. தூரமாஞ் செல்வச் செருக்கர்பி னடந்து தொடர்ந்துளந் திகைப்பதை யொழிந்து, சீரிய நின்மெய் யன்பரைத் தொடர்ந்து திகைப்பறச் செல்லுநா ளுளதோ, வாரிசத் தடத்தை யுழக்கிய பகட்டு வாளைபாய்ந் துறுகருக் கலங்கக், காரினைக் கலக்குங் கணியுடுத் தோங் குங் கற்குடி மாமலைப் பரனே. (ருசு)

2870. கூற்றினை யுதைத்துங் காமனை விழித்துங் கொன்றநின் றனக்கன்பு செய்யார், மாற்றறுங் கூற்றின் றண்டமுங் காம வருத்தமு மெங்ஙன மொழிவார், தாற்றிளங் கமுகின் கழுத்திறப் பாயுந் தகட்டட கட் டிளநெடு வாளைக், காற்றடம் பணைக ணணியுடுத் தோங்குங் கற் குடி மாமலைப் பரனே. (ருஎ)

2871. மின்னுசெந் தழலாய் நின்றுமென் பாதி மிலைந்துமல் லறநுதல் விழித்து, முன்னுநஞ் சயின்றுந் தெரிக்குநிற் கயன்மா லொ ப்பெனக் கரைநரும் வாழ்க, பன்னுகூன் குலைய குறுங்கழுத் தாம் பைப் பழங்கனிந் தொழுகிய செழுந்தேன், கன்னலின் படப்பை நனைக்குந்தண் பணைசூழ் கற்குடி மாமலைப் பரனே. (ருஅ)

2872. இயல்புடை யோகத் திருந்தநா ளெவரு மெவையுமின் புணர்ப்பற வருந்த, செயலுணர்ந் துமையைப் புணர்ந்தரு ணீயே தெ ளிபர மென்பது தெளிந்தேன், நயலுறு முளரி மணந்தமக் கிலாத தறிந் துநெற் கதிர்தலை வணக்குங், கயலுடைப் பழனக் கணியுடுத் தோங் குங் கற்குடி மாமலைப் பரனே. (ருகூ)

2873. பராபர நினது மேனியிற் பட்ட பாண்டியன் கைப்பிரம் படிதான், சராசர மனைத்தும் படுதலா னீயே தற்பர னெனவுளந் துணிந்தே, னிராவெனத் திரியுங் கவையடிக் கயவா யெருமைகள் கன்றுளிப் பொழிபால், கராமலை மடுக்க ணிறைதரும் பணைசூழ் கற்குடி மாமலைப பரனே. (சுo)

2874. பங்கயா சனனுந் திருநெடு மாலும் பாகசா தனனும்வா னவரு, மெங்குநா டியுங்கா ணரியநின் பாத மெளியதன் பருக்கென வுணர்ந்தேன், கொங்குலாந் தடத்துற் சலஞ்சல முகுத்த கொழுங் கதிர் முத்தம்வில் வீசிக,கங்குலை மழுகும் பணைமருங் குடுத்த கற்குடி மாமலைப் பரனே. (சுக)

2875. ஐயவென் னுள்ள வெள்ளமிந் திரிய வடற்குலை யுடைத் ததி விரைவிற, செய்யநின் பாத பங்கயக் கடலிற் சேர்தரப் படருநா ளென்றோ, கெய்யணி கூந்த லுழத்தியர் நெய்ங்க ணிழலற விடைக்க ண்டு மள்ளர், கையினாற் கயலென் றரித்திடுங் கணிசூழ் கற்குடி மாம லைப் பரனே. (சுஉ)

2876. கட்டுவீ டருள்வோ னீயெனத் தெளிந்து கரிசுறு புன்றெய் வப் பற்று, விட்டுனை யடைந்தேற் கெப்பற்று மறுத்துன் மெய்ப்பற் றைப் பற்றுமா றருள்வாய், வட்டவாய்க் கமல மதுமடை யுடைக்க மள்ளர்கள் கரும்படு மினிய,கட்டியா லடைக்குங் கணிமருங் குடுத்த கற்குடி மாமலைப் பரனே. (௬௩)

2877. விரிதனு கரண புவனபோ கங்கள் வினைவழிக் கொடுத்த வை துய்த்த,பரிவுயி ரறப்பி றெடுக்கிமீட் டாக்கும் பரிவினுங் கதிதர லெளிதே, நெரிமருப் பெருமை கரும்பினைக் குதட்ட நேரிழி சாறவ ணிரப்பும், கரிசறு மகணி மருங்குடுத் தோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (௬௪)

2878. செறிபிறப் பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பெனுஞ் செம்பொருள் காண்ப, தறிவெனத் தெரிக்குங் குறட்பொரு ளறிந்து மறிகிலன் போற்பிற காண்பேன், வெறிமலர்ப் பணைநெற் பச்சிளங் கதிர்கள் விண்ணகத் தேனுங்கா நீட்டிக்,கறிசெய வளரும் படுகர்சூழ் பழனக் கற்குடி மாமலைப் பரனே. (௬௫)

2879. வெம்பிய காமம் வெகுளியுண் மயக்கம் வேரறப் பறித்து நின் பதமே, நம்பியென் புருக வன்புசெய் நாளு நாயினேற் குள்ள தோ வருள்வாய், பம்புபன் மலர்கண் மருதவேர் துறையப் பன்மணி குயிற்றிய பைம்பொற், கம்பலம் விரித்தாற் போலடர் பணைசூழ் கற் குடி மாமலைப் பரனே. (௬௬)

2880. வையமும் வானு முய்யவன் புருவாய் வாதவூர் வந்தவ தரித்த, வையனன் புரையை நயந்துபா ராட்டு மவ்வள வாவதெற் கருள்வாய், செய்யதா மரையின் பன்மல ரொளிர்த றிகழ்தர விழித் துவச் சிரத்த, கையினுன் கிடத்தல் போன்மெனும் பணைசூழ் கற்குடி மாமலைப் பரனே. (௬௭)

2881. ஒழுக்கமன் பருளா சாரநற் சீல முறவுப சாரம்வந் தித்த, லிழுக்கிலா வாயமை தவந்துற வடக்க மிவைகளி லொன்றும்யா னறி யே, னழுக்கிலா வமுத முடிக்கள் போற் சிதற வணிமதி மேற்பெரு வாளை, கழுக்கடை யெனப்பாய் படுகர்சூழ் தெய்வக் கற்குடி மாமலைப் பரனே. (௬௮)

2882. நின்னுரை வழியே நிற்பவர் நில்லார் நீளற மறஞ்சுவர்க் காதி, மின்னுபோ கத்தா னரகத்தாற் றொலைத்து வீட்டுய்ப்போ னீயெனத் தெளிந்தேன்,மன்னிய தென்னம் பழம்பல வீழ வருக்கை யின் பழங்கிழிந் திழுதேன்,கன்னலங் கழனி பாய்தரும் பணைசூழ் கற் குடி மாமலைப் பரனே. (௬௯)

2883. மானிடப்பிறவி வந்தது மனத்தால் வாக்கினுற் காயத்தாற பணிசெய், தானிடத் தைந்து மாடுநின் னடிக்கீ ழமரவென் றறிந்தி லன் சிறியேன், கூனுடைக் குலைய குறுங்கழுத் தரம்பைக் கொழுங் கனி யிழிந்ததேன் கருப்பங், கானிடைப் பாயும் படுகர்சூழ் தெய்வக் கற்குடி மாமலைப் பரனே. (௭௦)

2884. பொருள்செய்சன் மார்க்க நெடுஞ்சக மார்க்கம் புத்திர மார்க்கமின் பாக்கு, மிருமைசெய் தாத மார்க்கமிம் மார்க்கத் தியா ஞெருமார்க்கமு மறியேன், பருமர கதமுத் தந்துகிர் கண்டம் பாளை செம் பழத்தினுற் காட்டிக், கருமுகி லணவுங் கமுகடர் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எக)

2885. கொச்சையர்க் குயர்மா னியுமர சினுக்குக் குலவுமப் பூதியு முலக, நச்சுசுந் தரருக் குதியரும் போல நான்சிறந் துய்வதெந் நாளோ, வச்சணங் கயில்வேற் கண்ணுழந் தியர்நெல் லரிதரும் கொடும் புற விரும்பைக், கச்சப வெரிநிற் றீட்டிடுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எஉ)

2886. படர்புகழ்க் காழிப் பிள்ளையார்க் கிவனைப் பாரெனச் சற்றுநீ மொழிந்தாற், பிடகன்மாத் தலையி லுருமுவீழ்த் தவரென் பெருவினைக் கும்மது வீழ்ப்பா, ரடிமடைப் பள்ளி யுலைக்கழு நீர்செய் யாவிகால் குளம்பல நிரம்பக், கடலுடைத் தென்னப் பாயுமென் பால்சூழ் கற்குடி மாமலைப் பரனே. (எங)

2887. நயந்தரு நாவுக் கரசருக் கிவன்பா லுட்டம்வை யென்னினப்பூதி, பயந்தசேய்க் குற்ற விடந்தொலைத் தவரென் பாசவல்விடத்தையுந் தொலைப்பார், வயந்தரு மள்ள ருடைப்பினை யூரு வரைகுவி நவமணி வாரிக், கயந்தலை யெனநின் றடைத்திடுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எச)

2888. பழிதபு குணவன் றொண்டருக் கிவன்பாற் பார்வைசெயென்னையேற் கராவாய்க், குழியினின் றொருசேய் மீட்டவர் சனனக் குழியினின் றென்னையு மீட்பார், வழிமதுப் பொழிபூங் கொடிகடாய் வளைப்ப வளைந்துபைங் கழைகணின் றிடுதல், கழிவில்கைக் கொடுவேள் பொரல்பொருங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எரு)

2889. அருவமா யுருவ மாயரு வுருவா யனைத்துயிர்க் குயிருமா யறிவாய்ப், பொருள்படு மறைக்குந் தெரிவரி யாயாம் புராணநிற் றெரிதலெற் கெளிதோ, சுருள்விரி யரம்பைக் குருத்துமீ யசைந்து சுரர்மினார் கலவியெய்ப் பாறறுங், கருள்படு பொதும்பர்ப் படுகர்சூழ் தெய்வக் கற்குடி மாமலைப் பரனே. (எசு)

2890. செவியினுற் கேட்டு மறிகிலே னின்னைத் தெரிந்தவர் போற்பல பிதற்றிக், குவிதரக் கவியும் புனைவனுன் னிடினென் குணமெனக் கோடகை தருமா, லவிருநெற் பணையின் ஞெண்டுகள் கிளைத்த வளவில்பல் வளையெலா நிரம்பக், கவிழிணர்ச் சூதத் தாதுகுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எஎ)

2891. அருமறை தெரிதண் டீசர்பா லென்னை யடைக்கலம் புகுத்துவை யானுல, வெருவறத் தந்தை தாடணித் தவரென் வெம்பவத் தாளையுந் துணிப்பார், மருவிய வுணவு கொடுவரச் சென்ற மடவனச்

சேவலை நோக்கிக், கருவுயிர்த் துறைபே டலமரும் கணிசூழ் கற்குடி மாமலை ப்பரனே. (எஅ)

2892. நானவார் கூந்தற் பரவையார் மனைக்கு நள்ளிரு ளுப் பணி தூது, போனநா ளாரூர் மறுகிலோ ரெறும்பாய்ப் பொருந்தினும் வருந்திடா துய்வேன், கூன்முது கிப்பி யுயிர்த்தவெண் முத்தங் குவி தரக் கயிலையே யென்று, கான்மலர் தூவிச் சுரர்தொழுங் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (எகூ)

2893. கெடுத்திடு மூலோகா யதன்முத லான கீழ்ப்படுஞ் சமயர் பொய் யுரையை, யடுத்திடும் படியெப் பிறப்பெனக் குறினு மருள னின் னடிக்கன்பே யருள்வாய், மடுத்தவெண் குருகோர் முடக்கிழ நாரை வாய்க்கொளு முணவினைத் தட்டக், கடுத்திடா தறவோர் போ லுறை கணிசூழ் கறகுடி மாமலைப் பரனே. (அo)

2894. தரிசனங் கொடுத்தா ளுயர்ந்தவ னீயான் றாழ்ந்தவ னிய ல்பினெப் பொருளுந், தெரிபவ னீயா னீதெரி விக்கத் தெரிபவ னின் னடிக் கடியே, னரிசெதர்ந் தயில்கொன் றுள்வழக் கறுக்கு மங்கைளூர் முகமதி கண்டு, கரிசறக் குமுத மலருமென் பால்சூழ் கற்குடி மா மலைப் பரனே. (அக)

2895. பொருவினின் பூசை யென்னும்புண் ணியத்தாற் பொலி சிவ ஞானம்பெற் றடங்கி, மருவுற மேல்கீழ் தருமறம் பாவ மாற்றி நின் னடிக்கணென் றுறுவேன், குருமலர்ச் செந்தேன் புலியடிப் பைங் காய்க் கொழுரை யரம்பையைச் சாய்த்துக், கருநிறக் கவரி நீந்தப்பாய் கணிசூழ் கற்குடி மாமலைப் பரனே. (அஉ)

2896. யானது செய்தேன் பிறரிது செய்தார் யானென தென் னுமிக் கோணை, ஞானவா ளழலால் வெதுப்புபு நிமிர்த்து நான்செவ்வே நிற்கவென் றருளவாய், மீனுண வளித்து விரிசிறை நாரை மென் மடப் பெடையொடு திளைக்கும், கானகன் மென்பூந் தடததமென் பால் சூழ் கறகுடி மாமலைப் பரனே. (அங)

2897. மூதறி வுடையோர் புகழ்சிறுத் தொண்டர் முளரித்தா ளடைந்துலே னடைந்தான், மேதகு சேயை யறுததவர் வெறுத்தென் வினையினை யறுக்கவஞ் சுவரோ, மாதர்மென் றடத்துல் வெளளிதழ்க் கமல மலரினை மடவனச் சேவல், காதலி னணைக்கப் பெடைதுயர் பணைசூழ் கற்குடி மாமலைப் பரனே. (அச)

2898. பெருகிய வெள்ளந் திரைக்கட லன்றிப் பிபீலிகை யளை யினும் புகல்போ, லுருகிய வன்ப ரன்றியென் பாலு முனனருள் புகு வது வழக்கால், பருதுயா யிரமோர் கடலிடைத் தோன்றும் பான மைபோ லொவவொரு மடுவிற், கருதுசெங் கமலம் பலமலர் பணை சூழ் கற்குடி மாமலைப பரனே. (அரு)

2899. உயிரெலா நின்ன தடிமையெப் பொருளு முன்னுடை மைப்பொரு ளென்னச், செயிரற வுணர்ந்த நின்னடி யலாதாள சிறிய னே னடைந்துய்வ தென்றோ, குயிலெனப் பேசுங் கடைசியர் வதனக்

குறுநகை மதிநில வென்னக், கபிரவங் கருதி மலர்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (அசு)

2900. பாவியேன் சிந்தை நின்னடிக் காக்கிப் பணிவிடைக் கிருகையுமாக்கி,நாவினைத் திருவைந் தெழுத்தினுக் காக்கி நவையற வுய்யுநா ளுளதோ, வாவியிற் பொலிவெண் டாமரை மலர்போன் மதியுறப் பெருக்கெடுத் தொழுகுங், காவிரிப் புனல்பாய் நெடும்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (அள)

2901. மிடைத்தம ருடற்றும் பலகுண மறுத்து மிகுசிவா னந்தமூற் றெடுப்பக், கிடைத்துனைக் காண வாணவ வெழினி கீழயான் பெறுவதெந் நாளோ, வுடைப்பினை மள்ள ரடைக்குமுன் வராலவ் வுடைப்படை படவுடை மடையின், கடைத்தலை வெடிபோய் விழும்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (அஅ)

2902. ஐந்துபே ரறிவும் பார்வையாய் முடிய வடுத்திடு கரணமீரிரண்டுஞ், சிந்தையாய் முடிய நின்றிரு நடனந் தரிசிக்கு நாளுமெற் குளதோ, விந்திர தருவோ ரளிக்குந்தே னளியா வியல்பினை நோக்கிவெண் மலராற், கந்தவார் பொழில்க ணகைக்குமென் பால்சூழ் கற்குடி மாமலைப் பரனே. (அகூ)

2903. பூப்பயி னந்த வனம்பல வியற்றேன் பொருந்தல கிடேனிறு லயத்தி, லாப்பிகொண் டைதா மெழுகிடே னெங்ஙனடியனே னுய்யுமா றருள்வாய், வீப்பயி லளிகண் மூக்குழ வழிதேன் விரிகடற் படுமுவ ரகற்றுங், காப்பயின் மென்பான் மருங்குடுத் தோங்குங் கற்குடி மாமலைப் பரனே. (கூ0)

2904. அவாவெனப் படுவ வெவ்வகை யுயிர்க்கு மணியவெவ் விடத்து மெஞ்ஞான்றுந், தவாவரு பிறப்பின் வித்தென வுணரேன் றண்ணரு ளெங்ஙனம் பெறுவே,னுவாமதி தவழுஞ் சோலையி லினாரொளிர்கத லியைமறை மாதர், கவாவென வணைக்கு நெடும்பணை யுடுத்த கற்குடி மாமலைப் பரனே. (கூக)

2905. மலைக்கொடி படருங் கற்பக தருவே வயங்கருண் மழைபொழி முகிலே, புலைக்கொடி யனையா னென்றுமெய் யாவிப் பொய்யினே னடையுநா ளென்றோ, நிலைக்கொடி யாட வுலகங்கொண் டாடநிறைமலர்ச் செங்கொடி யாடக், கலைக்கொடி யாடு மாளிகை பலசூழ் கற்குடி மாமலைப் பரனே. (கூ௨)

2906. அற்குடி கொண்ட விரைநறுங் கூந்த லணிமுலை யெம்பிராட்டி யையான்,சொற்குடி கொண்ட யாப்பினு லன்பாற் றுதித்திடப் பெறுநன்னா ளென்றோ, விற்குடி கொளும்பொன் னுலகமேத் தெடுப்ப வியனொளி குடிகொள்பன் மணியென்,கற்குடி கொளச்செய் நற்குடி மலைதாழ் கற்குடி மாமலைப் பரனே. (கூங)

2907. பல்லெலாந் தெரித்துச் சொல்லெலாந் துறுத்துப் பாட்டெலாம் பாடினீர் யாமு, மில்லெலா மாய்ந்தோங் கொடுப்பதற் கிலையென் னிவர்கள்பாற் புலவரென் பெறுவார், சொல்லெலாந் திருவைந்

தெழுத்திவண் வாழ்வோர் தொழிலெலாம் பணிவிடை யென்றுங், கல்லெலாஞ் சிவலிங் கம்மெனச் சூர்தாழ் கற்குடி மாமலைப் பரனே.

2908. பொற்பக மலர்ந்த மாதரார் மையற் புணரியி லழுந்திடா தெனக்கே, யற்பக மலர்ந்து சிவானந்தப் புணரி யழுந்திடு மாறெனக் கருள்வா, யெற்பக மலர்ந்த குவட்டுறும் யானை யீர்ங்கவு ளளிகளைக் கையாற், கற்பக மலர்ந்த குழையொடித் தோச்சுங் கற்குடி மாமலைப் பரனே. (௯௫)

2909. புவிமுழு தளந்தோ னேடியுங் காணாப் பொன்னடித் தாமரை காண்பான், குவிமனத் தோடு மகம்படித் தொண்டு கொண்டியா னுய்வதெந் நாளோ, வவிர்தரு பிறையைக் கண்டவில் வேட ரவாவொடு கொடிச்சியர் தமது, கவினுத லென்னப் பொட்டணிந் துவக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௯௬)

2910. மன்றினின் னடனங் கண்டகண் கொண்டு மற்றினிக் காண்பதி யாதென், றென்றிய சிந்தை யுறுதிகொள் ளுவனே னுய்குவே னெனக்கது போதுங், குன்றவ ரேனற் குரல்களை யறைக்கட் கொண்டுபோய்க் குவித்திடும் யானைக், கன்றினுன் மிதிப்பித் துதிர்த்தினை யளக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௯௭)

2911 நனியிடை யறும லுன்னடி நினைக்க நாயினேற் கருளுவை யாயி, னினிவரு கதிரெங் கெழினுமெண் ணேன்யா னிருப்பனீ தருளிட வேண்டுந், துனியறு களிற்றின் கோடுபட் டுடைந்து சுட்டபொன் போற்பல வருக்கைக், கனிபழுங் கீண்டு சுளைபல வுதிருங் கற்குடி மாமலைப் பரனே. (௯௮)

2912. நீதிசேர் சைவத் தடைந்தவ ரடையா நின்றவ ரடையவர் தமக்கியான், பாதகக் குழிசித் தொடர்பற வடிமைப் படும்பரி சென்றுநீ யருள்வாய்,கோதில்கற் பகத்தி னறுங்குள கருத்திக் கொழுமத யானையங் கூந்தற், காதலம் பிடியைப் புலவிதீர்த் தணைக்குங் கற்குடி மாமலைப் பரனே. (௯௯)

2913. சைவமே பொருண்மற் றவையல வென்று சார்திரு நீறுங்கண் டிகையுந், தெய்வவைந் தெழுத்தும் பற்றறப் பற்றத் திருவரு ளென்றெனக் கருள்வாய், பைவளர் மணியைத் தழலென நினைந்து பாவடிப் பருமநல் வேழங், கைவளர் கடநீர் மழையெனப் பொழியுங் கற்குடி மாமலைப் பரனே. (௧௦௦)

வெண்பா.

2914. நிலமாலை கொண்ட நெடுஞ்சடையி லென்பின்
குலமாலை யுஞ்சேர்த்துக் கொண்டாய் - பலமேலோர்
சொன்மாலை கொள்செவியிற் றூக்கற் குடியாயென்
புன்மாலையுங் கொளது போல்.

திருக்கற்குடிமாமலைமாலை முற்றிற்று.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# *கலைசைச்சிதம்பரேசுவரர் மாலை.

## விநாயகர் துதி.

ஆசிரியவிருத்தம்.

2915. பூமேவு மதுவொழுகி யுவட்டெடுத்துப் புலவகலப் புணரி பாயு, மாமேவு பொழிற்கலைசை யெழிற்சிதம்ப ரேச்சுரற்கோர் மாலை சாத்த, நாமேவு புகழ்மலிசீ ராவிதொறு நனிவிளங்கி நாளும் வாழுந், தேமேவு செங்கழுநீ ராம்பலடித் தாமரைநார் சிறப்பக் கொள்வாம்.

## நூல்.

2916. பூமலி யிதழி புனைசடை முடியிற் புக்கடங் கியபுனல் பொருவ, மாமலி தளிர்நின் னடியிலென் பரந்த மனம்புகுந் தடங்கு மா றருள்வாய், பாமலி புகழ்ப்பைந் தோகைமேன் முருகப் பண்ணவ னமர்தல்போற் பரிதி, காமலி யிணைந்த கமுகின்மேற் பொலியுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (க)

2917. ஆய்மதி புனைந்த சடையினஞ் சரவு மமர்தல்போ னின்னடி யவரை, யேய்தர வரைபுத் தகத்தொரு புறத்தி லென்னையு மெழுதுவித் திடுவாய், வேய்குழன் மடவார் படாமெறிந் தெழுந்த வெம்முலை விழைதரத் தெங்கங், காய்பல பாளை யெறிந்தெழும் பொழில்சூழ் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உ)

2918. பாற்பசுக் கறவார் கற்பசுக் கறக்கப் பலகைபெற் றூரெனநின்சீ, ரேற்பயான் பேசேன் வம்புபே சிடுதற் கெண்ணில்வாய் படைத்துளே னென்னே, சூற்பய னடைந்த மாதர்தம் வதனத் துணைவிழி யெனவிணைக் கயனீர்க், காற்பணைக் கமல மலரகத் துறையுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ந)

2919. வரியமர் முலையார் புரிநட நோக்கி மகிழுமத் தொழிந்துமாலயற்கு, மரியநின் னடமன் பூற்றெழ நோக்கி யானந்த மடையுநாளென்றோ, பொரியமரை மாச்சூர் மாவின மென்று புரந்தர ருங்குயிற் கினமாங், கரியபைங் குயில்கள் சினைபுகுந் துழக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ச)

2920. பொருவரு நினது திருவரு ளென்னும் புகழ்மிகு மூராலுக் கன்றே, மருவிய வினையேன் மும்மல மெனுமும் மதிலெதி ராவ

* கலைசையென்பது தொண்டைநாட்டி லுள்ளதான தொட்டிக்கலையென்னுமூர்.

தென் னாளோ, செருவிழி மடவார் புலவியி னெறிந்த செழுமணி பல வொளிர் வீதி,கருவலி வலன்மெய் வீழ்களம் பொருவுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ரு)

2921. செய்யநின் னடியார் செய்யுண்மு ஞயேன் செய்யுளேத் தன்மைய தென்னி,னையநின் னரிய கூத்தின்முன் பேய்க்கூத் தவ்வள வேயினி தருள்வாய், வெய்யபாற் கடற்க ணெழுதிருப் புரைய மேதி யின் பாலளாம் வாவிக்,கையலர் மடவார் மூழ்கிமே லெழுஞ்சீர்க் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (சா)

2922. பெண்ணுரு வொடுமேற் றூணுரு வமுமாய்ப் பிறங்குநின் றிருவுருக் குறியேன், புண்ணுரு வாம்பெண் ணுருவமே குறித்துப் புலம்புவேற் கென்றருள் புரிவாய், மண்ணுரு வசுர வுருவெனத் தெ ரிக்கு மாண்புபோன் மாதர்பொன் முகத்துக், கண்ணுரு நீலம் பல மலர் மருதக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எ)

2923. விரிந்தபாற் கடலின் மாலொடு மீனு மேவுநின் னருட் பெருங்கடலிற், புரிந்தநின் னடியா ரோடுநா யேனும் புக்குமே விடிற் குறை வருமோ, சொரிந்தபான் மேதி யுழக்கலின் மாடத் துவசம் வேள் கொடியென மடுவிற், கரிந்தநீள் கயலக் கொடிமிசைப் பாயுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அ)

2924. இரும்புனற் பயின்றும் பசுநிறம் வாய்ந்து மீரமில் கிடை யென மறைநூல், விரும்பிடம் பயின்றும் பூதிசா தனமே மேவியு மன்பில ஞனேன், சுரும்பினஞ் செறிந்த மலர்க்கொடி தாய்ப்பைந் தோகையைப் பிணித்திட வளைந்த, கரும்பின மதவேள் கைக்கரும் பேய்க்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கூ)

2925. மலைமகள் செங்கை மலர்கொலோ மால்கண் மலர்கொ லோ நின்றிரு வடிக்குப், புலையரும் விரும்பாப் புன்புலால் யாக்கைப் பொறையினேன் சொன்மல ரைய, தலைமைசால் புலமைச் சங்கநா வலவர் தமக்குநூல் பயிற்றினோ ரென்னக், கலைவரம் புணர்ந்தோர் கழகமே மல்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கo)

2926. நண்பக லதற்கு மேனிழல் பொருவ நாடொறும் வளர் வினை காலை, யெண்படு மதற்கு மேனிழல் பொருவ வெந்நாள் குறு குமோ வுரையாய், வண்பழ னங்க டொறுமட மாதர் மலரடி மேற்சி லம் பொலிபோற்,கண்படு கமல மிசையன மொலிக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கக)

2927. உழிதரு வளியோ டுழிதரு சருகி னெழிவற வுழிதரு புலனோ, டுழிதரு மனமற் றுழிதரா வணம்யா னுன்னருள் பெறுவ தென் னாளோ, கழிதரு பழனத் துழிமலர் கமலக் கழிசுவைத் தேன் கரு முகிலிற், கழிதரு கடலிற் பாய்ந்துவ ரகற்றுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கஉ)

2928. வெளிபசுந் தோலிற் சுருளுமேல் விண்மேல் வீசுபா டா ணநின் றிடுமே, லளிபடு பத்தி யன்றியு முத்தி யடையலா மைய வென் செய்கே,ளொளிமினூர் முகமுங் கமலமும் பகுத்தாங் குணர்தரா துழல்பெரு வாவிக், களியளி பிரம ரப்பெயர் விளக்குங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (கஙு)

2929. சொற்படு மூவர்நீர் நனிபரு கிடினுந் தொலையுமோ தாக மங் கதுபோற், பற்பல நூல்க ணனிபடித் திடினும் பாறுமோ பவத் தொடர் மைய, வற்பொடு முறுவார் குறிப்பறிந் துதவு மக்குண மிகுத் தலின் விண்வாழ், கற்பகஞ் சமழ்ப்பப் பொலிபவர் மேவுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (கச)

2930. துறைமலி யன்பர் துதியொடு நாயேன் றுதியுநின் றிருச் செவி யேற்கு,மறைகடல் புனித நதிப்பெரும் புனலோ டங்கண நீரு மேற் றிலையோ, நிறைசுதைத் தவள மாளிகை முகட்டு நெடுநிலா மதி நடு வுடலக், கறைதபத் தவழ்ந்து திரிதரும் வளமைக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கரு)

2931. குற்றவன் றருக்கள் பலவெனு மழலோர் குறும்பொறிக் கெதிருமோ வதுபோ, லுற்றவென் வினையத் தனையுநின் னுமமொ ன்றினுக் கெதிர்படுங் கொல்லோ, நற்றவத் தமைந்த வளகையே முத லா நகரெலாஞ் சிறுநக ரென்று, கற்றவர் புகழப் பெருநக ராய கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (கசு)

2932. ஒருவருக் கொன்று கொடுப்பவோர் கையு முளனலேன் வாங்குதற் கெனிலோ, பருவலி வாணன் கையினு மிரட்டி படைத் துளே னென்றுய்வேன் கொல்லோ, பொருவில வென்று நோக்குதல் செய்யும் புலவர்கண் ணேறுறு வண்ணங், கருமுகி லுறைமேற் பொ திந்தமா ளிகைசேர் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கஎ)

2933. வரையெலா மிவர்ந்து நதியெலாம் படிந்தும் வனமெலா மமர்ந்தும்வா ரிதிசூழ், தரையெலா முழன்று மாவதெ னின்னைச் சர ண்புகா மானிடர்க் கம்ம, திரையெலா மலைக்குஞ் செயலறிந் துறுகற் செறித்தெனச் செழுமணி பலவுங், கரையெலாஞ் செறியப் பொலித ரும் வாவிக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கஅ)

2934. மனைவியைப் பொடித்து மகவினை யறுத்து மறங்கொடு தந்தையை வதைத்து, நினைதரு தமரைச் செகுத்தும்பெற் றனரா னின்னருள் யான்பெற்ற தென்னே, புனைதரு புவிக்குப் பொன்னிற மன்று புகல்கரும் பொன்னிற மென்னக், கனைகுரல் வேழங் கடம் பொழி வாரிக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கக)

2935. உலகெலா மழலிற் பொடிசெய்தா யிடைநின் ளுருவனு யாடிமே வுனக்கெ, னலகில்வெங் கொடியேன் றீமனத் தகத்து மாடி மே வுதல்வழக் கன்றே, விலகுபு திசைக டொறும்பரந் தாங்க

ணியைந்தமா மதத்துளை யடைப்பக், கலகவாள் விழியார் சுண்ணமாட் டுவக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உ0)

2936. வலியக னினது மனமதன் மாட்டு மருவுறே னென்றுநீ யிசைக்கிற், பொலிபருப் பதமர் தரமுத லிடத்துப் புணர்ந்தது தகாத தாய் முடியு, மலிசுவைக் கரும்புங் கந்தியு மாவும் வருக்கையும் வளரி லாங் கலியுங், கலிபுக வரிதென் றகலுறச் சூழுங் கலைசைவாழ் சிதம் பரேச் சுரனே. (உக)

2937. அழலகத் திட்ட மெழுகென வறைநே ரமைந்தவென் மனங்குழைத் துன்னைப், பழமறை யெல்லாம் வல்லவ னென்னும் பழஞ்சொலைப் புதுக்குவ தென்றோ, முழவொலி மதமா முழங்கொலி வயமா முரணொலி தேரொலி வீரர், கழலொலி யெழுந்து கடலொலி மாற்றுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உஉ)

2938. மனிதரி லுயர்ந்தோர் வானவ ரெனுஞ்சொன் மற்றைய ரிழிபுகண் டன்று, புனிதமில் புழுத்த நாயினுங் கடையேன் புன்மை கண் டெழுந்ததே யன்றோ, வினிதுவந் தடைந்தோர் மயக்கமா நகர மெய்துறு வகையருள் செய்து, கனிதிரு வருணன் னகரமே யாய கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உ௩)

2939. வெள்ளம்வா ரிதிமட் டோவெறும் பளையும் விரவுறு நின் னருள் பெருமை, யுள்ளவர் மட்டோ சிறியனே னிடத்து முறத்தகு நீயுமீ துணர்வாய், புள்ளவாந் தடத்துப் பலவகை மீனும் புழுகுசாந் தாதிக ளுறக், கள்ளவாள் விழியார் மெய்கழீஇக் குடையுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (உச)

2940. சிறியவர்க் கியல்பு குற்றமே புரிதல் செயிரறு பெரிய வர்க் கியல்பு, மறியவக் குற்ற மாய்த்தினி தாள்கை மற்றிது நீயறி யாயோ, செறிவய லிளஞ்சூ னெற்பயிர் மேய்ந்து திருமலர் குதட்டியங் கரும்பு, கறிசெய்து மேதி மரநிழ லுறங்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உரு)

2941. பலகலை யுணர்ச்சி தோன்றினு முறுமோ பக்குவ மிலார் க்குமெய்ஞ் ஞான, மலர்கதிர் கோடி தோன்றினுங் கூகைக் கந்தகா ரங்கெடுங் கொல்லோ, மலர்தலைக் கதலி மிசைமுகி றவழ்தன் மற் றது மரம்பையே யென்று, கலவிவிண் ணுள்வோன் றழுவுத லேய் க்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உசு)

2942. மாதர்த மல்கு லெனும்பண வராவென் மதியெனு மதி யினை விழுங்க, மோதனுர் மிகுவெம் பவமெனுங் கடற்கண் முழுகு வே னுய்வது முனதோ, வாதர மிகுபொன் னுலகமர் தரத்தே யமர்ந் ததென் றமாருட் கொண்ட, காதர மொழிய மாடமேற் றூங்குங் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (உஎ)

2943. பாவியேன் மனமா கியபெரு வெள்ளம் பத்தியா கியபெரு நதியை, மேவியே யொளிர்நின் பாதமா கியால் வீரையுட் புகுவதெந்

நாளோ, பூவியல் கழனி யாமைவன் முதுகிற் பொருந்துகைக் குயங் கள்கூர் படைப்பக், காவியங் கருங்கட் கடைசியர் தீட்டுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (உஅ)

2944. அருளிலாத் தவமோ விதுவில்வா னகமோ வாதரஞ் சற் றுமி லறமோ,தெருளிலா வுணர்வோ விரையிலா மலரோ சிறியனேன் பத்தியில் பாடல், பொருள்பெறு சுதைதீற் றுயர்ந்தமா ளிகைமேற் புதுப்பிறை தவழ்தன்மீப் பொங்குங், கருளில்பாற் கடலூர் வலம்புரி கடுக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (உக)

2945. இடையறு வன்பர் பாட்டொலி முன்ன ரேழையேன் பா ட்டொலி தேமா, வுடையபைங் குயிலி னோசைமுன் கொடிசெய் யோ சையே யுணர்ந்தனன் யானு, மடையெழில் வான மீமிசைப் பொலியு மந்துகிற் கொடியெலாம் வானக், கடையுடுக் கணங்கள் சிதர்ந்தரப் புடைக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ந௦)

2946. குயமகன் றிகிரி போற்சுழல் கொடியேன் கொடுமனங் கைபுனைந் திடுமேண், மயமகன் றிகிரி போற்சுழ லாது வயங்கநீ யரு ளுவ தென்றோ, நயமகன் றிடாமின் னொரொடா டவர்பூ நகுதட மடப் பிடி யொடுவன், கயமகன் றுறைநீ ராடல்போ லாடுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (நக)

2947. கொடியவெங் கூற்ற நடாவுறு கடாவின் கொடுமணி யோசைகேட் டிடுமுன், னெடியநீ யுகைக்கும் விடைமணி யோசை நீசனேன் கேட்குமா றுளதோ, வடியயிற் கண்ணா ரட்டில்வா யிட்ட வளங்கெழு குய்ப்புகை பரந்து, கடிகெழு திசைகண் முழுமையுங் கமழுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (நஉ)

2948. வட்டநாண் மலர்மேற் கடவுளென் றலைமேல் வருந்து றக் கடவையென் றெழுதி,யிட்டதீ யெழுத்து நீரெழுத் தாதற்கெத்த வஞ் செய்துளே னடியேன், பட்டமே வுறுமோ திமமுயிர்ப் பெடை யைப் பார்ப்பொடுஞ் சிறகரா லணைத்துக், கட்டவாக் கமல மலர்மிசை யுறங்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (நந)

2949. ஆயவெண் பிறவிக் கணக்கெழு தியவே டாலவா யழ லில்வெங் குருமுத், தீயரிட் டருளே டாகுறு தமணத், தீயரிட்டொ ழிந்தவே டாமோ, மாயமீன் சிறிது சிறிதென நீண்டு வலிபடைத் துடல்பருத் தளவில், காயமீ னஞ்சத் தோயமீன் பயிலுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (நச)

2950. என்னகத் திருண்மாய்த் தமைந்தகா மாதி யெனும்பல மீனொளி மழுக்கி, முன்னரு மொளியைப் பரப்பிடு வதற்குன் முக் கணு ளொருகணே யமையும், பொன்னணி முலையார் புலவியி னெறிந்த பொங்கொளி மணிப்பணி செறிந்து, கன்னவி றிணிதோ ளினையர்தேர் தடையுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (நரு)

2951. அருந்துதல் பொருந்த னிவிர்த்திசெய் விரத மையநின் பொருட்டியா னியற்றேன், வருந்துறு பிணியா திகளுறி னியற்ற வல்லவ னுயினே னன்றே, விருந்துற நோக்கி மகிழ்நர்மேற் கொண்ட வெகுளியாற் செய்தசெங் தடங்கண், கருந்தடங் கண்செய் துடன்மகிழ் பவர்சூழ் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ங௬)

2952. தின்றுதின் றொழிவே னென்றுவெங் கூற்றஞ் சினந்தெதிர் வீசுபா சத்தோ, டொன்றுவெம் பிறவி வீசுபா சமுமற் றாத்தையே யுய்யுநாளுளதோ,துன்றுபைங் குமுத மலர்த்தடந் தோய்ந்து துதைமணம் வாருபு தென்றற், கன்றுவந் துலவு மரமிய மாடக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ங௭)

2953. குவலய நடுங்கக் கருங்கடா வுகைக்குங் கூற்றுவன் கரங்கொடு புடைக்குந், தவலரும் வயிரத் தண்டிளங் கதலித் தண்டென வென்றெனக் கருள்வாய், அவலமர் தருநீ ரிரவல ரலான்ம ணமரிர வலரிலை யென்னக், கவலரும் வளமைப் பெருங்கொடை யினர்சேர் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ங௮)

2954. மாண்டநின் னடியார் குழாத்தொடு மடியேன் வயங்குநின் பேரவை புகுங்கா, லாண்டகை நந்தி கணமிவன் புகுத லடாதெனத் தடாவகை யருள்வாய், பூண்டகு மணியு மாடமும் வீதிப் புறங்களுங் கடியன வாயுங், காண்டகு சிறப்பு மிகப்படைத் தோங்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ங௯)

2955. பொறிவழிச் செல்ல மனமதன் வழியே போகுமென் னறிவுவன் கடாப்போ, னெறிவழிச் செல்லக் கொழுவதன் வழிச்செ னெடியதுன் னூசியே நிகரும், வெறிகமழ் கைதை நெய்தலுங் கொன்றை விரைகமழ் தரையுமேற் படர்ந்து, கறிகமழ் வரையுஞ் சூழ்பெரு மருதக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (௪௰)

2956. பற்றவா வறுத்த நின்னடி யவர்தம் பழக்கமே விரும்பினப் பழக்கத்,துற்றவா தரமே நின்னடி யடைதற் குறுதுணை யாமஃதருள்வாய், துற்றவா டவர்தந் தடக்கையும் யானைத் துதிக்கையுந் தாழ்வுற்றுக் கிடந்துங், கற்றநா வலர்கள் புகழ்தரப் பொலியுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (௪௧)

2957. மனத்தினு னினையேன் வாக்கினாற் றுதியேன் மலர்கையாற் றாவிநிற் பணியே, னுனத்தகா வென்மா னிடப்பிறப் பினுமற் றோரிழி பிறப்புநன் றுமால், வனத்துழாய் மாயோன் வளர்ச்சியி னுயர்ந்து வயங்குபே ரண்டமூ டுருவிக், கனத்தமா மணிப்பொற் கோபுரம் பொலியுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (௪௨)

2958. அடியனேன் மனத்துக் கழலொடு சிலம்பு மதனொடு பட்டும்வெள் ளியதுண், பொடியொடு சாந்துஞ் சடையொடோ தியுமாய்ப் பொலிதரப் பெறுவதென் னாளோ, கொடியிடை மடவார் கொவ்

வைவா யிதழுங் குறியகட் கொழுஞ்செழுங் கரும்புங், கடிபடத்தெ விட்டா விரதமூற் றெடுக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே.(சங)

2959. ஆதர மில்லா வென்னையு முறுபே ரருளினு லாண்டு கொள் ளுவையேற்,பேதம துரூநின் னடியவர் புதிதாப் பித்தனென் றுனையுரைப் பாரோ, மாதர்த மிருவார்க் கொங்கையு மவர்தம் வால்வ ளைச் செங்கையு நாளுங், காதலங் கிள்ளை யுற்றுறப் பொலியுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (சச)

2960. பாரிடைப் பிறந்த புலையுட னிலைக்கப் பற்றரண் செய்பவ ரறிவு, நீரிடைப் பிறந்த புற்புத நிலைக்க நெடியபூண் கட்டுவா ரறிவே, சீரிடைப் பிறந்த மாடமே னிலைச் செழுஞ்சுவ ரருகுறு மடவார், காரி டைப் பிறந்த மின்னெனத் தோன்றுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சரு)

2961. அந்தகன் கணம்வெம் பாவிவந் தனையா வளறது பா ரெனு முனநின், பந்தமில் சணங்க ளுயர்சிவ லோகம் பாரிது வென ப்பெறு வேனோ, சந்தநான் மறைசொல் வழியழன் மூன்றுந் தவாது செ யிருபிறப் பாளர், கந்தநாண் மலர்மேற் கடவுளிற் பொலியுங் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (சசு)

2962. பொருவிலன் புடைய நின்னடி யவருட் புன்மையேன் றளிர்மலர் கனிகாய்,மருவுபன் மரத்துணின் றிடும் வற்றன் மரம்பொர நிற்பனோ வருள்வா, யுருவளர் நீல மணிப்பெரு மாடத் துட்பொலி மாதர்தம் வதனங், கருநெடு முகிலுட் பொலிமதி புரையுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (சஎ)

2963. கோதிலா வமுதே குணப்பெருங் குன்றே குறை வில்பே ரருட்பெருங் கடலே, சோதியே யென்று நாடொறு நினையே துதித்திட வரமெனக் கருள்வா, யாதிநா ளமர ரதிபதி நகர மதற்கு மா ருகமண் ணுண்ட,காதிசேய் படைத்த நகரெனப் பொலியுங் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (சஅ)

2964. பல்லெலாந் தெரித்துத் தராதரந் தெரியாப் பாவியர் மேற்கவி பாடிச், சொல்லெலாஞ் சொல்லித் துயருவார் நின்னைத் துதித்தலின் வருபய னறியா, ரல்லெலா நிலைகெட் டோடுபு மற்றோ ரண்டத்துப் புகவொளிர் செங்கேழ்க், கல்லெலாம் புகுந்த மாளிகை மல்குங் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (சகூ)

2965. ஒல்லுரு வெனநின் னுருவிலா வுருவு ளொன்றுநான் பற்றுறுத் தீங்காற், பல்லுருப் பற்றி யுழலுகின் றேனுற் பரவைசூழ் புவியிடத் தைய,வில்லுரு நுதல்வே லுருவிழி மடவார் விளங்குமோ தியும்பல வுருக்கொள்,கல்லுரு மாடங் களுமண மருத கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ருo)

2966. பரந்தெழு காமுஞ் சுரந்தெழு வெகுளி படர்ந்தெழு மயக் மிம் மூன்று, நிரந்தர முடையே னிவற்றுளொன் றுறினு நிரயமே

தருமென்ப துணரே,னரந்தடி நெடுவே லாடவர் கண்ணு மரிதுதோற் றுதலென மருங்குல், கரந்தவர் கண்ணுங் கருமைநீங் காத கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (ருக)

2967. பூதமோ ரைந்தும் பொறிகளோ ரைந்தும் புலன்களோ ரைந்தும்வெம் பாச, பேதமோ ரைந்துங், கலப்பற வுள்வார் பெரி யரக் கரங்களோ ரைந்து, மாதவ னனைய பெயர்ப்பொரு ளடைவான் மலர்க்கரஞ் சென்னிமேற் கூப்பிக், காதநீ டெல்லைப் புறமுறச் சூழுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ருஉ)

2968. ஒருகணப் பொழுது நின்னடித் தொழும்பி னூத்தையேன் மருவுக லரிது, மருவினு மதனை யுகமென நினைப்பேன் மற்றதிற் குற்றமொன் றுண்டோ, பருதியு மதியும் பாம்புமைங் கோளும் பற் றுபு புரியளுர் தன்பாற், கரிசில்வாழ்க் கையருக் குருவகை யிரிக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ருங)

2969. பரவுநின் கோயில் சூழ்தரப் பங்கும் பகரும்வே றுருகரு மத்தி, லுரவுறப் படரக் காலுமா யமைந்த வுணர்விலேன் பங்கிரு காலும், விரிவுறப் பூத்த தருவெலாங் கருமை மிகுமளி மொய்த்தலில் வான்வாழ், கரவிலர் பழுத்த நாவலோ வென்னுங் கலைசைவாழ் சிதம் பரேச் சுரனே. (ருச)

2970. நாய்நரி கழுகு பருந்துமுற் பலவு நகைகொடு விருந்துண வெருவை, தோய்தடி யாதி நிரம்பிய நாலாட் சுமைபல நாட்சுமந் தெய்த்தே, ஞய்பொறி யடக்கி வந்ததே யுணவ தாக்கிவா ளராக்கு கை தொறுந்தோங். காய்தவர் போல்வாழ் குறிஞ்சிசூழ் மருதக் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (ருரு)

2971. வெள்ளிய பிறைநீர் நுண்பொடி துரோணம் விடைவரை யானைமுற் பலவுந், தள்ளிய விலாநீ வெள்ளறி வுடையேன் றன்னையுங் கொள்வது வழக்காற், புள்ளிய லோவ மாடமேன் மடவார் புலவியிற் குழனின்றுங் கழித்த, கள்ளியன் மாலைக் கரம்பைய ருடுங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (ருசு)

2972. நலமலி தரநின் ஞமங்கடுதியார் நடுநடுங் கிடவரு நமனைக், குலமலி நமனென் றெண்ணினர் போலுங் குவலயத் திடைச்சில வறியா, ருலமலி மைந்தர் திரள்புய மார்ப முத்தமாங் கங்களிற் புலந்த, கலமலி முலையார் பதச்சுவ டறுத கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே.

2973. தருநிழல் வாழ்க்கை மலர்மிசை வாழ்க்கை தயங்கொளி வைகுந்த வாழ்க்கை, யருவருப் புடையே னின்னடி வாழ்க்கை யவா வினேற் கென்றருள் புரிவாய், பொருவரு தம்பா லிரந்தவர் தம்பாற் புவியிடத் தியாரும்வந் திரப்பக், கருவிமா முகில்போற் பொழிபவர் சேருங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (ருஅ)

2974. மாயவெங் காலன் வாதனை தவிர்ப்பான் மற்றவ ஞருயிர் குடித்தி,சேயபங் கயத்தாள் பற்றுபு நின்றேன் சிறியனே னிரங்கிடல்

வேண்டு, மீயுயர் பசும்பொன் மாடமேற் பயிலு மின்னனார் பேமா ழில் கண்டா, காயவாழ்க் கையர்தம் முட்கலாம் விளக்குங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (ருகூ)

2975. மாரவேள் பகழி மலர்க்கிலக் காயுள் வருந்துமவ் வானவர் களத் துயரந், தீரநம் படியார்க் கருள்வரோ நுதற்கட் டெய்வநா யக நினே யல்லாற், பாரமால் வரையும் வரையுமோ துதல்போற் படர்மரு ளிடைமினார் மைந்தர், காரவாண் முலையும் புயங்களு மோதுங் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுo)

2976. பெற்றது சிறிது பலவிட யத்துப் பெருதது பெரிதெ னக் கொள்ளுங், குற்றமிக் குடையே னாயினுங் கடையேன் குலவு நின் னருளுற லென்றோ, துற்றவல் லிருளும் விளர்ப்புற மதியின் றோற்றமு மிகையென முற்றக், கற்றவர்மேனி நீற்றொளி விளங்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுக)

2977. விரைகெழு மென்பூ நின்முடிக் கணியேன் மின்னனார் குழன்முடிக் கணிந்து, வரையற மதவேள் வழங்குபூப் பெற்று வாரி சூழ் பூவிடை யுழல்வேன், புரையறு பதும ராகமா ளிகையின் பொங் கொளி யருமையா லிரவுங், கரையகல் பொய்கைக் கமலம்வாய் மல ருங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுஉ)

2978. என்றுநற் றுணையா நினையிகழ்ந் தயலா ரிணக்கஞ்செ யிழி ந்தவென் னினுந்தற், கொன்றுண வளிப்பார் தமைத்தொடர்ந் தயலா ருறவிகழ் ஞமலியே விசேடந்,துன்றுபைங் காவின் மதுவிருந் தருந் தித் தொகுபொறி வண்டினம் வயிற்றுக், கன்றுவெம் பசிதீர்ந் தணி யிசை பாடுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுங)

2979. அருந்துய ரென்னுட் காரொளி யாய தம்மவோ வெள் ளொளி யாகத், திருந்துபச் சொளியோர் பாலுடைத் தாய சேயொளி யூன்றுவ தென்றோ, முருந்துறழ் நகையார் மாடமே னின்று மொய்த் தவா னவர்விழி யிருளக், கருந்துணர்க் கூந்தன் முடித்திட விரிக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுச)

2980. நெடியபே ரடியார் குழாம்புகத் தகாத நீர்மையேன் றனை யிரங் குபுசிற், றடியவர் குழாத்துக் கடையொரு புறத்தி லாவது புகுத்திட வேண்டுங், துடியிடை மடவார் கந்துக மாடல் சோலையி னோக்கிய மந்தி, கடியவிர் தேமாங் கனிபறித் தாடுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுரு)

2981. மேயநம் மடியார் குழாத்திடைப் புகுத்தே மெய்யிலா னினையெனின் மாசு, தேயநா யேனை யாதுதான் செய்யத் திருவுளங் கொண்டனை யைய, பாயுநான் மறையு முழங்கொலி மன்றற் பணை யொலி பரிகரி யொலியா,காயவாழ்க் கையர்கை செவிகவித் திடச்செய் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுசு)

2982. பவமற வொழித்தி மறுப்பையே லருளும் பவந்தொறு மிடையறு தடியேன், சிவமொழிப் பொருளுட் கொளப்புரி யிவற் றென் செய்திடத் துணிந்தனை யைய, தவமது வருந்திக் காமரம் பாடித் தழைபொறிச் சிறைவரி வண்டு,கவனவொள் விடைநேர் மைந்தர் தார் மருவுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுஎ)

2983. யாரினும் பெரியை நீயெனக் கதிகர் யாருமி லென்னையா ளுவையேற், சீரினும் பெருகுங் கருணையோ னெனலாற் சினங்கொடு விலக்குவார் யாரே, போரினு முயர்ந்த பொழிலினு மாடப் பொங்கொளி முகட்டினுங் கமஞ்சூற், காரினு முறங்கப் பொலிபெரு வளமைக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுஅ)

2984. மன்னிய பவநோய்க் குன்னருண் மருந்து வயித்திய னீயெனத் தெரிந்துந், துன்னிய வந்நோ யறவுனை யடாமற் சுழலுவேன் விரகிலே னன்றோ, மின்னியன் மருங்கு லுழத்தியர் வெருவ விரிமலர்த் தடநின்றும் வாளை, கன்னியங் கமுகின் கழுத்திறப் பாயுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (சுகூ)

2985. மண்டல மதனின் மானிடப் பிறப்பை மருவினு ரடைபய னினது, தொண்டர்தந் தொண்ட ராகியின் கோயில் சூழ்ந்துனைப் போற்றுத லன்றோ, விண்டல மியங்கும் பரிதிபல் வடிவாய் மேவி வீற் றிருந்ததே யென்னக், கண்டகண் வழுக்கப் பொலிமணி மாடக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எ௦)

2986. நீயமர் காஞ்சித் தலமுறேன் மகளிர் நிலவுகாஞ் சித்தல முறுவேன், மேயசீர்க் கூடல் விழைதரே னனையார் விருப்புறு கூடலே விழைவேன், பாயநீர்ப் பண்ணை யகத்தெழு செந்நெற் பைம்பயிர் கருமதப் பகட்டின், காயமுண் மறைய வளர்ந்தெழு மருதக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எக)

2987. என்றுமை யாற்றை மேவுமென் மனநின் னிணையிலை யாற்றைமே வாது,சென்றுயர் தில்லை தரிசித்த தில்லை திருவரு ளொங்ஙனங் கிடைக்கும், துன்றுநெற் பணையிற் பச்சிளங் கதிரைச் சுரருல கத்திள வீன்ற, கன்றுறப் பறித்து மென்றுவா யசைக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எஉ)

2988. மறைவனங் கொடிய பாவியேன் விழிக்கு மறைவன மாயின தாரு, ரறையருள் பெறுவான் புகுதயா ளூரு ராறெனி னஞ்சுவன் மூழ்க, நிறைபெரும் பழனக் கன்னலுங் கமுகு நெட்டிலைக் கதலியு மகவான், கறையறு மணிமண் டபத்தினுக் கெழில்செய் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எங)

2989. வளமலி மாட நின்றிருக் கடவூர் வாய்மையி னடைந்தவர்க் கென்று, மூளமலி யுவகை யெழவருள் கடவூ ருண்மையி தென்பதுட் குறியேன், றளமலி விடபச் சோலையுந் தருமச் சாலையுந் தயங்

குபல் குன்றிற், களமலி போரும் வளமுகில் சேருங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எச)

2990. மதித்தமா தங்க வனமனங் குறியேன் மாதங்க வனங்குறிப் பேன்மீன், குதித்தநீர்க் கோலக் காவுறேன் வீணே கோலக்காத் தோறுமுற் றுழல்வேன், பதித்தபைஞ் சாலிப் பயிரக மலர்ந்த பவளமுண் டகமர கதமே, கதித்தபா றையிற்செங் காந்தளை நிகருங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எரு)

2991. விரும்பிந ளாறு புகுதரே மயக்க விரும்பின ளாறுபோய்ப் புகுவே, மரும்பிய மலர்நீர் வாஞ்சிய மொருநா ளாயினும் வாஞ்சிய மழகே, சுரும்பின மெழுந்து விழுந்துவாய் மடுத்துத் தொக்கமுண் டகமது வருந்திக், கரும்பினு மினிய காமரம் பாடுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எசு)

2992. உடற்பரங் குன்ற நின்பரங் குன்ற முற்றொரு காற்றொழேன் கருவூர், விடற்கரு மாசை கொண்டெழேன் கருவூர் விடற்கரு மாசைமிக் குடையேன், மடற்செழுஞ் செய்ய மரைமலர் பசிய வயலக மலர்கதிர் பலவோர், கடற்பரப் பிடையே யுதித்தென மலருங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எஎ

2993. வேய்வன மடையேன் மங்கையர் தொடித்தோள் வேய்வன மடைகுவ னன்றே, ராய்வலஞ் சுழியெண் ணேனவ ருந்தி யாய்வலஞ் சுழிகுறித் துழல்வேன், மாயிரும் புவியிற் பெரும்பிர தாபம் வதிவதிந் நகரென விருளைக், காய்மணி மாடச் சேயொளி மல்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எஅ)

2994. மங்கையர் தங்கள் குழற்கருங் காடு மதித்தலிற் கழைப்பசுங் காடு, பொங்குசெங் காடு புகழ்செய்வெண் காடு புந்தியின் மதித்திடா துழல்வேன், கொங்கவிழ் மலர்மேற் றிருவிற்குந் திருவங் கொடுத்திடத் தக்கதென் றென்றுங், கங்கையிற் றூய சான்றவர் புகழுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (எகூ)

2995. கொழுமணி கொழிக்கு மருவியங் கயிலைக் குன்றநன் புகழ்க்கொடுங் குன்ற, மெழுகழுக் குன்றங் குறித்திடேன் மடவா ரிணைமுலைக் குன்றமே குறிப்பே, னெழுகொளி மணிப்பூ ணெண்ணுதன் மடவா ரொன்றவா லரிப்பெருங் குன்றங், கழுவுநீர் பாய்ந்து கன்னலை வளர்க்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அo)

2996. நாரிய ரொடுசேர் பஞ்சணைப் பள்ளி நயந்துநின் னகத்தியான் பள்ளி, சீரிய காட்டுப் பள்ளியறப் பள்ளி சிராப்பள்ளி நயக்கிலேனுயேன், வாரிச மலரின் வழிநற வோடி மடையுடைத் திடையெதிர்ப் பட்ட, காரியல் கதலிப் பூங்குலை சாய்க்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அக)

2997. அமரரென் பெயரு மயனெனும் பெயரு மச்சுத னெனு மொரு பெயரும், விமலநின் னருள்சற் றுறுதலி னன்றோ விண்ணவர் வேதன்மால் பெற்றார்,பமரமிக் குழக்கு மலர்க்குழன் மடவார் பற்பலர் குளித்தநன் மஞ்சள், கமழ்புனல் பணைநெற் பயிரெலாம் விளைக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அஉ)

2998. வானக மகவான் சத்திய வுலக மலரவன் வைகுந்த மாயோ, ரூனவ னுவப்பின் வாழ்வதுன் னம்பொ னடியருச் சனைப்பய னன்றோ, கானமும் புழுகு நெருக்கில்வீழ்ந் தளரு நன்மறு கிடைமிரூர் கூந்தற், கானகின் றுகுபூங் குப்பைமா ருத கலைசைவாழ் சிதம் பரேச் சுரனே. (அங)

2999. அடைந்தவர்க் கருளு மண்ணனீ யேயென் றருமறை முறையிட றெரிந்து, மடைந்தநெஞ் சோடு நினையடை யாத வுணர் விலே னெங்ஙன முய்வேன், குடைந்துவண் டிமிர்பூஞ் சோலையின் மகஞ்செய் கோதிலார் வாய்மனுக் கேட்டுக், கடைந்ததெள் ளமுதிற் கிளியெலா நவிலுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அச)

3000. நெற்படு பழனம் பற்பல வேண்டி நின்றன னீயினி திருக்கு, மற்படு பழனம் வாஞ்சியேன் கொடிய வஞ்சக னல்லனோ கடையேன், பொற்பவா ரணமா கமநியா யம்பல் புராணநன் மிருதிமுற் பலவுங், கற்பவர்க் கிடமீ தெனப்பலோர் புகலுங் கலைசைவாழ் சிதம்ப ரேச் சுரனே. (அரு)

3001. அந்தகன் வன்கைத் தடியடி முடியேற் றளற்றியா னழுந் துரு வண்ண, நந்திதன் மென்கைப் பிரம்படி யேற்றுன் னல்லடி யழுந்துமா றருள்வாய், சந்தமுத் தரும்பி மரகதங் காய்த்துத் தயங்கு செம் பவளமே பழுக்குங்,கந்திகண் மலிந்த காமரு சோலைக் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (அசு)

3002. ஒன்றினைச் செய்கை செய்தரா தொழிகை யொழிந்துவே றொன்றினைச் செய்கை, யென்றிவை யுடையோ னீயெனின் யானீ டேறுமா செயனினக் கரிதே, துன்றுபல் சுவைய மடைவிருந் தோடுந் துய்த்துத்தேக் கெறிபவ ரன்றிக், கன்றுவெம் பசியின் வருந்துந ரில்லாக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அஎ)

3003. பிணிநனி நன்றஃ துறினிளை நினைக்கும் பெற்றியே நிறுத்தலி னதுதான், றணிதரு காலை யுறநினை மறக்கத் தக்கதே செயுமதா ரறியா, ரணிகெழு திசையி னரவெலா மிடியி னமைதரு முழக்கென வெருவக்,. கணிதமின் முழவந் துயிறரா தொலிக்குங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (அஅ)

3004. புனைமுகி லுவர்க்கீ ரெடுத்துவ ரொழித்தல் புகலுமக் கீர்விருப் புணர்ந்தோ, லெனையுமவ் வாறே யெடுத்துமும் மலமு மிரிப்ப நற்கென்விருப் பெண்ணேல், புனைகுழன் மடவார் குழற்கிடு புகை

யும் பூசுரர் மகத்தெழு புகையுங், கனைகட லுதிக்குங் கதிரையு மறை க்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (அகூ)

3005. துடிதுடித் தடியேன் மனமையோ சோற்றுத் துறை யிலே செல்லுமஃ தொழிந்து, நெடியநின் சோற்றுத் துறையிலே செலாது நிறையரு ளெங்ஙனம் பெறுவேன், பொடியணி மேனிப் புண்ணியர் பூசை புரிந்துதோத் திரஞ்செய வெழுந்த, கடிதலின் முழக்கங் கடன்முழக் கவிக்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. ()

3006. கொடியனேன் புரிந்த தீவினை யனைத்துங் குலவுநின் னுலயத் துள்ள,கடிதலில் பொருளைக் கவருபு நுகருங் கயவரொ டொன்றுவ தென்றே, பிடியடி தடியென் றுடிவற வடையும் பெருஞ்சி னக் கூற்றுவ னென்றுங், கடிதலி லெல்லைப் புறத்தும்வந் தடையாக் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கூக)

3007. வஞ்சக முலோபம் பொறாமைமுற் பலவு மருவுநின் மனத்தியா னுறைதற்,கெஞ்சலி லிடமின் றெனினினக் கொருசா ரில் லையோ விரங்குவை யைய,வெஞ்சினக் கூற்றின் கருங்கடாக் காணின் வெகுண்டல நுகத்திடைப் பிணித்துக், கஞ்சநற் பழன முழுபவர் மேய கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கூ௨)

3008. ஈனசம் பந்த மென்னைவிட் டகல விலங்கருட் சம்பந் தர் புகழு, ஞானசம் பந்தர் பாதசம் பந்த நான்பெற வென்றருள் புரி வாய், வானசம் பந்த மகளிர்கண் ணிமைத்தன் மருவினைப் பாகுவ ரென்னக், கானசம் பந்த மொழிநலார் பயிலுங் கலைசைவாழ் சிதம்ப ரேச் சுரனே. (கூ௩)

3009. நிலைகுலை யமணக் கொடியர்க ளிட்ட நெடும்பொருப் பேபுணை யாக, வலைகடன் மிதந்தார் திருவடித் துணையி லழுந்திலே னெங்ஙன முய்வேன்,விலைவரம் பில்லா மணிகிடந் திமைக்கும் வீதியு ளொன்றுகை விலைக்குக், கலைபுக ழமரா பதியினை வாங்குங் கலைசை வாழ் சிதம்பரேச் சுரனே. (கூ௪)

3010. இலங்குமா ரூர னென்னுநின் றோழ னிணையடி யேத்தி னிம் மையினே, யலங்குநின் மற்றோர் தோழனுய் மறுமை யணைந்து மேற் கதியையு முறுவே,னலங்குல வுறுபூம் பொழின்முசுக் கலைக ளொடு நாணிறை மதியுங், கலங்குற முகிலின் மீமிசைப் பாயுங் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (கூ௫)

3011. சிலையுனைக் துருக நினைநினைந் துருகித் தேம்பொலி வாசகஞ் சொற்ற, நிலைபெறு வளமை வாதவூர்ப் பெருமா னிறைய ருள் கருதிநைந் துருகேன், மலையநின் றெழுந்த வாசக்கா லுலவும் வளத்துயர் கந்தியம் பொழிலோர், கலைமுனி யுணவாங் கடலெழுந் தனைய கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (கூ௬)

3012. வரையினை யெடுத்த மதியிலா வரக்கன் மதித்தொரு சிரங்காஞ் சேர்த்துப், புரையறு மிசைபா டிடமகிழ்ந் தருணின் பொலிவுறு கருணையே வாழ்க, விரைகொளுல் வகைய மலர்களு நிறைந்த வியங்கெழு நந்தன வனத்துக், கரையில்வண் டொலித்தல் கடலொலி மாய்க்குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (௬௭)

3013. சிறுவிதி மகத்தி லவனொடு சார்ந்த தேவர்த முயிர்தபச் சினந்து, மறுவலு மவர்க்கு மகிழ்ந்துயி ரருணின் வான்பெருங் கருணைவாழ்ந் திடுக, வுறுபெருந் தவத்தாற் பிறதலத் தடையு முறுபல னினைத்தமாத் திரையே, கறுவிக லின்றி யடைமகத் துவச்சீர்க் கலை சைவாழ் சிதம்பரேச் சுரனே. (௬அ)

3014. வரையக மமர்ந்தும் வரைகரங் கொண்டும் வரையுத வொருமகட் புணர்ந்தும், புரையிலோர் தலத்து வரையுரு வெடுத் தும் பொலிவைநின் மனம்வரை யன்றே, விரைமலி யகன்மா ளிகை தொறு மேற்றும் விளக்கொளி மிகையென விளங்கிக், கரையகன் மணிப்பூண் மடந்தையர் பயிலுங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே.()

3015. செக்கரஞ் சடையும் வெண்பிறைக் கொழுந்துந் திகழு முக் கண்ணுநாற் றோளு, மைக்கரு மிடறு மொருபுறப் பசப்பு மலர டித் துணையுநான் மறவேன், மிக்கநற் றவத்து முனிவரும் பனிவான் மேயபல் லோர்களு மடையக், கைக்கரு முவகை யளித்துவீற் றிருக் குங் கலைசைவாழ் சிதம்பரேச் சுரனே. (௧௦௦)

கலைசைச்சிதம்பரேசுவரர்மாலை முற்றிற்று.

---

சிவமயம்.

# திருவானைக்கா

# அகிலாண்டநாயகிமாலை.



## செல்வவிநாயகர்.

3016. திருவளர் கபோல மதப்பெருக் குண்டு தெவிட்டுகார் வண்டின மெழுந்து, மருவளர் செய்ய சாந்தினுண் மறைந்த மத்தக மீதுதங் கிடுதல், கருவளர் மணிகள் பதித்தபொற் குடத்திற் கவின வீற் றிருந்தருள் சொழிக்கு, முருவளர் செல்வ விநாயகன் பொற்று ணுபயபங் கயமுடிக் கணிவாம்.

---

## நூல்.

3017. பூமலி செய்ய பொலிமணித் தோடு புதுவெயி லெறித்து முண் மலர்ந்த, தேமலி யாம்பற் செய்யவாய் முளைத்த சிறுநகை யிள நிலா வெறித்து, மாமலி குழனின் றவர்முக மலர்கண் வளர்தர முன் புவந் தருள்வாய், காமலி வானும் புகழ்திரு வானைக் காவகி லாண்ட நா யகியே. (க)

3018. வடதிசை யவனுஞ் சமழ்ப்புறக் கனகம் வாய்ந்துதென் றிசைநகத் தமருங்,குடமுனி யவனுஞ் சமழ்ப்புறக் கல்வி கூர்ந்துமிக் குயர்ந்தவர் பலருந், தடமலர் புரைநின் முகத்திரு கடைக்கட் சார் பொருங் குற்றவ ரன்றே, கடவுளர் மனம்புக் கமர்திரு வானைக் கா வகி லாண்டநா யகியே. (உ)

3019. விழிவிருந் துதவு நின்றிரு மணத்தில் விமலனார் கரமலர் மேற்கொண், டொழிவரு கருங்கன் மிசையுறு நின்று ளுற்றவெண் கரமலர் மேற்கொண், டிழிவற வடியேன் மனக்கலி னிடத்து மியைந் துறு மென்றுனைத் துதித்தேன், கழிநசை முனிவர் புகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ங)

3020. அடியனேன் கொடிய னென்றுமுன் வருதற் கஞ்சினை யென்னின்வெங் கூற்ற, மடியமுன் னுதைத்தான் றுணையடைந் தே னும் வருதிமற் றதுநினக் கரிதோ, நெடியவன் பிரம னிந்திரன் முத லோர் நித்தமும் தாழ்ந்துசூழ்ந் தேத்திக், கடியவெவ் வினைதீர்ந் துயர் திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ச)

3021. பாவிநீ நின்முன் வருவது தகாதென் பரிசினுக் கென்னை யேன் முன்ன, மாவிசூழ் மதுரை யகத்துமா பாவி யாயினு னொருவ

ன்மூன் முக்கட், கோவினோ டடைந்த குணத்திநீ யலையோ குலவது மறந்தனை கொல்லோ, காவியங் கழனி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௫)

3022. பண்டுநீ பெருமா னருள்வழி புகலிப் பாலனுக் களித்தனை ஞான, மண்டுமெற் றதனுன் முழுப்புகழ் நினக்கே யாயதோ விரங்குபு நீயே,தொண்டுகொண் டடியேற் களித்தனை யாயிற் றாயநிற் கேமுழுப் புகழாங், கண்டுநேர் மொழியார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௬)

3023. அளவறு பிழைகள் பொறுத்தருளின்னை யணியுருப் பாதியில் வைத்தான், றளர்பிழை மூன்றே பொறுப்பவ டன்னைச் சடைமுடி வைத்தன னதனாற்,பிளவியன் மதியஞ் சூடிய பெருமான் பித்தனென் றொருபெயர் பெற்றான், களமர்மொய் கழனி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௭)

3024. பெரும்புக ழமைந்த நின்பதி யென்னும் பிரணவ குஞ்சர நின்கை,யரும்புவிற் கரும்பு விரும்புபு கவரு மடல்புரிந் தென்று ளங் குறித்தோ, வரும்புகர் முகங்கொ ளங்குச பாசம் வயங்குற வேந்தினை நாளுங், கரும்புய னிறத்தோன் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அ)

3025. யானென தென்னுஞ் செருக்கிழந் தவர்மற் றிழப்புறார் நின்னையீ துண்மை, தானென மறைகண் முழங்கவு முணராச் சழக்கனே னினையிழந் துழல்வேன், மீனென வயங்குங் கண்ணினாய் கொடியேன் வினைக்குமோ ரிறுதியுண் டாங்கொல், கானென வரம்பை சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௯)

3026. விழியிடந் தப்பி மகவரிந் தூட்டி விருப்புறு தந்தைதா டடிந்து,பழியகன் மனையை யுதவிமற் றின்னும் பலசெயற் கரியசெய் தார்க்கே, மொழியுநின் கொழுந னருள்செய்வா னென்னான் முடிதரா தென்றுனை யடைந்தேன், கழியுணர் வுடையார் புகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௦)

3027. வழிபடு மடிய ராயினோர் தமக்கே வழங்குதுங் கருணைவேறாய, பழிபடு மவர்க்கு வழங்குறு மென்னிற் பயோதர மருதமுனன் றிப், பொழிசுவை நறுநீர் புல்லுவர் நிலத்தும் பொழியுமே புண்ணியப் பொருளே,கழிதலி றென்னங் காத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௧)

3028.' கொடியவ னிவற்கு மருள்புரி யென்றுன் கொழுநனுக் கெனைக்குறித் துணர்த்த,முடிவிலின் னருளா லெண்ணினை யேலம் முதல்வனின் னூடலையுணர்த்த, வடிபணி பொழுதி லுணர்த்திடல் வேண்டு மஃதுநட்டன் பனிக்குநீ யறிதி, கடிதலில் கழகஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௨)

3029. தாவருஞ் சிருக்கு மணிவடஞ் சங்கு சக்கரஞ் சூற்படை யிலேவே, லோவருஞ் சிறப்பின் வேறுவே றேந்து முண்மையா லொ ண்மல ரோன்முன், மூவரு மியற்று மூவகைத் தொழிற்கு மூலநீ யென்பது தெரிந்தேன், காவரு மலர்நல் கிடுந்திரு வானைக் காவகி லா ண்டநா யகியே. (கூ)

3030. தாயினைக் கொன்றுந் தந்தையைக் கொன்றுந் தவலரு மனைவியைக் கொன்றுஞ், சேயினைக் கொன்றுங் கடும்பினைக் கொன் றுஞ் சேர்ந்தவர்க் கருள்வனின் கொழுநன், வீயினைப் பொருவும் பத மடைந் தார்க்கே விருப்பினீ யருள்வதோர்ந் தடைந்தேன், காயினைச் சுமந்த பொழிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கச)

3031. குற்றியை யடைந்த பசும்புலை யுழுநர் கொடியவன் றுஞ் சிலென் செயுமப், பெற்றியி னின்னை யடைந்தநா யேனைப் பிறையெ யிற் றந்தகன் கரத்துப், பற்றிய தண்டப் படைசெய லென்னை பர விய கருணைவா ரிதியே, கற்றிணி மதில்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கரு)

3032. முடிமிசை யொருமந் தாகினி வாழ முதல்வன்வைத் திடு தலிற் சிறந்த, கொடியவ ளென்றி யார்நினைப் பவர்கா கோதர மெருக் கெனும் பாதி, படிதரு மிடத்திற் சற்றிட முடம்பிற் பாதியோ விடம ருட் டாயே, கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கசு)

3033. பெருவள னமைந்த நீருரு வாய பெருந்தகை நீருரு வாய, வொருகுல மகளே மலர்மிசைத் தேவு முணர்தராக் காட்டிடை மறை த்தா, னருகுறுண் ணிடைநிற் கஞ்சியே யன்றே லணியுருப் பாதிமற் றிலையோ, கருமுகி றவழு மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே.

3034. அலையடி யடைந்த வகத்தடி நிலையா தலையடியேற் கிரங் குபுபுன், றலையடி சூட்டிப் பிடியடி யென்பான் றடியடி விலக்கியா ளிமய, மலையடி யுதித்து வளர்ந்துவெண் ணுவன் மரத்தடி வாழ்ப வற் புணர்ந்தாய், கலையடி யுணர்ந்தார் புகழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (கஅ)

3035. இருவினைச் சிமிழ்ப்புண் டுழல்கொடி யவன்மற் றிவற் கரு ளென்றிரங் குபுநின், னொருமூத லவனுங் குணர்த்துதி வருத்த முன்னனுன் பரிசினுக் கடாது, வருபசுங் குழவிக் குறுபிணி தீர்க்கு மருந்தனை யன்றியார் நுகர்வார், கருமுகி லுறங்கு மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கசு)

3036. எடுப்பது பிச்சை யேந்துவ தோடாங் கியக்குவ தொற் றையே றரைக்க, ளுடுப்பது புன்றோன் மற்றிவர் மனையா யுற்றநீ யுயிர்வயிற் றழலா, யடுப்பது தவிர வூட்டுத லாதி யறமெலாம் வளர்

ப்பையி தழகே, கடப்பது தவிர்ந்த மதிற்றிரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௨௦)

3037. முற்றவம் புரிந்து முழுமலர் துமித்த மோனமெய்ஞ் ஞானிய ரன்றி, மற்றவர் கவரப் படுங்கொனின் கருணை வானகத் தெழுமதிக் கதிரை, நற்றவம் புரிந்த சகோரமோ கொடிய நவில்க ருங் காகமோ கவருங், கற்றவர் புகழ்ந்து சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௨௧)

3038. தொண்டவாய் மனமா திகளொருங் குய்க்குந் தூயவ ரன்றிமற் றோருமண்டரா தியரு மணுகரு நின்று ளடைவரோ வள வறு மேன்மை, கொண்டவான் கங்கை யடைவதோ திமமோ குர ண்டமோ குணப்பெருங் குன்றே,கண்டவர் பவங்கா ணுத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௨௨)

3039. இடையறு வன்பின் மெய்கொடு துதிப்பா ரின்றுதி முன்னர்மெய்ந் நிழல்போற், புடையறு வினையேன் பொய்கொடு துதிக்கும் புன்றுதி யெங்ஙன மென்னி, னடையறுத் தேமாங் குயி ற்குர லெதிரோ ரரிட்டமுங் கதறுதல் பொருவுங், கடையறு மரு தஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௨௩)

3040. மறைபல துதிக்கு நின்பெரும் புகழை வழுத்திய வான் றவர் நாவு, மறையுமோ மற்றைப் புல்லிய தெய்வத் தமைபுக ழுறை யுமே லினிமை, நிறைதரு கருப்பஞ் சாறவா வியநா நிம்பமெ யவாவு தல் போலுங், கறையறு வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௨௪)

3041. மனைதொறு மிரப்புத் தொழில்கொடு புகுவார் மறலித லையம் புகுவார், நினைதர முடியாக் கருக்குழி பலவு நிரம்புற வோ டுபு புகுவா, ரினையவர் புகாநின் றிருப்பெருங் கோயி லேழையேன் புகவருள் புரிவாய், கனைகடல் வாவி சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௨௫)

3042. எண்ணருங் கொடிய பாதகம் பலவு மியற்றுமா பாவியா னெனினு, நண்ணரு நினது திருவரு டோயி னண்ணுத லரிதுகொல் புனிதம், பண்ணருங் கொலைசெய் வாளும்பொன் னுமே பரிசன வேதிதீண் டுதலாற்,கண்ணருங் கழனி சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௨௬)

3043. முழுவதுங் குணமே நாடின்மூற் றுது முகுந்தனு தியரி டத் தினுநீ, பழுதற வுணர்த்தா விடினுணர் வாரோ பரமனைப் பண் டவர் புரிதோ, மெழுதரி தவரு மின்னரே லம்ம வென்செயல் யா தெனப் புகல்கேன், கழுவிய மணியிற் சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௨௭)

3044. உலகிடை யழுத பிள்ளைபால் குடிக்கு முண்மையென் னுரைப்பதற் கேற்ப, விலகுசீ காழி மழவழ வளித்தா யின்மூலைப் பா

லழா விடினு, மலகற விரங்கி யளிப்பவ ரிலையோ வத்தகு மழவியா னருள்வாய், கலகமில் கழகஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உஅ)

3045. அழூமழ வொன்றற் களித்தனன் றீம்பா லம்பலத் தாடிய பெருமான், பழுதற நீயு மளித்தனை தீம்பால் பசித்தழு மிளமழ வொன்றற், கெழுதரு மிவற்று னினக்குறு புகழ்போ லெம்பிராற் குண்டுகொ லியம்பாய், கழுமணிச் சிகரி பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (உகூ)

3046. இடையறு வன்பு பெருக்கிநீ பூசை யியற்றிட வினிதுள முவந்து, சடையறு முடியோ னுறைதரப் பெற்ற தண்ணிழ லுவலந் தருவோ, புடையறு தமர ருறைதரப் பெற்ற பொலந்தரு வோசிறந் ததுகட், கடையறுக் கருணை யாய்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௰)

3047. சிறுபிறைக் கொழுந்து வீற்றிருந் தலினற் றேவதே வன்றிரு முடிமேன், மறுவிலச் சுவடு பொலிதரு மைய மருவுறு தம்முமற் றெவர்க்கு, முறுமறைக் கரிய நின்னடி யகத்து மொளிரு மச்சுவடுகா ரணமென்,கறுவொழித் துரைப்பாய் புகழ்த்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௧)

3048. எதிர்மலர் தொடுத்த மாரவே ளுடல மெரிக்குண வாக்கிய பெருமா, னதிர்வரு மெய்யிற் பாதிநீ கவர்ந்தா யமைதர முழுவதுங் கவர்ந்தா, லுதிர்தலி னினது திறமையா ருணர்வா ரோங்கவன் வியாப்பியப் படலாற், கதிர்படு மிதுவே யருடிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௨)

3049. தவவலி யுடையோர் பலரையு மயக்கிச் சடைமுடி யோ னெதிர் மயங்கி,யிவருமம் மயக்காற் புணர்ந்தொரு மகவு மீன்றமான் மோகினி தனித்துப், பவர்படர் வனம்புக் குறைதன்மற் றவன்மெய்ப் பாதிநீ கவர்ந்ததோர்ந் தன்றோ, கவலரும் வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௩)

3050. நீயெனப் பெருமான் விரும்பியோர் தினத்து நிகழ்தரப் பொலிவதும் புவிக்குத்,தாயெனப் படுநீ யவனெனப் பொலியுந் தன் மையும் வேறலை மென்று, சேயெனப் படுபல் லுயிர்க்கெலா முண் மை தெரிப்பது போலுமீ தருளே, காயெனப் பலமுற் றகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௪)

3051. பரவுகங் கருணை வான்றவ முடையார் பாலலாற் புன்மை யோர் பாலும், விரவுமோ வென்னி னெழுபெரு வெள்ளம் விரிதரு வாரிதி மட்டோ, வுரவுதீ ருறவி யளாயினும் புகுமே யுவமையில் கோமளக் கொழுந்தே, கரவுதீர் முனிவர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௫)

3052. சடையெனும் வனத்து வாழ்தரும் கங்கை தனித்துறை வாள்கொலென் றெண்ணி, விடைமிசைப் பெருமா னவளுயிர் வாழ் வான் மிலைந்தனன் கொன்றையாங் கன்னப், பெடையன நடையா யனையவன் றனைநீ பித்தனென் றெண்ணுதல் பிழையே, கடையுறு வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩சு)

3053. பரவுறு முலகத் துயிரெலா மீன்று பருவர லவையுறு தோங்க,வுரவுறு கருணை யால்வளர்த் திடுநீ யொருமலை மகளென வுதித்து, விரவுறு புறவு கிளிமயில் பூவை விரும்புபு வளர்த்தவா றென்னே, கரவுறு மவர்கா ணுத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. ()

3054. பரிதிவந் துதய மெழுமுறுக் குடையும் பங்கய மலர்மிசை யுறைவா,ரரிமறு மார்பு மயன்றிரு நாவு மமர்பவ ரென்பர்நின் முகமாம், விரிமலர்க் கமலத் துறைவரென் றுணரார் மேதினி மடமையென் சொல்கேன், கரிசறு வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩அ)

3055. விரும்புநின் செங்கை தாங்கலா லிரண்டாம் வேற்றுமை விரித்துரை செய்யா,தரும்புதா மரைதாங் குவாரென லான்மூன் றுவதும் படுசொலும் விரிக்கும், பெரும்புவி மலர்பூ மாதெனும் பெயர்கள் பெறும்வினைத் தொகைகுணத் தொகைப்பேர்,கரும்புபைங் கமுகிற் பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௩௯)

3056. நந்திய வறியா மையினினைத் துதிப்பே னுயினே னுயினு மதனுன், முந்திய வினைமுற் றொழிதரா துறையு முறைமையென் மறவியி னேனு, முந்திய வழலைத் தொடிற்சுடா துறுங்கொ லொழிவருங் கருணைவா ரிதியே, கந்துதென் பொருவப் பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௦)

3057. அங்கையேந் துறுபைங் கிள்ளையின் மொழியோ வறுமுகக் குழவிவாய் மொழியோ,சங்கையே குழையாக் கொண்டவ னூடறணித்திடப் புகலுமின் மொழியோ, மங்கைநின் செவிக்கு நாயினேன் புன்சொன் மற்றுநீ யிரங்கலெவ் வாறோ,கங்கைதாழ் பொன்னி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௧)

3058. ஒப்பினின் புகழே கேட்கவென் செவிகண் ணோங்குநின் னுருவமே காணத், தப்பினின் றனையே பாடிட வாய்கை தவாதுநின் னடிப்பணி யாற்ற, விப்படி யுறுமேற் செங்கதி ருதய மெத்திசை யெழினுமற் றென்னே,கப்பிணர்த் தருக்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௨)

3059. ஓதுறு முறைமை யொன்றின்மூன் மூன்று ளொருசிறியேற்குநின் பதிக்கும், போதுறு குழனி நடுப்பொலி தலினுற் புரிந்துநின் பதியொடு மெனைப்பின், றீதுறு மிரண்டி னீக்கியொன் றாக்குந் திறனினக் கன்றியார்க் குளது,காதுறு கண்ணூர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௪௩)

3060. கோவண மறையாக் கொண்டனன் பெருமான் கொண்டனை நீயுமே கலையாத், தூவண வவன்மா தேவன்மா தேவி துதிக்குநீ யெனிற்றிரு நெடுமா, லேவண வவற்கு நீவியாப் பியமென்றிசைப்பதெங் ஙனமருட் டாயே, காவண மறுகு மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சச)

3061. பொறியரி தொடரு மருமலர்த் தாளோன் பொலியனந் தொடர்சடா முடியோ, னறியுநின் கொழுநன் பொறியரி தொடரு மலர்க்குழ லினோநடை யன்னஞ், செறிதரத் தொடர்மென் பதத்தினை யெனினீ தேவொடு மாறுளாய் கொல்லோ, கறிபயி லளிசூழ் பொழிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சரு)

3062. திருந்துறு தந்தை யாகிய வரையைத் திரிபுர மெரித்த நாட் குழைத்த, பெருந்திற லுணர்ந்தம் மலையுள மகிழப் பெருந்தகை நிறமுலைக் கோட்டாற், பொருந்துறக் குழைத்தாய் போலுநின் றிறமை புகலுதற் கடங்குமோ தாயே,கருந்துழாய் மார்பன் புகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சசு)

3063. மறைமுதல் பொருவ வேந்தினை நீயு மலர்புரை தருகையில் வன்னி,யுறைதரு மனையா னிறமுநின் னிறமு மொத்தன வாயினு மவன, தறைதரு மெழுநா வதுநின தொருநா வதுசெவி யவாமொழி யதுதான்,கறையற வெதுநீ புகறிரு வானைக் காவகி லாண்டநா யகியே.

3064. குடகட லொடுங்கு மிரவிதண் மதியங் குணகட லுதிக்குமென் றுரைக்கும், படவர வேந்து முலகநின் னொருகைப் பங்கயத் தொடுங்குநின் கொழுநன்,றடமலர் வதனத் துதிக்குமென் றுணராத் தன்மையென் மென்மைசான் மயிலே, கடவுளர் பலருஞ் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சஅ)

3065. பெருவழக் கெடுத்துப் பேரவை யேறிப் பேசவ குறையறப் பேசி, யொருதிரு நாவ லூரனை யாண்டா னோங்குவெண் ணைவலூ ரண்ண, லருளொடு நீயு மத்தகு செயலொன் றூற்றினன் றென்றியா னினைந்தேன், கருளற வொளியின் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சகூ)

3066. முதுபுக ழுடைநின் பதியிரு பாத முழுமலர்க் கருச்சனையாற்றின், மதுமல ரொன்று குறையினு மதற்கு மாறுகண் ணிடந்திடல் வேண்டு, மதுசெய மாயோ னல்லன்யா னின்பொன் னடியருச் சனைசெய்வான் புகுந்தேன், கதுமென வருள்செய் தருடிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருo)

3067. தருமமென் றுரைக்கு மளியமர் நின்கைத் தாமரை மலரின தலர்ச்சி, பெருமதி மலர்ச்சி மாற்றுமென் றுரையார் பெருமதி யலர்ச்சியே செழித்த, மருமலி கமல மலரின தலர்ச்சி மாற்றுமென் றுரைப்ப ரீதென்னே, கருணையங் கடலே யருட்டிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருக)

3068. நீவினோ தத்தா னின்பதி முகக்க ணிகழ்கைசேர்த் தெடு த்திடுங் கால, மோவிய மனையாய் கணமுமின் றுனக்கஃ தும்பரா திய பல வுயிர்க்கு, மேவிய கோடி யுகம்பல வாமவ் விநோதநீ யாற்றுத றகாது, காவியங் கண்ணூர் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே.

3069. தென்னவன் புரிந்த பெருந்தவப் பேற்றாற் செழுந்தழ லகத்தொரு மகவே,யென்னநீ யுதித்த வாஞ்சையுட் குறித்தே யிறை நுதற் கண்புதை யாது,மன்னமற் றிருகண் புதைத்தனை நின்னை மதி க்குல மென்பதோர்ந் திலையோ, கன்னவி றோளார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருங)

3070. அரும்புமோர் நின்கைக் கணிபல வணிந்துள் ளவாவொடு தாங்குமா தர்களை, விரும்புபு சுமக்கு மெல்லிதழ்க் கமல மெய்த்தவ முடையன வெனவே, யிரும்புவி புகன்றா லனையமா தர்கட மிருந்த வப் பெருமையென் புகல்கேன், கரும்புநேர் மொழியார் பயிறிரு வா னைக் காவகி லாண்டநா யகியே. (ருச)

3071. சிலம்பகத் துதித்த நின்னடி தற்சூழ் சிலம்பகத் துதித் தமா தரைவல், வலம்பகப் பொலியு முலையினா யங்கை மலரகத் துதி த்தமா தென்ன, வுலம்பகப் பொருதோ ளரன்முடிக் கொளாமை யுணர்ந்தன்றோ வூடலிற் றாக்குங், கலம்பக முலாமுற் புனைதிரு வா னைக் காவகி லாண்டநா யகியே. (ருரு)

3072. பெரியவர்க் கிடுக்கண் புரிவதை யுணர்ந்து பெரும்புகழ்த் தந்தைதன் மரபென், றரியவர் சிந்தை யாலயம் புகுவா யயர்ந்து மெண் ணாமல்வண் குறிஞ்சிக், குரியவன் கரத்துப் புகூஉக்குரு குப் பே ரொருவரை கொன்றனை யழகே, கரியவன் பிரமன் சூழ்திரு வா னைக் காவகி லாண்டநா யகியே. (ருசா)

3073. நினையுணர் மகடாய் மரபென வொருமா னெடுங்கையேந் தினன் பெம்மா னம்மான், றனையுணர் மகன்றாய் மரபெனக் கிள்ளை தன்னைநின் கையிலேந் தினையால், வினையுண ரார்சொன் னீயுநின் பதியும் விரும்புறு மாடலென் னுரைக்கேன், கனையுண ரளிசூழ் பொழிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருஎ)

3074. பொலிதரப் பசந்து நீர்மழை யெங்கும் பொழியுமே புய லது போல, மலிதரப் பசந்து நீயும்வண் கருணை மழைபொழி குவை கொடு வினையான்,மெலிதர லுற்ற வெனையொழித் திடுவான் விதியெ வன் விமலமெய்ச் சுடரே, கலிதரு துயர்சா ராத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருஅ)

3075. நறையிலா மலரோ நயமிலா மொழியோ நயனமில் லாத வாண் முகமோ, பொறையிலாத் தவமோ மகவிலா மனையோ புன லிலா வோடையோ நீதி, முறையிலா வரசோ மதியிலா விரவோ மூட னேன் பத்தியில் பாடல், கறையிலா வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (ருகூ)

**3076.** குணமிலேன் மொழிபா நயமில தெனினுங் குறித்ததை
யேற்றருள் செய்ய, விணர்மலி குழானிற் கேதகுஞ் சிலம்பி யியற்று
நூற் பந்தரு மூவந்து, புணரருள் புரிந்தா னின்பதி யந்தப் புராணநீ
யோர்ந்தனை யன்றே, கணமலி முனிவர் சூழ்திரு வானைக் காவகி
லாண்டநா யகியே. (௬௦)

**3077.** வரிவிழிக் குடைந்த மானையு நுதற்கு மானுருப் பிறை
யையு மல்குற், கிரிதரும் படவெவ் வரவையு மருங்குற் கிணைதராத்
துடியையுஞ் சுமந்தான், றுரிசறு வனப்பார் நின்னுறுப் பினுக்குத்
தோற்றறும் விசேடமென் றுணர்ந்தே, கரியகண் டத்தோ னருட்
டிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௬௧)

**3078.** பொறையரு ளடக்க மன்புப சாரம் பொலியுமா சாரநல்
வாய்மை, யறைதரு மின்ன குறையுளே னெனினு மடிமையே நின
க்கியா னுறுப்புக், குறையுடை யாரு மக்களென் றெடுத்துக் கூறுவ
ருலகர்நீ யுணர்வாய், கறையற விளங்கு மருட்டிரு வானைக் காவகி
லாண்டநா யகியே. (௬௨)

**3079.** உரைசெய்வெண் ணாவ னிழலுறை பெருமா னேங்கருண்
முறைசெலுத் தியகோன், விரைசெய்பூங் கொன்றை யவனென
நீயும் விருப்பொடு செலுத்திடல் வேண்டும், புரைசெயென் பாலே
மற்றது செலுத்திற் பொருப்பின்மே லிடுசுடர் போலாங், கரைசெ
யா வளங்கண் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௬௩)

**3080.** புண்ணிய வெள்ளை நாவலோ னாரம் பூண்டவ னெனும்
பெயர் புனைந்தான், றண்ணிய குணத்து நீயுமென் பாட றழுவுபு
பூணுவை யாயி, னண்ணிய பாடல் பூண்டவ ளெனுமோ ரரும்பெயர்
நினக்குமுண் டாமே, கண்ணிய வரங்க டருதிரு வானைக் காவகி
லாண்டநா யகியே. (௬௪)

**3081.** தழைசெய்வெண் ணாவ னறுநிழ லுறைவான் றனிமுத லவ
னொரு பாகத், துழைசெயொள் விழியா யுறைகுவை நீமற் றுன்னடி
நிழலியென் ஞான்றும், விழைசெயா னுறையப் புரிந்திடி னதனா
மிக்கபுண் ணியநினக் குண்டே, கழைசெய்பூங் கழனி பொலிதிரு வா
னைக் காவகி லாண்டநா யகியே. (௬௫)

**3082.** பிரம்படி பட்டுங் கல்லடி யேற்றும் பிறைபொரு வில்
லடி கொண்டு, நிரம்புற வருள்வா னேங்குவெண் ணாவ னிழலுறை ப
வனடி யார்பா, லுரம்பயி லவன்போ னீயவ்வா றேற்றின் புதவுக ளல்
லண்மெல் லியனீ, கரம்பறு கழனி மலிதிரு வானைக் காவகி லாண்ட
நா யகியே. (௬௬)

**3083.** பற்பல ரறியப் பித்தனென் றெள்ளிப் பனவபோ வென்
றுளார் தமையும், பொற்பலர் பெருமான் விடாமென வாண்டு புரந்
தன னங்ஙன மின்றி, வெற்பலர் மருந்தே துதித்துவா வென்னும்

வினையினேன் றனைவிட விதியென், கற்பலர் நந்த வனத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சுஎ

3084. தேவியோ டினிது வந்தருள் புரிந்தான் சிவனடி யார்க் கென்ப தன்றி, யாவிரோர் கொழுந ரேடுவர் தாண்டா ளம்மையென் பாரிலை யன்னே, மேவியச் சீர்த்தி நினக்குறு விதமென் விளம்பிட வேண்டுகா யேற்குக், காவியார் தடஞ்சூழ் தருதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சுஅ)

3085. அடியவர் குறிப்போர்ந் தாண்பனே காய்க்க வாற்றெதிர் செல்லவே டென்பின், பொடிமட வரலா கக்கராம் விழுங்கும் பொரு டரச் செய்தனன் பரமன், கொடியனேன் குறிப்போர்ந் துன்னடிக் கன்பு கொளப்புரி வதுமுனக் கரிதோ, கடிமலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (சுகூ)

3086. அயனரி குலிச னமரருண் ணடுங்க வடர்ந்தெழுங் கொடுவிடம் வாங்கி, நயனமூன் றுடையா னுண்டனன் முன்ன நங்கை நின் பவளவா யமிர்தப், பயனுணர்ந் தன்றோ வலனெனி னனைய பரமனெவ் வாறுணத் துணிவான், கயன்மலர்த் தடங்கள் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எO)

3087. ஒளிமிகு சம்பு லிங்கநா யகர்போ லுடையையா னுதல்விழி நீயு, மளிமிகு மனையார் மாரனை யெரித்தார் யாரைநீ யெரித்தனை யம்மா, விளிமிகு நாயேன் வினையினை யெரித்தா லிரும்புக ழவரினு நினக்காங், களிமிகு மமரர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எக)

3088. நெடுவலி கொர்டுமா மேருவிற் பிடித்தாய் நீயஃ துணர்குவன் யானு, மடுதிறற் சூலி பிடித்தன னென்பா ரவனியுட் சிலர்கருத் தென்னோ, விடுகிடை நீயு மவனும்வே றல்லீ ரென்பதை யுணர்ந்தனர் கொல்லோ, கடுவிழி மடவார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எஉ)

3089. அம்பலத் தாட வெடுத்தநா டீணயென் றறைவனோர் கான்மலை யரையன், வம்பலர் முன்றிற் றிருமணத் தம்மி வைத்ததா டீணயென்ப ரோர்காற், செம்பொரு டீணியா னென்றெனை யிகழே றேர்ந்தொரு வழிநின்றே னன்னய், கம்பலர்த் தடஞ்சூழ் தருதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எங)

3090. எதிரறு பொதுவிற் குறட்பிணர் வெரிந்மே லியைத்திட றகாதென வுணர்ந்து, முதிருணர் வுடைய பரன்மறைச் சிலம்பார் மொய்வலத் தாணிறீஇ யிடத்தா, ளதிர்வர வெடுத்தான் வழுதியவ் வருமை யறிதரான் பிழைத்தனன் பொறுத்தாய், கதிரருட் கழகே யதுதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எச)

3091. பரவுவெண் ணுவ லீழலோ னிடத்தாள் பற்றிய வென்மூ னங் குறுக,வுரவுசெய் தண்ட தரனுள நடுங்கு முதைத்ததத் தாளென

வுன்னி, விரவுமப் பதநின் பதமன்றோ வதனை மென்பத மென்பதென் விளம்பாய், கரவுறாப் புலவர் புகழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எரு)

3092. ஒருகருங் கேழ வுருவெடுத் தினையி லுன்பதி யடிமலர் காண்டான், பெருநில மகழ்ந்த மாயவ னினது பிறங்குபே ராலயஞ் சூழ்ந்த, பொருவினீ றிட்டான் மதிலடி கண்டாற் போதுமே புண்ணியக் கொழுந்தே, கருள்கடிந் தொளியின் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எசு)

3093. உயன்மறந் தடருந் திரிபுரஞ் சிதைப்பா னொருவரை யெளிதினிற் குழைத்த, பயன்மதி முடித்த பாடல்சால் பெருமான் பாழியந் தடநெடுந் தோள்கள், வியன்முலைக் கோட்டாற் குழைத்தருணினக்கு மெல்லிய லெனும்பெயர் தகுமோ, கயன்மலர்த் தடங்கண் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எஎ)

3094. மையவாண் மகனெள் ளெச்சிலுண் டாற்கு மகிழ்ந்தருள் செய்துநின் கொழுநன், மெய்யவாஞ் சீர்த்தி படைத்தன னெனக்கு விரும்பிநீ யருளுநைவை யாயி, னையபெண் மகளெள் ளெச்சிலுண் டானுக் கருளினா ளெனும்புகழ் நினக்காங், கையர்வந் தணுகற் கருந்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எஅ)

3095. புனல்பயி றவளை முழங்குநின் கொழுநன் புகழ்ப்பெயருரைத்ததா வுணர்ந்து, மினல்பயில் கனகம் வீசினா னொருவன் மெய்ம்மையே நின்பெய ருரைக்கு, முனல்பயில் குழாம்பு கேன்றொழேன் புகழே னுவந்திடே னெங்ஙன முய்வேன், கனல்பயின் மணிமா மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (எகூ)

3096. மாவியல் பெருமான் மான்பிறை சுமந்தேன் வாமபா கத்தினி தமரு, நீவிளை யாடற் கென்பனம் பற்க நிகழும் திடைமருதாரின், மேவியோ ரரசில் விழுங்கிய தாதி வெறுப்பன மறைப்பதற் கென்று,காவியங் கண்ணா யுணர்திரு வானைக் காவகி லாண்டநா யகியே.

3097. அண்டகோ டிகளென் றுரைத்திடுஞ் சிற்றி லமைத்தமைத் தாடிடு வாய்நீ, துண்டவாண் மதியஞ் சூடிய சடிலச் சுந்தரனழித்தழித் தாடும், பிண்டநூ லென்றும் பேதைநீ யனையான் பித்தனென் றுரைப்பது மெய்யே, கண்டவா மொழியார் பயிறிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அக)

3098. மகளென நினைந்து தாயென விளித்த மலையிறை மனையறி யாமை, புகாறு பிரமன் முதற்பல வுயிர்க்கும் பொருந்துதா யாமுனைக் கணேச, னகங்கு முருகக் கடவுடா யென்று நவிலறி யாமையை யேய்க்கும், ககனமே லோங்கு மதிற்றிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அஉ)

3099. இலங்கற முப்பத் திரண்டென வகுத்தாங் கிகலற வவை யெலாம் வளர்த்து, மலங்குயிர் பலவும் புரக்குநீ கொடியேன் மாட்ட ருள் புரியினஃ தவற்றுட், டுலங்குமொன் றெடுசே ராதுகொ றனிப் பிற் சொற்றிமுப் பத்துமூன் றென்றே, கலங்கலில் வளமை மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அங)

3100. இளைத்தடைந் தேனை யாடியென் றுனையா னிரந்திரந் தேத்தநீ யிரங்கி, விளைத்தபே ரருளா லானுவ தனிலு மன்றநீ யேய ருள் புரிந்தான், முளைத்தசீர் பரவ விடமிலை கேட்டோ முகின்மழை வழங்கிடுந் தாயே, களைத்தடஞ் சிகரி சூழ்திரு வானைக் காவகி லாண் டநா யகியே. (அச)

3101. பிழைபல வுடையே னுயினு மவற்றைப் பேதைநீ யென் பதற் கிணங்கக், குழைமனத் தகற்றி யாளவே வேண்டுங் கூர்ந்தினி தாண்டிடா யென்னின், மழைமலர்க் கூந்தற் கங்கையைப் புகழ்வேன் வைவரே நொந்தவர் தாயே, கழைமலி கழனி சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அரு)

3102. சடைமிசை மாதை நோக்கியா ரெனினீ சங்கர னீரென் பான் முகமு, னிடைதெரி தரலென் னென்னினேக் குறுகின் னெ ழின்முக முதனிழ லென்ப, னுடையநா யகிநீ மறுத்திடிற் பிறரா லுணரென்பா னுணரவல் லவர்யார், கடையுற லொழிந்த வளத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அசு)

3103. எனக்கருள் செயினின் கொழுநனைப் புகழ்வே னிமயநின் றந்தையைப் புகழ்வேன், மனக்கினி தாநின் மைந்தரைப் புகழ்வேன் மலரினின் றோழியர்ப் புகழ்வே, னினக்கினி யவரா மடியரைப் புகழ் வே னின்னையும் புகழுவேன் றாயே, கனக்கடி மதில்சூழ் தருதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அஎ)

3104. பூவண நகரிற் பொன்னனை யாளிற் புகுந்தனன் முன்புகா மாரி, தூவண வன்பி னைந்திணை யெனுநூல் சொற்றதை விளக்கின னென்னின், மாவணத் தளிர்நேர் மேனியா யுலக மாதுகொ னீவிடை யிதற்கென், காவண நிறைவீ தித்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அஅ)

3105. பேயொடு நடிக்கும் பித்தனே யென்றோ பெருங்கதி யிலி யிவ னென்றோ, தாயொடு தந்தை யில்லவ னென்றோ தம்பிரா னொரு திரு மேனி, நீயொரு பாதி நின்முனோர் பாதி நிலவுறக் கொண்டது நன்றே, காயொரு வாத்தென் பொலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (அகூ)

3106. மோகினி யுருக்கொண் டொருதரம் புணர்கின் முன்ன வன் றனக்குமோர் பாதி, யேகலி லெழினின் றனக்குமோர் பாதி யெம்பிரான் மேனியி லென்று, லாகிய நீயே யவனெனத் தெரிந்தே

னல்லையென் றுற்பொறுப் பாயோ, காகனஞ் சுமக்கும் வளத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூ0)

3107. பல்லுல கீன்ற நின்றிரு வுதரப் பாலுள தென்னுநின் னிடைநே, ரொல்லுமா றிலதா யினுமொரு பக்க மொத்தலிற் சிருட் டியை யாற்றும், வெல்லுநா யகன்கைத் துடியெனி னின்றன் மெல்வ யிற் றிற்கது புகழோ, கல்லுமா மலத்தர் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூக)

3108. வண்படு கருப்புச் சிலைகொடு நெடிய வலிபடு மேருவிற் கொண்ட, தண்படு மதியஞ் சூடியைப் பொருது சயம்படு நகைபுரிந் துவப்பா, யொண்படு வலர்க்குப் பசும்புல்வன் படையென் றுரைப் பதை விளக்கினை தாயே,கண்படு மனச்செய் சூழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஉ)

3109. தேவிநின் னிடைதோ ளொத்திடு குணத்தாற் சிதம்பர தலத்தும்வேய் வனத்து, மேவிய நகைமுத் தணிமுலை யொக்கும் விதத்தினுற் றிருமுல்லை வாயில், பாவிய கயிலை யிடத்தும்வீற் றிருப் பன் பரன்றலை மதியனே யன்றோ, காவியம் ககன முறுந்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஙு)

3110. சுவைபடு கனிசெய் பனசநெட் டரம்பை சூதமா மல கம்வெண் ணுவ, விவைமுதற் பலவான் றருநிழ லுறைவா னினியநின் மொழிச்சுவை யவாவி, நவைபடு கொடிய வச்சிர வனமு நயந்தனன் பித்தனு தலினுற், கவைபடு சூலி யெழிற்றிரு வானைக் காவகி லாண் டநா யகியே. (கூச)

3111. இறையவன் வாமத் துறையுநீ தொழில்செ யிமையவர் தருப்பணங் காட்ட, மறைவின்மற் றதனை நோக்கியவ் விறைவன் வலப்புறத் தொருமடக் கொடிநன், குறைவதென் னெனமற் றவ னொடு பிணங்கே லுற்றுநோக் கிடிற்பிழை யில்லான், கறைமலி களத் தன் வளத்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூரு)

3112. கொடியது பிறத்த லதனினு மம்ம கொடியதே யிறத்த லிவ் விரண்டுந், தடிதர நினைந்தேன் றந்தைதா யில்லான் றறுகண் வெங் கூற்றுதைத் தாற்குன், னடியனென் றுணர்த்தி யருள்விலக் குவையே லகிலமீ தொருகதி யுண்டோ, கடிமலர்த் தடங்கள் சூழ் திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூசு)

3113. தடியுண லென்றும் வனசரர் பெருமான் றருதடி மிசைந் தன னொழிக, மிடிமிடை யவர்மா லென்றுநிற் களித்தான் மேனியிற் பாதியா தலினுற், படிவிதி விலக்கி லான்பர னென்னைப் பற்றியா டற் கவை குறியான், கடிதரா துணர்த்து நீதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (கூஎ)

3114. வரக்கருங் கொண்மூ மழைபொழி யாதேன் மண்பயி ருய்ம்வகை யுண்டோ, திரக்கடுங் கவலை சிதைதரப் பல்காற் செய்யும் விண் ணப்பநீ யுணர்ந்து, மிரக்கமில் லவள்போ லிருத்தியேற் கருணை யெங்கினி யிருப்பது தாயே, கரக்கரும் வளங்கண் மலிதிரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௯அ)

3115. மாயவ னுயோர் பாதியில் லவளாய் மற்றோர்பா தியுங்க வர்ந் தனையா, னுயகன் மேனி யெனினவன் வடிவ நாடொறு மறைந் ததா யிருக்கச், சேயமண் சத்தி மயமெனு தந்தோ சிவமய மென்ப தென் னுரையாய், காயமீ தெழுந்த மதிற்றிரு வானைக் காவகி லாண் டநா யகியே. (௯௯)

3116. பனிபடு நின்றாட் பங்கயம் பொங்கு பனிவரை யகங்க நிகழுந், துனிபடு பொழுது பரன்முடி மதியந் துண்ணெனத் தாக்கு நீர் வாவி, நனிபடு மூட்டாட் பங்கயம் பெறுமோ நவின்றன வினை யிலென் றுணர்ந்தேன், கனிபடு பொழில்விண் கமழ்திரு வானைக் காவகி லாண்டநா யகியே. (௧௦௦)

திருவானைக்கா அகிலாண்டநாயகிமாலை முற்றிற்று.

---

உ

## *சிறப்புப்பாயிரம்.

தஞ்சை, சதாவதானம்

ம-ா-ா-ஸ்ரீ

சுப்பிரமணிய ஐயரவர்களியற்றியது.

3117. ஞான கேத்திரத் தமரகி லாண்டநா யகித
னீன மில்பதத் தியற்றமிழ் மாலையொன் றியற்றி
மான மார்ந்தமீ னாட்சிசுந் தரநன்னு வலவ
னான மோவுறப் புனைந்தன னுலகுவப் புறவே. (௧)

3118. அன்ன மாலையைச் சோமசுந் தரப்பெய ரமைந்த
நன்னர் மேவிய சுகுணனச் சியற்றிநல் கென்று
பன்ன நன்றென்று தியாகரா சப்பெயர் படைத்த
மன்னு நாவலன பதிப்பித்து வழங்கினன் மகிழ்ந்தே. (௨)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

* இது பழையபதிப்பைச்சார்ந்தது.

சிவமயம்.

## திருவாவடுதுறையாதீனத்து

# ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் மாலை.



### காப்பு.

3119. பொன்மலர் தடித்துந் தனிதமு முறுகார்ப் புயலிவர் தந்தையே பொருவ, வென்மல ரெயிறு முழக்கமும் வாய்ந்த வெறுழ்க்கரு மூடிக முகைத்துப், பன்மலர் முடிமுன் னடிவரை மலர்ந்து பயிலுமோ ரத்தியைத் துதிப்பாந்,தென்மலர் துறைசைச் சுப்பிர மணிய தேசிகன் மாலைசீர் பெறவே.

---

### நூல்.

3120. பூமலி னிதா ளுள்ளுபு துதித்துப் போற்றிடும் வாஞ்சையே மதனுக், காமலி மூன்று மொருவழிப் படுவா னாருள் புரியுட லாதி, தாமலி தரக்கே ளாதளித் தாய்க்குத் தகுவதோ வருளெனக் கேட்ட, தூமலி யறவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (க)

3121. எண்ணுத முதித்த வியற்றவல் லாரீ யெற்றைக்கு நம்மடித் தொழும்பே, பண்ணுக வென்றாய் மெய்ப்பணி யென்று பற்றினனிதுகொளற் பொருட்டோ, நண்ணுகூற் றுதைத்துங் கல்லெறி யேற்று நயந்துமுன் பழகிய தைய, சுண்ணவொண் மாடஞ் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணிய தேசிகனே. (உ)

3122. எம்மையாள் பொருட்டுக் கயிலையு மழுமா னிலகிய திருக்கைசார் வடிவுஞ், செம்மைசால் பெயரு நீத்துவே றடைந்தாய் திகழ்தரு முன்னுள மூன்று, தம்மைநோக் குறினின் றுள்ளமூன் றனுக்குந் தாழ்ந்தன வென்றுளந் தெளிந்தேன், சும்மைநீர்த் தடங்கள் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ங)

3123. கேவலஞ் சிவாத்து விதம்விசிட் டத்துக் கெழுமுமத் துவிதமோம் பாது, நாவலர் தருசுத் தங்கொளென் றருள நாடுகே வலத்தினின் றெடுத்து, மாவலம் படருஞ் சகலத்து விடுத்தாய் வருவியாய் சுத்தமீ தென்னே, தூவல கலைஞர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ச)

3124. இன்றுநீ யடியார் தமக்கரு ளிறத்தா லெழும்புகழ்ப் படலமிக் கெழுந்தே, யன்றுநீ புனைந்த வம்பரங் கிழித்த ததுகுறித் துணர்தரி னின்று, நன்றுநீ பித்தன் றனெனல் விளக்கு நாடுறின் மற்றது மருளே, துன்றுவா னவர்கள் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ரு)

3125. மதிகதி ரிரண்டு முகவிழி யவற்றுண் மதியமுள் ளுவப்பவோர் மலரைப், பதிதர முடியிற் கொண்டனை மற்றைப் பரிதியு முவப்பவோர் மலரை, நிதிநிக ரடியிற் கொளல்கட னளித்தே னீகொளென் னிதயதா மரையைத், துதிபெறு முனிவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சு)

3126. நிறைதகை யழிந்தும் வெண்மையே வாய்ந்து நெடியகட் குறுந்தொடி யவர்பான், முறைதிறம் புற்றுங் களங்கமிக் கமைந்து முனிதகக் கோடியு மடைந்த, பிறைமதி முடியிற் கொண்டநீ யதுபோற் பிறங்குமென் மதியடிக் கொளினென், றுறைதொறு மெகினம் பயில்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ)

3127. மருவிவே தண்டத் திருந்தநீ யடியேன் வன்மனத் திருந்திட லரிதோ, பொருவிலவ் வரைமே னிசிசர னொருவன் போயறவூன்றிய நின்று, ளொருவிவன் மலம்போ யொழியமற் றிதன்க ணூன்றிட லரியதோ சொல்லாய், துருவிமான் முதலோர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அ)

3128. வளைதரு புறத்துக் கருகிருட் படலம் வயங்குநின் பார்வையா லன்றி, விளைதரு மற்றென் றல்வில குவதோ விராவகத் திருட்பட லமுநின், னளைதரு கருணைப் பார்வையா லன்றி யகல்வதி லனமிறு ரோடு, துளைதரு பெருநீர்த் துறைகள்சூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூ)

3129. கோலநின் செந்தா மரையடி விட்டார் கூற்றுவ னடிவிடா தவரே, சீலநி னங்கைச் செய்யதா மரைதஞ் சென்னிமேல் வைத்திடப் பெறுதார், சாலவு மொருதா மரைத்தவி சமர்வான் றன்கை வைத்திடுதலபெற் றவரே, சூலநின் றெளிரு மாளிகைத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கம)

3130. அத்தநின் றடந்தோட் செங்கழு நீரை யவாவிய வரிமதர் மழைக்கட், புத்தமு தனையா டளவமு மசோகும் பொன்னிறம் பொலிதளிர் மாவு, நித்தில முயிர்க்குஞ் சலசமும் பெற்று ணீலமும் பெறுகுவள் போலுந், துத்தமொய்த் திசைக்கு மளிப்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கக)

3131. மன்னிய நினது நாமமைந் தெழுத்தை வயங்குநின் பாலுறப் பெற்று, மின்னிய மனத்துச் சுமந்திடா ரெல்லாம் விரிஞ்சனூ லக்குபல் லெழுத்தை, முன்னிய துயரத் தொடுகருந் தலையின் முழுக்

கவுஞ் சுமப்பவ ரன்றோ, துன்னிய கழனி சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கஉ)

3132. பித்தவென் றிகழோம் பெண்கொடி மனைவாய்ப் பேயுறங் கிருட்பொழு தின்னே, யத்தசெல் லென்றோந் துதிபுரிந் திதய மாய வம் போருகத் திருத்தி, நித்தமு முவப்போ மடிகளுக் கெதன்க ணிகழ்விருப் பருள்செயல் வேண்டுஞ், சுத்தநற் றவத்தார் சூழ்பெ ருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கங)

3133. மதிக்குமா ரூரின் மறுகுவன் பூவின் மலிகரு திருளிடை மலர்ந்து, திதிக்குநின் பாதச் செய்யதா மரைக டெண்டிரை யுடுத்த வா ரூரிற், கதிக்குமெம் மனமா மறுகுவன் பூவிற் கவினுற மலர்தரு மென்றே, துதிக்குமோர் கடமை பூண்டனந் துறைசைச் சுப்பிர மணி யதே சிகனே. (கச)

3134. தவருடை யலைவே ளெய்வது குறியார் தழையுநின் செங்கழு நீர்வேட், டிவருடை யிழந்தா ளென்பது குறியா ரெம்மனை மார்கணேற் றிராவை, யவருடை யறுத்தா ரின்னமும் பசலை யழ கிய மேனியிற் றீரா, டுவருடை யிதழா ளருள்புரி துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கரு)

3135. ஐயநின் பொதுநா மத்தலாற் சிறப்பி னமைந்தநா மத்தினு மெமக்கு, மெய்யநன் குறலாற் பொதுமையி னன்றி மேவிய சிறப் பினு மடிமை, யுய்யநன் குறலா மெனத்துணிந் திருந்தோ முதுநிறை வேறுமா றருள்வாய், துய்யநற் புலவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கசு)

3136. கொலைகுறித் தெடுத்தல் செய்திடா மழுவிற் கொண்ட தன் றுன்றிரு மேனி, யலைபுரிந் தெம்மை யடர்த்திடும் பந்த மடங் கலு மடர்த்திடற் கன்றோ, தலைமைமற் றதுகொண் டதுசெயா திருக் குந் தன்மைசான் றவர்க்கழ காமோ, தொலைவில்பல் வளமுஞ் சூழ் பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கஎ)

3137 கருவிகை யிகப்பிற் போதமாம் போதங் கையிகப் பிற்றிரு வருளா, மருவிய வருள்கை யிகப்பினின் பாமிம் மாண்புநின் னேக் கினு லன்றி,யொருவிய மற்றை யொன்றனு லாமோ வுரைப்பவ ருரை யெலா மாயுந், துருவிய புகழோ யருட்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கஅ)

3138. இருங்கடற் புவியி லிடமறப் பரந்த தெழுந்துமே லிடத் தினும் பரந்த, தொருங்குநின் புகழ்மற் றின்னுமஃ தவாவி யுறமுய றன்மைதேர்ந் தன்றே, யருங்கலை வாத வூரர்முன் னினைப்பே ரா சைவா ரியனெனப் புகன்றார், சுருங்கைநீர் முழக்க மறாவயற் றுறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (ககூ)

3139. மதிநதி மழுமான் முதலிய மறைத்து மாரவேண் மேற் பகை மறையாய், பொதியுமத் திறத்தா லுன்னையா னகண்ட பூரண சிவனெனத் தெளிந்தே, னதிர்கட லுலகிற் றெளிதரார் தாமு மறித ரப் புகலுவேன் கண்டாய், துதியொடு புலவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உ0)

3140. ஐயயான் வெளிப்பட் டிடினடங் குவைநீ யடங்கில்யா னீவெளிப் படுவை, வெய்யயா னடங்கும் வகைபுரிந் தொருநீ வெளிப் படா திருப்பதென் னுரையாய், வையமே லுயர்தம் முதன்மையை மறந்து வாழ்நரு முளர்கொலோ மதித்துத், துய்யமா தவர்கள் சூழ் பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உக)

3141. என்றுநாம் விரும்புஞ் செங்கழு நீரை யிவள்விரும் பினை ளெனச் சினந்து, கன்றுமா மதியங் கனன்றெழு முழக்கங் கான்றெழு முயிர்த்தவா ரிதியுங், கொன்றுதீர் குவனென் றுடையவேள் சிலையிற் கோருடு மடந்தையென் செய்வா, டுன்றுநீள் கருணை செய்தரு டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உஉ)

3142. யான்முத லென்றே யெழுவனெப் பொழுது மெய்தறி யாமைநீ யொருநான், றான்முத லென்றே யெழுதலஃ தன்றே சத் திய மென்பராய்ந் தமைந்தா, ரூன்முத லியவென் னொழிவினுக் கெதிர்பார்த் துறுதலென் னுரைத்திடல் வேண்டுஞ், சூன்முதல் பணைத்த கழனிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உங)

3143. அடியவ னீயென் றுவண நீயே யமைத்தவை புகூஉவழக் காடி, நெடியவா ரூரர் தம்மையாண் டாய்க்கு நிகழுமோ ராவண மெ ழுதிக், கொடியயாங் கொடுப்போ மறுத்திடோ மடிமை கொண்டுநன் றூடரத் தடையென், றுடியமை யிடையார் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உச)

3144. பாலைநேர் மொழியாள் வேண்டுவோர் வேண்டும் படியருள் படியனீ யென்று, மாலையே வேண்ட மாலையே யளித்தாய் மாலையே நினக்குமீ தைய, நூலையோ ரெவரு மயக்கறுத் தாளு நோன்மைய னென்பது பொய்யோ, சோலைமேன் முகில்வந் துலாவருந் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (உரு)

3145. அன்றுவன் கூட னகரின்மா பாவி யாயினு னொருவனை யாண்டாய், நன்றுமற் றதனாற் பெரும்புக ழடைந்தாய் நாயினேன் றன்னையு மாண்டா, லின்றுமற் றதனாற் பெரும்புகழ் படுமே யிலாப மெண் ணார்களு முளரோ, துன்றுமெய்த் தவத்தார் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (உசு)

3146. உயரிய வொழுக்க மெனும்பெருங் கரையு ளுண்மையென் றுரைத்திடு மவலிற், பெயர்வில்சே தனமென் றுரைத்திடுஞ் சேற்

றிற் பெருகுறு மன்பெனும் புனலின், மயர்வறத் தோன்று நின்ன
டிக் கமலம் வருத்தவை யிலாதவென் னுள்ளத், துயரறை யகத்துந்
தோன்றுமோ துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௨௭)

3147. நாடுநின் னடிக டியானியா ருவந்து நயத்தக வெடுத்தெ
டுத் துரையார், நீடுமண் டோயப் பணிதரா ருலகி னிகழ்தலிற் புள்
விலங் காதிகூடும௰ றிணையாய் நிகழ்வதே நன்று குறித்துரை நிந்தை
யின் மையினாற், சூடுமெய்த் தவத்தர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர
மணியதே சிகனே. (௨௮)

3148. வரைகெழு நினது புயத்தையா னவாவ மற்றையப் புயம்
வட வரையைப், புரைதப முன்னங் குழைத்ததா மந்தப் பொருபகை
நினைந்ததற் கெதிராம், விரைகெழு வரையி லுதித்தமெல் வளியும்
வெப்பமிக் குறவெனை வருத்துஞ், சுரைநுக ரளிபண் பயில்பொழிற்
றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௨௯)

3149. கலைபல பயின்று தெளிந்தவர் வருந்திக் கற்றதற் குறுபய
னாக, மலைவரு நினையே பாடுதல் சிறப்பு மற்றுள பசுக்கண்மேற் பாட,
லலைவரு தீம்பா லட்டெடுத் திழிநாய்க் காங்கலங் கவிழ்ப்பது போ
லாந், தொலைவில்பல் வளஞ்சா லற்புதத் துறைசைச் சுப்பிர மணி
யதே சிகனே. (௩௦)

3150. முற்றிய காலனை நின்னையா னவாவ முன்னமோர் மாங்குயி
றன்னைப், பற்றிய பகையிற் றடிந்தனை யாமப் பகைநினைந் தன்னை
மார்க் கொல்லாச், செற்றிய சிறையக் குயிலின மளியேன் செவிவெ
துப் பேறமீக் கூவுஞ், சொற்றியென் றருள்வாய் நன்றுசா றுறைசைச்
சுப்பிர மணியதே சிகனே. (௩௧)

3151. கருமல விருட்டுள் யானென தென்னக் கதித்தெழு மொ
ருமதி தோன்ற, வொருவில்பல் கொடுமைப் பணிவிரா யுடற்ற வுற்ற
தோ ரென்னிடத் தினுமுன், றிருவடிக் கமல மெங்ஙன மலருந் தேசி
கோத் தமப்பெரு மானே, சுருதியா யிரமு முழக்கறாத் துறைசைச்
சுப்பிர மணியதே சிகனே. (௩௨)

3152. தெரிந்துனை விழைந்தேன் மதன்மணக் கோலஞ் செய்
யவந் தானிது முறையோ, புரிந்தபொன் மலரா லாகிய பாயல் பொங்
கழ றருமொரு மலர்க்கு, விரிந்தவெந் தழன்முன் றந்தனை யாம்பின்
விரைந்தவை மாறுசெய் வனபார், சொரிந்தவெண் டாளு நிலாவருந்
துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௩)

3153. மதியினை வருத்து நின்னடிக் கமல மாண்பையம் மதியி
னால் வருந்தும், பொதியசெங் கமல மெண்ணியுள் ளுடைந்து பொ
லிவிர குளசில பொலிவான், விதியினைச் சுமந்து முளுமையின் விளர்
ப்ப வெள்ளிய தாமரை யென்பார், துதிபயில் கவிஞர் கழகமார் துறை
சைச் சுப்பிர மணியதே சிகனே. (௩௪)

3154. மறையவன் படைத்தன் மாயவன் புரத்தல் வாய்த்திடா வொருதிரு வுருவ,மறைபெரும் புகழ்நீ கொண்டகா ரணத்தா லன்ன நான் முகவிதி படைத்த, னறைகெழு துளவத் தாரினுன் புரத்த னவில்பல வுருவம்யா மொழிந்தேந், துறைகெழு பொன்னி வளப் பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருடு)

3155. மேவிய கிரியை ஞானமென் றேத்த விளங்குநின் றிரு வடிக் கமலம், பாவிய சுவைப்பே ரானந்தத் தேறல் பருகுபு தேக்கு மிக் கெறிவான், வாவிய வடியேன் மனக்கருஞ் சுரும்பர் வந்துவீழ் நாளுமுண் டாமோ, தூவியந் தோகை பயில்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருசு)

3156. எனக்குனைக் கொடுத்து நினக்கெனைக் கோட லியல்பிஃ தன்றியொப் பில்லா, நினக்கெனைக் கொடுத்தென் றனக்குனைக் கோட னீதியன் றேமுத னீயே, மனக்குவப் புறுத்தும் பலசுதந் திரனீ மற் றஃ தில்லவ னடியேன், சொனக்குல மதில்கோ புரம்பொலி துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஎ)

3157. மருளக லடியார் சூட்டிய கழுநீர் மாலைநின் சேவடிப் பொலித, லிருள்படு பொழுதி லெழுமொரு கொழுந னெழின்மிக மணத்தலா லங்குப், பொருள்பெறு தானு மடுத்தற மணத்துப் பொ லிந்துவாழ்ந் திருப்பது புரையுஞ், சுருள்விரி கதலிப் பொங்கர்சூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஅ)

3158. கறையடி வராகங் குரண்டமீன் மதியங் கரையிவை முதற் பல வற்றை,நிறைவலி தபநீ செய்தனை யவற்றி னித்தில மனைத்துமப் பகையான், முறைமையி னுன்றே ளவாவிய வென்னை முறுகுவெப் புறுத்திவாட் டுவபார், துறைதொறுஞ் சங்கம் பயில்பெருந் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (ருகூ)

3159. அகத்திரு ளடியார்க் கொழிப்பவ னீயென் றறைந்திட லுண்மையே யழகு,நகத்திகழ் நினது தோளணி கழுநீர் நயந்தநா ளிப் புறத் திருளும், புகத்தியங் கிடுவே னொழித்திடாத் திறமென் புகலுதி புண்ணியப் பொருளே, சுகத்தியன் முனிவர் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுo)

3160. மேயநீ புறத்து வெளிப்படு திறத்தால் வெவ்வினைக் குழிசியாம் யாமும், பாயநின் னடிக்கீ ழடங்கினம் புறத்தே பண்பினவ் வாறுமற் றகத்தே, நாயநீ வெளிப்பட் டிடினின தாட்கீழ் நாங்கண னடங்கிவாழ்ந் திடுவோந், தூயமா தவருண் மணியெனுந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுக)

3161. அடுத்தடி யடைந்தார் தம்பசு போத மடங்குறு வகை யுப தேசித்,தெடுத்தநான் முகற்குங் கூற்றுவன் றனக்கு மிடையறுத் தொழில்வளர்த் திடுவார், மடுத்தவா ரியரோ நோக்கினு லனைத்தும்

வாங்கியாங் கசைவற விருத்தித், தொடுத்தபே ரின்ப மருத்திடுந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சஉ)

3162. கற்றவர் நின்னை யவாவின ரெல்லாங் கழன்றவ ரென்பது மெய்யே, யுற்றமற் றிவளு முன்னல மவாவி யுடைகல முண வொடு துறந்து, செற்றநாண் மடமை முதலிய துறந்து செவிலிதா யிருளைய ராதிச், சுற்றமுந் துறந்தா ணன்றிது துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சங)

3163. ஒளிகெழு மாற்று வுயர்கன கமும்பொன் னுற்றகா ரிரும்பும்பொன் னதுபோற், களிகெழு பசுபோ தந்தப வடைந்தார் களைப் புரந் தினிதருள் புரியு, மளிகெழு நீயுங் குருவது சிறிது மாற்றறி யார்களுங் குருவே, துளிகெழு மதுவத் துணர்ப்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சச)

3164. உற்றவர் பிறவிக் கடல்கடப் பதனுக் கொள்ளிய மரக் கல மாகிப், பற்றமை திரோத மருளெனப் பட்டுப் பரந்தநின் றிரு வடி யாய,பொற்றசெம் மணிக்கு நாயினேன் மனமம் பொற்றக டாகு நா ளுளதோ, சொற்றபல் வளத்தாற் பொலிபுகழ்த் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (சரு)

3165. கலகமொன் றெனுமா மலமிரண் டென்னக் கரைதரு கருமமூன் றென்ன, நிலவுறு மாயை யாயவிம் மூன்று நிகழ்ச்சியற் றொழிதரு பாக்குக், குலவுநின் றிருவாய் வயின்வரு கூற்றங் கூற்ற மாய்க் கூடுநா ளென்றோ,சுலவுநீ ருலகம் புகழ்பெருந் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (சசு)

3166. அடியவர் மலத்தை யழித்திடு திறத்தி னும்பிர தாபமு மவர்க்குப், படியில்பே ரின்ப மளித்திடு திறத்திற் படுபெருங் கீர்த் தியு மெழுந்து, வடிவமாய்ச் சேர்ந்து விளர்த்துறும் பரிதி மதியென வந்ததத் தியாசந், தொடியணி மடவார் பயில்பெருந் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (சஎ)

3167. திருவடி யாய கமலத்தி லொடுக்கஞ் சிவனுதன் முன் னமக் கமல, மருவடி யெழுத்தில் லவற்றொடுங் குதலே மானுமென் றனையரு ளின்றேற், பொருவடி யந்த மிலாநினை யென்றும் புகழ்ந்து பா டிடுவர மளித்தி, துருவடி யவர்சூழ் தருபெருந் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (சஅ)

3168. கறைதபு காட்சிச் சிவப்பிர காசர் கருணையா லினிதுற வகுத்த, வறையகத் திருக்கை விதித்தன ரெனினு மடியரே மனத் தறை யிருக்கை, நிறைபெரும் புகழோய் விலக்கினர் கொல்லோ நீயிஃ தொழிப்பது தகுமோ, துறைதொறு மடவா ராட்டயர் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சகூ)

3169. கோலமார் பிடக ரெற்றைக்கு மருந்து கொண்டுறச் சுமப்பது மூன்று, ஞாலமார் பிணிய ரவையறற் கன்றோ நலமிகுபோ தநீ சுமத்தல், சீலமார் பவர்மும் மலமறற் கன்றோ சிறியனேன் விலக் குளேன் கொல்லோ, சூலமார் மணிமா ளிகைப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருo)

3170. இவள்விழி மழைநேர் குவளையே ரென்ப ரிதுநிச மெவ் விதத் தென்னிற், றிவளுரு நின்னை விழைந்திடை யறாது செறிய நீர் பொழிதலி னுனுந்,தவழ்மதி யுதிக்கு மிரவுகண் படாத தன்மையி னுமென் றருள்வாய், துவள்கொடி முகில்கீண் டெழுமதிற் றுறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (ருக)

3171. நிலவுமுன் மாலை விரும்பின ளதற்கு நீயொரு சேய்கு லூர் மறையோ, ருலவுசீர்ப் புதல்வி யல்லையென் றனன்முன் னுண் மையே யின்றுபல் லோருங், கலவுறக் கொடுப்ப துண்டென மொழிந் தாள் கருதிவண் முதுக்குறை வென்னே, சுலவுபூஞ் சோலை முகில வாந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஉ)

3172. பற்பலர் சூழப் பவனிநீ வந்தாய் பார்த்திரு கைம்மலர் கு வித்தாள், பொற்பவிர் மடந்தை யதற்கணி வளைகள் பொருக்கெனக் கவர்ந்தனை முன்னு,ளற்புற விடுதல் செய்தனை யிந்நா ளமைதரக் கவ ருவை யெனினுன், சொற்புகழ் நன்று யிருந்தது துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (ருங)

3173. வணங்கினர் வறுமை நோயொடு மலநோய் மாறிட வம் பொன்வட் டகையி, லிணங்கிய சுவண நீறுநன் களிப்பா யெடுத்தி டக் குறைபடா மையினுற், குணங்கெழு பதும நிதியென வதனைக் குறித்தனங் குரவர்க ளேறே, சுணங்கிள முலையார் பயில்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருச)

3174. கூடிநின் றிருமுற் பணிந்துவீழ் போதே கூடிய கரும லம் வீழு, நாடியங் கெழும்பா தருள்விரா யெழுநீ நல்குநீற் றுலுடல் விளர்ப்ப, நீடிய விளர்த்த வுடம்புமற் றென்று நிலத்திது சில ரெண்ணு தென்னே, சூடிய புகழாற் பொலிபெருந் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (ருரு)

3175. மலம்வியா பகமோ வியாப்பியங் கொல்லோ மருவிய வெனக்கென விரண்டு, மலவது வியாத்தி நீக்கநீங் கிடுமென் றருளு நின் வாய்மொழி யவ்வா, றிலகுவா னீக்க மியற்றிடா தென்னே யிசைத்தசொன் முடிப்பவர் வேறு, சுலவுதீர் மனத்தர் தொகுபெ ருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருசு)

3176. கருதுறு கரும காண்டமு ஞான காண்டமு மிருபத மாக, மருவுப நிடத மேற்பாப் பாக வண்குமி ழேயெழுத் தாகப், பொருவறப் பொலிமுற் பாதுகை யெனவிப் போதது போற்றவெற்

கருள்வாய், சுருதியா ளுெமொல் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஎ)

3177. தேடிய மாலார்க் கரியைமுன் ளுளுஞ் சிறந்தவிந் நாளுமத் தகையை,வாடிய மடவார் வளையுடை கவர்ந்தாய் மாதர்பா லின்றுமத் தகையை, கூடிய வளைமுன் னிட்டநீ யின்று குவிகரம் பிடித்திடா வகையென், சூடிய மாலை யெனுமரு டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருஅ)

3178. கருவிழிச் செவ்வா யென்மகள் வருத்தங் காண்பது நின க்கழ காமோ, பொருவில்சங் கரனே நீயென வான்றோர் புகன்றிடு மாற்றமும் பொய்யோ, மருவுசெங் குவளை மதன்கருங் குவளை மறி தரச் செயுமெதி ரென்றோ, சுருதியா யிரமு முழக்கருத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (ருகூ)

3179. மன்னுநின் காவிக் கொடிமிசை யெழுந்து வானகத் தா டுத லமரீர், மின்னுநுண் மருங்கு லரம்பையர் போகம் வெறுத்தெனை யுடையவ ளுமம், பன்னுற வம்மி னெனவிளித் திடுமப் பண்புதேர் தரினரு ளாமே, துன்னுபல் கழனி வளமலி துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுo)

3180. ஆன்றநின் கருணை யென்னெனை வுரைக்கே ளையநின் பணிக்கமை நாற்கால், சான்றபல் பசுவு நின்பொது நாமந் தம்முடற் பொறித்திடப் படுவ, வேன்றவிவ் விருகாற் பசுவெனு மெங்கட் கியை ந்தில வவைசெய்புண் ணியமென், றேன்றவெவ் விடத்துங் கழகமார் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுக)

3181. கற்பக மாலை புனைபவர் நறிய கமலமா லிகைபுனை பவர் பா,செற்படுந் துளவ மாலிகை புனைவா ரிவரெலா நின்திரு வடிச்சூட், டற்புத மாலை புனையுமெங் களைநே ராவரோ வடர்மல மொழிந்து, சொற்புனை நின்னைக் கலத்தலார் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுஉ)

3182. மந்தண மாகவோ திம மேயென் மயலெலாந் திருச்செவிக் கேற்றிச், சந்தமென் கழுநீர் வாங்கிவா வென்று டனிமுடி முன்புண ராது, நொந்தயான் செவிப்பா லடைந்திடு மாறு நோற்றிலே னென் றது மறுப்பச்,சுந்தர மடவா ளயர்ந்தன டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுங)

3183. மான்மிகு மென்னை வந்துநீ புணர்தல் வழக்கொலா தெ ன்றியேல் விரைத்த, தேன்மிகு கழுநீ ரருள்செயல் வேண்டுந் திரு ந்துறு தநுவுமென் றிடின்முன், பான்மிகு திருப்பூ வணைத்தொரு மா ன்கைப் படர்நகக் குறிகொண்ட டுரைப்பேன், சூன்மிகு சங்கம் புல ம்புநீர்த் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுச)

3184. ஒள்ளிய நினது குடைமதி மதவே ளுடற்றுவா ளடை ந்தனுரன் றவன்பா, லள்ளிய கவிகை யென்னலாங் காம மாற்றுவ

தில்லையே யென்னி, னள்ளிய வுயிர்கட் கினத்தியல் பானே நாளுமா மறிவெனல் பொய்யோ, துள்ளிய கயன்மீப் பாய்வயற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுரு)

3185. வெள்ளிமால் வரையோ முலைவரை யொருநெல் வேலி வே யோதொடித் தோள்வே, யொள்ளிய பிறையோ நுதற்பிறை கண்ணு யுமதி யோமுக மதிய, நள்ளிய நீலி வனக்கத லியோவென் னகுதுடைக் கதலியென் செய்வேன், றுள்ளிய வரான்மீ தெழுபுனற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுசு)

3186. உள்ளுமெய் யடியார் சூட்டுமென் பூவுள் ளுன்னடிக் கேற்றிய நீலம், விள்ளுபன் மலரே வுடையவன் வயமாய் வெங்கொலை புரிந்ததன் றீமை, தள்ளுதல் குறித்து விரும்பிநின் னடியாஞ் சார்பு பெற் றமர்வது மானுந், துள்ளிய கயல்வின் கிழிக்குநீர்த் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுஎ)

3187. காதன்மெய் யடியார் நின்னெதிர் நின்று கவின்றதீ பங்கொடு வளைத்தன்,மேதகு பரிதி மண்டில மானும் விளங்கத னடுவணி பொலித, லோதரு மனைய மண்டில நடுமுன் னுறைதரு தன்மையே காட்டுஞ்,சூதமுற் றருக்க டுறுபொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுஅ)

3188. விட்டது யாரை முன்னர்வா சனைதான் வெண்பொனு லியன்றபா துகையே, நட்டதுன் மலர்த்தா ளதுகுறித் திங்கா னகுகதிர் வெள்ளியங் கிரிமேற், பட்டது பயின்ற பழக்கம தன்றோ பசுவருக் கைச்சுளை கடுவன், றெட்டது மந்திக் கீபொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (சுகூ)

3189. நின்னிரு மருங்கி லடியர்போற் றிடுங்கா னெடியவெண் சாமரை பனித்தன், மன்னிரு வகைய ஞானமு மெழுந்து வயங்கலு மனையவை யுயிர்த்த, மின்னிரு வகைய புகழுமாங் கெழுந்து மேவுறத் துள்ளலும் பொருவுந், துன்னிரு பயனே டின்பரு டுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எ0)

3190. பிறையுரு வென்னத் தலைவளை தண்டம் பிறங்கிநின் றிருமுனம் பொலித, லறைதரு கிரியா குருக்களென் றுரைக்கு மானைகட் கங்குச மென்கோ, வுறைதரு வெள்ளி பொன்னெனு மீன்களுாந்தபு தூண்டிலென் றுரைக்கோ, துறைபல கெழுமு பொன்னிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எக)

3191. அந்தகா ணின்னைப் புகழ்ந்துபா டினருக் களித்தரு ளியானமா திகளை,யிந்தநா ணியே கொண்டனை யவற்று லிவர்களுக் கென்பய னென்று, சந்தமார் திருத்தாண் மலர்நிழன் மட்டே தால்குறித் தனையது போறுஞ், சுந்தரக் கனக மதில்வளை துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எஉ)

3192. வெள்ளியங் கயிலை யமர்ந்தநாள் வெய்ய விடமெடுத் தயி ன்றனை யிங்கு, வள்ளிய வருளி னமருநா ளதுபோல் வலிவிளக் குவ தெவன் செய்தா, யுள்ளிய வடியே னறிவெடுத் தயின்று லொத்ததெ ன்றியாவரும் புகழ்வார், துள்ளிய கயல்சா லிலஞ்சிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எந)

3193. பொறையெனுங் குலையு ளன்பெனு நிறைந்த புனல்படு மெய்யடி யவர்த,நிறைமன மெனுநற் றடத்துற மலரு நின்னடித் தாம ரை மலரிற்,சிறைபடு மடியே னறிவெனும் வண்டு சேர்ந்துவாழ்ந் தம ருநா ளுளதோ, துறையுணர் புலவர் புகழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எச)

3194. வஞ்சனேன் மலநின் றாட்கெதிர் நமனோ வாய்ந்தகைக் கெதிர்விதி தலையோ, மஞ்சவாங் களத்திற் கெதிர்கொடு விடமோ மறைந்தகட் கெதிர்சிலை மதனோ, வெஞ்சுரு நெடிய சடைக்கெதிர் புனலோ வினியவாய் நகைக்கெதிர் புரமோ, துஞ்சன்மே வுதற்கு நவில்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எரு)

3195. மதித்திடு முனையான் கண்டநாண் முதலா மாரவேள் கணைக்கிலக் காகிப், பதித்திடு மயற்சேற் றாழ்தனன் றாமோ பரிந்த ருள் செய்திலா யென்னின், விதித்திடு கனவில் வந்தெனைப் புணர் தல் வெளிப்பட யாவர்க்கு முரைப்பேன், றுதித்திடு வளஞ்சான் மாளிகைத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எசு)

3196. அறைதரு கருணை யாழிநீ யெனவாங் காறுகால் செல் லுமே யென்று, சிறையளி தூது சேறியென் றியம்பச் செறிந்தவெண் காற்புள்ளா கினன்மு, னிறையவ னவன்பாற் குறைந்தகா லுடையே னேகிலே னெனத்தளர் தருவா, டுறைபல கெழுமு காவிரித் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (எஎ)

3197. மதித்திடு வளஞ்சான் மதுரையி லெல்லாம் வல்லசித் தெனப்பொலிந் தனைமு, னுதித்திடு மடியேன் மனங்குழை வித்தா லுறைசெயு மதுபுதுக் கியதாங்,கதித்திடு மந்நா ளுஞற்றிய தென்னிற் காலவேற் றுமையுனக் குண்டோ, துதித்திடு முனிவர் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எஅ)

3198. முத்தவெண் ணகையார் முயக்கமே பொருளா முன்னு வார் குழாத்தொடுங் கலந்து, சித்தமா மூாந்தா யென்றெனைப் பேசிச் சிரிப்பையேன் முன்ன மாரூரி,னத்தநேர் குழலாண் மனைவயிற் றூது நடந்ததை யுரைத்துனைச் சிரிப்பேன், சுத்தமா தவத்தர் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (எகூ)

3199. தரையுற மெழுகி யொருபொழு துண்ட தவத்தினால் யான்பெறு மகட்கு, விரைநறு மாலை தருதியின் றென்னின் மேவரு தீக்கையா வதுசெய்,புரைதபு முடலா தியவொரு மூன்றும் பொலியு

மூன் வயத்தவா மன்றே, சுரையடிக் கமல மலர்புனற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அ௦)

3200. இழித்தவூ னருந்த லோப்புகென் றெங்கட் கியம்பிமுன் னொருகிராதர், கழித்தவூ னுகர்ந்தாய் விதிவிலக் கொழிந்தாய் கடையனேற் கின்னருள் புரிந்தாற், சுழித்தநீ ருலகி லென்செய்தா யென்றோர் தோடகிற் குரைப்பவ ருளரோ, தொழித்தளி முரலு மலர்ப்பொழிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அக)

3201. கலைபல வையந் திரிபறி யாமை கழிதர வுணர்ந்துளா ரெனினு, மலைவினின் செவ்வாய் மொழியன்றி முத்தி வாய்ப்பரோ பலபொறி யிருந்து, மலைகடற் புடவி யிடைப்படு பொருள்கண் ணன் றிநோக் கிடுநரு முளரோ, துலைநிகர் நடுவோர் நிறைபெருந் துறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (அஉ)

3202. ஆற்றிடு தொழிலுங் கொண்டிடு முகமு மைந்துமுன் னொருமுகந் தரித்துக், காற்றிடு மலமைந் திப்பொழு தென்னிற் கவி னுமிம் முகப்புகழ் பெரிதா, வூற்றிடு கருணை யுவட்டெழ வடியா ருள்ளத்துள் ளுறைகுரு மணியே, தோற்றிடு மதியந் தவழ்மதிற் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அங)

3203. ஆன்றநின் பவனி கண்டநாண் முதலா வரியநின் றோள லர் வேட்டுக், கான்றவூ ருள்ளார் வாயலர் மதவேள் கையலர் நிரம்புற வேற்று, மான்றநெஞ் சினளாய்க் கண்ணலர் பொழிவாள் வயங்குநின் னுளத்தலர் கருணை, தோன்றவென் றடைவாள் சொற்றிவான் றுறை சைச் சுப்பிர மணியதே சிகனே. (அச)

3204. வடவரை கோட்டி வாசுகி பூட்டி வனத்துழாய்க் கோ லொன்று கூட்டித், தடமதில் வீட்டிப் பெருவிறல் காட்டித் தயங் குநீ யொருமலர் தொடுக்க, வுடன்முனிந் தனைபன் மலர்தொடுத் தவ்வே ளுடற்றுபோ ரெங்ஙனம் பொறுப்பேன், சுடர்விடு கொடிமா ளிகைப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அரு)

3205. வல்லைநின் னடியென் றலையிசை யேற்றின் மலரவன் கை வரைந் திடவவ், வெல்லைதீர் தலினுன் மலர்க்கைமற் றனையா னிருந் தலை யொன்றுவென் றதுமு, னெல்லைமென் மலர்த்தா ளன்னவ னெண்கை யொருங்குவென் றஃதிதன் புகழென், றெல்லைநற் றவத் தார் நிறைபெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அசு)

3206. புன்மையேந் தலைமே னினதுகைக் கமலம் பொலிதரக் குவிந்துமே விடுமோர், நன்மைசார் தலின்மற் றயன்கர கமல நாடொறு மலர்ந்துநீங் கிடுமத், தன்மைதே ராத மடவரப் பிரமன் றன்றொழில் வளர்ப்பவ ரன்றோ, தொன்மைமா தவத்தர் நிறைபெ ருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அஎ)

3207. பாரரையா லமர்ந்தான் முன்னமிப் பொழுது பராவர சமருவான் விழைவிற், றராதல முவவா தென்னவுங் கேளா டலை

வன்மற் றவனலா திலைபென்,றராவக லல்கு லன்னமென் னடையா ளயருவாண் முதுக்குறைந் தனள்காண், சுராதிபர் விரும்பிச் சூழ்பெ ருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அஅ)

3208. வெய்யவா பாச மார்க்கமத் தனையும் வீட்டுநின் றிருவடி யடைந்தே, னையவெங் காலன் வீசுபா சத்தோ டைவகைப் பாசமுங் கழல,வுய்யவாழ் நின துமுகத் துநம் பாச மொளிர்தரப் புரிந்தனை யுய்ந் தேன், றுய்யமா தவர்கள் சூழ்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (அகூ)

3209. புல்லிய வோரு ரேனுமில் லென்று புகன்றுமற் றதற் குமா ருக, நல்லியல் வெண்ணெய் நருபுகழ்த் துறையூர் நலமலி கடந்தைகொற் றவனூர், வில்லிய திருவா வடுதுறை புரப்பாய் வெறுத்த மூன் றார்மகிழ் தரவோ, சொல்லிய வவற்றென் றுகிய துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூ0)

3210. உன்னிடைக் களங்க முறுதலி னுருமென் றுரைத்தி யேன் முன்னையம் மதியந்,தன்னிடை யமர்ந்தாய் களங்கமங் கிலையோ சாற்றெனி னியாதுசாற் றிடுவா, யென்னிடை யதுநே ரென்றமர் வாயே லெய்தரும் புகழ்நினக் குண்டாந், துன்னிடை மடவார் சூழ் பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூக)

3211. கரிகுழைத் தெழுதிப் புனைதரப் பெற்ற கண்கணின் றிரு வுருக் கண்டு, வரிவளைக் குலத்தைக் கையினின் றொழிக்க மலர்க்கர நன்றுகொ லென்னப், புரியுமக் கயற்கண் முத்துகப் பொருது பொம் மல்வெம் முலைமுத்தங் கருகுஞ், சுரிகுழற் கருள்வ தென்றுவான் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூஉ)

3212. பாயவெப் பகலா நின்னுடை யுளத்திற் பதிதர வமர்தரே மென்னின், மேயமுற் பரிதி மண்டலத் தமர்ந்த வித்தகன் யாரெனக் கேட்ப, ஞயவிவ் வினைவிற் கெவ்விடை கொடுப்பா யத்தகு தோல்வி நிற் காமோ, தோயமென் கழனி வளப்பெருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூ௩)

3213. வேண்டமுன் கண்டத் தடக்கிய விடத்தை வெளிவிடுத் தெனவிரு ணிமிரு, மாண்டசெஞ் சடைநீர் கொதிப்பொடு வெளி யே வந்தெனப் பானிலா விரியும், பூண்டவெம் பணியி னுயிர்ப்பென விளங்கால் போதரு மெங்ஙனம் பொறுப்பா, வேண்டநின் றவிரா விளக் கறு துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூச)

3214. ஆன்றநீ மிசைந்த பரிகலச் சேட மன்புமிக் கேற்றமா தவருக், கேன்றவெம் பசிநோய் மருந்துகொ லுடலி லெய்திய நோய் தெறு மருந்தோ, சான்றமும் மலநோய் தவிர்த்திடு மருந்தோ தவாவ தன் பெருமையா துரைக்கேன், றோன்றமெய்ஞ் ஞானம் பயில்பெ ருந் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (கூரு)

3215. கையினுந் தவிர்த்தாய் நுதலினுந் தவிர்த்தாய் கடுந்தழ லினையது குறித்து, வையினு வைக நினையெதிர்ப் பட்ட நங்கைமார் காலியங் குறுவான், செய்யினு நன்று காலியங் குறுவான் செய்தன ரன்னதை நன்றே, துய்யினுங் கூர்த்த மதியர்சூழ் துறைசைச் சுப் பிர மணியதே சிகனே. (௯௬)

3216. மிடைசடை மறைத்து நீபெழுந் தருளி மேவினை யாயினு நினக்குப், புடையுற மலர்க்கை கொடுப்பவ ரினையன் பொற்சடை யுடையன்முன் னென்று, தடையற வெவரு மறிதரு பாக்குத் தாஞ் சுமந் துணர்த்திடத் தெளிந்தேன், றொடைமதுப் பிலிற்றுங் காவ ணத் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௯௭)

3217. வழிவழி யடியர்க் கனுத்துணைப் போதம் வயங்குமேற் பொறுமையு மனையார், கழியவின் படையு மவாவுமற் றனையார் கரு மல மேலடு முனிவு, மொழிநம பிரம வெனுமிரு மொழியு முடை யையா னீயுமீ தறனே, சுழியலை யெறியும் பொன்னிசூழ் துறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௯௮)

3218. கற்றவ ருவக்குங் கல்வியில் யானுங் கடலகத் தங்கணப் புனல்சார்ந், துற்றதேற் றிருத்த மாவது கடுப்ப வுன்பெரும் புகழ்விர வுதலாற், குற்றமின் றாகிச் செய்யுளா மென்றே குணமில்புன் சொற் கொடு துதிகள், சொற்றன னுவந்து கோடிவான் றுறைசைச் சுப்பிர மணியதே சிகனே. (௯௯)

3219. மன்னிய கருணைப் பெருஞ்சயி லாதி மரபுபல் லூழியும் வாழ்க, வின்னிய முகிலின் முழங்கவெக் காலு மிலங்குநின் சந்நிதி வாழ்க, பன்னிய நினது நாமவைந் தெழுத்தும் பல்லிடந் தொறுமன்பு கூட வாழ்க, துன்னிய நின்சீர் வாழ்கவான் றுறைசைச் சுப்பிர மணி யதே சிகனே. (௱)

சுப்பிரமணியதேசிகர்மாலை முற்றிற்று.

---

௨

## *சிறப்புப்பாயிரம்.

திருவாவடுதுறையாதீனத்து

### ஆறுமுகசுவாமிகளியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

3220. யாமாலை நீங்கவரு டுறைசையிற்சுப் பிரமணிய வெங்கோ மான்மேற், பூமாலை வாடுறுநன் மணிமாலை பொள்ளலுறும் பொன் னாற் செய்த, மாமாலை தேய்வுறுமுத் தாமாலை வெள்ளையென மதித்து நாராற், பாமாலை தொடுத்தணிந்தான் மீனாட்சி சுந்தரனும் பாவலோனே.

---

* இது பழையபதிப்பைச்சார்ந்தது.

சிவமயம்.

# தருமபுர ஆதீனத்து
# ஸ்ரீ சச்சிதானந்ததேசிகர் மாலை.

## சிவஞான விநாயகர்.

கட்டளைக்கலித்துறை.

3221. மன்னும் புகழ்ச்சிவ ஞான வரோதய மால்களிற்றின்
பன்னும் புகழ்த்துணைப் பாதாம் புயங்கண்மெய்ப் பத்தியுற்ற
மின்னும் புகழ்த்தவ ரன்றிநன் னூல்விருப் பாளர்விழை
முன்னும் புகழ்ச்சச்சி தானந்த மாலைக்கு முன்னிற்குமே.

## நூல்.

3222. பூமேவு நின்கழல் சார்ந்தாரை யன்பிற் பொருந்தியவர்
தாமேவு மின்பமுற் றூரன்று மின்றுமத் தன்மையரே
மாமேவு மிவ்விரண் டுள்ளேக மேனுமன் னோன்கதியென்
றேமேவு காத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (க)

3223. ஒன்று முளேமற் றிரண்டு முளேமொரு மூன்றுமுளே
மென்று முளேமொன்றை யென்றடை வேமென நிரப்பவருக்
கன்று முளேமென் றருள்வாய்ப் பேருண்மை யாட்டைபல
சென்று முளேந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உ)

3224. மதிக்கும் பெருங்கள்வ னீயேயென் பார்மழு மான்முதலாப்
பதிக்கும் பலவுங் கரந்தாயிங் குற்றுமொர் பாற்பசுக்கட்
குதிக்கு முணர்வுங் கவர்வா யுணரினுள் ளேயொளிப்பாய்
திதிக்குந் தருமைப் பதிச்சச்சி தானந்த தேசிகனே. (ங)

3225. ஒன்றா வெனினன்றென் பாயிரண் டாவெனி னேமுரையா
யென்றா வருநிலை யென்றிரப் பார்க்கிரு காலுடனே
நன்றா வயங்கொரு கையையுங் காட்டுவை நன்றுனியல்
சென்றாய் புகழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ச)

3226. மருந்து பிடகர் சுமப்பதெல் லாம்பிறர் மாட்டடைந்த
வருந்து பிணிமுற் றொழிப்பதற் கேபிற வாருயிர்கள் [ய்
பொருந்து வினையொழிப் பான்றனுத் தாங்குபு போந்தனைமெ
திருந்து புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ரு)

3227. நின்னைப் பணிபவர் நல்லாக் கறப்பவர் நீர்மையிலான்
றன்னைப் பணிபவர் கல்லாக் கறப்பவர் தற்றெரிப்பான்
பொன்னைப் பணிகொள் சடாமுடி யோடிங்குப் போந்தமர்வாய்
தென்னைப் பொழிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சு)

3228. யானுள போதுளை நீயுமென் றுய்சித்து நீயுமென்றாய்
வானுள விச்சை முதன்முச் சொருபன்மன் னீயுமென்றாய்
மீனுள வார்கட னுனீ புனலென்று விண்டதெவன்
றேனுள காத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (எ)

3229. தத்துவ முற்று மசத்தென்பை யென்னைச் சதசத்தென்பை
யொத்துநிற் சத்தென்பை யிவ்வா றுரைக்கு முனைப்பெரியர்
மெத்து மொருமொழி யாளனென் றோதலென் விள்ளுகண்டாய்
சித்துரு வத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அ)

3230. காண்பானுங் காட்சியுங் காணப் படுபொரு ளுங்கழித்தல்
வீண்பான் மதிகழி யாமையும் வீணென்று விண்டதெவன்
மாண்பா னிறைந்த சிவஞானச் செல்வ மலிதலினூற்
சேண்பான் மிளிர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூ)

3231. மெய்யோ துவையென்பர் மேதக்க யாருமம் மேதகுசொற்
பொய்யோ புகலடைந் தாரிடந் தத்துவப் பொய்யுஞ்சொல்வா
யையோ வெமர்சொற் றிடினெறுப் பாயழ கேன்னக்குச்
செய்யோ வருந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கo)

3232. பாடிவந் தார்க்கென் பரிசளிப் பாயுட் படுமறையிற்
கூடிவந் தார்வ முறப்பேசி மூன்றையுங் கொள்ளைகொள்வாய்
நாடிவந் தாருண் மகிழ்வள்ள லேபன் னகரினருந்
தேடிவந் தார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கக)

3233. நிறைமதி யாயென்று நிற்பேசி யின்ப நினைந்தடைந்தேன்
மிறைமதி யாயிங்கு வம்மோவென் னுவிடின் மேல்வெகுண்டு
குறைமதி யாயென்று கூறிலென் னுவை குணத்தர்நல்கு
துறைமதி யாய்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கஉ)

3234. மாலார் தமக்கரி யாயென்ப ரன் றின்றும் வாய்மைமணக்
கோலார் பகையுளை யன்றென்ப ரின்றுங் குலாயதது
மேலா ருனைக்கண்டுங் காணரி யாயென்று விள்ளுவன்யான்
சேலார் வயற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கங)

3235. மூவா மதிமறைத் தாய்ஞான சம்பந்த மூர்த்தியெனத்
தாவா நலப்பெயர் பூண்டா யஃது தகாதென்பன்யா
னுவா விராகுத் தலையென்ப தெண்ணி யடங்கினன்மெய்த்
தேவா புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கச)

3236. ஒன்றனை யாற்ற லொழிதன்மற் றொன்றனை யாற்றலுளாய்
மூன்றனை நேரி லுனக்கின் றிலைகொன் மொழிவறிய
வென்றனைப் பாக மிலாயென்ப தென்னை யெழிலிவந்து
தென்றனை யார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கரு)

3237. அந்நாள் வினையைந் தெனக்கூ றுதலு மமைந்தநினக்
கிந்நாள் வினையொன் றெனக்கூ றுதலு மெதிர்மறையை
மின்னா ளறிஞர் வினையெனல் போலுமெய் யார்ந்துகற்பஞ்
சின்னா ளெனுந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கசு)

3238. அத்து விதம்விசிட் டங்கே வலந்து விதஞ்சிவமிவ்
வொத்து நிகழ்தலி நீர்சுத்த மேகொள்ளென் றோதினையாற்
சத்து மிளிரவ் வவத்தையு மாக்கிற் றவாதடைவேன்
சித்து மலிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கஎ)

3239. நின்பார்வை யாலிரு ணீங்கிடு மாலிந் நெடுநிலத்திற்
சென்பார் கதிர்மதி யாலிரு ணீங்குத லென்வியப்பு
வன்பா ரகவிரு ளென்றே யுளத்து மதித்தனன்காண்
டென்பா ரணித்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கஅ)

3240. இயலார் பெயருஞ் சிறப்பார் பெயரு மியல்வழுவா
வியலார் வழக்கிடை மாறுங்கொ லோதிரு மேனியைப்போ
லுயலார்நின் னாமமு மாறிய தாலென் றுளத்துணர்ந்தேன்
செயலார் மதிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கசு)

3241. வேலையி லாயத னாலல வோநம்பு மெய்யடியார்
மாலை யுறும லவாம்வலை யாவையும் வாங்கிக்கொள்வாய்
சோலை விராமது மாந்தி மயங்கித் துனைந்துவரால்
சேலை விராந்தரு மைசச்சி தானந்த தேசிகனே. (உ0)

3242. நீயுநின் பேருமொன் றேயென்று தேர்ந்தன நிற்பழிச்சி
லாயு நினைக்கொனின் பேரைக்கொல் யாமடை வோமறைதி
யேயு நினக்குநின் பேருக்கும் வேற்றுமை யில்லையறஞ்
சேயும் புரிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உக)

3243. மருவுநின் னாமங்க ளுக்கள வேயிலை மற்றவற்றுட்
பொருவி லிரண்டவ றொன்றைந் தெழுத்தின் பொருளுணர்த்தி
யிருவிமற் றொன்றைந் தெழுத்தின் பொருளு மியையவைத்தாய்
திருவ மலிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உஉ)

3244. பூதத்தை வாயுவைப் புந்தியை யைந்து பொறியைமற்றைப்
பேதத்தை யாவ்யென் றெயுழ லாது பிறங்குவிந்து
நாதத்தை யோவுநின் னுண்மை தெரித்தது நன்றுமலர்ச்
சீதத்தை யார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உங)

3245. தந்தை யிலார்பெறுந் தாயு மிலார்தமர் யாருமிலார்
நந்தை யிலார்மனே யாதி யிலார்வெளி நண்ணினரே
யந்தை யிலாநின் னடியடைந் தாரழ கேயமரர்
சிந்தை யிலார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உச)

3246. நிலையா வுடம்பு விளக்கங்கொண் டன்றி நிருவிகற்ப
மலையாச் சவிகற்ப மிக்காட்சி யெய்துத லாகுங்கொலோ
மலையா வதுதந்த நின்னருள் வாழ்கவம் மாதடம
நிலையார் முகிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உரு)

3247. அகர வுயிருந் தனிநிலை யாவது மக்கரமே
நிகர வரிய வினையு மசைநிலை யும்பதமே
மகர மரிய வொருநீயும் யானும் வயங்குசித்தே
சிகர மதிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உசு)

3248. வளிதாழ் விசும்பைப் பைந்தோலிற் சுருட்டிட வல்லவனு
மளிதாழ்நின் பேரரு டீர்ந்தின்ப மார்தற் கமைபவனு
மொளிதாழ் புவனத்தி லொப்பரன் றேவுண ராதவர்க்குந்
தெளிதாழ் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உஎ)

3249. எல்லா மறைத்துஞ் சடையொன்று மேபுனைந் திங்கமர்ந்தாய்
வல்லா வெமரு முணர்வர்கொ லோவல் லவருணர்வார்
வில்லார்நற் றூலிபு லாகத்தின் மற்றும் விளங்குமென்று
செல்லார் மதிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உஅ)

3250. உற்ற வியாபகம் வெம்பாச மென்னி னொழிதலிலை
மற்ற வியாப்பிய மென்னினெஞ் ஞான்று மயங்குகிலாய்
சொற்ற வியாத்தியென் றுய்நீக்கு றுமையென் சொற்றிபொறி
செற்றவர் சூழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (உகூ)

3251. நன்றாய்வெம் பாச மியற்கையென் றுலது நாசமுறா
தொன்றா யிருக்குஞ் செயற்கை யனாதி யுதுவுமுண
ரென்றா யழியுங்கொ லோவெனக் காரண மெஞ்சவென்றாய்
தென்றாய் வளாதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩௰)

3252. கல்லான் மருவி யமர்ந்திங்கு மேவிக் கனுன்றமரு
மெல்லா னறிஞர் சிகாமணி யாயினை யென்பணிந்தச்
சொல்லான் முனிவு கொளேலுண்மை கூறினன் சூழ்ந்தகருஞ்
செல்லான் மதிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩௧)

3253. புறத்து முதன்மை நமக்காக மேவிப் பொலிவகத்து
நிறத்து முதன்மை நமக்காக வேயிது நீங்னையென்
றறத்து முதல்வசொற் றுய்சொற்ற வாயின்ன தாகிலையென்
றிறத்து மலிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩௨)

3254. பின்னை யுருவி னிறைமதி யோனெனப் பெற்றபெயர்
முன்னை யுருவிற் குறைமதி யோனென மூண்டபெயர்
தன்னை மறைத்திடுங் கொல்லோ மறைக்கினுஞ் சாற்றுவல்யான்
றென்னை வளத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௩)

3255. சத்தாதி யைந்து வசனாதி யைந்து சதாகதிபத்
தொத்தார் தருமிந் திரியம்பத் தந்தக் கரணமொர்நான்
கத்தா புருடனொடுசாக் கிரநுத லார்வையென்றாய்
சித்தா தருமைப் பதிச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௪)

3256. சொல்லும் புருவ நடுச்சாக் கிரத்துறச் சொற்றவற்று
ளொல்லுந் தசவிந் திரியங் கழியமற் றுள்ளனவே
புல்லுங் கனவிற் களத்திலென் றாயது போற்றிக்கொண்டேன்
செல்லும் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௫)

3257. பேரார் சுழுத்தி யிதயத் தமர்ந்து பிராணசித்த
நாரார் புருடனொடுநிற்பை நீயென்று நாட்டினையீ
தோரா ரொழிக வுணர்ந்தேன்மற் றேதுவ வோதுபெருஞ்
சீரார் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௬)

3258. பொற்ற துரியம் புகுவாய் பிராணன் புருடனொடு
சொற்றநன் றாபி யதீதத்தின் மூலத்திற் றெக்கமர்வை
யுற்ற புருடனொ டென்றாய் தெளிதர வுள்ளங்கொண்டேன்
செற்ற வளத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௭)

3259. நாலாறு தத்துவ மாயையென் றாய்நவி லேழனையுங்
கோலாறு சாலும் புருடனென் றாய்குறி யைந்தனையு
மேலாறு சூடிய வீசனென் றாயுள் விரித்துணர்ந்தேன்
சேலாறு பாய்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௮)

3260. கேவல மாணவ நீக்குமென் றாய்கிள ருஞ்சகல
மாவல மாயையை நீக்குமென் றாய்நல மன்னுசுத்த
நாவல வாவினை நீக்குமென் றாயுண்மை நானுணர்ந்தேன்
சேவல வாதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௩.௯)

3261. ஒன்று சிதசித் தசித்துப் பலவொளிர் சித்துச்சில
வென்று புகன்றனை யோர்மூப்பத் தாறையு மெண்ணினன்யான்
கன்று பிறரெங் ஙனமுணர் வார்தென்னை கற்பகத்தைச்
சென்று பொருந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௪0)

3262. நீயே யருட்குறி யாய்க்குரு வாய்மெய் நிகழ்ச்சியரா
யாயேக மாமல மாயை கரும மறப்புரிவாய்
தாயே யனையநின் றண்ணளி யென்சொல்வ றண்கடப்பஞ்
சேயே புகழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௪க)

3263. கரத்துச் சுடர்கொண் டிருடனை நேடல் கடுக்குனே
யுரத்துப் பதித்தறி யாமையை நேடுத லுத்தமனே
வரத்துப் பொலிமெய்க் குரவர் சிகாமணி யேவளங்கூர்
திரத்துப் பொலிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சஉ)

3264. மலையா நகரொரு மூன்றழித் தாயன்று வாழ்தரவின்
றலையா நகரொரு மூன்றையுங் காப்பைநின் னுண்மையெவர்
நிலையாம் வகையுணர் வார்புணர் வார்கையி னீத்தசெம்பொற்
சிலையாய் தமிழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சங)

3265. ஒரு ரிலானென் றுரைப்பார் நினையல் வுரைமறையா
வாரூர் மூகலொரு மூன்றா ரகத்தர சாட்சிகொண்டாய்
நீரூர் நின்செய்கை நிரம்பநன் ருயிற்று நீடுபெருஞ்
சீரூர் தமிழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சச)

3266. நின்னூ ரகர நிகருமை நீரென நேருரைக்கு
மூன்னூ ரகரமை யீறுற்று நின்றொரு மூன்றுமந்த
மன்னூர் நடுவ கரவு கரத்தை மதிப்பவர்யார்
தென்னூர் தமிழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சரு)

3267. ஒளிவார் விழியும் படையின் றலையு முதவுகின்ற
களிவார் பதமுத்தி யுஞ்சத்தி யுங்கமழ் புண்டரமு
மளிவார் நின்சொல்லு ளமைந்தவும் போல வணிநகரோ
தெளிவார் மகிழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சசு)

3268. அருளா ருலக மொருமூன்று மாடற் கறிகுறியாப்
பொருளார் நகரொரு மூன்றுளு வாய்பெரும் புண்ணியனே
வெருளார் பிறவிப் பிணிமருந் தேமத வேள்பகையே
தெருளா ருருத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சஎ)

3269. மருவு நகர மொருமூன்று சேர்ந்து வயங்குதல்போற்
பொருவில் பெயரு மொருமூன்று சேர்ந்து பொலிவையகத்
திருவு மவர்க்கினி யாய்தனி யாய்தைழந் தெவ்வகைய
திருவு மலிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சஅ)

3270. கூடு நகர மொருமூன்று ளாய்க்குக் கொடுத்திடுவன்
மூடு நகரமொன் றென்னது காணது முற்றுங்கொண்மோ
சூடு நகரஞ் சிறப்புப் பொருளென்று சொல்லிவிடே
றேடு நகர்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சகூ)

3271. மோதும் வலைகொடு முன்படுத் தாயொர் முழுமகர
மோது மருள்வலை கொண்டுகொ ளின்றெ னொருமகரம்
போது மலியும்பொற் றுதுகுத் தேவெளி போநதியைச்
சேதுசெய் காத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருo)

3272. கரையு மவத்தை யொருமூன்று காரணங் காரியமோ
விரையும் பதினேந் துடையானு நீயென்று விண்டனையால்
வரையுந் தியபுனற் காவிரிப் பாலெழு வாளைமுகிற்
றிரையும் வளத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருக)

3273. அரிக்கு மயற்கு மடைவரி தாகிய வானந்தந்தோம்
பரிக்கு மெனக்குங் கிடைக்குங்கொ லோவெனப் பையவுனை
யிரிக்குந் திறமுளை யேற்பெறு வாயென் றியம்பினையென்
றெரிக்குந் தமிழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருஉ)

3274. அகார முலகம் பலவற் றையுமினி தாக்குமென்று
யுகாரமுண் டாய வுலக மனைத்து மொடுக்குமென்றும்
மகார மவைக்குள் ளொளியாய்ப் பிரேரித்து மன்னுமென்றாய்
சிகார வுருத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருங)

3275. பேசு மகார முகார மகாரம் பிரணவமீ
தேசுத நீர்மறை வித்தா மசபை யிதனிடத்தே
கூசுத லோவி யியங்குமென் றுயுளங் கொண்டனன்யான்
றேசு மலிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருச)

3276. நாட வரிய விகாரமுன் மூன்று நவிலிலிங்க
பீட முயிரைந் தருந்து மதனிடம் பேசினின்னுங்
கூட வருமண்ட பிண்டமு மாமென்று கூறினையே
தேட மிளிர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருரு)

3277. பொறியொன்று பூதமொன் றந்தக் கரணம் புகலொருநான்
கறியுங் கலாதியொ ரேழ்சுத்த மைந்து மறைந்தவிவை
நெறியொன்றி ஞேர்புல னீநுகர் வாயென்று நீயுரைத்தாய்
செறியும் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருகூ)

3278. மூலமுன் மூவிரண் டற்குமொர் நான்கொரு மூவிரண்டு
நாலமை யாறுமற் றுறிரண் டோர்பதி னாறிரண்டு
சால விதழு மெழுத்துமென் றுயெவர் தள்ளுவர்செஞ்
சேலமை நீர்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருஎ)

3279. ஆறு முணர்குள மேலால் விகசித்த வாயிரந்தோ
டேறு மமல கமலத்தி லென்னைக்கண் டின்புறுதி
வேறு முணர்த்தவும் வேண்டுங்கொ லோவென்று விண்டனையான்
றேறும் வகைதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருஅ)

3280. பரையே நயனந் திரோதை கருமணி பற்றுமிச்சை
யுரையேயு ஞானங் கிரியை யதற்குள் ளொளிதெளியப்
புரையே யிலாதெவை யுங்காண்பை நீதெளி புந்தியர்யார்
திரையேய் தடத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (ருகூ)

3281. நாதத்தில் விந்துவின் மவ்வி லுகாரத்தி னுமெவ்வி
லோதச் சிறந்த சிகாரமுற் றோன்றுமென் றோதினையிப்
போதத்தை யுற்றவ ரேதத்தை நீங்கிப் பொலிவரென்றாய்
சீதப் புனற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுo)

3282. கிரியை நிவிர்த்தி யிருமனு நூற்றெட்டுக் கேடில்புர
மரிய வெழுத்தொன்று நாலேழ் பதமய னுற்புவியி
னுரியநன் னுசி யுபத்த மதாற்பய னூட்டிடுவாய்
தெரிய வருந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுக)

3283. ஞானம் பிதிட்டை யிருமனுத் தத்துவ நாலைந்துமூன்
றானவெண் மூவெழுத் தப்பத மேழ்மூன் றமைந்தபுர
மானவெண் ணேழரி நீர்தாலம் பாயு வருத்திடுவாய்
தீனரு ருத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுஉ)

3284. இச்சைநல் வித்தை யுருத்திரன் மாமனு வென்பதினை
வைச்ச பதமிரு பஃதேழு தத்துவம் வன்னமுமேழ்
மெச்சு புவனமூ வொன்ப தழல்கண்கை மிக்கருள்வாய்
செச்சை மலர்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுங)

3285. ஆதியஞ் சாந்தி மனுவிரண் டீச னறைபதினொன்
றோதி யபதம்வன் னந்தத் துவமும்மூன் றொன்பதினை
யேதில் புரந்துவக் குப்பதங் காலினி லூட்டிடுவாய்
தீதிய லாத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுச)

3286. பரையே யதீதமு மந்திர மொன்று பதந்தத்துவ
முரையே யிரண்டெழுத் தீரெட்டு மூவைந் தொளிர்புவனம்
வரையே சதாசிவன் முன்னிலை வான்செவி வாக்கினுய்ப்பாய்
திரையேய் புனற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுரு)

3287. அருள்சிவ னுத முளமறைப் பச்சிந்தை யீசன்விந்து
பொருளரன் மவ்வின் மனமழிப் புவ்விலொண் புத்திநின்று
கருணிறன் காப்ப கரத்தகங் காரத்துக் கம்படைப்புத்
தெருடியென் றுய்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. ()

3288. அருளார் தருமப் பொழுதேமெய்ஞ் ஞானத்தொ டைந்தொழிலாம்
பொருளார் தருமென்பர் நம்பற்க வைந்தெனப் போற்றுதொழி
லிருளார் தருசிற் றறிவிற் கடாதென் றியம்பினையே
தெருளார் தருதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுஎ)

3289. குளிகை யடுத்தலுஞ் செம்புறு கோதழிந் தாங்கருளால்
விளிகை மலத்திற் குறன்முத்தி யென்பதும் வீண்களிம்பி
னொளிகை யுறாது மலமித்த மாதலி னேர்தியென்றாய்
தெளிகை யுளார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (சுஅ)

3290. இந்தனத் தங்கியின் மும்மல மேக விருஞ்சிவமு
ந்தலி னீயுமொன் ருவையென் பாரது நாமுரையோ
மந்த முதலொடு நீயேக மாத லடாதென்றியே
செந்தமி ழார்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௬௯)

3291. நீரோடு நீர்புணர்ந் தாற்போற் சிவத்தொடு நீபுணர்வாய்
பேரோடு மென்பர் மலனீ யமலன் பெருமுதல்வ
ஞரோடு கூறினும் பேசார் சமமென் றகற்றினையே
சீரோடு வாழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௦)

3292. இருக்குரை யேக மெனலா லிரண்டிலை யென்றுரைக்கிற்
றருக்குரை யோயம் மொழிபதி மேற்றது சத்தியமே
பெருக்குரை வேத மெவர்க்கோ தியதென்று பேசினையே
திருக்குரை யாத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௧)

3293. வேத முரைப்பது மேகமன் றேவதை விட்டுரைத்தல்
போத மெனத்தகு மோவெனின் மீட்டுமப் பொய்யின்மறை
யோத வுணர்ந்தனை யேநீ திரிபுடி யோதென்றியே
சீத வயற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௨)

3294. வேனி லடைபவர்க் கெல்லா நிழறரு மென்றருப்போ
ஞனில மெங்கு மடைந்தார்க் கடிநிழ னல்குமெனிற்
கானின் மரத்தி னசேதன னல்லன் கடவுளென்றாய்
தேனில வுத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௩)

3295. மறையத் துவித மெனவு மிரண்டெங்கு வந்ததெனிற்
கறையற் றொளிரது வேறன்மை யேகட் டுரைத்ததுகா
ணிறையத் தெரியென் றருளினை காவிரி நித்திலங்க
டிறையிற் றருதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௪)

3296. மொழியா தெனக்கு மொழிந்தது காணின்சின் முத்திரைக்கை
கழியாது பாசங் கழிந்தது நின்னையுங் *காணவொல்லே
னழியாத வானந்த வாரிதி யேயென் னரும்பொருளே
செழியா வளர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௫)

3297. மாணு வுணர்தத் துவமசி யென்னு மறைப்பொருளைக்
கோணு முதற்கும் பசுவிற்கும் வேறன்மை கூறியதே
வீணு வுரைப்பர் தனிமையென் றேயதை விண்டிடென்றாய்
சேணுர் புகழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௬)

3298. உயிர்கட் கிருளற மெய்யாதி சத்தியி னுய்த்தசைத்த
லயிரற் றுணர்த லிலார்பதி மாயை யகப்பட்டெண்ணில்
பெயருற்று முத்தி யுறுமெனல் பொய்யெனப் பேசினையே
செயிரற் றவர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௭௭)

---

* 'காணவல்லேன்' என்றும் பாடம்.

3299. அந்தக் கரணங் கெடத்துன்பங் காணுத லற்றிருத்தல்
சந்தப் பெருமுத்தி யென்னின் மரணந் தவாவுறக்க
நந்தத் தருவுயிர் முத்திய வென்று நவின்றனைதோஞ்
சிந்தப் புடைதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (எஅ)

3300. உலகாய்ப் பரிணமித் துச்சிவ மாருயி ராய்வினையுண்
டிலகா வதீதத்திற் பேரொளி யாமென்ப ரீதும்பொய்யென்
றலகா வுவப்பி னுணர்பாக் கியம்பினை யாரியர்தந்
திலகா புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (எகூ)

3301. இருவினை யொப்பின் மலத்தைக் கருவியை யீடழித்தே
யொருவி லறிவு மதன்முத லுந்தனை யும்மொருவிப்
பொருவிலொன் றாயுவப் புந்தபல் வீணென்று போக்கத்தந்தாய்
திருவினர் சேர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அ௦)

3302. எழுவாய் புவிசிவ மீறா விருபதி னெட்டனையும்
வழுவா வணமம் முறைமையிற் காண்டல் வருசருவி
குழுவா கியதத் துவரூப மென்றனை கொண்டனன்யான்
செழுவார் புனற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அக)

3303. கூறிய தத்துவ மோர்முப்பத் தாறுங் குறிசடமென்
றேறிய போதது தத்துவக் காட்சி யெனப்புகன்றாய்
நாறிய நீற்றி னிருளற லானது தானமென்றே
தேறிய சீர்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அஉ)

3304. பூதமல் லேன்பொறி யல்லேன் புகலுங் கரணமல்லே
னோதுங் கலாதிசுத் தங்களல் லேனென் றொருவுவதே
போதங்கொ டத்துவ சுத்தியென் றாயது போற்றிக்கொண்டேன்
சீதங்கொ ணீர்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அங)

3305. உறந்த விருளை யொரீஇயவ் விடத்திலுண் டாகுகின்ற
வறந்தவ றாதமெய்ஞ் ஞானத்தைத் தானென் றிறிவதுவே
மறந்தவிர் ஞான வுருவமென் றாய்மறப் பேன்கொலிது
சிறந்த புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அச)

3306. நீகண்ட ஞானந் தனக்கே செயலன்றி நிற்கிலையன்
றேகண்ட ஞானமு மோர்சீயு மாய்நிற்ற லேயருணூற்
பாகண்ட வான்ம தரிசன மென்று பகர்ந்தனையே
சீகண்ட னேதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அரு)

3307. பரையிற் பொருந்திநின் றன்மையென் போதப்பதைப்புங்கெடு
விரையப் பொருளிற் பொருந்தித் தரிசித்து மெய்த்தவக்க
ளுரையுற்ற தோற்ற மறநிற்றல் சுத்தியென் றோதினையே
திரைநற் புனற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அசா)

3308. தாவாட் பரசிவ ரூபர் தரிசனம் யோகமற்று
மேவாமெய்ப் போக மிவைமுறை யேவிரித் துத்தெரித்தா
யாவா நினக்கென்ன கைம்மாறு செய்வ லருட்பெருமைத்
தேவா திகழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அஎ)

3309. இரும்பு மழலுமென் கோவுப்பு நீருமென் கோவிருடேர்த்
தரும்பு கதிரும் விழியுமென் கோமுன்னே யாணவமும்
விரும்பு முயிருமென் கோநீயு நானும் விரைசெலற்கோ
டிரும்பு மதிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அஅ)

3310. நீரு நிழலுமென் கோசுவைப் பாலுநன் னீருமென்கோ
வேரும் பழமுஞ் சுவையுமென் கோபண் ணிசையுமென்கோ
வாருங் கருதரு மோர்நீயு நானு மருளொளியே
சேரும் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (அகூ)

3311. வானும் வளியுங்கொ லோசெங் கதிரு மதியுங்கொலோ
வூனு முயிருங்கொ லோநில மும்முறு நெய்யுங்கொலோ
யானுமொர் நீயு மருளிருள் காவல ரோடுசுவைத்
தேனும் பொழிதரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூ௦)

3312. ஒருவாநின் பேரருள் பெற்றேனெஞ் ஞான்று முரைக்கரிய
பொருவாத வானந்த முற்றேன் கருணை பொழிமுகிலே
மருவாவென் னுற்பெறு மாறெவ னீயருள் வாரிதியே
திருவா புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூக)

3313. உன்னை நினைக்க வுனையே வழுத்த வுனதுபணி
தன்னை யியற்றப் பெறுவா னினிப்பெறத் தக்கதுவே
றென்னை யருட்கட லேகரு ணாநிதி யேமுகிலார்
தென்னை வளத்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூஉ)

3314. இம்மா நிலத்தி லடியார் செயலொன்று மில்லவராய்ச்
சும்மா விருந்து சுகமார் தரவைத்த சோதியனே
யெம்மா தவர்க்கு மரசே கருணை யிரும்பொருப்பே
செம்மா மதிற்றரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூங)

3315. போக்கு வரவில் வெளிபோ னிறைந்தமெய்ப் போதநிலை
நீக்க மறப்பொருந் தித்திருந் தித்தன் னினைப்புமறு
பாக்கு மருளி லருளே செயும்பெரும் பண்ணவனே
தேக்கும் புகழ்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூச)

3316. வருந்தி யிறந்து பிறந்துழ லாதுசன் மார்க்கநிலை
பொருந்தி யகண்ட பரிபூ ரணநிலை புக்குமிக்கின்
பருந்தி யடிய ரிறுமாக்க வைக்கு மருட்கடலே
செருந்தி மலர்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (கூரு)

3317. பந்த மகல வருண்ஞான சம்பந்தர் பார்பரவா
நந்த பரவசர் நற்சச்சி தாநந்தர் நாடினருக்
கந்த மருளு மொருமா சிலாமணி யாரெனத்தோஞ்
சிந்த வருடரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௯௬)

3318. பயவிரு ஞானசம் பந்தர் திருவம் பலவரழ
கியதிருச் சிற்றம் பலவர் கிளர்திரு நாவுக்கர
சுயர்சிவ ஞான ரொளிர்சச்சி தாநந்த ராயுவந்த
செயலுடை மெய்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. ()

3319. பார்புகழ் முத்துக் குமாரர்நன் ஞானசம் பந்தரரு
ளார்தரு கந்தப்ப ரம்மா சிலாமணி யாரிவராய்க்
கூர்தரு மெய்யடி யாரைப் புரந்தருள் கூர்ந்துநின்றாய்
சீர்தரு மெய்த்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௯அ)

3320. ஒத்தே நிகழடி யாருளத் தேயொளி யாய்நிறைந்த
முத்தே முழுமணி யேகரு காது முளைக்குமருள்
வித்தேமெய்ஞ் ஞானத் திரளே மறைமுடி மேல்விளங்குஞ்
சித்தே செழுந்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௯௯)

3321. பூவேயப் பூவின் மணமேமெய்ப் போதப் பொலிவருளுங்
காவேமெய்ஞ் ஞானக் கரும்பே யருள்கனி யுங்குரவர்
கோவே யிருங்குணக் குன்றே பொதுவிற் குனித்தருளுந்
தேவே திகழ்தரு மைச்சச்சி தானந்த தேசிகனே. (௧00)

சச்சிதானந்ததேசிகர்மாலை முற்றிற்று.

---

சிவமயம்.

திருவாவடுதுறை ஆதீனத்து

# ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது.



## காப்பு.

3322. வரமணிமா டத்தா வடுதுறைவா ழுஞ்சுப்
பிரமணிய தேசிகன்பாற் பெட்புற் - றுரமணியி
னுய்ந்துதஞ்ச மாயொருகோட் டண்ண லருட்கிலக்கு
வாய்ந்துநெஞ்சே தூதுசென்று வா.

---

## நூல்.

3323.

க. பூமேவு செங்கமலப் பொற்றவிசின் மேயவனு
மாமேவு மார்பினெடு மாயவனு - மோமே

உ. வரும்பொருட்பே றெய்து மருண்ஞான சித்தி
தருங்கரும பூமியெனச் சாற்ற - லொருங்குணர்ந்து

ங. நால்வேத மோது நகுநீற்று லேந்துபதத்
தால்வேறு மம்மரையென் றுயாமே - மேல்கீழு

ச. மன்னமு மேனமு மாய்ப்பறந் தும்புகுந்து
மின்னமுங் காணு வியல்பினன் - முன்னமே

ரு. பாசங் கலந்த பசுக்களி லோர்வகைக்கா
நேசங் கலந்த நிகழ்ச்சியால் - வாச

சு. மலேயு மிதழிமதி யஞ்சடில மூன்று
விளையும் பலவும் விலக்கி - வளையும்

எ. பிறைதவழு மாடமலி பேரா வடுதண்
டுறைதவழும் புண்ணியத்தாற் றோற்று - மிறைவ

அ. னொருமா னெமக்கொளிக்க வோர்கை யமரு
மொருமா னொளித்த வொருவன் - பெருமான்

கூ. மதிமறைத்த மாசெக்கு மாற்றி யருள
மதிமறைத்த மாசடையா வள்ள - னிதிய

௧0. மிருள்கண்ட யாமவ் விருள்காணு வண்ண
மிருள்கண்டங் காட்டா திருப்போன் - பொருள்கண்ட

௧௧. மானிடனே யென்ன மருவி யிருந்தாலு
மானிடனே யென்ன வயங்குவா - னீனவுல

௧௨. காயதரைங் கந்த மறுப்பவரொன் றல்லாமுட்
டேயதரென் பார்பரனு மென்பாருஞ் - சேய்மையிற்கண்

௧௩. டாலுமிரு கைதலைமே லாக்கிமன நெக்குருகிச்
சாலும்வணக் கஞ்செய் தவாச்சிறப்பான் - வேலரசர்

௧௪. தன்னடிநீ ழல்வைகத் தாவாத் திருவரசின்
மன்னடிநீ ழல்வைகு மாதேவன் - றுன்னடியார்

௧௫. நந்தான மென்கயிலை நந்திமுதன் மெய்கண்டான்
சந்தான மோங்கத் தழைத்தருள்வோன் - முந்தான *

௧௬ - ௧௯. ... ... ...

௨0. எண்ணி யுழலு மிருளகற்ற வெங்கள்பா
னண்ணி யமரு நகுபரிதி - கண்ணிய

௨௧. வாலங் கலந்தசுவை யாரமுத மானலு
மாலங் கலவாத வாரமுதஞ் - சாலு

௨௨. மறப்புக் குணத்தை மருவியுழ லெங்கள்
பிறப்புத் தபப்பிறந்த பெம்மான் - சிறப்புறலாற்

௨௩. பொன்னை யினிதளித்துப் போகவென்று தெங்களுக்குத்
தன்னை யினிதளிக்குந் தம்பிரான் - முன்மறைத்த

௨௪. தொன்றேயென் றோதி யொழித்தெம்மை வேறுபடுத்
தொன்றே யருள்புரியு மொன்றுனு - னன்றமேதார்

௨௫. கற்றூர் புரிபிழையுங் கைகுவித்துக் கூப்பிடுத
லற்றூர் குணமு மறமறப்பான் - பற்றுச்

௨௬. சுரவடிவி லெங்கண்மனந் தோயாமை யெண்ணி
நரவடிவங் கொண்டுவந்த நம்மான் - விரவுபுழு

௨௭. மென்பயிர் போல விடயத் தரிப்புண்டு
துன்புறுவேங் கட்கோர் துணையானு - னன்பமையு

௨௮. நாதாந்த முத்தியருண் ஞானவினோ தன்றெளிவாம்
வேதாந்தன் பேறென்றும் வேண்டாதான் - போத

---

* இதற்குப் பின்னுள்ள ௪-கண்ணிகளடங்கியபகுதி ஏட்டிற் சிதைந்து போய்விட்டமையாலும் வேறு பிரதி அகப்படாமையாலும் அவை இங்கே பதிப்பிக்கப்படவில்லை.

உகூ. நரனென் றிருந்தானு ஞானமிலா தாரு
மரனென் றறிய வசிர்வா - னுரனுடைய

௩0. வல்லரக்க னேற்று மலையாத தாய்ப்புரத்தி
னெல்லரக்க வாங்க லியலாதாய்ச் - சொல்லரக்கு

௩க. மிக்க புகழாழி மேவிச் சுழலாதாய்ப்
பக்க மரியப் படாததாய்த் - தொக்ககய

௩௨. வாழி கரவாதா யான்ற தமிழ்முனிகைப்
பாழியறிந் தஞ்சப் படாததாய் - வாழி

௩௩. பொறையருவி யென்ஞான்றும் போற்றிவறந் தானு
நிறையும்வள நல்கு நிலத்தாய் - மறைபுகல

௩௪. வாய்ந்ததரு வைந்தோ டழகியசிந் தாமணியும்
வாய்ந்த பெருங்கருணை மாமலையான் - றோய்ந்தகா

௩௫. ராணவந் தீர்ந்த வறிவாங் குறிஞ்சியெனு
நீணவ மாயநில நின்றெழுந்து - காணவெழு

௩௬. காமமெனும் பாலை கடந்தேறி மாயையெனு
நாமநெடு முல்லை நகப்புகுந்தே - யேமமெனு

௩௭. வுற்ற பசுக்கவர்ந்தாங் கோங்காய ராயவைவர்
முற்ற வுஞற்றுதொழின் மோதியே - செற்ற

௩௮. வுளமா மருதநிலத் துற்று விடயக்
குளமாய வெல்லாங் குலைத்துத் - தளமாருங்

௩௯. கண்ணுய நெய்தல் கலந்துமலக் கட்டற்று
ரண்ணுமே யெவ்விடனு மாய்ப்பெருகி - யெண்ணு

௪0. நிலமா விசும்பு நிறைந்தென்றும் வற்று
நலமாமா னந்த நதியான் - புலமாரு

௪க. முப்பகுதி யாயவுயிர் முத்தி பெறவாழு
முப்பகுதி மாயை முழுநாடன் - செப்பரிய

௪௨. மெய்யாய வன்பர் விடயக் காவருறல்
செய்யா மனமாந் திருநகரான் - கொய்யா

௪௩. மரைமல ராளி மனச்சாலை நின்றும்
விரையநால் வாயில் வெளிப்பட் - டுரைசிறந்து

௪௪. மண்ணக மெல்லா மருவிப் பரந்தோடி
விண்ணக மெல்லாம் விராய்த்தாவி - யெண்ண

௪௫. வொருநாட்டிற் காடா யுறைகுவதல் லாம
லொருநாட்டில் வெற்பா யுறைந்தும் - பெருநாட்டி

சசு. லேனையபோல் வெங்புறத்தி லேங்துவதல் லாதுதலே
மேனை யுருது மிகத்தரித்துஞ் - சோனைக்

சஎ. கடலுலக மீர்த்துக் கடுகி நடக்கு
முடலின் மறைப்பரிமா வுள்ளா - னடல்சேரு

சஅ. மூலமல வேரென்னு மொய்கூர் தறிமுறித்துச்
சால மலமாங் தளையறுத்து - ஞாலமுத

சகூ. லாறுறு தத்துவ மாய படைதுரந்து
மாருத கன்ம மரஞ்சாய்த்துக் - கூறு

ருo. மனமாம் பரிமாவை மாய்த்துமத வேள்கைச்
சினமாங் கரும்பொடியச் சீறி - யினமாங்

ருக. குடருங் கொழுவுங் குருதியு மென்புங்
தொடரு நரம்பொடு தோலு - மிடையிடையே

ருஉ. வைத்த தடியும் வழும்பும் வெளித்தோற்ற
மொய்த்த கருங்தோலின் மூட்டொழியக் - கைத்து

ருங. மடமா தரைமிதித்து வைத்த சமயத்
தடமார் படுகுழிசா ராம - விடமார்

ருச. குறையாத வானந்தக் கொள்ளைநீ ராடி
மறையா கமமா மணிக - ணிறைய

ருரு. விருபாலுங் தூங்கி யிரட்ட வெழுந்து
வருபான்மை ஞானமத மாவா - ரைருநான்கு

ருசு. சொல்லாய பூவைச் சுவையாய தேனெழுகப்
புல்லா வழுவாய புல்லியெலா - மில்லாமற்

ருஎ. கற்று நிரம்பாக் கவியாங் கவிகளெலா
முற்று வருத்தா வுரவடையா - முற்றுமுண

ருஅ. ரான்றோ ரெனச்சொ லளிக்கணங்கண் மொய்த்தளையச்
சான்றோர்சொ லன்பாங் தகுநாரால் - வான்றோயுஞ்

ருகூ. செங்நா வெனுங்கரத்தாற் சீர்தொடுத்து வாட்டமொன்று
மன்னு வகையமைபா மாலையான் - பன்னயமார்

சுo. சித்தாந்த சைவமொன்றே தேற்றமற் றுள்ளவெலாம்
பித்தாந்த மென்றெடுத்துப் பேசுதல்போ - லொத்தபல

சுக. வண்டாடு மாலையொடு மண்ணின்று வான்கிழித்துக்
கொண்டாடு காவிக் கொடியாளன் - றெண்டர்

சுஉ. கடியாத பேரொலியாய்க் கற்றோராற் சொல்லி
முடியாத நாத முரசான் - குடியாகுங்

௬௩. தானமல ராளிமுன்னோர் தங்களைக்கொண் டைந்துதொழி
லானவைநன் காற்றுவிக்கு மாணையான் - ஞான

௬௪. வரமணிய வாவினரே வாஞ்சித் திடுஞ்சுப்
பிரமணிய தேசிகனெம் பெம்மா - னுரமா

௬௫. ரொருநமச்சி வாய னுயர்நமச்சி வாயன்
குருநமச்சி வாயனெங் கோமா - னருள்சான்

௬௬. மகர மதியின் வயங்குமுத லுள்ள
னிகரிலபி டேகமுத னீடும் - புகரிலா

௬௭. வாரா தனங்கொண் டருளிமறு நாட்பகலி
லேரா ரடியவரெண் ணில்லாரோ - டோருமமு

௬௮. துண்டுளார் யோகசித்தி யுற்றுளார் ஞானசித்தி
கண்டுளா ராவரெனக் கைகுவித்து - மண்டிவரு

௬௯. மான்றவடி யாரோ டறுசுவை யாரமுது
தோன்ற வினிதுகை தொட்டருளிச் - சான்றவரு

௭௦. ணூலை யினிது நுனித்தமதி யார்க்குப்பின்
வேலை முழுதும் விரித்தருளி - மாலைவர

௭௧. மாமுனிவர் தூய்மை மருவுநறு நீராட்டி
யேமுறுமெய் யொற்றுடை யிட்டதற்பின் - காமன்வலி

௭௨. வென்றதிறங் காட்டி விளங்குமுகற் றோயாடை
யொன்ற வரையி லுடுத்தருளி - நன்றமையு

௭௩. மாதனத்து மேவி யருகமரும் வட்டகையின்
மாதனத்தி னுளும் வயங்குவதாய் - மோதும்

௭௪. பசுமலநீ ருக்கியுயர் பண்பே யருளப்
பசுமலநீ ருக்கியமை பண்பாய் - வசுவி

௭௫. னடுத்தவையெல் லாம்புனித மாக்குதிரு வெண்ணீ
றெடுத்தவைய வங்குலவ வேற்றி - விடுத்தசுட

௭௬. ரொன்பான் மணியு மொளிர்தருசிர் தாமணியும்
வன்பார் கவுத்துவ மாமணியு - மன்பி

௭௭. லொருதிரண மாக்கு முருத்திராக் கங்கள்
பொருவில் சிரமுதலாப் பூண்டு - கருது

௭௮. மிருவ ரழுக்கறுப்ப வேற்றசடா மோலி
யிருவரிரு கைகொடுப்ப தேற்றே - யொருவரினி

௭௯. தெங்கண் மணிமோலி யென்னவொளிர் பாதுகைமற்
றங்கணெதிர் வைப்ப வுவற்றிவர்ந்து - துங்க

௮0. முரசு முழவ முருடு திமிலை
பரசு தடாரி படகம் - விரசு

௮௧. பலவு மெழுந்து பரம்பி முழங்க
நிலவு பிறவு நிகழக் - குலவு

௮௨. திருவா வடுதுறைவாழ் செல்வன்வந்தா னெம்மு
ளொருவா வொருவன்வந்தா னுற்றார் - மருவு

௮௩. பிறப்பு முழுதொழிக்கும் பேராளன் வந்தான்
சிறப்பருள் செம்மல்வந்தான் றிண்பா - ருறப்புகுந்த

௮௪. துங்க மலிஞான சூரியன்வந் தானுயிரின்
பங்க மறுக்கும் பரன்வந்தா - னெங்கள்

௮௫. குருசாமி வந்தான் குணக்குன்று வந்தா
னருண்ஞான மூர்த்திவந்தா னன்பர் - பெருவாழ்வாந்

௮௬. தம்பிரான் வந்தான் றழைசுப் பிரமணிய
நம்பிரான் வந்தா னலமாரு - மெம்பிரான்

௮௭. வந்தான்வந் தானென்று மாண்பார் திருச்சின்ன
நந்தா வொலியெழுப்பி நன்குவர - முந்தா

௮௮. தரம்பெருக வாலவட்டந் தாலவட்டம் பற்றி
வரம்பெருக வோர்பான் மலிய - நிரம்பு

௮௯. முழுமதிய மேலமர்வான் முந்திமுயன் றென்ன
வெழுகவிகை செய்யுநிழ லேய்ப்பத் - தழுவு

௯0. பெரும்புகழ்வெவ் வேறுய்ப் பெயர்ந்து பெயர்ந்து
விரும்பவுறத் துள்ளும் விதம்போ - லரும்பு

௯௧. பவளக்காற் சாமரைகள் பற்பலவு மொய்த்துத்
திவளத் தலைபனிப்புச் செய்ய - விவளவெனுக்

௯௨. கோணுத தண்டமொடு கோணலுறு தண்டமு
நாணுளு நீங்கா நலங்காட்டப் - பேணு

௯௩. வலர்மகர தோரணங்க ளாயு மொலியல்
பலவு நெருங்கிப் பரம்பக் - குலவுதிற

௯௪. லோதுவார் பல்லோ ரொருங்குதே வாரங்க
ளோதுவா ராய்த்தாள மொத்தலொடு - போதவெளி

௯௫. வந்து மணிச்சிவிகை வாயோர் களங்கமிலா
விந்துநிறைந் தென்ன வெழுந்தருளி - முந்து

௯௬. மனைதுறந்தார் செஞ்சடிலம் வைத்தாரஃ தின்றி
நினையு மழித்தலுற்ற நீரார் - புனையுமரைக்

சுஎ. கீளொடு கோவணத்தார் கேடில்கர பாத்திரத்தா
ராளொடுவாழ் வாயில் லறத்தமர்ந்தார் - நாளுஞ்

சுஅ. சரியை கிரியை தவயோக ஞானம்
விரியவனுட் டிக்கும் விருப்போர் - தெரிய

சுகூ. வுலகம் பழியா துறுவேடம் பூண்டா
ருலகம் பழிக்க வுவப்பா - ரிலகு

கoo. திரிபுண் டரத்தார் திகழ்கண் மணியார்
விரிதரவுத் தூளனமே மேயார் - பரியு

கoக. மரனடியார் தொண்டி னமைந்தா ரளவாச்
சுரர்புகழ்கோ யிற்பணியே சூழ்வார் - விரவு

கoஉ. மடியாருக் கன்னமுத லாதரித்து நல்கு
நெடியார் தியான நிறைந்தார் - கடியார்

கoரு. மலர்தொடுப்பார் தீபம் வயக்குவார் மற்றும்
பலர்புகழுஞ் சாத்திரங்கள் பார்ப்பார் - நிலவுபொரு

கoச. ளாய்வார் வினவுவா ரங்கைகொட்டி நட்டமிட்டுத்
தோய்வாரா னந்தத் தொடுகடலில் - வாய்வார்

கoரு. துதியா ரயன்முதலாச் சொல்லும் பிறரை
மதியா ரருளே மதிப்பார் - கதியா

கoசு. ரிவர்மு னனோவோரு மேத்திக்கை கூப்பிக்
கவரடையா நெஞ்சங் கரைந்து - சிவசிவவென்

கoஎ. றார்ப்பாரோர் சில்லோ ரரகரவென் றானந்தம்
போர்ப்பாரோர் சில்லோர் புடைநெருங்க - வேர்ச்சிவிகை

கoஅ. செம்மையுறு காட்சிச் சிவிகை கொடுத்தடைந்தார்
தம்மை யியக்குவார் தாங்கிவர - வெம்மைக்

கoகூ. கதிர்பன் னிருகோடி காணவெளிப் பட்ட
முதிர்விற் பெருந்தீப மொய்ப்ப - வதிர்சிலம்பிற்

ககo. பொன்னங்கொம் பன்னார் புகுந்துநீ ராசனஞ்செய்
தன்னம் பெயர்ந்தாங் கயலொதுங்க - முன்னம்

ககக. விரைமலர்கள் சிந்தி விரைச்சாந்தம் வாரிப்
புரையறப்பெய் வாரும் பொலிய - வுரைசிறந்த

ககஉ. மெய்கண்டான் சந்ததிக்கு மேன்மேல் விளக்கமுறப்
பெய்கண்டா ளைய பெருமானே - வையம்

ககரு. புகழ வருங்குரவர் போரேறே ஞானந்
திகழ வவதரித்த தேவே - யிகழ்வில்

கககச. வரமணியே யெங்கள்பெரு வாழ்வே யருட்சுப்
பிரமணிய தேசிகனே பெட்பி - னுரமணிய

கககரு. முன்னமே செய்தோ முயங்கு தவத்தையினி
யென்ன குறையுடையோ மென்பாருஞ் - சொன்னகதிர்

கககசா. முன்னமிரு ணின்றுலு முற்று முணர்ந்தோய்நின்
முன்னமிரு ணில்லாது முற்றுமென்பார் - நன்னயமார்

ககஎ. சித்தாந்த சைவமன்றிச் சேரமற் றுள்ளவெல்லாம்
பித்தாந்த மேலும் பிறப்பென்பா - ரித்தரணி

ககஅ. பெற்றபே றுண்டோ பெருவானி னீபயில
லுற்றநா ளாதி யுரையென்பார் - கற்ற

ககக. குருமணிநீ யாரையுமாட் கொண்டு புரக்க
வருமணியோ வென்று வகுப்பார் - பெருகொளிசால்

கஉ0. விண்மணியே ஞான விளக்கே யடியேங்கள்
கண்மணியே யென்று கரைதருவா - ரெண்ணுமுழு

கஉக. மாயப் பெருஞ்சாரு வாகன்முத லோருமரு
ளேயப் பொலிவா ரினியென்பார் - தோயும்

கஉஉ. பகுதி யளவே பகரைந் திரவோர்
தகுதிவெண்ணீ றென்றணியச் சார்ந்தார் - மிகுதி

கஉங. யுனியா மெடுத்திங் குரைப்பதெவ னெல்லா
மினிமாறில் சைவமே யென்பார் - நனிபுரியும்

கஉச. வேலையொழிந் தான்பிரமன் வெய்ய நரகிலிடும்
வேலையொழிந் தானியமன் மேன்மேலுஞ் - சாலவருள்

கஉரு. வீசி யனைத்துயிர்க்கு மெய்ச்சுப் பிரமணிய
தேசிகன் செய்யுந் திறத்தென்பார் - மாசி

கஉசா. றிருவா வடுதுறையே திக்கனைத்தும் போற்றப்
பொருவாத தென்று புகல்வா - ரருள்சான்மா

கஉஎ. சில்லா மணியேமற் றிச்சுப் பிரமணியி
தல்லா துரைப்பதுள தாங்கொலென்பார் - வல்லபிரா

கஉஅ. னெற்றிக்க ணீத்தமரு நேய மெவனென்பார்
பற்றிக் கரும்புகொடு பையவந்து - முற்றி

கஉக. யொருவே ளுடற்றுமை யோர்ந்தென்பா ரம்மை
யிருவாள் விழியுமிரு கையாற் - பெருகப்

கங0. புதையாமை தேர்ந்தென்பார் பொங்குதலை மாலை
யதையே ளெழித்தென்பா ராவா - கதைமாலும்

கருக. பங்கயனு மூன்போற் பரனும் பரனுமென்
சங்கையடை யாமையாற் றுனென்பார் - பொங்கு

கருஉ. மதியொழித்த தென்னெனென்பார் மாசிலா ருக்கே
கதியருளற் கென்று கரைவார் - பொதியு

கருங. மிதழிமணங் தோளிலுறு தென்னெனென்பார் செவ்வா
யதுகமழ்த லாலென் றறைவார் - முதுமாறுன்

கருச. றோட்டிவிட்ட தென்னெனென்பா ரோட்டிவிடா னேனுயிர்கள்
வீட்டி லுறலெவ் விதமென்பா - ரீட்டமுறு

கருரு. மாசடையா னென்னும் வழக்கிலேயென் பாரென்று
மாசடையா னென்னல் வழக்கென்பார் - பேசுமொரு

கருசு. தோகையிடப் பாலனெனச் சொல்லாமென் பாரரைசூழ்
தோகையிடப் பாலனெனச் சொல்லுமென்பார் - வாகை

கருஎ. பரசுகைக்கொள் ளாத படியெவனென் பார்நம்
பரசுகைக்கொள் ளும்பரனே யென்பார் - விரசு

கருஅ. மருள்விடங்கண் டங்கழித்த வாறென்னே வென்பா
ரருளமுதங் காணென் றறைவார் - தெருளு

கருகூ. மடிகிலங் தோய்குவதென் னுமென்பார் தோயா
விடினியமன் றண்டநம் மெய்யின் - முடியப்

கசO. படுமே யஃதுணர்ந்து பாரீரோ வென்பா
ரிடுமாறு சென்னிவைம்மி னென்பார் - வடிவரிய

கசக. னென்பதெவ னென்பார்மெய் யேகம ருள்ளிருந்
தன்பி னமுதுசெய்த தாலென்பா - ரின்பமிகு

கசஉ. மிந்தவிதம் யாரு மியம்பித் துதித்துவரப்
பந்த மகற்றும் பவனிவந்தா - னந்தப்

கசங. பொழுதொருநன் னெஞ்சமே போதுவா ரோடு
தொழுதுவரு மாறு துணிந்தே - யெழுதுமெழில்

கசச. வீதியிடைப் போந்தேன் விசயன் குனிசிலையான்
மோதி யிடுவதுள மூன்னுறு - யோதிப்

கசரு. பனிமலர்கள் சாத்தியிரு பங்கயக்கை கூப்பி
முனிவுதவிர்ந் தேத்து முடியுங் - கனியு

கசசு. நெருப்பைக் கரந்திருந்து நீறுகர வாது
விருப்பைச்செய் கின்ற விதத்தா - லொருப்படு

கசஎ. காரணத்தைக் காட்டாது காரியத்தைக் காட்டுமெனத்
தாரணியோ ரோதத் தகுநுதலும் - வார்புனற்பூ

௧௪௮. வொன்றை மலர்த்துபுமற் றொன்றைக் குவித்தல்செயா
தென்று மலர்த்து மிருவிழியு - நன்றுமையாள்

௧௪௯. கூர்தன் மணத்தினொடு கொள்ளா தடியரன்பாஞ்
சார்த மணங்கொ டனிமூக்கும் - போர்தோ

௧௫௦. ரியற்பகையார் பான்மனையை யீதியெமக் கென்ற
தயர்த்ததிரு வாயு மமையப் - பெயர்த்துமிழும்

௧௫௧. வேடரெச்சி லூனடங்க மெல்லுந் திறந்தீர்ந்தும்
வாடலற்றுத் தோன்று மணிநகையுங் - கூடுபுர

௧௫௨. மூன்று மவிய மூகிழ்க்குந் திறமயர்த்துத்
தோன்றுஞ் சிரிப்புந் துணிபமைய - வான்ற

௧௫௩. வொருத்தி பதித்த வுகிர்க்குறிகாட் டாது
திருத்தியக போலமுமான் சீறிப் - பொருத்தும்

௧௫௪. பரவொலி யேலாது பற்று வடியேம்
பரவொலியேற் குஞ்செவியும் பண்டே - விரவுறுமை

௧௫௫. வண்ண வடிவொழித்து வாட்டந் தவிர்த்தருளோர்
வண்ணவடி வோடமரு மாமுகமும் - பண்ணமையும்

௧௫௬. பூணின்ப லொத்தமெனப் போற்றற் கிடங்கொடா
தேணி னமைந்த வெழிற்கழுத்து - நாணின்றி

௧௫௭. யேமாலை யென்ன வெலும்பணியா தெங்கள்வாய்ப்
பாமாலை சூடும் பணைத்தோளுங் - காமருமால்

௧௫௮. கண்காணி னுறைக் கலங்கொள்விர லுண்மைநிலை
யெண்காணக் கொண்ட வெழிற்கரமு - மண்கா

௧௫௯. ஞொருகுறியு மில்லென் றிருகுறி யுற்று
வருதிறங்காட் டாதவகன் மார்பு - மொருவர்

௧௬௦. மழவையரிந் தூட்டவெழும் வன்பசி தோற்று
வழகின் வயிறு மமையப் - பழகதனுந்

௧௬௧. திக்கும் பிணங்கத் திகழுங்கற் றோயாடை
நக்கு விளங்கு நலத்தரையும் - பக்குமலம்

௧௬௨. விண்டொழியக் கூற்றுவன்போல் வெவ்வா ளரக்கன்போற்
றண்டுதல்செய் தோவாத் தளிரடியுங் - கண்டுநனி

௧௬௩. யாசைப்பட் டேனெஞ்சே யந்தோவக் காரணத்தா
லாசைப்பட் டேனெனநா ணுயினேன் - றேசுறமு

௧௬௪. னன்னங்கா ணனைக்கண் டாரா மயக்கம்பூண்
டன்னங்கா ணுதவளே யாயினேன் - முன்னமொரு

௧௬௫. கோலங்கா ணானைக் குறுகியிரு கைதொழுது
கோலங்கா ணாமை குறுகினேன் - சால

௧௬௬. வளையாழி மாற்கீந்த வள்ளலைக் கண்டு
வளையாழி தோற்றுமனை வந்தேன் - விளையுமொரு

௧௬௭. தாய்வெறுக்கப் பட்ட தகையானைக் கண்டடைந்து
தாய்வெறுக்கப் பட்ட தகையானே - ஞாயுந்

௧௬௮. தனியானைக் கண்டு தனியாயி னேனென்
றுனிதீர நெஞ்சே சொலக்கேண் - முனியாமன்

௧௬௯. முன்னு மவனை முயங்கும்வகை நீபுரிவாய்
மன்னுமுனைப் போன்றதுணை வாய்க்குமோ - பன்னுபல

௧௭௦. வேதாக மங்கள் விதித்த விதியனைத்து
மேதாகு நீயியைவ தில்லையெனின் - மீதாரும்

௧௭௧. யோக மிருநான்கு முன்னை வயப்படுத்தற்
காக முயலுவன வல்லவோ - போகமுறு

௧௭௨. தன்மைக்குஞ் செய்யுந் தவத்திற்குங் கற்றுணரு
நன்மைக்குங் கொள்ளுமொரு நட்பிற்கும் - வன்மைக்கு

௧௭௩. மீகைக்கு மோர்த னியல்புணர்ந்து முத்திபுண
ரோகைக்கு நீயே யுறுதுணைகா - ணகையுறு

௧௭௪. மில்லறத்தா ரைத்துறவி லேற்றுவிப்பாய் மெய்த்துறவா
நல்லறத்தா ரைக்கீழ் நணுகுவிப்பாய் - சொல்லு

௧௭௫. மறத்தைமற மாக வமைப்பாய் கொடிய
மறத்தையற மாக்குதற்கும் வல்லாய் - சிறப்பி

௧௭௬. னெடுக்குதலே முத்தி யுனைப்பொறிவா யோட
விடுக்குதலே பந்தவினை மேலு - நடுக்குதலற்

௧௭௭. றுன்னு லுயர்ந்தவரை யுன்னு விழிந்தவரை
யென்னு லளவிடுதற் கேயுமோ - பன்னுறு

௧௭௮. மெம்மேனி யேனு மெடுத்தந்தி வானங்கர்
செம்மேனி யாளிவரச் செய்குவா - யம்மாநற்

௧௭௯. றில்லைவா ழந்தணர்மா தேவ னெடுங்கலவ
வொல்லை யுயர்ந்ததுவு முண்மைநெறி - வல்லபெருந்

௧௮௦. கோளாளர் நீலகண்டர் கோதை யொருத்திபுகல்
சூளா லிளமை துறந்ததுவும் - வாளா

௧௮௧. ரியற்பகையார் தம்மனையை யீயேனென் றோது
மயற்பகையை நீத்துயர்ந்த வாறு - மயர்ப்பி

கஅ௨. விளையான் குடிமாற ரெய்தி யிருளின்
முளைவாரி யன்னமிட்ட மொய்ம்புங் - கிளையோ

கஅ௩. டமர்மெய்ப் பொருளா ரடாதந்தோ தத்தா
நமரென் றிடைவிலக்கு நண்புஞ் - சமர்செய்திறன்

கஅ௪. மிண்ட ரடியாரை மேவாது போகியவன்
றொண்டர்புறம் பென்னச் சொலுந்துணிபு - மண்டர்பிரா

கஅ௫. னேரேயோர் தட்டிலமர் நீதியார் பல்பொருளோ
டாராய வேறி யமர்ந்ததுவும் - பாரா

கஅ௬. லெறிபத்தர் சீறி யிபமாதி மாய்த்து
மறிவற் றுயர்ந்தபெரு மாண்புங் - குறிபெற்ற

கஅ௭. வேனாதி நாத ரிரும்பகைவ னெற்றியினீ
றானமை கண்டிருகி யஞ்சியதும் - வானோர்

கஅ௮. கலைமலிந்த கண்ணப்பர் கண்ணிடந் தப்பு
நிலைமலிந்து பெற்ற நிலையு - முலைவில்

கஅ௯. கலையர்மனை மங்கலப்பொன் கைக்கொடுநெற் கொள்ளார்
மலைவி றுணிபுற்ற மாண்பு - நிலைவளங்கூர்

கசு0. கஞ்சாறர் மாவிரதர் கையின் மகள்கூந்த
லெஞ்சா தரிந்தெடுத் தீந்ததுவும் - வஞ்சவரி

கசுக. வாள்கொண்டு தாயனார் வெண்கழுத்து வேருக்குங்
கோள்கொண்டு நின்ற குணச்செயலுந் - தாள்கொண்ட

கசு௨. வானயர் கொன்றை யணைந்துருகி யஞ்செழுத்துந்
தானய வோசைசெவி சார்த்தியது - மானாத

கசு௩. சீர்த்திபெறு மூன்றே சிறப்பத் தழீஇக்கொண்டு
மூர்த்தியுல காண்ட முறைமையு - மார்த்தி

கசு௪. முருகர்திரு மாலையான் முன்னே னருளுக்
கருகரா யுற்ற வறனும் - பெருகிப்

கசு௫. பரவுருத்தி ரப்பேர்ப் பசுபதியார் நீரில்
விரவுதவஞ் செய்த விதமு - முரவிற்

கசுசு. றிருநாளைப் போவார் திருத்தில்லை மன்றுள்
வருநாட்போய்ச் சேவித்த வாறு - மருவு

கசுஎ. திருக்குறிப்புத் தொண்டர் சிலாவணைத்திற் சென்னி
விருப்பறமோ துற்ற விதமுங் - கருப்பறிக்குந்

கசுஅ. தண்டிசர் தந்தையிரு தாடுணிய வீசமழுக்
கொண்டீசர் சார்பிற் குறுகியது - மண்டர்புகழ்

௧௯௯. நாவரசு நீற்றறையு ணண்ணியிருந் தாலமுண்டு
மேவுகட லீந்திய வித்தகமும் - பாவு

௨௦௦. குலச்சிறையார் யாரையுங்கை கூப்பிப் பணியு
நலச்சிறைசார் புற்றசிவ நண்பும் - வலத்த

௨௦௧. மிழலைக் குறும்பர் வியப்புறுமெண் சித்தி
யழகிற் பயின்ற வடைவுங் - குழகமைந்த

௨௦௨. மாதுருவ நீத்து வருகாரைக் காலம்மை
பேதுருவங் கொண்ட பெருங்கோளுந் - தீதுதீ

௨௦௩. ரப்பூதி யன்ப ரரசரடிக் கன்புசெய்து
செப்பூதி யங்கவர்ந்த சீர்மையுந் - தப்பாத

௨௦௪. நீலநக்கர் தம்மனையை நீத்திட் டரனருள்பெற்
றேலவழைத் தின்புற் றிருந்ததுவுஞ் - சாலநமி

௨௦௫. நந்தி யடிக ணகுகுளத்து நீர்மொண்டு
மூந்தி விளக்கெரித்த மொய்வலியுஞ் - சந்த

௨௦௬. வருண்ஞான சம்பந்த ரங்கமா தாகத்
தெருண்ஞான வாய்மலர்ந்த சீரும் - பொருவில்கலிக்

௨௦௭. காமர் வயிற்றிற் கருவி கொடுகுத்தி
யேமவருள் பெற்ற விருந்திறனும் - பாமருவு

௨௦௮. மூல ருடம்பொழிய மூவா யிரவருடங்
கோலவர சின்கீழ்க் குலாவியதுஞ் - சாலவுயர்

௨௦௯. தண்டி யடிக டவாக்குளத்தி னீர்முழுகி
யண்டி விழிபெற் றமர்திறனுந் - தொண்டினியன்

௨௧௦. மூர்க்கனார் சூது முயன்றூடி மெய்யடியார்
யார்க்கு மூவகை யருண்மாண்பும் - பார்க்குளுயர்

௨௧௧. சோமாசி மாறர்வன் றொண்டர்க்கே யாளாகித்
தாமாறி லின்பந் தழைத்ததுவும் - போமாறென்

௨௧௨. றில்லாத சாக்கியனா ரெண்ணியெண்ணி நாடோறுங்
கல்லா லெறிந்து களித்ததுவும் - வல்ல

௨௧௩. சிறப்புலியா ரன்புடையார்ச் சேர்ந்துபணிந் தேத்தி
மறப்பிலமு தூட்டும் வகையு - மறப்பாண்மை

௨௧௪. விள்ளாச் சிறுத்தொண்டர் வேண்டு மகவரிந்து
தள்ளாக் கறிசமைத்த தன்மையு - மெள்ளா

௨௧௫. வருளிற் கழறிற் றறிவார்மா லூர்ந்து
தெருளிற் கயிலைசென்ற சீரு - மருளில்

உகசு. கணநாத ரன்பிற் கரிசில்பணி யாற்றிக்
கணநாத ராய்ப்பொலிந்த கற்பும் - புணர்பெருமைக்

உகஎ. கூற்றுவனார் மோலியெனக் கொய்மலர்த்தாள் கூற்றினுக்கோர்
கூற்றுவனார் சூட்டக் குலவியதுங் - தேற்றுபுகழ்ச்

உகஅ. சோழர் சடிலமுடி தோன்றக்கண் டாரழலி
னூழுங் குளிர வமுழ்ந்தியதும் - வாழுநர

உகசு. சிங்க முனையரையர் சேரவிகழ்ந் தாற்கிரட்டித்
தங்க மளித்த தவாப்புகழுங் - துங்கவதி

உஉ0. பத்தர் வறுமை பரந்தகா லத்துமொரு
மித்தங் கொருமீன் விடுத்ததுவு - மொத்தகலிக்

உஉக. கம்ப ரதிமை கலந்தடிய ரோடுவர
நம்புமனை கைதடிந்த நன்மையும் - வம்பில்

உஉஉ. கலியர் விளக்கெரிக்குங் காட்சி குறையா
தொலிமிடற்று வாள்பூட் டுரவும் - வலியதிறற்

உஉங. சத்தியா ரீசர்கழல் சார்ந்தார் தமையிகழும்
புத்தியார் நாவரிதல் போற்றியது - மெத்திசையுங்

உஉச. கண்டேத்து மையடிகள் காடவர்கோன் வெண்பாவைக்
கொண்டேத்து மேன்மை குலவியதும் - பண்டுகணம்

உஉரு. புல்லர் விளக்கிட்டுப் போற்றுதற்கு முட்டுவர
நல்ல முடிகொளுத்து நன்மையுஞ் - சொல்லவரு

உஉசு. காரியா ரெங்குங் கவிபாடி யண்ணலருள்
வாரியா ரப்பெற்ற வன்மையு - மூரி

உஉஎ. நெடுமாறர் நீறணிந்து நெல்வேலி வென்று
தடுமா றிலாதிருந்த சார்பும் - விடுமாறில்

உஉஅ. வாயிலார் தூய மனக்கோயிற் பூசித்துத்
தாயிலார் பாதநிழல் சார்ந்ததுவு - மேயும்

உஉசு. முனையடுவார் மாற்றார் முனையடுசெம் பொன்னால்
வினையடுவா ராய விதமும் - வனைகழற்

உஙO. சிங்கர் மனைவி திருமலர்கை தொட்டதென்று
பங்க மறத்தடிந்த பான்மையுங் - துங்க

உஙக. விடங்கழியார் சோரரென வெய்தினார் தம்மைத்
திடங்கழியா தோர்ந்துவிட்ட சீரு - மடங்காச்

உஙஉ. செருத்துணையா ரோர்மன்னர் தேவியார் மூக்கின்
பொருத்துணையா தீர்ந்த புகழுந் - திருத்து

உ௩௩. புகழ்த்துணையா ரென்பார் புனித னருள
நிகழ்த்துமோவ்வோர் காசுபெற்ற நீரு - மிகழ்ச்சிதவிர்

உ௩௪. கோட்புலியார் பாலுண் குழவுங்கூ டாதென்று
வாட்புலியார்க் கீந்த வளத்திறனும் - வேட்குமொரு

உ௩௫. பூசலார் மிக்க பொருடேடி யாலயஞ்செய்
தேசலா ராதிருந்த வின்றிறனு - மாசகலு

உ௩௬. சீற்றின் பெருமை நினைமங்கை யர்க்கரசி
போற்றி யமைந்த புகழ்ப்பேறுஞ் - சாற்றரிய

உ௩௭. நேசனு ரன்பர்பா னேசனுர் கோவணந்தந்
தீசனுர் பேரருண்மிக் கெய்தியதும் - பாசமகல்

உ௩௮. செங்கட்சோ ழப்பெருமான் செம்பொற் றளிபலசெய்
தங்கட்ட ராவன் பமைந்ததுவுந் - துங்கத்

உ௩௯. திருநீல கண்டர் செழும்பலகை யேற
வொருநீல கண்ட ருவப்பும் - பொருவில்

உ௪0. சடையரிசை ஞானியார் தாவாப் பெரும்பே
றடைய வமைந்த வருளும் - விடையுடையா

உ௪௧. ரானைமேற் றுங்கி யருணுவ லூரர்வெள்ளைக்
கோனை மதமாமேற் கொண்டதுவும் - வீணை

உ௪௨. யுறுநெஞ்சே மற்றனைத்து முன்னுலே யன்றே
மறுநின்சீர் யாவர் வகுப்பார் - வெறுதவருட்

உ௪௩. டாயே யனையாய் தவறுறுமோ நங்கரும
நீயேது தாக நிகழுங்கான் - மாயமன்றே

உ௪௪. முன்ன முயன்று முடிகா ணரிதாய
வன்ன முகமுன் னணையுமோ - முன்னமொரு

உ௪௫. பச்சை மயிலையொரு பாலடக்கி பாங்கரின்றோர்
பச்சைமயில் சென்றுற் பயன்படுமோ - வச்சை

உ௪௬. மதனைச் சுமத்தலினுல் வாகையிலாக் கிள்ளை
யிதனைச் செயற்குவலி யாதே - சுதமகல

உ௪௭. வன்றுசடைக் காட்டி லடங்கிக் கிடக்குமுகி
லின்று புரிவ தெதுகண்டாய் - துன்றுபொருட்

உ௪௮. பாவை யடியர் பகரவேற் குஞ்செவிகள்
பூவை குழறுமொழி போற்றுமோ - பாவையெனுந்

உ௪௯. தோழி யுரிமை துணிந்தனுப்பி னுற்றிருமுன்
வாழி யடைய வலியளோ - பாழிமதன்

உருO. சின்னமா யெங்குந் திரிந்துகூ வுங்குயிலம்
முன்னவன்பாற் சேறன் முடியாதே - மன்னு

உருக. மரவா பரணனென்பா ரம்மொழிகேட் டங்கு
விரவாதே தென்றல் விடுத்தா - லுரவாரு

உருஉ. முன்னைப்போல் வேறுதுணை யுண்டோ குரவர்பிரான்
றன்னைப்போல் வேறொருவர் தாமுளரோ - வன்னை

உருங. யனைய குரவர்பிரா னன்ற மரபு
நினைய வகுத்துரைப்ப னீகேள் - புனையவரு

உருச. காமர் கயிலையிற்சீ கண்ட வுருத்திரன்பா
லேமவருள் பெற்றநந்தி யெம்பெருமான் - றேமில்

உருரு. வழியே வருசனற்கு மார முனிவர்
பழியேது மில்லாத பண்பிற் - கொழியருள்சால்

உருசு. சத்திய ஞான தரிசனிகள் யாவோருந்
துத்தியஞ் செய்பரஞ் சோதியார் - நித்தியமார்

உருஎ. மெய்கண்ட தேவர் விளங்குமரு ணந்தியார்
பொய்கண்ட யாரும் புணரருஞ்சீர் - மொய்கடந்

உருஅ. தைவாழ் மறைஞான சம்பந்தர் தாளின்மதி
கைவா ழுமாபதியார் காட்சிமிகு - செய்ய

உருகூ. வருணமச்சி வாய ரமைசித்த ராய
கருளில் சிவப்பிர காசர் - தெருள்செய்

உசுO. குருநமச்சி வாயர் குலவுமறை ஞானர்
திருவம் பலவாண தேவர் - மருவு

உசுக. முருத்திர கோடியா ரொப்பில்வே லப்பர்
திருத்தி யினிதருளச் செய்து - பொருத்து

உசுஉ. மிருகுமர சாமிகண்மா சில்லா மணியா
ரருமை யிராமலிங்க ரன்பார் - பெருமையிரு

உசுங. வேலப்ப ரென்று மிளிர்திருச்சிற் றம்பலவர்
பாலக்க ணில்லம் பலவாணர் - சால

உசுச. வருள்சுப் பிரமணிய ரம்பல வாணர்
தெருள்சுப் பிரமணிய தேவர் - பொருள்சான்

உசுரு. மரபு நிலையிதுவால் வார்த்தைநீ பேசப்
பரவு சமயம் பகர்வேன் - விரவுநெஞ்சே

உசுசு. பூதநான் கின்பம் புரிகுழலார் போகமெனுங்
கோதவுல காயதரைக் கூடாதே - யேதமிகு

௨௬௭. கந்தமைந்துங் கெட்டாற் கனமுத்தி யென்றுழலும்
பந்தப் பவுத்தர்முகம் பாராதே - முந்தத்

௨௬௮. தலைபறித்துப் பாயுடுத்தித் தாந்தவமே பேசிக்
கொலைசெ யமணரைக்கூ டாதே - யலைபுரியுங்

௨௬௯. கள்ளைக் குடித்துக் களித்துழலும் வாமமதக்
கொள்ளைச் செருக்கருரை கொள்ளாதே - தள்ளாக்

௨௭0. கருமமன்றி வேறு கருத்தனிலை யென்று
தெருமருவார் கூட்டஞ்சே ராதே - பொருவினெஞ்சே

௨௭௧. நின்னையணு வென்று நியாயம் புகன்றுழல்வான்
றன்னை யொருஞான்றுஞ் சாராதே - சொன்ன

௨௭௨. பகவனுக் குண்டு பரிணம மென்னுந்
தகவிலெந்தி ராவினர்ச்சா ராதே - யிகவரிய

௨௭௩. முத்திநிலை யான்மா முதல்வனோ டொக்குமெனும்
புத்தி படைத்தவர்பாற் போகாதே - மெத்துமொளிப்

௨௭௪. பாலவிழி யாற்குப் பரிணமஞ் சொற்றுழலு
மாலமைந்தார் கூட்ட மருவாதே - ஞாலமிசைத்

௨௭௫. தாம்பிரம மாகாமை தஞ்செயலி னுணரார்
நாம்பிரம மென்பாரை நாடாதே - யோம்பு

௨௭௬. திருவா வடுதுறையைச் சேர்ந்து வளங்க
ளொருவாத் திருவீதி யுற்றுப் - பொருவாத

௨௭௭. தென்முகப்பின் வாயில்வழிச் சென்றுகோலு மண்டபத்தின்
பொன்முகப்பி னுள்ளே புகலுற்று - நன்முகத்திற்

௨௭௮. சாத்திரங்க ளோதித் தனியமர்வார் சிந்திப்பா
ரேத்திரங்கும் வண்ண மெடுத்திசைப்பார் - பாத்துச்

௨௭௯. சடைகாய வைத்துத் தனியமர்வா ரன்னோர்
புடையாரை யும்வணங்கிப் போற்றி - விடையா

௨௮0. நலமா ரதிகார நாடுதிருச் சிற்றம்
பலமா முனியைப் பணிந்து - பலமியாவுஞ்

௨௮௧. சேர்தரவுள் ளாற்போய்த் திருமாளி கைத்தேவர்
வார்கழல் போற்றி வணங்கியே - யோருங்

௨௮௨. குரவர்பிரான் மூல குருநமச்சி வாயன்
பரவுகழல் போற்றிப் பணிந்து - விரவு

௨௮௩. மிரண்டா மொடுக்க மெனப்புகல்பொற் கோயி
லரண்டா னெனவமரு வானைத் - திரண்ட

உஅச. கலைஞான வாழ்வைக் கருதுவார் பேற்றைத்
தொலைபாப் புலவர்குழாஞ் சூழ - வுலையா

உஅரு. வினாவிடை பேசி வியப்புற் றமரு
மனாதியுரு வாய வமுதை - யினாதகுண

உஅசு. மெல்லாரு நீங்க வினிதுபோ தித்தமரு
நல்லா தரவு நயப்பானைச் - சொல்லு

உஅஎ. மொருநமச்சி வாயனென வோதப் பொலிந்து
வருநமச்சி வாயனடி வாழ்த்திப் - பொருவாக்

உஅஅ. குருசாமி கோயில்வலங் கொண்டுபடி யேறிக்
குருசாமி பூசைமுனங் கூடி - யுருகாமெய்

உஅகூ. யன்பின் வணங்கி யடியா ரமுதுகொள
வன்பி னமர்கோயில் வந்தித்தே - யின்ப

உகூo. விதமார் முதலொடுக்க மென்றிசைபொற் கோயிற்
புதவொர்பான் மெல்லப் புகுந்து - கதமோவி

உகூக. யாங்குநிற்பார் தம்மை யடுத்துச் சமயம்வினாய்ப்
பாங்குபெற வுள்ளாற் பயப்புகுந்து - தேங்குதிரு

உகூஉ. முன்னஞ்சே வித்து முனிவர்முத லோர்போற்ற
நன்னர்நீ றள்ளியள்ளி நல்கியம - ரன்ன

உகூ௩. பொழுதுரையா தேபல் புலவர்கவி பாடும்
பொழுது முரையாதே போற்றி - யெழுதுமடல்

உகூச. வாசித்து நிற்பாரை மானிக்கு மப்பொழுது
நேசிக்குந் தன்மை நிறைந்தாராய்ப் - பூசிக்குந்

உகூரு. தொண்ட ருவக்கச் சுருதிப் பொருள்புகறல்
கொண்ட சமயத்துங் கூறாதே - மண்டவரு

உகூசு. மன்னர் முதலோர் வணங்க வவர்க்குவப்பு
நன்னரியற் றும்பொழுது நாடாதே - சொன்ன

உகூஎ. மறையோர் பலரிரக்கும் வார்த்தைசெவி யேற்றுக்
குறைதவிர்க்கும் போதினுங்கூ றாதே - மறைசொல்

உகூஅ. சிதம்பரமுன் னாய திருக்கோயிற் கெல்லாம்
பதம்பரவு நித்தியமுற் பண்ணி - னிதம்பரவ

உகூகூ. நன்றுவிசா ரித்து நயவாக் குறைதவிர்த்துத்
துன்று பொழுதுமிதைச் சொல்லாதே - சென்று

௩oo. பணிசிறா ரைக்கற்கும் பாடம் வினாவத்
துணியுங்கா லத்துஞ்சொல் லாதே - வணிதருமா

௩0௧. னந்தக் களிப்பா னகச்சிலர்வந் தேத்தெடுக்கு
மந்தப் பொழுது மறையாதே - சந்த

௩0௨. வுவளகத்து மேவு மொருசமய நோக்கித்
திவளநெஞ்சே நீகூடச் சென்று - தவளப்

௩0௩. பொடியணியு மேனியெங்கள் பூரணன்பொற் றாளிற்
படிமிசை வீழ்ந்து பணிந்து - நெடியகுணக்

௩0௪. குன்றேமெய்ஞ் ஞானக் கொழுந்தே யருட்கடலே
நன்றே யுயிர்க்கருளு நாயகமே - யன்றே

௩0௫. யடுத்தமல பந்த மகற்றவுருக் கொண்டு
மடுத்த பெருங்கருணை வாழ்வே - படுத்தமைந்த

௩0௬. மைம்மாறு சிந்தை வயங்கு மடியார்பாற்
கைம்மாறு வேண்டாத கற்பகமே - பொய்ம்மாறெம்

௩0௭. பேறேயா னந்தப் பெருக்கேஞா னக்கருப்பஞ்
சாறேமெய் யன்பர் தவப்பயனே - நாறுமருட்

௩0௮. சிந்தா மணியே செழுங்காம தேனுவே
சந்தாபந் தீர்க்குந் தனிச்சுடரே - நந்தா

௩0௯. வரமணியே கோமுத்தி வாழ்வே யருட்சுப்
பிரமணிய தேசிகப்பெம் மானே - பரவு

௩௧0. குருநமச்சி வாயவென்று கொண்டாடி யேத்திப்
பெருகருளுண் டாகநனி பேசி - யொருவரிய

௩௧௧. பாலே யுணர்த்திப் பசியநறுஞ் செங்கழுநீர்
மாலே கொடுவிரைந்து வா.

ஸ்ரீ சுப்பிரமணியதேசிகர் நெஞ்சுவிடுதூது முற்றிற்று.

---

# தனிப்பாடல்கள்.



## நேரிசைவெண்பா.

3324. கண்ணன் மதனைக் கடிந்ததற்கேற் பப்புரப்பாற்
பெண்ணொ ருருச்சுப் பிரமணிய - வண்ணால்
திருவா வடுதுறையாய் சிற்றடியே னின்ப
மருவா வடுமாற வை. (க)

## விருத்தம்.

3325. மாமேவு புகழ்த்திருவா வடுதுறைச்சுப் பிரமணிய வள்ள லாய, தூமேவு குரவன்பேர் சொற்றவுட னென்பிறப்புத் தொலைந்த தம்மா, பாமேவு மிதுகண்டும் பிறப்பொழிப்பா னிவனென்று பலருஞ் சொல்வார், தேமேவு நலந்தெரியென் வாயினையே புகழாத செய்கை யென்னே. (உ)

3326. உரவுபொலி மறைமுடியாஞ் சிவக்கொழுந்தைப் பரானந் தந் துவாவை நாளுங், கரவுதவி ரன்பருளத் தகலாம லமுதூற்றுங் கருணை வாழ்வைப், புரவுமலி மெய்ஞ்ஞான வாரிதியைத் துறவரசைப் பொருவி லாத, பரவுபுகழ்த் துறைசையிற்சுப் பிரமணிய குரு மணியைப் பரவி வாழ்வாம். (ங)

3327. செல்லார்க்கும் பெருமுழக்க மண்முழக்க மெனமேற் போய்த் திகழ்மா டத்தாற், சொல்லார்க்குங் கழனிகளாற் றொலையாத வளங்காட்டுந் துறைசை மேவிக்,கல்லார்க்கு மல்லார்க்கும் வல்லார்க் கும் வல்லார்க்குங் கணக்கி லாமற், றெல்லார்க்கு மெய்ப்பில்லைவைப் பாஞ் சுப்பிரம ணியகுரவ னிருதாள் போற்றி. (ச)

3328. தேடுநயி லாடபரம் பரைத்துறைசை மேயநமச் சிவாயன் றன்னைக், கூடுதன்முன் னுள்ளபதி னெல்வருமுற் றோன்றலெனக் கொண்டா ரவ்வா, றூடுதவிர் தரக்கொண்டும் பிற்றோன்ற லெனவுங் கொண் டுவக்குங் கோமான், நீடுபெரும் புகழுமைச்சுப் பிரமணிய குரு மணியை நினைந்து வாழ்வாம். (ரு)

3329. ஒப்புயர்வில் லவன்சிவன்மூன் றும்முடைமை யாலிர ண்டு மொன்று மேற்றார், தப்பறத்தாழ்ந் தவரெனறேர்ந் தனந்திருவா வடுதுறைநற் றலத்துள் வார்தம், வைப்பனைய சுப்பிரம ணியகுர வன் றன்பெயரை வகித்து ளாரை, யெப்படியும் விலக்கலின்மற் றிவன்மூன்று மிலனென்றே யியம்பு வோமே. (சு)

3330. திருமணியை நிறத்தமைத்த நீள்மணிமெய்ம் மால்பிர மன் றேடிக் காணு, வருமணியென் னையும்பொருளா வாண்ட சிந்தா மணியன்ப ரகத்தே மேய, வொருமணியம் பலவாண சிரோமணிகண் மணியடிமை யுவந்தார் கண்ணுட்,கருமணிவண் டுறைசையிற்சுப் பிர மணிய குருமணியைக் கருத்துள் வைப்பாம். (எ)

## வஞ்சித்துறை.

3331. ஒப்பருந் துறைசைச், சுப்பிர மணிய
அற்புத குரவன், நற்பதந் துணையே. (அ)



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பட்டீச்சரப்புராணம்.*

—❀❀❀—

## கடவுள் வாழ்த்து.

### விநாயகர்.

3332. பூமேவு குழைச்செவிதம் புடையினெழு கடாங்கவரும் பொருட்டு மேன்மேற், றூமேவு வண்டரெலாந் துரப்பவகத் தொரு கருவி தகக்கொண் டாங்கு,மாமேவு பொன்பொதிந்த காற்கவரி தூங் கியொளி வயங்க மேவுங், காமேவு மைந்தடக்கை யானைமுகப் பெருமானைக் கருத்துள் வைப்பாம். (௧)

### ஆணைவிநாயகர்.

3333. சீர்பூத்த பலபுவனத் தெவ்வுயிரு முளிவறத்தஞ் சிரமேற் கோட, லார்பூத்த நமதாணை யெனறெரிப்ப வாணைவிநா யகரென் றோர்பேர்,நீர்பூத்த குணத்தமைந்து வன்னியடிப் பொடிமூடு நெருப்பு மான,வேர்பூத்த செம்மேனி வெண்ணீற்றோ டமர்பவர்தா ளிறைஞ்சி வாழ்வாம். (௨)

### மதவாரணப்பிள்ளையார்.

3334. நாமதவா ரணங்குறித்த படிகொடுதீ வளர்த்துமென நவி லுந் தக்க,நாமதவா ரணங்குசிவ மிகப்பினென வுங்கொள்ளா னண்ணு மாற்றான், ஞூமதவா ரணங்குமிழுந் தடப்பட்டீச் சரம்புகுந்து நலி யச் செய்தா, நாமதவா ரணங்குளிர்பூந் தாளருள வின்பால நண்ணி னேமால். (௩)

### பட்டீசர்.

3335. மாமேவு பண்ணவரு மெண்ணவரு மகவானு மறைநூ லாய
பாமேவு நாவலனுங் காவலனு முனிவரரும் பகர்மற் றோருங்
காமேவு பன்மலரு மென்மலரும் படியிறைப்பக் காட்சி நல்கு
தாமேவு திருவுருவோ ரெட்டீசர் பட்டீசர் சரணஞ் சார்வாம்.

3336. வெளியுறலுட் புகலின்றிக் களத்துநடு வமர்தருவெவ் விடமு நாளு, மளிகிளர்பெண் ணுருவமுமா ணுருவமுமா கியவுருவு மருண்மு கத்தே, யொளிர்விழிக ளொடுநுதல்சான் முரண்விழியுந் தன்பெருமை யுணர்த்த வோவாத், தெளிகிளர்பட் டீசம்வளர் பட்டி லிங்கப் பெருமான்றாள் சேர்ந்து வாழ்வாம். (௫)

---

* பிள்ளையவர்கள் இயற்றத்தொடங்கிய நூல்களிற்சில அபூர்த்தியாகவே நின்றுவிட்டனவென்பது பலர்க்கும் தெரிந்ததே. அவற்றுள், இடைத்தவை பதிப்பிக்கப்படுகின்றன.

ஞானம்பிகை.

3337. நயனநுதல் பன்னிறத்த வயனரியா தியர்பலரு நயக்கு மாறு, வியனமைய வேற்றிடவும் வேறுநிற முருவனையான் மேனி யேபோற், பயனமையும் வெண்மகளுஞ் செம்மகளுங் கலக்கவுந்தம் பண்பு மாறாக், கயன்மருள்கட் பல்வளைக்கைக் காமருஞா னம்பிகை தாள் கருத்துள் வைப்பாம். (சு)

3338. வண்ணிறங்கொள் பன்மலர்மா மகண்முதலோ ரிறைத் திடலால் வதிப ராக, மொண்ணிறங்கொ ளன்பர்மன மாயவனுக் குழாஞ்செறிவ துணர்த்துங் காலுந், தண்ணிறங்கொள் பல்லறமு மடைந்துகோ லுபுசெறியுந் தகையு ணர்த்தும், வெண்ணிறங்கொள் பல்வளைக்கை யும்பெறுஞா னம்பிகைதாண் மேவி வாழ்வாம். (எ)

சபாபதி.

3339. வந்துதரி சித்திடுவார் மலமாசு மண்ணவெழு மாண்பு போலச்,சிந்துபல சீகரமந் தாகினிவெவ் வினைக்காடு தீத்த லேபோன், முந்துசுடர் விட்டெழுசெந் தழலின்மே னோக்கவொளிர் மூவா மன்றி னந்துதிரு வருள்பெருக நடநவிலும் பெருமானை நயந்து வாழ்வாம்.()

சிவகாமசுந்தரியம்மை.

3340. தொண்டுகாட் டிடுதிறத்தா லொவ்வொருவ ரனுபவிக் கத் துணிவார் பூமே, லண்டுகாட் டிடுபிரம ஞதியர்மற் றென்செய்வா ரவர்போ லாது, பண்டுகாட் டிடுமென்றுட் பரமர்புரி திருநடமாம் பர மா னந்தங், கண்டுகாட் டிடுகருணைச் சிவகாம சுந்தரிதாள் கருத்துள் வைப்பாம். (கூ)

தக்ஷிணமூர்த்தி.

3341. இருவரா லியற்றிரண்டு மெய்துருவ மெய்தாம லெந்த ஞான்று, மொருவரா லளப்பருந்தன் னடிமருவி யின்பநிலை யுவப்ப யாங்க, ளிருவரா லியற்றிரண்டு மெய்தாத திருவுருவ மெய்தி னாளு, மொருவரா லளப்பருமா லடிமருவும் பெருமானை யுளங்கொள் வாமால். (கo)

வைரவக்கடவுள்.

3342. அரிவிதிசே வித்திடுகாற் கையுளதென் னெனவிதியை யரிவி னுவ, விரிதருபுண் டரிகமென வதனத்தென் னெனவ ரியை விதிவி னுவப், பிரியமது வெனநகஞ்சூற் றலைச்சிவப்பென் சொற்றிரெனப் பிறர்வி னுவப்,பரியசமழ்ப் பவர்கொளச்சூ லமுங்கபா லமுந்தரித்தோன் பாதம் போற்றி. (கக)

அநுஞ்ஞைவிநாயகர்.

3343. சடையிலிளம் பிறைபொலிய வதன்சாயை யெனமுகத் தோர் தவளக் கோடு, மிடையவொழுக் கமுதெனவெண் ணூலிலங்க வீசியவெண் ணிலவு மான, வடையமைவெண் படமிளிர வவ்வொ ளியை யஞ்சியிரு ளடிவீழ்ந் தென்ன, விடைதலிலுந் துருவமைய வளர னுஞை மழகளிற்றை யெண்ணி வாழ்வாம். (கஉ)

முருகக்கடவுள்.

3344. இறவிதபுத் தலையுணர்த்த யமனைவருத் தியதந்தை யெண்ணந் தேர்ந்து, பிறவிதபுத் தலையுணர்த்த வயனைவருத் துபுமறைகள் பிதாவுஞ் சேயு, மறவிதபுத் துணர்மினாக நியரெனறேற் றியகருணை வள்ள லன்ப, ருறவிபசு மயிலுகைக்குங் குமாரநா யகன்மலர்த்தா ளுள்ளி வாழ்வாம். (௧௩)

திருநந்திதேவர். வேறு.

3345. இடையினொற் றொழியச் சூட லெப்பெய ரிறைக்கப் பேரே
யடைதரு தனக்கு மாக்கி யவன்பணி முடியிற் றாங்கிக்
கடையரேம் பணியு மங்கோ கனகநே ரடியிற் றாங்கு [லோர்.
முடையனெங் குரவர் முன்னோ னருளடைந் துய்வார் மே

அகத்தியமுனிவர்.

3346. வரையரத் தழுந்த வாழி வற்றமால் சிவமாக் காணப்
புரையுதள் பதும மாகப் பொலியொரு கரத்தா லாற்றிக்
கரைநகை முதலாற் றெவ்வைக் கடப்பவ ளிலுஞ்சீர் வாய்ந்து
தரைபுகழ் பொதியில் வாழ்செந் தமிழ்முனிக் கடிமை செய்வாம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்.

3347. இறையரு ளதனு லூர்தி யெய்தியு நீழல் செய்யு
முறையதொன் றெய்தி லேமென் றயனொடு முகுந்த னுணக்
குறைவிலாச் சிவிகை யோடு பந்தருங் குலவப் பெற்ற
நிறைவுசால் காழி ஞானப் பிள்ளைதா ணினைந்து வாழ்வாம். ()

திருநாவுக்கரசுநாயனூர்.

3348. விடமெழ வெறுப்பு வைத்தா ரமுதெழ விருப்பஞ் செய்த
கடவுள ரயன்மா லுணக் கையரப் பூதி யிட்ட
வடர்விட மமுத மள்ளி யள்ளியுண் டளவா வின்பத்
தொடர்பமைந் தொளிர்வா கீசர் துணையடி போற்றி செய்வாம்.

சுந்தரமூர்த்திநாயனூர்.

3349. மறையவ னெனும்பேர் பெற்றேன் மன்னவ னெனும் பேர் பெற்றே, னிறையவன் புகழ்யா வர்க்குண் டென்றயன் முகுந்த னுண, முறைமறை மறையோ னென்று மொழிவதற் கேற்பத் தூது, கறைமிடற் றவனைப் போக்கு நம்பிதாள் கருதி வாழ்வாம். (௧௮)

திருவாதவூரடிகள்.

3350. கரைசெயு மசுத்த மாயா காரிய மணியொன் றேற்று [லா
வரைகொடன் மார்பில் வைத்த மால்சமழ்ப் புறவெண் ணில்
வுரையெனுஞ் சுத்த மாயா காரிய மணிக ளோவாப்
பரையிடப் பெருமா னுக்குச் சூட்டினூர் பாதம் போற்றி. ()

சண்டேசநாயனூர்.

3351. புரைதபு மன்பி னோர்பாற் புறமகங் கரையும் பெம்மான்
விரைகம ழாத்தி நீழற் புறங்கரை யாமன் மேவி [ட்டித்
வரையென விருப்ப வான்பால் வரையறு குடங்கொண் டா
தரைபுக ழின்பந் துய்த்த மழவுதாள் சார்ந்து வாழ்வாம். ()

அறுபத்துமூவர்.

3352. மறைமுதற் கலைக டேரு மாதேவை யேவல் கொண்ட
தறைபுகழ் நாவ லூரர் தனித்தனி யடியேன் யானென்
றறைபெருந் தவத்த ராய வறுபத்து மூவர்க் கெண்ணில்
குறையுடை யானு மவ்வா றுரைப்பது குணமாங் கொல்லோ.

பஞ்சாக்கரதேசிகர்.

3353. புகழிக மூபய மாய பொழிற்றலை வாழ்க்கை வேண்டே
மிகழ்மல மாதி தன்னே ரெய்தின ரெய்தா ராக
வகழ்மதில் தனிகு லாய வாவடு துறைக்கண் மேவித்
திகழ்குரு நமச்சி வாயன் சேவடி வாழ்க்கை யோமே. (உஉ)

அம்பலவாணதேசிகர்.

3354. நம்பல மாக வைகு ஞானக்கோ முத்தி மேய
வம்பல வாண தேவ னருளிய பிராசா தத்தால்
வம்பல சாத மெல்லா மாற்றியா னந்த சாத
மும்பல மாகப்பெற்றே முதற்குமேற் பெறுவ தென்னே. ()

சுப்பிரமணியதேசிகர். வேறு.

3355. நன்மைதிகழ் தென்றிருவா வடுதுறைச்சுப் பிரமணிய நமச்சி வாயன், மென்மைமல ரடிப்பணிசெய் விதம்வந்த விப்பிறப்பை வியந்தேன் சற்றும், புன்மையிலிப் பவங்கோடா கோடிவரு மேனு முளம் புழுங்கே னந்தோ, வென்மையவன் பிறவான்மற் றெனையுமவ் வா றியற்றுவன்யா னென்செய் கேனே. (உச)

திருத்தொண்டுபுரிவோர்.

3356. சத்திவனப் பட்டீசத் தனிப்பிராற் கியற்றுபணி தலைக் கொண் டாருண், முத்திவளர் திருப்பணியே முதலலகுப் பணியியற்ற முயல்வா ரீருச், சித்திகொள்யா வருந்திருநீ றணிந்துருத்தி ராக்கமணி திகழப் பூண்ட, புத்திகொள்யா வருங்குழுமி யிருக்கவிடங் கொடுத்தி டுமென் புந்தி தானே. (உரு)

ஆக்குவித்தோர்.

3357. மாமேவு சோணாட்டு வேளாளர் குலதிலகன் வல்லோர் செந்நாப்
பாமேவு சத்திமுற்ற வாழ்க்கைநமச் சிவாயமுகில் பயந்த மைந்தன்
கரமேவு கொடைத்தடக்கைச் சைவசிகா மணிகல்விக் கடலா யுள்ளான்
றாமேவு நயவதுல வாறுமுக பூபால சுகுண வள்ளல். (க)

வேறு.

3358. நறைகமழ் கொன்றை மாலை நாயகப் பெருமான் மேய
மறைபுகழ் திருப்பட் டீச மான்மிய மொழிபெ யர்த்து
நிறைசுவைத் தமிழாற் பாடி நேயத்திற் கொடுத்தி யென்று
குறையிரந் தினிது கேட்பப் பாடுதல் குறிக்கொண் டனால்.

## அவையடக்கம்.

3359. மறைபல புகழுஞ் சத்தி வனத்ததி விருப்பம் வைத்த
விறையவ னனைய சத்தி சொரூபமா மென்வாய்ச் சொல்லுங்
குறையற விரும்பும் வாயின் குற்றமுட் குறியா னின
நிறைபர தவர்கு லப்பெண் ணேயத்தின் மணந்த தோர்ந்தே.

3360. குடம்படு செருத்த லான்செய் பூசையைக் குறியாக் கொண்டோன், மடம்படு சுணங்கன் செய்யும் பூசையு மதித்த வா ற்று, விடம்படு பெரியோர் செய்த வின்சுவைப் பாட்டொ டுஞ்சங், கடம்படு சிறியேன் செய்யும் பாடலுங் கைக்கொள் வானல். (உ)

3361. தொகையிலக் கணஞ்சி தைந்த தொழின்முத லாமோர் மூன்றுந், தொகையிலக் கணங்கே டெய்தாப் பலவொடுந் தொகுத் துக் கொள்வர், வகையிலக் கணமைந் தேலா வறுங்கவி யெனுமான் றோரை, வகையிலக் கணமுஞ் சான்ற கவியொடும் வயங்கக் கொள்வரர். (௩)

3362. வில்லெறி புருவ வாட்கண் விளங்கிழை பகிர்ந்த மேனி, யல்லெறி கண்டத் தெண்டோ ளண்ணலார் பலரச் சிக்கு, மெல் லெறி மலர்க ளோடு மினியதென் றெருவர் வீசுங், கல்லெறி யேற்ற தென்சொற் காமுறல் கருதி யன்றே. (௪)

3363. அருளமை யொருபா கத்த னையன்மற் றனைய பாகத், தெருளமை செவிவெய் தாமென் செய்யுளைக் கவர்தற் கன்றே, மரு ளமை மான்மு மூக்க நாடொறு மருவ வேற்கும், பொருளமை யீது கண்டும் பாடாது போவேன் கொல்லோ. (ரு)

3364. பொதிதுகிற் குற்ற மோர்ந்து மணியினைப் புறத்துப் போக்கார், மதியினிற் சிறந்து ளோரென் வாய்மொழிக் குற்ற மோர் ந்து, நிதிசெய்மா லயனுந் தேருச் சிவபிரான் சரித மாய, விதியினை யெந்த ஞான்றும் விலக்கல்செய் யாது கொள்வார், (சு)

3365. மால்கிளர் மனத்தா ரெம்மான் மான்மியக் குணங்கொ ளாமற், சால்பிலா வேறு வேறு குற்றமுட் டதையக் கொண்டே, யோல்படக் குரைப்பாரந்த மூர்க்கருக் குரைப்பா ரியாரே, பால்கொ லோ விரத்தங் கொல்லோ முலையுண்ணி பருக லோர்வீர். (எ)

## சிறப்புப்பாயிரம்.

3366. திருவுலகர் மகிழ்தரக்கொ ளாறுமுக பூபாலன் சிறப் பிற் கேட்பப், பொருவுதவிர் பட்டீச மான்மியத்தைச் செந்தமிழாற் புனைதல் செய்தான், தருவுமணி யும்பொரவென் போல்வாருக் கருள் சுரக்குந் தகையான் மிக்கான், மருவுபுகழ்ச் சிரகிரிவாழ் மீனுட்சி சுந் தரநா வலவ ரேறே. (அ)

# திருநாட்டுப்படலம்.



3367. தம்மைநேர் பட்டி லிங்கர் தண்ணருட் பல்வ ளோக்கை, யம்மையோ டினிது மேவ வமைந்தபட் டீச மாதி, வெம்மைதீர் தல மெண் ணில்ல தன்னக மிதப்பக் கொண்டுட், செம்மைசேர் சோழ நாட்டின் வளஞ்சில செப்ப லுற்றாம். (க)

3368. சழக்கன்று கழுவாய் வேறே தகச்செய லாகின் செய்கை, வழக்கன்று தவிர்தி யென்னு மந்திர ருரைகொள் ளாதான், குழக் கன்று நிமித்தந் தன்சீர்க் குலத்தரு மருந்தா யுள்ள, மழக்கன்று தபத் தே ரூர்ந்த மனுவளித் ததுசோ ணாடு. (உ)

3369. ம...... னிளவ லாக வானக முழுதுங் காப்போ, ஞயவ னனைய வாழ்வி லதிகமா யிரம்பங் கென்று, பாயவன் புகழ்சா றன் பாற் பயில்குலக் கடைஞ ரோடு, மேயவ ளுகச் செல்வ விளக்கமிக் கதுசோ ணாடு. (ங)



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவான்குளப்புராணம்.



## கடவுள்வாழ்த்து.



### சித்திவிநாயகர்.

3370. சீர்பூத்த நறியமணை முகமுன்வழி படுமென்பர் தேவ ராவா, ரேர்பூத்த முகத்துநடுக் காட்டடல்போ லாதுமுகத் தியையு மோர்கை, வார்பூத்த நுனிக்காட்டி மகிழவுறீஇ யவர்வேண்டும் வரங்க ணல்கும், பார்பூத்த சித்திமத குஞ்சரப்பொற் செஞ்சரணம் பணிந்து வாழ்வாம்.

### குடவாயில்விநாயகர்.

3371. புனைமவுலி முடிமணியாய் மதாணிநடுப் பதிமணியாய்ப் பொருந ரேத்த, வனைகழலொண் மணியாய்விண் மணிபொலிய வுயர்ந்துகுட வாரிவேலை, வினையரக்கற் பந்தாடி வியன்குடநீர்க் கரையுயர்ந்து மேவி யன்பர், முனைபடரைப் பந்தாடுங் குடவாயின் மழகளிற் றை முன்னி வாழ்வாம். (உ)

### தேரடிவிநாயகர்.

3372. ஆதனத்தைச் சூழவரி பலவமர்ந்த வெனினுமிக லடுமோ ரியானை,மாதனநட் புருமெனிலச் சுருவெனவச் சுற்றதனை வயக்கப் பூதி, சாதனர்கை தொழுமிரதஞ் சார்ந்தமர்ந்தாற் போலமர்ந்து தாழ்வார் யார்க்குஞ், சேதனநன் கருள்புரியுந் தேரடிமால் களிற்றினடி சிந்தித் துய்வாம். (ங)

### அரதீர்த்ததலேசர்.

3373. அகரவுயி ரெனச்சதசத் தெங்குநிறைந் திந்திரனே யயனே மாலே, பகரவரு முனிவரரே யேனையரே போற்றிவழி படுந்தோறன்னார், நகரமக ரங்களைந்து பாரூன்று மான்முலேபோ னயந்து தெய்வச், சிகரகருக் கிருகமம ரரதீர்த்த நலேசரடி சிந்தித் துய்வாம்.

### பெரியநாயகியம்மை.

3374. கருமுனிவார் கைகுவிக்குங் கண்ணுதற்கு மகளாகிக் கருதமீட்டுந், திருமுனிய ருயாகித் திகழுமொரு முறைமாறு செயல்குறித்தாங், கொருமுனிவன் றாயேயென் றுரைக்குமுறை யொடுமகளாமுழுங் கொள்ள, வருமுனிவில் பெருங்கருணைப் பெரியநா யகிமலர்த் தாள் வணங்கி வாழ்வாம். (ரு)

சபாபதி.

3375. மலரவன்செய் தொழிலொருகை மாயவன்செய் தொழிலொருகை வானோ ராதிப், பலர்புகழு முருத்திரநா யகன்செய்தொழிலொருகைமறை பரவு மீசன், புலர்வருஞ்செய் தொழிலொருதாள் சதாசிவன்செய் தொழிலுமொரு பொற்று ளாகக், கலராணுகா மணிமன்று ணடநவிலும் பெருமானைக் கருதி வாழ்வாம். (௬)

சிவகாமசுந்தரியம்மை.

3376. வயாவருத்தத் துடனுயிர்க்கும் வருத்தமுமோ ரணுத்துணையு மருவு றாது, தயாவின்மல ரவன்முதலெவ் வுயிர்களையு முயிர்த்துநனி தழைய நோக்கி,வியாபகமாங் கொழுநனுக்கு வியாப்பியமாம் பதத்தின்பம் விளையு மாறு, நயாவருளிற் பொதுநடனங் கண்டுகாட்டிடுபெரைதா ணயர்ந்து வாழ்வாம். (எ)

தக்ஷிணாமூர்த்தி. வேறு.

3377. மறையெனும் புருட ஞதி மாண்பினர்க் குபதேசித்தே
யிறைமைகொள் குரவர் தாமீ ரெண்மரு ளொருவ ராகு
நறைமலர் நிம்ப நீழ லயர்ந்தபொற் கோயி னின்ற
முறையருட் குரவர் பாத முண்டக முடிமேற் கொள்வாம். ()

வைரவக்கடவுள்.

3378. தேங்கமழ் மலரின் மேலான் செதுப்பழுஞ் சென்னி போக்குஞ்,சாங்கமுஞ் திகிரிப் புத்தே டன்றிரு மேனி விம்மி,வாங்கருநெய்த்தோர் போக்கு முபாங்கமு மலர்க்கை யொன்றிற், பாங்கமை வடுகப் புத்தேள் பதமலர் பழிச்சி வாழ்வாம். (கூ)

சித்திவிநாயகர்.

3379. துன்றுசித் திகளுள் வார்க்குத் தொகுத்தலாற் சித்தி யானை, நன்றுமெய் யறிவன் ஞர்க்கே நல்கலாற் சித்தி யானை, யென்றுல கத்தி லாய்ந்தா ரிரட்டுற மொழிய வப்பே, ரொன்றுபூண் டமருமுக்க ணெருத்தன்மா மலர்த்தாள் போற்றி. (௧௦)

முருகக்கடவுள். வேறு.

3380. உயிருயிர்க்கா சாரியனு காமையினுற் குரவுபுனை யுயிரை வேதஞ், செயிரில்சிவ மென்றேபா வனைபுரிதல் வேண்டுமெனச் செப்பவவ்வா, றுயர்பியல்பே யமைசிவமு நன்குரவ னெனவணங்கு முயர்புவாய்ந்த, பெயர்வரிய பெருமையின்மே லான்குமர வேள்சரணம் பேணி வாழ்வாம். (௧௧)

திருநந்திதேவர். வேறு.

3381. மனமுதன் மூன்ற னூல்யாம் வழிபடப் பெறுவா னுமெம்
மனகவா ரியன மக்கு முதற்குரு வாவா னேவாக்
கனமலி நந்திப் புத்தே ளெனக்காட்டக் கண்டோ மேலாத்
தினம்வழி பாடு செப்பான் வேறன்மை தேரான் கொல்லோ.

அகத்தியமுனிவர்.

3382. அலைபுனல் சூழுங் காஞ்சி யமைந்தமேற் றளியின் வைகு
கலைமுழு தோதா தோர்ந்த கவுணியர் வரவு நோக்கா
துலைவில்குற் றால மேயோ னொருசிவ மாக வன்னான்
றலைமிசை யங்கை வைத்த தமிழ்முனிக் கடிமை செய்வாம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்.

3383. மறைவிலக் காயபுத்த மார்க்கமே பொருளென் றோதி
நிறைதர முனஞ்சா தித்த நெடியமா னுணுட் கொள்ள
வறைதரு பவுத்தர் மும்மை யாயிரர் சைவ ராகிக்
குறையற வருட்க ணோக்கங் கொடுத்துளார்க் கன்பு செய்வாம்

திருநாவுக்கரசுநாயனூர்.

3384. அடுசினக் களிமால் யானை யதனொடு நணிபோ ராற்றி
விடுதலின் மருப்பி றுத்து வென்றமா னுணுட் கொள்ளப்
படுசம ணுய்த்த யானை பணிந்துசூழ்ந் தேத்தி யேக
விடுகலில் பதிகம் பாடி யிருந்தவர்க் கன்பு செய்வாம். (கரு)

சுந்தரமூர்த்திநாயனூர்.

3385. தடஞ்சிலை முறித்து மேறு தழுவியுங் குறித்த மாதர்
படம்புரை யல்குற் பௌவம் படிந்தமா னுணுட் கொள்ள
விடம்படு மொருபெண் ணானை யெண்ணுபு குறித்த மாதர்
குடம்புரை கொங்கைப் போகந் துய்த்தவர் குலத்தாள் போற்றி.

மாணிக்கவாசகசுவாமிகள்.

3386. சகலரா யிருந்து மேலாஞ் சிவானந்த போகஞ் சாரா
தகலரா வணையான் பூவா னுதியர் நாணுட் கொள்ளச்
சகலரா யிருந்து மேலாஞ் சிவானந்த போக மேசார்ந்
தகலரா தரியா வாத வூரர்தாள் சார்ந்து வாழ்வாம். (௬எ)

சண்டேசுரநாயனூர்.

3387. பிறப்பிறப் பொழியு மின்பம் பெறல்குறித் தவன்ஞா லத்துப்
பிறப்பிறப் புளானைத் தந்தை யெனக்கொளிற் பெறுனென் றேயிப்
பிறப்பிறப் பிலானைத் தந்தை யேயெனப் பேணிக் கொண்டு
பிறப்பிறப் பொழிசண் டேசப் பிரானடி யிறைஞ்சி வாழ்வாம்.

அறுபத்துமூவர்.

3388. மனமணுத் துணையே யென்று நியாயநூல் வகுக்கு மேனு
மனகமெய்த் தவத்தா ராய வறுபத்து மூவ ராவார்
கனசரித் திரம னைத்துங் கவர்ந்துதற் குள்ள டக்கும்
வினவுறீ ரெவ்வா றென்று விடைவித்தி னாலே போலும். ()

பஞ்சாக்கரதேசிகர்.

3389. விழியறி வுடையார்க் காய மெய்ஞ்ஞானப் பெருங்கோ முத்திச்
செழியரு ணமச்சி வாயன் றிருப்பெரும் பெயர்ந வின்று
மொழிவிலப் பெயர்பி றர்க்கு முரைத்துமந் தோவன் னானே
வழிபட நாணுஞ் சில்லோர் மடமைக்கோ ரொழிபு முண்டோ.

அம்பலவாணதேசிகர்.

3390. வரியளி முரலுஞ் சோலை யாவடு துறைக்கண் வைகு
மரியமெய்ஞ் ஞான மூர்த்தி யம்பல வாண தேவன்
பிரியமிக் கெனையாண் டென்பாற் பெறுவது விடாது பெற்றெற்
குரியதை யுலோபஞ் செய்யா துதவினா னுய்ந்து ளேனே. ()

மற்றச்சிவநேசர்கள்.

3391. பெரியநா யகித்தா யோடும் பெருந்திரு வரன்கு ளத்து
மரியநா யகர்பொற் கோயில் வழிபடு வார்கள் யாரும்
புரியுமத் தளியி னீங்கார் நீங்குதல் புணரு மேனும்
விரியுமென் னெஞ்சி னீங்கார் மேவிவீற் றிருப்பர் மாதோ. ()

---

ஆக்குவித்தோர்.

3392. மறைமுடி யமருந் தெய்வ மான்மிய நீறு பூசி
மறைபல விடத்து மோத வயங்குகண் மணிகள் பூண்டு
மறைநடைப் பொலியு மைந்து வன்னமா மனுக்க ணித்து
மறைமுறை யிட்டுந் தேறா மாதேவன் கழல்பூ சிப்பார். (க)

3393. திருவரன் குளப்பொற் கோயிற் றிருப்பணி யான வெல்லாம்
பொருவரு மன்பி னாலே பொதுத்திறங் கடிந்து செய்வார்
வெருவரு குபேர வாழ்க்கை மேலெனா வாழ்க்கை யுற்றார்
பெருவள வல்ல நாட்டிற் பெருங்குடி வணிக ராவார். (௨)

3394. அரியயன் முதலோர் போற்று மரன்குளத் தலபு ராணம்
பிரியமிக் கமையு மாறு வடமொழி பெயர்த்தெ டுத்துத்
தெரியுநற் றமிழி னாலே செப்பிட வேண்டு மென்று
விரியுமெய்ப் பரிவிற் கேட்க விழைந்தியான் பாட லுற்றேன்.

---

## அவையடக்கம்.

3395. சுவைபடு கருப்பங் காட்டிற் றோன்றவீற் றிருந்து ளோனச்
சுவைபடா வேப்பங் காட்டுந் தோன்றவீற் றிருத்த லாலே
நவைபடாப் பெரியோர் சொற்ற நயக்குமின் பாட லோடு
நவைபடு மடியேன் சொற்ற பாடலு நயந்து கொள்வான். (க)

3396. விட்புனன் முடிமேற் கொண்டு மேவினோர் குடங்கர் கொண்டு
மட்புனன் முகந்தே யாட்டி வழுத்திட வுவப்பர் மேன்மேற்
கட்புனல் பொழிந்து நால்வர் கரைந்தபா வேற்றூர் கண்ணி
லெட்புன லுந்தோற் றுவென் பாட்டுங்கேட் டினிது வப்பார்.

3397. இருவருங் காண வொண்ணா ரீரிரு மறைக்கு மெட்டார்
திருவரன் குளத்து வாழ்மா தேவனா ரெனமே றிந்தும்
பொருவரு மவரைப் பாடல் புரிகுவ னன்பர் தம்பா
லருவருப் பிலரா யெண்மை யாதல்கை கொடுக்கு மென்றே.

---

## சிறப்புப்பாயிரம்.

3398. சீர்வருஞ் சிறப்பான் மிக்க திருவரன் குளப்பு ராண
மோர்வருந் தமிழாற் பாடி யினிதரங் கேற்றி னானு
றேர்வருங் கலையுந் தேர்ந்தோன் றிரிசிரா மலையில் வாழ்வோன்
சோர்வருங் குணமீ னாட்சி சுந்தர நாவ லோனே.

---

# திருநாட்டுப்படலம்.



3399. இறைவ னார்திரு வரன்குளப் பெருந்தல மெழுவாய்
நிறைத லம்பல கொடுநிலா வல்லநா டாதி
யறைத ரும்பல நாடுந்தன் னகங்கொடு பொலிந்து
முறைபி றழ்ந்திடா வளவர்நாட் டணிசில மொழிவாம். (க)

3400. சைய மால்வரைத் தாய்மனை நின்றெழூஉச் சலதி
யைய நாயகன் மனைபுக வணைதரு பொன்னி
வைய மாமகள் முகமெனும் வளவர்கோ னாடு
பைய நாடொறுந் தங்கிச்செஃ றுனமாம் படித்தே. (உ)

3401. தாயி லாகிய சையமால் வரைமிசைத் தங்கு
மாயி லெண்ணிலா வயிரஞ்செம் மணிமுத லனைத்துந்
தோயில் சேர்தரக் கொண்டுபோய்த் தொகுத்தலா னன்றோ
பாயி லாழியை யரதன கரமெனப் பகர்வார். (௩)

3402. தங்கு நீடேல் லூழுடை யார்புடைச் சார்வா
யெங்கு முள்ளவ ரீண்டிநட் பாகுத லேய்ப்பக்
கொங்கு நாட்டொரு குலவரை யாம்பிரத் தடியிற்
பொங்கு நீத்தமோ டெண்ணிலா றளாவுவ பொன்னி. (ச)

3403. கலியொ டும்பெரும் போர்செயக் கவித்தெழு பொன்னி
மலிது ரோணம்வேய்ந் தடைந்தென நுரையொடும் வருமால்
பொலியு மாம்பிரத் தடியெழு குடிஞையும் பொற்ப
வொலிகு லாமதற் குடன்பட்டாற் போற்சிவர் துறுமால். ()

3404. பொன்னி மாநதிக் கரையிரு மருங்கினும் பொலிய
மின்னி யாகசா லைகள்பல மிடைகுவ வாங்கண்
வன்னி மேலெழு தூபம்வா னளாய்ச்சுரர் வைய
முன்னி மேவுற மனுச்செவி புகாமுன முய்க்கும். (சு)

3405. மாட மேனலார் குழற்கிடு விரைப்புகை வாசங்
கூட வானயாற் றுடர மங்கையர் கூந்த
லூட ளாய்முரு கேற்றலி னறுவிரை யுற்று
நீட லோர்ந்தவ ரியன்மண மென்பது நிசமே. (எ)

3406. மூதிரு மாக்கனி பலபடு விடபமேன் முழங்கி
யதிரும் வானரம் பாய்தர வாங்குதிர் கனியா
லுதிரு நெற்பல வேனைநாட் டறுத்தடித் துறச்செய்
பிதிரு றுதநெற் பொலியெனப் பிறங்குவ நாளும். (அ)

3407. முனிவர் பற்பல ரடைந்துகா விரிப்புனன் முழுகிக்
கனிவ ரும்பவெண் ணீறொருங் கணிந்திருள் கடிந்து
பனித புங்கதி ரெதிர்பரப் பியசடைத் திவலை
யினிய செந்துகிர் நித்தில முகுத்தென வியையும். (கூ)

3408. தழைசெ றிந்தபைம் புன்னைக ணடுவெழூஉத் தழைதீர்ந்
துழைசெ றிந்திடப் பலமலர்ந் தோங்கிய முருக்கு
மழைபொ ருங்குழற் றிருமகண் மணாளனு மழைமேல்
விழைய வெம்பிரா னிவர்ந்தவோர் காட்சியே விழையும். ()

சிவமயம்.

திருப்பனந்தாள் காசிமடத்துத்தலைவர்களாகிய

# ஸ்ரீ குமரகுருபரஸ்வாமிகள் சரித்திரம்.



### கற்பகவிநாயகர்.

3409. பூமேவு முகமணியாய்ப் புகழ்க்கோடு குடஞ்சுட்டா
யாமேவு கடமுகிலா யணிமேவு கரந்தருவாய்ப்
பாமேவு பதநிதியாய்ப் பழவடியர் மிடிதுரந்து
காமேவு பெருங்கருணைக் கற்பகக்கன் றினைத்தொழுவாம். ()

### காசிவிசுவேசர்.

3410. உண்ணாடு பெருங்கருணை யொருத்தியிடஞ் சூழ்தலினா
லெண்ணாடு மற்றொருத்தி யேறியமே லிடநின்று
மண்ணாடு மாறிழித்து வலஞ்சூழச் செயதமரும்
விண்ணாடு புகழ்க்காசி விசுவேசர் பதம்போற்றி. (௨)

### ஸ்வர்ணாகர்ஷண பைரவர்.

3411. அன்னநெடுங் கொடியுயர்த்த வண்ணலுமொண் செங்கமலப்
பொன்னமரு மறுமார்பப் புத்தேளு நோக்குதொறு
மின்னமுமுண் ணடங்கிடக்கொண் டிடுகபா லச்சூலச்
சொன்னவயி ரவப்பெருமான் றுணைப்பாதந் தொழுதெழுவாம்.

### முருகக்கடவுள்.

3412. வரையெறியும் வெள்ளியகூர் வாய்வேல்கைக் கொடுபுலவர்
புரையெறியுங் கவிழிணர்மாப் போழ்ந்துபெரு விண்ணுலகில்
விரையெறிதார்க் கடவுளரைக் குடியேற்றி வெண்டரளந்
திரையெறியுஞ் செந்திலமர் செவ்வேள்பொற் பதம்பணிவாம்.

---

## நூல்.

### பாண்டிநாட்டுவளம்.

3413. பொன்பூத்த கைலாயப் புண்ணியநா யகனளவாத்
தென்பூத்த மலயவளம் விழைந்துதிரு முடிசூடிக்
கோன்பூத்த புரவலனாத் தேவியொடுங் குடிகொண்ட
மன்பூத்த மதுரையுடை வளத்ததுபாண் டியநாடு. (க)

3314. செந்தமிழுஞ் சந்தனமுந் திசையெலாம் பரிமளிக்க
மந்தவளி யுமிழ்மலய வரைக்குடுமி நின்றிழிந்து
கொந்தவிழு மலர்வீசிக் குளிர்கெழுமுத் தெடுத்திறைத்து
முந்தவெழு புனற்பொருநை முழுவளத்த தந்நாடு. (௨)

3415. அன்றுதடா தகைப்பெயர்பூண் டரசளித்த மாதேவி
கன்றுதலில் பலவிருக்க நமையேகைக் கொண்டுயர்த்தா
ளொன்றுறநம் மியற்பெயரே யுறுத்தனள்கட் கெனமகிழ்ந்து
துன்றுகய றுள்ளுவபோற் றுள்ளுவநீர்க் கழனிதொறும். ()

3416. வேலிபுரிந் திறையவனே விரும்பிநமைக் காக்குமெனிற்
சாலியெனு நமக்குளதோ குறையென்று தழைவனபோல்
வாலியநென் முளைவித்தி மள்ளர்நீர் பாய்ச்சுதலுங்
கோலியசெய் யிடங்கடொறுங் குலவியெழு வனபைங்கூழ். ()

3417. வாங்குதிரை கொடுஞ்சிலையா வண்கமலக் கொடிநாணு
வோங்குவரால் கடிக்கணையா வொளிர்தருவா னுலகிலக்கா
வீங்குபுனற் றடஞ்செலுத்தும் வேம்பணிதிண் டோளான்போ
லாங்கொருதா னும்பகையை யடைந்துபொரு செயனேரும்.

3418. வீங்குவன மாதர்நகில் விளங்குவன மேனியொளி
யேங்குவன துடிமருங்கு லிரங்குவன காற்சிலம்பு
தூங்குவன குழல்வண்டு சுழலுவன கருநெடுங்க
ணீங்குவன மிடியாதி நெருங்குவன திருவாதி. (௬)

3419. கண்மருவு வனவெவர்க்குங் கதிர்க்குமுகம் போலகமு
மெண்மருவு பொருளாதி யோராறு மெம்மலரும்
பண்மருவு வண்டினமும் பாகூறு கழைக்கரும்பு
மொண்மருவு கஞ்சநா தமுமோங்கு தென்னையுமே. (௭)

3420. வானளவு கருஞ்சோலை மண்ணளந்த மாறிகிரி
தேனளவு கூடுபடி செவ்வானம் போர்த்தகலை
கூனளவு பிறையொருபாற் கொண்டசுரி முகச்சங்கந்
தானளவு கதிர்நாப்பட் டயங்கல்கவுத் துவமணியே. (௮)

3421. சாலெலலாம் வெண்டரளந் தலையெலாஞ் செஞ்சாலி
காலெலாங் கருங்குவளை காவெலாங் கனிச்சாறு
பாலெலாங் கழைக்கரும்பு பாங்கெலா மிகத்திருந்தி
நூலெலா நனிவிதந்து நுவல்வளத்த தந்நாடு. (௯)

3422. தெய்வநா யகன்சீர்த்தி திருந்தியவே டெதிரீர்த்துச்
சைவமே பொருளென்று தாபித்த திருநதிதான்
மெய்விரா வுயிர்பொருவ விராவுதலாற் றிருவமிகும்
பொய்விரா வுதலில்லாப் புகழ்மிகுத்த தந்நாடு. (௧௦)

3423. மண்ணுலகத் தொருவேந்தன் றிருமகளை மணம்புரிந்து
கண்ணுதலார் கூடலுற வனையரிளங் கான் முளைசீர்
விண்ணுலகத் தொருவேந்தன் றிருமகளை வேட்டருளி
நண்ணுமொரு குன்றுமுடைத் தந்நாட்டு நலம்பெரிதே. (௧௧)

## ஸ்ரீவைகுண்டநகரவளம்.

3424. ஆய்ந்தபுகழ்ப் போர்வையுடை யத்திருநாட் டினுக்கழகு
தோய்ந்ததிரு முகமென்னத் துலங்குநக ரொன்றதுதா
னேய்ந்தபெருஞ் சைவர்குழாந் திருக்கயிலை யென்றிசைப்ப
வாய்ந்தவயி ணவர்கடிரு வைகுண்ட மெனுநகரம். (௧௨)

3425. முழவுபொலி வனவரங்க மூவுலகுங் கொண்டாடும்
விழவுபொலி வனமறுகு விண்ணியலும் வெண்பிறைக்கோட்
டுழவுபொலி வனமணிசெ யுபரிகையங் குதலைமொழி
மழவுபொலி வனதிருவ மல்குமா டங்களெலாம். (௧௩)

3426. பெருகுவிறன் மைந்தரொடு பிணங்குமரி மதர்மழைக்கட்
கருகுமுகிற் குழன்மடவார் கழற்றிவீ சியகுழைக
ளுருகுமணி மறுகிடைவீழ்ந் தளவாத பெருஞ்செல்வ
முருகுநிகர் மைந்தர்விடு முழுமணித்தேர்க் காறடையும். (௧௪)

3427. கருங்குவளை மருட்டுவிழி காதலரோ டியமடவா
ரொருங்குபயின் மாளிகைமே லோங்குமர மியத்தலத்து
நெருங்குமலர்க் குப்பைகளை தொழின்மடவார் நெட்டுயிர்ப்ப
விருங்குளிர்வான் றருவுகுக்கு மெண்ணில்பல மலர்க்குப்பை.

3428. ஓங்குதிரு மாளிகைமே லொண்ணிலா முற்றத்து
வீங்குபரி யங்கமிசை மேவுமா டவர்மயங்கிப்
பாங்குபொலி மாதர்முக மென்றுபசுங் கத்தூரி
யாங்குமதிக் கிடுவரதைக் களங்கமெனு மறியாமண். (௧௬)

3429. ஓவாது நீராட்டி ஞெள்ளியமென் றுகினனைந்து
தாவாத வல்குன்முலைத் தடந்தோன்ற மடமாதர்
மேவாத நாணமிக மைந்தர்விழி புதைப்பரவ
ராவாவிந் திரன்போற்கண் பெற்றிலமென் றயருவார். (௧௭)

3430. பொன்செய்த மேனிலத்துப் பொற்றொடியா ரூடன்மிகத்
தென்செய்த சிலம்பொலிக்குஞ் சிறுபொழுது கூடன்மிகக்
கொன்செய்மே கலையொலிக்கும் பெரும்பொழுது குறித்துணர்ந்து
மன்செய்வா னவரழுக்கா றுறுதலான் மகவிழந்தார். (௧௮)

3431. மாதரார் திருமுகமு முழந்தாளும் வயங்கலவன்
காதல்கூ ரவர்நகிலுங் கைத்தலமு முறுங்கிள்ளை
மேதகவாய் வருபாட்டுங் காதுமிளிர் தரும்வள்ளை
கோதகன்மற் றவர்குழலுங் கூறியகண் டமும்வண்டே. ()

3432. மரகதமா டத்துமிசை வயங்குறுசெவ் வான்படிதல்
புரவுயர்பச் சுருமாயோன் பொற்கலைபோர்த் ததுநிகர்க்கு
முரவயிர மாடமிசை யொண்கருமே கம்படிதல்
காவில்பளிக் குருப்பெருமான் கரித்தோல்போர்த் ததுநிகரும். ()

3433. மறையவர்தங் குடியொருபால் வயங்குமர சாண்மையுடை
யிறையவர்தங் குடியொருபா லியைதரும்வா ணிகத்தமைந்த
நிறையவர்தங் குடியொருபா னிலவும்வே ளாண்மைபுரி
துறையவர்தங் குடியொருபாற் றுவன்றிடுமந் நகரத்து. (உக)

பாண்டிவேளாளர்சிறப்பு.

3434. இத்தகைய நகர்வாழு மெண்ணில்வே ளாண்குடியு
ளுத்தமமிக் கவர்பாண்டி வேளாள ரென்றுரைக்கு
மத்தகையர் நனிவாழ்வா ரளவுபடாப் பெரும்புகழார்
வித்தகநல் லொழுக்கமுருக் கொண்டன்ன மேன்மையினர்.

3435. வளம்பெருகு முழவுதொழில் வாழ்க்கையால் யாவருக்கு
முளம்பெருகு மகிழ்செய்வா ருண்மையே தலைநிற்பார்
களம்பெருகு காமாதி கடிந்துசிவ பரனடிக்குத்
தளம்பெருகு மலர்தூவித் தாழ்ந்தெழுநன் னியமத்தார். ()

மகப்பேறுகருதி இருமுதுகுரவர் நோன்புழந்தல்.

3436. அன்னவரு ளொருவர்மனை யறம்வழாப் பெருநிலையி
லென்னருமொவ் வார்கற்பி னிரியாத மனைவியொடு
பொன்னனைய மகற்பெறுவான் போற்றுதிருச் செந்தூர்வாழ்
முன்னவனை யுளங்குறித்து முனிவிலா நோன்புழந்தார். (உசு)

3437. ஆறுமுகப் பெருமானு ரணிவிழாச் சேவித்துங்
கூறுபெருங் கோயில்வலங் கொடுபணிந்து மாரன்முத
லேறுவிசே டம்பொலிநா ளெய்தியுறச் சேவித்து
மாறுதவி ரடியார்க்கு மாறாது மடையிட்டும். (உரு)

புத்திரப்பேறு.

3438. இன்னுமள வாவிரத மிவ்வாறு புரிதருநாண்
மன்னுமவர் பெருங்கற்பின் மனைவியார் வயினின்றும்
பன்னுமலை வாயமர்ந்த பண்ணவனார் திருவருளா
லுன்னுமறங் குதுகலிப்ப வொருவரவ தரித்தனரே. (உசா)

3439. பாலனா ரவதரித்த பண்பினிரு முதுகுரவர்
வேலனா ரருள்போற்றி வீடாத மகிழ்ச்சியெழச்
சாலநா ளும்புரிந்த தவப்பயனுற் றோமென்று
கோலநான் மறையவராற் சாதகா திகள்குயிற்றி. (உஎ)

3440. மிடியனொரு செய்போற்றும் விதமெனவீ டுறல்குறித்த
படிமையன்னா னாசிரியன் றனைப்போற்றும் பண்பெனவங்
கொடிவில்வரி சைகளியற்றிப் போற்றிவளர்த் தனரோம்ப
மடிவில்பிறை போல்வளர்ந்தார் மாதவத்து மைந்தனார். ()

புத்திரர்பேசாமைதேர்ந்து அவர்கள்வருந்தல்.

3441. ஓராண்டு பெருமகிழ்ச்சி யுற்றவிரு முதுகுரவ
ரீராண்டு முதலாகப் பேசுவரென் றெதிர்பார்த்தும்

பாராண்டு வருமுளேயார் பேசாத பண்புணர்ந்து
நாராண்டு மகிழ்மனத்துத் துன்பமே நனிசுமப்பார். (௨௯)

3442. பூங்கையா லெடுத்தணைத்துப் புல்லினருச் சியுமோர்ந்து
நாங்கையா வினையாற்றி நன்றிதுபெற் றனமென்று
தீங்கையா யாதுகலை தேர்ந்தார்கள் யாவரையு
மூங்கையாக் கிடுவாரை மூங்கையா ரெனத்தெளிந்தார். (௩௦)

3443. முன்செய்த தீவினையோ முற்றியது வேறுளதோ
பொன்செய்த கிண்கிணித்தாட் புண்ணியச்செந் தூர்ப்பெருமா
னென்செய்த வாறினிநா மென்செய்து மெனமயங்கிக்
கொன்செய்த கொடுங்கவலைக் குழிசியா யினர்மொழிவார். ()

வேறு.

3444. செந்தில்வாழ் குமரப் புத்தேள் சேவடிக் கமலம் போற்றி
நந்தபல் விரதம்பூண்டு நாள்பல கழிந்த பின்றை
யந்தவா னவன்செ யும்பே ரருளினான் மூங்கை யேயாய்
வந்துதோன் றியதிச் சேயேன் மற்றினி யுரைப்ப தென்னே.

3445. சுற்றமு மிழிப்ப நட்டார் தொகுதியு நகைப்ப மண்மேன்
மற்றவர் யாரு மெள்ள வாயிலா மூகை மைந்தற்
பெற்றதிற் பெருமை நன்று பெரும்பழி யின்மை யாலென்
றற்றமுன் னொருவு மாறீ தமைதரத் துணிந்தார் மன்னோ. ()

திருச்செந்தூர் செல்லத்துணிதல்.

3446. வந்தவெங் கவலை தீர வாரிசூழ் திருச்செந் தூரிற்
கொந்தவிழ் கடப்பந் தாரான் கோயிலின் மூகை யாய
மைந்தரைக் கொடுபோய் விட்டால் வருவது காண்டு மென்று
சிந்தையிற் றுணிந்தெ ழுந்தார் சேயையுங் கூட்டிக் கொண்டே.

நன்னிமித்தப்பேறு.

3447. உற்றதோ ரைந்தா மாண்டி லொய்யெனச் செல்லா நிற்கு
மற்றவர் மனையி னின்று மறுகில்வந் தனரப் போது
பெற்றமொன் றிளங்கன் றோடு பெருமடி சுரந்த பாலோ
டுற்றது நேரே கண்டா ருலப்பிலா மகிழ்ச்சி பூத்தார். (௩௫)

3448. மறையவ ரிருவ ரப்பால் வந்தன ரதுவுங் கண்டார்
குறையிலை போபோ வென்றோ ரேதிலன் கூறக் கேட்டார்
நறைகமழ் கின்ற தேமாங் கனிசிலர் நல்கக் கொண்டார்
நிறைதரு மகிழ்ச்சி பொங்க நடந்தனர் நிகரி லாதார். (௩௬)

3449. வான்றவழ் மலய நின்றும் வருபெரும் பொருநை நீத்தந்
தான்றவழ் நடவை சற்றுந் தண்மலர்த் தருக்கண் மொய்த்தே
யான்றவழ் நடவை சற்று மாழிசா னடவை சற்றுந்
தேன்றவழ் புகழா ராகச் சென்றுசெந் தூரைச் சேர்ந்தார். ()

## திருச்செந்தூர்க்காட்சி.

3450. ஒருவரை மார்பம் போழ்ந்த துணர்ந்துபே ரச்சம் பூண்டு
பெருவரை யனைத்தும் போந்து பிறங்குறு வெள்வே லையன்
திருவருள் பெறுவா னெண்ணிச் செறிந்தன நிற்றல் போலும்
பொருவில்பன் மாடமோங்கிப் பொலிதிரு வீதி கண்டார். ()

3451. வள்ளலைச் சூழ்த ராது வானத்துக் கிடுக்கண் செய்த
கள்ளமும் மதிலும் வெந்து கருகிய துள்ளத் தோர்ந்து
வள்ளலைச் சூழ்ந்து நாளும் வானத்தைத் தாங்கா நிற்குங்
கள்ளமில் லாத செம்பொற் கடிமதிற் பொலிவு கண்டார். ()

3452. அடுத்தடி வணங்கு வோரை வாழ்விக்கு மருளை யுன்னிக்
கடுத்துமுன் போல வின்னுங் கைப்படை செலுத்தே லென்று
விடுத்திட வரிய முத்தும் வித்துரு மமுமி றைத்து
மடுத்தவெண் டிரைக்கை யாழி வள்ளலை வணங்கல் கண்டார்.()

3453. திரிபுர மெரியுண் மூழ்கச் சினந்துசெற் றிடுவா னம்மான்
வரிசிலை மேரு வாக மலர்க்கரங் கொண்ட தூன்று
பரிவுறு மண்டந் தாங்கப் படைத்துவை திருத்தி யென்னப்
புரிதரு வான்றோய் செம்பொற் கோபுரம் பொலிதல் கண்டார்.

3454. ஒருட லமர்ந்த தங்க ளுண்மையை விளக்கி யாங்கு
மேருவுஞ் சமழ்ப்ப வோங்கும் விரிமணிக் கோபு ரத்துப்
பேருரு மயிலு முட்காற் சேவலும் பிறங்கா நின்ற
காருருக் கலங்க வோங்குங் கொடிமிசைக் கலத்தல் கண்டார்.

3455. மூற்றிய வருள்சா லாறு முகப்பிரான் றரிச னத்தாற்
பற்றிய வகமே போலப் புறத்தினுங் குளிர்ச்சி பம்பச்
சுற்றிய வாச நூற்றுக் காவதந் துனைந்து வீசு
மொற்றிய சாந்து பூசி யுறுபெருங் குழாங்கள் கண்டார். ()

## இலைவிபூதி.

3456. இலையமில் குமர வேண்முன் வணங்குவார்க் கென்றுந் துன்ப
மிலையடு பகைசற் றேனு மிலைபடு பிணிநி ரப்பு
மிலையளற் றுழன்று வீழ்த விலைபல பவத்துச் சார்பு
மிலையென விலைவி பூதி யெடுத்தெடுத் துதவல் கண்டார். ()

3457. இன்னபல் வளனு நோக்கி யெம்பிரான் றிருமுன் சென்று
பொன்னடி வணங்கிப் போற்றிப் புண்ணிய முதல்வா விந்தப்
பன்னரு மதலை தானின் னடைக்கலம் பார்த்துக் கொள்ளென்
றுன்னருந் தம்மூ ருற்று ருறுதவம் புரிந்தீன் றோரே. (௪௫)

3458. என்றவ ரொழிந்த பின்றை யிசைத்திடா மதலை யாருக்
கான்றநல் லறிவு செந்தூ ரண்ணலா ரருளிற் றோன்றச்
சான்றவர் மதிக்குந் தெய்வச் சண்முக விலாசம் வைகித்
தோன்றலா ருருவ முள்ளே தோன்றக்கண் டிருந்தா ரன்றே.

### செந்திலாண்டவன் திருவருள்புரிதல்.

3459. இவ்வணஞ் சிலநாள் வைக வெரிமருள் சூட்டுச் சேவல்
கைவண்ணக் கொடியாக் கொண்ட காங்கேயன் கருணை பூத்துச்
செவ்வண்ணக் குமர ஞவோர் திருவுருக் கொண்டு தோன்றி
யவ்வண்ணப் பொருள்யா மேயென் றறிதர வாய்ம லர்ந்து.()

3460. மருவிய நீயா ரென்ன வாய்திறந் தடியே னென்னப்
பொருவிலக் கரமுப் பானும் பொலிதரு மைம்பத் தொன்றக்
தருமிரு மொழிகட் குள்ள வியலெலா முணரச் சாற்றிப்
பெருகிலக் கியமுங் கூறிப் பிறழ்தராப் புலமை செய்து. ()

3461. கடன்மடை திறந்தா லென்னக் கவிபுகல் வாக்கு நல்கி
யடல்கெழு பிரசங் கத்தி னமைபெருஞ் சிறப்பு நல்கி
மடனிகு சமய மாதி வயங்குதீக் கைகளுஞ் செய்து
படர்மறை யனைத்துந் தேருப் பதமலர் சென்னி சூட்டி.(சகூ)

3462 தவலருந் தவத்தா லெய்துஞ் சைவசித் தாந்த வுண்மை
நுவலுமுப் பொருளுந் தெள்ளி நூற்குரு பரனே யாதி
நுவலில்செங் கற்றூ யாடை கவின்சடை வேடந் தாங்கி
யவமில்பக் குவர்க்கெம் முண்மை யறிவியென் றுபதே சித்து.

3463. திருந்துவெண் ணீறு நல்கித் திருவுருக் கரந்தா னையன்
வருந்துத லின்றி யெல்லாம் வாய்த்தமா தவத்தின் மிக்கார்
பொருந்துசெங் கற்றூ யாடை பூண்டுசெஞ் சடைக டாங்கி
யருந்திற லாறு கட்டி வேடமு மமையப் பூண்டு. (ருக)

வே று.

### குமரகுருபரரென்று பெயர்பெறுதல்.

3464. கோலமலி திருச்செந்தூர்க் குமரவேள் கருணையினுற் குமர னுகிச்
சீலமலி குருபரனீ யாதியென வாய்மலர்ந்த திறத்தை யோர்ந்து
ஞாலமலி தவர்குமர குருபரனென் றுரைக்குமொரு நாமந் தாங்கி
மூலமலி முதற்குரவ னருணினைந்தா னந்தவெள்ள மூழ்கி னுரே.

### இவர் நூல்செய்யக்கருதுதல்.

3465. ஒருகுமர குருபரமா முனிதமையாட் கொண்டருளி னு பதே சித்த, குருபரனைத் துதிசெய்வா னருதியெது கோடுமெனக் குறிக்க லுற்று, ருமையபன் மொழிகளுனுந் தென்கலையும் வடகலையு மாதி யாய, பொருவிலிரண் டனுக்குமுத லாசிரியன் பிறைமுடித்த புகழ்ப்புத் தேளால். (ருஉ)

3466. அனையனிடைக் கேட்டுணர்ந்து விரித்தவிரு வருமுனி வர்க் கரசா வுள்ளார், நினையுமிவை யொத்தனவே யாயினுமிவ் விரண் டனுளு நிகரி லாத, வனைபுகழ்த்தென் மொழிமறையிற் சிறப்பெழுத் தைந் தெனவைந்தே வயங்கக் கொண்டு, தினையவிசே டமுமன்றி யடிமுடிமா லயனின்னு மெய்தா முன்னேன். (ருச)

3467. பித்தனென விகழ்ந்ததுமெண் ணுதுபா டுகவெனவும் பெ ண்பாற் றாது, சித்தமகிழ்ந் ததுவேட்டுச் செலவுமினுஞ் செயற்கரிய செயவுந் தானே, யொத்தமுதற் புலவனென வுறவுமெழு திடுவாணு வுறவு மோங்கு, வித்தகவண் கயிலேயகம் வருவித்துக் கேட்டிடவு மேய தம்மா. (௫௫)

கந்தர்கலிவெண்பா.

3468. ஆதலிற்றென் கலேயோங் கோடுமெனத் துணிந்துபெரு கன்பு போர்ப்ப, மேதகப்பூ மேவுமுத லெடுத்தணிமுற் சிறந்தகலி வெண்பா வொன்று, போதகனு கியபெருமாற் கோதியள வருங்கேள் விப் புலவர் சூழக், காதலினு யிடையமர்ந்தா ரறங்கடலே யெடுக்கவந்த காட்சி யாரே. (௫௬)

வே று.

3469. இளையரிவ் வாறு மேவ வீன்றவ ரீது கேட்டுத்
துளைதர மகிழ்ந்து செந்தூர் புகுந்தமர் தோற்ற நோக்கித்
தனேயரென் றெண்ண நீர்ந்து தங்குல தெய்வ மென்றே
நினைதரு முளத்த ராகித் தொழுதனர் நீங்கி ஞரே. (௫௭)

கைலேக்கலம்பகம்.

3470. பின்னர்வண் புலவ ரேருய்ப் பிறங்குவார் செந்தூ ரண்ணல்
பொன்னடி வணங்கிப் போற்றிப் புறவிடை கொண்டெ முக்தே
யன்னமென் னடையார் சூழ வவிர்திருக் கயிலே சார்ந்து
கன்னவில் சிலேயி னூர்க்குக் கலம்பக மொன்று பாடி. (௫௮)

திருநெல்வேலிமுதலிய ஸ்தலதரிசனம்.

3471. ஆங்குநின் றெழுந்து வேயின் றருளிய முத்த மென்ன
வோங்குபுண் ணியனூர் மேய நெல்வேலி யுவந்து போற்றி
வாங்குவெஞ் சிலேயி ராமன் வழிபடப் பழியொ ழித்துத்
தாங்குநன் னகரி ராமேச் சரம்புகூஉத் தாழ்ந்து போற்றி. ()

3472. மின்னிய மோலி வானோர் மேவெழி லரம்பை மாதர்
முன்னிய மொய்ம்பின் வேடர் மொய்கொடிச் சியரே யாகித்
துன்னிய சார ரேறுந் துதைந்துவாழ் குற்ரு லத்து
மன்னிய குறும்ப லாவாழ் வள்ளலார் பாதம் போற்றி. (௬௦)

3473. ஒருதுணை மாலே பாகத் துவந்தவர் சுழியல் போற்றிக்
கருவுரு தருள வல்லார் கானப்பேர் நகரம் போற்றிப்
பருவர லெமக்கு நீப்பார் பற்றுமா டானே போற்றிச்
செருமலி சூலத் தையர் திருப்புன வாயில் போற்றி. (௬௧)

3474. பேணிய தருள வல்லார் பெருந்துறை புகுந்து போற்றிக்
கோணிய பிறைமு டித்தார் குளிர்கொடுங் குன்றம் போற்றி
யேணியங் கரத்து நாத ரிருந்தமிழ்ப் புத்தூர் போற்றிப்
பூணிய லெலும்பாக் கொண்டார் பூவண நகரம் போற்றி. ()

3475. செய்யவேண் மகிழ்ந்து மேய திருப்பரங் குன்றம் போற்றி
யெய்யயா வருக்கு நல்கு மேடக நகரம் போற்றி
யையதீ வினைய றுப்பா ராப்பனூ ரடைந்து போற்றிப்
பொய்யவர்க் கொளிக்கு மற்றைத் தலங்களும் புகுந்து போற் [றி.

3476. சகத்தியன் முழுது நீத்துத் தத்துவ முணர்ந்த யோக
ரகத்தியல் குமரப் புத்தே ளகத்தியற் குணர்த்தி யாங்குச்
சுகத்திய லுண்மை முற்றுந் துணிதர வருளப் பெற்றார்
நகத்தியல் சிலையார் மேய கூடலை நண்ண வந்தார். (௬௪)

3477. அறங்கிளர் கல்வி யானு மணிகிள ரொழுக்கி னானு
நிறங்கிள ருண்மை யானு நிகரிலாப் பெருமை யாளர்
திறங்கிளர் விருப்பாற் சென்ற சென்றபல் லிடத்து முள்ள
மறங்கிளர் செருக்கின் மூழ்கும் புலவரை வாதில் வெல்வார்.

3478. சிலரையைந் திலக்க ணத்தாற் சிலரைமிக் கிலக்கி யத்தாற்
சிலரைவண் பிரசங் கத்தாற் சிலரைநன் கியற்றும் பாவாற்
சிலரைநே ருரைக்குஞ் சொல்லாற் சிலரைமெய்ஞ் ஞான நூலாற்
சிலரைமற் றுள்ள நூலாற் சிறப்புற வெல்லு வாரே. (௬௬)

3479. அருண்மலி யினையர் கூட லாலவாய்ப் புறத்தி லெய்தப்
பொருண்மலி யவ்வூர் மேய புண்ணிய ரெதிர்கொண் டெய்தித்
தெருண்மலி தரப்ப ணிந்து சேர்ந்தன ரளவ ளாவிக்
கருண்மலி சோலை யாதி காட்டுபு மகிழ்ச்சி செய்வார். (௬௭)

மதுராநகரக் காட்சி.

3480. நிறங்கொடு பொலியு மேனி நின்மலக் குமர வேளைப்
புறங்கொடு சுமத்தல் செய்வ பொலிந்தகங் கொடுசு மக்கு
மறங்கொடு மேய நும்மைக் கண்டன மகிழ்ச்சி மேய
திறங்கொடு குலவா நிற்குஞ் செழுமயி னடனங் காண்க. ()

3481. இரும்பொழி லடிக ளாக விணர்க்குழை முகம தாக
வருப்பவிழ் மலர்வா யாக வருங்கனி செய்யு ளாகத்
தருங்கனி துளியா நிற்குந் தண்ணறு வினைய செய்யு
ளொருங்குறத் துளியா நிற்குஞ் சுவைபொரு ளுமதுவுங் காண்க.

3482. நமையணி பவர்மா ணுக்கர் நாடிநந் நீழல் வாழ்வார்
தமையடி வணங்க வந்தார் சான்றதக் கோரே யென்று
ளமைதரக் குறித்து மேன்மேன் மகிழ்ந்தல ருகுப்ப தென்னச்
சுமைதரு தார்ப்பூச் சிந்துங் கடம்பமர் குழல் காண்க. (௭௦)

3483. முடிகளோ ராறுந் தாங்கு முருகவே ளருளப் பெற்ற
வடிகணுங் கவியு ளொவ்வொன் றவாய்ப்பிறி தவாவார் போல
வொடிவில்பல் கனிக ளுள்ளு மொவ்வொன்றே யவாவி வேற
கடிதரப் பலப ழுத்த பொழிலெலாங் கண்ணிற் காண்க. (௭௧)

3484. சேவலங் கொடிக்கைச் செவ்வே டிருந்தனுக் கிரகம் பெற்ற
பாவல ராய வுங்கள் பாட்டில்யாம் வீழு மாபோற்
காவலங் குறுப லாக்கள் கனிந்தபல் கனியை நச்சி
மேவரும் பலவீ மொய்த்து வீழ்தரு வளமுங் காண்க. (எ௨)

3485. சித்தநல் லொழுக்க மோவாத் தேசிகப் பொலிவு வாய்ந்த
வுத்தம வடிகே ளுங்கள் செய்யுளுட் பொருளே போலப்
பைத்தபூம் பொழிலு ளீரப் பலாப்பழுத் தடிமண் கீள
மொய்த்தபல் கனிசெ றிந்த முழுவளஞ் சிறிது காண்க.(எ௩)

3486. செய்யகற் றேய்ந்த வாடை திருவரை யுடுத்துப் போர்த்த
வையரே யுமைக்கண் டோடும் புன்கவி யாளர் மானக்
கொய்ம்மலர்ச் சோலை மேலாற் குளிரெனும் பவன மேவ
மெய்ந்நடு நடுக்குற் றோடு மிக்கவா னரங்கள் காண்க. (எ௪)

3487. எண்ணிலா வோடு கால்க ளியைதரப் பெற்று மென்றுந்
தண்ணிலா வழிவாழ் வேந்தர் நாட்டினைத் தணவா தாகிக்
கண்ணிலா நெய்தல் வேலிக் கடலகம் புகுதா தாகி
மண்ணிலா விந்த வையை மாநதி வளமுங் காண்க. (எ௫)

3488. அடிகணும் மடிசார்ந் தோரை யளற்றகம் புகுத ராது [த
முடிவிலின் பெய்த வுய்க்கு முறைமைபோற் றன்பாற் சார்ந்
மடிவரு வெள்ள முற்றும் வாரிதி யுவர்பு காது
படியிலின் பெய்த வுய்க்கும் பழநதி யிதுவே யன்றே. (எ௬)

3489. என்றுபல் வளமுங் காட்டி மகிழ்விக்கு மியல்பி னாரோ
டொன்றுபன் மாடக் கூட லுட்புகுந் தோங்கு செம்பொற்
குன்றுநின் றனைய தாய கோபுர மருங்கு தாழ்ந்து
துன்றுபன் மணியி மைக்குஞ் சுடர்ப்பெரு வீதி சூழ்ந்து. ()

3490. கொடியவெந் நிரயத் தாழ்தல் குறித்துவெங் கூற்ற மேய
கடிநகர் புகுவா ரென்றும் புகுதராக் கனகக் கோயி
லடியவ ரெதிர்கொண் டேத்த வன்பிடை யருது பொங்க
நெடியகை குவித்துப் புக்கார் நிகரின்மா தவத்தின் மிக்கார்.()

3491. விழைவர நல்குஞ் சித்தி வேழத்தை வணங்கி மேருக் [றித்
குழைசிலை யொருகைக் கொண்ட குழகர்பொற் பாதம் போற்
தழைதர வுலக மெல்லாந் தண்ணளி மிகையா லீன்ற
மழைமதர்க் கயற்க ணம்மை முன்சென்று வணங்கி நின்றார்.

3492. வணங்கிநிற் பாருக் கெல்லா வுலகமும் வாய்ப்ப வீன்றுங்
குணங்கெழு குமரி யேயா யெற்றைக்குங் குலவு மன்னே
யிணங்குறு மகவாந் தெய்வக் கோலமங் கினிது காட்ட
வுணங்கிய வினையார் கண்டே முடிதரா வுவகை யுற்று. (அ௦)

அங்கயற்கணம்மைபிள்ளைத்தமிழ்.

3493. அருமைபா ராட்டுஞ் சான்றோ ரம்மைசந் நிதிமுன் னாகத்
திருமட மொன்று காட்டச் சென்றதி லமர்ந்து தெய்வ
மருமலர்க் கூந்த லம்மை மகத்திருக் கோல முன்னிக்
கருதுதோ றினிக்கும் பிள்ளைக் கவிப்பிர பந்தஞ் செய்தார்.()

அரங்கேற்றல்.

3494. மூந்துபே ரருளா லம்மை மொய்த்தபல் வளமு மேவி
ந்ந்துமந் நகராள் வேந்தர் நாயகர் கனவிற் சென்று
சந்துசூழ் வரைவாழ் நஞ்சேய் தன்னருள் பெற்று ரீங்கு
வந்துபா டியது கேட்கும் வாஞ்சையே மென்றுகூற. (அஉ)

3495. நலமலி பத்தி வாய்ந்த நாயகர் துயிலெ ழுந்து
குலமலி யமைச்ச ராதி யறிஞரைக் குறித்து நோக்கி
நிலமலி நம்மூ ருள்ள விசேடமென் னிகழ்த்து மென்னப்
புலமலி யவரு மோர்ந்தா ருள்ளது புகலுவாரால். (அந)

3496. நாதனே திருவை குண்ட நகரினி லவத ரித்தா
ராதர மிலாத மூகை யாயவ ரையாண் டெல்லை
மேதகு திருச்செந் தூரில் வேலவ ரருளப் பெற்றே
யோதல்செய் பன்னூல் வல்லா ராயின ரொருவ ரின்னும். ()

3497. செய்யகற் றோய்த்த வாடை திருவரை யுடுத்து மின்போன்
மொய்யொளிச் சடைக டாங்கி முன்னிய வேடம் பூண்டு
தெய்வவெண் ணீறு கண்டி திகழ்தரத் தலங்க டோறு
மையறச் சென்று சென்று வணங்கியித் தலத்து வந்தார். ()

3498. வந்தவர் கயற்க ணம்மை மலரடி வணங்கிப் போற்றிச்
சந்தமிக் கமைந்த பிள்ளைத் தமிழ்ப்பிர பந்தம் பாடிச்
சுந்தர வல்லி முன்பு தொழுதரங் கேற்றல் செய்வா
னுந்துதம் முள்ளத் தெண்ணி யிருந்தன ருணர்தி யென்றார்.

3499. மனநெக வறிஞர் கூறும் வார்த்தையுங் கயற்க ணம்மை
கனவில்வந் துரைத்த வாறுங் கடைப்பிடித் தரசு தேர்ந்தே
யனகமார் கனவை யாரு மறிதர வெடுத்துக் கூறித்
தனையரு மகிழ்ச்சி பொங்கத் தலைமிசைக் கரங்கள் கூப்பி. ()

3500. யாவருந் தொடர்ந்து செல்ல வெவ்விடத் திருந்தா ரந்த
மேவருந் தவத்த ரென்று வினவியவ் விடத்தைச் சார்ந்து
தேவரும் பெறுதற் கொல்லாத் திருவருள் பெற்றீர் நும்மைப்
பாவருந் தவத்தாற் பெற்றே மெனப்பல வுரைத்துப் போற்றி.

3501. யாதுநீர் செய்தீ ரெங்க ளம்மைமே லியம்பு மென்னத்
தாதுசெய் பூணீர் பிள்ளைத் தமிழ்ப்பிர பந்த மென்ன

வோதுநு மன்பா லம்மை யுரைத்தனள் கனவி லென்ன
வேதுநு மன்பே யம்மை யெழுந்தரு ளுதற்கென் றோதி. ()

3502. வெள்ளிய நீறு நல்கி மேதகு மாசி கூற
வள்ளிய குணத்தான் மிக்க நாயகர் மகிழ்ந்தேற் றேயங்
குள்ளிய நன்னு டோர்ந்தார் சுதினமு முடனே மேவத்
தள்ளிய வினையி னுரைத் தாழ்ந்தன ரழைத்துக் கொண்டு. ()

3503. சொல்லிய பலவாற் றானுஞ் சுடாலங் காரஞ் செய்தே
யல்லிய மலர்ப்பைங் கூந்த லங்கயற் கண்ணி யம்மை
நல்லியற் றிருமுன் வைகி நற்றமிழ் தனைப்பூ சித்துப்
பல்லிய முழக்கி யாரம் பஞ்செய வேண்டு மென்றார். (௬௧)

3504. ஆர்கொண்ட சடையார் மைந்த ரருளுப தேசம் பெற்றார்
கார்கொண்ட முதலா வோதிப் பிரசங்கங் கவினச் செய்து
பார்கொண்ட பருவ மொன்று பகருமத் தினத்துத் தீர
நார்கொண்ட மகிழ்ச்சி பூத்தார் நாயக ராதி யோரும். (௬௨)

3505. செற்றமில் புலவர் சிங்கந் தினமொரு பருவ மாக
வற்றமி லறிஞர் மெச்ச வணிந்தரங் கேற்றும் போது
பற்றிய புகழ்வா ரரனைப் பருவத்தின் மழவா யம்மை
வெற்றிநா யகர்ம டிக்கண் மேவிவீற் றிருந்தா ளன்றே. (௬௩)

3506. நாயக ரிறும்பூ துற்றார் நான்மறை யவர்பு கழ்ந்தார்
தூயமற் றுள்ளோர் யாருந் தோன்றுதெய் வீக மென்றார்
மேயவிச் சிறப்பி னோடு மெய்த்தவத் தலைவ ரானோ
ராயவிப் பிரபந் தத்தை யணிபெற முற்று வித்தார். (௬௪)

3507. முன்னிய பெரியோர்க் குற்ற மகத்துவ முழுதுந் தேர்ந்து
மன்னிய வரசர் செம்பொ னரியணை யேற்றி வைத்துப்
பொன்னியன் மணிக ளாலே பொருந்தபி டேகஞ் செய்து
மின்னியல் வீர கண்டை மிளிரெழிற் றாளிற் சேர்த்து. ()

3508. மழைமதக் களிறு பாய்மா மாமணிச் சிவிகை நல்கி
விழைகுடை கொடிமுன் னன விருதுகள் பலவு மீந்து
தழைதிரு மடமொன் றம்மை சந்நிதி யுறச்ச மைத்துக்
குழைதரு மன்பு பொங்கிக் குலவமற் றிதுவுஞ் செய்வார். ()

நீதிநெறிவிளக்கம். வேறு.

3509. இருபதினு யிரங்கலிப்பொ னியைந்தவரு வாயுடைய
வரியநா யகபுரமென் றறையுநக ரொன்றுதவி
மருவியநீ தியைச்சுருக்கி வகுத்தருள வேண்டுமெனப்
பொருவிலா நீதிநெறி விளக்கமுறப் புகன்றருளி. (௬௭)

மதுரைக்கலம்பகம்.

3510. அம்மையென் மகிழ்ச்சியெய்து மையரையு மெனப்பணிந்து
செம்மையுடைப் பலரிரப்பச் சிறந்தகலம் பகம்பாடி

வெம்மைதவிர் நாயகர்பால் விடைபெற்றுப் புறம்போந்து
தம்மையிகர் பவரில்லார் வடதிசையே சாருவரால். (௬௯௮)

திரிசிராப்பள்ளியையடைதல்.

3511. எண்ணரிய தருச்செறியு மிருங்கானுங் கருங்குன்றுங்
கண்ணரிய கான்யாறுங் கடந்துபரி சனஞ்சூழ
விண்ணவரு முனிவரரும் விழைந்தேத்தத் தாயான
பண்ணவர்வாழ் திரிசிராப் பள்ளிநக ரருகடைந்தார். (௬௯௯)

3512. ஓதாம வுணர்ந்தவர்தம் வருகைகேட் டுளமகிழ்ந்து
போதாரும் புனற்றடஞ்சூ ழந்நகரப் புரவலனார்
மீதாரும் பெருஞ்சிறப்பால் விரும்பியெதிர் கொடுவந்து
பாதார விந்தமலர் பணிந்தழைத்துக் கொடுசென்றார். (௭௦௦)

3513. விண்ணளவு நெடுஞ்சிகர மேவுசிரா மலைப்பெருமான்
கண்ணளவு திருவடிகள் கண்டுதொழச் செய்வித்து
மண்ணளவு பெரும்புகழ்சான் மாதவர்க்குப் பலவரிசை
தண்ணளவும் படிசமைத்துத் தணவாது மருவுவார். (௭௦௧)

வேறு.

3514. வள்ளைக் குழைமா மறுமார்ப மாலே யனைய நாயகருங்
கொள்ளைத் தமிழார் பிரசங்கங் குலவக் கேட்டு மனமகிழ்ந்து
பிள்ளைப் பெருமா ளையங்கார் வந்து பிரிய முறக்கலப்ப
வெள்ளைத் திறமி லிருவரையு நோக்கி யீது விளம்புவார். ()

3515. பேச முலக முவந்துகொளப் பெருக வியற்றி நவமாகக்
காசு பரப்ப வேண்டுமதில் வைக்குங் குறிநீர் கரைமினென
மாசு தவிருங் கருடனென மூந்தி வகுத்தா ரையங்கார்
வீசு புகழ்சால் விடையென்றார் மேற்கைப் பிரானார் மாணுக்கர்.

3516. செம்புள் பறந்து செல்லுமென வட்ட மிட்டுச் செல்லுமது
நம்பு விடைதான் முட்டமுட்டச் செல்லு நலத்த தென்றுரைப்ப
வம்பு மொழிந்தா மெனச்சாம்பி வதனஞ் சாய்த்தா ரையங்கார்
பம்பு மொழியின் பொருளுணர்ந்து மகிழ்ந்தா ரனைய பார்த்திவரே.

3517. சந்தப் பொருப்பி னமர்குமர சாமி யருள்பெற் றவருரைத்த
வந்தப் படியே வெள்விடைக்கா சகிலம் வியப்பப் போகட்டு
நந்தப் பெருகு மனமகிழ்ச்சி யடைந்தே யொருநா யகரிருந்தா
ரிந்தப் புவனத் தறந்தழைப்ப வுதித்தார் பின்ன ரிதுசெய்வார்.

வாட்போக்கிமுதலிய ஸ்தலதரிசனம்.

3518. பாக மொருபெண் குடியிருக்கும் பரமா னந்தர் வீற்றிருக்குங்
காக மெரியக் கனல்வீசும் பொருப்புங் கடம்பந் துறைப்பதியு
மாக முகிறோய் தருமீங்கோய் மலையுந் திருப்ப ராய்த்துறையு
மாக மணிமால் பணிபாச்சி லாச்சி ராமப் பெரும்பதியும். ()

3519. இமையார் வணங்கு வைஞ்ஞீலி யென்னுந் தலமுந் தவத்துறையு, மமையா வளங்கண் மிகப்பெருகு மானைக் காவும் பாற்றுறையு, நமையா ளொருமூக் கீசரமு நன்றே பொலியுங் கற்குடியுங், கமையா வெறும்பி யூர்மலையுங் கவலை களையு நெடுங்களமும். (௧௦௭)

3520. பற்று முருக்குந் திருக்காட்டுப் பள்ளி நகரு மற்றுளவுஞ்
சற்றும் விலகாப் பரிசனங்கள் சூழச் சார்ந்து சார்ந்துபணிந்
தெற்று திரைநீர்க் காவிரிசூ ழியலார் திரிசி ராமலைக்க
ணுற்று மகிழ நாயகர்க்குங் காட்சி கொடுத்தங் குறைகின்றார்.

சமயவாதம்.

3521. ஆய பொழுது கருடனைக்கொண் டவையிற் றோற்ற வையங்கார், மேய பலவை ணவர்கடமை யேவ வவருள் விரைந் தொருவர், பாய புகழ்சால் குமரகுரு பரமா முனிவர் முனம்போந்து, மேய சமய வாதமது செய்வோம் விருப்ப முறினென்றார். (௧௦௯)

3522. என்றபொழுது முறுவலித்தே யெங்கு நிகழும் பெரும்புகழா, ரொன்ற வதனுக் குடம்பட்டா ருணர்விற் சிறந்த நாயகரு, மன்ற வறிஞர் பலரும்வர வழைத்தார் பாஞ்ச ராத்திரர்முற், றுன்ற நெடுமால் புகழெடுத்துச் சொல்வா ரதுசற் றெடுத்துரைப்பாம்.(௧௧௦)

வேறு.

3523. அவர்திரு நெடுமா லாதி யென்றன ரறிவின் மிக்க
இவரதற் குண்மை யந்த மென்பது முண்டே யென்றா
ரவர்நறுந் துளவத் தாரோ னருபமே யென்றா ராய்ந்த
இவர்பெருங் கபாலத் தேற்ற தெவருடற் செந்நீ ரென்றார். ()

3524. அவர்மறு மார்பன் ஞானச் சோதியென் றறைந்தார் சான்ற
இவரவன் மாயை தோயா திருப்பனே லுண்மை யென்றா
ரவரரி மாயை போக்கும் வல்லனென் றறைந்தா ரப்போ
திவரொரு மான்பொய்ம் மானென் றெண்ணுற் தென்னையென்றார்.

3525. அவர்திகி ரியன்சு வேச்சை யாலுருக் கொள்வ னென்றா
ரிவர்மகத் தெச்ச னுப்புக் கிழந்தனன் றலையை யென்றா
ரவர்கரு மேனிச் செம்ம லாரண முரைத்தோ னென்றா
ரிவர்சிவ மாதி நான்கு வாக்கையு மெழுப்பு மென்றார். (௧௧௩)

3526. அவர்திரு ம[illegible]ளன் யாவு மளித்தருண் முதல்வ னென்றா
ரிவர்புதல் வரைக்கா வாம லிருந்ததா வியைய்யு மென்றா
ரவர்பிறப் பொழிக்க வல்லோ னூழியான் றானே யென்றா
ரிவர்பரிப் பிறவி தீர்ந்த தில்லையே யின்னு மென்றார். (௧௧௪)

3527. அவர்பிர ணவத்தின் மேய பொருளரி யாவ னென்றா
ரிவர்நறுங் கடுக்கை சூடு மிறையவர் யாவ ரென்றா
ரவர்மதக் களிறு கூவ வடைந்தவ னரியே யென்றா
ரிவரிறை யலன்செல் வானோ வேவல னிருக்க வென்றார். ()

3528. அவர்புரு டோத்த மன்கா ணருளுடை முகுந்த னென்று
றிவரொரு சாத்தன் றாயென் றியாவரு மறிவ ரென்று
றவரிரா வணனைக் கொன்றே யமரரைக் காத்தா னென்று
றிவரிரா வணனென் பேராய்ந் தெண்ணுக வீரமென்றார். ()

3529. அவர்முதற் குணத்த னென்று மாழியம் படையோ னென்று
றிவரவற் கதுசெ யற்கை யியற்கைதா மதமே யென்று
றவர்சுர ரமர ராக வாழிமுன் கடைந்தா னென்று
றிவர்கரு விடமுண் ணேனேல் யாவரு மிறப்ப ரென்றார். ()

3530. அவரரி யோமென் றுதி யறைகுவ துணர்வீ ரென்று
றிவரஃ தம்மை யப்ப ரியற்றிரு நாம மென்று
றவருல கனைத்து மாக்க வயனைமுன் னீன்று னென்று
றிவருல களிக்க மாலே யீன்றனன் பிரம னென்றார். (கக௮)

3531. அவரிமை யவர்ச காய னரவணைச் செல்வ னென்று
றிவர்துவட் டாவின் மைந்தன் செய்ததெச் சகாய மென்று
றவர்திறல் வாணன் போரி லிரிந்தவன் யாவ னென்று
றிவர்தவம் புரியத் தானே தருவர மெண்ணி யென்றார்.(கக௯)

3532. அவரவ னசையி னன்றி யணுவுமற் றசையா தென்று
றிவர்பரன் யோகின் வேளை யேவிய தெற்றுக் கென்று
றவரிரு கண்ணு மெங்க ளரிக்கிரு சுடரே யென்று
றிவருமை பரன்கண் பொத்த விருண்டதெ னுலக மென்றார்.

3533. அவரடுத் தவரை வஞ்சி யாதவன் றிருமா லென்று
றிவரிது மெய்யே லோர்பெண் ணெய்திய தெவ்வா றென்று
றவருல கோது நாரா யணனிஃ தறிவீ ரென்று
றிவர்நுனித் துணரு நாரா யணியென்பாள் யாவ ளென்றார். ()

3534. அவரரி முழுந்தாட் பூநும் மண்ணைல்சூ டினனே யென்று
றிவரரி தானந் தானி யெம்முடை யிறைவ னின்னு
மவரவர் விழைந்த தேத்தே யருளுவான் மூலகன் றப்போ
டிவரெழு முதல வற்றி னிழிந்ததோ முழந்தா ளென்றார். ()

3535. அவர்வியா பகனு வுள்ளா னற்புத நெடுமா லென்று
றிவர்சிலை யடியோ மத்தோ வெங்கணும் பட்ட தென்று
றவர்வரங் கொண்டேற் றானை யட்டனன் றிருமா லென்று
றிவரவன் றன்னை யட்ட தெவ்வர வலியா லென்றார். (க௨௩)

3536. அவருல குண்ட காலை யகப்படா ரெவரே யென்று
றிவரகப் படான்கா ணண்டங் கடந்தவ னென்று மென்று
றவர்மறை யவர்க்குத் தேவா மரவிந்தக் கண்ண னென்று
றிவரவ ரியம்பும் காயத் திரிப்பொருள் யாவ னென்றார்.(க௨௪)

3537. அவரர வணையான் சார்பே யுயர்ச்சியென் றறைந்தா ராய்ந்த
விவர்டணி கருடன் றன்னை வினவிய தெண்ணு மென்று
ரவருயிர் மயக்கம் போக்கி யருள்பவ னரியே யென்று
ரிவர்மயக் கொழிக்குங் குல்லை யாதலா லிதுமெய் யென்றார்.()

3538. இன்னண மவர்சொல் வார்த்தை யாவையு மறுத்துப் பின்னு
மன்னநா யகரை மற்றை யறிஞரை யினிது நோக்கி
முன்னவ னுய வெங்கண் முதலவன் பெருமை சற்றே
நன்னர்யாம் புகல்வோங் கேண்மி னென்றனர் நவில லுற்றார்.

வே று.

3539. ஓங்கு காயத் திரிமனுவுக் குரிய பொருளா தலினானுந்
தாங்கு தாச ரதிவணங்கித் தாபித் தேத்து தலினானும்
வீங்கு கயிலைப் பொருப்படைந்து மேன்மேற் கண்ணன் விழைந்திரப்பப்
பாங்கு பெறுநற் குணத்தமைந்த மகப்பே றுதவும் பரிசானும்.

3540. வயங்கு மொருநேத் திரமாய மலரோ டோரா யிரங்கமல
நயங்சொண் மலர்கொண் டெம்மானை யரிநன் கருச்சித் தலினானு
மியங்கு மசுரர் தலைசாய்ப்ப வெஃக மதுதந் திடலானு
முயங்க வெழுந்த வாலால முவப்பி னருந்து திறத்தானும். ()

3541. கரும்பு குழைக்குங் காமனுடல் கருக விழித்த திறத்தானும்
விரும்பு மதலை நடுங்கவரு வெங்கூற் றுதைத்த விறலானு
மிரும்பு முதலா மும்மதிலு மெரியின் மூழ்கச் செயலானு
மரும்பு கொடிய மனத்தக்கன் வேள்வி யழித்த வதனானும்.()

3542. வலிய பாச பதப்படைகாண் டீபற் குதவு வளத்தானு
மெலிய வொருமா னிடமடங்கல் வீரங் கெடுத்த வதனானும்
பொலிய மகடூஉ வரியாகப் புணர்ந்து சாத்தற் பெறலானு
மொலிய புனல்வைப் பிடத்தான்றே ரநேகர் தோற்ற வுறலானும்.

3543. அன்னர் தமக்கு வேண்டுவன வெல்லா மளித்த வருளானு
நன்ன ரொருபான் பிறப்பினுமால் பூதித் தேத்து நலத்தானு
முன்ன ரிருவ ரடியினொடு முடியுந் தேட வெழலானுஞ்
சொன்ன முதலீ ருதியுயிர்க் குணரீத் தொளிருந் துணிபானும்.

3544. காசி வரைப்பிற் பொய்ம்மொழிந்தோன் கைதம் பித்த வதனானு
மாசின் மதில்செற் றிடுஞான்று மாலே ருய்த்தாங் குதலானும்
வாச மலரோ னளவிறலை மாலை யணியும் பொலிவானும்
பாச மறனா னமும்வீடும் வேட்டோர்க் குதவும் படியானும்.()

3545. துன்று கருணைப் பசுபதியே சொற்ற பலவா னவருள்ளு
மென்று முயர்ந்தோ னெனத்தெளிவீ ரின்றே நேற்றே யொருவனியற்
றன்று குழைமண் ணிடுநீவி ரந்தோ சைவ ரிந்தைகொள
லொன்று புழுதி மண்வாயி லிட்டுக் கொள்றகோ வுரையீரே.

3546. என்று முடிவு படவுரைத்தா ரெங்கள் சைவ சிகாமணி யார், மன்று வவையி லிருந்தோர்கள் யாரு மெழுந்து வணங்கினார், பொன்னன் மணியா லபிடேகம் புரிந்தார் மகிழ்ந்து நாயகரும், பின்னு மொருமா மடமியற்றிக் கொடுத்தார் மலைபோற் பிறங்கவே.()

3547. அன்ன பணியிற் பொலியரசர் தம்பால் விடைபெற் றங் ககன்று, சின்ன முழங்கக் குடைநிழற்றச் செம்பொற் சிவிகை மேற் கொண்டு, பன்ன வரிய பரிசனமும் பாங்கு சூழ வழிக்கொண்டார், கன்னல் கமுகிற் பொலிதருகீழ்க் காட்டை நோக்கி நடக்கின்றார். ()

அன்பிலாலந்துறைமுதலியவற்றைத்தரிசித்தல்.

3548. அண்ண லிடங்கொண் டமரன்பி லாலந் துறையை வழி பட்டுக், கண்ண வினிய கதிகாட்டுங் கானூர்க் கரும்பைக் கைதொ ழுது,வண்ண மதில்சூழ் மழபாடி வானோர் புகழு நெய்த்தான, மெண் ண மருவப் பணிந்தேத்தி யெதிர்தோன் றையா றெய்துவார். (௧௩௬)

வே று.

3549. சதிர்கொளை யாற்றமர் தக்க யாவரு
மெதிர்கொள வவரொடு மெய்தி நீண்முடிக்
கதிர்தவ ழாலயங் கருதி யுட்புகூஉ
வதிர்மறை முதலித னடிகள் போற்றினார். (௧௩௭)

3550. பகரரு சினைவெளிப் படுத்த வாவியு
நிகரறு கயிலையு நீள்வி மானமும்
புகரற வறம்வளர்த் தவள்பொற் கோயிலு
நகர்வள முழுமையு நன்று நோக்கினார். (௧௩௮)

3551. பொய்யிலி யாரமர் பூந்து ருத்தியூர்
வையகம் புகழ்தர வயங்கு கண்டியூ
ரையர்சோற் றுத்துறை பழன மாதியா
மெய்பமை தலமெலாம் விரும்பிப் போற்றினார். (௧௩௯)

3552. ஆயிடை நின்றெழுந் தறிவின் மேலவர்
மாயிரும் புவிக்கெலாம் வரங்க ணல்குபு
தாயன தங்குரு சாமி வைகுதன்
மேயதோர் திருமலை விருப்பிற் போற்றினார். (௧௪௦)

3553. திருவலஞ் சுழியொடு திகழ்பட் டீச்சரம்
பொருவருஞ் சத்திமுத் தம்பொன் மேற்றளி
யருள்செறி தருபழை யாறை மற்றவுந்
தெருளுறப் பணிந்துபோய்க் குடந்தை சேர்ந்தனர்.(௧௪௧)

3554. முற்றிய வருட்குட மூக்கு வள்ளலார்
பற்றிய பற்பல தளியுஞ் சென்றுசென்
றுற்றிய வன்பினு ளுவந்து போற்றினார்
சுற்றிய நகரமுஞ் சூழ்ந்து தாழ்ந்தரோ. (௧௪௨)

3555. பொருதுறை புகுமயிற் புலவர் மாணவர்
விருதுறை பரிசன மேவிச் சூழ்வர
வெருதுறை தம்பிரா னினிது மேவிய
மருதுறை மாநகர் வந்து போற்றினர். (கசங)

3456. வீழ்தர மறமெலாம் விரும்பி நல்லறம்
வாழ்தர வவதரித் தோங்கு மாண்பினர்
தாழ்தர லிலாதறந் தழையப் பிப்பிலஞ்
சூழ்திரு வாவடு துறைவந் தெய்தினர். (கசச)

3557. அருண்மலி மாசிலா மணியை யம்மையைத்
தெருண்மலி மூலரை யரசைச் சேவியா
மருண்மலி மனத்தருட் புகாத மாண்புசால்
பொருண்மலி திருமடம் புகுதன் மேயினர். (கசரு)

3558. பற்பல ரெதிர்கொளப் பாங்கி னேகுபு
மற்பொலி யருட்டிரு மாளி கைப்பிரான்
சிற்பர வுருநமச் சிவாய தேசிகன்
பொற்பமர் திருவடி புகழ்ந்து போற்றினர். (கசசு)

3559. வெள்ளிய நீறுகண் மணியு மேதக
வொள்ளிய காவிதோ யுடையும் வேடமூந்
தெள்ளிய சடையுமுண் டிதமுஞ் செவ்விசால்
வள்ளிய குழாங்களை மகிழ்ந்து நோக்கினர். (கசஎ)

3560. தாதமார்க் கத்தருந் தழுவு மைந்தரென்
றோதமார்க் கத்தரு முலப்பி லாச்சக
நீதமார்க் கத்தரு நெடுஞ்சன் மார்க்கராம்
போதமார்க் கத்தரும் பொலியக் கண்டனர். (கசஅ)

3561. சாற்றுமித் தான்மோர் தானந் தானெனப்
போற்றுசீர்க் குருநமச் சிவாய புண்ணிய
ஞாற்றுபே ரருணினைந் தகம கிழ்ந்தனர்
தோற்றுபே ரறந்தலை யெடுப்பத் தோன்றினர். (கசகூ)

3562. தரமலி குமரசு வாமி சற்குரு
வரவர வெனத்திரு வாய்ம லர்ந்திடக்
கரமலர் குவித்தனர் வணங்கிக் காமர்சா
லுரவரு கிடனுற வுவந்து வைகினர். (கரு௦)

3563. போதத்திற் சித்தியிற் பொருந்த மற்றுள
மேதகு நூல்களிற் பலவி னவியே
யாதரங் கூர்தெளி வுண்மை யாய்ந்தன
ரோதுநங் குரவனே யெனவுள் ளோர்ந்தனர். (கருக)

3564. மருவுற வளவளாய் மகிழ்ந்து பின்னெழீஇப்
பொருவரு வடமடம் பூசை யாற்றிவர்
தருள்செறி பந்தியி லமுது கொண்டனர்
வெருவிலவ் விடனீஇ விடைபெற் றேகினார். (கடுஉ)

3565. பிரிவரும் பரிசனம் பெட்பிற் சூழ்தரப்
பரிவரும் விருதுகள் பலவு மொய்த்திடத்
திரிவரு வளஞ்செய்மா யூரஞ் சேர்ந்தனர்
புரிவரு சடையரைப் போற்றித் தாழ்ந்தனர். (கடுங)

3566. அங்குநின் றெழுந்துபோய்த் தருமை யண்ணுபு
சங்குநின் றவிர்குழைத் தரும லிங்கர்தம்
பொங்குமென் மலரடி போற்றிப் புக்கனர்
தங்குமெய்ஞ் ஞானசம் பந்தர் தந்தளி. (கடுச)

3567. ஆவயி னெதிர்கொளு மளவி லாரொடு
மேவரு ஞானசம் பந்தர் மேன்மைமுற்
றோவற வுணர்ந்தவ ருணர்ந்து போற்றினார்
தேவரும் பெறற்கருஞ் சித்தி பெற்றவர். (கடுரு)

3568. நவலுமித் தானமு நோக்க லாமெனக்
கவலறு மனத்திடைக் கருது மேல்வையி
லவமகல் பலரெழுந் தருள வேண்டுமா
லுவமையி லீரென வுவந்து சென்றனர். (கடுசு)

3569. திருமடத் துட்புகுந் தருளித் தேசிக
ரருகுசென் றிருந்தன ரான்ற கேள்வியின்
மருவிய பற்பலர் வந்து சூழ்ந்தனர்
பொருவற வளவளாய் மகிழ்ச்சி பூத்தனர். (கடுஎ)

3570. நடைகெழு கல்வியு நயக்கு ஞானமுந்
தடையற வெழுபிர சங்க வாய்மையு
மடையுடைந் தெனக்கவி வடிக்கும் வாக்குமிக்
குடைமயி னேக்கியாங் குளர்வி யந்தனர். (கடுஅ)

3571. மாசறு பெரும்புகழ் மாசி லாமணித்
தேசிகர் பெருவளச் செந்தி லாதிபர்
வீசிய பேரருள் சுமந்த மேலவர்
தேசுசான் முகங்குறித் திதனைச் செப்புவார். (கடுகூ)

3572. குற்றமில் கல்வியுங் கோதின் ஞானமு
மற்றமில் குமரவே ளருளிற் பெற்றவர்
மற்றவன் றந்தையார் மலர டித்தொழும்
புற்றவர் தமைவணங் கார்கொ லோவென்றார். (கசு0)

3573. வெள்ளிய நீறணி மேனி யாரெலாம்
வள்ளிய தொழற்குரி மாண்ப ராயினுந்
தெள்ளிய தாயவாச் சிரம பேதத்தா
னள்ளிய விதியையு நயப்ப ரேயென்றார். (கசுக)

3574. மனத்திடை மாசிலா திருத்தன் மாண்பற
முனப்படு பிறவெலா மோசை நீரவே
யெனப்புக லுதலெவ னென்ன மாசறன்
மினப்படு காட்சியன் றென்று விண்டனர். (கசுஉ)

3575. காட்சியே கருதுதல் கந்த வேளருண்
மாட்சிநும் போலுநர் மரபன் றாலென
வாட்சிசா லுண்மையை யறித ராவணப்
பூட்சிதா னருளொடு புணர்த ராதென்றார். (கசுங)

3576. பிறரறி தலினெவன் வருதல் பேசுமென்
றறமலி தருமைவா ழவரு ரைத்திட
நெறியின ரிணையரென் றுணர்ந்து நீணிலங்
குறிவழி பாடுசெய் துய்யக் கொள்கென்றார். (கசுச)

3577. ஆடல்வாம் புரவியோ ரரச ராயினார்
வேடமே பொருளெனக் கொண்டு விண்ணரு
நாடரும் பெரும்பத நண்ணி னாரது
கோடலே பொருளெனப் பின்னுங் கூறினார். (கசுரு)

3578. ஐந்துபே ரறிவெனுஞ் செய்யு ளத்தமென்
முந்துநீ ரியம்புகென் றவர்மொ ழிந்திட
நந்துமச் செய்யுளின் பொருண விற்றுகே
ளுந்துநீர் செம்மையேற் றுறினென் றாரரோ.* (கசுசு)

வேறு.

3579. எங்க ளாரியன் மேற்றுதி யாங்களெப் போது
முங்கள் பேரரு ளாற்செயல் வேண்டுமெற் றுதற்குத்
திங்கள் சூடியோன் றிருமக னாருட் செல்வ
நங்கள் வாழ்வெனப் பெற்றுளீர் நயந்தருள் புரிவீர். (கசுஎ)

3580. என்று வேண்டலு மும்மணிக் கோவையொன் றியம்பி
யொன்று மாதுதித் திருமினென் றவர்காத் துதவிச்
சென்று நீள்வட மடம்புகூஉப் பூசனை செய்து
வென்றி மேவுவார் சிலபகல் விழைந்தவ ணமர்ந்தார். (கசுஅ)

* இதன் பின்னிருந்த எ - பாடல்கள், வரலாற்று முறைமையைச் செவ்வனே தெரியாதவர்கள் சொல்லக்கேட்டுச் செய்யப்பட்டமையின், கொள்ளத் தக்கனவல்லவென்று பிள்ளையவர்கள், நாங்கள் பாடங்கேட்ட காலத்திற் சொல்லியிருந்தமையின் அவற்றை இங்கே பதிப்பிக்கவில்லை. இந்தப்பாகத்திற் குறித்த பாடல்களைப் பின்பு அவர்கள் இயற்றவில்லை.

3581. கோல மார்தரு மாசிலா மணிப்பெருங் குரவர்
சால வன்புசெய் தன்மையாற் பந்தியிற் றமுஞ்
சீல மார்தரு திருவமு துண்டுடன் றிளைத்தார்
ஞால மேத்துசெந் தூர்ப்பிரா னயந்தமா ணாக்கர். (௧௬௯)

3582. மன்னு மாதரங் கூர்தர விங்ஙன மருவித்
துன்னு மப்புரப் பாங்குறு தலஞ்சில தொழுது
பன்னு மேன்மையா ரூர்ப்பிரான் பங்குனித் திருநாள்
கொன்னு மார்வத்திற் பணிதரல் குறித்தெழுந் தனரே. ()

வழுவூர்முதலியவற்றைத்தரிசித்தல்.

3583. மலையி னின்றிழி யருவியின் மும்மதம் வடிக்குங்
கொலையி னின்றுநீங் காப்பெருங் கொடுங்களி றுரித்தார்
நிலையி னின்றவர் செறிவழு வூரைநேர்ந் தருண்ணூற்
றலையி னின்றதாட் டாமரை மலர்பணிந் தெழுந்தார். (௧௭௧)

3584. கரிய கண்டர்வாழ் தருதிரு வம்பர்மா காள
மரிய மாதவர் தொழுதெழு வீழிநன் றமையும்
பெரிய வாஞ்சிய முதலிய பெருந்தல மெல்லா
முரிய காதலிற் போற்றியா ரூர்மருங் குற்றார். (௧௭௨)

3585. கோல மார்தலத் தார்பலர் வந்தெதிர் கொள்ளச்
சீல மாதவப் பெரியவர் சிறப்பொடு சென்று
ஞால மேத்தணி முடிநெடு கியநல வீதிப்
பால லோசனன் றிருவருள் பெருக்கெழப் பணிந்தே. (௧௭௩)

3586. ஓங்கு கோபுர வாயிலுட் புகுந்துமிக் குயர்சீர்
வீங்கு கின்றதே வாசிர யப்பெயர் மேவத்
தாங்கு காவணம் பணிந்துபூங் கோயிலுட் சார்ந்தார்
தேங்கு காதலிற் புற்றிடங் கொண்டவர் திருமுன். (௧௭௪)

3587. கரையி லன்புமீப் பொங்கிடக் கைதலை முகிழ்ப்ப
விரைய மார்பணி நீற்றினை விழிகணீர் கரைப்பப்
புரையி லாதகண் பெற்றபே றிதுவெனப் போற்றி
யுரைசெ யாதபே ரானந்தத் திளைத்துவப் புற்றார். (௧௭௫)

3588. மாயன் மார்பமும் வானக நாடுமுண் மதியா
தாய பேரெயில் சூழுமத் தளியகத் தமர்ந்து
மேய நந்தியா கேசரை விருப்பொடு கண்டு
பாய கிண்கிணித் தாள்பணிந் தெழுந்தனர் பரிந்தே. (௧௭௬)

3589. பரவு சீரசு லேச்சுர முதலிய பலவும்
விரவு மன்பினொ டென்றனர் மேதகப் பணிந்து
புரவு சாலொரு திருமடம் புக்கினி தமர்ந்தா
ரரவு நீர்ச்சடை யண்ணலார் புகழ்விரித் தறைவார். (௧௭௭)

**திருவாரூர்நான்மணிமாலை.**

3590. அன்பு மீக்கொடு நான்மணி மாலையொன் றறைந்தாங்
இன்பு மீக்கொடு பலர்வியப் புறவரங் கேற்றி
வன்பு மீக்கொடு நவிமல மாய்த்தவர் மகிழ்ந்தார்
துன்பு மீக்கொடு சிலசம வாதர்க டொக்கார். (௧எ௮)

**சமயவாதமும், மறுப்பும்.**

3591. படிமை யாளர்நீர் பலவகை நூல்களும் பயின்றீர்
மடிமை யின்றியெப் பொருள்களு முரைத்திட வல்லீர்
கடிமை யார்கொளுஞ் சமமெனல கடிந்துநீ ரண்டா
ணடிமை யென்றுரை செய்வதெவ் வாறுசற் றறைவோம். ()

3592. அநாதி நித்திய மகண்டபூ ரணசிவ மூமிரு
மநாதி நித்திய மூத்துயிற சமமென வறைந்தா
ரநாதி நித்தியன் சருவவல் லவனுயி ராய
வநாதி நித்தியன் சுதந்தர கீனனென் றறுத்தார். (௧௮௦)

3593. பச்சை மாமயில் பாகனும் பகருமான் மாவு
மிச்சை ஞானநற் கிரியையென றியம்பிடு மூன்றால்
விச்சை யாளர்கள் சமமென விரித்துரை செய்வார்
கொச்சை யீரலீ ரிதற்கிறை கொடுத்துடு மென்றார். (௧௮௧)

3594. ஏயு மிச்சைமுன் மூன்றையு முயிர்ப்பொருட் டிறைவன்
றோயும் யார்பொருட் டனையமூன றையுமுயிர் தோயும்
பாயு நூன்முறை யின்றியா ரியரெனப பயிலவுற்
றூயு நூலுணர்ச் சியரென வழக்கெடுத் தறைவீர். (௧௮௨)

3595. என்று கந்தவே டிருவருள் பெற்றவ ரியம்பக்
குன்று வார்சிலை கோட்டுபு நாணராக் கூட்டி
யன்று மாறகணை பூட்டிமுப் புரத்தெரி யமைத்த
மன்று ளாடிமாத் துரங்கலோ சிதமெதன வகுத்தார். (௧௮௩)

3596. உண்மை யென்பது சற்றுமோர் கிலிர்தனே யுணர்வார்க்
கண்மை யாகிய தம்பிரான் போலல ஞன்மா
வண்மை யாயுணர்த் திடவுணர் சிதமெதன மதியா
வெண்மை யீறுமக் குரைததலிற் பயனிலை யென்றார். ()

3597. திருந்து ஞானசம் பந்தர்வெள் ளெலும்புபெண் செய்தார்
பொருந்து மாமுய லகனெழித் தள்ததனர் பொன்போற்
றிருந்து மோர்கொடிக் கோபவுத தனறலை சிதைத்தார்
வருந்து மாறென வோதினர் மறறவா மீட்டும். (௧௮௫)

3598. இரும்பு தீயடுத் தழற்றிடு மழற்றுவ திரும்போ
வரும்பு செந்தழ லோசிறி தாய்ந்துபார்த துரைப்பீர்
விரும்பு மீசனுஞ் சீவனுஞ் சமமென விரித்துப்
பொரும்பு ராணரே யென்றனர் புகழ்ப்பெரும் புலவர். ()

3599. என்று கூறலு மெத்தனை நாள்களிங் கிவரோ
டொன்று வாதநாஞ் செய்யினு மறுப்பரென் றுன்னிக்
கன்று நெஞ்சராய் மறுத்துரை யாமலே கழிந்தார்
நன்று நன்றிவர் வாதமென் றிவர்நனி நகைத்தார். (௧௫௭)

தலயாத்திரை.

3600. ஆய காலையி லத்தல நின்றெழுந் தரனூர்
மேய தூய்மையின் மிகப்பொலிந் தோங்குகீழ் வேளூர்
பாய மாமறைக் காடுநால பரவுநன் றுகை
தீய தாயது தீர்த்தருள செறிக்குநள் ளாறு. (௧௫௮)

3601. திங்கள் சூடிதன் றிருப்பணிப் பெருமையைத் தெரிப்பா
னெங்க ளுவினுக் கரசுழு வாரங்கை யேந்து
யங்க ணாப்பணி புரிபுக லூரரு மகவாற
றங்கள் வெம்பசி தணித்தவா தயங்குசெங் காடு. (௧௫௯)

3602. பாங்கு சாலகட வூரருள் பதிந்தவெண் காடு
தேங்கு மற்றுள தலமெலாஞ் சென்றுசென் றிறைஞ்சி
வாங்கு நீர்த்துறை வாவியில வாளைமீன் பாய
வோங்கு சீர்கொள்புள ளிருக்குவே ளூரைவந் துற்றார். ()

3603. விருப்பி னுலெதிர் கொள்ளுவார் தம்மொடு மேவிப்
பொருப்பி னுற்சிலை செய்துமுப் புரமடு புராண
ரருப்பி னுறபுரி முலையுமை யாளொடு மமர்ந்த
சுருப்பி னுற்பொலி மலர்செறி சுடர்த்தளி புகுந்தார். (௧௬௧)

3604. வந்து ளாருடற் பிணியொடு பவப்பிணி மாய்க்கு
மிந்து வாழ்முடி வயித்திய நாதனை யிடுகித்
தந்து நேர்டைத் தையலைக் கண்டனர் தாழ்ந்தார்
முந்து கண்கணீர் பொழிதர வானந்த முதிர. (௧௬௨)

3605. தமாது தீரரு மன்புயின் றள்ளவந் நின்று
நமாது கண்மணி போலபவர் நீங்கிநன் குள்ள
மமாகு ழைந்துட வானந்த முகிழ்த்தெழ முத்துக்
குமார புங்கவன் றிருமுனர்க் குறுகினர் மாமீதா. (௧௬௩)

3606. துதுக்க முந்துடு நாச்சுடர்த் திருவுருக் கோல
மதுக்க முந்துடும் விழியருளா வடிவனை வாங்கிப்
பதுக்க முந்துடு மனநிறை யின்பத்துற் படிந்து
கதுக்க முந்துடுங் கருமலத் தடைதவி ரறுமேவ. (௧௬௪)

3607. ஆடு வார்மனங் குழைதர வரகர வென்று
பாடு வார்விழி பொழிதரு மருவியிற படிவார்
நீடு வார்பெருங் களிமயாளி துகழ்நெட் டுயிர்த்து
மூடு வார்புள கத்துனை மேனியை முன்னோர். (௧௬௫)

3608. இந்த வாறுபே ரானந்த மூகிழ்த்தெழ வேத்திச்
சந்த மாரொரு திருமடம் புகுந்தனர் தணவா
வந்த நாயக ரருள்குறித் துறங்குமப் பொழுதக்
கந்த னாரிளங் குழவியாய்த் தோன்றினர் கனவில். (௧௯௬)

முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்.

3609. இங்கு நம்மைநீ பாடுறு தேகலை யென்று
தங்கு பேரரு ளானுதற் பூதியுஞ் சாத்திப்
பொங்கு பேரெழிற் புண்ணியா மறைந்தனர் விழித்தா
ரெங்கு மாய்விரிந் தெழுந்துபைங் கொழுந்துகொ ளிசையார்.

3610. குமிழ்ம றிந்தகட் டையறன் மகனருள் குறித்தாங்
கிமிழ்பெ ருங்களி யோடுபொன் பூத்தவென் றெடுத்தே
யமிழ்து முற்சுவை புறந்தரச் சுவையமை பிள்ளைத்
தமிழ்மு டித்தனர் பாடுபு புலவர்தந் தலைவர். (௧௯௮)

3611. இன்ன செந்தமிழ் யாருமேத் திடவரங் கேற்றி
யன்ன மாநகர் தனிற்சில நாள்வதிந் தகன்று
பொன்ன வாங்கணைக் காழிநா யகனடி போற்றிச்
சொன்ன மாமதிற் றில்லையை யடைந்தனர் தொழுதே. ()

3612. எதிர்கொள் வாரொடும் பெருந்திரு வீதியை யிறைஞ்சிச்
சதிர்கொள் செம்மணிக் கோபுர வாய்தன்முன் றாழ்ந்து
பிதிர்த ராத்திரு மாளிகை வலங்கொடு பெயர்ந்து
முதிரு மன்பினற் றிருநட ராசர்முன் சென்றார். (௨௦௦)

3613. நீடு மானந்த நிறைந்தெழ நெஞ்சநெக் குருகக்
கூடு மஞ்சலி யிருகரஞ் சென்னிமேற் குவியத்
தேடு மாலயற் கரியராய்ச் சிதம்பர மன்று
ளாடு வார்நடங் கண்டன ரவசராய்த் தளைத்தார். (௨௦௧)

3614. ஐயர் வாழ்திரு மூலட்டா னமும்புன லவல்வாய்ச்
செய்ய தாமரை மலர்திரு வேட்கள நகருங்
கைய ரோவுநெல் வாயிலுங் கண்டவர்க் கருளே
பெய்ய வாழ்கழிப் பாலையும் பெட்டடைந் திறைஞ்சி. (௨௦௨)

3615. தில்லை மாநட ராசர்த நடனமுஞ் சேவித்
தெல்லை யில்லதோர் களிப்பினு லாவயி னிருப்பார்
வல்லை மாமடம் வளம்பல மலிதரச் சமைத்துத்
தொல்லை மாவினை தீர்ந்தவர் சூழ்சிறப் போடும். (௨௦௩)

சிதம்பரமும்மணிக்கோவை.

3616. ஈண்ட வாவயி னிங்ஙன மமர்தரு மேல்வை
கூண்ட செம்பொருள் செறியொரு மும்மணிக் கோவை
யாண்ட குஞ்சிதச் செய்யதா மரையடிக் கணிந்து
நீண்ட பேரின்ப முழுகினர் நிகழுமப் போது. (௨௦௪)

## சிதம்பரச்செய்யுட்கோவை.

3617. பூதி சாதனக் கிழமையர் சிலர்வந்து போற்றி
நீதி நூன்முதற் பலவுரைத் தீர்கிழ் யாப்பிற்
காதி நாளுதா ரணமெலாம் பரமத மவாவு
மோதி யாமுயு மாறருள் செய்விரென் றுரைப்ப. (உ0ரு)

3618. காவை நேர்தர மகிழ்ந்துளங் கனிந்துபல் செய்யுட்
கோவை யாப்பியற் காட்டினி துரைத்தனர் கொடுத்தார்
மாவை வெண்டிரை வாரிவை விலங்கலை மாய்த்த
தூவை வேலுடைத் தோன்றலார் சேவடித் தொழும்பர். ()

## சமயவாதம்.

3619. அரிய செய்யுணுண் பொருளெலா மடைந்தவர்க் கருளிப்
பெரிய ராயிரக் காற்பெரு மண்டபம் பிறங்க.
வுரிய சான்றவ ரோடுறை பொழுதிலங் கொருசார்
விரிய வந்தகம் பிரமவா தியர்புடை மிடைந்தார். (உ0எ)

3620. அன்று கந்தனர் புரிதரு பேரரு ளடைந்தோ
மென்று வந்தொரு சைவசித் தாந்தியா ரிங்கு
நன்று மேவின ரென்பரா லவரெவர் நாங்க
ளொன்று பேசிட வந்தன மெனவிதந் துரைத்தார். (உ0அ)

3621. சோதி நாமென மருளுறச் சொற்றலை மாயா
வாதி யாருரை கேட்டலுங் குறுநகை மலர்ந்து
நீதி யாரவ ரிக்குழாத் தேயுளார் நீங்க
ளோதி யாணிறுத் துவிரென மற்றவ ருரைப்பார். (உ0கூ)

3622. ஏக மேயென மறையெலா முழங்கவு மென்னோ
மோக நீரராய் மூன்றென லென்றவர் மொழிந்தார்
பாக வாய்மையாற் பரவுமெய்ஞ் ஞானநற் பயனூன்
மாக நாட்டிய நும்மையொப் பாரெவர் மதிக்கின். (உக0)

3623. ஏக மென்றுமா மறையுரைத் திடுமென விசைத்தீ
ரேக மென்றெவர்க் குரைத்ததம் மறையசத் தேலா
தேக மென்றது பதியையே யிதுசிறி தெண்ணு
தேக மென்றதா லென்பிற் நும் மறிவுநன் றென்றார். (உகக)

3624. ஏக மென்றதே துணிபெனி னியம்பிய மறைதா
னேக மென்பதை மறந்து மூன் றிசைத்திடுங் கொல்லோ
வேக மென்றதை யன்றிமூன் றென்னெனி னிசைப்போ
மேக வாதர்காண் ஞாதிரு வாதிமூன் றென்றார். (உகஉ)

3625. என்ற காலையி லவித்தைவல் லவரிஃ துரைப்பா
ரொன்று கூறுகே மென்னையத் துவிதமென் றுரைத்த
னன்று மற்றித னுண்மையை நவிலுக வென்றா
ரன்று மற்றதற் கிறைகொடிப் பாரறி வாளர். (உகங)

3626. உரைசெய் நூல்களத் துவிதமென் றுரைத்திடு முண்மை
கரைசெய் வாமது வேறன்மை யாதல்கட் டுரைக்கும்
வரைசெய் மற்றித ஞூலுள மன்னுயிர் யாவுந்
திரைசெய் வைப்பிற்றா ஞசிற்கும் பதியென்று தெளிமின்.()

3627. என்ற காலேயிற் றத்துவ மசியென லென்னே
யொன்ற வோதுமி னென்றன ருண்மை நோக்காது
மன்ற யாம்பர மென்றளற் றழுந்திடு மதியோர்
ஊன்ற வாயினீர் நவிலுதுங் கேண்மென நவில்வார். (உகரு)

3628. ஆய தத்துவ மசியெனு மறைப்பொரு ளமல
னேய மாரிய மானனென் றிருபொரு ணிகழ்த்தி
யேய வேறிலா மையைவிரித் திசைத்ததே யன்றித்
தூய மாமறை தனியென்ற தின்றெனச் சொற்றார். (உகசு)

3629. ஏக வாத்மியாஞ் செய்யவந் தனமென விசைப்பீர்
மோக மாயெவ ரிடஞ்செய முன்னினீர் பிழையே
யாக விவ்வுரை பிதற்றலென் னடங்குதி ரென்று
பாக மேவினுர்க் கருளுமுத் தமர்பினும் பகர்ந்தார். (உகஎ)

3630. இந்த வார்த்தைகேட் டனையர்தோற் றிருந்தன ரெங்கள்
சந்த ஞசலச் சாமியா ரருள்பெறு தக்கோ
ரந்த மாதலத் தடிகள்பால் விடைகொடங் கெழுந்து
பந்த மோவுமற் றுள்ளபஃ றலமெலாம் பணிவார். (உகஅ)

தலயாத்திரை.

3631. பொருவி லாவள மலிதிருப் பாதிரிப் புலியூர்
திருவி லார்குறித் தடைதராத் திருத்தினை நகரங்
கருவி லாருடன் மாணிதாழ் குழிகருக் குழியி
லிருவி லாத்திரு வதிகைமுற் பலவுஞ்சென் றிறைஞ்சி. ()

வேறு.

3632. விரைகெழுசந் தனக்குறடு மேதகுகா ரகிற்றுணியும்
வரைகெழுமு பலபொருளும் வரன்றிவரு பெரும்பெண்ணைத்
திரைகெழுதண் புனல்வளங்கூர் திருவெண்ணெய் நல்லூரிற்
புரைகெழுமு பெரும்புகழார் பரிசனத்தி னெடும்புகுந்தார்.()

3633. நாவலூர் நம்பிதனைத் தடுத்தாண்ட நம்பெருமான்
மேவுமா லயம்புகுந்து மேதினிமார் புறப்பணிந்து
பாவுபே ரன்புமிகப் பரிந்துவிழிப் புனல்வாரத்
தாவிலா னந்தமெழப் போற்றிசைத்துப் புறஞ்சார்ந்தார். ()

3634. வானேங்கு கயிலாய மலையோங்கு நந்திபிரான்
றானேங்கு பேரருளாற் றந்தவருட் டகைநூலைத்
தேனேங்கு செந்தமிழாற் றிருந்தமொழி பெயர்த்தருணங்
கோனேங்கு தளிபுகுந்து கும்பிட்டா ருள்ளுருகி. (உஉஉ)

3635. தீராத பெருங்காதல் சிந்தையெழப் பணிந்தெழுந்து
நேராதார் புரம்பொடித்த நித்தரைவண் டிருத்துறையூ
ரோராவங் கணைந்தேத்தி யுள்ளுருகி யருணந்தி
தாரார்பொற் பூங்கழலுந் தாழ்ந்துபணிந் தின்புற்றார். (உஉ௩)

3636. அரியபுக ழாளர்சக லாகமபண் டிதரடிகள்
பிரியமன மஞ்சினராய்ப் பேதுற்றுப் புறவிடைகொண்
டுரியசிவ பெருமான்வா ழோங்குமதி லாமாத்தூர்
பிரியமிகு கோவலூர் பேணுபுசென் றிறைஞ்சினார். (உஉ௪)

3637. பூமேவு நான்முகத்துப் புத்தேளு மறுவினொடு
மாமேவு வனமார்ப மாயவனு மாரணடங்கத்
தாமேவு விண்கிழித்துத் தழலுருவ மாய்நின்றார்
தேமேவு திருவடிகள் சென்றுபுகுந் திறைஞ்சினார். (உஉ௫)

3638. ஆயபெருந் தலநின்று மஞ்சிவிகை மேற்கொண்டு
பாயபரி சனஞ்சூழப் பழமலைபோய்ப் புகுந்துமிகத்
தூயமணி முத்தாறு தோய்ந்துபெரு மகிழ்திளைப்பத்
தாயனைய பெருமானார் சரண்பணிந்து புறம்போந்தார். ()

3639. தூங்கானை மாடமுதற் சுற்றுமுள தலமெல்லா
நீங்காத காதலொடு நேர்சென்று தொழுதெழுந்து
பூங்காவின் மயிலாலும் புனற்பாலி நாட்டுமறந்
தேங்காத மறைச்சிலம்பாந் திருக்கழுக்குன் றினையடைந்தார்.

3640. திருவாத வூரருக்குச் செய்யபெருந் துறைக்கோல
மொருவாது காண்பித்த வும்பர்பிரான் றாள்பணிந்து
பொருவாத வளம்பரவு மிடைச்சுரமும் புகுந்தேத்தி
மருவாதார் புரம்பொடித்தார் கச்சூரும் வணங்கினார். (உஉ௮)

3641. தேவர்கள்வந் தமுதாட்டுந் திருவான்மி யூர்பணிந்து
யாவருங்கை குவித்தேத்த வெய்திமயி லையும்பணிந்து
பாவருவண் புகழ்படைத்த வொற்றியூர் பாசூர்பைங்
காவருவண் டிருமுல்லை வாயிலும்போய்க் கைதொழுதார். ()

3642. அம்மைதிரு நடங்காணு மாலங்கா டணைந்திறைஞ்சிச்
செம்மைதிகழ் திருச்செந்தூர்த் தேசிகனா ரினிதமரும்
வெம்மையக றிருத்தணிகை வெற்படைந்து பணிந்தேத்தித்
தம்மைநிகர் வரியர்சில நாளங்குத் தரித்திருந்தார். (உ௩0)

3643. மேதகுவேங் கடகிரிவேந் தரும்விளங்கு திருநகரிக்
காதன்மிகு மன்னவரு மெதிர்கொண்டு கனவரிசை
யாதரவிற் செயப்பெற்றே யன்னவரோ டளவளாய்ப்
போதவுரு வார்பிறவும் போய்ப்பணிவான் குறிக்கொண்டார்.

3644. முத்திமுதல் வினைத்தணிகை முன்னவனை யொளிர்ஞான
சத்திதரன் றனையங்கு விடைகொண்டு சார்ந்தோர்க்குப்
புத்திமுத லெப்பயனும் பொருத்துமொரு திருக்காஞ்சி
யத்தியுரிப் பெருமானை யடிவணங்க நினைந்தெழுந்தார். ()

3645. பல்லாரு மெதிர்கொள்ளப் பரவுகாஞ் சியையடைந்து
சொல்லாரு மறைமாவி னொருமூலச் சுடரொளியை
வல்லாரு முலைச்சுவடும் வளைச்சுவடுங் கொண்டுமகிழ்
வில்லாரு மெய்ப்பொருளை வீங்குகா தலிற்பணிந்து. (உகூகூ)

3646. எவ்வுலகு மீன்றாளை யின்காமக் கோட்டத்துச்
செவ்விதெரிந் தடிபணிந்து தேசிகனு கியபெருமான்
மூவ்வுலகுந் தொழுதேத்த முன்னிவள ரிடமாய
வவ்வியமில் குமரகோட் டம்பணிந்தா ரருட்பெரியர்.(உகூச)

3647. கற்றபல ரொருங்கணைந்து கைகுவித்துத் தொழுதேத்தி
யுற்றபெரு மகிழ்ச்சியினு லளவளா யுடன்மருவப்
பொற்றபுகழ்க் காஞ்சியிடைப் புண்ணியமா தலம்பலவு
மற்றமறப் பணிந்திருந்தா ராறுமுகற் கன்புடையார். (உகூரு)

3648. அன்னதலத் திடைநின்று மெழுந்தருளி யருங்கானு
முன்னரிய பெருவரையு முழங்கிவரு பன்னதியு
மின்னவைகள் கடந்தேகி யெண்ணில்பரி சனஞ்சூழப்
பொன்னசலச் சிலையாளர் காளத்தி போய்ப்புகுந்தார்.(உகூசு)

3649. அன்னமலி புனற்செந்தூ ராறுமுகப் பெருமானு
ரின்னருள்பெற் றவரிங்கே யெய்தினு ரெனமகிழ்ந்து
பன்னரிய காளத்திப் பார்த்திபனு ரெதிர்கொள்ள
நன்னர்மகிழ்ச் சியிற்சிறந்து நல்லாரங் கினிதடைந்து. ()

3650. பிறங்கிவரு பொன்முகரிப் பெருந்தீர்த்தம் படிந்தாடி
யறங்குலவு மால்வரையி னடிமருவிப் பணிந்தெழுந்து
திறங்கிளருஞ் சோபான வழியேறி நேயமிக
மறங்கிளர்வெஞ் சூற்படையார் மன்னுதிரு வடிபோற்றி. ()

3651. அன்புதிரண் டோருருவா யமைந்தருகி னிற்பாரை
யென்புருகப் பணிந்தேத்தி யெல்லையிலா னந்தமுற
வன்புதவிர் மனங்கரைய மாருது விழிபொழியத்
துன்புதவிர்ந் துய்ந்தேனென் றினிதுதுதித் தனர்மீண்டார்.()

3652. அந்நகரப் புரவலனு ரளவிலா வரிசையொடு
சந்தமட மொன்றியற்றித் தரச்சிலநா ளங்கமர்ந்து
பந்தமிறம் பெருமானுர் பாற்சென்று விடைபெற்றுக்
கந்தர்திரு வருள்பெற்றார் காசிநகர் குறித்தெழுவார். (உசo)

வேறு.

3653. உரைமலி சிவிகை மேற்கொண் டெலப்பிலா விருது மொய்ப்ப
வரைமலி மதமால் யானை வாம்பரிக் குழாங்கள் சூழக்
கரைமலி சின்ன மார்ப்பக் கல்லென வியங்க ளேங்கத்
தரைமலி வளமை சான்ற தண்டக நாடு நீத்து. (உசக)

3654. செறிதரு கானுங் குன்றுஞ் சிலைத்தெழு நதியும் யாரு
மறிதரு நகரு மாக வமைதரு தெலுங்கந் தள்ளி
வெறிதரு நெய்தல் பூத்துத் திசையெலாம் வீசும் வாசக்
குறிதரு கைதை வேலிக் கருநடங் குலவ நீத்து. (உசஉ)

3655. மழைமுகி றவழா நிற்குஞ் சோலையு மருத வைப்புங்
கழைகெழு வரையு மாக மாளவங் கடந்து சென்று
குழைபொடி சுரமுங் காடுங் கொண்டல்கண் படுக்குங் குன்றும்
விழைதரு நகரு மாக விராடமுங் கடந்து சென்று. (உசங)

3656. குடம்படு செருத்தன் மேதி குறுகுபு கனைத்துப் பாய
விடம்படு தடத்து நின்று மெழுந்திள வாளை தாவத்
தடம்படு வானந் தோயுந் தாழைமுப் புடைக்காய் சிந்த
வடம்படு முலையா ரஞ்சு மத்திய தேய நீத்து. (உசச)

3657. வெங்கைமால் வரையின் கோடும் விரைத்தசந் தனத்தின் றுண்டுங்
கொங்கையார் மலரு முத்துங் குருமணி களுந்த ரங்க
வங்கையால் வாரி வாரி யருகிரு கரைப்பால் வீசுங்
கங்கைசூழ் கிடந்த தெய்வக் காசிமா நகரம் புக்கார். (உசரு)

காசிநகரக்காட்சி.

3658. அவிர்புனற் கங்கை பொங்கி யலையெறி கின்ற தோற்றந்[லாந்
தவிர்தலின் றடைந்து காசித் தலத்திடை யிறப்போர்க் கெல்
தவர்சிலை யாகக் கொண்ட தம்பிரா னருளாற் சென்னி
யிவர்தர வேண்டு மென்ப தெண்ணுபு போலு மாதோ. ()

3659. மண்ணகழ்ந் திரைத்துச் செல்லும் வரநதி திரைக்கை யாலே
யெண்ணரும் புலிமால் யானை யெடுத்தகன் கரைமேல் வீசல்
கண்ணக னுங்கு வைகிக் கழிபவ ருடுக்கப் போர்க்க
வுண்ணயந் தீட்டி வைக்குஞ் சூழ்ச்சியே யொக்கு மாலோ.()

3660. சுரநதி யென்னுங் கங்கைத் துறையெறி நுரையி னீட்ட
மரனரு ளாலங் கெய்தி யாருயிர் கழிப்போர்க் கெல்லாம்
வரனமை தோளிற் சாத்த வெண்டலை மாலை கோத்தே
யுரனுற விடங்க டோறு மமைத்ததை யொக்கு மாலோ. ()

3661. வரையினின் றிழிந்து செல்லும் வரநதித் திரையின் வீக்கம்
புரையறு தவத்தா லாங்குப் போந்துயிர் கழிப்போர்க் கெல்லாம்
விரையக ரேறிற் சூட்ட வெய்யகட் செவியின் கூட்டங்
கரையறச் சேர்த்து வைக்கப் புரள்வது கடுக்கு மம்மா. ()

3662. கோலங்கொள் கங்கை யாற்றின் குரைபுனற் கயலே வெளவுஞ்
சீலங்கொள் குரண்ட மெல்லாந் திரண்டுடன் பொலியுந் தோற்ற
ஞாலங்கொ ளாங்கு மேவிக் கழிபவர் முடிமே னன்னூறுங்
காலங்கொள் வதுகு றித்துக் கவின்றன போலு மாதோ. ()

3663. பொருவருங் கங்கை யாற்றுப் புகழ்ப்பெருந் துறைக டோறு
மொருவரு மீனங் கூர்ம மொய்த்தன வுறந்த தோற்ற
மருவியங் கிறந்தோர்க் கெல்லாம் வளங்கொள்கை விரல்சே ராழி
திருவியன் மார்பத் தாரஞ் செறித்திடச் சேர்த்தன் மானும்.

3664. புண்ணியக் கங்கை யாற்றின் பொருவறு கரையின் பாங்க
ரண்ணிய மறையோர் யாரு மாரழல் வளர்க்குந் தோற்ற
நண்ணியங் கிறந்தோர் நெற்றி நடுக்கர நடுவித் தேத்துக்
கண்ணிய செந்தீ யேற்ற வளர்ப்பது கடுக்கு மாலோ. (௨௫௨)

3665. இருகரை யுடைத்துப் பொங்கி யிரைத்தெழு கங்கை யாறு
தருவியல் கானக் கொன்றை சாடுபு கொணருந் தோற்ற
மொருவற வாங்குமேவி யுடல்கழிப் பவர்தந் தோளின்
மருவணி சூட்டச் சேர்த்து வைத்திடு காட்சி மானும். ()

3666. வரைநடந் தனைய காட்சி வயக்கஞ்சால் கங்கை யாற்றின்
றிரைபல முகங்க டோறும் வளையெடுத் தெறியுஞ் செய்கை
யுரையிறந் தங்கண் மாண்டோ ரொள்ளிய செவியிற் றூக்கும்
புரையறு குழைக ளாக வெண்ணில வீசல் போலும். (௨௫௪)

3667. முன்னிய நாகர் வைப்பு முழுதளா யெழுநீர்க் கங்கை
மன்னிய வங்கு மேவி மாண்டவர் களத்து நஞ்சந்
துன்னிய புகுத்தற் கெண்ணி யுறையிடந் துருவிச் சென்று
மன்னிய விளைவு நோக்கி வருமொரு பரிசு போலும். (௨௫௫)

3668. சொல்லரும் பெருமை சான்ற தூத்திரைக் கங்கை யாற்றி
னெல்லையில் வளங்கண் முற்று மிருவிழி விடுத்து நோக்கி
யல்லல்வெம் பிறவிப் பாச மலைத்திடு நன்னீ ராடி
யெல்லையி லின்ப வெள்ள மெய்தின ரப்பாற் செல்வார். ()

3669. விண்ணவ ரொருங்கு சூழும் விச்சுவ நாதர் மேய
வண்ணலஞ் சிகரக் கோயி லணைந்திரு கண்ணீர் வாரக்
கண்ணரு மன்பு பொங்கக் கைகுவித் திறைஞ்சி வீழ்ந்தார்
பண்ணமு தனைய தீஞ்சொற் பைந்தமிழ் வடிக்க வல்லார். ()

துண்டிவிநாயகர்பதிகம், காசிக்கலம்பகம்.

3670. வெருவரு மருள்சா றுண்டி விநாயகப் பெருமான் மீது
பொருவரு விருத்தம் பத்துப் புகழ்ச்சியிற் பாடிப் போற்றி
யிருவரு முணரா விச்சு வேசர்மே லியம்பு வோர்கள்
கருவரு நீர ராகக் கலம்பகம் புனைந்து பாடி. (௨௫௮)

3671. ஆனந்த முயிர்க ளெய்த வானந்த வல்லி யோடு
மானந்த மகார்க ளோடு மானந்த வனத்து மேய
வானந்த வடிவார் தம்மை யானந்தச் செய்யுள் பாடி
யானந்தம் பயப்பப் போற்றி யானந்த மெய்து நாளில். (௨௫௯)

3672. இத்தகு தலத்தே நாளு மறம்பல வியற்ற வேண்டு
மத்தகை யறங்க ளாற்றற் கமைதரு மிடமும் வேண்டும்
பைத்தவிர் நகராள் வேந்தைப் பார்க்கவும் வேண்டு மென்னாச்
சித்தம்வைத் திருந்தார் செந்தூர்ச் செல்வர்தந் திருமா ணுக்கர்.

3673. சொல்லுமிந் நகராள் வேந்தர் துருக்கரா யிருத்த லாலே, யொல்லுமற் றவர்தம் பாடை யொருங்குநாந் தெரிய வேண்டும், புல்லுமற் றதற்கெஞ் ஞான்றும் பொருந்துபல் வாக்கு நல்க, வல்லும் வெண் கமலச் செல்வி மாண்பினைத் துதிப்பா மென்று. (௨௬௧)

சகலகலாவல்லிமாலை.

3674. புந்தியுண் முடிய வெண்ணிப் பொலியுநா மகளை நோக்கி
முந்திய பிரம ஞவி னமர்ந்தமுற் றிழைம டந்தாய்
நந்திய வெள்ளை மேனி நின்மல நங்கா யென்று
சிந்திய வினையார் மாலை சிறப்புற வொன்று பாட. (௨௬௨)

3675. கலைமகள் கருணை பூத்துக் காட்சிதந் தருளி யங்கு
நிலைபெறு துருக்கர் பாடை நிகழ்மனு மறைமுன் னுய
தலைமைகொள் பலவுஞ் சால வல்லராய்த் தழையு மாறு
மலைவறு மருள்செய் தாளுண் மகிழ்ச்சியிற் றிளைத்தா ரன்றே.

3676. அந்நகர் புரக்கும் வேந்தர்க் கமைந்தவா ரியர்பாற் சென்று
பன்னரு மனையார் வேத மாதிய பலவி ஞவி
முன்னரு மவருக் குள்ள சங்கைகண் முழுதுந் தீர்த்தா
ரென்னரு மிறும்பூ தெய்த வனையரு மெய்தி னாரே. (௨௬௪)

3677. மற்றவர் வள்ள லாரை மகிழ்ந்துட னழைத்துக் கொண்டு
கொற்றவர் முன்பு சென்று குலவிவர் பெருமை தேற்ற
வுற்றவர் தாமுங் கல்வி யுண்மையா திகளோர்ந் தேபற்
றற்றவ ரென்று பட்டாங் கறிந்தனர் சிறப்புச் செய்தார். ()

3678. நயம்படு சிருங்கா ரத்தி னகுபிர சங்கங் கேட்டு
வயம்படு வீர ரெல்லா மயங்குபு சோர்ந்து வீழ்வார்
வியம்படு வெம்போ ராற்று மிகுபிர சங்கங் கேட்டுப்
பயம்படு முதியோ ருங்கண் சிவந்துமே லெழுந்து பார்ப்பார்.

காசியில் மடமமைத்தல்.

3679. இன்னண நிகழு நாளி லெண்ணருந் துருக்கர்க் கெல்லா
மன்னவர் திருச்செந் தூர்வாழ் வள்ளலா ரருள்பெற் றூர்பாற்

பன்னரு மகிழ்ச்சி கூர்ந்து பரவுமக் காசி வைப்பின் [தோ.
மின்னகு மடமொன் ருற்றிக் கொடுத்தனர் விழைந்து மா

3680. எண்ணற வுலகத் துள்ளோர் யாவரும் புக்க போதுங்
கண்ணக லறையொன் றேற்று வெளியிடங் காட்டு மாறு
பண்ணிய மடத்து மேவிப் பரந்தநீர்க் கங்கை யாடி
வண்ணவான் பூசையாற்றி மகிழ்ந்தினி திருப்பா ராணர். ()

3681. அரசராற் பொருத்தப் பட்ட வளவறு நிதியங் கொண்டு
பரவுதம் மடத்து வந்தார் பசித்தழ லவியு மாறு
விரவறு சுவைநான் குண்டி விழைதர வூட்டி யூட்டிப்
புரவுற மற்று முள்ள வறமெலாம் போற்றி வாழ்நாள். ()

கேதாரேசர்கோயிற்றிருப்பணி.

3682. சடைமுடிப் பெருமா னார்கே தாரநா யகனு ரன்னார்
மிடைதரு கனவில் வந்து வெய்யவெங் காடு சூழ்ந்து [றே
புடைநெருங் கிடம றைந்தேம் புரிந்துநீ வெளிசெய் யென்
யடைவுற வருளிச் செய்தா ரறிந்தன ரறிவின் மேலார். ()

3683. ஆயிடைப் பலரோ டெய்தி யடர்பெருங் காடு போக்கித்
தாயினு மினிய ஞான தம்பிரான் றன்னைக் கண்டு
மீயுயர் மகிழ்ச்சி பொங்க விருப்பொடு பணிந்தெ ழுந்து
பாயுயர் செம்பொற் கோயில் பகருஞ் சிறப்பிற் செய்வார். ()

3684. மன்னிய கோயி லாக்கி மறையவர் முதலோர் சூழ
வின்னிய முகிலி னேங்க வெண்ணிய காலந் தோறும்
பன்னிய பூசை யோங்கப் பண்புறச் செய்வித் தேத்தி
நன்னிய மத்து நீங்கார் நாடியங் கமரா நின்றார். (௨எ௨)

துருக்கக்குருக்கண்மார்களின் அழுக்காறு.

3685. இன்னரிவ் வாறு மேவ வேற்றமிக் கவ்வூ ராளு
மன்னர்தம் பிரிய மேன்மேல வளர்ந்தெழு வண்ணங் காணா
வன்னர்தங் குருவா யுள்ளார் மடமையா லளவ ளாவு
முன்னர்நட் பொழிந்து தீரா மூண்டெழு மழுக்கா றுற்றார்.

3686. உறுமழுக் காறென் றோது மொருபெரும் பாவி யந்தோ
செறுதலி திருவஞ் செற்றுத் தீயுழி யுய்க்கு மென்று
மறுவறு சான்றோர் சொற்ற வார்த்தையு முணரா ராகிக்
கறுவிறம் மரசர் தம்பாற் சென்றிது கழற லுற்றார். (௨எச)

3687. மறந்தரு பகைவ ரெல்லா மலரடி வணங்கிப் போற்ற
வறந்தரு செங்கோ லோச்சு மண்ணலே தென்பா லின்று
முறந்தவிந் நகரம் புக்கீங் குன்னருள் பெற்றார் நூலிற் [றார்.
சிறந்தவ ரெனினுங் கொண்ட தெய்வமாத் திரம்பொய் யென்

3688. குருக்களா ருரைத்த வார்த்தை கொற்றவர் செவியிற் கேளா
வுருக்கிள ரடிகே ணீங்க ளுரைத்தது தகுமோ வென்னத்
திருக்கியா முரைத்தே மல்லேஞ் சிறந்தநும் மவையிற் கூவிப்
பொருக்கெனச் சோதித் தப்பாற் புகலுவி ரெம்மையென்றார்.

3689. என்றலு மியல்பே யங்க ணெய்தின ராக வெங்கண்
மன்றலங் கடப்பந் தண்டார் வள்ளலார் திருமா ணாக்கர்
நன்றென வரசர் தாமு நகைமுக மலர்ந்து முன்போற்
கன்றலி லிருக்கை நல்கிச் செயத்தகு கடனுஞ் செய்து. ()

3690. எங்கடங் குருக்க ளாவா ரியம்புதல் கேண்மி னென்ன
வங்கவர் நீங்கள் கூறும் வார்த்தையை யறைமி னென்ன
வுங்கடந் தெய்வம் பொய்யே யுண்மையே லகங்கை தம்முள்
வெங்கன லிரும்பை யேந்திக் காட்டுமின் விளங்க வென்றார்.

3691. அவ்விய மனத்த ராகிக் குருக்களா ரறைந்த வார்த்தை
செவ்விய மனத்தார் கேட்டுச் செய்யவாய் முறுவல் பூத்து
நவ்வியங் கரத்து முக்க ணையனு ருண்மை யிந்த
வெவ்விய மனத்நார் தேற விளக்குது மெனவுட் கொண்டு.()

சபதஞ்செய்து மழுவுந்தல்.

3692. வெருவுற விருப்புக் கட்டி வெந்தழற் புகுத்திக் காய்ச்சி
வருவியிங் கென்ன மன்னர் வயங்குகொல் லுலேயி லிட்டுப்
பொருவருந் துருத்தி யூதி யிருந்தைபோ கட்டுக் காய்ந்த
வுருவ மற் றதனை யங்கு வருவித்தா ருலக மஞ்ச. (உஅ0)

3693. எதிர்வரக் கண்ட வேந்த ரிருவிழி வெதுப்ப முற்றார்
முதிர்சினக் குருக்க ளென்பார் முகம்பொதி யுரோம முற்று
மதிர்தரத் தீக்கு மென்றே யஞ்சின ரகன்றி ருந்தார்
சதிரறி யாமை தீர்த்தார் சாற்றுவா ரெழுந்து நின்றே. (உஅக)

3694. புரையக லுயர்வு சால்வே தாகம புராணங் கூறு
முரைபிர மாண மென்னி னுவமையில் சைவ மொன்றே
கரைதரு சமய மென்னிற் கருதுமச் சமயங் கூறு
நரைவிடை யுயர்த்த தேவே நாடரும் பிரம மென்னின். ()

3695. நன்றிகொள் விபூதி யக்க நருமணி யெழுத்தோ ரைந்துந்
துன்றிய வன்பிற் கோடல் சாதன மென்னிற் றேலா
வென்றிசெய் சரியை யாதி நான்குமே விளங்கா றென்னி
னென்றியொன் றூட லின்பத் துறுவதே முத்தி யென்னின்.

3696. எண்ணிலா வுயிரீ டேற வெடுத்தருள் வேட மெங்க
ளண்ணலங் கைலே யாளி யடியவர் வேட மென்னிற்
கண்ணரு மனேயார் பாதம் வழிபடு கடமை பூண்டோர்
மண்ணரும் பிறவிப் பெளவம் வறப்பது மெய்ம்மை யென்னின்

3697. பதியெனுஞ் சிவனுக் கென்றும் பங்கப னெடுமால் வேந்தன்
மதிகதிர் வானோர் யாரும் வழிவழி யடிமை யென்னிற்
பொதிதரு கற்றோ யாடை புனைந்தயான் புனைந்து கூறும்
விதிவழு வாதுநிற்கு மேதக வுடையே னென்னின். (உ௬௫)

3698. யானுயர் திருச்செந் தூர்வா ழிறைவன்மா னுக்க னென்னிற்
றானுயர் தரும நாளுந் தழைத்திட லுண்மை யென்னி
னானுயர் கொடிப்பிரானு ராலயப் பொருளை நாளு
மீனுயர் கடல்வி டுத்த விடமெனக் குறித்தே னென்னின்.()

3699. இதுசுடா திருக்க வென்றே யாவரு மறியக் கூறிச்
சதுமுக னெடுமா றேருத் தனிப்பர சிவனே மெய்யென்
றதுகர மலரி லேந்தி யவையுளார் யாருங் காணக்
குதுகுதுப் பெய்தி நின்றார் குவலய முய்ய வந்தார். (உ௬௭)

3700. ஆதனத் திருந்த வேந்த ரிழிந்தக நடுங்கி
காதலிற் போற்றி யென்ன காரியஞ் செய்தோ மென்றார்
போதமிக் குடையோ ராகிப் புரிந்தவை யிருந்தார் யாரு
மேதகு சிவனே தெய்வம் வேறிலை யென்று தேர்ந்தார். ()

3701. நீடிய பொறாமை யாலே நிறைபெருங் கலகஞ் செய்து
கூடிய குருக்கள் சென்னி குனிந்துமார் பழுந்தா நிற்கு
நாடிய முகரோ மத்தை நகங்களிற் கீறிக் கொண்டு
வாடிய மனத்த ராகி மாண்பொழிந் திருந்தா ரன்றே. (உ௬௯)

3702. எரிதழல் விழுங்கப் பட்ட விரும்பைக்கீ ழிடுக வென்று
புரிமதி யரசர் வேண்டப் பூமியி லதைப்போ கட்டு
விரிதர வனையார் நல்கும் விருதுமுற் பலவும் பெற்றுப்
பரிதியின் விளக்க மிக்கார் பரவுதம் மடத்திற் புக்கார். (உ௭0)

3703. முன்னையிற் செல்வ நாற்றி முனிவற வரசர் நல்க
வென்னையிக் குருக்கள் செய்த சகாயமென் றுவகை யெய்தி
நன்னயத் தறங்கண் மேன்மே ஞனிலம் பரவ வாற்றி
யன்னையிற் பொலியு மெங்க ளையர்தா மிருந்தா ரன்றே. ()

முகரங்கிமடம்.

3704. மாதவத் துயர்ந்தா ராய வாகீச முனியை நோக்கிக்
காதல்செய் விபூதிக் கேற்ற கண்மணி விளையும் பூமி
மேதகக் கொளினன் றென்ன வவர்முக ரங்கி மேவி
யோதுமப் பூமி கைக்கொண் டியர்மட மொன்று செய்தார். ()

## பரம்பரையோர்.

3705. அற்புதம் பயப்ப விவ்வா றமர்பவர் தமக்குப் பின்பு
சொற்பயி லறம்பா லிக்குந் தூயவர் யாவ ரென்று
கற்பனை கழன்ற தம்பாற் பணிபுரி காட்சி யாருட்
பொற்பமை சொக்க நாத முனிவரைப் புகன்று கொண்டே.()

370 அன்னவர் தமக்குத் தீக்கை யாதிய வமையச் செய்தே
யுன்னருங் குமரப் புத்தே ளுண்மையுந் தெளியத் தேற்றிப்
பன்னருந் தம்போற் செய்து பாலிப்பா யறங்க ளென்று
நன்னலம் பயக்குஞ் சொக்க நாதரைக் கயற்க ணானே. (உகூச)

3707. மேதகு திருச்செந் தூர்வாழ் வேலுடைக் கடவு ளாரை
யாதரம் பயப்ப நல்கி யமைதரப் பூசி யென்று
காதல்செ யிடபத் திங்கள் கருதிய கண்ண பக்கந்
தீதறப் பொலிந்து தோன்றுந் திரிதியைத் திதியின் மாதோ.()

3708. அன்றொரு திருச்செந் தூரி லணிகெழு குமர னாகி
நன்றுவந் தருளிச் செய்த நாதரைத் தியானஞ் செய்தே
தொன்றுறு கலப்பிற் செம்பொற் றுணையடிக் கமல நீழ
லொன்றியொன் றாது மேவி யுலப்பிலா னந்த முற்றார். ()

3709. பின்னர்வண் சொக்க நாதர் பிறங்கறம் பெருகச் செய்து
பன்னெடு நாள்கள் வைகிப் பகரரு ளாசை லப்பேர்
மன்னிய வடிக டம்பால் வயங்குதம் முரிமை நல்கி
நன்னர்செ யிடப மாத நயந்தரு கண்ண பக்கம். (உகூஎ)

3710. துவாதசித் திதியிற் செந்தூர்ச் சுப்பிர மணியர் பாதத்
தவாவறுத் தடைந்த தங்க ளாரியன் பாதத் துற்றார்
தவாவரு ளாசை லப்பே ரடிகளுந் தருமம் யாவு
மூவாவுற நடத்திப் பன்னா ளொழுக்கத்து வைகிப் பின்னர்.()

3711. அம்பல வாண தேவர்க் கமைந்ததம் முரிமை நல்கி
நம்புறு மகர மாத நயந்தசுக் கிலபக் கத்திற்
பம்பிய திதிபன் னொன்கிற் றங்குரு பாதஞ் சேர்ந்தா
ரிம்பரம் பலவா ணப்பே ரிறைவரும் பன்னாள் வைகி. ()

3712. அறத்தினை விருத்தி செய்தே யருட்சடை யப்ப தேவர்க்
குறத்தம துரிமை நல்கி யொளிகெழு கும்ப மாத
நிறத்தசுக் கிலபக் கத்தி னிகழ்திர யோத சிக்கண்
விறற்பெருங் குரவன் பாத மேவின ருவப்பு மேவ. (௩௦௦)

3713. சடையப்ப தேவ னாருந் தரைமிசைப் பன்னாள் வைகி
யடையப்பே ரறங்க ளெல்லா மமைதர விருத்தி செய்து

நடையுற்ற நலஞ்சா றில்லை நாயக மூர்த்தி யார்பான்
மிடையுற்ற வுரிமை நல்கி விளக்கஞ்சான் மேட மாதம். ()

3714. பூரணைத் திதியி லாசான் பொன்னடிக் கமலஞ் சார்ந்தார்
நாரணை மனத்துத் தில்லை நாயக வடிக ளாரும்
பாரணை யறங்க ளோங்கப் பண்ணுபு காசி வைப்பிற்
சீரணை யொருவர் தம்மைக் காரியஞ் செய்ய வைத்து.(௩௦௨)

திருப்பனந்தாட்காசிமடம்.

3715. திரைமலி பொன்னி நாட்டுத் திருப்பனந் தாளின் மேவி
யுரைமலி மடமொன் றுண்டு பண்ணியவ் வூரின் மேய
வரைமலி சிலைகை யேந்தும் வன்சடை யப்பர் கோயிற்
புரைமலி பணிகள் பல்ல பொற்புற வியற்றிப் பின்னர். ()

3716. தந்திரு மடத்து மேய தம்முடை யடியார்க் கெல்லா
நந்திய மகிழ்வி னூட்ட நன்னிலம் பலவுந் தேடி
முந்திய வாசா னும முனிவருக் குரிமை நல்கி
யுந்திய மீனமாத முற்றிடு கண்ண பக்கம். (௩௦௪)

3717. நற்றிர யோத சிக்க ணலமலி யாசான் பாதத்
துற்றினி தமர்ந்தார் பின்ன ரொருமுதற் குரவ னுமம்
பெற்றவர் பன்னாள் வைகிப் பெருகிய வறங்கண் முற்றுங்
கொற்றவர் மகிழ்ச்சி மேன்மேற் கொளக்குறை யறநடாத்தி.

3718. சிதம்பர நாத தேவர் கொளத்திரு வுரிமை நல்கிக்
கதம்படு விருச்சி கப்பேர் கலந்திடு திங்க டன்னி
லிதம்படு கண்ண பக்கத் தேற்றசத் தமியி லாசான்
பதம்படு நீழ லுற்றுப் பரவுபே ரின்ப முற்றார். (௩௦௬)

3719. அச்சிதம் பரநா தப்பே ரடிகளார் பன்னாள் வைகி
நச்சிய காசி யாதி யறமெலா நயக்க வோம்பி
மெச்சிய சடையப் பர்க்கு விரும்புதம் முரிமை நல்கி
யுச்சமார் கும்ப மாதத் துற்றசுக் கிலபக் கத்தில். (௩௦௭)

3720. மருவிய தசமி தன்னிற் குரவர்த மலர்த்தா ளுற்றார்
தருவினுஞ் சிறந்த வண்கைச் சடையப்ப வடிக ளாரும்
பொருவில்பல் லறமும் பன்னாள் பொற்பொடு பொலிய வோம்பி
யருமையா முரிமைதன்னைக் கணபதி யடிகட் கீந்து. (௩௦௮)

3721. மகரமா மதியிற் கண்ண பக்கத்து நவமி வாய்த்த
திகரறு திதியி லாசா னின்மல பாத முற்று
ரகமலர்ந் தறங்க ளோம்பிக் கணபதி யடிக ளாரு
மிகலறப் பன்னாள் வைகி யிசைபல விட்டிப் பின்னர்.(௩௦௯)

3722. முழுதுணை ரிராம லிங்க மூர்த்திகட் குரிமை நல்கிப்
பழுதக விடப மாதம் பரவிய கண்ண பக்கந்
தொழுதகு சிறப்பு வாய்ந்த துவாதசித் திதியிற் றிங்க
ளெழுதரும் புகழ்ப்பே ராசா னிணையடிக் கமல முற்றார். ()

3723. முன்னிய விராம லிங்க மூர்த்திக டாமும் பன்னாண்
மன்னிய வறங்க ளோம்பி வளமலி யுரிமை யாரும்
பன்னிய சொக்க லிங்க வடிகட்குப் பரவ நல்கித்
துன்னிய மேட மாதஞ் சுக்கில பக்கந் தன்னில் (கூகக)

3724. வருசதுர்த் தசியி லாசான் மரைமலர்ப் பாதஞ் சேர்ந்தார்
பெருகருட் சொக்க லிங்கப் பெயர்பெறு மூர்த்தி யாரு
மொருவறப் பன்னாள் வைகி யுற்றபல் லறமு மோம்பிக்
கருதரு முரிமை தன்னைக் கணபதி யடிகட் கீந்து. (கூகஉ)

3725. துகளறு கடக மாதஞ் சுக்கில பக்கந் தன்னி
லிகழ்விலே காத சிக்க ணெழிற்குரு பாதஞ் சேர்ந்தார்
புகழ்மிகு கணப திப்பேர் பூண்டபே ரடிக ளாரு
மகமகிழ் பன்னாள் வைகி யறங்கள்பற் பலவு மோம்பி. ()

3726. முழுப்புக ழிராம லிங்க மூர்த்தியார்க் குரிமை நல்கி
விழுப்பமார் துலாமா தத்தின் மேயசுக் கிலபக் கத்தி
லிழுக்கிலே காத சிக்க ணேற்றமார் ஞான மோன
வொழுக்கமார் குரவன் பாத முற்றினி திருந்தா ரன்றே. ()

3727. பூரிய ரென்றுஞ் சாராப் புகழ்மிகு செந்தூர் மேய
கூரிய வடிவேற் செங்கைக் குமரவே ளருளப் பெற்ற
வாரிய ராதி யாகக் கணபதி யடிக ளீறாச்
சீரிய வொருபான் மூவர் திறமிவை தெரித்தா மன்றே. ()

இந்நூலை ஆக்குவித்தவர் சிறப்பு.

3728. இவர்பெரும் புகழை யானோ வெடுத்துரை செய்ய வல்லேன்
குவலயத் தறிஞர் யாருங் கூறினு முடியா வாகுந்
தவலறச் சொல்லி முற்றாத் திறத்தினுந் தாழ்வொன் றில்லை
யவமகல் சேட னாலு மறைந்திட முற்றா தென்னின். (கூகசு)

3729. சதுமறை முடிவுந் தேறாத் தத்துவ முணர்ந்து ளீர்கா
ளிதுவரை யுரைத்த தோர்ந்தீ ரினிமகிழ் வாய்மை மேன்மை
பொதுவக மொழுக்க மாதி யாவுமோ ருருவாய்ப் போந்த
முதுமதி யிராம லிங்க மூர்த்தியார் சீர்த்தி சொல்வாம். (கூகஎ)

3730. ஆரரு ளுமையாள் பாக னலயப் பொருள்க டம்மு
ளோரணு வேனும் வெளவு மறக்கடை யோரைக் காணிற்

கார்கெழு நஞ்ச மென்றுங் கறுத்தெழு கூற்ற மென்றும்
போர்கெழு வடவை யென்றும் பொருக்கென வஞ்சு நீரார்.()

3731. காணுதற் கெளியா ராயுங் கடுமொழி யடையா ராயும்
பேணுதற் குரிய வான வொழுக்கத்துட் பிறழா ராயும்
வாணுதற் கொடியோர் பாகர் பணிவயக் கிடுவா ராயும்
பூணுதற் கமைந்த தென்றும் பொறையெனப் பொலியு நீரார்.

3732. திருவளர் திருவாப் பாடிச் சிவபிரா னமருங் கோயி
லுருவளர் தரப்பு துக்கி யுறுவிழா வாதி யோம்பிக்
குருவளர் மணிப்பூ ணுடை குடைகொடி யாதி யாவுந்
தருவளர் கொடையு நாணக் கொடுத்துளந் தழைக்கு நீரார்.

3733. தம்முதற் குரவற் கன்று தவாவருட் குரவ னாய
மும்முதற் கடவு ளார்க்கு முதலவன் றிருச்செந் தூரில்
விம்முறப் பூசை யாதி விருப்பொடு நடக்கு மாறு
செம்முதற் பொருணி ரப்பிக் கட்டளை செய்து வைத்தார். ()

3734. தில்லைமா நகரந் தெய்வச் சேய்ஞலூர் திருப்ப னந்தா
டொல்லைமா வினைக ணீக்கிச் சுடர்திரி லோக்கி நாளும்
வில்லைவீ சுயர்பொன் மாட மிளிர்திரு வால வாய்மு
னெல்லையி றலங்க டோறுங் கட்டளை யியங்கச் செய்தார். ()

3735. சீலமார் பெருமான் மேய சிலசில தலங்க டம்மின்
ஞாலமார் கிலமின் றென்னப் பணிபல நகர டாத்திக்
காலமார் பூசை யாதிக் கட்டளை நியம மேவக்
கோலமார்ந் திலங்கு செம்பொற் கும்பாபி டேகஞ் செய்தார்.

3736. தருப்பல செறியுங் கோயிற் றடகை யீச்சு ரஞ்சார்
திருப்பனந் தாளின் முன்னுந் திருமடம் புதிய தாகப்
பொருப்புகள் பிளந்தெ டுத்துக் கொடுவந்து பொருள்கள் வீசித்
திருப்புகழ் மேன்மே லோங்கச் செய்தனர் வலிய தாயே. ()

3737. அவனியிற் றங்கி ராம மாகிய பலவற் றுள்ளு
மவமையில் கருங்கல் செங்க லெனப்படு முவைகள் கொண்டே
தவலறும் பூசை யாற்றத் தகுமிட மட்டி னுரு
மிவர்புனற் கூவ லோடு மடம்பல வியற்றி னரே. (கூ௨௫)

3738. வடமொழி பயின்று ளார்க்குந் தென்மொழி வளங்கற் றோர்க்கு
மிடவிய வில்லம் பற்பல் பொலிவொடு மியற்றி நல்கிப்
படர்சுவைப் பாலு ணுடை முதற்பல வளமு நல்கி
மடனறக் காணுந் தோறும் வரிசையி னுவப்புச் செய்வார். ()

3739. இன்றுப நயனஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுகல் யாணஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுசோ பனமி யற்ற வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுசீ மந்தஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கும். ()

3740. இன்றுபுத் திரன்பி றந்தா னென்றுவந் தியம்பு வார்க்கு
மின்றுநாஞ் சிராத்தஞ் செய்ய வேண்டுமென் றியம்பு வார்க்கு
மின்றுசெல் கின்றேந் தீர்த்த யாத்திரைக் கெனச்சொல் வார்க்கு
மின்றுநம் மிடத்தென் றூர்பொன் னெண்ணில வுதவு நீரார்.

3741. தென்மொழி வல்ல ராய சீரியர்க் குறுபொன் வீசிப்
பன்மொழி களினு முள்ள பரம்பரன் சரித மெல்லா
நன்மொழிச் செய்யு ளாகச் செய்துநல் குநவென் றேதி
மென்மொழி முகமன்கூறி யாக்குவர் மேன்மே லம்மா. ()

3742. ஆகம புராண மெல்லாம் பழையன வாகக் காணிற்
போகுயர் பனையிற் கொண்ட செழுமடற் புத்த கத்தி
லோகையி னெழுது வோரைக் கொண்டுற வெழுது வித்துச்
சேகறு கருமை யூட்டிப் பாசமுஞ் செறித்துச் சேர்ப்பார். ()

3743. காசியே முதலி ராமேச் சுரங்கரை யிறுதி யாக
மாசிலாத் தரும நாளும் வளர்த்திடு மதனுக் கேற்பப்
பேசிய பொதுப்பே ரானும் பெருஞ்சிறப் புப்பே ரானும்
வீசிநீ ருலகந் தேற விளக்குவார் விளக்க மிக்கார். (கூகக)

3744. பொருந்திய திருப்ப னந்தாட் பொலிதிரு மடத்தி னுள்ளாத்
திருந்திய வாதி யாசான் றிருவுருப் பதிட்டை செய்து
பரிந்தபி டேகந் தூய நிவேதனம் பகரு மற்றை
விரிந்தபல் லுபசா ரங்க ணடத்திடு மேன்மை மிக்கார். ()

3745. விடலரும் வேதி கட்டி மிக்கெருப் பெய்து நாளுங்
கெடலருங் கொடிவி ருக்க மாதிய கெழும வாக்கி
யுடலருங் களையுங் கட்டே யொண்புனல் வழியப் பாய்த்திப்
படலரு நந்த னங்கள் பலபணி விடைக்காச் செய்தார். ()

3746. சலிப்பற விடத்தை யோம்பித் தமக்குப்பின் றுங்கா நிற்கு
மொலிப்புகழ்க் கருவி யாய துண்மையி னுணர்ந்து தேடி
வலித்ததென் மொழியி னோடு வடமொழி யுறக்கற் பித்துக்
கலித்தநல் லொழுக்கம் யாவுங் கற்பித்துச் சிறப்புச் செய்வார்.

3747. அடிமணல் பரப்பி மண்ணு லமைகல மதன்மேல் வைத்துக்
கடிபடு நறும்பூ விட்டுக் கமழ்செயச் சுத்த நீரும்
படியினீர் மோரு மற்றும் பரப்பிய தண்ணீர்ப் பந்தர்
குடிகொள மார்க்கந் தோறுங் கோடைவைத் துவக்கு நீரார்.

3748. கருங்கடல் குடிக்கும் கொண்மூக் கற்பகங் காமதேனு, விருங்குணப் பதுமஞ் சங்க மெனப்பொலி நிதியி ரண்டு, சுருங்குத லில்லா மேன்மை தொகுசிந்தா மணியிவ் வெல்லா, மொருங்குசேர்ந் துருக்கொண் டென்னப் பொலிகொடை யுடைச்செங் கையார். ()

3749. அகலிடத் தனைத்துஞ் சங்கை யறவறி பவர்தா மேனு
மிகலருந் தமது செல்வ மிவ்வுள வெனத்தே ராமை
புகலரு முன்பெற் றோர்பின் புகினுமங் கறித ராமை
பகலரு மிவ்வி ரண்டு நீங்குறுப் பண்பு மிக்கார். (௩௩௭)

வேறு.

3750. பூமேவு திருச்செந்தூ ராறுமுகப் பெருமானர் பொற்றாள் வாழ்க
தேமேவு மவரருள்சார் குமரகுரு பரமுனிவர் சீர்த்தி வாழ்க
மாமேவு மவர்மரபிற் பதின்மூவர் புகழுமப்பால் வந்தோ ராகித்
தாமேவு மிராமலிங்க வடிகளும்பின் வருவோருந் தழைத்து வாழ்க.

குமரகுருபரஸ்வாமிகள் சரித்திரம் முற்றிற்று.

— —

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## திருவாவடுதுறை ஆதீனத்து

# ஸ்ரீசிவஞானயோகிகள் சரித்திரம்.

### காப்பு.

#### விநாயகக்கடவுள்.

3751. சீர்பூத்த தாய்முலைப்பால் பகுத்துணுங்கான் மூன்றுறுப் பாற் சேயா யுள்ளா, ஞர்பூத்த மோத்தல்வரு டுதல்கவர்தல் செய் தருந்தி நான்பி னென்ன, வேர்பூத்த வோருறுப்பா லத்தனையுஞ் செய் தருந்தி யான்முன் னென்றே, பார்பூத்த வருள்கொழிக்கும் யானை முகப் பெருமானைப் பரவி வாழ்வாம். (க)

#### சபாபதி.

3752. பூமேவு முத்தொழிலாற் றுதலின்வலி யதுமறைப்பின் பொலிவை யாற்ற, ஞமேவு மதற்குவலப் பதமமையப் படிந்தாலு நாமு நோக்க, லாமேவு முறையென்றே யருள்பதங்குஞ் சிதமாயே யதனை நோக்க, வோமேவு கனகசபை நடநவிலும் பெருவாழ்வை யுன்னி வாழ்வாம். (உ)

#### சிவகாமசுந்தரியம்மை.

3753. சிகரவரை யுதயவரை சிற்சபைபொற் றேர்கனகச் சிலை யோன் வெய்யோன்,பகரவருஞ் சடைகிரண மனையகதி ரவற்காட்டும் பார்வை யேபோ, னகரமக ரந்தகர்க்கு மினையகதி ரவற்காட்டு நயன மாகி, யகரமுதற் குணமன்று ணின்றருளு மணிவிளக்கை யடுத்து வாழ்வாம். (௩)

#### தக்ஷிணாமூர்த்தி.

3754. வேதமது முதலென்றும் பிரமனே முதலென்றும் வேலை மேற்றுஞ, சோதமது முதலென்றுந் தம்மையே முதலென்று முரை ப்பார் தத்தம், போதமது தடுமாற வவ்வவர்தஞ் சென்னிமிசைப் புண்டரீக, பாதமது மலர்சூட்டி யாண்டருளுங் குரவர்பொற்றாள் பணிந்து வாழ்வாம். (௪)

#### விநாயகக்கடவுள்.

3755. ஒருகுறளுக் கன்னமிடு தடாதகையுண் ணனிநாண வுலக மோம்புந், திருகுதவிர் சுந்தரபாண் டியனுமனை யவனுகத் தீரா தோங்கும், பெருகுவளச் சனகனிடு பதத்தவியாப் பசிவருத்தம் பிறங்கோர் புல்லா, வருகுதிற மவித்தவரிற் புகழ்படைத்த மதகளிற் றை யடைந்து வாழ்வாம். (ரு)

முருகக்கடவுள்.

3756. பொருந்தியசெந் தமிழ்ப்பரமா சாரியனுக் குறுமுனிக்குப் போதம் பூட்டித்,திருந்தியவா சானுகி யதுமட்டோ வடகலைக்குந் தென்கலைக்கு, மருந்தியலும் பிறகலைக்கு மாரியனும் பரமசிவன் வணங்க நாளு, மிருந்தியலா சாரியனு மெங்குமர குருபரன்றா ளிறைஞ்சி வாழ்வாம். (சு)

திருநந்திதேவர்.

3757. வடமொழியி லிரவுரவா கமத்தமைந்து பல்லோரு மதிக்கப் பெற்ற, திடமொழியாப் பன்னிரண்டு சூத்திரமும் வழிவழியே சிறந்து மல்கப், படமொழியாப் பூணணிபா வனையில்குரு வாற்றெளிந்து பயிற்று நீராற், றடமொழிமு லாசிரியப் பெயர்படைத்த நந்திபிரான் சரணஞ் சார்வாம். (எ)

அகத்தியமுனிவர்.

3758. சிறந்தவகத் தியமிரண்டு நவின்றருளிச் செந்தமிழா சிரியனென்றே, குறந்தபுகழ்ப் பெயர்புனைந்த தன்றியுநோக் காதிபல வுற்ற தீக்கை, யறந்தவரா துளவெனினும் பரிசத்தான் மால்சிவமே யாகச் செய்து, நிறந்ததிற லுடைப்பரமா சாரியனு மானானை நினைந்து வாழ்வாம். (அ)

சமயாசாரியர்.

3759. செம்மடியொண் புலித்தோலே யெனக்கொண்டா ரடித்தொண்டின் சிறப்பான் மேக, மும்மடியென் றிடவிழிகண் முத்துகுப்ப வுருகுதலான் முழங்கி நாளுந், தம்மடிய ரெனப்பெருநீர் தலைநின்று பணிபுரிந்து தாழப் பெற்ற, வெம்மடிக ளாஞ்சமயா சாரியரோர் நால்வரையு மிறைஞ்சி வாழ்வாம். (கூ)

சண்டேசநாயனார்முதலியோரும், சேக்கிழாரும்.

3760. தந்தைதா ளடைவதற்குத் தந்தைதா ளறவெறிந்தார் தம்பி ராற்கே, சிந்தையா தியமூன்றுஞ் செலுத்தறுபான் மூவரிவர் சீர்த்தி யாவு, நிந்தைதீர் தரமொழிந்த நிகரரிய சேக்கிழார் நீடு வாழ்வா, ரந்தைதீர் தரக்கருது மடியேனு ளனவரத மகலா ராயே. (க௦)

மெய்கண்டதேவர்.

3761. அகத்திருளைப் போக்கலும்பன் னிருசுதிரோ வெனத்தமிழி லழகு வாய்ப்ப,மகத்துவநூன் மொழிபெயர்த்த துணர்ந்தியாமு மொழிபெயர்க்கல் வல்லே மென்று, மிகத்தழைசத் தியஞான தரிசனிப்பேர் மொழிபெயர்த்து மெய்கண் டானென், றிகத்தியலப் பாஞ்சோதி யருளியவா சிரியனடி யிறைஞ்சி வாழ்வாம். (கக)

திருமாளிகைத்தேவர்.

3762. கச்சோதங் கதிராமோ யாங்கொள்வயி ணவமின்றே கழிவதாக, வச்சோவிவ் வாரியனெங் ககப்படுவா னென்றரங்க மகல நீத்துப், பச்சோலைத் தெங்கடருங் கோமுத்தி யடைந்தரிய பலசெய்தெல்லா, நச்சோத வருள்கொழித்து வளர்திருமா ளிகைத்தேவை நயந்து வாழ்வாம். (கஉ)

நமச்சிவாயதேசிகர்.

3763. ஒருதிருமா ளிகைத்தேவை நட்டசிவப் பிரகாச ருரைத்த வாறே, தருதிருவா வடுதுறைசார்ந் தவர்வகுத்த வறையமர்ந்து சைலா திப்பேர், வருதிருவன் முதலோரரங் கைலாய பரம்பரைமன் னுதலி னோங்கக், கருதிருவன் மேற்கொணமச் சிவாயதே சிகன் மலர்த்தாள் கருதி வாழ்வாம். (கங)

அம்பலவாணதேசிகர்.

3764. சோராத பெருங்கருணை தழைத்தோங்க வாவடுதண் டுறையை மேவி, யோராத வேனையாள்வா னோராத வனிற்றோற்று முருவத் தோற்றித், தீராத மலமாயை கன்மமுத லொடுமாயச் சிர மேற் சூட்டு, மாராத திருவடியம் பலவாண தேசிகனை யடைந்தா மன்றே. (கச)

சுப்பிரமணியதேசிகர்.

3765. கொற்றவளம் பொலிதிருவா வடுதுறைச்சுப் பிரமணிய குரவ னுவான், உற்றதன தடியர்குடி கொளுஞ்சிறுவீ டொருங்குத கர்த் துலவா மேன்மை, பெற்றபெரு வீட்டிருத்தத் தான்குடிகொ ளாலயமும் பேணு னுகி,முற்றவொழித் தருள்வனெனி னவன்கருணை யெவராலு மொழியற் பாற்றே. (கரு)

சிவஞானயோகிகள்.

3766. சீலநிகழ் மூலவா கமப்பொருளொன் றென்றுகித் திறம்புறாது, ஞாலநிகழ் குலதெய்வ மெனப்பலருங் கொண்டாட நாங்க ளுய்யச்,சாலநிகழ் சமவாத முதலியபோ யொளித்திடவு தயமாய்வந்த, பாலநிகழ் விழிமறைத்த சிவஞான யோகிபதம் பணிந்து வாழ்வாம்.()

---

ஆக்குவித்தோர்.

3767. குலவுமுரு கக்கடவுள் கருணையினே தாதனைத்துங் கூட வோர்ந்தே, யுலவுபுகழ்க் குமரகுரு பரமுனிவ னுதித்தமர புதித்த மேலோ, னிலவுபுக ழிலக்கணமு மிலக்கியமும் வரம்புகண்ட நிக ரொன் றில்லான், கலவுசிறப் புத்தமநற் குணங்களெலா மோருருக் கொள் காட்சி போல்வான். (க)

3768. கூடுபுகழ்க் கோமுத்திக் குருநமச்சி வாயனருள் கொண்ட மேலோன், பாடுபுகழ்ச் சித்தாந்த பாடியமுற் றொருங்குணர்ந்த பாண் மை யாள, னீடுபுகழ்த் துறவொழுக்கந் தவறுது காத்தோம்பு நெறி யில் வல்லோன், றேடுபுகழ் வளர்குமா சாமிமுனி வரன்முனிவர் செய சிங் கேறே. (உ)

---

அவையடக்கம்.

3769. அன்னமுனி வரன்கனிவிற் சிவஞான யோகிவர லாறு முற்று,நன்னர்வள முறப்பாடித் தருகவெனச் சொற்றமொழி நலத்தை

யோர்ந்தே, யென்னவலி யுளமெனப்பா டுதற்கிசையேன் மறுப்பதற்கு மிசையே னேனுஞ், சொன்னமொழி மறுத்திற மென்றொருவா ரோதுதற்குத் துணிபுற் றோனல். (க)

3770. நலம்பூத்த தென்கலையும் வடகலையும் பணிசெய்சிவ ஞான யோகி, புலம்பூத்த வரலாற்றை யான்பாடப் புகுந்ததிறம் புலவோர் தேரின், வலம்பூத்த விலாமுறிய நகைப்பரெனும் வருத்தமுமென் மனநீங் காதித், தலம்பூத்த வஃதியற்றீர் தவிருதிரென் பாரொருவர் தமைக்கா ணேனே. (உ)

3771. ஏய்ந்தவிளம் பூரணர்சே னாவரையர் நச்சினார்க் கினியர் மேலும், வாய்ந்தபரி மேலழகர் மயங்குசிவ ஞானமா தவத்தோன் சீர்த்தி,தோய்ந்தபுகழ்க் கச்சியப்ப முனிவர்பிரான் சொலிற்சொலலாஞ் சொல்லா ரொன்றும், பாய்ந்தநில வரைப்போர்மற் றகத்தியனு மகத்துவமாப் பாலிப் பானே. (ங)

3772. மிகப்பெரிய னாகியசீர்ச் சிவஞான முனிவரன்சீர் விளம்பலாகு, மிகப்பின்மட முடையேனு மெவ்வாற்றா னென்னின்முன மிருவர்தேறு,நகப்படிவ மாய்வளர்ந்த சோதியையா ராதனஞ்செய் நன்மைபூண்டோ, ருகப்பரிய மூன்றிழைநான் கிழைத்தீப மல்லாம லுஞற்றலுண்டோ. (ச)

---

## இரண்டாவது

### பாண்டிநாடு.

3773. திருமுனிவர் பல்லோருஞ் செந்தமிழிற் றனைச்சூழ
வொருமுனிவ னுலகுசம முறவுறைதற் கிடமாகித்
தருமுனிவன் கைக்களிறுந் தாபதர்தம் பழக்கத்தாற்
கருமுனிவா னெழுபொதியக் கவினதுபாண் டியநாடு. (க)

3774. தனையுண்ட முனியுறையத் தக்கவிடங் கொடுத்ததனை
நனையுண்ட விருக்கங்காள் கொணர்மினென நாலைவிடப்
புனையுண்ட வவையெழுந்து பொருநையெனும் வடம்பூட்டி
வினையுண்ட விருபானின் றீர்ப்பவென மிடைவனவால். (உ)

3775. அறிவிலர்தாஞ் செய்வினையே யவர்க்கிடையூ றுயதுபோற்
செறிமடுவின் மோட்டெருமை செறிந்துழக்கிக் கன்றுள்ளி
முறிவொழியப் பொழிதீம்பான் மூரிநெடுந் திரையெறிந்து
வெறியதென வதையெடுத்து மிசையெறியு மிடனெங்கும்.()

3776. பொருநைவரு புனன்முழுகிப் புறமதகுப் புனலொடும்போய்த்
திருகவிய நெடுந்தூரஞ் சென்றோர்தடத் தெழுபறவை
யொருதடத்துப் புனன்முழுகி யொள்ளியநா வுக்கரசர்
விருதுமலி யையாற்றுத் தடத்தெழுந்த மேன்மைபொருஉம்.

3777. போரகத்துஞ் சேரகத்தும் புணரியெனப் பொய்கைநிறை
நீரகத்தும் படிமேக நிறைபொழிலி னிடைப்புகுந்து
சீரகத்தப் பொழின்மேலாற் றெரியுமா துவக்குண்டல்
பாரகத்திந் திரன்முகிலூர் பரிசுதெரி தரக்காட்டும். (ரு)

3778. மடையெலாஞ் சங்கினங்கள் வரம்பெலா மவையுயிர்முத்
தடையெலாம் வெடியெழுமீ ஞறெலா மதகிஞெலி
புடையெலாஞ் செஞ்சாலி போரெலாம் பொலிமேகங்
கடையெலாம் பொலிமருதக் காமர்வளங் கணிப்பவரார். (சு)

3779. சாலியினுங் கந்தியினுந் தலைவிரிந்த வரம்பையினுங்
கோலியசெங் கரும்பினுமாய்க் குலவியெழு முத்தரித்து
வாலியதண் பொருநைகொடு கொற்கையக மருவுதலா
லாலியவத் துறைமுத்த மரிப்பதெனக் குலவியதால். (எ)

3780. கொண்டறரு முதயத்துங் கோடைதரு கொல்லியினும்
விண்டுயிரெ லாநடுங்க வாடைதரு மேருவினும்
வண்டுறுசந் தமுந்தமிழு முடன்வரத்தென் றலைவழங்கு
மொண்டனிமா மலைசிறந்த துயர்ந்ததுமந் நாடொன்றே. (அ)

3781. சேல்பாயும் புனற்குளத்துச் சென்றேறித் திரையெறிந்து
கால்பாயும் வயலகத்துக் கரும்புடைக்க வெழுந்தநறும்
பால்பாயுங் கனிச்சாறு பற்பலவு மப்படியே
நூல்பாயும் பொருநையொன்றே நுவலந்நாட் டினையோம்பல்.

3782. நலிபாண்டித் திறமுயர்வா நாமெனவூ ழியுங்கருதா
ரொலிபாண்டின் முதற்பலவா மூர்துயன்றித் தரையியங்கார்
கலிபாண்டிப் பியமெனவே கரையவளி முரலுமலர்
பொலிபாண்டிற் கமலவயற் புகழ்ப்பாண்டி வளநாடர். (கo)

3783. நீறுவிழி மணிபுனைவார் நீசரே யாயிடினும்
பேறுதமக் கருளவரும் பிரானென்றே யுபசரிப்பார்
கூறுமெழுத் தைந்தொடருட் குறிப்பூசை புரிகுவரேன்
மாறுதவி ரவராற்றும் வழுத்தினையார் வழுத்துவார். (கக)

3784. இன்னவளம் பலதழுவி யேழுலகும் புகழவுள [வாத்
பொன்னவிரு மணிகெழுமார் பப்புருடோத் தமனுமொவ்
தென்னவர்த நாட்டுளதால் விக்கிரம சிங்கையெனு
நன்னகரம் பாவநா சப்பதிநா மமும்புகல்வார். (கஉ)

விக்கிரமசிங்கபுரம்.

3785. மறையவரே முதலொருநால் வகைக்குடியும் பிறவாக
வறைகுடியுந் தத்தமொழுக் ககலாது மகநெருங்கிக்
குறைசிறிது மிலலாது குலம்பொலிய நலம்பொலியும்
பறைபுகழான் மிக்கோங்கும் பாவநா சப்பதியே. (கங)

3786. சீராலும் விருந்தினர்க டிருந்தினரா வுபசரிக்கு
மோராலு முழவுதொழி லோராலும் போராலுஞ்
சோராலு மளப்பரிய சிறப்பாலும் பிறப்பாலும்
பாராலும் பொலிவேளாண் குடிகள்பல பயில்வதுவே. (கச)

3787. அணங்குவன மகளிரிடை யலறுவன நூபுரங்கள்
பிணங்குவன குழல்வண்டு பிரிகுவன விலம்பாடே
யுணங்குவன வஞ்சகமே யுருங்குவன கண்ணையிலே
யிணங்குவன வறமுழுது மிரிகுவன மறமுழுதும். (கரு)

3788. பாடகமெல் லடிப்படல்செம் பஞ்சிகொல்கா ளையர்சிரமு
மாடமிசை யாடுதல்பொன் மாண்கொடியோ காண்கொடியு
நீடமனை தொறும்வளர்வ நெடுந்திருவோ விரம்பன்புந்
தேடவரும் பொருளாதல் சிவார்ச்சனைகொ றெருளருளும். ()

3789. புதிதடைநர் பிரிவுநமைப் பொருந்துமென வருந்துவரான்
மதியினுப சரிப்பவர்மேல் வராமைக்கே வருந்துவரா
லதிநலமங் கையருட லடாமைக்கே வருந்துவரால்
பொதியவளிப் போரரப்போர் புகாமைக்கே வருந்துவரால். ()

3790. தாழாது மேன்மையுறு மைந்தருடைத் தடங்கரமே
யாழாது மேன்மையுறு வம்மதிலசூழ் கிடங்குகளே
போழாது மேன்மையுறு பொருகரிவெண் கோடுகளே
வீழாது மேன்மையுறு சங்கிதிமெய் யன்பர்மெய்யே. (கஅ)

3791. மாதருட னீர்த்துறையின் மற்றவர்க்குத் துணையாயே
யோதவினி தாடுவன வொண்செங்கா லோதிமமே
போதமையக் குற்றமைக்கும் பொழிற்றுணைமை கூடுவன
மேதகைய சாயல்வளங் கண்டவிரி சிறைமயிலே. (கசு)

3792. கந்தியிடைப் பொன்னூசல் கழுத்தழகு கவர்பிழைக்கா
முந்தியிறு குறப்பூட்டி மொய்குழலா ராடுதொறு
மூந்தியுட னூடுவன வொண்குழைமுத் தாரங்கொல்
புந்திநனி தடுமாறப் புகுமைந்தர் தம்மனமும். (உ0)

3793. இள்ளையுறல் கைத்தலமோ இளர்மகளிர் முலைத்தடமும்
வள்ளையுறல் பொய்கைகொலோ மடவியர்செங் கிடைவாயும்
வெள்ளையுறல் கவிஞர்தம்வா யோமதுமே வினர்வாயு
மெள்ளையுற ஞசிகொலோ வெழிலரம்பை மார்நலமும். ()

3794. கயிலாய பரம்பரையிற் காமர்பெற வவதரித்த
சயிலாதி மரபுடையோன் சந்தானர் தழைப்பிக்க
வெயிலாரு மணிமாட மிளிர்துறைசை யகம்புகுந்தார்
பயில்வாய்மை யதுதெரிந்து பரவாதா ருளரேயோ. (உஉ)

3795. சந்தமலி நாவலர்தந் தலைவணங்க வடகலைக்குஞ்
செந்தமிழ்க்கும் விக்கிரம சிங்கமென வொருவருறப்
பந்தமற வவரையுள்வார் பாவநா சம்படலால்
வந்தனவிப் பெயரந்த நகர்க்கெனவும் வழக்குண்டால். (௨௩)

பாண்டிவேளாளர்சிறப்பு.

3796. அந்தரங்க ரத்துலகா ளாயபெருங் கருணையொடுஞ்
சந்தமுற வினிதமருந் தம்பிரா னடிக்கன்பே
நந்தலுற வளர்பாண்டி வேளாளர் நற்குலமே
யெந்தவுல கமும்புகழ வினிதுநெருங் கியதம்மா. (௨௪)

முன்னோர்வரம்பெற்றமை.

3797. அன்னகுலத் திடையொருவ ரருந்தவத்தா லகத்தியனார்
முன்னமைய வேழுதலை முறைப்புலமை நுமக்களித்தோ
மென்னவுமற் றவற்றீறே யேற்றநணி யாமெனவும்
பன்னவொரு வரம்பெற்றார் பாரடங்காப் புகழ்பெற்றார். (௨௫)

ஆனந்தக்கூத்தர்.

3798. அவ்வாறு பெற்றவரு ளமையாருந் தலைமுறையார்
செவ்வாய்மை யானந்தக் கூத்தரெனுந் திருநாம
மெவ்வாயுஞ் சொலப்பெற்றா ரில்லொழுக்கின் றலைநின்றார்
துவ்வாமை யுறுக்குணங்கள் சேராது திரண்டன்னார். (௨௬)

மயிலம்மையார்.

3799. அன்னவர்த மனைக்குரியா ரருந்ததியிற் சிறந்துள்ளா
ரென்னவரும் விருந்தோம்ப லின்னிளையான் குடிமாறர்
தன்னமிலாக் காதலியார் தமையொப்பா ரெனப்புகழ்வார்
பின்னமிலா மனைக்குரிமை பேணுதலிற் றமையொப்பார். ()

3800. ஏயமயி லம்மையா ரெனுநாமம் பெற்றுள்ளா
ராயவரோ டினளா யானந்தக் கூத்தரென
மேயவர்தா மகிழ்சிறந்து மேதகவின் வாழுநாட்
டேயமகப் பெறுவாஞ்சை மேன்மேலுஞ் சுரந்துளதால். (௨௮)

இவ்விருவரும் மகப்பேறுகருதிநோற்றல்.

3801. திருத்தமுறு கியுங்கருணைத் திருவுருவா மூலகாளை
யருத்தமறை முக்களா லிங்கமையன் பொடுபணிந்தும்
வருத்தமுறு விரதமெலா மாண்புடனாற் றியுநீற்றுப்
பொருத்தமுடை யடியாரைப் புகழ்ந்தூட்டி யுபசரித்தும். ()

3802. மற்றுளநற் கருமமெலா மறவாது நனிமுடித்து
மிற்றுளதீ வினையாள ரிவ்வாறே யொழுகுவார்
கற்றுளமற் றிவர்க்குமடங் கழியாமை யெவன்கொல்சிவப்
பற்றுளநங் குறிமுனிமுன் பகர்ந்தமொழி பழுதாமோ. (௩௦)

மயிலம்மையார் கருவுற்றமை.

3803. இந்தவா றிவரொழுக வெம்பிரான் றிருவருளாற்
கந்தமார் குழன்மயிலார் கருக்கொண்டா ரன்றுமுதல்
வந்தமா மறையோர்க்கு மற்றையடி யார்க்குமவாச்
சிந்தவா தரித்தளித்தார் சிவானுபவ மகப்பெறுவார். (௩௧)

3804. பொங்குமுலை முகங்கறுப்பும் புளிம்பழத்தி னெழுவிருப்புந்
தங்குமொரு பொய்த்துயிலுஞ் சார்ந்துவயா நிரம்பியெழ
வெங்குநிகழ் மழமலவா யிடுமெணய ஞூடாமே
யங்குதவிர்ந் திடப்புகைமண் ணதுசிறிது நுகர்ந்தமர்ந்தார். ()

மகப்பேறு.

3805. ஒருபதுதிங் களுநிரம்ப வொள்ளியநல் லோரையெழப்
பெருகுசம யத்துளுநற் பெருஞ்சைவங் குதுகலிப்பத்
திருகுதவி ரதனுள்ளுஞ் சிததாந்த சைவமெழூஉப்
பொருவருநல் லின்படையப் போதநூ லுவப்பூற. (௩௩)

3806. செப்பரிய தமிழ்வழங்கு தேயமெலாங் களிசிறப்ப
வெப்பரிய மறையோரு மெல்லோருங் கொண்டாட
வெப்பரிய சோணாட்டு மெய்த்துறைசை நகருவப்ப
வொப்பரிய தவப்பெரியோ ரொருவரவ தரித்தனரால். (௩௪)

மகப்பேற்றுக்கொண்டாட்டம்.

3807. சூதவினைச் சடங்கனைத்துந் தோற்றியநாண் முதற்றொடங்கி
யாதரவை யவிபுகைப்பார் நிம்பமலங் கரித்திடுவார்
மேதகைய நெய்விழா வீதியெடுப் பவராகப்
போதமகப் பயந்தார்நன் புனன்முழுகி வித்தளித்தார். (௩௫)

பிள்ளைத்திருநாமம்.

3808. மிக்களா வியசூத வினைகழியப் பின்னுளி
லக்களா வியவரையா ரருள்கருது தந்தையார்
திக்களா வும்பெருமைச் சேயார்க்குத் திருநாம
முக்களா லிங்கமென மொழிந்தனர்பல் கிளையுவப்ப. (௩௬)

காப்புப்பருவம்.

3809. தண்ணியநீ றெடுத்தணிந்தீ சானரவர் முதலாக
வெண்ணியவான் பதினொருவ ரிணையடிகள் கைதொழுது
மண்ணியமா மணிபுரைய வருமகவை வழுவாது
கண்ணியபே ரருளினொடு காப்பதுநுங் கடனென்றார். (௩௭)

செங்கீரைப்பருவம்.

3810. இருகையுமுன் பதித்தொருதா ளெடுத்தொருதா ளூறமடித்
தருகைமலி சிததாந்த சைவமலாற் பிறிதொன்றும் [துத்

வருகையுறல் சம்மதியோ மெனமறுக்கு மாட்சிமையிற்
றிருகையுறுர் தலையசைத்துச் செங்கீரை யாடினர். (நூஅ)

தாலப்பருவம்.

3811. அத்தமணித் தூணிழுவி யாய்துகிர்விட் டங்கிடத்தி [துச்
முத்தவட மதிற்பொருத்தி முழுமணித்தொட் டிலையிணைத்
சித்தமுற வதிற்கிடத்திச் செங்கைதொட்டுத் தாதியர்க
டத்தமனங் களிசிறப்பத் தாலோதா லெனவுவந்தார். (நூகூ)

சப்பாணிப்பருவம்.

3812. ஆயபன்மூ லக்தொடுமோவ் வாதமுர ணுரையெழுதித்
தீயசம வாதஞ்செய் சிவப்பிரகா சப்பெயரீர்
நாயகமா யினிரென்று நகைத்திடக்கை தட்டுதல்போற்
றூயனையார் கைகுவித்துச் சப்பாணி கொட்டினர். (சo)

முத்தப்பருவம்.

3813. சித்தநிலை திரியாது சித்தாந்த சைவமரீஇ
நத்தமல வலியகல நல்வினையுந் தீவினையு
மொத்தநிலை யுடையோரா யுற்றவருக் காரியனன்
முத்தமுவந் தளித்திடுவார் முத்தமுவந் தளித்திடுவார். (சக)

வாரானைப்பருவம்.

3814. வருககதிர் மணிவிளக்கே வருககுல பூடணமே
வருகவிரு ளறுசுடரே வருகவிளங் கருமருந்தே
வருகமுழு மலப்பகையே வருகருணைக்கடலே
வருகவரு கெனவழைப்ப வந்துவப்புச் செய்குவரே. (சஉ)

அம்புலிப்பருவம்.

3815. மதியவனு தலினைத்தா யல்லோனு தலின்மானய்
விதியமையுங் கலைக்குறைவு மேவாது பொலிதருவாய்
துதியொடுவா ராமையினுற் சுடுகனற்சா பமும்பெறுவா
யதிவிரைவி னம்புலியே யாடவா வெனவுவப்பார். (சங)

சிற்றிற்பருவம்.

3816. பொருவினுதற் சுட்டியொடு பொலிமார்பைம் படைதயங்கத்
திருவிலிடு சதங்கையும்பொற் சிலம்புஞ்சீ றடியிரட்ட
வருதரும புரத்தர்பூரண் மரபனைத்துஞ் சிதைப்பதுபோற்
றெருவின்மட வியரியற்று சிற்றில்சிதைத் தருளினர். (சச)

சிறுபறைப்பருவம்.

3817. எடுத்தெனுஞ்சொற் கிடுவயிரக் குப்பாய மெண்டிசையு
மடுத்துநிறை வதுபொருவ மண்முழுதும் போய்நிறைய
வடுத்தகுணில் கரம்பற்றி யழகியவெண் ணீறிலங்கத்
தொடுத்தசிறு பறைமுழக்கி யருளினர்சொற் கலைமுழக்கார்.

### சிறுதேர்ப்பருவம்.

3818. இந்திரிய மெனும்பெருந்தே ரெண்ணியவா றுருட்டுவதற்
கந்திமதி சடைக்கணிந்த வண்ணலார் சீறடியார்
முந்தியுறப் பழகுதல்போன் மொய்யழகு நலம்படைப்பப்
புந்திமகிழ்ந் தினிதிவர்ந்து பொற்சிறுதே ருருட்டினார். (சசு)

### வித்தியாரம்பம்.

3819. இந்தவித முறுபருவ மெலாசிரம்பத் தாய்தந்தை
சந்தமிகு மனங்களிப்பத் தண்டுறைசைப் பதிவாழு
மந்தமிலாக் குருநமச்சி வாயனரும் பொருள்வளரு
மைந்தமையு மையாண்டின் மேலாய பருவம்வர. (சஎ)

3820. காவணமெங் கணுமிட்டுக் கழைகதலி கமுகியாத்துப்
பூவணமா லையுஞ்சிறந்த பொன்னரிமா லையுந்தூக்கி
மாவணவே தியர்முழங்க மங்கலவாழ்த் தினிதியம்ப
நாவணநல் லவரோதும் பள்ளிநயந் தமர்வித்தார். (சஅ)

### கல்விவளர்ச்சி.

3821. பள்ளியிடை நயந்தமர்ந்த பாலனு ரன்றுமுதல்
வெள்ளியநூ றெரிவிப்பா ரொருமுறைவிண் டிடுவதன்மு
னெள்ளியநூன் முழுதுணரு முணர்வுடைய ராய்த்திகழ்வா
ரெள்ளியமும் மலத்துயரு மிரித்துயரு மேற்றத்தார். (சகூ)

### இருமுதுகுரவர்மகிழ்ச்சி.

3822. சந்தமலி பாவநா சப்பதிசெய் பெருந்தவத்தா
லந்தமில்சீர் மயிலம்மை யானந்தக் கூத்தர்மன
நந்தமகிழ் தலைசிறப்பு நாளெலாங் கொண்டாட
வந்தவரோர் பானுண்டு மருவவளர்ந் தினிதமர்ந்தார். (ருo)

3823. கலையமைதிங் களின்வளர்ச்சி காட்டியே நாட்டுநா
டொலைவில்குண மறிவினொடு தொக்கமையுந் தோன்றலா
ரலைபுனற்கா விரிநாட்டி னுவடுதண் டுறைமடைந்து
தலையமைபா டியஞ்செய்த தன்மையினிச் சாற்றுவாம். (ருக)

---

## மூன்றாவது

---

### திருக்கைலாயச்சிறப்பு.

3824. வளங்கள் வேண்டுவ வந்திரந் தவர்க்கெலாம் வழங்கி
விளங்க மாயவ ரிந்திரர் முதலியர் மிடைந்து
துளங்க மேவிய கறுப்பலாற் றோற்றிடும் வேறு
களங்க மொன்றிலா துயர்ந்தது வெள்ளிவெண் கயிலை. (க)

3825. மேய வாதனக் கயிலையின் வெளுப்புமேன் மேய
நாய ஞயதன் படிகமெய் வெளுப்புமோர் நம்மான்
மாய மாஞ்சிறு கறுப்பொரு களத்துறன் மாயத்
தூய நீறுமூ விரலள வங்குலந் தொகுப்பான். (௨)

3826. சடைநி றஞ்சிவப் பெனல்விளர்ப் புறத்தலை மாலை
யடைநி லாமதி கொக்கிற கவிர்தரு துரோண
மிடைதி ரைப்புனல் வெள்ளெனும் பருக்கமேல் விளங்க
வுடைய கோனணிந் தனன்கயி லையின்வள முவந்தே. (௩)

3827. கரிய மாயவன் வெள்விடை யுருக்கொண்ட கருத்துந்
தெரிய வான்றுதி செயல்கொளு நான்முகன் செந்நா
வரிய வெண்கலை மகளுற வைத்தது மாயிற்
பிரிய மார்கயி லைக்கிரி பேணுதற் கன்றே. (௪)

3828. சைவ ராயவர்க் கநாதியே யெம்பிரான் றகைசா
றெய்வ வெள்ளிய நீறுகொண் டணிவது செய்தான்
பொய்வ குத்தவே றிலாஞ்சனம் புனைபவர் மாட்டு
மெய்வ கைப்பிரி யஞ்செயா தென்பது விழைந்தே. (௫)

3829. நிறங்கு லாஞ்சடை யெம்பிராற் றெழுதுமே னின்றே
யிறங்கு வெள்ளராக் குலங்களை முடியினின் றிறங்கும்
பிறங்கு வெள்ளரு வித்திரள் களைப்பகல் பெட்டே
யறங்கு லாவுவா னவரினு முயலவு மாகா. (௬)

3830. தருகை நீண்டநந் தம்பிரான் சரண்டரி சிப்பா
னுருகை மேற்கொடு படரும்வா ளராக்குல மொருங்கு
திருகை மேவுரு வருவிதங் குலமெனத் தெரியா
வருகை தேர்ந்தந்தோ சேவையா யிற்றெண மருளும். (௭)

3831. செங்கை வச்சிரப் படையினன் பதமிசைத் திகழு
மங்கை யெட்டுடை நான்முகன் பதமர விந்த
மங்கை மார்பினன் பதமிவை நவநவ மருவும்
வெங்கை யானையார் கயிலைமே வியபடி மேவும். (௮)

3832. அருவி பல்விடம் பாய்தரு முழக்கமு மமரர்
மருவி யார்ப்புறு துந்துபி முழக்கமும் வளையுங்
கருவி மாமுகின் முழக்கமு மலர்ப்பதங் கருத்தி
லிருவி யன்பர்செய் யரமுழக் கத்தின்மே லெழாவால். (௯)

3833. அடியிற் றங்கிய சுனைதலத் தொடும்பகுத் தறியார்
தொடியிற் றங்குகை வானநா டியருளந் துணியக்
கடியிற் றங்கிய குவளைகள் செறிவன கண்ணிற்
கொடியிற் றங்கிய பகைதபுத் துறவுகொண் டாடும். (௰)

3834. அணங்க னூர்பலர் குடைதொறுஞ் சுனையகத் தமைந்த
மணங்கொள் கொங்கையிற் குங்கும மண்ணிய நீத்த
மிணங்கு மீதென ரிராவணற் கடிந்தபோ தெழுந்த
குணங்கொள் செய்யநீர் வறந்தில தினுமெனக் குறிப்பார். ()

3835. கந்த ரந்தொறு முனிவரர் பற்பலர் கற்பச்
சந்த வெள்ளிய நீற்றினா லுடலெலாந் தயக்கி
வந்த வாதனத் துறைகுவர் கண்டவா னுடர்
நந்த வெள்ளிய முடங்குளை மடங்கலா நயப்பார். (கஉ)

3836. நிலவு பாற்கரர் சேவைக்கு வருந்தொறு நீண்டு
குலவு வெள்ளிவெண் கற்றைபோ யவருடல் கூட
வுலவு ஞாயிறு நந்நிறம் போயதென் றுளைவான்
வலவு வாமதி களங்கநீங் கியதென மகிழ்வான். (கங)

3837. மேக வண்ணனுங் கணந்தொறும் வெள்ளிவெண் கயிலை
நாக நின்றெழு சுடர்ப்பிழம் பொருங்குநண் ணுதலாற்
போக மாமக ளுவப்புறக் கருநிறம் போக்கி
யாக முற்றுமுன் னிறஞ்செய்த தெளிதென வவாவும். (கச)

3838. அயனி ராசதன் மாயன்ற மதனிவ ரளவி
னுயருஞ் சத்துவ வுருத்திர னொருவனே வலியன்
மயருஞ் செய்யதா மரைபசுந் தொல்லிலை மட்டே
பெயர்வில் வெள்ளிவெண் கயிலையோ தாங்கிடப் பெறுமால்.

ஆயி ரக்கால்மண்டபம்.

3839. இன்ன மால்வரைக் கயிலையி லெற்றைக்கு முளது
சொன்ன மற்றைநான் கினுமிது துணைகுவ தரிது
பன்ன கேசனும் பகருவ லெனப்பெரும் பண்ப
தன்ன மண்டப மொன்றதன் கால்களா யிரமே. (கரு)

3840. ஆய்ந்த காலெலாஞ் செம்பொனாற் பன்மணி யவையால்
வாய்ந்த மேற்பரப் பொண்மையை வகுக்கநாம் வலமோ
வேய்ந்த தோற்றந்தா னிளங்கதிர்க் கோடிக ளிராறும்
பாய்ந்த வவ்வரை மிசையுதித் தனவெனும் படிய. (கஎ)

திருவோலக்கமண்டபம்.

3841. அன்ன மண்டப நாப்பணோர் மண்டப மதனை
யென்ன ருஞ்சொல்வார் வித்தினுட் படுமுளை யென்னச்
சொன்ன நூலத்துட் சூக்குமஞ் சொலத்துணி வாரு
மன்ன மற்றத னுண்டொழில் வகுத்திட மாட்டார். (கஅ)

சிங்காதனம்.

3842. யாம்பஞ் சானனப் பெயருற்றும் பாத்தலி தன்றி
யாம்ப லாகம மறைமுதற் றேற்றிடா வதனு

லேம்ப லோடணை சுமப்பமென் றரியியையந் தென்னப்
பூம்பன் மாமணி யணையொன்றம் மண்டபம் பொலிய. (கக)

சிவபெருமான்வீற்றிருத்தற்சிறப்பு.

3843. அனைய திப்பிய முடங்குளை மடங்கலா தனத்து
வனையு மெய்பெரு மான்சிவ ஞானமா முனிவ
னினையு மெய்யரு ளிதயத்தி லிருப்பென நெருங்க
லினையு மாத்த மண்டல நடுவிருப் பென்ன. (உ௦)

குடை, சாமரைகள்.

3844. குறைந்த மாமதி யன்றிவே றிலையெனல் கொளாது
நிறைந்த மாமதி யெனமிசை வெண்குடை நிழற்ற
வுறைந்த வான்புன லிரண்டுந்தம் மினத்தொடு கலத்தற்
கறைந்த மேற்செல வெனக்கவ ரிகள்புடை யசைய. (உக)

விடைக்கொடிகள் முதலியன.

3845. விடையி ரண்டுள வெனலெதிர் கொடிகளான் விளங்க
வடைவ ளிக்கிடை யூறிலா மையினணிந் தனவாய்
மிடைந யங்கொள்சாந் தாற்றிகள் விளங்கமேன் மேலும்
புடைய நேகமா கியவிரு தாவளி பொலிய. (உஉ)

குடமுழா, சங்கம் முதலியன.

3846. ஆய வாணனும் பானுகம் பப்பெய ரவனும்
பாய வண்குட முழவமும் பணிலமும் பற்றி
மேய வார்ப்பொடு மற்றைய வார்ப்பெலாம் விரவி
யேய மாகட லொலிமுகி லொலிதப விரிப்ப. (உ௩)

அரமுழக்கம்.

3847. வான வாழ்வின ரிந்திரர் மலரணை வதிவா
ரூன நேமியார் வித்தியா தரர்சித்த ருரகர்
மான வாசைகா வலர்முனி வரர்முதல் வளைந்தே
யான மாதரோ டெழுப்பர வொலிதிசை யளாவ. (உ௪)

3848. நந்தி நாயகன் வேத்திரத் தொடுமெதிர் நடந்து
முந்தி யாகுந்தன் பணிதலை நிற்பமூ வுலகுஞ்
சிந்தி யாதுயிர்த் தவளிடப் பாகத்துச் சிவண
வந்தி வான்மதி சூடிய வழகன்வீற் றிருந்தான். (உ௫)

தரிசிக்கவந்தவர்கள் தரிசித்துச்செல்லல்.

3849. கண்கொ ளாத்திரு வோலக்கப் பெரும்பயன் கண்ணுற்
றெண்கொ ளாக்களி மகிழ்ச்சியிற் றிளைத்தன ரிறைஞ்சி
விண்கொ ளாக்கதிர் மோலிவிண் ணவர்முத லியாரும்
பண்கொ ளாச்சொன்மா தர்களொடுந் தம்மிடம் படர்ந்தார். ()

திருநந்திதேவருடைய வேண்டுகோள்.

3850. கூடி நின்றவர் குழாத்தொடு மகன்றது மன்றத்
தாடி யாவயிற் றனித்தினி தமர்வது முளத்து
நாடி நல்லம யம்மிது வேயென நயந்து
பாடி யன்பொடு பணிந்தன னந்தியெம் பகவன். (உஎ)

3851. இடைய றாமலே பணிந்தெழு நந்தியெம் பிரானை
யுடைய நாயக னுண்ணெகிழ் கருணையா னோக்கி
யடைய நீயுளங் குறித்ததெ னறைகுதி யென்னக்
கடைய னேன்செயும் விண்ணப்ப மிதுவெனக் கரைவான்.()

3852. ஐய நின்னருள் வலியினாற் கைலைகாப் பமைந்த
செய்ய பேரதி காரத்திற் பிறவற்றிற் சிறந்தே
னுய்ய வேண்டிநின் னாகமப் பொருண்முழு துணர்வான்
வெய்ய னேன்விழைந் தேனெனப் பணிந்தனன் மீட்டும். ()

ஆகமங்களை உபதேசித்தல்.

3853. பணிந்த நந்தியெம் பகவனை யெழுகெனப் பணித்தே
துணிந்த நான்மறைப் பொருளெனுந் தோன்றலெம் பெருமா
னணிந்த தன்புடை யிருத்தியங் கையின்வெரிந் தடவித்
தணிந்த சிந்தையி னாகமந் தெருட்டுதல் சமைந்தான். (௩௦)

வேறு.

3854. காமிகமே யோகசமே சிந்தியமே காரணமே யசிதந் தீத்தம், பூமிபுகழ் சகச்சிரஞ்சூக் குமமஞ்சு மான்சுப்ர பேதம் பொற்பி, னாமினிய விசயநிச்சு வாசஞ்சுவா யம்புவமே யனலம் வீர, நாமவிர வுரவமகு டம்விமலஞ் சந்திரஞா னம்விம் பம்மே. (௩௧)

3855. மேயபுரோக் கிதஞ்சருவோத் தம்பார மேசுரமே மிளிர்சந் தானந், தூயவில லிதங்கிரணஞ் சித்தமே யுயர்வுறு வா துளமே யென்ன, வாயவிரு பத்தெட்டா மாகமத்தின் றொகையிவைக ளடைவே தோற்றம், பாயதிறங் களுமுறையே பகருவா மதுருறிக்கொள் பண்பிற் கேணீ. (௩௨)

3856. மறையனைத்து நம்முடைய நான்முகத்து நின்றும்வெளி வருமா செய்து, பொறையமைக்கும் பொதுவாக்கிச் சிறப்பாக வாகமத்தைப் புகல லுற்றாங், குறையறுக்கு மவைமூலங் கோணாறுக்கு மிவையுரையாக் கோடி யின்னு, மிறைதபுக்கு மவைபசுவா மாகமந் தீம் பாலாகு மெய்ம்மை யோரின். (௩௩)

3857. தேகோ மிகமுதல சிதம்வரையோ ரைந்துஞ்சத் தியோசா தத்தே,மாடுபொலி தீத்தமுற்சுப் பிரபேதம் வரையைந்தும் வாம தேவங், கூடும்விச யம்முதலா வீரம்வரை யைந்துமகோ ரத்துண் டாய, நீடுமிர வுரவமுதல் விம்பம்வரை தற்புருட னேர்ந்த தைந்தும்.

3858. அறையுமிரு பதுரீங்கப் புரோக்கிதமுன் வாதுள மீருய வெட்டு, நிறையுமொளி வளரீசா னத்துநின்று தோன்றினவா னிலவ நாளுந், குறையிலொவ்வோ ராகமமுஞ் சரியைமுத லொருநான்குங் கூறு நிற்கு, மிறையிலினி துணர்த்தியென வொவ்வொன்று வாய் மலர்ந்தான் மேதக் கோனே. (௩௫)

3859. முந்துகா மிகமுதலா வோரிருபத் தெட்டனுளு மொழி முனுக்க, நந்துமிர வுரவத்திற் சிவஞான போதநிற்க நயத்தவெல்லாஞ், சந்துமூலே யொருபாக னுபாகமத்தோ டுணர்த்துதலுந் தவாதுகேட் டவ், விந்துமுடி யவன்பாத மெழுந்துபணிந் தொருவினு வியம்ப லுற்றான். (௩௬)

திருநந்திதேவர் ஐயுற்றுவினவல்.

3860. ஆயசுவா யம்புமுத லியவேழ்ப தார்த்தமெனு மமைதி பூண்ட, தூயபவுட் கரமதங்க முதலியவா றெனுமைந்தே சொலும்ப ராக்கியை,யேயமுதற் சருவஞா னோத்தரமுன் ஞன்கென்றே யியம்பா நிற்கு, மேயவிர வுரவமிரு கேந்திரமுன் மூன்றென்றே விளம்பா நிற்கும். (௩௭)

3861. ஆதலினு லடியேற்கு மலேவுபடு மிதுதெளிய வறைவா யென்று, காதலொடு கைகூப்ப முகமலர்ந்து நகைமுகிழ்த்துக் கருணை மூர்த்தி, மேதகைய மூவகைப்பா தங்களிற்பல் பேதத்தால் வேறு மேனுங்,கோதமையா ஞானபா தத்தியல்பெவ் வாகமத்துங் குறிக்கொ ளொன்றே. (௩௮)

3862. மன்னியப தார்த்தமேழ் முதலாக மூன்றளவும் வகுக்கு மேனு, மின்னியமற் றவைமலேவு படாவெனினு மிரவுரவம் விளம்பா நின்ற, துன்னியவான் சிவஞான போதமுணர்த் துதுமலேவு துன்று தாகும், பன்னியவ பரம்பரமாஞ் சிவஞான மென்றதனைப் பகர்த லுற்றான். (௩௯)

அவருக்குச் சிவஞானபோதத்தை உபதேசித்தல்.

3863. அருமையினு மருமையென நாமும்பா ராட்டிடுவ தளவி லாத, பெருமையுடை நூற்கெல்லா முடியாவ தெத்துணைத்தாய்ப் பிற ங்கு மென்னி, னிருமைதரு பன்னிரண்டு சூத்திரமா முடிவுபெற்ற திதுகேளென்றே, யொருமைமன நடுப்பதியப் பெருங்கருணை தழைத் தோங்க வுரைப்ப தானுன். (௪0)

3864. எழுவாய்ச்சூத் திரம்பதிக்குப் பிரமாணம் பாசத்திற் கிர ண்டு மூன்று, பழுதாகாப் பசுவிற்கா நான்கைந்தா றியல்பசுபா சம்ப திக்காம், வழுவாத விலக்கணமே ழெட்டொன்பான் சாதனமே மற் றை மூன்று, மெழுதாத சாத்தியங்கூ றுதலாகு மின்னுமொன் றுண் டியம்பக் கேளாய். (௪௧)

3865. முந்தியதாஞ் சூத்திரத்திற் சகந்தோற்ற நிலேயிறுதி மூன் றதென்று, நந்தியமற் றஃதாணு லேயுடைய தென்றுமே ளூடு மாறு,

வந்தியலு மிருவருமுத் தொழிற்படுவ ரென்றும்வரை யறுக்கப் பட்ட, வுந்தியமூன் றதிகரண முள்ளதுகா ணிந்தியங்க ளொருங்கு மாய்த் தோய். (சஉ)

3866. நேயவிரண் டாவதர னுயிர்களிலே யிரண்டறுமா நிற்ப னென்றும், பாயகன்ம பலனையுயிர் களுக்கரனே கொடுத்தூட்டும் பண்ப னென்று, மேயவுயி ரனைத்துமச்சு மாறியே பிறக்குமென்று மேலோ னுய, தூயவரன் சருவவியா பகனென்று நான்காகித் தோ ன்று நிற்கும். (சங)

3867. மூன்றிலையென் னறிவுடனே சொல்லுகையா னறிவுயிர் தான் முழங்க வுண்டு, மான்றவென துடலென்ற பொருட்பிறிதின் கிழமைபா வழங்க லாலே, யான்றவுட லினுக்குவே றுயுயிருண் டொ ருவனே யைந்து மோர்வி, னேன்றவொவ்வொன் றறிகின்ற வைந்த னுக்கும் வேறுயோ ருயிருண் டென்ப. (சச)

3868. கனவுடலை விட்டினை வுடலிலே வருகையினுற் கனவு டற்கு, மனநெகவே றுயுயிருண் டொருவாநித் திரையினும்பி ராண வாயு, கனமருவு தொழில்செயவுஞ் சரீரத்திற் குப்புசிப்புந் தொழிலுங் காண, வுனவின்மை யாற்பிராண னுக்குவே றுயுயிரொன் றுண்டு மாதோ. (சரு)

3869. மறவியுற்று மறவியுற்று நினைக்கின்ற படியாலே மறவி தீர்ந்த, வுறவியர னுக்குவே றுயுயிருண் டெல்லாத்தத் துவங்க ளுக் குஞ், சிறவுபெற வெவ்வேறு பெயரிருக்கும் விதத்தாலே தெரிய வந்த, வறவருதத் துவங்களுக்கு வேறாக வுயிருண்டா லாக வேழே.

3870. நாவிலந்தக் கரணங்கட் குயிருடனே கூட்டுறவு நண்ணி னன்றிச், சாலவொரு தொழிலிலா மையினந்தக் கரணங்க டமக்கு வேறு,யேலவுயி ருண்டுமல மறைப்பினு லுயிர்க்கறிவொன் றில்லை நா ளுங், கோலவுயிர் மூன்றவத்தைப் படுமாக மூன்றென்றே கூற லாமே. (சஎ)

3871. ஐந்தினுயி ராலேதத் துவங்களெலாந் தொழில்செய்யு மான்ற னாலே, மைந்துயிரெ லாமறியு மிரண்டேயா றனிலுயிர்கண் மதியி னாலே, முந்தியறி வனவனைத்து மழியுமொழி தருமப்பிர மேய மாக, நந்தியறி யப்படுவா னரனிதற்கு மிரண்டாக நவில லாமே. ()

3872. ஏழிலரன் பாசத்தை யனுபவியா னனுபவியா தியையப் பாசம், வாழரனை யவ்விரண்டு மனுபவிக்கு முயிர்மூன்றே மருவு மெட்டி, லூழுயிர்க்கு நல்லறிவு தவத்தடையு மரன்குருவா யுறுவ னேந்து, மாழுமுயிர் பற்றுதலிற் றனையறியாத் தனையறியு மவையற் றாலே. (சகூ)

3873. ஒன்பானி லரன்ஞானத் தாலரனைக் காணுமுயி ருயிர்பா சத்தில், வன்பார்பற் றறினரன்றோற் றுவன்வாத னுமலம்போ மதித் ததந் தெண்ணி, லின்பார்மூன் றொருபதினீ யரனுடனுன் றாகிற்றி

யிவையு மாறு, நின்பாலாந் தொழிலனைத்து மான்பணியென் றே கோடி நிகழ்த்தி ரண்டே. (ருO)

3874. பதினொன்றின் ஞானியுறும் விடையமர னனுபவிப்ப னரனைப் பற்றி, முதிரன்பி னிருந்தாலவ் வானிடத்தே கலப்பனிது மொழியி ரண்டே, யெதிரில்கடை மும்மலமுங் களைகசிவ ஞானி யொடு மியைக ஞானி, கதியிலிங்கஞ் சிவனென்றே வழிபடுக படா மையையுட் கழிக்க நான்கே. (ருக)

3875. பன்னிரண்டு சூத்திரத்தின் றனிச்சிறப்பு மொரோ வொன்றின் பாகு பாடு, மின்னியநா மெடுத்துரைத்தா மின்னுங்கேள் சிலாதமுனி வேண்ட வந்தோய், மன்னியசை வத்தமணு திகளினறி வரியனவா னிறைவான் மாண்ட, துன்னியவ லியவநா திசத்திநித்தி யத்தவைந்தாச் சொல்வர் மெய்யே. (ருஉ)

3876. பதியுமதற் கடிமையாம் பசுவுமத னணவமும் பாற்ற வத்தைக், கதியவன்மா யையுங்கரும மும்மெனலா மவையிரண்டுங் கடைமல த்தாம், பொதியவறி வித்தல்பதி யறிந்துநிற்றல் பசுசிவத் தைப் புணரா தஃது, விதியின்மண் ணுய்த் திடுவதா ணவங்கருவி மாயையுணு மேய கன்மம். (ருங)

3877. உணர்வுறுச் செயிர்வலியா லுறவிழுந்திட் டாணவத்தை யுறுப சுக்கட், கணவுதா யெனவருளாற் பருவமுணர்ந் துடல்கரணம் புவனமாக்கிப், புணர்மாயை யாணவந்தீர்ந் தொளிரறிவே யுருவாய புனிதன் மாயை, தணவில்வினைப் பாலுயிர்கட் கிருவுடலு மிறுமுடலுந் தகமுற் செய்து. (ருச)

3878. அருவுருவத் திறத்துடலா யுயிராய்மற் றுலகமா யமையும் வேறாய், மருவுகொள மற்றவற்றி னுடனுமாய் வல்வினைகட் கேற்கு மாறு,கருவியெலாந் தொழிற்படுத்தித் தகுதிபெற வுணவனைத் துங் காட்டா நின்று, வெருவறநற் பதம்புகுத்து வான்புகர்மா மலங் கழிக்கும் விடலிலாதே. (ருரு)

3879. இரும்புகலந் தெரியமுற்று மெரித்தொழிலே யமற்றிடுவ திரும்புக் கில்லை, யரும்படைப்பா தியவிதியா தியரிடைச்செய் யினு மொடுக்க லரன தேகா, மொருங்குவலி யநாதிபந்த மனுபந்த மல மிரண்டு முயிரே மேவு, நெருங்கியமற் றவையடையா னநாதிமுத் தன் கலந்தருணின் மலப்பி ரானே. (ருசு)

3880. மேயயா வையும்புரிந்தும் விகாரமொன்று மின்மை யினல் விடுபடாத, தூயசுதந் தரத்தினு லொருவழியாங் குணங்கலைக் குந் தூய்மைதன்னுற், பாயவித மாருயிர்க்கேற் றுந்திறத்தா லிவை முதலாம் பண்பான் மிக்காங், கேயவொளி முதல்வனொப்ப திலையிதுவ லாற்பதியு மில்லை மாதோ. (ருஎ)

3881. மருவுமுயிர் சிற்றறிவிற் பலவிதத்த விருண்மலத்த மலி யீண் டுற்ற, வொருவில்சக லத்த வசிப்பன வரும்வி யாபகத்த வொ

ருங்கு சூழு, மிருண்மலந்தீர் தரமுத்தி யடைவவெண்ணில் லனவெ
னினு மிருண்ம லத்த, பொருததனே டுங்கருமத் தனவவற்றே டும்
மாயை புணர்ப்ப மூன்றே. (ருஅ)

3882. சத்துகர் தமக்கறிவில் லாதனவ சத்தெனச்சா ராத
வல்ல, வொத்தறிந்துங் கனவின்மபங் குவசத்த சத்துணர்விற் சத
சத் தோரே, பொத்தியவா ணவமயக்க முதலைமுதல் செயாதுவிண்
ணம் புவிகி ழின்ப, மெத்தியதுன் பருந்துநோய் முதலடுப்பின் வருந்
துமற்றை மேவின் மேவும். (ருகூ)

3883. தனையொவ்வாச் சத்தசத்து ருதசத்தோ ராதொன்றுந்
தான்வேண் டாது, வினைபலவாங் கரணம்வெவ்வே றுடல்புவன
மியாவுமுயிர் மேவற் கேகா, ணனையபெருங் கலாதியிச்சை யாதிகள்
வந் தடையுமா றன்றே நெல்லின், வனையுமுளை யென்னவா ணவமு
யிரிற் கலக்குமிச்சை யாதி மாற்றி. (சுo)

3884. பதியகத்தி னிச்சையா திகளையுந்தோற் றுதணவும் பார்
வை சாரு, மதியிருளின் விரவுதன்னை யழிப்பமுற்று சத்தியுந்தன்
வழியே யாக்கி, விதியமையு மூன்றிடத்து மிருதிறமா மவத்தையென
விளம்போ ரைந்துந், திதியமையத் தள்ளாம லுயிருறப்பல் சத்தியாச்
சென்று பற்றும். (சுக)

3885. மேயவுறு திக்கருமஞ் செயவொட்டா திறுதியதே மிகவு
மாக்கு, மாயவுயிர் நல்லறிவைச் சிதைப்பிக்கும் வளர்ப்பிக்கு மடவு
ணர்ச்சி, தூயவெண்சொற் றெழிலணுவுந் தோற்றுது மறுதலையே
தோன்றத் தோற்று, மாயவல்லா ணவந்தணிக்க வுயிரடுக்கு மாயை
சுத்த மசுத்த மாதோ. (சுஉ)

3886. சுத்தமலி தத்துவமைந் தீருருவாக் கைம்பத்தோ ரெழு
த்துத் தோற்று, வித்தவெண்பத் தொருபதமேழ் கோடிமனு வாகம
ங்கள் விளங்கு நாலே, ழொத்தவிரு நூற்றெழுபா கமமறைநால் புரா
ணங்க ளொருமூ வாறு, தத்தமனக் கினிமைசெய்சாத் திரமாறு கலை
த்தொகையுந் தகவெட் டெட்டே. (சுங)

3887. ஆயசிவஞ் சத்திநா தவிந்துசதா சிவமீச மரனி வர்க்கு,
மேயநல்விஞ் ஞானகலர் பிரளயா கலர்தீது விடுத்தா ராய, தூய
சரி யைகிரியை யோகத்திற் செறிந்தவர்க்குந் தொகுத னுக்கள், பாய
கர ணம்புவன போகமைந்து கலையுயிர்த்தல் பண்ணுஞ் சுத்தம். (சுச)

3888. காலமொடு நியதிகலை வித்தையரா கம்புருடங் கரைநா
லாறு, சாலமைதத் துவர்தன்பாற் றரும்பகுதி யோரேழுஞ் சாற்று
நின்ற, மாலயன்வ லாரிமுனுஞ் சகலருக்குத் தனுமுதலா வகுக்கு
நான்கு, மேலவினி யுதவிடுவ தசுத்தமா மாயைமற்று மிசைத்தல்
கேட்டி. (சுரு)

3889. மாயாகா ரியமயக்க லில்லேயேல் வினைநுகர்ச்சி வரவு மில்லை, யேயாவவ் வினைக்கழிவு மாங்கெய்தா முனஞ்சூழ்ந்த விருண்மலத்தின், சாயாத முயக்கறலி லுயிர்மாயா காரியத்திற் சரித்த லின்றிக், கூயாத விருவினையீட் டாதிவையின் றவையுமெய்தல் குறிக்கொ ளாவால். ()

3890. இருவினையென் பனமனமுன் மூன்றூலு மிதமகித மியற்ற லாமப், பெருவினையின் பயனறனே மறனேயிக் கருமத்தின் பயனுப் பேணி, மருவியிடு மின்பதுன்ப மவைமாய்வி னவ்வினைகள் வந்து தோற்று, மொருதனுவுண் டாக்கமற்று மொருதனுவி லுணைப் படுங்கெட் டுங்கே டின்றாய். (௬௭)

3891. மனமுதலா மூன்றுமசை வறநிற்ப நல்வினையின் வரவும் பல்ல, மனமுதலா மூன்றுமசை வறநிற்பத் தீவினையின் வரவும் பல்ல, மனமுதலா மொருமூன்றும் புடைபெயர நல்வினையின் வரவும் பல்ல, மனமுதலா மொருமூன்றும் புடைபெயரத் தீவினையின் வரவும் பல்ல. (௬௮)

3892. தூயவா யமைந்தவினை யாவருக்குந் தூயவா யமைந்த பல்ல, தீயவா யமைந்தவினை யாவருக்குந் தீயவா யமைந்த பல்ல, தூயவா யொருவர்தமக் கொருவருக்குத் தீயவாய்த் தொலைவ பல்ல, தீயவா யொருவர்தமக் கொருவருக்குத் தூயவாய்ச் செறிவ பல்ல. ()

3893. நல்வினைமா றுபுதீய வாய்ந்தீய நல்லனவாய் நணைலு முண்டு, வல்வினைமெல் லியவினையாய் மெல்வினைவல் லியவினையாய் வரவு முண்டு,நல்வினையாற் றும்பொழுதே யதன்பயன்போற் றீயவினை நணுக லுண்டு, புல்வினையாற் றும்பொழுதே யதன்பயன்போ னல் வினையின் புணர்வு முண்டு. (௭௦)

3894. புரிமுறையிற் பிறழ்ந்துயிர்கெய் வம்பூத மென்றிவற்றிற் புகலு மொன்ருன்,மருவுமுழி விழைந்தவிழைந் திலவிழைந்த வன்றி மற்று வருவ வென்னத், திரிவிதமாம் பயனிழிந்த வினைதீர்வு செயினு நுகர்ந் தன்றித் தீரா,வரியமுழு வதுமிதுவி லையானுமிமை யும்பண்ணு மையும்ப விக்கும். (௭௧)

3895. இன்பமே பயந்துவரும் புண்ணியமெல் லாமிழிந்த பாவ மெல்லாந், துன்பமே பயந்துவரு மிவ்விரண்டுந் தொகிற்பயனே துய்த்தாற் றீருங், கொன்செய்வினை யொழிந்தவிரு வினையறமே மறமேகொள் பயனை நாளும், வன்செயந்தப் பயன்போல வழங்குறு தொழிந்தொ துங்கும் வகையு முண்டோ. (௭௨)

3896. இயம்புநாற் கதியினெழு வகைத்தோற்றத் தெண்பத்து நான்கிலக்கப், பயம்புபடு பலபவத்தில் வினையினாற் பலமுறைவீழ் பசு வை வாங்க, நயம்படுகின் மலனன்றே யுலகுவிதிப் புழித்தலகீர் நல்ல மூர்த்தி, வியம்படுமூன் றுருவாகி விரிபுவன மெலாங்கதித்தான் விளங்கு மாறே. (௭௩)

3897. அறிவுரு வகையறங்கண் முழுக்கவடுத் தறிதரச்செய் ததன்பின் னாகச், செறியுமகச் சரியைமுத னன்கும்விளங் கிடுமா மென் மெலச்செ னுத்தி,நெறிகொளுண்மைச் சரியைமுதன் மூன்று நிரப் புபுதனது வலினோர் தேய்ந்து, பரிமலபா கம்பயிற்றிச் சத்திபதித் திருவினையின் சமமும் பண்ணி. (எச)

3898. பாசமொடு பசுவுங்கீழ்ப் படமேலாம் பசுபதிநீர் பயிலுங் கூர்ப்புத், தேசுபெறத் திரண்டென்ன வருட்குருவாத் திருவுரு வொன் றெடுத்து வந்து, காசின்மனுப் பதமெழுத்துப் புவனங்க டத் துவங்கள் கலைக ளின்னு, மேசிலிவை யோராறு மிறபுமா தூய்மை யினி தியற்றிப் பின்னர். (எரு)

3899. கூட்டமே பொதுவேதன் னியல்பேயென் றுரையுணர்வு குறிக்கு மூன்று,நாட்டமிகு முப்பொருளு மொன்பதினு டிடப்படுமிங் கியந்த வெல்லாங், காட்டுபுகாட் டுந்தானுங் காணறிவுங் கதிர்விழியிற் கலப்பே யாகு,மீட்டவரும் பயனுமுறத் தெரித்ததனி னழுந்துமிவற் றையுங்கே ளாயே. (எசு)

3900. மண்முதலாச் சிவமீரு மலிதருதத் துவமனைத்தும் வயங்க வாற்று, மெண்முதலாந் தொழிலனைத்துந் தனித்தனிகா ணுத லவற்றிற் கியையு ரூபந், திண்முதன்மற் றவைசடமாக் காண்டறரி சனமிடையித் திறங்க ணீங்கு, மொண்முதலுண் மையைக்காண்டல் சுத்தியாம் பாசத்தி னுற்ற மூன்றும். (எஎ)

3901. பாசமிவ்வா றகலுதலு முறவுபகை நாடாது பகருந் தானே,நேசமுத லெனநிற்ற லுருவிதுகா றன்னியத்து நிரம்ப முழ்கு, மாசநினக் குயிரருளென் றகற்றவரு ளாமுதலென் றவாவல் காட்சி, வீசவது கொடுசெயனோர்ந் தொழிதலுற லருளாயே விடுதல் சுத்தி. ()

3902. ஆயவரு ளான்முதலே யெனநினைத்த லருளிறு லன்ன தாற்று, மேயதொழில் புரிகுவலென் றெண்ணுசெய லறல்விரும்பு மருளி னூடு, தோயவவட் போதமொடுக் கிடலெனமுன் கிளந்தவற் றிற் றேன்று மூன்றும், பாயசிவ னுருக்காட்சி யோகமாம் போகமு மேற் பகர்வாங் கேண்மோ. (எகூ)

3903. ஒன்றுபடு மதனுலோர் பொருளாகா திரண்டின்வே றும்மா காது, தொன்றுநிலை நிலையேயாய்க் கலந்துதன்ன றுன்றுமை யிரண்டுஞ் சோர, வன்றுமலத் தழுந்தியாங் கறிவாகி யறிவினுளாழ்ந் தறிவு மேவப், பொன்றியும்பொன் றுதவசத் தின்பவாய் மடுப்பதுவே போக மாமால். (அ௦)

3904. இந்நிலைமே லொருநிலையு மில்லையிஃ தொழிதரா தெந்த ஞான்று, மன்னுயிர்மற் றென்பதுங்கண் ணுற்றுமாற் றிடுமீங்கு வகுத்த பத்துந், துன்னுமுண்மை ஞானமே சுத்தவைந்த வத்தை யுளே தொக வடங்கும், பின்னர்நிலை நான்கினென்ப தடங்குமொரு நிலைபோக மேய டங்கும். (அக)

3905. இரிவரிய வுடலின்வினை வரும்வருங்காற் சாக்கிரா தீத மற்றைத், துரியமென விரண்டினிற்பி னேருவாஞ் சுழுத்தியொடு சொப்ப னத்திற்,பிரியமிகு சாக்கிரத்தி னுறினும்வள ருஞ்சகலம் பேச லென்னே, யரியபெரு நிலையழுந்த வவையெலா மழியுமயக் காற்ற லின்றே. (௮௨)

3906. மருண்மலநீங் குறமாயை வினையிரண்டு மருளாயே மன் னும் வையத், திருண்மலம்போக் கிடவவற்றை யெம்பிரா னேன்று கொண்டே யினிது நல்குஞ், சுருதியினுன் மொழியாற்சு வானுபூ திகத் தையுறத் தோற்றி ஞனே, யிருபகுப்பா வயினுமிற வேத்துபுசன் மார்க்கரின்ப மெய்து வாரே. (௮௩)

3907. என்றுபெருங் கருணையுரு வெம்பிரான் பெத்தமுத்தி யிரண்டிற் றன்மை, யொன்றுபிறி தின்மைபொரு. டொறுங்காட்டி யுரைத்தருளு முணர்வு கேட்டு, நன்றுசிந்தித் துத்தெளிந்து நிட்டை யுற்ற நந்திமா தவத்தோ ருங்குத், துன்றுபெரு மகிழ்ச்சிகொள வாண்டருளுந் தனிமுதலைத் துதிப்ப தானுன். (௮௪)

திருநந்திதேவர்துதி. வேறு.

3908. கதிக்கு மியல்பு வேறுடைமை கற்றோர் கருது பலவாகப்
பதிக்கு முலக மெலாம்பாற்றி மீட்டு மாயோன் பதுமனுடுந்
துதிக்கும் படிதோற் றிப்போற்றிச் சூழு மலவாற் றலைக்காற்றுந்
திதிக்குஞ் செயலே தலைநின்ற சிறந்த வுருவ முதல்போற்றி.()

3909. ஒண்மைக் குணமி லொருநாயே னுற்ற மடனன் றில்லாத
திண்மைக் குணமா மலத்தன்றே சிவண வாழா நின்றகுண
வெண்மைத் தலைவ னுறவாங்கே யியலும் பருவந் தனையேய்த்து
வண்மைக் கலையா திகடந்த வள்ளற் றன்மை யதுபோற்றி.()

3910. இருளு மலமொன் றேபற்று மிரண்டு வினையு முடையேற்கு
மருளின் மலியு மாயையுங்கன் மமுந்தி ரோதா னத்தினையும்
பொருளின் மலிமா மாயையையு மலநான் காகப் புணர்த்தியே
யருளின் மலித நீராவற் புதநற் றெழின்மை யதுபோற்றி. ()

3911. நெருப்பி னழற்றி வாட்படையா னிமிரு முடலம் பிளந்தி ட்டே,யருப்பு நெய்த்தோர் கண்சோர வமையக் குடைந்து நரகிட்டுங், கருப்பம் பொலிமண் ணகத்துய்த்துங் காமர் துறக்கத் திடையேய்த் தும், விருப்பு வெறுப்பு மில்லாது விளையு மவிகா ரம்போற்றி. (௮௮)

3912. பூதங் கொல்லோ வவற்றுன பொறைசா ருடலோ பொறிகளோ,மோதுங் கரண மதுதானோ மொழியு மாயை யதுகொல்லோ, யாதோ வறியே முணர்வதென்றெ யினைத ராம னிதாழும், போதம் வேறென் றருள்புரிந்த பொங்கு மொளிப்போ தகம்போற்றி. (௮௯)

3913. உறுகே வலச கலசுத்த முயிர்கட் கெல்லாங் கெழுமு மென்றூர், தெறுமா யையிலா ரிரண்டாய திறத்த ரென்று மாவயி னம்,மறுமா யையையின்ற டாவிரண்டு கரும மென்று முறவகுத்துங், குறுமா லேனு முளத்தரும்பக் கொள்ளா வாய்மை யதுபோற்றி. ()

3914. வருசாக் கிரவ வத்தைக்கு வாய்த்த சகலத் தெனையன் னே, வொருவா தாக்குந் தொழுநீங்கி யுற்ற விருட்கே வலத்தின் கண், மருவா வீக்கு பிழைகொண்டு விடாதுட் சலியா மறுவலுங்காத் தருமா தவஞ்செய் வலிச்சூழ்ச்சி கைக்கொண் டருளு மதுபோற்றி.

3915. வினையின் றிறமூண் டிடுமாறு மெலியேன் மெலிவைத் தகவாற்றி,யனைய துகள்போ யனுங்கும்வித மறிவுண் டாக்கி யெலாமா ற்றிக்,கனைவண் டொலிக்க மதுப்பொழியுங்கமல மலர்நேர் திருப்பாத, நினைவி லுறக்கொள் வாழ்வளித்த நிமல வாழ்வுன் பதம்போற்றி. ()

3916. நிகழ்கே வலமுஞ் சகலமுமுத் திச்ச கலமுந் நிகழவுய்த் துத், திகழ்கே வலச கலநீக்கச் சிறப்பு மருவுஞ் சுத்தத்திற், றிகழ்கே வலமே யானேனைச் செறிகே வலநீக் குபுமேலாங், திகழ்கே வலஞ் செய் திடநாடுஞ் செறிகே வலநற் பொருள்போற்றி. (கூங)

3917. காரா ணவத்தன் றேபட்டாய் கலக்க மாயை யதுபூண்டா, யோரா வினைக்கோட் பட்டாய்போக் குடனே வரவும் பட்டாயென், ரூரா வறிந்தாய் நீயேயென் றமைய விழித்து மானமுதலோர், தேரா வுருவந் தோற்றியெனைக் காட்டியருளுந் திறம்போற்றி. (கூச)

3918. ஒன்று படுகே வலத்தையைந் துறைழந் தாஞ்ச கலத் தொன்று, முன்ற விருஞ்ச கலத்தைந்து முதிரு மொளிசார் சுத்தத்தி, லென்று வன்ன பேதமெலா மருளி னிசைத்து முறைகாட்டி, நன்று தெரித்திட் டினிதாண்ட நலமார் பெருமைத திறம்போற்றி. (கூரு)

3919. யானே யென்ன வெனதென்ன நின்ற விருளைப் போக் கியெலாந்,தானே யென்ன வெனவல்லே தன்ரு ளிருத்திக் கதிர்மு ன்ன, மீனே யென்ன விளக்கென்ன விரவு மாயை மாய்த்தங்ங, னூனே நுகரு நுகர்ச்சியெலா மேற்ற வுரிமைத் திறம்போற்றி.(கூசு)

3920. இற்றை வரையு மென்வழியே யிருந்த தனைப்போற் றன்வழியே, யெற்றை வரையுந் தங்குநிலை தோன்றத் தனையு மெனை யுந்தந், தொற்றை யுருத தனதெனதற் றெருருபூப் பாழ்மேன் முழுப் பாழா, மற்றைக் கடறி வலையாக வரும்பே ரின்ப சுகம்போற்றி. (கூஎ)

3921. மதிவீற் றிருக்குஞ் சடைமுடியு மானு மழுவுஞ் சதுர்ப் புயமுந், துதிவீற் றிருக்குந் திருமுகமுந் தோன்றப் படிந்த புலித் தோலும்,விதிவீற் றிருந்த செவ்வாயும் வெய்ய தாகு நுதற்கண்ணுங், கதிவீற் றிருந்த திருவடியு முடைய கைலைப் பிரான் போற்றி. (கூஅ)

சிவபெருமானுடையகட்டளை.

3922. என்று துதித்த நந்திமுக மெம்மான் கருணை யுறநோக்கி
நன்று நின்னை யபரசிவ னென்று ஞாலங் கொண்டாட[வகை
வொன்று சிறப்பி னும்பிறர்போ லுரைத்தா நூலுக் கியையும்
யன்று தவிரப் பாராட்டி யமைய வருகென் றருள்புரிந்தான்.

3923. பன்னாண் முயன்று நெடுமாலே பங்கே ருகனே பிறரறியாத்
தன்னாள் பெரியோன் பெருங்கருணை யொருங்கு பெற்ற சைலாதி
முன்னாள் வாய்த்த தன்பணியே முயன்று தலைநின் றிந்நாளே
நன்னா ளென்று மகிழ்சிறந்தா னடந்த தினிமே னவிலுவாம்.

சனற்குமாரமுனிவர். வேறு.

3924. மட்டலர் கமலப் புத்தேண் மைந்தனுஞ் சனக்கு மாரன்
கட்டலர் படைத்த லாதி கனவினு மேன்று கொள்ளான்
விட்டலர் மணிமார் பண்ணல் வாழ்க்கையின் வெறுப்பு வைத்தான்
பட்டலர் திசையான் றெய்வப் பாதமே சாரும் பண்பான். ()

திருநந்திதேவரை அடைதல்.

3925. மறைமுதற் கலைக ளெல்லா மயக்கறத் தெளிந்த நீரா [னுன்
னிறைகெழு கருணை வாய்ந்த நெடுந்தவ முருக்கொண் டன்
குறையரு முண்மை ஞானங் குறிக்கொடு தேர்தல் வேட்டா
னிறைமுதற் கயிலை காக்கு நந்துபா லெய்தி னானே. (கo௨)

3926. எய்திய சனக்கு மார னந்தியெம் பெருமான் பாத
மெய்திக முன்பிற் பல்கால் விரைதரத் தாழ்ந்து தாழ்ந்தே
யைதென வெழுந்து நின்று னருவியங் கண்ணீர் சோர
மைதிகழ் மனமில் லானை நோக்கினு னந்தி வள்ளல். (கoரு)

திருநந்திதேவர்வகு.

3927. நோக்கிய நந்திப் புத்தே ளுவலுநின் னுமம் யாது
தேக்கிய வலியி னிந்தச் சிலம்படை கருமம் யாது
பாக்கிய மாகக் கொள்ளும் பயனெது வேட்ட தென்று
னூக்கிய வலியான் மீட்டும் பணிந்தெழுந் துரைக்க லுற்றான்.

சனற்குமாரர் விடை.

3928. என்பெயர் சனக்கு மார னிச்சிலம் படைந்தே னுதன்
றன்பெய ரடைநின் செம்பொற் றுட்பணி செயற்பொருட்டே
நன்பெய ருண்மை ஞான நாயினேன் வேட்ட தென்றே
மின்பெயர்ந் தென்ன மீட்டும் வீழ்க்தெழுந் துரைத்தா னன்றே.

திருநந்திதேவர் அவரைஅங்கீகரித்தல்.

3929. நந்தியெம் பெருமா னென்பா னல்லியற் சனக்கு மாரன்
புந்தியுந் தெளிவு மார்தற் போதத்தி னொழிவுந் தேர்ந்தே

யுந்திய விவனுக் குண்மை யோதலா மென்றுட் கொண்டு
முந்திய விபூதி நல்கி முழுப்பணி நயத்தி யென்றான். (௬0௬)

சிவகணத்தோர்மகிழ்ச்சி.

3930. சொற்றசொற் றலைமேற் கொண்டு குமரன்றா மகிழ்ச்சி யுற்று
னற்றவக் கணங்க ணந்திக் கிவன்வந்து நணுகுங் காட்சி
கற்றையஞ் சடையார்க் கிந்த நந்தியே கலந்த தொக்கு
மற்றும்வே றில்லை யென்னு வாய்மலர்ந் துவகை பூத்தார். ()

3931. திருவடிப் பணிவி டாது செய்யப்பன் ஞான்கள் செல்ல
மருவடிக் கடிய ஞான குமரன்வாழ் தருமந் நாளிற்
றருவடிக் கைலை காக்குந் தம்பிரான் கருணை கூர்ந்தே
யுருவடிக் குண்மை ஞான மோதுமா வுள்ளங் கொண்டான்.

சனற்குமாரர் உபதேசம்பெறுதல்.

3932. பொருள்பெறுங் குமரற் கூவிப் பொலிவின்மாட் டிருத்தல்
யருள்சிவ ஞானபோத மண்ணல்பாற் கேட்ட வாறே[ செய்தே
தெருள்பெறத் தொகைமுன் மூன்றுற் செப்பினு னெந்தஞான்று
மருள்படு மைய மாதி முக்குற்ற மடித்த வீரான். (௬0௯)

3933. மன்னிய குரவன் வார்த்தை முழுமையு மாண்பிற் கேட்டு
மின்னிய கொடுசிந் தித்துத் தெளிந்துமே னிட்டை கூடித்
துன்னிய விருந்தான் வம்பே சொலும்பிர பஞ்ச மாய்த்துப்
பன்னிய சிவஞா னத்தே படர்பெருஞ் செல்வ னுகி. (௬௧0)

3934. இன்னணஞ் சனக்குமார னியல்சிவ ஞான போத
நன்னருட் டெளிந்து முத்தி நயந்துவீற் றிருக்குங் காலைச்
செந்நெறி யொழுக்கஞ் சார்சத் தியஞான தரிச னிப்பேர்
மன்னிய முனிவன் வந்து வண்கயி லாயம் புக்கான். (௬௧௧)

அவரைச் சத்தியஞானிதரிசனிகள் அடைதல்.

3935. புக்கமா முனிவன் ஞான போதமார் சனக்கு மார
னக்கபொற் பாதம் போற்றி நாயினே னுய்ந்தே னென்றான்
றக்கநீ யாவன் வந்த காரிய மெவன்சாற் றென்னத்
திக்கெலாம் புகழ்தன் பேரும் வந்ததுந் தெரியச் சொற்றான்.

அடியார்மகிழ்ச்சி.

3936. பரவுவின் னப்ப மேற்றுப் பங்கய முகமலர்ந்து
விரவுநீ றெடுத்து நல்கிப் பணிசெய்து மேக வென்று
னரவுநீர்ச் சடையா னன்ப ரகத்திய முனிவ னுக்குக்
கரவுதீர் திரண தூமாக் கினியெனக் கலந்தா னென்றார். ()

சத்தியஞானிதரிசனிகள் உபதேசம்பெறுதல்.

3937. சீரிய தன்பேர் நாட்டத் திருவடிப் பணியிற் றப்பா
னேரிய முனிவன் மேவ வுறுமகிழ் குமரன் பூத்துத்

தெரிய தான்முன் னோர்ந்த சிவஞான போதஞ் சொற்றான்
விரிய நந்திப் புத்தே டனக்குமுன் விளம்பு மாறே. (கஉச)

3938. குரவனை வழிபா டாற்றிக் கொளுத்திய வனைத்துந் தேர்ந்து
திரவனை கையிலே ஞான சிகாமணி யாகி வாழ்ந்தான்
புரவனை யொருபான் மேய புராதன னருளே யென்னப்
பரவனை தருமா றுற்றான் பரஞ்சோதி முனிவ னென்பான்.()

அவரைப்பரஞ்சோதிமுனிவரடைதல்.

3939. திகழ்பரஞ் சோதி தான்சத் தியஞான தரிச னிப்பேர்ப்
புகழ்முனி யிருக்கை நாடிப் பொற்பதம் பணிந்து வீழ்ந்தா
னகழ்மல வனையா னீயா ரடுத்ததென் னெனவி னுவ
விகழ்பவ மாய்க்க வந்தே னென்றெலா முரைத்தா னன்றே.

3940. உரைத்தசொன் முழுது மேற்றே யுறுகுண முழுது நாடி
விரைத்தமற் றிவன்போ லியாரே மேவுவா ரென்று வந்து
நரைத்தவெள் விடையான் செய்யு நல்லரு ளொன்று புல்லி
வரைத்தவெண் ணீறு நல்கி வதிகநம் பணிபி லென்றான். ()

3941. திருக்கிளர் முனிவ னுஞ்சத் தியஞான தரிச னிக்குக்
கருக்கிளர் தரஞ்சா ராத பரஞ்சோதி கிடைத்த காட்சி
யுருக்கிளர் துறைசை யெங்கள் சிவஞான யோகிக் குண்மைப்
பொருட்கிளர் கச்சியப்ப முனிவரன் புணர்ந்த தொக்கும். ()

3942. பணிபல நாளுங் கொண்டு பரஞ்சோதிக் கிரக்கஞ் செய்து
துணிசிவ ஞான போதந் தொன்மையி னுபதே சித்துத்
தணிவறத் தெளிந்த பின்பு நூலுங்கைத் தாங்க நல்கி
யணிசெய்தா னெம்மை யாளு மற்புதக் குரவ ரேறே. (கஉரு)

3943. உண்மையார் கைலைநின்று மொருபரஞ் சோதி நாதன்
வண்மைசான் ஞான சிந்தா மணியென மண்ணி ழிந்து
தன்மையார் காசி யாதித் தலந்தரி சிக்குங் காலை
நண்மைசால் வெண்ணெய் நல்லூர் ந - ந்தது மினிச்சொல் வாமால்.

---

## நான்காவது



### நடுநாடு.

3944. சொல்லொழுக்க நடவாது சோலைவறங் கூர்காலும்
புல்லொழுக்கந் தலையெடுத்தெவ் விடத்துமாய்ப் பொலிதாவு
மில்லொழுக்கந் துறவொழுக்க மிரண்டாய வியல்வாய்ந்த
நல்லொழுக்க மெனப்புகலு நடுநாடு நடுநாடு. (க)

3945. பொன்னிலமல் கமரரெலாம் போகியதெம் பசியென்ன
வெந்நிலமுங் குதுகலித்தே யியல்பூசை விழாவெடுப்ப

வங்கிலமொய்த் தவராய வாற்றுக்கா லாட்டியர்க
ணன்னிலஞ்சொன் முடிகுலைத்து நடுநாடு நடுநாடு. (௨)

3946. புக்கவுயிர் சிதையாது போற்றிவரு மண்மகட்குத்
தக்கவளம் பலபொலிதண் டகநாடல் குற்றடமாத்
தொக்கபெரு வளங்காட்டு சோணாடு முலைத்தடமா
நக்கமணி மேகலைசூழ் நடுநாடு நடுநாடு. (௩)

3947. குறமலிதிண் குன்றுகளைக் குஞ்சரத்தைக் கீழ்மேலா
வறமலிய வுருட்டிவயி றதுகிழிபு மதுநோக்கிப்
புறவகழி யிராப்பகலும் பொறேனென்றே யோலமிடப்
பிறரறியு நீத்தத்திற் பெண்ணைபாய் வளம்பெருகும். (௪)

3948. பெண்ணைநதி யிருபாலும் பெருக்குமிக வெழுங்கொழுங்காற்
பண்ணைவயற் றலைநிரப்பப் பசுஞ்சாலி கதலிகமு
கெண்ணையறத் தடித்தோங்கி யிந்திரனு ரவைநிரப்ப
வுண்ணயமார் மண்ணெடுவிண் ணூடலறக் கூடல்செயும். ()

3949. பெண்ணையெழூஉந் திரைக்கொழுந்து புகழ்க்கொழுந்தின் பிறக்கமென
விண்ணையளா யாமாகர் வெம்முலைக்குங் குமங்கழுவிப்
பண்ணைகளின் பிரதாபம் படர்ந்தனெனப் படருதலு
மெண்ணையிலாச் செந்நெலொடு கன்னல்களு மினிதோங்கும்.

3950. சாலெல்லாம் வெடிவாளை தடியெல்லாஞ் செங்குவளை
காலெல்லாங் கருமேதி கரம்பெல்லாம் பரம்பினங்கள்
சூலெல்லாம் சங்கினங்க டுறையெல்லா முத்துகுத்தல்
பாலெல்லாம் பசுந்திரையல் படர்வெல்லாங் கமுகேறி. (எ)

3951. தென்றலெழ வழலரும்புஞ் செவ்வியமாந் துணர்ச்சோலை
யொன்றல்கொள முழுமதியை யொழியாது தடவருதல்
குன்றலின்மண் மகளங்கைத் தலைநீட்டிக் குளிர்விசும்பா
மன்றலிலா மகண்முகந்தை வருதிறமற் றதுகாட்டும். (அ)

3952. கரைதபுமா டங்களெலாங் ககனமளாய் நிற்றலினல்
விரையகிலின் கொழும்புகையோ மேகமோ சுலாவுவன
வுரைசெறிந்த பொழிலனைத்து மொள்ளியகார் தங்குதலாற்
புரைதவிரு மதுமழையோ புன்மழையோ பொழிகுவன.()

3953. மருவுலகங் களிதூங்க வண்சமயா சாரியரா
மிருவர்களுஞ் சந்தானத் திருவர்களு மவதரிக்கப்
பெருகுதவஞ் செய்ததெனிற் பிறங்குவள நடுநாட்டி
னருகுதவிர் சிறப்புரைக்க வடியேனு லாகுவதோ. (௰)

ஆ. செய்யுள் - ௨0௨.

விநாயகர் துணை.

# திருமயிலைச்

# சித்திரச்சத்திரப்புகழ்ச்சிமாலை.

## காப்பு.

### விருத்தம்.

3954. மின்னுபுகழ் மயிலைவிநா யகமால்சத் திரப்புகழ்ச்சி விள ம்பநாளு, மன்னுமொரு வரைமுடியிற் கங்கையும்வா ணியுமுதி த்து வழித லேய்ப்பத், துன்னுமதிப் பிறையொழுக்கு வெள்ளமுதுங் கொன்றைபொழி சுவைச்செந் தேனும், பன்னுமுடி நின்றிழியப் பொலியுமழ களிற்றடிகள் பரசு வாமே.

## நூல்.

3955. பூமேவு திருமயிலை நகரிற்கற் பகவல்லி புல்ல மேவு
மாமேவு கபாலீசர் சந்நிதிநற் றிருக்குளத்தின் வயங்கு தென்பாற்
றூமேவு புகழ்விநா யகமகிப னித்திலவெண் சுதைநீற் றிச்செய்
பாமேவு சத்திரமன் னவன்புகழே திரண்டதெனப் பகர லாமே.

3956. மறையவர்க்குப் பிறப்பொழுக்குந் தவத்தினர்க்கு நிறை யருளு மாண்பு சாலிற்,றுறையவர்க்கு விருந்தோம்பு தன்மையுநற் சிவ பூசை தொடங்கிச் செய்யு,நிறையவர்க்கு மெய்யன்பு மெப்படியப் படி மயிலை நெடுந கர்க்குப், பொறையவர்க்கு ளுயர்விநா யகமால்சத் திர மென்று புகல லாமே. (௨)

3957. இருநிதியோ கற்பகமோ வெழிலார்சிந் தாமணியோ வெ ழிலி யோவென், றருநிதியாம் புலவர்புகழ் திருமயிலை விநாயகமா லமைத்த சீர்சால், பெருநிதியாஞ் சத்திரநற் புகழ்கேட்டுத் தலைய சையார் பிறர்யார் மிக்க, வுறுநிதிசால் வரையடர்மண் டலமேற்கொ ளனந்தனலா துலகிற் றானே. (௩)

3958. திருவிநா யகமகிபன் புரிமயிலைச் சத்திரத்தின் சிறப்பு நோக்கி, யொருவிநா யகர்கபா லீச்சரத்துக் கூத்தாட லுவந்தா ரந்தப், பெருவிநா யகர்க்கதனு லப்பெயர்தோன் றிற்றுமுன்னே பிறந்த தென் னின், மருவிநா யகப்பெரியோ ரெதிர்காலச் செயலுணர்ந்து வகுத்தா ரன்றே. (௪)

3959. காலருந்திச் சருகருந்திப் புனலருந்தித் தவம்புரிதல் கண் டோ மில்லை, மாலருந்தி யுமிழ்மண்மேன் மறையோரிக் காலமற்றும்

தெதனு லென்னிற், றூலருந்தின் புகழ்விநா யகமகிபன் புரிமயிலைச் சத்தி ரத்தின், பாலருந்தி யவனுறைதே வரைப்போற்று தவங்கொ ண்ட பண்பி னானே. (ரு)

3960. தெருள்பெற்றான் வியாசநகர் விநாயகமா லதற்கேற்பச் செயிர்தீர் மிக்க, பொருள்பெற்று னதற்கேற்ப மயிலையிற்சத் திரங்கட் டிப் புகழ்சால் பெம்மா, னருள்பெற்று னிவனன்றிப் பொருள்பெற்று மறஞ்செய்யா வவனி யுள்ளார், மருள்பெற்றார் சிறுமைபெற்று ரின் னுமென்பெற் றாரென்னின் வசைபெற் றாரே. (சு)

3961. தண்ணியநன் னிழலுதவி யடைந்தவர்க்கு வேண்டுவதுந் தருவ தால்வா, னண்ணியவைந் தருநிகரு மருச்சுனமால் புரிதவத்தி னன்கு தித்த, புண்ணியவி நாயகவேண் மயிலைச்சத் திரமென்று புக ல்வர் யாரு,நண்ணியயா மவைகேட்கக் கொடுத்தலினெவ் வாதென்று நவிலு வோமே. (எ)

3962. பொங்கார மணிமார்பன் புண்ணிய விநாயகமால் பொலிய நாளுஞ், சிங்கார வேலர்மகிழ் திருமயிலை யகத்தமைசத் திரத்தின் மே லா,லங்கார முகில்படிந்து தோன்றுதல்விண் ணவர்கண்ணே றடையா வண்ண, மிங்கார வருவார்கள் கரும்படாங் கொடுமறைத்த தேய்க்கு மாலோ. (அ)

3963. தெள்ளமுத மதியொடுபொ கீரதியெம் மான்சடைமேற் செறிந்து மேவற், குள்ளகருத் துணர்ந்தாந்தன் சுவையோடம் மதிய முது மொருங்கு கொண்டு, வள்ளல்விநா யகமகிபன் மயிலைச்சத் திர க்கிணற்றுள் வந்து புக்காங், கெள்ளலிலாப் பெருஞ்சுவையை யடைந் தோர்க்கு நாளுளு மீயத் தானே. (கூ)

3964. தீராத புகழ்படைத்த மயிலைவிநா யகமுகில்சத் திரத்தை வந்து,பாராத பேருமிலை பார்த்தவுட னதன்சிறப்பைப் பலகாற் பாட, வோராத பேருமிலை யோர்ந்துமேன் மேற்பாடி யுவகை வாரி, சாராத பேருமிலை யென்னினதன் பெருமையெவர் சாற்று வாரே. (க0)

3965. மைமணக்கும் விழிமாதர்க் கொருமதனன் பாவலர்க்கு வைப்பா யுள்ளோன், மெய்மணக்கும் வாய்மயிலை விநாயகமால் சத்தி ரத்துள் விரும்பிப் புக்கு, நெய்மணக்குங் கறியமுதுந் திருவமுது மவாவடங்க நிரம்ப வுண்டோர், கைமணக்கும் வாய்மணக்குங் கழுவி யநன் னீருநனி கமழு மாலோ. (கக)

3966. என்னுரைக்கேன் மயிலைவிநா யகமகிபன் பெரும்புகழை யிருநீர் வைப்பின், மின்னுபொரு ளவனீட்டு போழ்தேசத் திரமாதி வேறு வேறுப், பன்னுபல வறங்களுக்கென் றேயீட் டி னுன்பன்னூல் பயிலும் போழ்தே, மன்னுமனை யான்புகழைப் பாடுதற்கென் றேபுல வர் மதித்தார் போலும். (கஉ)

3967. வீடாத வளமலி வியாசநகர் விநாயகமால் விரும்பி யுள்ளங், கோடாத வன்பொடுநன் மயிலையிற்செய் சத்திரச்சீர் குறித்து நாளும், பாடாத புலவரிலை பாடுபுகல் கிடவிலையான் பரிவிற் கொண்டு, சூடாத செய்யுளிலை யென்னின்யா மினியென்னோ சொல்லு மாறே. ()

3968. அத்திரவாள் விழிமடவா ரழகனருச் சுனமகிப னன்பி னீன்ற, புத்திரன்வி நாயகமா திருமயிலை யிடத்தருமை பொருந்தச் செய்த, சத்திரமே வட்டிலடைந் தோர்வாய்க்கு விருந்தூட்டுந் தவா தாங் குற்ற, சித்திரமே கண்களுக்கு விருந்தூட்டு மென்றிடின்யாஞ் செப்ப லென்னே. (கச)

3969. இரவிமுன மிருளில்லை யெம்பிரா னருண்முன்மல மில்லை நாளும், புரவியன்மெய் யடியார்முன் பவமில்லை நல்லோர்முன் பொருமை யில்லை, யுரவியல்கு ணாகரவி நாயகபூ பதிமுன்ன முலோப மில்லை, பரவியமெய்க் கீர்த்தியவன் திருமயிலைச் சத்திரமுன் பசியு மின்றே. (கரு)

3970. எம்மையா ளுடையபிரான் கபாலீச னுவந்துறைதற் கிடம தாய, செம்மையார் திருமயிலை சிவலோக மென்பதுவே தேற்ற மென்பர், வெம்மைதீர் குணவிநா யகமால்சத் திரவளமை மிகுதி யாலே, சும்மையார் புகழ்ப்போக பூமியுமஃ தேயெனயாஞ் சொல்லு வோமே. (கசு)

3971. வினைந்திருக்கு மலத்திருக்குங் கடிந்திருக்குந் திருவடி மெய் விரவா யாமு, நினைத்திருக்கும் படியருள்க பாலீச னுலாப்புற மாய் நெடுவீ திக்கட், கனைத்திருக்குந் தொடரவெழுந் தருள்வதுகண் டுவந்துபின்னுங் கண்டு வப்பார், தினைத்திருக்கு மிலாவிநா யகமகிபன் மயிலைச்சத் திரத்தை மாதோ. (கஎ)

3972. வீங்குதிரைக் கடலுலகிற் பொருள்படைத்தார் தாமிருந் தே விருப்பின் வாழ்தற், கோங்குபெரு மாளிகைசெய் துவப்புறுவர் வியாசநக ருவந்து மேவும், பூங்குவளைத் தார்மார்பன் விநாயகமால் யாவர்களும் புக்கு மேவி, நீங்குதலி லாதமர மயிலையிற்சத் திரஞ் செய்தா னிலவத் தானே. (கஅ)

3973. வாரியினுண் மணலைநெடு வானகத்துண் மீனைமண்ணில் வந்து போன, நாரியரைப் புருடரைமற் றளவிடினுந் திருமயிலை நகரி டத்துச், சீரியவி நாயகமா லியற்றியநற் சித்திரச்சத் திரமே யன்றி, யேரியல்பல் லறமுமவன் செயக்கொண்ட வெண்ணமள விடப்ப டாதே. (கக)

3974. ஆலமுயர் பரம்பரனை வருத்திடினு நீறணிமெய் யடியார் தம்மைக், காலன்வருத் திடினுமற மறத்தைவருத் திடினுமுயர் கனம்போ ன்ல்குஞ், சீலமலி திருமயிலை விநாயகமால் சித்திரச்சத் திரத்தின் மேவி, வாலனமுண் பானடைந்தோர் தமைநாளும் பசி யெழுந்து வருத்தி டாதே. (உ௦)

3975. கருதரிய புகழ்மயிலைக் காபாலி தீர்த்தநெடுங் கரையோர் சார்ந்துட், பொருவருகீழ் கரைகபா லீச்சரத்தா லேக்கழுத்தம் பூண்டு மேவு, மருமைகொடென் கரைவிநா யகமுகில்சத் திரத்தாலும் தடையு மற்றை, யிருகரையு மென்செய்வா மென்செய்வா மென்றேங்கி யிருக்கு மாலோ. (உக)

3976. திரைசெறியார் கலியுலகிற் பொருளினர்பல் சுவையுண வுஞ் சிறப்பிற் றேடிக், கரையறவுண் டுண்டுவந்து பூதவுடம் பினை வளர்க்குங் கடன்மேற் கொண்டார், வரைநிகர்தோள் விநாயகமான் மயிலையிற்சத் திரங்கட்டி வயங்க நாளு, முறைபெறுநற் புகழுடம்பை மிகவளர்ப்பா னிவற்கிணையா ருரைக்குங் காலே. (உஉ)

3977. விரும்புபுகழ் மயிலையெனுந் திருநகரில் வியாசநகர் மேவி வாழுஞ், சுரும்புமுரா ரொடைவிநா யகமால்செய் சத்திரத்தின் றோற் றங் கண்டாங், கரும்புபல சத்திரமும் வானகத்திற் பசுங்கதிர்க ளமைய வீசி,யிரும்புவியேத் திடத்தோன்று மதியமுன ருடுக்களென விருக்கு மாலோ. (உ௩)

3978. நாடிநோக் கிதுவென்ன விநாயகமா திருமயிலை நகரில் யாரும், பாடிநோக் குறுசிறப்பிற் சித்திரச்சத் திரமொன்று பண்பிற் செய்து, தேடிநோக் கறமெல்லாங் கொள்ளைகொள்வா னத்தகுசத் திரமு நாளுங், கூடிநோக் கிடுவார்த நோக்கமெலா நனிகொள்ளை கொள்ளு மாலோ. (உச)

3979. நாடுதிரு மயிலைநக ரிடத்துவிநா யகமகிப னன்கு செய்த, பாடுபுகழ்ச் சத்திரத்தோ வியங்கள்வா டாமாலை பரித்த லானுங், கூடு விழி யிமையாமை யானுமடி நிலந்தோயாக் குணத்தி னானு, மாடு செறி பேருலகின் வாழமரர் குழாமென்றே வகுக்க லாமே. (உ௫)

3980. கந்தமலர்ப் பொழின்மயிலை விநாயகமா லிக்காலங் களிப் பிற்செய்த, சந்தமலி சத்திரம்போ லக்கால மொன்றிருந்தாற் றவத் தான் மிக்குப், பந்தமகல் கௌதமமா முனிவரன்வற் கடகாலம் பாறு மட்டு, மெந்தமறை யவர்க்குமிக வுபசரிப்ப வேண்டுவது மின்று மாதோ. (உ௬)

3981. விரைமலர்ப்பூம் பொழின்மயிலை யிடத்துவிநா யகமகி பன் விருப்பிற் செய்த, புரைதவிர்சித் திரமலிந்த சத்திரத்தின் முகம னொடு புக்கு ளார்க்குக், கரையறமேன் மேற்படைக்கு முணவையமு தென்றெவருங் கரையா நிற்பர், நரைதிரைமூப் பிவைமாற்றி னம ரருணு மமுதெனயா நவிலு வோமோ. (உ௭)

3982. மெய்ப்புகழ்வி யாசநகர் விநாயகமா திருமயிலை விளங்கச் செய்த, வைப்புநிதி யேயனைய சத்திரத்தின் மடைப்பள்ளி வாய்மேற் போய, குய்ப்புகைமேன் மேற்கமழத் தேவரும்வா யூறுவரேற் குவல யத்திற், கைப்புறுவா ரெவரனைய சத்திரத்தி லுண்சுவை காணத் தானே. (உ௮)

3983. நறையொழுகு மலர்ச்சோலை மயிலைவிநா யகமகிப னன்கு செய்த, நிறைதரும சத்திரத்திற் றினந்தொறும்வந் துண் பதற்கு நீதி சான்ற, மறையவரும் பின்னிடார் வந்தவர் தமக்குமுக மலர்ச்சி யோடு, குறைவறநன் கூட்டுவதற் கவனும்பின் னிடானென் னிற் கூற லென்னே. (உ௯)

3984. ஓங்குபுகழ் விநாயகபூ பதியைமிகத் தெரிந்தவனென் றுரைப்பார் யாரும், பாங்குபெற யாம்புகல்வா மனையமகி பதிமயிலைப் பதியினூடு, நீங்குதலி லாதமைத்த சத்திரத்தி லொரு தினத்தி னிகழ் கருத்தை, வாங்குசுவை யமுதுண்பா ரித்தனைபே ரெனத்தெரிய மா ட்டா னென்றே. (௩0)

3985. மீயுயர்வான் முகடணவச் சிலரமைத்த சத்திரத்தின் விளக்கங் கண்டாங், கேயடைந்தார் சிலரெனினு மிகப்பசியுற் றிருப்ப தற்கோ ரிடையூ றின்று, தாயினுநல் லவன்விநா யகம்கிபன் றிருமயி லைச் சத்திரத்து, ளாயிரம்பேர் புகுந்தாலு முண்டுதேக் கெறிவதற் கோ ரைய மின்றே. (௩௧)

3986. ஒருவரிய வலிமிகுசூர் முதறடிந்து தேவர்சிறை யொரு ங்கு மீட்ட, மருவரிய பெரும்புகழ்சால் சிங்கார வேலர்மகிழ் மயிலை தன்னிற், றருவரிய வள்ளலெனும் விநாயகபூ பதிசெய்த சத்தி ரந்தா ன், பொருவரிய தாயிலா னடியார்க்கோர் தாயாகிப் பொலியு மன்றே.

3987. கடிநிலையில் லாதபெரும் புகழ்மயிலைச் சத்திரத்திற் கா மர் மேவு, படிநிலைகொள் சுவர்த்தலத்திற் சித்திரத்தின் பலவண்ணம் படர்ந்து தோன்ற, றொடிநிலைமுன் கைமடவார் மதனன்விநா யகமுகி லச் சுவர்த்த லத்தி, னடிநிலையிற் போகட்ட பன்மணியின் சுடர் மேல்வந் தலங்கன் மானும். (௩௩)

3988. பற்பலதே யத்தினின்று வருவார்க்கு விநாயகமால் பண்பு மேவச், சிற்பவிதிப் படியமைசத் திரத்தருக்கை விடமனமுஞ் செம் மை வாய்ந்த, கற்பகவல் லிக்கொருபா லருண்மயிலைக் கபாலீசர் கமல பாத, மற்படுநற் சேவைதனை விடமனமு மெஞ்ஞான்றும் வாரா வன்றே. (௩௪)

3989. திருமயிலை நகரிடத்து விநாயகமா லியற்றியசத் திரத்தின் வந்து, மருவுபொரு ளாளர்களுந் தாங்குடிகொள் வளமனையை மறப்ப ரென்னிற், பொருவருமற் றதன்சிறப்பை யெங்ஙனம்யான் வகுத்து ரைக்கப் புகுவேன் மறறை, யிருநிலத்திற் புலவர்களு முழுதுரைமி னென்னினதற் கிணங்கி டாரே. (௩௫)

3990. வடதிசைதாழ்ந் ததற்கெதிராந் திசையுயரக் குறுமுனி யை மலயம் வைத்தான், கடல்விடமுண் டவன்புவனி சமமாக மன் றல்வினை கழிந்த பின்பக், குடமுனியை யுத்தரம்வைத் திலன்புவியுந் தாழ்வுயரங் கொண்ட தின்று, திடமயிலை விநாயகமால் சத்திரத்திற் சனநெருங்குந் திறத்தா லன்றே. (௩௬)

3991. புண்ணியவி நாயகமால் சத்திரநற் றண்மையுமுட் புகுந்து ளோராங்,கெண்ணியவா றடைவதற்காஞ் செல்வமுமேன் மேலெய்தி யிலகா நிற்குங், கண்ணியபச் சிமமுகமா யமர்கபா லீசரிடக் கண்ணுந் தென்பா, னண்ணியநன் முகத்தம்மை வலக்கண்ணு நோக்குமுயர் நலத்தான் மாதோ. (௩எ)

3992. நற்றவர்சேர் திருமயிலை விநாயகமால் சத்திரமு னலமே மேவப்,பெற்றவுயர் காவணமொன் றதன்சிறப்பை யென்னுரைக்கேன் பிறங்கு வாழை, துற்றபசுங் கமுகுதெங்கங் குலைகரும்பு பனசமுதற் றுன்ற லாலே, யுற்றவது தனைப்புலவர் காவணமென் றுரைத்திடுத லுண்மை யாமே. (௩அ)

3993. முத்தநகைப் பெருமுலைச்சிற் றிடைக்கருங்கண் மடமா தர் மோகன் யோகன், வித்தகவி நாயகமா றிருமயிலை நகரிடத்து விள ங்கச் செய்த, சத்திரமுன் காவணத்தைக் கண்டமரர் கோன்மகுடந் தாங்கு நாட்செ,யத்தகைய காவணந்த காவணமா யிற்றென்ப ரறிந்து ளோரே. (௩௯)

3994. மேயபுகழ் மயிலைக்குக் கபாலீசர் சேனைவசெய மேவு வாருக், காயசுவைப் பொதிசோறு சுமந்துமிக மெலிந்திளைத்த வவர்தோ ளிந் நாட், டேயகுண விநாயகமா லியற்றியசத் திரத்தாலச் சுமையொ ழிந்த, வாயமைய விறுமாந்தன் னவன்வாழ்க வாழ்கவென வாழ்த்து மாலோ.

3995. தோயார மணிமார்பன் விநாயகமா றிருமயிலை துலங்கச் செய்த, மீயார வுயர்தரும சத்திரத்துண் பதற்காய விருப்பஞ் சற்று, மோயாரங் குண்டுவந்து மேன்மேலும் வாழ்த்தெடுப்ப ருவரி நாண, வாயார வுண்டவர்கள் வாழ்த்துதற்கெத் தடையுண்டு மண்ணின்மீதே.

3996. விடையூரும் பெருமானூர் மயிலைவிநா யகமகிபன் விருப் பிற் செய்நன், னடைமேவு சத்திரமு னெருங்குபொற்றோ ரணங்கள் பல நல்ல றத்திற், கிடையூறு செயவசுரர் வந்துபுக வழியின்மை யெ ண்ணி வீதிப், புடைமேவி வாய்வழியுட் புகாவண்ணம் யாத்தவலை போன்ற மாதோ. (௪௨)

3997. இக்காலம் விநாயகமா றிருமயிலைப் பெருநகரி லினிது செய்த, திக்கால மலிந்தபுகழ் நனிபடைத்த சித்திரச்சத் திரந்தா னம்ம, வக்கால மிருந்ததெனிற் பசித்தடைந்த வொருவர்பொருட் டாகக் கச்சூர், நக்கால மயின்றபிரான் மனைதொறும்போ யிரப்பான் கொ லுடுங் காலே. (௪௩)

3998. வந்தரமங் கையர்தழுவ மகிழ்மகவா னுடுமமரர் வதியும் வான, மந்தரநின் றிடுங்கொல்லோ திருமயிலை நகர்பொலிய வலங்கற் றிண்டோண், மந்தரவி நாயகமால் புரியுயர்சத் திரத்துமுடி வைகா நிற்குஞ், சுந்தரமா மதுதோற்று மோவெனிற்சேய் மையின்விழிக்குத் தோற்றுங் கொல்லோ. (௪௪)

3999. வானவழி யியங்குமதி மயிலைவிநா யகமகிபன் மகிழ்விற் செய்த, வூனமினித் திலச்சுதைதீற் றியவுயர்சத் திரத்துமுடி யுரிஞிச் செல்லு, மானவத னுண்மையையிவ் வகலிடத்தே யாரறிவா ரறிந் தாம் யாமே, யீனமிகு முடற்களங்க மாங்கறுப்பைப் போக்கியுயர் வெய்தத் தானே. (சடு)

4000. தடுக்கரிய புகழ்மயிலை விநாயகமால் சத்திரமேற் றங்கும் வானம், விடுக்கரிய கறைமதியச் சத்திரம்வா னமுதொன்றே விழைவீ ருங்கட், கடுக்கரிய சுவையுடைய திஃதுண்டு பாருமென வமைத் தோர் தோசை, நடுக்கரிய வேப்பிலைத்தூ டீவிமேல் வைத்ததென நகு மிக் காயே. (சசு)

4001. காமருவு திருமயிலை விநாயகமால் சத்திரத்துக் கழுநீ ரோடிப், பூமருவு பணைபாய்ந்து செஞ்சாலிப் பயிர்வளர்க்கும் பொலி வினாலே, தூமருவு புனல்பாய்ச்ச மண்டொடுதின் கருவிபெருந் தோண்மேல் வையார், மாமருவு நிறத்தொழுவர் விளைவோர்ந்து மாற் றிடத்தோள் வைப்பர் மாதோ. (சஎ)

4002. வழிவழிநல் லறம்பூண்ட கங்கைகுல விநாயகமான் மயிலை யாற்று, மிழிவில்வளச் சத்திரமு மலிந்தநீர்க் கூவமுமன் றிரு க்கு மாயிற், றழியசுவை யன்னநனி யுண்டுமிக வருந்துகுண்டோ தரற்கா வன்னக், குழியொடுவை யையுமழையான் கூடனகர் மேவிய வெங் கோமான் றானே. (சஅ)

4003. குருகால நிறைவாவி மயிலைவிநா யகமுகில்பொன் கொண்டு செய்த, விருகால வமுதுதவுஞ் சத்திரத்தைப் புகழ்ந் துரைப்பா னிவனே வென்று, திருகால மறிகுநரு மென்னையொரு குறைமொழியார் சேடற் கேயு, மொருகால முரைக்கவெனிற் பல கால முணர்ந்தாலு முலப்பு றாதே. (சகூ)

4004. செங்குவளைத் தார்மார்பன் கருங்குவளைக் கண்ணார்க் கோர் செல்வக் காமன், பொங்குபுகழ் விநாயகமா திருமயிலைச் சத்திர முன் பொலிய யாத்த, தங்குசுவைச் செங்கரும்பு மிகப்பொலிதல் கலி யென்னுந் தறுக ணாள, னங்குவரிற் றலைதகர்க்கச் சார்த்திவைத்த தண்டநிக ராகு மாலோ. (ருo)

4005. பிதிரரிய புகழ்மயிலை விநாயகமால் சத்திரத்திற் பிறங்கி மேன்மேன், முதிரொளியா யிரந்தீப மொய்ப்பனவச் சத்திரச்சீர் மொழியக் கேட்ட, கதிரவன்பல் கரங்களையு நோக்கிவரும் படியனுப் பக் கலப்புற் றுங்காங், கெதிரறுபல் வளமுமவை தலைநீட்டி நோக் கிடுவ தேய்க்கு மாலோ. (ருக)

4006. குறைவில்புகழ் மலிமயிலை விநாயகமா லளவறுபொன் கொண்டு செய்த, வறைதரும சத்திரத்துச் சுவரெலாம் வெண்பளிங்கி னமைத்தான் றெய்வ, மறையவருண் டிடுமிடத்துச் சுவர்மட்டு மது கொண்டு வகுத்தா னல்ல, னிறையவவ ருண்ணும்பொழுது வெளி யிருந்து பிறர்காணு நிகழ்ச்சி யோர்ந்தே. (ருஉ)

4007. மன்னுமலர்ப் பொழின்மயிலை வயங்கவினா யகமகிபன் மகிழ்ந்து செய்த, மின்னுபுகழ்ச் சத்திரத்தின் கீழ்நிலைநீர் நிலையேய்க் கும் விளக்க மேவத், துன்னுமதன் மேல்விரித்த சித்திரக்கம் பல மனைய தூநீர் மேற்ப, லுன்னுகருங் குவளைசெந்தா மரைமுதற்பன் மலர்பூத்த தொக்கு மாலோ. (ருஙு)

4008. நலங்குலவு தண்பொழில்வி யாசநகர் விநாயகமா னன்கு மேவிப், பொலங்குலவு திருமயிலை நகர்த்தனது சத்திரமுன் பொலி யத் தூக்கு, மலங்குகதிர் மணிமுத்த மெவ்விடத்துப் பெற்றனனோ வனைய முத்த, மிலங்குவட திசைக்கோமான் மனைவிமுலை முகட் டிடத்து மில்லைமாதோ. (ருச)

4009. மட்டுண்டு வரிவண்டு வாய்திறந்து பண்பாடு மாலைமார்ப, னிட்டுண்டு வருமயிலை விநாயகமால் சத்திரத்தி னெய்தி யன்னர்,தொ ட்டுண்டு மகிழ்வாருண் சுவைப்பால்போ லன்றுதவுந் தூய ருண்டேற், கட்டுண்டு மடியுண்டு மாய்ப்பாடி யுழல்வான்கொல் கண்ணன் மாதோ.

4010. செய்தவன்வி நாயகமா றிருமயிலைச்சத்திரத்துச்சேர்ந்து ளாரு, ளெய்தவிர தம்பிடித்தோர்க் கினிதூட்டுஞ் சிற்றுணவன் றிருக்கு மாயிற்,பெய்தமலர் முடியின்மிசை வடுப்படமண் சுமந்துசிறு பிட்டுக் காகக், கைதவன்கைப் பிரம்படியும் படுவான்கொல் கூட லுதற் கண்ணி னானே. (ருசு)

4011. வேலோடுங் கணையோடும் பொருகண்ணார் மடலெழுதும் வேண்மெய் சான்ற, நூலோடு பயின்மனத்தான் விநாயகமான் மயிலை யிட நோக்கிச் செய்த, பாலோடு நெய்யோடு மமுதருத்துஞ் சத்திர முன் பரந்த பந்தர், மேலோடுங் கதிரவன்றேர் கீழோடுங் கபாலீசர் வியன்பொற் றேரே. (ருஎ)

4012. நெடியவழி நடந்துகதி ராதவத்தா லுடல்வருந்தி நிறை ந்த வெப்பங், கடியவுயர் மயிலைவிநா யகமுகில்சத் திரம்புகுதக் கண் டாங் குள்ளோர், முடியநறும் பனிநீரி னனைப்ப முன்னைவெயின் மொய்த்து மேனி, படியவிரைந் தோடிவெளி வந்துநிற்பார் குளிரடங் கப் படியு ளாரே. (ருஅ)

4013. நாடுபுகழ்த் திருமயிலை விநாயகமால் சத்திரத்து நாளும் வந்து, கூடுமவர்க் கணிசாந்த நறுமணம்பின் குடைதடநீர் கொள்ளை கொண்டு, பாடுமலி தன்புடைவந் தாடுமைந்தர்க் களிப்பவவர் பாவை மாரோர்ந், தூடுவரிவ் வேறுமண மெம்மாத ரூட்டியதென் றுதைத்து மாதோ. (ருகூ)

4014. பின்னுபெரு நலமலியுந் திருமயிலை நகரமெனும் பெருங் குளத்துண், மன்னுபுகழ் விநாயகமா லியற்றியசத் திரமெனுமொண் மலரி னுளுந், துன்னுசுவை யாறனொடு மினிதமர்ந்த வடிசிலெனுஞ் சுவைத்தீந் தேனை, யுன்னுபல சனங்களெனும் வண்டுகண்மேன் மேலடைந்துண் டுவக்கு மாலோ. (சூ0)

4015. வெருவரிய புகழ்மலியுந் திருமயிலைப் பெருநகரில் விள ங்குவானத், தருவரிய கொடையினனென் றுரைக்கும்விநா யக முகில்செய் சத்திரத்துட், பொருவில்பசி கொண்டுபுகு பொழுது குண்டோ தரனையொத்துப் புகுவ ராங்கு, மருவடிசி லுண்டுவரு பொழுதுகும்போ தரனையொத்து வருவர் மாதோ. (௬௧)

4016. கந்தமலர்ப் பொழின்மயிலை விநாயகமால் சத்திரத்துக் கா மர்மேவ,முந்தவிலை போகட்ட வோரறைபுக் கவராடி முயக்கத் தாலே, யந்தவறை புகுவேமோ விவ்வறையேயுறைவேமோ யாங்க ளென்னச், சந்தநகை புரிந்தவனுள் ளாரிருத்த விருந்துண்பார் தளர்வு தீர்ந்தே.()

4017. நனையமலர்ப்பொழின்மயிலை விநாயகமால்சத்திரத்தினல ஞ்சா லோவர், வினையமுற வாய்ந்தமைத்த வவனுருவப் படமொரு பான் மேவி வைகு, மனையவன்பாற் பேசவரு மறையவரப் படத்தி னைக்கண் டாசி கூறித்,தினையளவும் விடார்மொழிய வவனருகே யுண ர்ந்துநகை செய்வன் மாதோ. (௬௩)

4018. சீர்மருவு விநாயகமா றிருமயிலைச் சித்திரச்சத் திர முன் மேய, வேர்மருவோ வியக்கிளியைக் கண்டோராண் கிளியடைந் தாங் கிருந்து நோக்க, நார்மருவு மதன்பேடு முனியவகன் றதற்குநல நவின்று தாழும், பார்மருவு மிக்கிளிநங் கிளியெனுமா ரனுமயங்கிப் பார்க்கு மாலோ. (௬௪)

4019. இறையளவு நெறிதவறு விநாயகமா றிருமயிலை யிடத்துச் செய்த, நிறைதரும சத்திரத்து மறையவர்பற் பலர்தினமு நெய்பா லோடு, மறைசுவைகொ ளடிசில்விலாப் புடைவீங்க வுண்டிடுவ ரது தேர்ந் தன்றே, மறையவர்போ சனப்பிரிய ரெப்பொழுது மென்றுல கம் வழங்கு மாலோ. (௬௫)

4020. வளமயிலைக் காபாலி தீர்த்தத்தென் கரைநடக்கு மாதர் மைந்த,ரளவறுபொன் கொண்டுவிநா யகமுகில்செய் சத்திரப்பே ரழ கு நோக்கி, யுளமகிழ்வ தன்றியுநோக் கெதிர்செலா மையினொருவர்க் கொருவர் முட்டிப், புளகமெழுந் திருமுலைதோள் குலுங்குதலி னுவு மகிழ் பூப்பர் மாதோ. (௬௬)

4021. நன்றலா தொன்றுமடை யாதகபா லீச்சரத்தை நாடி யோர்கான், மன்றநேர் கண்டவன்மற் றென்றுமய னவனொளி வயங் குமேருக், குன்றநேர் புயன்மயிலை விநாயகமால் சத்திரத்தைக் கூடி யோர்கா,லொன்றநேர் கண்டவன்மற் றென்றுமா லாவனிஃ துண்மை மாதோ, (௬௭)

4022. நாறுத புகழுடையாத் திருமயிலை நகரெனும்வா னகத்தி னன்மை,மாறுத விநாயகமா லியற்றியசத் திரமெனுமா மதியினூடும், பாறுத வறுசுவைய வடிசிலெனு மமுதைமறைப் பற்றே யன்றிக், கூறுத குலமறையோ ரெனுந்தேவ ருண்டுகளி கொள்வர் மாதோ. ()

4023. முருகுமலி தார்மார்பன் விநாயகமா றிருமயிலை மூதூ ராற்று, பெருகுசுவை தீற்றியசத் திரம்பொடிபூ சியமேனிப் பெருமா

னேரு, மிருகதவஞ் செறிவாய்த லனையபிரான் றிருநுதற்க ணேய்க்கு மவ்வா, யருகடைவார் கொடும்பசிவே ணிகருமெனி னென்னினியா மறைதன் மாதோ. (௬௯)

4024. புண்ணியநன் மயிலையெனும் பொன்னுலகில் விநாயகமால் பொலியச் செய்த, கண்ணியபற் பலவாய சித்திரச்சத் திரமெனு மோர் காம தேனு, வெண்ணியபல் சுவையடிசி லெனும்பாலை யெவ்விடத்து மிருந்து மேவு, மண்ணியல்பல் சனங்களெனுங் கன்றுகளை மிகவூட்டி வளர்க்கு மாலோ. (௭0)

4025. தார்மருவு புயசயிலன் விநாயகமா றிருமயிலைத் தலத்துச் செய்த, பார்மருவு சத்திரமும் பெருங்கடலு மொப்பாமெப் படியென் றுனன், னீர்மருவு கடலுண்பா னெத்தனைகார் வரினுமிலை நீரென் றுதங், கேர்மருவு சத்திரமு மெத்தனைபேர் வரினுமன மிலையென் றுதே. (௭௧)

4026. அனைத்துலகும் புகழ்மயிலை விநாயகமால் சத்திரத்தை யகிலத் துள்ளார், நினைத்தவுட னவர்பசிதான் புக்குறையத் தக்கவிட நினைக்கு மன்றுர், கனைத்துநடந் திடநடந்தச் சத்திரவாய் புகப்புகுந்து களித்து வாழும், வினைத்துயர்சா ருலோபர்தமை யடுத்துவாழ் பவருதர மேவித் தானே. (௭௨)

4027. விள்ளரிய புகழ்மயிலை விநாயகமால் சத்திரமேல் விளங்க வேந்துந், தள்ளரிய துகிற்கொடிவான் மதிபோழு மனையன்மலர்த் தடக்கை யேந்து, மெள்ளரிய வளமேழிக் கொடியுவமை யதற்கியைப்ப வெண்ணு வார்தங், கொள்ளரிய மதிபோழு மென்னின்யா மினிப்புனைந்து கூற லென்னே. (௭௩)

4028. பாதிமதி யணிந்தபிரான் கபாலீசன் றிருமயிலைப் பதியின் மேய, கோதில்புகழ் விநாயகமால் சத்திரத்துண் பார்பலருங் கூடலாலே, நீதிமனை யிடம்புகுதும் பொழுதுமனை யவண்முனிவு நீங்குமாறு, வீதிதொறும் விருந்துநா டுவர்மைந்தர் பரத்தையரில் விட்டுத் தானே. (௭௪)

4029. திங்கள்வா ணுதன்மடவார்க் கொருகாமன் விநாயகமால் சிறப்பச் செய்த, துங்கமார் சத்திரமு மதன்முனர்க்கா வணமுமதன் றொலையாச் சீரு, மெங்கள்கபா லீசருமை யொடுமுலாப் புறமாயங் கிலகு சீரு, மங்கணு னோக்கியிது மயிலையன்று கயிலையென்ப ரகிலத் தோரே. (௭௫)

4030. திருந்துகரும் புன்னைவனஞ் சூழ்மயிலைக் கபாலீசர் திருவிழாவிற், பொருந்துவிநா யகமுகில்சத் திரத்தரசர் பலர்மேவும் புதுமை யாலே, மருந்துநிகர் சுவையடிசி லூட்டொலியும் பாட்டொலியும் வாங்கி மேவ, மருந்துகட கரியொலியும் பரியொலியுங் கடலொலியை யவிக்கு மன்றே. (௭௬)

4031. பொய்வழியில் விநாயகமா றிருமயிலைச் சத்திரத்திற் புவன வேந்தர், மெய்வழிமற் றையர்பலரு மேவலிற்றண் ணுமைதாளம்

விதியிற் கொண்டு, கைவழியே கண்ணடப்பக் கண்வழியே மனநடப் பக் கதிர்ப்பூங் கொம்பின், மைவழிகண் ணுர்நடிப்பக் கண்டோ ணடை வரா மாதர் மாதோ. (எஎ)

4032. உறவியிவன் யாவருக்கு மென்னும்விநா யகமகிப னுயர் மெய்ஞ் ஞான, மறவியிலாத் திருமயிலை யியற்றியசத் திரத்தடிசில் வளம்பெற் றுண்டு, திறவினையோ வியத்தமைத்த கண்ணனியற் றிய லீலை தெரியக் கண்டோர், துறவியரே யாயினுமற் றவர்க்கடங்காப் பெருங்காமஞ் சுரக்கு மாலோ. (எஅ)

4033. மூதியபுகழ்த் திருமயிலை நகரில்விநா யகமகிபன் முன்னி யார்க்கு, நிதியமெனச் செய்தமைத்த சத்திரத்தோ வியர்பலவா நிரம் பச் செய்த, திதியமைகண் ணன்புரிந்த லீலைகளைப் பரத்தையர்க டெரிய நோக்கி, மதியமைத்து மேன்மேலு மைந்தருக்கின் பூட்டிமிக மகிழு வாரே. (எகூ)

4034. அரியபுகழ் மயிலையெனுஞ் சுவேதவட்டத் தீவில்விநா யகமா லென்னும், பிரியநெடு மாறனது சித்திரச்சத் திரமெனும்பாற் பெருவா ரிக்கட், புரியவொளிர் பொன்னெனுமோ டதியினமை யுண வெனும்புத் தமுதை வேதக், குரியரெனுங் கோரிகையாற் பசியுடை யா ரெனுமமரர்க் கூட்டு மாலோ. (அ0)

4035. புன்னைவனஞ் சூழ்மயிலைத் திருநகரில் விநாயகமால் பொலியச் செய்த, தன்னைநிகர் சத்திரத்துப் பசுக்கள்பல கன்றுண்டு தளர்வு தீர்ந்த, பின்னையரு கிருந்துகறப் பவர்கறந்து கையிளைத்த பின் னுஞ் சோர்பா, லென்னையென வெதிர்வாவி பாய்வதுபாற் கடலையே யேய்க்கு மாலோ. (அக)

4036. அயிலோடு பொருமதர்க்க ணணங்கனையா ரழகன்விநா யகமா னுளும், வெயில்வீசு மணிமாடத் திருமயிலை நகரிடத்து விளங் கச் செய்த, வெயிலார்சத் திரஞ்சார்ந்த பலபொழிலும் பலபொழிலு மிறும்பூ தெய்த, மயிலாடுங் குயில்கூவும் வானுலகப் பொழின்மாறு வயங்கு மாலோ. (அ௨)

4037. தொண்டுபடு வார்க்கினிய கபாலீசர் மயிலையெனுந் தொன் மையூரி, லண்டுமவர்க் கினியவிநா யகமுகில்சத் திரப்பொழில்வந் தடைந்தார் யார்க்கும், விண்டுமது வொழுகுசுவைக் கனிமுதற்பல் பயனுதவி விளங்கா நிற்கும், வண்டுகட்கும் பயன்படாக் கற்பகமோ மானுமதை வையத் தீரே. (அ௩)

4038. மாதலமா மயிலைவிநா யகமுகில்சத் திரம்பயனுண் மகிழ் ந்து நாளும், பூதலங்கொண் டிடவுதவு மத்தகுசத் திரஞ்சார்ந்த பொழி லார் தென்னை, மீதலங்கொண் டிடவிளநீ ராயபய னுதவுமிக விரும்பி மேன்மேற், பாதலங்கொண் டிடக்கனிக ளுதவிடுமப் பொழிலீரப் பலாக்கண் மாதோ. (அ௪)

4039. ஆர்த்தவறி வினர்புகழுந் திருமயிலைப் பெருநகர மழகு மேவச், சீர்த்தவிநா யகமுகில்செய் சத்திரத்தின் மேலேறுந் திருவ

மிக்கார், கூர்த்தமகிழ் வொடுமெட்டிக் கற்பகத்தி னறுமலரைக் கொய் வா ரங்குப், பார்த்தவம ரர்கள்குனிந்தச் சத்திரஞ்சார் பொழின்மல ரைப் பறிப்பர் மாதோ. (அரு)

4040. தலவுயர்வு பெற்றமயி லேயில்விநா யகமகிபன் றனையச் செய்த, நிலவுபுகழ் மிகுதரும சத்திரத்தைச் சார்ந்தவிளை நிலங்கள் பல்ல, குலவுதள வரும்பனைய புனிதவமு தினுக்காகும் குணநெற் பைங்கூ, ழூலவுமத கயம்புகினு மறைக்குமே லச்செய்வள முரைப் பார் யாரே. (அசு)

4041. ஐயசிறி யிலேவெதிரி னெல்விளையு மெனப்பெரியோ ரறைந்தார் முன்னம், வையமிசை யுளவயலு ளிதுகாறுங் கண்டில மவ் வார்த்தை மெய்யே, செய்யன்விநா யகமகிபன் றிருமயிலேச் சித் திரச்சத் திரஞ்சார்ந் தியாரு, முய்யவமை கழனியெலா மவ்வாறே விளையுமெனி னுரைப்ப தென்னே. (அஎ)

4042. நலமடந்தை யார்விரும்பும் வடிவழகன் விநாயகமா னன்கு செய்த, பொலமடந்தை யுறைமயிலேச் சத்திரத்துண் டிலே பாகு பொலிய மென்று, குலமடந்தை மாரொடும்வே தியர்வெளிவந் துமிழ்சாறு கூர்த லாலே, நிலமடந்தை பூத்தனளோ வென்றையங் கொள்ளுவர்நீ ணிலத்து ளோரே. (அஅ)

4043. ஒளித்தல்கூ டாதவள மயிலேயில்வி நாயகமா னுவந்து செய்த, களித்தசீர்ச் சத்திரத்துண் டவர்பிறர்சத் திரத்துண்டல் காம தேனு, வளித்தபா லுடனினிய சுவையமுதுங் கூட்டிநனி யருந்தி னோர்கள்,புளித்தகா டியையுமொரு பொருளாக் கொண் டருந்துவது போலு மாலோ. (அகூ)

4044. நீற்றருமை யறிபவர்சூழ் மயிலேயெனும் பெருநகரி னிலவு தென்றற், காற்றருமை புழுங்குமறைக் குள்ளிருந்து மாலே வாய்க் கரும்பு கான்ற, சாற்றருமை யுவரிநீ ருண்டும்விநா யகமகிபன் சத்திரத்துச், சோற்றருமை மற்றையர்சத் திரத்துண்டு முணர்குவ ரேற் றுலங்கு மாதோ. (கூ0)

4045. முருகுசெறி தாமரையு முள்ளியுமுண் டகமாமே முதிர் செம் பொன்னுங், கருகிரும்பும் பொன்னுமே தாரகையுங் கழிக்கய லுங் களாமீ னுமே, குருகணிகை யார்மதனன் விநாயகமான் மயிலே நலங் குலவச் செய்த, திருகுதலில் சத்திரமு மற்றையர்சத் திரமுஞ் சத் திரமெய் யாமே. (கூக)

4046. தம்மையடைந் தவரவனி மிசைப்புரிந்த தவமுமந்தத் தவஞ்செய் நாளுஞ், செம்மையுற வுட்குறிக்கும் வான்றருக்க ளிவை குறித்தல் செய்யா தென்று, மும்மையுல கும்புகழுந் திருமயிலே விநாயகமான் முழங்கச் செய்த, கொம்மைமதிற் சத்திரம்வந் தடைந் தார்தம் பசியொன்றே குறிக்கு மாலோ. (கூஉ)

4047. நாடுவார் கடனுலகம் புகழ்மயிலே விநாயகமா னன்கு செய்த, நீடுவார் கொடிமதில்சூழ் சித்திரச்சத் திரத்தகத்து நிரம்ப

வந்து, கூடுவார் பலர்க்குமிடங் கொடுக்குமனங் கொடுக்குமது குலவு மேன்மேற், பாடுவார் பலர்க்குமிடங் கொடுக்குமனங் கொடுக்குமதன் பளகில் சீரே. (கூங)

4048. மூத்திக்கு வித்தாய பத்திமைபூண் டவர்க்கினிய முதல் வன் மாற்குஞ், சத்திக்கு மொருபாகந் தந்தபிரான் றிருமயிலைத் தலத் தி லோங்க,வெத்திக்கும் புகழ்விநா யகமுகில்செய் சத்திரத்தி னிருஞ்சி ரென்றுந், திக்கும் பாடுநர்க்கு மேன்மேலு மெனினெவரே செப்பார் மாதோ. (கூச)

4049. மரங்களெலாம் பொன்னுலக மருவியகற் பகப்பெயர்நன் மரமா மேமட், புரங்களெலா மடைந்தவரின் படையமேல் விளங்கு சிவ புரமா மேயக், கரங்களெலா முதலாகி விளங்ககரப் பெயருடையக் கரமா மேசத், திரங்களெலா மயிலைவிநா யகமுகில்சத் திரமாமே தேருங் காலே. (கூரு)

4050. நீர்மருவு தாமரைகள் கதிர்கண்டு முகமலரு நிரம்பு வா சச், சீர்மருவு மரக்காம்பன் மதிகண்டு முகமலருந் திரைசார் வாரிப், பார்மருவு பசியினர்நன் மயிலைவிநா யகமகிபன் பண்பிற் செய்த, வேர் மருவு சித்திரச்சத் திரங்கண்டு முகமலர்வ ரென்று மாதோ. (கூசு)

4051. மைத்தகுழ லொருபாகன் கபாலீச னினிதமர்ந்த மயிலை மூதூர்த், தைத்தபுகழ் விநாயகமா லியற்றியசத் திரத்துள்ளோர் தண் ணீர்ப் பந்தர், கைத்தலின்மற் றதன்சிறப்பை யுளம்வையார் யாவர் முனங் கமழ்நீர்ப் பந்தர், வைத்தபுக ழாலவாய்ச் சுந்தரநா யகனுமுளம் வைக்கு மாலோ. (கூஎ)

4052. மான்மருவு கரதலத்தெங் கபாலீசர் மகிழ்ந்துறையு மயிலை மூதூர்த், தேன்மருவு தொடைமார்பன் விநாயகபூ பதியுவகை சிறப்பச் செய்த, வான்மருவு மதிதவழ்சத் திரங்கண்டோர் யாருமுக மலர்வர் நாளுங், கான்மருவு நிலத்தணைதாய் முகங்கண்ட விளங்கன்று கடுப்ப மாதோ. (கூஅ)

4053. எத்தனைவா னவர்களுள ரத்தனைவா னவர்களும்வந் திறைஞ்ச நன்மை, யெத்தனையோ வருண்மயிலை விநாயகமால் சத்திரத்தி லெய்தி நாளு, மெத்தனைபேர் காண்பவர்மற் றெத்தனைபே ருறைபவ ரெத் தனைபே ருண்போ, ரெத்தனைபேர் துதிப்பவரெத் தனைபேர்யாப் பியற்றுநர்யா ரெண்ணு வோரே. (கூகூ)

4054. உற்றவன்பின் மேயகபா லீச்சுரர்கற் பகவல்லி யுவந்து வாழ்க, கொற்றவன்செங் கோல்வாழ்க மறையவர்கள் வாழ்கமுகிற் குழாங்கள் வாழ்க, நற்றவன்வி நாயகமான் மிகுசெல்வத் தொடுபொ லிந்து நாளும் வாழ்க,மற்றவன்செய் சத்திரத்துப் பெருந்தருமமென் ஞான்றும் வாழ்க மாதோ. (௬00)

திருமயிலைச்சித்திரச்சத்திரப்புகழ்ச்சிமாலை முற்றிற்று.

## தனிவிருத்தங்கள்.



4055. வந்தனங்கன் றிடமொடுபூ வாளிபெயுஞ் சீறிவரு மலயக் கானற், சந்தனங்கன் றிடக்கொதிக்கு நிலவுசினந் தெழுமினைய தன் மை யால்யா, னொந்தனங்கன் றிடவிடப்போய்க் கழிவதையா வதுசடைமே னுவலு நீர்ச்சம், பந்தனங்கன் றிடமுளான் மயிலைவிநா யகக்குரிசில் பார்ப்ப தென்றே. (க)

4056. திருந்தவளை யனமுண்ணுள் பாலனமும் வெறுத்தாளென் செய்வேன் சும்மா, விருந்தவளை யகங்கனெய்திப் படிவருத்தும் பெருங்கழனி யெங்குந் தங்கும், பெருந்தவளை யனமிரியப் பாய்மயிலை விநாயகமால் பெட்பின் வந்து, பொருந்தவளை யனகண்டத் தோழிநீ யின்றுசென்று புகலு வாயே. (உ)

4057. தனைவிரும்பு மடவாரைத் தான்விரும்பி டாமையென்ன சதிரீ தென்ன, நினைவிரும்பு தான்கொல்லோ மனமயிலை விநாயகமா னேரே நீவி, ரனைவிரும்பு கலவந்தா லாயிற்றின் றெனில்வாங்கி யவன்று ரென்றேள், புனைவிரும்புண் ணியமினிமேற் றுமதஞ்செய் யீரிரங்கிப் போது வீரே. (ங)

4058. முந்துகன விடைக்கொடியார் திருமயிலை விநாயகமான் முன்னி நேற்று,வந்துகன விடைப்புணர்ந்தா னனவில்வந்து புணராத வஞ்சம் யாதோ, நந்துகன விடைக்கிடுக்கண் புரிமுலையோ பணைத்துவிம்மு நானென் செய்கேன், சந்துகன விடைப்புணர்ந்தா லெதுவாமற் றதுவாமெய் தரிக்கிற் றுனே. (ச)

4059. தொக்கவனப் பாற்றனைவென் றவன்விநா யகமுகின்முன் றுணிந்து செல்லா, திக்கவனப் பாற்றுளைக்கு மென்மயிலைத் தென்மயிலை யிடத்து வேட்டு, நக்கவனப் பாற்கேங்கி யிருந்தவர்க் கான் பால்குமட்ட நாளு நல்கத், தக்கவனப் பாற்குறித்த தென்னை யென வறிந்துவந்து சாற்று வாயே. (ரு)

4060. தலங்கலமா மையிலையா டரவாக்கொள் கபாலிநுதற் றழல்கா ணுத்தோ, ளலங்கலமா மையிலையா யமர்விநா யகமகிப னருகே மேவக், கலங்கலமா மையிலையாட் டியகண்ணூர் போதனையைக் கலைக்க வெம்மால், விலங்கலமா மையிலையா தரித்தணைவா யென்றழைத்து மேவு வோமே. (சு)

4061. சக்குவைத்தா யினும்பரம னுதல்கடக்கும் வலியடையாத் தகுதியானே, ரிக்குவைத்தா யினும்பிரியர் மிகவெறுப்பக் கரத்தேந்தி யெய்யும் பூமா, துக்குவைத்தா யினும்பரவு புகழ்மயிலை விநாயகங் துரைமுன் காதிற், சுக்குவைத்தா யினும்விரைந்தூ தெனக்கிடங்கா னென்றின்னே சொல்லு வீரே. (எ)

4062. அரியதன மரும்பாபன் றலையாவிச் சிறுமகள்பா லணுகி வந்து, பெரியதன மரும்பாவி வேடொடங்கு மாவெவரோ பேசுகே னெற், சுரியகன மரும்பாவ ரேலார்புகழ்வி நாயகமா லொருவ னென் னுங், கரியதன மரும்பார்வெண் டளவனைய தெனினுமென்று கழறு மாலோ. (௮)

4063. திருவசந்த னம்பால்வாய் விநாயகபூ பாவொன்று செப்பக் கேண்மோ, வொருவசங்க னம்பால்வாய் மேயபிரா னுண்டவிட மொப் பச் சிறி, வருவசந்த னம்பால்வாய் வெளிப்படுமூட் புகாவினைய மகண் மால் யார்க்கும், வெருவசந்த னம்பால்வாய் தாய்வாளி னரியென்னும் விலக மாதோ. (௯)

4064. இலங்கறந்தா ரணிபரவ வளர்க்கும்விநா யகமகிப னிருந் தோள் சூடு, மலங்கறந்தா னலங்கொள்வளக் கணிமயிலை மணிமயிலை யனையா யுள்ளங், கலங்கறந்தா வளர்திருளாக் கொண்டுகைக்கும் வேள் புரிபோர் கடிய கல்லாக், குலங்கறந்தா லெதுவாமற் றதுவாம்வெண் ணிலாக்கதிருங் குளிரு மாதோ. (௧௦)

4065. நேற்றருகே வந்தொருவன் றலைகொட்டுக் கிள்ளிநின்று னீயா ரென்றேன், போற்றுபுகழ்த் திருமயிலை நகரிற்சத் திரங்கட்டு புகழால் யாருஞ், சாற்றுவிநா யகமகிபன் யானென்று னதனைலென் றனத்தைக் கிள்ளற், காற்றுவிதி யென்னென்றே னகைத்துப்பின் மொழிகுவனென் றகன்றான் மாதோ. (௧௧)

4066. அணிமயிலைத் தெருவின்மல ரோமலரொன் றுரைத்து நென்ன லடைந்தே னங்கோர், றிணிபயனோர் வந்தரும்பு தாவென்று னின்றென்றேன் செப்பி னைப்போய், கணிபுனையு மிரண்டுண்டே யென்று னென் றேனுமிலை காட்டு கென்றேன், மணிமுலைதொட் டிவை யென்றான் யாரென்றேன் விநாயகமான் மதியென் றாரே. (௧௨)

4067. முழுதுலகம் புகழ்மயிலைத் திருக்குளத்துப் படித்துறை யென் முன்னர் வந்தோ, ரெழுகரிய வடிவழகன் றன்மார்பி லென் மார்ப மிறுகச் சேர்த்துப், பழுதில்கனி வாய்முத்த மிரண்டுதந்து நீங் கினனிப் படித்து ணிந்து, தழுவினவன் யாரென்றேன் விநாயகமா லென்றெவருஞ் சாற்றி னரால். (௧௩)

4068. அரியபுகழ்த் திருமயிலைத் திருக்குளத்து நேற்றுநீ ராடும் போதென், பிரியமிகு கலையெடுத்து விநாயகமா லவண்மறைத்த பெற் றி நோக்கித், தெரியவரு நீகண்ண னையினும்யா னிடைப்பெண்ணே செப்பு கென்றே, னுரியவொரு சிற்றிடைச்சி யலையோநீ யெனநகைத் தங் குரைத்திட் டானே. (௧௪)

4069. நீடுபுகழ்த் திருமயிலை விநாயகமால் சத்திரமு னேற்றுச் சென்றே, னாடுமவ னெனைநோக்கிச் சிற்றிடைச்சி வருகவென்று னன்மு னிந்து, கூடுமிதற் குண்டுகொலோ சான்றென்றேன் பாற்கல சங்கோட லாலே, பாடுபெறு மென்றானின் றேயென்றேன் மார் பிரண்டு பாரென் றானே. (௧௫)

4070. ஏர்மருவு வியாசநகர் விநாயகமான் மயிலேயிலென் னெதிரே வந்து, வார்மருவு தனந்தாவென் ருனனேப்போல் வள்ளலோ மன்னு வென்றேன், பார்மருவு சுவர்க்கந்தா வென்றுனங் கபாலீசர் பாற்கே ளென்றே, ஞர்மருவு நகையொடுமோர் புறுமிவைதா வெனத்தொட் டா ருணி னேனே. (கசு)

4071. அமைதரநேற் றெருத்திக்கு நீகொடுத்த வரிசையெலா மறியேன் கொல்லோ, கமைதரயா னென்றுமறி யேனென்ருய் பொய் சொலவுங் கற்றுக் கொண்டாய், சமைதரமற் றவன்செய்த வெச்சில் கழு வாதெனேயுந் தழுவ வந்தா, யிமைதரவாழ் மயிலேவிநா யகமகிபா வறிவேனுன் னெண்ணந் தானே. (கஎ)

4072. கன்றனங்கன் வருத்தாமன் மயிலேவிநா யகமகிபா கட்டிச் சேர்த்தே, யென்றனங்கைக் கொள்ளென்பேன் வாய்முத்தந் தாவென் பே னிவையல் லாம, லுன்றனங்கைக் கொடுவென்னேன் விலேமுத்தந் தாவென்னே னூரார் பேசு, மன்றனங்க கலவெனேவந் தணேவதனுக் குனக்கிருக்கும் வருத்தம் யாதே. (கஅ)

4073. மன்னன்விநா யகமகிப னேற்றெனேக்கை தொட்டிழுத் தான் மகிபா நீமற், றென்னகா ரியஞ்செய்தா யென்றேனென் மனத் தினேத்தொட் டிழுக்க லாமோ, வன்னநடை யாய்நின்பொற் றன மென்று னஃதேலென் னங்கை தொட்ட, துன்னுடைய பிழையென் றே னுள்ளதுதான் பொறுத்தி யென்றங் குரைசெய் தானே. (கசு)

4074. மாசுதவிர் திருமயிலே விநாயகபூ பாலாவென் மட்டு நீதான், பேசுவது பொய்யென்றே னின்னிடையே பொய்யென்ருன் பெரியோனேநின், வீசுமனங் கல்லென்றே னின்முலேயே கல்லென் ருன் வேண்டே னின்பொற், பாசுபெறு பணியென்றேன் வேண்டுவே னின் னல்குற் பணியென் ருனே. (உ0)

4075. பறந்துபல மலர்தொறும்போ யிருந்துமது வருந்தறுகாற் புறவை யேபோற், சிறந்துபல மாதரகந் தொறும்புகுந்து போகநுகர் திறமேற் கொண்டாய், மறந்துமொரு தினத்துமது தனேவிடாய் விநா யகமா மகிபா நல்ல, வறந்துணிவு மிதுவன்றே வென்னேயும்வந் தேத் துவைநின் னருணன் றுமே. (உக)

4076. மருவுபுகழ் வியாசைவிநா யகமகிபா வினேயதிரு மயிலே மேலேத், தெருவுறையு மவளேபெண் ணவளழகே பேரழகு சிவசிவா வப், பொருவிலவ ளிளமுலேயே வனமுலேமற் றவண்மொழியே பொய் யா வேத,மிருவிலத்தி லுனக்கென்றால் யானுரென் னலம்யாதிங் கென் சொல் யாதே. (உஉ)

4077. தென்கொடுத்த பெரும்பொழில்சூழ் வியாசைவிநா யகமகிபா செப்பக் கேண்மோ, மின்கொடுத்த சிற்றிடைமா தருக்கெல்லாம் பொருந்தும்வகை மேன்மேல் வாரிப், பொன்கொடுத்தாய் மணிகொடுத்தாய் செம்பவள முங்கொடுத்தாய் புரிந்தெனக்கிங், கென்கொடுத்தா யொருமுத்தங் கொடுவென்ற லதற்குமன மில்லை தானே.

4078. தென்மொழிதேர் வியாசைவிநா யகமகிபா வவள்வார்த்தை தித்திப் புள்ள,தென்மொழியோ கைப்புள்ள தவள்செவ்வா யூறல்கரும் பென்வா யூற, வன்மொழிசார் வேம்பேயா மினதால்யா ரிடம்போய்நான் சொல்வே னிந்த, வன்மொழியை வேற்றுமையை நீயே செய் வாயுனக்கே யடுக்கு மாலோ. (௨௪)

4079. தேனிருக்கு மலர் மார்பா விநாயகபூ பாவொன்று செப்பக் கேண்மோ, யானிருக்கு மனைநாடிக் கன்றகன்ற புனிற்றுப்போ லெண்ணுற் றேநீ, தானிருக்கு மிடமாக வருவைமுன்னுள் கடைக்கணித்த றனுஞ் செய்யாய், மானிருக்கும் விழியவளா லிந்நாளென் றுலினியான் வகுப்ப தென்னே. (௨௫)

4080. சீர்கொண்ட மயிலைவீ தியிற்றயிரோ தயிரென்று செப்பி னென்ன, லேர்கொண்ட யான்சென்றே னங்கொருவன் றயிர்புளிப்போ வினிப்போ வென்றான், பார்கொண்ட வினிப்பெனநின் வாயூறல் போலினிக்கப் படுமோ வென்று, ஞர்கொண்ட விவன்யாரென் றேனவன்வி நாயகமா னலமென் றாரே. (௨௬)

4081. பாலோபா லெனக்கூறி மயிலைவீ தியினேற்றுப் படர்ந்தேனங்கு, மாலோவென் றுரைக்கும்விநா யகமகிப னெனக்கெதிரே வந்து நின்றே, யாலோவென் றிடும்வயிற்று யெத்தழனின் பாலுண்பார்க் கவிவ தென்றான், சாலோவாப் பசித்தழலென் றேன்காமத் தழலவிப்பிற் றருகென் றானே. (௨௭)

4082. தேங்குலவு பொழின்மயிலைத் திருவீதிச் சித்திரச்சத் திரமுனேற்று, மாங்கனியோ வெனக்கூறி யடைந்தேன்வி நாயகமால் வந்து நேரே, யேங்கிடையாய் கட்டிமாங் கனிகொலோ வென்றானு மென்றே னற்றேற், பாங்குபெறு நின்முலைபோ லிருக்குமெனிற் கொடுவென்று பற்றி னானே. (௨௮)

4083. ஓவாத புகழ்மயிலை விநாயகமா லென்னெதிர்வந் துவந்துமானே, கோவாத முத்தமொன்று கொடுத்தியெனின் யானுனக்குக் கோக்கத் தக்க,தாவாத பலமுத்தந் தருவனென்றான் யான்மறுத்தேன் றடுத்துப் பின்னு, மூவாத நீகொடுக்கு முத்தமே கொடுப்பனென்று மொழிந்திட் டானே. (௨௯)

சித்திரச்சத்திரப்புகழ்ச்சிமாலைச்

## *சிறப்புப்பாயிரங்கள்.

காஞ்சீபுரம் வித்வான்

### சபாபதிமுதலியாரியற்றியது.

விருத்தம்.

4084. மேனாட்சி வனையுமைபோற் றும்மயிலை விநாயகமால் வியப்புட் கூரப், பூனாட்சி வரிகள்விதி யாமைநபு கானிநபெப் புனையும் பேருட், டானாட்சி யாயொன்றை யொன்றுறவொன் றுடன்றரித்தோன் றதனில் வாழு, மீனாட்சி சுந்தரவேள் சித்திரச்சத் திரமாலை விளம்பினானே.

---

பங்களூரிலிருக்கும்

### வல்லூர் - தேவராசபிள்ளையியற்றியது.

நிலைமண்டிலவாசிரியப்பா.

4085. சீர்வள ரவனித் திருமக டனக்குப்
பேர்வளர் நாவற் பெயர்பெறு தீவங்
கவின்பெறு வதனங் கடுக்குமத் தீவிற்
கவிபுகழ் பரதக் காமரு கண்டங்
௫ கயிரவச் செவ்வாய் கடுக்குமக் கண்டத்
துயர்தொண் டைநன்னா டொளிர்நகை பொருவும்
விளங்கதி ணொளியெனத் துளங்குறு சீர்த்தி
பாவுறு வியாசர் பாடிவாழ் வேந்தன்
றேங்கட வரையுலாம் வேங்கட வரையா
௧0 னூர மெறிதிரைக் கீரமா நதியா
னூழி வரையொளிர் மேழியம் பதாகையான்
மங்கையர் குவளை மலரொடு வரிபாய்
செங்கு வளைத்தார் திகழ்தரு புயாசல
னம்பன் மலர்தர வலைகடற் றோன்று
௧௫ மாம்பலின் பிடியென் றவிர்கர நீட்டுவெள்
ளாம்பலெர் நாளு மடைதரு மூன்றிலான்
சந்தமார் குருத்துக் குந்தம துடையான்
சசியினைப் பொருவுஞ் சுசியுடைக் கோமான்
றிவளுஞ் சவளத் திருத்தோ ரணத்தா
௨0 னூழிவாய்ப் பொங்கு மாழிவா யொலியின்

---

* இவை பழையபதிப்பைச் சார்ந்தவை; இந்நூல் பதிப்பித்தகாலம் நளஃஸ் சித்திரைமீ (1856).

பாழி யடக்கும் பண்புறு மூரசினன்
யாரும் பரவு மேருவி னுக்குங்
கச்சிப் பதிக்குங் கன்னியம் பதிக்கு
மாவ லரும்பக் காவல் பூண்டவன்
௨௫ ஞூதகி தாதவிழ் தாமர் துரோண
மேதகு மருக்க மென்மை சால்பதந்
தண்ணமு திறைக்கும் வெண்மதிக் கொழுந்து
மணிவளர் சுடிகைப் பணிசெழுங் கூவிளம்
புனைபரன் சடையிற் பொங்குவெண் கங்கை
௩௦ நதிகுலாம் புதிக்குத் துதிவிது வன்னன்
கருக்கடல் சுவறத் திருக்குள விழியான்
மருக்கம லப்பத மலர்க்கன வரத
மருச்சனை யாற்று மருச்சுன வள்ளல்
பஃறினம் புரிதவப் பயனென வுதித்தோன்
௩௫ புலவருள் ளவாவிய பொருளெலாம் பயத்தலாற்
பொற்றூர் கொளலாற் புவனம்வாழ்த் துதலா
லடைந்தவர்க் கினிமை யமர்கிழ றரலா
லினையனைக் கற்பக மெனச்சிலர் சொல்வார்
நற்பயன் றூயர்க் கற்பொடு தரலா
௪௦ ஞலடி புகன்ற நன்னெறி நடத்தலா
னல்லவர்க் கடங்கி யல்லவர்க் கடிதலா
லினையனைத் தேனு வெனச்சில ரறைவா
ரெடுத்தெடுத் தளிக்கினு மென்றுங் குறைபடா
தடுத்து வளரு மரும்பொரு ளுடைமையா
௪௫ லரனுடை நண்பற் குரிமைபெற் றிடலா
லிருநிதி யெனச்சில ரிவனைப் புகல்வார்
கைம்மா றடைவான் கருதாக் குணத்தாற்
றனமுந் தவமுந் தழைதர வழங்கலாற்
கருமுகி லெனச்சிலர் கழறுவ ரிவனை
௫௦ யின்றென வடைந்தோர்க் கின்றென வுரையா
தொன்றவ ராசை யோடமிக் காசை
யென்று மளிக்கு மியல்புண் மையினு
லென்றாழ் சுதனென விவனைச் சிலர்சொல்வார்
கற்பக மோமரங் கவின்மிகு புமானிவ
௫௫ ேனாறி வுளதஃ தாறறி வுளனிவன்
வேண்ட வதுதரும் வேண்டா திவன்றரு
மளிகொள் ளாததஃ தளிகொண் டவனிவன்
கண்ண னுலது கவரப் பட்டது
கண்ணெவ ராலுங் கவரப் படானிவ
௬௦ னுதனி னஃதிவற் காகா திணையே

தேனுவோ விருகக் திகழிவன் குமரன்
பந்தமுற் றதுவது பகரஃ தூறனிவன்
கொலையது புரிந்ததக் குற்றஞ் செயானிவ
னன்னதை யணுக வஞ்சுவ ரெவரு
௬௫ மின்னனை யடுப்ப வென்னரும் களிப்பா
ராகலி னுகா தஃதிவற் கிணையே
யெழின்மிகப் பெற்ற விருநிதி யோவெனிற்
சுதந்தா மூளவல சுதந்தர மூளனிவ
னேமம தளிக்கு மெலாமளிப் பானிவ
௭௦ னாதலி னுகா வவையிவற் கிணையே
கொண்டலோ வொருபரு வத்தினிற் கொடுக்கு
மெண்டகு மறுபரு வத்துமீ வானிவ
னுலகஞ்ச வாய்விட் டிரப்பியஃ தீயு
மிலகுமின் மொழிபுகன் றீகு வானிவ
௭௫ னொருகா லளித்தலு முடலது விளர்க்கும்
பலகாற் றரினுமோர் படித்தொளிர் வானிவ
னனலிடி வழங்கி யகிதஞ் செயுமஃ
தெவரும் களிக்க விதம்புரி வானிவன்
றருணந் தன்னிற் றழைவறக் கொடாததஃ
௮௦ தெவ்வமை யத்து மினிதளிப் பானிவ
னாகையி னஃதிவற் காகா திணையே
கன்னனோ மத்தி யான தரித்திரன்
பன்னரும் பெருந்திருப் படைத்தவ னுமிவன்
சூதுசெய் தனனவன் சூதனு விலானிவன்
௮௫ போரிடை யச்சுறீஇப் புறந்தந் தனனவன்
பாரிடை யப்பழி படையா தவனிவன்
கொடியரை யென்றுங் கூடிவாழ்ந் தனனவன்
படியின்மே லவரைப் பணிந்துவாழ் பவனிவ
னாதலா னுகா னவனிவற் கிணையே
௯௦ கட்டழ குடைமையாற் காத்தின்மீ னேந்தலாற்
கிள்ளை யூர்தலாற் கிளரளிக் குணத்தால்
வேழந் தாங்கலால் விதுக்குடை பரித்தலால்
வேணிக ரிவற்கென விளம்புவர் சில்லோ
ரவனுரு வில்லா னிவனுரு வுள்ளா
௯௫ னவனறி வழிப்பா னிவனறி வளிப்பா
னவனரன் பகைவ னிவனரன் றொண்ட
னாதலி னவனிவற் காகா னிணையே
யின்னவன் கல்விக் கிணைதா னன்மையாற்
பன்னக வேந்தன் யாதலங் கரந்தன
௱ னெனவியற் புலவ ரெவரும் புகழு

மனகன் விநாயக வண்ண லென்பா
னெயிலெரித் தவன்களிற் றீருரி புனைந்தவ
னயில்விழிக் குயின்மொழி யம்பிகை பங்கன்
கயிலைநா யகன்வாழ் மயிலையம் பதியிற்
௧௦௫ காபாலி தீர்த்தத் தென்பாற் கரையினிற்
சிற்பநூல் வழியிற் பொற்புற வமைத்ததூஉ
மறுபான் மூவரென் றறையடி யவர்போற்
பன்னிரு வோரெனப் பகராழ் வார்போற்
போசன்முன் னும்பல தேசமன் னவர்போற்
௧௧௦ றீட்டிய மணிப்படந் திகழ்தரப் பெற்றதூஉ
மரம்பையுங் கந்தியு மவிர்தரு கன்னலுந்
திரம்பெற நாட்டித் திகழ்வாயி லுற்றதூஉந்
தெங்கின் மடலாற் செறிதர வேய்ந்து
கொங்கலர்ச் செழுந்தார் குளிர்தர வணைந்த
௧௧௫ மங்கலப் பந்தர் வாய்த்தமுன் பாலதூஉ
மாசையால் வெள்ளியான் மணிகளா லியற்று
மாசிலாச் சுடர்நிலை மலிசிறப் பினதூஉந்
துவாதசி தன்னிற் றெருக்கநல் லந்தணர்க்
கவாவற வனந்தன மருள்புகழ் கொண்டதூஉந்
௧௨௦ துருமத் துதிக்குந் தூய வரவாற்
றருமமென் னாளுந் தழையவாற் றுவதூஉந்
வந்தவர் தாகம் வளர்பசி போகச்
சந்ததங் காக்குந் தகைமையுற் றுளதூஉந்
தூய வாடியுந் தொங்கொளி வட்டமு
௧௨௫ மேய பேரவை விளங்குறப் பெற்றதூஉந்
செந்தமிழ்ப் புலவருந் தேயமன் னவரு
மிருவகைப் பற்றிலா திலகுஞா னியருஞ்
சந்தத மவாவிச் சாரச் சிறந்ததூஉஞ்
சதுமறை யொலியுந் தருக்கநூ லொலியுந்
௧௩௦ துதிகொள்வே தாந்தத் தூயநூ லொலியுந்
நால்வர்முன் னவின்ற நற்றமி ழொலியு
மாறிரண் டாழ்வா ரறைதமி ழொலியும்
பதிபசு பாசப் பகுப்பினைத் தெருட்டுஞ்
சைவசித் தாந்தத் தெய்வநூ லொலியு
௧௩௫ மற்றைநூ லொலியு மலிதர வாய்த்ததூஉந்
தேசவர்த்த மானஞ் செய்யபத் திரிகையா
லாசற வெவர்க்கு மறிவுறுத் துவதூஉ
முப்பத் திரண்டென மொழிதரு நல்லறந்
தப்பற வளர்க்குந் தகைமை தன்னும்
௧௪௦ பரமற் குவப்பைப் பாலித் திடலாற்

புலவர் துயரம் போக்குவித் திடலாற்
காமக் கண்ணியைக் கடுத்திடு தவத்ததூஉஞ்
சசியும் வேணியுந் தவழ்முடி பெறலாற்
பத்தருக் கென்றும் பதமளிக் குதலான்
௧௪௫ மாநிழ லமர்தலால் வல்லேறு பரித்தலா
லேகம் பத்திறைக் கிணையா வொளிர்வதூஉ
மாகிய சிறப்பெலா மமைசத் திரத்திற்
குலகம் வியப்ப வொருமாலை சொற்று
ணண்ட வுருவா யவிர்விராட் புருடனுக்
௧௫௦ கெண்டகு சென்னியா விலகுகா ரணத்தாற்
சென்னிப் பெயர்பெறுந் திருநா டதனி
லம்முடிக் கென்று மழகுறக் கவித்த
பன்மணி முடியிற் பாங்குற வொளிருந்
திரிசிர கிரியெனுந் திருநக ராளி
௧௫௫ கலையுணர்ந் திடலாற் கற்பவ ருளத்தி
னிலைமுக் குற்ற நிசியைத் துரத்தலாற்
சைவ சமயத் தாமரை மலர்த்தலாற்
புறமதத் துகினம் புறமிடக் கடிதலான்
மதிஞரிற் சிலரிவன் மார்த்தாண்ட னென்றும்
௧௬௦ புலவருக் குக்கலை பொலிதரத் தரலாற்
கலாநிதி யாகலாற் கவினளி செயலா
லறிஞரிற் சிலரிவ னம்புலி யென்றுஞ்
செந்தமிழ் பரப்பலாற் சிவன்புகழ் பாடலா
லாகம மனைத்து மறிந்துயர்ந் திடலா
௧௬௫ லாய்ந்தவர் சிலரிவ னகத்திய னென்று
மனநனி மகிழ்ந்து வழங்குவ ரென்ப
கதிரவன் வெய்யோன் கழறிவன் றண்ணியோ
னகையிழுந் தவனவ னகையிழ வானிவ
னெல்லிடை யுறுனவ னெப்போழ்து முளனிவ
௧௭௦ ளுதலி னவனிவற் கன்றிணை யென்ப
மதிகலை தேய்பவன் வளர்கலை யானிவ
னவன்மா பாதக னிவன்மா புண்ணிய
னவன்வெந் நோய னிவன்மிகு தூய
னவன்பக லவனிடை யவிரொளி பெறுவா
௧௭௫ னிவனியற் கையினி லென்று மிலகுவா
ளுதலி னவனிவற் கன்றிணை யென்ப
கும்ப முனியோ குறியவ னுகு
நம்பனைப் பணியிவ னவிலரும் பெரியோன்
முன்னோர்நற் சீடனை முனிந்தவன் சபித்தனன்
௧௮௦ சீடர்செய் பிழையெலாஞ் சிந்தி யானிவ

ஞுதலா னவனிவற் கன்றிணை யென்ப
வெண்ணிறந் தனவா யியன்மூ வகையவாய்ச்
சத்தையு மசத்தையுந் தகுதியிற் பிரித்தலிற்
சதசத் தெனும்பெயர் சார்ந்தொளிர் வனவாய்ச்
க௮ரு சிற்றறி வினவாய்ச் சேர்சக லத்தவாய்
வியாபகத் தனவாய் விரியுயிர்த் தொகைகள்
புனிதகா ரியங்களைப் புரியவொட் டாததூஉந்
தீயகா ரியங்களைச் செயமுயல் விப்பதூஉ
மாகிய வாணவத் தரட்டைதீர்ந் துய்யச்
க௯0 சுத்தமு மசுத்தமு மென்று சொற்றிடு
மிருவகை மாயையா லிசைத்தவவ் வுயிர்க்குத்
தனுகர ணம்புவ னங்களைத் தந்தவை
யீட்டிரு கருமத் திருவகைப் போகமீந்
தொளிர்தலந் தீர்த்த மூயர்தரு மூர்த்தியென்
க௯ரு றறையுமூன் றுருக்கொண் டவனியிற் கதித்திட்
டவ்வுயிர்க் கறியா வகையினு மறிந்துஞ்
செவ்விய புண்ணியஞ் சேர்தரச் செலுத்தி
யகச்சரி யாதி யாயநான் கனையு
மூண்மைச் சரியைமுன் னுரைக்குமூன் றினையு
௨00 மென்மெல முறையின் மிளிர்தர நிரப்பிப்
பயின்மல வலியறப் பாசம் பயிற்றித்
தன்னருட் சத்தி தயங்கப் பதித்துச்
சாற்றிரு வினையைச் சமம தாக்கி
மலமு மூயிரும் வயங்குதன் கீழுறத்
௨0ரு தான்மே லாகித் தங்கமை யத்தி
னீருறு மூப்பு நிலவுறத் திரண்டெனத்
திருவரு ளதனாற் றேசிக வுருவுறீஇ
யத்துவா வாறையுஞ் சுத்தி புரிந்து
கூட்டம் பொதுதன் னியல்பெனக் குறிக்கு
௨க0 நாட்டுமூன் றுணர்வா னவின்மூப் பொருளை
யுறழ்தர வாகு மொன்பது வகையுங்
காட்டுபு பின்னர்க் காட்டுந் தானுங்
காணு மறிவுங் கதிர்நய னம்போல்
வயங்குறக் கலக்கு மாண்பெரும் பயனைத்
௨கரு தெரித்ததி னழுத்துறீஇத் திகழ்தரு பசுபதி
யனுதி பந்தமு மாதி பந்தமு
மனுதியே யில்லா வனுதி மூத்த
னியற்கையி னொருங்கே யெலாமறி பெருமா
னைந்தொழில் புரிந்து மறைவிகா ரம்மிலா
௨௨0 னேக னித்திய னெண்குண முள்ளான்

பகர்சுதந் திரனும் பரசிவ முதலே
யென்போன் றவருக் கின்னருள் புரிவான்
கடுவா வொடுசெழுங் கடுக்கை தவிர்த்து
மடலவிழ் குவளை மலர்த்தா ரணிந்து
உஉ௫ பாலலோ சனமும் பனிமதிக் கோடுங்
களத்திடைக் கறையுங் காணுது மறைத்துச்
சிதம்பர வேண்முனஞ் செய்தமா தவத்தான்
மகிதல முற்றும் வாழ்த்துறச் சுதனாய்
வந்தன னெனலே வாய்மையா மென்று
உ௩௦ தூயவ ரெவருஞ் சொற்றிடுந் தக்கோன்
மீனாட்சி சுந்தரப் பெயர்ச்செவ் வேளே.

---

## திரிசிரபுரவித்துவான் களியற்றியவைகள்.

வீரராகவசெட்டியாரியற்றியது.

விருத்தம்.

4086. சீர்விளங்கும் வியாசநகர் விநாயகமான் மயிலேயினிற் சிறக கச் செய்த, பேர்விளங்குஞ் சத்திரத்தின் பெருமையள வறிந்துரைக் கப் பிறங்கு கல்வி, யேர்விளங்கு மீனாட்சி சுந்தரநா வலனாலே யிசை வதன்றிப், பார்விளங்குங் கணபணக்கட் செவியாலு முற்றுணர்ந்து பகரொணாதே. (௧)

---

சுந்தரம்பிள்ளையியற்றியவை.

விருத்தம்.

4087. பூமேவு மங்கையர் குழற்குடைந் தெழிலிவிண் போதற்கு நாணியடர்பைம் - பொழிலொடுற வாதனன் றெனவுலாம் வியாசை வாழ் பூபால னதிவிதரணன், மாமேவு திண்டோ ளருச்சுனேந் திர னுதவு மைந்தனேந் தருவனமுதல் - வள்ளலுள் ளியவருள் விநாயக வுபேந்திரனன் மாமயிலே யம்பதியினிற், கோமேவு சிகரம் பசும் பொனவ மணியாற் குயிற்றியரு ணன்பரியினங்-கொட்பச் சிறக்குமுய ரன்னசத் திரமகிமை குலவுமொரு நாலேந்நாறு, நாமேவு சேடனு லுஞ்சொலற் பாலதோ நளிர்சிர புரத்தில் வந்த - ஞானசம் பந்தனிகர் மீனாட்சி சுந்தர நலாரியனே யன்றி மாதோ. (௧)

வேறு.

4088. பொன்னுல கத்தோ ரியாவரு மின்பாற் புணரியை மதித் தனான் றெஞ்சாப் - புத்தமு தத்தோ டிருநிதி முதலாம் பொருள்பட வேற்றவர் தம்முள், மின்னிய நிதிக்கோ னறமலி வியாச வியனகர்த் தோன்றியன் பகலா-மிகுவிநா யகபூ பதியெனும் பெயரை மிலேந்துவர் தொருதிரு மயிலே, யென்னுநற் பதியெண் ணான்கறந் தழைய வியற் றிய சத்திர வளனு - மியனுமன் னவற்குத் தோழனும் பரம னிரசத

வடகயி லேயினின், றுன்னுதென் கயிலே யுவந்தெனே யாள்வா னுதித்
துமீ னுட்சிசுந் தரப்பே-ருவப்புறக் கொண்டு மறைநவி னுவா னுலகறிந்
திடவுரைத் தனனே. (௨)

வேறு.

4089. பண்ணியன் மொழியார் மயல்கொளுங் காமன் படிபுகழ்
வியாசமா நகரிற், புண்ணியந் திரண்டோ ருருக்கொடு வந்தாற் போல
வந் தருள்விநா யகவே, டிண்ணிய மயிலேப் பதியிற்றன் பெயராற்
செய்தசத் திரவள னடியார், கண்ணிய தருண்மீ னுட்சிசுந் தரநங்
கடவுளாற் றெரிந்தன மாதோ. (௩)

4090. உமையிரு நாழி நெல்லா னிடத்தேற் றுலகிலெண் ணுன்
கற முஞ்செய், தமையுணர்ந் தம்முன் னவன்றிரு மறையாந் தரும
நூல் சாற்றின னதுபோற், கமைநிறை வியாச நகர்விநா யகவேள் கவி
ன்மயி லேயிற்செய்சத் திரத்தி,னிமையறப் பயன்மீ னுட்சிசுந்தரவெம்
மிறைவிளங் கிடவுரைத் தனனே. (௪)

வேறு.

4091. எனதெனதென் றுரைத்தறஞ்செ யாதுணு துடுத்தாம
லிழக்குஞ் செல்வர், மனமழிய வியாசநகர் வரும்விநா யகபூபன் மயி
லாப் பூரிற், றினகரனேர் சத்திரமொன் றியற்றுவித்தா னதன்பய
னுஞ் சிறப்புஞ் சொற்று, னனகனுயர் மீனுட்சி சுந்தரமா வியற்றமிழா
லவனி யோரே. (௫)

நேரிசைவெண்பா.

4092. நன்பான்மீ னுட்சிசுந்த ரக்குருவி னுற்றெளிந்தோ, மின்
பாய் புகழ்சேர் விநாயகவே - ளன்போர், பொருமயிலே வென்றவொ
ண்கட் பூவையுருக் கொண்ட, திருமயிலேச் சத்திரத்தின் சீர். (௬)

விருத்தம்.

4093. பாற்கடல் வியாச நகரமக் கடலிற் படுவலம் புரியருச்
சுனமா, னேற்கவந் துதித்த மணிவிநா யகவே ணுவலருந் திருமயி
லேயின்க, ணேற்கவந் தவருக் கினியசத் திரத்தி னீகையா மொளியினே
விரிக்க, நாற்கவிக் கிறைமீ னுட்சிசுந் தரவா ணிகன்விலே பகர்ந்தனன்
மாதோ. (௭)

4094. இல்லறத் தவன்சீ ரியல்பதி னொருவர்க் கெழிற்றுணே
யெனும்பெரி யவர்சொல், வில்லகங் கொடுவி யாசமா நகர்வி நாயக
பூபன்றென் மயிலே, நல்லகத் துலோபர் மனமுக வியற்று நன்மைசேர்
சத்திர வியல்பெ, னல்லறீர்த் தாண்மீ னுட்சிசுந் தரமா லகிலநன்
குணரச் சொற்றனனே. (௮)

வேறு.

4095. எஞ்ஞான்றும் புலவர்மொழிக் கிசைபுகழ்வி நாயகவே
ளீகை யில்லா, வஞ்ஞானர் மனமழிய வரியதிரு மயிலேயின்க ணமை
யச் செய்த, செஞ்ஞாயி றனையமுடி திகழன்ன சத்திரத்தின் சிறப்
பை நன்று, மெய்ஞ்ஞானக் கடலனையாண் மீனுட்சி சுந்தரமான்
விளம்பி னனே. (௯)

---

## சி. தியாகராயசெட்டியாரவர்கள் இயற்றியவை.

### விருத்தங்கள்.

4096. வண்டிருக்கு மலர்ப்பொழில்சூழ் வியாசாகர் விநாயகமால் வந்தோர் யாரு,மூண்டிருக்கும் படிமயிலை யிற்புரிந்த சத்திரத்தி னூறு சீர் நாயேன், றெண்டிருக்குங் கழற்பெரியோன் மீனாட்சி சுந்தரப் பேர்த் தூய்மை யோன்வெண், பெண்டிருக்கு நாவினனற்றி மற்றொரு நா வாற்புகழ்ந்து பேசற் பாற்றே. (க)

4097. மின்னுபுக ழருச்சுனமா றவத்துதித்த விநாயகவேள் விரும்பி யார்க்கு, மன்னுமயி லைப்பதியில் விலாப்புடைவீங் கிடவரு த்து மடத்தின் மேன்மை, தன்னையருண் மீனாட்சி சுந்தரதே சிகன் றமிழாற் சாற்றக் கேட்டுத், துன்னமர ரவியொடமு துணைவுநீத் தன ரெனில்யான் சொல்வ தென்னே. (உ)

4098. சீர்மருவு மருச்சுனமா றவப்பெருமை காட்டவந்த செல் வன் றிண்டோட், டார்மருவு விநாயகவே டிருமயிலை யிற்புரிந்த சத்தி ரத்தைக், கார்மருவு முடற்கண்ணன் கடிமனையு மொக்குமின்பங் கனியும் பாவாற், பேர்மருவு மீனாட்சி சுந்தரதே சிகன்புகழப் பெற் றுன் மன்னோ. (ந)

4099. மாமேவு மீனாட்சி சுந்தரதே சிகன்புகழ வாய்ந்த தன்றித், தேமேவு பலசுவையோ டின்னடிசி லூட்டியறந் திகழச் செய்யும், தூமேவு விநாயகமான் மடத்தையமு தூட்டியறந் தொலையச் செய்யும், பூமேவு புருகூதன் வசந்தமொக்கு மெனப்புகலேம் புகலே மன்னோ.

4100. வீங்குபுகழ் மீனாட்சி சுந்தரதே சிகன்புகழ விளங்கு செல்வர், தாங்குமடந் திருமயிலைப் பதியிலன்றே விநாயகமால் சமைத் திட் டானேற், றேங்குசிறு விலைக்காலம் வரவீழி மிழலையுறை தே வைப் பாடி, வாங்குவரோ சொல்லரசும் புகலியர்கோ வுங்காசு மறந்து மன்னோ. (ரு)

4101. ஆவணஞ்சேர் சிரகிரியெம் மீனாட்சி சுந்தரமா னறையுஞ் செல்வ, மாவணஞ்சேர் விநாயகவேண் மயிலைமடத் துற்றீசன் வஞ் சஞ் செய்தே, காவணஞ்சேர் திருநல்லூ ரமர்நீதி யார்மடத்திற் கரந்தாற் போலக், கோவணஞ்சேர் நிறையிடெனக் கூறிடான் றன் னிறையுங் கொடுக்கு மென்றே. (சு)

4102. முருகுகமழ் குவளையணி மீனாட்சி சுந்தரமான் மொழி யச் சீர்த்தி, தருகுணவி நாயகமான் மடமயிலை தனின்முனமே சமை த்தி ருந்தா, லுருகுமனக் கோட்புலியார் பெருங்கிளைஞ ருளந்துணி வுற் றுமாப திக்காம், பெருகுசெந்நெற் கிட்டவிரை யாக்கலிக்குப் பிழைப்பர்களோ பிழைத் திடாரே. (எ)

4103. நம்புமருண் மீனாட்சி சுந்தர வாரியன்புகழ நலமே வாய்ந்த, பம்புவள விநாயகவே டிருமயிலை யிற்செய்மடம் பண்டே யுண்டேல், வெம்பலிலா தரனடியார் பலருமுவந் தமுதுகொள விழைவார் கச்சூ, ரெம்பெருமா னூரார்க் கிரந்திட்டா னெனும்பழியு மெய்தி டாதே. ()

4104. இன்னுமொரு காலங்கம் பெண்ணுக்கத் திருமயிலேக் கெம்பி ராட்டி, மன்னுமுலேப் பாலுண்ட பிள்ளையுறின் விநாயகவேண் மடத்திற் சார்ந்தே, துன்னுபுகழ் மீனுட்சி சுந்தரதே சிகன்புகழ்ந்த துதியுங் கேட்டுப், பன்னுமடி யாரொடமு துங்கொள்ளு மன்புடைய பண்பான் மன்னே. (கூ)

4105. உளரளிவண் பொழிற்கூடற் பிரான்குறட்கன் றெழுந்த பசி யொருவ நல்குங், கிளரன்னக் குழியெனச்செய் விநாயகமான் மயிலேமடக் கீர்த்தி யெல்லாம், வளரருள்சேர் மீனுட்சி சுந்தரதே சிகன்றமிழால் வனைந்த மேன்மை, தளர்விலவ னடியருக்கு மடி யருக்கு மடியன்யான் சாற்றற் பாற்றே. (௧௦)

---

புதுவை, செயகாநாயகர் குமாரர் ம-ா-ா-ஸ்ரீ

**சவராயலுநாயகரவர்கள் இயற்றியவை.**

**விருத்தங்கள்.**

4106. சீர்திகழ் வேதா விநாயக வள்ளல் செகமெலாங் களிக்க நன் கியற்று, மோர்திகழ் மடம்போ லியைக்கநீ கண்ணி னியையுமோ வலதியைந் திடினு, நார்திக ழெம்மீ னுட்சிசுந் தரமா னற்றமி ழுணி யஃ தடைய, வூர்திக ழன்னங் கலைமக ளொழித்தொண் டவமுயற் றினுமுறுங் கொல்லோ. (௧)

**வேறு.**

4107. புவிமகளுக் கோர்திலகன் விநாயகமால் விருந்தர்விலாப் புடைக்க வூட்ட, அவிர்தரச்செய் சத்திரத்தை மீனுட்சி சுந்தரவென் னுசான் சொற்ற, கவிமுகிலீ யாரகமாஞ் சுரத்துமற முளைத்தீகை கனிய வன்னூர், செவியதர்சென் றிடுமிதனுக் கிணைசுரஞ்செல் லாமுகி லேச் செப்ப லாமோ. (௨)

4108. திருக்கிளரு மருச்சுனமா றவப்பயனைக் காட்டவந்த சேயாம் நல்ல, வுருக்கிளரும் விநாயகவேண் மயிலேதனி லினிதிழை த்த வொளிர்ம டத்தின், பெருக்கதனைப் புகழ்ந்துரைத்த மீனுட்சி சுந்தரநம் பெருமான் பாவைத்,தருக்குடனே கருதியன்றோ சுரர்புலவ ரெனும்பெயரைத் தரித்திட் டாரால். (௩)

4109. அத்திரம்போன் றொளிர்கணுமை நகிற்சுவட்டை யணிந் தநம்ப னடிப ராவு, மித்திரங்கூர் வியாசநகர் விநாயகமால் புரிந்தவெ ழில் விளங்கு மன்ன, சத்திரத்தி னெடும்புகழை மீனுட்சி சுந்தரநஞ் சான்றோன் பாவாற், சித்திரமா வியம்புதிறங் கண்டுதுழு முனிமலே வாய்த் திகைத்தான் மன்னே. (௪)

4110. பொன்னுடும் புகழ்தருவி நாயகவேண் மயிலேயிற்றான் பொலியச் செய்த,தென்னுடு சத்திரச்சீர் மீனுட்சி சுந்தரதே சிகன்றீம் பாவாற், பன்னுடும் புகழுறுவ லருமையறிந் தேபயிலும் பண்பாற் றெண்டை, நன்னுடு சான்றோரை யுடையதெனும் பழமொழிக்கு நலிவு றாதே. (௫)

4111. எண்கணற்கு மோர்கணற்கு மெட்டாத முக்கணன்வா ழிதைய னிந்த, மண்கணுற்றோர் தொழுதேத்தெம் மீனாட்சி சுந்தர மான் மயிலை தன்னில், விண்களிக்க விநாயகமால் கண்டசத்ரச் சீர்தமி ழால் விளம்பல் கேட்கத், தண்கடல்வா ழரிமருகன் முறச்செவி கொண் டிடினதனற் றகையார் சொல்வார். (சு)

4112. பார்புகழும் விநாயகவே டிருமயிலைச் சத்திரமாம் பாத்தி ரத்தி, லேர்குடிகொண் டோங்கிவளர் மீனாட்சி சுந்தரப்பே ரெங்க ளா சா,னூர்நனிகொண் டமைத்துவைத்த நற்பாவாஞ் செவியுணவை நயந் தே விண்ணோர், சீர்தருதெய் வதவுணவை யவியவியென் றேவெறுத் துச் செப்பு வாரால். (எ)

வே று.

4113. துதிமிகு வியாச நகாருச் சனவே டொல்புவிக் கருள்செய வளித்த-தூயநற் சேயாம் விநாயக வள்ள றேன்றுறச் செய்மடந் தரு வெண், டதிநெய்முற் பலவும் விராயவோ தனமுந் தடமலி சிராமலை தனில்வாழ் - தகுதிபெற் றொளிர்செந் தமிழ்முனி யென்னத் தக்கமீ னாட்சிசுந் தரமான், விதிமுறை யாவம் மடத்தினைப் புகழ்ந்து விருப் பினி லுரைத்ததீந் தமிழும் - வேதனைப் பயந்த மாதவன் பெற்றால் விதுரனில் லுற்றவோ தனமு, மதிநுதற் செவ்வாய் வெண்ணகைக் கருங்கண் மலர்மக ளமுதமூற் றெடுத்து-வழிதரு மொழியுங் கனவிலு மினிதா மதிப்பனோ மதித்திடான் மன்னோ. (அ)

நேரிசையாசிரியப்பா.

4114. சீர்மலிந் திலங்குஞ் செழுமணி மாடத்
தேர்மலி கருங்குழ லிளமுலை மடவா
ரலங்கொளி விரிக்கு மரமியத் திருந்து
வண்டிமிர் பூந்தொடை வார்குழ லவிழ
௫ வொண்டளிர்க் கரத்துறு வண்டினங் கவிப்ப
நுண்ணுசுப் பொசிய வெண்ணித் திலமென
முழுமதி முகத்தி லெழுவியர் வாட
வின்னிசை பாடித் துன்னுற வாடுறு
முத்த மழுத்திய கொத்தொளிக் கழங்கின்
௧௦ றண்ணிலாப் பரந்து விண்ணகத் தெழுந்து
சராநதி யகத்துறு மிரவல ரலர்த்தி
விளங்குறு மெழில்சேர் வியாசமா நகரோன்
றெய்வதக் கங்கைச் செழுங்குல திலகன்
றன்னிடத் தென்றுந் துன்னுறு வறிஞர்
௧௫ குறிப்பறிந் திருநிதி வெறுப்ப வளித்துக்
கேட்டபின் வழங்குபொன் னாட்டுறு தருக்கள்
புறங்கொடுத் திரியப் பிறங்குறு காத்தா
னருச்சன மிசை னாற்றிய பெருந்தவப்
பாற்கட லதனிற் பனிமதி யென்னத்

உ0 தோற்றிய புனிதன் றருகளில் குணகரன்
றானஞ் சுரந்து தழையருள் வாய்ந்து
தூக்கு பாவலர் துதிக்கை பெற்று
வேண்டுறு வார்தம் விக்கினந் தொலைத்துப்
பூண்டகு மங்கதம் பொலிபுயத் தணிந்து
உரு செம்மையார் மணிநிறஞ் சிறக்கப் பூண்டு
மேவலி னுமாபதி விருப்பினி லளித்த
விநாயக மூர்த்தியை விழைதர நலஞ்சேர்
விநாயகப் பெயரை மிளிரப் புனைந்தோன்
றேமலர் நெட்டிதழ்த் தாமரை முனியும்
ங0 அசும்புதே னூற்றும் பசுந்துழாய் முகிலும்
பன்னருஞ் சுரரு மின்னமுங் காண
மால்விடைப் பாகவன் பாலமர் மலைமக
ளுணைமுலைக் குடங்கள் சுரந்த தீம்பான்
மணக்குஞ் செவ்வாய் மாமறைக் குழவி
ஙரு யென்புபெண் ணுக்க வினிதெழுந் தருள
வருந்தவம் புரிந்த திருந்தெழின் மயிலையி
னறங்குது கலிப்பப் பிறங்குற வியற்றிய
வன்னசத் திரத்தின் றுன்னுசீர் யாவும்
ஓண்டளிர் பொதுளிய தண்டலை முகட்டுப்
சஂ0 பூந்துகண் மூழ்கிப் புதுநிறம் வாய்ந்து
தவழ்ந்தினி திருக்குந் தழைமுழு மதிமேன்
முதிர்கனி யென்று முசுக்கலை பாயு
மின்னன வளம்பல துன்னுறக் கொண்டு
தேசுற வொளிருஞ் சிரகிரி வாண
சரு னற்குண மேன்மை நல்லொழுக் குடைமை
பொற்புறு வாய்மை பொலிவுறு தூய்மை
புண்ணியஞ் சீலம் பொறைநிறை தேற்ற
முண்ணிறை யறிவிவை யொருங்கு திரண்டு
வந்தென வொளிரு மாதவப் புனித
ரு0 னிலக்கண விலக்கிய மினிதுற வெவர்க்குங்
கலக்க மறப்புகல் கரிசில் குணாளன்
றன்னிடைக் கற்பவர் மன்னவைக் களத்து
ளென்னையு மொருவனுத் துன்னுவித் தருளி
மெய்யருள் சுரந்த மீனாட்சி சுந்தர
ருரு நல்லா சிரிய னனியுள மகிழ்ந்து
கன்னலும் பாகுங் கனிசுவை யமுதும்
முக்கனி யிரதமு முதிர்சுவைத் தேனுங்
கைத்திட மதுரங் கனிந்தூற் றெடுத்துப்
பாய்தரு நன்னலம் பரவுசெந் தமிழா

கூ0 விலகுறு செய்யு ளீரைம் பதாக
வொருங்குநா வலர்க ளுவப்புற்
றிருங்களிப் பெய்த வினிதியம் பினனே. (கூ)

---

## குப்புமுத்தாபிள்ளையியற்றியவை.

### விருத்தம்.

4115. துறவற முனிவர் யாவரும் விருந்து சூழ்ந்துண மயிலைமா நகரி, லறைபுக ழோங்கு விநாயகச் செம்ம லமைத்தநன் மடத்தழ கருமை, முறையுறக் குருமீ னாட்சிசுந் தரமான் மொழியுநற் றமிழ மிழ் தினுக்குக், குறைவறக் கேட்குஞ் செவிகளுக் கினிமை கொடாத விண் ணமுதிணை யாமோ. (க)

வேறு.

4116. வியனுறுவி யாசநகர் விளங்கவுதித் தொளிரும்விநா யக வேள் விண்ணோர், நயமுறுநன் மொழிநவின்று பெருவிருந்து தனக் கருத்த நன்கு தேர்ந்து, புயல்வளஞ்சேர் மயிலைதனில் விருந்தளிக்கச் செய்மடத்தின் பொங்கு சீர்த்திப், பயனனைத்து மீனாட்சி சுந்தரதே சிகனன்றிப் பகர்வோர் யாரே. (உ)

வேறு.

4117. மாநிலத் தெவரும் பசியெனும் பிணியால் வருந்துவ தற வரு மருந்து, தானிது வெனவூண் சார்தர மயிலை தனில்விநா யக முகில் சமைத்த, வூனமின் மடத்தின் பெருமைமற் றோரா லுரைத் திடத் தகுவதோ வெனையாண், ஞானநன் மணிமீ னாட்சிசுந் தரப்பேர் நாவல னவினுக் கலதே. (ந)

4118. எண்டிசை பரவுஞ் சீர்விநா யகவே ளியற்றுசத் திரத்தி னைப் புகழ்ந்து, தண்டமிழ்க் குருமீ னாட்சிசுந் தரமான் சாற்றுமின் றமிழ்நறு வருந்தி, யண்டர்மேற் புகழ்ந்து கூறுபே ரொலியை யவ னியி லுறைபவர் யாருங், கொண்டல்செய் முழக்க மென்றுண ராது கூறுவர் வஞ்சனை யின்றே. (ச)

4119. கற்பக மனைய கொடைவிநா யகவேள் கண்ணகன் மயிலை யிற் கதித்துப், பொற்பகம் பொலியப் புரிதரு மடத்தின் புகலருஞ் சீர்த்திகண் முழுதும், விற்பன னெழின்மீ னாட்சிசுந் தரமெய்த் தேசி கன் விளங்குதீந் தமிழா, னற்பக லவன்போல் விளக்கினன் புலவோர் நயந்துகொண் டாடவுண் மகிழ்ந்தே. (ரு)

4120. இந்திர நகர மெனவளம் பொலிய விலகுறு மயிலையம் பதியிற், சிந்தையுண் மகிழ்ந்து விநாயகக் குரிசில் செய்மட வளமெ லாந் திரட்டி, முந்துதீந் தமிழின் மொழிந்தனன் புலமை முதிருமீ னாட்சிசுந் தரப்பே,ரெந்தையன் னான்சீ ரிருங்கடற் புவியில் யாவர்க்கு மியம்புத லரிதே. (சா)

4121. திருமகள் குலவு மயிலைமா நகரிற் றெய்வத்தச் சனும கிழ் சிறப்ப, மருமலர் மணக்கும் புயவிநா யகவேண் மறுவிலா தமைத் தசத் திரத்தைக், குருமணி யருண்மீ னாட்சிசுந் தரப்பேர்க் குரவனின்

னமுதமூற் றெழுப்பாய், தருபசுந் தமிழாற் சாற்றிய திறத்தைச் சாற் றிட வல்லனல் லேனே. (எ)

வே று.

4122. செல்வமலி திருமயிலைப் பதியில்விநா யகச்செம்மல் செ ழிக்கு மன்பு, மல்கியமைத் திடுமடத்தின் வளம்பலவு முளமகிழ்ந்து மன்னு மின்ப, நல்குதமிழ்த் தேசிகனெம் மீனாட்சி சுந்தரப்பேர் நாத னுவாற், பல்கவுரைத் தருளருமை சேடவிசே டனும்பணிக்கற் பாற் றன் றாமே. (அ)

வே று.

4123. பயில்பவ ரெவரும் பண்ணவ ருலகம் பயின்றிட நினைத் திடா திருக்க,மயிலையம் பதியில் விநாயகத் தூயோன் வகுத்திடு முறை த்தரு மடத்தின்,செயல்பசுந் தமிழிற் செப்புமீ னாட்சி சுந்தர தேசிகன் சீர்த்தி,நயமுற வெவர்க்கு முலகெலாம் பரவி நன்குற நிலவுவ தியல்பே.

---

திருவிழிமிழலை - கம்பராமாயணப்பிரசங்கம்
சாமிநாதகவிராயரியற்றியவை.
நேரிசை ஆசிரியப்பா.

4124. பொன்னார் கமலப் பூவார் வாவியில்
வரிச்சிறை யளிமூரல் கருப்புயல் விலோத
முருந்துறழ் மூரன் முகிணகைச் செவ்வாய்க்
கருந்தட நெடுங்கட் கவினுறும் வேய்த்தோட்
௫ பருமுலைச் சிற்றிடைப் பணவர வல்குற்
றெரிவையர் புனலிற் றிளைத்தினி தாடக்
கண்ணிணைக் கஞ்சிய கயலினம் வெரீஇ
விண்மிசை வெடிபோய் விளங்கு பழுக்காய்த்
தாற்றிளங் கமுகின் றலையிறச் சாடித்
௧௦ தலைவிரி யிலாங்கலித் தருவின் முப்புடைக்
குலையினை யுதிர்த்துக் குலவுவிண் மணியி
னிடஞ்சால் கொடிஞ்சி யெழிலுறுந் திகிரித்
தடந்தேர் பூண்ட தறுகட் கலின
மரகத நிறத்துக் குரகத மருட்டித்
௧௫ தரளத் திரளைத் தண்டிரை கொழிக்கும்
விண்ணதி கலக்கி மேலெழீஇ யும்பர்த்
தருவிடைப் புக்குத் தண்ணிறால் கிழிப்பப்
படுதேத் துளியொடு பாரிடை யிறங்குஞ்
செழுநீர்ப் பண்ணைத் திருநா டுடுத்த
௨௦ வசையில் வியாசு மாநக ரதனிற்
றேனு மணியுந் திப்பிய நிதியுந்
தருவுந் திரண்டோர் தனுவெடுத் தென்ன
வரிச்சுரும் பரற்று மாலையந் தோளா
னருச்சுன வேள்செ யருந்தவப் பேற்றா

௨௫ ளொலெட் டறமு நற்குண மனைத்துந்
தகையுங் கல்வியுந் தவறின் மானமு
மடக்கமு மேன்மையு மருளு மீகையும்
வாய்மையுந் தூய்மையு மறுவில் சீலமும்
புலமையுங் கடவுட் பூசையு நேசமும்
௩௦ வண்மையு மினிய மாட்சியும் யாவும்
புண்ணிய வடிவமாய்ப் பொலிவுற வந்தோன்
மணியணிச் சுடிகை வாண்முள் ளெயிற்றுப்
பகுவாய்ப் பஃறலைப் பாப்பர சுச்சிப்
பொறையாம் புடவியிற் புகலருஞ் சீர்த்தித்
௩௫ தருவி னிழலுறீஇத் தானம் புரந்து
மாநிதி மரீஇ வச்சிர மேந்திப்
பொற்புறு மிவையாற் புரந்தரற் பொருவுங்
கற்பொரு தோளான் கருணை வாரிதி
வெண்மதி வதன விநாயகக் குரிசில்
௪௦ வெயில்செலா வெயில்சூழ் மயிலையம் பதியிற்
பல்லுயிர் களிக்கப் பண்புற வியற்றிய
சத்திர தருமந் தன்னைப் புகழ்ந்து
நற்றமிழ்ப் பாவா னலனுறப் புனைந்தான்
றொல்காப் பியமும் பல்காப் பியமுமா
௪௫ மிலக்கண விலக்கிய மெனும்பெருங் கடலிற்
றிளைத்தினி தாடுஞ் செந்தமிழ்க் குஞ்சர
மடிமையேன் போல்வார் மனத்திரு ளகல
வருளொளி விடுத்துநல் லறிவை விளக்க
வந்த ஞான வரோதயப் பருதி
௫௦ தென்பான் மலயத் திருமுனி யிருந்தாங்
கன்பார் வடபாற் கருண்முனி யானோன்
சைவசித் தாந்தத் தனிப்பெருஞ் சாகரம்
பொய்ம்மை யில்லாப் புலவர் சிகாமணி
கல்லாக் கலராங் கரிகளை வெல்ல
௫௫ வல்ல வீர வாளரிக் குருளை
கங்கைச் சடையெங் கண்ணுதற் பெருமான்
வடாது கைலையாம் வரையினை யொரீஇத்
தெனாது கைலையாஞ் சிரகிரி யதனிற்
றமிழ்க்கர சியற்றத் தான்வந் ததுபோற்
௬௦ றானாட்சி யாகிய தலைவன்
மீனாட்சி சுந்தர விமலனா வலனே. (க)

விருத்தம்.

4125. திருமருவு கஞ்சப் பொகுட்டிற் பொலன்சிறைச் செஞ் சூட் டனங்குதிப்பச் - சேவினம் வெரீஇக்கவரி நாகின் குடம்புரை செருத்தலின் முட்டவொழுகும் - தீம்பா லுவட்டெழீஇக் கரையிறச்

சாடிச் செழுந்தடம் பணைநிரப்பிச்-செந்நெலை வளர்க்குமயி லைப்பதியி லின்பஞ் சிறந்தனை வருங்களிக்கு,மருமல ரலங்கலணி மார்பன் விநா யக வரோதயன் சத்திரத்தின் - மன்னறப் புகழுமற் றதனைத் திருச் சிரா மலையில்வா ழெந்தை யருள்சேர் - மாட்சிமை விளங்குமீ னாட்சி சுந் தரமுகில் வடித்தினி தெடுத்து ரைத்த - வண்டமிழ்ப் பனுவலின் சொன்னயப் பொருணய வனப்புஞ் செவிக்க ணோர்ந்து, பருமணி யிமைக்கும் பருஉச்சுடிகை நெட்டுடற் பஃறலைப் பாந்தட்பொறைப்- பாரிற்றிகழ்ந்தபல் லுயிர்கண்மிடி யாங்கொடும் படருருவண்ணந்தரப்- பண்ணவர் தமக்கர சியற்றுமும் மதவெண் பகட்டிறை தனுதுலகு பொன்-பாலித் திடும்பஞ்ச தருமணி யருஞ்சுரபி பதுமநிதி முதலிரு ந்து,மருமைமிகு நல்லறம் புரிகிலே நற்புக ழுருந்தமிழ் வியப்புணர்வதற்-காயிரங் கண்பெற்ற வஃதுபோற் செவிகளோ ராயிரம் பெற்றில்மெனு-வனுருற்று காணி வெளி வாலஞ்சி வானகத் தம்பர்க் காந்தனனெனி - னலகில்மற் றிவர்கடஞ் சீர்த்தி ப்ரதாபத்தி னளவினை யுரைப்ப தெவனோ. (௧)

வேறு.

4126. சீர்கொண்ட வியாசநகர் தன்னில்வா ழதிகருண தீரனெய் யர்ரசு குணன்-திருமா னிகர்த்திடு மருச்சுனக் குரிசிறன் செய்தவத் தாலுதித்த-கார் கொண்ட கரதல விநாயக மகிபனற் கவினுறும் மயிலை நகரிற்-கண்பெற வியற்ற றச் சத்திரப் பெருமையைக் கவியினற் புனைதல் செய்தா,னீர்கொண்ட வேணிக் கறைக்கந் தரத்தெந்தை நிலவுஞ் சிராமலையிடை - நிலைமைசேர் செந்தமிழ்ப் புல மையை நடாத்திநெறி நீதிசெய வந்தகோமா, னேர்கொண்ட தண்டா மரைத் திரு வடிக்கடிமை யென்னஎனை யாண்ட பெம்மா-னிருநிலம் பரவுமீ னாட்சி சுந் தரனென்னு மினியகா வலவ ரேறே. (௨)

வேறு.

4127. மருத்திகழ் கமல முகத்தின ருலவு மாடநீ டிரிசிரா மலையின்- வழுத்தரும் புகழ்மீ னாட்சிசுந் தரமால் வஞ்சனே னெஞ்சகச் சிலையிற்,குருத்தினி தலருந் தாமரைத் தாளன் குரைகட லமுதினுஞ் சீர்ப்பக் - குவலயத் தவர்தஞ் செவிக்கமு தென்னக் கூறுநற் றமிழினற் புனைந்தான், திருத்தகு வியாசச் செழுநக ரதனிற் றிகழ்தரு மருச்சுனக் குரிசில் - செய்தவ மனைத்துந் திரண் டென வுதித்த தேசுறும் விநாயகபூபன், றருத்திகழ் மயிலைப் பதியிலெவ் வுயி ருந் தழைத்துளங் களித்திட வியற்று-சத்திர பதிகள் வியக்திடுந் தரும சத்திரப் பெருமையைப் புகழ்ந்தே. (௩)

4128. மாநிலத் துறுநல் லுயிர்கடம் முளத்தின் மடமையாம் வறுமையி னுழலா - வண்ணமெண் ணருநற் றமிழ்ப்பெருங் கடலின் மன்னுநா வெனும் வரைநிறுவி, மேனிலை தரும்பே ரறிவெனும் வடத்தை வீக்கிமென் சொற் பொருண் முன்னு - விண்ணவர் தம்மான் மதித்தெடுத் திஞ்சி விளங்குசீர் வியாசமா நகர்வாழ், வானிகா செங்கை விநாயகேந் திரனேர் மயிலையி லியற்றுசத் திரத்தின்-வண்புக முமுதைக் கவியெனுங் குடத்தின் மாண்புற முகந்தினி தளித் தான், றாநிலாத் தவமுஞ் சிரகிரி யதனிற் றுளவணி யலங்கலாற் பொருவுஞ்- சொல்லரும் புகழ்மீ னாட்சிசுந் தரப்பேர்த் தூயநா வலர்சிகா மணியே. (௪)

4129. தாரணி தனிற்பல் லுயிர்களோ ரின்பத் தனையடைந் திடற்கரி தென்ப - தவத்தவர் பரவு மயிலையம் பதியிற் றனிவிநா யகமுகி லியற்று, மேரு

றுத் தரும சத்திரத் தன்னு லெழிலுடற் கின்பமு மதனோ-டிருள்புரை களைக்கத் தரப்பணிப் பணிவா னிருமதி வெண்பிறை யறுகோ, டாரணி சடிலத் தெந்தை வீற் றிருக்கு மருட்சிரா மலையில்வா ழெம்மா - னருந்தமிழ்க் கிறைமீ னாட்சிசுந் தரமா லவன்புகழ் தனைவிரித் துரைத்த, கார்பொருங் கவியா னற்செவிக் கின் பங் கதித்திடக் களிப்பர்க ளென்னிற்-கருதுமற் றிவர்தம் பெருமை வெண்டிரை சூழ் கடலிடத் துரைக்குமா றெவனோ. (ரு)

## வேறு.

4130. தெருளார் தமிழ்க்குச் சிரமளித்த செல்வக் குமுண னங்கர்பிரான்
சிமையத் தடஞ்சூ ழிமையவரைச் சிறுவிக் கொருபா லினிதளித்தோ
னருளா ரரிக்குப் புவியளித்த வடன்மா வலியின் கிவர்கொடையி
லரைக்கா லொருகா லரைமுக்கா லாகுமென்பர் முழுக்கொடையிற்
றருவார் கரத்து விநாயகவே டாவென் றுரைக்குங் குணசீலன்
றண்ணார் மயிலை நகரிலறந் தழைக்க வியற்று சத்திரத்தின்
திருவார் சிறப்பு நற்றமிழாற் றேவர் வியப்பச் செய்தனனா
றெரிமீ னாட்சி சுந்தரதே சிகநா வலர்கள் சிகாமணியே. (சு)

## வேறு.

4131. மருக்கு லாவிய மலர்த்தடந் திகழ்திரு மயிலையம் பதிதன்னிற்
றிருக்கு லாவிய விநாயக முகிலுயிர் செழித்திட வினிதாற்று
மிருக்கு லாவறச் சத்திரத் தின்னிய லிசைத்தனன் றமிழான்முத்
தருக்கு லாவமு தொப்பமீ னாட்சிசுந் தரனெனும் பெரியோனே. (எ)

## வேறு.

4132. அருமறை புகழு மயிலையம் பதியி லருள்விநா யகப்பெயர் வள்ள
றருமசத் திரத்தின் புகழெனும் பைங்கூழ் தரணியிற் றழைத்தினி
துரிசின்மீ னாட்சி சுந்தரப் புயனற் றாத்தமி ழாங்கடல் பருகி[தோங்கத்
திருமைசே ருலக மின்புறக் கவியென் றியம்புமா மாகிபெய் ததுவே.

## வேறு.

4133. திங்க ளுலவு மணிமாடந் திகழு மறுகிற் பரிதிதடந்
தேரைப் பொருவ விளைஞர்கடாஞ் சிறுதே ருருட்டுந் திருமயிலைத்
துங்கத் தலத்தில் விநாயகவே டகேடீர் தரும சத்திரத்தின்
றூய பொலிவு மலப்புகழ்ந்து துயர்மாற் றிடுஞ்சீர்ச் சிரகிரியிற்
றங்கும் புகழ்நற் செந்தமிழ்க்குத் தலைமைப் புலமை நடத்துபெருந்
தகைமீ னாட்சி சுந்தரமா றமிழு மோக்கக் கேட்கவன்றோ
புங்க முறுகட் செவியாகப் புரிந்தா னயனென் றுளக்களிப்பாற்
பொறையென் றறியா துலகேந்திப் பொலிந்தா னுரகப் புரவலனே.

## வேறு.

4134 இருமையிலைத் துவசனைகே ரெழில்விநா யகமுகினல் லின்ப மேய,
இருமையிலை நகரினிற்பல் லுயிர்க்களிக்க வியற்றறச்சத் திரச்சீர்க் கொப்புப்,
பெருமையிலை யுலகிலெனப் பெருந்தமிழாற் புனைந்தனனெம் பெம்மான் சொன்
னைப், பொருமையிலை யுவந்தவனோர் மீனாட்சி சுந்தரப்பேர்ப் புலவன் றானே. ()

## தாராநல்லூர்

## வீரசர்மிநாயகரியற்றியவை.

### விருத்தம்.

4135. திருவளர் வியாச நகரருச் சுனமா நிகழ்தவத் துதித்தமா தனவா, னுருவளர் விநாய கேந்திர னென்னை யொண்டொடி யாக்கிய வொப்பின், மரு வளர் மயிலைப் பதியினுற் குலத்தோர் மாண்பினுக் கேற்றவா றினிய, குருவளா ரன்ன சத்திர நன்றுக் குலவிட வியற்றினன் மாதோ. (க)

4136. அவ்வியன் முதலா வறஞ்செயும் வளனவ் வறப்பய னியாவுந் தெண் டிரைநீர், கௌவிய வுலகோ ரறிதர வினிய கவியொரு நூற்றினு லிசைத் தான், செவ்விய மதுர மொழுகுதீந் தமிழிற் றிரிசிராப் பள்ளிவாழ் புனித, னவ் விய மடியார்க் கறுத்தருள் புரிமீ னுட்சிசுந் தரகுரு பரனே. (உ)

---

## அப்பாவுப்பிள்ளையியற்றியவை.

### விருத்தம்.

4137. வானளாஞ் சோலைசெறி வியாசநக ரருச்சுனவேண் மைந்த னுன
பானலார் தொடைவிநா யகபூபன் றிருமயிலைப் பதியி னன்று
மோனமா தவர்பிரம சாரிவா னப்பிரத்தன் முதன்மற் றுள்ளோர்
மானமா தரம்பொலித னன்றெனச்சத் திரமினிதா வகுத்தான்மன்னே.

4138. கனம்பொலிதென் றிரிசிராப் பளிவளர்மா தவனருநூல் கற்றோர் காப்பட், டனம்பொலித லெனவளரு மீனுட்சி சுந்தரமான் றரணி மீதிற்,கனம் பொலியச் சத்திரத்தின் பெருமையையீ ரைம்பஃதாங் கவிசெய் தானன், மனம் பொலிவு ளவர்க்கும்வஞ்ச மனம்பொலிவு ளவர்க்குமற மருவ மாதோ. (உ)

---

## அழகிரிசாமிநாயகரியற்றியது.

### விருத்தம்.

4139. பங்கய வாவி செறிதரும் வியாசப் பதிவிநா யகமுகில் பளகின்
மங்கலம் பொலிதென் மயிலையி லினிய மாண்புறச் செய்தசத் திரத்தி
னங்கமு மதன்க ணமையுநல் லறனு மவனியோ ருணர்தரச் சொற்றான்
றங்கரற் குணமீ னுட்சிசுந் தரனென் றோமறுத் தருள்செய்தே சிகனே.

---

## கோவிந்தசாமிபிள்ளையியற்றியது.

### விருத்தம்.

4140. பகலவ னிரதப் பரிசுழன் மாடப் பந்திசேர் வியாசமா நகரி
லிகலற விளங்கும் விநாயக பூப னெழிற்றிரு மயிலையம் பதியிற் [யப்
சகலரும் புகழ்ந்துண் டேக்களிப் படையத் தருகையி லார்சமழ்ப் படை
புகலறு மன்ன சத்திர னன்கு பொற்புற வியற்றினன் மாதோ. (க)

கட்டளைக்கலித்துறை.

4141. பூதர வில்லி மகிழ்மயி லாபுரி யிற்புலவர்க்
காதாஞ் சேரப் புரிதரு மச்சத் திரச்சிறப்பை
மாதாஞ் சேருல கெல்லா மறிய வகுத்தனனால்
சீதர னேரெங்கண் மீனாட்சி சுந்தர தேசிகனே. (உ)

## முருகப்பிள்ளை இயற்றியவை.

விருத்தம்.

4142. குளநாடு முளரிதிகழ் மயிலைதனில் விநாயகமால் குலவு சோழ [ஞ்சக்
வளநாடு சோறுடைத்தென் றிடுமொழிவெ ளிடச்செய்த மடமென் னெ
களநாடு கழற்குவன் மீனாட்சி சுந்தரமான் கவிதைத் தேனோ
ளேநாடின் னமுதருத்த லாற்றெண்டை நாடேசோ றுடைய தாமால்.

4143. புண்ணியமெல் லாமொருங்கு திரண்டனைய விநாயகவேள் புரிந்தி யாரு, மெண்ணுமயி லைப்பதியி லியற்றுசத்தி ரச்சிறப்பை யெளியேன் றீமை, மண்ணியசீர் மீனாட்சி சுந்தரதே சிகன்றமிழால் வனைந்தபாவை, யுண்ணமு தென் கோகனியென் கோபாகென் கோயாதென் றுரைப்பேன் மன்னோ. (உ)

---

## இராமசாமிப்பிள்ளையியற்றியவை.

விருத்தம்.

4144. தெண்டிரைசூழ் புவிமகட்குத் திலகமெனுந் திருமயிலை சிறக்க வோங்கு, மெண்டிசையும் புகழும்விநா யகபூபன் றனதுளத்தி லிசைந்த வன்பாற், கண்டவறச் சத்திரத்தின் மேன்மையெலாம் பலபாவாற் கருணை கூர்ந்து, மண்டலத்தின் மீனாட்சி சுந்தரவா ரியன்றமிழால் வகுத்தான் மாதோ. (க)

4145. சுந்தரஞ்சேர் மாதர்மட லெழுதுபுய சயிலனருச் சுனவே ளீன்ற
கந்தமலர்த் தொடையணிவி நாயகபூ பதிமயிலைக் கண்வ குத்த [த்தச்
வந்தவறச் சாலையதன் றகைமையெலாம் புலவர்களிப் படைந்து வாழ்
செந்தமிழான் மீனாட்சி சுந்தரதே சிகனினிது செப்பி னானால். (உ)

4146. மங்கலஞ்சேர் திருமயிலை நகரதனி லருச்சுனபூ மான்முன் செய்த
துங்கமிகு தவப்பயனா யுதித்தவிநா யகமகிபன் சூழிப் பாரிற்
றங்கியவெங் கலியகலக் கண்டவறச் சாலையெழிற் றகைமை யாவும்
புங்கமிகு மீனாட்சி சுந்தரதே சிகன்றமிழாற் புனைந்தான் மன்னோ. (ஈ)

---

## பாலகுரு உபாத்தியாயரியற்றியது.

விருத்தம்.

4147. செங்கமலை வளர்மயிலைப் பதியில்விநா யகமுகில்கா சினியி னாளும்
புங்கமுறு முயிர்தழைக்கப் புரிந்தவறச் சத்திரத்தின் புகழை யார்க்கு
மங்கையிலா மலகமென வருங்கவியாற் புகழ்ந்தனனல் லறிஞ ரேத்துந்
தங்கியசீர் மீனாட்சி சுந்தரதே சிகனெனும்பேர்த் தமிழ்ச்சிங் கேறே. ()

---

## நரசிம்ம உபாத்தியாயர் இயற்றியது.

### கட்டளைக்கலித்துறை.

4148. வான்புகழ் சீர்த்தி விநாயக வேண்மயி லைப்பதியிற்
றான்புரி சத்திரச் சீரா மரதனத் தன்னையின்சொ
லான்மலி யின்றமிழ்ப் பொன்னிற் பதித்தணி யாவமைத்தான்
றேன்பொழி தார்ப்புயன் மீனாட்சி சுந்தர தேசிகனே.

---

## மருதையாப்பிள்ளை இயற்றியது.

### விருத்தம்.

4149. திக்கனைத்தும் புகழ்வியாச நகர்வாழ்வி நாயகவே டிருக்கு லாவுஞ், செய்க்கமல மலர்மயிலைப் பதியிலியற் றியவறச்சத் திரச்சீர் சொன்ன, தக்கபுகழ் மீனாட்சி சுந்தரதே சிகன்றமிழைத் தானத் தோக்கு, மிக்கவமு தென்னினது கடைப்பட்ட தென்றுரைப்பார் மேன்மை யோரே.

---

## வயித்தியலிங்கபத்தர் இயற்றியவை.

### விருத்தம்.

4150. செழுமலர்ப் பொழில்சூழ் வியாசமா நகர்க்கோர் திருவென வளர் விநா யகவேள், பழுதினல் லறங்கள் பரவுவான் மயிலைப் பதியிலொண் சத்திரம் பகலோ, னெழுபரி யினமு மீகையில் வஞ்ச வீனர்வன் னெஞ்சமுஞ் சுழலத், தழுவுமீ கையர்த மனமுமா தவர்கெஞ் சமுமகிழ் வுறவியற் றினனே. (க)

4151. சீர்மலி யுலகுக் கொருமுக மாகுந் திரிசிர புரவிறை திறம்பா
கார்மலி யன்ப ருளவிரு ளகற்று ஞானவா தித்தனற் குவளைத்
தார்மலி நம்மீ னாட்சிசுந் தரமான் றாழ்விலச் சத்திர வியல்பை
யேர்மலி தமிழா லின்கவி யொருநூ றிசைத்தன னன்பினின் மாதோ.

### வேறு.

4152. மாமேவு குமுதத் தளிக்குல முலாவல்செழு மயிலையர் கட்குடைத்து - மாசிறீ விழனிகர் தடஞ்செறி வியாசநகர் வளருஞ் சுனமாதவன், பூமேவு செய்தவத் தறம்விநா யகவேள் பொருந்துதிரு மயிலைதன்னிற்-புலவர் முத லாக்தவர்க ளூட்களிப் பெய்திப் புகழ்ந்திட வறங்குலவுமோர், கோமேவு சத்திரங் கண்டவர் கணைத்திறை கொளும்படி யியற்றினனதன் - கோதில்புகழைத்தமிழி லொருநூறு செய்யுளாற் கூறின னலஞ்சிறந்த, தூமேவு தன்னடி யரொடுகோயி னேனையுந் தூரிசறச் சேர்த்தருள்செயுஞ்-சுகுணசிர புரமேவு விமலவெம் மீனாட்சி சுந்தரப் பேர்க்கு ரவனே. (உ)

4153. சீர்கொண்ட புலியின்முக மெனும்வியா சப்பதி சிறக்குந மருச்சன முகில் - செய்தவத் தால்வந்த மணிவிநா யகமால் செழிக்குமயி லைப்பதியினிற், கார்கொண்ட முடியமைத் தன்னசத் திரநன்கு காணச் சமைத்ததன்கட் - கற்றவரு நற்றவரு மற்றவரு முள்ளங் களித்துண வறஞ்செய்வளனை, பேர்கொண்ட

கதிகுலச் சலதிவக் தமரர்மிக் கேத்துசிர ஸிரபுநித்தன் - பெஞ்சலின லடியவ குளத்தஞா னத்திமிர மிரியச் சவட்டி யருள்செய், தார்கொண்ட சிவஞான பானுமீ னுட்சிசுக் தாகுரு பான்றாணியோர்-தம்முளத் துவகையுற வினியகவி ஞாறெனத் தமிழினுற் சொற்றனனரோ. (௪)

---

ஆறைமாநகர்

## ஐயாசாமி முதலியாரியற்றியது.

### விருத்தம்.

4154. புவனமூன் றேத்தும் வியாசர்பா டியில்வாழ் புண்ணிய னருச்சன வேள்செய்-புனிதமா தவத்தில் வந்தவன் கவிஞர் போற்றுறுங் கங்கையங் குல த்தோன், சிவபிரான் கமல வடியிணை நாளுஞ் சிந்திக்கு மடியரைப் பணித்து-திருவருள் பெற்றோன் கொடையினிற் குமுணன் திகழ்புகழ் விநாயக பூபன், நவமலர்ச் சோலை புடைவளர் மயிலை நகரினி லெவர்களு முய்ய - நன்கமை தரும சத்திரத் தினுக்கோர் கற்றமிழ் மாலைசொற் றனனால், பவமிலார் துதிக்குந் தமிழ்க்கட லுண்டு பாவல ரெனும்பயிர் தழைக்கப் - பனுான்மழை பொழிமீ னுட்சிசுந் தரப்பேர் படைத்திடு கருணைமா முகிலே. (௫)

---

பங்களுர்ச்சதுர்வேதசித்தாந்தசபையைச்சார்ந்த

தருமத்தமிழ் வித்தியாசாலை முதலுபாத்தியாயராகவிருந்த

காஞ்சிபுரம்

## இராமானுசபிள்ளையியற்றியது.

### விருத்தம்.

4155. கடலெனத் தோன்று மலர்பொலி யகழுங் காமரு நேமிநே ரெயி லுங்-கவின்றபா தலமும் வானமு நண்ணுங் கனம்பெறு வியாசர்பா டியினுன்-கங்கையங் குலத்திற் படோததி காப்பட்ட கலைமதி யெனவவ தரித்தோன் - கலை புண ரறிஞர் புகழுருச் சுனமால் காதல னெவர்க்குமெஞ் ஞான்றுந், திடமுற வளித்தோர் பருவத்தே யளிக்குஞ் செழுமுகி லினத்தைவெங் கண்டோன் - சேல் விழி மடவார் கிழிவரைத் துவக்கச் சிறப்புறு சுந்தர வுருவன்-திகழ்தரு குவளை மாலையார் மார்பன் திருவளர் வேங்கட முடையான் - செப்பருமேழிப் பதாகை யான் தவளச் சித்தரம் பரிகுடை புடையான், மடமிலார் வதியுந் தொண்டைநா டையான் மாசறு சவளதோ ரணத்தான் - வயங்குறும் பாலி நதியினு னென் றும் வார்முர சொலிக்கும் வாயிலினுன், மாசுனை கழங்கா ளவினன் றேசு மலி விரா யகப்பெயர்க் கோமான் - மன்னுறு தரும சித்திய மென்னு மனத்திடை நன்னினி தாய்ந்தே, யடலுறு மயிலைப் பதியினி லற்பி னமைத்தசித் திரச்சத்தி ரத்திற் - கருஞ்சிர புரஞ்செய் மாதவத் துதித்த வண்ணல்செக் தமிழ்க்குயர் கந்து-னவிர்பதி பசுபா சப்பொருண் முடிபை யடியடைத் தவர்க்கரு ளே-னறஞ் செய்மீ னட்சி சுந்தரப் பெயர்கொ ளறிஞனோர் மாலைசாற் றினனே.

---

## மெய்யூர்

## பொன்னம்பலநாயகரியற்றியது.

### விருத்தம்.

4156. மணிவளர் புவிக்கட் டொண்டைநன் ஞட்டில் வயங்கிய வியாசர்பா டியினுன் • மலிபுக ழருச்சு னப்பெயர் மால்செய் மாதவத் துதித்தவன் குவனே, யணிவளர் புயத்தன் விநாயக வள்ள லற்பொடு மயிலேயி லமைத்த • வருமைசேர் தன்ம சத்திரத் திணுக்கோ ரவிர்த மிழ் மாலேசொற் றனனுல், கணிவளர் கூந்தற் பரையொடு பரமன் களித்துவாழ் திரிசிர புரியான் • கங்கையங் குலத்தான் செந்தமிழ் வாரிக் கரைகண்ட நாவலர் பெருமான், றிணிவளர் சைவச் செழு மதம் விளங்கத் திருவவ தாரஞ்செய் பெரியோன் • செய்யமீ ஞட்சி சுந்தர நாமந் திகழ்தரப் பெற்றசெவ் வேளே.

---

காஞ்சீபுரம், பாரதப்பிரசங்கம்

சாமையரென்கிற

## இரகுநாதையரியற்றியது.

### விருத்தம்.

4157. பொன்னனேய மலர்க்கடுக்கைச் சடிலவா னவன்போற்
புலவர்களின் முதலானேன் புனிதனேப்போற் றுதலிற்
றன்னிகர்தா னுயவன்மீ ஞட்சிசுந் தரமால்
தழைவியாசர் பாடியில்வாழ் தருவிநா யகவேண்
மின்னிடையார் வாழ்மாட மயிலேதனிற் கண்ட
விளங்குசத் திரத்தினுக்கு விளம்பியமா லேயின்சீ
ரென்னனேயா ரெடுத்துரைக்க வனந்தநா வளியா
திருந்ததனுற் றளியிழந்தா னிவ்வுலகில் விதியே.

---

புன்னேப்பாக்கம்

## சுப்பராயமுதலியாரியற்றியது.

### விருத்தம்.

4158. நித்திலங் குலேயி லெறிதிரை யிலஞ்சி நேமிநேர் வியாசர்பா டியில்வாழ், சித்தச னனேய விநாயகச் செம்மல் செழுமயி லேயினி னமைத்த, சத்திரத் திணுக்கோர் மாலேயை யிசைத்தான் சைவநற் சமையதா மரைக்கு, மித்திர னெனுமீ ஞட்சிசுந் தரவேள் விளங்கி யற் பாவல ரேறே.

---

### தண்டலம்

### சிதம்பர முதலியாரியற்றியது.

### விருத்தம்.

4159. அரியதொழின் முயன்றுபொரு ணனியீட்டி யீயா
தவமிழக்கு மந்தகர்கட் கறநெறியைத் தெரிப்பான்
பரவுதிரு மயிலையினிற் சத்திரமொன் றமைத்துப்
பகரரிய பெருஞ்சீர்த்தி படைத்தவனும் வியாசர்
புரியில்வா ழருச்சுனவேள் புதல்வன்விநா யகப்பேர்ப்
பூபதியைப் புகழ்ந்திடுகோ புகலதற்கோர் மாலை
பரிவினிற்சொன் மீனாட்சி சுந்தரநா வலனைப்
பழிச்சுகோ பாவலீர் பகர்ந்தருளு வீரே.

சித்திரச்சத்திரப்புகழ்ச்சிமாலைச் சிறப்புப்பாயிரங்கள் முற்றுப்பெற்றன.

---

௳

சிவமயம்.

# வியாசைக்கோவை.



## காப்பு.

4160. சித்தியை வேட்டவர்க் கீயுங் கபாலி திருவடிக்கே
பத்தியை யாற்றும் வியாசை விநாயக பார்த்திபன்மேற்
சுத்தியை மேவப் புரிகோவை யோங்கச் சுடரொருகோட்
டத்தியை நாடி யினிதூன் றுவாநம் மகத்துறவே.

## நூல்.

### கைக்கிளை.

காட்சி.

4161. நீர்கொண்ட தாமரைப் போதொன் றிரண்டு நிகரரும்பு
சீர்கொண்ட காந்த ளிரண்டோர் குமுதந் திகழுவெங்கும்
வேர்கொண்ட சீர்த்தி விநாயக பூபன் வியாசைநகர்க்
கார்கொண்ட சோலையி லேர்கொண் டோர் வல்லியென் கண்ணுற்றதே.

ஐயம்.

4162. எண்ணுல கோதும் விநாயக பூப னிருஞ்சிலம்பில்
விண்ணுல கோவிதி நண்ணுல கோவிண்டு மேவுவியன்
கண்ணுல கோவர வண்ணுல கோதண் கடல்புடைசூழ்
மண்ணுல கோநெஞ்ச மேயிங்கு நிற்பவர் வாழுலகே. (௨)

துணிவு.

4163. கோடாத நீதி விநாயக பூபன் குளிர்சிலம்பில்
வாடாத பூநிலஞ் சூடாத பூமுத்த மானவெயர்
கூடாத பூவிமை யாடாத பூவில் குணத்தினெழில்
வீடாத பூமகண் மேற் பூமகளிது மெய்நெஞ்சமே. (௩)

குறிப்பறிதல்.

4164. இருட்பார்வை யாதெனை யாளுங் கபாலி யிணையடிக்கே
தெருட்பார்வை வைத்த விநாயக பூபன்சிலம்பி லிம்மான் [வோ
மருட்பார்வை தோன்றும் வெந்நோய் செய்தந்நோய்க்கு மருந்தென
ரருட்பார்வை தோன்றுமிவையோ ருறுப்பெழ லாய்நெஞ்சமே.

### இயற்கைப்புணர்ச்சி.

இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

4165. கனத்தார் சிரோமணி வெள்ளைமுன் னுகக் கரையும்பல்பா
வினத்தார்சிந் தாமணி வான்பேர றத்திற் கிருகண்மணி
மனத்தார் புனித விநாயக மால்வரை வாயளிசா
றனத்தார் தமையடுத் தேயிரப் பார்க்கோர் தளர்வில்லையே. ()

இரந்துபின்னிலைநிற்றல்.

4166. கடியே னடுத்த வரையென் விநாயக காமன்வெற்பிற்
படியேன் பிறதடத் துட்போய் வெங்காமவெப் பம்பறியப்
பிடியேன் மடநடை யிருங்க ளல்குற் பெருந்தடத்து
ளடியேன் புகுந்து குடைந்தாடு மாறிங் களித்திடுமே (௬)

முன்னிலையாக்கல்.

4167. கனியே மூலகும் படர்சீர் விநாயக நண்பன்வெற்பிற்
கனியே யனைய துவர்வாய் நல்லாயங் கலந்துமிகப்
பிணியே நன்காட லொழிந்தெளி யேன்செய் பெருந்தவம்போற்
றனியே யினிதிங்கு நீர்நின்ற வாறெவன் சாற்றுமினே. (எ)

வண்டோச்சிமருங்கணைதல்.

4168. தும்பை முடித்த சடைப்பெரு மான்பொற் றுணையடிக்கே
நம்பை வயக்கும் விநாயகவே டொண்டை நாட்டளிகா
ளம்பை மருட்டும் விழியார் கருங்குழ லாசைவைத்தோர்
கொம்பை முறிக்கத் துணிந்தீ ரிதென்ன குணநுமக்கே.(அ)

மெய்தொட்டுப்பயிறல்.

4169. மட்டார் குவளைத் தொடையான் விநாயக வள்ளல்வெற்பி
னட்டா ருவக்கவென் போறபெற் றுளாரெவர் நானிலத்திற்
கட்டார் குழற்கணிந் தொண்ணுத னீவிக் கலையுந்தொட்டுப்
பெட்டா ரிவர்பதங் கையால் வருடவும் பெற்றனனே. (௯)

பொய்பாராட்டல்.

4170. ஒருவரை வில்லி பதந்தாழ் விநாயக வுத்தமன்ற [வோ
ளொருவரை வாய்மயி லன்னீர்நுங் கொங்கைக் குடைந்தல
வொருவரை பாதலம் புக்கது வாரி யொளித்ததுமற்
றொருவரை யிதறி யார்வே றுரைப்ப ருலகத்திலே. (௧௦)

இடம்பெற்றுத்தழாஅல்.

4171. வண்டேய் குவளைத் தொடையான் விநாயக வள்ளல்வெற்பிற்
றண்டே மொழிமட நல்லீர் தள்ளாதெனைத் தானடிமை
கொண்டே யருளக் குறித்தீ ரினிதுங்கள் கோவையமு
துண்டே சுகம்பெறற் காமிட மீதிடை யூறில்லையே. (௧௧)

வழிபாடுமறுத்தல்.

4172. நன்பால் வளர்க்கும் விநாயக மாறெண்டை நாட்டுவெற்பில்
வன்பான் முலையொடு தோன்றிய நாண்டள்ள மாதவியே
யுன்பா லடைந்தே னெதுங்கிடர் தாவள வோவளிவந்
தன்பா லடைதரப் பூத்துநிற் பாய்க்கி தடுப்பதுவே. (௧௨)

இடையூறுகிளத்தல்.

4173. சாத்திர வாஞ்சை விநாயக பூபன் றடஞ்சிலம்பிற்
றோத்திரஞ் செய்யப் படும்வனப் பீர்துணைக் கண்மலரைப்
பாத்திர மாகுத் தேமறைத் தேயுரப் பாட்டிற்கொங்கை
மாத்திரந் தோற்றிநின் றீரென்ன தோவுங்கள் வல்லமையே. ()

நீடுநினைந்திரங்கல்.

4174. ஆயூறல் கச்சி யமர்வானுக் கன்ப னருச்சுனமால்
சேயூறல் கொண்மதுச் செந்தார் விநாயக செம்மல்வெற்பிற்
பாயூற லாதுணை ராவேள்செய் நோய்க்குப் பசுமருந்தா
வாயூற லென்றிவர் பாற்பெறு வேனுயிர் வாழ்வகையே. (௧௪)

மறுத்தெதிர்கோடல்.

4175. பதங்கொண்ட சீர்த்தி விநாயக பூபன் பனிவரைநம்
மிதங்கொண்ட நாண்பெறு நாணு மிதுமன்ப ரேற்றமயன்
மதங்கொண்ட கும்பக்களிற்றைத்தடுக்கும்வலிகொண்டதோ
சுதங்கொண்ட தாமரை நூலுமொவ் வாதிது சூழ்நெஞ்சமே.

வறிதுநகைதோற்றல்.

4176. பாராய் திருவிடை யார்கோத் திரவுற் பவன்குவளைத்
தாரார் புயத்தன் விநாயக பூபன் றனையடுத்துச் [தை
சேரார்தம் வாழ்க்கை யெனநாணந் தான்சென்று தேய்ந்தி
யாராயு முன்னெனக் கோநகை தோன்றிய தற்புதமே. (௧௬)

முறுவற்குறிப்புணர்தல்.

4177. கலர்வா யுதித்த மொழியோ விநாயக காமனைநா
வலர்வா யுதித்த மொழியோ மகிழ்விக்கும் வாரிதிப்பால்
அலர்வா யுதித்த நிலவோ வினிதிவ் வணங்கனையார்
மலர்வாயுதித்த நிலவோ வெனைமகிழ் விப்பதுவே. (௧௭)

முயக்குதலுறுத்தல்.

4178. வெல்குவ தேயுணர் வீரன்வி நாயக வேள்வரைவாய்
ஒல்குவ தேகொ ளிடையிவர் தாங்குறிப் போர்ந்தினிது
நல்குவ தேகொடை யென்பது தேர்ந்தரு ணல்கினர்நான்
புல்குவ தேபணி யென்றுகொண் டேனின்பம் புக்கதுவே.()

புணர்ச்சியின் மகிழ்தல்.

4179. கான்பெற்ற செங்கு வளைத்தார் விநாயக காமன்வெற்பில்
வான்பெற்ற வின்பமு மற்றுமொ ரின்பமு மாறல்லவே [தால்
தேன்பெற்ற செஞ்சொ லிவர்பான் முன்னுள்பல செய்தவத்
யான்பெற்ற வின்பமொன் றேபயனுய தெடுத்த மெய்க்கே. ()

புகழ்தல்.

4180. புரவுசெய் சிந்தை விநாயக பூபன் புகழ்வரைவாய்
உரவுசெய் கொங்கை யிவர்வாண் முகத்திற் குடைந்தலவோ
அரவுசெய் துன்ப மகலா திருக்கவு மம்மதிய
மிரவுசெய் காலத் தெழும்பக லீத்தஞ்சி யெற்றைக்குமே. ()

ஏற்புறவணிதல்.

4181. மெய்செய்த கீர்த்தி விநாயக பூபதி வெற்பிலுங்கண்
மைசெய்த கூந்த லெழுவாய் மலர்ப்பத மட்டுக்தொட்டுப்
பைசெய்த செம்மணிப் பூண்பல செம்மை படத்திருத்திக்
கைசெய்த மாதவப் பேற்றினை யானின்று காட்டினனே. (௨௧)

வன்புறை.

அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

4182. கூராழி சங்கமல் லாதே புரக்குங் குலத்தொழிலிற்
பேராழி மாற்கும் விநாயக மாற்குங்கைப் பேதமுண்டோ
வோராழி சங்கன்றி நின்றோ ழிகைக்கு மென்கைக்குமின்னே
யோராழி ஞாலத் தணிதொழிற் பேத முறுதென்றுமே. (உஉ)

பெருநயப்புரைத்தல்.

4183. கள்ளமருங்கு வளைத்தார் விநாயக காமன்வெற்பிற்
பள்ளமருவு புனற்றடம் பூத்தபங் கேருகத்துள்
உள்ள முருகி யுரோமஞ் சிலிர்ப்ப வுறுசுவைத்தேன்
வெள்ள முதவரக் காம்ப லுண்டோசொல் விளரிவண்டே. ()

தெய்வத்திறம்பேசல்.

4184. மன்றாக வன்ப ருளங்கொள் கபாலி மலரடிக்கே
நன்றாக வன்பு செலுத்தும் விநாயக நண்பன்வெற்பி
லென்றாக வுண்மணி யேந்திழை யீர்நம் மிருவருமின்
றொன்றாகக் கூட்டிய வூழுண்டு வாட்டமு றீரென்றுமே (உச)

பிரியேனென்றல்.

4185. அற்பக லாத விநாயக வேண்மன மன்னவெள்ளி
வெற்பக லாத பெருமான்றன் பாகத்து மேவிவளர்
கற்பக லாத வுமையைப் பிரியினுங் கண்கவரும்
பொற்பக லாத நினைப்பிரி யேனென்றும் பூங்கொடியே, (உரு)

பிரிந்துவருகென்றல்.

4186. மெய்யுங் கடித லிலாவன்பும் பூண்ட விநாயகவேள்
செய்யுங் கடிதட முஞ்சூழ் நன்னாடன்ன சேயிழையி
ரெய்யுங் கடியம்பி னின்னின் றியானகன் றேகுபுநீர்
கொய்யுங் கடிமலர் சூடுமுன் வந்துமைக் கூடுவனே. (உசா)

இடமணித்தென்றல்.

4187. தரைவா யெவர்க்குமோர் தாய்நேர் மயிலையிற் சத்திரத்தான்
புரைவா யுறாத விநாயக பூபன் பொருப்புநல்லீர்
விரைவா யெம்மூரிற் கருமணிச் சோதி விராவக்கண்டும்
வரைவாய் முகில்வந்த தென்றுநின் றாடு மயிலினமே. (உஎ)

தெளிவு.

4188. மன்றா டியபெரு மானடிக் கன்பனிம் மண்முழுதுஞ்
சென்றா டியபுகழ்ச் செல்வன் விநாயக செம்மல்வெற்பிற்
கன்றா டியகையென் னுள்ளா டியதுயர் கண்டிறைவர் [மே.
இன்றா டியமொழி பொய்யார் செய்யார் வஞ்ச மெற்றைக்கு

பிரிவுழிமகிழ்ச்சி.

செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.

4189. அனிய முறவு பகையிவ ராலென் றகங்கருதா
னனியமை நீதி விநாயக மாறெண்டை நாட்டுநலங்
கனிய விருகண் மலரும்பின் பூப்பமுன் காக்கப்பர
மினிய மலர்க்கொடி போற்செல்லு மானம தின்னுயிரே. ()

பாகனொடு சொல்லல்.

4190. மலிதரச் சீர்த்தி வளர்க்கும் விநாயக வள்ளல்வெற்பி
லொலிதரச் சீறடி நூபுரங் கொங்கைக் குடைமருங்குன்
மெலிதரக் கூந்தலோர் கையுற வெங்கும் விழிபரந்து
பொலிதரச் செல்வது பார்வல வாவொரு பூங்கொடியே.(கூo)

பிரிவுழிக்கலங்கல்.

ஆய்வெள்ளம்வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

4191. கையென்று கார்முகில் கொண்ட விநாயக காமன்வெற்பில்
வையென்று நீங்கரு மொள்வேல் விழியிவர் மாண்பிதென்னிற்
கொய்யென் றலர்தரு பைம்பொழில் வாயன்பிற் கூடியது
மெய்யென்றும் பொய்யென்றும் வேறென்றும் யாமின்று விள்ளரிதே.

வாயில்பெற்றுய்தல்.

4192. தீங்கொடி யார்நட் பொடித்தோன் விநாயக செம்மல்வெற்பில்
நாங்கொடி தாமய நீர்ந்தின்ப மெய்தவோர் நல்வழியை
யீங்கொடி யாதுபெற் றுமிவர் தங்க ணெனுங்கயலோர்
பூங்கொடி வாண்முக மென்னும் பெருந்தடம் போய்விழுமே.

பண்புபாராட்டல்.

4193. சித்தர் தராதிபர் சூழும் விநாயக நேயன்வெற்பி
னத்தர் தராது மணங்குழ லென்னினன் காந்தளென்னி
லத்தர் தராதன் புறத்தழுவுந் தொழி லாய்மதியோ
முத்தர் தராது முகமெனில் வேறென் மொழிவதுவே. (கூக)

பயந்தோர்ப்பழிச்சல்.

4194. இன்றந்த செஞ்சொல் விநாயக மால்வரை யென்னுயிரை
முன்றந்த மேலவர் வாழிய ரோவிம் முழுப்புவிவாய்
மின்றந்த நுண்ணிடை மாதயி ராணியும் வீறுருநால்
வன்றந்த மால்களிற் றூர்தியும் போன்று மகிழ்சிறந்தே.(கூச)

கண்படைபெறாது கங்குனோதல்.

4195. அருட்கட லாய மயிலைக் கபாலி யடிபணியும்
பொருட்கட லாய விநாயக மால்வரைப் பூங்கொடிநா
மருட்கட னீந்தக் கலந்து பிரிந்துழி வைகியவிவ்
விருட்கட னீந்தப் புணைகாண் கிலாமினி யென்செய்துமே. ()

இடந்தலைப்பாடு.

தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

4196. மன்னூர் தரும சுகுண விநாயக மால்வரைமேற்
பன்னூர் தருவிற் கொடிப்பாரென் றுங்கொடிப் பாரதுபோற்
றன்னூர் தருமரு ளாலேமின் னுரைமுன் றந்ததெய்வ
மின்னூர் தருநெஞ்ச மேசெல்லு வாமவ் வெழிற்பொழிற்கே.

முந்துறக்காண்டல்.

4197. நலமலர் சீர்த்தி விநாயக மால்தொண்டை நாட்டுமலர்
பலமல ரிப்பொழில் வாயெழில் வாயொரு பைந்தருக்கீழ்
நிலமலர் மாதவத் தாலெனை நோக்கினன் னீர்மையுற்றோர்
குலமலர் வல்லி யெனநின்ற தாலென் குலதெய்வமே. (கூஎ)

முயங்கல்.

4198. கோனே யெனப்பலர் சூழும் விநாயக கொண்டல்வெற்பிற்
றேனே வாரிவெள் வாயமு துண்பார் தவமுளரோ
வூனே யுயிரிவர் செவ்வாய்த் திருவமு துண்ணப்பெற்ற
யானே தவமுடை யேனுடை யேனலம் யாவையுமே. (ஙஅ)

புகழ்தல்.

4199. புரவோன் கவிஞர்வைப் பானோன் விநாயக பூபனெனு
முரவோன் வரையிவர் தம்வாண் முகத்தெழி லுட்சிறிதா
தரவோ னிரந்து கொளத்திரி தன்மையிற் றனலவோ
விரவோ னெனும்பெயர் பெற்று னுடுபதி யென்பவனே. ()

உடன்புணராயத்துய்த்தல்.

4200. மன்னிய சீர்த்தி விநாயக மால்வரை யொண்டொடியே
மன்னிய தேமலர் மேவிப் பொழிலெனும் வானகத்துட்
டுன்னிய வாயத் தவரெனுந் தாரகை சூழ்குழுவுண்
மின்னிய மாமதி யீயாயின் னேசென்று மேவுகவே. (சo)

பாங்கற்கூட்டம்.

தலைவன்பாங்கனைச்சார்தல்.

4201. விண்ணோங்கு மாட வியாசை விநாயக வேள்வரைவாய்க்
கண்ணோங்கு நண்பனை யாங்காணச் செல்லு மக்காலமட்டே
யெண்ணோங்கு வன்றுயர் மேவுஞ் சென்றால் விண்ணிரவிகண்ட
மண்ணோங்கு வல்லிருண் மாய்ந்தென மாயு மதிமனமே.(சக)

பாங்கன் றலைவனை யுற்றதுவினுதல்.

4202. மாவேட்டஞ் செய்தனையோ மன்னர் போர்செய்து வந்தனை
நாவேட்ட முத்தமி ழாய்ந்தனை யோவற நட்பினோநன் [யோ
காவேட்ட செல்வன் விநாயக பூபன் கடிவரைவாய்ப்
பூவேட்ட நின்புயம் வாடவென் னேது புரவலனே (சஉ)

தலைவனுற்றதுரைத்தல்.

4203. நடங்கொண்ட குஞ்சித பாத சரோருக நாளுங்கொண்ட
திடங்கொண்ட வுள்ள விநாயக பூபன் சிலம்பினண்பா
தடங்கொண்ட சீரென் பெருங்கலை மாமதி தன்னையொரு
விடங்கொண்ட வாள்விழி சிற்றிடைப் பாம்பு விழுங்கியதே.

கற்றறிபாங்கன்கழறல்.

4204. வில்லா தரித்த தடம்புய வேந்தர்க்கும் வேந்தநனி
நல்லா தரஞ்செய் விநாயக மால்தொண்டை நாட்டிலொரு
வல்லா விடைக்கு வருந்திவந் தாயெனின் மன்னுகலை
யெல்லா முணர்ந்து தெளிந்ததென் னுயிற் றிதுவியப்பே. ()

கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்.

4205. விண்ணும் புகழும் வியாசை விநாயக வேள்வரைப்பா
லெண்ணுங் கமல முகமுமென் னுருமி ரிட்டடைத்துப்
பண்ணுங் கனதனச் செப்புங் குழைமிசைப் பாய்ந்துமறி
கண்ணுங்கண் டாயெனிற் கூறுய்நண் பாவிக் கழமொழியே. ()

இழிவோற்பழித்தல்.

4206. பன்னூ லுணர்ந்த விநாயக மால்வரைப் பாற்சிலம்பி
மென்னூல் வலையிற் களிறகப் பட்டு மெலிந்தெனவோர்
சின்னூ லிடைச்சி விழிவலைப் பட்டிளந் தேம்பினையால்
நன்னூல் பலவு முணர்ந்து தெளிந்த நராதிபனே. (சசு)

இழிவோன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

4207. கடங்குடைந் தாடுங் களிற்று விநாயக காமன்வெற்பின்
மடங்குடைந் தாடு மொருமா னெடுங்கண் வலைப்பட்டறி
வுடங்குடைந் தேனினி யென்செய்கு வேனவ் வொருத்தியல்குற்
றடங்குடைந் தாலன்றி யாறுதென் காமத் தழலணம்பனே.()

பாங்கன் தன்மனத்தழுங்கல்.

4208. மாலோ வெனுநம் விநாயக பூபன் வரையினறும்
பாலோ மொழிவடி வேலோ விழிமுலை பந்துகொலோ
நூலோ விடைவயி றாலோவென் பானிய னுண்ணறிவு
மேலோ வவண்மயன் மேலோவென் செய்துமிவ் வேதனைக்கே.

பாங்கன் தலைவனோடழுங்கல்.

4209. அனங்காட்டு நன்செய் வியாசை விநாயக வண்ணல்வரைப்
புனங்காட்டு பேதை பொருட்டென்சொ னின்செவிப் போய்ப்புகலத்
தினங்காட்டு தீயசொல் லாயதென் றீவினை யென்னிறைவா
கனங்காட்டு மண்ட முடைதரிற் பூணைவர் கட்டுவரே.(சகூ)

பாங்கனெவ்விடத்தெவ்வியற்றென்றல்.

4210. கடங்கால் களிற்று விநாயக பூபன் கனவரையோ
படங்கான் மணிவெயிற் பாந்தள்வைப்போநற் பனிவிசும்போ
விடங்கா முறுமியல் யாதண்ணலே தெவ்வர் யாவருக்கு
மடங்கா வலிநினை யிவ்வாறு செய்த மடக்கொடிக்கே. (ரு௦)

தலைவனிவ்விடத்திவ்வியற்றென்றல்.

4211. மந்தர மேமுலை மாங்குயி லேமொழி வாள்விழியே
யந்தர மேயிடை யம்புய மேமுகம் யாவருக்குஞ்
சுந்தர மேசெய் விநாயக மால்தொண்டை நாட்டினிடங்
கந்தர மேதவழ் நந்திவெற் பேயென்றன் கண்மணிக்கே. ( )

பாங்கனிறைவனைத்தேற்றல்.

4212. பொன்னியன் மாட வியாசை விநாயக பூபன்வெற்பின்
மின்னிய நுண்ணிடைப் பூங்கொம்பை யான்கண்டு மீளுமட்டு
மின்னியல் வாய்ந்து விண்போலே வயங்கிவ் விடத்துச்சற்றே
நின்னிய னெஞ்சங் கலங்கா திருத்தி நெடுந்தகையே. (ருஉ)

பாங்கன்குறிவழிச்சேறல்.

4213. பந்தாடு மோவம் மனையாடு மோசுனை பாய்ந்துளமு
வந்தாடு மோமலர் கொய்தாடு மோதனி வாய்நிற்குமோ
சந்தாடு மார்பன் விநாயக பூபன் றடஞ்சிலம்பிற்
கந்தாடு தானக் களிற்றண்ணல் கூறிய காரிகையே. (ருந)

பாங்கனிறைவியைக்காண்டல்.

4214. வேயே திரள்புயம் வில்லே புருவங்கல் வித்துருமம்
வாயே கருங்குழன் மாமுகி லேமுலை மாமலையே
தாயே யனைய விநாயக பூபன் றடஞ்சிலம்பிற்
சேயே நிகரிறை கூறிய பேதையிச் சேயிழையே. (ருச)

பாங்கன் இகழ்ந்ததற்கிரங்கல்.

4215. கந்தோ டிகலுங் களிற்று விநாயக காமன்வெற்பிற்
பந்தோ வெனுமுலை யிப்பாவை பார்வையிற் பட்டுழன்று
வந்தோன் வருத்தந் தவிர்ந்தே யிருக்க மனம்வருமோ
அந்தோ விஃதறி யாதிகழ்ந் தோநம் மறிவின்மையே. (ருரு)

பாங்கன் றலைவனைவியத்தல்.

4216. ஏற்றமுஞ் சீரு முடையான் விநாயக வேந்தல்வெற்பிற்
கூற்றமு மஞ்சுக ணிம்மாதை நீங்குபு கூடிநம்மைத்
தேற்றமு மேவி யுயிரோடும் வைகித் திறம்பலில்சின்
மாற்றமுங் கூறிய மன்னவ னேதிண்மை வாய்ந்தவனே. ()

பாங்கன் றலைவியைவியத்தல்.

4217. நாறுத சீர்த்தி யடைந்தாரை நோக்கி நகைபுரியுஞ்
சீறுத பேரறச் செய்கை விநாயக செம்மல்வெற்பிற்
பாறுத பேரருட் சூற்கொண்ட பார்வைப் பயத்தினிவர்
மாறுத மன்னவன் சோகத்தை மாற்றிட வல்லவரே. (ருஎ)

பாங்கன் றலைவன் றனக்குத் தலைவிநிலைகூறல்.

4218. சேவகத் தேறும் பெருமானுக் கன்பன் செழும்புலவர்
நாவகத் தேறும் புகழான் விநாயக நண்பன்வெற்பிற்
பூவகத் தேறுமொர் கற்பக நோக்கிப் புரவலவிக்
காவகத் தேயொரு பொற்பூங் கொடிநிற்கக் கண்டனனே. ()

தலைவன்சேறல்.

4219. நனியாடு பூங்கொடி மாட வியாசை நகரதிபன்
பனியாடு சீர்த்தி விநாயக மால்வரைப் பாலினிய
கனியாடு சோலையிற் பாங்கிய ரோடு கலத்தலின்றித்
தனியாடு மோமுன்னை நாளென்னை யாட்கொண்ட தாழ்குழலே.

தலைவன் றலைவியைக்காண்டல்.

4220. கொந்தே செறியுந் தடந்தார் விநாயக கோன்வரைப்பா
னொந்தே வருந்த வெழும்பெருங் காமவெந் நோய்மருந்தாய்த்
தந்தே யெனுமிடை பந்தே யெனுமுலை தாங்கிநிற்ப
வந்தே யெதிர்நின்ற தான்முன்பி யாஞ்செய்த மாதவமே. ()

கலவியின்மகிழ்தல்.

4221. கண்ணா ரழகன் விநாயக பூபன் கவின்சிலம்பில்
விண்ணார் மதியமு மண்பார் செருக்கு மெலிவுறவிப்
பண்ணார் மொழியருட் கண்ணார்த மின்பப் பரவையெழூஉந்
தண்ணார் முகமதி வாயமு துண்டு தழைத்தனமே. (சுக)

புகழ்தல்.

4222. கோணின்றி மேவு சுகுண விநாயக கொண்டல்வெற்பிற்
பூணின் றௌிர்முலைப் பூங்கொடி யார்தம் புனைமுகத்தில்
வாணின் றிலகெழில் வேண்டியன் றேசெவ் வனசமொரு
தாணின் றுடைந்துகண் ணீர்சிந்தி நீரிற் றவஞ்செய்வதே. ()

பாங்கியொடு வருகெனப்பகர்தல்.

4223. செயிருஞ் சினமு முருளுயர் சேரியிற் சென்றுநெய்யுந்
தயிருங் கவர்ந்துண் விநாயக பூபன் றடத்திற்கண்டும்
அயிரும் புரையு மொழியாய் நினக்கொளி ரம்பகமும்
உயிரும் புரையுநின் பாங்கி யொடேயிவ ணுற்றருளே. (௬௩)

பாங்கிற்கூட்டல்.

4224. நினைக்கண் டணிய மடவார்நன் னீதி நெறிதிறம்பா
மனைக்கண்ட வாழ்குடி யும்பெரு கன்பு மருவுமன்னை
தனைக்கண்டசேயும் விநாயக பூபன் றயங்குமுகத்
தினைக்கண்ட பாவ லரும்போன் மகிழச்செல் சேயிழையே.()

பாங்கிமதியுடன்பாடு.

தோற்றத்தா லாராய்தல்.

4225. நந்தா டியசெய் வியாசை விநாயக நண்பன்வெற்பிற்
சந்தா டியமுலைத் தையனல் லாய்பைந் தழைகள்கொய்தோ
பந்தா டியோபொற் கழங்காடி யோமலர்ப் பாய்சுனையு
வந்தாடி யோநின் திருமேனி வாடி வருந்தியதே. (௬௫)

ஒழுக்கத்த லையந்தீர்தல்.

4226. குருவேய் புகழ்கொள் விநாயக மாலுளக் கோயில்கொண்ட
தருவேய் மயிலைக் கபாலி முடியிற் றயங்கியெழில்
உருவே யுமைநுத லொத்தலி னீயின் றுவந்துபெருந்
திருவே செழுங்கரங் கூப்பத் தகும்வெண் சிறுபிறைக்கே. ()

சுனையப்புரைத்தல்.

4227. திருமாலை வென்ற புரவோன் புயத்திற் செழுங்குவளை
மருமாலை தாங்கும் விநாயக பூபன் வரையனையாய் [புங்
கருமாலை நேர்நின் குழற்குஞ்செவ் வாய்க்குங் கவின்விளர்ப்
குருமாலை யுந்தந் ததுவியப் பாலக் குளிர்சுனையே. (௬௭)

சுனைநயந்துரைத்தல்.

4228. வானூர் திகழ்சீர் விநாயக மால்வரை வாய்மயிலே
கூனும் பிறைநுதல் வேர்வு முலைக்குங் குமச்சிதைவு
மானுங் கயலும் புரைவிழிச் சேப்புஞ்செவ் வாய்விளர்ப்பும்
யானும் பெறலா மெனிற்குடை வேனவ் விருஞ்சுனையே. ()

தகையணங்குறுத்தல்.

4229. திருவாள னேங்கு விநாயக மால்வரைத் தேமொழியாள்
பெருவா ளவிர்மெய் யணங்கேநின் சேர்ந்த பிறழுநெடுங்
கருவா ளலதெவ் வுறுப்பானு நின்னைக் கடுக்குமெழி
லுருவாள் சுனைகுடைந் தேவரு வாள்கண் டுவந்தருளே.(௬௯)

நேர்க்காட்டம்.

4230. பண்ணுங் கனியும் புரைமொழி யாயியற் பாவலர்கள்
எண்ணும் புகழ்செய் விநாயக மால்வெற் பிடத்திலிரு
கண்ணுங் கதுவெரி போற்சேந்த கோட்டுக் களிறுகொள
விண்ணும் புகழ்நெடு வேலெறிந் தானோர் விறலவனே. (எ௦)

பெட்டவாயில் பெற்றிரவுவலியுறுத்தல.

4231. தாருவனைய விநாயக பூபனைச் சார்ந்திரந்து
மேரு வனையபொன் பெற்றின்ப மார்கவி வேந்தரைப்போற்
சாரு வனைய மொழியுயிர்ப் பாங்கியைச் சார்ந்திரந்து
பூரு வனையவிற் செம்பொன்பெற் றின்பம் பொருந்துவனே.

4232. காதோ டிகல்கண் மடவார் விரும்புறு காமனென்றுந்
தீதோ வியகல் விநாயக மால்வெற்பிற் சேர்தவத்தைப்
போதோ வெனுமுகத் தீர்நீர் வசிக்கப் புரிந்தபதி
யாதோ வதுபுகல் வீரடி யேனங் கடைவதற்கே. (எ௨)

பேர்வினுதல்.

4233. சீரோது நாவலர் தாரு விநாயக செம்மல் வெற்பி
லூரோ துவதிற் பழியேற் பழியை யுறுதடியேன்
ஏரோது மந்திர மாகக்கொண் டேசெபித் தேத்தற்குநும்
பேரோது வீர்கருங் காரோது பூங்குழற் பேதையரே. (எ௩)

கெடுதி வினுதல்.

4234. அஞ்சரந் தாங்குதிண் டோளான் விநாயக வண்ணன்மலர்ப்
பஞ்சரஞ் சேர்தண் டலைசூழ் வியாசைப் பதிவரையில்
நஞ்சரம் போல்விழி யீர்வந்த தோவென் னருசிலைக்
குஞ்சரந் தைத்தபுண் ணோடிப்புனத் தொருகுஞ்சரமே.(எ௪)

ஒழிந்தது வினுதல்.

4235. நாவல ரேற்ற மொழிசெவி யேற்று நனிமகிழுங்
காவல ரேற்ற மருவு விநாயக காமன்வெற்பிற்
பூவல ரேற்ற குழலீர்நுங் காதிற் பொருந்தவென்வாய்ப்
பாவல ரேற்ற மொழியேற் றிடாததெப் பாவமிதே. (எரு)

யாரேயிவாமனத்தெண்ணம் யாதெனத்தேர்தல்.

4236. ஊரும் பெயருங் கரியுஞ் செவ்வாயே யுசாவவல்குற்
றேரும் பணைமுலைப் பாரமு நோக்குவர் செந்தமிழுந்
தாரும் புனையும் விநாயக பூபன் றடஞ்சிலம்பில்
யாரும் பரவிவர் யாரென்னை யோவுளத் தெண்ணியதே.(எசு)

எண்ணந்தெளிதல்.

4237. கனங்கா தலித்த கொடையான் விநாயக கன்னன்வெற்பர்
மணங்கா தலித்தது பொய்க்கணை தைக்க மருங்கிற்பெரு
வனங்கா தலித்தவம் மாதங்க மன்று வளருந்தினைப்
புனங்கா தலித்த விம்மாதங்க மேயிது பொய்மையன்றே. ()

தலைவன் கையுறையேந்திவருதல்.

4238. தருவார் நிழலி லிருநிதி போலச்செந் தாமரைவாழ்
திருவார் புயமல் விநாயக மால்வரைத் தேந்தருக்கீழ்ப்
பெருவா ரறமிமிர்ந் தண்ணுந் தெழுமுலைப் பேதையர்தா
மொருவா திருவரு முற்றூர்நம் மின்ன லுணர்த்துதுமே. ()

தலைவனவ்வகை வினுதல்.

4239. வையம் புகழும் வியாசை விநாயக மால்வரையென்
னெய்யம்பு பட்டுநம் மேரார் முகத்தி லிலகிரண்டு
மையம்பு பட்டவென் போற்றளர் வுற்றிம் மருங்குசெய்ய
கையம் புயமனை யீர்வந்த தோவோர் கலைதுள்ளியே. (எக)

எதிர்மொழி கொடுத்தல்.

4240. மேவுங் கலைபல வல்லீர் விநாயக வேள்பழியை
யோவுங் கலைஞர்வைப் பானேன் வரைப்புனத் துற்றகிளி
யாவுங் கலைய விதணிற் கவண்வைத் தெறியுமொளி
பாவுங் கலையன்றி வாவுங் கலைவரப் பார்த்திலமே. (அ0)

இறைவனை நகுதல்.

4241. ஏவாளி யன்ன விழிமட வாய்விண் ணிலகுமைந்து
காவாளி யன்ன விநாயக மால்வரைக் கான்றழைமென்
பூவாளி கொண்டு மடமானை யெய்த புணர்ப்புணர்ந்து
மாவாளி யன்ன விவர்மொழி பொய்யன்று மாரன்மெய்யே.()

பாங்கிமதியினவரவர்ம னக்கருத்துணர்தல்.

4242. மாலுங் கரிசில் விநாயக பூபன் வரையிற்றன்கை
வேலுங் கரியொடு போக்குமிவ் வாண்டகை வேட்டமுங்கார்
போலுங் கரிய குழலேனற் காப்பும்பொய் யென்பதற்குச்
சாலுங் கரியிவர் நோக்கேமற் றுயுந் தகைமிகையே. (அஉ.)

பாங்கியிற்கூட்டம்.

தலைவனுட்கோள்சாற்றல்.

4243. விரையார் மலர்வனை கோமென் குழற்கு விரைக்கலவை
நரையா ரிமின்முலைக் கேயப்பு கோவணி நன்கணிகோ
தரையார் புகழ்செய் விநாயக பூபன் றடஞ்சிலம்பிற்
றிரையார் கடற்பொன் னனையீர் பணியெவன் செப்புகவே.()

பாங்கி குலமுறை கிளத்தல்.

4244. நினைசுக மேவும் விநாயக மால்வெற்பி னீருடைமான்
மனைசுக மேவச்செய் நீயோ பெரியை வளர்புனத்திற்
றினைசுக மோவச்செ யாமோ சிறியஞ் செழுஞ்சுவைத்தேன்
நனைசுக மேவும்வண் டார்நறுந் தார்கொ ணராதிபனே. (அச)

தலைவன் றலைவியையுயர்த்தல்.

4245. அன்பே செறியும் விநாபக பூபற் கணிமயிலை
என்பேய் தொடையற் கபாலி யெனைய னிதழ்க்கமலப்
பொன்பேணி நுங்குலத் தேவர் தனைய புனையிழையு
மின்பேணு நுண்ணிடை யாயெற் கனையவண் மெய்யிதுவே.

பாங்கியறியாள் போன்றுவினுதல்.

4246. தோய்ந்தாடு சீர்த்தி விநாயக மால்வரைச் சோலைவண்ட
லேய்ந்தா டுநரம் மனையா டுநர்மல ரீர்ஞ்சுனையுட்
பாய்ந்தா டுநரெழிற் பந்தா டுநர்பல ருள்ளுமயல்
வாய்ந்தாடு வித்தவ ளார்புகல் வாய்நின்னை மன்னவனே. (அசு)

இறையோனிறைவிதன்மையியம்பல்.

4247. மயிலே யியலொண் மதியே முகமல்குல் வாளரவே
குயிலே மொழிபொற் குடமே முலைகொடி யேயிடைபொன்
னெயிலே சுலவும் வியாசை விநாயக வேந்தல்வெற்பி
லயிலே விழிவெள் ளனமே நடையென தாருயிர்க்கே. (அஎ)

இதுவுமது.

4248. நடையு மிடையும் பிடியேமென் றோளு நளினவரும்
புடையு முலையும் வரையே யுருவமு மொள்ளொளிசேர்ந்
தடையு முகமுஞ் சசியே விநாயக வண்ணல்வெற்பிற்
கடையு மயில்விழி யாலென்னை வாட்டிய காரிகைக்கே. (அஅ)

பாங்கிதலைவியருமைசாற்றல்.

4249. தீட்டிய வாள்விழி யார்வேள் விநாயக செம்மலுவந்
தீட்டிய செல்வங்கற் றோர்க்கே பயன்பட லேய்ப்பமலர்
சூட்டிய வார்குழற் செல்வமன் னாளுந் துலங்குநன்மை
நாட்டிய வூழுடை யார்க்கே பயன்படு நன்மையளே. (அகூ)

தலைவனின்றியமையாமையியம்பல்.

4250. தண்ணிய பைந்தமிழ் நன்குணர் பாவலர் தங்கள்கவி
மண்ணிய வண்மை விநாயக பூபன் வரையிடத்தென்
புண்ணிய மோதிரண் டோர்பெண் ணுருவொடு போந்ததென்ன
வெண்ணியன் றேமட வாய்நிற்ப தாயதின் றென்னுயிரே. ()

பாங்கி நின்குறை நீயேசென்றுரையென்றல்.

4251. தணடா மரைதண் மதிக்கல ராது தரணிதனைக்
கண்டா லலருதல் போலவென் சொல்லிற் கனிவடையா
வண்டார் குழலி கனிய விநாயக வள்ளல்வெற்பா
உண்டான நின்குறை நீயே யுரைசென் றவ் வொண்டடிக்கே.

பாங்கியைத்தலைவன் பழித்தல்.

4252. கடியார் குவளை விநாயக மால்வரைக் காரிகைநின்
றுடியா ரிடையவண் மாமயன் மூழ்கித் துயருமென்னை
மடியாம னீயெடுத் தாளாமற் கைவிட்டு மாதர்மடக்
கொடியா ரெனுஞ்சொற் பொருணினக் கேயின்று கொண்டனையே.

பாங்கி பேதைமையூட்டல்.

4253. மறியா வளமை விநாயக பூபன் வரைப்பளிங்கிற்
செறியார் விளங்கும் பசுங்கிளி நீழலைச் சேர்கிழலென்
றறியாண்முத் திட்டுக் கனியூட்ட வுண்ணா ததற்கிரங்குஞ்
சிறியாணின் னுள்ளத் துயர்குறி யாடிண் டிறலவனே. (கூங)

காதலன் தலைவி மூதறிவுடைமைமொழிதல்.

4254. சுரும்பு மதுவுண்ணுூர் தொங்கல் விநாயக தோன்றல்வெற்பில்
விரும்பு மெனேச்சினந் தேதொடுத் தெய்யவில் வேளெடுத்த
கரும்புங் கரும்பாக் கணைமலர் கண்மல ராகவருள்
அரும்புமென் ஞேக்களித் தர்ட்பேதை யென்பதெ ஞானங்கே.

பாங்கிமுன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

4255. கனம்பெற்ற வண்மை விநாயக வேள்பாற் கனிந்துசென்று
தனம்பெற் றவர்பின்னுந் தாமேசென் றேநற் றனம்பெறல்போல்
அனம்பெற்ற மென்னடை யாள்பாற் கனிந்துசென் றந்தனத்தை
மூனம்பெற் றவையவின் னும்பெறு வாயான் முயறலென்னே.

தன்னிலைதலைவன் சாற்றல்.

4256. தன்னை யலாது நிகரில் விநாயக தாருவெனு
மன்னை யலாது கலிநோய் தவிர்ப்ப மதிப்பருண்டேற்
பொன்னை யலாத நிகரில் கவினுடைப் பொற்றொடியா
யுன்னை யலாது மதனேய் தவிர்த்திட வுன்னுவனே. (கூகூ)

பாங்கி யுலகியலுரைத்தல்.

4257. கதிகாட்டு செந்தமிழ் வாணரைக் கண்டு கலந்துபெரு
நிதிகாட்டு வண்மை புனையும் விநாயக நேயன்வெற்பின்
மதிகாட்டு மாமுக மாதைச்செந் தீமுன் வயங்குமருந்
துதிகாட்டு மாமணஞ் செய்தணை மேருத் துணைப்புயனே. ()

தலைமகன் மறுத்தல்.

4258. நீர்வேட் டடைந்திரந் தோரைப் பிரமற்கு நேடரிய
ஆர்வேட்ட வேணிப் புனல்கொண்டுண் பாயென் றறைதலொக்கும்
பார்வேட்ட சீர்த்தி விநாயக மால்வரைப் பான்மொழியாய்
தார்வேட்ட கொங்கையை நீவரைந் தெய்தென்று சாற்றியதே.

பாங்கியச்சுறுத்தல்.

4259. பாயுற்ற வெஞ்சினக் கைக்கரிக் கோடுரம் பட்டிற்றுவென்
போயுற் றிடவறி யாவெமர் காணிற்பொல் லாதறிஞர்
ஆயுற்ற சீர்த்தி விநாயக மால்வெற் பணங்கினுக்கா
நீயுற் றுழன்றிட லேகுக மன்னவ நின்பதிக்கே. (கூகூ)

தலைவன் கையுறைபுகழ்தல்.

4260. விண்மணி யன்ன வொளிசேர் விநாயக வேள்வரையென்
கண்மணி யன்ன மடவீர்நுங் கொங்கைக் கதிர்மருப்பின்
ஒண்மணி யாவணி யத்தகு மாலள வோவுவிலே
கொண்மணி யாவரு முண்மணி யிந்தக் குளிர்மணியே. (கoo)

பாங்கி கையுறைமறுத்தல்.

4261. பணியேன் புலவி யினுமென் விநாயக பாரிவெற்பா
அணியே யிவளிடை யையங்கண் டேநின் னணியணியத்
துணியேன் றுணிந்து துணைமுலை சேர்ப்பிலெந் தொல்குறவர்
தணியே மெனுஞ்சினத் தீயினெய் வார்த்த தகையொக்குமே.

ஆற்றுநெஞ்சினோடவன்புலத்தல்.

4262. காரேறு செங்கை விநாயக மால்வரைக் காரிகையார்
வாரேறு கொங்கைக் கடாயானை யைமெல் வயிற்றினடிச்
சீரேறு ரோம வடங்கொண்டு பூட்டிய செம்பொனல்குற்
றேரேறு புண்ணிய முண்டோநெஞ் சேநங்கைச் செந்தழைக்கே.

பாங்கி ஆற்றுவித்தகற்றல்.

4263. விலையிலை யென்னுங் கவிவாணர் முன்னர் வெகுண்டுமொழி
தலையிலை யென்னும் விநாயக மால்வெற்ப தண்டழையால்
இலையிலை யென்னு மிடையன்றித் தாழ்ந்தெம் மிறைவிபொன்னல்
குலையிலை யென்னும் படிசெய்வ ளோக் குறுகுகவே. (௧0௩)

இரந்துகுறைபெறாது வருந்தியகிழவோன் மடலே
பொருளெனமதித்தல்.

4264. ஈந்தே யுவக்குங் கரத்தான் விருந்தின்றி யென்றுந்தனி
மாந்தே மெனுநல் விநாயக பூபன் வரைப்பயிலுஞ்
சாந்தே யணிமுலை தந்தவெங் காமத் தடங்கடற்குப்
போந்தே யலாநெஞ்ச மேமற்று வேறு புணையில்லையே. ()

பாங்கிக்கு உலகின்மேல்வைத்துரைத்தல்.

4265. பேதையர் மால்கொள் விநாயக பூபன் பிறங்கலில்வாழ்
காதைய ராவிய கண்மட வாயிக் கடற்புவியில்
வாதைய ராகி வருந்துறக் கோதையர் மாலையுற்றார்
கோதையர் மாலைகொண் டேயது மாற்றக் குறிப்பர்களே. ()

அதனைத் தன்மேல்வைத்துச்சாற்றல்.

4266. விரும்பனை யன்ன விநாயக பூபதி வெற்பிலுங்கண் [ருக்
கரும்பனை யாளெழி றேன்றுங் கிழியென்கைத் தோன்றவெ
கரும்பனைத் தும்பனைத் தேநீ றுடலெங்கு மப்பியொரு
கரும்பனை மாவையு மூர்மன்றி லூர்வன் கருங்குழலே. ()

பாங்கி தலைமகளவயவத்தருமைசாற்றல்.

4267. கந்தரங் காட்டு கொடையான் விநாயக கன்னன்வெற்பின்
மந்தரங் காட்டுதிண் டோளண்ண லேயெங்கண் மங்கைநல்லாள்
சுந்தரங் காட்டு மவயவம் யாவுந் தொகுத்திடினு
மந்தரங் காட்டு மிடைசற்றுங் காண லரிதுனக்கே. (௧0௭)

இதுவுமது.

4268. சொல்லின் சுவையுங் குவளையி னேக்குந் துகிர்த்துடிப்பும்
வல்லின் புளகமும் வேயின் பரிசமும் வானுருவும்
வில்லி னெரிப்பும் விநாயக வேள்வெற்ப மென்னகையாள்
அல்லின் மணமு மெழுதுங் கிழிகொண் டடைந்தருளே. ()

தலைமகன் தன்னைத்தானே புகழ்தல்

4269. வல்லை யெழுதிக் குமுதம் வரைந்து வயங்கருப்பு
முல்லை யெழுதி முழுமதி தீட்டி முழுதுலகு
மல்லை யெழுதும் விநாயக மால்வெற்பின் மான்மருங்கை
யில்லையென் றேவரை வேன்மட வாயிஃ தென்றுணிவே. ()

இதுவுமது.

4270. நடையைப் பிடியெனத் திட்டிக் கொடுவஞ்ச நஞ்சவிழிக்
கடையை வடியெனக் கோட்டி மிடியர் கடும்பசிமேன்
மடையை மடியென் றனுப்பும் விநாயக மால்வரைமா
னிடையை மிடியென் றெழுதிவிட் டேனினி யென்குறையே.

பாங்கி அருளியல்கிளத்தல்.

4271. விரும்பெண்ணை விட்ட புகழ்போர்த்தி மார்பில் விளங்கமலர்
வரும்பெண்ணை வைத்த விநாயக பூபன் வரைக்குறவர்
தரும்பெண்ணை வேட்டுத் தணவாத வன்றி றணந்திரங்கக்
கரும்பெண்ணை வெட்ட வருளுடை யார்தங் கடமையன்றே.

கொண்டு நிலைகூறல்.

4272. பாவேறு சீர்த்தி புனையும் விநாயக பாரிவெற்பா
ஏவேறு கண்ணிக்கு நின்குறை கூற விசைந்திலளேற்
பூவேறு கொங்கைக் கனியைக் கவரப் புனையுமடன்
மாவே றுகபின்னை யார்நின்னை யீங்கு மறிப்பவரே. (கக௨)

தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

4273. கிளரா நகையள் விநாயக பூபன் கிளர்வெற்பவண்
டுளரா முகிற்கு முளறுங் குதலைக்கு முற்றரும்பி
வளரா முலைக்கும் வளரு முலையின் வருந்திநலி
தளரா விடைக்குந் தளரு நடைக்குந் தளர்வதென்னே. ()

தலைவன் தலைவி வருத்தியவண்ணமுரைத்தல்.

4274. வருகுங் குமமுலை யார்வேள் விநாயக வள்ளலுடன்
பெருகும் பசியினை வாட்டுங் குணமும் பிறந்ததுபோற்
கருகு மலர்க்குழ லாய்நுங் கவின்பெறு கன்னியுட
னுருகுந் தமியனை வாட்டுங் குணமு முதித்ததுவே. (ககச)

பாங்கி செவ்வியருமை செப்பல்.

4275. தண்டலை யார்தழை கொய்துங் குழன்மலர் தாங்கப்பெய்தும்
வண்டலை யாயத் துடன்செய்து மாடன் மறந்திருந்தாள்
கொண்டலை வென்ற கொடையான் விநாயக கோன்சிலம்பிற்
புண்டலை வேலவ யானவட் கென்கொல் புகல்வதுவே. (ககரு)

தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

4276. கரவே யிலாத விநாயக பூபன் கவிப்புலவர்
வரவே புகல விரைந்தெதி ரோடி வருவதுபோல்
அரவே புரையு மகலல்கு லாளுமென் னோர்வரவை
யிரவேய் குழனீ சொலவிரைந் தோடி யெதிர்வருமே. (ககசு)

பாங்கியென்னை மறைப்பினெளிதெனக்கூறல்.

4277. பொன்னை மறைத்தல் செயாமல் வழங்கிப் புலவர்களி
தன்னைமறைத்த விநாயகமால்வெற்ப தண்மலர்வாழ்
மின்னை மறைத்தவள் செல்வப் பயன்பெற மேவிலொக்கு
மென்னை மறைத்தென்செல் வத்தின்ப நீபெற வெண்ணியதே.

அங்கைபொறு அதவன்புலம்பல்.

4278. வெய்தா மழலில் விழுந்தோர் துயர்நனி மேவிடநெய்
பெய்தா லெனநல் விநாயக பூபன் பிறங்கலன்ன
கொய்தா ரணிகுழல் காமத் தழலிற் குழையுமெனைச்
செய்தா லனமுலை யாயிகழ்ந் தோநகை செய்தனையே. (௧௧அ)

பாங்கி தலைவனைத்தேற்றல்.

4279. பழியார் தராத விநாயக வேளுயர் பாவலர்தங்
கழியா வினிய மொழிவெறுத் தாலுங் கரும்பனைய
மொழியா ளெனது மொழியை வெறாண்மயன் மூரிவெள்ளத்
தொழியா துணங்க லொழிமன்ன வாநின் னுறுதுயரே. ()

பாங்கி கையுறையேற்றல்.

4280. மழைதரு செங்கை விநாயக பூபன் வரைக்கிளைத்த
கழைதரு மாவிளந் தோண்மா துளங்கனி வாகநனி
குழைதரு வஞ்சிகொள் கொங்கைக் கனியுட் குழைதரப்பூந்
தழைதரு வாயர சேநினக் கின்பந் தழைதரவே. (௧௨௦)

கிழவோனுற்றல்.

4281. விருந்தெதிர் கொள்ளும் விநாயக வேள்வரை மீதிலென்கை
யிருந்தெதிர் கொள்ளுந் தழைபோற் றழைப வெனைச்செய்ததாற்
பருந்தெதிர் கொள்ளும் புகரயில் வேல்விழிப் பான்மொழியாண்
முருந்தெதிர் கொள்ளு நகைநில வூறு முகமதியே. (௧௨௧)

இறைவன்றனக்குக்குறைநேர்பாங்கி இறைவிக்கு அவன்குறையுணர்த்தல்.

4282. மெய்தாங்கு செய்கை விநாயக பூபனை மேவலர்போற்
கைதாங்கு பைந்தழை வாடக் கவினுங் கருகவொரு
வைதாங்குவேலர் வருவார் புனத்தொன்றும் வாய்திறவார்
பொய்தாங்கு நுண்ணிடை யாயவர்க் கென்கொல் புரிவதுவே.

இறைவி அறியாள்போன்று குறியாள்கூறல்.

4283. மித்திரங் கூறும் விநாயக வேடர மேவுற்றுளோர்
சித்திர மாரெழில் கண்டினி தார்ந்து சிறந்திருக்க
அத்திர நேர்விழி யார்சேர் மயிலை யமர்ந்தவொரு
சத்திரம் யாரும் புகழத் தகுவது தாழ்குழலே. (௧௨௩)

பாங்கி யிறையோற் கண்டமைபகர்தல்.

4284. தன்னிடை யேற்றவர் தம்மிடை மன்னருஞ் சார்ந்திரப்பப்
பொன்னிடை யீடின்றி நல்கும் விநாயக பூபன்வெற்பில்
நின்னிடை நூலுரை கேட்டிவந் தாரென் னினைத்தனரோ
மின்னிடை வார்முலை யாய்நம் புனத்தின்று மேவினரே. ()

பாங்கியைத் தலைவி மறைத்தல்.

4285. விண்ணும் புகழ்செய் விநாயக மால்வெற்பில் வேறுதொழி
லெண்ணு வருவ ரெனையெண்ணி வந்தன ரென்னவெண்ணி
நண்ணுப் பெரும்பழி நம்பழி தீர்குடி நண்ணவயிற்
கண்ணும் மொழியத் தகாது கண்டாயிக் கடுமொழியே.(௧௨௫)

பாங்கியென்னை மறைப்பதென்னெனத்தழால்.

4286. குன்றாத பாவல ருள்ளுங் குறிப்பறிந் தேகொடுக்கும்
பொன்றாத வண்மை விநாயக வேளுள்ளும் போலவென்று
மொன்றான நம்மிரு வேமுள்ளும் வேறுபட் டோரிரண்டா
இன்றான தென்னைகொ லோமறைத் தாயென்னை யேந்திழையே.

பாங்கி கையுறைபுகழ்தல்.

4287. பாருக் கணிகல மான வியாசைப் பதியெனும்பே
ரூருக் கணிகல மான விநாயக வுத்தமன்போல்
வாருக் கணிகல மான முலைமட வாய்நினல்குற்
றேருக் கணிகல மான திம்மாவின் செழுந்தழையே. (கஉஎ)

தோழி கிழவோன்றுயர்நிலைகிளத்தல்.

4288. வண்டார் மலர்க்குழன் மாதே யியற்கவி வாணர்க்குப்பொற்
பண்டார மன்ன விநாயக மால்வரைப் பாசின்முலை
கொண்டார வன்பிற் பிடிக்கினி தூட்டுங் குழக்களிற்றைக்
கண்டார்பின் றம்மையுங் காணார்நின் றூரந்தக் காவலரே. ()

மறுத்தற்கருமை மாட்டல்.

4289. காவலர் நாடொறுங் கொய்துகொய் தீர்ந்து கவினிழந்த
பூவலர் காவிற் றழையு மவர்முன் புகலென்பொய்யும்
ஏவலர் வாள்விழி யார்வேள் விநாயக வேந்தற்புகழ்
பாவலர் தங்கலி போலில்லை யாயின பான்மொழியே. (கஉகூ)

தலைவன்குறிப்பு வேறாக நெறிப்படக்கூறல்.

4290. நீலத்தை வென்ற விழியாயெஞ் ஞான்று நிலைக்குஞ்சைவ
சீலத்தை யேகொள் விநாயக மால்வெற்பர் சிந்தையென்னே
சூலத்தை யேந்தி திருநீ றுடலெங்குந் தோயவிருந்
தாலத்தை யாளிற் றனங்கை வருமென்று சாற்றினரே. ()

தோழி தலைவியை முனிதல்.

4291. கல்லேன் கொடையன்றி யென்னும் விநாயக காமன்வெற்பில்
வல்லே ரிளமுலை யாய்நின் னுயிரினு மாறுறுவே
றல்லே னெனநினை யாதொழிந் தாலிவ் வடாதமொழி [யே.
சொல்லேன் பொறுத்தருள் வாயடி யேன்கொடுஞ் சொற்பிழை

தலைவிபாங்கியை முனிதல்.

4292. இயலார் முழுமதி தோய்ந்திட வாம்ப லினிதலர்த்த
முயலா நிற்பாரென வன்கலிக் கோடை முழுதொழிக்கும்
புயலா மெனுங்கை விநாயக பூபன் பொருப்பரெனக்
கயலா ரெனவிவ ளெண்ணிப் பலசொல் லுறைந்தனளே. ()

தலைவி கையுறையேற்றல்.

4293. மல்வாய் தருநல் வியாசை விநாயக வள்ளல்வெற்பி
லெல்வாய் தருமவ் விறைவர் கையேறி யிருந்தயலார்
பல்வாய லர்தரு மிம்மாந்தழை யென்கைப் பட்டமைதன்
வில்வா யலர்தெறு மேற்றரு வாய்தளிர் மெல்லியலே. (கஙங)

இறைவிகையுறையேற்றமை பாங்கி யிறைவற்குணர்த்தல்.

4294. பொய்யா வளமை விநாயக பூபன் பொருப்பர்தழை
செய்யார் குழலியென் றுமுன மேற்று நெருங்கிவளர்ந்
தையா ரிளமுலை மீதணைத் தாளதை யாய்வுறினின்
கையாக வுன்னினள் போலு மிறைவநின் கைத்தழையே. ()

பாங்கி தலைமகற்குக்குறியிடங் கூறல்.

4295. மந்தார மன்ன விநாயக மால்வெற்ப மாமதியோன்
வந்தா ரழற்கதி ரோன்வெப்ப மாற்ற மருவுதல்போல்
நந்தார் தடங்கு மேவ விருட்குறு நன்மனையாய்க்
கொந்தார் தருதண் பொழில்பகல் யாங்கள் குலாவிடமே. ()

பாங்கி குறியிடத்திறைவியைக்கொண்டு சேறல்.

4296. முகைகாட்டு மாமுலை யார்வே ளெஞ்ஞான்று முயன்றறத்தின்
மிகைகாட்டு செய்கை விநாயக பூபதி வெற்பிலுன்கட்
பகைகாட்டு நீலங்கொய் தேமயி லாடலும் பார்க்கவகிற்
புகைகாட்டு பூங்குழ லாய்வரு வாய்பைம் பொழிலிடத்தே.()

பாங்கி தலைமகளைக் குறியிடத்துய்த்து நீங்கல்.

4297. களங்கொண்ட வாள்விழி யாய்நின் கருங்குழற் காணிற்கயத்
தளங்கொண்ட மேவலரைப்பிணித்துயான்சிறைசாரவைப்பேன்
வளங்கொண்ட சீர்த்தி புனையும் விநாயக வள்ளல்வெற்பில்
உளங்கொண்ட காவலரைக்கைக்கொள்வாயிவணுற்றுவந்தே.

இறைவன் குறியிடத்தெதிர்ப்படுதல.

4298. காரோ டுறழ்கை விநாயக மாலவெற்பிற் காமன்வெய்ய
போரோ டுருத்த வமையத் தவன்வெவன புறந்தரப்பூண்
வாரோ டுலவு களிறமெருடும் வில்லொடும் வாளொடுந்
தேரோடும் வந்திங் குதவிய தாலென் செழுந்தவமே.(கஙஅ)

புணர்ச்சியின் மகிழ்தல்.

4299. பாரின்ப மெய்துற வந்த விநாயக பாரிவெற்பிற்
றாரின்ப வார்குழ லார்மணி யல்குற் றடமுழுகி
வாரின்பக் கோட்டிவர்ந் தேசெங் குமுத மதுவுணுமிப்
பேரின்ப மன்றிமற் றோரின்ப முண்டென்றல் பேதைமையே.

புகழ்தல்.

4300. தெருண்டோட வெம்மட மோட்டும் புலவர்முன் சேர்ந்தகலி
மருண்டோட வோட்டும் விநாயக மால்வெற்பின் மஞ்சனத்தை
யிருண்டோட வோட்டுங் குழலார் முகத்தை யெதிர்த்தல்லவோ
வெருண்டோடி யேபுக லின்றி மதிகடல் வீழ்ந்திடலே.(கசo)

தலைமகளைத் தலைமகன் வியத்தல்.

4301. மாணாத வின்மையைக் காணா விநாயக வள்ளலருள்
கோணாத வாண்முகங் காணுப புலவருங் கூருமொளி
பூணாத வன்கதிர் காணக் கமலமும் போலநினைக்
காணா தலமரும் பாங்கியர் காணச்செல கார்மயிலே, (கசக)

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

4302. ஏங்கஞ் சற்றும்மினி யென்றிரங் தோரிறு மாப்பக்கவி
யாங்கஞ்ச நல்கும் விநாயக மால்வெற்பி லம்பொன்செய்த
பூங்கஞ்ச நேர்முலை யாய்நின் னடியெழில் போற்றப்புக்க
தேங்கஞ்ச மீதரு ளாற்காண் மதிபகைச் சீற்றமற்றே. (௧௪௨)

பையுள் பாங்கற் கூட்டல.

4303. மாலே யனவளி யானிரங் தோர்மற் றவரிடைச்சென்
றேலே மெனநனி நல்கும் விநாயக வேந்தல்வெற்பில்
வேலே யனவிழி யாரு ளூடுவுள் விளங்குமதி
போலே விளங்கி விளையாடப் போந்தருள் பூங்கொடியே. ()

நீங்கித்தலைவற்கோம்படை சாற்றல்.

4304. தென்னை யுறக்கொண் டமதற்குற ளிற்றையுஞ் சேர்தனிச்சொ
றன்னையு நாப்பணின் றேகூட்டு மாசெனத் தண்மணியும்
பொன்னையும் வீசும் விநாயக பூபன் பொருப்பிடத்தில்
நின்னையு மின்னையுங் கூட்டு மெனையு நினைத்தருளே. (௧௪௪)

உலகியன் மேம்பட விருந்து விலக்கல்.

4305. வசையுங் குறையு மிலான்செந் தமிழ்க்கவி மாலையும்பே
ரிசையும் புனையும் விநாயக மால்வெற்பி லேனத்தின்மென்
றசையும் பைந்தேனுந் தினைமூ ரலுமெந் தழைக்குடில்வாய்
மிசையு நசையுடன் றங்கிநின் னூர்க்குப்பின் மேவரசே. ()

விருந்திறை விரும்பல்.

4306. மெய்சார்ந்த சீர்த்தி விநாயக பூபன் வியாசைநக
ரைசார்ந்த வேள்வி யழல்சார்ந்த வூனம ரர்க்கமுதாம்
பைசார்ந்த வல்குற் படாமுலை யீருங்கள் பங்கயப்பூங்
கைசார்ந்த வூனெனக் கின்னமுதா மெந்தக் காலமுமே. ()

ஒருசார்பகற்குறி.

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கல்.

4307. பாமாலை யுஞ்சொரி தேன்வண் டினம்பரு குங்குவளைப்
பூமாலை யுங்கொள் விநாயக வேள்வெற்பிற் பொற்றொடியாய்
மாமாலை நண்ணிய வென்னுயிர் வாட்ட வளர்நெருப்பிற்
காமாலை யென்பெயர் மங்கல மோமற் றறிகிலனே. (௧௪௭)

பாங்கி புலம்பல்.

4308. பாவும் புகழ்செய் விநாயகமால் வெற்பர் பன்மலரைத்
தூவும் பொழிலிற் பிரிய விவளுயிர் சோரவொளி
மேவும் பருதியைத் தேரொடு மாழ்கடல் வீழ்த்தவெய்ய
வாவும் பரியினம் பல்லூழி காறுமன் வாழியவே. (௧௪௮)

தலைவனீடத் தலைவிவருந்தல்.

4309. நீடுங் திருவன் விநாயக மால்வரை நின்றிபத்தின்
கோடுங் தரளமுங் காந்தளும் பூங்குமி ழுந்திரையு
நாடுஞ் சுழியுங்கொண் டேயாய வெள்ள நணுகுமென்று
வாடுமெற் கைய கலந்தர வந்திலர் மன்னவரே. (௧௪௯)

தலைவியைப்பாங்கி கழறல்.

4310. தேடும் புகழ்கொள் விநாயக மாலுந் திருவுமன்றிக்
கூடு மவரிற் பிரியா ரெவர்நினைக் கூடியெழில்
நீடுந் தலைவர் பிரிந்தன ரென்று நினைந்திரங்கல்
நாடு மயலோர் நகைவிருந் தாம்பிறை நன்னுதலே. (கூ௰)

தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்.

4311. குறிப்பான் வறிஞருண் ணேய்புக லாமுன் குறித்ததனை
மறிப்பான் முயலும் விநாயக மால்வரை வாய்மனத்துட்
செறிப்பான நோயினைத் துந்தெரித் தாலுந் தெரியலர்முன்
முறிப்பான் முயன்று மொழிவா ரினுமுழு மூடரின்றே. ()

பாங்கியொடுபகர்தல்.

4312. வரியார் மலர்த்தொடை யான்புல வோரை மறந்துமென்றும்
பிரியா துறையும் விநாயக மால்வெற்பர் பெண்ணணங்கே
முரியா வமுதுற ழின்ப முலைமேன் முயங்கித்தந்து
தரியா விடமுறழ் துன்பம் பிரிந்தின்று தந்தனரே. (கு௨)

பாங்கியச்சுறுத்தல்.

4313. வனைகாத் தழையும் வியாசையர் கோனெழின் மாமலரங்
கனைகாத்த மார்ப விநாயக மால்வரைக் காரிகைநீ
நனைகாத்த தோளர் நசைகாத்த நெஞ்ச நலிதல்கண்டாற்
றினைகாத்த னீங்கி மனைகாத்தல் பூணச் செயுமன்னையே. ()

நீக்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

4314. பொன்னைப் புணரும் புயத்தான் விநாயக பூபன்வெற்பில்
என்னைப் புணர்ந்திடு மின்னுயி ராய வெழிலிறைவன்
றன்னைப் பிரிந்தியான் றளர விதித்துத் தவளமலர்
மின்னைப் புணரும் விதியை விடுங்கொலென் வெம்பழியே. ()

தலைவிக்கவன்வரல் பாங்கி சாற்றல்.

4315. தாரோதை வண்டினஞ் சூழப் புனைபுயன் றண்டமிழோர்
சீரோதை மல்கும் வியாசை விநாயக செம்மல்வெற்பிற்
காரோதை கேட்டு மகிழ்மயில் போனின் கணவர்மணித்
தேரோதை கேட்டு மகிழ்வாய் மயிலியற் சேயிழையே. ()

சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

4316. பாங்கை யுறும்புல வோர்க்கு விநாயக பாரிமலர்ப்
பூங்கை பொன்வீசிக் கலிப்பகை தீர்த்தல் பொரக்கடியுந்
தீங்கை யுறும்பைஞ் சிறைக்கிள்ளை யார்க்கித் தினைப்புனத்தின்
வேங்கை பொன்வீசித் தழற்பகை தீர்த்திடு மெல்லியலே. ()

முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

4317. விஞ்சுகர் தம்புனை வோனிரப் போர்சுக மேவுறநல்
குஞ்சுக மேசுக மென்னும் விநாயக கோன்வரையிற்
கிஞ்சுக வாயிவ ளஞ்சுகங் கைவிட்ட கேள்வரைச்சேர்ந்
தஞ்சுகங் காண்மறப் பீர்மற வாதிரு மஞ்சுகத்தே. (கருஎ)

முன்னின்றுணர்த்தல்.

4318. தாவேங்கை யென்றவர் வெங்கலி மான்றறி யாதகற்று
மாவேங்கை யன்ன விநாயக பூபன் வரையிடத்திற்
பூவேங்கை கண்ட வெம்மாடுை யாமும் புனத்தையினிக்
காவேங்கை தீண்டேங் கவனுந் தழலுமெங் காவலனே. ()

முன்னின்றுணர்த்தி யோம்படைசாற்றல்.

4319. ஓங்கிய கல்வி யுடையார்த னண்மை யுறலொருவி
நீங்கிய போது மறவா விநாயக நேயன்வெற்பிற்
றூங்கிய வேலண்ண லேபுன நீத்தில்லஞ் சார்ந்திடினும்
வீங்கிய மாமுலை யாளை மறந்திடன் மேன்மையன்றே. (கருசு)

கிழவோன் றஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்.

4320. அம்பும் வெஞ்சாபமுங் கோபமுங் கைக்கடங் காக்களிறுங்
கம்பு மங்தேரு முளாங் துணையைக் கவர்ந்துகுன்றர்
நம்புந் தரும விநாயக மால்வரை நண்ணினர்வேள்
வெம்புஞ் சமரைநெஞ் சேயெத் துணைகொண்டு வெல்குவதே.

பகற்குறியிடையீடு.

இறைவனைப்பாங்கி குறிவரல்விலக்கல்.

4321. தினையா யிருந்ததென் றேமகிழ்ந் தேம்பின் செலச்செலத்தி
வினையாய் வளர்ந்து முதிர்ந்த திவ்வேனன் மெலிந்தவரை
யனையாய்ப் புரக்கும் விநாயக வேள்வெற் பணங்கினைநீ
நினையா வரலைய வன்னைபல் கானினை யாவருமே. (கசுக)

இறைவியைக் குறிவரல்விலக்கல்.

4322. மின்னை யுறழு மிடையாய் விநாயக வேள்வரையின்
மன்னையுட் கொண்டு தினைக்காவ னீத்து மதிமறந்த
வுன்னையும் வார்முலைப் பொன்னையு நோக்கி யுருத்துநின்றே
யென்னையு நோக்கின ளன்னைநீ வார விளம்பொழிற்கே ()

இறைமகளாடிடநோக்கியழுங்கல்.

4323. ஏவையும் வெல்விழி யார்வேள் புகழ்க்கிட மாப்புலவர்
நாவையும் பாவையுந் தந்த விநாயக நண்பன்வெற்பிற்
பூவையுந் தந்தெம் புணர்முலை மீது புணருமின்பக்
கோவையுந் தந்தவிக் காவையு மோவக் குறித்தனமே. (கசுங)

பாங்கி யாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

4324. ஆவி யுறையும் வியாசை விநாயக வண்ணல் வெற்பின்
மேவியும் பால்வந்தவ் வாவியன் ஞர்மன் விஞவிவண்
பாவி யுலாவு மயில்காடன் னூர்க்கந்தப் பாவியும்மை
யோவியு மாவி யுடனேசென் றுளென் றுரைமின்களே. ()

பின்னுணெடுத்தகை குறிவயினீடுசென்றிரங்கல்.

4325. அண்டலை யுற்றவர் தாரு விநாயக வண்ணன்மணி
மொண்டலை வீசுந் தடஞ்சேர் வியாசை முருகுவெற்பிற்
கொண்டலை யேந்துங் கொடிபோ லுலாவென் குலதெய்வமிவ்
வண்டலை தண்டலை வாயெனையாள வாரா தென்னே. (கசுரு)

ஓரூர்க்களர்ச்சிமறுகல்.

4326 தயிரோ வியடத மில்லா மயிலையிற் சத்திரத்தான்
செயிரோ வியபுகழ் சேரும் விநாயக செம்மல்வெற்பில்
அயிரோ வியவென்ற வின்மொழி நங்கை யகலவந்தோ
உயிரோ வியவுட லம்போன் றிருந்ததில் வொண்புண்மே ()

குறுந்தொடிவாழூர்நோக்கி மதிமயங்கல்.

4327. ஒள்ளிய பாவலர் சிந்தாமணி பொரு வோவுகொடை
வள்ளியர் கண்மணி வான்சீர் விநாயக மால்வரையிற்
றெள்ளிய வானமு தன்ன ருறையுஞ்சிற் றூரிதென்றே
யுள்ளிய வென்னெஞ்ச மேயென்கொ லோவின் றுயங்குவதே.

இரவுக்குறி.

இறையோனிருட்குறிவேண்டல்.

4328. மண்ணிற் சிறந்த வியாசை விநாயக வள்ளல்வெற்பில் [வாழ்
விண்ணிற் சிறந்தவெய் யோன்கடன் மூழ்கினன் மென்மலர்
பெண்ணிற் சிறந்த வமுதனை யீர்நும் பெரும்பதியி
லெண்ணிற் சிறந்த விருந்தெனைப் போலுமக் கெய்தரிதே.()

பாங்கிநெறியினதருமைகூறல்.

4329.. இதங்காட்டு மின்சொல் விநாயக மால்வெற் பிருஞ்சுனைப்புற்
புதங்காட்டு மாமலை காரண மாகப் புரவலநீ
கதங்காட்டு செங்கட் டறுகட் கரியின் கவுள்கவிழ்த்த
மதங்காட்டு வெள்ளங் கடந்தெஞ் சிற்றூர்க்கு வரலரிதே. ()

இறையோனெறியினதெளிமைகூறல்.

4330. இரவும் பரவுங் குழலீர் நும்மல்கு லிடைமுலையாம்
அரவு மரியுங் கரியுமுன் கொண்ட வடிமையென்றெற்
பரவு மரவு மரியுங் கரியும் பணிந்திறைஞ்சி
வரவும் பெற்றேனஞ்ச வேன்கொல் விநாயக மால்வரைக்கே.

பாங்கியவனாட்டணியியல்வினாதல்.

4331. வீசுந் திவலைப் புனலூர் தழையும் விளரிவண்டு
மூசு மலரும் பயில் நிழலு முழுப்புலவர்
பேசும் புகழ்செய் விநாயக பூபன் பிறங்கலன்பா
பூசும் விரையுமென் னூவுங்க ணாட்டுறை பூவையர்க்கே. ()

கிழவோனவனாட்டணியியல் விளைதல்.

4332. வேட்டணி சேருமென் னாட்டணி கூறியென் மெய்ப்புலவர்
பாட்டணி தோளன் விநாயக மால்வெற்பிற் பைந்தொடிநின்
னாட்டணி மாதர்கள் சூட்டணி யுந்நன் னிழலுமுலைக்
கோட்டணி சந்தமுந் தோட்டணி மாலையுங் கூறுகவே.(௧௭௨)

அவற்குத்தன்னாட்டணியியல் பாங்கிசாற்றல்.

4333. கனக்காவி யமுணர்ந் தோர்கரு வூலங் கமலமின்னை
டனக்காவி யன்ன விநாயக மால்வெற்ப சந்தணிந்து
வனக்காவி யம்மலர் மாந்தழை வேய்ந்து வளர்தருசந்
தனக்கா வியங்குவ ரெங்கள்பொன் னாட்டுறை தையலரே. ()

இறைவிக்கிறைவோன் குறையறிவுறுத்தல்.

4334. கரவலர் நெஞ்சங் காணுக் கபாலி கழலலரே
விரவலர் நெஞ்ச விநாயக பூபதி வெற்பரென்றும்
புரவல ராயினு மின்றிர வின்கட் பொலியுநின்வா
யிரவலர்த் தேன்கொ ளிரவல ராகுவ ரேந்திழையே. (கஎச)

கோதிறைவி நெஞ்சொடு கிளத்தல்.

4335. தருவா யெனவிரந் தோர்க்கைந் தருவாய்த் தனம்வழங்கிக்
குருவாய் புகழ்கொள் விநாயக மால்வெற்பிற் கோளரிகட்
குருவாய் களிறஞ் சதரினெஞ் சேநம தோருயிரை
வருவா யெனவலித் தாள்வன்க லோவிவள் வன்னெஞ்சமே.

நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல்.

4336. அடல்புரி கூற்றனை வாளி திரிகங்கு லார்வமொடு
விடலரு மன்பர் வரல்புகன் றால்யான் விளம்பலென்னே
மடலவிழ் மாலை விநாயக பூபன் வரையணங்கே
யுடலம் வெறுப்பதுண் டோவொரு வாத வுயிரினையே. (கஎசு)

நேர்தலைமைபாங்கி நெடுந்தகைக்குரைத்தல்.

4337. கொழுதுய வண்டுறை தாரண்ண லேநின் குறிப்பிசையத் [ம்
தொழுதுய லாரவ ளெனஞ்சங் குழைத்தவென் றுன்பமெல்லா
பழுதுய லாத விநாயக பூபன் படாபுகழ்போல்
எழுதுயுங் கூறியு முறமு துயாவர்க்கு மிங்கிலத்தே. (கஎஎ)

குறியிடைக்கூறித் தாய் துயலறிதல்.

4338. மயிலைப் பொருமிய லாய்நம் புனத்தன்று வந்தவெறி
யயிலைப் புணர்ந்தகை வாரணங் காவை யலைத்துப்புள்ளின்
றுயிலைத் தொலைத்து விநாயக பூபன் சுடர்க்கிரியில்
வெயிலைப் பொருமணி யூசலும் வீழ்த்தது மேவியின்றே. ()

இறைவிக்கு இடைவன் வரவறிவுறுத்தல.

4339. குணவாள மேருக்கு விநாயக பூபன் குளிர்சிலம்பில்
நிணவா ளவிர்மருப் பியானைசெய் துன்ப நினைந்திலராய்
மணவார் முலைக்களி யானைசெ யின்ப மதித்துரவிற்
றணவாத காதலர் வந்தார் தலைந்துந் தளிரியலே. (கஎகூ)

அவட்கொண்டுசேறல்.

4340. பொறைதாங்கு முன்ன விநாயக பூபன் பொருப்பிடத்திற்
பிறைதாங்கு வாணுதற் பேரமர்க் கட்செய்ய பெண்ணமுதே
கறைதாங்கு வேறகைநங் காதலர் காதற் கடலகத்து
நறைதாங்கு கொங்கைக் குடங்கொண்டு நீந்த நடந்தருளே.()

குறியுய்த்தகறல்.

4341. சூதே யிலாத விநாயக பூபன் சுடர்க்கிரிமேற்
போதே யெனுமுகப் பூங்கொடி யேவெய்ய போர்செய்பகை
காதே யெனக்கொளுந கட்பகை நீலத்தைக் கைக்கொணகை
வாதே புரிமுல்லை நாண்முகை கொண்டு வருகுவனே.(கஅக)

வண்டுறைதாரோன் வரவெதிர்ப்படுதல்.

4342. அரவிற் பொலியல்கு லாரணங் கேயெனை யாண்டின்பமே
தரவிற் பொலிமலர் மாளிகை நீத்திவண் சாரநல்லோர்
வரவிற் கெதிர்கொள் விநாயக மால்வெற்பில் வான்கதிர்செல்
விரவிற் றிறந்தது மென்றவ மோமெல் லிதழ்க்கதவே. ()

பெருமகளாற்றினதருமை நினைந்திரங்கல்.

4343. தடங்காட்டு செல்வ வியாசை விநாயக தாருவெற்பிற்
கடங்காட்டு வெங்கரி யுங்கதங் காட்டுகண் டரவமும்
படங்காட்டு நாகமும் பாய்காட் டிருளிற் படரதரில்
விடங்காட்டு வேலவென் னேவெனை வாழ்விக்க மேவியதே.()

புரவலன்றேற்றல்.

4344. விண்போய சீர்த்தி விநாயக வேள்பொன்னை வீசுகரத் [ன்
தண்போதின் முன்கலி யில்லாத் தகையெனத் தண்ணியமெ
பண்போ லினியசொல் லாயொளி வீசிப் படரரிநின்
கண்போல் விளங்குமென் கைவேலின் முன்னந்த காரமின்றே.

புணர்தல்.

4345. சிவமே பொருளென் விநாயக வேள்வெற்பிற் சேர்தருமென்
பவமே பவமப் பவப்பஃப ளுகப் பருகுந்தொறு
நவமே தருமிவள் வாயமு தம்பெற நான்முன்செய்த
தவமே தவமற்றை யோர்பவ முந்தவ மும்மவமே. (கஅரு)

புகழ்தல்.

4346. வானுஞ்சிந் தாமணி யுந்தரு வும்மிரு மாநிதியு
மானுஞ் செழுங்கை விநாயக பூபன் வரையணங்கே
யூனுமுயிரு முருகச்சொற் றேனுட னூறலெனுந்
தேனுந் தருநின்செவ் வாய்க்கொத்த வாம்பலைத் தேர்கிலனே.

இறைமகளிறைவனைக் குறிவரல்விலக்கல்.

4347. வானோர் புகழும் விநாயக பூபன் வரைச்சரியிற்
கானோ கொடிது கரியோ கொடிதக் கரிகொலரி
மானோ கொடிது வழியோ கொடிதுன் வரவெளிதோ
வூனோ டுறுமென் னுயிர்க்குயி ராகிய வுத்தமனே. (கஅஎ)

அவனிறைவியை இல்லயின்விடுத்தல்.

4348. ஏட்டை வெறுத்து முழுப்புல வோர்சொ லினியதமிழ்ப்
பாட்டை விரும்பும் விநாயக மால்வெற்பிற் பாய்மதமாக் [னக
கோட்டை முலையெனக் கொண்ட பொன்னே சென்றுன்கோக
வீட்டை விளக்கு மணிவிளக் காக விளங்குகவே. (கஅஅ)

இறைவியையெய்திப்பாங்கி கையுறைகாட்டல்.

4349. இல்லை யெனவில்லை யென்னும் விநாயக வேந்தல்வெற்பில்
வில்லை வெறிநின் னகையோ டெதிர்த்துன் மெலிந்துடைந்த
முல்லை யிஃதொற் றிரிமுல்லை வல்லாய்நின் முனிவடங்க
வல்லை நிகருமைம் பாலை யணிய வடைந்ததுவே. (கஅகூ)

இற்கொண்டேகல்.

4350. அம்மனை யாக வலர்மே வணங்க கலாமல்விளங்
கும்மனை யாய வியாசை விநாயக கொண்டல் வெற்பில்
விம்மனை வின்முலை மெல்லிய லாய்துயின் மேவலொரீஇ
நம்மனை தேடுமுன் னம்மனை தேடி நடந்தருளே. (௧௩௫0)

பின்சென்றிறைவனைவரவுவிலக்கல்.

4351. நாட்டி லுயர்தொண்டை நாட்டு விநாயக நண்பற்குயர்
பாட்டிற் பெருகும் புகழ்போ லெமக்குப் பழிபெருகும்
வீட்டிருஞ் சல்லியம் வல்லிய மேமுன் விலங்குதிரி
காட்டிடை வேறுணை யாக்கொண்டு வாரற்க காவலனே. ()

பெருமகன்மயக்கல்.

4352. தாவென்ற வரைமுன் வாவென்று செம்பொன் றருதலன்றிப்
போவென்ற லோவும் விநாயக மால்வெற்பிற் பூங்கொடியே
யேவென்ற கட்பொன்னைத் தாவென்று மேவிடு மென்னையிவ
ளேவென்ற லன்றிப்பின் வாவென்ற னீயென்று மோவினையே.

தோழி தலைமகடுயர்கிளத்து விடுத்தல்.

4353. பொலிகாட்டு வள்ளற் கிவனென் விநாயக பூபன்வெற்பில்
வலிகாட்டு கைந்நாக முங்கறை நாகமு மன்னியிருண்
மலிகாட்டுள் வெவ்வதர் நீந்திய தோரச்செவ் வாய்வயிர்வைத்
தொலிகாட்டு நண்ப நலிகோட்டு வார்முலை யொண்டொடிக்கே.

திருமகட்புணர்த்தவன்சேறல்.

4354. அதிர்முர சோய்வில் வியாசை விநாயக வண்ணல்வெற்பின்
முதிர்சின வேழ மருப்புகு முத்த முகிழ்முலையாள்
கதிர்நகைக் கொப்போ தெனவென் னெதிர்கதிர் கான்றிளமெல்
வெதிர்புரை தோளணங் கேயிருள் வீட்டிடு மேவெனக்கே. ()

இரவுக்குறியிடையீடு.

இறைவிக்கிறைவரவுணர்த்தல்.

4355. வீடாத செல்வ விநாயக பூபன் வியன்புகழைப்
பாடாத பாவலர் போற்புன்னைச் சேக்கை பயிலனங்கள்
கூடாத வெந்துயர் கூடிநின் றின்றுயில் கூடலொரீஇத்
தேடாத பொன்னனை யாயென்னை கொல்லோ சிலம்பினவே.

தான்குறிமருண்டமை தலைவியவட்குணர்த்தல்.

4356. நிறைகொண்ட செல்வ விநாயக மால்வெற்பி னேரிழையாய்
கறைகொண்ட வேலர் குறியாமற் றென்னைக் கருதிச்சென்றேன்
நறைகொண்ட காவிடை யஞ்சக மஞ்சக நண்ணியது
சிறைகொண்ட வஞ்சமு மஞ்ச மெனமுற் றிகழ்ந்ததுவே. ()

பாங்கிதலைவன் றீங்கெடுத்தியம்பல்.

4357. விரியுந் தமிழ்ப்புல வோரை வறுமை வெறுத்தகலப்
புரியுஞ் செழுங்கை விநாயக பூபன் பொருப்பினஞ்சம்
வரியுங் கலந்த விழியாய் நமதுயிர் வாழவெண்ணித்
தெரியுங் குறிசெய்வ ரோகலை யாவுந் தெரிந்தவரே. (௧௩௫௭)

புலந்தவன்போதல்.

4358. காமரை நீற்றியு மாமலை யீன்ற கரும்பைவைத்த
வாமரை யுள்ளகம் வைத்த விநாயக வள்ளல்வெற்பிற்
றாமரை மாளிகைத் தாக்கணங் கின்பந் தனைநினைந்து
நாமரை யாமத்தென் ளுவந்து நின்று நலிதனெஞ்சே. ()

புலந்தபின் வறுங்களந்தலைவிகண்டிரங்கல்.

4359. கணமாலை வென்ற கொடையான் புரவிற்பைங் காசைமலர்க்
குணமாலை வென்ற விநாயக பூபன் குளிர்சிலம்பில்
நிணமாலை வெங்கதிர் வேலன்பர் தாம்வந்து நீதழைய
மணமாலை வேய்ந்திட மாதவஞ் செய்தனை மாதவியே.(௧௯௯)

தலைமகள் பாங்கியொடுரைத்தல்.

4360. உண்மையுந் தண்மையுங் கண்மையு மொண்மையு மோங்குபெரு
வண்மையுங் கொண்ட விநாயக பூபன் வரையன்பர்முன்
பெண்மை சிறந்த வணங்கே நினையான் பிரியப்பெரு
அண்மைய னென்றன ரன்மைய ராயின ராயிழையே.(௨௦௦)

தலைமகளவலம் பாங்கிதணித்தல்.

4361. பேறுத வெய்ய வறுமையைப் பாவலர் பெற்றுழன்று
நாறுத வண்ணம் புரியும் விநாயக நம்பிவெற்பிற்
கோறுத வன்பர் குறியிழை யார்பைங் குழால்வெங்கொலை
காறுத வேங்கையின் மேலாநி நீள்கவி கண்டனனே. (௨௦௧)

இறைவன்மேற்பாங்கி குறிபிழைப்பேற்றல்.

4362. சிந்தா குலமென்றுஞ் சேரா விநாயக செம்மல்வெற்பில்
நந்தாத வன்புடை யார்போ லுழன்று நனிமறந்த
கொந்தார் தொடையீ ருமதூர் வரயாங் குறித்தனம்பின்
வந்தாலு மெம்மை மதியீரென் றேயெண்ணி வந்திலமே. ()

இறைவிமேலிறைவன் குறிபிழைப்பேற்றல்.

4363. வான்மறந் தாலு மழையை வியாசையை மாமலர்வாழ்
மான்மறந் தாலுங் கொடையை விநாயக வள்ளலெனுங்
கோன்மறந் தாலுங் குறிக்கணின் றேனைநின் கோலமின்று
டான்மறந் தாளென் றியான்மற வேனிது சத்தியமே. (௨௦௩)

தலைமகள்குறிமருண்டமை தோழிதலைவற்குணர்த்தல்.

4364. பூங்கனி யோடுஞ்செந் தேனொடும் பாலொடும் போந்தவர்க்குள்
ளாங்கனி வோடினி தூட்டும் விநாயக வண்ணல்வெற்பின்
மாங்கனி வீழத் தடத்துன் குறியா மதித்திருளிற்
றேங்கனி மென்மொழி யாள்சென்று நின்று திரும்பினளே.()

அவன்மொழிக்கொடுமை பாங்கிடவட்குணர்த்தல்.

4365. மாலையி லேவண் டிறங்கும் விநாயக மால்வரைசூழ்
சோலையி லேகுறி நின்றுழன் றேமென் றுடியிடையாய்
வேலையி லேகதிர் தோன்றுங் குறிபுள் விளங்குறச்செய்
காலையி லேசென் றனனென்று சொற்றனர் காவலரே. ()

என்பிழைப்பன்றென்றிறைவிசோதல்.

4366. வான்றுயின் மாட வியானை விநாயக மால்வரையிற்
கான்றுயில் சோலைச் சருகுதி ரோசையெக் கண்ணுறினுந்
தேன்றுயில் வார்குழ லாயத் திசைவர றேர்ந்துநின்ற
யான்றுயின் றேனென் றவர்புகன் றுலென் னியம்புவதே. ()

தாய்துஞ்சாமை.

4367. மயிலா புரியில் விநாயக வேள்செய் மடத்திலமு
தயிலா தவர்பசி போற்காம மல்க வயருமெனைக்
குயிலா மெனுமொழி யாயன்பர் கூடல் கொளாதனைக்குத்
துயிலா வரந்தந்த தெய்வமும் வாழ்கவித் தொல்புவிக்கே. ()

நாய்துஞ்சாமை.

4368. தோளியை மாலை விநாயக பூபன் சுடர்க்கிரிமேல்
வாளியை வென்ற விழியாய் மலியிருள் வந்துறங்கக்
கூளியை யுஞ்செயும் யாமத் தயில்கரங் கொண்டுவரு
மாளியை ஞாளி குரைத்திங் குரும லகற்றியதே. (உ0அ)

ஊர்துஞ்சாமை.

4369. பாவினை யேசொல் புலவோர் வெறுப்பப் பசும்பொன்றந்த
வாவினை நீக்கும் விநாயக பூபன் மணிவரைமேல்
ஏவினை நேரும் விழியாய் விழாப்பெய ரேய்ந்துவெய்யேன்
றீவினை யேவந்திவ் வூருறங் காவணஞ் செய்ததுவே. (உ0கூ)

காவலர்கடுகுதல்.

4370. முடியா வறிஞர் வறுமை கடிந்து முடிவிலவர்க்
கடியா விநாயக வேள்வரைக் காவலர் கைக்கடிப்பான்
அடியாப் பறையில் லெனிலடி யேனையிவ் வாரிருளாம்
வடியாக் கடனின் றெடுப்பானெவ் வாறன்பர் வந்திடலே. ()

நிலவுவெளிப்படுதல்.

4371. வள்ளங் கடந்து வளர்முலை யாய்தன் மனத்திலென்றுங்
கள்ளங் கடந்த விநாயக மால்வெற்பிற் காதல்செய்நான்
உள்ளங் கடந்த மயல்வெள்ள நீந்த வுதித்தநிலா
வெள்ளங் கடந்திடு மோவன்பர் தேரின் வியன்பரியே.(உகக)

கூகைகுழறுதல்.

4372. காக்கையுட் கொண்ட விநாயக மால்வரைக் காதலரெற்
காக்கை கெடுக்கமெய் கெட்டுமுன் றுக்கழிந் தூக்கலந்த
காக்கைதன் பேர்முன் னெழுத்திரட் டித்துக் கரைவலியைக்
காக்கைமுன் வெங்கதி ரோன்வரிற் காண்பன் கருங்குழலே.

கோழிகுரல்காட்டுதல்.

4373. சூற்படை யேந்து மயிலைக் கபாலி துணையடியான்
மாற்படை வென்ற விநாயக பூபன் வரையனையாய்
வேற்படை யேந்தி வருமத யானை விலகவொரு
காற்படைப் புன்புள் கரைதல்வெய் யேன்செய் கடுவினையே.

## வரைதல்வேட்கை.

தலைமகனைப்பாங்கி பருவரல்வினவல்.

4374. பண்டோர் கரவாற் புடர்கூர் கரியைப் பரிந்துவிசை
கொண்டோடிக் காத்த விநாயக பூபன் குளிர்சிலம்பில்
உண்டோவெம் பாற்குறை நம்மனே யான்முனி வுண்டுகோலோ
வண்டோ விடுங்குழ லாயுரை யாயுள் வருந்தியதே. (உகச)

அருமறைசெவிலியறிந்தமைகூறல்.

4375. பார்கண்ட சீர்த்தி விநாயக பூபன் பனிவரைமேல்
வார்கண்ட கொங்கை மதிகண்ட வாண்முக மங்கைநல்லாய்
போர்கண்ட வேலவர் கார்கண்ட சோலையிற் புக்கணிந்த
தார்கண்ட விர்மெய்யிற் பிர்கண் டனையையுஞ் சார்ந்தனளே.

தலைமகன் வருக்தொழிற்கருமைசாற்றல்.

4376. கூவி யுலாவுங் களத்திலங் கேசன் குலையவில்லும்
வாளியுங் கொண்ட விநாயக மால்வெற்பின் மன்னவர்வெவ்
வாளியும் வெம்புலி யும்பேயு நீத்திங் கணைந்திடினு
ஞாளியு மம்புலி யுந்தாயு நீத்தெனே நண்ணரிதே. (உகசு)

தலைமகடலைமகனூர்க்குச் செலவொருப்படுதல்.

4377. அஞ்சங் கவர்நடை யார்வேள் விநாயக வண்ணல்வெற்பில்
நஞ்சங் கவர்வாள் விழியணைங் கேயந லனுகர்ந்தென்
னெஞ்சங் கவர்ந்துசெல் பாதக ரூர்சென்று நேர்ந்தவர்தம்
வஞ்சங் கவர்ந்தவன் னெஞ்சறிந் தேபின் வருகுவமே. ()

பாங்கியிறைவனைப்பழித்தல்.

4378. தேயங் கலந்த புகழானஞ் சேலினஞ் செங்நெல்வயற்
றோயங் கலந்த வியாசை விநாயக தோன்றல்வெற்பின்
மாயங் கலந்த மனத்தா ரன்பின்மை மருவல்கண்டும்
நேயங் கலந்தநின் போற்பேதை யாரிலை நேரிழையே. (உகஅ)

தலைமகளியற்படமொழிதல்.

4379. இறவா தறத்தை வளர்க்கும் விநாயக வேந்தல்வெற்பி
னிறவார் முலைபசந் தேயள வாத்துயர் நீடுமெனே
மறவாத வன்பர் மறக்கவென் தீவினை வாய்ந்தனன்யா
னறவார் குழாலவர் மேற்பழி நீசொல னன்மையன்றே. ()

கனவுநலிபுரைத்தல்.

4380. வாராத் துயில்சிறி துற்றுலப் போதென் வனமுலைமேல்
ஏரார்ங் காதலர் வந்தணை வார்கண் ணிமைதிறந்தாற்
றூரார் புயத்தன் விநாயகப் பேர்கொ டராதிபனேச்
சேரார் பெறுநலம் போலகல் வாரிதென் சேயிழையே. (உஉ௦)

கவின்ழிபுரைத்தல்.

4381. சூடாத பூவும் விநாயக வேளைச் சுவைத்தமிழாற்
பாடாத நாவ லருஞ்சிதை யாமற் படாறத்தைத்
தேடா தவர்பொரு ளும்போ லயிற்கைநஞ் செம்மல்வந்து
கூடாத மேனி நலனிழந் தேன்மென் கொடியிடையே. ()

தன்றுயர் தலைவற்குணர்த்தல் வேண்டல்.

4382. அயிர்தந்த சொல்லி யறிந்திலமே யன்பர்க் காரஞ்செந்நெற்
பயிர்தந்த பண்ணை வியாசை விநாயக பாரிவெற்பிற் [கோ
செயிர்தந்த வாட்கண்ணி செல்லலுற் றாளென்று செப்பியெற்
றுயிர்தந் தளவில் புகழ்தா மடைதர வுன்னுவரே. (உஉஉ)

பாங்கியின்குறை நீயே சொல்லெனச்சொல்லல்.

4383. தளங்குடி கொண்ட வனசந் தொறுமனந் தங்குபெரு
வளங்குடி கொண்ட வியாசை விநாயக மால்வரையுன்
னுளங்குடி கொண்டு துயரொருங் கோர்ந்த வொருவர்க்கின்று
களங்குடி கொண்ட விழியா யயலோர் கரைதலென்னே. ()

தலைமகளலர்பார்த்துற்றவச்சக்கிளவி.

4384. பையல ரல்குற் படாமுலை யாய்பொய் படாமலென்று
மெய்யலர் வாயன் விநாயக மால்வெற்பில் வேளலர்போற்
கையலர் காலலர் கண்ணலர் மென்குழற் காட்டலர்சேர்
தையலர் வாயல ருந்தமி யேனைத் தளர்விக்குமே. (உஉச)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

4385. பொழியு மழையிற் புதையு மிருளினிற் பொய்யும்வெய்ய
பழியுந் தவிர்ந்த விநாயக மால்வெற்பிற் பைந்தொடியே
குழியுஞ் சிறுகட் பெருங்கைத் திண்கோட்டுக் கொலைக்களிறூர்
வழியுங் கடந்திங்கு வந்தகல் வார்பின் மனஞ்செல்லுமே. ()

காமமிக்க கழிபடர்கிளவி.

4386. தெரிந்தார் புகழும் விநாயக பூபனைச் சேரலர்போற்
சொரிந்தார்கண் ணீர்வெள்ளந் தோயு மெனைக்கழி தோயனங்காள்
கரிந்தா யென்னென்று வினவீ ரன்பர்க்குங் கரைகிலிர்நீர்
பிரிந்தாலன் றேதெரி யுந்தரி யாத பெருந்துயரே. (உஉசு)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

4387. அலைவாய் வலையெறிந் தாரஞ் சிதறி யணைவெறுத்துக்
கலைவாய் மதிகண் டிரங்கி யெனையொத்த கார்க்கடலே
தலைவாய் புகழ்செய் விநாயக பூபன் றடங்கிரிமேற்
கொலைவா யயிலன்பர் போற்பிரிந் தார்கொலுன் கொண்கருமே.

நெறிவிலக்குவித்தல்.

4388. வாங்கு கதிர்நுதல் வல்லியன் னாய்தன்கண் வந்தெமையே
தாங்குக வென்மரைத் தாங்கும் விநாயக தாருவெற்பில்
வீங்கு கவின்பெறு மண்ணலை வெய்ய விலங்குநெறி
நீங்குக நீயென்று நீக்குக கொள்க நெடும்புகழே. (உஉஅ)

குறிவிலக்குவித்தல்.

4389. றருவி விருந்தினை யூட்டும் விநாயக தோன்றல்வெற்பில்
இருவிசெய் தாள்கதி ரீன்றன வன்னை யினஞ்செய்கிளி
குருவிகொள் ளாமற் புரக்கவென் றாளெமைக் கொற்றவயா
மருவிடு வோங்குறி வாரற்க நீயென்க வாணுதலே. (உஉகூ)

வெறிவிலக்குவித்தல்.

4390. பொறியா ரகல வியாசை விநாயக பூபன்வெற்பில்
எறியா ரயில்கர மேற்றநங் காதல ரீந்தவிந்நோய்
குறியாள்வெஞ் சூரணங் கிற்றென் றனையுட் குறித்துநின்று
வெறியால் விலக்கலுற் றாள்வெறி யார்குழன் மெல்லியலே.()

பிறர்விலக்குவித்தல்.

4391. விதுமலர் வாண்முக மாதர் விழியளி வீழ்குவளைப்
புதுமலர் வேய்ந்த விநாயக பூபன் பொருப்பினம்மில்
பொதுமலர் வந்து நுழைந்தது கேட்டு நுணங்கிடையாய்
மதுமலர் மாலைநங் காதலர்க் கென்சொல மாய்ந்திலமே. ()

குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

4392. விடங்கொண்ட வேல்கொண்டுவெஞ்சினங்கொண்டன் றுமேவுகருங்
கடங்கொண்ட கூற்றங் கடிந்தார் வரைவெதிர் கண்டுகொள
வடங்கொண்ட மென்முலை யாய்நல் விநாயக மால்வரைநந்
திடங்கொண்ட கற்பழி யாம னமர்க்கின்று செப்புவையே. ()

வரைவுகடாதல்.

வினவியசெவிலிக்கு மறைத்தமைவிளம்பல்.

4393. மின்பூத்த வேலண்ண லேயெம் மனையின்று மின்னுடலம்
பொன்பூத்த வாறென்னை யென்றாள் விநாயக பூபன்வெற்பிற்
கொன்பூத்த வூச லசைந்தாடப் பூட்டலர்க் கொம்புகுத்த
மன்பூத்த தாதளை வண்ணமென் றோதி மறைத்தனனே. ()

அலர் அறிவுறுத்தல்.

4394. முட்டாத செல்வன் விநாயக பூபன் முருகுவெற்பிற்
பெட்டா ரிறையவ தண்ணளி யோடு பெருகுமன்பின்
மட்டா ரலர்செய்ய கையால் வனைந்தனை மாதரெல்லாங்
கட்டா வலர்செய்ய வாயால் வனைந்தனர் காரிகைக்கே.(உ௩௪)

தாயறிவுணர்த்தல்.

4395. வள்ளற்கும் வள்ள லிவனென் விநாயக வள்ளல்வெற்பில்
விள்ளற் கருந்திறல் வேலண்ண லேயெங்கள் மெல்லியலாள்
தள்ளற் கரிய முலைமேற் பசப்பினைத் தானறிந்தே
யெள்ளற் கரிய விழிசிவந் தாளன்னை யென்பவளே. (உ௩௫)

வெறியச்சுறுத்தல்.

4396. கைத்தலை விட்ட விநாயக மால்வெற்பிற் கைத்தலைக்கொள்
வைத்தலை வேல நினையுளம் வைத்தலை வாளுடலம்
பைத்தலை யோர்ந்தவள் பைதலை நீக்கப் பரிந்தெமரோர்
மைத்தலை வாளினை வைத்தலை யேயுண் மதித்தனரே. ()

பிறர்வரைவுணர்த்தல்.

4397. பெருகார்வ மேகொள் விநாயக பூபன் பிறங்கலிலெம்
மொருகா தலித னிருகார் வரையென வோங்கிவளர்ந்
தருகா முலையு மருகு மிடையுங்கண் ணூரக்கண்டுள்
ளுருகா தவருமுண் டோவிறை வாவிவ் வுலகிடையே. ()

வரைவெதிர்வுணர்த்தல்.

4398. காயே ரயில்கொடு நீயே வரிலெமர் காணு முன்வேற்
சேயே யெனவெதிர் கொண்டழி யாக்கல்விச் செல்வர்க்கெல்லாந்
தாயே யனைய விநாயக மால்வெற்பிற் றையல்செய்ய
வேயே யனவிளந் தோணின வேயென்பர் மெய்யிதுவே. ()

வரையுநாளுணர்த்தல்.

4399. பூமணந் தார்ந்தன வேங்கை நிறையம் புலியுமூபர்
கோமணந் தார்கொண் டதுவேழ மன்ன குமரரினிக்
காமணந் தார்ந்த வியாசை விநாயக காமன்வெற்பி
லேமணந் தார்வர் பிடியன்ன மாதரை யெம்மிறையே. ()

தலைமகளறிவறிவுறுத்தல்.

4400. மேவி யனைவரு மோர்தடை யின்றி விரும்பியுண்ணும்
வாவி யனைய திருவார் விநாயக வள்ளல்வெற்பிற்
காவி யனைய விழிதன் பழிசரு காதுன்பழி
யாவி யனைய வெனையு மறைத்தன ளாண்டகையே. (௨௬௦)

குறிபெயர்த்திடுதல்.

4401. பேருக வேயெம்மைப் பெற்றோர்கட் கையம் பிறந்ததினி
மாருக வந்திங் குலாவுவர் போலும் வறுமைக்கிடி
யேருக வந்த விநாயக மால்வெற் பிறைவ கூறி
வேருக மின்னொடு நீவிளை யாடுக மேவிநின்றே. (௨௬௧)

பகல்வருவானை யிரவுவருகென்றல்.

4402. விள்வாய் மலரலர் கால முணர்ந்து விளரிவண்டு
கள்வாய் மடுத்துண் விநாயக பூபன் கடற்றுறைவா
புள்வா யடங்கத்துஞ் சேக்கை யுறங்கும் பொழுதில்வந்து
கொள்வாய் மென்பூங் கொடியன்னள் செய்வாய்க் குமுதத்தமுதே.

இரவுவருவானைப்பகல் வருகென்றல்.

4403. தேன்பெற்ற பூங்கு வளைத்தார் விநாயக செம்மல்வெற்பி
லூன்பெற்ற வேலிறை வாநீ கங்குலி னுயர்ந்திடினுங்
கான்பெற்ற தாமரை தான்பெற்ற பொன்னைக் கணவனெனும்
வான்பெற்ற செங்கதி ரோனன்றி யீதன் மரபல்லவே. ()

பகலினுமிரவினும் வருகென்றல்.

4404. நினையோ வியபக லோவூழி யென்னுமந் நீள்பகல்போய்ப்
பினைமே விரவுமோர் பேரூழி யென்னும் பிரசமலர்
மினைமேவு மார்ப விநாயக மால்வரை மின்றுயரந்
தனையோவ நீயிரு போதினுஞ் சார்க தராதிபனே. (௨௬௪)

பகலினுமிரவினுமகலிவணென்றல்.

4405. இகலே புரிவிலங் கானேத மேவு மிரவுவரிற்
பகலே வரின்வெம் பழிதொடரும் பற்றி லார்கட்கெல்லாம்
புகலே யனைய விநாயக பூபன் பொருப்பில்வண்டு
தொகலே புரிநறுந் தாரண்ண லேயினிச் சொல்வதென்னே.

உரவோனுடெமூருங்குலனு மரபும்புகழும்வாய்மையுங்கூறல்.

4406. எட்டிற் கடங்காப் பெரும்புக ழானிரந் தார்கலியைக்
காட்டிற்கு ளோட்டும் விநாயக பூபன் கவின்வரைநின்
னாட்டிற்கு மூர்க்குங் குலத்திற்கு நற்குடிக் கும்புகழின்
பாட்டிற்கும் வாய்மைக்கு மேற்பதன் றாலிப் படர்களவே. ()

ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

4407. உழுவையுஞ் சிங்கமு மெண்குங் கவுட்குழி யூற்றுகட
வழுவையுஞ் சாரு நெறியிலெம் மான்பொருட் டாக்கவினூர்
குழுவையெஞ் ஞான்று மொருவா விநாயக கோன்சிலம்பில்
எழுவை நிகர்தடந் தோளாய் வருத லியல்பல்லவே. ()

ஆற்றுத்தன்மை யாற்றக்கூறல்.

4408. உருகு முயிர்க்கு முயிர்சோருஞ் சோம னுதித்திடமெய்
கருகுங் குருகுங் கலையு மிழக்குங் களிச்சுரும்பர்
பருகுஞ் செழுங்குவ ளைத்தார் விநாயக பாரிவெற்பில்
இருகுங் குமமுலை யாடென்ப மன்ப விரித்தருளே. (உ௪அ)

காவன்மிகவுரைத்தல்.

4409. மஞ்சினும் விஞ்சிய வண்மை விநாயக வள்ளல்வெற்பா
நஞ்சினுந் தோய்நின்கை வேற்குவெங் கானெறி கண்ணுபன்மா
வஞ்சினுங் காவலர் துஞ்சினுங் கைக்கடிப் பார்க்கும்பறை
துஞ்சினும் பஞ்சினு மெல்லடி யன்னைகண் டுஞ்சலின்றே. ()

காமமிகவுரைத்தல்.

4410. நன்றேறு சீர்த்தி விநாயக மால்வெற்பி னண்ணலரை
வென்றேறு வன்றிறல் வேலிறை வாவுண் மெலிவடைந்த
கன்றேறு செம்மலர்க் கையிள மானின் கவின்பொழிதோட்
குன்றேற வுன்னும்வில் வேடன்கைக் கோல்செய் கொலைக்கஞ்சியே. ()

கனவுநலிபுரைத்தல்.

4411. மறந்தேனும் பொய்மை மருவா விநாயக வள்ளல்வெற்பா
சிறந்தே விளங்கு திருநுத லாண்முலைச் செவ்விளநீர்
நிறந்தேங்க நீபுண ரின்றுயி லோடு நினையுமிவை
திறந்தே யொழிக்கும் விழியோடு நொந்து தியங்கினளே. ()

கவினழிபுரைத்தல்.

4412. வேளாண்மை யோங்கும் விநாயக மால்வெற்ப மின்னினைநீ
தோளா லணைக்குஞ் சுகத்தைத் துறந்தது தோன்றக்கண்டு
வேளா சுகத்தைத் துரக்க வுடல மெலிவையுற
வாளா கழிந்தன வானலம் யாவும் வனமுலையே. (உ௫உ)

ஒருவழித்தணத்தல்.

தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல்.

4413. சென்றுசென் றேறுதும் புலவோர் கவியைச் செவிமடுத்து
நின்றுபொன் றாவும் விநாயக மால்வரை நேரிழையாய்
இன்றுசென் றேயெம தூரின்க ணூளையிங் கெய்திடுவேன்
றுன்றுகன் றூர்கா வல்லிகன் றுவகை சொல்லுகவே. ()

பாங்கிதலைமகனைச் செலவுவிலக்கல்.

4414. ஆவி யுடன்விழி யன்ன விநாயக வண்ணல்வெற்பா
வாவி யுடன்பணை சூழ்நின் னகர மருவுகபின்
காவி யுடன்பொருங் கண்ணு ளரும்பெறற் காயத்துட்சஞ்
சீவி யுடன்வந் துயிர்மேவ நீசெய்க தீதறவே. (உருச)

தலைவனீங்கல் வேண்டல்.

4415. தரைக்க ணமர்தெய்வ தாருவன் ஞன்செந் தமிழ்சொல்புல
வரைக்கண மும்பிரி யாத விநாயக மால்வரைத்தா
மரைக்க ணமரின் னுயிரைப் பிரிந்துடன் மன்னுங்கொலோ
வரைக்கண மேசெல்ல வேண்டுமென் ஞருக் கணியிழையே.

தலைமகனைப் பாங்கிவிடுத்தல்.

4416. கல்லார மாலைக் கவின்ருேள் விநாயக காமன்வெற்பில்
வல்லா ரிளமுலை யல்லார் கருங்குழன் மான்றுயர
மெல்லா மறிந்த நினக்கியான் புகலுவ தென்னைகொலோ
வில்லார் மணிநெடுந் தோளாய் வருதி விரைவிற்சென்றே. ()

பாங்கிதலைவிக்கு அவன்செலவுணர்த்தல்.

4417. நூலொன்று நுண்ணிடை வார்முலை யாய்நின் னுவலரிய
மாலொன்று தந்நெஞ்ச நின்பாற் கிடக்க மறந்தும்வைகக்
காலொன்று ருதரைக் காற்கண மென்று கரைந்துசென்ருர்
வேலொன்று கையர் விநாயக பூபன் வியாசையிலே. (உருஎ)

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

4418. பைந்தோகை யாடும் விநாயக பூபன் பனிவரையில்
வந்தோகை யோடென் னலங்கொள்ளை கொண்டு மறவலென்ற
கந்தோ டிகல்வெங் களிற்ருர் பிரிந்தவன் கண்மைகண்டு
மந்தோ கலங்குநெஞ் சேயென்கொ லோநின் னறிவின்மையே.

சென்ருேனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

4419. நன்ருேகை மேவும் விநாயக பூப னளிர்கடல்வாய்
இன்ருேகை வேலவர் போல வுனக்கு மிரக்கமிளிர்
கன்ருேகை யோவக் கலுழ்வேனைக் கண்டுங் கமலவணைத்
துன்ருேகை யோடு துயில்கைநன் ருேசெம்பொற் சூட்டனமே.

தலைவியைப்பாங்கி யாற்றுவித்தல்.

4420. சீரை யவாவு விநாயக பூபன் செழுஞ்சிலம்பில்
வாரை யவாவு வனமுலை வல்லி வருகவெய்ய
போரை யவாவுதிண் டோளன்பர் வாவும் புரவிநெடுந்
தேரை யவாவு வழியெதி ரேசென்று தேடுதற்கே. (உ௬௦)

தலைவன்வந்தமை பாங்கியுணர்த்தல்.

4421. வார்கொண்டு பீரொழி மாமுலை மீது வனைதருமைச்
சீர்கொண்டு நீரொழி தேமலர்க் கண்ணிற் றிருந்துமங்கத்
தேர்கொண்டு சூரொழி பேர்கொள் விநாயக வேந்தல்வெற்பிற்
றேர்கொண்டு நாரொழி யாதுவந் தாரன்பர் தேமொழியே. ()

பாங்கி தலைவனொடு சொக்துவினுதல்.

4422. வான்கண்ட சோலை வியாசை விநாயக வள்ளல்வெற்பா
காண்கண்ட பூங்குழல் சோரமென் கைவளை காலவுடல்
ஊன்கண்ட வேல்விழி வெள்ளத்துண் மூழ்க வுயங்குமின்னை
யான்கண்டு மாழ்கிட நீநினை யாதங் கிருந்ததென்னே. ()

தலைவன் பாங்கியொடு சொக்துவினுதல்.

4423. நைவண்ண லோவும் புகழ்சேர் விநாயக நம்பிவெற்பிற்
பைவண்ண வல்குலின் பால்வண்ண மென்மொழிப் பைந்தொடியீர்
மைவண்ண வல்லு மலர்வண்ண வம்பு மதிக்கனலும்
எவ்வண்ண மாற்றி யிருந்தனி ரோதனி யெற்பிரிந்தே. ()

தலைவியையாற்றுவித்திருந்தவருமைசாற்றல்.

4424. பொறிகாட்டு மார்ப விநாயக பூபன் பொருப்பிலுன்னூர்
நெறிகாட் டியுமந் நெறிநின் வரவு நிகழ்த்திடும்புட்
குறிகாட் டியும்வெங் கொலைசெய்நஞ் சங்குடி கொண்டிளமான்
மறிகாட்டு வாள்விழி மாதைப் புரந்தனன் மன்னவனே. ()

வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல்.

என்பொருட்பிரிவுணர்த்து ஏந்திழைக்கென்றல்.

4425. பைப்பே ரகலல்குற் பைந்தொடி யேநின் பனிமொழிதன்
செப்பே யனைய முலைவிலை யாநிதி சேர்தரக்கொண்
டெய்ப்பே யிலாத விநாயக பூப னிலங்குநிதி
வைப்பே யெனவரு வேன்சென் றவட்கு வழுத்துகவே. ()

நின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றல்.

4426. தெரிவையர் மால்கொ டெரிவை விநாயக செம்மல்வரைச்
சரிவை கியபொற் சரிவை கியமென் றளிர்க்கரவை
யரிவை யயிற்க ணரிவைக் கன்பாநின் னரும்பொருளின்
பிரிவை யுணர்த்திப் பிரிவை பிரிவையின் பின்றிறமே. ()

நீடேனென்றவனீங்கல்.

4427. பாடாமற் பாவல ரோடாமற் பாடேர் பாற்றுயரங்
கூடாமற் செய்யும் விநாயக மால்வரைக் கோலமின்னாள்
வாடாமற் கண்முத்தஞ் சூடாமற் சென்று மறந்துமங்கு
நீடாம னின்னுளங் கோடாமற் போதுவ னேரிழையே. ()

பாங்கி தலைவிக்கு அவன்செலவுணர்த்தல்.

4428. மின்னால் விளங்குபைம் பூண்முலை யாய்தங்கை மேலுறுமீன்
றன்னாலொர் மீனைக்கைக் கொள்வாரெனத்தரைத் தாருவெனத்
தென்னால் விளங்கு விநாயக மால்வெற்பர் தேடுறுங்கைப்
பொன்னாலும் பொன்னைக்கைக் கொள்வேனென் றேசாம் போயினரே.

தலைவியிரங்கல்.

4429. நல்லார் புகையுமற் றல்லா ருறவுநண் ணுதவனூல்
வல்லார் புகழும் விநாயக மால்வெற்பில் வண்டுறுநாண்
வில்லார் செயுந்துய ரெல்லா மறிந்தும் விழைபொருண்மேற்
கொல்லார் செலவுனி நல்லார் துணிந்ததென் சூழ்வினையே. ()

தலைவியைப்பாங்கி கொடுஞ்சொற்சொல்லல்.

4430. குணர்தா னுருக்கொண் டனைய விநாயக கோன்சிலம்பிற்
பணர்தா முகலல்குற் பைந்தொடி யாய்நின் பணைமுலையை
மணர்தார் தரவம் முலைவிலை யாகிதி வந்துதரத்
தணர்தார் தமைத்தணர் தாரென நோத றகுதியன்றே. ()

தலைவி கொடுஞ்சொற்சொல்லல்.

4431. மஞ்சையொக் குங்கை விநாயக மால்வரை வாய்மதியின்
பிஞ்சையொக் குநுத லாயன்பர் செல்சுரப் பேரழலு
நஞ்சையொக் குஞ்செயல் வேடுன்பு மோர்ந்து நலிதலினுன்
னெஞ்சையொக் குங்கல்லு முண்டுகொ லோவிந்த நீணிலத்தே.

வருகுவர்மீண்டெனப் பாங்கிவலித்தல்.

4432. கடங்கவிழ்க் குங்கவுள் வேழம் பயம்பிற் கவிழ்தாநீர்க்
குடங்கவிழ்க் குங்கட் பிடிதுயர் கண்டுங் கொடுத்தறிவை
மடங்கவிழ்க் குந்தமிழ் வாஞ்சை விநாயக மால்வெற்பன்பர்
படங்கவிழ்க் கும்மல்கு லாய்செல்வ ரோவழற் பாலையிலே. ()

பருவங்கண்டு பெருமகள்புலம்பல்.

4433. விண்ணீர்கொண் மின்னென வேகனி கல்கும் வியன்பொழில்சூழ்
தெண்ணீர்மை கொண்ட வியாசை விநாயக வேந்தல்வெற்பென்
கண்ணீர் பொழியப்பைங் கார்நீர் பொழிவது கண்டிலரோ
பண்ணீர் மொழியணங் கேபொருண் மேற்சென்ற பாதகரே.

இருளைவம்பென்றல்.

4434. என்னைக்கண் டார்க்கின்மை யேதென் விநாயக வேந்தல்வெற்பிற்
றன்னைக்கண் டான்மயி லைச்சாய லாற்றன்னைத் தன்குழலான்
மின்னைக்கண் டார்முகி னீவெல் பகைகொண்டு மேவித்தனி
நின்னைக்கண் டார்தநி யன்றிப்பெய் வம்பிது நேரிழையே. ()

இறைமகள்மறுத்தல்.

4435. அளிதே னுணுங்குழ லாய்செய்ய காந்த ளலர்தரக்கார்
துளிதேக் தொறும்பெய்யக் கண்டும்வம் பென்றனை சொற்புலவோர்க்
கெளிதேயென் காட்சி யெனச்சொல் விநாயக வேந்தல்வெற்பில்
வெளிதே யெதிருறுங் காக்கையென் பார்களின் வேறல்லையே.

அவர்தூதாகிவந்தடைந்தது இப்பொழுதெனத் துணைவிசாற்றல்.

4436. கனிக்குங் கரும்பிற்குந் தேனுக்கும் பாலுக்குங் கண்டினுக்கு
மினிக்குஞ் செழுந்தமி ழிச்சை விநாயக வேந்தல்வெற்பிற்
றனிக்குந் துயரொழி வாயன்பர் தேர்வந்து சார்ந்ததென்று
குனிக்குஞ் சிலைநுத லாய்முன்பு கூறக் குயின்வந்ததே. ()

தலைமகளாற்றல்.

4437. என்னுயி ராவ ரிறைவரென் றூலவ் விறையவரா
மன்னுயிர் வாழு முடலா மெனது வருத்தமற்றவ்
வின்னுயிர் மேவுத லின்றென லாங்கொ லிதழ்க்கமல
மின்னுயிராய விநாயக பூபதி வெற்பிடத்தே. (உஎஎ)

அவனவட்புலம்பல்.

4438. கண்ணம்பு மங்கசன் கையம்பும் வார்முலைக் கண்ணிரம்பத்
தண்ணம் புதுமலர்ப் பூங்குழல் சோரத் தனித்திரங்கி
விண்ணம் புயலென் விநாயக பூபனை மேவலர்போல்
எண்ணம் புலா விருந்தழு மேயென தின்னுயிரே. (உஎஅ)

பாகனொடுசொல்லல்.

4439. கையா வணம்பொலி காரா வெனப்பைங் கனகமழை
பெய்யா வணம்பொலி செங்கை விநாயக பேகன்வெற்பில்
மையா வணமின்முன் ருழே னெனத்தா னவின்றமொழி
பொய்யா வணம்வல வாநின்னை யென்வாய் புகழ்கின்றதே. ()

மேகத்தொடுசொல்லல்.

4440. பார்வந்த சீர்கொள் விநாயக பூபன் பனிவரைவாழ்
வார்வந்த பூண்முலை வல்லி தழையவவ் வல்லிமலர்
நீர்வந்த காவிநும் பேருளொன் ஞேவரு நீருறவென்
றேர்வந்த தென்றுசொல் லீர்முகில் காளென்முன் சென்றிடினே.

பாங்கி வலம்புரிகேட்டவன் வரவறிவுறுத்தல்.

4441. நலம்புரி வண்மை விநாயக வேள்வரை நன்னுதலாய்
கலம்புரி மாமுலைக் கண்முத் தணிந்தலர்க் கண்முத்தொழி
தலம்புரி காவலர் தந்தேர் வரவினைச் சாற்றிடும்வெள்
வலம்புரி வேளை வலம்புரி யாமன் மறிந்திடவே. (உஅக)

வலம்புரிகிழத்தி வாழ்த்தல்.

4442. வானந் தழீஇய கிதிச்சங்கம் போற்றமிழ் வான்புலவர்
கானந் தழீஇய செந்நா மேவி வாழ்க கவுள்குதிக்குந்
தானந் தழீஇய களிற்ருன் விநாயக தாருவெற்பின்
மானந் தழீஇயநல் லார்வர வோதிய வண்சங்கமே. (உஅஉ)

தலைவன்வந்தழிப் பாங்கி நினைத்தமை வினுதல்.

4443. தற்கூடு வார்தமை முற்கூ டுறுகண் டணப்பதன்றிப்
பிற்கூடு ருவணஞ் செய்யும் விநாயக பேகன்வரை
யிற்கூடு பைங்கிளி யென்ரு யினுநின் னிதயமென்னும்
பொற்கூடு வந்து புகுந்ததுண் டாகிற் புகலரசே. (உஅங)

தலைவனினைத்தமைசெப்பல்.

4444. வஞ்சந் தனக்கிட மாகா விநாயக வள்ளனெஞ்சைக்
கஞ்சந் தனக்கிட மாக்கொள்பொன் மாது கவர்ந்ததுபோல்
நஞ்சந் தனக்கிட மாம்விழி கொண்டன னண்ணியவென்
னெஞ்சந் தனக்கிட மாயானெவ் வாறு நினைப்பதுவே. (உஅச)

பாங்கி தலைவியை யாற்றுவித்திருந்த வருமைகூறல்.

4445. கையாத வான்றிரு வேண்டுரெ ரன்க ணணுகவெனுங்
கையாத வண்மை விநாயக மால்வெற்பு காய்செங்கதிர்
செய்யாத வன்குடக் கேயெழுந் தானுந் திறம்பலினின்
பொய்யாத வாய்மை புகன்றே புரந்தனன் பூவையையே. ()

வரைவுமலிவு.

காதலன்முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தல்.

4446. கலைக்கு மருவு முறையுள் விநாயக காளைவெற்பிற்
சிலைக்கு நிகரொளி சேர்நுத லாய்நின் றிரளிளமென்
முலைக்கு விலையெனச் செம்பொன் கொணர்ந்தும் முன்றிலிற்பொன்
மலைக்கு மலையென வேகுவித் தாரின்று மன்னவரே. (உ அசு)

காதலி நற்றுயுள்ள மகிழ்ச்சியுள்ளல்.

4447. பணக்கோல வல்குற் பணிமொழி மாதர்தம் பங்கயக்கண்
ணணக்கோலம் வாய்ந்த விநாயக மால்வெற்பி லூரளிசேர்
குணக்கோல வேளன்ன நங்கா தலர்தங் குலவுதிரு
மணக்கோலங் கண்டுநந் தாய்நம்மின் மிக்கு மகிழ்தருமே. ()

பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்.

4448. கலமே செறிந்த விளமுலை நங்கை கவலற்கவேல்
வலமே செறிந்தநங் காதலர் தோன்று மணமெதிர்ந்து
நலமே செறிந்த முரசறைந் தார்நமர் நற்புலவோர்
குலமே செறிந்த விநாயக பூபன் குளிர்நிலத்தே. (உ அஅ)

தலைமகளுவகையாற்று துளத்தொடுகிளத்தல்.

4449. தாங்குக தாங்குக வென்றடை வார்முன் றனங்கைக்கொண்டு
வாங்குக வாங்குக வென்னும் விநாயக வள்ளலைப்போல்
ஓங்குக வோங்குக நெஞ்சே யுவகை யுறுகணினி
நீங்குக நீங்குக வென்றே முழங்கு நெடுமுரசே. (உ அகூ)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

4450. புணர்வா ருறுதுயர் போக்கும் விநாயக பூபன் வெற்பில்
இணர்வார் குழலியர் தூற்றலர் வாட விறைவவன்று
துணர்வார் தொடைதந்த நீகுற மான்புணர் தோன்றலைப்போல்
வணர்வார் குழலெங்கண் மானைப்புணர்ந்தென் றும் வாழியவே.

தலைவிமணம்பொருட்டாக அணங்கைப்பராநிலைகாட்டல்.

4451. இணங்கைக் கதிர்வடி வேலவ நின்பொருட் டின்றெதிர்ந்து
மணங்கைக் கரிய மலர்தூய்ப் பலியும் வழங்கிநின்று
குணங்கைக் கரிய விநாயக பூபன் குளிர்வரைவாழ்
அணங்கைப் பராவுதல் கண்டருள் வாய்நின் னணியிழையே.

பார்நிலைகண்ட தலைமகன்மகிழ்தல்.

4452. வான்செய்த பூங்கை விநாயக மால்வெற்பின் வாய்க்கமணந்
தேன்செய்த மாமலர் தூய்ப்பலி நேர்ந்தலர்ச் செங்கைகுவித்
தூன்செய்த மேற்கை யணங்கைப் பராவி யுவந்துநின்று
யான்செய் தவம்வெளி யாக்கிய தாலின்றெ னின்னுயிரே. ()

அறத்தொடுநிற்றல்.

கையறுதோழி கண்ணீர்துடைத்தல்.

4453. பெருங்கா வியங்கற்ற வல்லோர் புகழ்வளம் பெற்றுயர்ந்து
மருங்காவி சூழ்ந்த வியாசை விநாயக மால்கடல்வாய்
இருங்காவில் வண்டன் மடவார் குறையா திழைத்தனர்நின்
கருங்காவி வெண்முத் துகுப்பதென் னேபுகல் காரிகையே.()

தலைமகள் கலுழ்தற்காரணங்கூறல்.

4454. மொழித்தேன் மடந்தை விநாயக பூபன்முன் னீர்த்துறைவார்
கிழித்தே யெழுமுலை காதலர் கூடக் கெழுமுசுகம்
விழித்தே யொழித்த வெனக்கணி யோவென்று மேவுறுமை
யழித்தே யொழித்திட நீரை விடுத்ததென் னம்பகமே. ()

தலைவன்றெய்வங்காட்டித்தெளிப்பத் தெளிந்தமைகூறல்.

4455. மெய்யோ குடிகொள் விநாயக பூபன் வியன்றுறைவர்
நையோ கையின்றி யணங்கெதிர் நின்றுனை நான்பிரியேன்
செய்யோதி யென்றுபுள் ளேகரி யாக நிகழ்த்துமொழி
பொய்யோவென் றேதெளிந் தேன்பாவி யேனிளம் பூங்கொடியே.

இறைவி தலைவனிகந்தமையியம்பல்.

4456. வேயொன்று தோளி விநாயக பூபன் வியன்றுறைவர்
நேயொன் றுளத்தவர் போலக லேனென்று நீத்தனர்சான்
றூயொன்று புன்னை தகவீரென் றோதவந் தோவதற்கு
வாயொன்று கண்டில னேகொடும் பாவி மலரவனே.(உகூகூ)

பாங்கியயற்பழித்தல்.

4457. ஆய்மை யனைய கருங்குழ லாய்நீ யழுதிரங்கத்
தூய்மைய னோங்கு விநாயக பூபன் றுறையிறைவர்
சேய்மைய னன்றென்று தெய்தவங் காட்டித் தெளித்துஞ் சென்றார்
வாய்மைய ரன்பினர் நல்ல ரவரினு மற்றெவரே. (உகூஎ)

தலைமகளியற்படமொழிதல்.

4458. கங்கை குலவிளக் காய விநாயக காமன்றிரை
சங்கை யெறியுந் தடந்துறைச் சேர்ப்பர்நெஞ் சந்தணவா
ரிங்கை விழிசெய்த புண்ணியம் போலெதி ரெய்துவரென்
கொங்கைசெய் பாவமென் னோகூடி லார்மென் கொடியிடையே.

தெய்வம்பொறைகொளச் செல்குவமென்றல்.

4459. நிறத்தே பொன்வைத்த விநாயக மால்வெற்பர் நெஞ்சுறைவார்
புறத்தே பிரிந்த பிழைநோக்கித் தீங்கு புரியல்பொய்யா
வறத்தே மகிழ்தெய்வ மேயென்று வேண்டி யடிபணியா
வுறத்தே மலர்புனைந் தேசீற்ற மாற்றுவ மொண்டொடியே.()

இல்வயிற்செறிந்தமையியம்பல்.

4460. இலர்க்கஞ்சிந் தாமணி யன்ன னுறுக ணிருந்தமிழ்ப்பா
வலர்க்கஞ்சி யோடப் புரியும் விநாயக மால்வரைவேள்
மலர்க்கஞ்சி வாடென் பசலைகண் டேயயன் மாதர்கடூற்
றலர்க்கஞ்சி யேகலென் றூள்வண்ட லாட்டினுக் கன்னைமின்னே.

செவிலிகனைவிருளவன்வரக்கண்டமைகூறல்.

4461. இன்னிக்கு நேரும் விநாயக பூபன் இளர்சிலம்பில்
வன்னிக்கு நாத னனவெழிற் காதலர் வந்தனுகக்
கொன்னிக்கும் வின்னருங் கூரிருள் வாய்க்கட் குவளையினு
மெல்லிக் குமுதம்வெல் வாயன்னை கண்டன ளேர்ங்கொடியே.

எதிவலேவேற்றுமைக்கு ஏதுவினுதல்.

4462. கைத்தா ளனம்பிறி தாளுள் விழியுங் கதிர்முலேயும்
பைத்தாள் பொற்பாவை மறந்தாள்வெம்பேய்க்கணம் பற்றினளை
யொத்தா ளவட்குற்ற தென்னேபொன் னேபற் றொழித்தவளை
வைத்தா தரிக்கும் விநாயக பூபன் மணிவரைக்கே. (கூ0உ)

பாங்கிவெறிவிலக்கல்.

4463. கையா விவேக விநாயக பூபன் கவின்சிலம்பி
னெய்யாவி சேர்குழ ழேயறி யாயல்லே நீயவட
னையாவி நல்குவ னென்றம் மனேபுகுந் தாட்டுவந்து
மையாவி கொள்ளநின் றுய்முரு கேநின் மதியழகே .(கூ0௩)

வெறிவிலக்கியவழி செவிலி பாங்கியைவினுதல்.

4464. அடுத்தார் தமைவிடுத் தேதுயர் நீங்க வள்வில்செம்பொன்
கொடுத்தா தரிக்கும் விநாயக மால்வெற்பிற் கூண்டவிதேன்
மடுத்தார் குழலேய் தணிப்பா னிவண்வந்த மாமுருகைத்
தடுத்தா யடுத்ததென் னேவுரை யாய்மைத் தடங்கண்ணியே.

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

4465. களவொன்று நின்கருங் கண்போன் மலர்ந்தது காண்கமதிப்
பிளவொன்று வாணுதற் பேதாயென் றேயோர் பெருந்தகைமுன்
னளவொன்று கூடி நிலந்தர வேற்றன ளன்னையம்பற்
றளவொன்று தையல் விநாயக மால்வரைச் சாரலிலே. ()

புனறருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

4466. விழியாற் கயலே மிட.ற்றால் வளைமுன் வென்றதன்றி
மொழியாற் றனேயும் வென்றா ளென்று பாலி முழுநதிதன்
சுழியாற் கவர்பொழு தோர்காளே வந்து துனேந்தெடுத்தான்
பழியாற் றிடாத விநாயக மால்வரைப் பாவையையே.(கூ0சு)

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

4467. கலையானே யாத விநாயக மால்வரைக் கட்கருப்புச்
சிலையானே வென்ற வெழிலா ளொருவன்முன் சேர்ந்தன்மகள்
முலையானே பின்னுற வெங்கோபங் கொண்டு முழங்கிவரு
மலையானே முன்னுற நாப்பணின் றேயதை மாய்த்தனனே. ()

மணம்விலக்கல்.

4468. வெதிராக் குவிய விசைத்த விநாயக வேள்வரைவா
யெதிராக் குழுகுங்கொல் யானே கடிந்த விறைவர்க்கன்றி
முதிராக் குவிமுலே நெஞ்சுரு காளிருண் மோதிடச்செங்
கதிராக்கு வோற்கன்றி வாய்மல ராவிதழ்க் கஞ்சங்களே. ()

மின்னிடைவேற்றுமைகண்டு நற்றாய் செவிலியைவினுதல்.

4469. கோதே துறந்த விநாயக பூபன் குளிர்சிலம்பின்
மாதே துவளிடை யாள்வாட்ட மேது வளருமுலேச்
சூதேது பொன்னுற் றதுகண் மலர்முத்தந் தோற்றிடவிந்
தேதேது நானன் குணரப் புகுந்த தியம்புகவே. (கூ0௯)

செவிலி நற்றாய்க்கு முன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்.

4470. கரும்பா மொழிதெளி யாமுன் களவுகண் கற்றிடுமுன்
னரும்பா முலையரும் பாமுன் குழலல ரார்தருமுன்
சுரும்பார் தொடையல் விநாயக மால்வெற்பிற் றோல்வினவி
வரும்பார்மன் னன்னொரு வன்மக ளேர்நலம் வெளவினனே.

நற்றாய் தமருக்கறத்தொடுநிற்றல்.

4471. வாளே யெறிக்குங் கதிரொளி யான்கவி வாணரெல்லாங்
கேளே யெனச்சொல் விநாயக மால்வெற்பின் கீழுறைவீர்
நாளே யனைமதர நங்குல வள்ளிக்கு நாயகனும்
வேளே யனவொரு வேந்தற்கு நல்குவிர் மின்னினையே. ()

உடன்போக்கு.

பாங்கி இறைவற்கு உடன்போக்குணர்த்தல்.

4472. கந்தார் களிற்றண்ண லேநினை யன்றிக் கனைகணின்று
கொந்தார் குழலை யுடன்கொண்டு சென்மதி கூறுவதென்
சிந்தா மணியை விநாயக மால்பெருஞ் சேமவைப்பைத்
தந்தாலு மேகொண் டிடார்விலை யாவெந் தமரவரே. ()

தலைவன் உடன்போக்குமறுத்தல்.

4473. பாலோ வெனுமொழி யாய்முலை யோவதி பாரமிடை
நூலோ சிறிது வழியின் கொடுமை நுவலரிது
மாலோ வெனச்சொல் விநாயக பூபன் மருவலர்தங்
காலோ வணங்கின் பதமலர் கானங் கடப்பதற்கே. (௯௧௯)

பாங்கி தலைவனையுடன்படுத்தல்.

4474. நின்னைப் பிரிந்த வணையோ புணர்ந்துசெ னீடுவெம்மை
தன்னைப் பிரிந்தறி யாச்சுர மோவெய்து தண்மலர்வாழ்
பொன்னைப் பிரிந்தறி யாத விநாயக பூபன்வெற்பின்
மின்னைப் பிரிந்த கலச்செய் நுணுகிடை மெல்லியற்கே. ()

தலைவன் போக்குடன்படுதல்.

4475. மஞ்சிற் பொலிகுழன் மாதே விநாயக வள்ளல்வெற்பிற்
பஞ்சிற் படியுமந் தோவென் றழுங்குநின் பாவைமல
ரஞ்சிற் றடியுந் தழற்பாற் கானு மறிந்துஞ்செல்ல
நெஞ்சிற் படர்ந்தவென் போற்கொடும் பாவி நிலத்தெவரே.()

பாங்கி தலைவிக்குடன்போக்குணர்த்தல்.

4476. குராவருள் பாவைக்குப் பாடல நீழலிற் கோங்கலர்வேய்ந்
திராவருள் கூழை யிருந்தாடல் காண்டவ மெய்துங்கொலோ
வராவரு ளல்குலென் றுரிரப் போர்க ளணைந்துதயா
கராவரு ளென்னும் விநாயக மால்வெற்பர் கார்மயிலே. ()

தலைவி நாணழிவிரங்கல்.

4477. நாய்ப்பிறப் பேதமி ழாயார் பிறப்பென்று நற்குடியின்
வாய்ப்பிறப் பெய்தும் விநாயக மால்வெற்பென் மன்னரனே
யாய்ப்பிறப் பெய்தி யகலா வருநா ணழிந்ததினிப்
பேய்ப்பிறப் பேனுமன் றாலிந்த நோய்ப்பெண் பிறப்பினுக்கே.

கற்பின்மேம்பாடு பாங்கிகழறல்.

4478. மணத்திற் சிறந்த செழுந்தார் விநாயக மால்வரைப்பெண்
குணத்திற் சிறந்தது நாணு யினுமக் குணத்தினுக்கும்
பணத்திற் சிறந்த வகலல்குற் பைந்தொடிப் பான்மொழியார்
கணத்திற் சிறந்த வணங்கே சிறந்தது கற்பொன்றுமே. ()

தலைவியொருப்பட்டெழுதல்.

4479. வேயே யனவிளந் தோளாய் விநாயக வேள்வரைவாய்த்
தாயே யழுங்குக வம்பலர் வம்பலர் சாற்றுகவேற்
சேயே யனையநங் காதலர் பின்செலச் சேர்ந்தவன்பெண்
வாயே விளக்குக திண்கற்பு மோங்குக மன்னுகவே. (௩௧௯)

பாங்கி சுரத்தியல்புரைத்தழித் தலைமகள்சொல்லல்.

4480. ஆயல ரோதி விநாயக வேள்வெற்பி லாரயலார்
வாயல ரோமதன் கையல ரோதனி வாய்ந்தவிற்பூம்
பாயல ரோபகர் வாய்நன் கெனக்குவெம் பற்றலரைக்
காயல ரோவில்லை வேலன்பர் பின்செல் கடுஞ்சுரமே. ()

பாங்கி கையடைகொடுத்தல்.

4481. வேறுபட் டாரை விடுத்தடுத் தார்க்கு விழையும்பொன்னுங்
கூறுபட் டாடையு நல்கும் விநாயக கோன்சிலம்பா
மாறுபட் டானின் னருண்மா திடையவ் வடவரையு
நீறுபட் டாழியுஞ் சேறுபட் டாழுத னிச்சயமே. (௩௨௧)

பாங்கி வைகிருள்விடுத்தல்.

4482. பாரிக்கு நேரும் விநாயக பூபன் பதியடைவா
னேரிக்கு நேர்மொழி முன்செல லாமொழி யேதிலர்வாய்
வேரிக் குமுதக்குச் செங்கதி ராயன்னை மேவுதுயர்
வாரிக்கு வாரழ லாய்ச்சற் றிருந்தா வருவனின்னே. (௩௨௨)

தலைமகளைத் தலைமகன் சுரத்துய்த்தல்.

4483. தீதார் கொடும்பர லென்றனத் தூவியிற் சேந்தயர்நின்
பாதார விந்தம் வருந்தாமன் மெல்லச்செல் பைந்தமிழ்க்கோ
ராதார மான விநாயக பூபதி யண்டலர்செல்
கோதார் முரம்பு நிரம்புவெம் பாலையிற் கோற்றொடியே. ()

பொழில்கண்டுவியத்தல்.

4484. இன்மைச் சுரம்புகுந் தெய்த்தார் துயர மிரிக்கவின்சொ
னன்மைச் சுகுண விநாயக தாருமுன் னண்ணுதல்போல்
வன்மைச் சுரம்புகுந் தெய்த்திடு நந்துயர் மாற்றமலர்
மென்மைச் சரிகுழ லாய்பொழி லொன்றெதிர் மேவியதே. ()

தலைமகன் தலைமகள் அசைவறிந்திருத்தல்.

4485. அந்தோநின் மெல்லடி சேந்துசெவ் வாய்ப்புன லற்றுநிறை
யிந்தோ வெனுமுகம் வேர்வுற்ற தாற்றமி ழின்புலவோர்
வந்தோகை கூரும் விநாயக பூபன் மணிவரைவாழ்
பந்தோ வெனுமுலை யாயிருப் பாமிந்தப் பைம்பொழிற்கே. ()

உவந்தலர்சூட்டி உண்மகிழ்ந்துரைத்தல்.

4486. எய்த்தவஞ் சிற்றிடை யாள்பத நீவி யினமலரான்
மொய்த்தவங் கூந்தன் முடிக்கவும் பெற்ற முழுப்புலவோ
ரைத்தவம் போலும் விநாயக பூப னணிவரையென்
கைத்தவ மேமெய்த் தவமற்றைக் கைத்தவங் கைதவமே. ()

கண்டோரயிர்த்தல்.

4487. தூலோர் விநாயக வேள்பகை போலிந் நுவலருங்கான்
வேலோ வெனும்பரன் மேவிவர் யார்கொல் விடலைதனை
மாலோ வெனில்வளை யாழி யிலையவன் மார்பிறங்காள்
சேலோ வெனுங்கட் டிருவோ வெனிலிந்தச் சேயிழையே. ()

கண்டோர் காதலின்விலக்கல்.

4488. நல்லியற் பாலன் விநாயக பூபனை நண்ணலர்போன்
மெல்லியற் பாவை விடலாய் மெலிந்தனண் மேல்கடலை
யெல்லியற் பானு வடைந்தா னிருளுற்ற தேகரிது
கல்லியற் பாலையெம் மிற்றங்கி யேகுக காலையிலே. (௲௨அ)

கண்டோர்தன்பதியணிமைசாற்றல்.

4489. தேயும் பிறைநுத லாளொடண் ணலச் சிலம்புமிந்தக்
காயுங் கடமுங் கடந்திடிற் றோன்றுங் கலைகள்பல
வாயுங் கழகமு மின்னார் சுரதரு வாரலரை
வேயுஞ் செய்குன்றும் விநாயக பூபன் வியாசையுமே. (௲௨கூ)

தலைவன்றன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

4490. கடத்தே நடந்து வருந்தின மென்று கவலற்கவெவ்
விடத்தே முழுகிய வேல்விழி காணிது வெள்ளையன்னந்
தடத்தே மலரிற் பெடையோ டுறங்கப்பொன் றண்மனைக
ளிடத்தே யுறங்கும் விநாயக பூப னெழினகரே. (௲௩௦)

கற்பொடுபுணர்ந்த கவ்வை.

செவிலி பாங்கியைவினாதல்.

4491. நலிவிழுந் தேமல நன்றுசெய் யென்றுமு னண்ணினரம்
மெலிவிழுந் தேமெனச் செய்யும் விநாயக வேள்வெற்பிலம்
மலிவிழுந் தேமனை புல்லென் றிருப்பதென் மாமயினீ
பொலிவிழுந் தேதமுற் றுயென் மகளெங்குப் போயினளே. ()

பாங்கி செவிலிக்குணர்த்தல்.

4492. பொற்பே சுமந்த விநாயக பூபன் பொருப்பிற்றத்தை
மிற்பே சுமந்த மடமாதன் னையன் றெதிர்களிற்றை
யற்பே சுமந்தடர்த் தார்மண மேற்றில ரையரென்று
கற்பே சுமந்தழ லஞ்சாள்சென் றாள்வெங் கடுஞ்சுரமே. ()

செவிலி தேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்.

4493. விருத்தி யறஞ்செய் விநாயக வேள்வெற்பில் வெம்பரற்கா
னொருத்திசென் றாளென் றுயங்கேலென் பீர்கண்மை யூட்டிமடி
யிருத்தியொண் சுட்டிமென் கூழை திருத்தியின் பாலோடமு
தருத்தி வளர்த்த பெரும்பாவி யெங்ஙன மாற்றுவனே. ()

செவிலி தன்னறிவின்மை தன்னையொர்ந்துரைத்தல்.

4494. பாவிற் குரிய புகழோன் விநாயக பாரிவெற்பி
னேவிற் குரிய கண்ணாண் மடியேறி யிருமுளரிப்
பூவிற் குரிய மகள்யானென் றுளது பொய்யன்றென்றே
னேவிற் குரியவெம் பாவி யதனை நுதலிலளே. (௩௩௪)

செவிலி தெய்வம்வாழ்த்தல்.

4495. காரறி யாத கடத்தடி கன்றவோர் காளைபின்செல்
வாரறி யாத முலைப்பேதை மீண்டு வரச்செயினின்
சீரறி யாதவர் யார்முரு கேசின் செழுந்துளபத்
தாரறி யாத விநாயக மால்வரைச் சாரலிலே. (௩௩௫)

செவிலி நற்றாய்க்கறத்தொடுநிற்றல்.

4496. நன்னேயங் கொண்ட விநாயக வேடொண்டை நாடனையாய்
முன்னே சுனையு ளழுந்தாமற் காத்த முதல்வனிற்கப்
பொன்னேதந் தார்க்கிசை வார்நம ரென்றுட் புனைந்துநம்மை
மின்னே துறந்துவெங் கானடந் தாளந்த வேந்துடனே. ()

நற்றாய் பாங்கிதன்னொடுபுலம்பல்.

4497. திருமக ளேதங்கு மார்ப விநாயக செம்மல்வெற்பி
லொருமக ளேயுள ளன்னது மோர்தி யொருமகனவ்
வருமக ளேர்நெஞ் சடைந்தது நீயறை யாமற்பழி
தருமக ளேவறி தேசுரம் போக்கினை தையலையே. (௩௩௭)

அதுகேட்டபாங்கி அழுங்கல்கண்டு நற்றாய்புலம்பல்.

4498. சேயே யனைய விநாயக பூபன் சிலம்பனையாய்
காயே ரயிற்கையொர் காளைபின் சென்ற கவினுடையென்
றாயே யலளவ ளாடிட நோக்கித் தனித்தல்கண்டு
நீயேகண் ணீருகுத் தாயென்னை விட்டு நெருப்பெனவே. ()

நற்றாய் பாங்கியர்தம்மொடுபுலம்பல்.

4499. விற்றுங்க வாணுத லீர்நல் விநாயக வேள்விண்பரி
யெற்றுங் கொடிமதிற் சத்திர மோவுளத் தெண்ணியவை
முற்றுந் தரவெஞ் சுரமட மாதுகை மொண்டருந்தச்
சற்றும் புனலில்லை யேயென்றென் னாவி தளர்கின்றதே. ()

நற்றாய் அயலார்தம்மொடு புலம்பல்.

4500. இரும்பார் மெழுகி யொருபொழு துண்டெழி னேன்பியற்றிப்
பெரும்பாவி யேன்பெற்ற பேதையைப் போக்கிப் பெறுந்துய
யரும்பா வலங்கல் விநாயக வேள்வெற்பி லாற்றவெதிர் [ரை
வரும்பாவை யாரறி வாரோ பெறுத மலடியரே. (௩௪0)

நற்றாய் தலைமகள்பயிலிடந் தம்மொடுபுலம்பல்.

4501. பாடுந் தமிழுக் கிசைந்த விநாயக பாரிவெற்பி
லாடுந் தடஞ்சுனை யேமனை யேதண் ணலர்பறித்துச் [னே
சூடுந் தடம்பொழி லேயென்ன சொற்றன டோன்றலபின்
நீடுந் துயரி லெனையாழ்த்திச் சென்றகன் னெஞ்சகியே. ()

மிமித்தம் போற்றல்.

4502. மிடியே யகலிடத் தில்லையென் றேத வியாசைநகர்க்
குடியே மருவு விநாயக பூபன் குளிர்சிலம்பிற்
றடியே யெனினுந் தடியேன் றடியேத வாதளிப்பேன்
கொடியே வரக்கரை வாயர சோடுமென் கொம்பினையே. ()

சுரந்தணிவித்தல்.

4503. உன்மனை யாந்தன் மனையகன் றென்மனை யுற்றவெழில்
வின்மனை யாமிளம் பேதை விநாயக வேள்பகைவர்
சென்மனை யாஞ்சுரஞ் சென்று ளதையவள் சேர்மலர்வாழ்
நன்மனை யாகச்செய் வாய்செங் கதிர்செய் நலத்தெய்வமே. ()

இதுவுமது.

4504. நன்மகளே யெற்கென் றெண்ணி விநாயக நம்பிவெற்பிற்
சென்மக ளேர்பெறச் செய்யெனல் பேதைமை செங்கதிரே
யென்மக ளேயவ ளல்லண்முன் னின்மனை யீன்றதனு
லுன்மக ளேவெஞ் சுரத்திற் புரத்தலு முன்கடனே. (௩௪௪)

தன்மகண்மென்மைத்தன்மைக்கிரங்கல்.

4505. மஞ்சோ மறந்தும் பொழியாத வெவ்வழல் வாழ்மனையோ
நஞ்சோ வெனுஞ்சுரத் தெவ்வாறு செல்லு நன்னுவலர்க
டஞ்சோக நீக்கும் விநாயக மால்வெற்பிற் சார்பரலே
பஞ்சோ வென்றே பதைக்கு மிளம்பாவை பதமலரே. ()

இளமைத்தன்மைக் குளமெலிந்திரங்கல்.

4506. காவியப் பாவலர் சூழும் விநாயக காளைவெற்பி
லோவியப் பாவையை யாடற்கு வாவென்று ருமைகண்டு
மேவியப் பாற்கண் பிசைந்தே யழுது மெலிந்திரங்கும்
பாவியப் பாலையெவ் வாறய லான்பின் படர்ந்தனளே. ()

அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.

4507. பொய்கைக் கவின்செய் வியாசை விநாயக பூபன் வெற்பிற்
செய்கைக் களிறெதிர் கண்டோடி வந்தெனைச் சேர்ந்துதழீஇ
மைகைக் கரியகண் ணீரொழி யாளவ் வனத்தின்மதம்
பெய்கைக் களிறுகண் டென்படு மோவந்தப் பேதைநெஞ்சே.

கண்டோரிரக்கம்.

4508. என்னத் துகளில் விநாயக மால்வெற் பிறைவி சென்று
ளுள்ளத் துயருட் டுணைவியர் மூழ்கின ரொள்ளமுது
வள்ளத் துணுங்கிள்ளை யும்பூவை யுங்கண்டு மாழ்கிவிழி
வெள்ளத் துண்மூழ்கு நற்று யயலார்களி மேலுறவே. ()

செவிலிபாற்றுத்தாயைத்தேற்றல்.

4509. முருகார் குழலி கவலேல் கதிர்விழு முன்றுருவிக்
கருகால முண்ட விழியைத் தருவலிக் காசினிதான்
பெருகார்வம் பூண்ட விநாயகப் பேர்கொள் பெருந்திருமா
லொருகா லளந்த தொருகாற் செவ்வாயுண் டுமிழ்ந்ததன்றே.

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல்.

4510. ஒன்றுற வேயிரு முக்கோல்கை நான்மறை யோதியைந்து
வென்றுறு மாறெழு மெண்டிசை யேத்திட மேவந்தணீர்
நன்றுறு வண்மை விநாயக வேள்வெற்பி னற்பிடியோன்
றின்றுயர் வேழத்தொ டேகிய தோசொன்மி னிந்நெறியே. ()

மிக்கோரேதுக்காட்டல்.

4511. வாவியிற் றோன்று மலரணி வார்க்கன்றி வாவிக்கென்றோ
காவியிற் றோன்றும் விழியணங் கேசெய்யுங் கற்றவர்த
மாவியிற் றோன்றும் விநாயக மால்வெற்பி லார்கமலத்
தேவியிற் றோன்றுநின் மாதுமன் றானென்று தேர்குவையே.

செவிலியெயிற்றியொடுபுலம்பல்.

4512. அறக்கொடி யேற்றும் விநாயக மால்வெற்பி லாரணைமே
லுறக்கொடி யேன்றழு வுங்கை சிறிதொரு விற்புலம்புங்
குறக்கொடி யேநடந் தாண்மென் குரலிற் கொடுவெரிப்பன்
மறக்கொடி யேகண் டனையே சுரத்தொரு மன்னுடனே. ()

செவ்விகுரவொடுபுலம்பல்.

4513. இன்பாவை வேய்ந்த விநாயக பூபனை யெண்ணலர்போற்
றன்பாவை யும்பூவை யும்பந்து நீத்தித் தழற்சுரத்தி
லென்பாவை செல்லத் தடுத்திலை யின்னற் கிரங்கிலைநீ
நின்பாவை யோடுற்று நீடூழி வாழ்க நெடுங்குரவே. (௯௱௩)

சுவடுகண்டிரங்கல்.

4514. தெவ்வடி வீழச் சினக்கும் விநாயக செம்மல்வெற்பின்
மைவடி வாள்விழி மானடி யிவ்வடி வந்தெதிர்ந்து
கைவடி வேல்கொள் களிற்றடி யவ்வடி காளையடி
யுவ்வடி யேயித் தழற்சுரத் தென்றுளத் துன்னுவனே. ()

செவிலிகலந்துடன் வருவோர்க்கண்டு கேட்டல்.

4515. மாலூர் திருவு மெனவரு வீர்வறு மைக்கசனி
போலுஞ் செழுங்கை விநாயக பூபன் பொருந்தலர்செல்
வேலூர் தழலு மனபரற் கானெதிர் மேவினரோ
சேலும் பிணையு மனையகண் ணாளுமோர் செல்வனுமே. ()

அவர்புலம்பல்தேற்றல்.

4516. முன்னா விளங்குற யான்கண்ட வேந்துமிம் மொய்குழலா
மென்னாவி கண்டவம் மன்னாவி யுஞ்சென் றின் றெய்துவர்பூ
மன்னாவி யுங்குளிர் சோலையுஞ் சூழ்ந்து மலிந்துவள
மின்னா விளங்கு விநாயக பூபன் வியாசையையே. (௯௱௬)

செவிலிபுதல்வியைக்காணாது கவலைகூர்தல்.

4517. மண்பெற்ற கற்பக மன்ன விநாயக மால்வரைமேற்
கண்பெற்ற மாதைக் கடமெங்கு நாடியுங் கண்டிலன்வெம்
புண்பெற்ற நெஞ்சிற் புலம்புவ னாவியைப் போக்கிலனைப்
பெண்பெற்ற பாவிக்கென் னோவினை யேன்சென்று பேசுவனே.

மீட்சி.

தலைவிசேணகன்றமை செவிலிதாய்க்குணர்த்தல்.

4518. கரியும் பரியும் புரியும் விநாயக கற்பகத்தின்
கிரியுஞ் சரியும் பிரியும் படிநங் கிளியைக்கொடு
வரியும் மரியுந் திரியுங் கடநின்றம் மன்கொண்டன்னாய்
விரியுந் தெரியும் வரியுந் துகாநகர் மேவினனே. (௩௫௮)

தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.

4519. நீயா டுறுதண் சுனையோ வதுவண்ட னேரிழைநீ
போயா டுறுபைம் புனமிது வூசல் பொலியவுற்றுத்
தாயா டுறுபூம் பொழிலுது நின்னைத் தனிக்கண்டவிண்
வேயா டுறுநல் விநாயக பூபதி வெற்பிதுவே. (௩௫௯)

தலைவிமுன்செல்வோர் தம்மொடுதான்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

4520. சரங்கடந் தேறும் விழிப்பாங் கியர்க்குத் தழைந்துறுமா
திரங்கடந் தேறும் புகழ்சேர் விநாயக சேய்வரைத்தெவ்
வுரங்கடந் தேறு மயிலா ளுடுங்க ளொளியிழைவெஞ்
சுரங்கடந் தேறிவந் தாளென்பிர் முன்செலுந் தூயவரே. ()

முன்சென்றோர் பாங்கியர்க்குணர்த்தல்.

4521. மழைகாட்டு மாட வியாசை விநாயக மால்வரைவாய்க்
கழைகாட்டுந் தோண்மட வீர்கவின் காட்டுதன் காதலனோ
டுழைகாட்டும் வாள்விழி நுங்கா தலிவெப் பொருவலின்றித்
தழைகாட் டுறுமதர் நீநதியிவ் வூர்ப்புறஞ் சார்ந்தனளே. ()

பாங்கியர்கேட்டு நற்றாய்க்குணர்த்தல்.

4522. பயிரேய் பணைகொள் வியாசை விநாயக பாரிவெற்பிற்
செயிரே யகலுக நங்குடி வெஞ்சுரந் தீர்ந்தின்றன்னை
யயிரேய் மொழிதன் னுயிரேயன் னானொ டணைந்தனளென்
றுயிரேய் தரநிற் குதவின ராற்சில வுத்தமரே. (௩௬௨)

நற்றாய்கேட்டவனுளங்கோள் வேலனைவினாதல்.

4523. நன்னேய மார்ந்த விநாயக வேள்வரை நன்முருகே
மின்னேய நுண்ணிடை நன்மா தொடர்ந்த விடலையுவந்
தென்னேய நன்மனைக் கேவரு மோதனை யீன்றநற்றாய்
தன்னேய நன்மனைக் கேபுகு மோவிது சாற்றுகவே. ()

தன்மனைவரைதல்.

நற்றாய் மணமயர்வேட்கையிற் செவ்லியைவினாதல்.

4524. மான்றவஞ் செய்த விழிமட வாய்சென்ற மாதைப்பெற்ற
யான்றவஞ் செய்தனை னோவன்றி யேந்தலை யீன்றநற்றாய்
தான்றவஞ் செய்தன ளோமணங் காணத் தமிழ்புனைய
வான்றவஞ் செய்த விநாயக பூபன் வரையிடத்தே. (௩௬௪)

செவிலிக்கிகுலைவரைந்தமையுணர்த்தல்.

4525. என்னென் றறைகுவ தீன்றாளுக் கன்னை யினிநடுங்கு
மின்னென்ற நுண்ணிடை நம்பொன்னை யந்த விடலையுறுந்
தன்னென் றமர்மனைக் கேவரைந் தானென்று சாற்றினர்மண்
டின்னென் றவமென் விநாயக மால்வெற்பிற் றூதர்வந்தே. ()

வரைந்தமை செவிலிநற்றாய்க்குணர்த்தல்.

4526. தன்சுற்றஞ் சூழநின் றூற்றநந் தையலைத் தக்கமண
மின்சுற் றயிலன்பர் செய்தணங் கேதமிழ் மெய்ப்புலவ
ரென்சுற்ற மென்னும் விநாயக மால்வெற்பிங் கெய்துவர்நீ
யுன்சுற்றந் தேற வுரையென்று தூத ருரைத்தனரே. (௩சுசு)

தலைவன்பாங்கிக்குயர்ந்வரைந்தமை நுமர்க்கியம்புகென்றல்.

4527. என்னியை யாதென் னியைந்தார் தமக்கென் றினிதியம்பும்
பொன்னியை வண்மை விநாயக பூபன் பொருப்பினுங்கள்
வன்னியை வன்னியைச் சான்றென வைத்தியான் வரைந்தமையை
மின்னியை நுண்ணிடை யாய்சென் றுமர்க்கு விளம்புகவே.()

பாங்கிதானதுமுன்னே சாற்றியதுரைத்தல்.

4528. வான்றெரிந் தேறுங் கரத்தான் விநாயக மால்வரையிற்
றேன்றெரிந் தேறுங் குழலாளை நீகிளை சேரமதி
மீன்றெரிந் தேறுன் மனைவாய் வரைந்து விழைந்தமைமுன்
யான்றெரிந் தேறு மிறைவா புகன்றன னீன்றவட்கே. ()

உடன்போக்கிடையீடு.

நீக்குக்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவுணர்த்திவிடுத்தல்.

4529. வெம்மைக் கடமுங் குளிரச்சென் றுளன்பன் மெய்கிழவி
லும்மைப் பிரிதுய ரோமடென் றுரைப்பி ருயர்தவத்தீ
ரெம்மைப் புரத்தியென் பார்க்கு நிதிய மினிதளிக்கு
மம்மைக் கரத்தன் விநாயக மால்வெற் பரிவையர்க்கே. ()

தலைமகடன்செலவீன்றாட்குணர்த்தி விடுத்தல்.

4530. வேயைக்கண் டன்னமென் றோண்மட மாதொர் விடலைபின்னே
தீயைக்கண் டன்ன சுரநடந் தாளென்று சென்றுரைப்பீர்
சேயைக்கண் டன்ன விநாயக மால்வெற்பிற் சேரித்துய
ராயைக்கண் டன்ன முகைப்போ னனமறை யந்தணரே. ()

நற்றாய்க்கந்தணர்மொழிதல்.

4531. கற்பார்கள் யாருந் தற்பாடவென் றேதமிழ் கற்கநல்கும்
பொற்பார் சுகுண விநாயக மால்வரைப் பொன்னனையாய்
கற்பா ரழல்சுமந் தேற்சுடுந் தீயிக் கடத்தின்றென்றுன்
பொற்பார மென்முலை யாளன்பன் பின்சுரம் போயினளே.()

நற்றாயறத்தொடுநிற்றலிற்றமர்பின்சேறலைத் தலைவிகண்டுதலைவற்குணர்த்தல்.

4532. இலம்பையு ளூற்றன மென்றினி யான்சொல மென்னவணி
கலம்பைம்பொன் னுற்றவர்க் கீயும் விநாயக காளைவெற்பில்
விலம்பை வளைத்தெதிர் பூவிமிக் கார்த்துப்பன் மேகம்பொற்
சிலம்பை வளைத்தென வேவளைந் தாரெமர் தேரினையே. ()

தலைமகளைத்தலைமகன்விடுத்தல்.

4533. பகையே யெனிலிந்தச் சேனைக் கடற்கென் பகழியொன்றே
தகையேய் குறுமுனி யாநும ரேலிதழ்த் தண்மலரே
முகையே யணிகுழ லாயஞ்சு வேன்செல முன்னிற்கநீ
திகையே விழுங்கும் புகழ்சேர் விநாயக சேய்வரைக்கே. ()

தமருடன்செல்பவளவன்புறநோக்கிக் கவன்றாற்றல்.

4534. பொருளாற் பெரியன் புகழாற் பெரியன் புனைதருநூற்
றெருளாற் பெரியன் விநாயக மால்வெற்பிற் றேடிவந்த
மருளாற் பெரிய வெமர்முன் றங் கையில் வணக்கவின்றி
யருளாற் பெரியவ ரன்ப ரெனைவிட் டகன்றனரே. (௩௭௪)

வரைதல்.

சென்றோன்மீண்டுவந் தந்தணரையுஞ் சான்றோரையுமுன்னிட்டு
வரைந்துகொண்டுழிக்கண்டோர் மகிழ்ந்துகூறல்.

4535. பொன்னே மணியே கொடுக்கும் விநாயக பூபன்வெற்பிற்
றென்னேய நம்புண்ணி யம்பெரி தேயிந்தச் செல்வன்புரி
மின்னே ரிணைமணங் காண நமைமுன் விதித்தனன்பின்
னென்னே யிருவிழி யேவிதித் தான்விதி யென்பவனே. ()

இதுவுமது.

4536. குணங்கண்ட செந்தமி ழாய்ந்து கவிசொலக் கூடறிஞர்
கணங்கண்ட நாணல்ல நாளென் விநாயக காளைவெற்பிற்
பணங்கண்ட வல்குற் பனிமொழி யாளையிப் பார்த்திபன்செய்
மணங்கண்ட நம்மினும் வான்றவங் கண்டவர் மற்றெவரே ()

இல்வாழ்க்கை.

தலைவன்றலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.

4537. கானேய் குழலி நினக்குக்கைம்மாறொன் றுங் கண்டிலன்வேற்
கோனே யெனச்சொல் விநாயக பூபன் குளிர்சிலம்பிற்
றேனேய் மொழிக்கயன் மீனேய் விழிநின்றன் செல்விமணம்
யானே பெறவளித் தேயலர் சூடி யிழைத்தனையே. (௩௭௭)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

4538. சீரா தவனொளி யான்செந் தமிழ்க்கவி செப்பிநல்லோர்
வாராத நாள்கண் டறியா விநாயக வள்ளல்வெற்பா
சாராத வின்பமின் முகப்பொன் மான்புணர் சக்கிரிபோற்
றீராத வன்பொடு வாழிய நீயித் திருவுடனே. (௩௭௮)

பாங்கிதலைவியை வரையுநாளளவும் வருந்தாதிருந்தமையுரையாயென்றல்.

4539. பாவலர் போற்றும் விநாயக மால்வெற்பிற் பைங்குழன்மேற்
பூவலர் சூட்டப் பொறுவிடை நங்கை புகன்றருள்வாய்
மேவலர் தூற்ற லருமத வேள்கையில் வேற்றலரும்
காவலர் பொன்புனை காறும் பொறுத்திடு காரணமே. ()

பெருமகளுரைத்தல்.

4540. கண்டேந் தியசொற் கருங்குழி வேலிறை காக்கவரை
கொண்டேந் தியகை விநாயக மால்வெற்பிற் கொங்கர்தங்கைப்
பண்டேந் தியபைந் தழைமருந் தாய்விற் படைமதனன்
வண்டேந் தியமலர் வேய்மாற் றிடவுயிர் வாய்த்தனனே. ()

தலைவனைப்பாங்கி வரையுநாளளவுநிலைபெறவாற்றிய நிலைமைவினாதல்.

4541. பாரன்றி வானும் பரவும் விநாயக பாரிவெற்பிற்
காரன்றி நேரில்லை யாய்வரை காறுமெங் காரிகைதன்
வாரன்றி வேழ மருப்பு முனிந்து வளருமிள
நீரன்றி யெவ்வா றவித்தாய் வெங்காம நெருப்பினையே. ()

மன்றன்மனைவரும் செவிலிக்கிகுளையன்புறவுணர்த்தல்.

4542. வாங்குஞ் சிலைநுதன் மாது விநாயக மால்வரைவாய்த்
தேங்குந் திருவருட் பார்வையி லாட்டிச்செவ் வாயமுத
மோங்குந் தடமுலைப் பீடத்தி லேற்றிநன் கூட்டுதலின்
வீங்குந் தடம்புயத் தூரனன் றாய்மகிழ் மிக்குறுமே. ()

பாங்கி இல்வாழ்க்கைநன்றென்று செவிலிக்குரைத்தல்.

4543. அல்வாழ்க் கையார்பைங் குழலா ளடுத்தவர்க் கம்பொன்றரு
நல்வாழ்க்கை யிற்றலை யாய விநாயக நம்பியைப்போல்
வில்வாழ்க்கை யார்புய வேந்தற்கு மேவு விருந்திற்குமூட்
டில்வாழ்க்கை யிற்றலை யானா ளுபசரித் தெம்மனையே. ()

மணமனைச்சென்றுவந்த செவிலிபொற்றொடிகற்பியல் நற்றாய்க்குரைத்தல்.

4544. வான்றொழுந் தெய்வ மெனமயி லைப்புன்னை வாழ்பரமே
யான்றொழுந் தெய்வ மெனச்சொல் விநாயக வேந்தல்வெற்பிற்
றான்றொழுந் தெய்வங் கொழுநனென் றேகொண்டு தக்கவட
மீன்றொழுந் தெய்வமின் மாதா யினள்கற்பின் மெல்லியலே.()

நன்மனைவாழ்க்கைத் தன்மையுணர்த்தல்.

4545. வெண்குன்ற மாட வியாசை விநாயக வேள்வரைவாய்ப்
பண்குன்ற வென்றசொற் பாவைதன் வாழ்மனை பைம்பொனுயர்
வண்குன்ற மொக்குஞ்செல் வத்தினின் போகத்தின் மானும்பறை
தண்குன்ற ரிந்தவன் றன்னொடு வாழுஞ் சசிமனையே. ()

செவிலி நற்றாய்க்கிருவர் காதலையுமறிவித்தல்.

4546. கற்றோர் புகழும் விநாயக மால்வரைக் காரிகையாண்
மற்றோர்தெய் வம்முளம் வைத்தறி யாளந்த மன்னன்பகை
யுற்றோர் முனைவயிற் செல்லினு மாலை யுறிலவனை
நற்றோகை யல்குற் பொற்றேரேற் றிடுமெவ னற்களிறே. ()

பரத்தையிற்பிரிவு.

காதலன் பிரிவுழிக்கண்டோர்புலவிக்கு ஏதுவிதாமவ்விறைவிக்கென்றல்.

4547. நன்றோ வுதலென்று மில்லா விநாயக நம்பிவெற்பிற்
குன்றோ வெனுமுலைச் சூளையர் செங்கை குவித்தொர்குன்றை
யின்றோகை சூழ்ந்தெனச் சூழ்ந்தன ராலவ் விறைவிவிழி
யொன்றோ விருதடந் தோளுஞ் சிவந்திடு மூரனுக்கே. ()

தனித்துழியிறைவி துனித்தழுதிரங்கல்.

4548. ஊனோ டுறுமுயிர் போலக் கலந்திங் குனையகலேன்
மானேவென் கண்ணியென் றும்பொது மாதரில் வாய்ப்புகுத்தார்

வாரேனசிந் தாமணி யோவென் விநாயக வள்ளனகர்
யாரோ தவமுடை யேனவ ரோமெய்ய ரென்னெஞ்சமே. ()

ஈங்கிது வென்னெனப் பாங்கிவினாதல்.

4549. சார்ந்தார்க் கினிய விநாயக மாலன்ன சத்திரத்தைச்
சேர்ந்தார் பசியிற் றியங்கலுண் டோவன்பர் தின்டடந்தோ
ளீர்ந்தா ரணிகுழ லாய்பிரி யாதுற் றினியாகல
மார்ந்தா யழுங்கலென் றேவகன் றூரி னயர்வடைந்தே. ()

இறைமகன் புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

4550. மாலிருக் குங்கை விநாயக மானகர் வாயென்றொரீஇப்
பாலிருக் கப்புளிங் கடியுண் பாரிற் பரத்தையரில்
வாலிருக் குஞ்சிறை மென்பே டொரீஇயன மாமலரின்
மேலிருக் குஞ்சங்கம் புல்வய லூரார் விரும்பினரே. (கூகo)

தலைவியைப் பாங்கிகழறல்.

4551. திறம்பூண்ட சீர்கொள் விநாயக பூப னெடுநகர்வாய்
மறம்பூண்ட கண்ணி வருவிருந் தூட்டி மகிழ்ந்தொழியாத்
திறம்பூண்ட கற்பியல் போற்றிச் சிறந்து திகழுமனை
யறம்பூண்ட நீகொழு நன்குறை கூற லழகல்லவே. (கூகக)

இதுவுமது.

4552. வீற்றிற் படிந்த விநாயக மால்வெற்பில் வெய்யவிரு
கூற்றிற் படிந்தகண் ணுய்பொது மாதரிற் கூடல்கண்டு
சேற்றிற் படிந்த கருமேதி பின்னர்த் தெளிந்தபுன
லாற்றிற் படியுநல் லூரனைச் சீற லழகிதென்றே. (கூகஉ)

தலைவி செவ்வணியணிந்து சேடியைவிடப்புழியவ்வணி
உழையர்கண்டு அழுங்கிக்கூறல்.

4553. பகையே யிலாம லொருப்பார் தமக்குப் பகையொன்றுற்ற
தகையேயொர் காரண மின்றி யிகழ்பவர் தங்கட்களித்
தொகையேய் தொடையல் விநாயக மால்வளத் தொன்னகர்வாய்
முகையேய் குழல்செவ் வணியணிந் தேசெல முன்னியதே. ()

பரத்தையர்கண்டேழித்தல்.

4554. கற்றுங் கலைசொலக் கேட்டும் பொழுது கழிக்குமொரு
நற்றுங்க னோங்கும் விநாயக மானன் னகரிற்பைந்தார்
சுற்றுங் கருங்குழ லொன்றே சிவக்கவித் தோகையங்க
முற்றுங் கவினச் சிவந்தடைந் தாளிம் முறையழகே. (கூகச)

பரத்தைபருலகியலோக்கி விடுத்தலிற்றலைமகன் வரவுகண்டு
வந்தவாயில்கண்மொழிதல்.

4555. விண்டோர் புகழ்செய் விநாயக பூபன் வியாசையன்ன
வண்டேய் குழலெம் பெருமாட்டி யேவிய மாதணியைக்
கண்டே மருத நிழற்கரு மேதிதன் கன்றுமல
ருண்டே துயில்புன லூரன்வந் தான்மிக வுத்தமனே. ()

தலைமகன்வரவு பாங்கிதலைவிக்குணர்த்தல்.

4556. கரும்புகழ்ந் தேவெங் கடத்தின் விலங்கினிற் கைத்திறைவர்
விரும்பின ரேனுமன் பில்பொது மாதரை மீண்டனரப்
பெரும்பிழை நோக்கல் விநாயக பூபன் பிறங்குநக
ரரும்பிள மென்முலை யாயெதிர் கோட லழகுனக்கே.(௩கூகூ)

தலைவனைத்தலைவி எதிர்கொண்டுபணிதல்.

4557. அடுத்தார்க் கினிய விநாயக பூப னணிநகர்வாய்த்
தொடுத்தார் தொடைபிறை வாகொள்ளை கொள்பொரு டுன்பகலக்
கொடுத்தா ரெனப்பணிந் தியானின் புறவுட் குழைந்துநினை
விடுத்தாரம் மாதரும் பல்லூழி வாழ்கவிம் மேதினிக்கே. ()

புணர்ச்சியின்மகிழ்தல்.

4558. வானும் புகழும் விநாயக மானகர் வாய்க்கணையு
மீனும் புரையும் விழியாட னனைந்த வெள்ளத்திடை
யானும் புகுந்தினி தாடப் பெற்றே னின்பிதனினெவன்
றேனும் புளித்துக் கரும்புங் கசந்திடத் தித்தித்ததே.(௩கூஅ)

வெள்ளணியணிந்துவிடுத்தல்.

4559. புள்ளணி தொங்கல் விநாயக பூபன் புகழெனவே
வெள்ளணி பூண்டு விரைந்தன ரால்வெள் வலம்புரியிற்
றெள்ளணி முத்தென மாதிடைத் தோன்றிய சேயுதைய
மொள்ளணி வார்முலைச் சேடியர் கூறிட வூரனுக்கே. ()

வெள்ளணியணிந்து விடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

4560. ஆடலை யார்ந்த வயில்விழி யாளென் னரியபிழை
கோடலை மெல்லக் குணமோதிப் போக்கிக் குலவுறுமுள்
ளூடலை நீத்தெனை யுட்சேர்த்த லுன்கட னெண்புலவோர்
பாடலை வேய்ந்த விநாயக மானகர்ப் பைந்தொடியே. (௪00)

தலைவிநெய்யாடியதிருவைசாற்றல்.

4561. மால்பாய் களிற்று விநாயக மானகர் வாய்மருவும்
வேல்பாய்கண் பாலற் பயந்துநெய் யாடினள் வெற்றிடத்துஞ்
சேல்பாய்க் கதிர்ச்செந்நெற் பூம்பணை நின்று செழுங்கவரிப்
பால்பாய்கல் லூரவிப் போதுன் றிருவுள்ளப் பாங்கென்னவே.

தலைவன்றன் மனத்துவகைகூர்தல்.

4562. வான்காண நோற்ற கொடையான் விநாயக மானகர்வாய்
மீன்காண நோற்றகண் மாதுநெய் யாடிய மெய்யுங்கஞ்சத்
தான்காண நோற்றகைச் சேயுஞ் சுரப்புறு தண்முலையும்
யான்காண நோற்றது சற்றேபொன் மேரு வினும்பெரிதே.()

தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றல்.

4563. பொய்ப்பொருள் போலு மருங்குசல் வாய்நின் புணர்முலையுண்
கைப்பொருள் காண வவாவிவர் தார்வண் கவிப்புலவர்க்

கைப்பொருண் மேவு மறையாத்தன் செங்கைய மைத்தறமா
மெய்ப்பொரு ளாயும் விநாயக மானகர் வேந்தரின்றே. ()

தலைவியுணர்ந்து தலைவனொடுபுலத்தல்.

4564. வேலே மணக்கும் விழிப்பொது மாதர்தம் மெய்யன்றென்மெய்
பாலே மணக்குங் களபமின் றின்னும் படிமையர்தங்
காலே மணக்குநின் சென்னி விநாயக காமனகர்
மேலே மணக்கவென் கால்கோட லூர விழுமிதன்றே. ()

பாணன்வாயில்வேண்டல்.

4565. ஏவேறு வாள்விழி யெம்பெரு மாட்டிநின் னிற்படிநங்
கோவேறு மாறுட் குறித்தருள் வாய்குணங் கொண்டதமிழ்ப்
பாவேறு சீர்த்தி விநாயக மானகர்ப் பாயுமத
மாவேறு சேவடி நோவப் புறநிற்றன் மாண்பலவே. (௪௦௫)

தலைவி பாணனைமறுத்தல்.

4566. மல்லற் கவின்கொள் விநாயக மானகர் வாய்ப்புலவி
புல்லற்க வூரர்மெய் யன்பின ரென்று புகன்றனைநீ
சொல்லற்க விப்பெரும் பொய்யெம்மு னுத்தின்னி தூய்மையிலாய்
நில்லற்க நில்லற்க செல்கவெம் மிற்கடை நீங்கியின்னே. ()

வாயின்மறுக்கப்பட்ட பாணன்கூறல்.

4567. மஞ்சின மாய செழுங்கை விநாயக மானகர்வாய்ப்
பஞ்சினமேவு பதப்பெரு மாட்டிநின் பானிற்கயா
னஞ்சினன் செங்கட் கழுநீர்தண் ணீல மதாயிடநின்
வெஞ்சின மாற்றுக வீசற்க வாழிய வெங்கல்லேயே. (௪௦௭)

விறலிவாயின்மறுத்தல்.

4568. கண்ணுறுப் பாதி சிலகுறைந் தாருமக் கள்ளெனல்போற்
பெண்ணுறுப் பாகிய நாண்முனில் லாரையும் பெண்டிரென்றே
யெண்ணுறுப் பாய்வில் லவர்க்கினி யார்க்குமுன் னேகின்னநம்
பண்ணுறுப் பாயும் விநாயக மானகர்ப் பாடினியே. (௪௦௮)

பாங்கி வாயின்மறுத்தல்.

4569. தாய்காணு மன்பன் விநாயக மானகர்ச் சாரிளமென்
வேய்காணுந் தோளியென் சொல்கேன்செந் தெட்பணை மேதிநின்ன
சாய்காணு மூரர்முன் றந்தபின் சிற்றி றனையழிக்குஞ்
சேய்காணு மாநின்று வந்தார் பரத்தையர் சேரிநின்றே. ()

விருந்தொடுவந்த புலப்பொறுத்தல்கண்டு இறையோன்மகிழ்தல்.

4570. வருந்துருக் கொண்டலைந் தேயிரப் பாரின்மை வன்பிணிக்கு
மருந்துருக் கொண்ட விநாயக மானகர் மானனையாண்
முருந்துருக் கொண்ட நகையோ டலர்ந்த முகம்பெறவே
விருந்துருக் கொண்டவென் புண்ணியம் வாழ்க வியன்புவிக்கே.

விருந்துகண்டொளித்த வூடல்வெளிப்படல்.

4571. ஓராழித் தேர்முன நீங்கிம மத்தே ரொழிவுகண்டு
நீராழி வைப்பி லுறல்போல் விருந்தின்று னீங்குசெம்மை
கூராழி யங்கை விநாயக மானகர்க் கொம்பனையாள்
காராழி யங்க ணுற்றன்று விருந்தின் கழிவுகண்டே. (சகக)

விருந்துகண்டொளித்த வூடல்வெளிப்படல்நோக்கிச் சீறேலென்றவள்
சீறடி தொழுதல்.

4572. மீன்செய்மென் னோக்கியர் மோகன் விநாயக வேணகர்வாய்
வான்செய் பகைஞரும் வந்தடி வீழின் மறுப்பதுண்டோ
தேன்செய்நின் பூவடி சென்னிவைத் தேனினிச் சீறலடி
யேன்செய் பெரும்பிழை முற்றும் பொறுத்தரு ளேந்திழையே.

இஃதெங்கையர்காணினன்றல் றென்றல்.

4573. மொய்க்கும் பிரசத் தொடையான் விநாயக மொய்ம்பனகர்
கைக்கும் பிழைகொள்ள லென்றிறை வாவென்றன் கால்விழுமிப்
பொய்க்கும்பி டொன்றினை யெங்கையர் கண்டிடிற் பூண்டதுனி
மெய்க்கும் பிடிபதி னுயிர மேனும் விலக்கலரே. (சகங)

அங்கவர்யாரையு மறியேனென்றல்.

4574. மாங்கனி யுண்டவர் காஞ்சிரங் காயுண வாஞ்சிப்பரோ
பூங்கனி நித்திலம் பூண்டார் மனவைப் புனைவர்கொலோ
வோங்க னிகர்த்த புயத்தான் விநாயக வும்பனகர்த்
தேங்கனி மென்மொழி நின்னன்றி யாரையுந் தேர்ந்திலனே.()

காமக்கிழத்தியைக் கண்டமைபகர்தல்.

4575. வண்டே ருருட்டுமின் மகனைத் தழுவுவன் மைந்தனிவன்
கண்டேய் மொழியெங்கை நீயுமுன் னில்லிது காண்கெனநாண்
கொண்டே யொருத்திசென் றுள்குடஞ் சுட்டின் குழாம்வரையாற்
பண்டே புரந்த விநாயக மானகர்ப் பார்த்திபனே. (சகரு)

இதுவுமது.

4576. கல்லார் குழூவென்றும் புல்லா விநாயக காமனகர்
வில்லார் தெருவில் விளையாடுமின் சேயையோர் மெல்லியலாள்
புல்லாவுன் சிற்றனை யென்றுண்மெய் யென்றியான் புகலவென்று
மில்லாத நாணுமுற் றேகின ளாலின் றிறையவனே. (சகசு)

தலைவியைப் பாங்கிதணித்தல்.

4577. உமையரன் மோகினி கொங்கை புணர்ந்தும்பொன் னெல்குமிடை
சுமைமுலை நீளையை மால்சேர்ந்து மூடித் துறந்திலர்நீ
கமையடை யாததென் பன்முறை யன்பர்நின் கால்பணிந்து
மமைதிரு வாளன் விநாயக மானக ராரணங்கே. (சகஎ)

தலைமகள்புலவி தணியாளாகத் தலைமகனூடல்.

4578. காவியுஞ் சேலும் பொரும்விழி யாளிவள் கைக்கழங்கும்
வாவியுங் காவு மறந்துவெங் கானன்று வந்தகண்ணு

மாவியு ரோமு தல்லன் விநாயக வன்பன்றெவ்வும்
பாவியும் போலப் பதைக்குநெஞ் சேகொழி பைதலையே. ()

பாங்கி அன்பிலைகொடியையெனத் தலைவனையிகழ்தல்.

4579. மாலும் புயலு மனைய விநாயக வள்ளனகர்ச்
சேலுங் கணையு மனவிழி யாண்மொழி தேனுவின்றீம்
பாலுங் கரும்பு மெனவே யினித்தது பண்டரவங்
காலுங் கொடுநஞ்சம் வேம்பு முனக்கின்றெங் காவலனே. ()

ஆயிழைமைத்தனுமாற்றுமையும் வாயில்களாகவரவெதிர்கோடல்.

4580. கல்லா ரெனவென்றும் புல்லார்தம் மில்லிடைக் கற்றறிந்த
நல்லார் வெங்காமங் கடல்போற் பெருகினு நண்ணுவரோ
பல்லார் புகழும் விநாயக மானகர்ப் பார்த்திபரென்
னில்லார் தரமகற் புல்லா வணைந்தன ரென்றவமே. (௬௨0)

மணந்தவன்போயபின்வந்த பாங்கியோடு இணங்கியமைத்தனையினிதிற்புகழ்தல்.

4581. விற்றே ரகலல்கு லாய்நல் விநாயக வேளெனவே
கற்றே ருறுகவி வல்லோர் புகழ்ந்திடக் கல்விசெல்வம்
மற்றோர்முற் றும்முற்று வாழிய ரோவின்பம் வாய்க்கவன்பர்
பொற்றே ரென்னில்லிற் றிருப்பிய காதற் பொலிமகவே. ()

தலைவி தலைவனைப்புகழ்தல்.

4582 நன்று வலர்கடஞ் செங்கா வரங்கி னடிக்கும்புகழ்
தன்று பரண மெனக்கொள் விநாயக தாருநகர்
மின்னுருக் கன்பரைத் தெய்வமென் றேகற்ற மேலவர்தாஞ்
சொன்னுரெற் காவியு மாயின ராலன்பர் தூமொழியே. ()

சிலைநுதற்பாங்கி மனைவியைப்புகழ்தல்.

4583. ஆலி யெனப்பொன் னடுத்தார்தங் கையின்முன் னூர்த்தவள்ளல்
போலி யெனப்பெய் விநாயக மானகர்ப் பொன்பணியுட்
டாலி யெனக்கற்பி னருளன் பற்கண்டு தாழுதலாற்
சாலி யெனவட மீன்றுதித் தப்பெயர் தாங்கினளே. (௬௨௩)

ஓதற்பிரிவு.

கல்விபிற்பிரிவு தலைவன் பாங்கிக்குணர்த்தல்.

4584. யாரே கல்லாம லுயர்ந்தார் தென்கூட லிறையவனுஞ்
சீரேய் சங்கத்தி லினிதிருந் தாய்ந்தனன் றெவ்வடங்கப் [த்
போரே விரும்பு தடந்தோட் டனஞ்சயன் பொற்கொடிஞ்சி
தேரே நடாத்து விநாயக மானகர்ச் சேயிழையே. (௬௨௪)

பாங்கிமறுத்தல்.

4585. கனத்மேய் புரிசை வியாசை விநாயக காமனன்பார்
மனமே மருவு மயிலைப் பிரான்மகிழ் மட்டிட்டபா
முனமே மொழிந்தவர் போற்பா மொழிய முயன்றுகற்றே
யினமே சலவில னென்புபி செய்தவிங் கெய்தாசே. (௬௨௫)

தலைவனுடன்படுத்தல்.

4586. இற்றனை யோங்கல்கொ லென்னு மிதிலை யிடத்திறவோர்
விற்றனை நோக்கு விநாயக பூபன் வியாசையின்வாய்க்
கற்றனைத் தூறு மறிவென்று மேலவர் கட்டுரைத்த
சொற்றனை யோர்ந்திலர் போலுரை யாடலென் றூமொழியே.

கல்விப்பிரிவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

4587. நுண்மா ணுழைபுல மில்லா னெழினல நூற்புலவர்
மண்மாண் புனைதரு பாவை யற்றென்று வகுத்தனரா
லெண்மா ணறிவினுக் காகரங் கல்வியென் றேகினர்மென்
பண்மாண் மொழிநல் விநாயக மானகர்ப் பார்த்திபரே. (௪௨௭)

தலைமகள் கார்ப்பருவங்கண்டுபுலம்பல்.

4588. மருக்கொண்ட மாமலர் மந்தார மேயுரு மாறிவந்த
குருக்கொண்ட சீர்த்தி விநாயக மானகர்க் கொற்றவர்தாந்
திருக்கொண்ட நூற்கட லுண்டு வருமுன் றிரையுண்டுபைங்
கருக்கொண்டல் வந்தது வாலென்செய் கேன்வெங் கடுவெனவே.

தலைமகளைப்பாங்கியாற்றுவித்தல்.

4589. காமாரி யன்பர்க்கும் பாவாணர் செஞ்சொற் கவிக்குஞ்செம்பொ
னுமாரி பெய்யும் விநாயக மானக ரன்பரியற்
பாமாரி பெய்யச்சென் றுருற்ற தன்மை பகருதற்கே
மாமாரி பெய்யு முகில்வந்த தாற்பிறை வாணுதலே. (௪௨௯)

காவற்பிரிவு.

காவற்பிரிவு தலைவன்பாங்கிக்குணர்த்தல்.

4590. தன்னுயிர்க்காவல னென்ற கலங்குடி தங்குமொரு
பொன்னுயிர்க் காவல் புரியும் விநாயக பூபன்வெற்பின்
மன்னுயிர்க் காவல் புரிவா னகன்று வருமளவு
மென்னுயிர்க் காவல் புரிந்திருப் பாயினி தேர்ந்திழையே. ()

காவற்பிரிவு தலைவிக்குப்பாங்கி அறிவுறுத்தல்.

4591. மறங்காக்கும் வேல்விழி மாதேபொன் மாது மகிழ்ந்துமணி
நிறங்காக்குஞ் செல்வ விநாயக பூப னெடுநகர்வா
யறங்காக்கு மாறு நெடுநீ ருலகி னமருமுயிர்த்
திறங்காக்கு மாறு மகன்றூர்நங் காவற் றிறன்மன்னரே. ()

தலைமகள் கூதிர்ப்பருவங்கண்டு வருந்தல்.

4592. கன்னே ரிழையுரு வாச்செய் விநாயக கானைவெற்பிற்
பொன்னேர் மலைப்புற் றெரீஇவெய்ய வாடைப் புயங்கமுயிர்
கொன்னே குளிர்விடங் கான்று குடிக்கக் குலாவுமிப்போ
தென்னே யெனையயர்த் தார்நாடு காவ லிறையவரே. (௪௯௨)

தோழியாற்றுவித்தல்.

4593. மண்பழி நீங்கிட வந்த விநாயக மால்வரையாய்
பண்பழி யக்கவ லேலிந்த வாடைப் பருவமெதிர்ந்
தெண்பழி சற்று மிலரா மிறைவரிங் கெய்தினராற்
பெண்பழி யெய்துவ ரோகாவன் மேற்கொள் பெரியவரே. ()

தூதிற்பிரிவு.

தூதிற்பிரிவுதலைவன் பாங்கிக்கறிவுறுத்தல்.

4594. மாதே பகைகொ ளிருமன்னர் நாப்பண் மருவியொரு
தூதே யுரைத்தியான் வருங்காறுஞ் செந்தமிழ் சொல்பவர்க்கு
யாதே குறையென் விநாயக பூப னெழினகர்வாய்ப்
போதேய் கருங்குழற் சூதேய் முலையைப் புரந்தருளே. ()

தூதிற்பிரிவு தலைவிக்குப்பாங்கி அறிவுறுத்தல்.

4595. இருவேந்தர் தம்முட் கலாமொழிந் தேநன் கிணங்கிடநம்
மொருவேந்தர் தூதினி தோதச்சென் றுருல வாதபஞ்ச
தருவேந்த னென்னும் விநாயக பூபன் றடஞ்சிலம்பின்
மருவேர் தலங்கற் கருங்குழ லேந்து மடமயிலே. (௪௯௫)

தலைவி முன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

4596. நேரிலை யென்று மணிபொன்கைக் கொண்டு நிரப்பினயர்
வாரிலை யென்னப் பொழியும் விநாயக மால்வரைமேற்
கூரிலை வேன்மன்னர் போர்தணிப் பான்சென்ற கொற்றவர்வந்
தாரிலை யென்செய்கு வேன்முன் பனியுந் தழைந்ததுவே. ()

தோழி யாற்றுவித்தல்.

4597. எல்லா முணர்ந்து மிரப்பா ருறிவில்லை யென்பதொன்றுங்
கல்லா விநாயக மால்வரை வாய்விடங் காலுமயில்
வல்லா ரிருவர் பகைதணித் தேவந் தனர்வருந்தேல்
வில்லார் குனிநுதல் வல்லார் முலைநம் விறன்மன்னரே. ()

துணைவயிற்பிரிவு.

துணைவயிற்பிரிவு தலைவன்பாங்கிக்குணர்த்தல்.

4598. நார்மே வியதுனை வேந்தர்க் கிகலுறு நண்ணலராற்
போர்மே வியவிடர் மாற்றப் புகுவன் புனையிழையாய்
பார்மே வியமலர்த் தாளான் விநாயக பாரிவெற்பிற்
றூர்மே வியகுழ லாள்வருந் தாவகை சாற்றுகவே. (௪௯௮)

துணைவயிற்பிரிவு தலைவிக்குப்பாங்கி யறிவுறுத்தல்.

4599. நட்டா ரிடுக்க ணுறுகாலை நட்பி னலமறிந்தோர்
பெட்டா ருயிருங் கொடுப்பான் றேயெனப் பேசிநட்டார்க்
கொட்டார் துயர முறுவகை போரி லுதவச்சென்றார்
மட்டார் குழலி விநாயக மால்வரை மன்னவரே. (௪௯௯)

தலைமகள் பின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

4600. தீதையர் வேந்த ரிடர்நட்ப ரோவச் செருத்துணையா
மேதையர் கண்டில ரென்றெய்வ மேயின்பம் வேட்டிப்பர்தங்
கோதையர் பாற்கொள்ளை கொண்ட விநாயக கோன்பகைஞர்
பேதையர் போல்வினை யேனிட மூழ்கப்பெய் பின்பனியே. ()

தோழியாற்றுவித்தல்.

4601. மஞ்சே யனகுழ லாயணங் கேல்வெம் மருவலர்க்கு
நஞ்சே யனைய விநாயக மால்வெற்பி னம்மிறைவர்
வெஞ்சே ரலர்புரி துன்பநட் டார்க்குமுன் மேவழன்முன்
பஞ்சே யெனச்செய்து வந்தன ராற்பின் பனிவரவே. (சசக)

பொருள்வயிற்பிரிவு.

பொருள்வயிற்பிரிவு தலைவன் பாங்கிக்குணர்த்தல்.

4602. இல்லாரை யாவரு மெள்ளுவர் செல்வரை யின்புலவ
ரெல்லாருஞ் செய்வர் சிறப்பென் றிசைப்ப ரிசையெடுத்துப்
பல்லாரும் வாழ்த்தும் விநாயக மாலெனப் பல்லறமா
நல்லா ருறச்செய்வ தும்பொரு ளாம்பிறை நன்னுதலே. ()

பொருள்வயிற்பிரிவு பாங்கிமறுத்தல்.

4603. மணமா ரளகக் கனமதிற் றுதுகண் மாழைமுத்தின்
கணமார் கொங்கைத் தசும்பங்கைப் பொருளின்பங் காட்டுமெல்குற்
பணமார்நின் பொன்னிருக் கச்சீர் விநாயக பாரிவெற்பி
னிணமார் சுடரிலை வேலபொன் றேட நினைத்தலென்னே. ()

பொருள்வயிற்பிரிவு தலைவிக்குப்பாங்கி அறிவுறுத்தல்.

4604. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றி யவர்க்கிவ் வுலகினிடை
யெண்பொரு ளேனை யிரண்டு மொருங்கென் றிசைத்தெவர்க்கும்
வண்பொருள் வீசு மலர்க்கை விநாயக மால்வரையி
லண்பொரு ளன்னநங் காய்சுரஞ் சென்றன ரன்பரின்றே. ()

தலைவி யிளவேனிற்பருவங்கண்டுபுலம்பல்.

4605. மாலேறி யான்வருந் தப்பொருண் மேற்சென்ற மன்னவர்நற்
பாலேறி நின்ற விநாயக மால்வெற்பிற் பாய்மலயக்
காலேறிக் காமன்வந் தானென் றிணர்கள் கஞன்றகொக்கின்
மேலேறி யேகுயி லார்ப்பது கேட்டின்னு மீண்டிலரே. ()

தலைவியைத் தோழியாற்றுவித்தல்.

4606. வணங்கார்க் கடலரி யன்ன விநாயக மால்வரையிற்
பணங்காணு மல்குற் பணிமொழி வாடல் படைமதனன்
மணங்காலு மென்சிறு காற்றே ருலாவநம் மன்னவர்பொற்
கணங்காண் பெருமுழுத் தேர்வந்த தானங் கடிநகர்க்கே. ()

தலைமகன் தலைமகளது உருவுவெளிப்பாடுகண்டு சொல்லியது.

4607. ஆரார்வண் சிந்தை விநாயக பூபதி நல்லருள்போற்
காரார் பணிமலர்ப் பூஞ்சோலை யுஞ்செங் கனியுமிரு [பேய்த்
வாரார்மென் பச்சிள நீருங்கொண் டேயணி வாய்ந்துவெண்
தேரார் சுரத்தெதிர் தோன்றிய தாலொரு செங்கரும்பே. ()

பாசறைமுற்றி மீண்டேர்வயின்வந்த தலைவன் பாகற்குச்சொல்லியது.

4608. வீறிய சீர்வல வாகின் றிறம்யார் விளம்புவர்மிக்
கூறிய செல்வ விநாயக மால்வெற்பி லொன்னலர்கள்
பாறிய பாசறை யேறென்ற நீபின் பகர்ந்தனைதே
ரேறிய யானு மிருக்குமு னூர்வந் திறங்கெனவே. (சசஅ)

தலைமகளோடிருந்த தலைமகன் கார்ப்பருவங்கண்டு மகிழ்ந்துசொல்லியது.

4609. தடையேது மின்றிநம் வெங்காம வெப்பந் தணிந்திடவிவ்
விடையேயி லார்மணி யல்குற் றடம்படிந் தின்பமுற்றேம்
விடையே யனைய நடையே மருவு விநாயகமால்
கொடையே நிகரப் பொழிகமன் வாழ்க குயின்குலமே. ()

வியாசைக்கோவை முற்றிற்று.

---

வே. சாமிநாதையரவர்களியற்றிய

வாழ்த்து.



4610. பூவார் செழுங்கவி மீனாட்சி சுந்தரப் புங்கவனும்
காவார் கொடைத்தடக் கைத்யாக ராச கவிஞனுஞ்செய்
பாவார் விநாயக மால்கோவை வாழ்க பகர்ந்திடுமக்
கோவார் குலத்தினர் வாழ்கவென் றூன்றுங் குறைவிகந்தே.

---

# குளத்தூர்க்கோவை.



## கைக்கிளை.



காட்சி.

4611. பொன்பூத்த கஞ்சமு மேந்தெழி னீலமும் பூந்தளவுந்
தென்பூத்த கோங்கமும் பாங்கமர் காந்தளுஞ் சேரக்கொண்டு
மன்பூத்த செந்தமி ழாய்வேத நாயக மால்குளந்தைக்
கொன்பூத்த மால்வரை வாய்விரை வாயொர் கொடிநின்றதே.

ஐயம்.

4612. விண்ணுல கோவிதி நண்ணுல கோதிரு மேவுறுமால்
கண்ணுல கோவர வொண்ணுல கோதண் கடலுடுத்த
மண்ணுல கோபொறைப் பூண்வேத நாயக வள்ளல்வெற்பி
லண்ணுல கோதிவர் பொன்னடி தோய்தவ மாற்றியதே. (௨)

துணிவு.

4613. பூவென்ற மேனியிம் மங்கையென் னுமகள் பூமகளே
காவென்ற செங்கைத் தலவேத நாயகக் காளைதன்பாற்
றூவென் றடையலர் போல்வா டுவகுழற் றுமநம்மை
வாவென் றழைப்பன போன்றிமை யாநிற்கும் வாட்கண்களே.

குறிப்பறிதல்.

4614. கயலார்தம் பேட்டுக் கிறவூட்டி யன்னங் களிக்குஞ்செந்நெல்
வயலார் குளந்தை வருவேத நாயக வள்ளல்வெற்பி
லியலா ளிவர்கண் மருளரு ளேக்க மிரண்டுநல்கு
மயலார் விடமு மமிழ்துநல் காழியி னும்மனமே. (௪)



## இயற்கைப்புணர்ச்சி.



இரந்துபினிற்றற்கெண்ணல்.

4615. விழியே யெவர்க்கு மனவேத நாயக வேள்குளந்தைப்
பொழியேர் வரையிடத் தஞ்சேனெஞ் சேயுட் பொருதுயரங்
கழியே யிரப்புநொ ரேருடைத் தம்ம கரப்பினவர்
பழியே யெனநெறிந் தாயிரப் பாயிவர் பாங்குற்றே. (௫)

இரந்துபின்னிலைநிற்றல்.

4616. கணிசெய் திண் டோணெடு மால்வேத நாயகக் காமன்வெற்பிற்
பணிசெய் திறத்தமைந் தேன்கொடுங் காமப் பசிதணிய
மணிசெய் குழற்றிரு வன்னீர்நுங் கொவ்வைச்செவ் வாயமிழ்த
மணிசெய்நும் மல்குற் றடமூழ்கி யுண்ண வளித்திடுமே. (௬)

முன்னிலையாக்கல்.

4617. தோற்றிய கல்விக் கடல்வேத நாயக நுங்கன்வெற்பிற்
போற்றிய வாயத் தொடுசுனை மூழ்கியும் பூக்கள்கொய்துஞ்
சாற்றிய வூச லுகைத்துநன் றூட றணைந்தடியே
னூற்றிய மாதவ மோதனி நின்ற தறைகுதிரே. (௭)

மெய்தொட்டுப்பயிறல்.

4618. காரணி கற்பகங் கற்றோர்சிந் தாமணி கல்விக்கட
ஞரணி சிந்தைப் புகழ்வேத நாயக நண்பன்வெற்பில்
வாரணி வண்டினங் காணடு நீங்கவிம் மாதரைம்பாற்
றூரணி யாண்டு மதுவுண் டிருத்த றகாதுமக்கே. (௮)

மெய்தொட்டுப்பயிறல்.

1619. பொன்போற் பொலியுங் குணவேத நாயக பூபன்வெற்பி
லென்போற் பெறலரும் பேறுபெற் றூர்க ளெவரிவர்கா
மன்போன் மறையிடைப் பட்டாடை நீவி மகிழ்ந்துகண்ணன்
பின்போ லிவர்பதங் கையால் வருடவும் பெற்றனனே. (௯)

பொய்பாராட்டல்.

4620. கல்லாது நல்லவர்க் கீயாது வீணிற் கழித்திடுநா
ளில்லாது வாழும் புகழ்வேத நாயக வேந்தல்வெற்பி
லொல்லாது சேடன் படமுங்க ளல்கு லுடனெதிர்த்து
வெல்லாத தாலல வோமண் சுமந்து மெலிகின்றதே. (௧௦)

இடம்பெற்றுத்தழால்.

4621. மின்னிசை போர்த்திய மெய்வேத நாயக வேள்வரைவாய்ப்
பொன்னிசை பாறையு மாதவிப் பந்தரும் பூவுதிர்ந்து
மன்னிசை பாயலு மூண்டணங் கேயுள் வருத்தமற
வின்னிசை யோர்மண நாமினி தாற்றற் கிடமிதுவே. (௧௧)

வழிபாடுமறுத்தல்.

4622. எண்ணம் பொலிய விரப்பாரில் யாரு மிரக்கநல்குந்
திண்ணம் பொலியும் புகழ்வேத நாயகச் சேய்வரைப்பாற்
றண்ணம் பொலியு மலர்க்கொடி யேயென் றனுவளையும்
வண்ணம் பொலியு மொருநாண் பொலியும் வகையருளே. ()

இடையூறுகிளத்தல்.

4623. நங்காம னென்று மடவார் கருத நகுமெழிற்சிங்
கங்காமன் னுங்குளத் தூர்வேத நாயகக் காளைவெற்பில்

வெங்காம வேட்டத் திருமத வேழம் வெளிவரச்செய்
தங்காம ரம்பு மறைப்பது வோவெற்றி யாவதுவே. (கங)

நீடுநினைந்திரங்கல்.

4624. எய்யாச் சழக்க ரெனுமத வேழத்திற் கேறனைய
கையான் குளந்தை வருவேத நாயகக் காமன்வெற்பி
னையா வுருகிப் பதைபதைத் தாவி நடுங்கிடுவேன்
மெய்யா மிவர்திரு வாயூற லுண்டின்ப மேவலென்றே. (கச)

மறுத்தெதிர்கோடல்.

4625. மேன்மே லெழுந்து கொழுந்துகொண் டோங்கழல் வீயவைக்
ரூன்மேல் விழுந்து தடுப்பது மானுந் தவாதபுகழ் [கோ
வான்மேல் வயங்க வளர்வேத நாயக வள்ளல் வெற்பர்
மான்மே லெழாவகை நங்நாண் டடுக்கும் வலிகொள்வதே. ()

வறிதுநகைதோற்றல்.

4626. ஆற்று மெனவர் தடுத்தாரை வேந்தரு மாய்ந்தடுக்கப்
போற்று வுயர்த்தும் புகழ்வேத நாயக பூபன்வெற்பின்
மாற்றுத வன்ப ருறுகாம வாரிக்கொர் வங்கமெனத்
தோற்று விடையவர் செவ்வாயில் வெண்ணகை தோற்றியதே.

முறுவற்குறிப்புணர்தல்.

4627. தந்தா வளம்பல வாள்வேத நாயகத் தண்ணியன்ற
னந்தா வளவரை வாயிவர் வாண்முக நன்மதியின்
முந்தா நகைவெண் ணிலவாய தென்றன் முகமெனுமோ
ரந்தா மரையை மலர்த்திய தாலிஃ ததிசயமே. (கஎ)

முயங்குதலுறுத்தல்.

4928. புரைதவிர் மங்கள மால்வேத நாயக பூபன்வரைத்
தரையிவர் கொங்கைக் குடம்பற்றி யல்குற் றடங்குடைந்து
விரைகமழ் திப்பியச் செவ்வா யமிர்தும் விரும்பியுண்டா
நரைதிரை மூப்பு மொழிந்தா நமனு நமக்கஞ்சுமே. (கஅ)

புணர்ச்சியின்மகிழ்தல்.

4629. தூயோ ரிணக்க மறுவேத நாயகத் தூயன்வரை
வாயோ ரருமல ரிச்சோலை யோர்தட மற்றதனு
ணீயோர் கொடிநி னகலல்குல் பூவதி னீடுசுவை
யாயோர் மதுவஃ துண்ணும்வண் டாயினன் யானணங்கே.()

புகழ்தல்.

4630. எள்ளி விடலில் புகழ்வேத நாயக வேந்தல்வெற்பிற்
றுள்ளி யெழுமறி நோக்கீர்நுங் கொங்கைக்குத் தோற்றதனை
யுள்ளி யுறுதுயர் பூண்டு விளர்த்த தொருகயிலை
வெள்ளி வரையென் றறியார்சொல் வாரொன் விளம்புதுமே.()

ஏற்புறவணிதல்.

4631. இம்மா நிலஞ்சொல் புகழ்வேத நாயக வேந்தல்வெற்பில்
விம்மா வெழுமுலை யிம்மா தருக்கு மிளிர்கலங்க
ளம்மா குழன்முதற் பொற்றுண்மட் டுந்தொட் டலங்கரிக்க
வெம்மா தவஞ்செய்த வோவறி யேனென் னிருகைகளே. ()

---

## வ ன் பு றை.

அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

4632. பொன்னே முகிற்கும் புகழ்வேத நாயக பூபனுக்கு
மென்னே யுருவன்றி யீதலிற் பேத மெனக்குமற்றை
நின்னேய மாருயிர்த் தோழிக்கு நீடுருப் பேதமன்றிக் [ளே.
கொன்னே யணிதொழிற் பேதமுண் டென்கை குறித்தரு

பெருநயப்புரைத்தல்.

4633. மெலியீரென் றியார்க்கு மருள்வேத நாயக வேள்குளந்தை
யொலியீர்ம் புனற்றடத் தண்டே யெனைத்தொண் டுவப்பக்கொண்டு
பொலியீ ரரும்பு மாக்காம்ப ளுறுமொர் பூவுமென்னுள்
வலியீர்மற் றோர்மல ருங்கொண்டொர் வல்லி வயங்கல்வண்டே.

தெய்வத்திறம்பேசல்.

4634. எறியுங் கலிதன் றலைசாய்த் திடத்தமி ழின்னருமை
யறியும் புருட மணிவேத நாயக வண்ணல்வெற்பிற்
செறியும் படிநம் மிருபே ரையுமின்று சேர்த்ததெய்வ
முறியும் படியிடை யேசெய்யு மோசற்று முன்னலையே.(உச)

பிரியேனென்றல்.

4635. கோனுடன் மேழிக் கொடியாளன் மாலைக் குவளையினான்
வானுடை னேரும் புகழ்வேத நாயக வள்ளல்வெற்பிற்
றேனுடு பூங்குழ லாய்வான் பிரியினுஞ் செங்கதிர்யா
னூனு டுயிர்நிகர் நிற்பிரி யேனென்று முண்மையிதே. (உரு)

பிரிந்துவருகென்றல்.

4636. பெருவேத நாயக மால்பா லடுத்தொன்று பெற்றவர்பாற்
றருவேசிந் தாமணி யேயென் றடைபவர் தம்விரைவும் [தே
பொருவேயன் றென்னவிர் நின்றகன் றியானிப் பொழிலகத்
வருவேன்வர் தும்மடி கூடுவ னீடுவன் மையிலனே. (உசு)

இடமணித்தென்றல்.

4637. பொன்னே புகழுயி ராணிகொ லோவெனும் பொற்பணங்கே
யென்னே திருவுளத் தெண்ணலும் மூர்க்குமெம் மூர்க்குமே
மின்னே டுலவு புயல்வேத நாயக வேள்பொருட்கு [ன்று
மன்னே வதியர்க்கு மெத்தனை தூரமற் றத்தனையே. (உஎ)

---

## தெளிவு.

4638. இகழ்வேலை பொங்கி யெழவோங்கன் முற்றுஞ் சினக்தவன்கா
லகழ்வே ரொடுபறித் தெங்கணும் வீசிடு மன்றுமென்று
மிகழ்வேயில் லாதநம் வார்த்தைபொய் யார்வஞ்ச மேதுஞ்செய்யார்
புகழ்வேத நாயக மால்குளத் தூர்வரைப் புண்ணியரே. (உஅ)

## பிரிவுழிமகிழ்ச்சி.



செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.

4639. வண்டேய் குவளைத் தொடைவேத நாயக வள்ளல்வெற்
பிற், றண்டே மலர்க்குழல் சோர்தரக் கொங்கைத் தனிப்பொறை
யால், விண்டே மருங்குறள் ளாடநன் னேக்கநம் மேலமையாக், கொ
ண்டே யியங்குதல் பார்நெஞ்ச மேநங் குலதெய்வமே. (உகூ)

பாகனொடுசொல்லல்.

4640. கனம்போல நல்குகை யான்வேத நாயகக் காளைவெற்பின்
மனம்போல நோக்கமென் பாலுற யானிறு மாப்பெழுந்த
தனம்போ லடையவென் கையால் வருடிய தாள்கள்பெயர்த்
தனம்போ னடப்பது பார்வல வாவென தாருயிரே. (௩௦)

## பிரிவுழிக்கலங்கல்.



ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

4641. தூணே பொருதிர டோள்வேத நாயக துங்கன்வெற்பி
ஞணே யுரைப்பதிம் மாண்புடை யார்க்கு நமக்குநனி
சேணே யிவர்மூலை சேர்ந்தன மோவன்றிச் சேர்ந்ததுபோல்
வீணே கனவொன்று கண்டன மோவென் விளைந்ததுவே.()

வாயில்பெற்றுய்தல்.

4642. பாமாலை சூடும் புகழ்வேத நாயகப் பண்பன்வெற்பி
ளுமாலை மாய்க்கு மருந்துணர்ந் தாம்விரை நாவிகமழ்
பூமாலை யோதி யிவர்விழி மான்சென்று புக்குலவு
மாமாலை யாவொரு மின்னார் வதன மதியகத்தே. (௩உ)

பண்புபாராட்டல்.

4643. கனியா வருஞ்சொல் புகழ்வேத நாயக நம்பிவெற்பி
லினியா மூவமை தெரிதலிற் குற்ற மிலதறிதுட்
கனியா விணையுறுப் பிற்கிணை மாறிக் கழறிமற்றைத்
தனியா முறுப்பிற் கதுவே யிணையெனச் சாற்றுதுமே.(௩௩)

பயந்தோர்ப்பழிச்சல்.

4644. அண்டாரை வாட்டி யடுத்தாரை நாட்டிநன் காதரிக்கும்
வண்டாரை வேய்புய மால்வேத நாயக மன்னன்வெற்பி
லெண்டாரை மாறினு மாறாத் திருவுற் றெனையடிமை
கொண்டாரை யீன்றவர் வாழிய ரோவிக் குவலயத்தே. (௩.௪)

கண்படைபெறாதுகங்குனோதல்.

4645. பொருட்கடல் கல்விக் கடல்பொறு மைக்கடல் பொற்புக்கட
றெருட்கட லாய புகழ்வேத நாயகச் செல்வன்வெற்பி
லருட்கட லாயெனை யாண்டாரை நீங்கி யனர்க்கடலோ
டிருட்கடன் மூழ்கின னின்பக் கடலையென் றெய்துவனே.

---

## இடந்தலைப்பாடு.



தந்தெய்வந்தருமெனச்சேறல்.

4646. திருவேத நாயக மால்குளத் தூரன்ன சின்மொழியைப், பொருவேயின் மாட்சியின் மூன்றந்த தெய்வமிப் போதுந்தருந், தரு வே யெனவிருப் பிற்கொடிப் பார்க்கொர் தடையுமுண்டோ, மருவே யுமன்ன பொழிலிடைச் சேறும் வருதிநெஞ்சே. (௩.௬)

முந்துறக்காண்டல்.

4647. எண்ணே யிலாத புகழ்வேத நாயக வேந்தல்வெற்பின்
மண்ணே புரிந்தது மாதவ மென்ன மலரடிவைத்
துண்ணேய மோங்க வுவமை யிலாத வுருப்போடுமோர்
பெண்ணே யெனநின்ற தான்முன்பு யாஞ்செய் பெருந்தவமே.

முயங்கல்.

4648. கைப்பட்ட வின்சொற் புயல்வேத நாயகக் காளைவெற்பி
கைப்பட்ட வானுத லாரிவர் பேரருள் கண்டடுத்தோ
கைப்பட்ட வாவு கருவூலஞ் சாரக் கனதனமுங்
கைப்பட்ட தாலினிச் சிந்தா மணியுநங் கைப்படுமே. (௩.அ)

புகழ்தல்.

4649. செல்லார் பொழிற்றென் குளத்தூ ரதிபன் றிருந்திய நூல், வல்லா ருரைக்கும் புகழ்வேத நாயகன் மால்வரைவாய், நல்லா ருறுப்புட் சிலவமு துண்டென்பர் நானுருவ, மெல்லா மிவர்க்கமு தென்பேன் மழுவுங்கை யேந்துவனே. (௩.௯)

ஆயத்துய்த்தல்.

4650. நினக்கே பரமெமைக் காப்பதென் பார்க்கு நிலைமைநல்கி
மனக்கேத மாற்றுந் திறல்வேத நாயகன் மால்வரையா
னுனக்கே யடிமை பலசொல்வ தால்வரு மூதியமென்
புனக்கேழ் மயிலனை யாய்நின தாயம் புகுந்தருளே. (௪௦)

## பாங்கற்கூட்டம்.



தலைவன்பாங்கனைச்சார்தல்.

4651. கொடுப்பார் பலர்க்குங் குருவாயி ஞேன்கொக்கின் கொம்பர
வடுப்பா ரொழிய வளர்வேத நாயக வள்ளலைச்சார்ந் [ன்றி
தடுப்பா ரலாரின் வருந்தேலம் மாதை யடுப்பநம்மைத்
தடுப்பா ரெவர்மன னேயுயிர்ப் பாங்கனைச் சார்தரினே. (சக)

பாங்கன்தலைவனை உற்றதுவினுதல்.

4652. விற்போர் புரிந்தனை யோதெவ்வ ரோடு விடாதெடுத்துச்
சொற்போர் புரிந்தனை யோ தர்க்க ரோடுவிண் டொட்டுநிற்க
நெற்போர் புரிகுளத் தூர்வேத நாயக நேயன்வெற்பின்
மற்போர் புரிநின் புயம்வாடற் கேதுவென் மன்னவனே. ()

தலைவன் உற்றதுரைத்தல்.

4653. மடவார்க ணன்றி வலியா ரிடத்துண்டு வண்டமிழ்க்குக்
கடவா ரணந்தரு மால்வேத நாயகக் காளைவெற்பி
விடவா ருறுமென் கலைமா மதியையொ ரேழையல்குல்
விடவா ரரவம் விழுங்கிய தானண்பின் மிக்கவனே. (சந)

கற்றறிபாங்கன்கழறல்.

4654. சொற்றது நாட்டுந் துரைவேத நாயக துங்கன்வெற்பி
லுற்றது சொற்றதென் காதூ டழல்புக் குலாவலொத்த
திற்றது வென்னிடைக் கிவ்வாறு வாடுவை யேற்கலைகள்
கற்றதுங் கேட்டது நன்றுநன் றுலெங்கள் காவலனே. (சச)

கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்.

4655. கோணுமை நின்ற குணவேத நாயகக் கொண்டல்வெற்பி
ணுணுமை யும்பி னுனக்குள தோமதி நன்முகமு
மாணுமை யோவிளங் கொங்கையுஞ் செங்கையு மற்றவையுங்
காணுமை யானண்ப னேகரைந் தாயிக் கடுமொழியே. (சரு)

கிழவோற்பழித்தல்.

4656. புதையாம னல்கு பொருள்வேத நாயக பூபன்வெற்பிற்
பதையாம னின்றொரு பேதை மருட்டவுட் பட்டறிவிற்
றதையாம லிவ்வண்ணம் வாடுவை யேலைய தன்வயிற்றுட்
சிதையாமல் வைக்கும் பிரமாண்ட முற்றுமொர் சிற்றெறும்பே.

கிழவோன் வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

4657. போதுசெய் மாலைப் புயன்வேத நாயக பூபன்வெற்பிற்
றீதுசெய் கூற்றம் வரினுமஞ் சேனொரு சேயரிக்கண்
மாதுசெய் நோய்க்கினி யாதுசெய் வேனுய் மருந்தின்றன்ற
ளோதுசெய் யாம்பலு மொவ்வாச்செவ் வாயமு தொன்றன்றியே.

பாங்கன் தன்மனத்தழுங்கல்.

4658. கரும்பே மொழியஞ் சுரும்பே விழிபொழிற் காமருகோங்
கரும்பே முலையென்று பல்காற் சொலுமிவ னுன்றமதி
யிரும்பேயவ் வேக்கிழை காந்தக்கொ லோவிதற் கென்செய்தும்யாம்
வரும்பே ரறிஞர் புகழ்வேத நாயக மால்வரைக்கே. (சஅ)

தலைவனுடைமுங்கல்.

4659. விடன்மேன் மனமில் புகழ்வேத நாயக வேள்வரைப்பான்
மடன்மே லொளிர்குழ லாள்பொருட் டென்சொன்மன் னுகின்செவிக்
கடன்மே லெழுவடி வேலாயிற் றூலினி யாதுசெய்கேன்
கடன்மேல் வரினதற் கியாரான் முடியுங் கரைசெயவே. ()

எவ்விடத்து எவ்வியற்றென்றல்.

4660. மண்காக்குஞ் செல்வப் புயல்வேத நாயக மால்குளத்தூர்
விண்காக்கு மால்வரை யோதிரை யோவுரை மேவுமிடங்
கண்காக்கும் பேரியல் யாதண்ண லேவெற்றி காக்குமொரு
பெண்காக்குந் தோணினை யிவ்வாறு வாட்டிய பெய்வளைக்கே.

அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்றென்றல்.

4661. என்னுயிர் மேவிட மால்வேத நாயக வேந்தல்வெற்பே
மன்னுயிர் போற்றவன் றேண்மலர் கண்ண வளைப்பகைத்துத்
துன்னுயிர் போன்மெலி யும்மிடை வற்றவற் சூழ்ந்துநட்ட
கொன்னுயிர் போலிறு மாக்குநண் பாவிளங் கொங்கைகளே.

பாங்கன் இறைவனைத்தேற்றல்.

4662. வழியென்று போறங் கொள்வேத நாயக மால்வரைவாய்
விழியென்று வேல்கொண்ட மின்னினை யான்கண்டு மீளுமட்டுங்
கழியென் றுயரிங் கிருவைய கான்மகற் காணுமட்டு
மிழியென்று மோவு துணிபுற் றிருந்த விராமனைத்தே. (நிஉ)

பாங்கன் குறிவழிச்சேறல்.

4663. கனியாடு பூம்பொழில் சூழ்குளத் தூரண்ணல் கல்விக்கண்ணே
நனியாடு நுண்மதி மால்வேத நாயக நம்பிவெற்பிற்
பனியாடு மோதன் பெருகாயத் தோடு பிரிந்துநின்று
தனியாடு மோவறி யேனிறை கூறிய தார்க்குழலே. (நிங)

இறைவியைக்காண்டல்.

4664. தீதே யிலாத புகழ்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
சூதே முலைசிலை யேநுதல் செய்ய துவர்க்கமலப்
போதே முகமரும் போகை செங்கைப் புயலுரைத்த
மாதே யிவளிது வேயிட மாலைய மற்றில்லையே. (நிச)

இகழ்ந்ததற்கிரங்கல்.

4665. செறியாமை யிற்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பின்
மறியாமை நோக்கி யியலிது வேற்புய வாட்டமொரீஇக்

குறியாமை கொண்டு வருந்தா திருக்கவுங் கூடுங்கொல்லோ
வறியாமை யாலிகழ்ந் தேன்புகழ்ந் தேனல னண்ணலையே. ()

தலைவனைவியத்தல்.

4666. பொறையாற் புவிவென்ற மால்வேத நாயக பூபன்வெற்பி
னிறையாற் குறைவி னறையார் குழலி நெடுங்கணெனுங்
கறையாற் பொலியயி லேறுண்டு நெஞ்சங் கலங்கலின்றித்
திறையாற் பொலியுநம் மண்ணல்வந் தான்மிகத் திண்ணியனே.

தலைவியைவியத்தல்.

4667. மேகத்தை யேநிகர் கைவேத நாயக வேள்வரைக்கைந்
நாகத்தை யேபொரு மாமுலை தாங்கிவர் நன்மலுநா [மான்
லேகத்தை யேகொண்டிம் மண்முழு தாண்டரு ளெம்பெரு
சோகத்தை யேதுணிப் பார்பிணிப் பாரலர் தோற்றத்தினே.()

தலைவன்றனக்கு தலைவிநிலைகூறல்.

4668. கடியொன்று மிற்குளத் தூர்வேத நாயகக் காளைவெற்பிற்
படியொன்று மாமுகி லொன்றனை நாடிப் பரிந்துமல
ரடியொன்று மாற்றி நிலத்தூன்றி யெங்கு மவிரமின்னுக்
கொடியொன்று நின்றது கண்டுவந் தேன்புகழ்க் கொற்றவனே.

தலைவன்சேறல்.

4669. வளர்வேத நாயகன் மால்வரைப் பாற்பொறி வண்டுகிண்டி
யுளர்வே யலங்கற் குழல்சுவ ரேய வொளிர்குழைகள்
கிளர்வேய் பொருவு திரடோள் வருடக் கிளர்ந்தென்மனத்
தளர்வே யொழிய வெதிர்நிற்கு மோவென் றலரியுயிரே. ()

தலைவியைக்காண்டல்.

4670. உருவுடைத் தன்றுயி ரென்பது பொய்ம்மைபல் லோரு மவாந், திருவுடைத் தண்ணளி மால்வேத நாயகச் செம்மல்வெற்பிற், பொருவுடைத் தொண்கணுஞ் செவ்வாயு மேந்தெழிற் பூண்முலையு, மருவுடைத் தண்குழ லும்மற்றும் வாய்ந்ததென் மன்னுயிரே. (சுo)

கலவியின்மகிழ்தல்.

4671. பொன்மலை யுஞ்செம் மணிமா மலையும் புணர்ந்ததென்கோ
வென்மலை யின்றென் சுவைப்பாலுந் தேனு மிணைந்ததென்
னென்மலை வாய்குளத் தூர்வேத நாயக நேயன்வெற்பிற் [கோ
கன்மலை தோண்முலை யானுமிம் மாதுங் கலந்ததுவே. (சுக)

புகழ்தல்.

4672. பூரவலர் கண்மணி மால்வேத நாயக பூபன்வெற்பிற்
பரவல ராம்பனுஞ் செவ்வா யழகுட் படார்ந்துகவர்
தாரவலர் நீங்குமென் றோர்ந்திரந் தேயமர் தன்மைகண்டே
யிரவல ரென்று புகல்வார் புலவ ரெடுத்தின்னுமே. (சுஉ)

பாங்கியொடுவருகெனப்பகர்தல்.

4673. மைப்பே ரகனெடுங் கண்மட வாய்கவி வாணர்செம்பொன்
வைப்பே யனைய தமிழ்வேத நாயகன் மால்வரைவாய்க்
கைப்பே யிலாதநின் மெய்ந்நிழ லென்னவிக் காவகத்தென்
னெய்ப்பே யொழிய வினிப்பாங்கி யோடு மெழுந்தருளே. ()

பாங்கிற்கூட்டல்.

4674. தளிர்புரை செங்கைத் தலவேத நாயகத் தண்ணியன்றன்
குளிர்மலி சோலை யெனும்பொற் றகட்டி குளையரெனு
மொளிர்மணி சூழப் பொலிவன வான்மற் றுவைநடுநீ
மிளிர்தரு நாயக மாமணி யாயின்று மேவுகவே. (௬௪)

---

## பாங்கிமதியுடன்பாடு.

தோற்றத்தாலாராய்தல்.

4675. போதுசெய் மாலைப் புயன்வேத நாயக பூபன்வெற்பிற்
காதுசெய் வேல்விழி யெம்பெரு மாட்டி கவின்செயெழின்
மீதுசெய் போதுகொய் தோசுனை வாய்விருப் பிற்குடைந்தோ
யாதுசெய் தோவறி யேன்றிரு மேனி யலசியதே. (௬௫)

ஒழுக்கத்தாலையந்தீர்தல்.

4676. கனைப்போ வரும்வண் டுளர்குழ லாய்விண் கலந்தபிறை
நினைப்போ வருநற் குணமே நிரம்பி நிலாவுதலி
னனைப்போது மாலைப் புயன்வேத நாயக நம்பிபுகழ்
தனைப்போல் விளங்கலி னின்னுற் றெழுப்படுந் தன்மையதே.

சுனையயப்புரைத்தல்.

4677. எண்ணுங் குணம்பெரி யோன்வேத நாயக வேந்தல்வெற்பிற்
கண்ணுங் கதிர்முலை யாய்செங் கமலக் கருங்குவளை
யண்ணுஞ் செழுஞ்செங் குவளைசெவ் வாம்பல்வெள் ளாம்பலெனப்
பண்ணுந் திறனுடை வான்சுனை யாது பகர்ந்தருளே. (௬௭)

சுனைவியந்துரைத்தல்.

4678. வண்டா ரணிபுயன் மால்வேத நாயக மன்னன்வெற்பிற்
கண்டார் மொழியாய் முலைக்குநற் சாந்துங் கருங்குழற்கு
வண்டாரு மெய்க்குப் பசலையு மின்று வழங்குவதேற்
கொண்டார் வளச்சுனை வாயடி யேனுங் குடைகுவனே. (௬௮)

தகையணங்குறுத்தல்.

4679. வேளாண் மரபுக் கணிவேத நாயக வேள்வரைப்பாற்
றாளா னனிச்சம்வெல் வான்மக ளேயிவண் சற்றிருவேய்த்
தோளான் மருள்வயிற் றெங்கோ மகளிச் சுனையகம்புக்
காளான் மகிழ்வின் னேவரு வானொத்தி ராடுவிரே. (௬௯)

நடுங்காட்டம்.

4680. நாட்டுக்கு நல்லன் பதினு யிரம்பொ னளிலுமொரு
பாட்டுக்கு நல்கும் புகழ்வேத நாயகப் பண்பன்வெற்பின்
மாட்டுக் கலங்கினன் கண்டிடல் கீள வலியொருசெங்
கோட்டுக் களிற்றெதிர் வேலெறிந் தானொரு கொற்றவனே.()

பெட்டவாயில்பெற்றிரவுவலியுறுத்தல்.

4681. மறச்சார்பு நீத்த புகழ்வேத நாயக வள்ளல்வரைப்
புறச்சார்பு பற்றிப் பொருளடை வாரிற் புகலரும்பே
ரறச்சார்பு பற்றிக் கதியடை வாரினிவ் வாயிழைதன்
திறச்சார்பு பற்றி யடைவாமின் றேயத் திருவினையே. (எக)

ஊர்வினுதல்.

4682. யானோ புதியன் மதியன்ன வாணுத லின்சொனல்லீர்
வானோ வெனவயங் கும்மூ ரெதுமது வார்கழைவிற்
கோனோ புவிபுரப் பானோ வெனவளர் கொண்டல்வண்டர்
மேனோ வறவமர் தார்வேத நாயக வேள்வரைக்கே. (எஉ)

பெயர்வினுதல்.

4683. தருமந் திரமெனக் கொள்வேத நாயகத் தண்ணியன்கார்
பொருமந் திரம்பல சூழ்குளத் தூரன்ன பொற்றொடியீர்
தெருமந் திரந்து முறையீர்நும் மூரினிச் செப்பரிய
பெருமந் திரமெனி னும்முரைப் பீர்நும் பெயரினையே.(எங)

கெடுதிவினுதல்.

4684. என்றோ வெனவொளிர் மால்வேத நாயக வேந்தல்வெற்பிற்
கன்றோ வருங்கைநல் லீர்நும் புனத்துக் கடுகியென்கை
வன்றோய் கணைபட்ட புண்பட்ட வொண்பட்ட வாணுதற்கைக்
குன்றோ வெனவந்த தோவிரு கோட்டொரு குஞ்சரமே. ()

ஒழிந்ததுவினுதல்.

4685. பொழியா மழையன் றெனும்வேத நாயக பூபன்வெற்பிற்
கழியாது நும்புன முற்றேனுக் கொன்று கடைக்கணித்து
மொழியா திதமென் மொழிந்தாற் பழிவந்து மூளுங்கொலோ
வொழியா திடங்கொண் டெழுமுழுப் பூண்முலை யுற்றவரே.

யாரேயிவர்மனத்தெண்ணம்யாதெனத்தேர்தல்.

4686. சீரே புனையுந் திறல்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
பாரே தியநுண் மதியர் புதியர் பதியர்சிலே
போரே விலர்மத யானையெய் தோமென்றும் பொய்யுரைப்பா
ராரே யிவர்மனத் தெண்ணமற் றியாதென் றறிகிலமே.(எசு)

எண்ணந்தெளிதல்.

4687. தேராசை யும்புவி யும்பெரு வானுஞ் செறிந்தும்புகழ்ப்
பேராசை யேகொண் டவன்வேத நாயகப் பேகன்வெற்பி

லூராசை மற்றுமற் றோராசை யாயுற லாலிவருட்
கூராசை நம்மட வாராசை யாய்க்குடி கொண்டதுவே.(எஎ)

இருவருமுள்வழி ஒருமையிற்போதல்.

4688. தாவா வலியின்முன் யாஞ்செய் தவமுந் தவப்பயனுங்
கோவா வொருங்கிருந் தாலெனப் பாங்கியுங் கோமகளு
மேவா விருந்தனர் போய்ச்சொல்லு வாம்வெல்லு வாமயனேய்
மாவாழ் குளந்தை வருவேத நாயக மால்வரைக்கே. (எஅ)

மான்வினுதல்.

4689. திருமான் மகிழ்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பி
லிருமான் மதியிற் பொலிவா ணயனத் தெழின்முகத்தீர்
வருமானந் தன்னுயிர்க் கேகொண்டு தைத்தவென் வாளியுங்கொண்
டொருமானிங் கேவந்த துண்டோவுண் டாயி னுரைமின்களே.

மனம்வினுதல்.

4690. கனத்திடை மின்ன லெனவிளங் காவிற் கலந்துநிற்பீர்
சினத்திடை யென்றுஞ் செலாவென் மனஞ்செயிர் தீர்புலவர்
மனத்திடை வாழும் புயல்வேத நாயக மால்வரைநும்
புனத்திடை யேவந்த தோநொந்த தாகிப் புகலுமினே. (அ0)

பாங்கி எதிர்மொழிகொடுத்தல்.

4691. படுமாந்தும் வண்டுகள் காம்போதி காமரம் பாடிடமேம்
படுமாம் பொழிற்குளத் தூர்வேத நாயகப் பண்பனுக்குட்
படுமாந்தர் வெங்கலி காணுமை போற்சக பாலவண்டு
படுமாம் பலேயிக் குறிஞ்சியி லேயென்றும் பார்த்திலமே. ()

இறைவனைநகுதல்.

4692. இழைகொண் டொளிர்நிற மால்வேத நாயக வேந்தல்வெற்பிற்
கழைகொண்டு செய்சிலை கைக்கொண்டு சித்தசர் காமருழை
குழைகொண்டு தோன்று மலர்கொண்டெய் வாரித்தக் கொற்றவருந்
தழைகொண்டு காம ருழையெய்வர் வில்லின்றிச் சான்றவரே.

பாங்கிமதியினின் அவரவர்மனக்கருத்துணர்தல்.

4693. பழியே யிலாத புகழ்வேத நாயகப் பண்பன்வெற்பிற்
கழியே ரிவர்புனங் காத்தல்பொய் யென்று கரையுமிவர்
விழியே யவர்வந்த வேட்டைபொய் யென்று விளம்புமவர்
மொழியே யிருவர்க்கு முள்ளீடொன் றேயென்று முன்னுதமே.

## பாங்கியிற்கூட்டம்.



தலைவன் உட்கோள்சாற்றல்.

4694. விண்மணி நேரும் விளக்கமிக் கோன்றமிழ் மெய்ப்புலவர்
கண்மணி யாய புகழ்வேத நாயகக் காளைவரை
யுண்மணி யோபல் படத்தர வேந்து மொளிமணியோ
தண்மணி யாயசிந் தாமணி யோநகை சாற்றுமினே. (அச)

பாங்கி குலமுறைகிளத்தல்.

4695. தரைவா யெழுகற் பகம்வேத நாயகத் தண்ணியன்றன்
வரைவாய் மடங்கல் சிறுதேரை யூணும வாவுங்கொல்லோ
புரைவாய் களிற்றண்ண லேயுயர் வான்குலப் புண்ணியர்புல்
லுரைவாய் குறவர் குலக்கொம்பை வேட்ட லுரிமையன்றே.

தலைவன் தலைவிதன்னையுயர்த்தல்.

4696. நம்பே ரிருநிதி மால்வேத நாயக நம்பிவரைக் [பது
கொம்பே யிவர்திரைக் கொம்பேயல் லாற்றரைக் கொம்பென்
வம்பேயவ் வாறிருந் தாலும் பரிதி மதியிருஞ்சேற்
றம்பேர் மலரை யவாவுத லான்வரு மாசென்னையே. (அசு)

பாங்கி அறியாள்போன்றுவினுதல்.

4697. விந்தனக் காமெனுந் தோள்வேத நாயக வேள்வரைவாய்ச்
சந்தனக் காவில்விண் மீன்போற் பரந்து தவாவண்டலா
டந்தனக் காரிகை மார்பல ரைய வவருளுன்ம
னந்தனக் காக்கவர்ந் தாளிவ ளென்று நவிலுதியே. (அஎ)

இறையோன் இறைவி தன்மையியம்பல்.

4698 மஞ்சே குழலுழ னஞ்சே விழிமொழி வானமுதே
பஞ்சே பதமத வஞ்சே யிமின்முலை பார்க்கணியாய்
விஞ்சேர் மலிகுளத் தூர்வேத நாயக வேள்வரையென்
னெஞ்சே யிடையணங் கேயென்னை வாட்டிய நேரிழைக்கே.

பாங்கி தலைவியருமைசாற்றல்.

4699. வாமான் றமிழ்க்குத வும்வேத நாயக மால்வரையெங்
கோமான் புதல்வி யெளியள்கொல் லோநலங் கூர்மிதிலைப்
பூமான் றிருமக ளாகிய சீதையைப் பூதலம்வா
ழேமான் விழிமட வாருளொருத்தியென் பாரெவரே. (அகூ)

தலைவன் இன்றியமையாமையியம்பல்.

4700. குருவிருந் தாலுண்டு வான்கதி யிம்மை கொளாதவர்க்குத்
தருவிருந் தாலுண்டு பல்போக முந்ததை வானவர்க்கு
மருவிருந் தாரணி தோள்வேத நாயக மால்வரைநந் [மே.
திருவிருந் தாலுண் டெளியேற்கெஞ் ஞான்றும்பல்செல்வமு

பாங்கி நின்குறை நீயேசென்றுரையென்றல்.

4701. நன்று வதிமனத் தான்வேத நாயக நம்பிவெற்பிற்
கன்று வதிகை யுயிர்நீமெய் யேற்கரை நின்குறைநீ
வென்று வதிவடி வேலண்ண லேயுடன் மேலுயிர்வந்
தொன்று வதியல் பெனுஞ்சூத் திரமு முணர்ந்திலையே. ()

பாங்கியைத் தலைவன்பழித்தல்.

4702. பொன்னு லமைமணிப் பூண்வேத நாயக பூபன்வெற்பி
னின்னுன் முடியுமிக் காரிய மென்று நினைந்துளத்துன்

பின்னு லுழன்று திரிந்தன னீயின்ன பெட்பின்மொழி
சொன்னு லினியுனைச் சொல்வதென் னேயென் சுடுவினையே.

பாங்கி பேதைமையூட்டல்.

4703. திக்கே றியபுகழ் மால்வேத நாயகச் செம்மல்வெற்பி
லிக்கே றியமொழி யோவியப் பூசைகண் டேய்ந்தகட்சி
புக்கே றியகிளி பொத்துவள் பேதைமை பூண்டவளுண்
மிக்கே றியனின் றுயரறி வாள்கொல்செவ் வேலவனே. ()

தலைவன் தலைவி மூதறிவுடைமைமொழிதல்,

4704. பொன்னைப் பொருமட வாயெனை நோக்குகட் பூவழியே
யென்னைக் கவர்ந்துதன் பால்வைத்துத் தேம்பிடு மென்மனத்தே
தன்னைப் பொருந்தவைத் தாள்பேதை யென்பது தக்கதுவோ
மின்னைப் பொருமணிப் பூண்வேத நாயக வேள்வரைக்கே. ()

பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

4705. ஒன்றுற்றி முன்றெளிந் தார்பின்னு மாற்றற் கொருதுணைதே
தின்றுற்ற வேண்டு மெமக்கிதென் னுரெளி யேனுமக்கு [ர்ந்
நன்றுற்றுங் காரிய மென்வேத நாயக நம்பிசெம்பொன்
மென்றுற் றிளங்கமு கங்குளத் தூர்வரை வித்தகரே. (௩௫)

தன்னிலைதலைவன்சாற்றல்.

4706. எள்ளாத பேரெழி லேந்திழை யேநின் னிலங்கிறைவி
விள்ளாத பேருண் மேவாத போதென்றும் வெய்யவழி
நள்ளாத நுண்மதி மால்வேத நாயக நம்பிநட்புக்
கொள்ளாத பாவியி னென்னுவி தேம்பிக் குலைந்திடுமே. ()

பாங்கியுலகியலுரைத்தல்.

4707. நல்லா ருரைக்கும் புகழ்வேத நாயக நம்பிவெற்பின்
மல்லார் புயத்தண்ண லேயிடை யூறு மடங்கவெங்கள்
வில்லார் நுதலியை வேட்டனை யேற்றமர் வேட்டுவப்பப்
பல்லா ரறிய வரைந்தெய்து வாய்மணப் பந்தரிலே. (௩௭)

தலைவன்மறுத்தல்.

4708. நந்தாத சீர்நசை யால்வாடு வாற்கொரு நண்பனன்னீர் [குங்
செந்தா மரைத்தடந் தொட்டுண்டு தீரெனுஞ் சீர்மையொக்
கொந்தார் குழலியை வேட்டனுர் தீரெனக் கூறியது
மந்தார தாரு நிகர்வேத நாயக மால்வரைக்கே. (௩௮)

பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

4709. வில்லார் மணிப்பணி மால்வேத நாயக வேள்வரைவா
யல்லார் நிறத்தெமர் பொல்லா ரருளுமற் றச்சமுமுள்
ளில்லார் கொடுஞ்சிலை வல்லாரிங் கெய்துவ ரெய்தினுனை
மல்லார் புயத்தைய வெவ்வார்செய் வாருண் மதிப்பரிதே. ()

தலைவன்கையுறைபுகழ்தல்.

4710. நந்தா மணிப்பணி மால்வேத நாயக நம்பிவெற்பென்
னந்தா மணிமக வான்காம தேனுவை யாத்தரிய
சிந்தா மணியுந் தரினுங் கொடேனிச் செழுமணிநும்
பந்தா மணிமுலை தாங்கினளொ் தியான்செய்த பாக்கியமே.(கoo)

பாங்கி கையுறைமறுத்தல்.

4711. மந்தார தாரு நிகர்வேத நாயக மால்வரையெஞ்
செந்தார்ப் பசுங்கிளி மாமுலை மேனுஞ் செழுமணித்தார்
கந்தார் களிற்றெமர் காணிற்கண் சேந்து கறுத்திநின்று
தந்தா ரெவரெனின் யாங்களென் னேசொலத் தக்கதுவே. ()

ஆற்றுநெஞ்சினோடவன்புலத்தல்:

4712. பாடத் தவஞ்செய் தவர்கடை வாயிலைப் பற்பலரு
நாடத் தவஞ்செய் தவன்வேத நாயக நம்பிவெற்பிற்
கூடத் தவஞ்செய் திலமட வாரைக் குழையுநம்போல்
வாடத் தவஞ்செய்த தாலென்செய் வாமிந்த வல்வினைக்கே.()

பாங்கி தலைவனை ஆற்றுவித்தகற்றல்.

4713. சோலையி லேகுயில் கூங்குளத் தூரன் றுதிசெய்தமிழ்
வேலையி லேதுளை வோன்வேத நாயக வேள்வரைவாய்க்
கோலையி லேர்விழி யாட்குரைப் பேனின் குறைவருதி
காலையி லேநின்கை மாலையு மேற்பல் களிற்றண்ணலே. ()

இரந்துகுறைபெறா தவருந்தியகிழவோன்மடலேபொருளென மதித்தல்.

4714. வாய்க்கு மருந்து னிசையென நாடிவந் தார்கலிநோய்
தேய்க்கு மருந்து புகழ்வேத நாயகச் சேய்பனிநோய்
சாய்க்கு மருந்து திவாகர னேயுட் டவாமயனேய்
மாய்க்கு மருந்துநெஞ் சேமட லேயன்றி மற்றிலையே. ()

பாங்கிக்கு உலகின்மேல்வைத்துரைத்தல்.

4715. சேலேறு செய்க்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பி
னூலே றியல்பிற் கிழியேறுகைபி னுவலருந்தீம்
பாலேறு மென்மொழி யார்விழி யேறுபட் டேறுநெடு
மாலேறி ஞர்மடன் மேலேறு வார்மதி வாணுதலே. (கoரு)

அதனைத் தன்மேல்வைத்துச்சாற்றல்.

4716. பூவேறி வண்டுபண் சாதாரி பாடும் பொழிற்குளந்தைக்
கோவேறி யம்புறு சீர்வேத நாயகக் கோன்வரைப்பாற்
றூவேறி கைவிழிக் காவென் பெருக்கணி சூடிமடன்
மாவேறி நாளைநின் னூர்வீதி வாய்வரு வாமயிலே. (கoசு)

பாங்கி தலைமகள் அவயவத்தருமைசாற்றல்.

4717. அடையு மவர்க்குநன் மால்வேத நாயக வண்ணலவெற்பிற்
றொடையுஞ் சுரும்புஞ் செறியுமைம் பான்முதற் றேன்றுறுப்பு

மிடையு மவையவ மாகா தெழுதியென் மின்னனையா
ரிடையு நடையு மெழுதுவை யேன்மட லேறுவையே. ()

தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்.

4718. பொருந்த வுலகர் வழக்கோர்ந்து மெய்யிது பொய்யிதென்று
திருந்த வெழுதுந் திறல்வேத நாயகச் செம்மலொப்பக்
கருந்தடங் கண்குழன் மாமுலை யல்குல்செங் கைம்முதன்மெய்
யிருந்தவ மாத ரிடையொன்றும் பொய்யென் றெழுதுவனே.

பாங்கியருளியல்கிளத்தல்.

4719. சேலம்பு வென்றகண் ணூர்நட மாடல்செய் சீர்க்குளத்தூர்
மாலம் புயக்கு வளைவேத நாயக வள்ளல்வெற்பி
லேலம் புனைகுழ லாள்பொருட் டாக விறைவநெடுந்
தாலம் புரப்பவர் தாலஞ் சிதைத்த தகாதென்றுமே. (கoகூ)

பாங்கி கொண்டுநிலைகூறல்.

4720. நம்பனை யாய வருள்வேத நாயக நம்பிவெற்பி
லம்பனை யாத கரும்பனை யாரம் பகற்றவிண்டோ
யும்பனை யார்சிதை வுட்குறித் தாயவ் வொருவினையெங்
கொம்பனை யார்நின் குறைமறுத் தாற்பின் குறித்தருளே. ()

தலைவிபிள்ளைமைத்தன்மை பாங்கி தலைவற்குரைத்தல்.

4721. வளையாள் குடங்கையன் மால்வேத நாயக வள்ளல்வெற்பிற்
றுளையாள் குழன்மொழி கண்கள வின்று துகிலுருவக்
கிளையாள் குறிப்பி னளையாள்கல் லார்மொழி கேட்டலினிவ்
விளையா ணலமன்ன வேலவிழைந் தாயெனி னென்பயனே. ()

தலைவன் தலைவிவருத்தியவண்ணமுரைத்தல்.

4722. கோங்கிற் பொலிகுளத் தூர்வேத நாயகக் கோன்வரைப்பா
னீங்கிற் றெறுஉங்குறு குங்காற்றண் ணென்று நெருப்பினைத்தன்
பாங்கிற் பதியவைத் தென்னுவி வாட்டிய பான்மொழியைத்
தாங்கிற் றெனுமிடை யாயிளை யாளென றக்கதுவே. (ககஉ)

பாங்கி செவ்வியருமைசெப்பல்.

4723. செறியவித் தாரணி சூழ்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
குறியவித் தார்வடம் போலோர் சிறிய குரம்பையுட்புக்
கறியவித் தார விளையாட லோவி யடங்கியைந்து
பொறியவித் தாரி னிருப்பாட்கென் சென்று புகல்வதுவே. ()

தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

4724. சந்தான தாரு வெனும்வேத நாயகத் தண்ணியன்ற
னந்தாநன் மால்வரை வாய்விரை வாயன் னகுகுழலாய்
பந்தா னியன்முலை யெவ்வா றிருப்பினும் பார்தலைவன்
வந்தா னெனினென்ற வந்தா னெனவெதிர் வந்திடுமே. ()

என்னைமறைப்பினெளிதெனக்கூறல்.

4725. உடையார் பிறரில் லுடைமை யுறவந் துறுங்கொனுண்ணூ
லிடையார் நினக்குரி யாரா யினுமென் னுதவியின்றி
யடையார் புயத்தொடை யாயடை வாய்கொ லடுகளிறு
விடையா ரரியெனு மால்வேத நாயக வேள்வரைக்கே.(௧௧௫)

அக்கைபொருதவன் புலம்பல்.

4726. மெய்யோ டுதித்த புகழ்வேத நாயக வேள்வரைவா [ழுந்தே
யையோ விவர்திரு வாய்க்கென்செய் தேன்வெவ் வழற்கொ
பொய்யோ வெனச்சில வார்த்தைமு னல்கிப் பொலியவிடு
நெய்யோ வெனநகை நல்கிய தாற்பி னினைப்பரிதே. (௧௧௬)

பாங்கி தலைவனைத்தேற்றல்.

4727. விற்றூ ரணிபுய மால்வேத நாயக வேளொடிக
லுற்றூ ரெனவுட் கலங்க லலங்க லொளிர்புயத்தாய்
பற்றார் மகளி ரலர்தோ ழியருள் பற்றினவர்
மற்றூரென் போலென்சொ லிந்நாண் மருளம் மடமயிலே. ()

பாங்கி கையுறையேற்றல்.

4728. ஏழிற் பொலிகளிற் றூன்வேத நாயக வேந்தல்வெற்பிற்
சூழிற் புரக்குமித் தோன்றல்கை சான்றமென் றூயதழை
காழிற் பொலியல்கு லாட்கணி யாகவென் கையுற்றம்மா
வூழிற் பெருவலி யாவுள வென்ப துணர்த்தியதே. (௧௧௮)

தலைவ[illegible] ஆற்றல்.

4729. ஓருயிர் நோயைமற் றோருயி ரேற்பதி லொண்டழையேற்
றூருயிர் நோயையிப் பேருயி ரேறற தருளுணர்ந்திச் [பல்
சீருயி ரோம்பவென் செய்வதென் செயயுமண் செல்லுக்குப்
வாருயி ரோம்பு புகழ்வேத நாயகன் மால்வரைக்கே. (௧௧௯)

இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கவன் குறையுணர்த்தல்.

4730. பரியர் கரியர்கள் சூழ்வேத நாயகப் பாரிவரைக்
குரியர் பிரிய ரொருவர் வருவர்நம் மோர்புனத்தே
யரியர் தெரியவும் வாய்திற வார்தளி ரங்கையரப்
பெரிய ருவப்புற யாஞ்செயத் தக்கதென் பெண்ணமுதே. ()

இறைவிஅறியாள்போன்று குறியாள்கூறல்.

4731. கனியிற் பொலிபொழில் சூழ்குளத் தூரன் கரிசறுத்த
வனியிற் பொலியும் புகழ்வேத நாயக வள்ளனட்பு
நுனியிற் கரும்பு நிகரலம்போ லினிக்கு நுவலரிய
பனியிற் பொலிபிறை போல்வள ராநிற்கும் பான்மொழியே.

பாங்கி பிறையோர்கண்டமைபகர்தல்.

4732. மையுறை வாட்கண் மடந்தைநல் லாய்கடல் வாரியெனுஞ்
செய்யுறை நீர்குளத் தூர்வேத நாயகச்செம்மல் வெற்பிற

பொய்யுறை யாமொழி யார்கழி யார்நம் புனத்தினின்றுங்
கையுறை யார்நிற் கருதின ராய்நிற்பக் கண்டனனே. (கஉ௨)

பாங்கியைத் தலைவிமறைத்தல்.

4733. தென்னைக் கருதிய சீர்வேத நாயகச் செம்மல்வரை
தன்னைக் கருதிப் புகுவன்றி மான்குஞ் சரங்கருதிப்
பொன்னைக் கருதி மணியைக் கருதிப் புனம்புகுவா
ரென்னைக் கருதிவந் தாரென்ப தென்செவிக் கேற்பதன்றே.

பாங்கி என்னைமறைப்பதென்னெனத்தழால்.

4734. பொன்னை மறைப்ப தொரீஇடடைந் தார்கலி போகநல்கு
மின்னை மறைப்பரு மால்வேத நாயக வேள்வரைவா
யன்னை மறைப்பதுண் டோதன் மகவுக் கடிப்பணிசெ
யென்னை மறைப்பதென் னேபெரு மாட்டி யிதுவியப்பே. ()

பாங்கி கையுறைபுகழ்தல்.

4735. அலைத்தலை மானனை யாய்நிதிக் கோனுயி ராயமனை
முலைத்தலை காணரி திம்முத்த மென்று மொழிபலவான்
கலைத்தலை யார்விருப் பாறகொடுத் தாரென் கயிற்சுகுண
மலைத்தலை யேறிநின் றேன்வேத நாயக மால்வரைக்கே. ()

தோழி கிழவோன்துயர்நிலைகிளத்தல்.

4736. செய்யோ வருங்குளத் தூர்வேத நாயகச் சேய்வரையென்
மெய்யோ விளைத்தது காலோ நடந்து மெலிந்தனவங்
கையோ சலித்தன மாந்தளிர் கொய்தென்பர் காணொருவ
ரையோ பிறிதொன்றும் வாய்த்தற வார்நின் றலசுவரே. ()

மறுத்தற்கருமைமாட்டல்.

.4737. மழையேந்து காக்குளத் தூர்வேத நாயக மால்வரைப்பைந்
தழையேந்து கையொடு காணுந் தொறும்பெருந் தக்கவர்முன்
பிழையேந்து பொய்பல பேசினன் யானினிப் பேசறியேன்
குழையேந்து மொண்செவி யாய்மறை வேயுட் குறித்தனனே.

தலைவன்குறிப்புவேறாக நெறிப்படக்கூறல்.

4738. சீலத்தை நோக்கிய மால்வேத நாயகச் சேய்நகரோர்
தாலத்தை நோக்கி யுதுயர்வெங் கோபமுந் தாங்கவந்த
காலத்தை யென்செய்வ தென்றுயிர்த் தாரக் கருத்திலுறுங்
கோலத்தை யோசிறி யேனறி யேன்குறி யேனென்றுமே. ()

தோழி தலைவியைமுனிதல்.

4739. விள்ளத் தகாத புகழ்வேத நாயக வேள்வரைவா
யெள்ளத் தகாத விளமயி லேசிறி யேனைநட்பாக்
கொள்ளத் தகாதறி யாமையி னாற்சொன்ன கூற்றினையு
முள்ளத் தகாது முளத்ததுற் றருக் குவந்துரையே. (கஉகூ)

தலைவி பாங்கியைமுனிதல்.

4740. காயு முனியு மெனுவேத நாயகக் காளைவெற்பி
னீயு முனியும் படியடைந் தாரொரு நேயர்நமர்
வாயு முனியு மினிவெளிப் பட்டு வரினயற்பல்
பேயு முனிமென் றுலென்னை யோநின்னைப் பேசுவதே. ()

தலைவி கையுறையேற்றல்.

4741. பொன்னோடு நேரு மதிவேத நாயக பூபன்வெற்பி
னின்னோடு வாடுந் தழையது நோக்கியென் னேயமன
மென்னோடு வாடுநின் சொன்மறுப் பேன்கொள்கை யேற்றதழை
மின்னோடு நேரிடை யாய்நடை யாதென்கை மேவுதற்கே. ()

இறைவிகையுறையேற்றமைபாங்கியிறைவற்குணர்த்தல்.

4742. நன்னிலை யேநிற்கு மால்வேத நாயக நம்பிவெற்பிற்
பொன்னிலை வேல தழையென்று கூறிய போதுவகை
யென்னிலை யேற்றனள் மோந்தன ளொற்றி யியம்பியபேர்
முன்னிலை யேவல் வினையா வுணர்ந்தனள் முற்றிழையே. ()

பாங்கி தலைமகற்குக்குறியிடங்கூறல்.

4743. பாங்கா மரகதப் பாறை முகின்மண் படிதலுற்று
நீங்கா துறைந்தென நாப்ப ணுறச்சுற்று நின்றொளிர்பூ
வாங்கா மருசந்த னச்சோலை யாம்பக லாடுமிடம்
வீங்கா வெழுபுகழ் மால்வேத நாயக வேள்வரைக்கே. (௪௩)

பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

4744. சீர்மலி சாந்த குணவேத நாயகச் செம்மல்வரைச்
சார்மலி மாமயி லாடுத னோக்கித் தளிர்கள்கொய்து
கார்மலி குன்றெதிர் கூய்வீழ் புனலெதிர் கைமறித்தியா
மோர்மலி காயினன் காடற் கிறைவி யெழுந்தருளே. (௪௪)

பாங்கி தலைமகளைக்குறியிடத்துய்த்துநீங்கல்.

4745. குலவு நலமலி சீர்வேத நாயகக் கோன்வரைப்பா
லுலவு நலமலர் கொய்திங் குழுவ லுறுமளவு
மிலவு கலவுசெவ் வாயமு தேயினி யிவ்விடத்தே
நிலவு கலவ மயிலாட னோக்குபு நின்றருளே. (௪௫)

இறையோன்குறியிடத்தெதிர்ப்படுதல்.

4746. அந்தோ நடந்து வருந்தின வோபத மல்குமிடை
பந்தோ வெனுமுலைப பாரம் பொறுது பதைத்ததுவோ
நந்தோ வெனுங்களத் தீர்வேத நாயக நம்பிவரை
வந்தோ வியமென நின்றதென் மேல்வைத்த மன்னருளே.()

புணர்ச்சியின்மகிழ்தல்.

4747. கண்ணத் தவஞ்செய் ததுமன மற்றிவர் காமருரு
நண்ணத் தவஞ்செய் ததுதோண் முலையை நலிகவியை

மண்ணத் தவஞ்செய் தவன்வேத நாயக மால்வரைவா
யுண்ணத் தவஞ்செய் ததுவா யமுதெனக் கொப்பெவரே. ()

புகழ்தல்.

4748. இரவே விளங்குங் களங்க மறுதிக லேற்றரவம்
வரவே மறையு நிறையுங் குறையுமற் றோர்தினமெய்க்
கரவே யுறுமம் மதியோ விவர்முகக் காமர்மதி
திரவேத நாயக மால்வரைப் பாலொக்குஞ் செப்பரிதே. ()

தலைமகளைத் தலைமகன் விடுத்தல்.

4749. பொருவேயில் பன்மலர் பூத்திருந் தாலும் புனற்றடமொண்
டிருவேசெந் தாமரை நாப்ப ணுறுவிடிற் சீருறுமோ
வொருவேத நாயக மால்வரைச் சார லுறவனப்பை
யிருவே யுறழ்திர டோளாய நாப்ப ணெழுந்தருளே. (கஙகூ)

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

4750. முகப்பகை யாய கமலமும் வண்டு முழங்குமங்கைக்
ககப்பகை யாயசெங் காந்தளுங் கொய்தரும் பாயமுல்லை
பகப்பகை யாய நகையாய் கொணர்ந்தனன் பார்கலிக்கு
மிகப்பகை யாய கொடைவேத நாயக வேள்வரைக்கே. (கசo)

தலைவியைப் பாங்கிற்கூட்டல்.

4751. இருளிற் கமல மலர்ந்தது வள்ளையி லேறியது
சுருளிற் கழிந்த கருநீல மாயத்திற் றுன்னுவம்வா
வருளிற் பெரியன் பொருளிற் பெரிய னமைந்தபன்னூற்
றெருளிற் பெரிய னெனும்வேத நாயகச் சேய்வரைக்கே. ()

நீங்கித்தலைவற் கோம்படைசாற்றல்.

4752. நிறவேல்கைக் கொண்ட நெடுந்தகை யேயெமர் நீதியுமிவ்
வுறவே லெனும்பக்க முந்தேர்ந் திடையீ டெறப்புரிந்தேன்
றிறவேல் விழிபழி சாரா வகையது சிந்தைசெய்யேன்
மறவே லெனையென்று நூல்வேத நாயக மால்வரைக்கே. ()

உலகியன் மேம்படவிருந்து விலக்கல்.

4753. பாலிற் சமைந்த தினைமூ ரலுமெமர் பற்றுகொடுங்
கோலிற் சமைந்த முயலூ னுந்தேனுங்கைக் கொண்டருந்தி
வேலிற் சமைந்தகை யாயின்று வைகி விடியுமுன்சென்
மாலிற் சமைந்த கொடைவேத நாயக மால்வரைக்கே. (கசஙு)

விருந்திறைவிரும்பல்.

4754. காதா யினுமினி யாயென்பர் பாலருள் காட்டுபெருங்
கோதா யினும்வளர் சீர்வேத நாயகக் கோன்வரைப்பாற்
சூதா யினும்வனர் பூண்முலை யீருங்கை தொட்டபொருள்
யாதா யினுமெனக் கின்னமு தாமுணற் கென்கசப்பே. (கசச)

---

## ஒருசார்பகற்குறி.



கிழவோன்பிரிந்தழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்.

4755. வேயாமல் வைப்பதில் சீர்வேத நாயக வேள்வரைவா
யீயாம லீட்டு நீயா வளற்றி னிடைவிழல்போற்
பாயாமல் வல்லிருள் சீப்பவன் மேல்கடற் பால்விழுந்தான்
மாயாம லன்னர் பழிபோ லெழுந்தது மாலையுமே. (கசரு)

பாங்கிபுலம்பல்.

4756. நம்மாலை யேங்கர் மால்வேத நாயக நம்பிவெற்பி
லெம்மாலை யோசெய் வதியா திறைவ ரிணைத்தடந்தோ
ளம்மாலை யேவிழைந் தாமாலை யேற்ற வணங்கணங்க
விம்மாலை யேவினர் யாரவர் வாழிய வெற்றைக்குமே. (கசசு)

தலைவனீடத்தலைவிவருந்தல்.

4757. பொன்னே வெனுமதி மால்வேத நாயக பூபன்வெற்பி
லன்னே வருள்விழி காவியென் றார்தனி யாவியென்றார்
மின்னே வெனுமிடை தேம்புமென் றார்கடு வேம்புமென்று
ரென்னே வாராதொளித் தாரளித் தாரெம் மிறையவரே. ()

தலைவியைப் டாங்கிகழறல்.

4758. கூடினர் பின்பிரி வார்பிரிந் தாரும்பின் கூடுவர்வா
னோடினர் தோன்று வதும்பின் மறைவது முள்ளுணர்பாப்
பாடினர் கற்ப தருவேத நாயக பார்த்திபனே
டேடினர் போர்கலங் கேலப லோரி னொழிவதன்றே. (கசஅ)

தலைவி முன்னிலைப்புறமொழிமொழிதல்.

4759. தகையுற் றிடுகுறிப் பான்மொழி யாமுனந் தாமுணரு
மிகையுற் றிடுநரல் லார்க்கொரு வார்த்தை விடுப்பதினுந்
திகையுற் றிடுமெய்ப் புகழ்வேத நாயகச் செல்வனொடு
பகையுற் றிடுமது வேநன்று நன்று படர்பவர்க்கே. (கசகூ)

தலைவி பாங்கியொடுபகர்தல்.

4760. ஏட்டிற் பதிப்பருஞ் சீர்வேத நாயக வேந்தல்வெற்பில், வேட்டிப் படித்துய ரென்றுசெய் தோனிரு மெய்யுமொன்று, நாட் டிப் படைத்திலன் யானென்செய் கேன்சொ னவின்மொழியோ, கூட்டிப் பிரித்துப் பிரித்துப்பின் கூட்டவொண் கோற்றொடியே. ()

தலைவியைப் பாங்கியச்சுறுத்தல்.

4761. நெஞ்சிறை கொண்ட விறைவெளித் தோற்ற கிறீஇப்புனத்து
ளஞ்சிறை வன்னி யிறைகொளச் செய்த தறிந்தனரோ
னஞ்சிறை வேனம ரிற்சிறை வைப்பர்நள் ளார்நலிய
வெஞ்சிறை செய்த திறல்வேத நாயக வேள்வரைக்கே. ()

நீங்கற்கருமை தலைவிநினைந்திரங்கல்.

4762. காவியொன் றாக மதன்வேத நாயகக் காளைவெற்பி
னாவியொன் றாகப் புனைகுழ லாய்நல நண்ணவெங்கட்
காவியொன் றாக வமைந்தது போன்மெய்யு மன்றுசெய்த
பாவியொன் றாகப் படைத்தில னேயென்ன பாவமிதே. ()

தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றல்.

4763. பேரொலி நீர்வயல் சூழ்குளத் தூரன் பெருந்தமிழ்ப்பாச்
சீரொலி யேற்குஞ் செவிவேத நாயகச் செம்மல்வெற்பிற்
காரொலி யேற்று மகிழ்மயில் போலநங் காவலர்தந்
தேரொலி யேற்று மகிழ்வாய் குழைநின் றிருச்செவிக்கே. ()

பாங்கி தலைவற்குச் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

4764. பணியார் பணிய நகுவேத நாயகப் பண்பன்வெற்பிற்
கணியார் மதுமலர் வாய்திறந் தார்முற் கடிந்தபகை
தணியார் தினையற நாட்குறித் தார்தடிந் தாரினியாந்
திணியார் மனத்தின் மயில்காள்செல் வேமெஞ் சிறுமனைக்கே.

முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

4765. சிறப்பினுஞ் செல்வத் தினும்பொலி வோன்செம்பொ னேற்றவரே
யுறப்பினு நல்கு மொருவேத நாயக வும்பல்வெற்பிற்
பறப்பினும் பாடினுங் கூடினு நீடின பார்த்திபர்தா
மறப்பினு நீவிர் மறவீர்வண் டீரெங்கண் மாதினையே.(கருரு)

முன்னின்றுணர்த்தல்.

4766. தாவேங்கை யென்றிரப் பார்காம தேனு தழலுமிழ்கண்
மாவேங்கை யன்ன வலிவேத நாயக மால்வரைமேற்
பூவேங்கை காட்டத் தடிந்தார் தினையிப் புனத்தையினிக்
காவேங்கை விட்டனங் காப்பே மனையகங் காவலனே. ()

முன்னின்றுணர்த்தி ஓம்படைசாற்றல்.

4767. தினையென் றுளங்கொண் டிருந்தேமெம் முள்ளஞ் சிதைத்திடுதீ
வினையென் றுளங்கொண் டிலேமைய னேயினி மேவிடமூர்
மனையென் றுளங்கொண் டவண்வா புரத்தி மயிலையுல
கனையென் றுளங்கொண்ட மால்வேத நாயக வண்ணலொத்தே.

கிழவோன்தஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்.

4768. தண்ணிய வாறடி கொப்புள்கொள் வெப்புந் தருவதுபோற்
கண்ணிய வின்பந் தருபுனந் துன்பமுங் காட்டியது
புண்ணிய வான்குளத் தூர்வேத நாயக பூபன்வெற்பி
னண்ணிய வாமன மேயென்செய் வாமுண் ணலிதுயர்க்கே.()

# பகற்குறி இடையீடு.



இறைவனைப் பாங்கிகுறிவரல்விலக்கல்.

4769. புறவரி வானிக ருங்குர ளேக்கப் புனம்புகுந்து
குறவரி யாளி பொருமா றுலாவுவர் கோற்றொடிப்பொன்
னிறவரி மானப் பொலிவேத நாயக னேயன்வெற்பின்
மறவரி வேல்விழி பாற்பல காலும் வருமன்னையே. (கருகூ)

இறைவியைப் பாங்கிகுறிவரல்விலக்கல்.

4770. கடங்கொண் டெழுகளிற் றுன்வேத நாயகக் காளைவெற்பி
லிடங்கொண் டெழுமுலை யுங்குலை யுஞ்சிற் றிடையுமெய்யிற்
றிடங்கொண் டெழுபசப் புங்கண்டென் னேசிந்தை செய்தனளாய்
மடங்கொண் டெழுமயி லேயினி வாரலிவ் வண்பொழிற்கே.

இறைமகளாடி டநோக்கியழுங்கல்.

4771. கனமே பொருவுசெங் கைவேத நாயகக் காளைவரைப்
புனமே வுதலை யினையா மனையிற் புகுதுவமித்
தினமேயெங் நன்றிகொன் றூர்க்குமுய் வுண்டுய்வு செப்பினிலை
மனமேசெய்ங் நன்றிகொன் றூர்க்கென் பதனை மறந்தனமே.()

பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

4772. குரல்கவ ராது கடிந்ததெண் ணுதிக் குளிர்புனத்தே
யுரல்கவர் காற்களிற் றூர்வரிற் போரு ருற்றறன்மீன்
சிரல்கவர் செய்க்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்ப
தரல்கவ ரோதியர் சென்றூரென் றேறுமின் றத்தைகளே.()

பின்னுள்கெடுக்தகைகுறிவயினீடுசென்றிரங்கல்.

4773. வேனினங் காமரு வேள்வேத நாயக வீரன்வெற்பென்
னூனினங் காமுயிர் நிற்குங்கொல் லோகண் ணுறுதொழியி
னேனினங் காதன் மயிலனை யாரிவ் விடத்தெதிரார்
மானினங் காளளி காள்கிளி காளென் மருவியதே. (கசுங)

வறுங்களநாடிமறுகல்.

4774. ஒருமான்பின் சென்று வருமான வன்கண்ட வோரிடம்போற்
றிருமா னிருந்த விடமாயிற் றூலின்னுஞ் செய்வதுண்டோ
பொருமான வீரப் புயன்வேத நாயக பூபன்வெற்பில்
வருமான் மயிலினங் காண்முன்பு போலின்ப வாழ்வினையே.

குறுந்தொடிவாழுமூர்நோக்கிமதிமயக்கல்.

4775. கொண்டலை வென்ற கொடைவேத நாயகக் கோன்வரையித்
தண்டலை நின்றுழல் கின்றனம் யாமதுத் தாரையுண்டு
வண்டலை யொண்குழல் வாழுஞ்சிற் றூரது மற்றதனைக்
கண்டலை கின்றன கண்களென் செய்யக் கடவனவே. (கசுடு)

## இ ர வு க் கு றி.



இறையோன் இருட்குறிவேண்டல்.

4776. மின்னு முழங்குவ மேகங்கல் லாமை மிகுமனத்திற்
றுன்னு மலிந்தது தூங்கிரு ளோங்குமுட் டயோர்தமிழ்த்
தென்னு வெனவளர் மால்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
பொன்னு வெனுமட வீர்விருந் தாய்நும்மிற் போதுவனே. ()

நெறியினதருமைகூறல்.

4777. வேலோ டுலாவு மெமருமுள் ளஞ்சுவர் வேழமிரு
நாலோடு நீளச் சமையே யுலாவு நடவையுற
நூலோடு நாளும் பயில்வேத நாயக நுண்மதிச்சீர்
மாலோடு நட்படை யார்க்கே தகுநீ மருவரிதே. (கசுஎ)

இறையோன்நெறியினதெளிமைகூறல்.

4778. போதே யிடங்கொணின் பொன்னனை யாண்முலைப் போர்க்களிறு
மாதே யிடைச்சிங்க மல்குற் பணியொடு மாறுகொள்ளேன்
காதே தெனினுமுள் ளஞ்சுவ லோகலங் கேன்சுகுண
மீதேறி நின்ற புகழ்வேத நாயக வேள்வரைக்கே. (கசுஅ)

பாங்கியவனூட்டணியியல்வினுதல்.

4779. நின்னூட் டியன்மட வார்விளை யாடுநன் னீழலெவன்
பொன்னூட் டிழையெவன் பூசும் விரையெவன் போற்றுடையெ
னிந்நாட்டின் மேவைந் தருவேத நாயக வேந்தல்வெற்பின்
மின்னூட் டிசையண்ண லேயெண்ண லேதும் விளம்புகவே.()

கிழவோன் அவனூட்டணியியல்வினுதல்.

4780. என்னூட் டணியிய லாயுங் குறிப்பு ளினிதுணர்ந்தேன்
பொன்னூட் டியன்மட மாதே புனல்கொடு பொங்குபொன்னி
நன்னூட் டியல்குளத் தூர்வேத நாயக நம்பிவரை
நின்னூட் டணியிய லெல்லா மெனக்கு நிகழ்த்துகவே. (கஎ௦)

அவற்குத்தன்னூட்டணியியல்பாங்கிசாற்றல்.

4781. நாடுவர் கற்ப தருவேத நாயக நம்பிவெற்பிற்
சூடுவர் முத்த முடிப்பர்பொன் வேங்கைத் துணர்குறிஞ்சி
பாடுவர் பூசுவர் செஞ்சாந்து நீந்து படர்சுனைபுக்
காடுவர் பிண்டி நிழற்பயில் வாரெம் மரிவையரே. (கஎக)

இறைவிக்கு இறையோன்குறையறிவுறுத்தல்.

4782. எட்டினை யொக்கும் பழியு மிலான்றெவ் விரிதரும்வாள்
வெட்டினை யொக்கு நகைவேத நாயக வேள்வரைவாய்
வட்டினை யொக்கு முலையாய்பன் மாவுறும் வட்டையிற்கண்
கட்டினை யொக்கு மிருள்வரல் வேண்டினர் காதலரே. ()

கோதிறைவிகெஞ்சொடுகிளத்தல்.

4783. கண்ணனே யார்புகழ் வாரெனச் சீர்த்தவன் காவின்மலர்க்
கண்ணனை யார்குளத் தூர்வேத நாயகக் காளைவரைக்
கண்ணனை யார்கரி தேர்ந்தரி மேவுங் கடுவழிநங்
கண்ணனை யார்வரு வார்மன மேயென் கருதுவதே. (௧எ௩)

நேரிழைபாங்கியொடுநேர்ந்துரைத்தல்.

4784. கருவா ரணங்கவிக் கீவோன்வெள் வாரணங் கையுடையோன்
மருவார ணங்கட வாவேத நாயக வள்ளல்வெற்பி
லொருவா ரணங்கர வஞ்சூ ருலாவழி யுற்றொருவர்
வருவா ரணங்கனே யாய்கினே யாயென் மறுப்பதுவே. (௧எ௪)

நேர்த்தமைபாங்கிநெடுந்தகைக்குணர்த்தல்.

4785. குரவிடை யார்குழல் பொன்னடி வீழ்ந்துன் குறையுரைத்திவ்
விரவிடை யானிரந் தேன்கரந் தேனல னெட்டுணையுந்
திரவிடை யாவன் சிலேகனி யாக்கவுந் தேர்ந்தனன்சீர்
வரவிடை யாளி யெனும்வேத நாயக மால்வரைக்கே.(௧எ௫)

குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்.

4786. வண்டியை பூந்தொடை மால்வேத நாயக மன்னன்வெற்பிற்
கண்டியை மென்மொழி மாதே கரடக் கடவயிரத்
தண்டியை கோட்டுக் களிறொன் றுனக்குத் தளிருதவும்
பிண்டியை வந்தலேக் கின்றது நின்றது பேதுறவே. (௧எ௬)

இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.

4787. வடியொன்று வேனெடுங் கண்மட வாய்திட வாய்மைகொள்பல
குடியொன்று வான்குளத் தூர்வேத நாயகக் கோன்வரைப்பாற்
கடியொன்று வான்புன முன்னுள் வருவெங் களிறுவந்து[ங்கே
பிடியொன்று நாடிநிற் கின்றதின் றோர்நம் பெரும்பொழிற்

அவட்கொண்டுசேறல்.

4788. பூக்கொண்ட வேங்கையின் வாய்த்தும்பி வந்து பொருந்தியது
காக்கொண்ட பூங்குழ லாயிறும் பூதது காண்பதற்குத் [த்து
தேக்கொண்ட தாமரைத் தாள்பெயர் மெல்லச்செல் வாங்ற
மாக்கொண்ட கொண்ட லெனும்வேத நாயக மால்வரைக்கே.

குறியுய்த்தகறல்.

4789. மண்ணிற் பொலியும் வணஞ்செந் தமிழை வளர்த்தறிஞ
ரெண்ணிற் பொலியும் புகழ்வேத நாயக வேந்தல்வெற்புன்
கண்ணிற் பொலியு நறுநீலங் கொய்துகைக் கொண்டுநடு
விண்ணிற் பொலியுமின் னேயுறு மேனிங்கு மேவுகவே. ()

வண்டுறைதாரோன்வந்தெதிர்ப்படுதல்.

4790. இரியா விருளின் மலர்மாளி கைச்செவ் விதழ்ப்புதவு
புரியா முழுமணிப் பூணொளி யேகதிர் போலவெழுந்

தரியா தனர்கண் மணிவேத நாயக வண்ணல்வெற்பில்
விரியா வுலாய்த்திறந் தோதிரு மாதிங்கு மேவியதே. (கஅ௦)

பெருமகள்ஆற்றினதருமைநினைந்திரங்கல்.

4791. கல்லார் மனத்திற் கருகிருள் வாய்மூட் கடுவழிக்கை
வில்லார் விழிக்கு மரிமாவ மர்க்கும் விலங்கிமதி
வல்லார் புகழ்குளத் தூர்வேத நாயக் மன்னவனுக்
கொல்லாரி னீங்கடைந் தாய்பாவி யேன்பொருட் டுத்தமனே.

புரவலன்தேற்றல்.

4792. ஒருகோட்டு வாரண மாளரி கூற்றிற்குட் கேனலையே
பொருகோட்டு வாரியு நீந்துவன் வெங்கரி பொங்கரிநேர்
வருகோட்டு மின்னுமர் கான்யாற்றுக் கஞ்சுவ லோமயங்கே
திருகோட்டு நன்மொழி வாய்வேத நாயகச் சேய்வரைக்கே. ()

புணர்தல்.

4793. தறியா மதியுமத் தாமந் தாமுந் தனிச்சுயிரு
மூறியா வரவு மொருதாழி யாமுழுப் பாற்கடலைச்
செறியா திருக்கவு முண்டே மமுதித் திறமெவர்க்காம் [க்கே.
வெறியார் மலர்த்தொடைத் தோள்வேத நாயக வேள்வரை

புகழ்தல்.

4794. ஏற்றல வோதைக் குளத்தூரன் வெங்கலி யென்னுந்துய்க்குக்
காற்றல வோவெனு மால்வேத நாயகக் கானைவெற்பிற்
கூற்றல வோவெனுங் கண்மட வீருங் குளிர்நகைக்குத்
தோற்றல வோமுத்த நாளுக்கு நாண்மெய் சுருங்குவதே. ()

இறைமகளிறைவனைக்குறிவரல்விலக்கல்.

4795. பரிகரி பாவுக் கருள்வேத நாயகப் பண்பன்வெற்பிற்
புரிகரி நீதிக் கெனுமிறை வாரற்க போற்றியிது
தெரிகரி யாதமுள் ளாறுநள் ளாறு செலுமெமரு
மரிகரி யென்ப ரரகர வென்பரல் வாயடைந்தே. (கஅரு)

அவன் இறைவியையில்வயின்விடுத்தல்.

4796. வாரகந் தோய்முலை யாய்வேத நாயக வள்ளல்வெற்பிற்
சூரகந் தோய்பொழி லிவ்விரு ணீநிற்ற றூய்மையன்று
நாரகந் தோயு மனைதேடி நண்ணினு நண்ணுமெல்லப்
பாரகந் தோயநின் பாதார விந்தம் படர்மனைக்கே. (கஅசு)

இறைவியையெய்திப்பாங்கிகையுறைகாட்டல்.

4797. விரைமலி கூந்தலங் கானந் தளவுகண் விரைநெய்த [தேன்
லுரைமலி மாமைமின் னேசூடி யொற்றி யுறக்கொணர்ந்
திரைமலி நாரை யணைத்துப் பெடைக்கிதஞ் செய்யவேண்டா
மரைமலி வான்குளத் தூர்வேத நாயக மால்வரைக்கே. ()

இற்கொண்டேகல்.

4798. வம்பரை நட்புக் கொளாவேத நாயக மால்வரைப்பூங்
கொம்பரை நீயணைத் தாலுஞ் சினந்துட் கொதிக்குமன்னை
யிம்பரை மேவியிக் கங்குலின் வாய்நிற்ப தேற்குங்கொலோ
வம்பரை யாள்விழி யாய்மெல்லச் செல்கநின் ஞய்மனைக்கே.

பிற்சென்றிறைவனைவரவுவிலக்கல்.

4799. சீராழி யங்கைப் புயல்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
காராழி மேலெழுந் தென்னச் செறிகருங் கங்குலின்வாய்ப்
பேராழி யம்புய மாளிகை வாழுமொர் பெண்பொருட்டின்
றோராழி யேழ்பரி யொண்டேரி லாய்வர லோவுகவே. ()

பெருமகன்மயங்கல்.

4800. மயிர்நீத்து வாழுமென் ஞமா னெனப்பெரு மானமிக்கோன்
செயிர்நீத்து வாழும் புகழ்வேத நாயகச் செல்வன்வெற்பிற்
பயிர்நீத்து வாழும் பசுங்கதி ரொற்றுமைப் பட்டுறுமின்
னுயிர்நீத்து வாழு முடலென்பை யேலுய்வ னெண்டொடியே.

தோழிதலைமகள்துயர்கிளத்துவிடுத்தல்.

4801. இரக்காம்பல் காட்டி யெனநா வலரிறு மாப்பநல்குந்
தரக்காம்ப னேர்வலி மால்வேத நாயக தாருவெற்பில்
வரக்காம்ப னேர்திர டோள்குழன் மாதுன்கை வண்டுநின்வா
யரக்காம்பல் சேர்த்திடி னின்பரி ஞமை மறிந்துய்வளே. ()

திருமகட்புணர்ந்தவன்சேறல்.

4802. காலேகண் ணகக் கருகிரு ளாயினுங் காவல்கொண்ட
மாலே நிகர்குளத் தூர்வேத நாயக மன்னன்வெற்பிற்
சேலேய் விழிமுலை தாக்கவென் றேனுற்ற செஞ்சந்தொளி
போலே யகற்ற வெளிதாவென் னூருக்குப் போதுவனே. ()

## இரவுக்குறியிடையீடு.

இறைவிக்கிகுளை இறைவரவுணர்த்தல்.

4803. நகைத்தா ரணிகுழன் மாதேதைபைந் தோகை நகுமயில்கண்
முகைத்தார் தருகணிச் சூழலின் வாயெல்லி முற்றும்பற்றித்
தகைத்தா ரணிபுகழ் மால்வேத நாயக தாருவொடு
பகைத்தார் பொருவத் துயிலா தழுங்கிப் பதைத்தலென்னே.

தான்குறிமருண்டமைதலைவியவட்குணர்த்தல்.

4804. அயிரே யெனுஞ்சொ லனமெ யிதாருக் கறைகுவலென்
னுயிரேய் பவர்குறி யென்றுமற் றோர்குறி யுற்றுமத்தார்
தயிரே யெனவுள் ளுடைந்திடைந் தேன்கங்கு றங்களவுஞ்
செயிரே யிலாத புகழ்வேத நாயகச் சேய்வரைக்கே. (கககச)

பாங்கிதலைவன்றீங்கெடுத்தியம்பல்.

4805. வடிக்கடி வேல்விழி யாய்வேத நாயக வள்ளல்வெற்பிற்
றொடிக்கடி மாலையந் தோள்வாடி யெல்லி துனைந்தினைந்தாங்
கடிக்கடி நீசென்று மாழாந் தனுகவுள் ளன்பிலர்போன்
முடிக்கடி மாலைக மன்பர்செய் தார்பொய் முழுக்குறியே. ()

புலந்தவன்போதல்.

4806. கனமேய் குழலி பொருட்டுக் குருட்டுக் கருங்கங்குல்வாய்
வனமேவு வட்டை யிழுத்துப் பழுத்தசொல் வாணர்கொளத்
தினமே சிவிகை யருள்வேத நாயகச் சேய்வரையென்
மனமே யெனைக்கெடுத் தாய்கொடுத் தாய்துயர் வாழியவே. ()

புலர்ந்தபின்வறுங்களந்தலைவிகண்டிரங்கல்.

4807. மன்னுக மேவி வளர்வேத நாயக வள்ளறுறைப்
புன்னுக மேயெத் தவம்புரிந் தாய்துயர் போர்த்துநிற்கு
மென்னுக முமிவ ஹுற்றோர் பயனின்றி யெய்திறைவன்
றன்னுக முந்துன் னு தார்நீ யணிந்து தழைப்பதற்கே. ()

தலைவிதன்றுணைக்குரைத்தல்.

4808. பொன்னார மார்பப் புயல்வேத நாயக பூபன்வெற்பின்
மின்னார மார்ப னொருகணிக் கீழ்நின்ற மென்கொடிக்குத்
தன்னாரம் வாங்குபு சூட்டினன் யானென்று தங்கிருள்வா
யென்னா ரமுதனை யாய்தெரிந் தார்க்கி திகழ்ச்சியன்றே. ()

தலைமகளவலம்பாங்கிதணித்தல்.

4809. காமரை வென்ற கவின்வேத நாயகக் காளைவெற்பி
லாமரை யாமத்து நண்ணினர் செய்த நகுகுறியோ
பாமரை மேகலை யாய்மெய்ம்மை யேயுட் பரிவொழிக
தாமரை வேங்கையின் மேலே றியதிறந் தானுணரே.(கஅகூ)

இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.

4810. பாட்டார் சுரும்பு முரசொடை யீர்புகழ் பற்றியகோ
னட்டார் குடிக்கு முதல்வேத நாயக நம்பிவெற்பின்
மாட்டாரெம் மூர்க்கு வரன்மறந் தீரின்பம் வாய்மடுப்ப
வேட்டார்நும் மூர்க்கு வருவேமவ் வூர்ப்பெயர் விள்ளுமினே.

இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்.

4811. நத்தேர் மலிசெங்கை மால்வேத நாயக நம்பிவெற்ப
கத்தேநின் மங்கையை யாய்ந்ததற் கோதுங் கரியதுவே
முத்தே யெனுநகை யாய்பிறர் குற்ற மொழிநரன்றி
யொத்தேதங் குற்ற முரைப்பா ரெவரிவ் வுலகத்திலே.(உ0க)

அவள்குறிமருண்டமையவளவற்கியம்பல்.

4812. மேலாய தென்குளத் தூர்வேத நாயக வேள்விலங்கற்
பாலாய நின்குறி யோராது வேறு படுங்குறியன்

பாலாய நின்குறி யென்றடைந் தேயல் லழுங்கவெங்கள்
சேலாய கண்ணிதன் பாலுற்ற தாலொரு தீவினையே. (உ0உ)

அவன்மொழிக்கொடுமைசென்றவளவட்கியம்பல்.

4813. ஏடா ரலங்கற் புயவேத நாயக வேந்தல்வெற்பி
லோடா விருளில் வெருளில் வழுவை யுழுவையரி
கூடா வெதிர்கொள்ளக் கண்டுமொர் மான்குறு காமையினால்
வீடா வளுருற்றுச் சென்றேனென் றூரன்பர் மெல்லியலே.()

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்.

4814. கந்தோ டிகல்களிற் றூன்வேத நாயகக் காளைவெற்பில்
வந்தோ வவர்செய் குறிகுறி யாது மயிறுயிலா
திந்தோ வெனுநுத லாய்பிணங் கோதையை யேற்றழுங்கி
யந்தோ விறைவருக் கியான்செய்த தீங்குக் களவிலையே. ()

தாய்துஞ்சாமை.

4815. நிலங்கொண்ட தாணெடு மால்வேத நாயக நேயன்வெற்பி
னலங்கொண்ட வாண்முகத் தாய்நொச்சிப் பூவுதிர் நள்ளிருளு
மிலங்கொண்ட தாய்கண் டுயிலா கருநெய்த லென்றுவமை
புலங்கொண் டவர்சொல் வதுதகு மாலப் பொருவிழிக்கே. ()

நாய்துஞ்சாமை.

4816. வாய்துயின் றூலு மறுவம் பருக்கு வருத்துகொடு
நோய்துயின் றூலு நிலைமை யுறுதெங்கு நோக்கியலை
பேய்துயின் றூலும் புகழ்வேத நாயகப் பேகன்வெற்பென்
றூய்துயின் றூலுமென் ஞைப்துயி லாது தவக்குரைத்தே. ()

ஊர்துஞ்சாமை.

4817. ஆடுவர் தென்குளத் தூர்வேத நாயக வண்ணல்புகழ்
பாடுவர் மன்ற லணிகாணத் தீபம் பலவமைத்துக்
கூடுவ ரிங்நக ருள்ளாரிவ் வாறு குலவியின்ப
நீடுவ ரென்னினெவ் வாறன்பர் தாமிங்கு நேர்வதுவே. ()

காவலர்கடுகுதல்.

4818. மிடியொலி மாற்றிய மால்வேத நாயக வேள்குளத்தூர்க்
கடியொலி யோங்கு மதுவும்பற் றூதென்று காவலர்கைத்
துடியொலி யோங்கக் கடிப்புறத் தாக்குமித் துன்றொலியா
லிடியொலி யேற்கு மாவாயி னேன்செய்வ தென்னணங்கே.

நிலவுவெளிப்படுதல்.

4819. சினக்கதிர் வேலுடை யானெளி யேற்கருள் செய்யமதன்
றனக்கதிர் வாற்றவென் மான்றோர் கடவித் தனிவருநாண்
மனக்கதிர் வில்வலி மால்வேத நாயக வள்ளல்புக
ழெனக்கதிர் வீசி நெடுவான் முகட்டி லெழுநிலவே. (உ0௩)

கூகைகுழறுதல்.

4820. படியிடை யாய்புகழ் மால்வேத நாயகப் பண்பன்வெற்பிற்
றுடியிடை யாயென வேளலர் தூற்றத் துவளுமென்பா
லடியிடை யாய்மல ராயறி யாளென் றவர்வருநாட்
கொடியிடை யாய்கொடி தேகொடுங் கூகை குழறுவதே. ()

கோழிகுரற்காட்டுதல்.

4821. விண்மாரி யென்ன வருள்வேத நாயக வேள்வரைவாய்க்
கண்மாரி பெய்யக் கரைவேன் வெப்பாற்றவென் கண்ணுறுமன்
புண்மாரி நீங்கக் களநீட்டிக் கூஉய்த்துயி லூர்க்கொழிக்கு
மண்மாரி முன்பெய்த தூர்க்கோழிக் கோசொன் மடமயிலே.

## வரைதல் வேட்கை.



தலைமகளைப்பாங்கி பருவரல்வினவல்.

4822. கொடியொடு நேரு மிடையாய் பகைஞர் குடுமிவளைத்
தடியொடு சேர்க்குந் திறல்வேத நாயக வண்ணல்வெற்பிற்
கடியொடு மேவுநற் றாய்கொல்கைத் தாய்கொல் கறுத்தவர்பொற்
றொடியொடு தொல்கவின் வாடுதற் கேதுவென் றோனுரையே.

அருமறைசெவிலியறிந்தமைகூறல்.

4823. அளவுகண் டாள்செந் தமிழ்வேத நாயக வண்ணல்வெற்பிற்
றளவுகண் டாணகை யாய்முலைப் பொன்னுந் தவாவடுவைப்
பிளவுகண் டாள்விழி முத்துஞ் செவிலி பெரிதுணர்ந்துட்
களவுகண் டாள்கறுத் தாள்சிவந் தாளிரு கண்களுமே. ()

தலைமகன்வருந்தொழிற்கருமைசாற்றல்.

4824. நிறையொலி நீர்க்குளத் தூர்வேத நாயக நேயன்வெற்பிற்
சிறையொலி வாரணம் வெங்கூகை வாயொலி சேவகர்கைப்
பறையொலி ஞாளி குரைப்பொலி மல்கும் பயந்தவள்கண்
ணறையொலி யோதி துயிலாவெவ் வாறுறு நம்மிறையே. ()

தலைமகனூர்க்குச்செல வொருப்படுதல்.

4825. பாரோடு விண்ணும் புகழ்வேத நாயகப் பண்பன்வெற்பிற்
காரோடு பூங்குழ லாயிங் கிறைவர் கலப்பரிது
நாரோடு நாமவ ரூர்க்கேகி யேயின்ப நண்ணுவமவ்
வூரோடு மற்றதற் கேகிடு மாறு முணருகவே. (உகரு)

பாங்கி இறைவனைப்பழித்தல்.

4826. கோமான் றடங்குளத் தூர்வேத நாயகக் கொண்டல்வெற்பில்
வாமான் றடநெடுந் தேர்மேனம் மூர்க்கு வரன்மறந்தார்
தாமான்ற கல்விய ராயினு மற்றவர் தம்பதிக்கே
நாமான்ற வுள்ளத்தி னேகுத லேநல நன்னுதலே. (உகசு)

இறைவியெற்படமொழிதல்.

4827. உற்றவெல் லாமறி வாரறி யாமைநம் மூழ்வினையே
பொற்றவல் லார்மூலை யாய்வேத நாயக பூபதிதன்
கற்றவல் லார்சொல் குளத்தூர்க் கரும்பு கசப்பதுவாய்க்
குற்றமல் லாலதன் மேற்சொல்ல லாவதோர் குற்றமென்னே.

*சனவுதலிபுரைத்தல்.

4828. துயிலா விழிக டுயில்கங்குல் வாய்த்துயி லத்துணிபோ
தயிலா தரர்வந் தணைப்பக் குரைத்தடு நாயெழலா
லெயிலார் தடங்குளத் தூர்வேத நாயக வேந்தல்வரை
மயிலா மெனுமிய லாய்விழித் தேனுண் மயங்கினனே. ()

கவினழிபுரைத்தல்.

4829. தாவாத கல்வித் திருவுடை யான்பொழிற் றண்குளத்தூ
ரோவாத வாழ்க்கைப் புயல்வேத நாயக வும்பர்நட்பு
மேவா தவர்நலம் போலிறை யோன்வந்து வேல்விழியாய்
காவாத தன்மையி னாற்கொள்ளை போயதென் கட்டழகே. ()

தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்.

4830. வாசத் தமிழ்புனை யும்புக ழோன்பொழில் வான்குளத்தூர்
நேசத் தடம்புய மால்வேத நாயக நேயன்வெற்பி
லேசத் தகையடை யாமட வாயிறைக் கென்றுயரம்
பேசத் தகுநரு மூண்டேனம் மன்னைபெண் பெற்றவளே. ()

துன்புறுபாங்கிசொல்லெனச்சொல்லல்.

4831. இகத்தே வளரிந் திரன்வேத நாயக வேந்தல்வெற்பின்
முகத்தே யிருவடி வேலுடை யாயுன் முழுத்துயருந்
தகத்தே மலர்த்தொடை யாருண ராரலர் தாமுணர்ந்துன்
னகத்தே யமர்வரெவ் வாறுரைப் பாரய லாரவர்க்கே. (உஉக)

அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி.

4832. அல்லாரும் பூங்குழ லாய்வேத நாயக வண்ணல்வெற்பி
லொல்லாருஞ் செய்வர்கொ லுண்மெலி வேன்றுய ரோர்ந்துமுரு
வில்லாருந் தூற்றுவர் மேன்மே லலரது மிக்குணர்ந்தூர்ப்
பல்லாருந் தூற்றுவ ரேலென்செய் வேன்கொடும் பாவியனே.

ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி.

4833. பிழையாது செய்தன னேபுல வோர்பெரும் பேறுபகை
தழையாது வைக்குந் தகைவேத நாயக தாருவெற்பர்
குழையா திவணின் றருநெறி யேதங் கொடிமதிலூர்க்
கழையாது போகவும் பின்செலு மாலென் னவாமனமே. ()

காமமிக்ககழிபடர்கிளவி.

4834. குலமே வியசு குணவேத நாயகக் கோன்றுறைநீர்க்
கலமே யிலங்கல மேவிழி நீருங் கலங்கலமே

சலமே சலஞ்சல மேயொழி யாதது சஞ்சலமே
வலமே வருவல மேயன்பர் தோளை மருவலமே. (உ௲௪)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

4835. குலவு குவளையர் தார்வேத நாயகக் கோன்கடலே
நிலவு மணையும் வெறுப்பாய் பசந்த நிறம்படைப்பா
யுலவு வளைபொருந் தாதெறி வாயஃ லுறங்கிலையுட்
கலவு கருத்தென் றணர்ந்தாய்கொ னீயுங் கணவனையே. ()

செறிவிலக்குவித்தல்.

4836. தாயனை யஎன்செந் தமிழ்வேத நாயக தாருவெற்பிற்
றீயனை யார்பயில் வெங்கா னெறியிற் செறியிருட்டோள்
வேயனை யாயுயிர் கொண்டேகி ஞய்வெற் றுடனிமித்தஞ்
சாயனை யாய்வரல் பொல்லா தொழியென் றலைவனுக்கே. ()

குறிவிலக்குவித்தல்.

4837. இளைத்தே மெலியு மிடையாயின் றேயித ணேறுபுனம்
வளைத்தே தழல்கவண் கோடியென் றுளனை மற்றிருவி
கிளைத்தே குரல்கொண் டனவேத நாயக கேசரிவெற்
பிளைத்தே மலர்க்குழ லாய்வர லீங்கென் றியம்பிறைக்கே. ()

வெறிவிலக்குவித்தல்.

4838. முறியாடல் கொண்ட பொழிற்குளத் தூரர் முதலவனன்
னெறியாடல் கொண்ட புகழ்வேத நாயக நேயன்வெற்பின்
மறியாடல் கொண்டகண் ணுயெனைச் சூர்மரு விற்றென் றன்னை
வெறியாடல் கொண்டன ணீபிறி தோதி விலக்குகவே. ()

பிறவிலக்குவித்தல்.

4839. நன்றே கருதி நகுவேத நாயக நம்பிசெம்பொற்
குன்றே கொடிவெந் தெனக்கொணர்ந் தேபொன் குவித்தனரா
மின்றே திலரென் முலைவிலைக் காமிவ் வியல்பின்மொழி
சென்றே செவியகந் தீத்ததென் செய்வ திருந்திழையே. ()

குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

4840. வேயாதி புல்வழி யல்வர னீங்க விரிபுனற்கோர்
சாயாதி செய்குளத் தூர்வேத நாயக தாருவெற்பின்
மாயா தியலன்பர் பொன்கொண் டெனவரை யப்புகினர்
தாயா தியரெதிர் காயா திசைநறுந் தார்க்குழலே. (உ௲௰)

---

## வரைவுகடாதல்.

வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்.

4841. கைத்தாய்நங் கண்மணி கண்மணி சோரக் கனதனமும்
பைத்தா யடைய வடைந்ததென் கூறெனப் பார்க்கொருவாய்
மைத்தா யனைய வருள்வேத நாயக மால்வரையிற் [றே.
தைத்தாய் வருமென்று மாற்றினன் வேறொன்று சாற்றியின்

அலரறிவுறுத்தல்.

4842. பலராய் புகழ்பெற்ற மால்வேத நாயக பானுவெற்பின்
மலராய் தொடைத்தடந் தோளண்ண லீசெய்த மன்னருடா
னலராய் தளிர்க்கை யரும்புமென் மாமுலை நங்கள்கொடிக்
கலராப் முடிந்தது காயா தெவர்புகழ் வார்கனிந்தே. (உகூஉ)

தாயறிவுறுத்தல்.

4843. தெவ்வாய் வருநரி லாவேத நாயகச் செம்மல்வெற்பிற்
குவ்வாய் பிளப்பப் பலாக்கனி தொட்டுக் கொளுநகராய்
வெவ்வாய் வடிநெடு வேல்விழி மாதுபொன் மேனியொடு
செவ்வாய் விளர்ப்பிற் களவோர்ந்து தாய்கண் சிவந்தனளே.()

வெறியச்சுறுத்தல்.

4844. மேலா னறிவின் மிளிர்வேத நாயக வேள்வரைவாய்ச் [முய்
சூலான் மலிமுகி லொத்தகை யாய்தெய்வந் தொட்டதென்
மாலான் மயங்கு மடமானுண் ணேய்மதி யாதுவன்னி
காலா னியங்கத் தகரியங் காமை கருதினளே. (உகூச)

பிறர்வரைவுணர்த்தல்.

4845. சொல்லார் பெரும்புகழ் மால்வேத நாயகத் தூயன்வெற்பின்
மல்லார் புயத்த மடமாது கொங்கை வழங்குதொழி
வில்லார் திருவி னிடைபோய்க் கழிய வெழுதல்கண்டு
பல்லார் விரும்பினர் யார்விரும் பார்தனம் பாரிடத்தே. ()

வரைவெதிர்வுணர்த்தல்.

4846. கழைமல ரங்கை கொளாவேத நாயக காமன்வெற்பிற்
றழைகதிர் வேலண்ண லேமட மான்மணத் தைக்குறித்திவ்
வுழையுறு வாயெனின் யாருவ வாரின் புறவெமருண்
மழைமுகில் கண்டுவ வாதபைங் கூழெவன் மண்ணகத்தே ()

வரைபுகாளுணர்த்தல்.

4847. ஒருபா சடையிடை வெண்டா மரையென வூருற்றதேர்
தருபான் மதிநிதி போற்பூ வுதிர்க்குந் தழைகணிகள்
வருபா வலருண் மகிழ்வேத நாயக வள்ளல்வரை
திருபா மணம்புரி காலமின் னேவந்து நேர்ந்ததுவே. (உகூஎ)

அறிவறிவுறுத்தல்.

4848. செறிவென் பதுகொள் புகழ்வேத நாயகச் சேய்வரைப்பெண்
ணறிவென் பதுபெரும் பேதமைத் தென்ப ரதுமறுத்தாண்
முறிவென் பதுபுகு தாவே லவவெம் முலையெமர்க்கு
மறிவென் பதுகுறி யாநெறி யோதுநன் மாண்படைந்தே. ()

குறிபெயர்த்திடுதல்.

4849. இரவல ரேத்து மதிவேத நாயக வேந்தல்வெற்பிற்
பரவலர் நல்கிய திப்பொழில் வேறென்று பார்வடிவேற்

கரவல வேடர்கண் காணும வேகளித் தாடவருட்
புரவல பொங்கெழி லெங்கண்மின் ஞெளாடு போதுகவே. ()

பகல்வருவானையிரவுவருகென்றல்.

4850. புரவுக் கிரவு ரவமாதி நீக்கும் பொலிவினுக்கா
தரவுக் கிரவு குறிவேத நாயக தாருவெற்பில்
வரவுக் கிரவு சிதவே லவபகல் வாரற்கநீ
கரவுக் கிரவு சிறந்ததென் பாரிக் கடற்புவிக்கே. (உ௬௦)

இரவுவருவானைப்பகல்வருகென்றல்.

4851. முகத்தா மரைகை யகத்தா மரையின்ப மூற்றியபொற்
பகத்தா மரையம் பகத்தா மரைபதத் தாமரைமற்
றகத்தா மரையிரு ளிற்பொலி யாபக லங்கடையேன்
மகத்தா மரையர் புகழ்வேத நாயக மால்வரைக்கே. (உ௬௧)

பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்.

4852. வண்கொடி வாய்நின் றிரவிற் பொலியு மலர்கள்பல
வெண்கொடி வாவிற் பொலிமல ரும்பல வென்னின்வெற்றி
யொண்கொடி யாரணி யாயிரு போது முறவருதி
திண்கொடி யாரைச் செறும்வேத நாயகச் சேய்வரைக்கே. ()

பகலினுமிரவினுமகலிவணென்றல்.

4853. பகலிற் குவலய மாயு மலர்படு மேயிரவி
லிகலிற் கருதரி யாம்பல் சிவக்கு மிலங்கறிவு
மிகலிற் பொலிகுளத் தூர்வேத நாயக வேள்வரைப்பா
லகலிற் சொலுமிரு போது மணுகு மவர்மணமே. (உ௬௩)

உரவோனுடூருங்குலனுமரபும்புகழும்வாய்மையுங்கூறல்.

4854. ஆர்க்குங் கொடைப்புகழ் மால்வேத நாயக வண்ணல்வெற்பிற்
போர்க்குந் திறற்பெருந் தோளாய்நின் னுட்டிற்கும் பொங்குதிரு
வூர்க்குங் குலத்திற்கு மொவ்வாக் குடிக்கு மொழிவரிய
சீர்க்குநல் வாய்மைக்கு மேலாது நீசிந்தை செய்களவே. ()

ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

4855. கடாவடி நென்மலை யாங்குளத் தூரன் கருதலர்வந்
தடாவடி வீழப் பொலிவேத நாயக வண்ணல்வெற்பில்
விடாவடி வேல மடமாது சோரும்வன் மீகமுற்றுங்
குடாவடி சூழ்ந்தகழ் காரிரு ணீவருங் கோளஞ்சியே. (உ௬௫)

ஆற்றுத்தன்மையாற்றக்கூறல்.

4856. பூச்செறி வாணிற மால்வேத நாயக பூபன்வரைக்
காச்செறி வாள்பின்னு மிற்செறி வாளுட் கனன்றுசில
பேச்செறி வாள்கை வளையெறி வாள்கனல் பெற்றநெடு
மூச்செறி வாள்விழு வாளெழு வாளெங்கண் மொய்குழலே.

காவன்மிகவுரைத்தல்.

4857. படித்தலத் தேர்மலி யிற்குளத் தூரன் பகைவர்முடி
யடித்தலத் தேவைத் தருள்வேத நாயக வண்ணல்வெற்பின்
முடித்தலத் தேந்து தொடையாய் மகளே முனிந்தனையென்
மடித்தலத் தேதுயி லென்றனைப் பாடியில் வாஞ்சையற்றே.

காமமிகவுரைத்தல்.

4858. விண்ணு டியமெய்ப் புகழ்வேத நாயக வேள்வரைவாய்ப்
புண்ணு டியவடி வேலன்ன லேவெளி போர்த்தவல
ருண்ணுடி மேனி யுறவாடி யுள்ள முருகுநட்குன்
கண்ணுடி யன்ன கடிமார்ப மன்றிக் கதியிலேயே. (உ௪அ)

கனவுநலிபுரைத்தல்.

4859. நந்தனே யாநல் லருள்வேத நாயக நம்பிவெற்பி
னிந்தனே யாஞ்சொல்வ தென்னேற் றிரவிடை நீகனவில்
வந்தனே யாங்கண் டிவந்தனே யாமனம் வைத்துமுத்தந்
தந்தனே யாம்பின்பு சென்றனே யாமென்று சாற்றுமின்னே.

கவினழிபுரைத்தல்.

4860. மிகையே பொருவு மிலாவேத நாயக வேள்வரைவாய்
முகையே பொருவு முலைமாது மேனி முருந்துவென்ற
நகையே பொருவும் விளர்ப்புற லானலி நுண்மருங்குற்
றகையே பொருவு மிளைப்புற லாலென்கொல் சாற்றுவதே. ()

---

## ஒருவழித்தணத்தல்.

தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.

4861. பெருவாளை தென்னம் பழம்வீழத் தாவும் பெருநகருக்
கிருவாளை வென்றகண் ணாயின்று சென்றிக லென்னுமிருட்
கொருவாளை யொத்த திறல்வேத நாயக வும்பல்வரைத்
திருவாளை வந்து வரைவேனங் குற்றிது செப்புகவே. (உருக)

பாங்கிவிலக்கல்.

4862. சொல்லத் துணிந்தனை யூர்க்கே குவலென்று சொற்றதன்றிச்
செல்லத் துணிந்தனை வன்கண்மை பூண்டு தெறுபகையை
வெல்லத் துணிந்த விறல்வேத நாயக வேள்வரைவாய்க்
கொல்லத் துணிந்தனை யெங்களை யோநின் குறிப்புநன்றே. ()

தலைவனீங்கல்வேண்டல்.

4863. சற்றோர் குறையுண் டதன்பொருட் டேகித் தவாதவிரை
வுற்றோர் கணத்திலிங் கெய்துவல் யான்கலை யுள்ளவெல்லாங்
கற்றோர் புகழுங் கனவேத நாயகக் காளைவெற்பின்
மற்றோர் கருத்துளங் கொள்ளேன் மறேலொண் மடமயிலே.

பாங்கிவிடுத்தல்.

4864. கொடுப்பது வேயற மேற்றாருக் கொன்று குறையுரைத்து
விடுப்பது வேமற மென்வேத நாயக வேள்வரையாய்
கடுப்பது வேயெலு மான்றோர் கடவிவெங் காற்றின்விரைந்
தடுப்பது வேமெய் யெனினேக லாநின் னணிநகர்க்கே. ()

பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.

4865. கோங்கரும் பன்ன குவிமுலை யாய்தங் குலப்பதிக்கின்
றாங்கரும் பன்ன மொழியினை யானக லேனகன்றாற்
றாங்கரும் பன்னருந் துன்புறு மேயென் றுஞ் சாற்றிநம்முள்
வாங்கரும் பன்னர்சென் றார்வேத நாயக மால்வரைக்கே. ()

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

4866. கையால் வெரிந்தை வருவாரென் கைகடங் கண்ணிவொற்றி
வையா லயிற்படை யாருவப் பார்முலை மார்பணைப்பார்
மெய்யால் விளங்கு புகழ்வேத நாயக வேள்வரைவாய்ப்
பொய்யா னிறைந்தவர் போற்பிரிந் தாரென் புகலுவதே. ()

சென்றோனீடலிற்காமமிக்ககழிபடர்கிளவி.

4867. பொன்பொழி யார்வப் புயல்வேத நாயக பூபன்முன்னீ
ரின்பொழி யாத கரும்புன்னை காளிருங் கேதகைகா
டின்பொழி யாய்துறை யாரின்ன ராலெனச் சொல்லுகிலீ
ரன்பொழி யாமையன் றோவளி யார்க்கணி யாவதுலே. ()

தலைவியைப்பாங்கியாற்றுவித்தல்.

4868. நாடுவ மான மிலாவேத நாயக நம்பிவெற்பி
னீடுவ மானனை யாயன்பர் தம்மூர் நெறிவரும்யாற்
றாடுவ மானன மாறு மலரு மலர்பறித்துச்
சூடுவ மான மிகப்பா டுவமவர் தொல்புகழே. (௨௫அ)

தலைவிக்கிறையோன்வந்தமையுணர்த்தல்.

4869. தேருங் கலைமெய்ப் புகழ்வேத நாயகச் செல்வனென்னூர்
சாருங் கவலை யடையன் மினேயஞ் சலஞ்சலநீ
ரூருங் கவின்மலி தண்டுறைச் சேர்ப்பருற் றாருணர்தி
யீருங் கணைமதன் போருங்கண் ணீரு மினியிலையே. (௨௫௯)

பாங்கி தலைவனொடுநொந்துவினாதல்.

4870. கொங்கிருந் தாரணி தோள்வேத நாயகக் கோன்வரைசூழ்
பொங்கிருந் தாரணி யாண்மன்ன வாவுயிர் போற்றுபுயா
மிங்கிருந் தாமெம்மி னீங்கிய நாண்முற்று மெவ்வணநீ
யெங்கிருந் தாய்நின் மனமெங் கிருந்த தியம்புதியே. (௨௬௰)

தலைவன் பாங்கியொடுநொந்துவினாதல்.

4871. யானே யியபி னடைந்ததெல் லாமுன் னணங்குநடுத்
தானே யெனுமெ னுடம்பே சொலும்பலர் சாற்றலரிக்

கானே யொருமதன் றூற்றலர் போற்றிநன் காற்றிமின்னே
மானேயெவ் வாறிருந் தாய்வேத நாயக மால்வரைக்கே. ()

தலைவியையாற்றுவித்திருந்தவருமைகூறல்.

4872. கார்காட் டியகொடைக் கைவேத நாயகக் காளைவெற்பிற்
சீர்காட் டியனை தூர்காட் டியுநின் றிருந்தகலத்
தார்காட் டியுங்குறிச் சார்காட் டியுமொண் டடருருவிப்
போர்காட் டியவடி வேல்விழி மாதுயிர் போற்றினனே. ()

---

## வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல்.

என்பொருட்பிரிவுணர்த்தேக்திமைக்கென்றல்.

4873. வேறுய தெவ்வரை வெல்வேத நாயக வேள்குளத்தூர்ச்
சேறுய கண்ணி முலைவிலை யாவத் திகழ்முலைக்கு
மாறுய யானை வெரிந்மேற் சுமந்து வரக்கொணர்வல்
பாறுய கான்சென் றருகிதி போய்ச்சொல் பணிமொழிக்கே.()

நின்பொருட்பிரிவுரைநீயவட்கென்றல்.

4874. நன்றே நவிலு நயவேத நாயக நம்பிசெம்பொற்
குன்றே புரைதிர டோளாய் நினது குலவுவர
வொன்றே யலாற்பிறி தோதே னுரைக்கின்மற் றேவியமா
மின்றே மொழியிடை நீயேசென் றேறுதி யெழுந்தருளே. ()

நீடேனென்றவலீக்கல்.

4875. தவியாமன் மன்பதை யாள்வேத நாயக தாருவரைப்
புவியானை மீது நெடுவேங்கை யேற்றிப் பொருசிங்கம்போ
லவியா மணிவிளக் கன்னூர் முகத்தி னலர்ந்தமலர் [யே.
குவியாமுன் யான்வரு வேன்மறுக் கேலொளிர் கோற்றொடி

பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.

4876. நன்றேயென் கோவன்றித் தீதேயென் கோவென் னவிலுவல்யான்
வென்றே புகழ்கொண்ட மால்வேத நாயக வேள்பகைவர்
சென்றே யுழல்கொடுங் கானடந் தாரன்பர் தேமொழியுன்
குன்றேய் முலைவிலை தந்துட னேமணங் கூடுதற்கே. (உகக)

தலைவியிரங்கல்.

4877. பிரியேன் மடமயி லஞ்சாய னின்னைப் பிரியினுயிர்
தரியே னெனமுனஞ் சொற்றநல் லோர்குழை தாவியசே
யரியேன் மலர்வழி சொல்லா தகன்றதென் னூற்றும்வகை
தெரியேன் மயங்க வொருவேத நாயகச் சேய்வரைக்கே. ()

பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.

4878. வெப்பா யுலகை வளையுங் கலியழல் வீப்பதற்கோ
ரப்பாய் முளைத்த வருள்வேத நாயக வண்ணல்வெற்பி

லொப்பா யினுமரி யாயுண ராம லுளங்கவறி
செப்பாய் பிறரை வரைவதற் கோவன்பர் சென்றதுவே. ()

தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

4879. சுரும்போதை சாறுடைத் தோள்வேத நாயகத் தோன்றலொன்று
ரரும்போகை நீத்தடை வெங்கானி லன்ப ரடைந்ததும்வேள்
பெரும்போரி னுலெற் கடைந்தது மோர்ந்துமிப் பேச்சுரைத்தா
யிரும்போகல் லோவறி யேன்குறி யேனின் னியன்மனமே.()

வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

4880. போரே வெதிரு மிமையார்கண் டீக்கெதிர் பொத்திச்செல்லு
வாரே பெடையைக் கபோதஞ் சிறைநிழல் வைத்தளிக்குஞ்
சீரே யருமையை நோக்குவர் நோக்கிற் றிரும்புவரால்
வேரேய் குழலணங் கேல்வேத நாயக வேள்வரைக்கே. ()

பருவங்கண்டுபெருமகள்புலம்பல்.

4881. புகழ்வேத நாயக வள்ளல்பண் டாரம் புகாவறிஞர்
திகழ்வேய்பொன் வாரி வருவது மானத் திரைக்கடனீ
ரிகழ்வேயின் மாமுகில் வாரி வருமிதற் கென்செய்வல்யா
னகழவே தனையுடை யேனுக வன்ப ரடைந்திலரே. (உஎக)

இகுளைவம்பென்றல்.

4882. உண்மை யுரைப்ப னுணர்வேத நாயக வுத்தமன்றன்
வண்மை நிகர்ப்பப் பயில்வா னெழுந்து மழைபரவைத்
தண்மை நிரப்பு புனல்வா ருபுவருஞ் சங்கணிகைக்
கண்மை மலர்க்குழல் கார்கால மென்று கருதல்வம்பே. ()

தலைமகண்மறுத்தல்.

4883. காலந் தழீஇயபைங் காரன்று தேரொன்று கட்டுரைத்தாய்
ஞாலந் தழீஇய புகழ்வேத நாயக நம்பிவெற்பிற்
கோலந் தழீஇய பசுமயி லாடும்பொன் கொன்றைநல்கு
மேலந் தழீஇய குழலாய்செங் காந்தள்கை யேற்குமின்றே. ()

அவர்தூதாகிவந்தடைந்ததிப்பொழுதெனச்சாற்றல்.

4884. பின்னே தலைவர்தந் தேர்வரு கின்றது பேசிடநம்
முன்னே மலைவரு கார்வந்த தான்முழு நீலவுண்கண்
மின்னே குளந்தைப் பதிவேத நாயக வேள்வரைவா
யென்னே யினித்துய ரோவுதி மேவுதி யின்பத்தையே. ()

தலைமகளாற்றல்.

4885. யானுற்ற வின்ப மவர்க்கு மிலாததன் றென்னிலென்பாற்
றானுற்ற துன்பமு மற்றுத லாலென் றளர்வொழிய
வூனுற்ற வாருயி ரன்னார்முன் றாதிங் குறவிடுத்தார்
மீனுற்ற செய்க்குளத் தூர்வேத நாயக வேள்வரைக்கே. ()

அவனவட்புலம்பல்.

4886. காரோ வெனுங்குழல் சோர்தர வார்தரு கண்களின்மைம்
நீரோ பெருகவவ் வெள்ளத் தழுந்தி நிலைதளராங்
கேரோதை சால்குளத் தூர்வேத நாயக வேந்தல்வெற்பி
லாரோ விரைந்துநெஞ் சேயெடுப் பார்நம் மணங்கினையே. ()

பாகனொடுசொல்லல்.

4887. உலவா முகில்சிலை வாங்கியம் பூடுரு வப்பொழியக்
கலவாத துன்பங் கலந்துநம் மான்கலங் குந்தமிழ்க்குக்
குலவார ணந்தரு மால்வேத நாயகக் கோன்வரைப்பால்
வலவா நளனெனத் தூண்டுக தேரினி வல்விரைந்தே.(உஎஎ)

மேகத்தொடுசொல்லல்.

4888. சீரானை யாநின் வரவெனக் கண்பிற் சிறந்தமயி
லோரானை யாமுலை கண்முத்தஞ் சூட வுயங்கனன்றோ
தேரானை சூழு மனைவேத நாயகச் சேய்வரையென்
வாரானை கூறி மகிழ்வியென் றோர்முன்சென் மாமுகிலே. ()

பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.

4889. பொங்கோதை வாரிப் புவிபுரப் போன்றெவ்வர் போற்றவெற்றி
யங்கோதை சூடு புயன்வேத நாயக வண்ணல்வெற்பில்
வெங்கோதை வேலவர் மேவின ரென்று விளங்கவர்கைச்
சங்கோதை யேநமக் கிங்கோதை யோர்திவண் டார்க்குழலே.

வலம்புரிவாழ்த்தல்.

4890. ஊற்றுங் கரடக் கடகளிற் றூர்வர வோதியெனக்
காற்றுந் துணையிற் றுயர்தீர்த்த சங்கடைந் தார்கலியை
மாற்றுங் கமலக்கை மால்வேத நாயக மன்னவன்றன்
போற்றும் புகழிற் பொலிகவெஞ் ஞான்றும் புவியிடத்தே. ()

தலைவன்வைத்துழிப்பாங்கிதலைத்தமைவினுதல்.

4891. கொளத்தாம் வரினுண் மகிழ்வேத நாயகக் கோன்வரைப்பொன்
வளத்தா தரம்வைத் தயனுட் டிடைத்தனி வைகுழித்தேந்
தளத்தா தவிழ்குழ லெந்திரு மாது தராதிபநின்
னுளத்தா மரைமல ருற்றதுண் டோவுண்மை யோதுகவே.()

தலைவனினைத்தமைசெப்பல்.

4892. ஞாலங்கொள் சீர்த்திப் புயல்வேத நாயக நம்பிவெற்பில்
வேலங்கொள் கண்ணி மறந்தறி யேனுன் விளங்கிழைதன்
னேலங்கொள் கூந்தலுஞ் செவ்வாயும் வெண்ணகை யேர்முகமும்
கோலங்கொள் செங்கையு மென்னைமுன் னாட்கொண்ட கொங்கையுமே.

பாங்கிதலைவியையாற்றுவித்திருந்த அருமைகூறல்.

4893. வண்டார வாரு மதுமல ரோதியை வண்கவிஞர்
பண்டார மான கொடைவேத நாயகப் பண்பன்வெற்பிற்
றண்டார வாந்தடந் தோளண்ண லேதனி யாற்றுவித்தேன்
கண்டார வாவுறு நின்பெரு வாய்மை கடைப்பிடித்தே. ()

## வரைவுமலிவு.



காதலன்முலைவிலைவிடுத்தமைபாங்கிகாதலிக்குணர்த்தல்.

4894. சிலைக்குள நாணுமென் னுருத லாயறஞ் சேர்தருநன்
னிலைக்குள நாணு மெனுவேத நாயக நேயன்வெற்பின்
முலைக்குள நாணும் பசும்பொன் வரையம் முலைக்குரிய
விலைக்குள நாணும் படிகுவித் தார்செம்பொன் வேந்தரின்றே.

தலைவிகற்றுயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

4895. கோனுடு வாழ வருவேத நாயகக் கோன்வரைவாய்
மீனுடு பாற்கடன் மாயோன் வரவு விரும்பியது
போனுடு மன்னே வரவெதி ரேற்றுப் புரிந்துவக்குந்
தேனுடு மாலையொ டிந்நாடு மேவுநஞ் செல்வரையே. (உஅரு)

பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்.

4896. மழையொளிர் மின்னிற் கரும்புன்னே மேற்படர் வண்பவளந்
தழையொளிர் தண்டுறைச் சேர்ப்ப ரளித்த தனமுழுது
மிழையொளிர் பூண்முலை யாய்நம ரேற்றுவப் பெய்தினர்வண்
குழையொளி ரஞ்செவி மால்வேத நாயகக் கோன்வரைக்கே.

தலைமகளுவகையாற்றுதளத்தொடுகிளத்தல்.

4897. நெஞ்சே யருந்துயர் நீங்குவந் தாரன்பர் நீடுமெவர்
விஞ்சேர் புகழ்பிர தாபங் களிற்றின்முன் வேன்கவிகை
நஞ்சேய் களிறு சிலைகிற்கு மோவின்ப நாம்படிவா
மஞ்சே யெனப்பொன் பொழிவேத நாயக மால்வரைக்கே. ()

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

4898. என்னு ருயிரவ் வுயிர்க்குயி ரோடு மிடர்க்கடல்வாய்
மின்னார் மணியணி மால்வேத நாயக வேந்தனட்புத்
துன்னார் பொருவ விழுந்தழி யாதிங்குத் தோன்றியருள்
பொன்னூர் கழலவர் வாழிய ரோவிப் புவியிடத்தே. (உஅஅ)

தலைவிமணம்பொருட்டாக அணங்கைப்பராநிலைகாட்டல்.

4899. நன்றேய் மனமெய் மொழிவேத நாயக நம்பிசெம்பொற்
குன்றேய் முலைநின் மணம்பொருட் டாகக் குலமலர்தூய்
வென்றே பொலியு மணங்கை யிணங்க விழைந்துபராய்
நின்றே வரம்பல வேண்டுதல் காண்டி நெடுந்தகையே.(உஅகூ)

பராநிலைகண்டதலைமகன்மகிழ்தல்.

4900. நாமே மணம்பொருட் டாற்றிடத் தக்கதை நன்னுதலார்
தாமேநன் காற்றி வரம்வேண் டினரெனிற் சாற்றுமிது
பூமேனம் புண்ணிய மோமுந்தை யோர்செய்த புண்ணியமோ
மாமேரு வென்னப் பொலிவேத நாயக மால்வரைக்கே.(உகூ௦)

# அறத்தொடுநிற்றல்.



கையறுதோழி கண்ணீர்துடைத்தல்.

4901. இளியைப் பருந்துறத் தொட்டது வோபந்து கெட்டதுவோ
வொளியைச் செயுமலை வண்டலம் பாவைகொண் டோடினவோ
களியைக் கடந்தன்னை சேர்ந்தன ளோகலுழ் காரணமென்
வெளியைப் பொருமிடை யாய்வேத நாயக வேள்வரைக்கே.()

தலைமகள் கலுழ்தற்காரணங்கூறல்.

4902. கனவே புகுந்து கலந்தகன் றுருருக் காணவவாய்
நனவே கருமை நறுநீல முத்த நனியுகுத்துத்
தனவேர் மலிமுத்த மாநீல மாக்குவ தீருவைந்து
மனவேத நாயக மால்குளத் தூரன்ன வாயிழையே. (உகூஉ)

தலைவன்தெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.

4903. சேலுண வுள்ளி யமர்குரு கோகரி செப்புநரூத்
தாலுண வண்டர்க் கருள்கைதை யோமுன்பொய் சாற்றியதென்
காலுணர் வோர்தெய்வங் காட்டி யுரைத்தது கைதவமே
மாலுண வோரும் புகழ்வேத நாயக மால்வரைக்கே. (உகூக)

இறைவி தலைவனிகந்தமையியம்பல்.

4904. ஆய்மொழி மாறு படாவேத நாயக வண்ணல்வெற்பிற்
றூய்மொழி வாளயற் பேய்மொழி யேதெய்வஞ் சான்றெனவுள்
ளேய்மொழி கூறி யிகந்தார் தலைவ ரெனிற்புருடர்
வாய்மொழி நம்புவ தெவ்வாறு கூறு மதிநுதலே. (உகூச)

பாங்கி இயற்பழித்தல்.

4905. தவரே புகழும் புகழ்வேத நாயக தாருவெற்பிற்
றுவரே யிதழ்மட வாய்தெய்வங் காட்டிமுன் சூளுரைத்த
வவரே விரத்தி யடைந்தவர் போலகன் றாரவரொப்
பவரே தெரியி னெவரே யுளாரிந்தப் பாரகத்தே. (உகூரு)

தலைமகள் இயற்படமொழிதல்.

4906. திருவார் குளந்தைப் பதிவேத நாயகச் சேய்வரைவா
யொருவார் மறப்பர்கொ லோவெனை யன்றி யுளத்துமற்றுன்
றிருவா ரிருவார் முலைப்பீ ரொழிதர வெப்படியும்
வருவார்வந் தின்பந் தருவார் பொருவார் வரிவிழியே. (உகூசு)

தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

4907. காட்டை விழுங்கும் புகழ்வேத நாயகக் கானமுந்நீர்ப்
பேட்டை யணைத்திற காலனர் துஞ்சும் பெருந்துறைவ
ரேட்டை யொழிப்பரெம் பால்வந் தின்னேபொய்ய ரென் றுளியோர்
கேட்டை யணங்கிழை யேலென்று வாழ்த்துவங் கேழ்மயிலே.

இல்வயிற்செறித்தமையியம்பல்.

4908. சேரல ரஞ்சுந் திறல்வேத நாயகச் சேய்வரைவாய்
வாரலர் மாமுலை யாய்தன் வயிற்றின்முன் வைத்ததுபோ
லூரலர் மாலை யொரீஇயெனை யோர்சிறை நாடிவைத்தா
ளூரலர் தூற்றுவ தோர்ந்தன்னை யென்னை யுளூற்றுவதே. ()

செவிலி கனையிருளவன்வரக்கண்டமைகூறல்.

4909. கார்கொண்ட செங்கைக் கவின்வேத நாயகக் காளைவெற்பில்
வார்கொண்ட பூண்முலை யாயொழி யாது மருவவென்போ
னீர்கொண்ட கண்ணின னல்லள்கண் டாயன்னை நேற்றிரவிற்
றார்கொண்ட தோளர் வரக்கண்டு சீற்றந் தழைத்தனளே. ()

எறிகளைவேற்றுமைக்கேது வினுதல்.

4910. ஆடல்விட் டாடன் னணியாயங் கூடி யலர்பறித்துச்
சூடல்விட் டாளிசை பாடல்விட் டாளருந் துப்பெவையுந்
தேடல்விட் டாளின் புகழ்வேத நாயகச் சேய்வரையெற்
கூடல்விட் டாளென்னை யுற்றன ளோநங் குலக்கொழுந்தே.

பாங்கிவெறிவிலக்கல்.

4911. சேலாய கண்ணிக் குயிரீ வதுபொய் திருந்துபல
நூலாய நோற்ற மதிவேத நாயக நோன்மையன்கற்
பாலாய வாட்டுயிர் வாங்குவ தேமெய் பகர்வலியின்
மேலாய வெம்புலிப் போத்தென வீங்குற்ற வேலவரே. ()

வெறிவிலக்கியவழிச்செவிலிபாங்கியைவினுதல்.

4912. வேய்தந்த தோளியுட் டோய்தந்த நோயற மெய்த்தமிழ்க்குப்
பாய்தந்த யானை தருவேத நாயக பானுவரை
யாய்தந்த வன்பினிங் கேய்தந்த வேல்வலத் தண்ணலின்
வாய்தந்த கூறுத லெம்மதி யம்மதி வாணுதலே. (௩௦௨)

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

4913. நன்னெடு மால்குளத் தூர்வேத நாயக நம்பிவெற்பி
னின்னெடு வேல்விழி நேர்வது நோக்கென்றோர் நிலக்கொய்து
கன்னெடுந் தோளொரு வள்ளறந் தான்முன்கை யேற்றனடன்
பொன்னெடும் பாவைக்கென் றேவண்ட லாயத்திப் பூக்கொடியே.

புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

4914. தன்னிடை யாயவை தூண்ட வுறுப்பின் றகைகவர்வான்
மின்னிடை யாயைக் கடலலை யால்விரைந் தீர்த்திடுநா
ளென்னிடை யாயுற்ற தென்றமு தாள்விரைந் தெய்தினனோர்
மன்னிடை யாயளித் தான்வேத நாயக மாலையொத்தே. ()

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

4915. மூலைப்பகை தீரக் கருதிய தோவொரு மொய்க்களிறு
சிலைப்பகை வாணுத னேரெதிர் நாட்டெறு பாவியர்க்குத்

தலைப்பகை யாய தகைவேத நாயக தாருவொத்தோர்
மலைப்பகை யாயதிண் டோளா ளளித்தனர் வாஞ்சைவைத்தே.

தலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய்செவிலியைவினாதல்.

4916. முலைமீது போர்த்தது பொன்கரு நீலம்வெண் முத்துகுப்ப
விலைமீ தொளிர்குழற் குற்றதென் னோவெதி ரேற்றவர்தந்
தலைமீது வைக்குங் கழல்வேத நாயக தாருவெற்பிற்
சிலைமீ தெதிர்நுத லாய்மறை யாதுண்மை செப்புகவே.(நoசுா)

செவிலிநற்றாய்க்குமுன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்.

4917. உளவுற்ற தோகை பயில்வேத நாயக வும்பல்வெற்பிற்
றளவுற்ற தோவெனும் வெண்ணகை யாண்மனஞ் சார்ந்தனரீ
தளவுற்ற தோமுலை தோன்றிய தோவிலை யோவலர்க்கண்
களவுற்ற தோவிலை யோவென்னு நாள்வந்தொர் காதலரே.()

நற்றாய்தமர்க்கு அறத்தொடுநிற்றல். .

4918. மழையே யனையகை மால்வேத நாயக வள்ளல்வரை
யுழையே யுறைவிர் முதுக்குறைந் தாணம் மொருமகளவ்
விழையேய் முலைதன் கருத்துக் கிசைந்த விறையவனைப்
பிழையே யறத்தெரி வீர்புரி வீர்மணம் பெட்புறவே. (நoஅ)

## உடன்போக்கு.



பாங்கிதலைவற்கு உடன்போக்குணர்த்தல்.

4019. சீர்முழு தும்படைத் தோன்வேத நாயகச் செம்மல்வெற்பிற்
கார்முழு துந்தெழு மைம்பான் முலைவிலை காணுமென்று
பார்முழு துங்கொடுத் தாலுங் கொடாரெமர் பார்த்திபநின்
னேர்முழு துங்கொ ணகர்க்கழைத் தேகுக வின்றுவந்தே. ()

தலைவன் உடன்போக்குமறுத்தல்.

4920. பஞ்சிற் படினும் பதைக்குமென் பாதம் படரரிது
நெஞ்சிற்கும் வெம்பர லாறணித் தன்றென் னெடுங்கரு
மஞ்சிற் பொலியுங் கொடைவேத நாயக மால்வரைவாய்
நஞ்சிற் பொலிவிழி யாளொடெவ் வாறு நடப்பதுவே. ()

பாங்கிதலைவனையுடன்படுத்தல்.

4921. வரமே வியவுற் பவன்வேத நாயக வள்ளல்வெற்பா
சுரமே மருதங் கழுகே யெகினஞ் சுடுசெந்தழற்
றிரமேசெந் தாமரை வெங்கள்ளி யேசெறி காஞ்சிசெந்நா
யுரமே திகளல வோநின்னொ டேகினெம் மொண்டொடிக்கே.

தலைவன்போக்குடன்படுதல்.

4922. அன்னே மலரடி யோமென் மையவெவ் வருஞ்சுரமோ
கன்னே வுறுதழற் றெண்டமிழ் வாணர்க்குக் காசினியோ
பொன்னே கொடுக்கும் புயல்வேத நாயக பூபன்வெற்பி
லென்னேமின் னேநட டப்பதற் கெண்ணிய தென்மனமே.()

பாங்கிதலைவிக்குடன்போக்குணர்த்தல்.

4923. ஈந்தின் கனியுண்டு பாடலஞ் சூடி யியையுமகிற்
சாந்தின் புறமூலை மேற்பூச வாஞ்சித்த தையல்கொலோ
வேந்தின்ப நும்மயி லென்றன்பர் கூறின ரெண்ணமென்னே
வேந்தின் புவிக்கொரு மால்வேத நாயக வேள்வரைக்கே. ()

தலைவிநாணழிபிரங்கல்.

4924. புறப்பே தையரினற் றுயா தியரன்பு போக்கியென்று
மறப்பே றுருதுறை நாண்போய்க் கழிவகை வாஞ்சித்தலாற்
சிறப்பே கவிஞர்க்குச் செய்வேத நாயகச் சேய்வரையெப்
பிறப்பே யடையினு மாகா தெழுமையும் பெண்பிறப்பே. ()

கற்பின்மேம்பாடுபாங்கி கழறல்.

4925. குலத்தினு நண்பினுங் கூர்வேத நாயகக் கோன்வரையெந்
நிலத்தினு மேவு குலமா தருக்குயிர் நேயம்வைக்கு
நலத்தினு மிக்கது நாணமொன் றேயந்த நாணுங்கற்பு
வலத்தினு மிக்கதன் றுன்மதி வாணுதன் மாமயிலே.(௯௨௫)

தலைவியொருப்பட்டெழுதல்.

4926. குறிப்பான் மொழிநர் வெளிப்படை யாலினிக் கூறுகாநன்
னெறிப்பான் மகிழ்நெடு மால்வேத நாயக நேயன்வரை
வெறிப்பா னமரைய நீங்குக வேங்குக வீங்குககண்
மறிப்பான் மொழியன்பர் மேல்வைத்த காதன் மனத்தெனக்கே.

பாங்கிசுரத்தியல்புரைத்துழித் தலைமகள்சொல்லல்.

4927. பொறையிற் றிறலிற் குலனிற் குடியிற் புகழிற்செல்வ
நிறையிற் றெருளிற் பொலிவேத நாயக நேயன்வெற்பி
லறையிற் புறத்தள வேசுடும் பாலை யகஞ்சுடுமிற்
சிறையிற் கொடியது வோமது வோவெனுஞ் சின்மொழியே.

பாங்கிகையடைகொடுத்தல்.

4928. வாங்கா வருள்வைக்கு மால்வேத நாயக மன்னன்வெற்பி
லேங்கா மெலியு மிடையிடை நீவைத்த வின்னருணூந்
தூங்கா விறலண்ண லேபிறி தாகிற் சுவையுணவு
நீங்கா மெலியு மலியுங் கருவி நெடுமுகிலே. (௯௨அ)

பாங்கிவைகிருள்விடுத்தல்.

4929. பூங்கா வெனுங்குழன் மாதே யிறையொடு போதுகநின்
பாங்கா மடிதொடர்ந் தேவேத நாயக பானுவெற்பில்
வாங்கா விரைவில் வருவே னயலவர் வாயடக்கி
யேங்கா மெலியு நமருக்கு மேற்பவின் னேயிசைத்தே. ()

தலைமகளைத்தலைமகன்சுரத்துய்த்தல்.

4930. மற்றடி யேன்சொன் முகமனென் றேவிள வல்லிநின்பொற்
சிற்றடி மெல்லப் பெயர்த்திடல் வேண்டுஞ் சினப்பகைவ

ருற்றடி போற்றப் பொலிவேத நாயக வும்பல்வரைப்
பற்றடி நீழ லிளமரக் காவின் பரிசுகண்டே. (௩உ0)

தலைமகன்பொழில்கண்டுவியத்தல்.

4931. ஏவென்ற வொண்க ணிளமயி லேயிவ் விளம்பொழிறான்
காவென் றடைநர் தருவேத நாயகக் காளையளி
யோவென் றவாவ்க் குளிர்நிழல் செய்யு மூவர்துநம்மை
வாவென் றழைப்பது போற்கூ விடுந்துணர் மாங்குயிலே. ()

தலைமகன் தலைமகள் அசைவறிந்திருத்தல்.

4932. காமரு கல்விக் கடல்வேத நாயகக் காளையொன்னார்
தாமரு வுஞ்சுர மாலிது நண்பகல் சார்ந்ததுநின்
பூமரு வும்பத நொந்தன வாண்முகம் போர்த்ததுவேர்
தூமரு வோதிசற் றேயிருப் பாமிந்தச் சோலையிலே. (௩உஉ)

உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

4933. மெல்லிய பாதம் வருடி முகத்து வியர்துடைத்துச்
சொல்லிய மாது கதுப்பினிற் பாடலஞ் சூட்டுதற்கு
வல்லிய நேரும் வலிவேத நாயக மால்வரையென்
புல்லிய கைசெய் தவமென்னை யோமுன் புகலரிதே. (௩உ௩)

கண்டோரயிர்த்தல்.

4934. குலத்தவ ரோகை கொளும்வேத நாயகக் கோன்வரையாழ்
வலத்தவ ரோவடல் விண்ணவ ரோகடன் மண்ணவரோ
புலத்தவ ரோர்வர் நமக்கரி தேசுரம் புக்கதுஞ்சஞ்
சலத்தவ ரோவலர் மற்றது மோர்வருந் தன்மையதே. ()

கண்டோர்காதலின்விலக்கல்.

4935. மாதுமெய் வாடின ளூரணித் தன்று வறுவழியாம்
போதுசெய் வோன்கட லாழ்ந்தமை யாலினிப் போக்கரிது
தீதுசெய் வோரைத் தெறுவேத நாயகச் சேய்வரைவாழ்
காதுசெய் வேலவெம் மிற்றங்கி யேகுக காலையிலே. (௩உ௫)

கண்டோர்தம்பதியணிமைசாற்றல்.

4936. மீன்றோய் விழியொடு வித்தக நீயும் விலகருமிக்
கான்றோய் விலங்கல் கடந்தாற் களிப்புறக் கண்ணுறலாந்
தேன்றோய் குவளைப் புயவேத நாயகச் செல்வனகர்
வான்றோய் மதிலகழ் சூழ்குளத் தூரென்னு மாநகரே. ()

தலைவன்றன்பதியடைந்தமைதலைவிக்குணர்த்தல்.

4937. கடத்தே நடந்து வருந்தின மென்று கருதன்மின்னே
வடத்தே யுறங்கரு மால்வேத நாயக மன்னனமர்
தடத்தே மலர்பொலி யுங்குளத் தூரிது சார்ந்தனமிவ்
விடத்தே யுறுவளங் காணுக பூணுக வின்பத்தையே. ()

## கற்பொடுபுணர்ந்தகேளவை.



செவிலிபாங்கியைவினுதல்.

4938. தளர்ந்ததெ ஞயந் தனித்ததெ னீதழைந் தூரிற்கவ்வை
கிளர்ந்ததெ னங்குலக் கொம்பருக் குற்றதென் கிண்டிவண்ட
ருளர்ந்ததென் பூங்குழ லாய்வேத நாயக வும்பல்வெற்பில்
வளர்ந்ததெ னம்மின் மதிநீர் விசும்பினை மானுதற்கே. ()

பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

4939. வன்மன வாணமர் மாற்றார் முகாகைகை மாற்றுநரா
நன்மன வாடவர் தம்மண நேர்கிலர் நாடியறந்
தன்மன வாழ்வுறச் செய்வேத நாயக தாருவெற்பி
லுன்மன் வாட்டமுன் னுள்சுரத் தாணின் னொருமகளே. ()

செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்.

4940. நாட்டி வளர்த்த புகழ்வேத நாயக நம்பிவெற்பி
லீட்டி வளர்த்ததென் னேதுய ரோவென்பிர் நெய்பொடுநீ
ராட்டி வளர்த்தன்பி னன்மடி யேற்றி யமுதுகுழைத்
தூட்டி வளர்த்ததற் கோபிரிந் தாளென் னொருமகளே. ()

செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

4941. பொன்னுண் மருமப் புயல்வேத நாயக பூபன்வரை
மின்னு னொருநல்வந் தென்மடி மேவி விழைந்துளத்தொன்
றுன்னுள் சுரமகள் யானேயென் றுளஃ துண்மையென்றே
னன்னுள் குறிப்பறி யேன்சிறி யேனின் றயர்பொருட்டே. ()

செவிலிதெய்வம்வாழ்த்தல்.

4942. எயிலோடு வாழ்குளத் தூர்வேத நாயக வேந்தல்வெற்பி
லயிலோடு மேவுகை யாய்முரு கேயென் னவர்மனைவாய்க்
குயிலோடு நேர்மொழி மேவுறக் கூட்டினின் கோயிலெதிர்
மயிலோடு வாரணச் சேவலும் விட்டன்பின் வாழ்த்துவனே.

செவிலிநற்றாய்க்குஅறத்தொடுநிற்றல்.

4943. முலைதோன் றினவல பல்லுமற் றேயென் முதுக்குறைந்து
கலைதோன் றினமதி மால்வேத நாயகக் காவலன்பொன்
மலைதோன் றினவொரு காளைபின் னேமகள் போயினணன்
னிலைதோன் றினவட மீனும் புகழு நிலையடைந்தே. (௩௩௩)

நற்றாய்பாங்கிதன்னொடுபுலம்பல்.

4944. பெருகேர் மலிகுளத் தூர்வேத நாயகப் பேகன்வரை
முருகே யனையற்கு மானுற்ற தன்மைமுன் னேயுரையா
தருகே யிருந்துமென் பிள்ளையைப் பாவி யழலெழுந்து
திருகே மலிசுரஞ் செல்லவிட் டாயென்ன செய்தனையே. ()

அதுகேட்டபாங்கியழுங்கல்கண்டுநற்றாய்புலம்பல்.

4945. தானே தனையொப் பவன்வேத நாயக தாருவெற்பில்
யானே துரைப்ப லழுங்கே லறனின் றடுகிலம்வீழ்
மீனேய் பவண்முக வாட்டமன்று லென் விழிவெதுப்பன்
மானேநின் பொன்முக வாட்டமன் றேவென்னை வாட்டுவதே.

நற்றாய் பாங்கியர்தம்மொடுபுலம்பல்.

4946. வரிக்கும் குமழுலை யிரிளம் பார்ப்பை வருடிவெயில்
பரிக்குங் கழுகு பதைத்தாங் கணைக்கும் பரற்கடுங்கான்
பிரிக்குந் தகையொ ரயலான்பின் சென்றனள் பேதைதுய
ரிரிக்குந் தகைய ரெவர்வேத நாயக வேந்தலொத்தே.(௬௬௬)

நற்றாய்அயலார்தம்மொடுபுலம்பல்.

4947. அன்பே வளர்க்கு நயவேத நாயக வண்ணல்வெற்பில்
வன்பே தவிர்ந்த மனப்பேதை யீரென் வருந்தலென்பீ
ரின்பே யுளங்கொண் டருநோன்பு நாளு மியற்றியருந்
துன்பே யுதரஞ் சுமந்துபெற் றேனினிச் சொல்வதென்னே.

நற்றாய்தலைமகள்பயிலிடந்தம்மொடுபுலம்பல்.

4948. அனையே யனைய வருள்வேத நாயக வண்ணல்வரைச்
சுனையே கருந்தினை யேய்புன மேமலர்ச் சூழ்பொழிலே
புனையோர்செய் மஞ்சனச் சாலை செவிலி பொலிமடியென்[கே.
மனையேயொத் தீரென் னுரைத்தாள்செல் போதம் மனையுமக்

நிமித்தம்போற்றல்.

4949. தென்னே புயலளக் குங்குளத் தூரன் செழும்புவியே
பொன்னே தமிழ்க்குத் தருவேத நாயக பூபன்வெற்பி
லுன்னேய மார்விழி போற்கொடி யேமெய்யு ளொன்றுடையா
ரின்னே வரக்கரைந் தாலிடு வேன்பலி யெற்றைக்குமே. ()

சுரந்தணிவித்தல்.

4950. முகமாதி யான்முன் டகம்வாடச் செய்தது முன்னற்கவம்
பகமாதி யானின் னொழிவோர்ந் துவப்பதைப் பாற்றியதே
தகமா திவாகர வோர்ந்தழற் கான்றண் ணெனப்புரியென்
மகமா தினொவொழிப் பான்வேத நாயக மால்வரைக்கே.(௬௭௦)

தன்மகண்மென்மைத்தன்மைக்கிரங்கல்.

4951. பரல்செறி கானதி லோங்குமென் கோங்குமப் பஞ்சமஞ்சும்
விரல்செறி மெல்லடி யெங்ஙன மாற்றுமவ் வெம்பரல்பே
ருரல்செறி காற்களிற் றுன்வேத நாயக வும்பல்வெற்பிற்
குரல்செறி மென்மொழி யாளென்ன ளாயுயிர் கொண்டுறுமே.

இளமைத்தன்மைக்குளமெலிந்திரங்கல்.

4952. பல்லோ முளைத்தில வாயோ வினுமுலைப் பான்மணக்குஞ்
சொல்லோ குதலை நடையோ குறிது துணர்த்தருவோ

செல்லோ வெனுங்கைத் திறல்வேத நாயகச் சேய்வரையுட்
கல்லோ வெனநடந் தாய்மக ளேகொடுங் கானெறியே. ()

அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.

4953. நனைவாய் பொழிற்குளத் தூர்வேத நாயக நம்பிவரை
மனைவா யடுபுலிப் பார்வைக்கு மஞ்சு மகள்பரல்வெந்
நுனைவாய் கடத்து முழங்கா வெதிர்புலி நோக்குபுவே
தனைவாய்நின் றஞ்சுமென் றேபாவி யேனச்சந் தாங்கினனே.

கண்டோரிரக்கம்.

4954. மெய்யோ மெய்யாய தெனும்வேத நாயக வேள்வரைவாய்ப்
பொய்யோ வெனுமிடை நீத்தா ளவளைமுன் போற்றியதைக்
கையோ பிசையவொண் கண்ணோ கலுழக் கவன்றுகவன்
றையோ வெனுதுறு மோபெற்ற பாவி யகங்குழைந்தே. ()

செவிலி யாற்றுத்தாயைத்தேற்றல்.

4955. மாணூர் நகைக்குநின் பேணுத் துயருக்கு மண்ணிடுவேன்
சேணூர் விரும்பு புகழ்வேத நாயகச் சேயையொப்பான்
பூணு ரடியொன்றற் குட்பட்ட தாய்நுநின் பொன்னைத்தந்தே
யேணு ரயிற்கணன் ஞய்வருந் தேலி தெளிதெனக்கே. ()

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினுதல்.

4956. ஒருதேவ னீரடி முப்போது மோர்ந்துர ஞலொரைந்தும்
பொருதேயிவ் வாறுசெல் வீரேழ் வளையெட்டும் போற்றுமொ
கருதேர் மணிக்குளத் தூர்வேத நாயகக் காளைவரை [ன்பான்
வருதே மொழியின்பத் தோர்கா வலன்பின் மருவினளே. ()

மிக்கோரேதக்காட்டல்.

4957. இரையும் புனற்குளத் தூர்வேத நாயக வேந்தல்வெற்பிற்
றிரையுந் தழற்கடத் தென்னோ நடந்துமெய் தீந்தனையிவ்
வுரையுஞ் சொலத்தகு மோவுண ராய்கொ லுலகியன்முன்
வரையுந் திரையுந் தொடர்ந்ததுண் டோசிவன் மாயனையே.()

செவிலி எயிற்றியொடுபுலம்பல்.

4958. ஆயுங் கலைநுண் மதிவேத நாயக வண்ணல்வரை
யேயுங் கொடும்புலிப் பற்றுலி பூண்ட வெயின்மகளே
தாயுந் தளரத் தளரா மனத்தயற் சார்புகொண்டோர்
தேயுங் கொடியிடை சென்றன ளோவித் தெறுநெறியே. ()

செவிலிகுரவொடுபுலம்பல்.

4959. அன்பாவை யம்புரப் போன்வேத நாயக வண்ணல்வெற்பிற்
றன்பாவை நீத்தயற் சார்பே தழீஇயிங்குச் சார்ந்தவட்கு
நின்பாவை நல்கினை யோசெல்ல லென்று நிகழ்த்தினையோ
வென்பாவைக் கென்னசெய் தாயளி யோடொளி ரீர்ங்குரவே.

சுவடுகண்டிரங்கல்.

4960. எதிர்வந்த வெய்ய தரக்கடி யாங்கவை யிங்கிவையோ
வதிர்வந்த நெஞ்ச மிலாதடு காளை யடிபுவியிற்
கதிர்வந்த தென்னப் பொலிவேத நாயகக் காளைவரை
வெதிர்வந்த தோளடி யூங்குவை யேலென் விளம்புவதே. ()

செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

4961. மாறு மகிழ்ச்சியுற் றேனுமைக் கண்டு மதனிரதி
வேறு விவரையல் லாதென வேவரு வீர்பகைஞ
ரேறு மெனவளர் மால்வேத நாயக வேந்தல்வரைத்
தேறு வொருத்தி யொருவனிவ் வாறுறச் சென்றனரே. ()

அவர்புலம்பதேற்றல்.

4962. அன்னையிம் மான்கண்ட மானுமற் றியான்கண்ட வண்ணலுஞ்சொன்
முன்னாய் தருகுறிப் பானுணர்ந் தேபொன் முகந்தளிக்கு
மன்னாய் வளரும் புகழ்வேத நாயக மால்குளத்தூர்
நன்னா யகமெனச் செல்வாரிந் நேர நலிவின்றியே. (௯௫௨)

செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

4963. பொன்மகள் வாழ்குளத் தூர்வேத நாயக பூபன்வெற்பி
லென்மகள் வந்தன ளோவெனுந் தாய்க்கினி யென்னுரைப்
கன்மகள் கேள்வ னுதற்றீயுந் தீக்குமிக் கானடந்த [பேன்
வன்மகள் யான்மகட் காணாமை யானின்று வாடுவனே. ()

---

மீட்சி.



தலைவிசேணகன்றமைசெவிலிதாய்க்குணர்த்தல்.

4964. ஏய்ப்புகு மாறு பொலிவேத நாயக வேந்தல்புகழ்
போய்ப்புகு மாநில மெல்லாந் துருவிப்புக் கேனயலார்
மாய்ப்புகு மாநகை மாறக்கண் டேனலன் மாதைவலி
தாய்ப்புகு வேலவன் கொண்டுசென் றான்மகிழ் தன்மனைக்கே.

தலைவன்தம்மூர்சார்ந்தமைசாற்றல்.

4965. மதுவிதழ் நீர்க்குளத் தூர்வேத நாயக வள்ளல்வரை
யதுவித ணேறித் தழல்கொடு நீகிளி யாய்ந்தபுன
மிதுவித மாகமுன் யான்வந்து நிற்கண்ட வீர்ம்பொழிரு
ளுதுவிதழ் கோவையொப் பாயடைந் தாநம தூரகத்தே. ()

தலைவிமுன்செல்வோர்தம்மொடுதாம்வரல்பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

4966. துடிப்பகை யாய மருங்குனல் லீர்கவி சொல்புலவர்
மிடிப்பகை யாய விறல்வேத நாயக வேள்வரைவாய்க்
கடிப்பகை யாய கரிசுமில் லாளொடு கான்கடந்திப்
படிப்பகை யாயவள் வந்தா ளெனச்சொலும் பாங்கியர்க்கே.()

முன்புசென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

4967. வண்டோகை கொள்ளு மதுமலர்க் கூந்தலும் வாகையந்தார்
திண்டோள் புனையுமோர் செம்மலு மாலுந் திருவுமொத்துத்
தண்டோ டலர்தொடை யான்வேத நாயக தாருவெற்பிற்
கண்டோமின் னேவரக் காரிகை யீருங்கள் காதல்கொண்டே.

பாங்கியர்கேட்டநற்றாய்க்குணர்த்தல்.

4968. தாயே யுவகைகொ ணீயினி தாற்று தவமும்பழு
தாயே குறுங்கொன் மணவாள னேடுநம் மன்னமொன்னூர்
வாயே யடங்கிட வந்தா ளெனச்சிலர் வந்துசொற்றார்
கூயேவ றெவ்வரைக் கொள்வேத நாயகக் கோன்வரைக்கே.

நற்றாய்கேட்டு அவனுளங்கோள்வேலனைவினாதல்.

4969. தெளியாமை யானென்று கேட்கலுற் றேனுரை திண்புவியை
யளியாமை போற்பரிப் போன்வேத நாயக வண்ணல்வெற்பிற்
களியாமை யுண்க ணெடுசுரம் போய்வரு காளைமின்னை
யொளியாமை யேயென்னி லோதன்னி லோவுய்க்கு மொள்ளியனே.

---

## தன்மனைவரைதல்.

நற்றாய்மணனயர்வேட்கையிற்செவிலியைவினாதல்.

4970. செந்தா மரையி லனப்பேட்டை வீநடச் சேவல்செய்யு
நந்தா மணக்குளத் தூர்வேத நாயக நம்பிவெற்பிற்
பந்தார் முலையைந மில்வாய் மணஞ்செய்து பார்க்கவள்ளற்
றந்தாட் குணர்த்திடு வாம்வடு வாம்விழித் தார்க்குழலே. ()

செவிலிக்கு இருவரைவரைந்தமையுணர்த்தல்.

4971. விருந்துகட் கூட்ட விரும்புநற் றாய்க்கென் விளம்புதும்யாம்
பொருந்துகட் கூந்தலன் னாய்வேத நாயக பூபன்வெற்பில்
வருந்துகட் கூறிறம் மிற்கிளை நாப்பண் வரைந்தனர்செம்
பருந்துகட் கூண்செயம் பாரென்று தூதர் பகர்ந்தனரே. ()

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்.

4972. நங்கண் ணிரம்பத் தவம்புரி யாமையி னுடுமன்னாய்
வெங்கண் ணிரம்பு தொடைவேத நாயக வேள்குளத்து
ரங்கண்ணி மாதை முரசங் கிளையொடு மார்ப்பவவர்
தங்கண்ணி சூட்டி வரைந்தன ராஞ்சிலர் சாற்றினரே. ()

தலைவன்பாங்கிக்குயான்வரைந்தமைநமர்க்குஇயம்புசென்றென்றல்.

4973. வெற்பே புரையிளங் கொங்கைநின் மங்கையை மெல்லியலாய்
பொற்பே மலியும் புகழ்வேத நாயக பூபன்வரைக்
கற்பே ரருமதில் சூழ்குளத் தூரெங் கடிமனையா
மற்பே பொலிமணஞ் செய்தா நமர்க்கி தறைதியின்றே. ()

பாங்கிதானதுமுன்னேசாற்றியதுரைத்தல்.

4974. மன்னும் புகழிற் பொலிவேத நாயக மால்குளத்தூ
ரென்னும் பதியின் மனைவாய் மணநீ யியற்றியது
பன்னுஞ் சிலவர்தம் வாயு முரசுமென் பாவைகளப்
பொன்னும் புகல வுணர்ந்துமுன் னேபுகன் றேனனைக்கே. ()

## உடன்போக்கிடையீடு.

நீங்குங்கிழத்திபாங்கியர்தமக்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

4975. தேனூறு பாய்தொடைத் தோள்வேத நாயகச் சேய்விலங்கற்
கானூறு மேவிய காரிகை யீருங் கருக்கறமுண்
டானூறு பூங்குழற் பாங்கியர் பாற்சென்றும் மாயிழையோ
ருனூறு வேலவன் பின்படர்ந் தாளென் றுரைத்திடுமே. ()

தலைமகடன்செலவுஈன்றாட்குணர்த்திவிடுத்தல்.

4976. அளியொன்று தார்ப்புய மால்வேத நாயக வண்ணல்வெற்பிற்
றெளியொன்று மாதவத் தீர்தொழு தேனருள் செய்திந்தவாற்
றுளியொன்று சேரியுற் றெற்பயந் தாளுபங் காமலொரு
களியொன்று காளைபின் யான்விழைந் தேகல் கழறுமினே. ()

நற்றாய்க்குஅந்தணர்மொழிதல்.

4977. திருமக ணின்னி லுறமட வாய்நலஞ் சேருநின்
னொருமக ளஞ்சு மகளா கிலஸ்சுரத் தூடுவென்றிப்
பெருமக டங்கு புயத்தொரு காளைபின் னேகினண்மான்
மருமகண் மன்னுசெவ் வாய்வேத நாயக மால்வரைக்கே. ()

நற்றாய் அறத்தொடுநிற்றலின்தமர்பின்சேறலைத்தலைவிகண்டுதலைவற்குரைத்தல்.

4978. சீரே யவாவு திறலண்ண லேபசுஞ் செந்தமிழே
தாரே புனைபுப மால்வேத நாயக தாருவெற்பி
லாரே தடுப்பவர் யானென்செய் கேன்வில்லு மம்புங்கொண்டு
காரே யெனவளைந் தார்கொடுங் கானடுங் கானவரே. (கூசுஅ)

தலைமகளைத்தலைமகன்விடுத்தகறல்.

4979. தன்னே ரிலாத தமிழ்வேத நாயக தாருவெற்பிற்
பொன்னேயஞ் சேல்கை நெரியே லயலவர் போரெனினின்
முன்னே யடுகணை யொன்றால்வெல் வேனென் மொழிவதவர்
பின்னே நடந்தருள் யானே குவனென் பெருநகர்க்கே. ()

தமருடன்செல்பவள்அவன்புறநோக்கிக்கவன்றாற்றல்.

4980. கூற்றேற்ற போதும் புறங்காண்ப வன்படை கொண்டுசினந்
தாற்றேற்ற வர்க்குப் புறங்கொடுத் தானம ராதலின்மண்
சாற்றேற்ற மிக்க புகழ்வேத நாயக தாருவரை
யேற்றேற்ற நம்பெரு மான்பரி வாவது ளெண்ணரிதே. ()

## வரைதல்.

சென்றோன்மீண்டுவந்து அந்தணரையுஞ்சான்றோரையுமுன்னிட்டு வரைந்துகொண்டுழிக்கண்டோர்மகிழ்ந்துகூறல்.

4981. மண்பெற்ற சங்க நிதிவேத நாயக மன்னன்வெற்பிற்
றண்பெற்ற வாழித் தரைவாயிவ் வாறெவர் தாம்புரிந்தா
ரெண்பெற்ற விவ்வணஞ் செய்தாரென் பாருமிங் கில்லையிரு
கண்பெற்ற பேறடைந் தாம்வள்ளன் மாமணங் கண்ணுற்றின்றே.

## இல்வாழ்க்கை.

தலைவன்தலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.

4982. பரவுற்ற சீர்க்குளத் தூர்வேத நாயக பானுவெற்பி
லரவுற்ற வல்குலிவ் வாயிழை யாரின்பம் யானடைய
வுரவுற்ற மாமுலை நீயன்பிற் செய்த வுதவிக்கென்றோ
விரவுற்ற யான்செய்வ தென்செய்யு மேபுவி விண்முழுகிற்கே.()

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்,

4983. அடித்தொழில் செய்யு மெனக்கோ முகம னறைவதண்ணன்
மிடித்தொழி நீர்குளத் தூர்வேத நாயக வேள்வரைவாய்க்
கடித்தொழி லாற்றிய சீரிய நீயுமிக் காரிகையுங்
குடித்தொழி லாற்றி நெடுநாளும் வாழ்க குவலயத்தே. ()

பாங்கிதலைவியைவரையுநாளளவும்வருந்தாதிருந்தமையுரையாயென்றல்.

4984. பூமான் வளர்குளத் தூர்வேத நாயக பூபன்வரைக்
கோமான் றனைப்பிரி யாதுறை வாயின்று குன்றுதவி
றீமான் கடுங்கடம் பொன்றரு வான்முனஞ் சென்றருள்போ
தேமான் விழியணங் கேயெங்ங னாற்றி யிருந்தனையே.(௬எச)

பெருமகளுரைத்தல்.

4985. அணிமாலை யொக்கு மருள்வேத நாயக வண்ணல்வெற்பெம்
பிணிமாலை யென்னும் பெருகிருண் மூடப்பெய் தேன்மழையைத்
தணிமாலை யோதிநல் லாயன்பர் தாமுன்பு தந்தருள்செம்
மணிமாலை யேசெங் கதிர்மாலை யாயதை மாற்றியதே.(௬எரு)

பாங்கிதலைவனைவரையுநாளளவும்நிலைபெறவாற்றியநிலைமைவினாதல்.

4986. சீர்மண முற்றுறு முன்னர்நுந் தோளெந் திருந்திழைபொன்
வார்மண முற்ற முலைநீத்தெவ் வாறு மருவினபைந்
தார்மண முற்ற புயவேத நாயக தாருவெற்பிற்
போர்மண முற்றவொள் வேல்வல னேந்தும் புரவலரே. ()

மன்றன்மனைவருசெவிலிக்குஇருவரின்புறவுணர்த்தல்.

4987. பிரியா ருமையு மவள்கோனு மேயென்றல் பேதைமையே
யரியார் மலர்க்கணன் னாயென்சொல் கேனன்ன மன்னமின்னும்

வரியார் கழல்வள்ள லும்வேத நாயக மால்வரையுட்
டரியார் கணமுமின் பெய்துவ ரீதுன் றவப்பலனே. (௯௮௭)

இல்வாழ்க்கைநன்றென்றுபாங்கிசெவிலிக்குரைத்தல்.

4988. வளமுற வாழ்குளத் தூர்வேத நாயக வள்ளல்வெற்பி
னளமுற வட்டும் விருந்தோ டிறைநயக் கப்படைத்துந்
தளமுற வார மணியுற்றுங் கொண்கன்முன் றூன்விழித்து
முளமுற விங்ஙன் மனைவாழ்க்கை நீடின ளுன்மகளே. ()

மணமனைச்சென்றுவந்தசெவிலிபொற்றொடிகற்பியனற்றாய்க்குணர்த்தல்.

4989. திருந்துதி வாகர னேர்வேத நாயகச் சேய்வரைய
மருந்துதி தீரிள வேய்த்தோளன் றூய்நின் மனத்துவகை
பொருந்துதி நின்மகள் கற்போர்ந் துதீசிப் புலத்தொருமீ
னருந்துதி செய்வத னுலதற் கப்பெய ராயினதே. (௯௮௯)

நன்மனைவாழ்க்கைத்தன்மையுரைத்தல்.

4990. அமரா வதியு மளகா புரியுமொன் றூகிமண்மேல்
அமரா வதிவது நேருமன் றூய்கலி யாற்புரியும்
அமரா வதியக் குருவேத நாயக வண்ணறன்னே
யமரா வதிகஞ் செறிவரை நம்மனை யம்மனையே. (௯௯௦)

செவிலிநற்றாய்க்கிருவர்காதலையுமறிவித்தல்.

4991. கற்றோ ரிடத்து மகிழ்வேத நாயகக் காளைவெற்பி
லுற்றோ ரிடத்துறை வோரெனத் தானு முணர்ந்ததுவோ
பற்றோ ரிடத்துப் படரினு மாதுறை பாடன்றியே
மற்றோ ரிடத்துநில் லாதிறை யூரு மதகயமே. (௯௯௧)

## பரத்தையிற்பிரிவு.



காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமவ்விறைவிக்கென்றல்.

4992. பாடல் விளக்கும் புகழ்வேத நாயக பானுவெற்பி
னீடல் விளக்குங் குழற்பொது மாதர் நிரம்புசதி
யாடல் விளக்கும் வயலூரற் றோகை யதுகதுவு
மூடல் விளக்குமொர் காரண மாமதி யொண்ணுதற்கே. ()

தனித்துழியிறைவிதுனித்தழுங்கல்.

4993. தோட்டொடு மோதும் விழிமாதர் சூட்டு தொடையறமிழ்ப்
பாட்டொடு சூடும் புயவேத நாயக பானுவெற்பிற்
பேட்டொடு சேவன் மகிழ்வய லூரன் பிரிந்தனனற்
காட்டொடு மேலம் புலிவேடன் பாலெனைக் காட்டியின்றே. ()

ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினுதல்.

4994. புரியா வெவரு மகிழ்வேத நாயக பூபன்வெற்பிற்
பரியா வினிய வமுதயில் போதும் பசித்துயரோ

விரியா நிறைதண் புனல்வய லூரான் விழியிமைபோற்
பிரியா திருக்கவு மென்றோ வருந்துதல் பெண்ணரசே. ()

இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

4995. தெளிநீர் கொளாதடன் மேதி கலங்க நிளைத்தருந்து
மொளிநீர் நகுவய லூரனிந் நாளென்னை யொண்சுருணை
வளிநீர்மை பூண்ட புயல்வேத நாயக வண்ணலுள்ளா
வெளிநீர நிற்கரு திப்பொது மாதரின் பெய்துவனே.(கூஅரு)

தலைவியைப்பாங்கிகழறல்.

4996. வெற்பாகு திண்ணிய தோள்வேத நாயக வேள்வரைவாய்ப்
பொற்பாகு மக்கள் பொலிய மனையறம் பூண்டுவிருந்
தற்பாகு சிந்தையி னோம்ப லலாலன்ப ராசுரைத்தல்
கற்பாகு மோகுல மாதர்க்கு மேதகு காரிகையே. (கூஅசு)

தலைவிசெவ்வணியணிந்துசேடியைவிடுத்தழி அவ்வணி
யுழையர்கண்டு அழுங்கிக்கூறல்.

4997. நனைந்தன பேரருண் மால்வேத நாயக நம்பிவெற்பி
வினைந்தறி யார்பொருட் டில்லா திகழ்பவ ரின்முனிவள்
வனைந்தசெஞ் சாந்து மலருங் கலனும் வயங்குபட்டும்
புனைந்தடி வைப்பதென் னுமிது வோநம் பொலிவென்பதே.

பரத்தையர்கண்டுபேழித்தல்.

4998. நல்லார் பலரும் புகழ்வேத நாயக நம்பிவெற்பில்
வில்லார் நுதலி யுறுப்பொன்று சேந்த விதந்தவனும்
பல்லாரு மோரும் படிகுறித் தோவிப் படர்மறுகி
லெல்லா வுறுப்புஞ் சிவந்தடைந் தாளிவ் விளங்கொடியே. ()

பரத்தையருலகியனோக்கிவிடுத்தல்.

4999. அடுத்தே மென்பாருக் கருள்வேத நாயக வண்ணல்வெற்பில்
வடுத்தே மலர்விழி பூத்தன ளாலுண் மகிழ்கிளைசூ
ழடுத்தே யொளிர்பவ பன்னிரு நாளு முனக்குவிடை
கொடுத்தே மவனுற் றயனு ளுதயங் குறுகெமிற்கே. (கூஅகூ)

தலைவன்வரவுகண்டுவேந்துவாயில்கண்மொழிதல்.

5000. சேப்புற்ற தாமரைக் கைவேத நாயகச் செம்மல்வெற்பிற்
கோப்புற்ற பொன்விலை மாதரி னீங்கிக் கொடியிடையாள்
பூப்புற்ற தோர்ந்துடன் மீண்டமை யாற்றண் புனலுலகங்
காப்புற்ற வூர ருலகிய லோர்ந்த கருத்தினரே. (கூகூ0)

தலைமகன்வரவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

5001. மழையுட் கருது கொடைவேத நாயக வள்ளல்வெற்பி
லுழையுட் கருது விழியாய் தலைவருற் றூரவர்தம்
பிழையுட் கருதுவ தன்றூ லெதிர்சென்று பேணிப்பணிந்
தழையுட் கருது சினந்தீ ரடித்தொழி லாற்றுகவே. (கூகூக)

தலைவனைத்தலைவி எதிர்கொண்டுபணிதல்.

5002. காமரு வுங்கைத் தலவேத நாயகக் காளைவெற்பி
வேமரு வுங்கட் பொதுமா தருநூள் ளியைந்தனரோ
மாமரு வும்பத மிங்குற வும்மனம் வந்ததுவோ
பாமரு வும்புக ழீரிது சாலுமென் பாக்கியமே. (௲௬௨)

புணர்ச்சியின்மகிழ்தல்.

5003. சூலாய மேக நிகர்வேத நாயகத் தோன்றல்வெற்பிற்
சேலாய கண்ணி சிறப்பிற் றருமின்பஞ் சிற்றின்பமோ
மாலாய வின்ப மிதனினு மண்மிசை மற்றுமொன்று
மேலாய தென்பவர்க் கொள்ளறி வேயன்று வெள்ளறிவே. ()

வெள்ளணியணிந்துவிடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

5004. புள்ளணி தொங்கற் புயவேத நாயக பூபன்வெற்புன் [நெஞ்
வெள்ளணி கண்டடைந் தேனுடைந் தேனென் மிகுபிழை
சுள்ளணி யாக்கிப் புலந்தணங் காம வுவப்பநறுங்
கள்ளணி கூந்தற் குரைவரை நேருங் கதிர்முலையே. (௲௬௪)

தலைவிசெய்யாடியதிருளைசாற்றல்.

5005. வலம்புரி முத்த முயிர்த்தாங் கிறைவி மகவுயிர்த்து
நலம்புரி வாசநெய் யாடின ளாமின்று நாவலர்தங்
குலம்புரி நேரில் சொடைவேத நாயகக் கோன்வரைமட்
புலம்புரி தோளண்ண லேயெண்ண லேது புகல்வதற்கே. ()

தலைவன்தன்மனத்துவகைகூர்தல்.

5006. பூணும் படிமையர் சொல்வேத நாயக பூபன்வெற்பின்
மாணும் படிநன் மகவேந்து கையும் வரையருவி
நாணும் படியெழு கொங்கையும் பாலு நரம்பின்பைப்புங்
காணும் படியெத் தவஞ்செய்த வோவிரு கண்களுமே. ()

தலைவிக்கு அவன்வரல்பாங்கிசாற்றல்.

5007. நன்மே லவர்புகழ் மால்வேத நாயக நம்பிவெற்பில்
வன்மே லடர்முலை யாயன்பர் நம்மனை வாயில்வந்தார்
நின்மேல் வெறுப்புற் றகல்பவ ராயினு நீபயந்த
பொன்மேல் வெறுப்புற் றகல்வர்கொ றண்ணியர் புண்ணியரே.

தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தல்.

5008. நல்லோர் புகழ்நண்ப மால்வேத நாயக நம்பிவெற்பிற்
சொல்லோர் மழவுண் டிமிழ்முலைப் பான்மணஞ் சூழ்ந்ததுமெய்
யில்லோரின் வாடுத லென்கலை தீண்டுத லென்கைவிடு
பல்லோ ரிடத்தும் பயின்றதன் றேயுடல் பாவியற்கே. ()

தலைவிபாணனைமறுத்தல்.

5009. நன்பால் வளர்க்கும் புகழ்வேத நாயக நம்பிவெற்பி [ன்
னின்பான்மெய் யன்புடை யாரூா ரென்றிங்கு நீசொல்வதெ

மின்பா னறுமுல்லை விற்பா ரிடங்கள்ளி வீவிற்கின்றாய்
வன்பான் மனப்புலைப் பாணுசெ லிம்மனை வாயில்விட்டே. ()

வாயின்மறுக்கப்பட்டபாணன்கூறல்.

5010. மற்கொண் டெறிதிண் புயத்தா னிமித்தஞ்செவ் வாயிற்கடுஞ்
சொற்கொண் டெறிந்த தடியேற்குப் போதுந் துறுகலியைப்
பொற்கொண் டெறியும் புயல்வேத நாயக பூபன்வரைக்
கற்கொண் டெறியற்க வெம்பெரு மாட்டி கறுத்துநின்றே. ()

விறலிவாயின்மறுத்தல்.

5011. செய்யேந்து வான்குளத் தூர்வேத நாயகச் செம்மல்வெற்பின்
மெய்யேந்து மூரர்மெய் யன்பின ரேசொல்ல வேண்டுங்கொலோ
பையேந்து மண்மிசைப் பாடி யெலாஞ்சென்று பாடியிரு
கையேந்தும் பாண்மக ளேதுக ளேயினின் கட்டுரைக்கே. ()

பாங்கிவாயின்மறுத்தல்.

5012. மீன்றவழ் நீர்குளத் தூர்வேத நாயக வேள்வரைவாய்த்
தேன்றவ ழோதி யருமருந் தன்ன சிறுகுழவி
தான்றவ ழின்பம் வெறுத்தார் பரத்தையர் தங்கண்முலை
கான்றவழ் மார்புடை யூரர்க்கிங் கேயென்ன காரியமே. ()

விருந்தொடுவந்துழிப்பொறுத்தல்கண்டிறையோன்மகிழ்தல்.

5013. பெரும்போது நீர்குளத் தூர்வேத நாயகப் பேகன்வெற்பிற்
கரும்போது மென்மொழி யார்விழி வாய்விலைக் காரிகையா
ரரும்போது கொங்கை யவாய்ப்பல நாளமர்ந் தாலுமனை
வரும்போ தொருவிருந் தோடுவந் தாற்செம்மை மாறிடுமே.

பள்ளியிடத்தழுங்கல்.

5014. பழியா வளனிற் பொலிவேத நாயக பானுவெற்பி
லொழியாத தண்ணளி யாமோ மயங்கொரு வேற்கமிர்த
மொழியாது மின்றி முகங்கவிழ்த் தேயொரு முச்சுடர்க்குங்
கழியா விருளை விரித்துக் கழியிருள் காட்டியதே. (௬௦௪)

சேறலென்றவள்சீறடிதொழுதல்.

5015. மான்மேற் பொலியும் வளவேத நாயக வள்ளல்வெற்பில்
வேன்மேற் பொலிகண் விளங்கிழை யேயிவ் வெகுளியெவன்
யான்மேற் பிழைபுரி யேன்பிரி யேனின் னனிச்சம்வென்ற
கான்மேற் பணிவல் பொறுத்தாள வேண்டுங் கடனுனக்கே. ()

இஃதெங்கையர்காணினன்றன்றென்றல்.

5016. பூணினன் றேளிற் புயல்வேத நாயக பூபனகர்
நாணினன் றேல்வியு முற்றேன்குற் றேவ னயப்பவர்தா
மேணினன் றேமிலற் கென்னுற்ற தென்பரிஃ தெங்கையர்கண்
காணினன் றேபிழை மூளுமென் றேயுட் கலங்குவனே. ()

அங்கவர்யாரையுமறியேனென்றல்.

5017. விறலிய ரோள்வலி மால்வேத நாயக வேணகர்வாய்ப்
பறலியல் வாவற் றகுதி யுளேனலன் பாயிருளோ
டறலிய லோதி யணங்கே கறுப்ப தழகிதன்று
திறலியல் சீயஞ் சிறுதேரை யூனிரை தேர்வதுண்டே. ()

காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்.

5018. பார்வாய் மலிந்த புகழ்வேத நாயக பானுநக
ரேர்வாய் மறுகில் விளையாடு சேயையொ ரேந்திழைகண்
டார்வாய்முத் தங்கொடுத் தாளது நோக்கச்சிற் றுய்நினக்கிவ்
வூர்வா யிவள்பல ரின்னுமென் றுளைய லோரணங்கே. (௬௰௮)

தலைவியைப்பாங்கிதணித்தல்.

5019. போதார வண்டுறை பூங்குழ லாய்புவி யேழினுக்கு
மாதார மான புயல்வேத நாயக வண்ணனகர்
மாதார மில்லவ ரோபொது மாதர வாவினர்நின்
பாதார விந்தம் பணிந்தார் வெகுளுதல் பண்பல்லவே. (௬௰௯)

தலைமகள்புலவிதணியாளாகத்தலைமகனூடல்.

5020. இன்னிய மார்குளத் தூர்வேத நாயக வேந்தனகர்
மின்னிய பேரரு ளான்முன்னை நாளின்ப மேவுறத்தீத்
துன்னிய பாலைநம் மெய்ந்நிழல் போற்பின் றொடர்ந்தவண்டு
மன்னிய வார்குழன் மானன் றிதோர்பெரு வஞ்சனையே. ()

பாங்கிஅன்பிலைகொடியையெனத்தலைவனையிகழ்தல்.

5021. அரும்பாய் மலர்த்தொடைத் தோள்வேத நாயக வண்ணனக
பெரும்பாய னீத்துறைங் காதே வருந்தவும் பேணுமன [ர்ப்
மிரும்பா யகல்வி ரிழிபொது மாதர்த மின்பமொன்றே
கரும்பா யிவளின்பம் வேம்பா யிடிற்பின் கரைவதென்னே. ()

ஆயிழைமைந்தனுமாற்றமையும்வாயிலாக வரவெதிர்கோடல்.

5022. இளவேறு போலு மகவைத்தன் றோளி லிறுகப்புல்லி
வளவேத நாயக மால்குளத் தூரன்வந் தான்மனைவாய்ப்
பிளவே யுறுதெழுந் தாற்றமை யும்பெருத் தோங்கியதா
லுளவே பயன்களு மேன்மேலும் யாஞ்சினந் தூடலின்னே. ()

மணந்தவன்போயபின்வந்தபாங்கியோடிணங்கியமைந்தனை
இனிதிற்புகழ்தல்.

5023. திதலைகொள் பூண்முலை யாய்பொது மாதர்தஞ் சேரிசெல்லு
முதலைகொ ணீர்வய லூரனிங் கெய்த முகங்கொடுத்து
விதலைகொள் வேன்றுயர்ப் போராழி நீந்தச்செய் மென்மகற்கு
மதலையென் பேர்தகு மால்வேத நாயக மானகர்க்கே. (௭௰௩)

தலைவிதலைவனைப்புகழ்தல்.

5024. சேரார் தொழுங்கழன் மால்வேத நாயகச் செம்மலணி
யோரார் வயல்கழு மூரார் பரத்தைய ரின்புறினு

மோரா ரலரன் பொழிந்தா ரலர்வரை யோடுபொரு
வாரார் வனமுலை யாய்பழங் கேண்மை மறப்பிலரே. (சகச)

பாங்கிதலைவியைப்புகழ்தல்.

5025. பொற்பே யுருக்கொண்ட மால்வேத நாயக பூபனகர்
வெற்பே யுருக்கொண்ட தோளான் பிழைக்கு வெகுளலின்றி
யற்பே யுருக்கொண்ட சிந்தையி னுறபொறுத் தாளுதலாற்
கற்பே யுருக்கொண்ட பெற்றியள் போலுமிக் காரிகையே. ()

---

## ஓதற்பிரிவு.



கல்வியிற்பிரிவுதலைவன்பாங்கிக்குணர்த்தல்.

5026. வெற்பதன் றேவெனப் பொன்னுறிற் சீர்த்தி விளங்குநெறி
நிற்பதன் றேபரு வம்முறி னுண்மை நிரம்பியநூ
லற்பதன் றேவெனு மெய்வேத நாயக வண்ணலைப்போற்
கற்பதன் றேசிறப் பாநறப் பாயுங் கருங்குழலே. (சகரு)

பாங்கிமறுத்தல்.

5027. நயக்குநின் கல்வி யருள்வேத நாயக நம்பிமுன்போய்
வயக்கும் வகையண்ண லேபிரி வாயெனில் வாள்விழிநீர்
பயக்கும் படிபடி மேல்வீழ்ந் தடுத்த பலவரையுமிக்
குயக்கு மிறைவியை யாராற்று வாரிஃ தொத்ததன்றே. ()

தலைவனுடன்படுத்தல்.

5028. நற்றவ ரேபுகழ் மால்வேத நாயக நம்பிமுன்போய்க்
கற்றவ ரேயென மேன்மே லறிவுறக் கற்றவெலாஞ்
சொற்றவ ரேசிறந் தார்சிர சம்பிதந் தோன்றவன்பாற்
பெற்றவ ரேயவ ரிற்சிறந் தாருணர் பெண்ணமுதே. (சகஅ)

பாங்கிதலைவிக்குணர்த்தல்.

5029. வற்றன வானுதன் மங்கைநல் லாய்மண வாளரின்று
பெற்றன போதுமென் றெண்ணார் புவியிற் பிறங்குதரு
வுற்றன வான்கொடை மால்வேத நாயக வும்பன்முன்போய்க்
கற்றன கூறிப் பெறநடந் தார்கடுங் கான்வழியே. (சகசு)

தலைமகள்கார்ப்பருவங்கண்டுபுலம்பல்.

5030. எல்லா முணர்ந்த புகழ்வேத நாயக வேந்தல்வரைச்
செல்லா மினிதுண் டொருசாபங் கோட்டிச் சினங்கொளம்பு
வல்லாம் பொழியவென் றேயெழு மாலினி வண்கலைகள்
கல்லா முணர்ந்தது போதுமென் றன்பர் கருதிலரே. (சஉ௦)

தலைமகளைப்பாங்கி யாற்றுவித்தல்.

5031. நார்வந்த சிந்தைப் புகழ்வேத நாயக நம்பிவெற்பி
னீர்வந்த கண்ணொடு நீயணங் கேனகு நீரணங்கே
பேர்வந்த கல்வி யெலாமுணர் பாக்குப் பிரிந்தவர்தந்
தேர்வந்த தென்றுமுன் கார்வந்த தாலுண்மை செப்புதற்கே.

## காவற்பிரிவு.



தோழிதலைவன்காவற்பிரிவுணர்த்தல்.

5032. தெளியாய் கலங்க லலங்கலங் கூந்தலஞ் சிற்றிடையாய்
வெளியாய் விளங்கு புகழ்வேத நாயக வேள்வரைவாய்க்
களியா யுயிரின்ப மேவுறு பூவுறு காவல்கொள்வா
னளியா யகன்றனர் வன்பரி னீங்கிய வன்பரின்றே. (சுஉஉ)

தலைமகள்கூதிர்ப்பருவங்கண்டுவருந்தல்.

5033. தரைவளர் ஞாயி றெனும்வேத நாயக தாருநெடு
வரைவளர் வாடை யிதுவந்த தாலினும் வந்திலரோ
ருரைவளர் மாதரை யோம்புதல் செய்வ தொழிந்துபல
திரைவளர் மாதரை யோம்புதல் செய்திடச் சென்றவரே. ()

தோழியாற்றுவித்தல்.

5034. செப்போது மென்முலை யாய்விரல் கன்றிச் சிவப்பவொரு
முப்போதுங் கூட லிழைத்தணங் கேல்வெம் முழுமடங்க
லொப்போது வீரப் புயவேத நாயக வும்பனக
ரிப்போது வந்தனர் வான்சரற் காலமென் றெய்த்தன்பரே. ()

## தூதிற்பிரிவு.



தூதிற்குப்பிரிவுதலைமகனுணர்ந்ததோழிதலைமகட்குரைத்தல்.

5035. நாறுகொள் செய்குளத் தூர்வேத நாயக நம்பிவரைப்
பேறுகொள் சீய மிரண்டெதிர்ந் தென்னப் பெரிதெதிர்ந்து
மாறுகொள் வேந்தர்தம் போர்தணிப் பானந்த மன்னரின்று
சீறுகொள் வேற்க ணலாய்தூது மேற்கொடு சென்றனரே.()

தலைவன் முன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

5036. மிகைதோன் றியபுகழ் மால்வேத நாயக வேள்வரைவாய்ப்
புகைதோன் றியவெனத் தோன்றிய தான்முன் பொருந்துபனி
பகைதோன் றியவிடந் தூதுசென் றுரிது பார்த்தடையா
ரகைதோன் றியமனத் தேனென்செய் கேனுள் ளணங்குவனே.

தோழியாற்றுவித்தல்.

5037. துவர்வா யணங்கு வருந்தே லிருவர் தொடர்ந்திறைக்கு
மூவர்வாய் நிலத்தடு போர்மாற்றி மன்னருற் றூர்தளவப்
பவர்வாய் பொழிற்குளத் தூர்வேத நாயக பானுங்க
ரிவர்வாய் மொழிதவ றாரென முன்பனி யெய்துமுன்னே. ()

## துணைவயிற்பிரிவு.

துணைவயிற்பிரிந்தமைதோழிதலைமகட்குணர்த்தல்.

5038. போர்கொண்ட மன்ன ரிருவரன் றூருட் பொருந்துமொரு
நார்கொண்ட மன்னர் துணையாகச் சென்றனர் நண்பர்தமிழ்த்
தார்கொண்ட திண்புய மால்வேத நாயக தாருநகர்
வார்கொண்ட மென்முலை யாய்விரைந் தீண்டுவருதுமென்றே.

தலைமகள் பின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

5039. சென்றா ரொருவர்க் குதவிசெய் வான்மன்னர் செய்யநெறி
நின்றார் பயிலகுளத் தூர்வேத நாயக நேயனரு
ளொன்றார் மகளி ரெனயான் கலங்கவிங் குற்றதுவால்
குன்றார் மணிபுனைந் தென்னப்பின் றோன்று கொடும்பனியே.

தோழியாற்றுவித்தல்.

5040. கற்றார் புகழும் புகழ்வேத நாயகக் காளையிக
லுற்றார் மகளி ரெனக்கலங் கேலிக லோடவொரு
விற்றா ரரசுக் குதவியிங் கெய்தினர் வேந்தர்பொழிற்
சுற்றார் கொடும்பின் பனிசெய்ய லாவதென் றூமொழியே. ()

## பொருள்வயிற்பிரிவு.

தலைவன்பொருட்பிரிவுபாங்கிக்குணர்த்தல்.

5041. பொன்னா லெவையு நிரம்பு மெனாமுனப் பொன்னிறமெய்
துன்னா வருந்துநட் கப்பிரி வெங்ஙனஞ் சொல்லுவல்யான்
றென்னா வெனுந்தமிழ் மால்வேத நாயகச் செம்மனக
ரென்னா மெனுமிடை யாய்புக னீவிரைந் தெய்துவனே. ()

பொருட்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

5042. ஆசை யுறுத புகழ்வேத நாயக வண்ணல்வரை
ஆசை யுறுருக் கிருமையு மின்றென் றதுகுவிப்பான்
ஆசை யுறுமன்ன ரின்றுசென் றாரயில் வேலனுக்கி
ஆசை யுறுமதிற் றொண்குமிழ் பாய்கண் ணணங்கரசே. ()

தலைவியிளவேனிற்பருவங்கண்டுபுலம்பல்.

5043. அருளே கருதிய மால்வேத நாயக வண்ணல்வரைப்
பொருளே கருதி யகன்றன ரன்பரிப் போதுதவா
ரிருளே கருதிய கல்லார் மனத்தி னெழுந்தனநுண்
சுருளே கருது துணர்மாந் தருத்தொறுஞ் சூழ்குயிலே. ()

தலைவியைத்தோழியாற்றுவித்தல்.

5044. சேலே யனையகண் ணாய்மந்த மாருதத் தேர்செலுத்திப்
பாலே கருங்குயிற் சின்னங்க ளார்ப்பப் பவனிவரு
மாலே யுதவு மதன்வீ றுணர்ந்துவர் தார்கலங்கேல்
வேலே யொளிர்கரத் தார்வேத நாயக வேள்வரைக்கே. ()

தலைமகன் றலைமகளதுருவுவெளிப்பாடுகண்டுசொல்லியது.

5045. பொன்னென்று மார்பப் புயல்வேத நாயக பூபன்வரை
மின்னென்று தோன்றுமிப் பாசறை வாய்ந்த மின்னினுக்குப்
பின்னென்று மேகம் பிறையு மதியும் பிணையுமம்ம
முன்னென்று மீதிறும் பூதே விதந்து மொழிதரினே. ()

பாசறைமுற்றிமீண்டேர்வயின்வந்ததலைவன்பாகற்குச்சொல்லியது.

5046. கூறிய சீர்த்திக் குணவேத நாயகக் கோனகர்வாய்த்
தேறிய பாக னனேயென் சோரினைச் சேரலர்போர்
பாறிய பாசறை நின்றெழுந் தாங்குப் படிநெடுந்தே
ரேறிய யானிங் கிழிந்தே னிருந்தில னென்வியப்பே. (சஙசு)

பாங்கிதலைவன்வந்துழிமகிழ்ந்துரைத்தல்.

5047. விரையோ வருந்தொடைத் தோள்வேத நாயக வேணகர்ப்பொன்
வரையோ சிறிதென வானோங்க வம்பொன் வளங்குவித்தா
யுரையோ வருங்கதிர் வேலன்ன லோகல மோவருநின்
றிரையோ வருமிப் புவியினில் வாழ்க்கை சிறப்புறுமே. ()

தலைமகளோடிருந்ததலைமகன்கார்ப்பருவங்கண்டுமகிழ்ந்துசொல்லியது.

5048. சிலையாக வாய்ந்த நுதலிவள் சந்தனச் சேறணிந்த
முலையாகம் விம்ம முயங்கினம் யாம்பொன் முழுமனைபொன்
மலையாக வாழ்குளத் தூர்வேத நாயக வள்ளல்செங்கைத்
தலையாக மேவுதல் போற்பொழி வாழிய தண்முகிலே. ()

குளத்தூர்க்கோவை முற்றிற்று.

---

### விருத்தம்.

5049. நூலியற்றி யீதலொன்றே யுன்னதெனக் கோடலைபன்
னாலு மோர்நம்
மாலியற்றிக் கொடுத்திடுமைந் திணைக்கோவை யேற்றனையா
ளவி லாத
சேலியற்று புனற்குளத்தூர் வேதநா யகமகிபா
சிறப்பச் செய்யுட்
பாலியற்ற லேற்றலிவை யிரண்டினுநீ யெப்போதும்
பயிலு வாயே.

[நீதிநூற்சிறப்புப்பாயிரம்.]

புதுவை வித்வான்

## செ. சவராயலுநாயகர் மாலை.



### காப்பு.

கட்டளைக்கலித்துறை.

5050. மன்னும் புதுவை வளர்சவ ராயலு மன்னவன்மேல்
துன்னும் விருப்பிற் றமிழ்மாலை யொன்று தொடுத்திடற்குப்
பன்னுஞ் சிறப்பும் பொருளு மணியும் பரிந்துதவும்
உன்னும் பலர்க்கு மிடையூறு தீர்த்தருள் வோர்முதலே.

### நூல்.

5051. பூவுந் தளிரும் பரப்பின ரல்லர் புலமையர்செந்
நாவு முளமுங் குடியிருப் பாய்நன்று நன்றயலே
மேவு மிடமிலை கொல்லோ முகிழ்ரேய் வியன்பலவும்
மாவும் பொலிபுது வைச்சவ ராயலு மன்னவனே. (க)

5052. மொழிவார் முகினினக் கொப்பென் றவ் வாறு மொழிவதிலோர்
பழியா முருமு விழுத்தனிற் குண்டுகொல் பாயமற்றென்
றுழியேற்ப துண்டுகொ லாதலி னுமுறை யாமதுப்பூ
வழிசோலை சூழ்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உ)

5053. எல்லாரும் வாழ்த்துவர் நின்னையென் றியாரு மெடுத்துரைப்
அல்லாருங் கூந்தற் பரமா தரையணை யாமையினந் [பார்
நல்லார்பொல் லானென வைவா ருனையிது நானறிவேன்
வல்லார் பொலிபுது வைச்சவ ராயலு மன்னவனே. (ங)

5054. உனைநா வலர்பல கேள்வியின் யாவு மொருங்கறிந்து
தனைநேர் பவனெனச் சாற்றுவ ரேனுமுன் சார்ந்துபெற்றோர்
பினைமேவு வரளிப் பாயறி யாமைபெற் றுயலையோ
மனைவான் றவழ்புது வைச்சவ ராயலு மன்னவனே. (ச)

5055. நாளு யகனென்பை சாதியிற் கல்வியி னற்பொருளில்
ஆளுக் குணத்தி னகத்துண்மை யப்படி யாயினிவன்
ஏளு யகனெனக் காகானென் பாணங்கை யென்னுரைத்தி
மாளு வளப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (ரு)

5056. மேலா விருப்பினும் வெண்மதி யோனை விரவியவான்
தோலா வுருவங் குலைந்தது மண்டொகு நூலுணர்ச்சி
காலாத செம்மதி யானெனு நின்னைக் கலத்தலினுன்
மாலா வளப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (சு)

5057. குணமார் நினையிந்த மண்பெற்று மேன்மை குலவியதாற்
கணமா ரெனக்கொப் பிலையெனும் வானுங் கதிரவனே
வணயார் தரப்பெற்று வைகலி னஃதுமிவ் வண்ணஞ்சொல்லு
மணமார் பொழிற்புது வைச்சவ ராயலு மன்னவனே. (எ)

5058. அருளுற நீசெய் பிரசங்கம் போல வரவிறைவன்
றெருளுற நாளுஞ் செயநினைத் தாங்குந் திருநிலத்தைப்
பொருளுறத் தன்றலை மேற்றாங்கு வானவன் புந்தியனே
மருளமை யாப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (அ)

5059. கற்பக மேவலிற் சங்குங் கமலமுங் கையுறலிற்
பொற்பக மேவக் கனமேற் கொளலிற் புனிதனென்பாஞ்
சொற்படு மாயிரங் கண்வேண் டுவதிலை தூர்த்தன்கொலோ
மற்படு செய்ப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கூ)

5060. பாரித்த பல்பசு வுட்காம தேனுவும் பன்மலருள்
வேரித் தடச்செங் கமலமும் வெற்பினுண் மேருவும்போற்
பூரித்த வள்ளலு ணீயென யாரும் புகல்வர்கண்டாய்
வாரித் துறைப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (க0)

5061. உடுப்பல வற்றுண் மதிபோன் மதாணி யுறுமணியுற்
றடுப்ப நடுப்பொலி மாமணி போற்கல்வி யாளர்குழு
நடுப்பொலி வுற்றனை நீபிறர் தேர்வர்கொ ஞனறிவேன்
மடுப்பல சேர்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கக)

5062. கலைமதி முன்னர் மலராதம் போருகக் கானமென்பர்
அலைவரு நின்முக மாமதி காண்டலு மார்வலர்தந்
தொலைவரு மங்கைக் கமல மலருந் துணிபுணரார்
மலைவரு நீர்ப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கஉ)

5063. எளியரை வாட்டும் வலியரைத் தெய்வ மிறுக்குமெனல்
தெளிதர லுற்றனம் பல்லோரை வாட்டுந் திறன்மிடியின்
களியற வாட்டினை நீதெய்வ மேயெனல் கற்பனையோ
வளியுள ரும்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கங)

5064. காட்சிக் கெளிமை கடுஞ்சொ லிலாமையை காதலித்தார்
ஆட்சிக் குரிய திருவத்தை நீசெய் யருந்தவமென்
பூட்சிப் பரஞ்சுமந் தார்பிறர் பாரம் புவிக்குறவே
மாட்சிப் பொழிற்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கச)

5065. குயிலோசை கேட்ட செவிகருங் காகங் கொடியதெனப்
பயிலோசை கேட்பதன் றேபிர சங்கநின் பாற்கவர்ந்தார்
அயிலூ றுருவ லெனப்பிறர் கூற வவாவுவது
மயிலேர் பொழிற்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கரு)

5066. கண்டோர் நினைமிடி காணார்நின் னட்பிற் கலத்தலின்றி
விண்டோர் பெருந்துயர் விள்ளார் நினைநம்பு மேன்மையுளார்

கொண்டோர் பிறிதொன் றுங் கொள்ளா ரெனிலெவன் கூறன்மலர்
வண்டோ விடும்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கசு)

5067. அளவா வுவர்க்கடல் போற்பெருஞ் செல்வ ரநேகருளர்
கொளவா மொருகிணற் றூற்றன்னை நீயிரு கொள்கையருள்
உளவாம் விருப்ப மெவர்பாலுண் டாமெங்கட் கோதுதிநீ
வளவார் பொழிற்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கஎ)

5068. கொடைவாய் குணம்பொலி நின்னோடு லோப குணம்படைத்த
நடைவாய் குணத்தருந் தோற்றமொத் தார்பய னன்குதவும்
அடைவாய் தருவொடு வற்றலுந் தோற்றமுற் றுவதென்னோ
மடைவாய் பணைப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கஅ)

5069. துதிக்குநின் றோளலர் வேட்டதற் காகத் துடியிடையாள்
கொதிக்கு மதன்கை யலர்பிறர் வாயலர் கூடக்கண்டு
கதிக்கு மிருகண் ணலரொழி யாது கலங்கனன்றோ
மதிக்கும் புகழ்ப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (கசு)

5070. உலம்படு நின்புயங் கண்டென் றுரைப்ப ரொளியிழையாள்
கலம்படு கொங்கைக் களிறுறச் சேர்ப்பது காரியமே
நலம்படு மற்றவை கொண்டகண் டேதியை நாட்டுவதோ
வலம்படு சீர்ப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உ0)

5071. மதியா தவனென நீயிருந் தாலிந்த மங்கையைவான்
மதியா தவனெனக் காய்வான் மதனுஞ்சும் மாவுறச்சம்
மதியா தவனெவன் செய்வா னிதிலென் வருங்கொடைதா
மதியா தவன்புது வைச்சவ ராயலுமன்னவனே. (உக)

5072. தணிவரி தாங்கவி செய்தலி னற்பிர சங்கத்தினால்
அணிகிள ரும்மிசை பாடலி னானல்கு மாக்கத்தினால்
எணிமுடி யாப்பெரும் பேராசை யாற்புக ழெய்துவைநீ
மணிமதில் சூழ்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உஉ)

5073. கொள்ளைத் தமிழ்ப்புல வோரியல் வாய்ப்பக் குறித்தியற்றும்
பிள்ளைக் கவிமுற் பலவுநின் பாட்டின்முன் பேசலென்னே
வெள்ளைக் குணமில் கதிரோன்முன் னுற்ற விளக்கமெனின்
வள்ளைத் தடப்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உக)

5074. ஏதிரங் காமைக் கெவனன வெய்துத லின்றியிராப்
போதிரங் காக்கன வெய்துத லேபெரும் புண்ணியமோ
வாதிரங் காவெளிக் கூறுவ லோவெனு மாயிழையாள்
மாதிரந் தேர்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உச)

5075. பேசப் பிறங்கும் புகழாள ரியாவரும் பிற்கொடையே
ஏசப் படுமிக மென்பார் நறுங்கொத் திணரில்வண்டு
மூசப் படுமுற் கொடைக்கிழுக் கென்னெனு மொய்குழலாள்
வாசப் பொழிற்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உரு)

5076. மாலைவர் தால்வஞ்சி யென்படு வாண்மதி யாமையென்ன
மாலையன் பாருயிர் நீங்கலென் றுமென்று மன்னியபா
மாலைநன் காற்றி யதுமறந் தாய்நின் வயப்புயஞ்சார்
மாலைதந் தாள்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உ௬)

5077. அலைகட னின்கரு ணைக்குடை வுற்ற தடர்கருப்புச்
சிலைமத னின்வனப் பிற்குடை வுற்ற திறத்தினுன்னை
வுலைவற மோகித் திடுமெனைக் காய்த லுளங்குறிப்பாய்
மலைநிக ரிற்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உ௭)

5078. இசையிற் சிறந்த நினைமோகித் தானின் னிசைக்குடைந்து
பசையற் றழல்சுட்ட வேய்சீ றுவதென்ன பாவநெடுந்
திசையிற் பொலியும் புகழாய் புலவர்சிந் தாமணியே
வசையிற் றவிர்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உ௮)

5079. செய்ய தமிழி லகத்திய மாதவற் செற்றனையாம்
ஐய வதனுக் கவன்வாழ் வரைத்தென்ற லாதரித்த
தைய லெனைவெதுப் பஞ்செய்வ தோவிது தக்கதுவோ
வையம் புகழ்புது வைச்சவ ராயலு மன்னவனே. (உ௯)

5080. குழைமணக் குங்கற் பகமோ குலவுசிந் தாமணியோ
மழைமணக் கும்புய லோவிரண் டாக வளர்நிதியோ
இழைமணக் கும்மருப் புத்தேனு வோநின்கை யென்னுரைக்கேன்
வழைமணக் கும்புது வைச்சவ ராயலு மன்னவனே. (௩0)

---

குறள்வெண்பா.

5081. அன்பே யுருவா யமைந்தசவ ராயலுமால்
இன்பே தழீஇவாழ்க வே.

---

இந்நூலாசிரியர் மாணுக்கருளொருவராகிய காரைக்கால்

அ. சவேரிநாதபிள்ளை இயற்றிய

பாடல்.

5082. பூமாலை யென்றுநற் பொன்மாலை யென்றும் பொருவின்முத்
தூமாலை யென்று மணிமாலை யென்றுஞ் சொலவுறுமத் [தத்
தோமாலை கள்பொரு மோசவ ராயலுத் தூயவிந்தப்
பாமாலை மாலையுண் ணிக்கிநன் மாலைப் பயத்தலினே. (௩௧)

---

# சிறப்புப்பாயிரங்கள்.*



## க. விருத்தம்.

5083. திரிசிரா தடியார்க்ளை யெடுத்தாண்டு பவமாற்றிச் சுகமே நல்குந்
திரிசிரா மலையாற்குப் பதிற்றுப்பத் தந்தாதி சிறப்பச் செய்தான்
பரிசிலாப் புகழ்த்தோருக் கறதாட்டிச் செழுக்கர்தம் பரத்து வீசுங்
கரிசிலா வியலொடிலக் கியமுணர்ந்த நாகமுத்துக் கவிஞன் றானே.

பராபவ௵ மார்கழிமீ. (திரிசிராமலைப்பதிற்றுப்பத்தந்தாதி.)

---

## உ. நேரிசைஆசிரியப்பா.

5084. பூமலி குளிர்தெண் புனற்பெருந் தடத்துக்
கவையடிச் செங்கட் களல்பிணர் மருப்புக்
கடமருள் செருத்தற் கவரி தளைபரிந்து
புழற்கா லாம்பற் பூநனி மிசைவான்
௫ றேறுடு தாட்பைஞ் சூட்டன மிரிய
மடச்செழு நாரை வயிறெனப் பிளிறக்
கயலின மடவார் கண்ணிற் பிறழச்
சலஞ்சலப் புஞ்சந் தளைபுக் கொளிப்ப
முட்டாட் டாமரை மொய்த்தடை கிடக்கு
௧௦ மகஞ்சிறைத் தும்பி யகன்குலைப் பரப்பிற்
றேங்கமழ் பொங்கர்ச் செறிந்திறை கொள்ள
மாங்கனிக் கொள்ளை வரம்பில வுதிரக்
குறுங்கழுத் தரம்பைக் கூன்குலை மூறிய
முட்புறப் பாகன் முதிர்கனி கிழியச்
௧௫ செறிபசுங் கந்திச் செம்பழஞ் சிதறப்
பொலிபிலாங் கலிமுப் புடைக்காய் வீழ
வெழுபுமீத் தகட்டகட் டிளவரால் பாயக்
கருங்கடற் பாயுங் கந்தர நிகர்ப்பக்
கதழ்விற் பாய்ந்து கலக்கு புழிதந்து
௨௦ கதிரிளம் பசும்புற் கறிக்கக் கல்லா
மழவிளங் கன்றைப் படர்ந்துவார்ந் தொழுகப்
பொழிபால் பெருகிப் புணர்நிரைத் தீம்பா
லாழிகொ லோவென் றமரரு மயிர்ப்ப
மடையுடைத் தோடும் வரையாப் பெருவள

---

* பிள்ளையவர்களியற்றிய சிறப்புப்பாயிரங்களுள், கிடைத்தவைமட்டும் காலமுறைப்படி இங்கே பதிப்பிக்கப்பெற்றன.

௨௫ நல்லூ ரென்னும் வல்லூ ரதிபன்
பார்கரு ணீப்பப் பயில்குல மென்னுஞ்
சீர்கரு ணீகர் செழுங்குல சிகாமணி
மின்னப் பேந்திய வேணியற் கன்புறு
மன்னப் பேந்திர னருள்வரத் துதித்தோன்
௩0 னிமையவர் தருவு மிமையாச் சுரபியுங்
கமஞ்சூன் முகிலுங் கதிர்கான் மணியு
மருநிதி யிரண்டு மழுக்கா றடையப்
பெருங்கொடை யெவர்க்குந் தருங்கர வள்ள
லொழுக்கமுஞ் சீலமும் விழுப்பெருந் தவமு
௩௫ மாணு வன்பு மானமும் பொறையு
நாடொறு நாடொறு நலம்பெற வளர்ப்போ
னீனிறஞ் சேரா நெடுமால் போல்வா
னுண்ணறி வுடையோர் நூற்பொருள் விரும்புந்
தண்ணளி யிராம சாமிக் குரிசி
௪0 றன்னுடை யரும்பெறற் றனைய னாகிய
தலைபுகழ் வீராச் சாமி மகிப
னுஞற்றிய தவத்தா லுதயஞ் செய்த
தேவ ராசச் செவ்வே ளென்பா
னற்குணம் பொறுமை ஞான மொழுக்கங்
௪௫ குறையா தமைந்த நிறைவு பூண்டு
தொல்காப் பியமுதற் றோன்றிலக் கணமு
முன்னுமைங் காப்பிய முதலிலக் கியமும்
பற்பல சமய நற்புறு நூலு
மற்றுள கலைகளுங் கற்றினி துணர்ந்து
௫0 மிகுவட நூலுளும் வேண்டிய தெரிந்து
சோதிட நூலுந் துரிசற வோர்ந்து
பிறங்குறு மறிவிற் பெரியோ னாகி
வண்புகழ்க் குசேல மாதவன் சரிதையைத்
தமிழிற் பாடத் தானஃ தறிந்து
௫௫ தன்னவைக் களத்து மன்னுற வழைத்துத்
தொக்கள வில்லார் சூழ விருப்ப
விரித்துரைக் கென்று விருப்பிற் கேட்டுக்
கவிதொறுங் கிடக்குங் கற்பனை வியப்புஞ்
சொல்லுடை மாண்புந் தொகுபொருண் மாண்பு
௬0 மற்றுள சிறப்பும் வகைப்பட வாராய்ந்
தற்புத மற்புத மென்றக மகிழ்ந்து
விரிகடல் சூழ்புவி விளங்கப்
பரிவுட னச்சிற் பதிப்பித் தனனே.

சாதாரண ஹூ சித்திரைமீ. (குசேலோபாக்கியானம்.)

---

## ௩. விருத்தம்.

5085. சீர்பூத்த சிரமாலை தாங்குபர சிவன்முடிபோற் சிறப்பனா ரும், பேர்பூத்த வுடுமாலை தாங்குமுடித் திருத்தணிகைப் பெருமான் மீதி, லேர்பூத்த சொற்பொருணன் னயஞ்சிறப்ப வொருமாலை யியம் பினன்சூற், கார்பூத்த பொழில்வல்லூர்த் தேவரா சக்குரிசில் கவிஞ ரேறே.

பரிதாபி வருப ஆடிமீ. (திருத்தணிகாசலமாலை.)

---

## ௪. நேரிசையாசிரியப்பா.

5086. மலர்தலை யுலகின் மாவெனைழின் மாதர்க்
குற்றிடு புலவி யுணர்த்திடு மைந்தர்
மாலையிற் றாழ்தலுங் காலையி னிமிர்தலுங்
கொண்டது பொருவ விலங்குகள் யாவும்
௫ பனிபடு மிரவிற் பாருறத் தாழ்ந்தும்
வெயில்படு பகலில் விண்ணுற நிமிர்ந்து
மேவுதல் கண்ட வோவரு மிறவுளர்
செருமுகத் தெதிரும் பொருவரு நங்கைக்
குறவளை தனுவு மோங்கிருங் கழையு
௧௦ மாவான் பயிலுமிம் தழகிதென் றுவக்கு
நந்தியம் பொருப்பி னந்தினின் றிழிந்த
பாலியம் புனல்பாய் பண்ணை வாய்ந்தும்
புகழ்தரு மறைமுதற் பூமென் றொடையு
மறைகுடி யிருந்த வாய்வன் றொடையுஞ்
௧௫ செவ்வான் முளைத்த சிறுமதிக் கொழுந்து
மொருகான் மிசைமுக் கிளைவிடு தன்போற்
காம்பொடு பொலியுங் கூவிளந் தளிருந்
தன்னமு தடைத்த துன்னுபல் லரவு
மாடகப் பெயர்க்க ணவனிலுங் கொடிதாய்ப்
௨௦ புவிபிலம் புகுதப் போர்த்தவான் புனலும்
வெண்ணிற வளைகொள் கருநிறக் கடலி
னுந்தியந் தாமரை நந்திய வன்ன
மின்னமு முணரா மின்னகு சடையிற்
செறிதர வைத்த வறிவுரு வமலன்
௨௫ முழுதுல கீன்ற வெழுதரும் வடிவக்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கன்னியோ
டறைபுகழ்க் காஞ்சிமு னளவரு மிடங்கொண்
டிறைதரப் பொலியு முழுதவம் வாய்ந்துஞ்
சொல்லருஞ் சீர்சேர் தொண்டைநன் னாட்டிற்
௩௦ பறைதபச் செய்த பழம்பகை கருதி

யிந்திர னுலகிற் கிடரியற் றிடுவான்
வரைபல கூடி வளர்ந்துநின் றென்ன
வானள வுயர்ந்த மாளிகை மீமிசைச்
சுடர்பொற் கைபிடி சுவர்சூ ழெடுத்துப்
கூடு பளிங்கு படுத்த வளங்கெழு வெளியை
நெடுவரை மிசையமர் நீர்நிலை யென்று
மவ்விட மேய கொவ்வையங் கனிவாய்த்
துடியிடை மாதரைத் துறுகொடி யென்று
மவர்திரு முகமுத லவிரவ யவங்களை
சo நன்மணங் கமழும் பன்மல ரென்று
மும்பர்க ளுள்ளத் துன்னுபு கொய்தென
வுயிர்நிகர் மட்வார்க் குதவிமகி ழுறுப்பா
னுவயின் மேவி யன்மையின் வெள்கி
மேவுதல் கண்ட வோவரு மடவா
சரு ரென்னுளத் தெண்ணினி ரெவ்விடத் துற்றனி
ரெத்தொழி லியற்றினி ரினிதுதுய்த் தனிர்கொல்
புரிதக வில்லீர் போமெனச் சினப்ப
வடிக்கடி மலர்மிசை யடிக்கடி வீழ்ந்து
நயனுரை கிளப்பவர் நகுபூண் மடவார்
ருo சிலம்பொலி யெழுப்பச் செஞ்செவி புதைத்த
பளிக்குநிலை நின்ற பாவையர் களிக்கும்
வளமலி சீர்சால் வல்லூ ரதிபன்
சீர்கரு ணீகர் செழுங்குல சிகாமணி
தண்ணளி வீராச் சாமிமால் புதல்வன்
ருரு சைவசித் தாந்த மெய்ந்நெறித் தலைவன்
புண்ணிய நாளும் போற்றி வளர்ப்போன்
குறிப்பறிந் தியாவுங் கொடுத்திடு மிவற்கு
வாய்விண் டுறைந்தபின் வழங்கிடுந் தருவோ
பொருவென யாரும் புகழ்ந்திடப் பொலிவோ
கூo னற்குண நற்றவ மொற்கமின் றமைந்தோன்
றேவ ராசச் செம்ம லென்பான்
றொல்காப் பியமுந் தொல்காப் பியங்களும்
பதிபசு பாசப் பகுப்புணர் நூலும்
பற்பல வாய பரமத நூலு
கூரு மேதினி விரும்புஞ் சோதிட நூலு
மற்றுள கலையு மயக்கற வுணர்ந்து
மிகுவட மொழியுளும் வேண்டுவ தெரிந்து
பெயரா வறிவிற் பெரியோ னாகிப்
பயின்றதற் கேற்ற பயன்கடைப் பிடித்து
எo வாத ராயண மாதவ முனிவன்
மேதகு சூத மாதலற் கோதிய

புராணமு வாறுட் புராதனன் புராணம்
பத்துளுஞ் சிறந்த வுத்தமக் காந்தத்
தாறுசங் கிதையுளு மரும்பொரு ணிறைந்த
எரு வோதரும் புகழ்சால் சூதசங் கிதையை
வண்மொழி பெயர்த்துத் தண்மொழி யமைந்த
செந்தமிழ்ப் புலவர் செவிக்கமு தாகவு
மெய்ஞ்ஞா னியர்கள் வியந்துகொண் டாடவு
மிதமலி தமிழா லியற்றின ஞக
அ௦ வன்னமெய்த் தவத்தோன் பின்னர்வண் துதித்து
நலஞ்சா லறிவுங் குலஞ்சால் சிறப்பு
மாறு விழுப்பமு மாறு வொழுக்கமு
மொருவரும் கொடையும் பொருவருந் திருவு
மேன்மே லமைந்த மெய்ப்புகழ்ச் செல்வர்
அரு வரத ராச மாதவ முகிலுங்
கோவிந்த ராசக் குணப்பெரு நிதியு
மிருவரு முன்னோ னருமையிற் செய்த
சுவைபல தருமச் சூதசங் கிதையி
லுற்றபல் சிறப்பு முற்ற வுணர்ந்து
கூ௦ பொருதிரைக் கடல்சூழ் புவியிற்
பரவிட வச்சிற் பதிப்பித் தனரே.

ராக்ஷஸஸுபு கார்த்திகைமீ க-௨. (சூதசங்கிதை.)

---

ரு. விருத்தம்.

5087. மாமேவு கற்பகப் பூந்தளிரு நறுமலரும் வாட்டமற் றெ ளிர வான்மேன் - மாலென வுயர்ந்துதழை சோலைபுடை சூழும்வள வாணியம் பதிதழைப்பப், பூமேவு மொருபாற் பசுங்கொடி தழைப்ப வளர் பொற்றரு வினிற்றழைத்த - பூரணி யிடப்பரம காரணர் விரிஞ் சேசர் பொன்னங் கழற்கணியெனப், பாமேவு மொருசதக மினிதுபா டுகவெனப் பரவுதம் பாலேற்றவர் - பாலெவரு மேற்பவருண் மால் வேங்க டப்பமுகில் பரிவுற் றுவந்துகேட்பத், தூமேவு சொற்பொரு ணயம்பெறச் செய்தனன் றுதிவீர ராகவப்பேர்த் - தூயனருண் மை ந்தனய மிகுசோட சவதானி சுப்பரா யப்புலவனே.

ஸஙுபு ஆவணிமீ. (விரிஞ்சேசர்சதகம்.)

---

சா. நேரிசைவெண்பா.

5088. தேனருவி பாயுஞ் சிராமலையி லென்றுமமர்
ஞானமுதற் கன்பி னயம்பயப்ப—மேன்மைபெறுஞ்
சுப்பரா யப்புலவன் சொல்லியவெண் பாமாலை
யெப்பொழுதும் வாழ்கவினி தே.

ஸஙுபு. (திரிசிராமலைவெண்பா.)

---

## எ. விருத்தம்.

5089. பன்னுபுகழ்த் திருமயிலைக் கபாலிதிரு வுளமகிழப் பாவலோர்கள்
தன்னுபெருங் களிசிறப்பப் பதிற்றுப்பத் தந்தாதி சொற்றா னூரு
மின்னுபுகழ் கனிபடைத்த வண்ணாத்தை மகிபாலன் விரும்பு மைந்தன்
மன்னுசிவ நேசசிந்தா மணியென்னு மொருசாமி வள்ளன் மாதோ.

ளஎளு ஐப்பசிமீ. (திருமயிலைப்பதிற்றுப்பத்தந்தாதி.)

---

## அ. நேரிசையாசிரியப்பா.

5090. மலர்தலை யுலகி னலர்பல வுயிரு
மறமுத லொருநாற் றிறமுமெளி தடையத்
தெய்வமுண் டென்று தெளிதான் முன்வைத்
தஃதுணர்ந் தார்க்கே யத்தே வியல்பும்
ரு வாழ்த்து முணர்ந்தியற்ற மனமுறு மாதலி
னதுபின் னுறவமைத் தாசர்த நீதி
தெய்வ நீதியே சிவணு மாதலிற்
பின்னது நிறுவிப் பெரும்பூ பால
ரியல்பொடு பிரியா தியலுந் தன்மையிற்
கம குடிகன தியல்பு குறித்ததன் பின்னமைத்
தியல்புறத் தழீஇய விருங்குடிக் கல்லது
ஞான சாரிய னண்ணா னாதலி
னனையவன் பெருமை யனையதன் பின்னமைத்
தியலா சிரிய னியலுணர்ந் தார்க்கே
கரு பொய்யா சிரியன் புன்மை தோன்று
மாதலி னவனிய லதன்பின் னுறநிறீஇ
யாரிய னியல்போர்ந் தடுப்பார்க் கன்றித்
தந்தைதாய் வணக்கந் தகாமையி னஃததன்
பின்னுற நிறுவியிப் பெற்றியின் வணங்கு
உ0 மைந்தருக் கனையார் மகிழ்ந்தாற் றுதலிவை
யென்றுநூல் கற்பித் திடுதல் வளர்த்தன்
மற்றதன் பின்வைத் துற்றுழி யுதவல்
கல்வியே யாதலிற் காமரு மாதரு
முணருமா றதன்பின் னுறவஃ துறுத்திக்
உரு கற்றோர்க் கன்றி மற்றோர்க் கியலா
தென்பது தோன்ற விருஞ்சகோ தராியல்
பன்புற வதன்பி னமைதர நாட்டி
யுடன்பிறந் தாரொழுக் குறுமில் லறத்திற்
கின்றி யமையா தென்பது தோன்றக்
ஙo கிழவன் கிழத்தி யியலதன் பின்வைத்
தியலுறு கிழத்தி யியலுணர்ந் தார்க்கே
யலன்மறு தலையா மணர்ந்தனடை யுணர

வருமத னுலது மற்றதன் பின்வைத்
திவ்வா றொழுகு மியல்புடை யுயர்ந்தோர்
௩டு தாழ்ந்தோர்த் தாங்கலுந் தாழ்ந்தோ ருயர்ந்தோர்க்
கடங்கி யொழுகலு மறனென வதன்பி
னென்றன் பின்ன ரொன்றுற நிறுவி
யடங்கி யொழுகுநர்க் ககலும் பொய்ம்மை
பொய்மின் றகலப் போமே களவுங்
௪0 களவு நீங்கக் கைவிடுங் கொலையுங்
கொலையது தொலையக் குலைதரு மதுவு
மதுக்குடி யகல மாறுஞ் சூதுஞ்
சூது நீங்கப் பரிதானந் தொலையும்
பரிதான மகலப் படும்புறங் கூறலும்
௪டு புறங்கூற லொழியப் போம்பெரி யோரைத்
தூற்றலு மஃதறத் தொலையு முலோபமு
முலோப நீங்க வொழியுஞ் சோம்பலுஞ்
சோம்ப னீங்கத் தொலைதருஞ் சினமுஞ்
சினமது தீரச் சிதையும் பொறாமையு
௫0 மென்பது தோன்ற விவையெலா மதன்பி
னென்றன் பின்ன ரொன்றுற வமைத்துப்
பொறாமை யொழிந்த புண்ணியர்க் கல்லது
கல்விச் செருக்குங் காரிகைச் செருக்குஞ்
செல்வச் செருக்குஞ் சேரா வென்பதற்
௫டு கதன்பினெவ் வொன்று வடைவுற நிறுவிச்
செருக்கொழிந் தவரே தீயரைச் சேரா
ரென்பது தோன்ற வதன்பி னிணைத்துத்
தீச்சார்பி லார்க்கே செறிபிழை பொறுத்த
லினியசொற் கழற லியலும் பிறர்க்குத்
௬0 தீங்குசெய் யாமை செறியுமென் றதன்பின்
முறையொரோ வொன்று முயங்குற வைத்து
நினையுமிந் நெறியோர் நெடுத்துயி றுறப்ப
ருரைக்கும தறப்பே ருண்டியு மொழியும்
புகலஃ தறத்தற் புகழ்தலு மொழியு
௬டு மிஃதறு தெனிற்புக ழிகழ்மதி யாமை
யுண்டா மென்றற் கொன்றன் பின்ன
ரொன்றுற வதன்பி னுறுமுறை நாட்டிப்
புகழிகழ் மதிக்கும் புண்ணியர் தமக்கே
பரோப காரம் பலிக்குமென் றுணர
௭0 வதன்பி னிறுவி யத்தகை யோரே
பொருளவா வொழிவரப் புண்ணியர் தமக்கே
மெய்ந்நிலை யாமையும் வெளிப்படு மவர்க்கே
துன்பப் பகுதியுந் தோன்றிடு மவர்க்கே

யறஞ்செயுந் திறமுண் டாமவர் தாமே
௭௫ கணிகைய ரியல்பு கழிப்பரென் றுணர
விலைமுறை யதன்பி னியைதர நாட்டிக்
கரைதரு மினையர் கழுகந் தோட்ட
மென்றூற் போல வியல்விலக் கினத்துக்
கிடர்செயா ரெனல்பின் னியைதர வமைத்து
அ௦ நீதிநூ லென்றோர் நிலவுபெய ரிட்டுத்
திருமா றந்த தெள்ளமு தொப்ப
யாவரு முவப்ப வினிதி னியற்றித்
தந்தன னொருநூ றவலருங் கேண்மைமற்
றன்னவன் யாரெனி னறைகுதுங் கேண்மோ
அ௫ புலிக்கொடி கயற்கொடி பொருவிற் கொடியுடை
வேந்தர்த நாட்டுறை வேளாண் மாக்கள்
சோழிய ரென்றும் பாண்டிய ரென்றுங்
கொங்கரென் றும்பெயர் பெற்றன ரவருள்
வளரெறும் பீசர் மலைக்கு மேற்குக்
௯௦ கடும்புனல் பாய்மதிற் கரைக்குக் கிழக்கு
நலந்தரு காவிரி நதிக்குத் தெற்கு
வளம்பொலி நம்பிரான் மலைக்கு வடக்கு
நவிலுமிவ் வெல்லை நான்கனுட் பட்ட
விடங்குடி கொண்ட வியல்வே ளாளர்
௯௫ முன்ன முரைத்த முத்தமிழ் வேந்தரு
மெங்கண்மூ வருக்கு மியன்முடி சூட்டுதற்
குங்களை யமைத்தன மூவந்துகொள் வீரெனக்
கொண்டுமகிழ்ந் தனையார் கோத்தன் மையரே
யாயின ரதனு லவர்வாழ் நாடு
க௦௦ கோனு டென்றோர் குலவுபெயர் பெற்ற
துரைக்கருங் குன்ற மொருபதி னெட்டு
நத்த மெழுநூற் றறுபத் தாறு
முன்னும் படிநன் குளகுளக் காடு
முன்னுமா யிரத்து முந்நூற்று முப்பதுந்
க௦௫ தேவா லயங்கள் சிறக்குநூற் றெட்டு
மிரும்பிர மாலய மிருபத் தெட்டுங்
குறையறக் கொண்டவக் கோனுடு பின்ன
ரறைதரு புனல்வெள் ளாற்றின் றென்பா
லுரைதென் கோனு டொலியூர்க் கூற்றந்
க௧௦ திரைகரை யெறியுமத் திருநதி வடபா
லொளிர்வட கோனு டுறையூர்க் கூற்ற
மெனப்பெயர் பெற்றுநன் றியங்குங் காலம்
வண்மையவ் வேளாண் மாக்கண்மிகப் பெருகி
வடகோ னுட்டில் வண்குளத் தூரிற்

கக௫ பெரிதிருத் தலின்மிகப் பெரியகோ னுடென்
றொருபெயர் பெற்றவவ் வொண்குளத் தூரிற்
கொங்கு ராயர் கோத்திர மதனில்
வந்தவ தரித்த செந்தமிழ்க் குரிசி
லிரும்புவி யேத்து மிளேயான் குடியி
கஉ0 லருமுளே வாரி யன்னம் படைத்த
குருமணி மாறனங் குலமெனுங் கொண்ட
லவிர்விரை யாச்சிலே யாண்டார் திருமலே
யுடையான் கருவரா லுகளரி யாற்றன்
குளிர்புனல் வயறொறுங் குலவுகோ னுட
கஉ௫ னமரும் புகழ்வே ளாண்குளத் தூரா
னுச்சைச் சிரவ முறழும் பரியா
னயிரா வதங்க ராயதிண் களிற்றன்
குளிர்மதுப் பொழியுங் குவளேமா லிகையா
னுலக மூன்று முணர்கொடை முரசான்
கங0 வெற்றிக் கொடியெனு மேழிக் கொடியா
னடங்கலர் நடுங்க வடர்க்கு மாணேயா
னளவில்பன் னூலு மரிறப வுணர்ந்தோன்
பண்பெலா மோருருப் படைத்தெனப் பொலிவோ
னூருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
கங௫ பேரறி வாளன் றிருவெனப் பெரியோ
ருரைத்தவாக் கியத்திற் கொருசான் றாகப்
பயன்படு செல்வம் படைத்து மகிழ்பூமா
னடைந்தோர் வெங்கலி யடர்க்குந் திறலோன்
பிறர்மனே நோக்காப் பேரறி வாளன்
கச0 கற்றோர் நட்புக் கழலாக் கனவா
னுனில முவப்ப நடாத்து நீதியா
னரும்பொருள் செறியு மைந்திணைக் கோவை
நம்பாற் கேட்ட நகுபுகழ்ப் பெரியோன்
வலந்தரு நதிக்குல வள்ள
கச௫ லலந்தரு வேத நாயக மாலே. (க)

விருத்தம்.

5091. தெரியவிரு வேறுலகத் தியற்கைதிரு வேறு தெள்ளி யரா தலும்வேறென் றுள்ளபடி யுரைத்த, வரியபுகழ் வள்ளுவர்தம் வார்த்தையினே மறுத்தா னரசர்கா ரியநடவு மதிகாரத் தொடுநூ, லுரி யவென வுணர்ந்துபெருஞ் செல்வமுங்கல் வியுமிக் கொருங்கடைந்து பொருட்கொடையி லொப்பிலா னுகி, விரியவனி மகிழவொரு நீதிநூ லியற்றி விளக்கியசீர் வேதநா யகக்குரிசி றானே. (உ)

வேறு.

5092. வள்ளுவரா தியரோநன் னீதிநூ லுரைப்பதற்கு வல்லா ரென்று, துள்ளுவர்யா வருமினைய தன்மையா யினுங்குளத்தூர்ச்

சருண வள்ள, லுள்ளுவர்பா லருணிறுவும் வேதநா யகமஙிப னுரைத்த நீதி, தன்ளுவர்யா ராதலிற்றேற் றேகாரந் தவிர்த்திசைத்த றகுதியாமே. (ங)

5093. ஓதிநூ லுணர்ந்தகுளத் தூர்வேத நாயகமா லுவப்பிற் செய்த, நீதிநூ றேவியலா சிரியனிய லுணர்த்துதலா நிகரின் ஞானச், சோதிநூ லெனச் சொலலா மிந்நூன்மு ளெந்நூலுஞ் சொல்லிற் கா னூல், பாதிநூன் முக்காலு லுலட்டுநூல் சிலம்பிநூல் பருத்தி நூலே.

5094. வில்லாரு மதிற்குளத்தூர் வேதநா யகமஙிபன் விருப்பிற் செய்த, நல்லாருண் மகிழ்நீதி நூலிலுள கற்பனையு நயமு மோரி,னெல் லாருங் கற்றவரே யெல்லாரும் பாடுநரே யெல்லா ருந்தாஞ், சொல் லாரு மறிவினரே யறிவினர்தந் துதியவருஞ் சூடு வாரே. (ரு)

5095. முன்னோர்க ளுரைத்தபெரு நீதிநூற் பொருடெரிய முயலி னம்மா, பின்னோர்க ளுரைத்தவுரை பலவவையோ ரினுமை யம் பிறந்தொன் றற்கொன், றன்னோர்சொன் மாறுபடும் பொருள்வி ளங்க வுருபுமுத லவிழ்த்துப்பாடு, மன்னோர்நம் வேதநா யகமுநிநூல் போலுளதோ மதிக்குங் காலே. (சு)

5096. பொருளுடையோ னீயேயோ வடதிசைக்கோ மகனுமு ளன் புவனங் காக்கு, மருளுடையோ னீயேயோ நெடுமாலு முளனீதி யமைநூல் சொல்லுந், தெருளுடையோ னீயேயோ வள்ளுவனு முளன் குளத்தூர்ச் செல்வா நாளு, மிருளுடைய வெழுகதிர்நேர் வேதநா யக மஙிபா வியம்பு வாயே. (எ)

5097. தாவினூற் பொருட்கேள்வி யுறலதிக மதற்கதிகந் தானே கற்றன்,மேவியதை வெளிப்படுத்த லதற்கதிக மதற்கதிகம் வியன்பாச் செய்தல், பாவினுங்கற் பனையமைத்த லதற்கதிக நீதிநூல் பாடலு ளும், பூவினிடை யதிகமெனின் வேதநா யகமஙிபன் புகழெற் றுமே.

5098. சேல்பாயும் புனற்குளத்தூர் வேதநா யகமஙிபன் செய்த நீதி, நூல்பாயு மறிஞரே நுண்ணியராய்ச் சிறந்துவரு நோன்மை யாலே, வேல்பாயுங் களிற்றரசர் மேன்மேலும் விருப்பமுற விளங்கி யின்பச்,சால்பாயுங் கடவுளடிக் கீழுறைவ ரென்னாளுந் தவாது தானே.

5099. நூலியற்றி யிதலொன்றே யுள்ளதெனக் கொள்ளவைப்பன் னூலு மோர்நம், மாலியற்றிக் கொடுத்திடுமைந் திணைக்கோவை யேற் றனையா ளளவி லாத, சேலியற்று புனற்குளத்தூர் வேதநா யகமஙிபா சிறப்புச் செய்யுட், பாலியற்ற லேற்றவிவை யிரண்டினுநீ யெப்போ தும் பயிலு வாயே.

வேறு.

5100. ஆயபுவி யாளுமங்கி லேயமன்ன ராண்டோ ராயிரத் தெண் ணூற்றைம்பத் தொன்பதனுக் கொத்த, தூயபுகழ்க் காளயுத்தி யாண்டுறுதைத் திங்க டொகுதஞ்சைச் சுபாசிகா ழித்தாலு காவின்,

மேயமுன்சீ பதிகாரஞ் செலுத்திநோன் ளுளின் விளங்குகுளத் தூர்ச் சவரி முத்துமகி பால, னேயவரோ தயன்வேத நாயகப்பேர்க் குரிசி னீதிநூ லியற்றியராங் கேற்றினனன் குறவே. (கக)

காளயுத்திஹு தைமீ. (நீதிநூல்.)

---

க. நேரிசையாசிரியப்பா.

5101. திருவளர் மார்பத் துருவளர் கோவுந்
தாமரை வாழ்க்கைக் காமருதேவு
நண்ணுதற் கரிய கண்ணுதற் பெருமா
னுமையொரு பாகத் தமைதர நாளும்
ரு பெற்றும் விகாரஞ் சற்று மிலாதவ
ளெருவா வைந்தொழின் மருவா நின்றுந்
தொழிலொன் றில்லா வெழிலொன் ளெருவன்
மண்ணுரு வாதி யெண்ணுரு வெட்டு
மேவுரு வத்து வாவுரு வாறுஞ்
க0 சாலவைந் தொழிற்கு மூல மாகிய
வொன்பா னுருவு மன்பான் மருவியு
முருவொன் றில்லான் கருவொன் றில்லான்
ருணிடு மலரைக் காணிடு மலரென்
றுன்ன வுருவுற முன்ன முதல்வன்
கரு முத்தி விரும்புநர் பத்திமை யென்னும்
பொருணயக் தமருங் கருணையெம் பெருமான்
செந்தளி ரீன்று பைந்துணர் ஈன்று
கனிபல பழுத்து முனிவறப் பிலிற்று
நறவுவட் டெடுத்துச் சுறவுழக் ககழி
உ0 யோருவப் பெய்த சீருவர்ப் பகற்றி
யுயிர்மல மகற்றுஞ் செயிரகல் குரவர்
தன்மை தெரிக்கு நன்மையிற் பொலியுந்
தேமாம் பொழிலும் வாமாஞ் செறுவும்
பொற்ப வுடுத்த கற்பமெண் ணிலதெரி
உரு குருந்துறை தெய்வப் பெருந்துறை மேவித்
திருவுரு வென்னுங் குருவுருக் காட்டி
யருடர நன்று மருடப நின்று
துரியங் கடந்து பிரியம் படர்ந்த
போரா னந்த மாரா நின்ற
ங0 வேதவூ ரெனவு நாதவூ ரெனவும்
போத வூரெனவு மோதவூர் சீர்த்தி
வாதவூ ரடிகள் வாய்மலர்ந் தருளிய
திருக்கோவை யாரெனுந் தெய்வமா மறையை

...............................,, ......

௩௫ ................நவின்றபே ருரையொடு
கரலிகி தங்களிற் காண்பிழை மாற்றிச்
சிரலிகி தம்போற் றிருந்துற வாற்றி
யச்சிற் பதிப்பித் தமைதரத் தருகென்
றிச்சகம் புகழு மிராசகு ளாமணி
௪௦ நலந்தரு மிராம நாத புரத்தில்
வலந்தரு செங்கோன் மாண்பி னடாத்தி
யரசுவீற் றிருக்கு மண்ணனற் குணமே
விரசுமா மேரு விரைநறுங் கமல
மாதுபதி யென்று.வானவர் துணிபுற்
௪௫ றோதுபதி பற்ப லுயிர்க்குநல் லருட்கடல்
கோதுபதி யாத குலசிந் தாமணி
சேதுபதி ராணி திரைக்கடல் வரைப்பிற்
றுன்னுமா ருயிர்க்கொ ந் தோன்றுதா யேயாய்
மன்னுசீர்ப் பருப்பத வர்த்தனி நாச்சியார்
௫௦ தமக்கினி தாய சகோதரி யாரு
நமக்கினி தாஞ்சிவ ஞானத் தேவரு
மியற்றருந் தவத்தா லிருநில மகிழவு
மயற்றலை புகுத்தா வண்டமிழ் தழையவுந்
திகழ்தரு பற்பல சிவாலயம் விளங்கவும்
௫௫ புகழ்தரு தருமம் பொலிந்து முழங்கவு
மறக்கடை யாவு மஞ்சியோட் டெடுக்கவும்
பிறக்கடை ஞானப் பெருவிளை வோங்கவும்
கலிதரு நரகக் கடுங்கத வடைக்கவும்
பொலிதரு மின்பப் புதவந் திறக்கவு
௬௦ முணருந் திறத்தர்க் கொளியா மொருவன்
புணருந் திருவருள் போலவ தரித்தோ
னற்புறத் தமிழோ டளாய்நறுஞ் சாந்தம்
பொற்புறக் கமழும் பொதியமால் வரையா
னணிபல கொழிக்கு மருந்தமிழ்ச் சுவைதெரீஇ
௬௫ மணிபல கொழிக்கும் வையைமா நதியான்
கன்னலுங் கமுகுங் கதலியும் பலவுஞ்
செந்நெலும் பொலியுஞ் செம்பிநன் னாட்டான்
றன்னெயி லெனமேற் றலங்கொண் டிவக்கப்
பொன்னெயி லோங்கும் புதுவைமா நகரா
௭௦ னினியெனல் பொய்ம்மை யிதுவே மால்கொ
டனியுரு வென்று சாற்றுவாம் பரியா
னுற்றுள வொருகோட் டொன்றனை வணங்கி
மற்றுள வெவையும் வணக்குமால் களிற்றான்
கண்டுநிகர் மொழியார் கண்ணெடு காமர்

௭௫ வண்டுபடிந் துழக்கும் வாகைமா லிகையான்
றண்டார் புனைந்து தடஞ்சிலை குனிக்கு
மண்டார் நடுங்க வதிர்தரு முரசான்
மயலுக் கொடியா வருந்தவே லுயர்த்த
கயலுக் கொடியாக் காவிக் கொடியான்
௮௦ றாய்ப்புகு மான்றேர்த் தரணியொண் செங்கதிர்
போய்ப்புகு மிடமெலாம் போய்ப்புகு மாணையான்
மேவிக் குடையான் விறல்கொடு தொடுக்குங்
காவிக் குடையான் காவிக்குடையான்
சேரார் மணிமுடி தேய்க்குந் தாளான்
௮௫ காரா ரிருநிதி காம தேனு
கற்பகத் தையும்புறங் காணுங் கையான்
பொற்பக மலர்ந்து பொலிதிரு மார்பா
னொன்றல மேருவென் றுரைசெய்திண் டோளான்
மன்றமறு வில்லா மதியெனு முகத்தா
௯௦ னருண்மடை திறந்தா லனையசெங் கண்ணான்
பொருணயந் தெரிந்து புகக்கொளுஞ் செவியான்
கனவினுங் கடுஞ்சொற் கரைதலில் வாயா
னனவினுங் கனவினு நள்ளார் நடுங்க
வினைதரும் படிசிறி தெழுங்குறு மூரலான்
௯௫ றனைகுடி யிருந்து தழைக்கு மனத்தான்
வெள்ளிய நீறு விளங்குதிரு நுதலான்
வள்ளிய வதற்கலால் வணங்கா முடியான்
பயன்மா முள்ளூர்ப் பழுத்தற் றானன்
னயனுடை யான்க ணண்ணிய செல்வமென்
௧௦௦ றான்றோ ருரைத்த வதற்கொரு சான்றாய்த்
தோன்றா நின்ற சுந்தரச் சூரிசி
ளொன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்கு ரல்லர்நின் மாட்டென்
௧௦௫ றறிதா முன்னா ளான்றோ ருரைத்த
திவன்செய னோக்கி யெதிரது போற்றி
யன்றே யென்றுபே ரறிஞ ருரைப்ப
நன்றே நாளு நடாத்திவரு வள்ள
லிவனென்னு மெவ்வ மெனுந்திருக் குறட்குப்
௧௧௦ பலர்பல விதமாப் பகர்ந்தபே ருரையு
ளிரப்பவ னிரக்கப் படுவோ னாகச்
சுரக்குங் கொடையே சொல்லின் முதற்றா
லக்கொடை யிவன்பா லமைந்ததியல் பேயென்
றெக்கொடை வல்லரு மியம்பப் பொலிவோ

௧௧௫ ணருந்தமி ழாகர வாரிய முழுதும்
பெருந்தமி ழாமொழி பெயர்ப்பது குறித்தோ
னிகழே யாரெடுத் தியம்புவ வெலாந்தன்
புகழே யாக்கிய புண்ணிய மூர்த்தி
யரியமா நேச ரதிகா ரத்தைத்
௧௨௦ தெரிய நடாத்தித் திகழ்புரு டோத்தமன்
மன்னு சாமிநன் மாதவச் சாமி
பொன்னு சாமிவேள் புகன்றன னாக
வண்டமிழ்ச் செய்யுளு ளூறும்வா யுரையுட
னெண்பது மாதன னொருதலை கொண்டா
௧௨௫ னெழுத்தே யா,மென் றியாவரு மகிழ
வழுத்தே யச்சில் வயக்கி முடித்தனன்
மன்னுகோ ணாசல மாகே தீச்சர
மென்னு மிரண்டு மிரண்டுகண் ணாகப்
பெற்றவீ ழத்திற் பிறங்கும்யாழ்ப் பாணத்
௧௩௦ துற்றபல் வளனுக் குறையிட னாகிச்
சொல்லூர் கழனி சூழ்தரக் கொண்டு
செல்லூர் பொழிலாற் சேணுல களந்து
வில்லூர் மாட மிகக்கொடு பொலியு
நல்லூர் வாழ்க்கை நயந்தரு ளறிஞன்
௧௩௫ கந்தவே டவத்திற் கருதரன் பான்முன்
வந்தவே ளென்ன வந்தவ தரித்தோ
னீற்றொடு கண்மணி நிறையப் பூண்பார்ப்
போற்றொடு பொலியும் புண்ணிய புருட
னவநெறி யாய வனைத்துங் களைந்து
௧௪௦ சிவநெறி வளர்க்குந் திப்பிய குணத்த
னெழுத்துமுத லாக வியம்பிலக் கணமும்
வழுத்திலக் கியமும் வரம்புகண் டெழுந்தோன்
சமய விசேடந் தகுநிரு வாணமென்
றமையுமுத் தீக்கையு மடைவுறப் பெற்றோன்
௧௪௫ சுமங்கல விசேடச் சுருதியா மூலா
கமங்களின் முப்பொருள் கருதுபே ரருளான்
யுத்தியி னமைத்துணர்ந் தோங்கனு பூதி
சித்தியுற் றமைந்த சிவசிந் தாமணி
கற்றுணர் புலவருட் களிக்கு
௧௫௦ முற்றுண ராறு முகநா வலனே.

ரௌத்திரி௵ ஐப்பசி௴. (திருக்கோவையாருரைப்பதிப்பு.)

---

## ௪௦. விருத்தம்.

5102. பொன்பூத்த மகரந்தப் புதுமதுவச் செழுங்கமலப் பொகுட்டு வாழ்வோன், றென்பூத்த நான்முகத்தோ னலனனைலம் முகத்தோனே தெளிமி னென்னக், கொன்பூத்த தமிழ்வழங்கு நிலத்திலற மினிதெழுந்து குதிகொண் டாட, மின்பூத்த செங்கதிரின் வள்ளுவரென் றொருநாம மேவத் தோன்றி. (க)

5103. பொலிதரமுன் னுணர்ந்தமறை யகத்தமைந்த வறமுதனாற் பொருளு மேன்மே, லொலிதரமற் றந்நான்கு மொருமூன்றி னடக்கியின்றே னொழுக்கி யாங்கு, மெலிதரவில் வரைமுதற்பே ருருவொருசிற் றுருவகம் விளங்கன் மான, நலிதரநீர் சிலசொல்லிற் பல பொருளுஞ் செறித்துநவை நண்ணு தாக. (உ)

5104. மொழிசுருங்கல் பொருள்விளங்கன் மொழியவினி தாதனல மொழிபுணர்த்தல், வழியமையோ சையிற்பொலித லாழ்ந்திருத்தன் முறைநிறுவன் மலைவு தீர்தல், பொழிவிழுமி யதுபயத்தல் காட்டாத லிப்பத்தும் பொலியவாய்ந்த, கழிபொருளுங் கருதணியு நோக்குமிடந் தொறுங்கிடந்து களிப்புச் செய்ய. (ங)

5105. மையேறு பொழின்மதுரை மாநகரத் தருட்புலமை மாட்சி யார்முன், கையேறு திருமூலா கமச்சோதி மறைமுளைத்த கனிவாய் விண்டு, பையேறு மணிபொருமோர் துதிகவிசொற் றிடப்பலரும் பரவிப் போற்ற, வையேறு திருக்குறளென் றொருநூல்செய் துலகுவப்ப வளித்தா னுக. (ச)

5106. அன்னநூற் பெருமையுணர்ந் தான்றபா ணினிபுரிந்த வரியநூலுக், கின்னநீர் பதஞ்சலிபோற் பலருரையும் வியாப்பியமா யிருக்க நாளு, முன்னவாம் வியாபகமே யாகநூற் கருத்துணர்ந்தே மொழிந்தா ரென்ன, வன்னர்வான் புகழ்ப்பரிமே லழகருரை யியற்றவதை நாடி யாரும். (ரு)

5107. ஏட்டுவரைந் தெடுத்துணர்ந்து வருநாளி லெங்கணுஞ்சா லெழுத்துக் குற்ற, மோட்டும்வகை யுணராராய்ப் பரம்பரையொன் றேகருதி யொழிந்தா ரத்தோ, மாட்டுவலென் றுணர்ந்தனைய மூலமும்பே ருரையுமுனம் வகுத்த வாறே, தீட்டுதலி லாவெழுத்தி லியைவியென வுலகுபுகழ் செம்பி நாடன். (சு)

5108. ஓதுபதி யாயவிரா மேசர்திரு வருளானீ ருடுத்த வைப்பிற், கோதுபதி யாதகல வறந்தழைந்து விளங்கிடச்செங் கோல்கைக்கொண்ட., சேதுபதி மாநேச ரதிகார நடாத்துசெய சிங்கஞ்செம்பூ, மாதுபதி யயர்வுயிர்ப்ப வுலகமுழு வதும்புரக்கும் வள்ளற் கோமான்.

5109. கற்பகத்தின் றளிரனைய மென்னிறமுஞ் சங்கினொடு கமலரேகை, யுற்பவமு மொருசுரபிச் செருத்தன்முலை நிகர்விரலு மொளிர்பொன் னூழி, யிற்பதியொண் சுடர்மணியு மெய்துதலாற் றருநிதியமிரண்டு தெய்வப், பொற்பமையா வருண்மணியிவ் வைந்துஞ்சேர்ந் தாயவெனும் புரவுக் கையான். (அ)

5110. பாருநெடு விசும்புமறு வெங்குளதென் ரூராயப் பரந்த மார்பா, னேருமுணர் வுடையார்பாற் பெருங்கருணை மடைதிறந்தா லொத்த கண்ணான், வாருமிள நகையரும்ப வினியமுக மலர்ந்து மொழி மதுர வாயான், மேருவெனப் புடைபரந்து பகைவர்விலை கல ங்கவெழூஉ வீங்கும் தோளான். (கூ)

5111. சிவஞானத் தேவர்வரப் பிரசாத பாலனருள் செறிபூ பாலன், பவஞான முழுதொழியக் கோபால னெஞ்ஞான்றும் பணிகா பாலன், றவஞான நீற்றொளியே யொளிர்பாலன் பகைகாணத் தகாப்பின் பால, னவஞான மறுத்துணர்ந்த முப்பாலன் போர்வையென வமை சீர்ப் பாலன். (கo)

5112. ஒருகாவித் துவசத்தா னொளிர்தளவ மாலிகையா னுணர் வான் மீக்கூர்ந், தருகாவித் துவசத்தா னன்றபெருஞ் சிவஞான மட ங்க வுய்க்கும், கருகாவித் துவசத்தான் பகைநோக்கி யுருமனமே கடைகா துஞ்சா,துருகாவித் துவசத்தான் புணர்யான்செய் காயமென வுரைக்கும் வாளான். (கக)

5113. கந்துகத்தா னம்பரவு மாறுபொழிந் தெழுகளிற்றான் கரு தார் மேற்பாய், கந்துகத்தா னம்பரவு சூடியடி யான்வாயில் கட்டித் தூங்கும், கந்துகத்தா னம்பரவு மாதாவென் றுயிர்கருதிக் கரிசெ லா மி,கந்துகத்தா னம்பரவு ரவமாதி நீங்கவறங் கைக்கொண் டுள்ளான்.()

5114. தரைசெய்தவப் பயனுகி யமைந்தபெரு வளப்புதுவைத் தலைமை யோன்பொன், வரைசெய்நிதிப் பெருவாழ்க்கை மாகனவான் பெரும்புலவர் மறவா தென்று, முரைசெய்பெரும் புகழ்ப்பொன்னுச் சாமிநேர் திரன்மகிழ்கூர்ந் துரைப்பக் கேட்டு, நரைசெய்விடை யேறுயர்த்த நம்பிரா னடிக்கன்பே நயக்கு நல்லோன். (கந)

5115. மன்னுபெருந் தமிழ்ப்பாடை யிலக்கணமு மிலக்கியமும் வரம்பு கண்டோன், பன்னுசிவ புராணங்கள் பலதெரிந்தோன் சிவா கமநூற் பரவை மூழ்கி, யுன்னுமனு நூதியெனும் விலைவரம்பி லாம ணிகை யுறக்கொண் டுள்ளா, னின்னுநய குணத்தினனுய்ச் சைவமெ னும் பயிர்வளர்க்கு மெழிலி போல்வான். (கச)

5116. நீடுபுகழ்த் திருக்கேதீச் சரந்திருக்கோ ணசலமிந் நிலவா நின்ற, நாடுபுகழ்த் தலம்பொலியாழ்ப் பாணத்து நல்லூர்வாழ் நகராக் கொண்டோன், றேடுபுக ழுருவமைந்த கந்தவே டவத்துதித்த செல் வன் யாரும்,பாடுபுகழாறுமுகநாவலனவ் வாறச்சிற் பதிப்பித் தானே.

தன்மதிஞூ வைகாசிமீ. (திருக்குறட்பரிமேலழகருரைப்பதிப்பு.)

---

கக. தரவுகொச்சகக்கலிப்பா.

5117. பூமணக்கும் பொழின்மணக்கும் பொழிற்கெழில்கூர் தருமுகமா
தாமணக்கு மொருபொருளைத் தரைப்புனல்பாய் வளத்தவாய்[ய்த்
நாமணக்கும் புகழ்படைத்து நலமணக்கும் புலமணக்குந்
தேமணக்குந் தமிழ்மணக்குந் தென்பாண்டித் திருநாட்டில்.

5118. மருந்துங்கர் மொழிமடவார் மைந்தரொடு மாட்டயரப்
பொருந்துவளம் பலசெறியும் பூஞ்சோலை புடையுடைத்தாய்ப்
பருந்துதிசான் றென்றுமொளிர் பாவநா சப்பதிப்பாற்
றிருந்துபுகழ் விக்கிரம சிங்கபுர மெனும்பதியில். (உ)

5119. பொன்பூத்த பெருஞ்சிகரப் பொதியவரை நிதியமெனுங்
கொன்பூத்த நெடியகுணக் குறியமுனி யருள்புலமை
முன்பூத்த வேழுதலை முறைவாய்ந்த முழுத்தவத்து
மின்பூத்த புகழ்ப்பாண்டி வேளாள குலதிலகர். (ங)

5120. அணிதருமம் பலக்கூத்த ரவர்மனையார் வடமீனும்
பணிதருகற் புடையநலம் பரவுமயி லம்மையார்
துணிதருமற் றிவர்தம்பாற் றாவறிவங் குரித்தென்னத்
திணிதருமெய் திருந்தொருவர் திருவருளா லவதரித்தார். ()

5121. முக்களா லிங்கமென மொழிபிள்ளைத் திருநாம
நக்களா வுறப்பூண்டு நந்துபிறைக் கொழுந்தனையா
ரக்களா வரனருளா லையாண்டின் மேனெடிதின்
பக்களா தரத்தோதும் பள்ளியமர்ந் தருளினர். (ரு)

5122. பள்ளியமர்ந் தருணாளிற் பரவுபுனற் சோணாட்டு
வள்ளியவா வடுதுறையில் வாழ்நமச்சி வாயகுரு
வொள்ளியமென் மலர்க்கழலே யுளத்துன்னு முனிவர்சிலர்
நள்ளியவான் புகழ்மிகுமந் நகர்வீதி வரக்கண்டார். (சு)

5123. கண்டுபணிந் தெழுந்தடிகேள் கடையேனி லடைந்தமுது
கொண்டுபின னெழுந்தருள வேண்டுமெனக் குறையிரப்ப
மண்டுபிரி யத்தவரு மழவுருவப் பெருந்தகையார்
தொண்டுபடற் கிரங்கியவர் தூயமொழிக் குடன்பட்டார். ()

5124. திருந்துசுவைக் கறியமுதுந் திருவமுதுங் கொண்டருளி
யருந்ததியென் னம்மையென்றே ரழகியசெய் யுளும்பாடிப்
பொருந்துமவர் செலப்புறத்தே போயிருந்த தந்தையார்
வருந்துதலி றம்மனைவாய் வந்துநிகழ்ந் ததையுணர்ந்தார். ()

5125. உணர்ந்தவுடன் மைந்தரொடு முறுவர்பாற் போய்வணங்கிப்
புணர்ந்ததிரு வருட்பெருமைப் புத்திரனார் குறிப்புணர்ந்து
தணந்தனர்சென் றனரீன்ற தந்தையா ரம்மைந்தர்
மணந்தனராய் முனிவரொடு வழிக்கொண்டு நடந்தனரால். ()

5126. வரையகமுங் கருங்கான மருவகமும் வயன்மருதத்
தரையகமு மெம்பெருமான் றானங்கள் பலவணங்கி
விரையமைந்த சோணாட்டு மிளிர்திருவா வடுதுறையி
லுரையமைந்த திருமடத்தி னுட்புகுந்தா ருவமையிலார். ()

5127. புக்கவர்பன் னிரண்டகவை பொருந்தியொளி ரஞ்ஞான்றே
தக்கவராய் முண்டிதராய்ச் சந்நியா சத்திறம்பூண்

டுக்கவர்தந் தலைமாலை யொருங்கணிவார் திருவருளாற்
றிக்கவரு ளதிசயிப்பச் செழுங்கலைகள் பலபயின்றார். (கக)

5128. ஆயபெரும் புகழ்த்திருச்சிற் றம்பலதே சிகர்நாண்முன்
மேயபெருங் கருணையுரு வேலப்ப தேசிகர்தாம்
பாயதிரு வாணமெனப் பகர்தீக்கை செயப்பெற்றுத்
தாயனையார் சிவஞான முனிவரெனத் தனியமர்ந்தார். (கஉ)

5129. வடகலையிற் றென்கலையின் மாறிலா விலக்கியமுந்
தொடர்புடைய விலக்கணமுந் தோலாத தருக்கமுமற்
றிடனுடைமெய்ப் பொருட்கலையு மெக்கலையு முழுதுணர்ந்து
திடமுடைய வநுபூதிச் செல்வராய்ச் சிறப்புற்றார். (கங)

513). சிறப்புறுதொல் காப்பியச்சூத் திரவிருத்தி முதற்பலவு
மறப்பில்பெரும் புகழ்க்காஞ்சி மான்மியமும் யமகமுதற்
பெறப்படுமந் தாதிகளும் பிறங்குமிவை முதற்பலவு
முறப்பயில வினிதியற்றி யுயர்பரிபூ ரணமுற்றார். (கச)

5131. அனையரியற் றியநூலு ளாய்ந்துரை மொழி பெயர்த்த
தனைநிகரும் பொருட்டருக்க சங்கிரக மெனுநூலும்
புனையுமத னுரையன்னம் பட்டியமும் புரிந்தாய்ந்து
பனைமடனின் றெடுத்தச்சிற் பதிப்பித்துத் தருகவென. (கரு)

5132. எஞ்சாத வளப்பொழில்வா யினியமாங் கனித்தேனு
மஞ்சாருந் தலைவருக்கை வண்கனிகீண் டிழிதேனு
மஞ்சாத புலியடிக்காய்க் குலைகனிந்தாங் கிழிதேனுஞ்
செஞ்சாலிப் பயிர்வளர்த்துத் திகழ்செம்பி நாடுடையான். ()

5133. திருந்துபசும் பொன்செய்து செம்மணிகால் யாத்தமுத
மருந்துசுர ரழுக்கறுப்ப வடுக்கியமா ளிகைமேலா
லிருந்துமட வார்மைந்த ரிருந்தருவின் கனிபறித்துப்
பொருந்துசுவை யுணர்ந்துவக்கும் புகழ்ப்புதுவை மாநகரான்.

5134. தீட்டியவாள் பொருகருங்கட் செங்கனிவாய்ப் பரமாதர்
கூட்டியசாந் தணிந்தமுலைக் குடங்கலவா முன்பாலா
னீட்டியபல் படையொடும்போ ரெதிர்த்தமரு வலர்முகத்துக்
காட்டியசெந் தீயனைய கண்கலவாப் பின்பாலான். (கஅ)

5135. பூங்காவிக் குடையாது பொலிதருகட் படைகூட்டு
நீங்காவிக் குடைமதவே ணெஞ்சமரும் வனப்புடையான்
வீங்காவிக் குடையுணவு மேன்மேலு மளித்துவப்போ
னூங்காவிக் குடையினொடு மக்காவிக் கொடியுடையான். ()

5136. சென்றுகாண் பவர்மகிழ்ச்சி திளைக்கவருந் திருமுகத்தா
னின்றுதாழ் பவர்க்கருளே நெடிதுபொழி தருகண்ணான்
குன்றுநேர் தருபுயத்தான் குறுகலர்தம் மணிமுடிக
ணின்றுவான் கழல்புனைந்து துவைத்துழக்குஞ் சுடர்க்கழலான்.

5137. சிவஞான தேவர்நனி செய்தபெருந் தவத்துதித்தோன்
பவஞான முழுதொழியப் பன்னாலும் பயின்றுணர்ந்தோன்
றவஞான மிகுபொன்னுச் சாமிநேரந் திரன்கேட்ப
வவஞான மறுத்தவ்வா றுக்குவித்தா னத்தகையோன். (உக)

5138. இனையனென வியம்பிடுவா மெழில்வளர்கே தீச்சரமு
நினையவினி தேமருவ நிரப்புகோ ணசைலமும்
வினையறைசெய் தொளிரீழ மேவுதிரு நல்லூர்வாழ்
தனையனையான் கந்தவே டவத்துதித்த குணசீலன். (உஉ)

5139. அகத்தியந்தொல் காப்பியமுன் னயபல விலக்கணமுஞ்
சகத்தியல்பல் விலக்கியமுஞ் சாற்றுபர மதநூலு
மகத்துவமெய்ப் பொருணூலு மதியமையப் பயின்றுணர்ந்து
சுகத்தியலு மநுபூதித் தோன்றலா யமர்பெரியோன். (உங)

5140. மாறுபடு பரசமய வழியனைத்து மறமாற்றி
யாறுபடு செஞ்சடிலத் தண்ணலா ரருணெறியே
தேறுபடும் படிவளர்த்துத் திகழுமா தவமுடையோன்
வீறுபடு சிவனடியார் மேன்மைமுழு மையுமுணர்ந்தோன். ()

5141. கருள்விரவு தலைக்கழிக்குங் கண்மணியும் வெண்ணீறும்
பொருள்விரவு மைந்தெழுத்தும் பொருளாகக் கொண்டுவப்
றெருள்விரவு சுத்தசைவ சித்தாந்தப் பெருஞ்செல்வ[போன்
னருள்விரவு பரவுபுக ழாறுமுக நாவலனே. (உரு)

துன்மதி௵ வைகாசி௴. (தருக்கசங்கிரகதீபிகைப்பதிப்பு.)

---

கஉ. விருத்தம்.

5142. பார்பூத்த பல்வளமும் பரவுதஞ்சைப் பதிபுரந்த பதியாயுள்ளா, னேர்பூத்த மாலைமாற் றணிபொருவச் சிவாசியெனு மியற்பேர் பூண், சீர்பூத்த மன்னர்குல திலகனமைச் சருண்மிகவுஞ் சிறப்பு மேவி, நார் பூத்த கலைமுதன்மூ வகைப்புகழும் பெரும்புவன நயப்ப வாய்ந்தோன்.

5143. மன்னியவண் பெருங்குணத்தான் யோகமே யென்றெவரு மதித்து நாளும், பன்னியவாய் பெரியண்ண வென்னும்வேங் கடதாசன் பலவற் றுள்ளு, மின்னியவான் றமிழ்நிலத்துக் கெல்லையாம் வேங்கடத்தின் மிக்க சீரைத், துன்னியவண் டமிழின்மொழி பெயர்த் துரைத்தான் பாகவதர் துதிக்கத் தானே. (உ)

பிரபவ௵ வைகாசி௴. (வேங்கடேசமகத்துவம்.)

---

கங. விருத்தம்.

5144. பார்பூத்த பெரும்புகழ்சால் குணச்சவரா யனுமகிபன் பளகு தீரச், சீர்பூத்த தமிழ்ப்பிரசங் கம்புரியு மனையபெருந் திறமென் சொல்கே, னேர்பூத்த பூமுடியோ னேசிரகம் பிதஞ்செய்வா னெ ன்னு மஞ்சச், தார்பூத்த முடியுடைமற் றையரது மா றுதுசெய்வான் றலைப்பட் டாரே. (க)

5145. சொன்னயமும் பொருணயமு மணிநயமும் பணிநய முஞ் சொல்லா மற்றைப், பன்னயமும் வெளிப்படுத்தி நீசெய்பிர சங் கநயப் பயன்பா ராட்ட, வென்நயமு முணர்ந்தேமா வொரோவொன்றே சிறிதுணர்ந்தே மெல்லாம் வல்லார், தந்நயமாக் கொளுஞ்சவரா யலு சுகுண புனிதாநீ சாற்று வாயே. (உ)

5146. அரியருல கிடைக்கற்றோ ரவருளும்பன் னூல்களுநன் கமையத் தேர்ந்தோர், அரியரவ ருளுங்கவிசெய் பவராரிய ரவருளுமின் பமையச் செய்வோர், அரியரவ ருளும்பிரசங் கம்புரிவோ ரவருளுநல் லமைதி வாய்ந்தோர், அரியரெலா மமைந்தசவ ராயலுவள் ளானிகர் யொப் பாவார் யாரே. (ங)

5147. பூவின்பா.லுயர்புதுவை வருசெயகா னினிதளித்த புதல் வன் மேலோர், பாவின்பா லுலவுசவ ராயலுபூ பதிநயமே பயின்றதாய, நாவின்பா லெழுபிரசங் கங்கேட்டோர் பிறிதொன்றை நாடு வாரோ, வாவின்பால் விரும்புநர்கா ராட்டின்பால் விரும்பினுமிவ் வகிலத் தோரே. (ச)

5148. தேனுலும் பொழிற்புதுவை வளர்சவரா யலுவள்ளல் சிறந்து ளோனே, யானுலும் பொருமையுள னென்றனின்மேம் படப் புரிந்த வறத்தை யோர்கான்,மீனுலுங் கடலுலகில் விரித்திலனே தின னென்றே விளம்பு வீரேற், றூனுலு மறைமுனுணர்ந் தவன்போல வெவர்சிறந்தார் சாற்று வீரே. (ரு)

5149. ஒளிகிளர்விண் மதிநூல மாசுறுந்தேய் தரும்போகிக் குணவா மயுந், தெளிகிளர்வண் புதுவைநகர் வருசவரா யலுமகிபா சிறந்த தாகின், னளிகிளர்தண் மதியோர்குக் குமமகளங் கந்தேயா தமையோ கிக்காந், துளிகிளர்நல் லுணவோங்கு மெனுநிகரு மொரு தேத்தாள் சுமத்த லானே. (சு)

5150. வாயாரப் புண்ணியனைப் புகழ்தரிற்புண் ணியமுடனே வருமா லென்று, தூயார்செப் புவர்புதுவை வருசவரா யலுபுனித சுகுண யோக, நேயா மற் றதுதுணிந்து பாவலர்பல் லோர்கவியா லினைப்புகழ்ந்தா, ரோயார்பற் பலர்தமைப்பா டிடச்சிறந்தா ரெனினச் சொ லுண்மை தானே. (எ)

5151. ஆடுகொடி மணிமாட வளப்புதுவை வளர்சவரா யலுபூ பாவிங், கீடிலகி னின்கல்வி போனிறைவான் மதியென்று நிரம்பிப் பார்க்குஞ், சூடுபுகழ் நின்கைபோற் பொழிந்திடுவான் முகிலென்றுஞ் சொரிந்து பார்க்கு, மீடுசெரி யாகாது தேயும்விளர்த் திடுமவையா தியற் றுந் தானே. (அ)

5152. பாவியபுண் ணியத்தாலே பராபரன்பே ரருள்பெற்றாய் பகரு மற்றாற், புராதனவான் புலவர்புரி துதிபெற்றா யதனாலே புணரி சூழ்ந்த, தாரதலமன் னவர்செய்சிறப் பும்பெற்றாய் நீடுழி தழைவாய் சீர்த்தி,விராவுபுது வைச்சவரா யலுநாய காவினுமென் வேண்டு கிற்கே.

5153. விண்மணிநேர் வண்மணிபூ வேந்தரிரு கண்மணிநூல் விளங்கக் கற்றோ, ருண்மணிவெண் மணிச்சிந்தா மணிதம்பி மகிபால னுவந்தர் நாணின், பண்மணிவா சகப்பொருடேர்ந் தெழுதெழுத்தா முனோயிர்நாட் பரந்து சான்றோ, ரெண்மணியா கியசவரா யலுபுனிதா தமைந்ததெங்க ளிரும்பா வாயே. (௧௦)

5154. மன்னியவெண் மணித்தம்பி மணிசவரா யலுமணிக்கு மகிழ்ந்தர் நாட்செய், துன்னியசில் லெழுத்துமொழி யாலந்த மணி புலவர் தொக்குப் பல்பாப், பன்னியமேம் பட்டதத ளுற்பாரீ ரத்தம்பி பாற்சென் றுங்கண், முன்னியவல் லமைதெரித்தோன் றெய்திடினீர் யாவருக்கு முதலா வீரே. (௧௧)

1869=விபவஞு. (புதுவைச் சவராயலுநாயகர் பாடற்றிரட்டு.)

---

௧௪. விருத்தம்.

5155. மாமேவு புகழ்த்தொண்டை மண்டலவே ளாளர்குலம் வளத்தா லோங்கப், பாமேவு கோட்டங்கள் பலவுளுமீ தூர்க்கோட் டம் பண்பு வாய்ப்பத், தூமேவு பன்னாட்டு ளறமுறங்கா நாடுவகை துளும்பி வாழத், தாமேவு சுகுணநிறை சுப்பரா யக்குரிசி றந்த மைந்தன். (௧)

5156. ஓங்குபெருங் கல்வியறி வொழுக்கமெலா மோருருக்கொண் டுற்றாற் போல்வான், வீங்குதிரைக் கடலுலகி லிரவலர்க்கோர் குபே ரனு விளங்கு மேலோ, னீங்குதலி றன்பெயராற் பெரும்புகழோன் சைவனென நிலவச் செய்வோன்,பாங்குபெறு தமிழ்நயந்தேர் கன்னி யப்ப னெனும்பெரும்பேர்ப் பண்பின் மிக்கோன். (௨)

5157. குறுமுனிபா லியற்றமிழ்தேர் புலவருளோங் கியபுலமைக் குன்ற மன்னோ, னிறுவுதொல்காப் பியமுனிவன் றன்பெயராற் றருமி யனூ னிலவ மண்மே, லறுதிபெறச் செயுமிளம்பூ ரணருரையு ளமை திபெற வல்லவற் றோங்கு, மறுவுதவி ரெழுத்துரையைப் புலவருளங் களிசிறக்கும் வகைமை தேர்ந்து. (௩)

5158. சாற்றுதிரி சிரபுரம்வாழ் வீரரா கவப்புனிதன் றந்த மைந்தன், றேற்றுதிறற் சோடசஞ்சா ரவதானி யென்னுமொரு சிறப் புப் பேர்பூண், டாற்றுபல கலையுமுணர்ந் தமைக்கேற்ப நல்லொழுக் கத் தமைந்து நிற்போ, னீற்றுமுதற் சிவபெருமான் றிருவடிக்கே கசிந்துருகு மிதயமுள்ளோன். (௪)

5159. துன்னுசிவ னடியவரை யவனெனக்கண் டடிபேணுந் துணிபே யுள்ளோன், மன்னுநய குணசீலன் சுப்பரா யப்புலமை வல் லோன் றன்னாற், பன்னுபல பிரதிகொடு வரைகுநர்செய் பிழையனை த்தும் பாற வாய்வித், துன்னுமெழு தாவெழுத்தி னியைவித்துப் பெருஞ்சீர்த்தி யுற்றா னன்றே. (௫)

விபவஞு கார்த்திகைம௴.

(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம்பூரணருரைப்பதிப்பு.)

---

